# அசுரன்

## வீழ்த்தப்பட்டவர்களின் வீர காவியம்

ராவணன் மற்றும் அவனது இனத்தாரின் கதை




ஆனந்த் நீலகண்டன்

தமிழில்: நாகலட்சுமி சண்முகம்


Tamil translation of Anand Neelakantan's #1 National Bestseller

ASURA - TALE OF THE VANQUISHED

# அசுரன்

## வீழ்த்தப்பட்டவர்களின் வீர காவியம்

ராவணன் மற்றும் அவனது இனத்தாரின் கதை



## ஆனந்த் நீலகண்டன்

தமிழில்: நாகலட்சுமி சண்முகம்




மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்

*First published in India by*




**Manjul Publishing House Pvt. Ltd.**
*Corporate Office*
2nd Floor, Usha Preet Complex,
42 Malviya Nagar, Bhopal 462 003 - India
Email: manjul@manjulindia.com Website: www.manjulindia.com
*Sales and Marketing Office*
7/32, Ground Floor, Ansari Road, Daryaganj, New Delhi 110 002 - India
Email: sales@manjulindia.com

English edition originally published in India by Platinum Press
an imprint of Leadstart Publishing Pvt Ltd



Tamil translation of Anand Neelakantan's
*ASURA - TALE OF THE VANQUISHED*
*The Story of Ravana and His People*

This edition first published in 2014

**ISBN 978-81-8322-438–3**

Translation by Nagalakshmi Shanmugam
Editing & Layout by PSV Kumarasamy



**Disclaimer**
This is a work of pure fiction. All the characters depicted are fictitious and any resemblance to real persons living or dead, is purely coincidental. The author has used iconic names, dates, and events to aid story-telling. There is no intention to imply anything else. The content of this book is the sole expression and opinion of its author and a work of his imagination and does not claim scriptural authenticity. This work does not represent the views of the Publisher, nor endorses them in anyway. The publisher makes no representations or warranties as to the completeness or accuracy of the

இந்தியப் புராணங்களின்
மாயாஜால உலகை எனக்குத் திறந்துவிட்ட
என் தாயார் செல்லம்மாள் அவர்களுக்கும்
காலஞ்சென்ற என் தந்தையார்
நீலகண்டன் அவர்களுக்கும்
நான் இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்

# அறிய வேண்டிய அசுரன்!

- அறிஞர் ஔவை நடராசன்
முன்னாள் துணைவேந்தர்

*தென் திசையைப் பார்க்கின்றேன் என் சொல்வேன்! என்றன்
சிந்தையெல்லாம் தோள்களெல்லாம் பூரிக்குதடடா!
அன்றந்த இலங்கையினை ஆண்ட மறத்தமிழன்
ஐயிரண்டு திசைமுகத்தும் தன்புகழை வைத்தோன்
குன்றெடுக்கும் பெருந்தோளான், கொடை கொடுக்கும் கையான்
குள்ளநரிச் செயல் செய்யும் கூட்டத்தின் கூற்றம்
என் தமிழர் மூதாதை! என் தமிழர் பெருமான்!
இராவணன் காண்! அவன் நாமம் இவ்வுலகம் அறியும்.*

புரட்சிக் கவிஞரின் இந்த எழுச்சிப் பாடலை என் இளம்பருவத்தில் எங்கள் தமிழாசிரியர் சொல்லிச் சொல்லி வலியுறுத்தியது நினைவில் நிழலாடுகிறது. திராவிடர் கழகம் திராவிட உணர்வுகளைப் பரப்பத் தொடங்கியபோது, இராவணன், இரணியன், நரகாசுரன், கம்சன் ஆகியோரைப் பற்றிய கதைகளையெல்லாம் எடுத்துச் சொல்லி, இம்மாந்தர்கள் அந்நாளைய திராவிட உணர்வோடு திகழ்ந்த திருவினர் என்றும், இவர்களை இழிவாக எடுத்துக் காட்டுவது தமிழினத்தைத் தகர்ப்பதற்கான சமுதாயச் சாடல் என்றும் பெரியார் மேடைதோறும் இடிமுழக்கம் செய்து வந்தார். இராவண காவியம் என்றே புலவர் குழந்தை இராவணனைத் தலைமகனாகக் கொண்டு ஒரு காவியப் பனுவல் பாடினார். அந்த நூல் தடை செய்யப்பட்டு, பின்னர் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்தபோது அத்தடை நீக்கப்பட்டது. மேலும் தமிழர்கள் அசுர இனத்தவர்கள் இல்லை என்ற தலைப்பிலேயே தமிழறிஞர்களும் இராவணன் வித்தியாதரனா, இராவணன் ஆரியனா என்றெல்லாம் அந்நாளில் மறுப்புகள் எழுதி வந்தனர். இதற்கு மாறாக, இராமன் திராவிடனே என்றும் எழுதி வந்தனர். இராவணன் கதையையும் அவனது புகழையும் சைவ உலகத்தினர் தம் திருமுறைகளில் புகழ்ந்து பாடுவதையும் அவர்கள் சுட்டிக்காட்டினர். இப்படி இடியப்பச் சிக்கல்களுக்குள் அகப்பட்டு, இராம காதை தடுமாறியது. இராவணனை இலங்கேஸ்வரன் என்று புனைந்து காட்டும் ஆர்.எஸ்.மனோகரின் நாடகம் தமிழகத்தில் நூறு நாட்களுக்கு மேல்

நடந்தது! ‘கீமாயணம்’ என்ற நாடகத்தை நடிகவேள் எம்.ஆர்.இராதா, தமிழகத்தின் சிற்றூர்களிலெல்லாம் நடத்திச் சீர்திருத்தப் புயலை எழுப்பினார்! பேரறிஞர் அண்ணாவும் தன்மான இயக்கத்தின் தலைவராக இருந்த நிலையில், இராம காதையை இழை இழையாகப் பிரித்துத் தம் எழுத்தழகோடு இணைத்து, இலக்கியத் திறனாய்வு நாடகமாக, இராவணன் பெருமை காட்டும் ‘நீதிதேவன் மயக்கம்’ என்ற ஒரு நாடகத்தைத் தாமே நடித்தும் காட்டினார்! இவ்வாறு திராவிட உணர்வுகள் புரோகித வெறுப்பையும் புராண மறுப்பையும் மூடநம்பிக்கை எதிர்ப்பையும் ஆணித்தரமாக வெளிப்படுத்துவதையே ஒரு கடமையாக முந்தைய பல ஆண்டுகளில் மேற்கொண்டு வந்தன.

எனினும், இந்த உணர்வு தமிழகத்தில் எழுந்ததுபோல பிற மாநிலங்களில் இப்போக்கில் வளர்ந்தனவா என்று முழுவதுமாக நினைக்க முடியவில்லை. இந்திய நாட்டு இலக்கிய விருதாகிய ‘ஞானபீட விருது’ வழங்கப்பட்ட நெடுங்கதைகளில் பல, இதிகாச நிழல் படிந்தவைதான்! தமிழ் மக்களுக்கு நடுவில் எழுந்த சீர்திருத்தச் சிந்தனை ஆழமாக வேர் பிடித்துவிட்டதால், வேடிக்கைக்குக்கூட இராமாயண பாரதக் கதை மாந்தர்கள் ஓரளவுக்கேனும் ஒரு வகையிலேனும் பாராட்டப் பெறும் எழுத்து வடிவம் கடந்த இருபதாண்டுகளாகத் தமிழ்நாட்டில் எழவே இல்லை! அப்படி யாரேனும் எழுதினால், அவர்களது முகமும் முகவரியும் எளிதில் புலனாகிவிடும்.

புகழ்வாய்ந்த ஆங்கில எழுத்தாளராகப் பூத்து வரும் ஆனந்த் நீலகண்டன், தமது கல்வித் தகுதியால் பொறியாளராக இருந்தாலும் தம் கற்பனை வளமும் கலைத் திறமும் மழலைப் பருவத்திலிருந்து தான் கேட்டு மகிழ்ந்த இராமாயணக் கதையும் பொங்கித் ததும்ப, ஆங்கிலத்தில் தமது முதற்படைப்பாக, வீழ்த்தப்பட்டவர்களின் வெற்றிக் காவியமாக, ‘அசுரனை’ வழங்கியுள்ளார். கேரள மாநிலத்தில் பிறந்து வளர்ந்து, கர்நாடக மாநிலத்தில் வாழ்ந்து வரும் அவர், இந்திய முழுமையோடும் ஆங்கிலப் புலமையோடும் இந்நெடுங்கதையை வளமான ஆங்கிலத்தில் வனப்போடு வரைந்துள்ளார். வட மாநிலங்களைச் சார்ந்தவர்களுக்கு இப்பெருங்கதை ஒரு புதிர்க்கதையாக, எதிர்க்கதையாகவே அமையும். ஆங்கிலம் படித்தப் பிற நாட்டினரும் இப்படிப்பட்டச் சிந்தனைகள் இந்தியாவில் மலர்வதைக் கண்டு வரவேற்பார்கள்!

“ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வேலேந்தித் திரிந்த வெறியனாக, பிறன்மனை நயந்த பேதையாக, இரக்கமில்லாத அரக்கனாக, பத்துத் தலைகளைக் கொண்ட பதராக நான் காட்டப்பட்டு வந்துள்ளேன். இதனால், எங்களுக்குள் வேறுபட்டிருந்த இனப்

பகைவர்கள் என்னை வீழ்த்தியதை வாழ்த்திப் பேசும் மரபை வளர்த்தனர். தேவ குலத்தவர்களின் ஆட்சியில் கொடிகட்டிப் பறந்த சாதிச் சழக்கு, வம்பு வழக்கு, ஒரு குலத்தை உயர்த்தும் ஓரவஞ்சகம் — இவற்றையெல்லாம் நான் எதிர்த்தேன் என்பதற்காகவே என்னை அயலினத்தார் மிதித்து அழித்தார்கள். அசுர இன மக்களின் இந்த வரலாறு இதுவரை புதைக்கப்பட்டிருந்தது. அறியப்படாதுள்ள அசுரர்கள் கதை இது. மூவாயிரம் ஆண்டுகளாகச் சாதியம் தலைவிரித்தாடி, அடங்காப்பிடாரியாக, அரசியலையும்கூட இன்றுவரை தன் கையில் அடக்கி வைத்திருக்கின்றது. ஆனால் இந்த உன்னதக் கதை, ஒடுக்கப்பட்டவர்களின் உள்ளத்தின் ஓலங்களாக இன்றும் எங்கோ மதிக்கப்பட்டுதான் வருகின்றது. அசுரர்கள் தலை நிமிர்ந்து, பிடர் சிலிர்த்துக் கொண்டு, விடுதலை வேங்கைகளாக வடிவெடுப்பதற்குரிய வாய்ப்பு இப்போதுதான் எழத் தொடங்கியிருக்கிறது.” இத்தகைய புதையல் வரிகளை ஆனந்த் நீலகண்டன் தம் கதையில் ஆங்காங்கே சுடர்விடச் செய்திருக்கிறார். ஆங்கிலத்தில் உள்ள இந்தக் கதையை என் அருமைத் திருமகள் என்று நான் உரிமையோடு அழைத்து மகிழும் திருமதி நாகலட்சுமி சண்முகம், அலை புரளக் கரை புரள, அருவி கொட்டும் நடையில் பளிங்குத் தமிழில், எவரும் படித்தால் இது மொழிபெயர்ப்பா என்று வியப்படையும் வகையில் தமிழ்க் கதையாகப் படைத்திருக்கிறார்கள். மெருகில்லாத ஒரு மண்பானை, அங்குமிங்கும் துண்டாகிக் களிமண் பூசிய காட்சியுடையதாக இருப்பதைத்தான் பொதுவாக மொழிபெயர்ப்பு என்பார்கள். ‘மின்னும் தங்கத்தைக்கூடக் கரிய களிம்பு கலந்த செம்பாக மொழிபெயர்ப்பாளர்கள் மாற்றிவிடுவார்கள்’ என்றுகூடக் குறை சொல்வது உண்டு. திருமதி நாகலட்சுமி, மொழியாக்கப் பாதையிலேயே நடந்து நடந்து, அவரது எழுத்தும் மனமும் மொழிபெயர்ப்பிலேயே திளைத்துத் திளைத்துக் கலை பயின்ற தெளிவோடு, கனிந்த தமிழில் மொழியாக்கக் கலையின் சிகரத்தை அடைந்திருக்கிறார்கள். இது மொழிபெயர்ப்புக்குப் பெருமிதம் தருகிறது.

வீடணனைத் தமிழ்நாட்டில் ஆழ்வார் என்று நாம் போற்றுகிறோம். ஆனால் அண்ணனைக் காட்டிக் கொடுத்தவன் என்று வட மாநிலத்தவர் அவனை வஞ்சகனாகக் கருதுகின்றார்கள். மத்தியப் பிரதேசத்தில், வனத்தில் வாழ்பவர்கள், இன்றும் வில்லை வளைக்கும்போது வலது கட்டைவிரலைப் பயன்படுத்துவது இல்லையாம். ஏகலைவன் கதையினால் இந்தப் பழக்கம் அவர்களிடம் வந்ததாம். காலம் காலமாக, கற்றறிந்த பழமைவாதிகள், நாட்டுப்புறக் கதைகளைத் தமக்கு ஏற்ற வகையில் நயவஞ்சகமாக மாற்றிக் கொண்டனர் என்று கிரேக்க

அறிஞர்களும் கருதுகின்றார்கள். விழிப்புணர்ச்சி வந்ததால், அகலிகை, தாரை போன்றோரின் கதைகளை, மரபுக்கு ஏற்ப, வான்மீகிக்கு வேறாகத் தமிழில் கம்பர் மாற்றிவிட்டார் என்பார்கள். இத்தகைய மாற்றங்கள் நெடிய ஆராய்ச்சிக்கு இடம் தருவனவாகும்.

இலங்கை அரசன் இராவணனின் கதையைத்தான் 'அசுரன்' என்று தலைப்பிட்டிருக்கிறார்கள். புகழாழர் ஆனந்த் நீலகண்டன், நேர்த்தியான கட்டமைப்பில் சீர்த்தியான ஆங்கிலத்தில் இதனை எழுதியிருக்கிறார். இக்கதை சொல்லப்பட்டிருக்கும் விதம், ஒரு தனிமனிதனின் கதை என்பதைத் தாண்டி, அசுரகுலச் சமுதாயம், பண்பாடு, அரச வாழ்க்கை போன்றவற்றையும் நமக்கு எடுத்துரைக்கிறது.

இராமனின் புனிதம் பேசும் பழைய கதையோ, சீதையின் பொறுமையையும் சீலத்தையும் புகழும் கதையோ அல்ல இது. இராமாயணம் என்று அறியப்பட்டக் கதைகளின் தொகுப்பில் இருந்து, அறியப்படாத ஒரு பழங்கதையை இது சொல்கிறது. இராவணனின் தன் வரலாறு என்று இதைக் கூறலாம். அசுரன் என்று அறியப்பட்ட அவன், மனம் திறந்து தன் சொந்தக் கதையை உணர்வோடும் உருக்கத்தோடும் சொல்கிறான்! அவன் சொல்லாமல் விட்டப் பகுதிகளை இக்கதையில் வரும் ஓர் எளிய குடிமகனான பத்ரன் சொல்கிறான்.

அசுரகுலத்தின் மகத்தான வாழ்க்கை வளர்ந்து மேலோங்கியதையும், காலப்போக்கில் கவிழ்ந்து மாண்டு மறைந்ததையும், அதில் தங்கள் பங்கு பற்றியும், மற்றவர்கள் செய்ததை பற்றியும் இராவணனும் பத்ரனும் மாறி மாறிச் சொல்கிறார்கள். அவர்கள் சொல்லும் முறையில், அசுர குலத்தின் நற்பண்புகளும், வீரமும், திறனும், நம்பிக்கைகளும், அவநம்பிக்கைகளும், ஆவல்களும், பேராசைகளும், மகளிருக்கு ஆடவர்மீதும் ஆடவருக்குப் பெண்கள்மீதும் உள்ள காதல் வெள்ளமும் அசுர குலத்தை எவ்வாறு அழித்தொழித்தன என்பதை நிலைக்களனாகக் கொண்டு, அசுரச் சமுதாயத்தின் மன ஓட்டங்களையும் கட்டற்ற வாழ்க்கையின் இயல்பு நெறிகளையும் நூலாசிரியர் விரிவாகக் காட்டியிருப்பது குறிக்கத்தக்கது.

'அசுரன்' கதை சொல்வதுபோல இதுவரையில் இராவணன் கதை உள்ளபடி சொல்லப்படவில்லை. இதுவரை பொதுவாக அவன் தீயவனாக, அசுரனாகப் புனையப்பட்டிருக்கிறான், அது ஏற்கப்பட்டிருக்கிறது. அதனை உடைத்து அசலான இராவணன் தன் கதையைச் சொல்கிறான். அது பண்டைய காலத்து அரசுமுறை சார்ந்த சமூக, கலை, பண்பாட்டுக் காட்சிகளைக் கொண்ட வாழ்க்கையைச் சார்ந்திருக்கிறது.

சமூகமும் அரசும் எல்லா இடங்களிலும் ஒன்றில்லை. அது

ஒன்றுபோல இருக்கும், ஆனால் ஒன்றில்லை என்பதுதான் உண்மை. ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வொரு பகுதியிலும் அரசுமுறை, பண்பாட்டு நெறிப்பாடு, நீதிமுறை, ஒழுக்க விதிகள் ஆகியவை மாறுபட்டு இருக்கின்றன. ஆனால் ஒன்றின்மீது மற்றொன்று, தனி மேலாதிக்கத்தை அந்நாளில் நிலைநாட்ட முற்படவில்லை. ஒவ்வொரு சமூகமும் ஆட்சியும் தன்னளவில் தனியாட்சியாக அமைந்திருந்தன. அதனால்தான் தேவர்களின் ஆட்சிமுறை, அசுரர்களின் ஆட்சிமுறை, வானரர்களின் ஆட்சிமுறை என்பதெல்லாம் ஒன்றுக்குள் ஒன்று முரண் இல்லாமல் ஒரு காலத்தே இருந்து வந்தன. ஒன்று மேலானது என்றோ, இன்னொன்று தாழ்வானது என்றோ மதிப்பீடும் போற்றுதலும் செய்யும் உரிமை யாருக்கும் இல்லை. இந்தச் சூழலை எந்த இனப்பூசலுக்கும் கசப்புகளுக்கும் இடம் தராமல் நெடி குறையாமல் நூலாசிரியர் எழுதியுள்ளது அவருடைய நுண்ணறிவைப் பறைசாற்றுகிறது.

தயரதன் மகன் இராமன், அரசு துறந்து, தன் மனைவி சீதையும் தனது உடன்பிறப்பு இலட்சுமணனும் உடன்வரக் கானகம் சென்றான். தனது சமூக, கலை, பண்பாட்டுக் கூறுகள் கொண்ட, தான் சார்ந்த முறையிலான ஆட்சிமுறையை எல்லா இடங்களிலும் அவன் நிலைநாட்டத் தொடங்கினான். அதிகாரம் செலுத்தத் தனக்கு அதிகாரம் இருக்கிறது என்று அவன் செயற்பட்டான். அக்கதை ஒரு வரலாறுபோல இலக்கியமாகச் சொல்லப்படுகிறது.

ஆனால் ‘அசுரன்’ நாவல் நாமறிந்த இராமாயணத்தை இராவணனின் பார்வையில் சொல்கிறது. இராமனின் மனைவியான சீதை, இராவணன்—மண்டோதரி இணையரின் மகள். இராவணனின் வீழ்ச்சியும் சாவும் அவனது மகளால் நேரும் என்ற நிமித்தகரின் கணிப்பால் அவள் கைவிடப்படுகிறாள். அவளை மிதிலை மன்னன் சனகன் எடுத்து வளர்க்கிறான். ஆனால் இராவணன் தன் மகள்மீது கொண்ட பாசத்தாலும் பரிவாலும் செய்யும் செயன்மைகள்தான் அவனது வீழ்ச்சிக்குக் காரணமாகின்றன. அவன் அன்பானவன். தன் மகளின் நல்வாழ்க்கையை எப்போதும் கருத்தில் கொண்டிருக்கிறான். இது உணர்வுப் பிழம்பாக வடிக்கப்பட்டிருப்பதால் இயல்பாகவே அழுத்தம் அமைந்த செறிவுடையதாக விளங்குகிறது.

பண்டைய கதைகளை மீள்நோக்குப் பார்வையில் புதிய சிந்தனைக்கு ஏற்ற வகையில் நாவலாகச் சொல்வது என்ற போக்கு உலகம் முழுவதிலும் பெருகி வருகிறது! வாழ்க்கை என்பது எவ்வளவு மாறியிருந்தாலும், வசதிகள் பெருகியிருந்தாலும், மனித மனம் எப்பொழுதும் ஒன்றாகவே இருக்கிறது. அதற்குப் புதுமை, பழமை என்பதெல்லாம் இல்லை. அது என்றும் நிலையாக இருக்கிறது. அதனை

ஒவ்வொருவரும் கலை இலக்கியங்கள் வழியாக அடையாளம் காண முற்படுகிறார்கள் என்பதுதான் இன்றைய போக்கு என்று அறிஞர் சா.கந்தசாமி எழுதிய கருத்து எண்ணத்தக்கது.

மாந்தர்களின் உள்ளுணர்வு குடும்பம், குழந்தைகள் என்பவற்றோடு இணைக்கப்பட்டிருக்கிறது. அது அறியப்பட்டாலும் சரி, அறியப்படாவிட்டாலும் சரி, வாழ்க்கை என்பதற்கு அதுவே அடித்தளமாக இருக்கிறது. இராமாயணம் என்னும் காப்பியமும் அதுதான். இருபதுக்கு மேற்பட்ட இராமாயணங்கள் இருந்தாலும், பெற்றப் பிள்ளைமீது கொண்ட பரிவும் தந்தையின் உருக்கமும் பொதுவாக முதன்மை பெறுகின்றன.

'அசுரன் கதை' தன் மகள் சீதைமீது இராவணன் கொண்ட எல்லையற்ற அன்புணர்ச்சியின் வெளிப்பாடுதான்! சீதை அசுரகுலத்து அரசியாக வளரவில்லை என்றாலும், அவள் அவனுடைய மகள். அவளுடைய நல்வாழ்க்கை என்பது அவனையே சார்ந்திருக்கிறது. அதை நிலைநாட்ட இராவணன் செய்யும் செயல்கள் ஒவ்வொன்றும் தவறாகப் போக, அவனது உடன்பிறப்புகள், மகன் என்று பலரும் மாண்டு போகிறார்கள். இறுதியில் அவனே கொல்லப்படுகிறான்! அசுரகுலம் அழிந்து போகிறது! இராவணன் புரிந்து கொள்ளப்படாதவனாகிறான்!

இந்த வகையில் இக்கதையை அமைத்துள்ள ஆனந்த் நீலகண்டன், சமுதாய உணர்வு ஊறிய கற்பனைக் கலைவண்ணத்தோடும் அறிவாற்றலோடும் இப்புதினத்தைப் புனைந்திருக்கிறார்.

அழகுக்கு அழகு சேர்ப்பதாக மொழியாக்கம் மிளிர்கிறது. தமிழாக்கத்தை மட்டும் படித்த நிலையிலேயே இந்த அணிந்துரை அமைகிறது. ஆங்கிலவாணர்களின் கருத்துரையும் ஏறத்தாழ என் போக்கை ஏற்கும் என்றே துணிகிறேன். முதற்படைப்பையே முதன்மையான படைப்பாக வரைந்த அறிஞர் ஆனந்த் நீலகண்டனுக்கு என் வாழ்த்து. முகம் பாராமல் அகம் பார்த்து எழுதும் முகவுரையில் உண்மைகளே பளிச்சிடும்.

"அசுரப் பேரரசன் ராவணன் ஆறு வருடங்களாக என் கனவுகளில் என்னைத் துரத்திக் கொண்டிருந்தான் . . ."

- ஆனந்த் நீலகண்டன்

கேரள மாநிலத்திலுள்ள கொச்சி நகரின் புறநகர்ப் பகுதியில் அமைந்த திரிபூனித்துரா எனும் பழமையான சிறிய கிராமத்தில் நான் பிறந்தேன். எர்ணாகுளத்திற்குக் கிழக்கே வேம்பனாடு ஏரிக்குக் குறுக்காக அமைந்த இக்கிராமம், கொச்சி ராஜ வம்சம் கோலோச்சிய இடம் என்ற தனித்துவமான சிறப்பைப் பெற்றுள்ளது. ஆனாலும், இக்கிராமம் தனது நூற்றுக்கணக்கான கோவில்களாலும், இங்கு பிறந்த பல்வேறு கலைஞர்களாலும், தனது இசைப் பள்ளியாலும் பெருமை பெற்றுள்ளது. அக்கோவில்களிலிருந்து வந்த மிக மெல்லிய செண்டை ஒலியையும், இசைப் பள்ளியின் கரடுமுரடான சுவர்களைக் கடந்து காற்றில் மிதந்து வந்த புல்லாங்குழலின் இனிய இசையையும் கேட்டபடியே பல மாலைப்பொழுதுகளை நான் செலவிட்டது என் நினைவில் உள்ளது. வளைகுடாப் பணமும் மிக வேகமாக விரிவடைந்து கொண்டிருக்கும் கொச்சி நகரமும், அந்தப் பழங்கால வசீகரத்தின் எச்சசொச்சங்களை முற்றிலுமாகத் துடைத்தெறிந்துவிட்டுள்ளன. இந்தியா நெடுகிலும் இருப்பதைப்போலவே, இக்கிராமமும் வழக்கமான, குறிப்பிடத்தக்க அம்சம் ஏதுமற்ற ஒரு புறநகர் நரகக் குழியாக மாறியுள்ளது. தேவைக்கு அதிகமாகவே கோவில்கள் இருந்த ஒரு கிராமத்தில் நான் வளர்ந்து வந்ததால், ராமாயண காவியம் எனக்கு பிரமிப்பூட்டியதில் வியப்பேதும் இல்லை. இதில் வேடிக்கையான விஷயம் என்னவென்றால், கதையின் வில்லனான ராவணனும், அவனது குடிமக்களான அசுரர்களும்தான் என்னைப் பெரிதும் கவர்ந்தனர். அவர்களது மாயாஜால உலகைப் பற்றி நான் வியந்தேன். அவர்கள் குறித்து நான் கொண்டிருந்த ஈர்ப்பு, பல வருடங்களாக என்னுள் தொடர்ந்து உறங்கிக் கிடந்து வந்துள்ளது. எங்கள் குடும்ப உறுப்பினர்கள் ஒன்றுகூடும் நேரங்களில் மட்டும், சமயப் பற்றுக் கொண்ட எனது அத்தைமார்கள் மற்றும் சித்திமார்களுக்கு எரிச்சலும் கோபமும் ஏற்படுத்தும் விதத்தில் அது அவ்வப்போது தலைதூக்கும். வாழ்க்கை தன் போக்கில் சென்று கொண்டிருந்தது . . . நான் ஒரு பொறியியல் வல்லுனராக ஆனேன்; பிறகு இந்தியன் ஆயில்

கார்ப்பரேஷனில் வேலைக்குச் சேர்ந்தேன்; பெங்களூருக்குக் குடிபெயர்ந்தேன்; அபர்ணா என்ற அன்பான பெண்ணைத் திருமணம் செய்து கொண்டேன்; என் மகள் அனன்யாவுக்கும் என் மகன் அபினவுக்கும் தந்தையானேன்.

ஆனால் ராமாயணத்தின் அந்த அசுரப் பேரரசன் என்னைத் தனியாக விடுவதாக இல்லை. ஆறு வருடங்களாக அவன் எனது கனவுகளில் என்னைத் துரத்தினான், என்னுடன் நடந்து வந்தான், கதையைத் தனது கண்ணோட்டத்திலிருந்து எழுதும்படி என்னை வற்புறுத்தினான். தனது கதையைத் தனது கண்ணோட்டத்திலிருந்து கூற விரும்பியவன் இவன் ஒருவன் மட்டுமல்ல. ராமாயணத்தில் இடம்பெற்ற, சம்பந்தமற்ற மற்றும் மிகச் சிறிய கதாபாத்திரங்கள்கூட ஒவ்வொன்றாகத் தங்களது சொந்தக் கண்ணோட்டங்களில் தங்கள் கதைகளைக் கூறத் துவங்கின. ராவணனால் உத்வேகம் பெற்று, அவனால் வழிநடத்தப்பட்டு, இறுதியில் அவனால் வஞ்சிக்கப்பட்டப் பொதுவான அசுரர்கள் பலரில் ஒருவனான பத்ரனிடமும் ஒரு குறிப்பிடத்தக்கக் கதை இருந்தது. இது அவனது அரசனான ராவணனிடமிருந்து வேறுபட்டிருந்தது. ராவணன் மற்றும் பத்ரனின் கண்ணோட்டங்களின்படி அமைந்துள்ள இவ்விரு கதைகளும், கடந்த மூவாயிரம் ஆண்டுகளாக ஆசியா நெடுகிலும் ஆயிரக்கணக்கான விதங்களில் கூறப்பட்டு வந்துள்ள ராமாயணத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டுள்ளன. அப்படியென்றால், இக்கதை அசுராயணம் என்று அழைக்கப்பட வேண்டும். இது அசுரர்களின் கதை, வீழ்த்தப்பட்டவர்களின் கதை.

நீங்கள் விரும்பினால், பின்வரும் மின்னஞ்சல் முகவரியில் நீங்கள் என்னைத் தொடர்பு கொள்ளலாம்: mail@asura.co.in

# பத்து முகத்தோன்

ராவணன் ஏன் பத்து முகங்களைக்
கொண்டவனாகச் சித்தரிக்கப்பட்டுள்ளான்?

ராவணன் பத்து முகங்களைக் கொண்ட ஒருவனாக நம் ஒவ்வொருவருக்கும் பரிச்சயமானவனாக இருந்தாலும்கூட, அவன் ஏன் அவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளான் என்பது பரவலாக அறியப்படாத ஒரு விஷயமாக இருந்து வந்துள்ளது.

பாரம்பரிய இந்தியத் தத்துவஞானமானது, ஒருவர் தனது அடிப்படை உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறது. அதோடு அறிவு மட்டுமே ஒப்புயர்வற்றது என்றும் அது முழங்குகிறது. கோபம், கர்வம், பொறாமை, மகிழ்ச்சி, வருத்தம், பயம், சுயநலம், தணியாத விருப்பம், லட்சியம் ஆகிய ஒன்பது அடிப்படை உணர்ச்சிகளை வெறுத்து ஒதுக்குமாறு மகாபலிப் பேரரசன் ராவணனுக்கு போதிக்கிறான். அறிவு மட்டுமே வணக்கத்துக்கு உரியது என்றும் அவன் எடுத்துரைக்கிறான். மனிதன் தன் சுயத்திலிருந்து மீள்வதன் அவசியத்தை எப்போதுமே வலியுறுத்தி வந்துள்ள இந்திய ஆன்மீக ஞானிகள், ஆன்மா மேன்மையுறுவதற்கு இந்த ஒன்பது உணர்ச்சிகளும் தடையாக இருப்பதாக கருதினர்.

ஆனால், தான் இந்தப் பத்து முகங்களைக் கொண்டிருப்பது தன்னை ஒரு முழுமையான மனிதனாக ஆக்குவதால், தான் அவை குறித்துப் பேருவகை கொள்வதாக மகாபலி அரசனுக்கு ராவணன் பதிலளிக்கிறான். ஒரு முழுமையான மனிதனின் உச்சகட்ட எடுத்துக்காட்டாக ராவணன் தன்னைப் பார்க்கிறான். தான் தெய்வாம்சம் பொருந்தியவன் என்பதுபோல அவன் வெளிவேஷம் போடவில்லை. சமூக மற்றும் சமயரீதியான விதிமுறைகள் அவனை மட்டுப்படுத்தவில்லை. மனிதன் எவ்வாறு இருக்க வேண்டும் என்று இயற்கை விதித்திருந்ததோ, அவன் அவ்வாறே இருந்தான். ராமனின் விஷயத்தில் செய்ய முடிந்ததைப்போல, ராவணனின் விஷயத்தில் அவனது மற்ற ஒன்பது முகங்களையும் இந்தச் சமூகத்தால் ஒடுக்க முடியவில்லை. ராமன் தெய்வீகப் புருஷனாகப் பார்க்கப்படக்கூடும், ஆனால் ராவணன் பூரணத்துவம் பெற்ற ஒரு மனிதனாகத் திகழ்ந்தான்.

தனது தணியாத விருப்பங்களின்மீது எந்தவிதக் கட்டுப்பாடும்

இல்லாத, ஆனால் வாழ்க்கையை ஆரத் தழுவுவதற்கும் முழுமையாக ருசித்துப் பார்ப்பதற்கும் ஆர்வமாக இருந்த ஒரு மனிதனின் குறியீடாகவே நமது இதிகாசங்கள் ராவணனைப் பத்து முகத்தோனாகச் சித்தரிக்கின்றன.

ராவணனின் அசுர சாம்ராஜ்யத்தின்
உச்சகட்டத்தில் புராதன இந்தியா



யக்ஷர்கள்
சீனர்கள்
அமராவதி
காந்தர்வர்கள்
பல்வேறுபட்ட
தேவ ராஜ்யங்கள்
அலகாபுரி
அயோத்தி
மிதிலை
நாகர்கள்
காளியின்
நகரம்
ராவணனின்
அசுரப் பேரரசு
கார்த்த
வீர்யார்ஜுனன்
கின்னரர்கள்
வானரர்கள்
கோகர்ணம் -
பிரம்மாண்டமான
சிவன் கோவில்
கிஷ்கிந்தை
மகாபலிபுரம்
முசிறி
திரிகோட்டா -
ராவணனின்
தலைநகரம்
குமரியில் உள்ள
லங்கினியின்
அரண்மனை

# உள்ளடக்கம்



# 1

# முடிவு

ராவணன்

நாளைய தினம் எனது இறுதிச் சடங்கு நடைபெறப் போகிறது. ஒரு சொறி பிடித்த நாயைப்போல நான் புதைக்கப்படுவேனா, அல்லது ஒரு பேரரசனுக்கு — அதாவது, ஒரு முன்னாள் பேரரசனுக்குரிய இறுதிச் சடங்கு எனக்குக் கிடைக்குமா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது பற்றி எனக்குக் கவலையில்லை. நரிகள் உரசிச் சென்ற சத்தம் எனக்குக் கேட்கிறது. அவை எனது நண்பர்களையும் குடும்பத்தினரையும் உண்ணுவதில் மும்முரமாக இருக்கின்றன. என் பாதங்களின்மீது ஏதோ ஒன்று வேகவேகமாக ஏறிச் சென்றது. என்னது அது? என் தலையை உயர்த்திப் பார்க்கும் அளவுக்கு இப்போது என்னிடம் வலிமை இல்லை. பெருச்சாளிகள்! பெரிய, கருமையான, முடிகள் நிரம்பிய எலிகள். மூட மனிதர்கள் ஒருவரையொருவர் கொன்று குவித்தப் பிறகு, போர்க்களங்களை இவை வெற்றி கொள்கின்றன. கடந்த பதினோறு நாட்களாகக் கிடைத்து வந்திருந்த விருந்தைப்போலவே, இன்றும் அவற்றுக்கு ஒரு நல்ல விருந்து

காத்திருக்கிறது. எதிரிகள் மற்றும் எங்களுடைய அழுகிக் கொண்டிருக்கும் சதை, சீழ், ரத்தம், சிறுநீர், மரணம் ஆகியவற்றின் துர்நாற்றம் குடலைப் புரட்டுவதாக இருக்கிறது. ஆனால் அது ஒரு பொருட்டல்ல. இப்போது எதுவுமே ஒரு பொருட்டல்ல. நான் விரைவில் மடிந்துவிடுவேன். வலிதான் சித்தரவதைப்படுத்துவதாக உள்ளது. அவனது அம்பு எனது அடி வயிற்றைப் பதம் பார்த்துவிட்டது. மரணத்தைக் கண்டு நான் பயப்படவில்லை. மரணம் குறித்துக் கொஞ்ச காலமாகவே நான் சிந்தித்து வந்துள்ளேன். கடந்த சில நாட்களில் ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்பட்டுள்ளனர்.

எனது சகோதரன் கடலின் ஆழத்தில் எங்கோ மடிந்து கிடக்கிறான். சுறாக்களுக்கு அவனது உடல் ஒரு நல்ல விருந்தாக ஆகியிருக்கும். இறந்து போன என் மகன் மேகநாதனின் உடலுக்கு நேற்றுதான் நான் தீ மூட்டினேன். அது நேற்றுதானா அல்லது அதற்கு முந்தைய நாளா? நேரம் பற்றிய உணர்வு முழுவதையும் நான் இழந்துவிட்டேன். பல விஷயங்கள் குறித்தப் பிரக்ஞை என்னிடமிருந்து மாயமாய் மறைந்துவிட்டது. பிரபஞ்சத்தின் ஆழத்தில் தனிமையில் ஒரு விண்மீன் தகதகத்துக் கொண்டிருக்கிறது. எல்லாவற்றையும் ஆட்கொள்கின்ற, எல்லாவற்றையும் அழிக்கின்ற, சிவபெருமானின் மூன்றாவது கண்ணைப்போல அது எரிந்து கொண்டிருக்கிறது. நான் நேசிக்கும் என் இலங்கை அழிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. முன்பு ஓர் அருமையான தீவாக இருந்த அதில், அணைந்து கொண்டிருக்கும் தழல்களை இன்னும் என்னால் காண முடிகிறது. எனது தலைநகரமான திரிகோட்டா, உலகின் தலைசிறந்த நகரமாக இருந்தது. அந்தக் குரங்கு—மனிதன் இங்கு வந்து அதற்கு நெருப்பு மூட்டுவதற்கு முந்தைய நிலை அது. திரிகோட்டா பல நாட்களாக எரிந்தது. கடைகளும் வீடுகளும் மாளிகைகளும் எரிந்து சாம்பலாயின. ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் அந்தத் தீயில் வெந்து மடிந்தனர். ஆனால் எங்கள் நகரை நாங்கள் மறுசீரமைத்தோம். திரிகோட்டாவை மீண்டும் கட்டியெழுப்பும் பணியில் ஊனமற்ற ஒவ்வொரு மனிதனும் பங்கு கொண்டான். பிறகு, அந்தக் குரங்கு மனிதன் மீண்டும் தனது தலைவர்களோடு வந்து எல்லாவற்றையும் அழித்தான். அனுமான்தான் இதைச் செய்தான். அந்தக் குரங்கு மனிதன்தான் எங்களுக்கு மரணத்தையும் அழிவையும் வீழ்ச்சியையும் கொண்டு வந்தான்.

நான் அதிலேயே உழன்று கொண்டிருக்க விரும்பவில்லை. என் மகன் அவனைப் பிடித்தபோதே நான் அவனைக் கொன்றிருக்க வேண்டும். என்னுடைய தம்பியின் கூற்றுக்கு நான் செவிமடுத்தேன். அவன் எனக்கு எதிராகச் சதித் திட்டம் தீட்டிவிட்டான். ஆனால் தேசத்

துரோகமும் நம்பிக்கைத் துரோகமும் அசுரர்களுக்குப் புதிதல்ல. நான் சூதுவாது அறியாதவனாக இருந்துவிட்டேன். என்னுடைய சகோதரர்களும் எனது மக்களும் எப்போதும் என்மீது அன்பு செலுத்துவார்கள் என்று நான் முட்டாள்தனமாக நம்பினேன். நம்பிக்கைத் துரோகத்திற்கு ஆளாவேன் என்று நான் ஒருபோதும் கற்பனை செய்ததில்லை. அதை நினைத்தால் இப்போது எனக்குச் சிரிப்புதான் வருகிறது. ஆனால் ஒருவரது குடல் நாளங்கள் அவரைச் சுற்றி மலர்வளையங்களைப்போலப் பரவிக் கிடக்கும்போது, சிரிப்பது அவ்வளவு சுலபமல்ல. மகிழ்ச்சி ஒலி எனது நகரத்திலிருந்து என்னை நோக்கி மிதந்து வருகிறது. என் எதிரி தனது வெற்றியைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறான். குரங்கு மனிதர்கள் திரிகோட்டாவை மும்முரமாகச் சூறையாடிக் கொண்டிருப்பார்கள். எனது கோவில்கள் கொள்ளையடிக்கப்படும்; தானியக் களஞ்சியங்கள் தீயிட்டுக் கொளுத்தப்படும்; மருத்துவமனைகளும் பள்ளிகளும் எரிக்கப்படும். வெற்றிக் கொண்டாட்டங்கள் அப்படித்தான் இருக்கும். வெற்றி தேவதை என் பக்கத்தில் இருந்தபோது, இதையும், இதைவிட மோசமானவற்றையும் தேவர்களின் கிராமங்கள் பலவற்றுக்கு நாங்கள் செய்திருக்கிறோம். சில அசிங்கமான குரங்குகள் இப்போது எனது அந்தப்புரத்திற்குள் நுழைந்திருக்க வேண்டும். மோசமாக ஏதேனும் நிகழ்வதற்கு முன்பாகச் செங்குத்துப் பாறையிலிருந்து கீழே குதிப்பதற்கான அறிவு என் அரசிக்கு இருக்கும் என்று நான் நம்புகிறேன். இப்போது என்னால் எதையும் கட்டுப்படுத்த முடியாது. மரணத்தின் வெப்ப சுவாசத்தை என் முகத்தில் என்னால் உணர முடிகிறது. நரிகள் வந்துவிட்டன. என் உடலின் எந்தப் பாகத்தை அவை முதலில் உண்ணும்? எனது குடல் நாளங்களைத்தான் அவை முதலில் உட்கொள்ளும் என்று நினைக்கிறேன். ஏனெனில், அவற்றிலிருந்து இன்னும் ரத்தம் கசிந்து கொண்டிருக்கிறது. என் மார்புக் கவசத்தின் ஒரு பகுதி ஒருவேளை ஒரு நரியின் தொண்டையில் மாட்டி அதற்கு மூச்சுத் திணறலை ஏற்படுத்திவிட்டால்? அந்த எண்ணம் எனக்குச் சிரிப்பு மூட்டுகிறது. ஒரு நரி எனது கன்னத்திற்குள் தன் பற்களைப் பதித்து, அதிலிருந்து ஒரு சதைத் துண்டைக் கிழித்தெடுக்கிறது. அவ்வளவுதான். இந்தப் பந்தயத்திலும் நான் தோற்றுவிட்டேன். அவை எனது முகத்திலிருந்து துவக்கியுள்ளன. எலிகள் எனது கால் விரல்களை மென்று கொண்டிருக்கின்றன.

ராவணனான நான் வெகுதூரம் வந்துவிட்டிருக்கிறேன். நரிகளுடனான இந்த யுத்தத்தைத் தவிர, சண்டையிடுவதற்கு இப்போது எனக்கு எதுவுமில்லை. நாளைக்கு, தெருக்களின் வழியாக ஓர் ஊர்வலம் நடைபெறும். முன்பு நான் என் ராஜ ரதத்தில் வேகமாக வலம் வந்த அதே வீதிகளில், என்னுடைய தலையை ஒரு கம்பத்தில் உயர்த்திக் கட்டி நாளைக்கு ஊர்வலமாக எடுத்து வருவார்கள். இந்தக் காட்சியைக் காண எனது மக்கள் திகிலோடும் குரூர மகிழ்ச்சியோடும் கூட்டமாக வருவார்கள். என் மக்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அது ஒரு பெரிய திருவிழாவாகவே இருக்கும்.

நான் அடிபட்டுக் கீழே விழுந்த பிறகு, ராமன் ஏன் என்னருகே வந்து என் முன்னே நின்றான் என்பது மட்டும் எனக்குப் புரியவில்லை. அவன் அங்கு நின்ற விதம், என்மீது தனது ஆசீர்வாதங்களைப் பொழிவதுபோல இருந்தது. உலகிலேயே மிக அதிகமாகக் கற்றறிந்த மனிதன் நான்தான் என்றும், நான் ஒரு மிகச் சிறந்த அரசன் என்றும், ஆட்சி எனும் கலையைப் பற்றி மற்றவர்களால் என்னிடமிருந்து கற்றுக் கொள்ள முடியும் என்றும் அவன் தனது சகோதரனிடம் கூறினான். எனக்கு வந்த சிரிப்பை நான் மிகவும் சிரமப்பட்டு அடக்கினேன். என் சாம்ராஜ்யம் என்னைச் சுற்றிச் சின்னாபின்னமாகச் சீரழிந்து கிடக்கும் அளவுக்கு நான் ஆட்சி புரிந்திருந்தேன். எரிந்து கொண்டிருக்கும் எனது வீரர்களின் உயிரற்ற உடல்களில் இருந்து வருகின்ற நெடியை என்னால் நுகர முடிகிறது. என் மகன் மேகநாதனின் குளிர்ந்த, உயிரற்ற உடலை இப்போதுகூட என் கைகளில் என்னால் உணர முடிகிறது. கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த திரிகோட்டாவின் மூச்சுத்திணறடிக்கும் காற்று என் உணர்வுகளைத் திக்குமுக்காடச் செய்தது. ராமனிடமிருந்தும் லட்சுமணனிடமிருந்தும் அந்தக் குரங்கு மனிதர்களிடமிருந்தும் என் மக்களை என்னால் காப்பாற்ற முடியவில்லை. ஆனால் இவனோ, நான் ஒரு மாபெரும் அரசன் என்று கூறிக் கொண்டிருக்கிறான். இதிலுள்ள வேடிக்கையை என்னால் பாராட்டாமல் இருக்க முடியாது. என் எதிரியைப் பார்த்து நான் சிரிக்க விரும்பினேன். தலைகள் கொய்யப்பட்டும், விரல்கள் துண்டிக்கப்பட்டும், உயிரற்றும் என்னைச் சுற்றிச் சிதறிக் கிடந்த, என்ன நம்பிய முட்டாள்களைக் கண்டு நான் சிரிக்க விரும்பினேன். அனைத்து மனிதர்களும் சமமாக நடத்தப்பட வேண்டும் என்ற கனவுகளுடன் நான் என் ராஜாங்கத்தைக் கட்டியெழுப்பியிருந்தேன். அந்தக் கனவை நினைத்து இப்போது நான் சிரிக்க விரும்பினேன். அது சிரிக்கத்தக்க ஒரு விஷயம்தான். ஆனால் ஒரு பேரரசன் போயும் போயும் இப்படியா

இறக்க வேண்டும்?

எலிகளும் நரிகளும் என்னைக் குதறத் தொடங்கிய வேகத்திலேயே திடீரென்று அங்கிருந்து வேகவேகமாக ஓட்டமெடுத்தன. இருண்ட இரவைவிட இருட்டாக இருந்த ஒரு நிழல் என்மீது விழுந்தது. சுருள்முடியுடன் இருந்த ஓர் இருண்ட தலை, என் கண்ணுக்குத் தென்பட்டுக் கொண்டிருந்த அந்த ஒற்றை நட்சத்திரத்தை என் பார்வையிலிருந்து மறைத்தது. அது மரணக் கடவுளான காலனா? அவன் என்னைக் கூட்டிச் செல்வதற்காக வந்திருக்கிறானா? என் கண்களை அகலத் திறப்பதற்கு நான் போராடினேன். ஆனால் காய்ந்து போன ரத்தம் என் கண்ணிமைகளை ஒட்டிக் கொள்ளச் செய்தது. என் தலையைக் கொய்து, அதை ஒரு பரிசுக் கோப்பையாக எடுத்துச் செல்வதற்காக வந்துள்ள ராமனின் கீழ்நிலைச் சேவகர்களில் யாரேனும் ஒருவனா அவன்? நான் அவனது முகத்தைப் பார்க்க விரும்புகிறேன். எனது இறுதிக் கணங்களில், எந்தவிதமான தடுமாற்றமும் பயமும் இன்றி நான் அவனது கண்களுக்குள் ஊடுருவிப் பார்க்க விரும்புகிறேன். என்மீது படிந்திருந்த அந்த நிழலின் தலை மற்றும் சுருள்முடி குறித்த ஏதோ ஒன்று என் கடந்தகாலத்தை எனக்கு நினைவுபடுத்துகிறது. எனக்கு அவனைத் தெரியுமா? அவன் என்னை நோக்கிக் குனிந்து என் முகத்தைப் பார்க்கிறான்.

ஆ! இது பத்ரன். என் நண்பன். எனக்கு எஞ்சியிருந்த ஒரே நண்பன். ஆனால் அவனை என்னுடைய நண்பன் என்று இனியும் என்னால் அழைக்க முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. துவக்கத்தில் அவன் எனது காலாட்படை வீரர்களில் ஒருவனாக இருந்தான். எனது வேலைக்காரனாக இருந்தான். பிறகு, வழியில் அவன் எங்கோ தொலைந்து போனான். அவன் என் வாழ்விற்குள் வருவதும் போவதுமாக இருந்தான். சில சமயங்களில், பல வருடங்களாக அவன் காணாமல் போனான். ஒரு படைக்கு நான் தலைமை வகித்தபோது, எனது தனிப்பட்ட முகாமிற்கு வந்து போவதற்கு பத்ரனுக்கு அனுமதி இருந்தது. எனது அந்தப் படை, ஒரு புரட்சிப் படையைவிட, திருடர்களின் கும்பல் ஒன்றை அதிகமாக ஒத்திருந்தது என்று கூறலாம். பிறகு, நான் ஒரு சிறிய தீவிற்கு அரசனாக ஆனபோது, எனது தனிப்பட்ட அறைக்குள் வந்து போவதற்கு அவனுக்கு அனுமதி இருந்தது. இறுதியில், நான் இந்தியாவை ஆண்டு கொண்டிருந்தபோது எனது படுக்கையறைக்கு அவன் வந்து போனான். அதைவிட அதிகமாக, என் சகோதரர்களிடமிருந்தும், என் மனைவியிடமிருந்தும், என் காதலியிடமிருந்தும், என் மக்களிடமிருந்தும், ஏன், என்னிடமிருந்தும்கூட நான் மறைத்து வந்திருந்த, எனது இதயத்தின்

இருண்ட மூலைகளுக்குள் அவனால் நுழைய முடிந்தது.

பத்ரன் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறான்? ஆனால் இது குறித்து நான் ஏன் ஆச்சரியப்படுகிறேன்? நிழல்களில் வளைய வருகின்ற இவனைப் போன்ற மக்களுக்கான இடம் இதுதானே! அவன் தேம்புவது என் காதுகளில் விழுகிறது. பத்ரன் உணர்ச்சிவசப்படுகிறானா? அவன் ஒருபோதும் கோபமாகவோ, வருத்தமாகவோ, அல்லது மகிழ்ச்சியாகவோ இருந்ததே இல்லை. இப்போது தான் மிகவும் உணர்ச்சிவசப்பட்டு இருந்ததுபோல அவன் நடந்து கொண்டான். ஆனால் அவனுக்கு உணர்ச்சிகள் ஏதும் கிடையாது என்பதை நான் அறிவேன். அது எனக்குத் தெரியும் என்பது பத்ரனுக்கும் தெரியும். “பத்ரா, என்னை இங்கிருந்து கூட்டிச் செல். என்னை இங்கிருந்து தூக்கிச் சென்று . . .” நான் வலிமை குன்றியிருந்தேன். உண்மையில், என் வாயிலிருந்து அந்த வார்த்தைகள் வெளிவந்தனவா அல்லது என் தொண்டைக் குழியிலேயே எங்கோ அமைதியாக மடிந்துவிட்டனவா என்றுகூட எனக்குத் தெரியவில்லை. பத்ரன் தன் தலையை அசைத்தான். நான் மிகவும் குளிர்ந்து போயிருந்தேன். என் ஜீவன் என்னைவிட்டுப் போய்க் கொண்டிருந்தது. அப்போது, பத்ரன் என் தலையைத் தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டான். அவனது வியர்வையை என்னால் நுகர முடிந்தது. என் உடலின் ஒவ்வொரு கோணத்திலிருந்தும் வலி என்னைத் துளைத்தெடுத்தது. அந்த வேதனை தனது விஷக் கொடுக்குகளை என் நாளங்களுக்குள் ஊடுருவச் செய்தது. நான் முனகினேன். எனது ரத்தம், எனது மக்களின் ரத்தம், எனது கனவுகளின் ரத்தம், மற்றும் எனது வாழ்க்கையின் ரத்தத்தினால் ஈரமாக இருந்த நிலத்தின்மீது பத்ரன் என்னைக் கிடத்தினான். எல்லாம் முடிந்துவிட்டது.

ஒருவித வருத்த உணர்வும் வெறுமையுணர்வும் எனக்குள் ஊற்றெடுத்தன. “அரசே, நான் உங்கள் வேலையைப் பூர்த்தி செய்வேன். நீங்கள் கவலைப்படாதீர்கள். அமைதியுடன் செல்லுங்கள். நம் இனத்திற்காக நான் அதைச் செய்வேன். என் வழிமுறைகள் வேறாக இருக்கலாம். உங்களுடைய வழிமுறைகளோடு ஒப்பிடுகையில் உன்னதமற்றவையாகவும் இருக்கலாம். முன்பொரு சமயத்தில் நானும் ஒரு போர்வீரனாக இருந்தவன்தான். ஆனால் இப்போது எனக்கு வயதாகிவிட்டது. ஆயுதங்கள் இப்போது என்னை அச்சுறுத்துகின்றன. போரைக் கண்டு நான் பீதியடைந்துள்ளேன். ஒரு குழந்தையைக்கூட என்னால் காயப்படுத்த முடியாது. ஆனாலும், என் வழிமுறைகள் மிகவும் கொடுமையானவை. உங்களுக்காகவும், எனக்காகவும், சேதப்படுத்தப்பட்டுள்ள நமது இனத்திற்காகவும் நான் பழி வாங்குவேன். நமக்குச் செய்துள்ளவற்றுக்கு ராமன் பதில் சொல்லித்தான் ஆக

வேண்டும். என்னை நம்புங்கள். இப்போது அமைதியுடன் செல்லுங்கள்.”

பத்ரன் கூறியவற்றில் பெரும்பான்மையான விஷயங்கள் எனக்குக் கேட்கவில்லை. ஆனால், வினோதமாக, அவனது வார்த்தைகள் எனக்கு ஆறுதலளித்தன. துர்நாற்றம் வீசிக் கொண்டிருந்த அந்த அசுரனிடமிருந்து விலகி, என் நினைவு என் குழந்தைப்பருவத்திற்குச் சென்றது. ஓராயிரம் காட்சிகள் என் மனத்திற்குள் வேகமாகப் படையெடுத்தன. எனது ஆரம்பகாலப் போராட்டங்கள், அன்பு மற்றும் கைவிடுதல் குறித்த ஏக்கங்கள், பிரிவு, சண்டைகள் மற்றும் யுத்தங்கள், இசை மற்றும் கலை — இவை அனைத்தும் எந்தக் குறிப்பிட்ட ஒழுங்கும் இன்றி என் மனத்தில் பளிச்சிட்டன. வாழ்க்கையைப்போலவே இவையும் எனக்கு அர்த்தமற்றவையாக இருந்தன.

பத்ரன் என் பாதங்களைத் தொடுவதற்காகக் கீழே குனிந்ததையும், பிறகு அங்கிருந்து சென்றதையும் நான் உணர்ந்தேன். “பத்ரா . . .” என் குடல்களை மீண்டும் என் உடலுக்குள் எடுத்துப் போட்டு, வெளியே தொங்கிக் கொண்டிருக்கும் எனது இடது கண்ணை மீண்டும் அதன் குழிக்குள் பொருத்தி, எப்படியோ என் உடலுக்குள் மீண்டும் உயிரைக் கொண்டுவரக்கூடிய ஒரு மருத்துவரிடம் என்னை அழைத்துச் செல்வதற்காக, அவன் திரும்பி வந்து என்னைக் கூட்டிச் செல்ல வேண்டும் என்று நான் விரும்பினேன். பல வருடங்களுக்கு முன்பு பேரரசர் மகாபலி செய்திருந்ததைப் போலவே நானும் சாயத்ரிக் காட்டிற்குள் தஞ்சம் புகுந்து, ஒரு கொரில்லா யுத்தத்தைத் துவக்க விரும்பினேன். நான் என் வாழ்க்கையை மீண்டும் துவக்க விரும்பினேன். அதே தவறுகளைச் செய்யவும், அதே மக்களை நேசிக்கவும், அதே எதிரிகளுடன் சண்டையிடவும், அதே நண்பர்களை மீண்டும் நண்பர்களாகப் பெறவும், அதே மனைவியரை மணமுடிக்கவும், அதே மகன்களைப் பெற்றெடுக்கவும் நான் விரும்பினேன். அதே வாழ்க்கையை நான் மீண்டும் வாழ விரும்பினேன். சொர்க்கத்தில் ராமன் எனக்காக ஒதுக்கி வைத்துள்ள ஆசனத்தை நான் விரும்பவில்லை. இந்த அழகிய பூமியை மட்டுமே நான் விரும்பினேன். ஆனால் இப்படிப்பட்ட விஷயங்கள் எதுவும் நிகழப் போவதில்லை என்பதை நான் அறிந்தேன். எனக்கு இப்போது அறுபது வயதேயொழிய, பதினாறு வயது அல்ல. ஒருவேளை நான் பிழைத்தெழுந்து வாழ்ந்தால், கிழிந்து போன உடைகளுடனும் உடல் முழுக்க துர்நாற்றத்துடனும், ஏதேனும் ஒரு கோவிலில், ஒரு வயதான, அழுக்கான, ஒற்றைக் கண் பிச்சைக்காரனாக இருப்பேன். நான் முன்பு எப்படி இருந்தேனோ, அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டதொரு வாழ்க்கையாக அது இருக்கும். நான் இப்போது இறக்க விரும்பினேன். இது முடிவுற வேண்டும் என்று நான்

விரும்பினேன். எரிந்து கொண்டிருக்கும் நகரங்கள் தம்மைத் தாமே சமாளித்துக் கொள்ளட்டும். அசுரர்கள் தங்களது சொந்த யுத்தங்களைப் பார்த்துக் கொள்ளட்டும், தேவர்களோடு சேர்ந்து வெறுக்கப்படட்டும். நான் எனது குழந்தைப்பருவத்திற்குத் திரும்பிச் சென்று, என் வாழ்க்கையை மீண்டும் துவக்குவது மட்டும்தான் எனது ஒரே விருப்பம். நான் முன்பு செய்த ஒவ்வொரு விஷயத்தையும் மீண்டும் செய்ய விரும்புகிறேன் . . .



# 2

# விதை

ராவணன்

ஒரு மலையிலிருந்த ஒரு செங்குத்துப் பாறையின்மீது ஆபத்தான நிலையில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு சிறிய குடிலைச் சுற்றிப் பருவக்காற்று வேகமாகச் சுழன்று சென்றது. உறுமிக் கொண்டிருந்த அந்தக் காற்று இன்னொரு முறை சீறினால், அந்தக் குடில், கீழே பசியோடு காத்துக் கொண்டிருந்த கரிய நீரோடைகளுக்குள் சென்று விழுந்துவிடும். பிறகு, நாங்கள் வெறும் சடலங்களாகக் கரையொதுங்கி இருப்போம். அது அப்படி முடிந்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும். ஆனால் இது முடிவின் துவக்கம் மட்டுமே. வரலாற்றின் இலைகளிலிருந்து நான் வெறுமனே துடைத்தெறியப்பட்டுவிடுவேனா? தோற்க வேண்டும் என்று எனக்கு விதிக்கப்பட்டிருந்ததா? அது அப்போது எனக்குத் தெரியவில்லை, ஆனால் வேறொருவனின் தலைவிதியை நிறைவேற்றுவதற்காக நான் பிறந்திருந்தேன். வேறொருவன் கடவுளாக ஆவதற்கு இடமளிப்பதற்காக நான் பிறந்திருந்தேன்.

என்னுடன் பிறந்த மூவருடனும் ஒரு சிடுசிடுப்பான தாயாருடனும் அந்தக் குடிலில் நெருக்கியடித்துப் படுத்தபடி, எனது மாற்றாந்தாய்க்குப் பிறந்த எனது சகோதரனுடைய, பிரகாசமாக ஒளிர்ந்து கொண்டிருந்த மாளிகையை நான் பார்த்தேன். அது ஓரளவுக்கு அருகே இருந்தாலும், முற்றிலும் வேறோர் உலகமாக இருந்தது. எனது இளைய சகோதரர்கள் எனது விரல்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க, கரிய நிறம் கொண்ட எனது ஏழைத் தாயாரின் சால்வைக்குப் பின்னால் ஒளிந்தபடி நான் ஒருமுறை அங்கு சென்றிருந்தேன். எனது சகோதரி, ஓர் அழுக்கான, பழைய துணியைப்போல, களைப்போடும் பசியோடும் எனது தாயாரின் தோள்களில் துவண்டு கிடந்தாள். நாங்கள் பரம ஏழைகளாக இருந்தோம். ஏழ்மையும் பசியும் அவமானமும் மட்டுமே எங்களிடம் அபரிமிதமாக இருந்தன.

வேறு வழியின்றி, ஒரு கடைசி முயற்சியாக, தனது சக்களத்தியின் மகனான குபேரனிடம் யாசிப்பதற்காக என் தாயார் எங்கள் அனைவரையும் இழுத்துச் சென்றார். குபேரன், அனைத்துச் செல்வங்களின் அரசன், உலகிலேயே மிகப் பெரிய பணக்காரன். அந்த மாளிகையின் மினுமினுப்பிலும், குமட்டலை ஏற்படுத்திய அபரிமிதத்தின் வாசனையிலும் குளித்தவாறே, நாங்கள் ஒரு யாசகக் கலயத்துடன் அங்கு நின்றோம். ஒருசில தங்க நாணயங்கள் எங்களுக்கு யாசகமாகக் கிடைத்தன. கூடவே, எனது மாற்றாந்தாயின் மகனின் மனைவியரின் ஏராளனப் பார்வைகளும் எங்களுக்குக் கிடைத்தன. எங்கள் தேவைகள் வெகு குறைவாகவே இருந்தன. எங்கள்மீது விரயம் செய்ய முடியாத அளவுக்குக் குபேரனின் நேரம் மிகவும் விலைமதிக்க முடியாத ஒன்றாக இருந்தது. அவன் லேசாகக் கையசைத்ததும், ஒருசில நாணயங்கள் கொண்டு வரப்பட்டு எங்களிடம் தூக்கி எறியப்படும். அதன் பிறகு அவன் எங்களைப் பற்றி ஒருபோதும் நினைக்கவில்லை. ஆனால் அவன் எங்களைப் பற்றி நினைப்பதற்கும் ஒரு நாள் வந்தது. அன்று, நாங்கள் உயிரோடு இருந்ததை மரியாதையின்றியும் சத்தமாகவும் அவனுக்கு நான் எடுத்துரைத்தேன். ஆனால் இது நெடுங்காலம் கழித்து நடந்த விஷயம். அப்போது நாங்கள் பிச்சைக்காரர்களாக இருக்கவில்லை.

பண ஆசையும் பேராசையும் நிரம்பி வழிந்த அந்த ஆணவத்தனமான, செழிப்பான மாளிகையில் நான் எனது மிகப் பெரிய சொத்தைக் கைவசப்படுத்தினேன். என்னுள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த லட்சியம்தான் அந்தச் சொத்து. அந்த மாளிகை என்னுள் பற்ற வைத்திருந்த லட்சிய ஜுவாலைகளை, பசியெனும் நெருப்பு ஒருபோதும் தணிக்காமல் பார்த்துக் கொண்டது. அவனுக்குச்

சொந்தமாக இருந்த உலகமும், அதற்கு அப்பாலும், ஒருநாள் என்னுடையவையாக ஆகும் என்பதை நான் அறிந்தேன். அன்று அவை முழுக்க முழுக்க என்னுடையவையாக மட்டுமே இருக்கும். இன்றைய நாள், என் தாயாருடன் நான் இருக்கப் போகின்ற கடைசி நாளாக இருக்கக்கூடும். நாளைய தினம், இந்தப் பேய் மழையில் எங்களது சிறிய குடில் தப்பிப் பிழைத்தால், நாங்கள் எங்கள் பயணத்தைத் துவக்குவோம். வெற்றி கொள்ளப்பட வேண்டிய ஓர் உலகம் இருக்கிறது என்று நான் நம்புகிறேன். ஒரு சிறப்பான உலகம் எங்கள் வருகைக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது.

எனக்கோ என் சகோதரர்களுக்கோ சொல்லிக் கொள்ளும்படியாக எந்தக் கல்வியறிவும் ஒருபோதும் இருந்ததில்லை. எங்களுக்கு இலவசமாகக் கற்றுக் கொடுப்பதற்கு எந்த பிராமணனும் தயாராக இருக்கவில்லை, அவர்களுக்காக வேலைகள் செய்வதற்கு நாங்கள் தயாராக இருந்தபோதிலும்கூட. நாங்கள் காட்டுத்தனமாகவும், கருப்பாகவும், குறும்புத்தனம் கொண்டவர்களாகவும் இருந்தோம். நாங்கள் கலப்பு இனப் பெற்றோர்களுக்குப் பிறந்தவர்கள் என்பதை நாங்கள் தெரிந்து கொண்டிருந்தோம். எங்கள் தந்தை ஒரு பிரபலமான மகரிஷி. ஆனால் அவரால் எங்களுக்கு எள்ளளவுகூடப் பயனிருக்கவில்லை. தனது சந்ததியினரைப் பற்றி அக்கறை கொள்வதற்கு நேரமின்றி அவர் தனது சொந்தக் கற்றல் உலகிற்குள் மூழ்கிக் கிடந்தார். அவர் ஒரு பிராமணர். எங்கள் தாயாரோ, யாருக்கும் தெரியாத ஓர் அசுர சாதியைச் சேர்ந்தவர். என் தந்தை தனது இந்த உறவை ஒரு திறந்த ரகசியமாக வைத்திருந்தார். உலகின் அனைத்து அறிவும் எந்த வேதங்களில் அடங்கியிருந்ததாக பிராமணர்கள் முழக்கமிட்டனரோ, அந்த சமஸ்கிருத வேதங்கள் போதுமான அளவுக்கு அவருக்குத் தெரிந்திருந்தது.

உண்மையில், என் தந்தை ஒரு மோசமான மனிதரல்ல. அவர் தனது சாதியைச் சேர்ந்த வேறு எந்தவோர் உறுப்பினரைப் போலவே, புகழ்மிக்கத் தன்னல மனப்பான்மை கொண்டவராக இருந்தார். அவர் எங்கள் வீட்டில் இருப்பதே எங்களுக்குக் கிடைத்தப் பொருத்தமான வெகுமதி என்று அவர் கருதினார். மனிதர்கள் உயிர்வாழ்வதற்கு உணவும் அவசியம் என்பதை அவர் சௌகரியமாக மறந்துவிட்டார். அவரது போதனைகளில் நாங்கள் ஆர்வம் காட்டாததால் அவர் எங்களுக்கு அரக்கர்களின் பெயர்களைச் சூட்டினார். பல சமயங்களில் நாங்கள் அவரைக் கேலி செய்தோம். அவரும் அவரது நண்பர்களும் வேதங்களை ஓதியபோது, நான் அடிக்கடி அவரது நம்பிக்கைகளைப் பற்றித் துணிச்சலாகக் கேள்வி கேட்டேன். எங்களுடைய மண்

முற்றத்தில், நானும் கும்பகர்ணனும் சூர்ப்பனகையும் அவரைப் போலவே வேதங்களை ஓதுவதுபோல பாவனை செய்தோம். என்னுடைய கடைசித் தம்பி விபீஷணன் மட்டுமே என் தந்தை வேதங்கள் ஓதியதை ஆச்சரியத்துடன் பார்த்தான். அவன் அந்த பிராமணர்கள் பிதற்றிக் கொண்டிருந்ததை மெய்மறந்து கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தபோது, அவனது கண்கள் அவர்கள்மீது நிலை கொண்டன.

இது எனது தந்தை தனது பணம் முழுவதையும் எனது மாற்றாந்தாயின் மகனான குபேரனுக்குக் கொடுத்தப் பிறகு நிகழ்ந்த விஷயம். எங்களுக்கென்று எதுவும் இருக்கவில்லை. நாங்கள் மிகவும் கடினமான சூழ்நிலையில் வளர்ந்து வந்தோம். மெல்ல மெல்லப் பரவி, இறுதியில் தனது கரிய விரல்களை ஒருவரது ஆன்மாவின்மீது படரச் செய்கின்ற ஒரு தொடர்ச்சியான, உணர்ச்சியற்றுப் போகச் செய்கின்ற வேதனை அது. ஆனாலும் நாங்கள் எப்போதும் நெறிசார்ந்தே வாழ்ந்து வந்தோம். கற்றவர்களும் சிறப்புரிமை பெற்றவர்களும் எந்த விஷயங்கள் சரி என்று கருதினரோ, அவற்றிலிருந்து எங்களது நீதியுணர்வு மாறுபட்டிருந்தது. எங்கள் நெறிமுறைகளை நாங்களே தீர்மானித்தோம். எங்கள் உரிமைகளை எங்கள் சொந்த வழியில் நாங்களே வரையறை செய்து கொண்டோம். ஒருவரது தேவைக்குப் பொருத்தமாக இருக்கும் விதத்தில் உண்மையை வளைக்க முடியும் என்பதை நாங்கள் கற்றுக் கொண்டோம். எங்களது தர்மம் எளிய விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தது: ‘ஒரு மனிதன் தனது சொல்லுக்கு உண்மையாக இருக்க வேண்டும். அவன் தனது இதயத்திலிருந்து பேச வேண்டும். தான் தவறு என்று கருதும் எந்தவொரு விஷயத்தையும் அவன் செய்யக்கூடாது. தான் தோற்கப் போவது உறுதி என்ற நிலையிலும்கூட அடுத்தவரை ஏமாற்றக்கூடாது. பெண்கள் மதிக்கப்பட வேண்டும். யாரையும் ஏளனம் செய்யக்கூடாது. நியாயமின்மை இருந்தால், எந்த விலை கொடுத்தாவது அதை நாங்கள் எதிர்த்தாக வேண்டும். பண்டைய அசுரர்கள் அல்லது தேவ ரிஷிகளின் மாபெரும் போதனைகள் எதுவும் எங்களுக்கு ஒருபோதும் தெரிந்திருந்ததில்லை. நாங்கள் எந்தப் பாரம்பரியத்தையும் பின்பற்றவில்லை. நாங்கள் கிட்டத்தட்டச் சண்டாளர்களாக இருந்தோம்.

அடுத்த நாள், நாங்கள் இந்தத் தீவைவிட்டுப் போகவிருந்தோம். மேற்கில் பல மாபெரும் நாடுகள் இருந்ததாக நான் கேள்விப்பட்டிருந்தேன். இந்தியா நெடுகிலும் நான் பயணிப்பேன். இமயத்தின் பனி படர்ந்த மலைகளின்மீது நான் ஏற விரும்பினேன். பருவமழையின் காரணமாகக் காட்டாற்று வெள்ளமாய்ச் சீறிப் பாயும்

கங்கையின் பயங்கரமான ஓட்டத்திற்கு எதிராக நான் நீந்திச் செல்ல விரும்பினேன். விந்திய மலை மற்றும் சாயத்ரி மலையின் அடர்ந்த காடுகள் வழியாகச் சென்று, குரங்கு மனிதர்களையும் யக்ஷர்கள் மற்றும் கின்னரர்களின் ராஜ்யங்களையும் பார்ப்பதாக நான் கனவு கண்டேன். இசையால் நிரம்பி வழிந்த காந்தர்வர்களின் உலகில் நான் இருந்ததாகக் கனவு கண்டேன். நான் வெற்றி கொள்வதற்கு எப்பேற்பட்ட உலகம் எனக்காகக் காத்திருக்கிறது! நான் அனுபவிப்பதற்காக எப்பேற்பட்ட வாழ்க்கை என்னை வரவேற்கக் காத்திருக்கிறது! ஒருநாள், மாபெரும் இமயமலைத் தொடரிலிருந்து இலங்கைவரை — இல்லையில்லை, இலங்கையிலிருந்து மாபெரும் இமயமலைத் தொடர்வரை ராவணன் இவ்வுலகை ஆள்வான். அனைவருக்கும் நியாயமும் அமைதியும் செழிப்பும் கிடைக்கும் விதத்தில் நான் இவ்வுலகை ஆள்வேன்.

எனது எல்லையற்றக் கனவுகளின் நிழல்களில் ஒரு சிறிய சந்தேகம் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. இந்த அற்புதமான கனவுகள் அனைத்தும் வெறுமனே எனது பசியால் எனக்கு ஏற்பட்டிருந்த மாயைகளா? கரிய அலைகளால் தழுவப்பட்டு, பெரும் சீற்றத்துடன் பாயும் நீரால் இழுத்துச் செல்லப்பட்டு, இன்று நான் இறக்கக்கூடும். என் வாழ்க்கை ஒரே ஒரு கணம் மினுமினுத்துவிட்டு, பிறகு இருண்ட அமைதியில் முடியக்கூடும். அப்போது, என் இதயத்திற்கு மிக நெருக்கமாக நான் தாங்கிக் கொண்டிருக்கும் எனது ஆழ்விருப்பங்களும் லட்சியங்களும் யாருக்குத் தெரியும்? என் மக்களுக்கு நான் எப்படிப்பட்டப் புகழ்மிக்க வாழ்க்கையைத் திட்டமிட்டிருந்தேன் என்பது யாருக்குத் தெரியும்? கீழே கொந்தளித்துக் கொண்டிருக்கும் கருப்புத் தண்ணீரில் கொப்பளித்துக் கொண்டிருக்கும் நுரையைப்போலவே என் வாழ்க்கையும் உயர்ந்து பரவி, பின் மாயமாய் மறைந்துவிடும்.

என் தாயாரின் கண்ணீர் என் ஆன்மாவில் ஆழமாகத் துளையிட்டது. நாங்கள் வெளியே சென்று உலகை வெல்ல வேண்டும் என்று அவர் விரும்பினார். ஆனால் நாங்கள் தன் அருகில் இருக்க வேண்டும் என்பதும் அவரது விருப்பமாக இருந்தது. என் கண்களில் தகதகவென எரிந்து கொண்டிருந்த நெருப்பை அவர் பார்த்துவிட்டார் போலும். தான் எங்களைத் தடுத்து நிறுத்தப் போவதில்லை என்று அவர் தீர்மானித்தார். நான் திரும்பிப் பார்க்கும்போது, கந்தலான ஆடைகள் அணிந்திருந்த, கூன் விழுந்த ஓர் உருவம் எனது அவலட்சணமான தங்கையை ஆரத் தழுவிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். எங்களைப் பொறுத்தவரை, எங்கள் தங்கைதான் மிக அழகான குழந்தை. ஆனால் என் தாயார் எங்களுக்குள் விதைத்திருந்த நியாய உணர்வை வைத்துப் பார்க்கும்போது, தான் பார்த்ததிலேயே மிகவும் அசிங்கமான

உயிரினம் என் தங்கைதான் என்ற என் தந்தையின் நம்பிக்கையோடு தயக்கத்துடன் உடன்படுவதைத் தவிர எனக்கு வேறு வழி இருக்கவில்லை. என் தந்தை அவ்வாறு கூறியதற்காக நான் அவரை வெறுத்தேன். அவர் கூறியது உண்மை என்பது அவர்மீது எனக்கு இன்னும் அதிகமான வெறுப்பைத் தூண்டியது.

என் மாற்றாந்தாயின் மகனின் அரண்மனை வாயிற்காப்பாளன் கடற்கரையில் தனது நண்பர்களுடன் உட்கார்ந்திருந்தான். விடலைப்பருவத்தினராக இருந்த நாங்கள் மூவரும் எங்கள் கட்டுமரத்தைக் கஷ்டப்பட்டுக் கடலுக்குள் இழுத்துச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்து அவர்கள் எக்காளமாகச் சிரித்தபடி, எங்களைக் காலதேவன் அழைத்துக் கொள்ளட்டும் என்று கூறிக் கேலி செய்தனர். நாகரீகமற்றப் பாடல்களைப் பாடி என் தாயாரையும் அவர்கள் அவமானப்படுத்தினர். நான் அவர்களது கழுத்தை நெறித்துக் கொல்ல விரும்பினேன். ஆனால், இந்த உலகின் வழிமுறைகளைப் பற்றியும் எனது சக்தியை நியாயமான முறையில் எப்படிப் பயன்படுத்துவது என்பதைப் பற்றியும் நான் கற்றுத் தெரிந்து கொள்ளும்வரை நான் வன்முறையைப் பயன்படுத்தப் போவதில்லை என்று என் தாயாருக்கு வாக்குக் கொடுத்திருந்தேன். கண்ணீர் நிரம்பிய எனது கண்களை, எனக்கு முன்னால் தொலைதூரத்தில் இருந்த கடற்கரையின்மீது நான் நிலைப்படுத்தினேன். அங்குதான் இந்தக் கொடுமையான உலகில் வெற்றி பெறுவதற்கான எனது நம்பிக்கையும் என் உலகமும் நிலைகொண்டுள்ளன.

நானும் எனது சகோதரர்களும் அடர்த்தியான, பசுமையான சாயத்ரிக் காட்டின் ஊடாகப் பயணித்தோம். புகழ்மிக்க மாளிகைகளையும் துறைமுகங்களையும் நாங்கள் கண்டோம். தந்தங்களையும் சந்தன மரங்களையும் மயில்களையும் குரங்களையும் கண்டோம். வண்ணமயமான பாய்மரச் சீலைகள் பொருத்தப்பட்டக் கப்பல்கள் தொலைதூர தேசங்களுக்குச் சென்று கொண்டிருந்ததை நாங்கள் பார்த்தோம். தங்கம், வைரம், மிளகு மற்றும் பல மசாலாப் பொருட்களை அவை சுமந்து சென்றன. மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுச் சம்பாதித்தப் பணத்தில் ஒரு பகுதியை அதிகாரமாகக் கேட்டு வாங்கிய கடவுள்கள் வசித்தக் கோவில்களை நாங்கள் பார்த்தோம். அக்கடவுள்களின் பெயரைச் சொல்லிக் கொள்ளையடித்த அவர்களது பிரதிநிதிகளையும் நாங்கள் பார்த்தோம். சூரியனைபோலப் பிரகாசமாக இருந்த விளக்குகள் அந்நகரங்களை ஒளிரச் செய்தன. அந்நகரப் பெண்கள் அப்சரஸ்களைப்போல அழகாக இருந்தனர். என் மாற்றாந்தாயின் மகனின் கொடிகள் பறந்த படகுகளை, பொறாமையும்

கோபமும் ஒருசேர நான் பார்த்தேன். நாங்கள் எந்த நகரத்திற்குச் சென்றாலும், குபேரனின் நிறுவனங்களுக்கென்று அங்கு ஓர் அலுவலகம் இருந்தது. இலங்கையில் இருந்த தனது அரண்மனையில் இருந்தபடியே மிகவும் கட்டுப்பாடான ஒரு வியாபார சாம்ராஜ்யத்தை அவன் நடத்தி வந்தான். அவனது வியாபாரக் கூட்டாளிகளுக்கும் வர்த்தக அமைப்புகளுக்கும் அவனது தூதுவர்கள் குதிரைகளில் செய்திகளைச் சுமந்து சென்றனர். குபேரனுக்குச் சொந்தமாக நூற்று முப்பதுக்கும் அதிகமான கப்பல்கள் இருந்தன. அவை கிரேக்க நாட்டிற்கும் எகிப்திற்கும் சீனாவிற்கும் பயணித்தன. நாங்கள் குபேரனின் சகோதரர்கள் என்று நாங்கள் எங்களை அறிமுகப்படுத்தியிருந்தால், அவனது எண்ணற்ற அமைப்புகளிலிருந்த எந்தவோர் இளநிலை மேலாளரும், தங்கத்தால் இழைக்கப்பட்டிருந்த தங்களது அலுவலகங்களுக்கு எங்களை வரவேற்றிருப்பார் என்று நான் உறுதியாக நம்பினேன். ஆனால் அவ்வாறு எங்களை நான் அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. குபேரனின் அலுவலகங்களில் ஏதேனும் ஒன்றில் ஒரு கணக்கராக ஒரு சௌகரியமான வாழ்க்கையைச் சுலபமாக என்னால் வாழ்ந்திருக்க முடியும். என் குடும்பத்தினருக்கு ஒரு வேளை உணவாவது கிடைப்பதற்கு அது வழிவகை செய்திருக்கும். ஆனால் ஒருசில தங்க நாணயங்களை வீசியெறிந்துவிட்டு எங்களைத் தனது அரண்மனையிலிருந்து துரத்தியடித்தபோது என் மாற்றாந்தாயின் மகனின் கண்களில் தென்பட்டச் சலிப்பான பார்வையை எப்படி என்னால் மறக்க முடியும்? அவனது வியாபார சாம்ராஜ்யத்தில் ஒரு கீழ்நிலை வேலையைச் செய்து என்னை நானே சிறுமைப்படுத்திக் கொள்வதற்குப் பதிலாகப் பசியால் இறப்பதே மேல். இது ஒரு டாம்பீகமான கர்வமாக இருக்கக்கூடும். உலகத்தாரோடு ஒத்திசைவாகச் செல்வதற்கு, நீங்கள் யதார்த்தமானவராக இருக்க வேண்டும் என்றும், உங்களுடைய ஈன வாழ்க்கை வழங்குகின்றவற்றைக் கொண்டு நீங்கள் திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டும் என்றும் உலக அறிவு பெற்றப் பல நபர்கள் கூறியுள்ளனர். ஆனால் நான் பெரும் கனவுகளைக் காண்பவன். நான் வெறுமனே இந்த உலகத்தில் மற்றவர்களோடு ஒத்திசைவாக இருப்பதை விரும்பவில்லை. மாறாக, நான் இந்த உலகத்தை எனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளவே விரும்பினேன்.

எங்கள் மக்கள் ஏன் கோழைகளாகவும் பணிந்து போகும் இயல்பைக் கொண்டவர்களாகவும் இருந்தனர்? இது குறித்து எப்போதுமே நான் வியந்து வந்திருந்தேன். ஒருசிலர் மட்டுமே அதிகாரத்தையும் செல்வத்தையும் கட்டுப்படுத்திக் கொண்டிருக்க,

மற்றவர்கள் அனைவரும் அந்த ஒருசிலருக்கு அடிபணிந்து நடப்பதற்கான காரணம் என்ன? இச்சிறிய, சுயநலவாதக் கும்பல், தங்களையும் தங்களது குழந்தைகளையும் அடக்கியாள்வதற்கு உதவும் வகையில் அவர்கள் ஏன் தங்கள் வாழ்க்கையைக்கூடத் தியாகம் செய்தனர்? பயம்தான் அதற்குக் காரணமா? எனக்குத் தெரியாது. ஆனால் நான் எங்கு நோக்கினாலும் அங்கே அடக்குமுறையை மட்டுமே பார்த்தேன். பணம், சாதி, சடங்குகள், சம்பிரதாயங்கள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள் ஆகிய அனைத்தும் சேர்ந்து, பணிவன்பு கொண்ட பெரும்பான்மை மக்களைக் காலில் போட்டு மிதிக்கின்றன. வாழ்வதற்கான நியாயமான ஒரு வாழ்க்கை ஏன் இருக்க முடியாது? ஏன் என்ற கேள்வியை நான் கேட்கத் துவங்கியதும், இறுமாப்புத் தலையன் என்ற பட்டப்பெயர் எனக்குக் கிடைத்தது. தீய ஆவிகள் என்னை ஆட்கொண்டிருந்ததாகவும், நான் ஒரு ராட்சஸன் என்றும், நான் ஓர் அரக்கன் என்றும் கூறி, என் தந்தையின் பிராமண நண்பர்கள் என்னை எங்கள் கிராமத்திலிருந்து துரத்துவதற்கு ஒருமுறை முயற்சித்தனர். அந்த நேரத்தில் நான் வயதில் மிகச் சிறியவனாகவும் அவசரக்காரனாகவும் இருந்திருக்கக்கூடும். உலகைப் பற்றிய எனது கண்ணோட்டத்தை உருவாக்கிக் கொள்வதற்குத் தேவையான அனுபவம் எனக்கு இல்லாமல் இருந்திருக்கக்கூடும். என்னுடைய கடைசித் தம்பி விபீஷணனைத் தவிர, எங்களில் மற்ற அனைவரிடமும் ஒருவிதமான நிலைகொள்ளாத தன்மை நிலவியதை என்னால் காண முடிந்தது. விபீஷணன் ஒரு மடையன் என்று நான் நம்பினேன். ஆனால் நாங்கள் வளர்ந்து வந்த காலத்தில் எங்கள் கிராமம் அவனைத்தான் கொண்டாடியது. புத்தகங்களில் கொடுக்கப்பட்டிருந்தவற்றை அவன் அப்படியே பின்பற்றினான். அவன் ஒருபோதும் எந்தக் கேள்வியையும் கேட்கவில்லை. விபீஷணன் இந்தச் சமுதாயத்திற்கு முற்றிலும் பொருத்தமானவன் என்றும், வாழ்வில் மிகப் பெரிய ஒரு நிலையை அவன் அடையவிருந்தான் என்றும் பல சமயங்களில் நான் உணர்ந்தேன். எனக்கு அவனைப் பிடித்திருந்தது. அவன் மிகச் சிறியவனாகவும் பிறரால் எளிதில் தூண்டப்படக்கூடியவனாகவும் இருந்தான். எனவே, இந்தக் கொடூரமான உலகிலிருந்து அவன் பாதுகாக்கப்பட வேண்டும் என்று நான் எப்போதுமே நினைத்தேன். எனக்குத் தன்னம்பிக்கை வெகுவாகத் தேவைப்பட்டது. ‘இதுதான் புத்திசாலித்தனம்’ என்று உலகம் வரையறுத்து வைத்திருந்த புத்திசாலித்தனமும் என்னிடம் இருக்கவில்லை.

வேதங்களைத் தலைகீழாகச் சொல்வது விபீஷணனுக்குக் கைவந்த கலையாக இருந்தது. ஆனால் என்னால் அது முடியவில்லை. எப்படிப்

பார்த்தாலும், வேதங்கள் உண்மைக்குப் புறம்பானவை என்றும், அவற்றை எந்த வழியில் கூறினாலும் அது ஒரு பொருட்டே அல்ல என்றும் நான் நினைத்தேன். என் தந்தையைப் போன்ற வேலையற்றச் சில பிராமணர்கள் ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பு அவற்றை உருவாக்கினர். தங்களைப் பயனுள்ளவர்களாக ஆக்கிக் கொள்வதற்குப் பதிலாக, இந்த பிராமணர்கள், தாங்களாகவே கண்டுபிடித்தக் கடவுளிடம், மழை, சூரியன், குதிரைகள், பசுக்கள், பணம், மற்றும் பிற பொருட்களை வேண்டிப் பிரார்த்தனை செய்தனர். எப்பேற்பட்டச் சபிக்கப்பட்ட இடங்களிலிருந்து அவர்கள் வந்திருந்தாலும் சரி, அந்த இடங்கள் மிகவும் குளிராக இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், அவர்கள் ஏன் தவளைகளைப்போலக் கொக்கரித்துக் கொண்டு, தீயில் பல்வேறு வகையான சருகுகளை நூற்றுக்கணக்கில் போட்டபடி கடவுள்களிடம் மன்றாட வேண்டும்?

ஒருவேளை நான் நடுநிலைமையோடு இல்லாது இருந்திருக்கலாம். அவர்கள் செய்த யாகங்கள் போன்றவை பயனற்றவை என்று நான் எண்ணக்கூடாது. உண்மையில், அந்த யாகங்கள், பணத்தைக் குவிப்பதற்கும் பௌதீகச் சொத்துக்களைச் சம்பாதிப்பதற்குமான ஒரு கச்சிதமான கருவியாக விளங்கின. இந்த பிராமணர்கள் மூடர்களல்ல. சருகுகளை எரிக்கின்ற ஒரு சாதாரணமான காரியத்தைக்கூட, ஒரு மிகப் பெரிய அறிவியல் கண்டுபிடிப்பைப்போல பூதாகாரப்படுத்தி வெளிக்காட்டுவது எப்படி என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். உலகைக் கட்டுப்படுத்திய ஆற்றல்களைத் தாங்கள் கட்டுப்படுத்தியதாக அவர்கள் முழங்கினர். இதில் வேடிக்கை என்னவென்றால், பயனுள்ள ஏதோ ஒன்றைச் செய்து கொண்டிருந்த தச்சர்கள், கொத்தனார்கள், விவசாயிகள் போன்ற பெரும்பான்மை மக்கள், கடும் வெயிலில், தங்கள் முகங்களிலிருந்து வியர்வை வழிந்து கொண்டிருக்க, கொழுந்துவிட்டு எரியும் நெருப்பின் முன்னால் அமர்ந்து கொண்டு, எதையோ உளறிக் கொண்டு, தவளைகளைப்போல கொக்கரித்துக் கொண்டிருந்த இந்தக் கோமாளிகளுக்குக் கீழான நிலையை அடைந்துவிட்டிருந்தனர். இப்புவியிலுள்ள ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு யாகமோ அல்லது ஒரு பூசையோ இருந்தது. உங்களுக்குத் தொழுநோயோ அல்லது சளிக்காய்ச்சலோ இருந்தால், அது குணமாவதற்காக நீங்கள் ஒரு பிரத்யேகப் பூசை செய்யக்கூடிய ஒரு கடவுள் இருந்தார். பூசையின் மூலம் நீங்கள் அவரை மகிழ்விக்க வேண்டும். உங்களை நச்சரிக்கும் உங்கள் மனைவி, உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கின்ற உங்கள் அண்டைவீட்டுக்காரன் ஒருவனோடு ஓடிப் போக வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அதற்கும் ஒரு பூசை இருந்தது. உங்கள் பசுவிற்கு

ஒரு கன்றோ அல்லது உங்களுக்கு ஒரு மகனோ பிறக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், ஒரு பிராமணன் உங்களுக்கு உதவுவான். அவன் ஒரு பூசையை நடத்தினால், ஒரு தெய்வீகக் கன்று பிறக்கலாம் அல்லது ஒரு மகன் பிறப்பான். நீங்கள் பிராமணர்களுக்கு உபகாரம் செய்தால், உங்கள் மகன் தனது பதினாறு வயதிற்குள் இவ்வுலகிலேயே மிகப் பெரிய பண்டிதனாக ஆவான். இல்லையென்றால், அவன் என்னைப் போல, பிராமணர்களையோ அல்லது சடங்குகளையோ மதிக்காத ஒரு ரௌடியாக ஆவான். அவன் ஒரு ராட்சஸனாக ஆவான். நம்மிடையே இப்போது பல ராட்சஸர்கள் இருப்பதாக நான் நினைக்கிறேன். ஒருவேளை, அவர்களிடம் 'ஏன்?' என்ற நுண்கிருமி பரவியது அதற்குக் காரணமாக இருக்கக்கூடும். நம் தலைகளிலுள்ள பாவ எண்ணங்கள் அனைத்தையும் களைகின்ற ஒரு பூசையை இந்த பிராமணர்களால் ஏன் நடத்த முடியவில்லை? எனக்கு நேரம் கிடைக்கும்போது நான் இது குறித்துச் சிந்திக்க வேண்டும்.

நான் பயணம் செய்யும் இடமெல்லாம், கடவுளுடன் தங்களுக்கு நேரடித் தொடர்பு இருப்பதாகக் கூறிக் கொண்டு மக்களை ஏமாற்றும் கபடதாரிகளை நான் காண்கிறேன். பண்டைய அரசர்கள் எப்படித் திடீரென்று கடவுள்களாக ஆனார்கள் என்பது வினோதமாக இருக்கிறது. சிறப்புக் கடவுள்களாக அவர்கள் எவ்வாறு பரிணாம வளர்ச்சி பெற்றார்கள் என்பது இன்னும் ஆச்சரியமூட்டுவதாக உள்ளது. கடவுள் இல்லை என்று கூறுபவன் அல்ல நான். நான் கடவுள்மீது வலிமையான நம்பிக்கை கொண்டுள்ளேன். எனது பௌதீக முன்னேற்றத்திற்காகவும் ஆன்மீக முன்னேற்றத்திற்காகவும் பிரார்த்தனை செய்ய நான் எப்போதுமே தயாராக இருக்கிறேன். ஆனால் என்னைப் பொறுத்தவரை, கடவுள் என்பவர் மிகத் தனிப்பட்ட ஒரு விஷயம், பிரார்த்தனையானது என் இதயத்திற்குள் அமைதியாக நடத்தப்பட வேண்டிய ஒன்று.



# 3

# சிறைபிடிக்கப்பட்டவர்கள்

ராவணன்

அசுரர்கள் என்போர் சாதியற்ற ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களது சமுதாயத்தில், அரசனுக்குப் பதிலாக, ஒரு மிக உயர்ந்த ஜனநாயகக் குழுவினரிடம்தான் அதிகாரம் இருந்தது. அசுரர்களும் பல இடங்களுக்குச் சுற்றித் திரிந்த பழங்குடியினர்தான். அவர்கள் தாங்கள் உயிர்வாழ்வதற்காக வேட்டையாடினர், சூறையாடினர். ஆனால் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு, நதிக்கரைகளை ஒட்டி அமைந்த பெருநகரங்களிலும் சிறு நகரங்களிலும் அவர்கள் குடியமர்ந்தனர். அசுரர்களின் சாம்ராஜ்யங்களில் சாலைகள் தங்கத்தால் அமைக்கப்பட்டிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அவர்கள் எப்பேற்பட்ட சாம்ராஜ்யத்தை உருவாக்கினர்! மேற்கில் சிந்து நதியில் துவங்கிக் கிழக்கில் பிரம்மபுத்திரா நதிவரையிலும், வடக்கில் இமய மலையில் துவங்கித் தெற்கில் நர்மதை நதிவரையிலும் அது பரந்து விரிந்து கிடந்தது. அந்தக் காலகட்டத்தில் இவ்வுலகிலேயே மிகப் பெரிய சாம்ராஜ்யமாக அது இருந்திருப்பதற்கான வாய்ப்பு அதிகம். எகிப்திய

மன்னர்கள் தங்கள் இறப்பிற்குப் பிறகு தாங்கள் புதைக்கப்படுவதற்காக மிகப் பெரிய சமாதிகளைக் கட்டுவதில் மும்முரமாக இருந்தபோது, அசுர சாம்ராஜ்யத்தின் ஜனநாயக நிர்வாகக் குழுவானது சாலைகளை அமைப்பதிலும், மருத்துவமனைகளைக் கட்டுவதிலும், கழிவுநீர் அமைப்புமுறைகளை உருவாக்குவதிலும், மக்களுக்கு உபயோகமான விஷயங்களாகத் தாங்கள் கருதிய அனைத்தையும் நிர்மாணிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டிருந்தது.

ஹீத்திஸ் என்ற ஒரு பிரபலமான அசுரப் பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர் தான் என்று என் தாயார் கூறினார். வெகுசிலரே அவரை நம்பினர். ஆனால், ஒரு மேன்மையான அசுரப் பழங்குடியைச் சேர்ந்தவன் நான் என்று நினைப்பதை நான் பெருமையாகக் கருதினேன். அசுரர்கள் மிகையான சமயவாதிகளாக இல்லாமல் இருந்தாலும்கூட, எங்களுக்கென்று சொந்தமாகச் சில கடவுள்கள் இருந்தனர். சிவன் அவர்களுக்குள் மிகவும் பிரசித்திப் பெற்றவர். அசுரர்கள் ஒரு நாடோடிப் பழங்குடியினராக இருந்தபோது, சிவன் ஒரு மாபெரும் பண்டைய அசுர அரசனாக இருந்ததை நாங்கள் தெரிந்து கொண்டோம். சிவன்தான் ஒரே கடவுள் என்று நினைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன். தனிப்பட்ட முறையில் அவர்தான் எனக்கு மிகவும் பிடித்தமானவர்.

மாபெரும் சமவெளிகளில் அமைந்திருந்த அசுரர்களின் நகரங்களை மத்திய ஜம்பு தீபக் காடுகளைச் சேர்ந்த காட்டுமிராண்டித்தனமான பழங்குடியினர் குதிரைகளில் வந்து துவம்சம் செய்து ஓராயிரம் ஆண்டுகள் இருக்கக்கூடும். பத்து அரசர்கள் அடங்கிய ஒரு குழு, பேராற்றல் வாய்ந்த அசுரப் படையை முன்னின்று வழிநடத்தியது. குதிரைகளில் வந்த அந்தப் பழங்குடியினரை அசுரர்கள் ஜீலம் நதியருகே சந்தித்தனர். அந்த நாசக்காரர்களின் தலைவனின் பெயர் இந்திரன். தனது அக்கிரமக் காரியங்களின் மூலமாகப் ‘புரேந்திரன்’ என்ற பட்டப்பெயரை அவன் சம்பாதித்திருந்தான். ‘நகரங்களைச் சீரழிப்பவன்’ என்பது அதன் பொருள். ஆயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர், வயது வரம்பு ஏதுமின்றிப் பெண்கள் கற்பழிக்கப்பட்டனர், குழந்தைகள் உயிரோடு எரித்துக் கொல்லப்பட்டனர், தானியக்களஞ்சியங்கள் சூறையாடப்பட்டன, பிரம்மாண்டமான நகரங்கள் சுக்குநூறாக்கப்பட்டன. ஒரு நாகரீகம் முற்றிலுமாக அழிக்கப்பட்டது. வளர்ச்சியும் முன்னேற்றமும் வெகுதூரம் பின்னுக்குத் தள்ளப்பட்டன. அசுரர்கள் அனைத்தையும் இழந்து தெற்கு நோக்கித் தப்பி ஓடினர். நாகர்கள் கிழக்கு மலைப்பகுதிகளை நோக்கி ஓட்டமெடுத்தனர். கின்னர சாம்ராஜ்யமும் யக்ஷ சாம்ராஜ்யமும் முற்றிலுமாகத்

துடைத்தெறியப்பட்டன. காந்தர்வர்கள் ஒரு நாடோடிப் பழங்குடியினராக ஆகி, வரலாற்றிலிருந்தும் புராணங்களிலிருந்தும் விரைவில் காணாமல் போயினர்.

படையெடுப்பின்போது அசுர நாகரீகம் தனது உச்சகட்டத்தில் இருந்தது, ஆனால் சண்டையிடுவதற்கான தங்களது சக்தியை அவர்கள் இழந்துவிட்டிருந்தனர். கலாச்சாரம், கலை, இசை, கட்டடக்கலை ஆகிய அனைத்தும் சேர்ந்து அசுரப் படைகளின் சண்டையிடும் திறனை மழுங்கடித்திருந்தன என்று ஒரு வாதம் முன்வைக்கப்பட்டது. ஆனால் இது உண்மையல்ல. செயற்திறனுடன்கூடிய ஒரு தலைமைத்துவமும், முறையான தலைவர்களும், தேசியப் பாதுகாப்பிற்கான எந்தவோர் உத்தியும் திட்டமும் அவர்களிடம் இருக்கவில்லை. இந்திரனின் துடிப்பான தலைமைத்துவத்தின் கீழே செயல்பட்ட, முரட்டுத்தனமான, கைக்குள் அடங்கக்கூடிய ஒரு சிறு குழுவினரால் மாபெரும் அசுரப் படை வீழ்த்தப்பட்டதில் எந்த ஆச்சரியமும் இருக்கவில்லை.

ஆனால் அசுரர்கள் திருப்பிச் சண்டையிட்டனர். தாங்கள் இழந்த நிலத்தை மீண்டும் கைப்பற்றுவதற்குத் தெற்கிலிருந்து ஒரு யுத்தத்தை அவர்கள் அரங்கேற்றினர். அவர்கள் அவ்வப்போது சில வெற்றிகளைப் பெற்றனர். சில சமயங்களில், இந்தியா நெடுகிலும்கூட அவர்களது அலை வீசியது. ஆனால் உண்மையில், அறிவுசார் யுத்தத்தைத்தான் அவர்கள் இழந்து கொண்டிருந்தனர். வடமேற்கிலிருந்து வந்த பழங்குடியினர் தங்களது பூர்வீக அடையாளங்களை இழக்கத் துவங்கியிருந்தனர். அசுரர்களுக்கும் அவர்களுக்கும் இடையே ஒரு கலப்பு உருவாகத் துவங்கியிருந்தது. அவர்கள் அசுரர்களின் மாபெரும் கடவுளான சிவனைத் திருடிக் கொண்டனர். குருவாக இருந்த பிரம்மாவும் அவர்களது கடவுளாக ஆனார். ஆனால், திடீரென்று தோன்றிய மிகப் பிரபலமான கடவுள் விஷ்ணுதான். தேவர்களின் அதிகாரபூர்வமான பூசாரிகளாக இருந்த பிராமணர்கள் சிக்கலான சடங்குகளை உருவாக்கத் துவங்கினர். அசுரர்களுடைய நகரங்களின் மிக முக்கியமான வலிமை அவற்றின் நகர்ப்புறக் கலாச்சாரம் என்பதை அவர்கள் கண்டனர். அசுரர்கள் சுதந்திரமானவர்களாக இருந்தனர். அவர்கள் தங்களது வளமான கற்பனையால், சிவனை, எதையும் எதிர்பாராத, அவரிடம் பிரார்த்தனை செய்வதற்கு எந்தச் சடங்கும் தேவைப்படாத ஓர் அன்பான கடவுளாக ஆக்கியிருந்தனர். சிவன் அசுரர்களின் நண்பராக, சகோதரராக, மகனாக, தந்தையாக, அல்லது அவர்களால் கற்பனை செய்ய முடிந்த எதுவாக வேண்டுமானாலும் இருந்தார்.

நகரங்கள் வெற்றி கொள்ளப்பட்டுக் கோவில்கள்

அழிக்கப்பட்டவுடன், முழுமுதற்கடவுளான பிரம்மா என்ற உருவமற்றத் தனிக் கடவுளை வழிபட வேண்டும் என்று, வெற்றி கொள்ளப்பட்ட மக்களை பிராமணர்கள் வற்புறுத்தினர். அசுரர்களுக்கு இது ஓர் அன்னியமான விஷயமாக இருந்ததால் இது கலவரங்களுக்கு வழிவகுத்தது.

பழங்குடியினரின் மதத்தை அப்படியே விட்டுவிடுவதென்று பிறகு தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அசுரர்களை வெற்றி கொண்டவர்களின் விளம்பரப் பிரதிநிதிகள், நிலைமையைத் தங்களுக்குச் சாதகமாகத் திருப்பிக் கொள்வதில் இறங்கினர். தங்கள் இனத் தலைவர்கள் தெய்வீகத்தன்மை கொண்டவர்கள் என்று அவர்கள் பிரச்சாரம் செய்யத் துவங்கினர். விரைவில், அந்த ஆளும் வர்க்கம் தங்களையே கடவுள்கள் என்று அழைக்கத் துவங்கியது. இந்தக் கடவுள்கள் ஆயிரக்கணக்கிலும் பிறகு லட்சக்கணக்கிலும் பெருகினர். தேவர்கள் என்று தங்களை அழைத்துக் கொண்ட ஆட்சியாளர்களுக்குக் கீழே இருந்த அடுத்த நிலையை பிராமணர்கள் ஆக்கிரமித்துக் கொண்டனர். ஆனால், சமுதாயத்தின் சிக்கலும் அர்த்தமற்றச் சடங்குகளும் அதிகரித்தபோது, சமுதாயத்தை, பிராமணர்கள் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரத் துவங்கினர். இது பல நூற்றாண்டுகளின் ஊடாகத் தொடர்ந்தது. ஆனால் இதில் வியப்பான விஷயம் என்னவென்றால், இந்த பிராமணப் பிரச்சாரவாதிகளுக்கு ஒருபோதும் களைப்பு ஏற்படவே இல்லை. தாங்கள் வெற்றிக் கொண்ட மக்களின்மீது தர்பார் செய்வதில் அவர்கள் பெரும் வெற்றியாளர்களாக விளங்கினர். வெற்றி கொள்ளப்பட்டவர்கள் தாசர்கள் என்று அழைக்கப்பட்டனர். பிராமணர்களும் ஆளும் வர்க்கத்தினரும் எப்போதும் உல்லாசமாகவும் மகிழ்ச்சியாகவும் வாழ்வதை உறுதி செய்வதற்குத் தேவையான அனைத்து வேலைகளையும் செய்யும் கட்டாயத்திற்கு அந்த தாசர்கள் ஆளாக்கப்பட்டனர். அவர்கள் மோசமான ஆட்சியாளர்களாகவும் பரிதாபகரமான நிர்வாகிகளாகவும் இருந்தனர். தன்னல நோக்குடன் இருந்த அவர்களது ஆட்சி, பெருந்திரளான பொதுமக்கள் புரட்சிப் படையை நோக்கிச் செல்வதற்கு வழிவகுத்தது. பலவீனமானவர்களும் ஊனமுற்றவர்களும் மட்டுமே நகரங்களின் சேரிகளில் எஞ்சினர்.

வடக்கில் நான் இவ்வளவு தூரம் ஒருபோதும் பயணித்திருக்கவில்லை. ஆனால் நான் சென்ற இடமெல்லாம், குழப்பமும் கொந்தளிப்பும் நிலவியதைக் கண்டேன். கொரில்லாப் போரினால் ஏற்பட்டத் தொடர்ச்சியான தாக்கத்தின் காரணமாக, தேவ சாம்ராஜ்யம் மெல்ல மெல்ல நொறுங்கிக் கொண்டிருந்தது. ஒரு மாபெரும் புரட்சியின் முழக்கம் தொலைதூரத்தில் எனக்குக் கேட்டது.

தோற்கடிக்கப்பட்டப் பல அசுரப் பழங்குடியினங்கள் பல வருடங்களாக ஒரு கசப்பான போராட்டத்தில் ஈடுபட்டு வந்திருந்தன. ஆனால் அவற்றில் ஒருசில மட்டுமே அசுரர்களின் பிராந்தியத்தை மீண்டும் கைப்பற்றுவதில் ஓரளவு வெற்றி பெற்றன. சுமார் பதினெட்டு வருடங்களாக இந்தியா நெடுகிலும் ஆதிக்கம் செலுத்தி வந்த, கேரளபுத்திரப் பழங்குடி இனத்தைச் சேர்ந்த மகாபலியும், தென்மத்திய இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தி வந்த, யாராலும் தோற்கடிக்கப்பட முடியாது என்று கருதப்பட்ட இரட்டையர்களான ஹிரண்யகசிபு மற்றும் ஹிரண்யக்ஷன் போன்ற அரசர்களும், அசுரர்களின் முடிந்தபோன கனவுகளுக்கு ஒருசில வருடங்களாகச் சிறிது உயிரூட்டினர். ஆனால் அவர்கள் அனைவருமே விரைவில் சுக்குநூறாக நொறுங்கிப் போயினர்.

துவக்கத்தில், அசுரர்கள் மிகச் சிறப்பான போர்முறை உத்திகளைக் கொண்டிருந்தனர். அதோடு, போர்க் கருவிகளை உருவாக்கத் தேவையான சிறந்த பொறியியலாளர்களும், போரை வல்லமையுடன் முன்னின்று வழிநடத்திச் செல்லக்கூடிய மாபெரும் ராணுவத் தளபதிகளும் அரசர்களும் அவர்கள் வசம் இருந்தனர். ஆனால் தேவர்களின் சூழ்ச்சியும், தங்களது சொந்த மக்களின் நம்பிக்கைத் துரோகமும் அசுரர்கள் தோல்வியுறுவதை உறுதி செய்தன. அசுரர்களிடம் ஒற்றுமை இருக்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. தாங்கள் மற்றவர்களைவிட மேன்மையானவர்கள் என்ற அசுரர்களின் உணர்வு, அவர்களது பொய்யான பெருமிதம், தங்களது சக்திகளின்மீது அளவுக்கதிகமான தன்னம்பிக்கை, எல்லாவற்றையும்விட மேலாக, தேவர்கள் நியாயமாகப் போரிடுவார்கள் என்ற அவர்களது எதிர்ப்பார்ப்பு ஆகியவை இந்தியக் காடுகளில் ஓராயிரம் ஆண்டுகளாக அசுரர்கள் நாடோடிகளைப்போலச் சுற்றித் திரிவதை உறுதி செய்தன. தாங்கள் நியாயமாகப் போரிடுவதாக தேவர்கள் எப்போதுமே சொல்லி வந்தாலும், அவர்கள் அதை அரிதாகவே கடைபிடித்தனர்.

பிறகு, பழங்குடி இனங்கள் ஒன்றுகலக்கத் துவங்கின. தங்கள் உடலில் ஓடுவது தூய்மையான தேவ ரத்தம் என்றோ அல்லது அசுர ரத்தம் என்றோ உண்மையில் எவரொருவராலும் கூற முடியவில்லை. ஆழமான பழுப்பு நிறத்தைக் கொண்டிருந்த அசுரர்கள் வெளிர் நிறத்தில் இருந்த தேவர்களுடன் கலந்தனர். அந்த தேவர்கள், காந்தர்வர்களின் மஞ்சள் நிறம், கின்னரர்களின் வெள்ளை நிறம், யக்ஷர்களின் அடர்க் கருப்பு நிறம் என்று வேறு பல வண்ணங்களைக் கொண்டவர்களுடன் கலந்தனர். நான், மாநிறத்தையும் அடர்த்தியான மற்றும் அலைபோன்ற தலைமுடியையும் ஆழமான கரிய கண்களையும் கொண்டவன். என்

தங்கை, நள்ளிரவைப் போன்ற கரிய நிறத்தையும் நேரான தலைமுடியையும் பழுப்பு நிறக் கண்களையும் கொண்டவள். கும்பகர்ணன் ஆஜானுபாகுவான தோற்றத்தையும் கரிய தோலையும் கரிய மற்றும் சுருளான தலைமுடியையும் கரிய கண்களையும் கொண்டவன். ஆனால் விபீஷணன் மட்டும் லேசான பழுப்பு நிறத் தோலையும் மெல்லிய ஊதா நிறக் கண்களையும் பழுப்பு நிறத்தில் அலைபோன்ற தலைமுடியும் கொண்டிருக்கிறான்.

கலப்பினங்களைச் சேர்ந்தவர்கள் முன்பு இகழப்பட்டனர். தொழுநோயாளிகளைத் துரத்தியடிப்பதுபோல தேவர்கள் அவர்களை விரட்டினர். அசுரர்கள் அவர்களைப் பார்த்துச் சிரித்தனர். சமுதாயத்தின் வெறுப்புக்கும் அவமதிப்பிற்கும் ஆளான இந்தக் கலப்பினத்தைச் சேர்ந்த ஒரு குழுவினர் மத்திய இந்தியக் காடுகளுக்குள் தஞ்சம் புகுந்தனர். தேவர்களின் கண்ணோட்டத்தில்கூட அவர்கள் பலவீனமாகவும் நாகரீகமற்றவர்களாகவும் இருந்தனர். உருப்படியான வேலை எதையும் செய்யாமல் அவர்கள் வெறுமனே இடைவிடாமல் பேசிக் கொண்டே இருந்தனர். காடுகளிலிருந்து பெர்ரி வகைப் பழங்களையும் தேனையும் சேகரித்துக் கொண்டு, மரத்தின்மீது கட்டப்பட்ட வீடுகளிலும் குகைகளிலும் வாழ்ந்து கொண்டு, தங்கத்தையும் பெண்களையும் தேடி அருகிலிருந்த கிராமங்களை அவ்வப்போது சூறையாடிக் கொண்டு அவர்கள் ஒரு நாகரீகமற்ற, அவலமான வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர். இவர்கள் குரங்குப் பழங்குடியினர், அதாவது, வானரர்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் பெரும்பாலும் புறக்கணிப்பட்டனர், காட்டான்கள் என்றும் கருதப்பட்டனர். தேவர்கள் மற்றும் அசுரர்களின் மொழிகளில், வானரன் என்ற வார்த்தை ஒரு சாப வார்த்தையாகும். வானரன் என்று ஒருவனை அழைப்பது மிகப் பெரிய அவமதிப்பாக இருந்தது. அது எப்போதும் சண்டைகளிலும் மரணத்திலும் போய் முடிந்தது.

வாலி அவர்கள் வாழ்விற்குள் அடியெடுத்து வைக்கும்வரை வானரர்கள் மிக அவமானகரமான ஒரு வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர். கோடையில் திடீரென்று ஏற்படும் இடி முழக்கம்போல அவன் அவர்களது வாழ்க்கையில் தோன்றினான். போரிடுவதில் மிகச் சிறப்பான செயற்திறனைக் கொண்ட ஒரு வல்லுனராகவும் ஒரு மாபெரும் ராணுவத் தளபதியாகவும் அவன் இருந்தான். தனது வானரப் பழங்குடி இனத்திலிருந்த தனது எதிராளிகளை அடக்கிய பிறகு, அவன் அவர்களது முதன்மைத் தலைவனாகவும் ஒரு கொடூரமான சர்வாதிகாரியாகவும் உருவெடுத்தான். தனது இளைய சகோதரனான சுக்ரீவனுடன் சேர்ந்து, துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்த தனது

தலைநகரமான கிஷ்கிந்தையில் இருந்தபடி, அசுர மற்றும் தேவப் பழங்குடியினர்மீது அவன் பல முறை திடீர்த்தாக்குதல்களை நடத்தினான். விரைவில், வானரர்கள், மேற்கிலிருந்த காடுகளிலிருந்து கிழக்கிலிருந்த மலைகள்வரையிலான பகுதிகளைத் தங்கள் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வந்தனர். இலங்கையின் எல்லைகளையும் அவர்கள் அச்சுறுத்தத் துவங்கியிருந்தனர். வடக்கில், கங்கை நதிவரை இருந்த சிறிய தேவ சாம்ராஜ்யங்கள் அனைத்தும் நிரந்தர பயத்துடன் வாழ்ந்து கொண்டிருந்தன. ஆனால், இந்தியாவில் முதன்முதலில் குடியேறிய தொல்பழங்குடி இனத்தின் வம்சாவழியில் வந்த, கார்த்த வீர்யார்ஜுனன் என்ற ஒரு சக்திவாய்ந்த பழங்குடி அரசனுடன் வாலி ஒரு சமாதானமான உறவு கொண்டிருந்தான். அந்த அரசன், நர்மதை ஆற்றின் கரையில் அமைந்த விந்திய மலைகளின் இருபுறமும் இருந்த நிலத்திற்கும் கடலுக்கும் இடையேயான ஒரு குறுகலான மேற்குக் கடற்கரையோரப் பகுதியை ஆண்டு வந்தான்.

சூழ்நிலை மிகவும் அபாயகரமானதாக இருந்தது. மேற்கில் கார்த்த வீர்யார்ஜுனனுக்கும், மத்திய இந்தியாவில் வாலிக்கும், வடக்கில் இந்திரனின் சாம்ராஜ்யத்திற்கும், தெற்கில் போரிட்டுக் கொண்டிருந்த அசுரப் பழங்குடியினருக்கும் இடையே, அதிகாரம், ஆபத்தான நிலையில் ஊசலாடிக் கொண்டிருந்தது. இதில் அசுரர்களின் சூழ்நிலை மிகவும் அவலமானதாக இருந்தது. முன்பொரு காலத்தில் பிரபலமாக இருந்த நகரங்களை ஏழ்மையும் நோயும் பஞ்சமும் துயரமும் வாட்டி வதைத்தன. முசிறி, காவேரிப்பட்டினம் போன்ற ஒருசில துறைமுக நகரங்களின் கட்டடக்கலைச் சிறப்பையும், அங்கு கொழித்துக் கொண்டிருந்த வர்த்தகத்தையும் தவிர, பெரும்பான்மையான அசுரர்கள் எந்தவிதமான நம்பிக்கையோ அல்லது சுயமதிப்போ இன்றி மிகவும் ஏழ்மை நிலையில் வாழ்க்கையை ஓட்டி வந்தனர். என் மாற்றாந்தாயின் மகனான குபேரனைப் போன்ற ஒருசிலரிடம் மட்டுமே செல்வம் குவிந்து கிடந்தது. அசுரப் பழங்குடியினரின் ராணுவத் தலைவர்கள் எந்தவிதமான உத்தியோ அல்லது திட்டமோ இன்றி, தேவர்களுடனும் தொல்பழங்குடியினருடனும் வானரர்களுடனும், பல சமயங்களில் தங்களுக்கு இடையேயும், முட்டாள்தனமான போர்களில் ஈடுபட்டுத் தங்களை வீணாக்கிக் கொண்டிருந்தனர்.

நாங்கள் பூரண நதியைக் கடந்தோம். பல படர்க்கொடிகளும் வேறு பிற செடிகளும் குறுக்கும் நெடுக்குமாகச் சிக்கலாகப் படர்ந்திருந்த அங்கிருந்த காடு அசைவற்று இருந்தது. எனக்குச் சிறிது சந்தேகமாக இருந்தது. இக்காடுகள், பல்வேறு அசுரப் பழங்குடி இனங்களைச் சேர்ந்த கொரில்லாப் போராளிகள் மறைந்து கொள்வதற்கான இடங்களாக

ஆகியிருந்தது. நாங்கள் எங்கள் பயணத்தைத் தொடர்வதென்று தீர்மானித்தோம். ஆனால் திடீரென்று, ஆயுதம் தாங்கிய ஒரு குழுவினர் எங்களைச் சூழ்ந்தனர். அவர்கள் எங்களைத் திறமையாகச் சூழ்ந்து கொண்ட விதத்தைக் கண்டு நான் பிரமித்தேன். நாணேற்றப்பட்ட இருபது வில்கள் எங்களைக் குறி வைத்துத் தயாராக நின்றன. ஒரு பார்வையின் மூலம் கும்பகர்ணனை நான் தடுத்து நிறுத்தினேன். அந்தக் கிறுக்கன், கிழிந்து போன தனது உறையிலிருந்து, துருப்பிடித்தத் தனது வாளை உருவப் போராடிக் கொண்டிருந்தான். நான் ஒரு கோழையல்ல, ஆனால் எங்களைச் சுற்றி வில்லேந்தி நின்று கொண்டிருந்த இருபது நபர்களுக்கு எங்களால் ஈடு கொடுக்க முடியாது என்பதை நான் உணர்ந்திருந்தேன். கதாநாயகன்போல நடந்து கொள்வதற்கான வேளை அதுவல்ல. அவர்கள் கார்த்த வீர்யார்ஜுனனின் காவலர்களா அல்லது அசுரர்களின் கொரில்லாப் போராளிகளா என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களுடைய கரிய நிறத்தை வைத்துப் பார்த்தபோது, அவர்கள் நிச்சயமாக தேவர்களாக இருக்க முடியாது.

நரைத்துக் கொண்டிருந்த தலைமுடியுடன் இருந்த திடகாத்திரமான ஒருவன் எங்களை நோக்கி வந்து, தனது வாளை எனது கழுத்தை நோக்கி நீட்டினான். வயதில் அவனைவிட மிகச் சிறியவனாக இருந்த இன்னொருவன் எங்களிடம் ஏதேனும் இருந்ததா என்று பார்ப்பதற்காக எங்களைத் தேடத் துவங்கினான். அவனது கால்களுக்கு இடையே அவனை பலமாகத் தாக்கி, அவனது தொண்டையைப் பிடிக்கலாமா என்று நான் யோசித்துக் கொண்டிருந்தபோது, இன்னொருவன் தனது வாளின் முனையை விபீஷணனின் தொண்டையின்மீது அழுத்தினான். எனது வீரமான தம்பி சிணுங்கத் துவங்கினான். நிலைமையைப் புரிந்து கொண்டு, நான் அமைதியாக இருந்தேன். வீரத்தை வெளிப்படுத்துவதற்கான நேரம் அதுவல்ல என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். பிறகு எங்கள் கைகளைக் கட்டி, எங்கள் கண்களில் பட்டைகளைக் கட்டி, அந்தக் காட்டின் புதர்கள் மற்றும் அடர்ந்த செடிகொடிகளின் ஊடாக, பாதி தூரம் வழிநடத்திக் கொண்டும் பாதி தூரம் தரதரவென்று இழுத்துக் கொண்டும் அவர்கள் எங்களைக் கூட்டிச் சென்றனர்.



# 4

## பேரரசன் மகாபலி

ராவணன்

நடுங்கியபடியே நாங்கள் ஒரு குகைக்குள் நின்று கொண்டிருந்தோம். யாரோ அங்கு வருவதற்காக நாங்கள் காத்திருந்தோம். அக்குகையின் ஆழங்களிலிருந்து சத்தங்கள் வந்து கொண்டிருந்தன. திடீரென்று எல்லாச் சத்தங்களும் நின்று போய், ஓர் அச்சுறுத்தும் அமைதி அங்கு நிலவியது. என் இதயம் வேகவேகமாக அடித்துக் கொண்டிருந்தது. விபீஷணன் அழுது கொண்டிருந்தது எனக்கு தர்மசங்கடமாக இருந்தது. என் இளைய சகோதரனைக் கண்டு என் மனம் இரங்கியது. உலகின் நடைமுறைகள் எதையும் அறியாத, சூதுவாதற்ற ஒருவன் அவன். அப்போது, அதிர்வுடன்கூடிய ஆழமான குரல் ஒன்று, எங்கள் கண்களில் கட்டப்பட்டிருந்த பட்டிகளை அவிழ்க்குமாறு ஆணையிட்டது. அவை அகற்றப்பட்டவுடன், குகைக்கு உள்ளே நிலவிய இருட்டிற்கு எங்கள் கண்கள் தம்மைப் பொருத்திக் கொண்டன.

ஒரு பெரிய கல் நாற்காலியில் மிக வயதான ஒரு மனிதர்

அமர்ந்திருந்ததை நாங்கள் பார்த்தோம். அவர் எங்களைத் தீர்க்கமாக உற்றுப் பார்த்தார். பதிலுக்கு நான் என் தலையை நன்றாக உயர்த்தி அவரை முறைத்துப் பார்த்தேன். வார்த்தைகளால் விவரிக்கப்பட முடியாத ஒரு சாந்தம் அவரது முகத்தில் ஒளிர்ந்தது. அவரது ஒட்டுமொத்த முகத்தையும் ஆட்கொண்ட ஒரு புன்னகை அவரது முகத்தில் மெதுவாக மலர்ந்தது. அவரது புன்னகை, ஆண்டாண்டுகால ஞானத்தைத் தெரிவித்தது. அவர் யாரென்பது மெல்ல மெல்ல எனக்குப் புரிபடத் துவங்கியது. அவர்தான் மகாபலி! அசுர அரசர்களிலேயே மிகப் பெரிய, மிக அதிக வலிமை வாய்ந்த அரசர் அவர். அறிவார்ந்த ஞானி, வலிமையானவர், கற்றறிந்தவர், அன்பானவர், சமுதாய நியாயத்தை நிலைநிறுத்தியவர், தர்மத்தின் அடையாளச் சின்னம் — மகாபலியைப் பற்றிச் சிந்திக்கும்போது வாழ்த்துரைகள் போதுமானதாக இருப்பதில்லை! ஆனால் என் மனத்தின் பின்னால் ஒரு லேசான வெறுப்பு வட்டமிட்டுக் கொண்டிருந்ததா? மகாபலி மிகப் பிரமாதமான ராணுவத் திட்ட நடவடிக்கைகளை வகுத்திருந்தார், தனது எதிரிகளை வீழ்த்திருயிருந்தார், ஒரு கண்டத்தை நியாயமாக ஆண்டிருந்தார். ஆனால், தன்னிடம் பிச்சை கேட்டு வந்த, தேவர்கள் இனத்தைச் சேர்ந்த, வாமன விஷ்ணு என்ற ஓர் ஏழை பிராமணனுக்குத் தான் கொடுத்திருந்த ஒரு வாக்கிலிருந்து அவர் பின்வாங்க விரும்பாத காரணத்தால், அவர் தனது சாம்ராஜ்யம் முழுவதையும் இழந்தார். மகாபலியின் ஆட்சி அதன் உச்சகட்டத்தில் இருந்தபோது, இந்தியா நெடுகிலும் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்காக, அப்பேரரசர் ஒரு ராஜசூய யாகத்தை நடத்தினார். இந்தியாவின் அனைத்துப் பழங்குடி இனங்களையும் சாம்ராஜ்யங்களையும் சேர்ந்த அரசர்கள், குழுத் தலைவர்கள், ராஜாக்கள், மகாராஜாக்கள் ஆகியோர், அரசர்களுக்கெல்லாம் பேரரசரான மகாபலிக்குச் சிறப்பு மரியாதை செலுத்துவதற்காக, அசுரர்களின் தலைநகரமான முசிறியில் குழுமினர். சடங்கின் ஒரு பகுதியாக, தன்னிடம் யார் எதைக் கேட்டாலும் அவருக்கு அதைக் கொடுப்பதாகப் பேரரசர் மகாபலி அறிவித்திருந்தார். அந்தச் சமயத்தில்தான், அசுரத் தலைநகரத்தில் ஒரு பிராமணக் கல்வி மையத்தை நிர்மாணிப்பதற்குத் தனக்கு மூன்றடி நிலம் வேண்டும் என்று கேட்டு, ஓர் ஏழை பிராமணனாக மாறுவேடம் அணிந்து வாமன விஷ்ணு அங்கு வந்தான். தான் கொடுத்த வாக்கிலிருந்து பின்வாங்க விரும்பாத மகாபலி, அசுரத் தலைநகரில் தேவ பிராமணர்கள் தங்களது மதத்தைப் போதிப்பற்கு அனுமதி கொடுத்தார். விரைவில், இச்சிறிய மையம் ஒரு மாபெரும் சமயப் பரப்பு நிலையமாக வளர்ந்தது. அது சூழ்ச்சிக்கும் ராஜ சதிக்குமான ஒரு செழிப்பான பூமியாக விளங்கியது. இறுதியில்,

தங்களை எது தாக்கியிருந்தது என்பதை அசுர இன அறிவாளிகள் தெரிந்து கொள்வதற்கு முன்பாக, தேவ பிராமணர்கள் கடைசி அசுர சாம்ராஜ்யத்தை ஆட்கொண்டுவிட்டிருந்தனர்.

மகாபலி தன் நாட்டிலிருந்து துரத்தப்பட்டார். இருபதாண்டுகளாக அவர் உருவாக்கி வந்திருந்த சாம்ராஜ்யம், விரைவில், தமக்குள் சண்டையிட்டுக் கொண்ட நூற்றுக்கணக்கான சிறு ராஜ்யங்களாகச் சுக்குநூறாகியது. ஆனால் மகாபலி தொடர்ந்து ஒரு மாபெரும் மனிதராக வாழ்ந்து வந்தார். எனது குழந்தைப்பருவக் கதாநாயகனை நேரில் கண்டு நான் வியந்தேன், ஆனால் அதே சமயத்தில் ஏமாற்றமும் அடைந்தேன். இப்போது நான் பார்த்துக் கொண்டிருந்த அவரது முகம், குழந்தைப்பருவத்தில் நான் கேள்விப்பட்டிருந்த கற்பனைக் கதைகளும் புராணக் கதைகளும் என் கதாநாயகனைப் பற்றி என் மனத்தில் பதிய வைத்திருந்த, நேர்த்தியாகச் செதுக்கப்பட்டது போன்ற அம்சங்களுடன்கூடிய அவரது முகத்திற்கு இணையாக இருக்கவில்லை.

“கடந்த ஒருசில வாரங்களாக நாங்கள் உன்னைக் கண்காணித்து வந்திருக்கிறோம். யாரும் துணிந்து கால் வைக்காத இந்தப் பகுதிகளுக்கு நீ எதற்காக வந்தாய்? இவை ஆபத்தான காலகட்டங்கள். உன்னைப் போன்ற முட்டாள் அங்குமிங்கும் சுற்றித் திரிவதற்கான இடம் இதுவல்ல.” அந்த ஆழமான குரல் அக்குகையின் ஊடாகப் பெரிதாக எதிரொலித்து, எனது கடந்தகால மயக்கத்திலிருந்து என்னை மீட்டுக் கொண்டு வந்தது.

நான் என் முன்னால் இருந்த அந்த மாபெரும் ஆன்மாவைக் குனிந்து வணங்கி, “பேரரசரே, நாங்கள் செல்வத்தைத் தேடி வந்துள்ளோம். தென்கடல்களில் உள்ள இலங்கை எனும் முத்துத் தீவைச் சேர்ந்தவர்கள் நாங்கள்,” என்று கூறினேன். இதைக் கூறியபோது, என் பூர்வீகத்திலிருந்து என்னால் தப்ப முடியவில்லை. எங்களது முகவரிகூடக் கடன் வாங்கப்பட்ட ஒன்றுதான். “கைகேசியின் மகன்கள் நாங்கள். குபேரன் எங்கள் மாற்றாந்தாயின் மகன். என் பெயர் ராவணன். இவர்கள் எனது சகோதரர்கள் கும்பகர்ணன் மற்றும் விபீஷணன்,” என்று கூறினேன்.

அவரது வயதான, கரடுமுரடான முகத்தில் ஒரு சிறு கோப ரேகை படர்ந்தது. அவரது பரந்த நெற்றியின்மீது ஆழமான சிந்தனை வரிகள் தென்பட்டன. அவரது குரலில் ஒரு தெளிவான கடுமை இருந்தது. “ராவணா, உன்னுடைய பிரபலத்துவம் உனக்கு முன்பாகவே இங்கு வந்து சேர்ந்துவிட்டது. நான் சந்தேகித்தது சரிதான். கடந்த சில வருடங்களாக நீ செய்து வந்திருந்த மோசமான காரியங்கள் பற்றிய தகவல்களை எனது உளவாளிகள் என்னிடம் கொண்டு வந்து

சேர்ந்துள்ளனர். உன்னைப் போன்ற மூர்க்கர்கள் அசுரப் பழங்குடியில் பிறந்துள்ளது துரதிர்ஷ்டவசமானதுதான். நீ உன்னை ஒரு வீரன் என்றா அழைத்துக் கொள்கிறாய்? கடந்த எட்டு நாட்களாக எனது ஆட்கள் உன்னைப் பின்தொடர்ந்து கொண்டிருந்தனர். கடந்த வாரத்தில் அவர்களால் உன்னுடைய குரல்வளையைப் பல முறை அறுத்திருக்க முடியும். உன்னுடைய இந்த ஒட்டுமொத்தத் தகுதியின்மைக்கு உன்னுடைய கலப்பின ரத்தம்தான் காரணம் என்று நான் நினைக்கிறேன். ஒரு கோமாளியைப்போல நடந்து கொள்வதை நிறுத்திவிட்டு, உன் இதயத்தில் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கின்ற லட்சியத்திற்கு மதிப்புக் கூட்டும் வகையில் எதையேனும் செய்."

கோபம் என்னுள் எழுந்தது. நான் எதற்கும் லாயக்கற்றவன் என்று கூறுவதற்கு, தோற்றுப் போன இந்தக் கிழவருக்கு என்ன உரிமை இருந்தது? ஆனாலும், அவர் கூறியது முழுக்க முழுக்க உண்மை என்பதை நான் அறிவேன். அதனால்தான் அது என்னைக் கோபப்படுத்தியது. பலவிதமான உணர்ச்சிகள் என் மனத்திற்குள் குறுக்கும் நெடுக்குமாகப் பளிச்சிட்டன. அந்தப் பேரரசருக்கு முன்னால் முற்றிலும் செயலிழந்தவனாக நான் நின்றேன். நான் நிர்வாணமாக ஆக்கப்பட்டதுபோல உணர்ந்தேன். அவரது பார்வை ஒரே சமயத்தில் எனக்குக் கோபமூட்டியதையும், எனக்குச் சவால் விட்டதையும், எனக்கு இதமளித்ததையும், என்னை அச்சுறுத்தியதையும் என்னால் உணர முடிந்தது.

"நீ இவ்வுலகிற்குச் சிறிதளவு நிச்சயமாகப் பயன்படக்கூடும். மறக்கப்பட்டு, ஓரங்கட்டப்பட்டுவிட்ட அசுரப் பகுதிகளை மொய்க்கின்ற, வெறும் புகழைப் பற்றி மட்டுமே கனவு காண்கின்ற, உண்மையான அல்லது கற்பனையான ஒரு கடந்தகாலத்தில் மூழ்கிக் கிடக்கின்ற, தங்களையும் தங்களது இனத்தையும் காப்பதற்கு ஓர் அதிசயத்தை எதிர்பார்த்து நிற்கின்ற பீடைகளில் நீயும் ஒருவன் என்றுதான் துவக்கத்தில் உன்னைப் பற்றி நான் நினைத்தேன். ஆனால், ராவணா, உன்னுள் ஒரு தீப்பொறியை என்னால் பார்க்க முடிகிறது. அது ஒரு சிறிய பொறிதான், ஆனாலும் அது ஒரு தீப்பொறி. சரியான காற்று வீசும்போது, கொழுந்துவிட்டெரியும் ஒரு நெருப்பாக அதனால் ஆக முடியும். நீ நம்முடைய அவலமான மக்களுக்கான எதிர்காலமாக விளங்கப் போகிறாயா அல்லது அவர்களுக்கான சாபமாக மாறப் போகிறாயா என்று எனக்குத் தெரியாது.

உன்னிடம் ஏதோ ஒரு மாபெரும் லட்சியம் உள்ளது என்றும், உன் கனவுகளை அடையும்வரை நீ ஒருபோதும் நிற்கப் போவதில்லை

என்றும் ஏதோ ஒன்று என்னிடம் கூறுகிறது. நிலை கொள்ளாமலும் திக்கற்றும் இருக்கின்ற உன் மனத்தில் எந்த சக்தி ஒளிந்திருக்கிறது என்று உனக்குத் தெரியாது. முறையான பயிற்சியும் வழிகாட்டுதலும் உனக்குக் கொடுக்கப்பட்டால், தீவினைக்கு அஞ்சாத ஓர் எதிரியின் பாதங்களுக்கு அடியில் நசுக்கப்பட்டுக் கொண்டிருக்கின்ற நமது கோடிக்கணக்கான மக்களுக்கான விமோசனமாக உன்னால் ஆக முடியும் என்ற ஒரு சிறு துளி நம்பிக்கை என்னுள் துளிர்விடுகிறது. ராவணா, மகாபலியின் எளிமையான இந்த உறைவிடத்திற்கு உன்னை நான் வரவேற்கிறேன். நீ விரும்பும்வரை நீ இங்கு இருந்து கொள்ளலாம். ஆனால் மிக முக்கியமாக, நீ அதிகமானவற்றைக் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு திறந்த மனத்துடன் வா. இங்கு நீ கற்றுக் கொள்வதற்கு ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன என்பதை நினைவில் கொள்."

அந்த முதியவருக்கு நல்லதொரு நயம் இருந்தது. பிறகு அவர் தனது கைகளை அசைத்து, ஓர் அன்பான புன்னகையுடன், எங்களை அங்கிருந்து செல்லும்படிச் சைகை காட்டினார். ஒரு லேசான கோபத்தை வெளிப்படுத்துவதுபோல அவரது வாயின் ஓரங்கள் இறுகின.

ஒரு நீண்ட வெண்தாடியுடன்கூடிய, லேசான உடற்கட்டைக் கொண்ட ஒருவரை அந்தப் பெரிய குகையின் ஊடாக நாங்கள் பின்தொடர்ந்து சென்றபோது, நான் மகாபலியைப் பற்றித் தொடர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தேன். மகாபலியின் வீழ்ச்சி நகைப்புக்கிடமான ஒன்றாக இருந்தது. அவருக்கு முந்தைய மாபெரும் அசுர சாம்ராஜ்யங்களின் வீழ்ச்சியோடு தொடர்புடைய எந்தவிதமான பெருமையோ அல்லது வீரதீரமோ மகாபலியின் வீழ்ச்சியில் இருக்கவில்லை. பிரபலமான இரட்டைச் சகோதரர்களான ஹிரண்யன் மற்றும் ஹிரண்யக்ஷனின் மாபெரும் அசுர சாம்ராஜ்யம், இந்தியா முழுவதையும் கிட்டத்தட்டத் தனது கட்டுப்பாட்டில் கொண்டு வந்திருந்தது. அப்போது ஹிரண்யன் ஒரு காட்டுப்பன்றியால் குத்திக் கிழிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான். ஹிரண்யக்ஷன் தனது மகனான பிரகலாதனின் நம்பிக்கைத் துரோகத்திற்கு ஆளானான். தேவர்களின் அரசனான இந்திரனுடன் சேர்ந்து பிரகலாதன் சூழ்ச்சி செய்திருந்தான்.

பிரகலாதன் ஒரு பலவீனமான அரசன். அவரது சாம்ராஜ்யம் விரைவில் சின்னாபின்னமாகியது. அவன் தனது நாட்டு மக்கள்மீது கடும் வரிகளை விதித்து ஆட்சி செய்தான். விவசாயமும் மேய்ச்சலும் சீரழிந்தன. வர்த்தகச் சங்கங்கள் வேறு இடங்களுக்குப் பெயர்ந்தன. கலை மடிந்தது. இதற்கிடையே, ஒரு புதிய தொல்லை அங்கு புகுந்திருந்தது. பரசுராமன் என்ற பிராமணன்தான் அத்தொல்லை. எல்லாவற்றையும் துவம்சமாக்கக்கூடிய ஒரு கோடாலியுடன்கூடிய

ராமன் அவன். தெற்கில் பயங்கரமான தாக்குதல்களை நிகழ்த்துவதற்காக ஒரு கொள்ளையர்க் கூட்டத்தை உருவாக்கியவன் அவன்.

பரசுராமன் ஓரிடத்தை வெற்றி கொண்டபோதெல்லாம், அங்கு பிராமணர்கள் மிக உயர்ந்த பதவிகளை வகிப்பதை அவன் உறுதி செய்தான். மலையர்கள் அல்லது வண்ணான்கள் போன்ற முந்தைய பூசாரிகள் அனைவரும் நகரங்களிலிருந்து கிராமங்களுக்கு விரட்டியடிக்கப்பட்டனர். செயற்திறனற்ற அரசனான பிரகலாதன், அமைதியை, மிகவும் அவமானமான வழியில், மிக அதிக விலை கொடுத்துப் பரசுராமனிடமிருந்து வாங்கிக் கொண்டான். இதன் விளைவாக, அசுரர்களின் சமுதாயத்தில் பிராமணர்கள் மிக உயர்ந்த நிலைகளில் இருப்பதை அவன் உறுதி செய்தான்.

பிரகலாதன் இறந்து மகாபலி அரியணை ஏறியபோது ஒரு மாற்றம் நிகழ்ந்தது. பத்து ஆண்டுகளுக்குள், இந்திர சாம்ராஜ்யத்தின் சங்கிலிகளை அவர் உடைத்தெறிந்திருந்தார். ஒருசில வருடங்களில், ஒட்டுமொத்தத் துணைக்கண்டத்தையும் அவர் வெற்றி கொண்டிருந்தார்.

நாங்கள் குகையின் ஒரு மூலையை அடைந்தபோது, எங்களை அழைத்துச் சென்ற முதியவர் திடீரென்று நின்று, எங்களை நோக்கித் திரும்பினார். “நீங்கள் உறங்குவதற்கான இடம் இதுதான். நாளை உங்களுக்கான பாடங்கள் துவக்கப்படும்.”

நாங்கள் அவருக்கு நன்றி கூறுவதற்கு முன்பாக அவர் அங்கிருந்து சென்றுவிட்டிருந்தார். நாங்கள் எங்கள் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தித்தபடி அங்கு படுத்திருந்தோம். நான் எனது தாயாரையும் சகோதரியையும் பற்றித் தொடர்ந்து நினைத்துக் கொண்டே இருந்தேன். செங்குத்துப் பாறையின்மீது இருந்த எங்களது சிறிய குடிலை எந்தச் சூறாவளியும் அடித்துச் சென்றிருக்காது என்று நான் நம்பினேன். அகோரப் பசியுடன் இருந்த எங்களுக்கு, எங்களது அண்டைவீட்டார் கொடுத்தப் பழைய, கெட்டுப் போன உணவுகூட நன்றாக ருசித்த எனது அவலமான குழந்தைப்பருவத்தை நான் நினைத்துப் பார்த்தேன். என் மாற்றாந்தாயின் மகனின் அரண்மனையில் நாங்கள் நால்வரும் பன்றிகளைப்போல நன்றாகத் தின்ற பிறகு வயிற்று வலியால் அவதிப்பட்ட நாளை நான் நினைத்துப் பார்த்தேன். நெய் மற்றும் பழங்களுக்குப் பரிச்சயப்பட்டிராத எங்களது வயிறுகள் அவற்றை எதிர்த்தன. சுமார் ஒரு வாரகாலம் நாங்கள் உடல்நலமின்றி இருந்தோம்.

என் தாயாரின் தேம்பல்கள் என்னுள் ஏதோ ஒரு மென்மையான இடத்தைத் தொட்டன. எங்கள் அவல நிலையையும், எதிர்காலத்தில் நாங்கள் எதிர்கொள்ளவிருந்த போராட்டத்தையும்,

சின்னாபின்னமாக்கப்பட்டிருந்த எங்களது கடந்தகால நம்பிக்கைகளையும், எங்களது மக்களையும், எங்கள் இனத்தையும் நினைத்து நான் அழுதேன். நிராதரவான எங்கள் நிலை குறித்தும், எங்களுடைய விரக்திகள் மற்றும் சீரழிந்திருந்த வாழ்க்கை குறித்தும் நான் கண்ணீர் வடித்தேன். எங்கள் தோலின் கரிய நிறம் குறித்துக்கூட நான் அழுதேன். எங்களுடைய அறியாமை குறித்தும், எங்களது மக்களின் கற்பனையான புகழைப் பற்றிய நெகிழ்வூட்டும் மலரும் நினைவுகள் குறித்தும் நான் தேம்பினேன். ஏழ்மையைத் துணிச்சலுடன் எதிர்கொண்ட எங்களது வீரப்பிரதாபத்தையோ அல்லது ஒரு லட்சியத்திற்காக இறப்பது என்று எங்களுடைய மக்கள் கொண்டிருந்த அசட்டுத் துணிச்சலுடன்கூடிய தீர்மானத்தையோ கண்ணீரால் துடைத்தெறிய முடியவில்லை. இவ்வுலகின் வெறுமையிலிருந்து முற்றிலும் பாதுகாப்பாக இருந்த, எனது மாற்றாந்தாயின் மகனைப் போன்ற மக்களின் இரக்கமற்றக் கல் மனங்களையும் அந்தக் கண்ணீரால் அடித்துச் செல்ல முடியவில்லை. பிறகு நான் எனக்காக அழுதேன். அதன் பிறகு, ஒரு போர்வைபோல எங்களைப் போர்த்தியிருந்த இருளின் ஊடாக, இரண்டு ஜோடிக் கரங்கள் எனது இரு புறங்களில் இருந்தும் என்னைத் தழுவின. என் வாழ்க்கையைப் பணயம் வைத்தாவது நான் காப்பாற்றுவேன் என்று நான் உறுதிப் பிரமாணம் எடுத்திருந்த, எனக்காகத் தங்களது உயிர்களைக் கொடுப்பார்கள் என்று நான் நம்பிய என்னுடைய சகோதரர்களின் களைத்துப் போன கைகள்தான் அவை.

இது என் வாழ்வில் ஏற்பட்டிருந்த ஒரு திருப்புமுனை என்பது மெல்ல மெல்ல எனக்குப் புரியத் துவங்கியது. அந்த வயதான பேரரசர் வெகு சாதாரணமாகத் தூக்கி எறிந்த ஒரு நம்பிக்கை விதை என்னுள் முளைவிடத் துவங்கியது. என் சகோதரர்களை நான் அணைத்துக் கொண்டேன். உலகை வெற்றி கொள்வது பற்றிய எனது பேச்சு, கைவிடப்பட்ட ஒரு குழந்தையின் வெற்றுப் பகற்கனவு அல்ல என்று நான் சிந்திக்கத் துவங்கினேன். எதிர்காலம் நம்பிக்கைக்குரிய ஒன்றாக இருக்கக்கூடும். நாளைய தினம் இன்னொரு நாள் மட்டுமல்ல, அது ஒரு புதிய துவக்கமும்கூட.



# 5

# பத்து முகத்தோன்

ராவணன்

நீண்டு வழிந்தோடிய வெண்தாடி முதியவர் காலையில் எங்களை எழுப்பி, எங்கள் காலைக்கடன்களை முடிப்பதற்காக அருகிலிருந்த மலையின் அருகே இருந்த ஓர் ஓடைக்கு எங்களை அழைத்துச் சென்றார். எங்களிடம் கூறுவதற்குத் தன்னிடம் ஏதோ ஒரு கதை இருந்ததைத் தான் திடீரென்று கண்டுபிடித்திருந்தது போலவும், அக்கதையைக் கேட்பதற்கு மிக ஆர்வமான பார்வையாளர்களை எங்களில் தான் கண்டதுபோலவும் அக்கணத்தில் அவர் சற்று அதிகமாகவே பேசினார். “மக்கள் என்னை பிரம்மன் என்று அழைக்கின்றனர். அது எனது குடும்பப் பெயர். கற்பித்தல் எங்கள் ரத்தத்தில் ஓடுகிறது. பண்டைய காலம் முதலாக நாங்கள் குருமார்களாக இருந்து வந்துள்ளோம். அறிவுக் குழுவில் நான்கு குருமார்கள் இருந்தனர். அசுர சாம்ராஜ்யம் நெடுகிலும் பரவிக் கிடந்த நூற்றுக்கணக்கான பள்ளிகளுக்கான பாடங்களை ஒவ்வொரு வருடமும் அவர்கள்தான் தீர்மானித்தனர். இன்று இருக்கின்ற அசுர உலகத்தை நாங்கள்தான் படைத்தோம். என் குடும்பம்தான் சட்டத்தை

உருவாக்கியது. சிந்து நதிக்கரைகளில் அமைந்த மாபெரும் சாம்ராஜ்யத்தில் துவங்கி, வயல்களையும் நிலங்களையும் விலங்குகளையும் தொன்றுதொட்டுப் பாதுகாத்து வந்திருந்த, சமுதாயத்தில் தங்களுடைய செயல்பாடுகள் காரணமாகப் பசுபதிகள் என்று அழைக்கப்பட்ட சிவனின் குடும்பத்தாரோடு கூடவே, எங்கள் குடும்பத்தினரும் கடவுள்களாக வழிபடப்பட்டனர். ஒரு நாகரீகத்தை உருவாக்கியவர்கள் நாங்கள்.”

அவர் மேலும் நீட்டி முழக்கினார்: “பிறகு தேவர்களின் படையெடுப்புத் துவங்கியது. இந்திரன் செய்த முதல் காரியம் எங்களுடைய நகரங்களையும் பள்ளிகளையும் கோவில்களையும் முன்னேற்றத்தை ஊக்குவித்த அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கியதுதான். அந்தக் காலகட்டத்தில், நாகரீக வளர்ச்சியின் உச்சகட்டத்தில் இருந்த மயன்களின் கட்டடக்கலை மற்றும் பொறியியல் அமைப்புகளோடு கூட்டிணைந்து தொழில்நுட்பத்தில் நாங்கள் பெரும் முன்னேற்றத்தை அடைந்திருந்தோம். புஷ்பகம் என்ற பறக்கும் இயந்திரத்தைக்கூட நாங்கள் உருவாக்கியிருந்தோம். ஆனால், அப்போது அதன் மாதிரி வடிவம் மட்டுமே உருவாக்கப்பட்டிருந்தது. தேவர்களின் படையெடுப்பு அவை எல்லாவற்றையும் மாற்றியது. குடும்பத் தலைவரும், அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்திற்குப் பொறுப்பான நான்காவது உறுப்பினரும்தான் அந்தக் காட்டுமிராண்டிகள் பதுங்கியிருந்து தாக்கியதில் பலியான முதல் பலிகடாக்கள். அவர்களோடு அசுர அறிவியலும் மடிந்து போனது. மயன் பள்ளியின் தலைவர் சரியான நேரத்தில் தனது பறக்கும் இயந்திரத்தில் ஏறித் தப்பித்துவிட்டார். அவருக்குப் பின்னால் வந்த தலைவர்கள் இப்போது உங்களது மாற்றாந்தாயின் மகனின் பாதுகாப்பில் உள்ளனர். புஷ்பக விமானத்தின் மாதிரி இப்போது அவன் வசம் உள்ளது. மனிதன் மீண்டும் விண்ணை வெற்றி கொள்வதற்கு இன்னும் எத்தனை நூற்றாண்டுகள் ஆகும் என்று எனக்குத் தெரியவில்லை. எனது மூதாதையர்கள் ஆயுதங்களிலும் ராணுவத் தளவாடங்களைத் தயாரிப்பதிலும் நிபுணத்துவம் பெற்றிருந்தனர். கலை, கைவினைப் பொருட்கள், இசை ஆகியவற்றில் நிபுணத்துவம் பெற்ற பிரம்மன் குடும்பம் காந்தர்வ சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பில் உள்ளது. மாபெரும் வானர அரசனான வாலி, பிரம்மன் குடும்பத்தைச் சேர்ந்த கட்டடக்கலை ஆசிரியர்களைப் பாதுகாத்து, மத்திய இந்தியாவில் மாபெரும் நகரங்களைக் கட்டியெழுப்பிக் கொண்டிருக்கிறான். நான்காவது பிரம்மாவின் பழங்குடி இனத்தினர் தேவர்களுடன் சேர்ந்து, தத்துவச் சொற்பொழிவுகளில் நிபுணத்துவம் பெற்றனர். இப்போது அவர்கள்தான்

தேவர்களின் அறிவார்ந்த குருமார்களாக இருக்கின்றனர். எனவே, சாத்தியமுள்ள அனைத்துப் பகுதிகளிலும் நான் உங்களுக்கு அறிவைப் புகட்டினாலும்கூட, ஆயுதங்கள் மற்றும் ராணுவ உத்தியில் நான் தனிச்சிறப்பான கவனம் செலுத்துவேன். வீரர்கள் என்ற முறையில், நீங்கள் கைவசப்படுத்த வேண்டிய மிகவும் இன்றியமையாத அறிவு இது என்று நான் நம்புகிறேன்."

அவர் எங்கள் கவனத்தைக் கவர்ந்திருந்தார் என்பதில் சந்தேகமே இல்லை. பிரம்ம குலத்தின் படிப்படியான வளர்ச்சி பற்றி எங்களுக்கு ஒரு தெளிவற்ற யோசனை இருந்தது. ஆனால், எங்களுக்கு முன்னே சம்மணமிட்டு அமர்ந்திருந்த அந்த முதியவர் உண்மையிலேயே அப்படிப்பட்டப் பண்டைய ஞானத்தைக் கொண்டவர் என்பது ஆச்சரியமூட்டுவதாக இருந்தது. அவரைப் பார்த்தால் ஒரு மாபெரும் குருவைப்போலத் தோன்றவில்லை. உயரம் குறைவானவராகவும் வழுக்கைத் தலையுடனும் பானை வயிற்றுடனும் அவர் சாதாரணமானவராக இருந்தார். ஆனால் அவரது நீண்ட வெண்தாடியும் அவரது கண்களில் தென்பட்ட மினுமினுப்பும் அந்த வயதான, தேய்ந்து போன கூட்டிற்கு அடியில் இருந்த மேதமையை மறைக்க முயன்று தோற்றன.

அன்றிலிருந்து, எங்கள் வாழ்வில் ஒரு புதிய, குறிப்பிடத்தக்கக் காலகட்டம் துவங்கியிருந்தது. எங்கள் வாழ்விலிருந்து நெடுங்காலமாகத் தொலைந்து போயிருந்த எங்கள் தந்தையாகவும், நாங்கள் விட்டுவிட்டு வந்திருந்த எங்கள் தாயாராகவும், எங்கள் குருவாகவும், எங்கள் கடவுளாகவும், எங்கள் காப்பாளராகவும் பிரம்மா உருவெடுத்தார். பிரம்மன் குடும்பத்தைச் சேர்ந்த பல தலைமுறையினரால் மெருகேற்றப்பட்டத் தூய்மையான ஞானம் அந்த முதியவரிடமிருந்து பெருகி வழிந்தது. அது என்னை முழுமையாக ஆட்கொண்டது, என்னைக் கவர்ந்திழுத்தது. நீண்ட காலமாகத் தொலைந்து போன கலைகள், நீண்ட காலமாக மறக்கப்பட்ட உரைகள் ஆகியவற்றை அவர் எங்களுக்குக் கற்றுக் கொடுத்தார். எல்லாவற்றையும்விட மேலாக, அறிவுக்கான தேடலை அவர் எனது வளமான, ஆனால் அமைதியற்ற ஆன்மாவில் விதைத்தார். இயற்கையின் இசையைச் செவிமடுப்பதற்கு அவர்தான் எனக்குக் கற்றுக் கொடுத்தார். பறவைகளின் கீச்சொலிகளை எவ்வாறு கேட்பது என்பதை அவர் எனக்குக் காட்டினார். காட்டில் பாய்ந்தோடிய சிற்றோடையின் இசைக்கேற்ப என் மனத்தை அவர் நடனமாட வைத்தார். என்னுடைய ஆன்மாவை வானில் மிக உயரத்தில் பறந்து கொண்டிருந்த கழுகுடன் சேர்ந்து பறக்கச் செய்தார். நான் தூய்மையாக்கப்பட்டது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. என்

வாழ்வில் நான் யாருக்கேனும் ஏதேனும் கடன்பட்டிருந்தால், அது இந்த குருவிடம்தான் இருக்கும். அவர் எனது லட்சியத்திற்கு ஒரு வடிவத்தையும், என் கனவுகளுக்குச் சிறகுகளையும், எனது குறிக்கோளுக்குத் தெளிவையும், எனது கரங்களுக்கு சக்தியையும் கொடுத்தார்.

அவர் கொடுத்தக் கல்வியானது, சாதிப் பாகுபாடுகள், விலங்குப் பலிகள், புரோகித இனத்தினரால் பிரச்சாரம் செய்யப்பட்டப் பிற சடங்குகள் போன்ற தீவினைகள்மீது தாக்குதல் நடத்துவதற்கு எனக்கு மாபெரும் மன உறுதியைக் கொடுத்தது. அர்த்தமற்றச் சடங்குகளையும் பலிகளையும் அடக்கி ஒடுக்குவதென்றும், சாதிப் பாகுபாடுகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பதென்றும் நான் உறுதி பூண்டேன். எங்கள் கல்வி நிறைவுறும் நிலையில் இருந்தது. கடைசி ஒருசில வகுப்புகளைப் பேரரசரே எங்களுக்கு எடுத்தார். மனக் கட்டுப்பாட்டைப் பற்றியும் உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது பற்றியும் அவர் விரிவாகப் பேசினார். அவர் முன்மொழிந்த பாதை வளைந்து கொடுக்காததாகவும் நேரானதாகவும் இருந்தது. அது கடினமானதாகவும் சவாலானதாகவும் நடைமுறைக்கு முற்றிலும் சாத்தியமற்றதாகவும் இருந்தது. “கோபம்தான் மிகவும் கீழான உணர்ச்சி. உன் அறிவைக் குழப்பி, உன்னை முட்டாள்தனமான காரியங்களைச் செய்ய வைக்க அதனால் முடியும். காரண காரியத்தை ஆராய முடியாத அளவுக்கு உன் பார்வையை அது மட்டுப்படுத்திவிடுகிறது. நீ எதையும் சிந்திக்காமல், உன் உடலை மட்டும் கொண்டு செயல்விடை அளிக்கிறாய். இது ஒவ்வொரு பகுதியிலும் தோல்விக்கு வழிவகுக்கிறது. இத்தீவினையை உன்னிலிருந்து வேரோடு பிடுங்கி எறி.

“அடுத்தது கர்வம். ஆணவம் கர்வத்திலிருந்து முளைத்து, தெளிவான சிந்தனையையும் பார்வையையும் கொல்கிறது. நீ உன் எதிரிகளைக் குறைத்து மதிப்பிடவும் உன்னை அளவுக்கதிகமாக மதிப்பிடவும் கர்வம் வழிவகுக்கிறது. பொறாமை ஓர் இழிவான உணர்ச்சி. அதைக் கையாள்வதில் மேதமை பெறுவதுதான் மனிதனுக்கு இருக்கின்ற மிக அதிகச் சவாலான காரியங்களில் ஒன்று. பொறாமையானது அடுத்தவருடைய ராஜ்யத்தையும் செல்வத்தையும் மனைவியையும் புகழையும் குறித்த ஏக்கத்தை உன்னிடம் தூண்டுகிறது. ஆண்டாண்டு காலமாக, இந்த உணர்ச்சி, பல போர்களுக்கும் ரத்தச் சிதறல்களுக்கும் கண்ணீருக்கும் வழிவகுத்துள்ளது.

“மகிழ்ச்சியும் வருத்தமும் பகலையும் இரவையும்போல வெறுமனே இரண்டு நிலையான உண்மைகள். மிக மேன்மையான அறிவைக் கொண்டுள்ள ஒருவன் இந்த உணர்ச்சிகளால் ஒருபோதும்

பாதிக்கப்படுவதில்லை. இவை அடிப்படை உணர்ச்சிகள் அல்ல, மாறாக, நமது எண்ணங்களின் ஒரு பிரதிபலிப்புதான். நாம் பார்க்கின்ற, கேட்கின்ற, மற்றும் செய்கின்ற விஷயங்கள்மீதான நமது கண்ணோட்டத்திற்கு நாம் நடந்து கொள்ளும் விதமே இந்த உணர்ச்சிகள். ஒரு போர்வீரனிடம் உளச் சமநிலை இருப்பது நல்லது மட்டுமல்ல, அது அவனிடம் இருக்க வேண்டியதும்கூட. அது இல்லையென்றால், நீ உயிரோடு இருப்பதும் போர்க்களத்தில் இறந்து கிடப்பதும் ஒன்றுதான்.

“பயம் என்பது ஓர் உணர்ச்சியல்ல, அது ஒரு நோய். அது ஒரு தலைவனிடமிருந்து அவனைப் பின்பற்றுபவர்களிடம் பரவுகிறது. அதுபோல, இவர்களிடமிருந்து அத்தலைவனுக்கும் போகிறது. போரில் வேறு எதுவொன்றையும்விட, பயம்தான் அதிக எண்ணிக்கையிலான மக்களைக் கொன்றுள்ளது. ஒரு போர்வீரன் எதைக் கண்டு பயப்பட வேண்டும்? மரணமா? ஆனால் இறுதியில் எல்லோருக்கும் கிடைப்பது மரணம்தானே? காயங்கள் உன்னை அச்சுறுத்துகின்றதா? எது அதிக முக்கியமானது? உன் ரத்தமா அல்லது வெற்றி அமுதமா? சிந்தித்துப் பார். சிந்திப்பது அப்படிப்பட்டச் சந்தேகங்களைத் தெளிவுபடுத்தும்.

“சுயநலத்தைவிட அதிகமாகக் கண்டிக்கத்தக்க விஷயம் வேறொன்றும் இல்லை. தன்னைப் பற்றி மட்டுமே நினைக்கும் ஒரு மனிதன்தான் எல்லோரையும்விட மிகவும் துரதிர்ஷ்டமானவன். ஒருவன் ஏன் பிறக்கிறான்? வெறுமனே சாப்பிட்டு உடலைப் பருமனாக வளர்ப்பதற்கா? அல்லது சந்ததியினரை உருவாக்கிப் பன்றிகளைப்போல இனப்பெருக்கம் செய்வதற்கா? இந்த அழகான பூமியை உடற்கழிவுகளால் அசுத்தப்படுத்தவும், பிறகு, சொல்லிக் கொள்ளும்படியாக எந்தவிதமான மாற்றத்தையும் இவ்வுலகில் ஏற்படுத்தாமல் வெறுமனே மடிந்து போவதற்குமா? நம் மக்களை நசுக்கிக் கொண்டிருக்கின்ற இருளில் ஒரு சிறு விளக்கையாவது ஏற்றாமல் போனால் அவனது வாழ்விற்கு என்ன மதிப்பு இருக்கிறது? ராவணா, சுயநலம் எனும் இந்த இழிவான உணர்ச்சியை வெறுத்து ஒதுக்கு.

“அன்பு எனும் சங்கிலி, போலி எனும் அரவைக்கல்லோடு உன்னைக் கட்டிப் போடுகிறது. ஒரு வீரன் வெற்றியின்மீது மட்டுமே ஒருமித்தக் கவனம் செலுத்த வேண்டும். அது மட்டுமே உனது ஒரே தர்மமாக இருக்க வேண்டும். உன் மக்களுக்கும் பெற்றோருக்கும் மனைவியருக்கும் சகோதர சகோதரிகளுக்கும் கடவுள்களுக்கும் உன் கடமையைச் செய், ஆனால் அவர்கள்மீது ஒருபோதும் அன்பு செலுத்தாதே. அன்பு உன்னை பலவீனமானவனாக ஆக்குகிறது.

கண்ணுக்குப் புலப்படாத கட்டுகள் அதனிடம் உள்ளன. வெற்றியும் தோல்வியும் சமநிலையில் உள்ள ஒரு முக்கியமான கணத்தில், தோல்வி எனும் அதளபாதாளத்திற்கு அது உன்னைக் கொண்டு சென்றுவிடும். அன்பு குறித்து எச்சரிக்கையாக இரு.

"இறுதியாக, உனது லட்சிய வேகத்தை உன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திரு. ராவணா, உன் கண்களில் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கின்ற லட்சிய நெருப்பை என்னால் காண முடிகிறது. ஆனால் தேவையற்ற அபாயங்களை வீணாக விலை கொடுத்து வாங்கிக் கொள்ளாதே. உனக்குச் சொந்தமானதென்று வாழ்க்கை எவற்றை வழங்குகின்றதோ, அவற்றை மட்டுமே எடுத்துக் கொள். உன் வாழ்க்கை அதன் சொந்தப் போக்கில் போகட்டும். லட்சியங்களைக் குறி வை, அவற்றை அடைவதற்குக் கடுமையாக முயற்சி செய். ஆனால் உன் பாதங்கள் எப்போதும் நிலத்தில் உறுதியாக ஊன்றப்பட்டிருக்கட்டும். செயல்படுவதற்கு முன் ஒருமுறைக்குப் பல முறை யோசி."

"பாதுகாக்கப்பட வேண்டிய ஒரே மதிப்பான பொருள் உன் மனம் மட்டும்தான். உன் குருமார்களிடமிருந்தும் உன் புத்தகங்களிலிருந்தும் உன் வாழ்க்கையிடமிருந்தும் நீ பெறுகின்ற அறிவை உறிஞ்சி, அதை மாபெரும் ஞானமாக மெருகேற்றுவது உன் மனம்தான். நீ உருவாக்க வேண்டியது அதைத்தான். நீ வாழும் ஒவ்வொரு நிமிடமும், புத்துணர்ச்சியூட்டும் நேர்மறையான உள்ளீடுகளை உன் மனத்திற்குக் கொடுக்கப் பெருமுயற்சி மேற்கொள்வதில் செலவிடப்பட வேண்டும். இது உனது முன்னோக்கிற்குத் தெளிவையும் உனது நடவடிக்கைக்கு அளப்பரிய சக்தியையும் வழங்கும். அப்போது நீ குறைவான தவறுகளைச் செய்வாய் என்பதோடு, அவற்றிலிருந்து விரைவாகவும் கற்றுக் கொள்வாய். ராவணா, ஒரு மாபெரும் எதிர்காலம் உன் முன்னே காத்துக் கொண்டிருக்கிறது. நொறுங்கிப் போன எனது கனவுகளைச் சரிசெய்யக்கூடிய எவரொருவரையும் இதுவரை நான் பார்த்ததில்லை. தங்களை வெற்றிக்கும் நிலையான புகழுக்கும் வழிநடத்திச் செல்வதற்குப் பொருத்தமான ஒருவர், பாவப்பட்ட இந்த அசுரர்களுக்கு இதற்கு முன்பு ஒருபோதும் வாய்த்திருக்கவில்லை. ராவணா, அவர்களை அறிவோடும் பச்சாதாபத்தோடும் நடத்து. அவர்கள் இழந்துவிட்ட சாம்ராஜ்யத்தை அவர்களுக்கு உன்னால் திருப்பிக் கொடுக்க முடியும். மறக்கப்பட்டுவிட்ட அவர்களுடைய நாகரீகத்தை உன்னால் மீட்டுக் கொடுக்க முடியும். அவர்களுடைய பேரார்வத்திற்கு வண்ணம் தீட்டவும் அவர்களுடைய கற்பனையைத் தூண்டிவிடவும் உன்னால் முடியும். நீ அதிவேகக் குதிரையின்மீது அமர்ந்திருக்க, உனது வாள் உன் கையில் நீண்டிருக்க, உனது அடர்த்தியான கருத்தத் தலைமுடி வன்காற்றில்

பறக்க, மிகவும் துணிவு வாய்ந்த அசுரப் போர்வீரர்களை தேவர்களின் படைகள்மீது தாக்குதல் நடத்துவதற்கு நீ வழிநடத்திச் செல்வதை என்னால் காண முடிகிறது. தேவர்களின் நகரங்கள் சுக்குநூறாக நொறுங்குவதை என்னால் பார்க்க முடிகிறது. ஆம், வரவிருக்கும் ஒரு கடும் புயலின் தொலைதூர நடுக்கங்களை என்னால் கேட்க முடிகிறது. அந்த நடுக்கங்களின் சத்தம் இப்போது லேசாக இருக்கின்றன, ஆனால் இந்தப் புனித பூமியான இந்தியாவில் அவை கட்டவிழ்த்துவிடப் போகின்ற சக்தி வல்லமை மிக்கதாக இருக்கும். அவை தற்போதைய அமைப்புமுறையை வேரறுத்து, கோடிக்கணக்கான வெற்றுப் புனைவுகளைத் தகர்த்து, வரலாற்றை மீண்டும் எழுதும். ராவணா, இப்போது நான் குறிப்பிட்டுள்ள இந்தப் பத்துப் பாடங்களை நீ மறக்காமல் இருக்கும்பட்சத்தில், உலகம் உன்னுடையதாக ஆகும் என்று நான் நம்புகிறேன். உன்னுடைய ஒன்பது சிந்திக்கும் தலைகளை நீ துறப்பதற்குப் போதுமானவற்றை பிரம்மன் செய்துள்ளார் என்று நான் நம்புகிறேன். மிக முக்கியமானதான மனம் மட்டுமே எஞ்சியிருக்கிறது. நீ இப்போது பெற்றுள்ள கல்விதான் உச்சகட்டத் தியாகம், உனது தவம். இப்போது, மிகத் தூய்மையான வடிவில் இருக்கின்ற, மெருகேற்றப்பட்ட அறிவு நீ. தொலைந்து போன தங்களது புகழை அசுரர்கள் மீண்டும் கைவசப்படுத்துவதற்கு நீ உனது தெளிவான பகுத்தறிதலோடும் செயல் நடவடிக்கையோடும் அவர்களை வழிநடத்துவாய். ராவணா, புறப்படு! உலகை உனக்குச் சொந்தமாக்கிக் கொள்!”

அந்த மாபெரும் பேரரசரின் வார்த்தைகளோடு முரண்பட்டு நிற்பதற்கு எது என்னைத் தூண்டியது — இளம்பருவத்தின் முட்டாள்தனமா அல்லது என் இதயத்தில் இருந்ததை வெளியே கொட்டிவிட வேண்டும் என்ற ஓர் உள்ளார்ந்த தூண்டுதலா? அதை நான் இன்னும் கண்டுபிடித்திருக்கவில்லை. ஆனால், எலிகளும் நரிகளும் என்னை உயிரோடு தின்று கொண்டிருக்க, இப்போதுகூட, அப்பேரரசரிடம் நான் கூறிய விஷயங்களை நான் நம்புகிறேன். அவரது வயதான முகத்தில் தென்பட்ட வியப்பையும், அதைத் தொடர்ந்து வெளிப்பட்டக் கோபத்தையும், அதன் பிறகு தோன்றிய முடிவற்ற, விவரிக்க முடியாத வருத்தத்தையும் என்னால் காண முடிகிறது. அதை நினைத்துப் பார்ப்பதுகூட எனக்கு வேதனையளிக்கிறது. ஆனால் இளமை கொடுத்தச் செருக்கில் நான் அவரிடம் தொடர்ந்து வலியுறுத்தினேன்.

“மாண்புமிகு பேரரசரே! நீங்கள் கூறிய அனைத்தும் உன்னதமான எண்ணங்கள். ஆனால் நீங்கள் என்னிடம் எதிர்பார்க்கும் விஷயங்கள் சாத்தியமற்றவை. இதைக் கூறுவதற்கு நீங்கள் என்னை மன்னிக்க

வேண்டும். வெற்றிக்காக நான் இந்த ஒன்பது உணர்ச்சிகளை, அல்லது நீங்கள் அழைப்பதுபோல, ஒன்பது சிந்திக்கும் தலைகளைக் களைவது நடைமுறையில் சாத்தியமானதா? நான் ஒரு நல்ல மாணவன். நான் எனது பாடங்களைச் சிறப்பாகக் கற்றிருக்கிறேன். ஆனால் எல்லா விஷயங்களைக் குறித்தும் நான் எப்போதும் எனது சொந்த அபிப்பிராயங்களையே கொண்டிருப்பேன். நான் அகங்காரத்துடன் பேசுவதாக நீங்கள் நினைக்கக்கூடாது. நான் கூறுவதைத் தயவு செய்து காதுகொடுத்துக் கேளுங்கள்.

“மேன்மைமிகு பேரரசரே! நீங்கள் கோபத்தைப் பற்றிப் பேசினீர்கள். தவறாக வழிநடத்தப்பட்டக் கோபம் தீங்கு விளைவிக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அது வாழ்வின் ஓர் அடிப்படை உணர்ச்சியல்லவா? உலகம் இப்போதுவரை அறிந்துள்ள மாபெரும் நாகரீகத்தைக் கட்டியெழுப்பிய, முன்பொரு காலத்தில் வல்லமை மிக்கதாக இருந்த அசுரப் பழங்குடியினரின் நிலைமையைக் கண்டு நான் கோபம் கொள்ளவில்லை என்றால், அந்த இனத்தின் மதிப்புமிக்க மகன்களில் நானும் ஒருவன் என்று எப்படி என்னால் மார்தட்டிக் கொள்ள முடியும்? தேவ அரசர்கள் மற்றும் அவர்களது சேவகர்களான சில அசுர நண்பர்களின் இரும்புக் கரங்களின் பிடியில் ஆயிரக்கணக்கானவர்கள் கொடூரமான சூழ்நிலைகளில் வாழ்ந்து கொண்டிருக்கும்போது என்னால் கோபப்படாமல் எப்படி இருக்க முடியும்? மறக்கப்பட்டுவிட்ட அசுரக் கலைகள், அழிக்கப்பட்டுவிட்ட அசுர மதம், தரைமட்டமாக்கப்பட்டுவிட்ட அசுரக் கோவில்கள், சிதைக்கப்பட்டுவிட்ட அசுர சாம்ராஜ்யங்கள் ஆகியவற்றையும், அசுரர்களின் நலனைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாகக் கூறிக் கொண்டு, பயத்தால் நடுங்கி ஒடுங்கிப் போய், தேவ அரசர்கள் மற்றும் பிற நிலப்பிரபுக்களின் முன்னால் மண்டியிடுகின்ற கோழைகளையும் குறித்து என்னால் விரக்தியை உணர முடியவில்லை என்றால், நான் எப்படிப்பட்ட உணர்ச்சியை உணர்ந்தாக வேண்டும் என்று தயவு செய்து எனக்குக் கூறுங்கள். என்னுடைய எண்ணங்களுக்கு நெருப்பூட்டி, நேர்மறையான நடவடிக்கை எடுப்பதற்கு என்ன உந்தித் தள்ளப் போவது கோபம்தான், இல்லையா? நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். இந்தக் கோபத் தலையை நான் ஒருபோதும் இழக்க மாட்டேன்.

“கர்வமும் பெருமிதமும் ஏன் வெறுக்கப்பட வேண்டும்? நம் மக்கள், நம் இனம், நமது கலாச்சாரம், மொழி, கலை, இசை ஆகியவற்றைக் குறித்து நான் பெருமை கொள்கிறேன். நான் அளப்பரிய ஆற்றலையும் வெற்றி பெற வேண்டும் என்ற உறுதியையும் பெற்றிருப்பது குறித்து

நான் பெருமிதம் கொள்கிறேன். ஒருவன் எப்போதுமே பலவீனமானவனாக இருக்க வேண்டும், சாப்பாட்டிற்காக யாசிக்க வேண்டும், நிரந்தரமாக ஏழ்மையில் வாழ வேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. இவை அனைத்தும் பிராமணர்கள் போதிக்கின்ற விஷயங்கள். ஆனால் அவர்களில் ஒருவன்கூட இவற்றைக் கடைபிடிப்பதில்லை. வெற்றியைக் கைவசப்படுத்துவதற்காக என் வாழ்வில் நான் கடினமாகப் போராடினால், அது குறித்துப் பெருமிதம் கொள்வதற்கு எனக்கு உரிமை இருக்கிறது. கர்வத்திலும் ஆடம்பரத்திலும் குளிர்காய்வதற்கு எனக்கு எல்லா உரிமைகளும் உள்ளன. கடந்தகால அரசர்கள் ஏன் மாபெரும் கோவில்களையும் நகரங்களையும் கட்டினார்கள்? மேன்மக்கள் ஏன் நற்காரியங்களுக்கும் சமயக் காரியங்களுக்கும் அள்ளி அள்ளிக் கொடுத்தனர்? அது அவர்களது கர்வத்தையும் பெருமிதத்தையும் வெளிப்படுத்துவதால்தானே? பணிவன்புடன் இருக்கின்ற பெரும்பாலான மக்கள் பாசாங்குக்காரர்களாக இருக்கிறார்கள் அல்லது பணிவன்புடன் இருப்பதற்கு அவர்களிடம் ஏகப்பட்ட விஷயங்கள் இருக்கின்றன. வெற்றியானது கர்வத்தையும் பெருமிதத்தையும் ஊட்டி வளர்க்கிறது. கர்வம் மட்டுமே வெற்றிக்கான ஒரே வெகுமதி.

"பொறாமைதான் மனிதகுலத்தை ஊக்குவிக்கின்ற மாபெரும் ஆற்றல். சாம்ராஜ்யங்கள் ஏன் ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொள்கின்றன? பொறாமையால் தாங்கள் தூண்டப்படவில்லை என்றால், அரசர்கள் ஏன் தாங்கள் செய்யும் காரியங்களில் அடுத்தவரை மிஞ்சி நிற்க முயற்சிக்கின்றனர்? பொறாமைதான் முன்னேற்றத்திற்கான உந்து சக்தி, அதுதான் வாழ்வை ஊக்குவிக்கின்ற ஆற்றல். உணவு, உறைவிடம், உடலுறவு ஆகிய உடல்ரீதியான அடிப்படைத் தூண்டுதல்களுக்குப் பிறகு, முக்கியத்துவத்திற்கான தேவைதான் அனைத்துத் தூண்டுதல்களிலும் மிக முக்கியமானதாகும். மேற்கூறப்பட்ட மூன்று அடிப்படைத் தூண்டுதல்கள்கூடப் பொறாமையில்தான் வேரூன்றியுள்ளன. பொறாமையை மறுப்பது என்பது மனிதனின் அடிப்படை உள்ளுணர்வுகளை மறுப்பதைப் போன்றது. பேரரசரே, நீங்கள் என்னிடம் கேட்பது நடைமுறைக்குச் சாத்தியப்படாத ஒன்று.

"வருத்தம் மற்றும் மகிழ்ச்சியில் பற்றற்று இருப்பதைப் பற்றி நீங்கள் பேசினீர்கள். இது எப்படிச் சாத்தியமாகும்? என் அன்புக்குரியவர்கள் இவ்வுலகைவிட்டுச் செல்லும்போது நான் ஏன் அமைதியாக இருக்க வெண்டும்? அழுவதால் எனக்குக் கிடைக்கக்கூடிய ஆறுதலை நான் ஏன் எனக்கு மறுக்க வேண்டும்? மகிழ்ச்சியை உணர்வதற்குரிய திறன்

எனக்கு இல்லாமல் போய்விட்டால், நான் எப்படிப்பட்டவனாக ஆவேன்? உதயமாகும் சூரியனின் அழகில் என்னால் மகிழ்ச்சியைக் காண முடியாவிட்டால், ஒரு சிறு கைக்குழந்தையின் சிரிப்பில் பேரின்பத்தை என்னால் உணர முடியாவிட்டால், இசை எனும் மகிழ்ச்சியில் என்னால் மூழ்க முடியாமல் போனால், வாழ்வதில் ஏதேனும் அர்த்தமுள்ளதா?

"பயம்தான் மனிதர்கள் மற்றும் விலங்குகளின் மாபெரும் உள்ளுணர்வு. அதை நான் புறக்கணிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். பேரரசரே, நான் பயந்து போயிருக்கிறேன் என்று கூறுவதற்கு எனக்கு பயமில்லை. நான் பல விஷயங்கள் குறித்து பயப்படுகிறேன். நான் ஒரு கோழையல்ல, ஆனால் என் இதயத்தில் எங்கோ ஓரிடத்தில் பயம் உறங்கிக் கொண்டிருக்கிறது. நான் மரணத்தைக் கண்டு பயப்படுகிறேன். மரணம் குறித்த பயம் தங்களுக்கு இல்லை என்று கூறும் மக்களைக் கண்டு நான் பயப்படுகிறேன். ஒன்று, அவர்கள் முட்டாள்களாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால், மற்றவர்களையும் அவர்கள் தங்களோடு இழுத்துக் கீழே தள்ளிவிடுவார்கள். அல்லது அவர்கள் எல்லோரையும் வெறுக்கின்ற தீயவர்களாக இருக்க வேண்டும். நான் பல விஷயங்களை இழப்பது குறித்து பயப்படுகிறேன். அவை மதிப்பற்றவையாக இருக்கக்கூடும், ஆனால் அவற்றை நான் என் வியர்வையாலும் ரத்தத்தாலும் வாங்கியிருப்பேன். என் அன்புக்குரியவர்கள் நோய்க்குப் பலியாகிவிடுவார்களோ என்று நான் பயப்படுகிறேன். சில யுத்தங்கள் எனக்கு விசுவாசமாக இருக்கின்ற எனது சகோதரர்களைப் பலி வாங்கிவிடுமோ என்று நான் பயப்படுகிறேன். வலிமையான மழை என் சகோதரியையும் தாயாரையும் பெருங்கடலுக்குள் அடித்துச் சென்றுவிடும் என்று நான் பயப்படுகிறேன். நான் மரணத்தை நோக்கி அடியெடுத்து வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை நான் சுவாசிக்கும் ஒவ்வொரு முறையும் நான் உணர்கிறேன். பயம் என்ற ஒன்று இல்லை என்று மறுக்கும் அளவுக்கு நான் பயத்தைக் கண்டு பயப்படவில்லை. இந்த பயம்தான் நான் எதிர்கொள்ள வேண்டிய ஆபத்துகளுக்கு என்னைத் தயார்படுத்திக் கொள்ள எனக்கு உதவுகிறது. என்னால் கட்டுப்படுத்த முடியாத விஷயங்கள் இருக்கின்றன என்பதை இந்த பயம்தான் எனக்குப் புரிய வைக்கிறது. கடவுளையும் என்னையும் நான் புரிந்து கொள்வதற்கும் இந்த பயம்தான் எனக்கு உதவுகிறது.

"சுயநலத்தை ஓர் அடிப்படை உணர்ச்சி என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் உலகம் நெடுகிலும் மாபெரும் நகரங்களை உருவாக்கியுள்ளது இந்தப் பண்புநலன்தானே? லட்சியத்தின் அடித்தளம்

அதுதானே? தான் என்கின்ற ஆழமான அகங்காரமும் இவ்வுலகின் புதையல்களை அடைவதற்கான தணியாத விருப்பமும் இல்லையென்றால், ஒருவனால் வாழ்வில் வெற்றி பெற முடியுமா? ஓர் அழகான பெண்ணையோ, ஒரு பிரம்மாண்டமான மாளிகையையோ, ஒரு வசீகரமான கிராமத்தையோ, ஒரு மினுமினுப்பான வைரத்தையோ, ஒரு செழிப்பான நகரத்தையோ நான் பார்க்கும்போது, லட்சியம் என் ஆன்மாவில் சிறகடித்துப் பறக்கிறது. இவ்வுலகின் அதிசயங்கள் எனக்கு மட்டுமே சொந்தமாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீங்கள் எனது அடிப்படை எண்ணங்களைக் கொல்ல முயற்சிக்கக்கூடும், ஆனால் பேரரசரே, எனது ஆணவத்தை மன்னித்து, ஒரு விஷயத்தை உண்மையாக என்னிடம் கூறுங்கள். இதே சுயநலம்தான் ஒரு சாம்ராஜ்யத்தையே உருவாக்கியது, இல்லையா? நீங்கள் ஒரு பரதேசியாக ஆகவில்லை, மாறாக, இந்த ஒட்டுமொத்த உலகத்தின் சக்கரவர்த்தியாக ஆவதற்குக் கடுமையாக முயற்சித்தீர்கள். சுயநலம் என்ற இந்த அடிப்படை உள்ளுணர்வு மட்டும் இல்லையென்றால், போரில் ஆயிரக்கணக்கானவர்களை நீங்கள் ஏன் கொன்று குவித்தீர்கள்? பேராற்றல் வாய்ந்த உங்களுடைய படைகளை ஏன் தேவர்களுக்கு எதிராக வழிநடத்திச் சென்றீர்கள்? உங்களுக்கு ஒரே ஒரு குறிக்கோள் மட்டுமே இருந்தது. நீங்கள் உங்களுக்காகவும் உங்கள் குலத்திற்காகவும் உங்கள் பழங்குடி இனத்திற்காகவும் புகழை விரும்பினீர்கள். அதை எந்த விதத்தில் பார்த்தாலும், ‘நீங்கள்’ என்ற வார்த்தை இவற்றில் பிரதானமாக உள்ளது என்பதைக் காண முடியும். நீங்கள் அடைந்தவற்றையும் இன்னும் அதிகமானவற்றையும் நான் அடைய விரும்புகிறேன். சுயநலமற்ற, அடையாளமற்ற ஒருவனாக மடிந்து போவதற்குப் பதிலாக, உலகிலேயே மிகவும் சுயநலமான மனிதன் என்ற பெயரோடு திகழ்வதைத் துணிச்சலாக ஏற்றுக் கொள்வதற்கு நான் தயாராக இருக்கிறேன்.

அந்த வயதான நபர் தனது கண்களில் கனல் தெறிக்க அமர்ந்திருந்தார். நான் பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்ததை நான் உணர்ந்தேன். ஆனால் நான் ஏற்கனவே என் பேச்சைத் துவக்கியிருந்ததால், அதைப் பாதியில் நிறுத்த நான் விரும்பவில்லை. நான் என் எண்ணங்களை ஒன்றுதிரட்டிக் கொண்டு மேலும் தொடர்ந்தேன். “நீங்களும் பிரம்மாவும் அன்பை ஓர் அடிமட்ட உணர்ச்சியாகக் கருதுவது வருத்தத்திற்குரியது. உணர்ச்சிகளின் அரசனான அன்பு இல்லாமல் எதுவுமே இருப்பதில்லை. ஒரு தாய் தனது குழந்தையிடம் கொண்டிருக்கும் அன்பைவிட அதிகத் தூய்மையானது வேறெதுவும் இல்லை. தனது காதலியுடன் இருப்பதற்கான

வேதனையூட்டும் தேவையை ஒருவர் உணர்ந்திருக்கவில்லை என்றால், உங்களுடைய சொந்தச் சகோதர சகோதரிகள், உங்களை உருவாக்கிய தந்தை, தனது கருவில் உங்களைச் சுமந்து தனது ரத்தத்தையும் பாலையும் உங்களுக்கு ஊட்டி வளர்த்த உங்களது தாய், உங்களது நண்பர்கள், அவர்களுடன் சேர்ந்து நீங்கள் மகிழ்ச்சியாகக் கழித்தச் சிறு சிறு கணங்கள், உங்களுடைய வாழ்க்கையை உங்களுடன் பகிர்ந்து கொள்ளும் உங்கள் மனைவி, உங்கள் வாழ்க்கையை முன்னோக்கி எடுத்துச் செல்கின்ற உங்கள் குழந்தைகள் ஆகியோர் குறித்து நீங்கள் அன்பை உணரவில்லை என்றால், இந்த வாழ்க்கையை வாழ்வதில் ஏதேனும் மதிப்பு உள்ளதா? அற்பமாகத் தோன்றக்கூடிய, ஆனால் மக்கள் தங்கள் இதயத்தில் பொக்கிஷம்போலப் பாதுகாத்து வைத்துள்ள, உங்கள் நாடு, இனம், மொழி, மதம், கடவுள்கள், மற்றும் பல்வேறு பொருட்கள் குறித்த அன்புதானே இவ்வளவு ரத்தச்சிதறல்களுக்கும் போருக்கும் வழிவகுத்துள்ளது? கடந்தகாலத்தில் மக்கள் அன்பிற்காக இறந்துள்ளனர், உலகம் இருக்கும் வரையில் தொடர்ந்து அவர்கள் அன்பிற்காக இறப்பார்கள். நான் உங்களிடம் எவற்றைப் பற்றிப் பேசியுள்ளேனோ, அவற்றை நான் எப்போதுமே நேசிப்பேன். ஆனால், அவை எல்லாவற்றையும்விட மேலாக என்னை நான் நேசிப்பேன். நான் இல்லையென்றால், அன்பு செலுத்தத் தகுதியான எதுவுமே எனக்கு அர்த்தமுள்ளதாக இருக்காது. நான் உயிரோடு இருப்பதால் நான் நேசிக்கிறேன். நான் நேசிப்பதால் நான் உயிரோடு இருக்கிறேன். நான் என்னை நேசிக்கிறேன்.

"லட்சியம்தான் முன்னேற்றத்திற்கான திறவுகோல். லட்சியம் இல்லையென்றால், எகிப்து நாட்டு அரசர்கள் இக்கணத்தில் பிரமிடுகளைக் கட்டுவதில் மும்முரமாக இருக்க மாட்டார்கள். லட்சியம் இல்லாமல் போயிருந்தால், மனிதர்கள் வேடர்களாகவே இருந்திருப்பார்கள். சக்கரங்கள், குதிரை வண்டிகள், தேர்கள், அற்புதமான நகரங்கள், கோவில்கள், அரண்மனைகள், பிரம்மாண்டமான கப்பல்கள் போன்ற எதுவும் உருவாகாமல் போயிருக்கும். லட்சியம் இல்லையென்றால், ஒரு மகாபலியோ ஓர் இந்திரனோ நமக்கு வாய்த்திருக்க மாட்டார்கள். லட்சியம்தான் நமது வாழ்க்கையை முன்னோக்கி இழுத்துச் செல்கின்ற குதிரையாகும்.

"ஒருசில மனிதர்களின் மனங்களில் லட்சியம் எனும் சிறிய நெருப்பு இல்லாமல் போயிருந்தால், கடந்த ஒருசில வருடங்களில் மனிதன் அடைந்துள்ள அற்புதமான வேகம் சாத்தியப்பட்டிருக்காது. அவர்களுடைய மனங்களில் இருந்த அச்சிறிய நெருப்பு, நான் வெறுத்து ஒதுக்க வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்துகின்ற மற்ற

உணர்ச்சிகளால் ஒரு பெரும் தீயாக மாற்றப்பட்டதுதான் மனிதனின் முன்னேற்றத்திற்குக் காரணமாக இருந்தது. தனது திறனின்மீதான கர்வம்தான் வளர்வதற்கான தன்னம்பிக்கையையும் லட்சியத்தையும் மனிதனுக்குக் கொடுத்தது. அடுத்தவர்கள் நம்மைவிட அதிகமாகச் சாதித்துவிடுவார்கள் என்ற பொறாமைதான் அவன் கடினமாகவும் அதிகச் செயற்திறனுடனும் உழைப்பதற்கு அவனைத் தூண்டியது. மகிழ்ச்சிக்கான தேடல்தான் தொடர்ந்து விரிவடைந்து கொண்டிருந்த லட்சியத்திற்கு வழிவகுத்தது. வருத்தம் குறித்த பயம்தான் நள்ளிரவில் அவனுக்கு விழிப்பூட்டி, அவனை மேலும் முன்னோக்கித் தள்ளியது. தோல்வி குறித்த பயம்தான் அதிக எச்சரிக்கை உடையவனாகவும் கடவுள்மீது பயம் கொண்டவனாகவும் அவனை மாற்றியது. சுயநலம்தான் அவனது குடும்பத்தையும் நகரத்தையும் குலத்தையும் பழங்குடி இனத்தையும் நாட்டையும் ஒன்றிணைத்து, அவனை இன்னும் அதிகக் கடினமாக முயற்சிக்கச் செய்தது. வாழ்க்கையின்மீதான அன்பும், வாழ்க்கையை விலைமதிக்க முடியாத ஒன்றாக ஆக்கிய பொருட்கள்மீதான அன்பும்தான் அவனைத் தனது சாதனைகளைப் பாதுகாக்கச் செய்தது. இன்னும் அதிகமாகச் சாதிக்க வேண்டும் என்ற தணியாத லட்சியம், நம்மால் கற்பனை செய்ய முடியாத, நமது குறுகிய வாழ்நாளில் நம்மால் ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாத முன்னேற்றத்திற்கு மனிதகுலத்தை வழிநடத்திச் செல்லும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

“என் அன்புக்குரிய பேரரசரே, நான் என் மனம் திறந்து பேசுவது குறித்து வருத்தப்படாதீர்கள். அறிவு மட்டுமே ஒருவன் வைத்திருக்கத் தகுதியானது என்பது பற்றி நீங்கள் பேசினீர்கள். அறிவு முக்கியம் என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். ஆனால் பிற உணர்ச்சிகள் ஏதும் இல்லையென்றால், அது ஒரு வெற்று எலும்புக்கூடுதான் என்று வரலாறு நமக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறது. அந்த எலும்புக்கூட்டில் எந்த ஜீவனும் இருக்காது. பேரரசரே, மகரிஷிகளோ அல்லது சாதுக்களோ நாகரீகங்களை உருவாக்கவில்லை. மாறாக, தங்களது உணர்ச்சிகளை ஒருபோதும் கட்டுப்படுத்தாத, இயற்கை காட்டிய திசையில் அவ்வுணர்ச்சிகள் வழிந்தோட அனுமதித்த அசாதாரணமான மனிதர்கள்தான் நாகரீகங்களை உருவாக்கினார்கள். ஒரு மாபெரும் நகரத்தைக் கட்டியெழுப்புவது குறித்த யோசனை, காட்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் எந்தவொரு பரதேசிக்கும் ஒருபோதும் தோன்றியதில்லை. மாபெரும் கோவில்களைக் கட்டுவதற்கு எந்தவொரு சாதுவும் உறுதி பூணவில்லை. வணிகத்திற்கும் வர்த்தகத்திற்கும் தேவையான மாபெரும் கப்பல்களை உருவாக்க எந்தவொரு

பிராமணனும் விரும்பவில்லை. தங்களது நாடி நரம்புகளில் கர்வத்தையும், தங்கள் மனங்களில் கோபத்தையும் கொண்டிருந்த, தாங்கள் வருத்தமாக உணர்ந்தபோது அழுத, தாங்கள் மகிழ்ச்சியாக இருந்தபோது சிரித்த, தங்களைவிடப் பெரிய ஆற்றல்களையோ அல்லது நிகழ்வுகளையோ எதிர்கொள்ள நேர்ந்தபோது பயந்த, ஆனால் மன உறுதியோடு முன்னோக்கி நடைபோட்ட, தாங்கள் மிகவும் பொக்கிஷமாகக் கருதிய விஷயங்கள் குறித்து ஒரு சுயநலமான அன்பைக் கொண்டிருந்த மக்களே மாபெரும் நகரங்களையும் பிரம்மாண்டமான கோவில்களையும் அற்புதமான கப்பல்களையும் கட்டியெழுப்பினார்கள். இவர்கள் தொடர்ந்து தங்களுடைய லட்சிய நிலைகளை அதிகரித்துக் கொண்டே இருந்தனர். அறிவு என்பது நமது உணர்ச்சிகளுக்கு உதவுகின்ற ஒரு கருவி. மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்று கடவுள் நினைத்திருந்தாரோ, அவ்வாறு வாழவே நான் விரும்புகிறேன்.

“நான் கடவுளாக ஆக வேண்டும் என்பதோ, அல்லது மோட்சத்தை அடைய வேண்டும் என்பதோ எனது லட்சியம் அல்ல. என்னைப் பொறுத்தவரை, இவை அனைத்தும் மூடநம்பிக்கைகள். இவ்வுலகில் நீங்கள் வேண்டுமென்றே மறுத்த அனைத்து இன்பங்களையும் உங்களுக்குக் கொடுக்கின்ற ஒரு சொர்க்கத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. பிராமணர்களின் விவரிப்பின்படி எவை நல்லவையோ, இப்பிறவியில் நான் அவற்றைச் செய்தால் அடுத்தப் பிறவியில் நான் ஒரு பிராமணனாகப் பிறப்பேன் என்று கூறப்படுகின்ற மறுபிறப்பிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. ஒரு பிராமணனாகப் பிறப்பதுதான் உச்சகட்ட வெகுமதி என்றால், மீண்டும் பிறப்பது குறித்த பயத்தின் காரணமாக நான் மரணம் எய்தக்கூட மறுக்கக்கூடும்.

“உங்களுக்கு ஏமாற்றத்தை ஏற்படுத்துவதற்காக நான் வருந்துகிறேன். ஆனால் நான் ஓர் ஆண்மகனைப்போல வாழ்ந்து, ஓர் ஆண்மகனைப்போலவே மடிவேன். நான் ஒருபோதும் ஒரு கடவுளாக இருக்க முயற்சிக்க மாட்டேன். என் உணர்ச்சிகள் கூறுகின்றபடியே நான் வாழ்வேன். எதிர்காலத் தலைமுறையினர் என்னைப் பின்பற்றுவதற்குரிய ஒரு மாதிரி மனிதனாக நான் இருக்க விரும்பவில்லை. என் வாழ்க்கை என்னோடு துவங்கி என்னோடு முடிகிறது. ஆனால் என் வாழ்க்கையை நான் முழுமையாக வாழ்வேன். ஒரு மனிதன் எவ்வாறு இறக்க வேண்டுமோ அவ்வாறே நான் இறப்பேன். உங்கள் வார்த்தைகளில் கூறுவதானால், நான் பத்து முகங்களைக் கொண்ட ஒரு மனிதனாக இருப்பேன். நான் பத்து முகத்தோனாக இருப்பேன்.”

ஒரு கனத்த மௌனம் நிலவியது. பிரம்மா தனது வெற்றுக் கால்விரல்களை வெறித்தபடி நின்று கொண்டிருந்தார். தளர்ந்து போயிருந்த பேரரசரின் கோபக் கண்கள் என்னைத் துளைத்தன. என் நாளங்களில் திடீரென்று ஓர் ஆற்றல் பெருக்கெடுத்ததை நான் கண்டேன். எனது நீண்ட சொற்பொழிவை நான் நிகழ்த்தி முடிக்கும்வரை, என் வாழ்வின் தத்துவம் குறித்து எனக்கே உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. அதுவரை, அந்த மாபெரும் முதியவர் என்மீது வைத்திருந்த நம்பிக்கைக்கு நான் துரோகம் இழைத்துக் கொண்டிருந்தேனோ என்று நான் வியந்து கொண்டிருந்தேன். ஆனால் திடீரென்று, ஒரு புதிய ஜோடிக் கண்களுடன் நான் அவரைப் பார்த்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். எனது கணிப்பில் அவர் வேகமாகச் சுருங்கிக் கொண்டிருந்தார். தளர்ந்து போன, வீழ்த்தப்பட்ட, பாதி மடிந்துவிட்ட ஒரு வயதான மனிதராக மட்டுமே அவர் எனக்குத் தெரிந்தார். தான் ஒரு நாட்டை இன்னும் ஆண்டு கொண்டிருந்தது போன்ற ஒரு மாயை அவரைச் சுற்றி இருந்தது. தேவர்களின் படைகளிடமிருந்து தப்பித்து மறைந்து வாழ்ந்து கொண்டிருந்த ஒரு மலை எலி அவர்.

என் செவிகளில் விழுந்த குரல் ஒரு பலவீனமான முணுமுணுப்பாக இருந்தது. அவர் எழுந்து கொள்ள முயற்சித்தார், ஆனால் என் முன்னால் நிலைகுலைந்து விழுந்தார். நான் அதைத் திகிலுடன் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்த வெளிரிய உருவம் மெதுவாக மண்டியிட்டு எழுந்தது. தனது பளபளப்பான கண்களுடன் அவர் என்னைக் கடந்து வெறித்துப் பார்த்தார். பிறகு, உணர்ச்சிகரமாகத் தன் தலையை உயர்த்தி வெறித்தார். ஒரு முதியவரின் பிதற்றல்களைக் கேட்பதற்கு எனக்கு நேரம் இருக்கவில்லை. நான் அவருக்கு முதுகு காட்டித் திரும்பி, என் தலையை வேண்டுமென்றே சிலுப்பிக் கொண்டு, என் சகோதரர்கள் பின்தொடர அங்கிருந்து வெளியேறினேன். இப்போது தனது இரண்டு கைகளையும் விண்ணை நோக்கி உயர்த்தியபடி ஏதோ பிதற்றிக் கொண்டிருந்த அந்த முதியவரை, தட்டுத் தடுமாறி நடந்து கொண்டிருந்த விபீஷணன் பல முறை திரும்பிப் பார்த்தான். ஆனால் கும்பகர்ணன் தன் உதடுகளில் புன்னகையுடன், என்னைவிட உறுதியாக அடியெடுத்து வைத்து என்னைப் பின்தொடர்ந்து வந்தான். தங்கள் வாள்களும் கேடயங்களும் கணகணவென்று ஒலியெழுப்ப, மகாபலியின் பலவகைப்பட்டப் போர்வீரர்கள் அடங்கிய ஒரு குழுவினர் என்னைப் பின்தொடர்ந்து வந்தனர்.

கொளுத்தும் வெயிலில் போர்வீரர்கள் புடைசூழ வெளியே நான் அடியெடுத்து வைத்தேன். சமீபத்தில் பெய்த மழையால் பூமி

புத்துணர்ச்சியோடு இருந்தது. கடவுள் அப்போதுதான் தனது வேலையை முடித்துவிட்டுக் குளிக்கச் சென்றிருந்ததுபோல அது இருந்தது. காட்டு மலர்களின் நறுமணத்தையும், ஈரமான செந்நிற பூமியின் வாசனையையும் நான் நுகர்ந்தேன். பறவைகளின் கீச்சொலி என் காதுகளில் இசையெனப் பாயந்தது. வாழ்க்கை எனும் சாகசப் பயணத்தில் தன்னுடன் சேர்ந்து கொள்ளுமாறு, திறந்த கைகளுடன் உலகம் என்னை வரவேற்று நின்றது. நான் என் முதலடியை எடுத்து வைத்தபோது, நான் என் பின்னால் விட்டுவிட்டு வந்திருந்த குகையிலிருந்து ஒரு பலத்த அழுகைச் சத்தம் கேட்டது. என் முதுகெலும்பு சில்லிட்டது, ஆனாலும் அந்த நாற்றமடித்தக் குகையின் ஆழங்களிலிருந்து எழுந்து வந்த, ஆன்மாவைத் துளைத்தெடுத்த அந்த முதியவரின் அழுகையொலி என் காதுகளில் விழாமல் இருப்பதற்கு என் காதுகளை மூடக் கடுமையாக முயற்சித்தவாறே நான் தொடர்ந்து நடந்தேன்.

"நான் என்ன காரியம் செய்துவிட்டேன்?!" என்று அந்தப் பைத்தியக்கார முதியவர் தொடர்ந்து ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தார். அந்த முதியவர் பிரதிநிதித்துவப்படுத்திய உலகத்தையும் அவலமான சத்தங்களையும் என் மனத்திலிருந்து விரைவில் நான் ஒதுக்கித் தள்ளினேன். அதைப் பற்றி நான் நீண்டகாலமாக மறந்து போனேன். ஆனால் அது என் தூக்கத்தில் வந்து மீண்டும் என்னைத் துரத்தியது. ஆனால் அது நெடுங்காலம் கழித்து நடந்த விஷயம். நான் இப்போது என்னையே முந்திக் கொண்டு ஓடிக் கொண்டிருக்கிறேன்.



# 6

# தேவர்களின் கோர தாண்டவம்

பத்ரன்

இந்த முட்டாள்களின் யுத்தங்களில் நானும் ஒருவனாகக் கடந்த ஒருசில வருடங்களாகச் சண்டையிட்டு வந்திருந்தேன். மகாபலியின்கீழ் நான் ஆறு வருடங்கள் சண்டையிட்டேன். பிறகு எனது சொந்தக் குழுவை உருவாக்க முயற்சித்துத் தோற்றுப் போனேன். அதன் பிறகு சுமாலியின்கீழ் நான் சண்டையிட்டேன். நான் ஒரு மிகப் பெரிய போர்வீரனோ அல்லது ஒரு தலைசிறந்த நிர்வாகியோ அல்ல. மென்மையான கைகளைக் கொண்ட, குள்ளமான, குண்டான, ஒரு சாதாரண மனிதன் நான். ஒரு காய்கறி வியாபாரி, ஒரு மாட்டு வண்டிக்காரன், சந்தையிலுள்ள ஒரு கைவண்டிக்காரன், அல்லது ஒரு வண்ணான்போல நான் மிகச் சாதாரணமானவன், அடையாளமற்றவன். உறுதியான பார்வையோ வில் போன்ற புருவங்களோ எனக்குக் கிடையாது. கொக்கிப் போன்ற மூக்கு எனக்கு இல்லை. என் உதடுகள் சேரும்போது ஓர் உறுதியான, நேர்க்கோட்டை உருவாக்குவதில்லை. என் கன்னங்களில் எடுப்பான எலும்புகள் கிடையாது. எனக்குப் பிளவு

நாடி கிடையாது. என் வாழ்வில் முன்பு எனக்கு வேறொரு பெயர் இருந்தது, ஆனால் இப்போது பத்ரன் என்று மட்டுமே மக்கள் என்னை அறிந்துள்ளனர்.

எனக்கு ஒருபோதும் பெரிய லட்சியங்கள் இருந்ததில்லை. பூரண நதியின் கரையில் அமைந்த எனது விவசாய நிலத்தை நான் பராமரித்து வந்தேன். அங்கு சில மிளகுக் கொடிகளும், ஒருசில தென்னை மரங்களும் இரண்டு மாடுகளும் இருந்தன. என் மனைவியோடும், துறுதுறுப்பான எனது மூன்று வயது மகளோடும் நான் மகிழ்ச்சியாக இருந்தேன். என் கிராமம் சிறியதாக இருந்தாலும், ஒரு புனிதத் தோப்பு, ஒரு சிறிய சிவன் கோவில், ஒரு கள்ளுக் கடை, ஒரு சிறிய பள்ளிக்கூடம் ஆகியவை உட்பட எல்லாமே அதில் இருந்தது. கட்டுமான வேலை, விவசாயம் போன்ற அடிப்படைக் கைத்தொழில்களும், கணிதம் மற்றும் ஒருசில அடிப்படைப் பாடங்களும் அப்பள்ளியில் கற்றுக் கொடுக்கப்பட்டன. அங்கு ஓர் இன்ப விடுதியும் இருந்தது. தன்னை ஒரு மருத்துவர் என்று கூறிக் கொண்ட ஒரு போலி மருத்துவரும், எங்களிடமிருந்து பணத்தைப் பறித்த ஒரு பூசாரியும் இருந்தனர். எங்கள் எருமைகளோடு நாங்களும் சேர்ந்து குளித்த ஒரு பொதுக் குளமும் அங்கு இருந்தது. நான் என் தந்தையைப்போலவே வாழ்ந்தேன். அவர் தனது தந்தையைப்போல வாழ்ந்திருந்தார். என் குழந்தைகளும் என்னைப்போல வாழ்வார்கள். அவர்கள் அதே தெருவில் வளர்ந்து கொண்டு, அதே குளத்தில் குளித்துக் கொண்டு, கிராமத்திலிருந்த அதே கருப்பழகிகளிடம் காதல் வயப்பட்டுக் கொண்டு, திருமணம் செய்து குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு, அமைதியாக மடிந்து போவார்கள். ஒருசிலர் அவர்கள் மரணத்திற்காக வருந்தக்கூடும், ஆனால் உலகம் அவர்களது மரணத்தால் எள்ளளவும் பாதிக்கப்படாது.

என் வாழ்க்கை எந்த சுவாரசியமான நிகழ்வுகளும் இன்றி, வெறுமனே ஒரு முற்றுப்புள்ளியுடன் முடிந்து போயிருக்கும். ஆனால் தேவர்களின் வருகை எல்லாவற்றையும் மாற்றியது. அவர்கள் எங்கள் கிராமத்திற்கு வந்து எங்களை உதைத்துக் கீழே தள்ளும்வரை அந்த ஜந்துக்கள் யாரென்று எங்களுக்குத் தெரியாது. அந்த நாட்களை நான் பீதியுடன் நினைத்துப் பார்க்கிறேன். எங்கள் நிலங்களிலிருந்து மிளகைச் சேகரித்துச் செல்வதற்காக அவ்வப்போது வந்த வர்த்தகர்களின் மூலமாக, தொலைதூரத்தில் நடந்து கொண்டிருந்த போரின் அதிர்வுகளை நாங்கள் செவிமடுத்தோம். தேவர்களின் படைகள் முதன்மை தேவனான விஷ்ணுவின்கீழ் எவ்வாறு ஒன்றுகூடின என்பது பற்றியும், மகாபலி எவ்வாறு போருக்குத் தயாராகிக் கொண்டிருந்தார் என்பது பற்றியும் அவர்கள் பேசினர். நாங்கள் இந்த வதந்திகளைப்

புறக்கணித்தோம். இவை முக்கியமற்ற விஷயங்கள். தொலைதூரத்தில் இருந்த ஏதோ ஓர் இடத்தில் நிகழ்ந்த விஷயங்கள் இவை. அரசர்கள் போரில் சண்டையிட்டு, தங்கள் ராஜ்யங்களை வெற்றி கொண்டனர் அல்லது இழந்தனர். நாங்கள் கீழ்நிலையைச் சேர்ந்தவர்கள். அரசியல் எனும் அசிங்கமான உலகத்தைப் பற்றி எங்களுக்கு எந்த அக்கறையும் இருக்கவில்லை. மகாபலி தோற்கடிக்கப்பட முடியாதவர் என்று நான் நம்பினேன். அவர் நியாயவான் என்றும், தனது மக்களை மனத்தில் கொண்டே அவர் ஆட்சி நடத்த முயற்சித்தார் என்றும் நான் நம்பினேன். எங்கள் கிராமத்துப் பெரியவர்கள் எங்களிடம் அப்படித்தான் கூறினார்கள். அந்தப் பெரியவர்களை நம்பாமல் இருப்பதற்கு எங்களிடம் எந்தக் காரணங்களும் இருக்கவில்லை. தொலைதூரத் தலைநகரத்தில் யார் ஆட்சி செய்தாலும் சரி, அது பற்றிக் கவலைப்படாமல், எங்களுக்குத் தெரிந்த ஒரே வழியில் நாங்கள் தொடர்ந்து வாழ்ந்து வந்தோம். அவர்கள் எங்களைத் தொந்தரவு செய்யாதவரை, அவர்கள் நல்ல ஆட்சியாளர்கள் என்று நாங்கள் எப்போதுமே கூறி வந்தோம்.

ஒரு புழுதியான மாலைப் பொழுதில், எங்கள் நிலங்களில் விவசாய வேலை பார்த்துவிட்டு நாங்கள் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது, ஒரு குதிரையின்மீது ஒரு தூதுவன் வந்தான். அவன் நெடுநெடுவென்று இருந்தான். அவனது முகம் முழுவதும் அம்மைத் தழும்புகளால் நிரம்பியிருந்தது. அவனது கண்களில் ஒரு வினோதமான பார்வை தென்பட்டது. நாங்கள் எங்கள் சிவன் கோவிலை அழித்துவிட்டு, விஷ்ணுவிடம் சரணடைய வேண்டும் என்று அவன் எங்களிடம் கூறினான். அவனை எங்கள் கிராமத்து மக்கள் நல்லவிதமாக நடத்தினர். ஆனால், சிவனின் கோபத்திற்கு அவன் ஆளாகக்கூடாது என்ற எச்சரிக்கையோடு அவனைத் திருப்பி அனுப்பி வைத்தனர். உண்மையில், அந்தத் தூதுவன் அங்கிருந்து திரும்புவதற்கு முன்பாக எங்களது சிவன் கோவிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்தான். அன்று முழுவதும் நாங்கள் தேவர்களைப் பற்றியே பேசினோம்.

பேரரசர் ஏற்கனவே தோற்றுப் போய், சுரங்கப் பாதை வழியாகத் தப்பிச் சென்றிருந்ததாகவும், விஷ்ணு எங்களது புதிய பேரரசராக ஆகியிருந்ததாகவும் சிலர் கூறினர். அத்தூதுவன்தான் தங்கள் கூற்றுக்கான ஆதாரம் என்று அவர்கள் முழங்கினர். வேறு சிலர், மகாபலி தேவகுலத்தோடு சேர்ந்துவிட்டிருந்ததாகவும், சிவன் கோவில்கள் அனைத்தையும் வேகவேகமாக விஷ்ணுவின் கோவில்களாக மாற்றிக் கொண்டிருந்ததாகவும் கூறினர். கள்ளுக் கடையில் ஒரு காரசாரமான விவாதம் நடந்தது. சிவ வெறியனான

ஒருவன் கோபத்தில் என் நண்பனின் மூக்கைப் பதம் பார்த்தான்.

எங்களது அமைதியான கிராமத்தில் கடைசியில் ஏதோ சில நடவடிக்கைகள் ஏற்பட்டிருந்தது குறித்து நான் மகிழ்ந்தேன். வழக்கமாக, உற்சாகமூட்டும் எதுவும் அங்கு நடைபெற்றதில்லை. ஒவ்வொரு புதிய நாளும் அடுத்த நாளைப்போலவே சலிப்பூட்டுவதாக இருந்தது. ஆனால் திடீரென்று ஓர் இரவு வேளையில், என் மனைவி என்னை எழுப்பினாள். அவள் என்னை என் தூக்கத்திலிருந்து முரட்டுத்தனமாக எழுப்பியதற்காகக் கோபம் கொண்டு, அவளது திமிருக்காக அவளை நையப்புடைக்க விரும்பினேன். பிறகு, எங்கள் படுக்கையறையில் அன்னியர்கள் இருந்ததை நான் கண்டேன். அப்போது எனக்குத் தோன்றிய முதல் சிந்தனை இப்போதுகூடத் தெள்ளத் தெளிவாகவும் விலாவாரியாகவும் என் நினைவில் உள்ளது: "அடக் கடவுளே! இவர்கள் சாப்பிடுவதற்கு நான் எதைக் கொடுப்பது? இரவு உணவுக்கான நேரம் கடந்து இவர்கள் வந்திருக்கிறார்களே!"

பிறகு உடனடியாக எனக்குக் கோபம் வந்தது. என் படுக்கையறைக்குள் அத்துமீறி நுழைவதற்கு அவர்களுக்கு என்ன துணிச்சல் இருக்க வேண்டும்? மெல்ல மெல்ல, பயம் என்னை ஆட்கொள்ளத் துவங்கியது. யார் இவர்கள்? இவர்கள் இங்கே ஏன் வந்தார்கள்? தினமும் என் வீட்டு முற்றத்தில் வெற்றிலைச் சாற்றைத் துப்பி, அதைத் தொடர்ந்து ஏற்பட்டச் சண்டைகளை மிகவும் ரசித்துக் களித்த எனது பக்கத்து வீட்டு முட்டாள் உயிரோடு எரிக்கப்பட்டிருந்தான். அவன் தன் வீட்டு முற்றத்தில் தகதகவெனப் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தான். தேவர்கள் எங்கள் கிராமத்தைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்திருந்தனர். ஒட்டுமொத்தக் கிராமமும் எரிந்து கொண்டிருந்தது. பயந்து போன கோழிக் குஞ்சுகளைப்போல மக்கள் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தனர். மக்கள் கண்டதுண்டமாக வெட்டப்பட்டதை நான் கண்டேன். வீடுகள் தீக்கு இரையாகின. பொன்னிறத் தோலையும் பேய் போன்ற முகங்களையும் கொண்ட, குதிரைகளின்மீது அமர்ந்து வந்த வீரர்கள், இகழ்ந்து கொண்டும் ஊளையிட்டுக் கொண்டும் மக்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தனர். அந்த அன்னியர்கள் இப்போது என் மனைவியின்மீது வஞ்சகப் பார்வையை வீசிக் கொண்டிருந்தனர். என் மனைவி நடுங்கிக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது.

நான் படுக்கையிலிருந்து எழுந்து, என் கைகளால் எனது குடும்பத்தாரைப் பாதுகாப்பாக அணைத்துக் கொண்டேன். அந்தப் பேய்கள் எகத்தாளமாகச் சிரித்தன. பிறகு என் வீட்டு வைக்கோல் கூரையை நெருப்பு விழுங்கத் துவங்கியதால் ஏற்பட்டச் சடசடவென்ற

சத்தம் என் காதுகளில் விழுந்தது. அப்போது, யாரோ ஒருவன் தனது வாளின் கைப்பிடியால் என்னைத் தாக்கினான். என் மூக்கின் மேற்பகுதி உடைந்தது. அதிலிருந்து புறப்பட்ட வலி என் உடல் நெடுகிலும் பரவியது. பதினைந்து வயதே நிரம்பிய ஒரு சிறுவன் என் மகளை அவளது கால்களைப் பிடித்துத் தூக்கி, ஒரு கந்தல் துணியை விசிறியடிப்பதைப்போல அவளைச் சுழற்றி, எங்கள் வீட்டு மண் சுவரின்மீது வேகமாகத் தூக்கி எறிந்தான். என் அன்பு மகளின் மண்டை உடைந்த சத்தத்தை நான் கேட்டேன். அவளது ரத்தமும் மூளையும் எங்கள் முகங்களின்மீது தெறித்தன. அந்தப் பேய்கள் மீண்டும் சிரித்தன. நான் செயலற்றவனாகத் தரையில் நிலைகுலைந்து விழுந்தேன். என் மனைவி மூர்ச்சையானாள். அந்தப் பேய்கள் அவளை இருட்டிற்குள் இழுத்துச் சென்று கொண்டிருந்தபோது, அவளை என் பக்கம் இழுப்பதற்காக அவளைப் பிடிக்க நான் தவிப்போடு முயற்சித்தேன். எனது விரல்நகங்கள் அவளது கையில் ரத்தக் கீறல்களை ஏற்படுத்தின, ஆனால் அவள் என் பிடியிலிருந்து நழுவிச் சென்றுவிட்டாள். நான் எழுந்து நிற்க முயற்சித்தேன். எல்லா இடங்களிலும் ரத்தம் சிதறிக் கிடந்தது. தரையில் கிடந்த ரத்தத்தில் என் கால்கள் வழுக்கின. என் கைகள் என் மகளின் சிதறுண்ட தலையைத் தொட்டன. நான் நடுங்கினேன். நான் அக்காட்சியைக் காண விரும்பவில்லை. நான் ஓர் ஆயுதத்தைத் தேடித் தட்டழிந்தேன். அந்தச் சண்டாளர்களின் மண்டைகளை உடைப்பதற்கு எனக்கு ஏதேனும் ஓர் ஆயுதம் தேவைப்பட்டது. நான் என் மனைவியைக் காப்பாற்றியாக வேண்டியிருந்தது.

என் மனைவியின் அலறல்கள், கிராமம் நெடுகிலும் எழுந்த அதே போன்ற அலறல்களுக்கு இடையே காணாமல் போயின. என் வலிமை முழுவதும் கரைந்து கொண்டிருந்தபோதுகூட, நான் தொடர்ந்து நடந்து, முற்றத்தில் இருந்த ஒரு தூணைப் பிடுங்கியெடுக்க முயற்சித்தேன். அது உறுதியான மூங்கிலால் ஆனது. ஆனால் என் துரதிர்ஷ்டம், அதை என்னால் தூக்கக்கூட முடியவில்லை. அதை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்தலாம் என்று நான் நினைத்திருந்தேன். என் மனைவியைக் கற்பழித்துக் கொண்டிருந்த பன்றியின்மீது நான் பாய்ந்தேன். வெற்றுக் கைகளால் என்னால் முடிந்த அளவுக்கு நான் சண்டையிட்டேன். ஆனால் தேவர்களின் படைவீரர்களுக்கு என்னால் ஈடு கொடுக்க முடியவில்லை. ஒரு நொடியில் நான் தரையில் கிடந்தேன். அவர்கள் என்னைத் துவைத்தெடுக்கத் துவங்கினர். திடமான மரக் காலணிகள் என் முகத்தின்மீது வேகமாகப் பதிந்தன. நான் மண்ணில் தரதரவென்று இழுத்துச் செல்லப்பட்டேன். அடிகள் சரமாரியாக என்மீது விழுந்தன.

நல்ல வேளையாக, ஒரு சண்டாளன் தனது வாளை என் வயிற்றுக்குள் ஆழமாகச் செருகினான். பிறகு எல்லாமே இருட்டாகிப் போனது.

நான் கண்விழித்தபோது இன்னும் இருட்டாக இருந்தது. எங்கு பார்த்தாலும் நெருப்பு ஜுவாலைகள் தெரிந்தன. ஆனால் அவை இப்போது மெல்ல மெல்ல அணைந்து கொண்டிருந்தன. தூரத்தில் நரிகள் ஊளையிட்டச் சத்தம் எனக்குக் கேட்டது. மயக்க நிலையில் இருந்த நான், இன்னொரு நாள் விடிந்திருந்ததாகவும், எழுந்து சென்று மாடுகளிடமிருந்து பால் கறக்க வேண்டும் என்றும் நினைத்தேன். தரை சௌகரியமாகவும் குளிராகவும் இதமளிப்பதாகவும் இருந்தது. பிறகு, உண்மை நிலவரம் மெல்ல மெல்ல எனக்குப் புலப்படத் துவங்கியது. நான் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தேன். வேதனை ஊசிகள் என் உடலின் பல்வேறு பாகங்களைக் குத்தியெடுத்தன. காய்ந்து போன ரத்தத்தால் என் கண்கள் மூடியிருந்தன. அவற்றைத் திறக்க நான் போராடினேன். தேவகுலத்தைச் சேர்ந்த சண்டாளர்கள் சிலர் ஒரு மரத்தின் கீழே அமர்ந்து மதுவருந்திக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன்.

என்னைச் சுற்றி என் கிராமமும் என் ஒட்டுமொத்த வாழ்க்கையும் சின்னாபின்னமாகச் சிதைந்து கிடந்தன. நான் எழுந்து நிற்க முயற்சித்தபோது ஒரு சருகு ஒடிந்தது. அதன் சத்தம் ஓர் இடி முழக்கம்போல எனக்குக் கேட்டது. அந்தப் பேய் உருவங்கள் திரும்பிப் பார்த்தன. நான் அசையாமல் உட்கார்ந்திருந்தேன். "நான் உயிரோடு இருப்பது அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. இப்போது அவர்கள் என்னைக் கொல்லப் போகிறார்கள்," என்று நான் நினைத்தேன்.

நான் உயிரோடு இருந்தேனா இல்லையா என்பதை அவர்கள் பரிசோதிக்கப் போவதில்லை என்று நான் ஒரு கணம் நினைத்தேன். அப்போது நான் அவனைப் பார்த்தேன். ஓர் உயரமான, கருத்த உருவம் என்னை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தது. அவன் தனது கையில் வாளை நீட்டிப் பிடித்திருந்தான். நான் பீதியடைந்தேன். அவன் சற்று அருகே வந்தபோது, என் மகளை என் வீட்டுச் சுவர் முழுவதும் சிதறடித்திருந்த அதே சிறுவன்தான் அவன் என்பதை நான் கண்டேன். நான் காத்திருந்தேன். ஆயுதமாகப் பயன்படுத்துவதற்கு ஏதேனும் அகப்படுமா என்று என் கைகள் துழாவிக் கொண்டிருந்தன. அச்சிறுவன் என் தலையின் அருகே நின்றான். பிறகு பின்னால் திரும்பிப் பார்த்தான். யாரோ அவனைக் கூப்பிட்டனர். அவன் தயங்கினான். ஆனால் அதற்குள், யாரோ விட்டுவிட்டுச் சென்றிருந்த ஒரு பழைய கத்தி என் கைக்கு அகப்பட்டது. கண்ணிமைக்கும் நேரத்தில் அதை நான் அச்சிறுவனின் வயிற்றில் செருகினேன். எந்தவிதமான சத்தமும்

ஏற்படுத்தாமல் அவன் என்மீது அமைதியாக விழுந்ததைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். நான் அவனது உடலிலிருந்து அக்கத்தியை உருவி, மீண்டும் அவனது கழுத்தின் பின்புறத்தில் செருகினேன்.

“ஏய்!” பின்னிப் பிணைந்திருந்த எங்களது உடல்களை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்த நபரின் குரலில் ஆச்சரியமும் அதிர்ச்சியும் வெளிப்பட்டன. மற்றவர்கள் அவனைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். நான் கொன்றிருந்த சிறுவன் மிகவும் கனமானவனாக இருந்ததால், அவனிடமிருந்து என்னைப் பிரித்தெடுப்பதற்கு நான் மிகவும் போராட வேண்டியிருந்தது. அவனுக்கு அடியிலிருந்து வளைந்து நெளிந்து நான் வெளிவருவதற்கு முன்பு நான் வியர்வையிலும் ரத்தத்திலும் குளித்திருந்தேன். உள்ளுணர்வு என்னைத் தூண்ட, எனது கிராமத்தின் எல்லையிலிருந்த காட்டை நோக்கி நான் ஓடினேன். என் உடலில் எஞ்சியிருந்த கொஞ்சநஞ்ச வலிமையைக் கொண்டு என்னால் முடிந்த அளவுக்கு அந்த அரக்கர்களிடமிருந்தும் எனது கடந்தகாலத்திடமிருந்தும் எனக்குப் பரிச்சயமாகியிருந்த என் வாழ்க்கையிடமிருந்தும் நான் ஓடினேன். எனது அன்புக்குரிய, பயனற்ற, அர்த்தமற்ற, வெறுமையான, மேலோட்டமான வாழ்க்கையைப் பாதுகாப்பதற்காக நான் தொடர்ந்து ஓடினேன். அழுகிக் கொண்டிருந்த எனது சகோதரர்கள் மற்றும் நண்பர்களின் சடலங்களைப் பற்றிக் கவலைப்படாமல், அவற்றின்மீது தடுமாறியபடி, பாதுகாப்பை நோக்கி நான் மூச்சிறைக்க ஓடினேன். தேவர்கள் துவக்கியிருந்த காரியத்தை முடிப்பதற்காக வரவிருந்த பிணந்தின்னிக் கழுகுகளின் வருகையை எதிர்பார்த்து அந்தச் சடலங்கள் காத்துக் கொண்டிருந்தன. மரணம் என்னைத் துரத்திக் கொண்டிருந்தது. என்னிடமிருந்து வேகமாக வழுக்கிச் சென்று கொண்டிருந்த எனது வாழ்க்கையை நான் துரத்திக் கொண்டிருந்தேன்.

ஒரு கூரான வேதனை என் தோள்களைத் துளைத்தது. புதிதாக ரத்தம் ஆங்காங்கே சொட்டத் துவங்கியிருந்ததை நான் கண்டேன். அது நான் சென்ற இடமெங்கும் ரத்தத்தால் ஒரு தடத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அந்தச் சண்டாளர்கள் என்னை நோக்கி அம்புகளை எய்து கொண்டிருந்தனர். அம்புகள் என் காதுகளைக் கடந்து வேகமாகச் சென்று, எரிச்சலூட்டும் சத்தத்துடன் மரங்களின்மீது குத்திட்டு நின்றன. அவற்றில் ஏதேனும் ஒன்று என் தொண்டையைத் துளைத்திருந்தால், இந்தக் கொடுங்கனவு சற்றுக் கருணைமயமாக முடிந்திருக்கும். பிறகு எல்லாமே மங்கியது. ஓர் எடையற்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. நான் மிதந்து கொண்டிருந்ததுபோல உணர்ந்தேன். ஒரு கரும்பச்சைக் கடல் என்னை விழுங்கிக் கொண்டிருந்தது. மரக் கிளைகள் என் முகத்தைத்

தாக்கின. நான் ஓர் இருண்ட பாதாளத்திற்குள் வேகமாக விழுந்து கொண்டிருந்தேன். மரணம் இப்படித்தான் இருக்குமா? அது இவ்வளவு திடீரென்று ஏற்படும் ஒன்றா? அது அன்பானதா? நான் என் முகத்தின்மீது உணர்ந்த வருடல்கள், எடையற்ற உணர்வு, மிதந்து கொண்டிருந்ததில் கிடைத்த இன்பம் . . . அடுத்தக் கணம் நான் நினைவிழந்தேன்.

எனக்கு நினைவு திரும்பியபோது, துர்நாற்றம் வீசிய ஒரு குகையில் ஒரு கரடுமுரடான கயிற்றுக் கட்டிலில் நான் படுத்துக் கிடந்தேன். என்னைச் சுற்றி எல்லா இடங்களிலிருந்தும் முனகல்கள் வந்து கொண்டிருந்தன. நான் எழுந்து உட்கார முயற்சித்தேன், ஆனால் வலியின் இரும்புக் கரம் மீண்டும் என்னைக் கட்டிலின்மீது தள்ளியது. நான் என் தலையை மெதுவாகத் திருப்பினேன். பலவிதமான அழுகிய நிலைகளில் பலர் அக்குகையைச் சுற்றிலும் கிடந்ததைக் கண்டு நான் நடுங்கினேன். நான் தேவர்களின் தயவில் உள்ள ஒரு போர்க் கைதியா? ஆனால் தேவர்கள் எப்போது கைதிகளைக் கொண்டு சென்றனர்? மேலும், நான் ஒரு சாதாரணக் குடிமகனே தவிர, ஒரு போர்வீரன் அல்லவே. என் தலைக்குள் வட்டமிட்டுக் கொண்டிருந்த பயனற்ற எண்ணங்களுக்கு அர்த்தம் கண்டுபிடிக்க முயற்சித்து நான் அங்கே படுத்துக் கிடந்தேன். மக்களின் பேச்சுக் குரல், காற்றில் மிதந்து என்னிடம் வந்தது. "இவர்களில் பாதிப் பேர் நிச்சயமாகப் பிழைக்க மாட்டார்கள். மற்றவர்கள் எழுந்து நடமாடுவதற்குக் குறைந்தபட்சம் ஒரு மாதம் ஆகக்கூடும்." அவர்கள் பேசிய மொழி நிச்சயமாக மிக உயர்ந்த நிலையிலான தமிழ்தான். கற்றறிந்த நகர மக்கள் பேசிய மொழி அது. நான் என் எதிரிகள் வசம் இருக்கவில்லை என்பதை நான் உணர்ந்தேன். ஆனால் அந்தக் குரல்கள் உறுதியாக இருந்தன. அவர்களின் இருண்ட கணிப்பு, விவரிக்க முடியாத பீதியை என்னுள் தோற்றுவித்தன. பூரண நதியின் கரைகளைத் தாலாட்டிச் சென்ற அலைகளைப்போல, எனது நினைவுகள், மயங்கிக் கிடந்த எனது மனத்திற்குள்ளிருந்து மெல்ல மெல்ல வெளிப்பட்டு எனது விழிப்புணர்வுக்குள் நுழைந்தன. அது எனக்கு ஏற்படுத்திய அளப்பரிய வேதனையால் நான் ஒப்பாரி வைக்கத் துவங்கினேன். மரணத்திற்காகக் காத்துக் கொண்டிருந்த பலரது தொண்டைகளில் இருந்து எழுந்த அழுகைகள் அந்தக் குகை நெடுகிலும் எதிரொலித்தன. அந்தக் கணங்களில் ஒன்றில்தான், என் மக்களின் அழுகைகளின் மத்தியில் நான் என்னை இழந்து, தேவர்களைப் பழிக்குப் பழி வாங்குவதென்று சபதம் செய்தேன்.



# 7

# தோற்றவர்களின் வீரக்கதை

ராவணன்

நாங்கள் இதேபோல நான்கு மாதங்களாக நடந்து வந்திருந்தோம். இப்போது களைப்பும் பசியும் எங்களை வாட்டின. நான் எனது வழக்கமான காலைச் சொற்பொழிவைத் துவக்கியபோது பெரும்பாலான வீரர்கள் சலிப்பாக இருந்ததை நான் உணர்ந்தேன். “அசுர சாம்ராஜ்யத்தின் இறுதி நிலைகுலைவிற்கும் தேவர்களின் வருகைக்கும் வழிவகுத்தப் பத்து அரசர்களின் யுத்தத்தைப் பற்றி இன்று நாம் கற்றுக் கொள்ளவிருக்கிறோம். துவக்கத்தில், தேவர்கள், பேராற்றல் பொருந்திய அசுர அரசர்களுக்கு வெறும் தொல்லையாக மட்டுமே இருந்தனர். எல்லைகளிலிருந்த நகரங்களில் அவர்கள் எப்போதேனும் அட்டகாசங்களைச் செய்தனர். ஆனால் இந்திரனின் வருகையால், விஷயங்கள் வேகமாக மாறத் துவங்கின. இந்திரனுக்கு இதில் எந்த இழப்பும் இருக்கவில்லை. அவனது காட்டுமிராண்டித்தனமான போக்கைப் பற்றிய கதைகள் அவனுக்கு முன்பே வேகமாக மக்களின் காதுகளை எட்டின. அவன் இமயமலைக்கு வடமேற்கில் இருந்த பல

சிறிய சாம்ராஜ்யங்களைச் சூறையாடி, பல அழகிய நகரங்களை எரித்துச் சாம்பலாக்கியிருந்தான். தான் கைப்பற்றிய நகரங்களில் இருந்த அனைத்து உயிரினங்களையும் கண்டதுண்டமாக வெட்டிக் கொலை செய்து, மிகப் பெரிய சிதைகளை அமைத்து, அச்சடலங்களுக்கு அவன் நெருப்பு மூட்டினான். தேவர்கள் அவற்றைச் சுற்றி ஆடிப் பாடினர்.

"இந்தக் காட்டுமிராண்டிகளுக்கு ஒரு பாடம் கற்பித்தாக வேண்டும் என்று அசுர அமைச்சரவையின் பத்து அரசர்களும் தீர்மானித்த நேரத்தில், கரடுமுரடான காந்தார மலையின் வறண்ட, பனி படர்ந்த முகடுகளில் இந்திரன் ஏற்கனவே தனது வில்வீரர்களுடன் தன்னை நிலைநிறுத்தியிருந்தான். எந்தவிதமான மிகப் பெரிய ராணுவமோ அல்லது மேன்மையான உத்தியோ இல்லாமலேயே, பேராற்றல் வாய்ந்த அசுரப் படை, தனது வீரர்களின் எண்ணிக்கையாலும் வலுவான கைகளாலும், அந்தக் கொள்ளைக்காரத் தேவர்களின் சிறிய படையைக் கசக்கிப் பிழிந்திருக்கும். ஆனால் காந்தார மலையின் குறுகலான பள்ளத்தாக்குகளில், அந்தப் பத்து அரசர்களின் யானைகளால் துளிகூடப் பயனிருக்கவில்லை. கங்கைக்கும் சிந்து நதிக்கும் இடையேயான பரந்த திறந்த வெளிகளில் சண்டையிட்டுத்தான் அசுரர்களுக்குப் பழக்கம். யானைப் படையும், கனமான உருட்டுக்கட்டைகள் மற்றும் வாள்களுடன்கூடிய காலாட்படையும், சரக்குப் பொருட்களைச் சுமப்பதற்கான வாகனங்களைப்போல இருந்த, கூடுதல் ஆயுதங்களையும் போர் வீரர்களையும் சுமந்து சென்ற ரதங்களும், பரந்த திறந்த வெளிகளுக்கு அதிகப் பொருத்தமானவையாக இருந்தன."

"அசுர அரசர்களை எதிர்கொள்வதற்குக் குறுகலான காந்தாரப் பள்ளத்தாக்குகளைத் தேர்ந்தெடுத்ததன் மூலம் இந்திரன் தனது புத்திசாலித்தனத்தை வெளிக்காட்டினான். அசுர அரசர்கள் தனது எல்லைக்கு வந்து, தனது வரையறைகளுக்கு உட்பட்டுச் சண்டையிடுவதற்காக இந்திரன் காந்தார மலையின் உச்சியில் காத்திருந்தான். யுத்தத்தின் முடிவு குறித்து அசுர அரசர்கள் மிகுந்த நம்பிக்கையோடு இருந்தனர். முன்பு வடக்கிலிருந்தும் வடமேற்கிலிருந்தும் வந்திருந்த பல பழங்குடியினரின் எண்ணற்றத் தாக்குதல்களை அவர்கள் எதிர்கொண்டிருந்தனர். இந்தச் சண்டையும் அவற்றைப் போன்ற ஒரு சாதாரணமான நிகழ்வுதான் என்று அவர்கள் கருதினர். எதிரிகளை நசுக்கி, அவர்களது தலைவனைச் சிறைபிடித்து, பெரிய மனத்துடன் அவனை மன்னித்து, பிறகு, வீழ்த்தப்பட்டவர்களுக்குத் தங்களது அரண்மனைகளில் மாபெரும் விருந்தொன்றைக் கொடுக்க வேண்டும், அவ்வளவுதான் என்று அவர்கள் நினைத்தனர்.

“ஆனால் தாங்கள் யாரை எதிர்கொள்ளவிருந்தோம் என்பது அந்தப் பாவப்பட்ட ஜீவன்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. இவன் ஒரு வித்தியாசமான எதிரி — வஞ்சகன், ஈவு இரக்கமற்றக் கொடுமைக்காரன், வெற்றி பெற வேண்டும் என்ற தணியாத வெறியைக் கொண்டிருந்தவன். நான் காந்தாரத்திற்கு ஒருபோதும் சென்றதில்லை, ஆனால் பிரம்மனிடமிருந்து நாங்கள் கற்றுக் கொண்ட விஷயங்கள், அந்தப் பத்து அரசர்களின் யுத்தம் நடந்த காலகட்டத்தில் அந்தப் பகுதி எப்படிப்பட்டதாக இருந்திருக்கும் என்பது குறித்த ஒரு தெளிவான யோசனையை எங்களுக்குக் கொடுத்தது.”

வடமேற்கு இந்தியாவின் ஓர் உத்தேசமான வரைபடத்தை மணலின்மீது நான் வரைந்திருந்தேன். எனது சகோதரர்களும், ஒரு திறன்மிக்க நடுத்தர வயதினனும் எங்களது வீரர்களின் தலைவனுமான பிரஹஸ்தனும் என்னைச் சூழ்ந்திருந்தனர். மற்ற வீரர்கள் அனைவரும் நான் கூறியதை உன்னிப்பாகக் கேட்டனர். தான் எனது தாயாரின் தூரத்து உறவு என்றும், எனவே தான் எங்களது மாமா என்றும் பிரஹஸ்தன் என்னிடம் கூறினான். ஆனால் அதை நான் நம்பவில்லை. மறுபுறம், என் தாயாருக்குப் பல அசுர உறவினர்கள் இருந்தனர். எனவே, அவன் கூறியது உண்மையாகவும் இருக்கக்கூடும். நான் அரசனாக ஆன பிறகு நான் அவனுக்குச் சிறப்புச் சலுகைகள் வழங்கப் போவதாக அவன் நினைத்திருந்தால், அவனுக்கு ஏமாற்றம்தான் மிஞ்சும். ஆனால் பிரஹஸ்தன் திறன் படைத்தவன். அவன் புத்திசாலியும்கூட. அவனை நான் மதித்தேன்.

சில வீரர்கள் பதற்றமடைந்ததை நான் கண்டேன். நான் அவர்களுக்காக வருந்தினேன். பெரும்பாலான வீரர்கள் ஏழைகளாகவும் படிப்பறிவற்றவர்களாகவும் இருந்தனர். வழக்கமான சமயங்களில் அவர்கள் விவசாயிகளாகவோ அல்லது கைவினைக் கலைஞர்களாகவோ அல்லது வியாபாரிகளாகவோ இருந்திருப்பார்கள். ஆனால் தங்கள் சொந்த ஊரிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட அவர்கள், தங்களது பழைய, பாதுகாப்பான உலகத்தைத் தங்களுக்குத் திருப்பித் தருவதாக வாக்களித்த, முன்பொரு காலத்தில் மாபெரும் ஆட்சியாளராகத் திகழ்ந்த பேரரசரின் பின்னால் வந்திருந்தனர். அவர்கள் நம்பிக்கைத் துரோகத்திற்கு ஆளாகினர். இப்போது, தாங்கள் இழந்திருந்த பூமியை மீண்டும் திரும்பப் பெறுவதற்காக, வீடுவாசலற்ற, இளம் துணிச்சல்காரனான என்னைப் போன்ற ஒருவன்மீது அவர்கள் தங்கள் நம்பிக்கையை வைத்திருந்தனர்.

“இந்திரன் துவக்கத்தில் தனது உத்தியில் ஒரு தவறு செய்திருந்தான். பிரம்யுத்த அரசனின் முக்கியத் துறைமுகமான, சரஸ்வதி நதிக்கரையில்

அமைந்த, பாதுகாப்புச் சுவர்கள் சூழ்ந்த பிரக்ய நகரத்தை அவன் தாக்கியிருந்தான். பிரம்யுத்த அரசன் எந்தவொரு காரியத்தையும் முழுமையாகச் செய்யும் குணம் படைத்தவனாக இருந்தான். அவன் தனது ஒட்டுமொத்தப் படையையும் இந்திரனுக்கு எதிராகச் செலுத்தினான். ஐநூறு யானைகள், கனத்த வாள்களையும் உருட்டுக்கட்டைகளையும் தாங்கிய பத்தாயிரம் காலாட்படையினர், எருதுகள் இழுத்துச் சென்ற ரதங்களில் ஐநூறு வில்வீரர்கள் ஆகியோர் அந்நகரச் சுவர்களைத் தாண்டிப் பாய்ந்தனர். இந்திரனிடம் 600 வில்வீரர்களைக் கொண்ட ஒரு சிறிய படை மட்டுமே இருந்தது. அவர்கள் அனைவரும் குதிரைகளில் வந்திருந்தனர். அவர்களில் இருநூறு பேரை நகரத்தின் முன்வாசலைத் தாக்குவதற்காக அனுப்பிவிட்டு, பின்வாசல் வழியாக அவன் அந்நகருக்குள் நுழைய முயன்றான். பிரம்யுத்தன் தனது நகரின் நான்கு கதவுகளையும் திறந்து வைத்து, பேராற்றல் வாய்ந்த தனது படையை நான்காகப் பிரித்து, நான்கு வாசல்களிலும் நிறுத்தினான். முன்வாசலில் அவனது படையினர் அதிக அளவில் குவிந்திருந்தனர். இந்தத் துணிச்சலான உத்தியைக் கண்டு இந்திரன் திகைத்தான். மூலையோடு மூலையாக ஒதுக்கப்பட்ட ஓர் எலியைப்போல, தேவர்களின் படை ஆக்ரோஷமாக எதிர்த்துச் சண்டையிட்டது. ஆனால் அசுரப் படையினரின் எண்ணிக்கை மிக அதிக அளவில் இருந்தது. மேலும், அகன்ற திறந்த வெளிகளில் அசுரப் படையினர் திறம்படச் செயல்பட்டனர். குதிரைகளின்மீது இருந்த தேவர்களை அசுரர்கள் சுலபமாகக் குறி வைத்துத் தாக்கினர். யானைகளின்மீது அமர்ந்து, எறிவேல்களையும் ஈட்டிகளையும் தேவர்கள்மீது அவர்கள் சரமாரியாகப் பொழிந்தனர். அசுரர்களின் வில்களிலிருந்து சீறிப் பாய்ந்த கனத்த அம்புகள், தேவர்களின் மார்புக் கவசங்களை வெறும் வெங்காயத் தோல்கள்போலத் தோன்றச் செய்தன. பின்வாங்குமாறு இந்திரன் தன் படையினருக்கு உத்தரவிட்டான். ஆனால் அவன் தன் வீரர்களை இப்படிப்பட்ட ஒரு சிக்கலான சூழ்நிலைக்குள் வழிநடத்தியிருந்த விதத்தால், அங்கிருந்து வெளியேறுவது அவர்களுக்குச் சாத்தியமில்லாத ஒன்றாகப் போனது. இந்திரனின் படையினரில் எண்பது சதவீதத்தினர் வெட்டிச் சாய்க்கப்பட்டனர். ஆனால் இந்திரன் தனது வாளைக் கொண்டு வீரமாகப் போரிட்டான். அவன் பிரம்யுத்தனைக் காயப்படுத்தவும் செய்தான்.

"தனது யானையின்மீதிருந்து கீழிறங்கி இந்திரனை எதிர்கொள்ளத் துணிந்தது பிரம்யுத்தனின் முட்டாள்தனம். பிரம்யுத்தன் இந்திரனோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தபோது, அசுரப் படையைச் சேர்ந்த

முட்டாள் வீரர்கள் அவர்கள் இருவரையும் சுற்றி வட்டமாக நின்று கொண்டு, கைதட்டி ஆரவாரம் செய்தனர். அவர்கள் இருவரின் வாள்களும் ஒன்றோடொன்று மோதிய ஒவ்வொரு முறையும் அசுரப் படையினர் மகிழ்ச்சிக் கூக்குரல் எழுப்பி ஆர்ப்பரித்தனர். தங்களை மகிழ்விப்பதற்கு ஏதோ ஒன்று நடத்தப்பட்டுக் கொண்டிருந்ததுபோல அவர்கள் நடந்து கொண்டனர். இந்திரனின் மேன்மையான வாள்வீச்சிற்குக்கூட அவர்கள் கைதட்டிப் பாராட்டுக்களைத் தெரிவித்தனர். பிரம்யுத்தன் விதிமுறைப்படிச் சண்டையிட்டான். அவனது பாதங்களின் அசைவு கச்சிதமாக இருந்தது. அவனது குத்துக்களும் ஊடுருவல்களும்கூடக் கச்சிதமாக இருந்தன. ஆனால் இந்திரன் தன் உயிருக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்ததால், விதிமுறைகளை உதாசீனப்படுத்தினான். யாரும் எதிர்பார்க்காத நேரத்தில், அவன் தனது கேடயத்தைக் கொண்டு தனது எதிரியின் கண்களில் மண்ணை வாரி எறிந்தான். அதே சமயத்தில், அவன் தனது வாளைக் கொண்டு திறமையாகத் தாக்கினான். மிகச் சிறந்த வாள்வீரனான பிரம்யுத்தன் அத்தாக்குதலில் இருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்காகக் குனிந்தான், ஆனால் அதற்குள் சற்றுத் தாமதமாகியிருந்தது. அவனது தோளில் ஒரு பலத்தக் காயம் ஏற்பட்டது. போர்க்களத்தில் அவன் மயங்கிச் சரிந்தான். திகைத்து நின்ற கூட்டத்தினரின் ஊடாக, இந்திரன், தனது வழியில் குறுக்கே நின்ற மூன்று வீரர்களைத் தனது வாளால் குத்திவிட்டுத் தனது குதிரையில் வேகமாக ஏறி அங்கிருந்து பறந்தான். பிழைத்துக் கிடந்த அவனது படையினரில் சிலர் அவனைப் பின்தொடர்ந்தனர்."

பிரஹஸ்தன் இடையில் குறுக்கிட்டு, "வீழ்ந்துவிட்ட ஓர் அரசனின் கதையை என்னிடம் கூறுங்கள். தனது முட்டாள்தனத்தை மிஞ்சி நின்ற வறட்டுப் பெருமையால் வீழ்ந்த ஒருவனை நான் உங்களுக்குக் காட்டுகிறேன்," என்று கூறினான்.

நான் மேலும் தொடர்ந்தேன். "வீழ்ந்துவிட்ட அரசன், நடந்ததை மறந்துவிட்டு மீண்டும் தனது ராஜ்யத்தை ஆளச் சென்றிருந்தால், இந்திரனின் தாக்குதல், வரலாற்றில் ஒரு சாதாரணக் குறிப்பாக மட்டுமே இருந்திருக்கும். ஆனால், பிரம்யுத்தனின் அகங்காரம் காயப்பட்டிருந்தது. இந்திரனால் கைப்பற்றப்பட்டப் பிற நகரங்களைச் சேர்ந்த மக்களுக்கு நேர்ந்த கதி தனது நகர மக்களுக்கு நேரவில்லை என்று பிரம்யுத்தன் ஆறுதலடையவில்லை. எதிரி அரசனிடம் தனிப்பட்ட முறையில் தனக்கு ஏற்பட்டத் தோல்வியைத் தவிர, தேவர்களின் படையைத் தனது படை முற்றிலுமாகச் சிதைத்திருந்தது குறித்து அவன் திருப்தி அடையவில்லை. அவனது கர்வத்திற்கு பலத்த அடி விழுந்திருந்தது. பண்டைய அசுர

அரசர்களுக்கு ராஜ்யத்திற்கான தெய்வீக உரிமை இருக்கவில்லை. அரசர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டத் தலைவர்கள். நகரத்திலேயே மிக அதிகத் திறமை வாய்ந்த, மிகப் பெரிய வீரர்கள் அவர்கள், அவ்வளவுதான்."

என் தொண்டை வறண்டு போயிருந்தது. அருகிலிருந்த ஒரு மண் கலயத்திலிருந்து நான் தண்ணீர் பருகியபோது, பிரஹஸ்தன் தொடர்ந்தான்: "மக்கள் மத்தியில் தனது பிரபலத்துவம் அடி வாங்கியிருந்ததையும், தான் மீண்டும் அரசனாகத் தேர்ந்தெடுக்கப்பட வாய்ப்பில்லை என்பதையும் பிரம்யுத்தன் தனது உளவாளிகளின் மூலம் தெரிந்து கொண்டான். தனது கௌரவத்தை மீண்டும் நிலைநாட்ட அவன் உடனடியாக ஏதேனும் ஒரு பெரிய விஷயத்தைச் செய்தாக வேண்டியிருந்தது. இப்படிப்பட்ட எண்ணங்கள் ஓர் அரசனை அழிக்கக்கூடிய தன்மை கொண்டவை. போரில் தனிப்பட்டத் தோல்விகளோ அல்லது வெற்றிகளோ இருக்கக்கூடாது. உனது படை வென்றுவிட்டால், உன் எதிரி உன்னைவிடச் சிறந்த வாள்வீரனா இல்லையா என்பது ஒரு பொருட்டல்ல. ஆனால் அசுரர்கள் தங்கள் அகங்காரங்களைத் தங்களது மார்புக் கவசங்களின்மீது அணிந்திருந்தனர். எனவே அவர்களால் தெளிவாகச் சிந்திக்க முடியாமல் போனது. அவர்களது உத்திகள் தொடர்ந்து தவறாகப் போகத் துவங்கின."

பார்வையாளர்கள் இப்போது மிக உன்னிப்பாகவும் மிகக் கவனமாகவும் காதுகொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. இதனால் மனமகிழ்ந்த நான் தொடர்ந்தேன். "பிரம்யுத்தன் தனது உளவாளிகளை எல்லாத் திசைகளிலும் அனுப்பி வைத்தான். எப்படியாவது இந்திரனைக் கண்டுபிடித்து அவனைப் பழிக்குப் பழி வாங்க அவன் துடித்தான். அவன் அசுர அரசர்களின் பொதுக்குழுவையும் கூட்டினான். இந்தியாவின் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த, சம அதிகாரத்தைக் கொண்டவர்கள் அடங்கிய ஒரு குழு அது. தண்ணீர்ப் பங்கீடு, சுங்க வரிகள், சந்தை வரிகள், சாலை வரிகள், துறைமுகக் கட்டணங்கள் ஆகியவற்றைத் தீர்மானிப்பதற்காகவும், இசைக் கலைஞர்கள் மற்றும் கைவினைக் கலைஞர்களை பரிமாற்றம் செய்து கொள்வது குறித்துப் பேசுவதற்காகவும் வருடத்திற்கு ஒருமுறை இந்தப் பத்து அரசர்களும் ஒன்றுகூடினர். அதிலிருந்த ஏதாவது ஒரு ராஜ்யத்தின் பாதுகாப்பிற்கு மிகப் பெரிய ஓர் அச்சுறுத்தல் ஏற்பட்டிருந்தாலொழிய, திடீர்ச் சந்திப்புக்கூட்டங்கள் அரிதாகவே கூட்டப்பட்டன. பொதுவாக, ராஜாங்கங்களிடம் படைகள் எப்போதும் தயார் நிலையில் இருந்தன.

ஆனால் வேகமான கலாச்சார வளர்ச்சியின் காரணமாக, அவர்களது சண்டையிடும் ஆற்றல் பெருவீழ்ச்சி கண்டிருந்தது.”

இந்நிலத்தில் ஏதோ மர்மம் இருந்தது. வெற்றி கொண்ட மாபெரும் படைகள் தங்கள் குறிக்கோளை அடைந்து, சிந்து மற்றும் கங்கை நதிகளுக்கு இடையேயான சமவெளியில் குடியமர்ந்தபோது, அவர்கள் தங்களது போர்த்திறனை இழந்து, பெண்மையில்பு கொண்டவர்களாக ஆனார்கள். மிகப் பெரிய காட்டுமிராண்டிகளாக இருந்த அவர்களை, இந்நிலம், வாழ்வின் அருமையான விஷயங்கள் குறித்து ஆர்வம் கொண்ட மென்மையான ஜந்துக்களாக மாற்றியது. அசுரர்களுக்கு முந்தைய அனைத்து மாபெரும் படைகளுக்கும் இவ்வாறே நிகழ்ந்தது. தற்போது, வடக்கில் உள்ள தேவர்களின் சாம்ராஜ்யங்களுக்கும் இது நிகழ்ந்து கொண்டிருப்பதை நீங்கள் காணலாம். அசுரர்களுக்கும் இதுதான் நிகழ்ந்தது. ஆனால், நாடு நெடுகிலும் அதிகாரம் செலுத்திய மாபெரும் வீரர்களின் வம்சாவழியினர் தாங்கள் என்று அரசர்கள் தங்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தனர். தங்களது ராணுவ பலம் குறித்து அவர்கள் மலையளவு நம்பிக்கை கொண்டிருந்தனர். இசைக் கலைஞர்கள், நடன மங்கையர், மாயவித்தைக்காரர்கள், சிறு மந்திரவாதிகள், கழைக்கூத்தாடிகள், சமையற்காரர்கள், பூ விற்பனையாளர்கள், வியாபாரிகள், பூசாரிகள் ஆகியோர் அடங்கிய ஒரு மிகப் பெரிய கூட்டத்தை அவர்களது படைகள் உள்ளடக்கியிருந்தன. அவர்களுடைய படைவீரர்களின் எண்ணிக்கையைப் பற்றிக் கதைகளில் கூறப்பட்டத் தகவல்கள் தவறாக இருந்தன. பத்தாயிரம் பேர் அடங்கிய ஒரு படையில் ஒருசிலரே உண்மையான போர்வீரர்களாக இருந்தனர். மற்றவர்கள் இவ்வீரர்களோடு போர்க்களங்களுக்குச் சென்றனர், தங்களுக்குத் தாங்களே இடைஞ்சல்களை ஏற்படுத்திக் கொண்டனர்.

“இந்திரனின் தாக்குதல் திகைப்பூட்டுவதாக இருந்தது என்ற கருத்தைப் பொதுக்குழுக் கூட்டத்தில் கலந்து கொண்ட அரசர்களில் ஆறு பேர் ஒத்துக் கொள்ளவில்லை. எந்தவொரு செழிப்பான நகரமும் தாக்குதலுக்கு ஆளாகக்கூடும் என்று அவர்கள் நம்பினர். ஆனால் மற்றவர்களை ஒப்புக் கொள்ளச் செய்யும் விதத்தில் பிரம்யுத்தன் தனது வாதங்களை முன்வைத்தான். சிந்து சமவெளியின் எல்லையோர நகரங்களைச் சூறையாடிய பழங்குடியினர், ஒரு பிரபலமான சாம்ராஜ்யத்தின் தலைநகரைத் தாக்குவதற்கு ஒருபோதும் துணிந்ததில்லை என்று அவன் கூறினான். இக்குழு, தானியக்களஞ்சியங்களைச் சூறையாடி, தங்கள் கைக்கு அகப்பட்டத்தை எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடித்த வழக்கமான குழுவைப்போலத் தோன்றவில்லை என்று பிரம்யுத்தன் நினைத்தான். உண்மையில்,

இம்மக்கள் அசாதாரணமான துணிச்சலையும் சூழ்ச்சியையும் வெளிப்படுத்தியிருந்தனர். நகரங்களைச் சூறையாடுவதற்கு அவர்கள் ஒரு வினோதமான விலங்கைப் பயன்படுத்திக் கொண்டிருந்தனர். அந்த விலங்குகளின் துல்லியமான செயல்பாட்டைக் கண்டு அசுரப் படையினர் ஆச்சரியமடைந்தனர். காளை மாடுகளைப் போலன்றி, அவை வேகமாகவும் துடிப்பாகவும் இருந்தன. இந்த எதிரி அழிக்கப்படாதவரை, தமது மக்கள் இந்தக் காட்டுமிராண்டிக் கும்பலின் நிரந்தர அச்சுறுத்தலின்கீழ் வாழ வேண்டியிருக்கும் என்று பிரம்யுத்தன் வாதிட்டான். ஆனாலும், அன்றிரவு எந்தவொரு தீர்மானமும் எட்டப்படாமல் செயற்குழுக் கூட்டம் அடுத்த நாளுக்கு ஒத்தி வைக்கப்பட்டது. மறுநாள் காலையில் சந்திப்புக்கூட்டம் தொடர்ந்தபோது, வடமேற்குப் பிராந்தியத்திற்குரிய அசுரத் தலைவனின் தூதுவன் ஒருவன் அந்த முகாமிற்குள் நுழைந்து, குதிரைகளில் வந்த பழங்குடியினர் முல்தமுகா எனும் நகரத்தைத் தீயிட்டுக் கொளுத்தியிருந்ததாக அறிவித்தபோது, சந்திப்புக்கூட்டம் தடைபட்டது. கங்கை நதியின் முகத்துவாரத்தில் துவங்கி, காந்தாரத்திற்கும் அதற்கு அப்பாலும் நீண்டு பரவியிருந்த பிரபலமான வர்த்தகப் பாதைகளில் ஒன்றில் அமைந்த ஒரு மாபெரும் நகரம் அது. அந்தத் தாக்குதல் எல்லாவற்றையும் தலைகீழாக மாற்றியது. தாங்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து ஒரு மிகப் பெரிய படையை உருவாக்கி, குதிரைகள்மீது வந்த அந்தப் பழங்குடியினரை மட்டுமன்றி, எகிப்து, மெசபடோமியா போன்ற பெருநகரங்களுக்கான முக்கிய வர்த்தகப் பாதைகளைத் தாக்கிய சிறிய கடற்கொள்ளையர்களையும் வழிப்பறிக் கும்பல்களையும் முற்றிலுமாக அழிப்பதென்று அந்தப் பத்து அசுர அரசர்களும் தீர்மானித்தனர்.

“செயற்குழு மூன்றாவது நாளாகச் சந்தித்து, போர்த் திட்டங்களை உருவாக்கியது. பிரம்யுத்தன் படைத்தளபதிக்கான பொறுப்பை ஏற்றான். அதிக அனுபவசாலி என்பதோ, அதிகத் திறன் படைத்தவன் என்பதோ அவனுக்கு அந்தப் பொறுப்பைப் பெற்றுக் கொடுத்திருக்கவில்லை. மாறாக, பரிச்சயமில்லாத பிராந்தியத்திற்குள் எதிரியைப் பின்தொடர்ந்து செல்வது குறித்து மறுசிந்தனை எதுவும் இல்லாமல் இருந்தவன் அவன் ஒருவன் மட்டும்தான் என்பதே அவன் படைத்தளபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குக் காரணம். பெரும்பாலான ராஜ்யங்கள் சௌகரியமாக இருந்தன. யாரும் போரை விரும்பவில்லை. வர்த்தகம் கொழித்துக் கொண்டிருந்தது. வாழ்க்கை பொதுவாக நல்லவிதமாகச் சென்று கொண்டிருந்தது. தங்கள் காளை மாடுகளில் சிவனைப் பின்தொடர்ந்து சென்று, அழுக்கான இடங்களில்

படுத்துத் தூங்கி, வாரத்திற்கு ஒரு முறை உணவருந்திய துணிச்சலான, பழைய வீரர்கள் அடங்கிய குழு காணாமல் போயிருந்தது. வாழ்க்கையின் இனிமையை ருசித்திருந்த இந்த மக்கள், எதற்கும் துணிந்த பழங்குடியினருடன் நீண்டகாலப் போர்களில் ஈடுபட விரும்பவில்லை.

“உருட்டுக்கட்டைகள், ஈட்டிகள், வளைவான வாள்கள் ஆகியவற்றைத் தாங்கிய வீரர்களும் வில்வீரர்களும் அடங்கிய, ஒரு லட்சத்திற்கும் அதிகமானோரை உள்ளடக்கிய ஒரு படையுடன் பிரம்யுத்தன் சிந்து நதிக்கரையிலிருந்து புறப்பட்டான். பத்தாயிரம் மேளக்காரர்கள், புல்லாங்குழல் இசைக்கலைஞர்கள், நடனக் கன்னிகள், முகாம்களை உருவாக்கியவர்கள், அசுரர்களின் வீரத்தைப் பதிவு செய்து அவர்களது துணிச்சலைப் பற்றிய பாடல்களை இயற்றிய கவிஞர்கள், அசுரப் படைகளோடு வழக்கமாக உடன் சென்ற, சமுதாயத்தின் பிற அடிமட்ட நபர்கள் ஆகியோர் புடைசூழச் சென்ற அப்படையில், சுமார் பத்தாயிரம் யானைகளும், காளைமாடுகள் இழுத்துச் சென்ற மூவாயிரம் ரதங்களும் அடக்கம். பேராற்றல் வாய்ந்த இந்தப் பெருங்கூட்டம், சிந்து நதியையும் சரஸ்வதி நதியையும் கடந்து, சிறு கொள்ளையர்களையும் சூறையாடிய பழங்குடியினரையும் தேடத் துவங்கியது. இந்தப் படை மிகவும் வெற்றிகரமாகத் தொடர்ந்து பீடுநடை போட்டுச் சென்றது. வழியில் இருந்த கிராமங்களுக்கு இடையே தகவல்களைச் சுமந்து சென்ற தூதுவர்களுடன் பிரம்யுத்தன் அற்புதமான கருத்துப் பரிமாற்றத்தையும் தொடர்பையும் கொண்டிருந்தான். எதிரிகள் ஒளிந்திருந்த இடங்களைப் பற்றிய தகவல்களை உளவாளிகள் அசுர அரசர்களுக்குக் கொடுத்தபோது, எதிரியின் உளவாளிகள் நடமாடியதாக அசுரர்கள் சந்தேகித்தக் கிராமங்களின்மீது அந்த அசுரப் படை ஆச்சரியமூட்டும் விதத்தில் வேகமாகவும் ஈவு இரக்கமின்றியும் தாக்குதல் நடத்தியது.

“பிரம்யுத்தன் வெற்றி போதையில் மிதந்தான். வடமேற்குப் பகுதியில் இருந்த காந்தார மலைகளை நோக்கி இந்திரன் ஒரு சிறிய படையுடன் தப்பித்து ஓடிக் கொண்டிருந்ததாக அவனது உளவாளிகள் அவனிடம் தெரிவித்தனர். பிரம்யுத்தனின் கவிஞர்கள் அவனைப் பற்றிப் புகழ்ந்து பாடினர். இது, தயக்கத்துடன் அவனுடன் வந்து கொண்டிருந்த மற்ற ஒன்பது அரசர்களின் அகங்காரத்தைச் சீண்டியது. பிரம்யுத்தனின் சேவையில் தாங்கள் கீழ்நிலைத் தலைவர்களாக ஆக்கப்பட்டிருந்ததை அவர்கள் கண்டனர். பிரம்யுத்தனின் கர்வமும் தலைக்கனமும் நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே இருந்தன. துவக்கத்தில் அவன் மற்ற அரசர்களின் அறிவுரையைப் புறக்கணித்தான். பின்னாளில், அவர்களைப் பற்றி

அவன் வெளிப்படையாகவே விமர்சித்தான், அவர்களது ராணுவ உத்திகளைக் கேலி செய்தான்.”

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, பிரம்யுத்தனின் படை, பேரழிவை நோக்கி மகிழ்ச்சியாக அணிவகுத்துச் சென்ற பாதையை, நிலத்தில் நான் வரைந்திருந்த கரடுமுரடான வரைபடத்தில் நான் என் வீரர்களுக்குச் சுட்டிக்காட்டினேன். அவர்கள் அதை ஆர்வமாகக் குனிந்து பார்த்தனர்.

அப்போது என் தொண்டை மீண்டும் வறண்டு போயிருந்ததாலும் எனக்குச் சிறிது ஓய்வு தேவைப்பட்டதாலும், பிரஹஸ்தன் தனது கரகரப்பான குரலில் பேச்சைத் தொடர்ந்தான். “ஹிந்துகுஷ் மலைகளின் அடிவாரத்தில் அமைந்த கரடுமுரடான சமவெளிகளை அடைந்த நேரத்தில், அசுரப் படை பிளவுபட்டிருந்தது. இந்தத் தாக்குதல் முயற்சி கைவிடப்படாவிட்டால் தங்களது படைகளைக் கூட்டிக் கொண்டு தாங்கள் திரும்பிச் செல்லப் போவதாக மூன்று அரசர்கள் அச்சுறுத்தினர். இந்த நேரத்திற்குள், பிரம்யுத்தன், எகிப்து உட்பட மேற்குப் பகுதி முழுவதையும் கைப்பற்றி, உலகின் பேரரசனாகத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்வதைப் பற்றிப் பேசத் துவங்கியிருந்தான். அந்த மூன்று அரசர்களும் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தபோது, அவர்கள் நம்பிக்கைத் துரோகம் செய்ததாகக் கூறி அவர்களைக் கைது செய்து, ஒரு சிறிய விசாரணைக்குப் பிறகு எல்லோர் முன்னிலையிலும் பிரம்யுத்தன் அவர்களைக் கொன்றான். இது அசுரப் படையினரிடையே ஒரு நடுக்கத்தை ஏற்படுத்தியது. அவர்களது மன உறுதி ஏற்கனவே அதளபாதாளத்தைத் தொட்டிருந்தது. அவர்கள் கற்பனை செய்திருந்ததைப் போல இல்லாமல், இந்தத் தாக்குதல் முயற்சி மிகவும் கடினமானதாக இருந்தது. மிக நீண்ட தூரம் அவர்கள் நடந்து வந்திருந்தது அவர்கள்மீது எதிர்மறையான தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. விரைவில், கொல்லப்பட்ட அந்த மூன்று அரசர்களின் படைவீரர்களில் பெரும்பான்மையினர் எதிர்ப்புத் தெரிவித்தனர், வேறு பலர் அங்கிருந்து ஓடிவிட்டனர். பிரம்யுத்தன் அவர்களை மூர்க்கத்தனமாகத் தாக்கினான். அவன் தனது சொந்தப் படையினரில் ஒன்பதாயிரம் பேரைக் கொன்று குவித்ததற்காக அவனது கவிஞர்கள் அவனைப் புகழ்ந்து பாடினர். பிரம்யுத்தன் ஒரு பெரிய குழுவை அனுப்பி வைத்து, படையைவிட்டு ஓடியவர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வந்து, கேலிக்கூத்தான விசாரணை ஒன்றை நடத்தி, அவர்களைக் கொன்றான். இந்த நேரத்தில் சில போர்வீரர்கள் பாரபட்சமின்றி இருந்தனர். இந்தக் கிறுக்குத்தனமான உட்சண்டையின் மூலம் அசுரப் படை தானே தன்னை வீழ்த்திக் கொண்டுவிடும்போலத்

தோன்றியது. இறுதியில், தன்னுடன் இருப்பதற்கு மீதி ஆறு அரசர்களையும் பிரம்யுத்தன் ஒப்புக் கொள்ள வைத்தான். படைக்குள் எழுந்த எதிர்ப்பு, மாபெரும் சிரமத்துடன் ஒடுக்கப்பட்டது. ஆனால் அதற்குள், பொன்னான நேரத்தை அவன் இழந்திருந்தான். இந்திரனையும் அவனது படையையும் தேடி அந்த மலை நாட்டிற்குள் ஆழமாக ஊடுருவிச் செல்வதென்று அவன் தீர்மானித்தபோது, ஏற்கனவே குளிர்காலம் வந்துவிட்டிருந்தது.

"காசி அரசனான விபோகன், கோடைக்காலம் வரும்வரை காத்திருக்குமாறு பிரம்யுத்தனிடம் கூறினான். ஆனால் பிரம்யுத்தன் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. தன்னால் முடிந்த அளவுக்கு விரைவாக இந்திரனைச் சிறைபிடித்துத் தனது தலைநகருக்கு இழுத்துச் செல்ல அவன் விரும்பினான். உலகின் சக்கரவர்த்தியாக ஆகப் போவதாக மார்தட்டிக் கொண்டிருந்த அந்த அகம்பாவக்காரன் செங்குத்து மலைகளுக்கும் பனிக்கும் அடிபணிய மறுத்தான். தனக்குக் கிடைத்தச் சிறந்த ஆலோசனைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு, வடமேற்கை நோக்கி நடைபோடும்படி பிரம்யுத்தன் தனது படைக்கு உத்தரவிட்டான். குறுகலான மலைப் பாதைகள் வழுக்கலாக இருந்தன. யானைகள் கால் வழுக்கி மலையிடுக்குகளிலோ அல்லது பாதையிலோ விழுந்தன. இதன் காரணமாக, அவற்றுக்குப் பின்னால் இருந்தவர்களால் பல மணிநேரம் முன்னேறிச் செல்ல முடியவில்லை. காளை மாடுகள் பூட்டப்பட்ட ரதங்களும் யானைகளும் அந்தக் குறுகலான மலைப் பாதையில் கைவிடப்பட வேண்டிய நிலை ஏற்பட்டது. காலாட்படை அணிவகுப்புப் பிளவுபட்டு, வீரர்கள் தங்கள் மனம் போன போக்கில் நடந்தனர். கனமான கோடாலிகளையும் உருட்டுக்கட்டைகளையும் வில்களையும் சுமப்பது அவர்களுக்குக் கடினமாக இருந்தது. வெப்பமான சமவெளிகளிலிருந்து வந்திருந்த பெரும்பாலான படைவீரர்கள், உறைய வைத்தக் கடுங்குளிருக்குப் பழக்கப்பட்டிருக்கவில்லை. அவர்களுக்கு இவ்வளவு பிரச்சனைகள் போதாதென்று, படையினருக்குத் தேவையான உணவுப் பொருட்களை பிரம்யுத்தன் காளை மாட்டு வண்டிகளில் வைத்திருந்தான். இந்த வண்டிகளையும் அந்த வீரர்கள் மலைமேல் இழுத்து வர வேண்டியிருந்தது. நடன மங்கையர், இசைக் கலைஞர்கள், பிரம்யுத்தனின் துதிபாடிகள், மாயவித்தைக்காரர்கள், பூசாரிகள் ஆகியோர் அடங்கிய ஒரு கூட்டம் ஒரு தொல்லையாக ஆனது. முன்னேற்றத்தை இக்கூட்டம் பெருமளவுக்குப் பாதித்தது."

பிரஹஸ்தனுக்கு ஓய்வு கொடுத்துவிட்டு, கதையை அங்கிருந்து நான் தொடர்ந்தேன். "பார்வைக்குச் சிக்காத இந்திரனையும் அவனது வீரர்களையும் தேடி அக்கூட்டம் ஒரு மாதத்திற்கும் மேலாக நடந்தது.

பலர் அப்படையிலிருந்து தப்பி ஓடினர். மற்றவர்கள் உடல் உபாதைகளாலும் அதீதக் களைப்பாலும் இறந்தனர். உணவுப் பொருள் பெருமளவில் காலியாகியிருந்தது. அவ்வப்போது கிடைத்த மலையாடுகளும் சிறு பறவைகளும் மட்டுமே அவர்களுக்கு இரையாகின. வேறு எதையும் அவர்களால் சாப்பிட முடியவில்லை. பாதிக்கும் மேற்பட்ட யானைகள் இறந்தன. பசியோடும் களைப்போடும் இருந்த படைவீரர்களுக்கு உணவளிப்பதற்காகக் காளை மாடுகள் கொல்லப்பட்டன. அசுரப் படை தனது கனத்த ஆயுதங்களில் பெரும்பாலானவற்றை இழந்திருந்தது. சமுதாயத்தின் கடைநிலை மக்கள் ஏற்கனவே பின்தங்கியிருந்தனர். வீரர்களின் வரிசை ஏழு மைல்களுக்கும் அதிகமாக நீண்டிருந்தது. கந்தலான ஆடை அணிந்திருந்த, அழுக்காக இருந்த அக்குழுவினர், தங்களது கனமான ஆயுதங்களைச் சுமந்து கொண்டு, மெதுவாகவும் வேதனையோடும் அந்தக் கொடுமையான மலைகளின் சிக்கலான பாதைகளில் தங்களைச் சிரமப்பட்டு இழுத்துச் சென்றனர். கடந்த ஒரு வருடத்தில், தேவர்கள் படையைச் சேர்ந்த ஒருவனைக்கூட அவர்கள் பார்த்திருக்கவில்லை. இந்த நீண்ட நடைபயணத்தின்போது, அசுரர்கள், தங்களுக்கு எதிராகவும் நெடுஞ்சாலை வழிப்பறிக் கொள்ளையர்களுக்கு எதிராகவும் மட்டுமே தங்களது ஆயுதங்களை உயர்த்தியிருந்தனர். இதற்குள், பிரம்யுத்தனும் தன் தவறைக் கண்டுபிடித்திருந்தான். அவன் தனது அழகிய தலைநகரின் சௌகரியத்திற்குத் திரும்பிச் செல்ல விரும்பினான். ஆனால் அவனது படை, திக்குத் தெரியாத காட்டில் விடப்பட்டது போலிருந்தது. பல கணவாய்கள் பனிச்சரிவுகளாலும் நிலச்சரிவுகளாலும் இப்போது மூடப்பட்டிருந்தன. சிறிய அசுரத் தலைவர்களிடம் உதவியும் உணவுப் பொருட்களும் கேட்டு, பிரம்யுத்தன், சாத்தியமிருந்த அனைத்துத் திசைகளிலும் தூதுவர்கள்மேல் தூதுவர்களாக அனுப்பினான். ஆனால் அவர்களில் ஒருவன்கூடத் திரும்பி வரவில்லை. இந்தத் தூதுவர்கள் இந்திரனின் படையால் தடுத்து நிறுத்தப்பட்டதாக நம்பப்படுகிறது. ஒரு குளிரான, பனிமூட்டமான காலை வேளையில், அசுரப் படையினரின் மன உறுதி படுகுழியில் இருந்த நேரத்தில், இந்திரனின் குதிரைப்படை வீரர்கள், தீக்கங்குகளுடன்கூடிய அம்புகளை அவர்கள்மீது சரமாரியாக எறிந்தனர். பிரம்யுத்தனின் படை ஒரு குறுகலான மலையிடுக்கில் சிக்கியிருந்தது. அவனது வீரர்கள் ஒருவர்பின் ஒருவராக வரிசையாக அணிவகுத்து நின்றது பத்து மைல் தூரத்திற்கும் அதிகமாக நீண்டிருந்தது.”

எனது கருத்தை வலியுறுத்துவதற்கு, வரைபடத்தில் ஒரு

குறிப்பிட்டப் புள்ளியைச் சுற்றி நான் ஒரு வட்டத்தை வரைந்தேன். “எண்ணிக்கையில் வலிமையாக இருந்த அசுரப் படையினரை, ஒருபுறம் ஆழமான பள்ளத்தாக்குகளையும் மறுபுறம் உயரமான மற்றும் கரடுமுரடான பாறைகளையும் கொண்டிருந்த அந்தக் குறுகலான மலையிடுக்கில் இந்திரன் சிக்க வைத்தான். துடிப்பான குதிரைகளின்மீது அமர்ந்து வந்த அவனது வில்வீரர்கள், நிராதரவாக நின்ற அசுரக் கூட்டத்தினர்மீது அம்புகளைச் சரமாரியாக எய்தனர். ஐம்பதாயிரம் வீரர்களைக் கொண்டிருந்த அசுரப் படையை எதிர்ப்பதற்கு இந்திரனிடம் ஐநூறு வீரர்களே இருந்தனர். ஆனால் காட்டுத்தனமான துவம்சம் துவங்கியது. அசுரர்களின் கனமான அம்புகளால் புவியீர்ப்பு சக்தியைத் தாண்டிச் சென்று மலையின் உயரமான பகுதியில் தங்களை நிலைப்படுத்தியிருந்த தேவப் படையினரைத் தாக்க முடியவில்லை. கோடாலிகளும் உருட்டுக்கட்டைகளும் ஈட்டிகளும் பயனற்றுப் போயின. மேலேயிருந்து உருண்டு விழுந்து, வழியில் எண்ணற்றோரை நசுக்கிக் கொண்டு வந்த பெரும் பாறைகளை அசுரர்களால் தடுத்து நிறுத்த முடியவில்லை. தாங்கள் இறப்பதற்கான முறை வருவதற்காகக் காத்திருக்க மட்டுமே அவர்களால் முடிந்தது. எதிர்த்துச் சண்டையிடுவதற்கு ஒரு சிறு முயற்சி மேற்கொண்ட பிறகு, அசுரப் படையினரில் பெரும்பாலானோர், ஓர் ஒழுங்குமுறையற்ற விதத்தில் பின்வாங்கத் துவங்கினர்.

“இத்தனைத் தவறுகளைச் செய்திருந்தும், பிரம்யுத்தன் துணிச்சலாக இருந்தான். மலையின் மேலே தேவப் படையின் வில்வீரர்கள் பெருமளவில் குவிந்திருந்த இடத்திற்குப் பாறைகளில் ஏறிச் செல்ல முயற்சித்ததன் மூலம், புறமுதுகிட்டு ஓடிக் கொண்டிருந்த தனது படைவீரர்களின் உற்சாகத்தையும் நம்பிக்கையையும் உயர்த்துவதற்காகப் பிரம்யுத்தன் முயற்சித்தான். அவன் தனது வில்லை உயர்த்தி, திறமையாக அம்புகளை எய்யத் துவங்கினான். அவன் எய்த அம்புகள் ஆச்சரியமூட்டும் விதத்தில் துல்லியமாக ஒருசில தேவ வில்வீரர்களைத் தாக்கியது. தங்களது அரசனின் துணிச்சலைக் கண்டதும், நூற்றுக்கணக்கான அசுர வில்வீரர்கள் அவனைப் பின்தொடரத் துவங்கினர். ஆனால் பிரம்யுத்தனுடைய படையின் பெரும்பகுதி அங்கிருந்து தப்பி ஓடியிருந்தது. பேரழிவான இந்த யுத்தத்தைக் கைவிடுவதற்குப் பிரம்யுத்தனை ஒப்புக் கொள்ள வைக்க முயற்சித்த, துணிச்சலான அந்தக் காசி அரசனான விபோகனைத் தவிர, மற்ற ஐந்து அரசர்களும் தங்கள் படைவீரர்களோடு தப்பி ஓடிவிட்டனர்.

“அதைத் தொடர்ந்து ஏற்பட்ட அமளிதுமளியில், ஆயிரக்கணக்கானவர்கள் பிறரது கால்களுக்கடியில் சிக்கி மிதிபட்டு

இறந்தனர். பலர் குறுகிய மலையிடுக்குகளில் விழுந்து இறந்தனர். பிரம்யுத்தனும் விபோகனும் ஒருசில ஆயிரம் வீரர்கள் அடங்கிய சிறு குழுவினருடன் சிரமப்பட்டு மலைமீது ஏறினர். மனத்தில் உறுதி கொண்டிருந்த இந்தச் சிறிய குழுகூட, தேவர்களின் படையோடு ஒப்பிடுகையில் அதிக எண்ணிக்கையைக் கொண்டிருந்தது. ஆபத்தைப் புரிந்து கொண்ட இந்திரன், சண்டையை வேகமாகத் தானே முன்னின்று நடத்தினான். மீண்டும் இந்திரனும் பிரம்யுத்தனும் போர்க்களத்தில் ஒருவருக்கொருவர் எதிரெதிரே நின்றனர். சிரமப்பட்டு மேலே ஏறி வந்து கொண்டிருந்த விபோகன், இந்திரனிடமிருந்து பின்வாங்குமாறும், சண்டையை முன்னின்று நடத்துவதற்குத் தன்னை அனுமதிக்குமாறும் பிரம்யுத்தனைப் பார்த்துக் கத்தினான். ஆனால் கடந்த முறை இந்திரனோடு சண்டையிட்டபோது தனக்கு ஏற்பட்ட அவமானத் தோல்விக்குப் பழி தீர்ப்பதற்கு இப்போது பிரம்யுத்தனுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்திருந்தது. அவன் இந்திரனை மூலையோடு மூலையாக ஒடுக்கினான். தனது எதிரியான பிரம்யுத்தனின் வாளின் சக்திவாய்ந்த குத்துக்களையும் வெட்டுக்களையும் சமாளிக்க முயாமல் இந்திரன் விரைவில் களைத்துப் போனான். ஆனால், அசுரர்களைப் போலன்றி, தங்களது தலைவனின் வாழ்க்கை ஆபத்தான நிலையில் இருந்தபோது, தேவர்கள் ஒரு வட்டமாக நின்று கொண்டு எதிராளியின் வாள்திறத்தைக் கைதட்டிப் பாராட்டவில்லை. புத்திசாலித்தனமாகக் குறி வைக்கப்பட்ட ஓர் அம்பு, பிரம்யுத்தனின் கழுத்தின் வழியாக நுழைந்து அவனது வலது கண்ணின் வழியாக வெளியே வந்தது. இந்த அதிர்ச்சி விபோகனைச் செயலிழக்கச் செய்தது. அந்த ஒருசில நொடி இடைவெளியில், தேவர்களின் ஏழு வாள்கள் விபோகனைப் பல துண்டுகளாக வெட்டிச் சரித்தன.

“பிரம்யுத்தன் கூடுதலாக ஒருசில கணங்கள் சண்டையிட்டான், ஆனால் இந்திரன் தனது வாளை வீசித் தனது எதிரியின் தலையை லாவகமாகக் கொய்தான். அவனது வெற்றிக் கூப்பாடு, எஞ்சியிருந்த அசுர வீரர்களிடையே அதிர்ச்சி அலைகளை அனுப்பியது. தனது எதிரிகள் அனைவரும் பார்க்கும் விதத்தில், இந்திரன், பிரம்யுத்தனின் துண்டிக்கப்பட்டத் தலையைத் தனது வாளின் முனையில் தூக்கிப் பிடித்தான். அசுரப் படையினர் அங்கிருந்து வேகவேகமாக ஓட்டமெடுத்தனர். ஒருசில ஆயிரம் பேர் தப்பியோட இந்திரன் அனுமதித்தான். பிறகு எஞ்சியிருந்த ஏராளமான துரதிர்ஷ்டசாலிகளைக் கூறு போடுவதற்கு அவன் அவர்களை நெருங்கினான். அந்த துரதிர்ஷ்டமான நாளன்று ஆயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். ஒழுங்குமுறையின்றித் தறிகெட்டுத் தப்பியோடிக் கொண்டிருந்த அசுரப்

படையை, தேவர்களின் படை, மலைகளுக்கு வெளியே துரத்தியது. தேவர்களுக்கு அப்பகுதி நன்றாகப் பரிச்சயமானதாக இருந்தது. தேவப் படையினரால் குதிரைகளில் துரத்தி வரப்பட்ட அசுரப் படையினர் சமவெளியை அடைந்திருந்த நேரத்தில், அவர்களில் இருநூறு பேர் மட்டுமெ எஞ்சியிருந்தனர். தப்பிச் சென்றிருந்த ஐந்து அரசர்களும் திரும்பி வந்து, ஓர் ஒழுங்குமுறையுடன்கூடிய எதிர்த்தாக்குதலை நிகழ்த்தியிருக்கலாம். குதிரையில் வந்த தேவப் படையினர் இப்போது திறந்த வெளியில் இருந்தனர். அசுரர்களின் கனத்த ஆயுதங்களால் அவர்களை எளிதாக வீழ்த்தியிருக்க முடியும். அதனால்தான், அசுரர்களின் கனமான அம்புகள் நெருங்க முடியாத, ஆனால் தனது லேசான அம்புகள் அசுரர்களை எளிதில் தாக்கக்கூடிய ஒரு பாதுகாப்பான தூரத்தில் இந்திரன் சாமர்த்தியமாகத் தனது படையை நிலைப்படுத்தி இருந்தான். விரைவில், புதையல்களைத் தேடி அலைந்து கொண்டிருந்தவர்களும் அசுரப் படையிலிருந்து தப்பி ஓடியவர்களும் இப்போது தேவர்களின் படையில் சேர்ந்தனர். எப்போதும் வெற்றியாளர்களின் அணியில் இருப்பதை விரும்புகின்ற வகையைச் சேர்ந்த மக்கள் இவர்கள். தேவர்களிடம் தோற்றப் பிறகு அசுரர்கள் தப்பியோடிக் கொண்டிருந்ததாகவும், தேவர்கள் அவர்களைத் துரத்திக் கொண்டிருந்ததாகவும் ஒரு செய்தி எல்லா இடங்களிலும் பரவியது. முன்பு அசுரப் படைகள் வடக்கு நோக்கி வீறுநடை போட்டு வந்து கொண்டிருந்ததைக் கேள்விப்பட்டு ஓடி ஒளிந்திருந்த கொள்ளையர்களும் பிற பழங்குடியினரும் இப்போது வெளியே வந்து தேவர்களோடு சேர்ந்து கொண்டனர்.

"தேவர்களின் பலத்தை நேரடியாக எதிர்கொண்ட முதல் கூட்டம், தங்களது படைக்கு நேர்ந்த கதியைப் பற்றி எதுவும் தெரியாமல் வீடு திரும்பிக் கொண்டிருந்த மேளக்காரர்கள், நடனக் கன்னியர், மற்றும் பிற பயனற்ற நபர்கள் அடங்கிய கூட்டம்தான். முதலில், தப்பியோடிக் கொண்டிருந்த அசுரப் படையினர் அவர்களை முந்திச் சென்றனர். பிறகு, தேவர்களின் பெருங்கூட்டம் அவர்களைக் கபளீகரம் செய்தது. தேவப் படையினரின் கூட்டம் கட்டுக்கடங்காமல் இருந்தது. இந்திரனோடு முதலிலிருந்தே இருந்து வந்த நூறு வீரர்களைத் தவிர, வேறு எவரும் அவனது கட்டளையைக் காதுகொடுத்துக் கேட்கவில்லை. அக்கூட்டத்தில் இருந்த பெரும்பான்மையினர் தொல்பழங்குடியினரும் கொள்ளையர்களுமே. அவர்கள் ஒவ்வொரு கிராமத்திலும் கொள்ளையடித்தனர், வீடுகளைச் சூறையாடினர், தங்கள் வழியில் இருந்த நகரங்களைச் சூறையாடினர், ஆயிரக்கணக்கான சாதாரண மக்களை வெட்டிக் கொன்றனர், பல பேராகச் சேர்ந்து பெண்களைக்

கற்பழித்தனர். விரைவில், வீழ்த்தப்பட்ட அசுரப் படை தங்களை வந்தடைவதற்கு முன்பாகவே, பெருநகரங்களில் இருந்த குடிமக்கள் தங்கள் உயிருக்காக ஓட்டமெடுக்கத் துவங்கினர். பெரும் கலவரங்கள் வெடித்தன. நாடெங்கும் பெருங்குழப்பம் தலைவிரித்து ஆடியது.

“பிறகு, தங்கள் ஓட்டத்திற்கிடையே அசுரப் படையும் நகரங்களை எரித்தன. இல்லையென்றால் அவை தேவர்களின் கைகளில் விழுந்துவிடுமோ என்று அவர்கள் பயந்தனர். பொதுமக்களும் ஆயுதங்களைக் கையிலெடுத்தனர். தப்பியோடிக் கொண்டிருந்த அசுரப் படையினர் தங்களது சொந்த நகரங்களைச் சூறையாடுவதைத் தடுத்து நிறுத்துவதற்காக, சிறு நகரங்களின் படையினர் பொதுமக்களோடு சேர்ந்து கொண்டனர். உள்நாட்டுக் கலவரம் வெடித்தது.

“ஐந்து அசுர அரசர்களும் தேவர்களின் படையோடு சேர்ந்து கொண்டு, பிரம்யுத்தன் உட்பட மீதி ஐந்து அரசர்களையும் கொலை செய்திருந்ததாகவும் வதந்திகள் பரவின. விரைவில், அசுர ராஜ்யங்கள் தமக்குள் போரிட்டுக் கொண்டிருந்தன. இதற்கிடையே, தேவர்கள் வலுப்பெற்றுக் கொண்டிருந்தனர். அசுரர்களின் தோல்விக்குப் பிறகு இந்திரனின் அந்தஸ்து அதிகரித்திருந்தது. விரைவில், அலைந்து திரிந்து கொண்டிருந்த மற்ற தேவர்களும் அவனோடு சேர்ந்து கொண்டனர். அசுர சாம்ராஜ்யம் அவர்கள் கண் முன்னால் துண்டு துண்டாகக் கூறு போடப்பட்டுக் கொண்டிருந்தது.

“உச்சகட்ட வளர்ச்சியை அடைவதற்கு ஓராயிரம் ஆண்டுகள் தேவைப்பட்ட அந்த மாபெரும் சாம்ராஜ்யம் நொறுங்கி விழுவதற்கு வெறும் ஏழு மாதங்களே பிடித்தன. அசுர சாம்ராஜ்யம் போதுமான அளவு பலவீனமாக இருந்ததாக இந்திரன் நம்பியபோது, அவன் அசுரர்களின் பாதுகாப்புக் கூட்டைத் தகர்த்தெறிந்து உள்ளே பாய்ந்தான். போரிட்டு வெற்றி கொள்ளப்பட்ட ஒரு நிலத்தை எவ்வாறு நடத்த வேண்டும் என்பது, போர்க்கலை மற்றும் அரசாட்சி பற்றிப் பயிலும் மாணவர்கள் அனைவரும் கற்றுக் கொள்ள வேண்டிய ஒரு மாபெரும் பாடம். தான் உருவாக்கியுள்ள நகரங்கள், தான் உற்பத்தி செய்துள்ள புத்தகங்கள், தான் வளர்த்து வந்துள்ள கலைஞர்கள் மற்றும் கைவினைஞர்கள், தான் கட்டியெழுப்பியுள்ள கோவில்கள் ஆகியவைதான் ஒரு நாகரீகத்திற்குப் பெருமை சேர்க்கிறது. ஆனால் ஒரு நகரைக் கைப்பற்றுகின்றவனின் முதல் வேலை, நாகரீகத்தின் அடையாளச் சின்னங்களாக விளங்குகின்ற இந்தக் கட்டமைப்புகள் அனைத்தையும் முடிந்த அளவுக்கு பலமாகத் தாக்கி வீழ்த்துவதுதான். இந்திரன் இதை மிகவும் நேர்த்தியாகச் செய்தான். தன்னால் இயன்ற அனைத்தையும் அவன் தரைமட்டமாக்கினான், நூலகங்களைக்

கொளுத்தினான், கவிஞர்களையும் கட்டடக் கலைஞர்களையும் வெட்டிச் சாய்த்தான், கோவில்களை இடித்துத் தள்ளினான், பெண்களையும் குழந்தைகளையும் வெட்டி வீழ்த்தினான். விரைவில், அசுரர்கள் தங்கள் பொக்கிஷங்களாகப் பாதுகாத்து வந்திருந்த அனைத்தையும் இந்திரன் அழித்தான். அங்கிருந்துதான் அவனுக்குப் ‘புரேந்திரன்’ அல்லது ‘நகரங்களை அழிப்பவன்’ என்ற பெயர் வந்தது. விரைவில், அசுரர்கள், பூமிக்கு அடியில் ஒளிந்து கொள்ள வேண்டிய நிலை உருவானது. அவ்வப்போது சில எதிர்ப்புகள் உருவானபோதிலும், பெரும்பாலும் அவை ஆற்றலற்றவையாகவே இருந்தன. அசுர நாகரீகத்தின் எலும்புக்கூடுகளை அடித்தளமாக வைத்து இந்திரன் ஒரு சாம்ராஜ்யத்தைக் கட்டியெழுப்பினான். சுமார் முந்நூறு வருடங்களாக, அந்நாடு, இந்திர வம்சத்தின் ஒட்டுமொத்தக் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தது.

“இந்தக் காலகட்டத்தின்போது, சமவெளிகள் தேவர்களை அமைதிப்படுத்தின. கலையும் கலாச்சாரமும் மீண்டும் ஆளுமை செலுத்தத் துவங்கின. தேவர்கள் தங்களது மூர்க்கத்தனத்தை இழக்கத் துவங்கியிருந்தனர். அவர்களும் சௌகரிய சுகங்களுக்கு அடிமையானார்கள். அசுரர்கள் உருவாக்கிய நகரங்களோடு ஒப்பிடுகையில் மிகவும் தரம் குறைந்தவையாக இருந்தாலும்கூட, மாபெரும் நகரங்கள் நிர்மாணிக்கப்பட்டன. இரண்டாவது இந்திர அரசனின் ஆட்சிக் காலத்தின்போது ஒருங்கிணைப்புச் செயல்முறை துவங்கியது. அசுரர்களின் முக்கியக் கடவுளாக இருந்த சிவனை தேவர்களும் ஏற்றுக் கொண்டனர். அசுரப் பழங்குடியினரின் மாபெரும் குருவான பிரம்மாவும் கடவுளாக ஏற்றுக் கொள்ளப்பட்டார். பின்னாளில் வந்த இந்திர அரசர்கள் பலவீனமானவர்களாக இருந்ததால், மூன்றாவது இந்திரனின் படையின் பிரதானத் தளபதியாக இருந்த விஷ்ணுவின் கைகளில் அவர்கள் வெறும் பாவைகளாக ஆயினர். பதினோராவது இந்திரனின் ஆட்சியின் முடிவில், விஷ்ணு குலம் அந்த ஒட்டுமொத்த நாட்டையும் ஆண்டு கொண்டிருந்தது. பத்து அசுர அரசர்களின் காலத்திற்கு முன்பு, மேல் இமயத்தில் அமைந்த கைலாச மலையருகே, அசுரப் பழங்குடியினத்தைச் சேர்ந்த சிவ அரசர்கள் எவ்வாறு ஒரு சிறிய சக்தியாக இருந்தார்களோ, அதேபோல பெயருக்கு மட்டுமே இந்திர அரசர்கள் ஆட்சி பீடத்தில் இருந்தனர்.

“விஷ்ணுக்கள் கிட்டத்தட்ட 700 வருடங்களாக இந்திரனின் பெயரில் ஆண்டனர். இந்திரனின் பெயரையும் தேவர்களின் கலாச்சாரத்தையும் பராமரிப்பதில் அவர்கள் வெற்றிகரமாகத் திகழ்ந்தனர். ஒரு சமுதாய ஒழுங்கைப் பராமரித்தவர்கள் அவர்கள் என்று

பிராமணர்கள் அவர்களைப் புகழ்ந்தனர். விரைவில், பல சுவாரசியமான எண்ணங்கள் ஒன்றோடொன்று கலந்தன. முதலில் அறிவு கைவரப் பெற்ற பிரம்மா படைப்பாளராகக் கொண்டாடப்பட்டார். அமைப்புமுறையின் பாதுகாவலராக விஷ்ணு கருதப்பட்டார். இதில் வேடிக்கை என்னவென்றால், ஓர் ஒட்டுமொத்த சாம்ராஜ்யத்தைக் குழிதோண்டிப் புதைத்த இந்திரனை விட்டுவிட்டு, ஒரு சாம்ராஜ்யத்தைக் கட்டியெழுப்பிய சிவன், அழிப்பவராகப் பார்க்கப்பட்டார். இந்தியாவின் மூன்று கடவுள்கள், அதாவது, மும்மூர்த்திகள் அவர்கள்தாம். இக்குடும்பங்களின் முதல் உறுப்பினர்களும் கடவுள்களாகக் கொண்டாடப்பட்டனர். தேவர்கள் இன்றும் அவர்களை அவ்வாறே போற்றுகின்றனர். நாம் சிவனையும் பிரம்மனையும் கடவுள்களாக ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் தேவர்களின் படைத்தளபதியாகவும், ஒரு தேவ அரசனின் வெறும் சேவகனாகவும் இருந்த விஷ்ணுதான் மேன்மையான கடவுள் என்று கருதப்பட வேண்டும் என்று பிராமணர்கள் வலியுறுத்துவதை ஏற்றுக் கொள்வது கடினமாக இருக்கிறது. தோற்கடிக்கப்பட்ட அசுரர்கள் விஷ்ணுவை எதிர்த்து மாபெரும் போராட்டங்களை நடத்தினர். பழைய அசுர சாம்ராஜ்யத்திற்கு இணையாகப் பரந்து விரிந்த ஓர் அசுர சாம்ராஜ்யத்தை நிறுவி, ஒரு குறுகிய காலத்திற்கு அதைப் பாதுகாப்பதில், இரட்டைச் சகோதரர்களான ஹிரண்யகசிபு மற்றும் ஹிரண்யக்ஷன், மகாபலி போன்ற மாபெரும் மனிதர்கள் வெற்றி கண்டனர். ஆனால் பிந்தைய காலங்களில், அசுர சாம்ராஜ்யம் பத்து ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டதுபோலவே, தேவ சாம்ராஜ்யமும் பல குறுநிலங்களாகச் சிதறின.

“ஒரு சாம்ராஜ்யம் நொறுங்கி, பல சிறிய மாநிலங்கள் முளைக்கும்போது, ஒரு புதிய சாம்ராஜ்யத்தை உருவாக்குவதற்கான வேளை வந்துவிட்டது என்பதை நாம் அறிகிறோம். மத்திய இந்தியாவைச் சேர்ந்த வாலி போன்ற அரைச்சாதியினராலும், சாயத்ரி மலையைச் சேர்ந்த கார்த்த வீர்யார்ஜுனன் போன்ற தொல்பழங்குடி இனத்தோராலும், தேவ சாம்ராஜ்யத்திலிருந்து மிகப் பெரிய ராஜ்யங்களை உருவாக்க முடியும் எனும்போது, வரலாறு முழுமையான வட்டமாக ஆகியுள்ளதை நாம் அறிகிறோம். வலிமை பொருந்தியிருந்த, ஆனால் பிளவுபட்டுக் கிடந்த அசுர சாம்ராஜ்யத்தை எதிர்ப்பதற்கு இந்திரனிடம் ஒரு சிறிய படை மட்டுமே இருந்தது. நமது மக்களின் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்த அந்தப் போரிலிருந்து நீங்கள் பாடங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள் என்று நான் நம்புகிறேன். இந்திர அரசர்களுக்குச் சரியான பாடம் புகட்ட வேண்டிய வேளை

வந்துவிட்டது.

“பேராற்றல் வாய்ந்த விஷ்ணு குடும்பமும் உட்சண்டையின் மூலம் தன்னைப் பலவீனப்படுத்திக் கொண்டுள்ளது என்பதை நினைவில் கொள்ளுங்கள். சரயு நதியருகே அமைந்த அயோத்தி எனும் சிறிய சமஸ்தானத்தை ஆளுகின்ற ஒரு சிறிய குழு மட்டுமே குறிப்பிடும்படியான மதிப்புக் கொண்டிருக்கிறது. அதன் தற்போதைய அரசனான அனர்னியனின் ஓர் உறவினனான தசரதன் என்ற இளவரசன்தான், ஒரு தேவ சாம்ராஜ்யத்தை உருவாக்குவதற்கான திறன் படைத்தவன் என்று நமது அன்புக்குரிய பேரரசர் மகாபலி நம்பினார். எனவே, நாம் நமது குதிரைகளையும் ஆயுதங்களையும் பெறும்வரை தொடர்ந்து போராட வேண்டும். பிறகு, வரலாற்றின் பாடங்களைத் தேவர்கள் மறந்துவிட்டிருப்பதை நாம் அவர்களுக்கு நினைவுபடுத்தலாம்.”

எங்கள் முன்னே குழுமியிருந்த கூட்டத்திற்கு இந்தச் சொற்பொழிவு சற்று அதிகக் கனமானதாக இருந்தது. ஜீரணிக்கப்பட முடியாத வரலாற்றுச் சம்பவங்களுக்குப் பதிலாக, அவர்களால் பின்பற்றக்கூடிய சிறிய, எளிய கட்டளைகளை அவர்களுக்குக் கொடுப்பது நல்லது. யாரும் நான் கூறியதை மறுத்து எதுவும் பேசாததும், எனது நீண்ட சொற்பொழிவின்போது எந்தக் கேள்வியும் கேட்காததும் எனக்கு ஏமாற்றத்தை ஏற்படுத்தின. எனக்குள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த லட்சியத்தில் ஒரு சிறு துளியையாவது நான் நிறைவேற்ற வேண்டும் என்றால், தலைவர்களை உருவாக்குவதற்கு நான் கணிசமான நேரத்தைச் செலவிட்டாக வேண்டியிருக்கும். இந்தக் கும்பல் என்னிடம் இவ்வாறு பணிந்து நடப்பது என்றேனும் ஒருநாள் எனக்கு அனுகூலமானதாக இருக்கக்கூடும். எனக்கு முந்தைய தலைவர்கள் ஒரு குடியாட்சியை நடத்த முயற்சித்திருந்தனர். இப்போது என் முன்னே இருந்த இந்த முட்டாள்கள் ஒவ்வொருவரும் நாட்டின் எதிர்காலத்தைத் தீர்மானிப்பதற்கு வாய்ப்பளித்த ஒரு ஜனநாயகத்தை அத்தலைவர்கள் விரும்பினர்.

ஆனால் இப்படிப்பட்ட ஓர் இனத்திற்கு ஒரு வலிமையான சர்வாதிகாரிதான் தேவை. மகாபலி அத்தகைய ஒருவராக ஆக முயற்சித்துத் தோற்றுப் போனார். ஒரு சர்வாதிகாரியாக இருப்பதற்குத் தேவையான கடுமை அவரிடம் இருக்கவில்லை. ஹிரண்யகசிபு, ஹிரண்யக்ஷன் போன்ற முந்தைய அரசர்கள் கொடூரமானவர்களாகவும் முற்றிலும் ஈவு இரக்கமற்றவர்களாகவும் இருந்ததால், மக்களின் ஆதரவை அவர்கள் இழந்தனர். புத்திசாலித்தனமும் லட்சிய தாகமும் வலிமையும் கொண்ட, கருணையற்ற, அதே சமயத்தில், அக்கறையும்

பரிவும் கொண்ட ஒரு தலைவன்தான் இந்த இனத்திற்குத் தேவை. சரியாகக் கூற வேண்டுமென்றால், என்னைப் போன்ற ஒருவன்தான் அவர்களுக்குத் தேவை.

எதிர்காலத்தில் எனது படைவீரர்களாக ஆகவிருந்த அந்தக் கூட்டத்தினர், மதிய உணவுக்குக் கலைந்து செல்வதற்கு நான் ஆணை பிறப்பித்தேன். நான் எனது சகோதரர்களோடும் பிற நெருங்கிய உறவினர்களோடும் ஓர் ஆலமரத்தின் கீழே உட்கார்ந்தேன். எனது வீரர்கள் மகிழ்ச்சியாகச் சிரித்துக் கொண்டும், நாகரீகமற்ற நகைச்சுவைத் துணுக்குகளைக் கூறிக் கொண்டும் எங்களுக்கு எதிரே மிக அருகிலிருந்த ஒரு புல்வெளியில் அமர்ந்திருந்தனர். கடந்த ஒருசில நாட்களாக நாங்கள் விவாதித்து வந்திருந்த விஷயம் குறித்த எஞ்சிய விவாதத்தை நாங்கள் துவக்கினோம். எங்களது தாக்குதலை எங்கிருந்து துவக்குவது? காவேரி நதியருகே இருந்த ஒரு சிறிய தேவ கிராமத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று விபீஷணன் விரும்பினான். அக்கிராமத்தில் ஒரு சிறிய கோட்டையையும் ஒருசில தானியக்களஞ்சியங்களையும் ஒரு சிறிய பள்ளிக்கூடத்தையும் தவிர வேறு எதுவும் இருக்கவில்லை. மக்கள் மிகவும் ஏழைகளாக இருந்தனர். எலும்பும் தோலுமாக இருந்த நோஞ்சான்கள் அடங்கிய ஒரு சிறிய ஆண்கள் குழுதான் பாழடைந்திருந்த அந்தக் கோட்டையைக் காவல் காத்தது. அந்தக் கிராமத்தைக் கைப்பற்றுவது பெயரளவுக்கு மட்டுமே ஒரு வெற்றியாக இருக்கும். கும்பகர்ணன் அந்த யோசனையை எதிர்த்தான். அது ஒரு வீண் முயற்சி என்றும், அது நமது படை குறித்துப் பிற தேவ ராஜ்யங்களுக்கு முன்னறிவிப்பைக் கொடுத்து எச்சரித்துவிடும் என்றும் அவன் கூறினான். பல்வேறு வகையான நபர்களை உள்ளடக்கிய எங்கள் சிறிய கூட்டத்தினரை ஒரு படை என்று அழைப்பது நகைப்புக்குரியது என்று நான் நினைத்தேன். ஆனால் கும்பகர்ணன் அப்படியே நினைத்துக் கொள்ளட்டும் என்று நான் விட்டுவிட்டேன். வடக்கு சாயத்ரி மலைகளிலிருந்த கார்த்த வீர்யார்ஜுனனுக்கு எதிராக ஒரு முழுமையான தாக்குதல் நடத்த வேண்டும் என்று அவன் விரும்பினான். என் மாமன்களான மால்யவனும் சுமாலியும் இவை எதையும் விரும்பவில்லை. மத்திய இந்தியாவை ஆண்டு கொண்டிருந்த தேவ சாம்ராஜ்யங்களுக்கு எதிராக கொரில்லா தாக்குதலைத் தொடர வேண்டும் என்றும், பிறகு அமராவதியை நோக்கிப் படையெடுக்க வேண்டும் என்றும் அவர்கள் விரும்பினர்.

எந்தவிதமான உத்தியோ அல்லது திட்டமோ இல்லாத ஒரு நீண்ட கனவாக அது இருந்தது. கடந்த ஒருசில நாட்களாக நிகழ்ந்து கொண்டிருந்த இந்தக் கேலிக்கூத்து எனக்குப் பாதி சுவாரசியமாகவும்

பாதி எரிச்சலாகவும் இருந்தது. இந்தக் குழுவை ஒரு ஜனநாயக அமைப்பாக வைத்திருக்க நான் கடினமாக முயற்சித்துக் கொண்டிருந்தேன். ஒவ்வொரு தீர்மானமும் பொருத்தமான விவாதங்களுக்குப் பிறகு பரஸ்பர ஒப்புதலுடன் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் அதே சமயம், இப்படிப்பட்டவர்களிடம் ஜனநாயகம் வேலை செய்யாது என்று நான் உறுதியாக நம்பினேன். தாக்குதலை எப்படி வழிநடத்திச் செல்ல வேண்டும் என்பதையும், அதற்குத் தேவையான ஆயுதங்களும் ஆட்களும் பணமும் எங்களிடம் இருந்ததா என்பதையும் குறித்து என்னுடைய மிக நெருங்கிய சொந்தங்களான இவர்களாலேயே ஒரு தெளிவான தீர்மானத்தை எடுக்க முடியவில்லை என்றால், சாதாரண அசுர மக்கள் தெளிவாகச் சிந்திக்க வேண்டும் என்று எப்படி என்னால் எதிர்பார்க்க முடியும்?

“போதும், நிறுத்துங்கள்!” என்று நான் கத்தினேன். நான் கவலைப்படத் துவங்கியிருந்தேன். இந்த நாடகத்தை நான் நிறுத்த விரும்பினேன். “இலங்கையைத் தாக்கியாக வேண்டும். அதுதான் என் இறுதி முடிவு. இதற்கு மேல் எந்த விவாதத்தையும் நான் அனுமதிக்கப் போவதில்லை.”

“ஆனால் . . .” என்று விபீஷணன் இடைமறித்தான். அவனை நான் என் பார்வையால் துளைத்தேன். அவன் என் முன்னால் ஒரு கோழைபோல நடுங்கியதைக் கண்டு நான் ஏமாற்றம் கொண்டேன். ஒன்று, மக்களை அச்சுறுத்துவதில் நான் சிறப்படைந்து கொண்டிருக்க வேண்டும், அல்லது விபீஷணன், முன்பு நான் கற்பனை செய்திருந்ததைவிட மிகப் பெரிய கோழையாக இருக்க வேண்டும். என் மாமன்கள், வெளிப்பார்வைக்குப் பிரமாதமாக இருப்பதுபோலத் தோன்றுகின்ற முட்டாள்தனமான திட்டங்களை உளறத் துவங்குவதற்கு முன்பாகவே, நான் மிகவும் உறுதியான குரலில், “முதலில் யாரேனும் எங்கள் தாயாரையும் சகோதரியையும் இலங்கையிலிருந்து இங்கு கூட்டி வந்தாக வேண்டும். அங்கு அவர்களுக்கு ஆபத்து அதிகரிக்கக்கூடும். பிறகு நாம் அந்தத் தீவைத் தாக்கத் திட்டமிடலாம். என் மாற்றாந்தாயின் மகன் தனது கொழுத்த உடலுடன் வீற்றிருக்கும் அந்த அரியணை எனக்கு வேண்டும். அது மிக விரைவாக எனக்கு வேண்டும்,” என்று கூறினேன்.

என் மாமன்களின் கண்களில் வெளிப்பட்ட அதிர்ச்சியை இன்னும் என்னால் காண முடிகிறது. நான் பயன்படுத்திய வார்த்தைகளும் என்னுடைய குரலும் எனது முகபாவமும் அவர்களைத் திகைக்கச் செய்தன. அவர்களுடைய நியதிப்படி, தலைவர்கள் பணிவன்புடன்

இருக்கவும், நாகரீகமான வார்த்தைகளைப் பேசவும், எல்லோருடைய ஒத்துழைப்பையும் பணிவோடு கோருவதற்கு முன்பாக மற்றவர்களின் கருத்துக்களைச் செவிமடுக்கவும் வேண்டியிருந்தது. நான் குறைந்தபட்சம் ஐந்து அசுர மரபுகளையாவது மீறியிருந்தேன். ஆனால் அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. தூய தமிழில் இனி நான் தேனொழுகப் பேசப் போவதில்லை. எந்தவிதமான விலாவாரியான சடங்குகளும் எனக்குக் கிடையாது. நான் எனது சொந்த நியதிகளை நிர்ணயிக்கப் போகிறேன். என்னுடன் வர விரும்பியவர்கள் என்னுடன் வரலாம்.



# 8

## பேரரசன் ராவணன் வாழ்க!

ராவணன்

அவன் சுமாலியுடன் வந்த நாள் முதலாகவே அவனை நான் கவனித்து வந்திருந்தேன். மற்றபடி, கண்டுகொள்ளும்படியாக அவனிடம் எதுவும் இருக்கவில்லை. எந்தவொரு படையிலும் இன்றியமையாததாக விளங்குகின்ற, ஆனால் வழக்கமாக நன்றி கூறப்படாமல் மறக்கப்பட்டுவிடுகின்ற, கீழ்நிலை வீரர்களில் ஒருவன் அவன். அவன் என் அருகே வர எப்போதும் முயற்சித்துக் கொண்டிருந்தான். எப்போதும் என்னிடம் ஏதோ கூறத் தட்டழிந்து கொண்டிருந்தான். நான் அவனை அழைத்து, அவனுக்கு என்ன வேண்டுமென்று கேட்டேன். பல வாரங்களுக்கு முன்பே நான் இதைச் செய்திருக்க வேண்டும், ஆனால் படையின் உயர்நிலை அதிகாரிகளுக்கும் கீழ்நிலை வீரர்களுக்கும் இடையே ஓர் இடைவெளியை உருவாக்குவதென்று என்று நான் தீர்மானித்தேன். முன்பு, நானும் எனது இரண்டு சகோதரர்களும் எங்களுடைய அனைத்து வீரர்களுடனும் சேர்ந்து மதுவருந்துவது வழக்கம். ஆனால், தோழமையுணர்வை இப்படி வெளிக்காட்டுவது

குறித்து நான் சற்று அசௌகரியமாக உணரத் துவங்கியிருந்தேன்.

பலம் பொருந்திய எனது அசுரப் படையை மேலும் பேராற்றல் மிக்கதாக ஆக்குவதற்கு ஏராளமான வீரர்கள் அடங்கிய படைகளுடன் எனது மாமன்மார் வந்தபோது எல்லாமே மாறியது. நாங்கள் ஒரு தெருக்கும்பலைப் போலன்றி, ஓர் உண்மையான படையைப்போலத் தோற்றமளித்ததை என் மாமன் சுமாலி உறுதி செய்தார். அவர் எங்களுக்கு ஒரு நீண்ட சொற்பொழிவை நிகழ்த்தியிருந்தார். நீண்ட சொற்பொழிவுகளைக் கொடுப்பது அசுரர்களின் மிகப் பெரிய பலவீனமாக இருந்திருக்கக்கூடும். எனது படையில் ஒழுங்கு இருக்க வேண்டும் என்று நான் விரும்பினால், அடுக்கதிகார முறையை நான் மதிக்க வேண்டும் என்பதை அவர் என் மண்டைக்குள் திணிக்க முயற்சித்தார். அடுக்கதிகார முறையை மதிப்பதற்கு, முதலில் நான் அதை உருவாக்கியாக வேண்டியிருந்தது. நான் வேகமாகக் கற்றுக் கொண்டேன். விரைவில், நான் எல்லோரையும் மரியாதையின்றி நடத்தினேன், ஆனால் அவர்கள் அதை வெறுமனே ஏற்றுக் கொண்டு எனக்கு அடிபணிந்து நடந்தது எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது.

அந்தக் கருத்த இளைஞன் என் முன்னே வந்து, மரியாதையோடு குனிந்து, சிறிது உணவை என் அருகில் வைத்தான். நான் அவனது முகத்தைப் பார்க்க விரும்பவில்லை. நான் அவனை நெடுநேரம் பார்த்தால், அவர்களது அர்த்தமற்ற சேவைக்கும் அளவுக்கதிகமான மரியாதைக்கும் பின்னால் உள்ள வெறுப்பையும் கோபத்தையும் நான் பார்க்க நேரிடும் என்று நான் பயந்தேன். அவன் சிறிது நேரம் எனக்கு மிக அருகே நின்றான். அவன் அங்கு இருந்ததை நான் அங்கீகரிக்காதபோது அவன் அமைதியாக அங்கிருந்து சென்றான். அவர்கள் என்னை மதித்தார்களா இல்லையா என்பது குறித்து நான் ஏன் இவ்வளவு அக்கறை காட்டினேன்? அந்த அசிங்கமான மனிதனை என் மனத்திலிருந்து தூக்கி எறிந்துவிட்டு, எனது படையின் அடுக்கதிகார அமைப்புமுறையில் நான் கவனம் செலுத்த முயற்சித்தேன்.

பிரஹஸ்தன், சுமாலி, மாரீசன், கிழக்கு இலங்கையின் முத்துத் தீவுகளின் முன்னாள் ஆளுனராக இருந்த ஜம்புமாலி ஆகிய எனது மாமன்மாரும், நாங்கள் மூன்று சகோதரர்களும் உட்பட, பத்துப் பேர் அடங்கிய ஓர் உயர்மட்டக் குழுவை அமைப்பதென்று நாங்கள் ஒப்புக் கொண்டோம். மகாபலியின் விசேஷப் பாதுகாப்புப் படையில் இருந்த ஒரு திறமையான வீரனான ருத்ராக்கனும் அதில் இருந்தான். பேரரசர் மகாபலியை வாமன விஷ்ணு தாக்கியபோது, ஒரு பிச்சைக்காரனாக நடித்து உயிரோடு தப்பிய ஒரே நபர் ருத்ராக்கன்தான். மகாபலியின் படைகளுக்கான கொள்முதல் மற்றும் வினியோகப் பிரிவின்

தலைவனான தும்ரக்ஷகனையும், மகாபலியின் படைகளின் பிரதானத் தளபதியாக இருந்த வஜ்ரதம்ஸ்டிரனையும் நாங்கள் அந்தக் குழுவில் சேர்த்துக் கொண்டோம். சிறிய படைகளுக்குத் தலைமை தாங்கிய வேறு சில சிறிய அதிகாரிகளும் இருந்தனர். நான் எனது படையின் தளபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதை எனது மௌனம் உறுதி செய்தது. படைத் தளபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்த மகிழ்ச்சியையும் நிம்மதியையும் நான் உணர்ந்தபோதுதான், நான் எவ்வளவு தூரம் அந்தப் பதவியை விரும்பியிருந்தேன் என்பதை உணர்ந்தேன். பிரஹஸ்தனும் வஜ்ரதம்ஸ்டிரனும் சற்றுப் பதற்றமாக இருந்ததை நான் உணர்ந்தேன். ஆனால் தளபதிப் பொறுப்பிற்குத் தாங்கள் பொருத்தமானவர்கள் அல்ல என்பதை அவர்களும் அறிந்திருந்தனர், மற்றவர்களும் அதை அறிந்திருந்தனர். ஆறு வருடங்களாகப் போரிட்டும் எந்த விளைவும் ஏற்படாமல் போவது படைவீரர்களிடையே நம்பிக்கையை உருவாக்குவதில்லை. எனவே, அவர்கள் தங்கள் தோல்வியை ஒப்புக் கொண்டு, என்னைத் தளபதியாக மரியாதையோடு ஏற்றுக் கொண்டனர்.

ஒவ்வொரு தீர்மானமும் வாக்கின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் என்றும், பெயரளவுக்கு மட்டுமே நான் தலைவனாக இருப்பேன் என்றும் நாங்கள் ஒரு வாய்மொழி ஒப்பந்தம் செய்து கொண்டோம். தேவர்களைப் போலன்றி, அசுரர்களாகிய நாங்கள், ஒரு மேம்பட்ட அரசியல் நிர்வாக நிலையை இன்னும் எட்டியிருக்கவில்லை. தேவர்களிடம் இருந்த ஒரு தெளிவான நிர்வாக அமைப்புமுறையை நான் அப்படியே பின்பற்ற விரும்பிய ஒரு காலகட்டம் அது. அவர்களுடைய அமைப்புமுறையில் ஓர் அரசன் அல்லது ராஜாதான் உச்சகட்ட ஆட்சியாளன். வாழும் தெய்வமாக மக்கள் அவனைக் கருதினர். தனது குடிமக்களுக்கு எது நல்லது என்பதை அவன்தான் தீர்மானித்தான். இதில் இருந்த அனுகூலம் என்னவென்றால், தீர்மானங்கள் விரைவாக எடுக்கப்பட்டு, செயல்பாடுகள் துரித வேகத்தில் நிகழ்ந்தன. இதிலிருந்த சாபக்கேடு என்னவென்றால், அந்த ஆட்சியாளன் மோசமானவனாக இருந்தால், அவனது மோசமான தீர்மானங்களும் விரைவாகச் செயல்படுத்தப்பட்டன. எனவே நாட்டு மக்கள் துன்புற்றனர். போரின்போதுகூட எங்கள் உயர்மட்டக் குழுவினர் அனைவரும் சேர்ந்து ஒரு தீர்மானத்திற்கு வர வேண்டும் என்று அசுரர்களாகிய நாங்கள் காத்துக் கொண்டிருந்தபோது, தேவர்கள் எங்களுடைய நாட்டை எங்களிடமிருந்து பறித்துக் கொண்டனர்.

எது எப்படியோ, எனக்கு நானே கொடுத்துக் கொண்ட தெய்வீக

நிலை, எனக்கும், அந்தக் கருத்த, வாட்டசாட்டமான இளைஞனுக்கும் இடையே ஒரு தடையாக நின்றது. நான் சற்றுக் குழம்பிப் போயிருந்தேன். இவ்விஷயம் குறித்து சுமாலியிடம் கலந்தாலோசிப்பதென்று நான் தீர்மானித்தேன். அந்தக் கருத்த இளைஞன் ஓர் உளவாளியாக இருக்கக்கூடும். விஷயங்களை அவன் கழுகுக் கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தான். எங்களது உயர்மட்டக் குழு கூடியபோதெல்லாம், எங்களுக்கு அருகே இருக்கும் விதத்தில் அவன் ஏதேனும் ஒரு வேலையைக் கண்டுபிடித்ததை நான் பார்த்திருந்தேன்.

இலங்கையின்மீது நாங்கள் தொடரவிருந்த தாக்குதலுக்கான உறுதியான திட்டங்களை வகுக்க முடியாமல் நான் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிப் போய் உட்கார்ந்து கொண்டிருந்தேன். எனக்கு ஏற்பட்டிருந்த மன அழுத்தத்தை என்னால் உணர முடிந்தது. என் மனத்தைத் தெளிவுபடுத்துவதற்கு, எதையேனும் உடைக்கவோ அல்லது யாரிடமாவது கத்தவோ நான் விரும்பினேன். எனது மாற்றாந்தாயின் மகனிடமிருந்து இலங்கையை நாங்கள் அபகரித்தாக வேண்டும் என்று நான் ஏதோ ஒரு வேகத்தில் கூறியிருந்தேன். அந்த நடவடிக்கை அர்த்தமற்றது என்பதை இப்போது நான் உணர்ந்தேன்.

"ஐயா, நான் உங்களிடம் பேசலாமா?" என்று கேட்ட அந்த வாட்டசாட்டமான இளைஞனை நான் முறைத்துப் பார்த்தேன். நான் எரிச்சல் அடைந்திருந்தேன். கடந்த ஒருசில நாட்களாக தனது பார்வையால் என்னைப் பின்தொடர்ந்து வந்திருந்த அதே நபர்தான் அவன்.

"உனக்கு என்ன வேண்டும்? செய்வதற்கு உருப்படியான வேலை எதுவும் உன்னிடம் இல்லையா?" என்று நான் அவனைக் கேட்டேன். எனது குரலில் இருந்த கடுமை எனக்கே ஆச்சரியமூட்டியது.

அவன் என்னைக் கண்ணோடு கண் பார்த்துக் கொண்டு அங்கேயே நின்றான். நான் அவனைவிட ஒரு தலை உயரமாக இருந்தேன், ஆனால் அவன் என்னை நேருக்கு நேராகப் பார்த்தான். அவனிடம் எந்த அச்சுறுத்தலும் இருக்கவில்லை, அதே சமயத்தில் அவனது பார்வையில் எந்த பயமும் தென்படவில்லை. அவனது பார்வை கீழ்நோக்கிச் செல்வதற்காகவும், என்னைக் கண்டு பயந்து அவன் தனது கால்விரல்களைப் பார்ப்பதற்காகவும் நான் காத்திருந்தேன். ஆனால் என் முன்னே நின்ற அவன் துளிகூடப் பதற்றத்தை வெளிக்காட்டவில்லை. அதிகாரத்தின் முன்னால் அடி பணிவதுதான் அசுரர்களின் அடையாளமாக இருந்தது. எனது இனம், முன்னேற்றத்தை நோக்கிய தனது பயணத்தில், மக்களால் சமமானவர்களாக இருக்க முடியும்

என்பதை மறந்துவிட்டிருந்தது. சமத்துவத்தைக் கையாளக்கூடிய ஒருவனை நான் இவனில் பார்த்தேன். அவன் என் அதிகாரத்தைக் கண்டு பயப்படவில்லை என்பதையும், அவன் என்னிடம் பணிவை வெளிப்படுத்தவில்லை என்பதையும் கண்டு நான் ஆச்சரியமும் எரிச்சலும் அடைந்தேன். அது எனக்கு அபத்தமானதாகப் பட்டது. அவன் எனக்குச் சமமானவன் என்ற எண்ணம் எனக்கு அபத்தமாகத் தோன்றியது. அது உண்மையிலேயே அபத்தமானதா? மகாபலி என்னைக் கண்டுபிடிப்பதற்கு ஒருசில மாதங்களுக்கு முன்பு, நானும் அவனைப்போலத்தானே இருந்தேன்?

பிறகு ஒரு விஷயம் எனக்குப் புரிந்தது. எல்லாவற்றையும் இழந்துவிட்டு, ஒரு குறிக்கோளுக்காக வாழ்ந்து கொண்டிருந்தவன் அவன் என்பதை நான் கண்டேன். ஏதோ ஒன்று அவனுக்குள்ளிருந்து வெளிவருவதற்காக முனைப்பாகவும் துடிப்போடும் காத்திருந்தது. தனது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தித் தனது சூழலோடு ஒன்றரக் கலக்கும் திறன் கொண்ட மனிதனாக அவன் எனக்குத் தெரிந்தான். புல்லின்மீது ஒரு நாகத்தைப்போல அசைவின்றிப் படுத்துக் கொண்டு, அவனால் பயங்கரமான விஷத்தைப் பாய்ச்ச முடியும் என்றும், வெறியோடும் சத்தமின்றியும் ஈவு இரக்கமின்றியும் தாக்க முடியும் என்றும் எனக்குத் தோன்றியது. அவனது கண்கள் என்னை வெறித்துப் பார்த்தபோது, அவை கண்ணாடிபோலப் பளபளப்பாக இருந்தன. திடீரென்று எனக்கு பயம் ஏற்பட்டது.

அந்த நாகத்திடம் ஏதேனும் அசைவு ஏற்பட்டால் உடனடியாகத் தாக்கத் தயாராக இருப்பதற்காக எனது கைகள் எனது வாளின் பிடியை இறுகப் பற்றின. எந்தவிதமான எச்சரிக்கையுமின்றி, அவன் என் கால்களில் விழுந்து என்னைத் திகைப்புக்கு ஆளாக்கினான். கோபமும் நிம்மதியும் ஒருசேர என்னுள் எழுந்தன. அதிகாரத்தின் முன்னால் அடிபணிந்த அதே அசுர நடத்தையை அவன் வெளிப்படுத்தியிருந்தது குறித்து நான் கோபம் கொண்டேன். ஆனால் இப்படிப்பட்ட ஒரு பலவீனமான சக்தியை எதிர்த்து நான் போராட வேண்டியிருக்கவில்லை என்பது குறித்து நிம்மதி கொண்டேன். இவனைப் பற்றி ஏதோ கரடுமுரடான, புத்துணர்ச்சியூட்டும் ஒரு விஷயம் நிச்சயமாக இருந்தது. இயற்கையின் அசலான ஆற்றல் அவன், இந்த மண்ணின் உப்பு அவன். அவன் சாதாரண மனிதனாக இருந்தது அவனை அசாதாரணமானவனாக ஆக்கியது.

“மேன்மை பொருந்திய அரசரே, என்னை நம்புங்கள். பூமியில் பிறந்துள்ள எவரொருவரைவிடவும் நான் உங்களுக்குச் சிறப்பான சேவை செய்வேன். என் வாழ்க்கையை உங்களுக்காக அர்ப்பணிப்பேன்.

என்னை உங்கள் ஊழியனாக ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் எங்கள் ரட்சகர் என்பதை நான் அறிவேன். தேவர்களின் பிடியிலிருந்து அசுர குலத்தை மீட்பதற்காகக் கடவுளால் அனுப்பி வைக்கப்பட்டவர் நீங்கள்." அவன் திடீரென்று தேம்பத் துவங்கினான். அழுகையால் அவனது ஒட்டுமொத்த உடலும் குலுங்கியது. இந்தத் திடீர் உணர்ச்சி வெளிப்பாட்டால் நான் தர்மசங்கடத்துடன் நெளிந்தேன். அவன் என் கால்களைப் பிடித்தான். என்ன கூறுவதென்றோ அல்லது என்ன செய்வதென்றோ எனக்குத் தெரியவில்லை. நான் இதை எதிர்பார்த்திருக்கவில்லை. பிறகு, உருவிய வாளுடன் பிரஹஸ்தன் எங்களை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். எனது விரல்களைச் சொடுக்கி நான் அவனைத் தடுத்து நிறுத்தினேன். எனது சிறிய சைகையைக் கண்டு, கர்வமிக்கப் பிரஹஸ்தன்கூடப் பாதியிலேயே நின்றது குறித்து நான் வியந்தேன்.

அதி அற்புதம்! இன்னும் அதிகமான மக்கள் இப்படி என் பாதங்களில் விழுந்தால், அதை நான் மகிழ்ச்சியாக ரசிப்பதோடு மட்டுமன்றி, அதை அதிகாரபூர்வமாகக் கேட்டு வாங்கத் தொடங்கவும்கூடும். துவக்கத்தில் எனக்கு ஏற்பட்டிருந்த பச்சாதாபம் மறைந்துவிட்டிருந்தது. இப்போது எனது பாதங்களில் விழுந்து கிடந்த துரதிர்ஷ்டமான மனிதன் குறித்து வெறுப்புக் கலந்த ஓர் அன்பு என்னுள் துளிர்த்தது. அவன் முழுமையாக எனது கட்டுப்பாட்டில் இருந்ததை என்னால் உணர முடிந்தது. என்னால் அவனை எட்டி உதைக்க முடியும், தரதரவென்று இழுத்துச் செல்ல முடியும், அவனது தலையைக் கொய்யவும் முடியும். யாரும் அது குறித்து என்னைக் கேள்வி கேட்க மாட்டார்கள். அதே சமயத்தில் அந்த எண்ணம் எனக்கு பயத்தையும் உண்டாக்கியது. எனக்கு என்ன நிகழும்? இத்தகைய அதிகாரத்துடன், அரசன் என்ற பொறுப்புச் சுமையும் கூடவே வரும். தனது மக்களின் துயரங்களைச் செவிமடுத்து, அவர்களுடைய பிரச்சனைகளுக்குத் தீர்வுகளைக் கண்டுபிடிக்க வேண்டிய பொறுப்பு ஓர் அரசனுடையது. நான் அதைச் செய்வேன். உலகிலேயே மிகவும் அன்பான அரசனாக நான் இருப்பேன்.

நான் அவனை என் கைகளால் தொட்டுத் தூக்கி, அவனது முகத்தை வெறித்துப் பார்த்தேன். அவனது கண்கள் சிவந்து போயிருந்தன. அவனது உணர்ச்சிகள் உண்மையானவை என்று நான் நினைத்தேன்.

"உனக்கு என்னால் என்ன செய்ய முடியும் என்று கூறு." நான் எனது மிகவும் அன்பான குரலில் பேசினேன். ஓர் அரசனின் தோரணைக்கு இது சற்றுக் கீச்சுக் குரலாக இருந்ததோ என்று நான் சந்தேகித்தேன்.

“மேன்மை பொருந்தியவரே, நீங்கள் அசுரர்களின் அரசராக ஆவதைப் பற்றி நாங்கள் கலந்து பேசி வந்துள்ளோம். கூடிய விரைவில் உங்களுக்கு முடி சூட்டப்பட வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். நீங்கள்தான் மகாபலியின் வாரிசு என்று முகாமில் உள்ள அனைத்து வீரர்களும் நம்புகின்றனர். நீங்கள் எங்களை வழிநடத்திச் செல்ல வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். உங்களுடைய வெற்றிக்காக வாழவும் மடியவும் தயாராக இருக்கின்ற வீரர்களின் பிரதிநிதியாக நான் இங்கு வந்திருக்கிறேன்,” என்று அவன் கூறினான்.

“நான் உனது படைத்தளபதி என்பதை நீ அறிவாய். என்னைப் போலவே, நமது லட்சியத்திற்காக நீ வாழ வேண்டும், அதற்காகவே நீ இறக்க வேண்டும்.” எனது குரல் கடுமையானதாக இருந்தாலும், என் உற்சாகத்தை என்னால் மறைக்க முடியவில்லை. அசுரப் படையின் கீழ்மட்ட வீரர்கள் என்னைத் தங்கள் அரசனாகப் பார்க்க விரும்பினர். இப்படிப்பட்ட ஒரு பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு எனக்கு வயது போதாது என்றும், நான் ஆணவம் பிடித்தவன் என்றும் எனது உயர்மட்டக் குழு நினைக்கக்கூடும். ஆனால் என் வீரர்கள் நான் தங்கள் தலைவனாக வர வேண்டும் என்று விரும்பினர். என்னைப் பொறுத்தவரை, அவர்களது அந்த எண்ணம்தான் அதிக முக்கியமானது. நான் வலுக்கட்டாயமாக என்னை எனது உயர்மட்டக் குழுவின் தலைவனாக ஆக்கியிருந்தது எனக்கு அசௌகரியமாக இருந்தது.

அசுரப் படையில் இருந்த மேல்நிலை அதிகாரிகளை அவர்களின்கீழ் இருந்த வீரர்கள் வெறுமனே ‘ஐயா’ என்று அழைத்ததைப் போலன்றி, இப்போது இந்த வசீகரமான இளைஞன் என்னை ஓர் அரசன் என்று அழைத்தான். இதைக் கேட்டு நான் மகிழ்ந்தேன், ஆனால் பிரஹஸ்தன் அதைக் கேட்டுப் பதைபதைத்ததை நான் கண்டேன். இதை நான் என் மனத்தில் குறித்துக் கொண்டேன்.

“மேன்மை பொருந்தியவரே, நீங்கள் எங்கள் அரசனாக ஆக வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். உயர்மட்டக் குழுவில் உள்ளவர்களுக்காக நாங்கள் போதுமான அளவு சண்டையிட்டுள்ளோம். ஆனால் ஒவ்வொரு முறையும் நாங்கள் தோற்றுப் போனோம். ஏனெனில், அக்குழுவில் இருந்த யாரோ ஒருவர் தேசத் துரோகத்திற்குத் தயாராக இருந்தார். தேவர்களுக்கு வாய்த்துள்ளதைப் போன்ற ஓர் அரசனை நாங்கள் விரும்புகிறோம். எங்களையும், இலங்கையிலிருந்து காந்தாரம்வரை ஒட்டுமொத்த இந்தியாவையும் ஆள்வதற்குத் தகுதியான ஓர் அரசன் எங்களுக்குத் தேவை. மகாபலியைவிட மேலான ஒரு பேரரசர் எங்களுக்குத் தேவை. இந்த மாபெரும் கனவுக்குக் குறைவான எதுவும் எங்களுக்கு உத்வேகமளிக்காது. நீங்கள் உருவாக்கவிருக்கின்ற

மாபெரும் அசுர சாம்ராஜ்யத்திற்காக மடிவதற்கு நாங்கள் அனைவரும் மகிழ்ச்சியாகக் காத்துக் கொண்டிருக்கிறோம்.”

“இந்த விவகாரத்தை உயர்மட்டக் குழுவில் நாங்கள் கலந்தாலோசிக்க வேண்டும். அது இருக்கட்டும், உன் பெயர் என்ன?”

“மேன்மை பொருந்தியவரே, என் பெயர் பத்ரன். பூரண நதிக்கரையில் அமைந்த ஒரு கிராமத்திலிருந்து நான் வருகிறேன். நாங்கள் உங்கள் முடிவிற்காகக் காத்திருப்போம். எனது முறையற்ற நடத்தையை நீங்கள் மன்னித்தருள வேண்டும், ஆனால் எங்களுக்கு வேறு வழி இருக்கவில்லை,” என்று கூறிவிட்டு, ஓர் அரசனுக்குரிய மரியாதையை எனக்குக் கொடுக்கும் விதத்தில், அவன் தன் முதுகை எனக்குக் காட்டாமல் அங்கிருந்து பின்னோக்கி நடந்து சென்றான்.

பிரஹஸ்தன் என்னருகே வந்து என் தோளின்மீது தன் கையை வைத்தான். “நாம் நமது உயர்மட்டக் குழுவைக் கூட்டலாம்,” என்ற அவனது குரல் எஃகைப்போல உறுதியாக இருந்தது. ஆனால் அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. படைவீரர்களின் முகாம்களில் உயர்ந்தெழுந்துக் கொண்டிருந்த “பேரரசன் ராவணன் வாழ்க!” என்ற கோஷம் என் காதுகளுக்குள் தேனாகப் பாய்ந்தது.

“உயர்மட்டக் குழு கலைக்கப்படுகிறது.” திடுக்கிட்டுப் போன பிரஹஸ்தனின் முகத்தைக் கண்டு நான் புன்னகைத்துவிட்டு, “நீதான் எனது பிரதம மந்திரி,” என்று கூறினேன்.

பிரஹஸ்தன் வியந்து கொண்டிருக்க நான் அங்கிருந்து அகன்றேன். நான் சூழ்ச்சிக்கு ஆளாக்கப்பட்டுக் கொண்டிருந்ததாக என் மனத்தில் எங்கோ ஓரிடத்தில் எனக்குத் தோன்றியது. படைவீரர்களின் முகாம்களை நான் ஏறிட்டுப் பார்த்தேன். தனது சக வீரர்களை மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தில் மிதக்க விட்டுவிட்டு, பத்ரன் மட்டும் தனியாக நின்று கொண்டிருந்ததை நான் கண்டேன். அவனது முகத்தில் ஒரு சிறிய வெற்றிப் புன்னகை மலர்ந்திருந்தது. எங்கள் இருவரது பார்வையும் சந்தித்துக் கொண்டபோது அவனது புன்னகை மறைந்தது. அவன் என்னைக் கண்டு மரியாதையாகக் குனிந்தான். வீரர்களின் முகாமைக் கடந்து எனது முகாமை நோக்கி நான் ராஜநடை போட்டுச் சென்றபோது, அவர்கள் என்னைக் கண்டு மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். போரைத் துவக்குவதற்கு முன்பு நான் என் தாயாரையும் சகோதரியையும் கூட்டி வந்தாக வேண்டும். கனவுகளற்ற ஓர் உறக்கத்திற்குள் நான் சரிவதற்கு முன்பு என் மனத்தில் தோன்றிய கடைசி எண்ணம் அதுதான்.



# 9

# என் அன்புக்குரிய மாரீசன்

ராவணன்

அவர்கள் என் மாமன் மாரீசனோடு வந்ததை நான் பார்த்தேன். என் தங்கை வளர்ந்திருந்தாள். அவள் அழகாக இருக்கவில்லை, ஆனால் அவளிடமிருந்து வெளிப்பட்ட ஆற்றலை என்னால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. நான் என் மந்திரிக் குழுவினருடன் ஓர் ஆலோசனைக் கூட்டத்தில் இருந்தேன். அது இனியும் ஒரு ஜனநாயக அமைப்பாக நீடிக்கவில்லை என்றாலும், அவர்கள் ஒவ்வொருவரின் குரலும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதை நான் உறுதி செய்தேன். அது ஒரு நாடகம்தான். என் விருப்பங்கள்தான் இறுதியாக நிறைவேற்றப்படும் என்பதை ஒவ்வொருவரும் அறிந்திருந்தனர். ஆனால், அசுரர்களின், ஒரு நல்ல விவாதம் மற்றும் வாக்குவாதம் குறித்தத் தேவை திருப்தி செய்யப்பட்டது.

சந்திப்புக்கூட்டம் பாதியிலேயே நின்றது. எல்லோரும் எழுந்து நின்றனர். எனது வயதான மாமா மாரீசன் புன்னகைத்தபடியே எங்களைப் பார்த்துத் தனது கைகளை அசைத்தான். அவனது இரட்டைக்

குழந்தைகள் அவனுக்குப் பின்னால் தள்ளாடிக் கொண்டு நடந்து வந்தனர். அவர்களுக்குப் பின்னால், இன்னும் அழகாக இருந்த அவனது மனைவி வந்து கொண்டிருந்தாள். என் தாயாரும் சகோதரியும் அவர்கள் அனைவருக்கும் பின்னால் வந்து கொண்டிருந்தனர். நாங்கள் எங்களது முக்கியமான சந்திப்புக்கூட்டத்தை நிறுத்திவிட்டுத் தங்களுக்கு அருகே வருவதற்காக அவர்கள் காத்துக் கொண்டிருந்தனர். நீண்டகாலத்திற்கு முன்பு தொலைந்து போய்விட்டிருந்த தனது தாயைக் கண்ட ஒரு நாய்க்குட்டிபோல, விபீஷணன், குரைத்துக் கொண்டும் மகிழ்ச்சியாகக் கத்திக் கொண்டும் அவர்களை நோக்கி விரைந்தான். நானும் ஓடிச் சென்று என் தாயாரையும் சகோதரியையும் ஆரத் தழுவிக் கொள்ள விரும்பினேன், ஆனால் அரசர்கள் அவ்வாறுதான் நடந்து கொள்வார்களா என்று எனக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. கும்பகர்ணனும் விபீஷணனுக்குப் பின்னால் ஓடினான். அந்த இரட்டையர்கள் கத்திக் கொண்டும் சத்தமாகச் சிரித்துக் கொண்டும் அவனை நோக்கி வேகமாக ஓடி வந்தனர். அந்த உரத்தச் சத்தத்தைக் கேட்டு, எங்களுக்கு மேலே இருந்த காட்டு மரங்களின்மீது அமர்ந்திருந்த பறவைகள் பயந்தன. உயரமான மற்றும் மரியாதைக்குரிய எனது மாமனான பிரஹஸ்தனும், எப்போதும் சிடுசிடுப்பாக இருந்த எனது மாமன் சுமாலியும் பின்தொடர, நான் கம்பீரமாக நடந்து சென்றேன்.

"வழியில் உங்களுக்கு ஏதேனும் பிரச்சனைகள் இருந்ததா?" வழக்கமான உணர்ச்சிமயமான நல விசாரிப்புகளுக்குப் பிரஹஸ்தனுக்கு நேரமிருக்கவில்லை.

"கடற்கொள்ளையனான வருணனின் கப்பல்கள் மட்டும்தான் பிரச்சனை கொடுத்தன. ஆனால் ஒரு சிறிய பரிசைக் கொடுத்து நாங்கள் அவனைச் சமாளித்துவிட்டோம்."

"உன் மாமன் மாரீசன், சுலக்ஷணாவின் முத்து அட்டிகையைக் கடற்கொள்ளையர்களிடம் கொடுத்துவிட்டான். அதைச் சம்பாதிப்பதற்கு அவள் ஏழு வருடங்களாக அந்தச் சங்கத்தில் கடுமையாக வேலை பார்க்க வேண்டியிருந்தது," என்று கூறிய என் தாயாரின் குரலில் பரிவு தொனித்தது. முத்து அட்டிகையைக் கடற்கொள்ளையர்களிடம் கொடுத்தது ஒரு முக்கியத்துவமற்ற நடவடிக்கை என்று கூறுவதைப்போல மாரீசன் தன் தோள்களைக் குலுக்கினான். நான் அவனது பாதங்களைத் தொட்டு வணங்கி அவனை ஆரத் தழுவினேன்.

"ஆக, நீ இப்போது அரசனாகிவிட்டாயா?" என் மாமான் என் முதுகில் கடினமாக அடித்தான். வாய்வழிப் பரீட்சையில் சிறப்பான மதிப்பெண்களைப் பெற்றுள்ள ஒரு குழந்தையைப்போல மலர்ந்த முகத்துடன் நான் அங்கு நின்றேன்.

“இப்போது நாம் உனக்கு ஒரு ராஜ்யத்தைக் கண்டுபிடித்தாக வேண்டும்.”

படைவீரர்கள் சிரித்தனர். என் முகத்தில் புன்னகையை நிலைத்திருக்கச் செய்வதற்கு நான் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது. மாரீசனின் நகைச்சுவை உணர்வு சில சமயங்களில் துளைத்தெடுப்பதாக இருக்கும், ஆனால் அந்த வயதான கிழத்தை நான் மிகவும் நேசித்தேன். நாங்கள் பருவ வயதினராக இருந்தபோது, ஒருமுறை எனது மாமனும் அத்தையும், பிறந்து ஒருசில வாரங்களே ஆகியிருந்த இரண்டு கைக்குழந்தகைளுடன், ஓட்டை ஒடிசலுடன் இருந்த எங்கள் குடிசைக்கு வந்தது எனக்கு நினைவிருக்கிறது. அப்போது பலத்தப் பருவமழை பெய்து கொண்டிருந்தது. எங்கள் குடிசை அந்தக் கடும்புயலைத் தாக்குப்பிடித்து நிற்க வேண்டும் என்று நான் சிவனிடம் மனமுருக வேண்டினேன். என் மாமனும் அத்தையும் களைப்பாகவும் மிகவும் மெலிந்து போயும் காணப்பட்டனர். என் மாமன் கந்தலான ஆடைகளுடனும், தலையில் ஒரு கட்டுடனும், கையில் ஒரு தாங்குக் கயிற்றுடனும் இருந்தான். என் அத்தையோ, எந்த நேரத்திலும் கீழே விழுந்து இறந்துபோகக்கூடிய நிலையில் இருந்த ஒருத்தியைப்போலக் காணப்பட்டாள். அவர்கள் இருவரும் ஆளுக்கொரு குழந்தையைக் கையில் இறுக்கமாகப் பிடித்திருந்தனர். வார்த்தைகள் எதுவும் கூறப்படாமலேயே எதையும் புரிந்து கொள்ளக்கூடிய திறன் பெற்றிருந்த எனது தாயார், எழுந்து சென்று, களைத்துப் போயிருந்த அவர்களது கைகளிலிருந்து இரண்டு குழந்தைகளையும் எடுத்துக் கொண்டார். எங்களிடம் மிகச் சிறிய அளவில் இருந்த கஞ்சியை நாங்கள் அவர்களோடு பகிர்ந்து கொண்டோம். அவர்கள் இருவரும் அன்று இரவு நெடுகிலும் நன்றாகத் தூங்கினர்.

அழக்கூட முடியாத அளவுக்கு அக்குழந்தைகள் பலவீனமாக இருந்தனர். ஆனால் அவர்களுக்கு என்ன உணவு கொடுப்பதென்று என் தாயார் கவலைப்பட்டது எனக்கு நினைவிருக்கிறது. என் அத்தைக்குக் குழந்தை பெற்றுக் கொள்வதற்கான வயது கடந்துவிட்டிருந்தது. எனவே அக்குழந்தைகளை அவர்கள் தத்தெடுத்திருக்க வேண்டும் என்று நாங்கள் உறுதியாக நம்பினோம். என் மாமன் தனது ராஜ்யத்தை இழந்த பிறகு அவனும் என் அத்தையும் எப்போதும் ஏழைகளாகவே இருந்து வந்திருந்தனர். எனவே இத்தகைய அன்பான நடவடிக்கைகள் அவர்களுக்கு இயல்பாக வந்தன. எங்களுக்குச் சிறிதளவு பாலைக் கடன் கொடுக்கக்கூடிய அன்புள்ளம் கொண்ட எவரொருவரையும் எங்கள் கிராமத்தில் எங்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. தங்களுக்கென்று சொந்தமாக ஒரு பசுவை வைத்திருக்கக்கூடிய அளவுக்கு எங்கள்

அண்டைவீட்டுக்காரர்கள் அவ்வளவு வசதி படைத்தவர்கள் அல்ல. பால் அவர்களுக்கு ஓர் ஆடம்பரப் பொருளாக இருந்தது. வழக்கம்போல, கும்பகர்ணன் ஒரு யோசனையை முன்வைத்தான். எங்கள் கிராமத்தில் பசுக்களை வைத்திருந்தவன் ஒரே ஒருவன்தான். அவனிடம் ஒன்றல்ல, நூற்றுக்கணக்கான பசுக்கள் இருந்தன. அவனிடமிருந்து பாலைத் திருடுவதென்று நாங்கள் தீர்மானித்தோம். அது கடினமான ஒன்றுதான், ஆனால் சாத்தியமானதும்கூட. இதிலிருந்த ஆபத்து எங்கள் சாகச முயற்சிக்குக் கூடுதல் சுவாரசியத்தைக் கொடுத்தது. விபீஷணன் தயங்கினான், ஆனால் தான் கோழை என்று முத்திரை குத்தப்பட்டுவிடக்கூடும் என்று பயந்து அவன் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. ஆனால் நிச்சயமாக அவன் ஒரு கோழைதான். நாங்கள் வேலி தாண்டிக் குதித்து, குபேரனின் மாட்டுக் கொட்டகைக்குள் நுழையும்போது வெளியே எங்களுக்குக் காவலாக நிற்பதற்கு அவன் ஒப்புக் கொண்டான். அங்கு கும்மிருட்டாக இருந்தது. பால் கறப்பதற்கு ஒரு பசுவைக் கண்டுபிடிப்பதற்காகக் கொட்டகை நெடுகிலும் நாங்கள் தட்டுத்தடுமாறியபடி நடந்து சென்றோம். பால் கறக்கும் அனுபவம் எங்கள் இருவருக்குமே இருக்கவில்லை. எங்கள் யோசனை ஒரு மோசமான யோசனைபோலத் தோன்ற ஆரம்பித்தது. நாங்கள் அங்கிருந்து வெளியேற விரும்பினோம். வெளியே திடீரென்று யாரோ இருமினார்கள். எங்கள் இதயங்கள் எங்கள் வாய்க்குள் வந்து குதித்தன. ஒரு மெல்லிய விசில் சத்தத்தைக் கேட்டு நாங்கள் பீதியடைந்தோம். யாரோ வந்து கொண்டிருந்தது குறித்து விபீஷணன் எங்களுக்கு எச்சரிக்கை விடுத்துக் கொண்டிருந்தான். நாங்கள் ஓடினோம், ஆனால் எங்கு சென்று கொண்டிருந்தோம் என்று எங்களுக்குப் புரியவில்லை. பசுக்கள் விழித்துக் கொண்டு உக்காரமிடத் துவங்கின. தீப்பந்தங்கள் கொளுத்தப்பட்டன. அவை நேராக மாட்டுத் தொழுவத்தை நோக்கி வந்து கொண்டிருந்தன. எப்படியோ நாங்கள் அங்கிருந்து வெளியேறினோம். ஆனால் இப்போது அரண்மனைக் காவலாளிகளுக்கிடையே நாங்கள் மாட்டிக் கொண்டிருந்ததை நாங்கள் கண்டோம். நாங்கள் சண்டையிட்டு அவர்களில் ஓரிருவரைக் கீழே சாய்த்தோம். ஆனால் விரைவில் அவர்கள் எங்களை அமுக்கிப் பிடித்தனர். அவர்கள் எங்களைக் கட்டி வைத்து உதைக்கத் துவங்கினர். அவர்கள் எங்களை உருட்டுக்கட்டைகளால் தாக்கினர். கும்பகர்ணனின் பல் தெறித்தது. தீப்பந்தங்களைக் கொண்டு அவர்கள் எங்களைப் பொசுக்கினர். அவர்கள் எங்களைச் சித்தரவதை செய்தபோது நாங்கள் ஒருசில நிமிடங்கள் மதிப்பான மௌனத்தைக் கடைபிடிக்க முயற்சித்துத் தோற்று, வலியில் ஊளையிட்டோம், அழுதோம். பொழுது விடியும்வரை

அவர்கள் எங்களைத் தொடர்ந்து அடித்துக் கொண்டே இருந்தனர்.

நான் கண்விழித்தபோது என் முகத்தின்மீது ரத்தம் பாளம்பாளமாக உறைந்திருந்தது. என் தோலின் ஒவ்வொரு துவாரமும் வலித்தது. கும்பகர்ணன் எனக்கு முன்னதாகவே எழுந்துவிட்டிருந்தான். வீங்கிப் போயிருந்த தனது கருத்தக் கண்களின் ஊடாக அவன் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனது மூக்கும் பற்களும் உடைந்து, அவனது உதடுகள் கிழிந்து, அவனது முகம் சின்னாபின்னமாக ஆகியிருந்தது. அவன் என்னைப் பார்த்துக் கண்ணடித்துவிட்டுப் புன்னகைத்தான். அக்கணத்தில், இவ்வுலகில் வேறு எவரொருவரையும்விட அவனை நான் நேசித்தேன். என்றேனும் ஒருநாள், அவன் எனக்காகவோ அல்லது நான் அவனுக்காகவோ எங்கள் உயிரைக் கொடுப்போம் என்பதை நான் அறிந்தேன். பதிலுக்கு நான் அவனைப் பார்த்துப் புன்னகைத்தேன். நாங்கள் இருவரும் அத்தொழுவத்திலிருந்த தூண்களில் கட்டப்பட்டிருந்தோம். அப்போது அங்கு எங்களைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை. பிறகு, விபீஷணனுக்கு என்ன நிகழ்ந்திருந்தது என்று நான் யோசித்தேன். பரஸ்பரம் ஒருவரையொருவர் ஆழமாக நேசிக்கின்ற இருவருக்கிடையே நிகழ்கின்ற அந்த அமைதியான கருத்துப் பரிமாற்றத்தில், அதே கேள்வி கும்பகர்ணனின் மனத்திலும் உதயமாகியிருந்ததை அவனது முகத்தில் நான் கண்டேன். எங்கள் இருவருக்கும் குலை நடுங்கியது. விபீஷணனும் எங்களைப்போலவே உதைக்கப்பட்டு, ஏதேனும் ஒரு தூணில் கட்டி வைக்கப்பட்டிருந்தானா என்று பார்ப்பதற்காக எங்களால் முடிந்தவரை எங்கள் கழுத்துகளைத் திருப்பினோம். ஆனால் அவன் அங்கு இருந்ததற்கான சுவடே இருக்கவில்லை. அரண்மனைக் காவலர்கள் அவனை அடித்துக் கொன்றுவிட்டு, அமைதியாகப் புதைத்துவிட்டிருந்தனர் என்று நாங்கள் உறுதியாக நம்பினோம். அல்லது எங்களை விடுவிக்குமாறு குபேரனிடம் மன்றாடுவதற்கு எங்கள் தாயாரையோ அல்லது எங்கள் கிராமத்து முதியவரையோ அழைத்து வருவதற்காக அவன் அவர்களுக்குத் தகவல் கொடுத்திருக்கக்கூடும் என்று நாங்கள் நினைத்தோம்.

நாங்கள் சிறையில் அடைக்கப்படுவதற்கோ அல்லது எங்கள் கைகள் துண்டிக்கப்படுவதற்கோ, அசுரச் சட்டப்படி, அவற்றுக்குரிய வயதை நாங்கள் எட்டியிருக்கவில்லை. ஒருசில மாதங்கள் குபேரனின் செக்காலையிலோ அல்லது விவசாய நிலத்திலோ அடிமைகளாக வேலை செய்வதற்கு நாங்கள் கட்டாயப்படுத்தப்படக்கூடும். இது போன்ற தண்டனை, பொருளாதாரரீதியாகத் தனக்கு அர்த்தமுள்ள ஒன்றாக இருந்ததையும் அது தனக்கு ஒருசில செப்புக் காசுகளை

மிச்சப்படுத்திக் கொடுத்ததையும் கோடீஸ்வரனான குபேரன் கண்டான். அவன் அசுரனல்ல. மாறாக, அவன் அரை—காந்தர்வன், அரை—பிராமணன். ஆனால் அனைத்து அசுர விதிகளையும் பின்பற்றுவதை அவன் உறுதி செய்தான். பூர்வீக மக்களின் மதத்திலும் நம்பிக்கைகளிலும் குறுக்கிடாமல் இருப்பது என்று அவன் அதை அழைத்தான். அது வணிகம் மற்றும் வர்த்தகத்தின்மீது கவனம் செலுத்துவதற்கு அவனுக்கு உதவியது.

விபீஷணன் உயிரோடு இருக்க வேண்டும் என்று அமைதியாகப் பிரார்த்தனை செய்தபடி, கும்பகர்ணன் வெறுமனே வெறித்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். அவனது கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் அவனது கன்னங்களை நனைத்தது. நான் அதைக் கவனித்துவிட்டிருந்தேன் என்பதை அவன் கண்டபோது, தன் முகத்தைத் திருப்பிக் கொள்வதற்கு அவன் எள்ளளவும் முயற்சிக்கவில்லை. என் கண்களிலும் கண்ணீர் முட்டி நின்றது. ஒரு வயதான காவலாளி எங்களருகே வந்து எங்கள் கட்டுக்களை அவிழ்த்துவிட்டான். கும்பகர்ணன் நிலைகுலைந்து நிலத்தில் சரிந்தான். அந்தக் காவலாளி அவனை முரட்டுத்தனமாகத் தூக்கி, உதவிக்கு ஆட்களை அழைத்தான். என்னால் நடக்க முடியவில்லை. அப்போதுதான் வேட்டையாடப்பட்டிருந்த ஒரு காட்டு விலங்கைச் சுமந்து செல்வதைப்போல, இரண்டு காவலாளிகள் கும்பகர்ணனை ஒரு கனத்த மூங்கில் கம்பின்மீது சுமந்து சென்றனர். அப்போது கிட்டத்தட்ட நண்பகல் ஆகியிருந்தது. பருவமழைக் காலத்தின்போது, செந்நிற பூமியை ஒருசில மணிநேரம் காய வைப்பதற்காகச் சூரியன் வெளியே தலைகாட்டும்போது ஏற்படுகின்ற வெப்பமும் ஈரப்பதமும் காற்றில் கலந்திருந்தன.

குபேரன் தன் அரியணையில் வீற்றிருந்தான். பனை ஓலைகளால் ஆன ஆவணங்களில் தனது ராஜ முத்திரையைக் குத்துவதில் அவன் மும்முரமாக இருந்தான். வர்த்தகம், சரக்குப் போக்குவரத்துக் கட்டணங்கள், மிளகு விலைகள், ஏலக்காயின் எடைக்கு இணையான தங்கம் போன்றவற்றில் ஏற்பட்டிருந்த பல்வேறு எதிர்பாராத மாற்றங்கள் ஆகியவை குறித்து அவன் தனது ஊழியர்களிடம் கட்டளைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தான். குபேரன் தனது அறிவையும் நியாயத்தையும் வழங்குவதற்காகப் பிற குற்றவாளிகளும் அங்கு காத்துக் கொண்டிருந்தனர். ஆனால் வர்த்தகமும் வாணிகமும் உயர்வாகக் கோலோச்சிய இவ்வுலகில் மற்ற அனைத்தும் முக்கியமற்றவையாக இருந்தன.

கும்பகர்ணன் மயங்கி விழுந்ததை நான் கண்டேன். அவனைத்

தொடர்ந்து நானும் மயங்கி விழவிருந்ததாக நான் பயந்தேன். குபேரனின் பூமிக்குள் அத்துமீறி நுழைந்ததற்காக எங்களுக்கு என்ன தண்டனைகள் வழங்கப்படவிருந்தன என்பதை நான் கேட்க விரும்பினேன். அது முடிவற்ற ஒரு காத்திருப்புப்போலத் தோன்றியது. என் வாழ்வில் முதன்முறையாக, எனது ஒழுக்கநெறியைப் பற்றி நான் யோசித்தேன். மரணத்தைப் பற்றி நினைத்துப் பார்ப்பதற்கு எனக்கு வயது போதவில்லை. ஆனால், என் உடலின் ஒவ்வோர் அங்குலமும் வேதனையால் துடித்துக் கொண்டிருக்க, மரணம் குறித்த எண்ணங்கள் மிகச் சுலபமாக வந்தன. தீர்ப்பு என்னவாக இருக்கும் என்று யோசித்தபடி, கூட்டத்தினரிடையே பதற்றத்தோடு காத்துக் கொண்டிருந்த எனது மாமனை நான் அப்போதுதான் பார்த்தேன். எங்கள் இருவரின் பார்வையும் சந்தித்தன. என் மாமன் என்னைப் பார்த்துப் புன்னகைத்தான். அவனது அந்த அழகான, மனத்தை நெகிழ வைத்தப் புன்னகை என் வேதனையை மறக்கச் செய்தது. அவனது ஒருசில முன்பற்கள் காணாமல் போயிருந்தன, ஆனால் அவனது மனத்தூய்மையை என்னால் உணர முடிந்தது. அவன் கவலைப்பட்டதுபோலத் தெரிந்தான். அதே சமயத்தில், அவன் எங்களுடன் இருக்கும்போது மோசமான எதுவும் எங்களுக்கு நிகழாது என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது.

அரியணைக்கு அருகே நின்று கொண்டிருந்த ஒரு வீரன், “அடுத்தவன்,” என்று குரைத்தான். இதற்கிடையே குபேரன் சில வியாபார ஆவணங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். நேரத்தைச் செம்மையாக நிர்வகிப்பதில் அவன் திறமைசாலி. காவலாளிகள் எங்களைப் பிடித்துத் தள்ளினர். “அரண்மனைத் தொழுவத்தில் அத்துமீறி நுழைந்து, பசுக்களைத் திருட முயற்சித்தக் குற்றத்திற்கு ஆளாகியிருப்பவர்கள்,” என்று தலைமைக் காவலாளி கத்தினான்.

“நாங்கள் நிரபராதிகள்,” என்று நான் கர்ஜிக்க விரும்பினேன். ஆனால் ஒரு சிறுவனுக்குரிய ஒரு கீச்சுக்குரல் மட்டுமே என்னிடமிருந்து வெளிவந்தது. அரசவையில் ஒரு தீடீர் மௌனம் நிலவியது. தர்பாரில் அரசனின் முன்னிலையில் பேசுவதற்கு யாரும் ஒருபோதும் துணிந்திருக்கவில்லை. குபேரன் தனது பனை ஓலைகளில் மூழ்கியிருந்தான். அங்கு ஏற்பட்டிருந்த மௌனத்தை உணர்வதற்கு அவனுக்கு ஒருசில வினாடிகள் ஆனது. அவன் தன் கையிலிருந்த ஒட்டுமொத்த ஆவணத்தையும் நிதானமாகப் படித்து முடித்துவிட்டு, பிறகு அதை ஓரமாக வைத்தான். அதன் பிறகு அவன் தன் தலையை உயர்த்தினான். அவனது முகத்தில் ஒரு புன்னகை மலர்ந்தது. அவன் வசீகரமானவன். அந்தப் புன்னகை அவனது வசீகரத்திற்கு மேலும்

அழகு சேர்த்தது.

ஆனால் அவனது அசைவுகளில் ஏதோ குறுகுறுப்பான ஒன்று தென்பட்டது. "ஆஹா! யார் நம் அரசவைக்கு வருகை தந்திருப்பது? என் அன்புக்குரிய மாற்றாந்தாய் மகன்கள். உங்கள் வருகை என்னைக் கௌரவப்படுத்துகிறது. நீங்கள் கேட்டிருந்தால், ஒருசில பசுக்களை நானே உங்களுக்குப் பரிசளித்திருப்பேன். மாறாக, நீங்கள் திருட விரும்பியிருக்கிறீர்கள். உங்கள் இயல்பு அது. நீங்களும் உங்கள் தாயாரைப்போலவே நடந்து கொள்கிறீர்கள். ஆக, என்ன தண்டனையை விரும்புகிறீர்கள் — உங்கள் கைகளைத் துண்டிக்கவா அல்லது உங்கள் மூக்குகளை வெட்டி எறியவா அல்லது நீங்கள் திருடர்கள் என்று உங்கள் கன்னங்களில் வெறுமனே ஒரு முத்திரையிடவா? உறவினர்களுக்கு நான் தனிச்சலுகை காட்டுவதாக யாரும் என்னைக் குறைகூறிவிடக் கூடாது."

"ஐயா, நான் உங்களிடம் ஒரு வேண்டுகோள் விடுக்கலாமா?" என்று கேட்டபடி, மாரீசன் அரசவையின் மத்திக்கு நடந்து வந்தான். நூறு ஜோடிக் கண்கள் அவனைத் துளைத்துவிடுவதுபோலப் பார்த்தன. தேவ அரசவையின் மரபொழுங்கை அவன் மீறியிருந்ததாக நான் நினைக்கிறேன். பண்பாடற்ற அசுரர்கள்! அவர்கள் குழந்தைகளைப்போல நடந்து கொள்கின்றனர். எங்களை நாகரீகமானவர்களாக ஆக்குவது தேவர்களின் சுமை என்று நான் நினைக்கிறேன். என் மாமன் என்ன செய்து கொண்டிருந்தான் என்று நான் திகிலோடு பார்த்துக் கொண்டிருந்தேன். நான் என் தொண்டை கிழியக் கத்தி அவனைத் தடுத்து நிறுத்த விரும்பினேன், ஆனால் தண்டனைக்குப் பயந்து நான் அவ்வாறு செய்யவில்லை. அந்த வயதான மூடன் மேலும் தவறிழைத்துக் கொண்டிருந்தான். அன்பான கிழட்டுக் குறும்புக்காரன்! நாங்கள் எந்தத் தண்டனையும் இன்றிச் சுலபமாகத் தப்பிவிடுவோம் என்று எனக்குள் ஒரு சிறு நம்பிக்கை முளைவிட்டது. "ஐயா, இவர்கள் அறியாக் குழந்தைகள். தாங்கள் செய்து கொண்டிருந்த காரியம் என்னவென்று இவர்களுக்குத் தெரியவில்லை."

முட்டாள் சிறுவனான என்னை நோக்கி அனைத்துக் கண்களும் திரும்பியபோது என் கன்னங்கள் சிவந்து கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. நான் அப்போது பதினாறு வயது வாலிபன். அவர்கள் என்னை இன்னும் ஒரு சிறுவன் என்று அழைத்துக் கொண்டிருந்தனர். இதிலிருந்து நான் தப்பினாலும்கூட, என் எஞ்சிய வாழ்நாள் முழுவதும் எனது நண்பர்கள் என்னைக் கேலி செய்வார்கள். என்னுடைய பருவ வயதுக் கோபத்தில் மூழ்கியிருந்த நான் அங்கு கூறப்பட்டுக் கொண்டிருந்த ஓரிரு வாக்கியங்களைக் கவனிக்கத் தவறிவிட்டேன். என்

மாமன் கூறிக் கொண்டிருந்த விஷயத்தின் தீவிரம் எனக்கு உறைக்கத் துவங்குவதற்கு எனக்குச் சிறிது நேரம் பிடித்தது.

"ஆக, இந்த அசிங்கமான போக்கிரிகளின் விடுதலைக்குப் பதிலாக நீ உன்னை ஒப்படைக்கப் போகிறாயா? நேற்றிரவு உனக்குக் கிடைத்தப் பெருவிருந்தில் நீ உண்டு களித்த மதுவின் நீடித்த மயக்கத்தில் நீ இதைக் கூறவில்லை என்று நான் நினைக்கிறேன். நீ உன் சொந்த விருப்பப்படிதான் கூறுகிறாய் என்று நான் நம்புகிறேன். அது சரி, நீ ஒரு போர்வீரன் என்று கூறுகிறாய். ஆனால் அதை நிரூபிக்க, காணாமல் போயுள்ள ஒருசில பற்களும், ஒரு தாங்குக் கயிற்றில் தொங்கிக் கொண்டிருக்கும் உனது ஒரு கையும்தான் உன்னிடம் இருக்கின்றன," என்று குபேரன் எகத்தாளமாகக் கூறியபோது, அரசவையில் எழுந்த சிரிப்பு எங்களைச் சுற்றி எதிரொலித்தது.

"செக்காலையில் ஆறு வருடங்கள்." அந்தக் கட்டளை ஒரு மின்னலைப்போல வேகமாக வந்தது. நான் நடுங்கினேன். கும்பகர்ணன் விழிக்கத் துவங்கியிருந்ததுபோலத் தோன்றியது. மாரீசனும் அதிர்ச்சியடைந்திருந்ததை என்னால் காண முடிந்தது. ஒரு சிறு அத்துமீறலுக்கு இது மிகக் கொடுமையான தண்டனை. அந்த வயோதிகனின் கண்களில் கண்ணீர் அரும்பிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். அவனது மனைவி மற்றும் இரு குழந்தைகளின் முகத்தை என்னால் காண முடிந்தது. அவனது இந்த நிலைமைக்கு நான்தான் காரணம். அவனுக்கு என்ன வயதிருக்கும்?

முப்பது, முப்பத்தைந்து? பதினாறு வயதுப் பருவ வயதினனாக இருந்த எனக்கு, இருபது வயதுக்கு மேற்பட்ட எல்லோருமே வயதானவர்களாகத் தோன்றினர். ஆறு வருடங்கள் என்றால், செக்கு ஆலைக்கு வெளியே வரும்போது அவனுக்கு நாற்பத்தோரு வயதாகியிருக்கும். அதுவும், அவன் உயிரோடு வெளியே வந்தால் மட்டுமே. அனைத்துத் தண்டனைகளிலும் செக்காலைதான் மிகக் கொடூரமானதாக இருந்தது. காளை மாடுகளுக்குப் பதிலாக, ஆண்கள் செக்கில் பூட்டப்பட்டனர். அவர்கள் செக்கை இழுத்து, எள்ளு விதைகளை எண்ணெயாகக் கசக்கிப் பிழிய வேண்டியிருந்தது. இது அவர்களுடைய ஜீவனை அவர்களிடமிருந்து பறித்தது. அந்த முதியவனுக்கு வருடம் 365 நாட்களும் முதுகொடிய இருபத்து நான்கு மணிநேரம் வேலை. அதுவும் ஆறு வருடங்கள்! அவனது கோபக்கார மருகன்கள் கதாநாயகர்களைப்போல நடந்து கொள்ள விரும்பியதாலும், தங்களது மாற்றாந்தாயின் மகனின் எல்லைகளுக்குள் அத்துமீறி நுழைந்ததாலும் அந்த முதியவனுக்கு இந்த நிலைமை.

"ஓர் அரசனை எவ்வாறு அழைக்க வேண்டும் என்று இந்த

வயோதிகச் சண்டாளன் கற்றுக் கொள்வதற்கு இன்னொரு வருடத்தைச் சேர்த்துப் போட்டுக் கொள்ளுங்கள். ஐயாவாம் ஐயா! அடுத்து!”

நான் இதைப் பீதியோடு செவிமடுத்தேன். இதுதான் நியாயம். மின்னல் வேக நியாயம். அரசவையை அவமதித்ததற்காக என் வயதான மாமனுக்குக் கூடுதலாக ஒரு வருட அடிமை வேலை. என் மாமன் தன் கால்விரல்களை வெறித்துப் பார்த்தான். காவலாளிகள் அவனது கைகளில் விலங்கிட்டனர். பிறகு அவன் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு, காவலர்களால் தரதரவென்று இழுத்துச் செல்லப்பட்டான். மக்கள் சிரித்தனர். தங்கள் இனத்தைச் சேர்ந்த ஒருவன் தான் செய்யாத குற்றத்திற்காக ஒரு விலங்கைப்போல நடத்தப்பட்டதைக் கண்டு எனது மக்களாகிய அசுரர்களே சிரித்தனர். சிலர் விசிலடித்தனர். நாங்கள் அரசவையிலிருந்து இழுத்துச் செல்லப்பட்டு வெளியே தள்ளப்பட்டோம். அரசாங்கத்திற்கு எங்களால் இனி எந்தப் பிரயோஜனமும் இருக்கவில்லை. எங்கள் எலும்புகள் உடைந்திருந்தன. எங்களது உள்ளுறுப்புகள் பாதிக்கப்பட்டிருந்தன. எனவே, நன்றாகக் கடித்துச் சவைக்கப்பட்டக் கோழி எலும்புகளைப்போல நாங்கள் தூக்கி வீசப்பட்டிருந்தோம். அரசாங்கம் எங்களை நன்றாகச் சவைத்துத் துப்பியிருந்தது. பிறகு, முதல் கல் என்னைத் தாக்கியது. விரைவில் என்மீது ஒரு கல் மழையே பொழிந்தது. எனது வயதான மாமனைக் கடின உழைப்பிற்கு அனுப்பியதற்காக என் மக்கள் என்மீது கல்லெறிந்து கொண்டிருந்தனர். அவர்களுடைய மலட்டுக் கோபம் இரண்டு பருவ வயதினரின்மீது வெளிப்படுத்தப்பட்டுக் கொண்டிருந்தது. ஆக, இதுதான் முடிவு என்று நான் நினைத்தேன். என் அன்புக்குரிய வயோதிக மாமனைச் சிறைக்கு அனுப்பிய பிறகு, ஒரு திருடனாக என் மக்களின் கைகளில் இழிவாக இறக்கப் போகிறேன். உலகத்தை வெற்றி கொண்டு தனது மக்களை விடுவிக்கப் போவதாகக் கனவு கண்ட ஒரு முட்டாளுக்கு எப்பேற்பட்ட முடிவு ஏற்பட்டுள்ளது!

கல்லெறி எவ்வளவு வேகமாகத் தொடங்கியதோ, அதே வேகத்தில் நின்றும் போனது. என் முகத்தில் ரத்தம் வழிந்தோடிக் கொண்டிருக்க, என் தாயார், செயலற்றுப் போயிருந்த கும்பர்கர்ணனின் உருவத்தைக் கட்டிப் பிடித்துக் கட்டுக்கடங்காமல் அழுது கொண்டிருந்தார். அதிர்ஷ்டவசமாக, பெண்களைக் கல்லெறிந்து சாகடிக்கும் அளவுக்கு, எங்களது குடிமக்கள், நாகரீகத்தின் அந்த உயரங்களை இன்னும் எட்டியிருக்கவில்லை. கடவுள் எங்கள் வாழ்வில் அவ்வப்போது பொழிந்து கொண்டிருந்த சிறு சிறு கருணைக்கு நாங்கள் அவருக்கு நன்றி கூறியாக வேண்டும். நாங்கள் மெதுவாக எங்கள் குடிசைக்குத்

தூக்கிச் செல்லப்பட்டோம். என் அத்தை நினைவின்றிக் கிடந்தாள். அவளது இரட்டைக் குழந்தைகள் அழுது கொண்டிருந்தனர். பொன்னான இதயத்தையும், ஒரு குண்டான தேகத்தையும், ஆனால் ஒரு பாம்பின் நாக்கையும் கொண்டிருந்த அவலட்சணமான எங்கள் அண்டைவீட்டுக்காரப் பெண்மணி அக்குழந்தைகளின் அழுகையை நிறுத்தப் படாதபாடு பட்டுக் கொண்டிருந்தாள். விபீஷணன் எங்களை ஏறெடுத்துக்கூடப் பார்க்காமல், சமஸ்கிருதத்தில் இருந்த ஒரு புத்தகத்தை ஒரு மூலையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். என் உடல் கோபத்தில் கொந்தளித்தது. ஆக, காவலாளிகள் அவனைப் புதைத்திருக்கவில்லை. குபேரனின் காவலர்களால் நாங்கள் துவைத்தெடுக்கப்பட்டுக் கொண்டிருந்தபோது, படிப்பில் கெட்டிக்காரனான இந்த நல்லவன், வீட்டிற்கு வந்து உறங்கிப் போயிருந்திருக்கிறான். பிறகு, வயதான எங்கள் மாமன், காளைகளோடு வேலை செய்வதற்குச் செக்காலைக்கு இழுத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தபோது, இந்தச் சண்டாளன் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, தேவர்களின் அர்த்தமற்ற நூலொன்றை ஒரு தவளைபோல ஓதிக் கொண்டு இருந்திருக்கிறான்.

அவனை அங்கேயே அப்போதே கொலை செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ‘ரிக் வேதம்’ எனும் அந்த நூலை நான் அவனது தொண்டைக்குள் திணிக்க விரும்பினேன். நான் இன்னும் பலவற்றைச் செய்ய விரும்பினேன். அந்த நேரத்தில் அவன் என் கண்களை எதிர்கொண்டான். மூலையிலிருந்து எழுந்து வந்து அவன் என் பாதங்களின் அருகே தரையில் உட்கார்ந்தான். நான் என் காலை உயர்த்தி அவனது முகத்தின்மீது எட்டி உதைக்க முயற்சித்தேன். மாறாக, ஒரு வேதனைக் குரல்தான் என்னுள்ளிருந்து வெளிவந்தது. எங்கே எட்டி உதைக்க வேண்டும் என்பது குபேரனின் காவலாளிகளுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. விபீஷணன் ஒரு குழந்தையைப்போல அழத் துவங்கினான். அவன் என் பாதங்களைத் தன் கைகளால் கட்டிக் கொண்டான். அது நரக வேதனையாக இருந்தது. ஆனால் அவன் என் பாதங்களைத் தன் பிடியிலிருந்து விட மறுத்தான். தான் பயந்து போனதாகவும், நடந்த விஷயத்தை என் மாமனிடம் கூறுவதற்கான துணிச்சல் காலையில் வெகுநேரம்வரை தனக்கு வரவில்லை என்றும் அவன் என்னிடம் கூறினான். நடந்த அனைத்திற்கும் தான் மிகவும் வருந்தியதாகக் கூறிய அவன், தனது மூத்த அண்ணனான நான் எல்லாவற்றையும் மறந்து, தன்னை மன்னித்து, தன்னை அரவணைத்துக் கொள்ள வேண்டும் என்றும் விரும்பினான்.

நான் அவனை இரண்டாகக் கிழித்தெறிய விரும்பினேன். நான்

எழுந்து உட்கார முயற்சித்தேன். அப்போது எனக்குள்ளிருந்து எழுந்த முனகல் சத்தம் என் தாயாரை அச்சுறுத்தியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அவர் கும்பகர்ணனை விட்டுவிட்டு என்னிடம் வந்தார். பிறகு, கோபத்தில் கொதித்துக் கொண்டிருந்த என் மனத்திற்கு ஆறுதலளிப்பதற்காக, நெடுங்காலத்திற்கு முன்பே கடந்து சென்றுவிட்ட எனது குழந்தைப்பருவத்துப் பாடல்களைப் பாடினார். பாலுக்காக அவரது மார்புக்காம்புகளைத் தேடிக் கொண்டிருந்த ஒரு தொட்டில் குழந்தை நான் என்பதுபோல அவர் எனக்காகப் பாடினார். அசுரர்களின் வீரதீரத்தைப் பற்றிய பழைய பாடல்களையும், நெடுங்காலத்திற்கு முன்பே தொலைந்து போன அசுரர்களின் பெருமையைப் பற்றிய பாடல்களையும் அவர் பாடினார். என் இளைய சகோதரன் குறித்து எனக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பு நீங்கி அன்பு மலர்ந்தது. பிறகு நான் நன்றாகத் தூங்கினேன். நான் கண்விழித்தபோது, என் கோபம் காணாமல் போயிருந்தது.

அடுத்த நாள் என் அத்தை எங்கள் கிராமத்தைவிட்டுச் சென்றிருந்ததை நான் அறிந்தேன். தான் ஒரு நெசவாளர் அமைப்பில் சேர்ந்துவிட்டிருந்ததாக அவள் எங்களுக்குச் செய்தி அனுப்பினாள். சம்பளம் அவ்வளவு சொல்லிக் கொள்ளும்படியாக இல்லாவிட்டாலும்கூட, தலைக்கு மேலே ஒரு கூரையையும் தினமும் இருவேளைச் சாப்பாட்டையும் அந்த அமைப்பு அவளுக்கு வழங்கியது. ஒரு சிறிய அசுர மாநிலத்தின் முன்னாள் அரசிக்குரிய வாழ்க்கை அதுவல்ல என்றாலும், இரவு வானின் நட்சத்திரங்களையும் நிலவையும் தெளிவாகக் காட்டிய ஓர் ஓட்டைக் குடிசையைவிட நிச்சயமாக இது சிறந்ததுதான்.

நெடுங்காலத்திற்குப் பிறகு நான் என் குடும்பத்தைச் சந்தித்துக் கொண்டிருந்தேன். தனது சகோதரியின் குடும்பம் பத்திரமாக வந்து சேர்வதற்காகத் தன் மனைவி ஏழு வருடங்களாக வியர்வை சிந்தி உழைத்துச் சம்பாதித்திருந்த ஒரு முத்து அட்டிகையைத் தாரை வார்த்துக் கொடுக்கவோ அல்லது தனது மருமகன்களின் விடுதலைக்காக ஒரு கொடுங்கோலனின் சிறையில் எள்ளு விதைகளை அரைக்க வேண்டியிருந்தது குறித்தோ கவலைப்படாத என் வயோதிக மாமனுக்குத்தான் நான் நன்றி கூறியாக வேண்டும். குறும்புத்தனமாகப் புன்னகைத்துக் கொண்டிருந்த என் குறும்புக்கார மாமன் கூடுதலாக ஒருசில பற்களை இழந்திருந்தான். ஆனால் கடந்த முறை சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட நிலையில் நான் அவனைப் பார்த்திருந்ததைவிட, இப்போது அவன் அதிக ஆரோக்கியமாகத் தோன்றினான். அவனுக்கு இப்போது நாற்பத்தியிரண்டு வயது. ஆனால் அவனது பழைய இயல்பு

மாறாமல் அப்படியே இருந்தது. அவனது நகைச்சுவை உணர்வு எள்ளளவும் குறைந்திருக்கவில்லை. தன் காலத்தில் ஓர் அரசனாக இருந்த அவன், தன் அன்புக்குரியவர்களைக் காப்பாற்றுவதற்குத் தன் வாழ்க்கையைத் தியாகம் செய்ய எப்போதுமே தயாராக உள்ள, அன்புள்ளம் கொண்ட ஒரு மாமனாக என்றென்றும் இருப்பான். அதை நான் என்றும் நினைவில் வைத்திருப்பேன்.



# 10

## கவர்ந்திழுக்கிறது முத்துத் தீவு

ராவணன்

எங்களது உயர்மட்டக் குழு ஆலமரத்தின் கீழே குழுமியிருந்தது. பிரஹஸ்தன் நடுவராக இருக்க, நான் அந்தச் சந்திப்புக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கினேன். விவாதம் காரசாரமாகத் தொடர்ந்தது. யாருமே அறிவுபூர்வமாகப் பேசவில்லை. எப்படியாவது இலங்கையை வெற்றி கொள்ள வேண்டும் என்று எல்லோருமே விரும்பினர், ஆனால் எவ்வாறு அதைச் செய்வது என்பது குறித்து யாருக்கும் எந்தவொரு திட்டவட்டமான யோசனையும் இருக்கவில்லை.

“மேன்மை பொருந்தியவரே, நாம் வணிகர்களாகப் போனால் என்ன?” பத்ரனின் குரல் என்னைத் திடுக்கிடச் செய்தது. அவன் எங்களை அணுகிக் கொண்டிருந்த சத்தம்கூட எனக்குக் கேட்டிருக்கவில்லை. அவன் எப்போதும் எதையாவது கூற முற்பட்டுக் கொண்டே இருந்ததால், அவனுடைய முன்னிலையில் நான் எப்போதுமே அசௌகரியமாக உணர்ந்தேன். ஒரு வேலைக்காரன் எங்களது ஆலோசனைக் கூட்டத்தில் குறுக்கிட்டு, தன்னிடம்

கேட்கப்படாமலேயே தனது போர் உத்திகளை எங்களுக்கு வழங்குவதை நான் விரும்பவில்லை. அதோடு, யாரும் இல்லாத சமயங்களில் நான் அவ்வப்போது அவனிடம் தனியாகப் பேசியிருந்தது வேறு யாருக்கும் தெரிய வருவதையும் நான் விரும்பவில்லை. அவன் கூறிய பல விஷயங்கள் அர்த்தமுள்ளவையாக இருந்தன. எனது ஆலோசனைக் கூட்டத்தில் என்னுடைய யோசனைகளாக நான் முன்வைத்தப் பல விஷயங்கள் உண்மையிலேயே அவனுடையவையாக இருந்தன. இப்போது அவன் மீண்டும் தனது போர் உத்திகளில் ஒன்றை என்னிடம் கூற வந்திருந்தான் என்று நான் சந்தேகித்தேன்.

"நாம் எதை வர்த்தகம் செய்யப் போகிறோம்?" என்று என்னால் அவனிடம் கேட்காமல் இருக்க முடியவில்லை.

"முசிறியிலுள்ள அரேபியர்களிடம் இருந்து நாம் குதிரைகளை ஏற்பாடு செய்யலாம். மலைகளிலிருந்து மிளகையும், கிழக்குக் கடற்கரையிலிருந்து மாணிக்கங்களையும், முசிறியிலுள்ள கிரேக்க முகாமிலிருந்து தங்கத்தையும் நாம் வாங்கிக் கொள்ளலாம். பணக்கார வணிகர்களிடமிருந்து குத்தகைக்குச் சில கப்பல்களை நம்மால் பெற்றுக் கொள்ள முடியும். தீபகற்பத்தைச் சுற்றிச் சென்று, இந்தியாவின் தென்கிழக்கு முனையின் வழியாக நாம் இலங்கைக்குள் நுழையலாம். தென்கிழக்கு முனையில்தான் கடல் மிகவும் குறுகலாக உள்ளது. நானூறு மக்களைச் சுமந்து செல்லக்கூடிய இரண்டு கப்பல்கள் போதும்."

"அறிவிலியே, நானூறு முட்டாள்களை வைத்துக் கொண்டு இலங்கையை வெற்றி கொள்ள நீ திட்டமிடுகிறாயா?" என் கோபத்தை என்னால் அடக்க முடியவில்லை.

என் கோபம் தணிவதற்காக பத்ரன் காத்திருந்தான். பிறகு, "இலங்கையிலிருந்து திரும்பி வரும் நமது கப்பல்கள் ஒவ்வொன்றும் யானைத் தந்தங்களையும் முத்துக்களையும் கொண்டு வரும். அக்கப்பல்கள் ஒவ்வொன்றும் இருபது நபர்களையும் திருப்பிக் கொண்டு வரும். இலங்கையில் இறக்கிவிடப்பட்டுள்ள மீதி நபர்கள் இலங்கை அரசனைச் சந்தித்து, கடற்கரையோரமாக ஒரு வணிகர் சங்கத்தை நிர்மாணிக்கும்படி அவனிடம் வேண்டுகோள் விடுக்கலாம். நெசவாளர்கள் தெருவிற்கு அருகே உள்ள, திரிகோட்டா நகரக் கோட்டையின் கிழக்கு வாசலுக்கு அருகே அச்சங்கத்தை நிர்மாணித்தால் நல்லது.

நான் அவனது யோசனையை விரும்பத் துவங்கியிருந்தேன். "அப்படியானால், ஆறு பயணங்களில் அனைவரையும் நாம் அத்தீவிற்குக் கொண்டு போய்ச் சேர்த்திருப்போம். ஆயுதங்களை உள்ளூர்ச் சந்தையில் நாம் வாங்கிச் சேமித்துக் கொள்ளலாம்."

“மேன்மை பொருந்தியவரே, ஆறு பயணங்கள் இதற்குத் தேவையில்லை. அதற்கு அதிக நேரம் செலவாகும். முதல் குழுவினர் அங்கு குவிக்கப்பட்டவுடன், ஒரு கட்டுமரத்திற்குப் பத்து அல்லது இருபது நபர்கள் என்ற கணக்கில், நாம் சிலநூறு பேரைக் கட்டுமரங்களில் மீனவர்களைப்போல அனுப்பலாம். பிறகு, நமது கப்பல்கள் இரண்டாவது முறையாக இந்தியாவிலிருந்து இலங்கைக்குச் செல்லும்போது, அதிகமான படைவீரர்களைச் சுமந்து செல்லலாம். இம்முறை வடக்கு வாசலின் அருகே இன்னொரு வணிகர் சங்கத்தை அவர்கள் உருவாக்கலாம். நாம் தொடர்ந்து இப்படிச் செய்தால், ஒரு மாதத்திற்குள் நமது படையில் ஐம்பது சதவீதத்தை நம்மால் அங்கு அனுப்பியிருக்க முடியும். கப்பல் மூன்றாவது முறையாக இலங்கைக்குச் செல்லும்போது, நாம் குதிரைகளையும் ஆயுதங்களையும் மட்டும் வாங்கிச் சென்று, துறைமுகத்திலிருந்து ஒரு மணிநேரப் பயண தூரத்தில் ஆழ்கடலில் நங்கூரம் பாய்ச்சி நிற்கலாம்.”

அவனது இந்த யோசனை எனக்குப் பிடித்திருந்தது. எனது இரண்டு கப்பல்களையும் நிரப்புவதற்குப் போதுமான பணம் மட்டுமே எனக்குத் தேவையாக இருந்தது. ஆனால் இதற்குக்கூட, மகாபலியிடமிருந்து நான் பெரும் தொகையைக் கடன் வாங்கியாக வேண்டும். அந்த முதியவர் அதற்கு ஒத்துக் கொள்வாரா என்று எனக்குத் தெரியவில்லை. இல்லையென்றால், கடல்களில் ஓரிரு கப்பல்களை வேட்டையாடுவதைத் தவிர எனக்கு வேறு வழியிருக்காது. அது ஓர் ஆபத்தான காரியம்தான். ஏனெனில், குபேரனின் கடற்படையையோ, அல்லது அந்தப் பகுதிகளில் ஒரு பாதுகாப்பு வட்டத்தை அமைத்திருந்த வருணனின் கப்பல்களையோ நாங்கள் எதிர்கொள்ளக்கூடும். கடலில் தனியாகச் சண்டையிடுவதை விட்டுத் தள்ளுங்கள், எங்கள் படையில் இருந்தவர்களில் பாதிப் பேருக்கு நீச்சல் தெரியுமா என்பதுகூடச் சந்தேகம்தான். இவர்களில் பலர் தங்கள் வாழ்நாளில் கடலையே பார்த்ததில்லை. உயர்மட்டக் குழு கூடும்போது பிரஹஸ்தன் இந்தத் திட்டத்தை எதிர்ப்பான் என்பதை நான் அறிந்தேன். ஆனாலும் என் அதிகாரத்தைப் பயன்படுத்தி நான் அவனை ஒப்புக் கொள்ள வைத்தாக வேண்டும். இந்தத் துவக்க நிலையிலேயே எந்தவிதமான மனக்கசப்புகளும் உருவாவதை நான் விரும்பவில்லை.

“மேன்மை பொருந்தியவரே, நான் போகலாமா?” தனது முகாமிற்குச் செல்லத்தான் பத்ரன் என்னிடம் அனுமதி கேட்டதாக நான் நினைத்தேன். அங்கிருந்து போகுமாறு என் கையால் சைகை காட்டிவிட்டு, மீண்டும் நான் சிந்தனையில் மூழ்கினேன்.

“மேன்மை பொருந்தியவரே, நான் முதலில் இலங்கைக்குப் போக

விரும்புகிறேன்." ஏதோ என்னைத் தாக்கியதுபோல இருந்தது. நான் என் தலையைத் திருப்பி அவனை முறைத்துப் பார்த்தேன்.

"நான் உன்னை அங்கே அனுப்புவேன் என்று எதனால் நீ நினைத்தாய்?"

"நான் அங்கு உங்களுக்கு மிகவும் பயனுள்ளவனாக இருப்பேன்."

அவன் ஓர் உளவாளியாகப் போக விரும்பினான். வில்போல வளைந்த கால்கள், பானை வயிறு, சுருள் முடி, நள்ளிரவைப் போன்ற கரிய நிறம் — பெயருக்குக்கூட யாரும் அவனை மதிக்க மாட்டார்கள். பொதுமக்களில் ஒருவனாக அவனால் சுலபமாக ஒன்றுகலந்துவிட முடியும். அங்கு அவன் ஒரு பச்சோந்தியைப்போல ஒன்றுகலந்துவிடுவான். அவன் இந்த முகாமைவிட்டு ஓடிப் போகவிருந்தானா? அவன் குபேரனின் உளவாளியா? எங்களை ஒரு வலையில் சிக்க வைக்கவிருந்தானா? திடீரென்று நான் கலக்கமடைந்தேன். அவன் எங்கும் போகப் போவதில்லை என்று நான் அவனிடம் கூறினேன். அன்றிரவு நான் அவனிடம் பேசிவிட்டு, அடுத்த நாள் காலையில் அவனை அங்கிருந்து ஒரேயடியாக அனுப்பிவிடுவது நல்லது என்று நான் நினைத்தேன். அவன் சற்று அசௌகரியமாக உணர்ந்தான். அவன் ஏமாற்றமடைந்திருந்ததை என்னால் காண முடிந்தது. "நண்பனே, என்னால் உன்னை அவ்வளவு சுலபமாகப் போக விட்டுவிட முடியாது. உன்னைப் பற்றி ஏதோ மர்மமான விஷயம் உள்ளது," என்று நான் அவனிடம் கூற நினைத்தேன். மாறாக, நான் அவனைப் பார்த்துப் புன்னகைத்தேன். என்னால் எவ்வளவு சுலபமாகப் பொய் கூற முடிந்தது என்பதைக் கண்டு நான் திகைத்தேன்.

பத்ரன் குழம்பினான். நான் நடந்து கொண்ட விதம் அவனது ஆழ்மனத்தில் ஏதோ எச்சரிக்கை மணிகளை ஒலிக்கச் செய்திருந்ததாக நான் நினைத்தேன். "நான் இவனைக் கவனமாகக் கண்காணித்தாக வேண்டும். இவனால் எனக்கு ஆபத்து ஏற்படக்கூடும்," என்று என்னை நானே எச்சரித்துக் கொண்டேன். நான் மிடுக்காக நடந்தேன். அவன் மெதுவாகவும் நிதானமாகவும் அடியெடுத்து வைத்து என்னைப் பின்தொடர்ந்தான். தனது அடுத்த நடவடிக்கையைப் பற்றி அவன் யோசித்துக் கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. ஒரே வீச்சில் அவனது தலையைச் சீவுவதற்குத் தயாராக நான் என் கையால் என் வாளின் பிடியைப் பற்றியிருந்தேன். நான் எனது உயர்மட்டக் குழுவினரிடம் சென்று, எனது யோசனையை, அதாவது, பத்ரனின் யோசனையை முன்வைத்தேன். ஆனால் அது என் யோசனை என்பதுபோல இப்போது நான் சிந்திக்கத் துவங்கியிருந்தேன். எனக்குக் கீழே உள்ள ஒருவனின் யோசனையைத் திருடி, அதற்கு நான் உரிமை

கொண்டாடுவது எனக்கு மிகச் சுலபமாக வருவதற்குக் காரணம், என்னோடு பிறந்த தலைமைத்துவப் பண்புகளாக இருக்கலாம். அவை இன்னும் ஆரம்ப நிலையில் இருந்ததால், அந்த யோசனைகள் யாருடையவை என்பது எனக்கு நினைவிருந்தது. பின்னாளில், நான் ஓர் உண்மையான தலைவனாக ஆனபோது, அனைத்து நல்ல யோசனைகளும் என்னிடமிருந்து வெளிவந்தன என்பதிலும், மோசமான மற்றும் முட்டாள்தனமான யோசனைகள் வேறு யாருக்கோ சொந்தமானவை என்பதிலும் நான் உறுதியாக இருந்தேன். உயர்மட்டக் குழு கடுஞ்சீற்றத்துடன் ஒரு விவாதத்தைத் துவக்கியது. நான் என் கையை உயர்த்தினேன். அவர்கள் அதைக் கவனிப்பதற்கு ஒருசில நிமிடங்கள் ஆயின. பிறகு அவர்கள் தங்கள் விவாதத்தை நிறுத்தினர். அந்த ஆரம்ப நாட்களில், வெறுமனே ஒரு பார்வையாலோ, அல்லது வெறுமனே எனது புருவங்களை உயர்த்தியதன் மூலமாகவோ மக்களை அமைதிப்படுத்தும் பண்பை நான் இன்னும் அடைந்திருக்கவில்லை.

பிரஹஸ்தன் உடனடியாக ஒரு மறுப்பை முன்வைத்தான். "இது மிகவும் ஆபத்தானது. நம்மிடையே ஓர் உளவாளி இருந்தால் என்னவாகும்? இலங்கையில் நாம் முதலில் கொண்டு குவிக்கும் குழுவினர் கைது செய்யப்பட்டுக் கொல்லப்பட்டால் என்ன செய்வது? மேலும், இது ஒரு வஞ்சகமான வழிமுறை. அசுரர்கள் ஒருபோதும் இவ்வழியில் சண்டையிடுவதில்லை. உண்மையான ஆண்மகன்களைப்போலச் சண்டையிடுவதுதான் நமது வழக்கம். சண்டையிடுவதற்குத் தேவையான பணபலமும் படைபலமும் நமக்குக் கிடைக்கும்வரை நாம் காத்திருப்பதுதான் புத்திசாலித்தனமான காரியம். அப்படி நாம் போரிடும்போது, நாம் வீரர்களைப்போலச் சண்டையிட வேண்டும். ராவணா, இந்த யோசனை முட்டாள்தனமான வழியாகத் தோன்றுகிறது. உன் போக்கு என்னை ஆச்சரியப்படுத்துகிறது."

ஆதரவு காட்டுகின்ற ஒரு குரலில் அவன் பேசியது எனக்கு எரிச்சலூட்டியது. அதோடு, நான் அரசன் என்பதையும், தான் வெறுமனே ஒரு பிரதம மந்திரி என்பதையும் மறந்துவிட்டு, என்னை மதிப்போடு அழைப்பதற்குப் பதிலாக, குழுவின் முன்னால் என்னை என் பெயரைச் சொல்லி மரியாதையின்றி அவன் அழைத்துக் கொண்டிருந்தான். அவன் என் மாமன் என்பது உண்மைதான். நாங்கள் இருவரும் தனியாக இருக்கும்போது அவன் என்னை அவ்வாறு அழைக்கலாம். ஆனால் பிறர் முன்னிலையில், அவன் கண்ணியமாக நடந்து கொள்ள வேண்டும். அல்லது, நான் கட்டியெழுப்ப முயற்சித்துக் கொண்டிருந்த ஒட்டுமொத்த அமைப்புமுறையும் ஒரு சீட்டுக்கட்டைப்போலக் கடகடவெனச் சரிந்து விழுந்துவிடும்.

மாரீசன் எழுந்து நின்று, "இல்லை, பிரஹஸ்தா, இதற்கு வேறு வழியே இல்லை. ராவணன் நம்முடன் பகிர்ந்து கொண்டுள்ள திட்டம் பிரமாதமானது. நாம் அதை ஆதரித்தாக வேண்டும். சண்டை என்று வரும்போது மற்ற எவரும் நியதி எதையும் கண்டுகொள்வதில்லை. ஆனால் அசுரர்களாகிய நாம் மட்டுமே விதிமுறைகளின்படி நடந்து கொள்கிறோம். அதனால்தான் நாம் எப்போதுமே தோற்று வந்துள்ளோம். ஆனால், உளவாளிகள் குறித்து நாம் கண்காணிப்புடன் இருக்க வேண்டியது அவசியம்தான். எனவே, அன்னியர்களுடனான கருத்துப் பரிமாற்றங்கள் எல்லாவற்றையும் நாம் துண்டித்துக் கொள்ள வேண்டும். ஆனால் அதையும் மீறி, பின்னொரு சமயத்தில் தனது சக உளவாளி வந்து எடுத்துக் கொள்வதற்காக யாரோ ஒருவன் ஒரு பனை ஓலையை ஒரு மரத்தின் பொந்தில் விட்டுச் செல்லக்கூடும். ஆனால் நாம் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டுதான் ஆக வேண்டும்."

என் மாமன்கள் என்னை ஒரு சிறுவனைப்போல நடத்தாமல் இருப்பதை நான் உறுதி செய்து கொள்ள விரும்பினேன். ஏனெனில், அவர்கள் அவ்வாறு செய்தது என்னைச் சிறுமைப்படுத்துவதாக இருந்தது. ஆனால் இவர்கள் எனக்கு மிகவும் மதிப்புவாய்ந்தவர்களாகவும் இன்றியமையாதவர்களாகவும் இருந்ததால் இவர்களை என்னால் எதிர்க்கவும் முடியவில்லை. அப்படியே நான் எதிர்த்திருந்தாலும்கூட, அவர்கள் குழப்பம் மட்டுமே அடைந்திருப்பார்கள்.

"அவனைக் கைது செய்யுங்கள், ஆனால் கொல்ல வேண்டாம். வெறுமனே காவலில் வையுங்கள். அவன் இந்த முகாமைவிட்டு வெளியேறாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்," என்று நான் அவர்களிடம் கூறிவிட்டு என் கைகளைத் தட்டினேன். நீளமான ஈட்டிகளை ஏந்தியபடி இரண்டு வீரர்கள் ஓடி வந்தனர். என் மாமன்களும் என் சகோதரர்களும் குழப்பமடைந்தனர். அந்த வீரர்கள் எனக்குத் தலைவணங்கினர். அவர்களில் ஒருவன் தனது மேலாடையின் நாடாவைத் தவறான முறையில் கட்டியிருந்தான். "அடக் கடவுளே, இந்த முட்டாள்களை வைத்துக் கொண்டு நான் எப்படி அந்த தேவர்களை எதிர்த்துச் சண்டையிடப் போகிறேன்?" நான் அவனை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்ட அவன், எனக்கு இன்னும் அதிக மரியாதை கொடுப்பதுபோல மேலும் தாழ்வாகக் குனிந்தான். ஆனால் உண்மையில், தான் மோசமாக உடையணிந்திருந்த விதத்தை நான் பார்த்துக் கொண்டிருந்ததைத் தெரிந்து கொண்ட அவன், என் பார்வையைத் தவிர்ப்பதற்காகவே அவ்வாறு செய்தான். "பத்ரனைக் கைது செய்யுங்கள், ஆனால் அவனைக் காயப்படுத்த வேண்டாம்.

அவனுக்கு உச்சபட்சப் பாதுகாப்பைக் கொடுத்து, அவனைக் கவனமாகக் கண்காணியுங்கள். அவனது பாதுகாப்பிற்காகவே அரசன் இவ்வாறு கட்டளையிட்டுள்ளதாக அவனிடம் கூறுங்கள். இப்போது நீங்கள் இங்கிருந்து போகலாம்," என்று நான் அந்த வீரர்களிடம் இரைந்தேன். அவர்கள் வேகமாக அங்கிருந்து வெளியேறினர்.

நான் ஏதோ தவறு செய்திருந்ததாக ஒரு தெளிவற்ற உணர்வு எனக்குள் எழுந்தது. ஆனால் அதை என் மனத்தில் புதைத்துவிட்டு, விவாதத்தின்மீது நான் கவனம் செலுத்த முயற்சித்தேன். இலங்கைப் பயணத்திற்கு சுமாலி ஒப்புக் கொண்டான். பிரஹஸ்தன் வேகமாகத் தனிமைப்படுத்தப்பட்டுக் கொண்டிருந்ததை நான் மகிழ்ச்சியுடன் கவனித்தேன். அப்போது விபீஷணன் எழுந்து நின்றதை நான் கண்டேன். அவன் அரிதாகவே பேசியதால், அவனது பேச்சிற்கு உயர்மட்டக் குழுவினர் ஓரளவு மதிப்புக் கொடுத்தனர். ஆனாலும், வழக்கமாக, தேவையற்ற மற்றும் அசௌகரியமான விஷயங்களைப் பற்றி மட்டுமே அவன் பேசியதை நான் கண்டுபிடித்திருந்தேன். அவன் ஒரு தீராத வேதனை. விஷயங்களை ஒரு நெறிமுறைரீதியான கண்ணோட்டத்திலிருந்து அணுகி, எல்லோரையும் அவன் அசௌகரியத்திற்கு ஆளாக்கினான். உங்களுடைய பிரம்மாண்டமான மனசாட்சி உங்கள் தலைக்கு மேலே வட்டமடித்துக் கொண்டிருந்து, நீங்கள் லேசான இன்பத்தை அனுபவிக்கும்போதெல்லாம் அதிர்ச்சியில் தனது தலையை அசைத்து அதற்கு மறுப்புத் தெரிவிப்பதுபோல இருந்தது அது. வாழ்வதற்கான சரியான வழியை ஆராய்வதை ஒரு பழக்கமாக ஆக்கிக் கொண்டிருந்த விபீஷணன், அதன் விளைவாக, எப்படி வாழ வேண்டும் என்பதையே மறந்து போயிருந்தான். தெளிவற்ற, முற்றிலும் பயனற்றப் பிதற்றல்களையும் குழப்பமூட்டும் சடங்குகளையும் உள்ளடக்கிய, ஒரு நடமாடும் விதிமுறைப் புத்தகம் அவன். கர்வம் பிடித்த எனது இந்தச் சகோதரன் பேசிய ஒவ்வொரு முறையும் என் தலைமுடி ஏன் குத்திட்டு நின்றது என்று எனக்குத் தெரியவில்லை. அவனைப் பாதுகாப்பது என் கடமை. நான் அவனை நேசித்தேன். ஆனாலும், அவனது நடவடிக்கைகள் எனக்கு எரிச்சலையே ஊட்டின. அவன் என்னையும் மற்றவர்களையும் மிகச் சிறியவர்களாக உணரச் செய்தான். தான் மட்டுமே சிறந்த பண்புநலன்களின் உறைவிடம் என்பதுபோலவும், நாங்களெல்லாம் வேசி மகன்கள் என்பதுபோலவும் அவன் நடந்து கொண்டான். இது, அளவுக்கதிகமாகவே தத்துவப் புத்தகங்களைப் படித்ததால் ஏற்பட்ட இன்னல்போலும். நீங்கள் அவற்றை ஏராளமாகப் படித்தீர்கள் என்றால், உங்களுக்கு உங்கள்மேல் எந்த நம்பிக்கையும் ஏற்படாது. மாறாக,

அவற்றின் பக்கங்களுக்கு இடையே பரவிக் கிடக்கும் சிக்கலான வாக்குவாதங்களின் அர்த்தமற்ற வார்த்தைகளை நீங்கள் நம்பத் துவங்கிவிடுவீர்கள். ஆனால் எனது கடைக்குட்டிச் சகோதரனுக்காக என் மனத்தில் ஒரு மென்மையான இடம் இருந்தது. விபீஷணன் இன்னும் வளர வேண்டியிருந்தது. தீவினை ஏதுமற்ற உலகம் இது என்று அவன் நம்பினான். தர்மத்தைப் பற்றி அவன் பிரசங்கம் செய்த ஒவ்வொரு முறையும் நான் எரிச்சலடைந்தேன் என்றாலும்கூட, அவன்மீது நான் கொண்டிருந்த பாசம், அவனிடம் கடுமையாக நடந்து கொள்வதிலிருந்து எப்போதுமே என்னைத் தடுத்தது.

விபீஷணன் தன் பேச்சைத் துவக்கினான். "நாம் யாரையும் ஏமாற்றக்கூடாது என்று நான் நினைக்கிறேன். நாம் நேராகக் குபேரனிடம் சென்று, தனது சாம்ராஜ்யத்தில் ஒரு பகுதியையும், தேவர்களுக்கு எதிரான தாக்குதலைத் துவக்குவதற்குச் சிறிதளவு பணத்தையும் நமக்குக் கொடுக்க அவன் தயாராக இருக்கிறானா என்று நாம் அவனிடம் கேட்க வேண்டும். இந்தப் பணத்தை நாம் நன்றாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். பிறகு, நமது மாற்றாந்தாய் மகனான அவனது உதவியுடன், வட இந்தியாவின் தேவ சாம்ராஜ்யங்களுடனான பேச்சுவார்த்தைகளைத் துவக்க வேண்டும் . . ."

இந்தப் பரிந்துரையைக் கேட்டுக் கும்பகர்ணன் வெடிச் சிரிப்புச் சிரித்தான். "குபேரன் தனது மனைவியரையும் நம்முடன் பகிர்ந்து கொள்வானா என்று நாம் அவனிடம் கேட்கலாம். பிறகு அதிகப் பணம் சம்பாதிப்பதற்காக நாம் ஓர் இன்ப விடுதியையும் துவக்கலாம். பிறகு தேவர்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி, அவர்கள் தங்களது சகோதரிகளையும் தாய்மார்களையும் நமது அசுர விலைமாந்தர் சேவைச் சங்கத்திற்கு அனுப்பத் தயாராக இருக்கிறார்களா என்று கேட்கலாம். பிறகு, ஓய்வாக அமர்ந்து, லாப சதவீதங்களைக் கணக்கிடலாம். இறுதியில், அனைத்துத் தேவர்களும் அசுரர்களும் அதே படுகுழியைப் பகிர்ந்து கொண்டு, சகோதரர்களாகவும் ஆகிவிடுவார்கள். அதன் பிறகு அனைவரும் சேர்ந்து என்றென்றும் மகிழ்ச்சியாக வாழ்வார்கள்." சிரிப்பை அடக்க முடியாத கும்பகர்ணன், தனது வயிற்றைப் பிடித்துக் கொண்டு, தரையில் விழுந்து உருண்டான். என்னாலும் என் மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நான் வாய்விட்டு உரக்கச் சிரித்தேன். பிரஹஸ்தனாலும் தனது புன்னகையகைக் கட்டுப்படுத்த முடியவில்லை. கும்பகர்ணனைப் போன்ற ஒரு நாகரீகமற்றவனிடமிருந்து இத்தகைய அற்பத்தனமான விமர்சனங்களைத் தான் ஏற்கனவே எதிர்பார்த்திருந்ததுபோல, விபீஷணன் தன் முகத்தில் எந்த உணர்ச்சி வெளிப்பாடும் இன்றி அங்கு

நின்றான்.

"தயவு செய்து நாம் நாகரீகமான பேச்சிற்குத் திரும்பலாமா?" பிரஹஸ்தன் மீண்டும் நடுவராக இருந்து வழிநடத்தினான். சிரிப்பு மெல்ல மெல்ல மறைந்தது. விபீஷணன் தன் இருக்கையில் அமர்ந்து, தனது ஆழமான எண்ணங்களில் மூழ்கிப் போனான். குறைந்தபட்சம், தான் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிப் போயிருந்தது போன்ற ஓர் அபிப்பிராயத்தை அவன் எங்களிடம் தோற்றுவித்தான் என்று கூறலாம். இறுதியில், ஏராளமான கலந்தாய்விற்குப் பிறகு, இரண்டு கப்பல்களை வாங்குவது என்ற எங்களது முந்தைய திட்டத்தைச் செயல்படுத்துவது என்று ஒருமனதாக நாங்கள் தீர்மானித்தோம். பிரஹஸ்தன் தும்ரக்ஷகனோடும் வஜ்ரதம்ஸ்டிரனோடும் சேர்ந்து, மகாபலியிடம் சென்று, முசிறி துறைமுகத்திலிருந்த வணிகர்களிடமிருந்து இரண்டு கப்பல்களைக் குத்தகைக்கு எடுப்பதற்குத் தேவையான பணத்தைக் கேட்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. படகுகள் எங்கே செல்லவிருந்தன என்பது குறித்தத் தகவல் உயர்மட்டக் குழுவினரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாதபடி ரகசியமாக வைக்கப்பட வேண்டும் என்றும், இரண்டு கப்பல்களும் சேர்ந்து மொத்தம் ஆயிரம் நபர்களைச் சுமந்து செல்லும் என்றும் நாங்கள் தீர்மானித்தோம். ஆட்களையும் ஆயுதங்களையும் மறைத்து வைப்பதற்காக ரகசிய அறைகளும் ஒரு தளமும் இருக்கும் விதத்தில் கப்பல்கள் மறுவடிவமைப்புச் செய்யப்பட வேண்டும் என்று மாரீசன் பரிந்துரைத்தான். கப்பல்களை மாற்றியமைப்பதற்கு, இந்தியாவின் கிழக்குக் கடற்கரையோரம் இருந்த மயன் பள்ளியிலிருந்து பொறியியல் வல்லுனர்களை வரவழைப்பதற்குத் தூதுவர்கள் அனுப்பி வைக்கப்படுவார்கள். மாரீசன் அந்தக் குழுவை வழிநடத்துவான்.

கும்பகர்ணனும் விபீஷணனும் பிரஹஸ்தனின் குழுவினரோடு செல்ல வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. பணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டவுடன், அவர்கள் குதிரைகளை வாங்க வேண்டும். மாணிக்கங்களையும் வைரங்களையும் கிழக்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து மாரீசன் வாங்கி வர வேண்டும். அவை உண்மையான கற்களாக இருக்காது, மாறாக, மயன்களால் வடிவமைக்கப்பட்டப் போலி மாணிக்கங்கள் மற்றும் வைரங்களாக இருக்கும். போலியான ஒருசில தங்கக் கட்டிகளும் அங்கிருந்து வாங்கி வரப்படும். தான் வாங்க வேண்டியிருந்த பொருட்களுக்கான பணத்தைப் பெற்றுக் கொள்வதற்கு, மாரீசன், கும்பகர்ணனோடும் விபீஷணனோடும் மகாபலியிடம் செல்ல வேண்டும். ருத்ராக்கனும் ஜம்புமாலியும் நானும் இங்கேயே தங்கி, வீரர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். நான் ஜம்புமாலியை மிகவும்

மதித்தேன். மசாலப் பொருட்கள் மண்டியில் ஒரு கணக்கராக வேலை செய்யத் துவங்கிய அவன், மகாபலியின் ஆட்சியின்கீழ் இலங்கையின் ஆளுனராக உயர்ந்திருந்தான். அவன் மதிக்கப்பட வேண்டியவன்தான். ஆற்றல்மிக்க வகையில் போரிடுவதற்கு, ஓர் இரண்டாவது மற்றும் மூன்றாவது நிலைத் தலைவர்களை நான் உருவாக்க வேண்டியிருந்தது. செய்யப்பட வேண்டிய வேலைகள் ஏராளமாக இருந்தன. நாங்கள் ஒரு மிகப் பெரிய சூதாட்டத்தில் இறங்கியிருந்தோம், ஆனால் எங்களுக்கு வேறு வழி இருக்கவில்லை.



# 11

## தேசத் துரோகி

பத்ரன்

என் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. நான் என் முகாமை அடைந்த நேரத்தில் நான் ஒரு குழந்தையைப்போல அழுதேன். அவர்கள் என்னை நம்பவில்லை. அதைவிட மோசமான விஷயம், அவர்கள் என்னை ஓர் உளவாளி என்று அழைத்தனர். நான் என் முகாமை அடைவதுவரை எனக்கு இருபுறங்களிலும் இருந்த காவலாளிகள் அதை நிரூபித்தனர். எனது முகாமில் என்னுடன் இருந்த வீரர்கள் அங்கிருந்து மாறிச் சென்றிருந்ததைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். நான் சிறை வைக்கப்பட்டேன். காவலாளிகள் என்னிடம் நல்லவிதமாகவே நடந்து கொண்டாலும், அது எனக்கு சௌகரியத்தைக் கொடுக்கவில்லை. நான் நெடுநேரம் அழுதேன். நான் என் மனைவிக்காகவும் மகளுக்காகவும் என் நாட்டிற்காகவும் என் இனத்திற்காகவும் அழுதேன். தங்கள் வாழ்க்கையை என் தலைவனிடம் நம்பிக்கையோடு ஒப்படைத்து, அவரைப் பின்தொடர்ந்து வந்திருந்த குழுவினருக்காக நான் துக்கப்பட்டேன். நான் இப்போது மனிதனாக இருப்பதை விடுத்து,

தேவர்களின் ரத்தத்தைக் குடிப்பதற்குத் துடித்துக் கொண்டிருந்த ஒரு ரத்தக்காட்டேரியாக மாறியிருந்தது குறித்து நான் அழுதேன். என் ஆன்மா விழுந்து கிடந்த இருண்ட ஆழத்திலிருந்து நான் ஓலமிட்டேன்.

நான் இந்த இடத்திலிருந்து போயாக வேண்டியிருந்தது. என் அரசனுக்கு எனது சேவை தேவை, ஆனால் அது அவருக்குத் தெரியவில்லை. எனது நாடு ஒரு போருக்குத் தயாராகிக் கொண்டிருக்கும்போது நான் ஒரு கிழட்டு நாயைப்போலச் சங்கிலியால் பிணைக்கப்பட்டுக் கிடக்க முடியாது. நான் இலங்கையைச் சென்றடைந்தாக வேண்டும். நான் வெளியே எட்டிப் பார்த்தேன். அன்று கும்மிருட்டாகவும் அமைதியாகவும் இருந்தது. காட்டினுள்ளே எங்கோ ஓர் ஆந்தை அலறியது. இது ஒரு கெட்ட சகுனமா? வரவிருந்த விஷயங்கள் குறித்த ஒரு முன்னறிவிப்பா? அது என் முதுகெலும்பை உறைய வைத்தது. வெளியே இருந்த இரண்டு காவலர்களும் அரட்டையடித்துக் கொண்டிருந்தனர். முகாமைச் சுற்றிலும்கூடக் காவலாளிகள் இருந்தனர். நீர்வீழ்ச்சியின் கர்ஜனை மிகவும் சத்தமாக இருந்தது, ஆனால் அது வெறுமனே ஒரு பின்னணி ஓசைதான். அது எங்களுக்குப் பழக்கப்பட்டிருந்தது. நான் இதை எனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டாக வேண்டும். நீரோடையை என்னால் அடைய முடிந்தால், நீர்வீழ்ச்சியின் இரு பக்கங்களிலும் உள்ள பாறைகளில் ஏறி, நீரின் போக்கிலேயே என்னால் அதைப் பின்தொடர்ந்து கீழிறங்கிச் செல்ல முடியும். அந்தப் பாறைகள் வழுக்கலாகவும் ஆபத்தானவையாகவும் இருந்தாலும், என்னால் அதைச் சாதிக்க முடியும் என்று நான் உறுதியாக நம்பினேன். தேனைச் சேகரிப்பதற்காகச் சிறு வயதில் நான் அப்படிப்பட்டப் பாறைகளில் ஏறியிருந்தேன். அப்போது நான் அதிக திடகாத்திரமாக இருந்தேன் என்பது உண்மைதான். ஆனால் இப்போது, எனது தேவை அதைவிடப் பெரியதாக இருந்தது. நான் நதியை அடைந்தவுடன், ஓர் அடிமரத்தை ஒரு கட்டுமரமாகப் பயன்படுத்தி, நீரின் போக்கில் என்னால் கீழ்நோக்கிச் செல்ல முடியும். நீரின் வேகமான ஓட்டம் விரைவில் என்னைக் கடலில் கொண்டு சேர்த்துவிடும். பொழுது விடிவதற்கு முன்பாக நான் நதியை விட்டுவிட்டு, அதன் மேல்நோக்கிய பாதையைப் பின்தொடர்ந்து, மலைப் பகுதியை அடைந்தாக வேண்டும். யாருடனானவது தொற்றிக் கொண்டு முசிறியைச் சென்றடைந்து, பிறகு அங்கிருந்து அரிசிப் படகு ஒன்றில் பயணித்துத் துறைமுகத்தை அடைந்துவிடலாம். ஆனால் நான் விரைவாகச் செயல்பட்டாக வேண்டியிருந்தது.

ஒரு சிறிய சமையலறைக் கத்தியைக் கொண்டு எனது கூடாரத்தில் நான் ஒரு துளையிட்டேன். என்னுடைய வாளை நான் என்னுடன்

எடுத்து செல்ல விரும்பினேன், ஆனால் அது மிகவும் கனமாக இருந்தது. வில்களையும் அம்புகளையும் பற்றிக் கேட்கவே வேண்டாம். எனது பருத்த உடலை நதியிலுள்ள சில முதலைகள் ருசி பார்க்க விரும்புமோ என்ற சந்தேகம் என்னுள் எழுந்தது. ஆனால் நீர்வீழ்ச்சியின் அருகே எந்த முதலையும் காணப்படவில்லை. நதியின் வேகமான ஓட்டமும் அதில் மீன்கள் இல்லாததும் முதலைகளை அங்கு வரவிடாமல் தடுத்தன. நான் என் கூடாரத்தைவிட்டு வெளியே வந்து சுற்றிலும் பார்த்தேன். என் இதயம் ஒரு கணம் துடிக்க மறந்தது. அங்கு ஒரே ஒரு காவலாளி மட்டுமே இருந்தான். அழுக்குச் சட்டை அணிந்திருந்த, நெட்டையான, மெலிந்த தேகத்துடன் இருந்த இன்னொரு காவலாளி எங்கே போனான்? நான் அவனை எதிர்த்துச் சண்டையிட விரும்பவில்லை. அது மற்றவர்களை எழுப்பிவிடக்கூடும். மேலும், என்னால் அந்தச் சண்டையில் வெற்றி பெற முடியுமா என்று எனக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. அப்போது அவன் ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டு, சீட்டியடித்தபடியே சிறுநீர்க் கழித்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அவன் எனக்கு முதுகு காட்டியபடி நின்றான், ஆனால் தன் வேலை முடிந்ததும் அவன் என் பக்கமாகத் திரும்புவான். அவன் ஏராளமான தண்ணீரையோ அல்லது மதுவையோ குடித்திருக்க வேண்டும் என்று நான் பிரார்த்தனை செய்தேன். நான் ஓடினேன். காய்ந்த இலைகள் என் கால்களில் மிதிபட்டச் சத்தம் என் காதுகளுக்கு இடி முழக்கங்களைப்போலக் கேட்டது. நான் காட்டை அடைந்தவுடன் பின்னால் திரும்பிப் பார்த்தேன். அந்தக் காவலாளி என்மீது எறிவதற்குத் தயாராகத் தனது ஈட்டியைப் பிடித்தபடி ஆடாமல் அசையாமல் நிமிர்ந்து நின்றான். அவனுக்கு ஏதோ சத்தம் கேட்டிருந்தது. இன்னொரு காவலாளி வந்து தனது தீப்பந்தத்தைக் கொளுத்தினான். அந்த வெளிச்சத்தின் ஊடாக அவ்விரு காவலாளிகளையும் என்னால் பார்க்க முடிந்தது. அவர்கள் மிகவும் உஷாராக இருந்தனர். நான் ஒரே ஒரு தவறான அசைவை மேற்கொண்டாலும்கூட, அவர்களுடைய ஈட்டியில் நான் ஒரு காட்டுப் பன்றியைப்போலத் தொங்கிக் கொண்டிருப்பேன்.

அப்போது, அவர்களில் குட்டையாக இருந்த காவலாளி, நான் ஏற்படுத்தியிருந்த ஓட்டையை, திறந்த வாய் மூடாமல் பார்த்துக் கொண்டிருந்தான். ஓடு! என் உடலின் ஒவ்வொரு நரம்பும் விறைத்தன. என்ன நிகழ்ந்திருந்தது என்பதைப் புரிந்து கொள்வதற்கு அந்தக் காவலாளிக்கு ஒருசில நொடிகள் பிடித்தது. பிறகு அவன் கத்தத் துவங்கினான். அவனது குரலில் பதற்றம் தொனித்தது. நான் பீதியடைந்தேன். ஏராளமான தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டன. லேசாக மழை தூறத் துவங்கியிருந்தது. தண்ணீரின் சத்தத்தில் ஒரு மாற்றம்

ஏற்பட்டிருந்தது என் காதுகளில் விழுந்தது. நீரின் ஓட்டம் அதிகரித்திருந்தது. நீர்வீழ்ச்சி இப்போது அதிக ஆக்ரோஷமாக ஆகியிருந்தது. அதன் சத்தம், வீரர்கள் கூறிக் கொண்டிருந்ததை என்னால் கேட்க முடியாதவாறு ஆக்கியது. அப்போது அரசன் தன் முகாமைவிட்டு வெளியே வந்ததை நான் பார்த்தேன். அவர் தன் வாளைத் தன் கையில் தாங்கிப் பிடித்திருந்தார். நான் அவரிடம் விரைந்து சென்று, நான் அவரது சேவகன் என்றும் நண்பன் என்றும் கூற வேண்டுமா? நான் அவ்வாறு செய்ய உந்தப்பட்டேன். மன இறுக்கம் என்னைக் கொன்று கொண்டிருந்தது. தீப்பந்தங்களின் மினுமினுப்பான ஒளியில் நான் அவரது முகத்தைப் பார்த்தேன். இதற்கு மேல் நான் என்ன செய்ய வேண்டும் என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. அவரது முகம் நான் கற்பனை செய்திருந்ததைப்போல அன்பானதாக இருக்கவில்லை, மாறாக, அது மிகக் கொடுமையானதாக இருந்தது. பேயால் ஆட்கொள்ளப்பட்ட ஒருவனைப்போல அவர் காட்சியளித்தார். காற்றின் வேகம் இப்போது அதிகரித்திருந்தது. மரங்களின் ஊடாக அது ஊளையிட்டுக் கொண்டிருந்தது. அரசனின் கரிய, சுருண்ட தலைமுடி, பாய்ந்து சென்று கொண்டிருக்கும் குதிரையின் பிடரி மயிரைப்போலப் பறந்தது. அவர் ஓர் அரக்க—அரசனைப்போலத் தோன்றினார். நான் அவரைக் கண்டு பயந்தேன். நதியில் அதிகரித்துக் கொண்டிருந்த நீரைக் கண்டு நான் பயந்தேன். இவ்விரு தீய சக்திகளுக்கு இடையே, நான் நதியைத் தேர்ந்தெடுத்தேன்.

ஓடிக் கொண்டிருந்த எனது பாதங்கள் ஏற்படுத்திய சத்தத்தை, ஊளையிட்டுக் கொண்டிருந்த காற்று அவர்களிடம் சுமந்து செல்லக்கூடாது என்று பிரார்த்தித்தபடியே நான் ஓடினேன். என் தலைக்கு மேலே ஒருசில அங்குலத்தில் ஓர் அம்பு பறந்து சென்றது. பாறைகள் வழியாகக் கீழே இறங்குவதற்கு எனக்கு நேரமிருக்கவில்லை என்பதை நான் அறிந்தேன். என் வாழ்க்கை இப்போது ஆபத்தான நிலையில் இருந்தது. ஒருபுறம், எனக்கு மரணம் நிச்சயமாகியிருந்தது. நான் எந்த மக்களுக்காகச் சேவை செய்ய விரும்பினேனோ, அவர்கள் என்னை நோக்கி அம்புகளை எய்து கொண்டிருந்தனர். மறுபுறம், என் பிரியத்திற்குரிய பூரண நதி, நுரைத்துக் கொண்டிருந்த லட்சக்கணக்கான கைகளுடன் என்னை வரவேற்றுக் கொண்டிருந்தது. ஒரு கணம்கூட யோசிக்காமல் நான் அந்த நதிக்குள் குதித்தேன். என் உடல் அந்த நீரில் பட்டபோது ஏற்பட்டக் கடுங்குளிர் அதிர்ச்சயளிப்பதாக இருந்தது. என் தலையை என்னால் நிமிர்த்தி வைக்க முடியவில்லை. மழையோ, இரும்பு ஊசிகளைப்போலத் தாக்கிக் கொண்டிருந்தது. நதியின் வேகமான நீரோட்டத்தில், காய்ந்து போன ஓர் இலையைப்போல நான் அடித்துச்

செல்லப்பட்டேன். நான் அந்தக் காய்ந்த இலையைப்போல, தண்ணீருக்குள் மூழ்குவதும், பிறகு வெளியே தலைகாட்டுவதும், மீண்டும் தண்ணீருக்குள் மூழ்குவதுமாக இருந்தேன். பிறகு, திடீரென்று, என்ன நடந்து கொண்டிருந்தது என்பதை நான் அறியும் முன்பாகவே நான் விழுந்து கொண்டிருந்தேன். இருண்ட ஆழங்களுக்குள் நான் வேகமாகப் பயணித்துக் கொண்டிருந்தேன். பூரண நதி என்னை விழுங்கப் போராடிக் கொண்டிருந்தது.

நான் என் கண்களைத் திறந்தபோது, ஒரு மரக்கட்டையின்மீது நான் மிதந்து கொண்டிருந்தேன். வானம் தெளிவடைந்திருந்தது. நீர்வீழ்ச்சியின் கர்ஜனை வெகுதூரத்தில் கேட்டது. மரக்கட்டையை எப்போது நான் பிடித்தேன், அது எப்படி எனக்குக் கிடைத்தது என்று எனக்குத் தெரியவில்லை. நான் தப்பியிருந்தது ஓர் அதிசயம்தான். நான் நிறைவேற்ற வேண்டிய ஒரு லட்சியம் இருந்தது. அதனால்தான், பூரண நதி என்னை முழுமையாக விழுங்காமல், என்னைச் சவைத்துத் துப்பியிருந்தது. ஆனால், என் உடலில் இருந்த ஒவ்வொரு மூட்டும் வலித்தது. என் தலையில் ஏதேனும் காயம் ஏற்பட்டிருந்ததா என்று நான் பரிசோதித்தேன். கொழகொழப்பாகவும் வெதுவெதுப்பாகவும் ஏதோ எனக்குத் தட்டுப்பட்டது. என் தலையில் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ரத்தம்! ரத்தம் முதலைகளைக் கவர்ந்திழுக்கும். நான் முதலைகள் வசித்தப் பகுதியில் இருந்தேன். இரவில் அவை வேட்டையாடினவா? எனக்குத் தெரியவில்லை. அதை நான் தெரிந்து கொள்ளவும் விரும்பவில்லை. தண்ணீரிலிருந்து நான் வெளியே வந்தாக வேண்டும், ஆனால் நீரின் ஓட்டம் அதிவேகமாக இருந்தது. மரத்துண்டை விட்டுவிடாமல், கரையை நோக்கி நான் நீந்தினேன். அது மிகவும் களைப்பூட்டுவதாக இருந்தது. திடீரென்று, தண்ணீரில் ஏதோ அசைந்ததை நான் பார்த்தேன். முதலைகள் தங்கள் இரவு விருந்திற்காக வந்திருந்தனவா? நள்ளிரவுப் பண்டமாக ஒரு பாவப்பட்ட, கருத்த அசுரனைச் சுவைக்க வந்திருந்தனவா? நிலத்தில் ஓடிச் சென்று தமது இரையைப் பிடிக்க முதலைகளால் முடியுமா என்பது எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. ஆனால் நிச்சயமாக, நீரைவிட நிலம் அதிகப் பாதுகாப்பானது. நிலத்தில் கழுதைப்புலிகள் இல்லாமல் இருக்க வேண்டும். நிலத்தை அடைந்த பிறகு, சிறுத்தைகளையும் புலிகளையும் பாம்புகளையும் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளலாம்.

நீரில் அசைந்து கொண்டிருந்த அந்தக் கரிய உருவம் எனக்கு மிக அருகே வந்தது. நான் அதை பலமாக எட்டி உதைத்தேன். நிலத்தை அடைய ஒருசில அடிகள் மட்டுமே இருந்தபோது எதுவோ என் காலைத் தாக்கியது. இதுதான் என் முடிவா! தேவப் படைகளிடமிருந்தும்,

அசுரர்களின் அம்புகளிடமிருந்தும், பேராற்றல் வாய்ந்த ஒரு நீர்வீழ்ச்சியிடமிருந்தும் தப்பித்தப் பிறகு, நீண்ட மூக்கைக் கொண்ட, அசிங்கமான, ஊர்ந்து செல்லும் ஏதோ ஒன்றிற்கு நான் ஒரு நள்ளிரவுப் பண்டமாக ஆக வேண்டுமா? அது தனது சக்திமிக்கத் தாடைகளைக் கொண்டு என் காலைக் கடித்துக் குதறுவதற்காக நான் காத்திருந்தேன், ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. திரும்பிப் பார்க்க எனக்கு மிகவும் பயமாக இருந்தது. நீந்திச் சென்று கரையை அடைவதற்கு மிகவும் பயந்து போயிருந்த நான், என் மரத்துண்டைப் பிடித்தபடி காத்திருந்தேன். ஒரு வெளிர் நிலவு அந்த ஈர வானில் முகம் காட்டியது. நான் அந்த மரத்துண்டைப் பிடித்தபடி ஓரிரு மணிநேரம் காத்திருந்தேனா அல்லது ஒருசில நொடிகள் காத்திருந்தேனா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான் திரும்பிப் பார்த்தபோது, அது அங்கிருந்து போய்விட்டிருந்தது. அது அங்கு இருந்ததற்கான சுவடே இருக்கவில்லை. நான் மகிழ்ச்சியில் அழ விரும்பினேன். அப்போது அதை நான் மீண்டும் பார்த்தேன். நதியை நோக்கிக் கீழே வளைந்திருந்த ஒரு மரக்கிளையில் அது சிக்கியிருந்தது. என் பாதங்களுக்கு அடியில் காத்திருந்தது முதலை அல்ல, மாறாக, ஒரு சிறிய கட்டுமரம்தான் அது. யாரோ என்னைப் பின்தொடர்ந்து வந்திருக்க வேண்டும், ஆனால் பூரண நதி அவனைக் கவனித்துக் கொண்டிருந்தது. கட்டுமரங்களில் ஆட்கள் என்னைத் துரத்தி வந்திருந்த இத்தனை நேரமும், நான் முதலைகளைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டு இருந்திருந்தேன். இப்போது மரக்கிளையின் ஊடே சிக்கியிருந்த அந்தக் கட்டுமரம், சற்று முன் என் பாதங்களுக்கு அடியில் இருந்தபோது நான் அதைக் கைப்பற்றியிருக்க வேண்டும்.

நான் அந்தக் கட்டுமரத்தை நோக்கி எச்சரிக்கையாக நீந்திச் சென்றேன். நீரலைகள் அதை அசைத்துவிடக்கூடாது என்று நான் பயந்தேன். நான் அதைக் கிட்டத்தட்டப் பிடிக்கவிருந்த நேரத்தில், ஒரு பலமான காற்று அந்தக் கிளையை உலுக்கி, அந்தக் கட்டுமரத்தை அதிலிருந்து விடுவித்தது. நான் என் பலம் முழுவதையும் ஒன்றுதிரட்டி, அதைக் கைப்பற்றுவதற்காக நீந்திச் சென்றேன். ஆனால் நீரின் வேகமான ஓட்டம் அதை அடித்துச் சென்றுவிட்டது. அந்த வேகத்திற்கு என்னால் ஈடு கொடுக்க முடியவில்லை. என் வலியைக் கண்டுகொள்ளாமல், நான் போராடினேன். மழை இப்போது மீண்டும் என்னைத் தாக்கத் துவங்கியிருந்தது. இறுதியில், நான் என் முயற்சியைக் கிட்டத்தட்டக் கைவிட்டிருந்த நேரத்தில், அந்தக் கட்டுமரம் ஒரு நீர்ச்சுழலில் சிக்கிக் கொண்டது. ஏராளமான திருப்பங்களுக்குப் பிறகு, அதிசயிக்கத்தக்க விதத்தில், அது என்னை நோக்கி விரைந்து வந்தது.

அது என் தலையைப் பதம் பார்த்திருந்திருக்கும், ஆனால் நீருக்கடியில் நான் குனிந்து கொண்டேன். அது மீண்டும் என்னைத் தாண்டிச் செல்வதற்கு முன்பாக, நான் அதைப் பிடித்து, தட்டுத்தடுமாறி அதில் ஏறி, அதைச் சமநிலைப்படுத்தினேன். அப்போது களைப்பு என்னை முற்றிலுமாக ஆட்கொண்டது. நான் அந்தக் கட்டுமரத்தில் நிலைகுலைந்து மல்லாக்க விழுந்தேன். அது நீரில் சுழன்றபடியும் மேலும் கீழுமாகக் குதித்தபடியும் கடலை நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது நான் அயர்ந்து தூங்கினேன்.



# 12

## காத்திருப்பு

ராவணன்

கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் உருண்டோடியிருந்தன, ஆனால் உளவாளியைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக அனுப்பப்பட்டிருந்த தேடும் குழுக்களைத் தவிர வேறு யாரும் திரும்பியிருக்கவில்லை. அன்றிரவு, நீர்ச்சுழலில் நாங்கள் மூன்று நபர்களை இழந்திருந்தோம். எங்கள் தலைமைக் காவலன், பூரண நதி பத்ரனை விழுங்கிவிட்டிருந்ததாகக் கருத்துத் தெரிவித்தான். பத்ரனைத் துரத்திச் தேடிச் சென்ற மூன்று காவலர்களில் இருவரின் உடல்களை, தேடும் குழுவினர், நீரோட்டத் திசையில் ஒரு மைல் தூரத்தில் கண்டுபிடித்திருந்தனர். அக்காவலர்களின் உடல்கள் மீன்களாலும் நரிகளாலும் பாதிக் கடித்துக் குதறப்பட்டிருந்தன. பத்ரனையும் மற்றொரு காவலாளியையும் முதலைகள் கபளீகரம் செய்திருக்கக்கூடும். அந்த மற்றொரு காவலாளியின் பெயர் யாருக்கும் தெரிந்திருந்ததுபோலத் தோன்றவில்லை. பத்ரன் இறந்திருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன், ஆனால் அவன் இறந்திருப்பான் என்று நம்புவது

எனக்குக் கடினமாக இருந்தது. அவன் அழிவற்றவன்போலத் தோன்றினான். மரணத்தைத் தடுத்த ஏதோ ஒரு சக்தி அவனிடம் இருந்தது. அவன் எங்கள் திட்டங்களை எங்களது எதிரிகளுக்குத் தெரிவித்திருக்கக்கூடும் என்று நான் பயந்தேன்.

முடிவற்றக் காத்திருப்பு எனக்கு வெறுப்பூட்டியது. எங்களது வீரர்கள் பலரிடையே சலிப்பு ஏற்பட்டிருந்தது. ருத்ராக்கன் எங்கள் வீரர்களுக்கு மிகுந்த அர்ப்பணிப்புடன் தீவிரமாகப் பயிற்சியளித்தான். அவனது பயிற்றுவிப்பு மிகக் கொடுமையாக இருந்ததுபோலத் தோன்றியது. மிகவும் களைத்துப் போயிருந்த அவ்வீரர்கள், அன்று இரவு வெகு முன்னதாகவே கற்களைப்போலத் தூங்கினர். அது மதுவால் அவர்களிடையே ஏற்பட்டக் கைகலப்புகளையும் மட்டரகப் பாடல்களையும் குறைத்தது. தேறுவார்கள் என்று எனக்கு நம்பிக்கையளித்த முன்னூறு நபர்களை நான் தனியாகப் பிரித்து, அவர்களிலிருந்து முப்பது தலைவர்களைத் தேர்ந்தெடுத்தேன். வேகமாக இயங்க வசதியாக இருக்கும் விதத்தில், முடிந்த அளவு மிகச் சிறிய குழுக்களை அமைத்தேன். குழுத் தலைவன் உட்பட, ஒவ்வொரு குழுவிலும் பத்து உறுப்பினர்கள் இருந்தனர். வாள்களையும் உருட்டுக்கட்டைகளையும் அறிவியற்பூர்வமான முறையில் பயன்படுத்துவதற்கும், வெறும் கைகளால் சண்டையிடுவதற்கும், கத்திகளைக் கொண்டு மிக நெருக்கமாகச் சண்டையிடுவதற்கும், சுவர்களில் ஏறுவதற்கும் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. கருப்பு வேட்டிகள் மற்றும் அடர்க்கருப்புத் தலைப்பாகைகளுடன் அவர்களுக்கான சீருடைகளையும் நான் வடிவமைத்தேன். ஒரு சிறிய இரும்புக் கட்டையுடனும், லேசான எடையைக் கொண்ட ஒரு வாளுடனும், வயிற்றில் இறுக்கமாகக் கட்டப்பட்ட ஒரு கயிற்றுடனும், அந்தக் கயிற்றுக்குள் மறைத்து வைக்கப்பட்ட ஒரு குத்துவாளுடனும் அவர்கள் அதிக எடையின்றிப் பயணம் செய்யத் திட்டமிடப்பட்டது. தேர்ந்தெடுப்பிற்கு முன்பாகவே அவர்கள் நல்ல உடற்திறனுடன் இருந்தனர். இரண்டு மாதக் கடும் பயிற்சிக்குப் பிறகு, அவர்களுடைய கருத்த உடல்கள் மினுமினுத்தன. அசுர ஆண்மைநிலையின் பின்பற்றத்தக்க எடுத்துக்காட்டாக விளங்கிய அவர்களைக் காண்பது நல்லவிதமான உணர்வைக் கொடுத்தது.

வஜ்ரன் எங்களோடு முகாமில் தங்கியிருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால், மகாபலி எங்களுக்குப் பணத்தைக் கடன் கொடுக்க அவரை ஒப்புக் கொள்ள வைப்பதற்கு வஜ்ரனுக்குச் சிறந்த வாய்ப்பு இருந்ததாகப் பிரஹஸ்தன் நினைத்தான். ஜம்புமாலி ஒரு நல்ல நிர்வாகி, ஆனால் நாங்கள் திட்டமிட்டுக் கொண்டிருந்த வகையான

தாக்குதலில், அவனது பங்களிப்பு மட்டுப்படுத்தப்படும். எங்களது சாம்ராஜ்யம் நிலைப்படுத்தப்பட்டப் பிறகு, ஜம்புமாலி போன்ற மனிதர்கள் எங்களுக்கு மிகப் பெரிய சொத்துக்களாக இருப்பார்கள். அப்போது, வஜ்ரன் அல்லது ருத்ராக்கன் போன்றவர்கள் ஆபத்தான சுமைகளாக ஆவார்கள். ஆயுதச் சூளைகளுக்கான பொறுப்பை நான் ஜம்புவிடம் ஒப்படைத்தேன். போதுமான உலோகத்திற்கு ஏற்பாடு செய்து, வாள்களையும் அம்புகளையும் தயாரிப்பதற்காகக் கொல்லர்களை வரவழைக்க வேண்டிய பொறுப்பு அவனுடையது. ஆனால் உண்மையான தயாரிப்பை ருத்ராக்கன் மேற்பார்வையிட்டான். அசுரர்கள் வழக்கமாகப் பயன்படுத்திய கனத்த இரும்பு ஈட்டிகளை நாங்கள் ஒதுக்கித் தள்ளினோம். கனமான மர உருட்டுக்கட்டைகளுக்குப் பதிலாக, செப்பு முட்கள் துருத்திக் கொண்டு நின்ற லேசான மர உருட்டுக்கட்டைகளை நாங்கள் தேர்ந்தெடுத்தோம். ஒரு கனமான உருட்டுக்கட்டையால் ஒரே அடியில் ஒருவனது மண்டையோட்டைச் சுக்குநூறாக ஆக்க முடியும், ஆனால் அதைத் திறமையாகவும் விரைவாகவும் பயன்படுத்துவதற்கு அசாதாரணமான உடல்வலிமையைக் கொண்ட மக்கள் தேவை. ஒரு வாளைப்போலச் சுலபமாக உயர்த்திச் சுற்றப்படக்கூடிய, லேசான எடையைக் கொண்ட ஒரு சிறு உருட்டுக்கட்டைதான் சுமப்பதற்கும் மிக நெருக்கமான போரில் பயன்படுத்துவதற்கும் அதிகப் பொருத்தமானதாக இருக்கும்.

ருத்ராக்கனும் நானும் எங்கள் ஆலமரத்தின் அடியில் ஒன்றாக அமர்ந்து, எங்களுடைய போர்த்தளவாடங்களில் இருந்த புதுமைகளைப் பற்றி மணிக்கணக்கில் கலந்து பேசியிருந்தோம். ஆறடி நீள வில்களையும் கனத்த இரும்பு அம்புகளையும் நான் விட்டொழிக்க விரும்பினேன். அவை எளிதில் கையாளப்பட முடியாதவையாக இருந்தன. ஒரு முன்னோக்குடன்கூடிய மனிதனாக இருந்த ருத்ராக்கன், அந்த யோசனைக்கு எதிர்ப்புத் தெரிவித்தான். வரவிருந்த யுத்தத்திற்கு வெறும் வலிமை அல்லாது, வேகமும் மறைந்திருந்து தாக்கும் உத்தியும் அதிகம் தேவைப்பட்டதால், வில்வீரர்களின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொள்ள அவன் ஒப்புக் கொண்டாலும், ஒட்டுமொத்தமாக அவர்களை விட்டுத்தள்ள அவன் விரும்பவில்லை. எதிர்காலத்தில் வெகு விரைவில் நாங்கள் எங்கள் ராஜாங்கத்தை நிலைப்படுத்தி, எங்கள் பாதுகாப்பிற்காகக் கோட்டைகளைக் கட்டி முடித்திருக்கும்போது, கனத்த வில்களைக் கொண்ட வில்வீரர்களால் எதிரிகளின்மீது அம்பு மழை பொழிய முடியும் என்றும், ஒரு யானையின் தலையைக்கூட அவர்களால் துளைக்க முடியும் என்றும் அவன் விளக்கமளித்தான். காரண காரியத்தை அவன் விளக்கியவுடன் அவனது யோசனையோடு

நான் உடன்பட்டேன். ஆனால் வரவிருந்த தாக்குதலின்போது, அவர்கள் எங்கள் கப்பல்களில் இருந்து கொள்ள வேண்டும் என்று நான் கட்டளையிட்டேன்.

ருத்ராக்கன் முன்னோக்குக் கொண்ட ஒருவனாக இருந்தான். அவனது வாழ்க்கை வெறுமனே போருக்காக மட்டும் அர்ப்பணிக்கப்படவில்லை. ஆயுதத் தொழில்நுட்பத்தோடு பின்னிப் பிணைந்திருந்த அவன், மிகப் பரவலாகப் பயணித்து, கிரேக்கர்கள் பயன்படுத்திய 'வண்டிகளில் பொருத்தப்பட்டப் பெரிய கவண்களை'ப் பார்த்திருந்தான். அதே போன்ற ஒன்றை மறுவடிவமைக்க அவன் மேற்கொண்ட முயற்சி தோற்றுப் போயிருந்தது. ஆனால் அவனது புதுமைகளில்தான் அவனது மேதமை இருந்தது. அவனது கவணால் கனமான கற்களை நெடுந்தூரம் சுமந்து செல்ல முடியவில்லை. எனவே, பலாப்பழத்தின் பசையைக் கொண்டு தளர்வாக ஒட்டப்பட்ட, எண்ணெய் நிரப்பப்பட்டத் தென்னங்கொப்பரைகளை எறிவதற்குத் தனது கவண்களைப் பயன்படுத்த அவன் தீர்மானித்தான். அந்தத் தென்னங்கொப்பரைகள் ஒரு பொருளின்மீது விழுந்தவுடன், அதிலுள்ள எண்ணெய் வெளியே தெறிக்கும். இதைத் தொடர்ந்து, முனையில் நெருப்பு மூட்டப்பட்ட அம்புகள் எய்யப்படும். இந்த அம்புகள், தனது வழியில் நின்ற அனைத்தையும் ஒருசில நொடிகளுக்குள் நெருப்பில் மூழ்கடித்துவிடும். நாகாஸ்திரத்தையும் ருத்ராக்கன் மறுவடிவமைப்புச் செய்தான். நாகர்களால் பயன்படுத்தப்பட்ட விஷ அம்புகளின் முனைகளில் சிறிதளவு விஷம் சேமித்து வைக்கப்படும் விதத்தில் அவற்றில் ஒரு சிறிய துளையிட்டான். இது அந்த அம்புகளை அதிகக் கொடியவையாக ஆக்கியது. அதன் பிறகு, ருத்ராக்கன், வருணன் பயன்படுத்தியதைப் போன்ற அம்புகளை உருவாக்கினான். அவை உண்மையில் வேல்கம்புகள். ஒரு கப்பலின் மேற்தளத்தின்மீதிருந்து அவை ஓர் இயந்திரத்தால் எறியப்படும். அப்படி எறியப்படும் வேல்கம்பு இன்னொரு கப்பலைத் தாக்கும்போது, அது அந்தக் கப்பலை மூழ்கடித்துவிடும். எங்களுடைய பொறியியல் நுட்பம் குறித்து நாளுக்கு நாள் எங்களுடைய நம்பிக்கை அதிகரித்துக் கொண்டிருந்தது, ஆனால் ஆயுத உற்பத்திக்குத் தேவையான கச்சாப் பொருட்கள் குறைந்து கொண்டே வந்தன.

ருத்ராக்கன் அங்கிருந்தவர்களிடமிருந்து பழைய, துருப்பிடித்த ஆயுதங்கள் அனைத்தையும் சேகரித்து, அவற்றை உருக்கி, புதிய ஆயுதங்களை உருவாக்கினான். இதில் ஏராளமான விரயம் ஏற்பட்டது. இது ஜம்புமாலிக்குக் கோபமூட்டியது. ஜம்புமாலிக்கும் ருத்ராக்கனுக்கும் இடையே அடிக்கடி வாய்த் தகராறு ஏற்பட்டது. அவர்களை

சமாதானப்படுத்துவதற்கு நான் குறுக்கிட வேண்டியிருந்தது. ஆனால் ருத்ராக்கன்மீது எனக்கு நம்பிக்கை இருந்தது. அவன் மீண்டும் இன்னொரு புதுமையான யோசனையை முன்வைத்தான். அது எளிமையாகவும், அதே சமயத்தில், புத்திசாலித்தனமான ஒன்றாகவும் இருந்தது. செப்பு முனைகளைக் கொண்ட மூங்கில் அம்புகளை அவன் வடிவமைத்தான். மூங்கில் தண்டுகளை விஷத்தால் நிரப்பி, பிறகு ஒரு பசையைக் கொண்டு அதை மூடினான். அந்த அம்பு ஒருவனைத் தாக்கும்போது, அந்த ஒட்டு உடைந்து, விஷம் அவனது ரத்தத்தில் கலந்து அவனை உடனடியாகக் கொன்றுவிடும். இந்த எளிய யோசனையை ஏன் முன்பே நாங்கள் பயன்படுத்தியிருக்கவில்லை என்று நாங்கள் வியந்தோம். தொல்பழங்குடியினர் மூங்கில் அம்புகளைப் பயன்படுத்தினர், ஆனால் அசுரர்களும் தேவர்களும் அவற்றை விளையாட்டுப் பொருட்களாகக் கருதினர். இது எங்களுக்கு ஏராளமான உலோகத்தை மிச்சப்படுத்திக் கொடுத்தது. அதோடு, ருத்ராக்கன், ஈட்டிகள் மற்றும் அம்புகளுக்கான கடினமான முனைகளாகக் கற்களைப் பயன்படுத்தினான். இது இன்னும் அதிக உலோகத்தை மிச்சப்படுத்தியது. அவன் எல்லாவற்றையும் தயாரித்து முடித்திருந்தபோது, போதுமானதற்கும் அதிகமான ஆயுதங்கள் எங்களிடம் இருந்தன.

பிறகு, நாங்கள் காட்டிலிருந்து பிடித்துப் பழக்கப்படுத்தியிருந்த ஒருசில யானைகளுக்கு அவன் கவசம் ஒன்றை வடிவமைக்க விரும்பினான். ஊசி அளவிலிருந்த, விஷம் நிரப்பப்பட்டக் கூர்மையான இரும்பு முனைகளை, யானைகளின் தலையையும் பக்கங்களையும் மூடியிருந்த துணியினுள் அவன் தைத்தான். இப்போது அந்த யானைகள் மிகப் பெரிய முள்ளம்பன்றிகளைப்போலத் தோன்றின. எதிரியின் யானைகள் அருகே வரும்போது, எங்கள் யானைகள் மிகக் கொடியவையாக இருக்கும். எங்களது படை ஓரளவுக்கு நன்றாகவே பயிற்றுவிக்கப்பட்டிருந்தது. எங்கள் வீரர்களின் தொய்வான, பருத்த உடல்கள் காணாமல் போயிருந்தன. ஒவ்வொரு நாளும் திடீர்த் தாக்குதல் பயிற்சிகள் நடைபெற்றன. இதில் யாரேனும் தவறு செய்தால், அவர்கள் தீவிரமான முறையில் கையாளப்பட்டனர். ஆனால் குதிரைப்படை எங்களுக்குக் கவலையளித்தது. பெயரளவுக்குக்கூட ஒரு நல்ல குதிரை எங்களிடம் இருக்கவில்லை.

எங்கள் தூதுக் குழுவினர் குதிரைகளைக் கொண்டு வந்தாலும்கூட, அவற்றைப் பயிற்றுவிப்பதற்கு எங்களிடம் போதுமான அவகாசம் இருக்கவில்லை. மழைக்காலம் முடிந்தவுடனேயே நாங்கள் இலங்கையின்மீது தாக்குதல் மேற்கொள்ள வேண்டியிருந்தது.

அதையடுத்த ஒரு மாதத்திற்குள் மீண்டும் அத்தீவில் வடகிழக்குப் பருவமழை தொடங்குவதற்குள் அத்தீவை நாங்கள் கைப்பற்றியாக வேண்டியிருந்தது. ஏனெனில், அந்தப் பருவமழையின்போது, கடல் அதிகச் சீற்றம் கொண்டதாக ஆகிவிடும். அலைகளின் சீற்றத்தையும் வேகத்தையும் எங்களது குத்தகைக் கப்பல்களால் தாக்குப்பிடிக்க முடியுமா என்று எனக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. வழியில் நாங்கள் வருணனையோ அல்லது அவனது கப்பல்களையோ எதிர்கொள்ள வேண்டியிருந்தால், கடவுளால் மட்டுமே எங்களைக் காப்பாற்ற முடியும். வருணன் எங்களை ஒருசில மணிநேரத்தில் கபளீகரம் செய்துவிடுவான். எனவே நாங்கள் எங்கள் கப்பல்களுக்காகவும் குதிரைகளுக்காகவும் காத்திருந்தோம். எனது தூதுக் குழுவைப் பற்றி நான் கவலைப்பட்டேன். அதைவிட அதிகமாக, எங்களிடமிருந்து தப்பியிருந்த தேசத் துரோகியைப் பற்றி நான் கவலைப்பட்டேன். குபேரனுக்கு ஏற்கனவே முன்னெச்சரிக்கை வழங்கப்பட்டிருந்தால், எங்களது எஞ்சிய வாழ்நாள் முழுவதையும், அவனுடைய செக்காலையில் கழிப்பதை நாங்கள் நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.



# 13

# இலங்கையின் வரவேற்பு

பத்ரன்

சூரியன் என் கண்களைச் சுட்டெரிக்க நான் கண்விழித்தேன். என் உடல் வலித்தது. எனக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. நான் என் தலையை உயர்த்தி, மெதுவாக ஓடிக் கொண்டிருந்த நீரை இடுங்கிய கண்களுடன் பார்த்தேன். பனை மரங்கள் அணிவகுத்து நின்ற நிலங்களின் ஊடாக அது மெதுவாக வளைந்து நெளிந்து சென்று கொண்டிருந்தது. நதியின் இரு பக்கங்களிலும் ஏராளமான நடவடிக்கைகள் நிகழ்ந்து கொண்டிருந்தன. பல பரிசல்களும் அரிசிப் படகுகளும் இரண்டு திசைகளிலும் பயணித்துக் கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. நெல் வயல்களில் விவசாயிகள் உழுது கொண்டிருந்தனர். மாயாஜாலமான நாட்டுப்புற இசை ஒன்று காற்றில் மிதந்து வந்தது. எனது முந்தைய வாழ்க்கையில், இந்தக் காட்சியை நான் நின்று நிதானமாக ரசித்து மகிழ்ந்திருப்பேன். தண்ணீருக்குள் குதித்து நதியின் குறுக்கே நீந்தியிருப்பேன். இங்கிருக்கும் கள் மிகவும் ருசியாக இருந்திருக்கும். பெண்கள் அதைவிட மேலாக இருந்திருப்பார்கள்.

கடற்புறாக்களும் கடற்கழுகுகளும் தொலைதூர வானில் மேற்கு நோக்கிப் பறந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். நான் நதியின் முகத்துவாரத்தை நெருங்கிக் கொண்டிருந்தேன். எக்கணத்திலும், முசிறியின் கலங்கரைவிளக்கம் எனக்குத் தென்படும். ஆயிரக்கணக்கான மழைக்காலங்களைத் தாக்குப்பிடித்து, உலகம் நெடுகிலுமிருந்தும் பயணியர்களையும் கப்பல்களையும் இந்த அற்புதமான நகரத்திற்கு வழிநடத்தியிருந்த ஒரு புராதனக் கலங்கரைவிளக்கம் அது.

நதி அங்கிருந்து மெதுவாக வலது புறமாக வளைந்தது. அங்கு நான் அதைப் பார்த்தேன். முன்பொரு காலத்தில் மகாபலியின் தலைநகரமாகவும், கலை மற்றும் கலாச்சாரத்தின் மையமாகவும், நகர்ப்புற நாகரீகத்தில் உலகிலேயே சிறந்த நகரமாகவும் இருந்த, காலத்தால் அழியாத துறைமுக நகரமான முசிறி நகரத்தை நான் வந்தடைந்திருந்தேன். அங்கு கிரேக்கர்கள், சிரியர்கள், சுமேரியர்கள், மெசபடாமியர்கள், சீனர்கள், அரேபியர்கள், யூதர்கள், தேவர்கள், பல்வேறு அசுரப் பழங்குடியினர், எகிப்தியர்கள் ஆகியோர் தங்களுக்கென்று சொந்தமான தெருக்களையும் வழிபாட்டுத் தலங்களையும் கொண்டிருந்தனர். பல்வேறு வர்த்தகச் சங்கங்களும் அங்கு இருந்தன. காலிக்கோ துணி, மயில்கள், குரங்குகள், மிளகு, ஏலக்காய், பட்டை, பருத்தி, அரிசி, உடைகள், தங்கம், குதிரைகள், விலைமதிக்க முடியாத கற்கள், பட்டு ஆகியவை இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. அந்தப் புராதன நகரம் பல்வேறு நடவடிக்கைகளால் சுறுசுறுப்பாக இருந்தது.

நான் கட்டுமரத்தை விட்டுவிட்டு ஆற்றுக்குள் குதித்தேன். தண்ணீர் மிகவும் கதகதப்பாகவும் இதமாகவும் இருந்தது. நான் கரையில் ஏறி, பக்கத்திலிருந்த விடுதிக்கு நடந்து சென்றேன். மக்கள் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். நான் அவர்களுக்கு வினோதமானவனாகத் தோன்றியிருக்க வேண்டும். அந்த விடுதி ஒரு பழைய குடிசைதான். அது சிறியதாக இருந்தாலும் சுத்தமாக இருந்தது. அதன் கூரை, பனை ஓலையால் வேயப்பட்டிருந்தது. அங்கு ஒருசிலர் வெறுமனே சுற்றித் திரிந்து கொண்டிருந்தனர். அவர்களில் பெரும்பாலானோர் கடலோடிகள். நான் குளிக்க வேண்டியிருந்தது. பிறகு எனது காயங்களுக்கு மருந்து போடுவதற்கு ஒரு மருத்துவரைப் பார்க்க வேண்டியிருந்தது. விடுதியின் உரிமையாளர் ஓர் அன்பான மனிதராக இருந்தார். அடைமழையில் எனது அரிசிப் படகு ஆற்றில் மூழ்கிப் போய்விட்டதாக நான் கூறிய கதையை அவர் நம்பினார் என்று நான் நினைக்கிறேன். இயற்கையின் சீற்றத்தைச் சமாளித்துத் தப்பிப் பிழைத்தவர்கள் இந்த விடுதிக்கு அடிக்கடி வந்ததுபோலத் தோன்றியது.

அவர் எனக்கு ஒரு புதிய ஆடையைக் கொடுத்து, எனது காயங்களுக்குக் கட்டுப் போடுவதற்கு ஒரு மருத்துவரின் உதவியாளரையும் அங்கு வரவழைத்தார். அந்த விடுதி உரிமையாளர் எனக்குச் செய்த உதவிக்காக, ஒருசில நாட்கள் அவருக்காக நான் வேலை பார்ப்பதாக நான் அவருக்கு வாக்குக் கொடுத்தேன்.

வேலை கடினமாக இருந்தது. நான் ஓர் ஆழமான கிணற்றிலிருந்து நீர் இறைக்கவும், எரிபொருளுக்காக மரங்களை வெட்டி வரவும், தரைகளைப் பெருக்கிச் சுத்தப்படுத்தவும் வேண்டியிருந்தது. நான் உயிரோடு இருந்தது குறித்து நான் மகிழ்ந்தேன். நான் ஏன் அந்த முகாமைவிட்டு வெளியேறியிருந்தேன் என்பதை நான் மறந்திருக்கவில்லை, ஆனால் எனக்குச் சிறிது ஓய்வு தேவைப்பட்டது. சிலருடன் தொடர்புகளை உருவாக்கிக் கொண்டு, பிறகு, இலங்கைக்குச் செல்லும் ஒரு கப்பலில் பயணிக்கலாம் என்று நான் நினைத்தேன். என்னிடம் ஒரு திறமை இருந்ததை அந்த விடுதியில் வைத்துத்தான் நான் கண்டுபிடித்தேன். நான் ஒரு நல்ல சமையற்காரன் என்பதை நான் தற்செயலாகக் கண்டறிந்தேன். அந்த விடுதியின் சமையற்காரன், சொல்லாமல் கொள்ளாமல் ஒருநாள் திடீரென்று மாயமாய் மறைந்துவிட்டான். அங்கு பல விருந்தினர்கள் இருந்தனர், ஆனால் யாரும் சமையல் செய்ய முன்வரவில்லை. விரைவில், நான் எனக்கென்று ஒரு நற்பெயரை உருவாக்கிக் கொண்டேன். மாலைநேரக் கொண்டாட்டங்களில் ‘பத்ரனின் பொரித்த மீன்’ ஒரு கட்டாய இடம் பிடித்தது. காரசாரமான எனது மீன் பொரியல் கள்ளோடு மிகச் சிறப்பாகப் பொருந்தியதாக அவர்கள் கூறினர். விரைவில், பல கப்பற்தலைவர்களிடம் இருந்து எனக்கு அழைப்புகள் வரத் துவங்கின. ஆனால் நான் பொறுமையாக இருந்தாக வேண்டும் என்பதை அறிந்தேன். இலங்கைக்குப் பயணிக்கவிருந்த, குபேரனுக்குச் சொந்தமான ஒரு கப்பலில் இருந்து எனக்கு ஒரு பொருத்தமான அழைப்பு வரும்வரை நான் காத்திருந்தேன். அது அரசு அதிகாரிகளுக்கான ஒரு சொகுசுக் கப்பல். அது மிகப் பெரியதாகவும் உறுதியாகவும் இருந்தது. மழைக்காலத்தின் கொந்தளிப்பான கடல்களில்கூட அது மிகவும் பாதுகாப்பான கப்பல் என்று கருதப்பட்டது. அரசாங்க அதிகாரிகளும் அவர்களது மனைவியரும் உலகின் முக்கியத் துறைமுகங்களில் இருந்த கடைவீதிகளுக்குச் சென்று பொருட்களை வாங்குவதற்காக அக்கப்பல் அவர்களைச் சுமந்து சென்றது. அவர்களுக்கு உடனடியாக என்னைப் பிடித்துவிட்டது. நான் இலங்கையை அடைவதற்குள், மேட்டுக்குடிக் குடும்பத்தினர் பலரிடமிருந்து எனக்கு வேலை வாய்ப்புகள் வந்திருந்தன. ஆனால் நான்

என் முதலாளியை எச்சரிக்கையோடு தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. நான் அரண்மனைக்குள் இருக்க விரும்பினேன். என்ன இருந்தாலும், சுயநியமனம் செய்து கொண்ட ஓர் உளவாளி நான். என்னால் முடிந்த அளவுக்குத் தகவல்களைச் சேகரித்து, என் அரசனுக்கு நான் அவற்றை அனுப்ப விரும்பினேன். எனவே, குபேரனின் சமையற்காரர்களில் ஒருவனுடன் நான் ஒரு சூழ்ச்சிகரமான நட்பை ஏற்படுத்திக் கொண்டேன். அவனுக்கு என்ன வயது இருக்கும் என்று என்னால் கணிக்க முடியவில்லை. மெலிந்த தேகத்தையும், கரிய நிறத்தையும் கொண்ட அவனுக்கு, காய்கறிகளை வெட்டிக் கொடுப்பதற்கும் இறைச்சியையும் மீனையும் கழுவிச் சுத்தப்படுத்துவதற்கும் ஓர் உதவியாளன் தேவைப்பட்டான். என்னை வேலையில் அமர்த்துவதற்குத் தனது தலைமைச் சமையற்காரரைத் தன்னால் ஒப்புக் கொள்ள வைக்க முடியும் என்று அவன் உறுதியாக நம்பினான். அரண்மனையின் உள்வட்டங்களுக்குள் அது என்னைக் கொண்டு சேர்க்கும் என்பதால், இம்முயற்சியை நான் மேற்கொள்வது நல்லது என்று நான் நினைத்தேன். காட்டுத்தனமான திட்டங்கள் என் மனத்தில் வேகம் பிடிக்கத் துவங்கியிருந்தன.

ஆறு நாட்கள் பயணத்திற்குப் பிறகு நான் இலங்கையில் தரையிறங்கினேன். தலைநகரான திரிகோட்டாவிற்கு அருகே இருந்த முக்கியத் துறைமுகத்தை வந்தடைவதற்கு முன்பு, எங்கள் கப்பல், இந்திய தீபகற்பத்தையும் இலங்கையின் வட முனையையும் சுற்றி வந்திருந்தது. திரிகோட்டா நகரக் குன்றின்மீது மினுமினுப்பாக ஒளிர்ந்து கொண்டிருந்த குபேரனின் அரண்மனையை என்னால் காண முடிந்தது. ஆயுதங்கள் தாங்கிய காவலாளிகள் காவல் கோபுரங்களில் நின்றதை நான் பார்த்தேன். ராஜவீதி துறைமுகத்திலிருந்து துவங்கி, கிழக்குப் பகுதியிலிருந்த முக்கிய வாசல்வரை நீண்டிருந்தது. அழகான தோட்டங்களும் மரங்களும் இருபுறங்களிலும் அணிவகுத்து நின்றன. கோட்டையின் மேற்கு மற்றும் தெற்குப் பகுதிகளில் குடிசை வீடுகளுடன்கூடிய பல சிறிய ஊர்கள் இருந்தன. ஏழைகள் அங்கு வசித்தனர். வடக்கே பல மைல் தூரம் நீண்டு பரவியிருந்த வர்த்தகச் சங்கங்களில் அவர்கள் வேலை செய்தனர். பொதுமக்களுக்கான பூங்காக்களும் ஏரிகளும் வடக்குக் கடற்கரையை அலங்கரித்தன. கிழக்குப் பகுதியில், இலங்கைக்கு விஜயம் செய்த கடலோடிகளுக்கான விடுதிகள் இருந்தன. அழகிய இளம்பெண்கள் நிரம்பிய இன்ப விடுதிகளும் அங்கு இருந்தன. பணம் கொடுக்கத் தயாராக இருந்த ஆண்களுக்கு மதுவையும் கள்ளையும் தங்கள் உடல்களையும் தர அவர்கள் தயாராக இருந்தனர். அரசுக் காவலர்கள் அருமையான

அரேபியக் குதிரைகளில் தெருக்களில் வலம் வந்தனர். திரிகோட்டாவைப் போன்ற ஒரு நகரத்தை நான் ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. முசிறி இதைவிடப் பெரியதாகவும் அதிக மும்முரமானதாகவும் இருந்தது, ஆனால் திரிகோட்டாவின் வசீகரம் அதனிடம் இருக்கவில்லை. முசிறி நகரம், குறுகலான, வளைவான சாலைகளால் நிரம்பி வழிந்த ஒரு நகரம். அங்கு எப்போதும் மும்முரமாக நடைபெற்ற வர்த்தகம் அந்நகரத்தைத் திணறடித்துக் கொண்டிருந்தது. மிகப் பெரிய கிராமச் சந்தைகளைப்போல, அந்நகரம் எப்போதும் கூட்டமாகவும் நெருக்கியடித்துக் கொண்டும் இருந்தது. செல்வத்தை வெளிப்படுத்திய எதுவும் அங்கு புலப்படவில்லை. ஆனால் திரிகோட்டாவின் புறநகர்ப் பகுதியில் இருப்பதைப் போலன்றி, குடிசை வீடுகளுடன்கூடிய எந்தத் தெருக்களும் அங்கு இருக்கவில்லை. திரிகோட்டா நகரின் வர்த்தகப் பகுதிகளில் ஒரு தூய்மையான நகரத்தை வெளிக்காட்டும் பொருட்டு, ஏழைகள் அந்நகரின் புறநகர்ப் பகுதிகளில் தூக்கி எறியப்பட்டிருந்தனர் என்பதை நான் உணர்ந்தேன். எது எப்படியோ, திரிகோட்டா நகரம் கண்ணுக்குப் பெரும் விருந்தளிப்பதாக இருந்தது. இங்கு விஜயம் செய்யும் எவரொருவராலும் திரிகோட்டாவையும் அதன் குன்றின்மீது இருந்த அரண்மனையையும் கண்டு பிரமிக்காமல் இருக்க முடியாது.

கோட்டையில் எனக்குக் கிடைக்கவிருந்த வரவேற்பு குறித்து நான் கவலையோடு இருந்தேன். கப்பலில் எனக்குக் கிடைத்திருந்த எனது சமையற்கார நண்பனுக்குப் பின்னால் ஒருசில அடிகள் தள்ளி நான் நடந்தேன். அப்போது திடீரென்று ஒருவிதமான பயம் என்னைச் சூழ்ந்தது. ஓர் உயரமான, கரிய குதிரையின்மீது அமர்ந்திருந்த ஓர் அரண்மனைக் காவல்காரன் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எதையோ நினைவுபடுத்திப் பார்க்க முயற்சித்துக் கொண்டிருந்ததைப்போல இருந்தது. அவனது முகத்தை நினைவுகூர நான் கடினமாக முயற்சித்தேன். அவனது முகம் எனக்குச் சிறிது பரிச்சயமானதாக இருந்தது, ஆனால் அவன் யாரென்று என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் அவனைக் கண்ணோடு கண் பார்க்க விரும்பவில்லை. அவனிடம் ஏதோ ஓர் அமானுஷம் குடிகொண்டிருந்தது. எனது நண்பன் மூச்சு விடாமல் பேசிக் கொண்டிருந்தான். அந்தி சாய்ந்து கொண்டிருந்ததால் கோட்டை வாசல் மூடப்பட்டுவிடும் என்று கூறிய அவன், அவ்வப்போது பின்னால் திரும்பி என்னைப் பார்த்து, வேகமாக நடந்து வரும்படி அவசரப்படுத்தினான்.

ஆயுதங்கள் தாங்கிய நான்கு காவலர்கள் காவல் காத்து நின்ற கோட்டை வாசலை நாங்கள் அடைந்தோம். இறுக்கமான

தசைகளுடனும் நீண்ட கைகள் மற்றும் கால்களுடனும் அக்காவலர்கள் மிடுக்காகக் காணப்பட்டனர். அவர்கள் என்னை ஓரமாக அழைத்துச் சென்று, நான் ஏதேனும் ஆயுதங்களை மறைத்து வைத்திருந்தேனா என்று சோதனையிட்டனர். அவர்கள் என் வேட்டியின் மடிப்புகளில் இருந்த சமையல் கத்தியைக் கண்டுபிடித்து, என்னைத் தனியாக நிற்கச் செய்தபோது, நான் கிட்டத்தட்ட மயங்கிவிட்டேன். நான் ஒரு தொழில்முறைச் சமையற்காரன் என்றும், என் தொழிலுக்கு அந்தக் கத்தி அவசியம் என்றும் என் நண்பன் அவர்களிடம் விளக்கினான். ஆனால், அக்காவலர்கள், அவனது மற்ற நண்பர்களோடு சேர்த்து அவனை அங்கிருந்து வெளியே தள்ளினர். காவலர்களின் அறையின் ஒரு மூலையில் நான் உட்கார்ந்தேன். நெடுநேரம் நான் அங்கு தனித்து விடப்பட்டேன். என்னிடம் விசாரணை செய்வதற்காக அவர்கள் தங்கள் மேலதிகாரியின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்ததை நான் தெரிந்து கொண்டேன். நேரம் கடந்து செல்லச் செல்ல, என் பயம் அதிகரித்தது. அவர்கள் என்னை என்ன செய்யவிருந்தார்கள்? இந்த விவகாரம் சீக்கிரம் முடிவடைய வேண்டும் என்று நான் விரும்பினேன். நள்ளிரவு நெருங்கியிருந்தது. நான் பயத்தில் கிட்டத்தட்ட இறந்து போயிருந்தேன். அப்போது, ஒரு நெட்டையான, கருத்த மனிதன் உள்ளே நுழைந்தான். மூன்று காவலர்கள் அவனுக்குப் பின்னால் மரியாதையோடு நின்றனர். அவன் அவர்களுடைய மேலதிகாரி என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அவன் நேராகத் தனது மேசைக்குச் சென்று, ஒருசில பனையோலைகளில் தனது முத்திரையைக் குத்திவிட்டு, பிறகு தனது எடுபிடிச் சிறுவனை அழைத்தான். பனையோலைக் கடிதங்கள் பட்டுவாடா செய்யப்படுவதற்காக அங்கிருந்து கொண்டு போகப்பட்டவுடன், அவன் என்னை நோக்கித் திரும்பினான்.

கப்பலில் எனக்குப் பழக்கமான எனது நண்பனுக்குப் பின்னால் நான் நடந்து வந்து கொண்டிருந்தபோது என்னை வெறித்துப் பார்த்த அதே காவலாளிதான் இவன். அவனது முகத்தில் ஒரு சிறு புன்னகை அரும்பியதுபோல இருந்தது. அது அவனை மிகவும் பயங்கரமானவனாகத் தோன்றச் செய்தது. பயத்தில் என் இதயம் என் வாய்க்கு வந்திருந்தது. அவன் என்னை நோக்கி நடந்து வந்து, எந்தவிதமான முன்னெச்சரிக்கையும் இன்றி, வேகமாக என் முகத்தைத் தன் காலால் எட்டி உதைத்தான். நான் பின்னால் போய்ச் சுருண்டு விழுந்தேன். கூடுதலாக வரவிருந்த உதைகளையும் அடிகளையும் நான் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தேன். எனக்குக் கத்த வேண்டும்போலத் தோன்றியது. அவன் என் தோளைப் பிடித்துத் தூக்கி, என் கண்களுக்குள் உற்றுப் பார்த்தான். மலிவான கள்ளின் பயங்கர

நெடி கலந்திருந்த அவனது மோசமான மூச்சுக் காற்று என்னைத் தாக்கியது. அது அவன் என் முகத்தில் எட்டி மிதித்ததைவிட அதிக மோசமானதாக இருந்தது. அவனது முகத்தில் வாந்தியெடுக்க வேண்டும்போல எனக்குத் தோன்றியது. பிறகு அவன் தன் கையைத் திருப்பி என் கன்னத்தில் ஓர் அறை விட்டான். என் வாயில் கதகதப்பான ரத்தத்தை நான் உணர்ந்தேன். பிறகு அவன் என்னைக் கீழே தள்ளிவிட்டு, "மூர்க்கனே, நான் இதற்கு முன்பு உன்னை எங்கேயோ பார்த்திருக்கிறேன்," என்று குரைத்தான்.

அப்போதுதான் அவனை நான் அடையாளம் கண்டுபிடித்தேன். எனது கிராமத்தைத் தாக்கியிருந்த கும்பலில் அவனும் இருந்தான். என் மகளை என் வீட்டுச் சுவர் முழுவதும் சிதறடித்தச் சிறுவனை நான் கொன்றபோது என்னைப் பின்தொடர்ந்து வந்திருந்தவன் இவன்தான். அவன் குபேரனின் அரண்மனையில் வேலைக்குச் சேர்ந்திருந்தான் என்பதை நான் அறியவில்லை. ஆனால் அச்சம்பவம் நடந்து சுமார் ஏழு வருடங்கள் இருக்கும். அந்த இடைவெளியில் ஏராளமான விஷயங்கள் நிகழ்ந்திருக்கக்கூடும். "ஐயா, இலங்கைக்கு நான் இப்போதுதான் முதன்முதலாக வருகிறேன்," என்று நான் கூறினேன்.

"நான் உன்னை வேறு எங்கேயோ பார்த்திருக்கிறேன்." அக்கணத்தில் அவனது அறைக் கதவு படாரென்று வேகமாகத் திறந்தது. நன்றாகப் பருத்திருந்த ஒருவன் உள்ளே நுழைந்தான். "சண்டாளா, நீ உன் கட்டுப்பாட்டை இழந்து கொண்டிருக்கிறாய். நீ அரண்மனைக் காவலர்களின் தலைமை அதிகாரியாக இருப்பதால், எனது வேலைக்காரர்களை நீ அடித்துத் துவைக்கலாம் என்று அர்த்தமில்லை. இதற்கு நீ ஒரு விலையைக் கொடுக்கப் போகிறாய்," என்று அந்த மனிதன் தன் தொண்டை கிழியக் கத்தினான்.

"அதை நான் மகிழ்ச்சியாகக் கொடுப்பேன். சமையலறையின் அரசனான நீ, உனது புனிதப் பாதங்களை எனது சாதாரண அலுவலகத்தில் பதித்துள்ளதற்கு விக்கிரமனான நான் மிகவும் நன்றியுடையவனாக இருப்பேன். சமையலறையின் அடுப்புக்குக் கீழே உன் காதலியோடு கொஞ்சிக் குலாவுவதை விட்டுவிட்டு இந்த நேரத்தில் நீ ஏன் இங்கு இருக்கிறாய் என்பதுதான் எனக்குப் புரியவில்லை."

"விக்கிரமா! பொறுக்கி ராஸ்கல்! நீ இதற்குச் சரியான விலையைக் கொடுக்கப் போகிறாய். நீ என் வேலைக்காரனை விட்டுவிடு. இல்லையென்றால், நாளைக்கு அரசருக்கு இது பற்றித் தெரிய வந்து, நீ அவருடைய செல்லப் புலிகளுக்குக் காலை உணவாக ஆகிவிடுவாய்."

"உன்னுடைய நண்பனைத் தாராளமாக இங்கிருந்து கூட்டிச் சென்று அவனோடு கொஞ்சி மகிழ். ஆனால் அவனோடு

இருக்கும்போது கொஞ்சம் கவனமாக நடந்து கொள். அவன் உன்னைப் பதம் பார்த்து, அதனால் நீ வலி தாங்காமல் ஓலமிட்டுப் பாதி நகரத்தை உறக்கத்திலிருந்து எழுப்பிவிடாதே." அந்த அதிகாரி என்னை ஒரு கந்தல் துணியைப்போலத் தூக்கி, அந்த குண்டு மனிதனிடம் எறிந்தான். அவனது பாதங்களில் போய் விழுந்த நான், மெதுவாக எழுந்திருக்க முயற்சித்தேன். அப்போது அந்தக் காவல் தலைவனும் அந்த குண்டு மனிதனும் ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்தனர்.

இறுதியாக, அந்த குண்டு மனிதன் திரும்பி நடந்தான். நான் அவனை வேகமாகப் பின்தொடர்ந்தேன். அந்தக் காவல் அதிகாரியின் கண்கள் என் முதுகிற்குள் துளையிட்டுக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. "அவன் என்னைக் கண்டுபிடித்துவிடுவான், என்றேனும் ஒருநாள் அவன் நிச்சயமாக என்னைக் கண்டுபிடித்துவிடுவான்," என்று நான் என் மனத்திற்குள் நினைத்தேன். அந்த எண்ணமே என்னைக் குலைநடுங்கச் செய்தது. பிறகு, என் ரட்சகனின் பின்னால் நான் வேகமாக நடந்தேன். அவனது உடலின் அளவைக் கருத்தில் கொண்டபோது, ஆச்சரியமளிக்கும் விதத்தில் அவன் வேகமாகவே நடந்தான். நான் ஒரு பெரிய வளாகத்தை அடையும்வரை அவன் என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. "இதுதான் மையச் சமையலறை. ஒட்டுமொத்தப் படைக்கும் இங்கிருந்துதான் உணவு செல்கிறது. என் பெயர் சுபோகன். நான்தான் தலைமைச் சமையற்காரன். அரச குடும்பத்திற்கான உணவை நான் தனிப்பட்ட முறையில் மேற்பார்வை செய்கிறேன். மற்றவர்களுக்குச் சமைப்பதற்கென்று சுமார் இருபது மேற்பார்வையாளர்களும் முந்நூறு சமையற்காரர்களும் உதவியாளர்களும் உள்ளனர். பிறகு, பரிமாறுவதற்கும் சுத்தப்படுத்துவதற்கும் பாத்திரங்களைக் கழுவுவதற்கும் பலர் இருக்கின்றனர். மீனைப் பற்றித் தெரிந்த யாரேனும் ஒருவனை நான் தேடிக் கொண்டிருந்தேன். நான் உன்னை வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று உன்னுடன் வந்த எனது சமையற்காரனான அரசு எனக்குப் பரிந்துரைத்தான். ஆனால் நான் உன்னுடைய தோழமையான மாமன் என்றும், உன் கருத்த முதுகுத் தோலைக் காப்பாறுவதற்கு நான் எப்போதும் உனக்காகத் தயாராக இருப்பேன் என்றும் நீ நினைத்துவிடாதே. கப்பலில் இருந்தவர்களில் ஆறு பேர் உனக்காகப் பரிந்து பேசியதால்தான் நான் உன்னை மீட்க வந்தேன். நீ அரசுவின் குழுவில் சேர்ந்து கொள். என் சமையலறைக்கு நீ பொருத்தமானவன்தானா என்று பார்ப்பதற்கு ஒருசில வாரங்கள் நான் உன் வேலையைக் கண்காணிக்கப் போகிறேன். நீ தங்குவதற்கான இடம் இடது பக்கத்தில் இருக்கிறது."

விக்கிரமனின் பிடியிலிருந்து உயிரோடு தப்பி வந்திருந்தது குறித்து நிம்மதி அடைந்திருந்த நான், அவனுக்கு மனமார நன்றி கூறினேன். அவன் என்னைப் பார்த்து, “வாரத்திற்கு மூன்று செப்புக் காசுகள் உனக்குச் சம்பளமாகக் கொடுக்கப்படும்,” என்று கத்திவிட்டு, தனது தங்கும் அறைக்குச் செல்வதற்கான தாழ்வாரத்தை நோக்கி நடக்கத் துவங்கினான். கப்பலில் எனக்கு நண்பனான அரசுவை நான் தேடிக் கண்டுபிடித்து நன்றி கூற விரும்பினேன். ஆனால் இரவு நீண்ட நேரம் ஆகியிருந்ததால், காலையில் அவனைப் பார்த்து நன்றி கூறிக் கொள்ளலாம் என்று நினைத்து, எனது அறைக்குள் நான் நுழைந்தேன். அங்கு தரையில் சில பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. சுமார் பன்னிரண்டு பேர் அங்கு பல்வேறு நிலைகளில் தூங்கிக் கொண்டிருந்தனர். நான் அவர்களுக்கிடையே ஒரு சிறிய இடைவெளியைக் கண்டுபிடித்து, அதில் புகுந்து கொண்டேன். நாளைக்கு நான் என் வேலையைத் துவக்குவேன். ஆனால் இப்போதைக்கு, வெறுமனே படுத்துக் கொண்டு, ஒரு நூறு வருடங்கள் நான் தூங்க விரும்பினேன்.



# 14

## நம்பிக்கைத் துரோகம்

ராவணன்

என் தூதுக் குழுவினர் ஒவ்வொருவராகத் திரும்பி வந்தனர். கப்பல்களைக் குத்தகைக்கு எடுப்பதற்கான பணி வெற்றிகரமாக நிறைவேறியிருந்தது. மாரீசனும் மயன் பள்ளியின் தலைவனை உடனழைத்து வருவதில் வெற்றி கண்டான். நாட்டிலேயே மிகச் சிறந்த பொறியியல் அறிவு பெற்றவன் அவன் என்று கூறப்பட்டது. தனது மிகச் சிறந்த தொழில்நுட்பவியலாளர்களில் இருபது பேரை அவன் தன்னுடன் அழைத்து வந்திருந்தான். அவனுடைய மனைவி காலமாகியிருந்ததால் தனது மகளையும் அவன் தன்னுடன் கூட்டி வந்திருந்தான். முழுக்க முழுக்க ஆண்கள் நிரம்பிய எனது முகாமில் இந்தத் தேவையற்றக் கவனச் சிதறல் எனக்கு வேண்டுமா? ஆனால் இந்த நிலையில் எந்தவிதமான சச்சரவையோ அல்லது உரசலையோ நான் விரும்பவில்லை. அவள் மிகவும் அழகானவள் என்று கூறப்பட்டது, ஆனால் அவள் தன் அழகைத் தனக்குள்ளேயே வைத்துக் கொண்டாள். அவள் மிகவும் கூச்ச சுபாவம் கொண்டவள் என்றும், அனைத்து

விதமான விரதங்களையும் பிரார்த்தனைகளையும் அவள் கடைபிடித்தாள் என்றும் பேசிக்கொள்ளப்பட்டது. அவள் என் வகையினளாக இருக்கவில்லை, எனவே அவளைப் பற்றி அதன் பிறகு நான் நினைக்கவில்லை.

எங்கள் பயணத்தைத் துவக்குவதற்குச் சித்திரைப் பதினைந்தாம் நாளை நாங்கள் குறித்திருந்தோம். ஒருசில நாட்கள் தாக்குப்பிடிக்கும் விதத்தில், ஜம்புமாலி, கப்பல்களின் கீழ்த்தளம் முழுவதையும் உணவுப் பொருட்களால் நிரப்புவதற்கு ஏற்பாடு செய்தான். முசிறிக்குத் தெற்கே அமைந்த, ஆள்நடமாட்டமில்லாத ஒரு கடற்கரைக்குப் பல சிறு குழுக்களை அவன் வழிநடத்திச் சென்றான். எங்களது கப்பல்கள் அக்கடற்கரையிலிருந்து ஒருசில மைல்கள் தூரத்தில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அருகிலிருந்த கிராமங்களிலிருந்தும் நகரச் சந்தையிலிருந்தும்கூட மளிகைச் சாமான்களைச் சிறிய அளவுகளில் வாங்கிச் சுமந்து சென்று, கடற்கரைக்கு அருகே இருந்த ஒரு காட்டிற்குள் ஒரு தற்காலிகமான முகாமில் நாங்கள் அவற்றைச் சேகரித்து வைத்தோம். அன்றிரவு அவை அனைத்தும் அங்கிருந்து எங்கள் கப்பல்களுக்குக் கொண்டு செல்லப்பட்டன. கப்பல்களில் மாற்றியமைக்கப்பட்ட அறைகள் முழுவதும் மிளகு மூட்டைகளால் நிரப்பப்பட்டன. அந்த மூட்டைகளில் ஆயுதங்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. கப்பலில் இருந்த ஒரு ரகசியத் தளத்தில் முன்னூறு வீரர்கள் மறைந்திருந்தனர். புறப்படுவதற்கு இப்போது நாங்கள் தயாராக இருந்தோம்.

எங்கள் பயணத்தில் பல பிரச்சனைகள் இருந்தன. துவக்கத்தில் அது மிகவும் குழப்பமானதாக இருந்தது. ஆனால் மெல்ல மெல்ல, எல்லாம் கட்டுப்பாட்டிற்குள் வந்தது. என் தாயார், எனது அத்தை, என் சகோதரி, எங்களுக்கு உதவிய பொறியியலாளர்கள், மயன் பள்ளியின் தலைவன், அவனது மகள் ஆகியோர் உட்பட, ஒருசில நூறு வீரர்களைக் காட்டிலேயே விட்டுவிட்டு, நாங்கள் மட்டும் இலங்கைக்குப் பயணிப்பதென்று தீர்மானித்தோம். ஜம்புமாலியையும் நாங்கள் அவர்களுடன் இருக்கச் செய்தோம். ஏனெனில், இலங்கைக்குச் செல்வது அவனுக்கு அதிக ஆபத்தானதாக இருந்தது. பிராந்தியத்தின் முன்னாள் ஆளுனரைப் பலர் அடையாளம் கண்டுவிடக்கூடிய வாய்ப்பு இருந்தது. என்னையும் கும்பகர்ணனையும் விபீஷணனையும்கூட யாரேனும் அடையாளம் கண்டுவிடக்கூடிய வாய்ப்பு இருந்தது. ஆனால் இலங்கையைப் பொறுத்தவரை, நாங்கள் முகவரி இல்லாதவர்கள். எனவே நாங்கள் துணிந்து சென்றோம்.

பதினைந்தாம் தேதி நெருங்கியபோது, முகாமில் ஏற்பட்ட

இறுக்கமும் உற்சாகமும் தாள முடியாத அளவுக்கு இருந்தன. நாங்கள் எப்போது பேசினாலும், வரவிருந்த யுத்தத்தைப் பற்றியும், போர் உத்திகளைப் பற்றியும், இலங்கையின் பெருமைகளைப் பற்றியும், அழகான பெண்களைப் பற்றியும் மட்டுமே பேசினோம். தோல்வியைப் பற்றியோ அல்லது அழிவைப் பற்றியோ யாருமே விவாதிக்க விரும்பவில்லை. வருணனின் கொள்ளையர்க் கப்பல்களை எதிர்கொள்வதற்கான சாத்தியக்கூறு பற்றியும் யாரும் சிந்திக்க விரும்பவில்லை. குபேரனின் உளவாளியான பத்ரன், அந்த வணிக அரசனுக்கு முன்னெச்சரிக்கைக் கொடுத்திருந்து, அதனால் நாங்கள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் சூழப்பட்டுப் பிடிபடுவதற்கான சாத்தியக்கூற்றைப் பற்றிக் குறிப்பிட ஒருவருக்குக்கூடத் துணிவிருக்கவில்லை. அப்படிப்பட்ட எண்ணங்களை நாங்கள் எங்கள் மனங்களின் ஆழங்களில் புதைத்து வைத்திருந்தோம்.



## பத்ரன்

நான் குபேரனின் ஊழியனாக ஆகி ஒரு மாதம் ஓடியிருந்தது. எங்கள் கப்பல்கள் வருவதற்கான சுவடே தெரியவில்லை. பருவ மழை இரண்டு வாரங்கள் முன்னதாகவே பலவீனமடைந்திருந்தது. வானிலை நாளுக்கு நாள் கதகதப்பாகவும் இனிமையாகவும் ஆகிக் கொண்டிருந்தது. பருவ மழை பின்வாங்குவதற்கு முன்பு ஒரு மாத இடைவெளியின்போது வானிலை இப்படித்தான் இருந்தாக வேண்டும். சமையலுக்கு இறைச்சியும் காய்கறிகளும் வாங்குவதற்காக ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையன்றும் நான் சந்தைக்குச் சென்றேன். அப்போது, துறைமுகத்திற்கு எதிரே அமைந்திருந்த ‘மசாலாப் பொருட்கள் விற்பனைச் சந்தை’க்கு மெல்லப் பதுங்கிச் சென்று, துறைமுகத்தில் எங்கள் கப்பல்களைத் தேடினேன். எனக்குப் பரிச்சயமான ஏதேனும் ஒரு முகம் தென்பட்டதா என்று சந்தையிலிருந்த மக்கள் கூட்டத்தை என் கண்களால் மேய்ந்தேன்.

நான் இப்படிச் செய்தபோதெல்லாம் அசௌகரியமாக உணர்ந்தேன். யாரோ என்னைப் பின்தொடர்ந்து கொண்டிருந்தது போன்ற உணர்வு அது. அது ஒரு தெளிவற்ற உணர்வுதான் என்றாலும்கூட, அது தொடர்ந்து நீடித்தது. நான் அங்கு சென்றபோதெல்லாம் சுற்றுமுற்றும் பார்த்தேன், திடீர்த்திடீரென்று

வேகமாகத் திரும்பினேன், குறுகலான அந்தச் சந்தையின் சந்துகளில் எதிர்பாராத இடங்களில் திரும்பினேன், அங்கிருந்த சிறிய உணவகங்களுக்குள் நுழைந்து அவற்றின் பின் கதவுகள் வழியாக வெளியேறினேன். ஆனால் யாரையும் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் நிர்வாணமாக இருந்ததுபோல உணர்ந்தேன். என் சொந்த நிழலைக் கண்டுகூட நான் பயந்தேன். பெரும்பாலான சமயங்களில் நான் மிகவும் சிடுசிடுப்பாக இருந்தேன். எல்லாவற்றையும் விட்டுவிட்டு, எனது சொந்த நாட்டிலுள்ள ஏதோ ஊர்பேர் தெரியாத ஒரு கிராமத்திற்குச் சென்றுவிட நான் விரும்பினேன். இரவில் கத்தியபடியே தூக்கத்திலிருந்து நான் கண்விழித்தேன். என் மகளின் சிதறடிக்கப்பட்ட மூளையும், என் மனைவியின் ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்த கால்களும், அந்தப் பேய்களின் புடைப்பான, ஆடையற்றப் பிட்டங்களும் தொடர்ந்து என் மனக்கண்ணில் ஓடிக் கொண்டே இருந்தன. நான் தொடர்ந்து இங்கே தங்கி, எனது பழிவாங்கலைத் திட்டமிட வேண்டும் என்பதை நான் அறிந்திருந்தேன். விக்கிரமன் என் கனவுகளில் வந்து என்மீது இகழ்ச்சிப் பார்வையை வீசினான். அக்கனவுகளில் அவன் தன் கால்மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டு, தான் ஏதோ ஒரு விருந்தை உண்டு கொண்டிருந்ததைப்போலத் தனது விரல்களை நக்கினான். நான் சாப்பிடுவதற்காக ஏதோ ஒன்றை அவன் தொடர்ந்து என்னிடம் நீட்டிக் கொண்டே இருந்தான். அது என் மகளின் சிதறடிக்கப்பட்ட மூளை. அக்கணங்களில், திரும்பிப் போவதைப் பற்றியும் அமைதியான வாழ்க்கையைப் பற்றியும் நான் மறந்து போனேன். நான் பழி தீர்த்துக் கொள்ள விரும்பினேன்.

இறுதியில், ஒருநாள் நான் அவர்களைப் பார்த்தேன். சில பொருட்களை மூட்டைகளில் சுமந்து கொண்டு, மசாலாப் பொருட்கள் விற்பனைச் சந்தையின் தெருக்களின் ஊடாக ஒருசில குதிரைகளில் அவர்கள் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் பல குழுக்களாகப் பிரிந்து பரவியிருந்தனர், ஆனால் ராவணனை என்னால் சுலபமாக அடையாளம் காண முடிந்தது. ராவணைக் கண்ட நான் பீதியடைந்தேன். ஒரு வணிகனுக்குரிய நடையோ அல்லது பாவனையோ அவருக்கு இருக்கவில்லை. அவர் ஓர் அரசனைப்போலத் தனது குதிரையில் வலம் வந்தார். எந்த அரசன் ஒரு சந்தைக்கு வருவான்? ராவணன் தனது நடத்தை மற்றும் பாவனைகளின் மூலம் ஒட்டுமொத்தத் திட்டத்தையும் வெளிப்படுத்திவிடக்கூடும். என் எண்ணம் தவறாகவும் இருக்கலாம். தாக்குதலைப் பற்றித் தெரியாத மற்றவர்களுக்கு, ராவணன் ஒரு செழிப்பான வணிகரைப்போலத் தோன்றக்கூடும். வேலைக்காரர்களைப்போல மாறுவேடம் அணிந்திருந்த வீரர்களும்

தங்கள் பங்கைச் சிறப்பாகச் செய்து கொண்டிருக்கவில்லை. அவர்கள் வேலைக்காரர்களைப்போலவே நடந்து கொள்ளவில்லை. அவர்கள் தங்களுக்கிடையே அரட்டையடித்துக் கொள்ளவில்லை. கடற்சிப்பிகளால் ஆன கழுத்துச் சங்கிலிகளையும் கண்ணாடி வளையல்களையும் விற்றச் சிறிய கடைகள் முன்னால் அவர்கள் கூடி நின்று பேரம் பேசவில்லை. மாறாக, அவர்கள் அமைதியாக நடந்தனர். அவர்கள் எந்நேரமும் கண்டுபிடிக்கப்பட்டுவிடலாம். தூரத்தில் இரண்டு கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சப்பட்டு நிறுத்தப்பட்டிருந்ததை நான் கவனித்தேன். அவை மிகச் சிறியவையாகவும் பலவீனமாகவும் தோன்றின. நான் என் அரசனுக்கு அருகே சென்று, அவரை நான் எச்சரித்தாக வேண்டியிருந்தது. ஆனால் அவர் என்னை நம்பாவிட்டால் நான் என்ன செய்வது?

“ஆக, நீ இதற்குத்தான் இங்கு வந்தாயா?” விக்கிரமனின் குரலைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். ஒரு புல்லைச் சுவைத்தபடி அவன் எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தான். ஒரு வணிகனாக மாறுவேடம் அணிந்திருந்த அவன், வணிகர்களோடு வணிகனாக அங்கு ஒன்றுகலந்தான். அவனது ஒரு கையில், சிறிய வணிகர்கள் பயன்படுத்திய ஒரு சிறிய பழுப்பு நிறப் பை இருந்தது. அவனது மற்றொரு கை, அவனது முதுகுக்குப் பின்னால் இருந்தது. அந்தக் கையில் ஒரு குத்துவாள் இருந்தது என்று நான் உறுதியாக நம்பினேன். அவன் என்னை எதுவும் செய்வதற்கு முன், நான் அவனது கால்விரல்களில் ஏறி மிதித்து அவனை வேகமாகத் தள்ளினேன். அவன் நிலை தடுமாறி மல்லாக்காகக் கீழே விழுந்தான். பிறகு, சுதாரித்துக் கொண்டு அவன் விரைவாக எழுந்தான், ஆனால் அதற்குள் நான் அங்கிருந்து ஓடியிருந்தேன். சூரியனின் ஒளியில் அவனது குத்துவாள் மினுமினுத்துக் கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. கூட்டத்தினர் அலறினர். நான் என்னால் முடிந்த அளவுக்கு வேகமாக அவர்களிடையே குறுக்கும் நெடுக்குமாகப் புகுந்து ஓடினேன். வழியில், பழ வண்டிகளைக் கவிழ்த்தேன், குங்குமக் குவியல்களை மிதித்துக் கலைத்தேன். கடைக்காரர்களும் விற்பனைச் சிறுவர்களும் என்னை வசை பாடினர், நகங்களால் பிராண்டினர், என்னை அடிக்கவும் செய்தனர். அப்போது ராவணன் திரும்பி என்னைப் பார்த்தார். அவரது முகத்தில் குழப்பம் சூழ்ந்தது. பிறகு, அவர் என்னை அடையாளம் கண்டுகொண்டார். அவரது வசீகரமான முகத்தில் உச்சபட்ச வெறுப்பை நான் கண்டேன். மக்கள் எல்லாத் திசைகளில் இருந்தும் எங்களை நோக்கி நகர்ந்து, எங்களைச் சூழ்ந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். மாறுவேடங்களில் இருந்த காவலர்கள் எங்களை நெருங்கிக்

கொண்டிருந்தனர். விக்கிரமன் கெட்டிக்காரன். நாங்கள் அவனது கையில் ஓர் எலுமிச்சம்பழத்தைப்போல இருந்தோம். அவன் என்னைக் கடினமாகப் பிழிந்து கொண்டிருந்தான்.

“ஓடிப் போய்விடுங்கள்!” என்று நான் என் தொண்டை கிழியக் கத்தினேன். ராவணனின் கையில் ஒரு வாள் மினுமினுத்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். பிறகு, நூற்றுக்கணக்கான வாள்கள் கூட்டத்திலிருந்து வெளிப்பட்டன. ராவணனின் ஆட்கள் தப்பித்து ஓடப் போராடியதில் சந்தையின் பல்வேறு மூலைகளில் புழுதி பறந்தது. நான் அரசனின் குதிரையைச் சென்றடைந்து, “அரசே, என்னை உங்களோடு கூட்டிச் சென்றுவிடுங்கள்!” என்று கதறினேன்.

விக்கிரமன் எங்களுக்கு வெகு அருகே வந்திருந்தான். எக்கணத்திலும் நான் கொல்லப்படலாம் அல்லது கைது செய்யப்படலாம்.

“தேசத் துரோகி! சண்டாளா! போய் நரகத்தில் வெந்து சாவு!” ராவணனின் கர்ஜனை விண்ணைப் பிளந்தது. அவர் என் மூக்கின்மீது விட்டக் குத்து, அவரது வார்த்தைகள் அளவுக்கு வேதனையூட்டவில்லை. நான் விக்கிரமன்மீது விழவிருந்தேன், ஆனால் அவன் லாவகமாக என் வழியிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டு, ராவணனை நோக்கிச் சென்றான். அவன் அவரது குதிரையின் கடிவாளக் கயிற்றைப் பிடித்து, அரசனைக் குத்த முயன்றான். ராவணனிடமிருந்து வந்த மற்றொரு பலமான உதையில், விக்கிரமன் தரையில் வந்து விழுந்தான். ராவணனின் ஆட்கள் காவலாளிகளிடமிருந்து வெற்றிகரமாகத் தப்பியிருந்ததை நான் நிம்மதியுடன் பார்த்தேன். பின்வாங்குமாறு தன் ஆட்களுக்கு உத்தரவிட்டபடியே, கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு, அரசன் வேகமாகத் தனது குதிரையில் பறந்தார். விரைவில், தனது வீரர்களில் சிலர் குதிரைகளிலும், மற்றவர்கள் வேகமாக ஓடியபடியும் தன்னைப் பின்தொடர, முழு வேகத்தில் அவர் அச்சந்தையிலிருந்து வெளியேறினார். ஓடிக் கொண்டிருந்த வீரர்கள் அடங்கிய சிறு குழுவை ஒருசில காவலர்கள் அரை மனத்துடன் பின்தொடர்ந்து கொண்டிருந்தனர். எனது உடைந்த மூக்கிலிருந்து வழிந்து கொண்டிருந்த ரத்தம் ஒரு குட்டையை உருவாக்கியிருந்தது. நான் எழுந்து நிற்க முயற்சித்தேன், ஆனால் என் முகத்தின்மீது யாரோ ஓங்கி மிதித்தார்கள். விக்கிரமன் கடுங்கோபத்தில் இருந்தான். அவன் என்னை மீண்டும் மீண்டும் பலமாக மிதித்தான். நான் எழுந்து ஓட விரும்பினேன், ஆனால் விக்கிரமனின் மிதிகள் மழைபோல என்மீது வந்து விழுந்தன. நான் கிட்டத்தட்ட மயக்கமடைந்திருந்தபோது, யாரோ என்னைப் பாதி தூக்கியபடியும் பாதி இழுத்தபடியும் அரண்மனைக்குக் கூட்டிச்

சென்றனர். விக்கிரமனின் அலுவலகத்தில் இருந்த சிறிய சிறையை நான் அடைந்த நேரத்தில் என் உடல் முழுவதும் ரத்தத்தால் நனைந்திருந்தது. அங்கு அவன் தனது பழைய சடங்கை முதலிலிருந்து துவக்கினான். அவனது சிறைக்கு வருவதற்கு முன்பு நான் இறந்திருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன்.



ராவணன்

பாழாகிவிட்டது! ஒரு சண்டாளனால் எல்லாமே பாழாகிவிட்டது! மாதக்கணக்கில் திட்டமிட்டது, ஆயுதங்களுக்கும் உணவுப் பொருட்களுக்கும் போராடியது, வெயிலின் கீழும் மழையின் கீழும் வாழ்க்கை நடத்தியது, எல்லாமே வீணாகிப் போனது. அந்தப் பருத்த விவசாயியைப் பிடிக்க லாயக்கற்றுப் போன நமது காவலர்கள்தான் இதற்குக் காரணம். அவனை என் கைகளாலேயே நான் கொன்றுவிடுவேன். ஆனால் இப்படிப்பட்டக் கோபமும் வெறுப்பும் எங்கள் வாழ்க்கையை மேலும் அதிக அவலமானதாக ஆக்கும் என்பதை நான் அறிந்திருந்தேன். பிரஹஸ்தன் ஒரு மரத்தின் அடியில் தூங்கிக் கொண்டிருந்தான். சுமாலியும் ருத்ராக்கனும் மணலில் வரைபடங்களை வரைந்து எதையோ விவாதித்துக் கொண்டிருந்தனர். கும்பகர்ணனும் விபீஷணனும் காட்டிற்குள் ஓடிப் போயிருந்தனர். எதிரியை ஒருமுறை எதிர்கொள்வதற்கு முன்னாலேயே நாங்கள் எங்கள் யுத்தத்தில் தோற்றுப் போனோம். நான் இலங்கையை நேரடியாகத் தாக்கி, வரலாற்றில் புகழ்மிக்க ஒருவனாக விளங்க விரும்பினேன். என் வீரர்களைக் குபேரனின் அரண்மனைக்கு வழிநடத்திச் சென்று நான் வீர மரணம் அடைய விரும்பினேன். ஆனால் அது தற்கொலை செய்து கொள்வதற்குச் சமம் என்று பிரஹஸ்தன் நினைத்தான். நாங்கள் இப்போது குழுமியிருந்த செங்குத்துப் பாறையின்மீதிருந்து கீழே குதிப்பது, அதைவிட அதிகச் செயற்திறன்மிக்க வழி என்று அவன் நினைத்தான். இவ்வழியில், பொதுமக்களுக்கு எங்களால் எந்தத் துன்பமும் ஏற்படாது என்று அவன் கூறினான். எனவே, நாங்கள் இந்த நரகக் குழியில் சிக்கிக் கிடந்தோம். ஒரு புறம் கடலையும், மறுபுறம் குபேரனின் அரண்மனையையும் பார்த்தாற்போல அமைந்திருந்த ஒரு குன்றின் உச்சியில் நாங்கள் இருந்தோம். இவற்றுக்கு இடையே இருந்த பள்ளத்தாக்கில், குபேரனின் படை எங்களுக்காகக் காத்திருந்தது.

நாங்கள் முற்றுகையிடப்பட்டிருந்தோம். எந்த நேரத்திலும் மேலே வந்து அவர்களால் எங்களைத் தீர்த்துக் கட்டிவிட முடியும். நாங்கள் பசியால் இறந்து போய்விடுவோம் என்பதில் அவர்கள் உறுதியாக இருந்தனர். சுபேல மலை வெறுமையாக இருந்தது. காட்டிலும் வெகுசில விலங்குகளே இருந்தன. நீண்ட நாட்கள் முந்நூறு மக்களின் பசியைப் போக்க அவற்றால் முடியாது. மயன்களால் மறுவடிவமைப்புச் செய்யப்பட்ட, எங்கள் புகழுக்கும் அசுர சாம்ராஜ்யத்தின் மறுபிறப்புக்கும் காரணமாக ஆகவிருந்த எங்கள் கப்பல், குபேரனின் கடற்படையால் ஓர் இலைப் படகைப்போலக் கடலுக்குள் மூழ்கடிக்கப்பட்டதை நாங்கள் பார்த்தோம். எங்களுடைய எஞ்சிய ஆயுதங்கள், கடலுக்கடியில் 200 அடிகள் ஆழத்தில் பாதுகாப்பான இடத்திற்குப் போய்விட்டிருந்தன.

மாரீசன் மட்டுமே இவற்றைப் பற்றி அதிகமாக அலட்டிக் கொள்ளவில்லை. அந்த முதியவன் எப்போதுமே மகிழ்ச்சியாக இருந்தான். வீரர்களுக்குக் குதூகலமூட்டுவதற்கு அவன் சில விளையாட்டுக்களை உருவாக்கினான், பழங்காலத்துக் கதைகளைக் கூறினான். மாரீசன் கூறிக் கொண்டிருந்தவை, விஷயங்கள் நவீனமாகவும் சிக்கலாகவும் இல்லாத, எண்ணங்கள் தூய்மையாக இருந்த, வாழ்க்கையை அனுபவிப்பதற்கு மக்களுக்கு நேரமிருந்த, வாழ்வதற்குச் சிறந்த ஓர் இடமாக உலகம் இருந்த ஒரு காலகட்டத்தைச் சேர்ந்த கதைகள். நெருப்பு மூட்டி ஒன்றாகச் சேர்ந்து அமர்ந்திருந்த நாங்கள், சுத்தமான காற்றை சுவாசித்துக் கொண்டும், அவசரமற்ற வாழ்க்கையை வாழ்ந்து கொண்டும் இருந்த எங்கள் மூதாதையர்கள் வாழ்ந்த அந்தக் காலங்களில் நாங்கள் வாழ்ந்து கொண்டிருந்ததுபோலக் கற்பனைச் செய்தோம். இக்காலத்தில் இளைஞர்கள் பெரியவர்களை மதிக்கவில்லை என்றும், மக்கள் ஒருவரையொருவர் ஏமாற்றினர் என்றும், எல்லா நேரங்களிலும் அவர்கள் பொய் கூறினர் என்றும், வாழ்க்கையை மிகவும் அவசரமாக வாழ்ந்து கொண்டிருந்தனர் என்றும், அதனால் விஷயங்கள் எவ்வளவு சீரழிந்து கிடந்தன என்றும் கூறியே மாரீசன் தன் கதைகளை முடித்தான். ஆனால் எதிர்காலத்தில் எல்லாம் சிறப்பாக இருக்கும் என்று அவன் கூறினான். மாரீசா, நீ உண்மையிலேயே ஓர் அபாரமான நன்னம்பிக்கையாளன், ஓர் அற்புதமான மனிதன். நீ இல்லாமல் நாங்கள் என்ன செய்திருப்போம்?

வடகிழக்குப் பருவமழை மீண்டும் துவங்கியது. நாங்கள் தொப்பலாக நனைந்தும், நோய்வாய்ப்பட்டும், வாழ விருப்பமின்றி விரக்தியோடும் இருந்தோம். எங்கள் வீரர்களில் பாதிப் பேர் காய்ச்சலில் படுத்துவிட்டனர். நாங்கள் பசியால் துவண்டு கொண்டிருந்தோம். மழை

மேகங்கள் எனக்கு மேலே சுழன்று கொண்டிருக்க, அந்த இருண்ட வானின்கீழ் நான் காத்திருந்தேன். இடி முழக்கங்கள் உரத்தச் சத்தத்துடன் எதிரொலித்தன. இங்கேயே தங்கி, ஈக்களைப்போல மடிவது குறித்து நான் பிரஹஸ்தனுடன் மீண்டும் மீண்டும் சண்டையிட்டு இருந்தேன். ஆனால் நாங்கள் இந்த இடத்திலேயே இருக்க வேண்டும் என்பதில் அவன் பிடிவாதமாக இருந்தான். நாங்கள் இங்கிருந்து அகன்றால், குபேரனின் பொறியில் சிக்கிவிடுவோம் என்று அவன் எச்சரித்தான். எனது வீரர்களுக்கு இடையே கலக உணர்வு உருவாகியிருந்ததை என்னால் உணர முடிந்தது. என்மீது அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையும் கணிசமாகக் குறைந்திருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. நான் எங்கு போனாலும் முன்பு கேட்ட, “அரசன் வாழ்க!” என்ற முழக்கங்கள் இப்போது என் காதுகளில் விழவில்லை. காலை வேளைகளில் நடைபெற்ற அணிவகுப்பிலும் பயிற்சியிலும் வெகுசிலரே கலந்து கொண்டனர். தான் தலைவனாக ஆவதற்கு, வீரர்களிடையே ஒரு பெரும் கிளர்ச்சி ஏற்படுவதற்காகப் பிரஹஸ்தன் காத்துக் கொண்டிருந்தான் என்ற சந்தேகம் என்னை நச்சரித்து வந்திருந்தது. இதைப் பற்றி நான் கும்பகர்ணனிடம் பேசினேன். அது என் கற்பனை என்று அவன் நினைத்தாலும், பிரஹஸ்தன்மீது தான் ஒரு கண் வைத்துக் கொள்வதாக எனக்கு வாக்களித்தான். ஏதேனும் ஒரு விதத்தில் நாங்கள் மீட்கப்படுவதற்காக நான் காத்திருந்தேன். அது குறித்து ஏராளமான விஷயங்கள் நடக்கும் என்று நான் நம்பினேன். வருணன் இலங்கையைத் தாக்கி, நாங்கள் மதிப்பாகப் பின்வாங்கிச் செல்வதற்கு எங்களுக்கு ஒரு வழியமைத்துக் கொடுக்கக்கூடும், அல்லது கடல் அப்படியே இத்தீவை விழுங்கிவிடக்கூடும், அல்லது அரண்மனையில் ஏற்படும் ஒரு புரட்சியில் குபேரன் கொல்லப்பட்டு, அவனது மாற்றாந்தாய் மகனான நான் இத்தீவை ஆள்வதற்கு எனக்கு அழைப்பு விடுக்கப்படக்கூடும் என்று நான் நினைத்தேன். இவற்றில் ஒன்றுகூட ஒருபோதும் நிகழப் போவதில்லை என்பதும் எனக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிந்தது. வானில் மிக உயரத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்த பிணந்தின்னிக் கழுகுகள், நாங்கள் அனைவரும் ஒவ்வொருவராகச் செத்து விழுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தன.

அப்போது ஒருநாள், எதிர்பாராத விதமாக, எனது விருப்பங்கள் உண்மையாயின.



# 15

## நஞ்சு கலத்தல்

பத்ரன்

நான் இன்னும் உயிரோடு இருந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவர்கள் என் கைவிரல்கள் மற்றும் கால்விரல்களில் இருந்து எல்லா நகங்களையும் பிடுங்கியிருந்தனர். அவர்கள் என்னைக் கொதிக்கும் நீரால் குளிப்பாட்டினர், ஊசி முனைகளுடன்கூடிய கம்பிகளால் என்னைத் துளைத்தனர், தோலுரிந்த எனது உடம்பில் மிளகுப் பொடியைத் தூவினர், என்னைத் தலைகீழாகத் தொங்கவிட்டனர், சாட்டையால் அடித்தனர். அவர்கள் எனக்கு மேலும் என்னவெல்லாம் செய்தனர் என்பதை நான் மறந்துவிட்டேன். எனது காயங்களில் நோய்க்கிருமி பாதிப்பு ஏற்பட்டது. ஈக்கள் அவற்றின்மீது உட்கார என்னைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தன. நான் அந்த மண் தரையில் வாந்தியெடுத்துச் சுருண்டு படுத்துக் கிடந்தேன். என் உடலின்மீது ஓர் ஒட்டுத் துணிகூட இருக்கவில்லை. தெள்ளுப்பூச்சிகளும் எறும்புகளும் என்னை உயிரோடு உட்கொள்வதற்காக நிலத்திற்குள்ளிருந்து வெளியே வந்தன. விக்கிரமன்

அவ்வப்போது வந்து, தனது வாளின் முனையால் என் உடலில் குத்தினான், சில சமயங்களில் ஆழமாகச் செருகினான். இவ்வளவுக்கும் இடையே, எனக்குக் கோபம் ஏற்படுத்துவதுபோல அவன் பேசினான். பிறகு அவன் தனது பேய்ச்சிரிப்பைச் சிரித்தான். நான் எந்தச் சிந்தனையுமின்றி படுத்துக் கிடந்தேன். எனக்கு உணர்ச்சி அற்றுப் போயிருந்தது. நான் அங்கு அப்படிக் கிடந்தது இரண்டு வாரங்களா அல்லது இரண்டு வருடங்களா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது பற்றி எனக்குக் கவலையில்லை. நான் இறக்க விரும்பினேன், அவ்வளவுதான்.

அப்போது ஒருநாள், திடீரென்று, நான் வாழ்வதென்று தீர்மானித்தேன். விக்கிரமனுக்கு என்மீது சலிப்பு ஏற்பட்டிருந்ததா அல்லது அவன் வேறு வேலைகளில் மும்முரமாகியிருந்தானா என்று தெரியவில்லை. நான் அவனை அடிக்கடிப் பார்க்கவில்லை. காவலர்கள் என்மீது இரக்கம் கொண்டு, ஒரு மருத்துவரை எனது சிறைக்கு அழைத்து வந்தனர். அவர் எனது காயங்களைப் பரிசோதித்தபோது மேலும் அதிக வேதனையை எனக்கு ஏற்படுத்தினார். ஆனால் சில நாட்கள் கழித்து எனது காயங்கள் குணமடைந்தன, என உடல் அதிக வலிமை அடைந்தது. சுகன் என்ற பெயர் கொண்ட ஒரு காவலாளி எனக்கு நெருக்கமாக ஆனான். அவன் வழக்கமாக இரவு நேரத்தில் பணிக்கு வந்தான். அந்த நேரத்தில், தீவின் தெற்குக் கடற்கரையோரம் இருந்த தனது கிராமத்தைப் பற்றியும், தனது மனைவி மற்றும் ஆறு குழந்தைகளைப் பற்றியும், அவர்கள் தான் திரும்பி வருவதற்காகக் காத்துக் கொண்டிருந்தது பற்றியும், தான் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்த கடன்களைப் பற்றியும் என்னிடம் பேசினான். நான் தப்பிக்க விரும்பியதால், அவனது பேச்சை அமைதியாகக் காது கொடுத்துக் கேட்டேன். அவன் என்மீது நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதால் அவன் கூறியதை நான் பொறுமையாகக் கேட்டேன். என்றேனும் ஒருநாள் நான் அவனைக் கொல்லவிருந்தேன் என்பதில் நான் உறுதியாக இருந்ததால், அவனது பேச்சில் கவனம் செலுத்துவதுபோல நான் பாசாங்கு செய்தேன். அவன் எனக்கு மருத்துவ உதவிகளைச் செய்தான், காயப்பட்டிருந்த என் ஆன்மாவிற்கு ஆறுதலளித்தான், தனது கதைகளால் எனக்குக் களிப்பூட்டினான். நான் அவனை நேசிக்கத் துவங்கிவிடுவேனோ என்று நான் பயந்தேன். எனவே, ஓர் இரவில், அவன் என்னிடம் பேசிக் கொண்டிருந்தபோது, நான் பலவீனமாக இருந்ததுபோல நடித்து அவன்மீது சாய்ந்தேன். அவன் என்னைச் சுமந்து சென்று, கிழிந்த பாயின்மீது கிடத்தினான். அந்தப் பாய்தான் எனது படுக்கையாக இருந்தது. சிறைக் கதவு விரியத்

திரிந்து கிடந்ததை நான் என் ஓரக்கண்ணால் பார்த்தேன். நான் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த வாய்ப்பு இதுதான். திடீரென்று நான் அவனுடைய கழுத்தை நெறித்தேன். நான் அவனைக் கொன்று கொண்டிருந்தேன் என்பதை அவன் புரிந்து கொண்டபோது அவனது முகத்தில் தென்பட்ட அதிர்ச்சி இன்னும் என் நினைவில் உள்ளது. அவனது உயிர் எவ்வளவு வேகமாக அவனது உடலைவிட்டுப் போய்க் கொண்டிருந்ததோ, அதே வேகத்தில், மனிதகுலத்தின்மீதான நம்பிக்கையும் அவனைவிட்டுப் போய்க் கொண்டிருந்ததை வெளிப்படுத்திய அவனது முகம் என்றென்றும் என் மனத்தில் நிலைத்திருக்கும்.

நான் அவனை அந்தப் பாயின்மீது கிடத்தி, அவனது ஆன்மாவிற்காக ஓர் அமைதியான பிரார்த்தனையைக் கூறினேன். களைத்துப் போயிருந்த, முகம் தெரியாத அவனது மனைவி, தனது ஆறு குழந்தைகளுடன் இவனுக்காகத் தொலைதூரத்தில் ஒரு தெற்குக் கிராமத்தில் காத்துக் கொண்டிருந்தாள் என்ற எண்ணம் ஒரு கணம் என் மனத்தில் பளிச்சிட்டு மறைந்தது. அது ஓரிரு நொடிகள் என் மனத்தில் உலவியது, ஆனால் வெளியே பிற காவலாளிகள் இருந்தது என் நினைவிற்கு வந்தது. அங்கேயே சுற்றிக் கொண்டிருப்பது பாதுகாப்பானது அல்ல. நான் அங்கிருந்து வெளியேறியாக வேண்டியிருந்தது. நான் வெளியே எட்டிப் பார்த்தேன். அப்பாலிருந்த தெருக்களின் மயான அமைதி, நள்ளிரவு கடந்திருந்ததை உணர்த்தியது. ஒரு காவலாளி கதவின் அருகே தூங்கிக் கொண்டிருந்தான். இன்னும் இரண்டு பேர், சுவர் விளக்கின் அருகே அரட்டையடித்துக் கொண்டிருந்தனர். காற்றில் அந்த விளக்கு விட்டுவிட்டு எரிந்தது. அது அவ்விரு காவலர்களின் நிழல்களையும் பேய்த்தனமாக நடனமாட வைத்தது. கதவின் அருகே நான் உறைந்து போய் நின்றேன். அவர்கள் என்னை ஒரு தற்காலிகமான சிறையில் அடைத்திருந்தார்களே தவிர, உயர்ந்த சுவர்களுடனும் சதுப்பு நில முதலைகள் நிரம்பிய அகழியுடனும்கூடிய பிரபலமான நகரச் சிறையில் அடைக்கவில்லை என்பதற்காக நான் என் அதிர்ஷ்டத்திற்கு நன்றி கூறினேன். என்னைச் சித்தரவதை செய்வதற்கு நகரச் சிறைச்சாலைக்குத் தினமும் நடந்து வருவது விக்கிரமனுக்குச் சிரமமான காரியமாக இருந்திருக்கும். இங்கு அவனது அலுவலகத்தில், தான் விரும்பியபோதெல்லாம் என்னை அவனால் சித்தரவதை செய்ய முடிந்தது. இங்கு இன்னும் இரண்டு சிறைகள் இருந்தன. அவை காலியாக இருக்க வேண்டும் அல்லது அவற்றில் கைதிகள் யாரும் இருக்கக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன். கதவருகே தூங்கிக் கொண்டிருந்த காவலாளி லேசாக

அசைந்து, எதையோ முணுமுணுத்துவிட்டு மீண்டும் தூங்கிவிட்டான். நான் மண்டியிட்டு மெல்லத் தவழ்ந்தபடி அவனை நோக்கிச் சென்றேன். அவனது கல்மேசைக்குப் பின்னால் தொங்கிக் கொண்டிருந்த அவனது வாளை நான் எடுத்துக் கொள்ள விரும்பினேன். அப்போது சுவர் விளக்கு அணைந்தது. அவ்விரு காவலர்களும் அது குறித்துக் கெட்ட வார்த்தைகளால் திட்டியது என் காதுகளில் விழுந்தது. தூங்கிக் கொண்டிருந்த காவலாளி கண்விழித்துத் தனது வாளைத் தேடினான். நான் உடனடியாக அதைக் கொக்கியில் இருந்து விடுவிடுத்து, அதன் உறையிலிருந்து அதை உருவினேன். நான் அந்த மேசைக்கும் சுவருக்கும் இடையே இருந்த குறுகலான இடைவெளியின் ஊடாகச் செல்ல முயற்சித்தேன், ஆனால் ஒரு காவலாளியின்மீது மோதினேன்.

“முட்டாள், பார்த்துப் போ!” என்று அவன் கத்தினான். அப்போது அவன் அதிர்ச்சியில் உறைந்து போனதை நான் கண்டேன். அவன் தனது உறையிலிருந்து தனது வாளை உருவும் சத்தத்தை நான் கேட்டேன். அவன் அதை உபயோகிக்க மாட்டான் என்று எனக்கு உறுதியாகத் தெரிந்திருந்தபோதிலும், நான் காத்திருக்கவில்லை. என் வாளை நான் அவனது தொண்டையில் இறக்கினேன். கதகதப்பான ரத்தம் என் முகத்தின்மீது தெறித்ததை நான் உணர்ந்தேன். பலவீனமடைந்து கொண்டிருந்த அவனது உடலைக் கீழே தள்ளிவிட்டு, தெரு விளக்கின் வெளிச்சத்தை நோக்கி நான் ஓடினேன். காவலாளிகள் ஒருவர்மீது ஒருவர் மோதித் தட்டுத்தடுமாறிக் கீழே விழுந்த சத்தம் எனக்குக் கேட்டது. எந்தக் கணத்திலும் அவர்கள் அந்தப் பெரிய மணியை அடிப்பார்கள். அப்போது ஒட்டுமொத்த நகரமும் ஒரு பெரிய காட்டு விலங்கைப்போல என்னை வேட்டையாடப் புறப்பட்டுவிடும். குதிரைகளின்மீது வலம் வந்த காவலாளிகள் தங்கள் விடுதியின் முன் கூடுவார்கள். விக்கிரமன் அங்கு வருவான். நான் எனது இரு புறமும் பார்த்துவிட்டு, எந்தத் திசையில் ஓடுவதென்று தீர்மானித்துக் கொண்டிருந்தேன். உரக்க ஒலித்த மணியோசை எனது தீர்மானமின்மையை முடிவுக்குக் கொண்டு வந்தது. நான் இடது பக்கமாக அரண்மனையை நோக்கி ஓடினேன்.

நான் ஒரு பைத்தியக்கார நாயைப்போல ஓடினேன். நான் ராஜ நெடுஞ்சாலையின் ஊடாக ஓடிக் கொண்டிருந்ததை நான் உணர்வதற்கு எனக்கு ஒருசில நிமிடங்கள் பிடித்தது. குதிரைகளின்மீது வந்த காவலாளிகளை எந்த நேரத்திலும் நான் எதிர்கொள்ளக்கூடும். குதிரைகளின் குளம்பொலி எனக்குக் கேட்டது. நான் அப்படியே வலது பக்கமாகத் திரும்பி ஒரு சந்திற்குள் நுழைந்தேன். அங்கு இருட்டாக இருந்தது. தெரு விளக்குகள் அணைந்திருந்தன. அந்தச் சந்தின்

முனையில் இருந்த ஒரு சன்னல் வழியாக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. நான் அந்தச் சன்னலுக்கு அருகே சென்றபோது அங்கிருந்து வந்த உரையாடலை என்னால் கேட்க முடிந்தது. ஒரு பெண் ஓர் ஆணுடன் வாக்குவாதத்தில் ஈடுபட்டிருந்தாள். அவன் குடித்திருந்தது வெளிப்படையாகத் தெரிந்தது. நான் பதற்றமாக இருந்தேன். ஒளிந்து கொள்ள எனக்கு ஓர் இடம் தேவைப்பட்டது. அந்த வீட்டின் கதவு திடீரென்று உரத்தச் சத்தத்துடன் வேகமாகத் திறந்தது. நான் விரைவாக இருண்ட நிழல்களுக்குள் பின்னால் நகர்ந்தேன். வெறும் உள்ளாடைகளை மட்டுமே அணிந்திருந்த ஒரு குண்டு மனிதன் வெளியே தள்ளப்பட்டான். அவன் ஒருசில அடிகள் தடுமாறி, ஒரு விளக்குக் கம்பத்தின்மீது மோதி, முகம் குப்புற ஒரு சாக்கடைக்குள் விழுந்தான். ஏகப்பட்டக் கீழ்த்தரமான வசவுகள் அவனைப் பின்தொடர்ந்தன. கீழே கிடந்த அவன் துளிகூட அசையவில்லை. இது நிச்சயமாக அவனது வீடு அல்ல. எந்தவொரு கண்ணியமான பெண்ணும் இவ்வளவு கீழ்த்தரமான வார்த்தைகளைப் பயன்படுத்த மாட்டாள். இது ஒரு நடன விடுதியாகவோ அல்லது ஓர் இன்ப விடுதியாகவோ இருக்கக்கூடும். ஆனால் அவள் மீண்டும் கதவை மூடுவதற்கு முன், நான் இருட்டிலிருந்து வெளியேறி, அந்தக் கதவில் கால் வைத்தேன்.

அவள் ஒரு வினாடி திகைத்தாள். அவளுக்குப் பதினெட்டு அல்லது இருபது வயது இருக்கும் என்பதையும், அவளுக்கு வெளிர் பழுப்பு நிறக் கண்களும், நேரான, அடர்க் கருப்பு நிறத் தலைமுடியும் இருந்ததையும் நான் கவனித்தேன். அவள் தேவர்கள் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைப்போல நல்ல நிறத்துடன் இருந்தாள். அல்லது அவள் ஒரு கலப்பினப் பெண்ணாக இருக்க வேண்டும். அவள் ஒரு பட்டு ரவிக்கையும் ஒரு பட்டு வேட்டியும் அணிந்திருந்தாள். அவளது கழுத்தில் வைரத்துடன்கூடிய ஒரு தங்கச் சங்கிலி மின்னியது. அவள் கத்துவதற்கு முன்பாக நான் அவளுடைய வீட்டிற்குள் நுழைந்து, என் வாளை அவளது தொண்டைக்குக் குறி வைத்தபடி, எனது இடது கையால் கதவைச் சாத்தித் தாழிட்டேன்.

"என்னை உன்னுடைய அறைக்கு அழைத்துச் செல்," என்று நான் அவளுக்குக் கட்டளையிட்டேன். அவளது அழகிய மேனி என்னுடைய காம உணர்ச்சியைத் தூண்டியிருந்ததை நான் உணர்ந்தேன். அடுத்த ஒருசில வாரங்களுக்கு அந்த விலைமகளின் வீடுதான் எனது புகலிடமாக இருந்தது. அவளுடைய தோளின்மீது நான் என் துயரங்களையும் என் கனவுகளையும் இறக்கி வைத்தேன்.

அவளது பெயர் மாலா. எங்களுக்கிடையே நிகழ்ந்த உரையாடல்களில் ஒன்றில், விக்கிரமன் தனது வழக்கமான ஒரு

வாடிக்கையாளன் என்று அவள் குறிப்பிட்டாள். அதைக் கேட்டதும் ஒரு திட்டம் என் மனத்தில் உருவாகத் துவங்கியது. நான் என் வாழ்க்கைக் குறிக்கோளைப் பற்றி அவளிடம் மெல்ல மெல்லக் கூறினேன். முதலில் அவளுக்கு அதில் எந்த சுவாரசியமும் இருக்கவில்லை. ஆனால் இரண்டு வாரங்கள் நான் அவளுடன் பேசிய பிறகு, அவள் அதில் சிறிது நாட்டம் காட்டத் துவங்கினாள். பிறகு என்னுடைய உற்சாகம் அவளையும் பற்றிக் கொண்டது. அவள் எனக்கு ஆதரவாக என் பக்கத்தில் இருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். நான் அவளுடன் சேர்ந்து திட்டம் தீட்டினேன்.

ஒருநாள் மாலையில், அவள் என் அறைக்கு வந்து, அன்றிரவு விக்கிரமன் தனது விருந்தாளியாக வரவிருந்ததாகக் கூறினாள். நான் பொறாமையில் நெளிந்தேன். ஆனால், எங்கள் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கான சரியான நேரம் அதுதான் என்பதை நான் அறிந்தேன். இரவு நெருங்கியபோது, கனத்தத் திரைச்சீலைகளுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு, நடுங்கியபடியே நான் காத்திருந்தேன். விக்கிரமன் அந்த அறைக்குள் நுழைந்ததை நான் கண்டேன். மாலா எழுந்து அவனை நோக்கி நடந்து சென்று, அவனது இதழ்களில் ஒரு முத்தத்தைப் பதித்தாள்.

விரைவில், மாலா, வழக்கம்போலத் தனது ஆடைகளால் விக்கிரமனின் கைகளையும் கால்களையும் கட்டிலின் கால்களுடன் சேர்த்துக் கட்டினாள். பிறகு அவனது ஆடைகளைக் களைந்தாள். விக்கிரமன் எதிர்பார்ப்புடன் படுத்திருந்தான். அப்போது நான் விக்கிரமனை நோக்கி மெதுவாக நடந்தேன். மாலா அவனிடமிருந்து விலகி, அந்த அறையைவிட்டு அவசர அவசரமாக வெளியேறினாள். "இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது . . ." விக்கிரமனின் முகத்தில் கோபம் கொப்பளித்தது. பிறகு அவனுக்கு எல்லாம் புரிந்தது. அவன் பயத்தில் உறைந்தான். நான் அவனைப் பார்த்துப் பெரிதாகப் புன்னகைத்தபடி, ஒவ்வோர் அடியையும் அளந்தவாறே, அவனை நோக்கி வேண்டுமென்றே மிகவும் மெதுவாக நடந்து சென்றேன். அவன் எழுந்திருக்கப் போராடினான், ஆனால் மாலா அவனை நன்றாக இறுக்கிக் கட்டியிருந்தாள்.

நான் அவனது நகங்களை ஒவ்வொன்றாகப் பிடுங்கினேன். ஒரு திறமையான கசாப்புக்காரனின் துல்லியத்துடன் நான் அவற்றை ஒரு தட்டில் அடுக்கினேன். அவன் வலியில் அலறினான். அவன் கவலைப்பட வேண்டியதில்லை என்றும், இன்னும் நான்கு அல்லது ஐந்து மணி நேரத்திற்கு அவன் இறக்கப் போவதில்லை என்றும், ஆனால் அவன் இறக்கும்வரையும் அவன் இறந்த பிறகும்கூட நான்

அவனைச் சித்தரவதைப்படுத்தப் போவதாகவும் அவனிடம் கூறினேன். நான் அவனது எலும்புகளை உடைத்தேன். அவனது காயங்களின்மீது மிளகுப் பொடியைத் தூவினேன். அவன் வேதனையில் துடித்தான், ஆனால் இறக்கவில்லை. இறுதியில், பொழுது விடிவதற்குச் சுமார் இரண்டு மணிநேரத்திற்கு முன்பு அவனது சுவாசம் ஒரேயடியாக நின்று போனது.

எனக்கு மகிழ்ச்சியோ அல்லது திருப்தியோ ஏற்படவில்லை. அவனுக்கு இது போதாது. ஆனால், வாழ்க்கை உங்களை முழுமையாகத் திருப்திப்படுத்துவதில்லை என்பதை நான் கடினமான வழியில் கற்றிருந்தேன். எனவே, துண்டு துண்டாக ஒரு குவியலாக இருந்த அவனை ஒரு மூட்டையில் அள்ளிப் போட்டுவிட்டு, மாலாவை அழைத்தேன். அவள் அந்த அறைக்குள் நுழைந்தபோது, அங்கிருந்த அலங்கோலத்தைக் கண்டதும் வாந்தியெடுத்தாள். அவளைச் சமாதானப்படுத்துவதற்கு எனக்கு அரை மணிநேரம் ஆனது. ஆனால் நான் மகிழ்ச்சியால் ஒளிர்ந்ததைக் கண்டு அவள் மகிழ்ச்சி கொண்டாள் என்று நான் நினைக்கிறேன்.

நாங்கள் அந்தச் சாக்கு மூட்டையைப் பின் தோட்டத்திற்கு எடுத்துச் சென்று, சர்க்கரையுடன் சேர்த்து அதை எரித்தோம். அது உடலுக்கான எந்தச் சுவடும் இல்லாமல் செய்துவிடும். சதை எரிந்து கொண்டிருந்த கார்ப்பு நெடியை வேறு யாரும் கவனித்துவிடக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன். எனவே, நான் வெளியே சென்று, இரண்டு தெரு நாய்களைக் கொன்று, அவற்றையும் விக்கிரமனின் உடலோடு சேர்த்து எரித்தேன். அடுத்தவர்கள் வீட்டு விவகாரத்தில் மூக்கை நுழைக்கும் அண்டைவீட்டுக்காரர்களை இது வரவிடாமல் செய்துவிடும். அரண்மனைக் காவலர்களின் தலைமை அதிகாரியின் கதை இவ்வாறு முடிந்தது.

நான் மீண்டும் கோட்டைக்குள் நுழைய விரும்பியதால், எப்படியோ அவனுடைய பாக்கெட்டிலிருந்து அவனுடைய சாவிக் கொத்தை எடுத்திருந்தேன். அவன் காணாமல் போயிருந்தது கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பாக நான் அதைச் செய்தாக வேண்டியிருந்தது. நான் கோட்டையை நோக்கி நடந்தபோது, தூரத்தில் விளக்குகள் ஏற்றப்பட்டு அரண்மனை ஒளிர்ந்து கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவர்கள் இன்னும் என்னைத் தேடிக் கொண்டிருந்தனர். எனவே, அங்குமிங்கும் நடமாடுவது எனக்கு ஆபத்தானது என்றாலும்கூட, எனக்கு வேறு வழி இருக்கவில்லை. கோட்டைக்குள் நுழைவதற்குப் பாதுகாப்பு அதிகாரிகளுக்கென்று இருந்த தனி நுழைவு வாயிலைப் பயன்படுத்துவதென்று நான் தீர்மானித்தேன். நான்

விக்கிரமனின் ஆடைகளை அணிந்திருந்தேன். அவை எனக்குச் சற்றுப் பெரிதாக இருந்தன. அதிகாரத்திற்குப் பழக்கப்பட்ட ஒருவனைப்போல நடக்க நான் முயற்சித்தேன். ஆனால், அங்கிருந்த காவலாளிகளை என்னால் முட்டாளாக்க முடியுமா என்பது எனக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. ஒரு காவலாளி என்று சொல்லக்கூடிய அளவுக்கு எனக்கு மிடுக்குப் போதாமல் இருந்தது. நான் அரண்மனையை நெருங்கியபோது, பாதுகாப்பு நுழைவு வாயிலுக்கு அருகே இரண்டு காவலர்கள் நின்று கொண்டிருந்ததை நான் கண்டேன். ஆனால் நான் அவர்களை அதிகாரமாகக் கடந்து சென்றபோது, அவர்கள் உடனடியாக விறைப்பாகி மரியாதையோடு நின்றனர். அவர்களது பார்வை தொலைவில் ஆரஞ்சு நிறத்திற்கு மாறிக் கொண்டிருந்த தொடுவானத்தில் நிலைத்திருந்தது. என் இதயத்தின் வேகமான துடிப்பு என் காதுகளில் விழுந்தது. அந்தச் சத்தம் அக்காவலர்களுக்குக் கேட்டு, அவர்களின் பார்வை என் முகத்தை நோக்கித் திரும்புமோ என்று நான் பயந்தேன். கதவிலிருந்த துவாரத்தில் நான் சாவியை நுழைத்துத் திருப்பியபோது என் கைகள் நடுங்கின. எதுவும் நிகழவில்லை. என் புருவங்களிலிருந்து வியர்வை முத்துக்கள் தெறித்தன. கிழக்கு வானம் வெளுத்துக் கொண்டிருந்தது.

“ஐயா, நான் அதைத் திறக்கிறேன்.” அவ்விரண்டு காவலர்களில் உயரமாக இருந்தவன், என் கைகளிலிருந்து சாவிக் கொத்தை எடுத்து, சரியான சாவியைக் கதவினுள் நுழைத்துத் திருப்பினான். கதவு உடனடியாகத் திறந்து கொண்டது. நான் உள்ளே நுழைந்து, அவனுக்கு நன்றி கூறிவிட்டு, உடனடியாகக் கதவை மூடினேன். நான் என்னுடன் கொண்டு வந்திருந்த சிறிய மண் கலயத்தைப் பரிசோதித்தேன். அதிலிருந்த பொருளைத் தயாரிப்பதற்கு எனக்குப் பத்து நாட்கள் ஆகியிருந்தது. நான் விக்கிரமனின் சீருடையைக் களைந்து, அதை ஒரு மூட்டையாகக் கட்டி, ஒரு புதருக்கு அடியில் மறைத்து வைத்தேன். பிறகு, நான் என்னுடைய ஆடைகளை அணிந்து கொண்டு, நான் முன்பு வேலை பார்த்திருந்த அரண்மனைச் சமையலறையை நோக்கி நடந்தேன். சுமார் இருபது சமையற்காரர்கள், வீரர்களுக்கு உணவு தயாரிப்பதில் மும்முரமாக இருந்தனர். என்னுடைய கைது பற்றியும், நான் சிறை வைக்கப்பட்டிருந்தது குறித்தும் அவர்கள் கேள்விப்பட்டிருக்கக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன். சுபோகனுக்குத் தெரிந்திருக்கக்கூடும். அவனை வெறுப்பேற்றுவதற்குக் கிடைத்த எந்தவொரு வாய்ப்பையும் விக்கிரமன் ஒருபோதும் தவறவிட்டதில்லை. ஆனால், தான் வேலைக்கு அமர்த்திய ஒருவன் இப்படிப்பட்டவன் என்ற விஷயத்தைத் தனக்குக் கீழே

பணியாற்றியவர்களிடம் கூறுவதற்குத் தலைமைச் சமையற்காரரின் தற்பெருமை இடங்கொடுத்திருக்காது.

“பத்ரா, நீ எங்கே போயிருந்தாய்? இந்தியாவிலுள்ள உனது சொந்தக் கிராமத்திற்கு நீ சென்றிருந்ததாக சுபோகன் கூறினார். இப்போதுதான் நீ திரும்பி வந்தாயா?” மீன்களை நறுக்குவதற்கென்று நியமிக்கப்பட்டிருந்த அவனது பெயர் கிரமன். ஊர்வம்பு பேசுவதில் கெட்டிக்காரனன் அவன். அவன்தான் சமையலறையின் மறுகோடியில் இருந்து இப்படிக் கத்தினான். அனைவருடைய தலைகளும் என்னை நோக்கித் திரும்பின. பல தலைகள் புன்னகைத்தன. எனக்கு இங்கு வேலை வாங்கிக் கொடுத்திருந்த எனது நண்பனை அங்கு என்னால் பார்க்க முடியவில்லை.

“நீ அரசுவைத் தேடிக் கொண்டிருக்கிறாயா? அவனை வேலையிலிருந்து துரத்திவிட்டனர். யாரோ ஒரு படைத் தலைவன் அவனது சமையலைப் பற்றிக் குறை கூறினான் என்று நினைக்கிறேன். அவனை இந்தியாவிற்குத் திருப்பி அனுப்பிவிட்டனர். படையில் உள்ள பிச்சைக்காரர்களுக்குத் தாங்கள் கடவுள்கள் என்று நினைப்பு.” என் வயிறு சுண்டி இழுத்ததை நான் உணர்ந்தேன். எனக்கு உதவியதற்காக அவனுக்கு இந்தத் தண்டனை. சண்டாளர்கள்! சுபோகனை என்னால் குறை கூற முடியவில்லை. அவன் தன் தலையை முதலில் பாதுகாக்க வேண்டியிருந்தது. “நீ முதலில் சுபோகனைப் போய்ப் பார்த்துவிடுவது நல்லது. இல்லையென்றால், அவர் கோபம் கொள்வார்,” என்று முதியவனான மூர்ப்பன் கூறினான். “சுபோகன் அப்படிக் கூறினானா?” என்று நான் கேட்டேன். நான் திரும்பி வருவேன் என்று சுபோகன் ஒருக்காலும் நினைத்திருக்க மாட்டான் என்பதை நான் நன்றாக அறிந்திருந்தேன்.

“இல்லை . . .” என்று அந்தக் கிழவன் இழுத்தான்.

“அப்படியென்றால் நான் இப்போது உங்களோடு சேர்ந்து வேலை செய்கிறேன். காலை உணவைத் தயாரித்து முடித்தவுடன் சுபோகனைப் பிறகு சந்தித்துக் கொள்கிறேன்.”

நான் காய்கறிகள் நறுக்கப்பட்டுக் கொண்டிருந்த பகுதிக்குச் சென்று வேலை செய்யத் துவங்கினேன். நறுக்கப்பட்டக் காய்கறிகளை உரியவரிடம் கொடுப்பதற்காக மூன்றாவது முறையாக நான் அடுப்பருகே சென்றபோது, என்னிடமிருந்த மண் கலயத்தை வெளியே எடுத்து, அதிலிருந்ததை, அரிசி வெந்து கொண்டிருந்த பாத்திரத்தினுள் கொட்டினேன். வீரர்கள் வெவ்வேறு கறிகளையும் குழம்புகளையும் விரும்பினர், ஆனால் எல்லோரும் அரிசிச் சோற்றை உண்டனர். என் குறி அதன்மீதுதான் இருந்தது. நான் மூச்சுவிட மறந்து காத்திருந்தேன்.

பல காளைமாட்டு வண்டிகள் வந்து, கூடைகள் நிறையச் சோற்றையும் பல்வேறு வகையான குழம்புகளையும் காய்கறிகளையும், படையின் பல்வேறு குழுக்களுக்கு எடுத்துச் சென்றன. தலைநகருக்கு அருகே அவர்கள் நிலைப்படுத்தப்பட்டிருந்தால், கடலில் நங்கூரமிடப்பட்டு நிறுத்தப்பட்டிருந்த கப்பல்களுக்குப் படகுகள் மூலம் இவ்வுணவு கொண்டு செல்லப்படும். ஏராளமான விஷயங்கள் தவறாகப் போகக்கூடிய வாய்ப்பு இருந்தது. ஒரு சிறு கவளம் நிலத்தில் சிதறி, அதை ஒரு காகம் சாப்பிட்டு இறந்து போகலாம். அப்போது என் குட்டு வெளிப்பட்டுவிடும். அல்லது, ஒருசில வீரர்கள் இறக்கலாம் அல்லது நோய்வாய்ப்படலாம். அப்போது, ஒட்டுமொத்தப் படையும் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு, ஒரு விசாரணையைத் துவக்கக்கூடும். அப்போது நான் பிடிபட்டுவிடுவேன். நான் பிராத்தித்தேன், அதே சமயம், நான் கவலைப்படவும் செய்தேன். ஆனாலும், வெப்பமாக இருந்த அந்தச் சமையலறையிலுள் நான் என் வேலையைத் தொடர்ந்தபோது, நான் புன்னகைத்தேன்.

ஒரு மணிநேரம் கழித்து, வெளியே குழப்பம் நிலவியது எனக்குக் கேட்டது. வீரர்கள் பல குழுக்களாகக் கொண்டு வரப்பட்டுக் கொண்டிருந்தனர். சில வீரர்கள் வாந்தியெடுத்துக் கொண்டிருந்தனர், சிலர் மரணத்தின் பிடியில் இருந்தனர், பலர் வேதனையால் துடித்துக் கொண்டிருந்தனர். காளை மாட்டு வண்டிகளும் குதிரை வண்டிகளும் நகரில் அனைத்து மூலைகளிலிருந்தும் வீரர்களைக் கொண்டு வந்து, மருத்துவப் பரிசோதனைக்காக அவர்களை அரண்மனை மைதானங்களில் கொட்டின. நான் வெளியே ஓடினேன். யாரும் என்னைக் கவனிக்கவில்லை. நான் என்னுடைய தலைவனைச் சென்றடைய விரும்பினேன். எனது அரசனான ராவணன், இப்போது இந்நகரை ஆக்கிரமிக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். ஓடைகளுக்குள் தலைகளைக் கவிழ்த்தபடி வாந்தியெடுத்துக் கொண்டும், வயிற்றைப் பிடித்துக் கொண்டும், மரண வேதனையை அனுபவித்துக் கொண்டும் இருந்த வீரர்களுக்கு மத்தியில் நான் ஓடினேன். ஒரு கையால் தன் குதிரையின் கடிவாளக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு, மறுபுறம் வாந்தியெடுத்துக் கொண்டிருந்த ஒரு வீரனிடமிருந்து நான் அந்தக் கடிவாளக் கயிற்றைப் பிடுங்கி, அவனை எட்டி உதைத்துவிட்டு, அவனது குதிரையின்மீது ஏறி, சுபேல மலையை நோக்கிப் பறந்தேன். சாதாரணக் குடிமக்கள் தெருக்களில் கூடத் துவங்கியிருந்தனர். மடிந்து கொண்டிருந்த வீரர்களை அவர்கள் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒரு வணிக அரசனின் கொடுங்கோல் பிடியிலிருந்து ஒரு நாடு விடுபட்டுக் கொண்டிருந்தது.

தங்களுக்குக் கடும் தொல்லை கொடுத்தவர்கள் இறந்து கொண்டிருந்ததைப் பார்ப்பதற்காகத் திரண்டெழுந்து கொண்டிருந்த மக்கள் வெள்ளத்தின் ஊடாக நான் வேகமாகப் பயணித்தேன். நான் சுபேல மலைக் குன்றுகளில் ஏறியபோது, ஞாபகமாக, என் வெள்ளை வேட்டியின் ஒரு முனையைக் கிழித்து, அதை ஒரு கம்பில் கட்டி, ஒரு சமாதானக் கொடியை உருவாக்கினேன். நான் என் இனத்தாராலேயே கொல்லப்பட்டு இறக்க விரும்பவில்லை. நான் முகாமை நெருங்கியபோது, அரசனைச் சுற்றி வில்வீரர்கள் குழுமிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். அவர்கள் என்னைக் கொல்வதற்குத் தயாராக இருந்தனர். அசரனின் புருவம் லேசாக அசைந்தால்கூட, மறுகணம் நான் ஒரு முள்ளம்பன்றியைப்போல ஆவதை அது உறுதி செய்திருக்கும். நான் சற்று நிதானித்து, என் வெள்ளைக் கொடியை ஆட்டினேன். என் கண்களில் கண்ணீர் நிரம்பியது. என் வார்த்தைகள் என் தொண்டைக்குள்ளேயே சிக்கிக் கொண்டதுபோலத் தோன்றியது. "மேன்மை பொருந்தியவரே, இந்நகரம் உங்களுடையது. நான் குபேரனின் படையைக் காலி செய்துவிட்டேன் . . ."

“அவனைக் கைது செய்யுங்கள்.” அவரது குரல் என் இதயத்தைச் சுக்குநூறாக நொறுக்கியது. என் நகங்கள் பிடுங்கப்பட்டக் காட்சி என் மனத்தை நிரப்பியது. விக்கிரமன் தன் கலையை என் உடலில் பிரயோகித்திருந்த இடங்கள் அனைத்தும் வலித்தன. நான் மண்டியிட்டுக் கீழே விழுந்து, ஒரு காயப்பட்ட ஓநாயைப்போல ஊளையிட்டேன். என் ஆதரவாளர்கள் என்று நான் எப்போதுமே நம்பி வந்திருந்த வீரர்கள், என்னைக் கொல்வதற்காக என்னைச் சூழ்ந்தனர்.

“ராவணா, அவன் கூற விரும்புவதைக் காது கொடுத்துக் கேள்.” பிரஹஸ்தனின் வயதான, மிடுக்கான உருவம் எங்களை நோக்கி நடந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. வீரர்களைப் பின்னால் தள்ளியபடி மாரீசனும் அங்கு வந்தான். அவன் என்னைக் கட்டியணைத்து, என் முதுகில் தட்டிக் கொடுத்தான். நான் ஒரு குழந்தையைப்போல அழுதேன். மாரீசனின் கண்ணீர் எனது வெற்று முதுகை நனைத்துக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது.



# 16

# கடற்கொள்ளையனின் முற்றுகை

ராவணன்

பத்ரன் தேசத் துரோகியல்ல, மாறாக, அவன் எங்கள் நண்பனே என்பதை உணர்ந்து கொள்ள எனக்குச் சிறிது நேரம் பிடித்தது. நான் எந்த ரட்சகனுக்காகக் காத்துக் கொண்டிருந்தேனோ, அவன் இவன்தான். பட்டினியால் வாடிப் போயிருந்த நாங்கள், எங்களால் இயன்ற அளவுக்கு மதிப்புடையவர்களாக, புதுப்பிக்கப்பட்ட வேகத்துடனும் சுறுசுறுப்புடனும் குன்றிலிருந்து கீழே இறங்கி அணிவகுத்து நடந்தோம். நாங்கள் ராஜ வீதிக்குள் நுழைந்தபோது, ஆயிரக்கணக்கான மக்கள், எங்களை உற்சாகப்படுத்துவதற்காக வீதியின் இருபுறமும் நின்று கொண்டிருந்ததை எங்களால் காண முடிந்தது. நான் பேருவகை கொண்டேன். நான் எதிர்பார்த்திருந்த வெற்றிக் கணம் இதுதான். அளவிட முடியாத செல்வம் எனக்காகக் காத்திருந்தது. இந்த ராஜ்யத்தில் இருந்த மாபெரும் வளவசதிகளைக் கொண்டு ஒரு பெரிய படையை என்னால் உருவாக்க முடியும். பிறகு ஒட்டுமொத்த இந்தியத் துணைக்கண்டத்தையும் என்னால் வெற்றி

கொள்ள முடியும். மேலும், எனது மாற்றாந்தாயின் மகனைத் தெருவில் தூக்கி எறிந்து, ஒரு கையசைப்பின் மூலம் ஒருசில தங்க நாணயங்களை அவனது முகத்தில் என்னால் வீசியெறிய முடியும். அவன் அதற்குத் தகுதியானவன்தான். என் தந்தையின் முகத்தைப் பார்த்து என்னால் இகழ முடியும். என்னால் பல விஷயங்களைச் செய்ய முடியும். நான்தான் இந்த சாம்ராஜ்யத்தின் அரசன், நானே இதன் பேரரசன். ராவணன், இலங்கையின் பேரரசன்! கேட்பதற்கு இது நன்றாக இருந்தது. ராவணன், இந்தியாவின் பேரரசன்! இது அதைவிட நன்றாக இருந்தது. என் லட்சிய வெறி எல்லை மீறிப் போய்க் கொண்டிருந்ததா? இல்லை, இல்லை, நான் எப்போதுமே தன்னம்பிக்கை கொண்டவனாக இருந்தேன்.

அனைத்துப் பக்கங்களிலிருந்தும் மகிழ்ச்சிக் கைதட்டல்கள் எழுந்தன. நான் என் வாளை உயர்த்திப் பிடித்து அதை அங்கீகரித்தேன். கூட்டத்தினர் தலைகால் புரியாமல் உற்சாகமடைந்தனர். மகிழ்ச்சிக் குரல்கள் வெடித்தன. வீதிகளில் மக்கள் நடனமாடினர். முழு உற்சாகத்துடன்கூடிய மேளச் சத்தமும் நாதசுர ஒலியும் கொம்பொலியும் விண்ணைப் பிளந்தன. நான் கனவுலகில் இருந்தேன். பிறகு திடீரென்று, என் உற்சாகம் கரைந்தது. இந்த வெற்றி வெறுமையானது. ஓர் அவலட்சணமான விவசாயி, காட்டுத்தனமான, கல்வியறிவற்ற ஒரு கிராமத்தான், ஒரு வஞ்சகப் பாம்பு எனக்கு ஒரு தட்டில் வைத்துப் பரிசளித்திருந்த வெற்றி இது. நான் பின்னால் திரும்பிப் பார்த்தேன். அவன் தன் தோள்களின்மீது ஏதோ கனமான ஒன்றைச் சுமந்து வந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். அவன் குனிந்திருந்தான். அந்தக் கனத்தச் சுமையின் ஒரு முனையை மாரீசன் தாங்கிப் பிடித்துக் கொண்டு, அவனுடன் சரிக்குச் சமமாகப் பேசிக் கொண்டிருந்தான். இப்படிப்பட்ட ஓர் இழிவான பிறவியுடன் தன்னைத் தொடர்புபடுத்திக் கொண்டு மாரீசனால் எப்படித் தன்னைத் தரம் தாழ்த்திக் கொள்ள முடிந்தது? மாரீசன் முன்பு ஓர் அரசனாக இருந்தவன். இப்போது அவன் ஓர் அரசனின் மாமாவாக இருந்தான். பத்ரன் எங்கள் வெற்றிக்கு உதவினான் என்பது உண்மைதான். ஆனால் அது சரியான வழியில் செய்யப்பட்டதா? ஒரு சிறுவனாக நான் கற்றிருந்த அனைத்துக் கொள்கைகளுக்கும் எதிராக அது இருந்தது. வஞ்சகம் மற்றும் சூழ்ச்சியின்மீது உருவாக்கப்பட்ட ஒரு சாம்ராஜ்யம் நீடித்து நிலைத்திருக்குமா? உண்மை மற்றும் தர்மத்தின் சாம்ராஜ்யத்தை நான் உருவாக்கிக் கொண்டிருந்தேனா? என் மனத்தில் சந்தேகங்கள் சூழ்ந்தன. நான் பிரஹஸ்தனைப் பார்த்தேன். அவன் தீவிரமானவன்போலக் காணப்பட்டான். அதற்குக் காரணம், அவனது மனத்திற்குள்ளும் இதே

சிந்தனை ஓடிக் கொண்டிருந்ததா அல்லது அவன் என் இடத்தை விரும்பினானா என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. நன்றாகக் குடித்திருந்த இளைஞர் கூட்டம் ஒன்றோடு சேர்ந்து, கும்பகர்ணன், மேளங்களின் இசைக்கேற்ப நடனமாடிக் கொண்டிருந்தான். அவன் எல்லையற்ற மகிழ்ச்சியில் திளைத்திருந்தான். விபீஷணன் சிடுசிடுப்பாக இருந்தான். ஆனால் அதுவொன்றும் புதிய விஷயமல்ல. மற்றவர்கள் புன்னகைத்தபடி, மகிழ்ச்சியாக இருந்ததுபோல நடித்தனர்.

அரண்மனைக்குள் நான் நுழைந்தபோது, ஓர் ஏழைப் பெண்மணியும் அவளது நான்கு குழந்தைகளும், கையில் ஒரு பிச்சைப் பாத்திரத்துடன், அந்த வணிக அரசனான குபேரனின் முன்னால் நின்று கொண்டிருந்த காட்சி என் மனத்தை நிறைத்தது. குபேரனின் ஏளனப் பார்வையும் கையசைப்பும் எனக்குள் இருந்த ஜுவாலைகளை மேலும் தூண்டிப் பெரிதாக்கின. என் வயிற்றில் பட்டாம்பூச்சிகள் சிறகடித்தன. நான் அங்கிருந்த மாட்டுக் கொட்டகையைப் பார்த்துவிட்டு, பின்னால் திரும்பி மாரீசனைப் பார்த்தேன். அவன் அந்தக் கொட்டகையை ஒரு பார்வை பார்த்துவிட்டு, பிறகு என்னைப் பார்த்துப் புன்னகைத்தான். நான் அந்தப் புன்னகைக்காகவே அவனை நேசித்தேன். தன்னைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருந்த எது குறித்தும் கும்பகர்ணனுக்குப் பிரக்ஞையே இருக்கவில்லை. அவன் மது மயக்கத்தின் உச்சகட்ட நிலையில் இருந்தான். குபேரன் என்னிடம் சரணடைய வரும்போது அவனுடைய முகம் எப்படி இருக்கும் என்று நான் பார்க்க விரும்பினேன். பொற்கதவுகள் திறக்கப்பட்டு, அரசனான குபேரன் வெளியே வந்து, தனது கிரீடத்தை என் காலடியில் சமர்ப்பிப்பதற்காக அரண்மனைக்கு வெளியே நான் காத்திருந்தேன். அரசர்கள் இப்படித்தான் சரணடைந்தார்கள், இல்லையா?

நாங்கள் நெடுநேரம் காத்திருந்தோம், ஆனால் எதுவுமே நிகழவில்லை. நான் அத்துமீறி உள்ளே நுழைந்து, அரண்மனையைக் கைப்பற்ற விரும்பினேன். குறைந்தபட்சம், அது என் மனசாட்சியை அமைதிப்படுத்தும். அப்போது, திடீரென்று, கதவுகள் திறந்தன. ஓர் அசௌகரியமான அமைதி அங்கிருந்த கூட்டத்தினரின்மீது விழுந்தது. ஒரு முதியவன் வெளியே வந்து, தோல் காகிதம் ஒன்றிலிருந்து உரக்கப் படித்தான். "உலகிலேயே மிகப் பெரிய பணக்கார அரசனும், ஈடு இணையற்ற வணிகனும், செல்வத்தின் அரசனுமான குபேரன், தனது அன்புக்குரிய இளைய சகோதரனான ராவணனுக்குத் தனது நல விசாரிப்புகளைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறார். அவர் மேலும் இவ்வாறு கூறுகிறார்: 'எனது சகோதரனான நீ மட்டும் உனக்கு இந்த ராஜ்யம் வேண்டுமென்று என்னிடம் கேட்டிருந்தால், அதை உனக்குக்

கொடுப்பதற்கு நான் எப்போதுமே தயாராக இருந்தேன் என்பதை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இச்சிறிய தீவைக் கைப்பற்றுவதற்கு நீ வஞ்சகமான வழிமுறைகளைப் பயன்படுத்தியுள்ளது குறித்து நான் வருந்துகிறேன். இது மேன்மை பொருந்திய ஒருவனுக்கும் ஒரு சகோதரனுக்கும் பொருத்தமானதல்ல. அதைவிடப் பெரிய வருத்தம் எனக்கு என்னவென்றால், எனது படையினருடன் நேருக்கு நேர் ஓர் ஆண்மகனைப்போலச் சண்டையிடுவதற்குப் பதிலாக, அவர்களுக்கு நீ விஷமளிப்பதைத் தேர்ந்தெடுத்தாய். கடின உழைப்பையும் நேர்மையையும் அலட்சியப்படுத்திவிட்டு, உன் சகோதரனின் சொத்துக்களைக் கைவசப்படுத்துவதற்கு சூழ்ச்சியை நீ பயன்படுத்தியது குறித்து நான் வெட்கப்படுகிறேன். நீ ஒரு வீரன் என்ற முறையிலும் ஒரு சகோதரன் என்ற முறையிலும் தோற்றுப் போயுள்ளாய். நான் இந்த சாம்ராஜ்யத்தை உன்னிடம் ஒப்படைக்கிறேன். ஆனால், உன்னைவிட அதிக சாமர்த்தியமான ஒருவனின் தேசத் துரோகத்தாலும் சூழ்ச்சியாலும் உன்னுடைய ஆட்சியும் முடிவுக்கு வரும் என்று நான் உன்னைச் சபித்தால், கடவுள் என்னை மன்னிப்பார் என்று நம்புகிறேன். என் சகோதரனே, நான் விடைபெறுகிறேன். நீ சிறப்பாக ஆட்சி செய். நீடூழி வா . . .'"

நான் பாய்ந்து சென்று, அந்த முதியவனின் கைகளிலிருந்து அந்தத் தோல் காகிதத்தைப் பிடுங்கினேன். "எங்கே அவன்?" என்று நான் அவனைப் பார்த்துக் கத்தினேன். அவன் என் கண்களை ஒரு முழு நிமிடம் வெறித்துப் பார்த்துவிட்டு, பிறகு தொலைவில் இருந்த நீலக் கடலைத் தன் விரலால் சுட்டிக்காட்டினான். குபேரனின் தங்கக் கொடி அரைக்கம்பத்தில் பறந்து கொண்டிருக்க, ஒரு மிகப் பெரிய கப்பல் அத்துறைமுகத்தைவிட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்ததை நான் கண்டேன். வெற்றி என் மனத்தில் கரைந்து போனது. நான் பத்ரனைக் கொன்றுவிட விரும்பினேன். கூட்டம் மெல்ல மெல்ல மறையத் துவங்கியிருந்தது. நான் களைப்போடு அந்தக் கப்பலைப் பார்த்தேன். அந்தச் சண்டாளன் என் கைகளிலிருந்து தப்பிவிட்டான்! அடுத்த நாள், இலங்கையின் அரசனாக நான் முடிசூட்டப்படவிருந்தேன். அந்த விழாவைக் குறிக்கும் வகையில் ஏழு நாட்கள் பொதுக் கொண்டாட்டங்களுக்கு நான் உத்தரவிட்டேன். என் குடும்பத்தினரையும் மற்றவர்களையும் கொண்டு வருவதற்கு ஒரு படகை அனுப்பினேன். எனது முடிசூட்டு விழாவை ஒரு பிரம்மாண்டமான தருணமாக ஆக்குவதற்கு எல்லோரும் ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தனர். நான் பத்ரனைத் தேடினேன், ஆனால், கூட்டத்தில் அவன் எங்கோ ஒளிந்து கொண்டிருந்தான். விழா ஏற்பாடுகளில் தாங்கள்

பங்களித்துக் கொண்டிருந்ததுபோலப் பாசாங்குக் காட்டிக் கொண்டிருந்த கூட்டத்தினர் உண்மையில் முன்னேற்றத்தைத் தடுத்துக் கொண்டிருந்தனர்.

நான் முதல் தளத்தில் இருந்த தாழ்வாரத்தில் அமர்ந்து, அந்திச் சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்தேன். மேற்குக் கடல் கருஞ்சிவப்பு நிறத்தில் இருந்தது. பாய்மரங்கள் முழுமையாக விரிக்கப்பட்ட நிலையில் மிதந்து கொண்டிருந்த கப்பல்கள் அழகாக இருந்தன. தாழ்வாரத்தில் வீசிக் கொண்டிருந்த தென்றல் புத்துணர்ச்சியூட்டுவதாக இருந்தது. கீழேயிருந்த தோட்டத்தில் ஆயிரக்கணக்கான பறவைகள் இசையொலி எழுப்பின. ஆனால், கடலில் ஏகப்பட்டக் கப்பல்கள் இருந்தன. ஏதோ என்னைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தது. ஏதோ . . .

அப்போது, ஒரு தூதுவன், மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்க வேகமாக ஓடி வந்து, என்னிடமிருந்து ஒருசில அடிகள் தள்ளி நின்று கொண்டு, ஒரு நாயப்போல மூச்சிறைத்தபடி, “மேன்மை பொருந்தியவரே, வருணனின் கப்பல்கள் நமது கரைகளை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன,” என்று கூறினான். நான் திகைத்தேன். எனது சோம்பேறித்தனமான எண்ணங்களிலிருந்து நான் விடுபட்டேன். ஒட்டுமொத்த அரண்மனையும் ஸ்தம்பித்தது. என் முடிசூட்டு விழா அவ்வளவுதான்! அனைத்துக் கொண்டாட்டங்களையும் நிறுத்துமாறு நான் கட்டளையிட்டேன். இந்த நெருக்கடியைப் பற்றிக் கலந்து பேசுவதற்கு நான் எனது மந்திரி சபையைக் கூட்டினேன். சொல்லிக்கொள்ளும்படியாக எங்களிடம் படை எதுவும் இருக்கவில்லை. குபேரன் தனது கடற்படையினரில் பெரும்பாலானோரைத் தன்னுடன் கூட்டிச் சென்றிருந்தான். எனவே, கடற்கொள்ளையர்களை எதிர்த்துச் சண்டையிடுவதற்கு எங்களிடம் முந்நூறு வீரர்கள் மட்டுமே எஞ்சியிருந்தனர். எந்தவிதமான ரத்தச் சிதறலும் இல்லாமல் ஒரு சாம்ராஜ்யத்தை நான் கைப்பற்றியிருந்தேன். அது என்னைத் தொந்தரவு செய்தது. நான் வருணனுடன் சண்டையிட விரும்பினேன். யாருடனாவது ஒரு போரை நிகழ்த்த நான் விரும்பினேன். எனது வீரத்தை வெளிப்படுத்தாமல், குறிப்பிடத்தக்க சாகசங்கள் எதையும் செய்யாமல் நான் ஓர் அரசனாக ஆகியிருந்ததை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தோற்கடிக்கப்பட்ட ஒரு படையின் ஒழுகல் வயிறுகளின் மூலமாக நான் பெற்ற சாம்ராஜ்யம் இது. நினைத்துப் பார்க்கவே அருவருப்பாக இருந்தது! அந்த வெற்றி வெறுமையானதாக இருந்தது. எனவே நான் அந்தக் கறையைத் துடைத்துக் கொள்ள விரும்பினேன். வருணனை வீழ்த்துவது என் அந்தஸ்தை உயர்த்தும், என் மனத்தை அமைதிப்படுத்தும். அப்படித்தான் நான் நினைத்தேன்.

ஆனால் ஒரு சண்டை இப்போது நாசகரமானதாக இருக்கும். வருணன் எங்களை விழுங்கிவிட்டு, ஒரு பேரலைபோல இந்தத் தீவை ஆட்கொள்வான். வெற்றுக் கைகளால் கடலுக்கு அணை கட்டுவதைப் போன்றது அது.

பிரஹஸ்தன் வழக்கம்போல எரிச்சலூட்டினான். அனைத்து விதமான அசௌகரியமான உண்மைகளையும் எடுத்துரைத்து, அவன் எல்லோரையும் அசௌகரியப்படுத்தினான். நான் அவனை வெறுக்கத் துவங்கியிருந்தேன். அவன் எனது சகோதரன் விபீஷணனைப் போன்ற ஒரு போலியான போதகன் அல்ல. விபீஷணனின் நீதி போதனையை உதாசீனப்படுத்த நான் நன்றாகவே கற்றுக் கொண்டிருந்தேன். ஆனால் பிரஹஸ்தன் கூறியதில் அர்த்தம் இருந்தது. அவனது பகுப்பாய்வு எப்போதுமே படிகத்தைப்போலத் தெள்ளத் தெளிவாக இருந்தது. ஆனால், தான் ஒரு சிந்திக்கும் இயந்திரம் என்பதுபோல அவன் நடந்து கொண்டான். நான் அப்படிப்பட்ட ஓர் இயந்திரமாக இருக்க வேண்டும் என்றுதான் மகாபலி விரும்பினார். பிரஹஸ்தன் அறிவுபூர்வமாக விவாதித்தான். கடற்கொள்ளையர்களை எதிர்த்துச் சண்டையிடுவதற்கு, சொல்லிக்கொள்ளும்படியாக ஒரு படை எங்களிடம் இருக்கவில்லை என்பதை அவன் சுட்டிக்காட்டினான். வருணன் தனது கப்பல்களை விட்டுவிட்டு, நகருக்குள் நுழைவதைத் தேர்ந்தெடுத்தால், அதிக அளவில் சூறையாடலும் தீவைப்பும் நடைபெறும், பெண்கள் பெருமளவில் கற்பழிக்கப்படுவர், வெட்டுக் குத்துக்கள் சரமாரியாகத் தொடரும். எனவே, நாங்கள் செய்யக்கூடிய ஒரே காரியம், இப்போதைக்கு அமைதியை நாடுவதுதான். அதற்கு நிச்சயமாக நாங்கள் அதிக விலையைக் கொடுத்தாக வேண்டியிருக்கும், ஆனால் போருக்கான விலை அதைவிட அதிகமாக இருக்கும். எனவே நான் என் வாயை மூடிக் கொண்டேன். நான் ஏகப்பட்ட விஷயங்களைக் கூற விரும்பினேன், ஆனால் எதுவுமே சரியானதாகத் தோன்றவில்லை. ஒரு கீழ்த்தரமான கடற்கொள்ளையனின் கால்களில் விழ நான் விரும்பவில்லை. இறுதியில், ஓர் அசௌகரியமான உடன்பாட்டிற்குப் பிறகு, வருணனுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்குப் பிரஹஸ்தனுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. நான் அவனுடன் போக விரும்பினேன், ஆனால் பிரஹஸ்தன் அதை வெடுக்கென்று மறுத்தான். அவனது மரியாதைக் குறைவான தொனியை நான் விரும்பவில்லை. எனவே, நான்தான் இங்கு அரசன் என்பதை நான் அவனுக்கு நினைவுபடுத்தினேன்.

"அந்த ஒரே காரணத்திற்காகத்தான் நீங்கள் என்னுடன் வருவதை நான் விரும்பவில்லை," என்று அவன் கூறினான். "வருணன் உங்களைப்

பிணைக் கைதியாக்கிச் சிறைபிடித்து வைத்துக் கொண்டால், இலங்கை அவனுடைய கைகளுக்குள் விழுந்துவிடும்."

"வருணன் இலங்கையைக் கைப்பற்ற விரும்பியிருந்தால், இந்நேரத்திற்குள் அவன் அதைச் செய்திருப்பான்," என்று நான் வாதிட்டேன். ஆனால் வருணன் நீண்டகாலச் சிந்தனையைக் கொண்டவன். விரைவான சூறையாடலைவிட, பிணைப்பணத்தின் வடிவில் வருடா வருடம் தொடர்ச்சியாகச் செல்வங்கள் தன்னிடம் வந்ததை அவன் அதிகமாக ருசித்தான். அவனுக்குப் பிணைப்பணம் கொடுக்க ஒப்புக் கொண்டதன் மூலம், நாங்கள் அவனுடைய வலையில் விழுந்து கொண்டிருந்தோம்.

"அப்படியென்றால், இதற்கான மாற்று என்ன?" என்று பிரஹஸ்தன் கேட்டான்.

அதற்கான பதில் என்னிடம் இருக்கவில்லை. எனவே தயக்கத்தோடு நான் அவனைப் போக அனுமதித்தேன். ஒரு பிடிவாதமான குழந்தையிடமிருந்து ஒருவழியாக விடுபட்டுவிட்ட ஒரு பெற்றோரின் வெற்றிப் புன்னகை அவனது முகத்தில் படர்ந்தது. தூரத்தில் தெரிந்த தொடுவானில் புள்ளிகளைப்போலத் தென்பட்டக் கப்பல்களைச் சென்றடைவதற்கு, பிரஹஸ்தனையும் அவனது இரண்டு உதவியாளர்களையும் சுமந்து சென்ற சிறிய கப்பல் எங்கள் கரையைவிட்டுப் புறப்பட்டபோது, உள்ளுக்குள் நான் புகைந்து கொண்டிருந்தேன்.

அன்று மாலை முழுவதும் நான் பதற்றத்தோடும் எரிச்சலோடும் இருந்தேன். வாழ்வில் நான் இவ்வளவு தூரம் வந்திருந்தது குறித்து எனக்கு எந்தவிதமான சாதனையுணர்வோ அல்லது மகிழ்ச்சியோ இருக்கவில்லை. நான் உலகை மாற்ற விரும்பினேன். வாழ்வதற்குச் சிறந்த இடமாக அதை ஆக்க விரும்பினேன். அந்தச் செங்குத்துப் பாறையின் விளிம்பின்மீது இருந்த அந்தக் குடிசையிலிருந்து, திரிகோட்டா நகரின் அரண்மனைவரையிலான எனது பயணத்தில், எங்கோ ஓரிடத்தில், எனது லட்சியக் கனவுகளை நான் தொலைத்திருந்தேனோ என்று நான் பயந்தேன். நான் ஒரு கழுதையைப்போல நடந்து கொள்ளத் துவங்கியிருந்ததைக் கண்டு நான் பீதியடைந்தேன். நான் என் வேலைக்காரர்களிடம் கத்தினேன். என் தொண்டை வறண்டு போயிருந்ததாக நினைத்த ஒரு பாவப்பட்ட வேலைக்காரப் பெண், என் கட்டளையின்றி வெந்நீரை எனக்குக் கொண்டு வந்தபோது, அதை அவளது முகத்தின்மீது வீசினேன். தனக்குக் கொடுக்கப்பட்ட நிலையில் நிற்கத் தவறிய ஒரு மெய்க்காப்பாளனின் கன்னத்தில் நான் அறைந்தேன். ஓர் எரிச்சலான

இரண்டு வயதுக் குழந்தையப்போல நான் நடந்து கொண்டிருந்தேன். குறை கூறவோ அல்லது என்னருகே வரவோ யாருக்கும் துணிவிருக்கவில்லை. என் நடத்தை வினோதமாக இருந்ததை நான் அறிந்தேன். ஒருசில மணிநேரத்திற்கு முன்பு எனக்காக உயிர் கொடுக்கத் தயாராக இருந்த மக்களை இப்படி உதைத்து மிதிப்பதற்கு எனக்கு எந்த உரிமையும் இருக்கவில்லை. ஆனால் வினோதமாக, நான் ஏற்று நடித்துக் கொண்டிருந்த கதாபாத்திரத்தை நான் வெகுவாக ரசித்து மகிழ்ந்தேன். ஓர் அரசனாக இருப்பது நன்றாக இருந்தது, அது வெறுமனே எல்லோரையும் மிதித்து உதைப்பதாக இருந்தாலும்கூட. வேலைக்காரர்கள் தாங்கள் அடிக்கப்படுவோம் என்பதை எதிர்பார்க்கவும்கூடும்.

ஒரு வேலைக்காரன் என் அறைக்கு வந்து, என் முன் குனிந்து பணிந்தான். அவனது கால்மூட்டுக்கள் நடுங்கிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். தரையில் அவனது தலை உருண்டு கொண்டிருந்ததைப் பார்க்க வேண்டும் என்ற ஒரு திடீர்த் தூண்டுதல் என்னுள் எழுந்தது. என்னுடைய வாளைக் கொண்டு அவனது தலையை லாவகமாக ஒரே வீச்சில் சீவி, அது தரையைத் தொடுவதற்கு முன்பாக அதை எனது இடது காலால் எட்டி உதைப்பது போன்ற காட்சிகள் என் மனத்தில் நடமாடின. மிகவும் சிரமப்பட்டு என்னை நான் கட்டுப்படுத்திக் கொண்டேன்.

“மேன்மை பொருந்தியவரே, மயன் உங்களைப் பார்க்க விரும்புகிறார்.” எண்களை எண்ணிக் கொண்டும், ஒரு குச்சியால் அளவெடுத்துக் கொண்டும் வாழ்க்கை நடத்தி வந்த ஒருவனைச் சந்திப்பது எனக்கு அந்த நேரத்தில் அவ்வளவு முக்கியமானதாகப் படவில்லை. ஆனால் நான் அந்த வேலைக்காரனை அங்கிருந்து போகும்படி கட்டளையிடுவதற்கு முன்பாக, மயன் ஓர் அசட்டுப் புன்னகையுடன் அங்கு வந்தான். செய்தி கொண்டு வந்த வேலைக்காரன் அங்கிருந்து நயமாக வெளியேறினான். மயன் எனக்கு எதிரே இருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்தான். அவன் அந்த அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனது பார்வை அதற்கு ஒப்புதலளித்ததுபோல இருந்தது. சில சமயங்களில், அந்த முட்டாள் குபேரன், கண்ணைக் கூச வைக்கும் விதத்தில் ஏதேனும் செதுக்கல்களை மேற்கூரையில் சேர்த்திருந்ததை அவன் கண்டபோது, அவனுடைய நெற்றி சுருங்கியது. அவன் தன் நாவால் ஓர் ஒலியெழுப்பி, தனது மறுப்பைத் தெரிவிக்கும் வித்ததில் தலையசைத்தான். பிறகு அவன் உளறத் துவங்கினான். “ராவணா, கூரையின்மீது அவர்கள் சுண்ணாம்பைப் பயன்படுத்தி இருக்கக்கூடாது. கடல் காற்றில் உள்ள உப்பு அதை மஞ்சள் நிறமாக மாற்றிவிடும்.

அவர்கள் சுண்ணாம்பைப் பயன்படுத்தியே தீருவது என்று இருந்திருந்தால், சாந்துக் கலவையின்போது தேங்காய்ப் பாலையும் தேனையும் பயன்படுத்தியிருக்க வேண்டும். உண்மையில், அந்தப் பலகைக் கல் . . .”

வழுக்கைத் தலையுடன் இருந்த அந்த வயோதிகன், கட்டடக்கலை மற்றும் பொறியியலின் பல்வேறு தொழில்நுட்ப விபரங்களைப் பற்றி ஒரு குரங்கைப்போலச் சளசளவென்று பேசிக் கொண்டிருந்ததை நான் ஆச்சரியத்தோடு கவனித்தேன். அவன் என்னை ராவணன் என்று அழைத்ததையும் நான் கவனித்தேன். நான் அழைத்திராத ஓர் ஆசிரியன், என் அனுமதியின்றி, பொறியியலில் எனக்கு ஒரு விரைவுப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்ததை நான் விரும்பவில்லை. நான் எழுந்து சென்று, அவனது பிடரியைப் பிடித்து அவனுடைய தலையைக் கீழே அழுத்தி, அவனது மூக்கை நிலத்தில் தேய்த்தெடுக்க விரும்பினேன். மாறாக, என்னால் இயன்ற அளவுக்கு மரியாதையுடன், “நீ வந்த காரணத்தை நான் தெரிந்து கொள்ளலாமா?” என்று கேட்டேன். எனது குரலின் தொனி எனது உணர்ச்சிகளைக் காட்டிக் கொடுக்கவில்லை என்றும், மரியாதைக்குரிய வயோதிகப் பேராசிரியனும் கட்டடக்கலை நிபுணனுமான அவனிடம் நான் சரியான விதத்தில்தான் பேசியிருந்தேன் என்றும் நான் நம்பினேன். “நான் இவ்வழியாக வந்து கொண்டிருந்தேன். அப்படியே உன்னிடம் ஒரு வார்த்தைப் பேசிவிட்டுச் செல்லலாம் என்று நினைத்தேன்,” என்று அவன் கூறினான். ஐந்து நிமிடங்கள் கடந்தன. அந்த முதியவன் எதையோ உளறிக் கொண்டும், சிலவற்றைக் குறிப்பெடுத்துக் கொண்டும், அவ்வப்போது வருத்தத்தையோ அல்லது மகிழ்ச்சியையோ வெளிப்படுத்திக் கொண்டும் இருந்தபோது, நான் வெறுமனே அங்கே நின்றேன். அப்போது, திடீரென்று எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. இவன் என் தாயாரோடும் சகோதரியோடும் தனது மகளோடும் இந்தியாவில் இருந்திருக்க வேண்டும். இவன் எப்படி இங்கே வந்து சேர்ந்திருந்தான்? அதைவிட முக்கியமாக, என் தாயாரும் சகோதரியும் எங்கே இருந்தனர்? வருணனுக்கு அவர்கள் பலியாகிவிட்டார்களா? என் தாயாருக்கு ஏதேனும் நிகழ்ந்திருந்தால், நான் வருணனை உயிரோடு தோலுரித்துவிடுவேன். பேச்சுவார்த்தைகளையும் அமைதி உடன்படிக்கைகளையும் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

“சிவசிவா! மயனே, நீங்கள் இன்னும் அவனிடம் அதைக் கூறவில்லையா?” என் தாயாரின் குரலைக் கேட்டதும் என் வயிற்றில் இருந்த முடிச்சுகள் அவிழ்ந்தன. மேட்டுக்குடியினரின் மிடுக்கோடு அவர் நடந்து வந்து கொண்டிருந்ததைப் பார்த்து நான் நிம்மதியடைந்தேன்.

“ராவணா, உன் தாயார் எப்போது மேட்டுக்குடியினளாக இருந்தாள்?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். கடந்த முறை நான் அவரைப் பார்த்தபோது, கந்தலான ஆடைகளுடன் ஓர் ஏழைப் பெண்மணியாக அவர் இருந்தார். இப்போது ஒரு தூய வெள்ளை நிறப் பருத்தி ஆடையை அணிந்திருந்தார். என் சகோதரி அவருக்குப் பின்னால் ஒளிர்ந்தாள். அவர்கள் இருவருக்கும் பின்னால், அந்த விறைப்பான பெண்ணும் நின்று கொண்டிருந்ததை நான் கவனித்தேன். அவளது பார்வை அங்குமிங்கும் அலைபாயாமல், என்னுடைய கண்களைச் சந்தித்தது. அது இமைக்காமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தது. ஓர் அரசனுக்குரிய உறுதியான, உறைய வைக்கும் பார்வையை நான் இன்னும் அடைய வேண்டியிருந்தது. “தொடர்ந்து பயிற்சி செய், ராவணா,” என்று யாரோ என்னுள் இருந்து என்னைக் கேலி செய்தனர். அவள் என்னை எடைபோடுவதுபோல என் கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்தாள். மண்டோதரி — அந்தப் பொறியியல் நிபுணனின் மகள்! ஒரு கம்பைப்போல விறைப்பானவள், சீரான ஒழுக்கநெறியும் எண்ணங்களும் கொண்டவள், ஆனாலும் ஒரு சிலையைப்போல் அழகானவள். சூர்ப்பனகை அப்படித்தான் என்னிடம் கூறியிருந்தாள்.

“வருணன் எப்பேற்பட்டக் கண்ணியவான், தெரியுமா? எங்கள் பயணம் முற்றிலும் மகிழ்ச்சிகரமானதாக இருந்தது,” என்று என் தாயார் யதார்த்தமாகக் கூறினார்.

மாயன் என்னிடம் திரும்பி, “ஆமாம், என்னவோர் அற்புதமான கப்பல். வேலைப்பாடுகள் பிரமாதமாக இருந்தன,” என்று கூறினான்.

“சகோதரரே, ஜம்புமாலி ஏற்பாடு செய்திருந்த அந்த உடைசலான படகு, பாதி வழியில் கிட்டத்தட்ட மூழ்கிப் போனது. வருணனின் கப்பல்தானே நம்மைக் காப்பாற்றியது? ஆஹா . . . எப்பேற்பட்ட ஓர் அற்புதமான கப்பல்,” என்று என் தாயார் மயனிடம் கூறினார்.

“ஜம்புமாலி எங்கே? உங்களை அழைத்து வருவதற்கு நான் யாரையேனும் அனுப்புவதற்கு முன்பு நீங்கள் ஏன் அங்கிருந்து புறப்பட்டீர்கள்?” என்று நான் கேட்டேன்.

“ஜம்புமாலி இன்னும் வருணனின் கப்பலில்தான் இருக்கிறான். நீ இலங்கையைக் கைப்பற்றியுள்ளது குறித்து வருணன் மகிழ்ச்சியாக இருந்தான். அவன் ஒரு கடற்கொள்ளையன் என்று எல்லோரும் கூறுகின்றனர், ஆனால் அவன் செம்மையான இங்கிதங்களைக் கொண்டவனாக இருக்கிறான். நீ நீண்டகாலம் ஒளிமயமான ஆட்சி நடத்துவதற்கு அவன் தனது வாழ்த்துக்களை உனக்குத் தெரிவிக்கும்படி என்னிடம் கூறினான்,” என்று என் தாயார் கூறினார்.

“பிரஹஸ்தன் அவனிடம் பேசப் போயிருக்கிறான்.”

“அரசியலை ஆண்களாகிய நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள். ராவணா, உனக்கு இப்போது திருமண வயது வந்துவிட்டது. உனக்குப் பெண் கொடுக்க எல்லோரும் போட்டிப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆமாம், திருமணம் செய்து கொள்வதைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?”

“அம்மா, திருமணத்திற்கு நான் தயாராக இல்லை என்று நினைக்கிறேன். நான் இந்நாட்டைச் சிறப்பாக ஆள வேண்டும் என்பது என் லட்சியம். அதை நான் இப்போதுதான் துவக்கியுள்ளேன்,” என்று நான் எதிர்த்தேன்.

“தனது மகள் மண்டோதரியை உனக்கு மணமுடித்துக் கொடுக்கச் சம்மதமா என்று மயனிடம் நான் கேட்டேன்,” என்று என் தாயார் சர்வசாதாரணமாகக் கூறினார்.

நான் திடுக்கிட்டேன். ஒரு விறைப்பான கம்பை நான் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை. நான் அவளைப் பார்த்தேன். அவளிடம் நாணமான பார்வையோ அல்லது சங்கோஜமோ காணப்படவில்லை. அவள் என் பார்வையைத் தீவிரமாக எதிர்கொண்ட விதம் என்னைத் திடுக்கிட வைத்தது. அவளது கண்கள் கருப்பாகவும் கூர்மையாகவும் அடர்த்தியான இமைகளுடனும் இருந்தன. ஆனாலும் அவளிடம் ஏதோ ஒரு வசீகரம் இருந்தது. கூடவே, ஒருவிதமான அலட்சியமும் அவளிடம் இருந்தது. அவளை உருவாக்கிக் கொண்டிருந்தபோது அவளது தந்தை ஓர் உளியையும் ஓர் அளவை நாடாவையும் பயன்படுத்தியிருந்ததுபோல இருந்தது.

“அதிர்ஷ்டவசமாக, மயன் ஒத்துக் கொண்டார். எனவே, அந்த மங்களகரமான தருணத்திற்கு நேரம் குறிக்குமாறு ஜோதிடர்களை நான் கேட்டுக் கொண்டுள்ளேன்,” என்று என் தாயார் கூறினார். “அம்மா, எல்லாவற்றுக்கும் ஜோதிடர்களிடம் கேட்கின்ற தேவர்களின் இந்த வழக்கத்திற்கு நீங்கள் எப்போது அடிபணிந்தீர்கள்?” என்று நான் கேட்க விரும்பினேன். “நீங்கள் இருவரும் ஒருவரோடு ஒருவர் பரிச்சயம் ஏற்படுத்திக் கொள்வதற்கு உங்களுக்குச் சிறிது நேரம் தேவை என்று நான் நினைக்கிறேன்,” என்று அவர் என்னிடம் கூறிவிட்டு, “எனவே, பெரியவர்களாகிய நாம் இவர்கள் இருவரையும் இங்கு விட்டுவிட்டுத் தோட்டத்திற்குச் செல்லலாமா?” என்று மயனிடம் கேட்டார்.

இவ்வாறு கூறியபடி, என் கண்களைப் பார்க்காமல் அவர் வெளியே சென்றுவிட்டார். என் சகோதரி தனது உதடுகளில் ஒரு விஷமப் புன்னகையுடன் அங்கேயே சுற்றிக் கொண்டிருந்தாள். நான் வெளியே ஓடிச் சென்று, சன்னல் வழியாகக் குதித்து, மாயமாக மறைந்துவிட

விரும்பினேன். “மண்டோதரி — இப்படிக்கூட யாராவது பெயரிடுவார்களா? மயன், உன்னால் இதைவிடச் சிறந்த ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்திருக்க முடியும். உன் மகளுக்கு ஒரு நல்ல பெயரைக் கொடுக்கக்கூட உனக்குத் தெரியவில்லை என்றால், நீ பொறியியல் அதிசயங்களை உருவாக்குவதில் எந்த அர்த்தமும் இல்லை,” என்று என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன். அவள் அங்கு அசையாமல் நின்றாள். அவளது கண்கள் என்னைத் துளைத்துக் கொண்டிருந்தன. நான் நிர்வாணமாகவும் அசௌகரியமாகவும் உணர்ந்தேன். “இது என்ன கூத்து? பெண்ணல்லவா பதற்றத்தோடு இருக்க வேண்டும்? ராவணா, சுதாரித்துக் கொள். ‘அஜீரணக் கோளாறு புரட்சி’யின் மூலமாக நீ வெற்றி பெற்றிருந்தாலும்கூட, நீ ஓர் அரசன்தான்,” என்று எனக்கு நானே நினைவுபடுத்திக் கொண்டேன்.

“சகோதரரே, நான் உங்களிடம் ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேச வேண்டும்,” என்று தோட்டத்திலிருந்து என் தாயார் கூப்பிட்டார். “சூர்ப்பனகை, நீ போய் உன்னுடைய பொருட்களை உன் பையிலிருந்து பிரித்து அடுக்கி வை. உடனே போ.”

“சகோதரி, இதோ வருகிறேன். தோட்ட அமைப்பு அற்புதமாக இருக்கிறது, ஆனால் தண்ணீர் அமைப்புமுறைகளில் சில மாற்றங்களைச் செய்ய வேண்டியுள்ளது . . .” என்று எதையோ முணுமுணுத்தவாறு, மயன், தட்டுத்தடுமாறி அங்கிருந்து வெளியேறியதை நான் பீதியோடு பார்த்தேன். என் சகோதரி எனக்கு இன்னும் ஓர் அர்த்தம் கலந்த புன்னகையை உதிர்த்துவிட்டு, காற்றில் தனது ஆடைகள் படபடக்க அங்கிருந்து மறைந்தாள். “சூர்ப்பனகை, இங்கிருந்து போகாதே. முதியவரே, நான் உம்மை விரும்புகிறேன். எனக்கு உம்மைப் பிடித்திருக்கிறது. கொஞ்சம் பொறும். காந்தர்வக் கட்டடக்கலையின் நுணுக்கங்களையோ அல்லது ஒரு வானரக் கோவில் வடிவமைப்பையோ நாம் விவாதிக்கலாம். தயவு செய்து இங்கு வாரும். மேற்கூரை அமைப்பைப் பற்றி நீர் என்ன கூறிக் கொண்டிருந்தீர்? நாம் தொடர்ந்து பேசலாம் . . .” என்று நான் என் மனத்திற்குள் மன்றாடினேன். மயனின் மகளும் நானும் மட்டுமே இப்போது அந்த அறையில் இருந்தோம்.

“இந்த அறையிலிருந்து வெளியே பார்க்கும்போது தெரியும் காட்சி மிகவும் அழகாக இருக்கிறது,” என்று அவள் கூறினாள். அவள் தன் தந்தையைப்போலவே பேசினாள்.

“ஆமாம்,” என்று நான் கூறினேன். அதன் பிறகு அவள் மௌனமாகிவிட்டாள். அவளிடம் பேசுவதற்கு ஏதேனும் ஒரு விஷயம் கிடைக்காதா என்று என் மனத்திற்குள் தேடினேன். ஆனால் ஒரு

விஷயம்கூட எனக்குக் கிடைக்கவில்லை. “ராவணா, உன் குடும்ப வாழ்க்கை இப்படித்தான் இருக்கப் போகிறதா? அவள் சுவரை வெறித்துப் பார்ப்பாள், நீ ஒரு முட்டாள் கழுதையைப்போல எல்லா இடங்களிலும் வெறித்துக் கொண்டிருப்பாய். அவள் எந்தெந்த விஷயங்களைப் பற்றிப் படித்திருக்கிறாள் என்று நான் அவளிடம் கேட்க வேண்டுமா அல்லது அவளை ஒரு பாட்டுப் பாடும்படி நான் சொல்ல வேண்டுமா? அவளுக்கு ஏதேனும் ஓர் இசைக்கருவியை வாசிக்கத் தெரியுமா? அவள் என்னிடம் பேச மறுத்தாலோ அல்லது என் கேள்விகளுக்கு விடையளிக்காமல் போனாலோ நான் என்ன செய்ய வேண்டும்?” என் மனம் அலைபாய்ந்தது. அந்த அறை அதிகப் புழுக்கமாகவும் அதிக இறுக்கமாகவும் ஆகிக் கொண்டிருந்தது. திருமணம் செய்வதற்கான சரியான வழிமுறை இதுவல்ல. அது மட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரிந்தது.

“ம்ம்ம் . . . நான் பிரம்மனின்கீழ் வில்வித்தையைக் கற்றேன். எனக்கு இசை மிகவும் பிடிக்கும். குழந்தைகளின் பிணிகளுக்கு ஒரு தீர்வைக் கண்டுபிடிப்பதுதான் எனது பொழுதுபோக்கு . . .” என்று நான் பிதற்றினேன். எனக்கு நாக்குக் குழறியது, வாய் தடுமாறியது. நான் என் உளறலை நிறுத்தினேன்.

அவள் தன் கைகளைக் குறுக்காகக் கட்டிக் கொண்டு, என்னை நோக்கித் திரும்பி, என் கண்களை நிலையாகப் பார்த்தாள். “நீங்கள் எனது கணவராக ஆகவிருப்பதாக என் தந்தை என்னிடம் கூறினார். கீழ்ப்படிதல் கொண்ட ஒரு மகள் நான் என்பதால் என் தந்தை கூறியதை நான் ஒத்துக் கொண்டேன். தேவர்களின் அனைத்து வேதங்களும் எனக்குத் தெரியும். தேவர்களின் வரலாற்றையும் அசுரர்களின் வரலாற்றையும் நான் படித்திருக்கிறேன். பொறியியலையும் கட்டடக்கலையையும்கூட என் தந்தையின்கீழ் நான் பயின்றிருக்கிறேன். எனக்குக் கவிதைகள் எழுத வரும். நான் ஓவியங்களும் வரைகிறேன். வேட்டையாடுவது எனக்கு மிகவும் பிடிக்கும். அம்புகளைக் குறி பார்த்து எய்வதில் நான் திறமைசாலி.”

ஒரு நடமாடும் கலைக்களஞ்சியத்தை நான் திருமணம் செய்து கொள்ளத் தயாரா என்று யாரும் என்னிடம் கேட்கவில்லை. அவள் சற்று நிறுத்தினாள். கூறுவதற்கு அவளிடம் இன்னும் ஏதாவது மிச்சமிருந்ததா என்று பார்ப்பதற்காக நான் காத்திருந்தேன். அவளுக்குச் சீன மொழிகூடத் தெரிந்திருக்கக்கூடும். கப்பல்களை எவ்வாறு நிர்மாணிப்பது என்பதும் அவளுக்குத் தெரிந்திருக்கக்கூடும். ஆனால் அடக்கத்தின் காரணமாக, அவள் எல்லாவற்றையும் என்னிடம் கூறவில்லை என்று நினைக்கிறேன். எங்கள் முதலிரவின்போது,

“சந்தாக்யோ உபநிஷத்தைத் தலைகீழாக என்னால் ஒப்பிக்க முடியும், ஆனால் அழகிய காட்சியுடன்கூடிய அந்த அறையில் நாம் முதன்முதலில் சந்தித்தபோது நான் அதை ஒரு ரகசியமாக வைத்திருந்தேன். ஆனால் நாம் இப்போது இவ்வளவு நெருக்கமாக இருப்பதால், நமக்கிடையே ரகசியங்கள் எதுவும் இருக்கக்கூடாது என்று நான் நினைக்கிறேன். ஒரு கீழ்ப்படிதலுள்ள மனைவி என்ற முறையில், நான் இன்னொன்றையும் உங்களிடம் கூறியாக வேண்டும். பழங்குடியினர் மற்றும் அசுரர்கள் குறித்த அம்சங்கள் அதர்வண வேதத்தில் உள்ளன,” என்று அவள் கூறக்கூடும்.

நான் சிறியவனாகவும் நாகரீகமற்றவனாகவும் சாதனை ஏதும் புரியாதவனாகவும் உணர்ந்தேன். நான் ஒரு நல்ல போர்வீரன் என்பதை நான் அறிந்திருந்தேன், ஆனால் ருத்ராக்கனால் பயிற்றுவிக்கப்பட்ட முந்நூறு வீரர்கள்கூட நல்ல போர்வீரர்கள்தாம். பிரம்மன் எனது குருவாக இருந்தார், ஆனால் அந்த முறைசார் கல்வியின் பெரும்பாலானவற்றை நான் நிராகரித்திருந்தேன். இவளுடனான இந்தப் பேட்டி முடிவடைய வேண்டும் என்று நான் விரும்பினேன். வருணனுடன் பிரஹஸ்தன் கையெழுத்திடவிருந்த அந்த உடன்படிக்கையைப் பற்றியும், ஒரு பெரிய தொகையை அவனுக்குக் கப்பம் கட்டிய பிறகு நாங்கள் எவ்வாறு சமாளிக்கவிருந்தோம் என்பது பற்றியும் நான் கவலைப்பட்டேன். அப்போது எனக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. மண்டோதரி பாடத் தொடங்கினாள். மகாபலியின் ஆட்சியைப் போற்றிப் பாடப்பட்ட ஓர் இனிமையான பாடல் அது. அவள் அதை மிகச் சிறப்பாகப் பாடினாள். அவளது குரல் வளமாகவும், பொருத்தமான ஏற்ற இறக்கங்களுடனும், சுருதி சுத்தமாகவும் இருந்தது. பிழையற்ற முறையில் அவள் மிக அழகாகப் பாடினாள். ஆனால் அதில் ஜீவன் இருக்கவில்லை. தான் என்ன பாடிக் கொண்டிருந்தோம் என்பது புரியாமலேயே அவள் பாடினாள். அவளைப் பொறுத்தவரை அது ஒரு சாதகம், அவ்வளவுதான். அவள் அதைப் பாடிய விதம் இயந்திரத்தனமாகவும் உணர்ச்சியற்றும் உயிரற்றும், ஆனால் கச்சிதமாகவும் இருந்தது. எந்த இசை மேதையாலும் அவள் பாடிய விதத்தில் குற்றம் கண்டுபிடித்திருக்க முடியாது, ஆனால் அதில் ஏதோ ஒன்று இடறியது.

மண்டோதரி எவ்வளவு திடீரென்று பாடத் துவங்கியிருந்தாளோ, அவ்வளவு திடீரென்று அதை நிறுத்தினாள். ஓர் அசௌகரியமான அமைதி எங்களுக்கிடையே ஏற்பட்டது. என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. நான் அவளைப் பாராட்ட வேண்டுமா? அல்லது வெறுமனே புன்னகைக்க வேண்டுமா? அல்லது, பதிலுக்கு நான்

ஒரு பாடலைப் பாட வேண்டுமா? செய்வதறியாமல் நான் குழம்பிப் போய் நின்றேன். யாரேனும் வந்து என்னை மீட்க மாட்டார்களா என்று பரிதவித்தேன். முன்பு என் அறைக்குள் நுழைந்து என்னுடன் பேச வந்த முட்டாள்களைக் கண்டு நான் எரிச்சலடைந்திருந்தேன். இப்போது யாரேனும் வரக்கூடாதா என்று நான் பிரார்த்தித்தேன். அந்த முதியவன் மயன் வந்து என்னை இந்த இக்கட்டிலிருந்து விடுவித்தால் நன்றாக இருக்கும் என்று நான் நினைத்தேன்.

“ராவணா, என்ன, பரிச்சயம் முடிந்ததா? அடுத்த ஞாயிற்றுக்கிழமை உனக்குத் திருமணம். நம்முடைய உறவினர்களில் யாருக்கெல்லாம் தகவல் அனுப்ப முடியுமோ, அவர்களுக்கு அழைப்பு விடுப்பதற்கு நான் தூதுவர்களை அனுப்பியுள்ளேன். மற்றவர்களுக்கு, பிறகு தகவல் கொடுத்துக் கொள்ளலாம்.” என் தாயார் அந்த அறைக்குள் வந்திருந்தார். மயன் அதன் கதவருகே நின்று கொண்டு, சன்னலருகே இருந்த அலங்கரிக்காரத் தூணைப் பற்றி ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான். என் சகோதரி, வாசலில் நின்று கொண்டு தனது எதிர்கால அண்ணியாரைப் பார்த்துப் பிரகாசித்துக் கொண்டிருந்தாள்.

“ஆனால், அம்மா . . .” திடீரென்று, யாரோ சிலர் நடந்து வந்த சத்தம் கேட்டதும், என் பேச்சுத் தடைபட்டது. மொத்த அறையும் மௌனமானது. பிரஹஸ்தன் ஜம்புமாலியுடன் உள்ளே நுழைந்தான். மாரீசன் அவர்களுக்குப் பின்னால் வந்தான். ஒரு முக்கியமான தனிப்பட்ட விவகாரம் பேசப்பட்டுக் கொண்டிருந்தபோது, திடீரென்று ஏற்பட்ட இடையூறால் நான் எரிச்சலடைந்தேன், ஆனால் அதே சமயத்தில் நிம்மதியும் அடைந்தேன். என் தாயாரைப் பார்த்ததும், பிரஹஸ்தன் தன் கைகளைக் கூப்பித் தலை வணங்கி, அவருடைய நலனை விசாரித்தான். மாரீசன் நேராக என் தாயாரிடம் சென்று, தன் கண்களில் ஒரு மினுமினுப்புடன், “சகோதரி, ஜோடி சேர்ப்பு முடிந்துவிட்டதா? அவன் எப்படி வெட்கப்பட்டுக் கொண்டிருக்கிறான் பார்,” என்று கூறினான்.

நான் அவனைக் கழுத்தை நெறித்துக் கொல்ல விரும்பினேன். பிரஹஸ்தன் நேராகக் கடலை வெறித்துப் பார்த்தான். திடீரென்று ஜம்புமாலி மயனுடன் சௌகரியமாக ஓர் உரையாடலைத் துவக்கினான். மண்டோதரி என்னைத் தீவிரமாகப் பார்த்தபடி நின்று கொண்டிருந்ததால், நான் திக்கித் திணறினேன். கும்பகர்ணனும் விபீஷணனும் அந்த அறைக்குள் ஓடி வந்தனர். கும்பகர்ணன் என்னைக் கட்டிப் பிடித்தான். இரண்டு நாட்களாகச் சவரம் செய்யப்பட்டிராத அவனது தாடி என் முகத்தைக் கீறியது. அவனிடமிருந்து மதுவாடை வீசியது.

"ம்ம்ம் . . . தாய்மார்களே, உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால், சில முக்கியமான நாட்டு விவகாரங்களைக் கையாள்வதற்கு இந்த அப்பாவி ஆண்களுக்கு அனுமதி கொடுக்க முடியுமா?"

என் சகோதரி, தனது கீழுதட்டைப் பிதுக்கியபடி வெளியேறினாள். என் தாயார் என்னருகே வந்து என் நெற்றியில் முத்தமிட்டுவிட்டு அந்த அறையிலிருந்து சென்றார். மண்டோதரியின் உதடுகளில் ஒரு புன்னகை அரும்பியதைக் கண்டதும் நான் சிவந்தேன். அந்த அறையின் கட்டமைப்பை ரசிக்க விரும்பியதுபோலப் பாசாங்கு செய்து கொண்டு மயன் அங்கேயே சுற்றிக் கொண்டிருந்தான். ஆனால், மாரீசன், தனக்கே உரிய ஒரு பரிவுடன் அவனை வெளியே அழைத்துச் சென்றான். நாங்கள் அந்த அமைதியான கட்டடத்தில் அமர்ந்தோம். இறுதியில், பிரஹஸ்தன் பைத்தியம் பிடித்து ஏதேனும் ஆபாசமான பாடலைப் பாடக்கூடும் என்று நான் நினைத்த வேளையில், மாரீசன் தன் கண்களை உருட்டிக் கொண்டும் தனது தலையை ஆட்டிக் கொண்டும் உள்ளே நுழைந்தான்.

"மாரீசா, உன்னுடைய குரங்குச் சேட்டைகள் எல்லாம் முடிந்துவிட்டால், நாம் சிறிது வேலை செய்யத் துவங்கலாம்," என்று கூறித் தன்னைப் பழி வாங்க முயற்சித்தப் பிரஹஸ்தனைக் கண்டு மாரீசன் புன்னகைத்தான். "வருணனுடனான பேச்சுவார்த்தை மிகவும் கடினமானதாக இருந்தது. அந்தக் கடற்கொள்ளையன் ஒரு விடாக்கண்டன். நான் கூறப் போவதை நீ விரும்ப மாட்டாய் என்று எனக்குத் தெரியும், ஆனால் நமது வலிமையை உருவாக்கிக் கொள்வதற்கு நமக்கு நேரம் தேவை," என்று கூறிப் பிரஹஸ்தன் நிறுத்தினான். நான் வெளுத்தேன் அவர்களுடைய பேச்சுவார்த்தையில் ஏற்பட்ட உடன்பாடுகளை நான் கேட்க விரும்பவில்லை. நான் போருக்காகத் துடித்துக் கொண்டிருந்தேன். ஆனால் முட்டாள்தனமான வீரச் செயல்பாடு என்னை எங்கும் கூட்டிச் செல்லாது என்று என் பகுத்தறிவு கூறியது. பல அசுரர்கள் அவ்வழியைத் தேர்ந்தெடுத்து அழிந்து போயிருந்தனர். இப்போது நாட்டுப்புற நடனங்களில் மட்டுமே அவர்கள் உலாவிக் கொண்டிருக்கின்றனர்.

"அவனுக்கு என்ன கொடுக்க ஒப்புக் கொண்டுள்ளாய்?" என்று நான் கேட்டேன்.

"குற்றம் சுமத்தும் தொனியை பின்னாளுக்குத் தள்ளிப் போடு. நீ உன் உயர்மட்டக் குழுவுடன் பேசிக் கொண்டிருக்கிறாய். பொருத்தமான முறையில் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு நீதான் எனக்கு முழு அதிகாரம் கொடுத்தாய்."

"மூர்க்கனே! இப்போது உயர்மட்டக் குழு என்று எதுவும்

கிடையாது என்பது உனக்கு மறந்து போய்விட்டதா? நான்தான் அரசன், நீ எனது பிரதம மந்திரி. நான் உன்னிடம் கேள்விகள் கேட்டால், உன்னுடைய மேன்மையான கல்வியறிவை வெளிக்காட்டாமல் நீ அவற்றுக்கு விடையளிக்க வேண்டும்." நான் கோபத்தில் நடுங்கினேன். என் வாள் என் கையில் இருந்தது. பிரஹஸ்தன் பதற்றமோ கோபமோ இன்றி அங்கு அமைதியாக நின்றான். அவன் தனது ஒரு கையால் தனது வாளைப் பற்றியிருந்தான். அவன் எனக்கு வேண்டுமென்றே எரிச்சலூட்டியதுபோலவும், முதலில் நான் வாள் வீசுவதற்கு அவன் காத்திருந்ததுபோலவும் இருந்தது அது.

"இருவரும் ஒருவருக்கொருவர் மரியாதையோடு நடந்து கொள்ளுங்கள்," என்று ஜம்புமாலி கூறினான். மாரீசன் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். எப்போதும் புன்னகையுடன்கூடிய முகத்தோடு இருந்த அவன், இப்போது முகஞ்சுளித்துக் கொண்டிருந்தான்.

"என் தந்தையின் வயதைக் கொண்ட ஒருவனிடம் நான் ஏன் இது போன்ற விஷயங்களைக் கூறுகிறேன்?" என்று நினைத்த நான், மெதுவாக என் வாளை மீண்டும் அதன் உறைக்குள் போட்டுவிட்டு என் இருக்கையில் அமர்ந்தேன். "ராவணா, இது உனது அரியணை," என்று எனக்கு நானே நினைவுபடுத்திக் கொண்டேன்.

பிரஹஸ்தனும் உட்கார்ந்தான். அவன் பேசியபோது, எனக்கு எப்போதும் எரிச்சலூட்டி வந்திருந்த அவனது நியாய அநியாயங்கள் இப்போது அவனது பேச்சில் இடம்பெறாமல் போயிருந்ததை நான் கவனித்தேன். "இரண்டு லட்சம் தங்க நாணயங்கள், மூன்று மாதத்திற்கு ஒரு முறை 20,000 தங்க நாணயங்கள், நமது சிறந்த கப்பல்களில் ஏழு, நமது ஒட்டுமொத்த மிளகு உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு, ஏலக்காயிலும் கிராம்பிலும் ஐந்தில் ஒரு பங்கு, நமது துறைமுகங்களிலிருந்து நாம் வசூலிக்கின்ற சுங்கவரியிலிருந்து கிடைக்கின்ற வருவாயில் கால் பகுதி."

கையொப்பமிடப்பட்டத் தோல் காகிதத்தைப் பிரஹஸ்தன் படித்துக் கொண்டிருந்தபோது அறையில் முழுமையான மௌனம் நிலவியது. மாரீசன் யாருக்கும் கேட்காதபடி மோசமான வார்த்தைகளால் திட்டிக் கொண்டிருந்தான். கும்பகர்ணன் தன் இருக்கையில் நெளிந்தான்.

"இச்சிறிய உபகாரங்களுக்குப் பதிலாக நமக்குக் கிடைக்கவிருக்கும் பிரதியுபகாரம் என்னவோ?" என்று நான் பரிகாசம் தொனிக்கும் குரலில் கேட்டேன். அது அந்த முதியவனுக்கு இன்னுமொரு முறை கோபத்தை ஏற்படுத்திவிடக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன். "ராவணா, நீதான் ஒரு பைத்தியக்காரனைப்போலக் கோபப்படுகிறாய். பிரஹஸ்தன் ஒரு

மேட்டுக்குடியினன்,” என்று என் உட்குரல் கூறியது. நான் என் இருக்கையின் கைப்பிடிகளை இறுக்கமாகப் பிடித்தேன். அது அவற்றுக்கு வலி ஏற்படுத்தியிருக்கக்கூடும்.

“மேன்மை பொருந்தியவரே, எதையும் அதிகாரத்தோடு கேட்டு வாங்கும் நிலையில் நாம் இல்லை,” என்று பிரஹஸ்தன் ஒரு வறண்ட, தட்டையான குரலில் கூறினான். “அனைத்துப் படைகளிடமிருந்தும் அவன் நமக்குப் பாதுகாப்புக்கு உத்தரவாதம் அளித்துள்ளான். கடற்கொள்ளையர்களிடமிருந்து நமக்கு எந்த ஆபத்தும் வராமல் இருப்பதற்காகக் கடல்களில் ரோந்துப் பணியில் ஈடுபடவும் அவன் ஒத்துக் கொண்டுள்ளான்.”

இதைக் கேட்டவுடன் ஒரு பரிகாசச் சிரிப்பு அங்கு வெடித்தது. பிரஹஸ்தனும் புன்னகைத்துவிட்டுத் தொடர்ந்தான். “இரண்டு லட்சம் தங்க நாணயங்களை நாம் அவனுக்குக் கொடுத்ததும் அவன் தன் முற்றுகையை விலக்கிக் கொள்வான். நகரத்தைத் தான் தாக்கப் போவதில்லை என்று அவன் வாக்குறுதி கொடுத்திருக்கிறான். அவன் தேர்ந்தெடுக்கின்ற கப்பல்களுக்கு அந்த நாணயங்கள் கொண்டு சேர்க்கப்பட வேண்டும். அவனுடைய தூதுவர்கள் நமது சேமிப்புக் கிடங்குகளையும் தானியக்களஞ்சியங்களையும் சோதனையிட்டு, இப்போது நம் வசமுள்ள உற்பத்தியை மதிப்பிட்டு, தங்களுக்கான பங்கைக் கணக்கிடுவதில் நமது கணக்காளர்களுக்கு உதவி செய்வார்கள்.”

மீண்டும் ஓர் அசௌகரியமான மௌனம் நிலவியது. வருணனுக்குக் கொடுக்க வேண்டியிருந்ததை எல்லோரும் தங்கள் மனத்தில் கணக்கிட்டனர். நாங்கள் அவனுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பது எங்கள் யாருக்குமே உறுதியாகத் தெரியவில்லை. நாட்டுக் கருவூலத்தில் எவ்வளவு நாணயங்கள் இருந்தன என்பது குறித்தோ, எங்களது சேமிப்புக் கிடங்குகளிலும் தானியக்களஞ்சியங்களிலும் எவ்வளவு இருந்தது என்பது குறித்தோ, வரி வசூலிப்பில் எவ்வளவு பணம் இருந்தது என்பது பற்றியோ, சுங்கவரித் தொகை எவ்வளவு இருந்தது என்பது பற்றியோ எங்களுக்கு எந்த யோசனையும் இருக்கவில்லை. எது குறித்தும் எங்களுக்கு எள்ளளவு யோசனைகூட இருக்கவில்லை. இப்படிப்பட்ட விஷயங்கள் அனைத்தும் எங்களது கவனத்திற்குக் குறைவான விஷயங்கள் என்று வீரர்களாகிய நாங்கள் கருதினோம். எங்களைவிடத் தாழ்ந்த உயிரினங்களான கணக்காளர்களின் வேலை அது என்று நாங்கள் நினைத்தோம். ஜம்புமாலியைத் தவிர, அனுபவம் வாய்ந்த நிர்வாகிகள் எவரும் அந்த அறையில் இருக்கவில்லை. ஒரு நாட்டை ஆள்வது, அதைக்

கைப்பற்றுவதைவிட அதிகக் கடினமானது என்பது எனக்குத் தெரிந்திருக்கவில்லை. எங்களிடம் என்ன இருந்தது என்று தெரியாமலேயே பிரஹஸ்தன் ஏன் இந்த உடன்பாட்டிற்கு ஒத்துக் கொண்டான் என்றும் எனக்குத் தெரியவில்லை.

"நம்மிடம் எவ்வளவு இருக்கிறது என்று தெரியாமலேயே நான் ஏன் இந்த உடன்பாட்டை ஏற்றுக் கொண்டேன் என்று நீ யோசித்துக் கொண்டிருக்கக்கூடும். அது கடினமாகத்தான் இருந்தது. அரசாங்கத்தில் வருணனின் உளவாளிகள் இருந்ததாக நான் அனுமானித்தேன். அவர்கள் நமது நாட்டின் பொருளாதாரத்தைப் பற்றி வருணனுக்குத் தொடர்ந்து தகவல்கள் அனுப்பிக் கொண்டிருந்திருப்பார்கள். குபேரனின் ஆட்சியின்போதுகூட இவ்வாறு நடந்திருக்கக்கூடும். எனவே, சற்று அதிகமாக இருந்தாலும்கூட, நம்மால் சமாளிக்கக்கூடிய தொகையையும் பொருட்களையும் மட்டுமே அவன் கேட்பான் என்று நான் நினைத்தேன். நான் அங்கிருந்து எனது பேரப்பேச்சைத் துவக்கினேன்." பிரஹஸ்தன் அதைக் கூறியபோது என்னை ஏறிட்டுப் பார்த்தான்.

"தாராள மனம் படைத்த அந்தக் கடற்கொள்ளைக்காரன், நம்மால் கொடுக்கக்கூடிய அளவுக்கு மட்டுமே நம்மிடம் கேட்பான் என்று நீ அனுமானித்தாயா?" என்று கும்பகர்ணன் பிரஹஸ்தனைப் பரிகசித்தான்.

பிரஹஸ்தன் இதற்குக் கோபத்தோடு பதிலளிப்பதற்கு முன்பாக, ஜம்புமாலி குறுக்கிட்டு, "இப்போதுள்ள சூழல்களை வைத்துப் பார்க்கும்போது, எவரொருவராலும் செய்யக்கூடிய மிகச் சிறந்த காரியம் இதுவாகத்தான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். இப்போது, அந்தக் கடற்கொள்ளைக்காரனை மகிழ்ச்சிப்படுத்தும் வேலையை நாம் துவக்குவது நல்லது," என்று கூறினான். நன்றி கலந்த ஒரு பார்வையை நான் அவனை நோக்கி வீசிவிட்டு, என் இருக்கையைவிட்டு எழுந்து, அந்தச் சந்திப்புக்கூட்டத்தை முடிவுக்குக் கொண்டு வந்தேன்.

பிரஹஸ்தன் நீண்ட அடிகள் எடுத்து வைத்து என்னை நோக்கி வந்தான். "ராவணா, நான் உன்னுடைய முடிசூட்டு விழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்யட்டுமா? அதை உன்னுடைய திருமணத்துடன் சேர்த்துச் செய்ய உனக்கு விருப்பமா?" என்று அவன் என்னிடம் கிசுகிசுத்தான்.

"இதன் மூலம் சில செலவுகளைக் குறைக்கத் திட்டமிட்டுள்ளாயா?" என்று நான் எனக்குள் கூறிக் கொண்டேன். பிறகு, அவன் கூறியதற்கு ஒப்புதலாகத் தலையசைத்தேன்.

அதையடுத்து, அவன், "மேன்மை பொருந்தியவரே, நாம் அனைவரும் ஒன்றாக அமர்ந்து, நம்முடைய நிலைமையை ஆய்வு செய்ய

வேண்டும்,” என்று உரத்தக் குரலில் கூறிவிட்டுச் சற்று நிறுத்தினான். பிறகு, “உங்களுக்குக் களைப்பாக இருந்தால், நீங்கள் உறங்கச் செல்லலாம்,” என்று கூறினான்.

“இல்லை, நானும் உங்கள் அனைவரோடும் சேர்ந்து கொள்கிறேன். கருவூலங்களுக்குப் பொறுப்பு வகிக்கும் அதிகாரிகளைக் கூட்டி வாருங்கள்,” என்று நான் கூறினேன். அப்போது மாரீசன் புன்னகைத்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன்.



# 17

## கலகக்காரனின் நாவண்மை

பத்ரன்

நான் சமையலறையின் அருகே உட்கார்ந்தபடி, யாரேனும் வந்து என்னை என் எஜமானிடம் அழைத்துச் செல்வதற்காகக் காத்திருந்தேன். ஒருவரோடொருவர் அரட்டையடித்துக் கொண்டும், அரசியலையும் தங்கள் எதிர்காலத்தையும் பற்றி விவாதித்துக் கொண்டும், மக்கள் கூட்டங்கூட்டமாகத் தெருவில் சென்று கொண்டிருக்க, அந்த நாள் கரைந்தோடிக் கொண்டிருந்தது. நானும் அவர்களோடு சேர்ந்து கொண்டு, தெருவில் நடமாடும் சாதாரண மனிதனின் பொதுவான மனநிலை எவ்வாறு இருந்தது என்பது குறித்தத் தகவல்களைச் சேகரிக்க விரும்பினேன். ஆனால் என்னை என் எஜமானிடம் கூட்டிச் செல்வதற்காக நிச்சயமாக வரவிருந்த தூதுவனை நான் தவறவிட்டுவிடக்கூடாது என்று நான் பயந்தேன். என் எஜமான் தானே என்னைச் சந்திக்க வருவார், அவர் என்னை ஆரத் தழுவி, நான் செய்த எல்லாவற்றுக்கும் எனக்கு நன்றி கூறுவார். அவை அனைத்தும் சிவனின் செயல் என்றும், சிவனின் விளையாட்டில் நான் ஒரு சேவகன் மட்டுமே

என்றும் நான் அவரிடம் கூறுவேன். நான் மீண்டும் மீண்டும் இப்படிக் கனவு கண்டு கொண்டே இருந்தேன், ஆனால் யாரும் வரவில்லை. என் நெற்றியில் அரும்பிய வியர்வை எனது கன்னங்களில் வழிந்தோடி எனது நெஞ்சை நனைத்தது. ஆனாலும் அந்த இடத்தைவிட்டு அசைவதற்கு எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை. என் அரசன் ஏற்கனவே என்னை மறந்துவிட்டிருந்தார். அதை என்னால் நம்ப முடியவில்லை. “இல்லையில்லை, அவர் ஏதோ முக்கியமான வேலையில் மும்முரமாக இருக்கிறார். தனது குடும்ப உறுப்பினர்கள் கலைந்து செல்வதற்காக அவர் காத்துக் கொண்டிருக்கிறார். அவர்கள் அனைவரும் போன பிறகு அவர் எனக்குச் செய்தி அனுப்புவார்,” என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். ஆனால் அந்தி சாயும் நேரம் வந்தபோது, எனது நம்பிக்கை வலிமையிழந்து போயிருந்தது. நானாகச் சென்று என் முகத்தை அவரிடம் காட்ட எனக்கு பயமாக இருந்தது. நான் யார்? ஓர் ஈனப் பிறவி, ஒரு சிறிய புழு. எனக்கு என்மீதே காறி உமிழ வேண்டும்போல இருந்தது.

காத்திருப்பதில் இனி எந்த அர்த்தமும் இருக்கவில்லை. நான் நம்பிக்கைத் துரோகத்திற்கு ஆளாகியிருந்ததுபோல உணர்ந்தேன். நான் என் வாழ்க்கையைப் பணயம் வைத்திருந்தேன், சித்தரவதைக்கு ஆளாகியிருந்தேன். ஆனால் இப்போது, தேவை முடிந்தவுடன் தூக்கியெறியப்படும் கறிவேப்பிலைபோல நான் மறக்கப்பட்டு, இங்கு தூக்கி எறியபட்டுக் கிடந்தேன். அந்த எண்ணத்தை என் மனத்திலிருந்து வெளியேற்ற முயற்சித்து, கால் போன போக்கில் நான் நடந்தேன். வருணனின் கப்பல்கள் இலங்கைத் தீவைச் சூழ்ந்து கொண்டிருந்ததாகவும், ஒரு போர் நிகழவிருந்ததாகவும் நான் கேள்விப்பட்டேன். அதனால் என்ன? அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? இளவரசர்களும் படைவீரர்களும் அது குறித்துக் கவலைப்பட்டுக் கொள்ளட்டும். இப்போது எனக்குத் தேவைப்பட்டதெல்லாம் மது மட்டுமே. திடீரென்று, எனக்கு மாலாவின் நினைவு வந்தது. அவள் இக்கணத்தில் வேறு யாருடனாவது இருக்கக்கூடும். அப்படி இருந்தால், நான் அவனை நன்றாக உதைத்து, தரதரவென்று இழுத்துச் சென்று வெளியே தூக்கி எறியப் போவதாக முடிவு செய்தேன்.

குறுக்கும் நெடுக்குமாக இருந்த தெருக்களில் நான் வழி தவறினேன். பிறகு ஒரு வழியாக அவளது வீட்டை அடைந்தபோது இரவு வெகுநேரம் ஆகியிருந்தது. அவளது வீட்டிற்கு வரும் வழியில் இருந்த கள்ளுக் கடையில் நான் அதிகமாகக் குடித்திருந்தேன். ஓர் அழுக்கான நாய் அவளது வீட்டு வாசலில் கிடந்த மிதியடியில் படுத்துத் தூங்கிக்

கொண்டிருந்தது. நான் என்னால் முடிந்த அளவுக்கு மூர்க்கத்தனமாகவும் பலமாகவும் அதை ஓங்கி மிதித்தேன். அது வலியில் ஊளையிட்டுக் கொண்டும், தனது மொழியில் என்னைச் சபித்துக் கொண்டும், அங்கிருந்து எழுந்தோடி இருட்டிற்குள் மாயமாய் மறைந்தது. நான் மாலாவின் வீட்டுக் கதவை ஓங்கித் தட்டினேன். கூடவே, மோசமான வார்த்தைகளை அள்ளி வீசினேன். அவள் கதவைத் திறப்பதற்குள், நான் அவளது பாட்டன்களையும் முப்பாட்டன்களையும் விலாவாரியாகத் திட்டித் தீர்த்திருந்தேன். பக்கத்து வீடுகளிலிருந்து சில தலைகள் வெளியே எட்டிப் பார்த்தன. அவர்களையும் மோசமான வார்த்தைகளால் நான் திட்டினேன்.

மாலா கதவைத் திறந்து, ஒரு வாளி நிறையத் தண்ணீரை என் தலையின்மீது கவிழ்த்தாள். தண்ணீரின் குளிர்ச்சி என்னைத் திடுக்கிட வைத்தது. அவள் என் வேட்டியை இறுகப் பற்றி, என்னை உள்ளே இழுத்துச் சென்றாள். நான் ஈரம் சொட்டச் சொட்ட அவள் பின்னே சென்றேன். நான் அவளது படுக்கையை அடைந்தபோது, ஒரு குழந்தையைப்போல் அழுதேன். அவள் என் தலையை வருடிக் கொடுத்தவாறே ஏதேதோ கூறி என்னைச் சமாதானப்படுத்தினாள். சிறிது நேரத்தில் நான் குறட்டைவிடத் தொடங்கினேன். அடுத்த நாள் முழுவதையும் நான் தூங்கியே கழித்தேன்.

நான் அவளுடைய வாழ்க்கையில் மீண்டும் நுழைந்து மூன்று நாட்களுக்குப் பிறகு, உள்ளூர்க் காய்கறிச் சந்தைக்குச் சென்று வரலாம் என்று கூறி அவள் என்னை அழைத்தாள். நாங்கள் கடலை நோக்கி நடந்து சென்றோம். அந்த நேரம் முழுவதும் நான் அவளையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். சூரியன் மறையத் துவங்கிய அந்த மாலை நேரத்தில், நான் அவள்மீது காதல் வயப்பட்டிருந்ததை உணர்ந்தேன். சந்தையில் அவள் கடைக்காரர்களுடன் பேரம் பேசிக் கொண்டிருந்தபோது, கூடையைக் கையில் பிடித்துக் கொண்டு நான் அவளுக்குப் பின்னால் நின்றேன். என் கனவுகளில் மூழ்கிப் போயிருந்த நான், அங்கு நடந்து கொண்டிருந்த விவாதங்களின் பின்விளைவுகளையும் சந்தையில் இருந்த மக்களின் அபிப்பிராயங்களையும் கவனிக்கவில்லை. நாங்கள் திரும்பி நடந்தபோது, காய்கறிகளின் விலைகளைப் பற்றி அவள் முனகிக் கொண்டே வந்தது எனது மகிழ்ச்சியான காதல் மனநிலையை மாயமாக மறைந்து போகச் செய்தது. எரிச்சலடைந்த நான், வாயை மூடிக் கொண்டு வரும்படி அவளை அதட்டினேன். நான் எதிர்பார்க்காத விதத்தில் அவள் என்னிடம் மிகவும் கோபமாக நடந்து கொண்டதோடு, என்னையும் உலகிலிருந்த அனைத்து ஆண்களையும் சபிக்கத்

துவங்கினாள். “அரசியல், அரசியல்! அற்ப அரசியலாலும் சண்டைகளாலும் எங்கள் வாழ்க்கையைப் பாழாக்குவதை ஏன் உங்களைப் போன்ற ஆண்களால் நிறுத்த முடியவில்லை? ஒரு டஜன் வாழைப்பழங்களுக்குப் பன்னிரண்டு சவரன்கள் விலை கொடுக்க வேண்டியுள்ளது. அந்தக் கடைக்காரன் நம்மிடமிருந்து நன்றாகக் கொள்ளையடித்திருக்கிறான். ஆனால் விலை இன்னும் அதிகரிக்கப் போவதாகவும் அவன் கூறுகிறான். புதிய அரசன் இன்னும் ஏராளமான வரிகளை விதித்துள்ளான். நெடுஞ்சாலைகளைப் பயன்படுத்துவதற்குக் கூடுதல் சுங்கவரியும் விதித்துள்ளான். இவற்றின் காரணமாக, காய்கறிகளின் விலை கன்னாபின்னாவென்று ஏறுகிறது. கேடு கெட்ட அரசியல்வாதிகள், கேடு கெட்ட அரசன்.”

“மாலா, வாயை மூடு. அரசனைப் பற்றி நீ அப்படிப் பேசக்கூடாது. யார் காதுகளிலாவது விழுந்தால், அது அரசனுக்குத் தெரிவிக்கப்பட்டுவிடும்.” ஒருசில தலைகள் திரும்பி எங்களைப் பார்த்து முறைத்தன. நான் பயந்தேன். நம்பிக்கைத் துரோகத்திற்காக நான் விசாரிக்கப்பட விரும்பவில்லை.

“நீ உன் வாயை மூடு. எனக்கு எந்த அரசனைப் பற்றியும் அக்கறையில்லை. அவர்கள் எல்லோருமே ஒன்றுதான். இந்தப் புதிய அரசனுக்கு அப்படியென்ன தனிச்சிறப்பு இருக்கிறது? தேவன், அசுரன், காந்தர்வன், அரைச்சாதிக்காரன் — இவர்கள் எல்லோருமே ஒரே மாதிரியானவர்கள்தான். அரியணையை எப்படித் தக்க வைத்துக் கொள்வது, மக்களை எவ்வாறு வதைத்தெடுப்பது என்பது பற்றி மட்டுமே அவர்கள் கவலைப்படுகின்றனர். அவர்கள் பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுகின்றனர். அசுரர்களின் விடுதலை, தேவர்களைப் பழிக்குப் பழி வாங்குவது, கலாச்சாரத்தைப் பாதுகாப்பது, இன்னும் இது போன்ற பிதற்றல்கள் அவர்களிடமிருந்து வருகின்றன. ஆனால் மக்களை வறுத்தெடுப்பதும், அரண்மனையில் ஓர் ஆடம்பரமான வாழ்க்கையை வாழ்வதும், அதிகாரத்தைக் கைவிட மறுப்பதும்தான் அவர்களுடைய குறிக்கோள்.”

“மாலா, ஒரு முற்றுகை ஏற்பட்டிருப்பது உனக்குத் தெரியுமா?”

“என்ன முற்றுகை? வருணனை அடக்கி அவனது இடத்தில் வைக்க உன் அரசனால் ஏன் முடியவில்லை? உன் ராவணன் ஒரு கோழை. குபேரனின் வீரர்களுக்கு யாரோ விஷம் வைத்ததால் அவனுக்கு இந்த ராஜ்யம் கிடைத்தது. முதுகெலும்பற்றக் கோழைகள். உன் மக்கள் இப்படிப்பட்டவர்கள்தான். ஒரு கொடுமைக்காரக் கடற்கொள்ளையனுடன் போரிட உன் அரசன் தயாராக இல்லை. ஆனால் தான்தான் அசுரர்களின் மீட்பன் என்று அவன் மார்தட்டிக்

கொள்கிறான். ராவணன்தான் இன்று அசுர இனத்தால் உருவாக்க முடிகின்ற கதாநாயகர்களுக்கான எடுத்துக்காட்டு என்றால், சிவன்தான் அசுரர்களைக் காப்பாற்ற வேண்டும். அரசனாம் அரசன்! முதுகெலும்பற்ற ஒரு கிறுக்கன் அவன்.”

அவளது வெறுப்பு மற்றும் ஏமாற்றத்தின் தீவிரம் கவலையளிப்பதாக இருந்தது. விஷத்தைப் பற்றி அவள் குறிப்பிட்டபோது என் வயிறு சுண்டியிழுத்தது. ராவணனின் வெற்றியின்மீது அது இவ்வளவு பெரிய அவமதிப்பை ஏற்படுத்தும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அது எனக்குத் தெரிந்திருந்தாலும்கூட நான் அதையேதான் செய்திருப்பேன் என்பது நிச்சயம். ராவணன் குபேரனுடன் துணிச்சலாகப் போரிட்டு வீரமரணம் எய்தியிருந்தால், அதனால் யாருக்கு என்ன பலன் கிடைத்திருக்கும்? புகழ்மிக்கத் தியாகத்திற்கும் வஞ்சகமான வெற்றிக்கும் இடையே, இரண்டாவதைத்தான் நான் எப்போதும் தேர்ந்தெடுப்பேன். ஏராளமான அசுரர்கள் வீரமான தியாகிகளாக ஆகியுள்ளனர். பத்ரன் அவர்களில் ஒருவனாக இருப்பதோ அல்லது இல்லாமல் போவதோ, லேசான வித்தியாசத்தைக்கூட ஏற்படுத்தாது. மாபெரும் தேவப் படைத்தளபதிகள் எண்ணற்றோரை உருவாக்கியிருந்த அந்தச் சூழ்ச்சிக் குலமான விஷ்ணு குலத்தைக் கண்டு நான் பொறாமை கலந்த ஒரு பிரமிப்பைக் கொண்டிருந்தேன்.

நாங்கள் ஓர் அசௌகரியமான அமைதியுடன் வீட்டை நோக்கி நடந்தோம். அவளது வீட்டை எங்களுடைய வீடாக நான் நினைத்திருந்தது குறித்து நான் ஆச்சரியமடைந்தேன். அவள்மீதான எனது ஈர்ப்பு வெறுமனே உடல்ரீதியானது அல்ல என்று சிறிது நேரத்திற்கு முன்பு நான் உணர்ந்திருந்தேன். ஆனால் அவள் என்னைக் குறித்து எவ்வாறு உணர்ந்தாள் என்பது எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. ஒருவேளை, அவளது வீட்டிற்கு அடிக்கடி விஜயம் செய்தவர்களில் நானும் ஒருவனாக இருக்கக்கூடும். நான் பொறாமை கொண்டேன். அவளை நான் முற்றிலும் எனதாக்கிக் கொள்ள விரும்பினேன். அவள் ஒரு விலைமாதுதான், ஆனால் அது என்னைத் தொந்தரவு செய்யவில்லை. அப்படிப்பட்ட ஒழுக்கநெறிக் கட்டுப்பாடுகளுக்கு நான் அப்பாற்பட்டிருந்தேன். இத்தகைய சிறிய விபரங்களை விட்டொதுக்கும் அளவுக்குப் போதிய பரந்த மனப்பான்மை கொண்டவன் நான் என்பதில் நான் உறுதியாக இருந்தேன்.

நாங்கள் தெருமுனையில் திரும்பியபோது, ஒரு பணக்காரன் தனது குதிரையின் பிடரி மயிரைத் தடவிக் கொடுத்தபடி, அவளுடைய வீட்டு

முற்றத்தில் நின்று கொண்டிருந்ததை நான் பார்த்தேன். நாங்கள் அவளது வீட்டை நெருங்கியபோது, அவன் எங்களை நோக்கித் திரும்பிப் புன்னகைத்தான். அவனைக் கண்டதும் மாலாவின் கண்கள் பிரகாசமடைந்தன. அடுத்தக் கணம், அவள் தன் கையில் சுமந்து கொண்டிருந்த கூடையை என் கையில் திணித்துவிட்டு, அவனை நோக்கி ஓடிச் சென்று, அவனை இறுக்கமாக அணைத்துக் கொண்டு, மகிழ்ச்சிக் கூக்குரலிட்டாள். நான் அதிர்ச்சி அடைந்தவனாக, என்ன செய்வதென்று தெரியாமல் இருட்டில் நின்றேன். அவர்கள் இருவரும் எந்த வெட்கமும் இன்றி முத்தமிட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் கூட்டிற்குள் நுழைந்து, கதவை மூடியபோது, நான் இன்னும் என் கை நிறையக் காய்கறிகளுடன் அங்கு நின்று கொண்டிருந்தேன். அக்கதவை என் காலால் எட்டி உதைத்து, அவனை எங்கள் வீட்டிலிருந்து இழுத்து வெளியே தள்ளி, அவனது தலையை வாசற்படிகளில் ஓங்கி இடிக்க நான் விரும்பினேன். என் முன்னால் இப்படி வெட்கமின்றி நடந்து கொண்டதற்காக மாலாவை நான் புரட்டியெடுக்க விரும்பினேன்.

வெறுமை என்னை நிரப்பியபோது, கைகள் நிறையக் காய்கறிகளுடன் ஒரு பரத்தையின் வீட்டின் முன்னால் நடுத்தெருவில் நான் நின்று கொண்டிருந்தது என்னை எவ்வளவு பெரிய முட்டாளாகத் தோன்றச் செய்யும் என்று நான் நினைத்துப் பார்த்தேன். சுயபச்சாதாபமும் வாழ்வின் நியாயமின்மை குறித்தக் கோபமும் வெறுப்பும் என்னுள் அலையெனத் திரண்டதை நான் உணர்ந்தேன். முற்றத்தில் மேய்ந்து கொண்டிருந்த அக்குதிரை, அவமதிப்பை வெளிப்படுத்திய ஒரு முகத்துடன், தனது தாடைகளால் புல்லைச் சவைத்துக் கொண்டே என்னைக் கண்காணித்துக் கொண்டிருந்ததாக நான் கற்பனை செய்தேன். நான் அதை நோக்கி நடந்து சென்று, என் கையிலிருந்த கூடையிலிருந்த அனைத்துக் காய்கறிகளையும் அதன் முன்னால் கொட்டினேன். அது மகிழ்ச்சியாக அவற்றை மென்று தின்னத் துவங்கியதை நான் திருப்தியோடு பார்த்தேன். ஏமாற்றமடைந்த காதலனாக நான் எனது வெறுப்பை வெளிப்படுத்திக் கொண்டிருந்த விதத்தைக் கண்டு நான் சிறுமையாகவும் இழிவாகவும் முட்டாள்தனமாகவும் நகைப்புக்கிடமானதாகவும் உணர்ந்தேன்.

நான் சந்தையை நோக்கி நடந்தேன். ஊரடங்கு உத்தரவு விலக்கிக் கொள்ளப்பட்டிருந்தது. குபேரனின் ஆட்சிக்காலத்தின்போது இருந்த கட்டுப்பாடுகள் எதுவும் இப்போது விதிக்கப்பட்டிருக்கவில்லை. எல்லோராலும் சுதந்திரமாக வெளியே செல்ல முடிந்தது. நான் சந்தையை நெருங்கியபோது, திடீரென்று எனக்கு மதுவருந்த

வேண்டும்போலத் தோன்றியது. நான் மூச்சுமுட்டக் குடிக்க விரும்பினேன். என் காதலியை இழந்திருந்தது அதற்குக் காரணமல்ல. ஏனெனில், அவள் ஒருபோதும் என் காதலியாக இருந்திருக்கவே இல்லை. அவள் வெறும் விலைமாது மட்டுமே. குடியின் பல்வேறு நிலைகளிலிருந்த மக்களை நான் கடந்து சென்றேன். அந்தக் குடிகாரர்கள் ஒவ்வொருவரும், ஒரு முறையாவது, பிரபலமான அசுர விலைமாதுவான மாலாவின் வீட்டிற்கு விஜயம் செய்திருக்க வேண்டும் என்ற நினைப்பு வேடிக்கையாக இருந்தது. நான் சுவரில் காறி உமிழ்ந்தேன். எனக்கு இப்போது மது உடனடியாகத் தேவைப்பட்டது. நான் தெருமுனையில் இருந்த ஒரு விடுதிக்குள் நுழைந்தேன். அங்கு மும்முரமாக ஒரு சண்டை நடந்து கொண்டிருந்தது. கடுமையான தோற்றத்தைக் கொண்ட ஒருவன் கல்லாப்பெட்டியருகே உட்கார்ந்து கொண்டு, வாயில் வெற்றிலையைக் குதப்பியபடி, முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியுமின்றி அந்தச் சண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். குடிபோதையில் ஏற்பட்ட மோதல்கள் அவனுக்குப் பழக்கமாகியிருக்கக்கூடும். நான் வெட்கத்துடன் அவனை அணுகினேன். பதிலுக்கு அவன் தன் புருவங்களை உயர்த்தினான். நான் என் உடையைத் துழாவி சில செப்புக் காசுகளைக் கண்டுபிடித்தேன். அவை எங்கிருந்து வந்திருந்தன என்று எனக்கு நினைவிருக்கவில்லை. ஒருவேளை, அவை, குபேரனின் சமையலறையில் நான் செய்த வேலைக்கு எனக்குக் கொடுக்கப்பட்டச் சம்பளமாக இருந்திருக்கக்கூடும்.

"அவர்கள் எதைப் பற்றிச் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள்?" என்று நான் கேட்டேன், ஆனால் அதற்கு எந்த பதிலையும் நான் எதிர்பார்க்கவில்லை.

"அரசியல். சண்டை போடுவதற்கு அவர்களுக்கு உருப்படியாக வேறு எதுவும் இல்லை. சோம்பேறி முட்டாள்கள்! உனக்கு என்ன வேண்டும், கள்ளா அல்லது ஒயினா?"

"ம்ம்ம் . . . உண்மையில், எனக்கு ஒரு வேலை வேண்டும்." அவ்வார்த்தைகள் திடீரென்று என் வாயிலிருந்து வெளிவந்தன. அக்கணம்வரை, மதுவருந்த வேண்டும் என்ற எண்ணம் மட்டுமே என் மனத்தில் இருந்திருந்தது. அவன் அதற்கு பதிலளிக்கும் முன்பாக, நான் அவசர அவசரமாக, "என் பெயர் பத்ரன். குபேரனின் சமையலறைகளில் நான் வேலை செய்திருக்கிறேன். நான் ஒரு நல்ல சமையற்காரன் என்று அவர்கள் கூறுகின்றனர்," என்று கூறினேன்.

"உன்னுடைய விதவிதமான தயாரிப்புகளுக்கு இங்கு எந்தப் பிரயோஜனமும் கிடையாது. மீன் குழம்பு அல்லது பொரித்தக் கோழி

போன்ற சாதாரணமான உணவு வகைகளை உன்னால் சமைக்க முடிந்தால், ஒரு தற்காலிகமான இடம் உனக்குக் காலியாக இருக்கிறது. என் பெயர் இளங்கோ. பாழாய்ப் போன இத்தீவு, பேரரசர் மகாபலியின் ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இருந்த காலத்திலிருந்தே எனது குடும்பம் இந்த விடுதியை நடத்தி வந்துள்ளது.”

எனவே நான் இளங்கோவின் விடுதியில் சேர்ந்து கொண்டேன். சூடான அரசியல் விவாதங்கள் நடைபெற்ற ஓர் இடம் அது என்பதை விரைவிலேயே நான் கண்டுகொண்டேன். அவ்விவாதங்கள் வழக்கமாக ரத்தக் களறியில்தான் முடிந்தன. அவ்விடுதியின் உரிமையாளன் ஒருபோதும் எந்தவொரு விவாதத்திலும் நேரடியாகக் கலந்து கொள்ளவில்லை, ஆனால் அரசியலைப் பற்றிப் பேசுவதிலிருந்து யாரையும் தடுக்காததன் மூலம் வார்த்தைகளற்ற ஊக்குவிப்பைக் கொடுத்து வந்தான். இந்த விவாதங்கள் உண்மையில் தனது வியாபாரத்திற்கு நல்லது என்று அந்தச் சூழ்ச்சிக்கார இளங்கோ கருதினான். கைகலப்புகளின்போது உடைக்கப்பட்ட அறைகலன்களுக்கான பழுதுபார்ப்புச் செலவுகளை, அவற்றுக்குக் காரணமான வாடிக்கையாளர்களின் பில்லில் அவன் சேர்த்துக் கொண்டான். சமைப்பதற்கும் பரிமாறுவதற்கும் இடையே, நாட்டு நிலவரங்களைப் பற்றிப் பல்வேறு வாடிக்கையாளர்கள் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருந்ததை நான் கவனமாகக் காது கொடுத்துக் கேட்டேன். விஷயங்களை மாற்றுவதற்குத் திறனற்ற, ஆனால் ஆளும் வர்க்கத்தினரால் தங்கள் முதுகுகளின்மீது வலுக்கட்டாயமாகச் சுமத்தப்பட்டச் சுமைகளைத் தாங்கிக் கொண்டிருந்த சாதாரண அசுர மக்களின் குரல் அது. இளங்கோவின் விடுதிக்கு விஜயம் செய்த கூட்டம், குறிப்பிடத்தக்கக் கல்வியறிவோ அல்லது பணமோ இல்லாத, வெகு சாதாரணமான மக்களை உள்ளடக்கியிருந்தது. வணிகர்களும் அரசு அதிகாரிகளும் அடங்கிய மேல்நிலை நடுத்தர வர்க்கத்தினர், தற்போதைய ஆட்சியை காட்டுமிராண்டித்தனமான ஒன்றாகக் கருதியதாக நான் சந்தேகித்தேன். ராவணன் நல்லவிதமான மாற்றங்களைக் கொண்டு வருவார் என்று ஏழைகளும் கீழ்நிலை நடுத்தர வர்க்கத்தினரும் நம்பினர். ஏழ்மையிலிருந்து உயர்ந்தெழுந்து மேல்நிலையை அடைந்திருந்த ஓர் ஏழைச் சிறுவனோடு பலர் அவரைத் தொடர்புபடுத்திப் பார்த்தனர். குபேரன் செய்திருந்ததைப்போல இல்லாமல், வெறுமனே வணிகத்தின்மீதும் வணிகர்களிடமும் மட்டுமே கவனம் செலுத்தாமல், ஏழைகளுக்கு அவர் நல்லது செய்வார் என்று அவர்கள் உறுதியாக நம்பினர். பல அரசர்களையும் ராணுவச் சூழ்ச்சியையும் அரண்மனை உட்பூசல்களையும் பார்த்திருந்த

முதியவர்கள், தொடர்ந்து சந்தேகத்துடனேயே இருந்தனர். விஷயங்கள் மேலும் மோசமடையவே செய்யும் என்று அவர்கள் கருதினர். வழக்கமாக, ராவணனுக்கு ஆதரவான குழுக்களுக்கும் குபேரனுக்கு ஆதரவான குழுக்களுக்கும் இடையே பல சண்டைகள் நிகழ்ந்தன. ஆனால், புதிய அரசாங்கத்தின் கொள்கைகள் குறித்த ஆர்வமான எதிர்பார்ப்பு அவர்கள் அனைவருக்கும் இருந்தது.

இந்த விவாதங்கள் என்னைப் பெரிதும் கவர்ந்தன. நன்னம்பிக்கையுடன்கூடிய ஒரு கண்ணோட்டம் நிலவ வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் ராவணனைப் பற்றி இவர்கள் அனைவரையும்விட எனக்கு நன்றாகத் தெரிந்திருந்த காரணத்தால், எதிர்காலம் அவ்வளவு பிரகாசமானதாகத் தெரியவில்லை. மாலாவின்மீது நான் கொண்டிருந்த காதலும், அவள் வெளிப்படையாக எனக்குத் துரோகம் இழைத்தது குறித்த வெறுப்பும், ஏற்கனவே வாழ்க்கையைப் பற்றி நான் கொண்டிருந்த அவலமான கண்ணோட்டத்திற்கு வலு கூட்டின. நான் எனது கடந்தகாலத்திற்குத் திரும்பிச் சென்று, என் பசுக்களைக் கவனித்துக் கொண்டு, எனது சிறிய நிலத்தில் விவசாயம் செய்து கொண்டு, பருத்த உடலைக் கொண்ட எனது இனிய மனைவியை நேசித்துக் கொண்டு, அவளோடு சண்டையிட்டுக் கொண்டு, என் மகளுடன் விளையாடிக் கொண்டு, எனது நண்பர்களுடன் கள்ளுக் கடைக்குச் சென்று கொண்டு, கோவில் திருவிழாக்களில் ஆடிக் கொண்டு, பூரண நதிக்கரையில் ஓர் எளிய வாழ்க்கையை வாழ விரும்பினேன். அவற்றைக் குறித்து நான் ஏங்கினேன். ஆனால் மாலாவைக் குறித்து நான் மிகவும் ஏங்கினேன். அவளுடைய வீட்டின்மீது நான் எப்போதும் ஒரு கண் வைத்துக் கொண்டே இருந்தேன். அந்த நெட்டையான, கவர்ச்சியான மனிதன் அடிக்கடி அவளது வீட்டிற்கு விஜயம் செய்தது எனக்குப் பெரும் கோபமூட்டியது. ஒருமுறை நான் அவனைப் பின்தொடர முயற்சித்தேன், ஆனால் எப்படியோ அவனைத் தொலைத்துவிட்டேன். அவனைத் தேடிக் கடைவீதியில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து சென்றேன், ஆனால் வேலைக்கு நேரமாகிக் கொண்டிருந்தது. அன்று இளங்கோவிடம் வாய் நிறைய வாங்கிக் கட்டிக் கொண்டேன். எனது அரை நாள் சம்பளமும் பறி போனது. மாலாவின் வீட்டிற்கு வந்த நெட்டையன் ஒரு புரியாத புதிராக இருந்தான். அவன் தன்னம்பிக்கையும் வலிமையும் பொருந்தியவனாகத் தோற்றமளித்தான். ஒரு படைவீரனின் நடை அவனுக்கு இருந்தது. அவன் தன் விருப்பம்போலத் தோன்றி மறைந்தான். ஆனால் என் கண்களுக்கு, அவன் எதையோ மறைத்துக் கொண்டும், அதை எப்போதும்

பத்திரமாகப் பாதுகாத்துக் கொண்டும் இருந்த ஒருவனைப்போலத் தோன்றினான். அவன்தான் என் கதையின் வில்லன் என்று நான் தீர்மானித்தேன். நான் அவனைக் கண்டுபிடித்து ஆவன செய்வேன் என்று நான் உறுதியெடுத்துக் கொண்டேன்.

மெல்ல மெல்ல, பொதுமக்களின் அபிப்பிராயம் மாறியது வெளிப்படையாகத் தெரிந்தது. தெருக்களிலும் விடுதியிலும் மக்கள் நடந்து சென்ற விதத்திலும் ஓர் இறுக்கம் நிலவியதை என்னால் உணர முடிந்தது. நிதி மற்றும் வர்த்தகத் துறையின் புதிய மந்திரியான ஜம்புமாலி, புதிதாக வரிகளை விதித்திருந்தான். அது குறித்து அவன் அனைத்து வர்த்தகச் சங்கங்களுக்கும் கடைகளுக்கும் தூதுவர்களை அனுப்பி வைத்தான். வேறு வழியின்றி வரிச் சதவீதங்களை அதிகரிக்க வேண்டியிருந்ததன் அவசியத்தை விளக்குவதற்கு வர்த்தகச் சங்கங்களுடன் அவன் ஒரு கூட்டுச் சந்திப்புக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து, அதில் கலந்து கொண்டு பேசினான். அரசாங்கத்தைப் பொறுத்துக் கொள்ளுமாறு எல்லோரும் தாழ்மையோடு கேட்டுக் கொள்ளப்பட்டனர். வருணனுக்குக் கொடுக்க வேண்டிய அனைத்தும் கொடுக்கப்பட்டவுடன், வரிகள் விலக்கிக் கொள்ளப்படும் என்று அவர்களுக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டது. ஆனால் யாரும் அவனை நம்பவில்லை.

விரைவில், ஜம்புமாலி, ஒட்டுமொத்த இலங்கையிலும் மிகவும் வெறுக்கப்பட்ட நபராக ஆனான். சாலை வரி மும்மடங்கு அதிகரித்தது. விவசாயிகளும் வரிக்கு உட்படுத்தப்பட்டனர். படை வீரர்களின் சம்பளம் பாதியாகக் குறைக்கப்பட்டது. பல அரசாங்க ஊழியர்கள் தங்கள் அலுவலகங்களிலிருந்து உண்மையில் தூக்கி வெளியே எறியப்பட்டனர். விலைவாசி விண்ணைத் தொட்டது. வர்த்தகக் கட்டுப்பாட்டின் முற்றுகை காரணமாக, வர்த்தகம் ஸ்தம்பித்தது. கடற்கொள்ளைக்காரனான வருணனுக்குப் பிரஹஸ்தன் இலங்கையை விற்றுவிட்டிருந்ததாக ஒரு வதந்தி பரவியது. ராவணனின் ஆட்சி, இலங்கைத் தீவின் நீண்ட வரலாற்றில் மிக அதிகமாக வெறுக்கப்பட்ட ஓர் ஆட்சியாக ஆனது. ஆனால் ஒருசிலர் மட்டுமே ராவணனை வெறுத்தனர். அசுர சாம்ராஜ்யத்தை நிலை நிறுத்தியிருந்த, சூதுவாது அறியாத, காதல் ரசனைமிக்க இளைஞர் அவர் என்றும், அவர் ஒரு சூழ்ச்சிகரமான கூட்டத்தின் பிடியில் இருந்தார் என்றும் பெரும்பாலான மக்கள் கருதினர். ஒருவிதப் பதற்ற நிலையிலேயே மூன்று மாதங்கள் உருண்டோடின. நகரின் பலவேறு பகுதிகளில் சிறுசிறு கலவரங்கள் நிகழ்ந்தன. ஒரு கலவரத்தின்போது, வரி வசூலிப்பாளர் ஒருவரை ஒரு கூட்டம் கல்லெறிந்து கொன்றது. அரசாங்கம் அந்நிகழ்விற்கு

விரைவாகவும் கொடூரமாகவும் பதிலளித்தது. தளபதி ருத்ராக்கனின் தனிப்பட்டத் தலைமைத்துவத்தின்கீழ், ஒரு படை, சம்பவம் நடந்த தெருவில் வாழ்ந்த மக்களைச் சித்தரவதை அறைகளுக்கு இழுத்துச் சென்றது. அப்படி இழுத்துச் செல்லப்பட்டவர்களில் பலர், அங்கு நின்று வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த அப்பாவி மக்களே. அன்றிலிருந்து, ருத்ராக்கன் பயத்தின் உருவமாக மாறினான். பெரும் ஆயுதங்களைத் தாங்கிய மெய்க்காப்பாளர்கள் புடைசூழ, அவன் தனது கருப்புக் குதிரையில் வலம் வந்து, ஒரு பயங்கரமான ஆட்சியை நடத்தினான்.

விடுதியின் வியாபாரமும் சரிந்தது. எனக்கு ஏராளமான ஓய்வு நேரம் இருந்தது. நான் ஒருமுறை மாலாவின் வீட்டிற்குச் சென்றேன், ஆனால் வீடு பூட்டப்பட்டிருந்தது. ஒருசில நாட்களுக்கு முன்பு அவள் அங்கிருந்து காணாமல் போயிருந்ததாக அவளது அண்டைவீட்டார் கூறினர். நான் ஒரே நேரத்தில் வருத்தத்தையும் நிம்மதியையும் உணர்ந்தேன். என் வாழ்வின் ஓர் அத்தியாயம் முடிந்து போயிருந்ததாக நான் மகிழ்ச்சியின்றி நினைத்தேன். வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுவதைப்போல, வடகிழக்குப் பருவமழையும் பொய்த்தது. அறுவடை மோசமாக இருந்தது. பக்கத்துக் கிராமங்களிலிருந்த மக்கள், தலைநகரில் இருந்த கோவில்களுக்குப் படையெடுத்தனர். தொன்றுதொட்ட நாட்களிலிருந்தே அக்கோவில்களில் இலவச உணவு வழங்கப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் இப்போது கோவில்களை ஆதரிப்பதற்கு யாரும் இருக்கவில்லை. பல கோவில்கள் மிக மோசமான நிலையில் இருந்தன. மக்களுடைய கஷ்டத்தைத் தவிர்ப்பதற்காக, தலைமைப் பொறியாளனான மயனின் மகளுடனான தனது திருமணம் தள்ளிப் போடப்பட வேண்டியிருந்ததாக அரசன் அறிவித்திருந்தார். ஒருசில ஏளனச் சிரிப்புகளைத் தவிர, பெரும்பாலான பொதுமக்களிடம் இது எந்தவிதமான நேர்மறையான தாக்கத்தையும் உருவாக்கவில்லை. பொதுப் பணத்தில் அவர் கை வைக்காதவரை, திருமணம் என்பது அரசனின் தனிப்பட்ட விவகாரம் என்று அசுரர்களின் எழுதப்படாத விதியொன்று தெரிவித்தது. பல நியதிகளையும் சட்டவிதிகளையும் போலவே, இதுவும் மீறப்படவிருந்தது.

குளிர்காலத்தின் முடிவில், நகரில் நடந்த ஓர் அற்பச் சம்பவம், ஒரு பெரிய கலவரத்தைத் தூண்டியது. அரசாங்கத்தின் பிரதானப் பொறியாளனாக இருந்த மயன் இக்கலவரத்திற்குக் காரணமாக இருந்திருப்பான் என்று யாருமே நினைத்திருக்க மாட்டார்கள். அவன் தனது பொறியியல் திறமைகளை வெளிக்காட்ட நினைத்தபோது, அதிக இறுக்கமும் பதற்றமும் பசியும் தலைவிரித்தாடிய ஒரு சமுதாயத்தின் ஒரு நுண்ணிய நரம்பைத் தொட்டிருந்தான். அன்று காலையில் வானம்

தெளிவாக இருந்தது. தெருவில் ஏற்பட்டிருந்த ஒரு களேபரம் என்னை என் உறக்கத்திலிருந்து எழுப்பியது. நான் என் கட்டிலைவிட்டு எழுந்திருக்கப் போராடியபோது, கூட்டத்தினரின் சத்தம் பொறுத்துக் கொள்ள முடியாததாக இருந்தது. வெளியே ஒரு வினோதமான முனகல் ஒலி கேட்டது. தூக்கமும் எரிச்சலும் கலந்த நிலையில் இருந்த நான், மயன் ஒரு விமானத்தின் உள்ளே இருந்த காட்சியைக் கண்டதுபோது, எனது கொட்டாவி பாதியிலேயே நின்றது. மயன் அந்தப் பறக்கும் இயந்திரத்தில் அமர்ந்து பலவிதமான வித்தைகளைக் காட்டிக் கொண்டிருந்தான். அவன் அதை மகிழ்ச்சியாக அனுபவித்துக் கொண்டிருந்தான். தனது இந்தச் செய்கையால் மக்களிடம் உருவாகியிருந்த கோபத்தை அவன் அறியவில்லை. கீழே நின்று கொண்டிருந்த பெருங்கூட்டம் அவனை ஆச்சரியத்தோடும் பயத்தோடும் பார்த்துக் கத்திக் கொண்டிருந்தது.

அது புஷ்பக விமானம். இந்த மயனின் தாத்தாவின் புகழ்மிக்கத் தயாரிப்பு அது. வேறு யாரோ ஒரு மயனோடு சேர்ந்து இதே போன்ற ஒரு மாதிரியைக் கோடீஸ்வர வணிகனான குபேரன் தயாரித்திருந்ததாகவும், ஆனால் ஒரு குதிரைப் பந்தயத்தில் அந்த மயன் அகால மரணம் அடைந்ததால் குபேரன் அந்தப் பணித்திட்டத்தைக் கிடப்பில் போட வேண்டியதாயிற்று என்றும் நான் கேள்விப்பட்டிருந்தேன். இது போன்ற ஒன்றை உருவாக்கும் முயற்சியில் குபேரன் ஏகப்பட்டப் பணத்தைச் செலவிட்டிருந்தான், ஆனால் அவனால் தனது இயந்திரத்தைப் பறக்க வைக்க முடியவில்லை. நான் மயனை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தபோது, அந்தப் புஷ்பக விமானம் மிக அழகாகத் திரும்பி, அரண்மனையை நோக்கிப் பறந்து மாயமாய் மறைந்தது. பிறகு முணுமுணுப்புகள் தொடங்கின. மக்கள் பலவிதமானவற்றைப் பேசத் தொடங்கினர். அப்போது நான் மாலாவின் காதலனைப் பார்த்தேன். அவன் ஒரு சுவரின்மீது நின்றபடி எதையோ கத்திக் கொண்டிருந்தான். அவன் என்ன கூறிக் கொண்டிருந்தான் என்று நான் கேட்க விரும்பியதால், கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு முன்னே சென்றேன். கூட்டத்தினரின் சத்தம் மெல்ல மெல்லக் குறைந்தது. அவ்வப்போது சில முணுமுணுப்புகளும் கிசுகிசுப்புக் குரல்களும் எழுந்தன. மற்றபடி, ஓர் எதிர்பார்ப்பு எல்லோரிடத்திலும் ஏற்பட்டிருந்தது. அப்போது என் எதிராளி கோபத்தில் வெடித்தான்.

"எனதருமைச் சகோதரர்களே! இது சுத்த மடத்தனம். நமக்கு இது தேவையா? நாம் இங்கு பசியால் வாடிக் கொண்டிருக்கும்போது, உங்கள் அரசன் ஆடம்பரத்தில் திளைக்கிறான் . . ." கூட்டம் கைதட்டித் தனது ஒப்புதலை வெளிப்படுத்தியது. "ராவணன் உங்கள் எதிரி. நமக்கு

இப்படிப்பட்ட ஓர் அரசன் தேவையா?”

“வேண்டாம்! வேண்டாம்! வேண்டாம்!” நானும் அவர்களோடு சேர்ந்து கோஷமிட்டுக் கொண்டிருந்ததை நான் கண்டேன்.

“உங்கள் குழந்தைகள் பட்டினியால் துடித்துக் கொண்டிருக்கும்போது, அரண்மனைக்குள் இருக்கும் கோமாளிகள் விமானத்தில் பறக்க விரும்புகின்றனர்.” அவன் சற்று நிறுத்திவிட்டு, மக்கள் அமைதியடைவதற்காகச் சுற்றுமுற்றும் பார்த்தான். “அவன் கடவுள்களை மறுக்கிறான். கடவுள்கள்கூடப் பறப்பதில்லை. பறக்கும் இயந்திரங்களைத் தயாரிப்பதற்கு அந்த மூட அறிவியலறிஞனுக்கு உங்கள் அரசன் பணத்தை வாரி இறைக்கிறான்.” மக்கள் அரசனுக்கு எதிராக எதிர்ப்புக் குரல்களை எழுப்பினர். “உங்கள் குழந்தைகள் பட்டினியால் சாகும்போது, உங்களது வயல்கள் உங்கள் குடும்பத்தினரின் சடலங்களால் நிரம்பியிருக்கும்போது, உங்களது ஆடு மாடுகள் தாகத்தால் மடிந்து கொண்டிருக்கும்போது, உங்களுடைய அவல நிலையை மேலிருந்து பார்ப்பதற்கு உங்கள் அரசன் விமானத்தில் பறக்கப் போகிறான். அது ஏன் தெரியுமா?”

“ஏன்? ஏன்?” என்று ஓராயிரம் குரல்கள் அவனது கேள்வியை எதிரொலித்தன.

“ஏனெனில், அவன் உங்களைக் கண்டு பயப்படுகிறான். அரண்மனையிலிருந்து இறங்கி வந்து, பொதுமக்களாகிய உங்களோடு கலந்து பழக அவன் பயப்படுகிறான். ராவணன் இது குறித்து வெட்கப்பட வேண்டும்!” என்று கூறியவாறு அவன் தன் நெஞ்சின்மீது ஓங்கிக் குத்தினான்.

“வெட்கம்! வெட்கம்!” என்று கூறி, கூட்டத்தில் இருந்தவர்களும் தங்கள் நெஞ்சுகளில் ஓங்கிக் குத்தினர்.

“வருணனால்தான் உங்கள் வாழ்க்கை அவலமாகியுள்ளதாக அவன் கூறுகிறான். யார் இந்த வருணன்? இலங்கையின் மக்கள்மீது அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது? அவன் ஒரு கடற்கொள்ளைக்காரன். ராவணனைப் போன்ற ஒரு கோழை உங்களுக்கு அரசனாக ஆகியிருப்பது உங்களுடைய துரதிர்ஷ்டம். இல்லை, அது உங்கள் பலவீனம்!”

கூட்டத்தின் பின்வரிசையில் ஏதோ ஒரு சலசலப்பு ஏற்பட்டது. அங்கு என்ன நடந்து கொண்டிருந்தது என்று பார்ப்பதற்காக நான் மேலும் கீழும் குதித்தேன். அது ஒரு சிறு சண்டைதான். அது ஒன்றும் அவ்வளவு முக்கியமானதல்ல. நான் மீண்டும் அந்தப் பேச்சாளனை நோக்கித் திரும்பினேன். “ராவணனை நாம் இங்கு அழைத்தோமா? இங்கு வந்து அவன் நம்மை ஆள வேண்டும் என்று நாம் அவனிடம்

கேட்டுக் கொண்டோமா?”

“இல்லை! இல்லை! இல்லை!” என்று கூட்டம் உறுமியது.

“பழைய அரசன் ஒரு சண்டாளன், ஆனால் ஒரு துணிச்சலான சண்டாளன்.”

“ஆமாம்! ஆமாம்!”

“கடற்கொள்ளையர்களை வைக்க வேண்டிய இடத்தில் அவன் வைத்திருந்தான். அவன் உங்களிடமிருந்து கொள்ளையடித்தான், ஆனால் மனசாட்சியுடன் கொள்ளையடித்தான். அவன் உங்களை வளைத்தான், ஆனால் உங்களை முழுவதுமாக உடைக்கவில்லை. அவன் தனது ஆடம்பரங்களுக்குப் போக, நீங்கள் சாப்பிடுவதற்கும் உங்களுக்குச் சிறிது மிச்சம் வைத்தான். ஆனால் இந்தக் கோழை ராவணன், வஞ்சகத்தின் மூலம் ஒரு சாம்ராஜ்யத்தைப் பெற்றான். இப்போது தனது பேயாட்சியை அவன் உங்கள்மீது கட்டவிழ்த்து விட்டுள்ளான். அவன் ஒரு குழந்தையின் வாயிலுள்ள பாலைக்கூடத் திருடுவான். அவன் உங்கள் ரத்தத்தைக் குடிப்பான். தனது ஆடம்பரமான வாழ்க்கைக்குத் தேவையான சலுகைகளைப் பெறுவதற்குத் தனக்கு இது உதவும் என்று அவன் நினைக்கும் பட்சத்தில், உங்கள் மனைவியரை விற்கக்கூட அவன் தயங்க மாட்டான். அவன் பலவீனமானவன், கொடுமைக்காரன். எல்லாவற்றையும்விட மேலாக, அவன் ஒரு கோழை.”

அவனது பேச்சுத் திறமையைக் கண்டு நான் பிரமித்தேன். தகுந்த ஏற்ற இறக்கங்களுடன் அவன் கச்சிதமாகப் பேசினான். அவனது முகபாவங்களும் கையசைப்புகளும் சக்திமிக்கவையாக இருந்தன. கூட்டம் உணர்ச்சிவசப்பட்டுக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது.

“இலங்கைத் தீவின் குடிமக்களே, என் சக நாட்டோரே, எழுந்திருங்கள்! அசுரர்களாகிய நமக்கு, பலவீனமான, கொடுமைக்கார ஆட்சியாளர்கள் தேவையில்லை. தன்னை இங்கு வலிய நுழைத்துக் கொண்டு நம்மீது ஆட்சி செய்யும் இவனை அகற்றி, அவனுடைய கும்பலைக் கடலுக்குள் தூக்கி எறியலாம். பிறகு நாம் வருணனை எதிர்த்துச் சண்டையிட்டு, அவன் இருக்க வேண்டிய இடம் எது என்பதை அவனுக்குக் காட்டலாம். நாம் அரண்மனைக்கு அணி வகுத்துச் சென்று, இந்த அரக்கனை அவனது அரியணையிலிருந்து தூக்கி எறியலாம். நாம் அணி . . .” அங்கு திடீரென்று ஒரு மௌனம் நிலவியது. அவன் மெதுவாக முன்னோக்கி விழுந்ததை நான் கண்டேன். அவனது நெஞ்சு செந்நிறமாக மாறியது. ஓர் அம்பின் மழுங்கிய முனையை அவன் தனது கையால் பற்றியிருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். தன்

நெஞ்சைத் துளைத்திருந்த அம்பை அவன் தன் கையால் பிடுங்கியிருந்தான். கூட்டம் அக்காட்சியைப் பீதியோடு பார்த்துக் கொண்டிருந்தபோது, குதிரை வீரர்கள் எல்லாப் பக்கங்களில் இருந்தும் வந்து, கூட்டத்தினரை வெட்டிச் சாய்க்கத் துவங்கினர். ஒரு பெரும் குழப்பம் பரவத் துவங்கியது. வீழ்ந்து கிடந்த அந்தப் பேச்சாளனை நோக்கி, ருத்ராக்கன் தனது கருப்புக் குதிரையில் வேகமாகப் பாய்ந்து வந்ததை நான் பார்த்தேன். தன் வழியில் இருந்த அனைவரையும் அக்குதிரை தன் காலால் மிதித்துத் தள்ளியது. அந்த ஆபத்திலிருந்து நான் தப்பியோட விரும்பினேன். ஆனால் அங்கு அரங்கேறிக் கொண்டிருந்த நாடகத்தின் மையத்தை நோக்கி நான் ஈர்க்கப்பட்டேன். நான் என் எதிரியின் முடிவைப் பார்க்க விரும்பி, எனக்கு எதிரே ஓடி வந்து கொண்டிருந்த பலர் என்மீது மோதியதால் ஏற்பட்ட வலியைப் பொறுத்துக் கொண்டு, நான் தொடர்ந்து ஓடினேன். நான் சுவரை நெருங்குவதற்குள், என் பாதங்கள் பல முறை மிதிபட்டிருந்தன. ருத்ராக்கன் கோபத்திலும் வெறுப்பிலும் கொந்தளித்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். ரத்தம் ஒழுகிய நிலையில் விழுந்து கிடந்தவனை அங்கு காணவில்லை. விரக்தியில் ருத்ராக்கன் தனது வாளின் முகப்பைக் கொண்டு தனது படைவீரன் ஒருவனை அடித்தான். காயப்பட்ட அந்த வீரனின் உடலிலிருந்து தெறித்த ரத்தத்தைப் பொருட்படுத்தாமல், ருத்ராக்கன், அந்தக் கலகக்காரனைக் கண்டுபிடிக்குமாறு தனது இன்னொரு வீரனுக்குக் கட்டளையிட்டான். அந்தக் கலகக்காரனால் வெகுதூரம் போயிருக்க முடியாது. நான் ஏமாற்றமடைந்தேன். அந்த அம்பு தனது வேலையைச் செவ்வனே செய்து முடித்திருக்க வேண்டும் என்றும், ஒருசில மணிநேரத்தில் அவன் இறந்துவிட வேண்டும் என்றும் நான் பிரார்த்தித்தேன். ஆனால் அதைக் கடவுள் பார்த்துக் கொள்வார் என்று என்னால் அப்படியே விட்டுவிட முடியாது என்பதை நான் அறிந்தேன். என் வாழ்வில் ஒருபோதும் நான் அதிர்ஷ்டக்காரனாக இருந்ததில்லை. அப்போது, நகரின் பல்வேறு பகுதிகளில் நெருப்பு ஜுவாலைகள் எழுந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். இலங்கை எரிந்து கொண்டிருந்தது. இலங்கை எரியப் போவது இது கடைசி முறையல்ல.



# 18

## கும்பகர்ணன்

ராவணன்

"நகரின் கிழக்குப் பகுதியில் கலவரங்கள் நிகழ்ந்து கொண்டிருப்பதாகவும், சில கயவர்கள், கைவினைக் கலைஞர்களின் கிராமத்தை எரித்து, அதன் தலைமைக் கலைஞனை வெட்டிச் சாய்த்துள்ளதாகவும் அறிக்கைகள் வந்துள்ளன. பல உயிர்கள் பலியாகியுள்ளன. வடக்கு மற்றும் மேற்குப் பகுதிகளில் ஏற்பட்டக் கலவரங்களை ருத்ராக்கன் ஒரு வழியாகக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்துவிட்டான். ஆனால், கலவரங்கள், புறநகர்க் கிராமங்களுக்குப் பரவியுள்ளன. கோவில்கள் கொளுத்தப்பட்டு, தானிக்களஞ்சியங்கள் சூறையாடப்பட்டு, பெண்கள் கற்பழிக்கப்பட்டுள்ளனர். மத்திய மாவட்டத்திலும் நிலைமை கவலைக்கிடமாக உள்ளது. தெற்குக் காடுகளைச் சேர்ந்த பழங்குடியினர் இந்தச் சூறையாடலில் கலந்து கொண்டு, நகரின் தெற்குப் பகுதிகளுக்குத் தீ மூட்டி வருகின்றனர்.

கிளர்ச்சியாளர்கள் தென்பகுதியைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்துள்ளனர். வித்யுத்ஜீவன் தன்னை அரசனாகப்

பிரகடனப்படுத்தியுள்ளான். விவசாய வரியின் ஒரு பெரும் பகுதியை அவன் வசூலிக்கத் துவங்கியுள்ளான். கிளர்ச்சியாளர்களை ஒடுக்குவதற்கும், முடிந்தால் வித்யுத்ஜீவனைச் சிறைபிடிப்பதற்கும் சுமாலியும் மால்யவனும் தெற்கு நோக்கி விரைந்துள்ளனர். தலைமறைவாக உள்ள விலைமாதுவான மாலாவின் இருப்பிடத்தைத் தேடிக் கண்டுபிடிப்பதற்கும் நாங்கள் சில குழுக்களை அனுப்பி வைத்துள்ளோம். மாலாவின் வீட்டிற்கு விஜயம் செய்தவன், நம்மிடமிருந்து முன்பு தப்பிய அதே உளவாளியான பத்ரன்தானா என்பதை உறுதி செய்து கொள்ள நாங்கள் காத்துக் கொண்டிருக்கிறோம். கலவரத்தின்போது பத்ரனைத் தான் பார்த்ததாகவும், ஆனால் திடீரென்று அவன் மறைந்துவிட்டதாகவும் ருத்ராக்கன் உறுதியாகக் கூறுகிறான். வித்யுத்ஜீவன், மாலா, பத்ரன் ஆகிய மூவரும், அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்குக் கூட்டிணைந்து ஒரு சக்திவாய்ந்த சதித் திட்டம் தீட்டுவதுபோலத் தெரிகிறது. கிளர்ச்சியை ஒடுக்குவதற்கு மிகத் தீவிரமான, ஈவு இரக்கமற்ற நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு அரசனின் அனுமதியை நாங்கள் கோருகிறோம். தெற்குக் காடுகளுக்குச் சென்று, கிளர்ச்சியாளர்களிடம் நாம் தொலைத்த எல்லைகளை மீண்டும் நம் வசப்படுத்திக் கொள்வதற்குப் படைகளை அங்கு அனுப்புவதற்கான உத்தரவையும் நாங்கள் நாடுகிறோம்.”

பிரஹஸ்தன் படிப்பதை நிறுத்திவிட்டு என்னை ஏறிட்டுப் பார்த்தான். அது, என்னிடமிருந்து ஓர் உடனடித் தீர்வை அவன் எதிர்பார்த்ததுபோல இருந்தது. நிகழ்ந்து கொண்டிருந்த சம்பவங்கள் குறித்து அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்ததுபோலக் காணப்பட்டான். மாரீசனும் ஜம்புமாலியும் நானும் அமைதியாக உட்கார்ந்திருந்தோம். ஒரு முடிவு எடுக்கப்பட்டாக வேண்டியிருந்தது. கிளர்ச்சியாளர்களை ஒடுக்குவதற்கு அளவுக்கதிகமான படைகளை நான் பயன்படுத்த விரும்பவில்லை. நிலைமை உண்மையிலேயே பிரஹஸ்தன் கூறிய அளவுக்குத் தீவிரமாக இருந்ததா என்றுகூட எனக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. என் சொந்த மக்களே எனக்கு எதிராக ஆயுதங்களை உயர்த்திப் பிடித்திருந்தது என்னைக் காயப்படுத்தியது. ஆட்சி செய்வது அவ்வளவு எளிதான ஒன்றல்ல என்பதையும், ஆட்சி நடத்துவதற்கு அரசாங்கத்திற்கு வரிகள் தேவை என்பதையும் இந்த முட்டாள்கள் ஏன் புரிந்து கொள்வதில்லை? நான் அசுரர்களை மீட்க வந்தவன் இல்லையா? அதற்கு அவர்கள் என்னை அனுமதிக்காதவரை, ராஜ்யத்தை ஒருங்கிணைத்து, அசுரர்களின் தொலைந்து போன பெருமையை எவ்வாறு என்னால் மீட்டெடுக்க முடியும்? எங்கள் அனைவருக்கும் பொதுவான எதிரியோடு சண்டையிடுவதற்குப்

பதிலாக, எனது மக்கள் தங்களுக்கிடையே சண்டையிடுவதில் அதிக நேரத்தைச் செலவிட்டுக் கொண்டிருந்தனர். ஒரு முன்மாதிரியான ஆட்சியை நடத்தி, எல்லோரும் செழிப்பாக இருக்கும்படியான ஒரு சாம்ராஜ்யத்தை நான் விரும்பினேன். தேவர்களை எதிர்த்து வெற்றி கொள்ளக்கூடிய திறன் படைத்த ஓர் அசுர சாம்ராஜ்யத்தை நான் கட்டியெழுப்ப விரும்பினேன். தேவர்களை இந்தியாவிலிருந்து துரத்தவும், எனது மக்களுக்கு மாபெரும் விஷயங்கள் பலவற்றைச் செய்யவும் நான் விரும்பினேன். ஆனால் இந்த நன்றிகெட்டக் கூட்டம் எனக்கு எதிராகக் கிளர்ச்சி செய்கிறது. இம்மக்களின் முட்டாள்தனம் அதிர்ச்சியளிப்பதாக இருந்தது. தற்போது தாங்கள் எதிர்கொண்டிருந்த சிரமங்கள் அனைத்தும் ஓர் ஒளிமயமான எதிர்காலத்திற்காகத்தான் என்பதை அவர்கள் அறியவில்லையா? வருணனை எதிர்ப்பதற்குப் போதிய வலிமையை உருவாக்கிக் கொள்வதற்கு எனக்கு நேரம் தேவை என்பது ஏன் அவர்களுக்குப் புரியவில்லை? அவர்கள் ஏன் பொறுமையைக் கடைபிடித்து, எனக்குக் கூடுதல் நேரத்தைக் கொடுக்கவில்லை?

"கிளர்ச்சியை நமது படைகளைக் கொண்டு ஒடுக்குங்கள். எந்தத் துரோகியையும் விட்டுவைக்காதீர்கள்," என்று என் சொந்த மக்கள்மீது நான் கடுமையான பிரகடனம் ஒன்றைச் செய்தபோது, தூரத்தில் இருந்த கடலை நோக்கிப் பார்த்தேன். "என் மக்களின் மேன்மையான நலனுக்காகவே நான் இவ்வாறு செய்கிறேன்," என்று என் மனத்திற்குள் என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். பிறகு, எனக்குள்ளிருந்து ஒரு குரல் இவ்வாறு கூறியது: "ஆனால், ராவணா, வரலாற்றிலுள்ள ஒவ்வொரு கொடுங்கோலனும் இதைத்தான் தனக்குத் தானே கூறியுள்ளான். நீ ஒரு முட்டாள் என்று எனக்குத் தெரியும், ஆனாலும் நீ இன்னும் என்னை ஆச்சரியப்படுத்துகிறாய். ஆக, மாபெரும் நலனுக்காக, ஒருசில தலைகளைச் சீவுவது, சில குடும்பங்களைப் பிரிப்பது, பெருமளவில் வதைகளை ஆதரிப்பது போன்ற குறைவான நலம் பயக்கும் காரியங்களை நீ செய்வாய், இல்லையா? என்னே உனது துணிச்சல்! நீ ஓர் உண்மையான அரசனாக ஆகியிருக்கிறாய்." எனக்குள் இருந்து என்னைக் கேலி செய்து கொண்டிருந்தவனின் கழுத்தைத் திருக வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

"கிளர்ச்சியை ஒடுக்குவதற்கு எனக்கு முழு அதிகாரம் வேண்டும். அந்த உத்தரவு, உங்கள் கைப்பட எழுதப்பட்டதாகவும், உங்கள் ராஜ முத்திரை பதிக்கப்பட்டதாகவும் இருக்க வேண்டும். நான் எனக்கு இடப்பட்டப் பணியைச் செய்து கொண்டிருக்கும்போது, உயர்மட்டக்

குழுவில் இருந்து எழக்கூடிய எந்தவொரு கேள்விக்கும் நான் விடையளிக்க விரும்பவில்லை. அந்த வேலையை நான் முழுவதுமாகச் செய்து முடித்தப் பிறகு, அது குறித்த ஓர் அறிக்கையை நான் சமர்ப்பிப்பேன்." பிரஹஸ்தன் பேசிய விதமும் நடந்து கொண்ட விதமும் எரிச்சலூட்டுவதாக இருந்தது. இந்த ஒட்டுமொத்த விஷயமும் என்னைக் களைப்படையச் செய்து கொண்டிருந்தது. நான் என் முடிவை மாற்ற மாட்டேன் என்ற நம்பிக்கை உயர்மட்டக் குழுவினருக்கு இருக்கவில்லை என்பதுபோலத் தோன்றியது. அவர்களது நினைப்புச் சரிதான் என்பதை நான் அறிந்திருந்ததால், அது எனக்கு இன்னும் அதிகமாக வெறுப்பூட்டியது.

"உன் விருப்பம்போல நடக்கும்," என்று நான் கூறினேன். இந்தச் சந்திப்புக்கூட்டம் முடிவடைய வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். பிரஹஸ்தன் என்னைத் தாராளமாகக் குனிந்து வணங்கினான். அவனது உதடுகளில் புன்னகை மலர்ந்திருந்தது. ஒவ்வொருவராக அந்த அறையைவிட்டு வெளியேறினர். நான் மிகவும் தனிமையாக உணர்ந்தேன். "ராவணா, நீ தனிமையில் பிறந்தாய். அவ்வாறே நீ தனிமையில் வாழ்ந்து, தனிமையில் மடிவாய்." தூரத்தில் தெரிந்த மங்கலான வானில், புகை மேகம் சுருண்டெழுந்து கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. பல உயிர்கள் அங்கு நெருப்புக்கு இரையாகிக் கொண்டிருக்கக்கூடும். என்னிடம் நியாயமும் அறநெறியும் இருந்ததாக நான் நம்பியிருந்தேன். ஆனால் அவை இப்போது என்னையும் எனது அரண்மனையையும் சுற்றி எரிந்து புகைந்து கொண்டிருந்தன. நான் இன்னும் நெடுந்தூரம் பயணிக்க வேண்டியிருந்தது, இன்னும் ஏராளமான மக்களைச் சித்தரவதை செய்ய வேண்டியிருந்தது, ஏராளமான உயிர்களைச் சீரழிக்க வேண்டியிருந்தது, எனக்கு நானே அதிகமான விஷயங்களை நியாயப்படுத்த வேண்டியிருந்தது, கொடுமையான விஷயங்கள் ஏராளமானவற்றைச் செய்ய வேண்டியிருந்தது. இந்த நேரத்தில் கன்னத்தில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க என்னால் முடியாது. வருணனின் கப்பல்களில் ஏதேனும் ஒன்றில், ஒரு கணக்காளர் பதவி ஏதேனும் காலியாக இருக்கிறதா என்று பார்க்கலாமா?

"ராவணா, நான் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி உன்னுடன் பேச விரும்புகிறேன்."

"அம்மா, என்ன அது?" நான் எரிச்சலாக இருந்தேன். யாரும் என்னைத் தொந்தரவு செய்வதை நான் விரும்பவில்லை. ஆனால் அதே சமயம், பேசுவதற்கு எனக்கு ஓர் ஆள் கிடைத்திருந்தது குறித்து நான் நிம்மதியடைந்தேன்.

“நான் மயனிடம் பேச விரும்புகிறேன்.”

“அப்படியானால் அவனிடம் போய்ப் பேசுங்கள். இதற்கு என்னுடைய அனுமதி எதற்கு?”

“உன் விளையாட்டை நிறுத்து. நீ இப்போது இலங்கையின் அரசன்.”

“அம்மா, அதை நினைவுபடுத்தியதற்கு நன்றி. எனக்கு அது அடிக்கடி மறந்து போகிறது.”

“உனக்கு மண்டோதரியைப் பிடிக்கவில்லையா?”

“அது உண்மையிலேயே முக்கியமா?”

“அது உனக்கு முக்கியமாக இல்லாமல் இருக்கலாம், ஆனால் அவளுக்கு அது மிகவும் முக்கியமாக இருக்கிறது.”

“அப்படியென்றால் அவளைக் கேளுங்கள்.”

“இன்னும் பதினைந்து நாட்களில் உனக்குத் திருமணம் செய்ய நாள் குறிக்கப் போகிறேன். உன் நண்பர்கள் யாருக்கேனும் நீ அழைப்பு விடுக்க விரும்பினால், அதை இப்போதே தொடங்கிவிடு.

“அரசர்களுக்கு நண்பர்கள் உண்டா?”

“எனக்குத் தெரிந்த முதல் அரசன் நீதான். எனவே, அந்தக் கேள்விக்கான பதில் எனக்குத் தெரியாது.”

நான் என் தாயாரைப் பார்த்துவிட்டு, பிறகு வெளியே வெறித்தேன். அவர் வேகமாக அங்கிருந்து நடந்து போனது என் காதுகளில் விழுந்தது. திருமணம் குறித்து நான் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் அல்லது கவலைப்பட வேண்டும், ஆனால் நான் எந்த உணர்ச்சியும் இல்லாமல் இருந்தேன். என் மனம் வெறுமையாக இருந்தது. இருளால் ஆட்கொள்ளப்பட்டிருந்த நகரம் என்னை நூறு கண்களால் வெறித்துப் பார்த்தது. மெல்ல மெல்ல, ஒரு போதாமை உணர்வு என்னுள் எழுந்தது. என்னைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருந்த விஷயங்கள் என் கையை மீறிப் போயிருந்தன. சில நாட்களுக்கு முன்புதான் என் சொந்தத் தலைவிதியையும், மற்றவர்களின் தலைவிதியையும்கூடக் கட்டுப்படுத்துவதைப் பற்றி நான் சிந்தித்திருந்தேன். ஆனால் இப்போது, என்னைச் சுக்குநூறாக நொறுக்க வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்த ஒரு நன்றி கெட்ட தேசத்தின் பிடியில் நான் விடப்பட்டிருந்தேன். உப்புக் கலந்த ஒரு குளிர்ச்சியான தென்றல் கடலிலிருந்து வீசி என்னைக் கடந்து சென்றபோது, அறையில் சுடர்விட்டுக் கொண்டிருந்த விளக்கு அணைந்து போனது. அலைகள் கரையில் வந்து மோதிய சத்தம் என் காதுகளில் விழுந்தது. கடலின் மேலே இருந்த பனிமூட்டம் மெதுவாக விலகியது. தூரத்தில் தெரிந்த விளக்குகள் நடனமாடுவதைப்போலத் தோன்றின. அவை ஒருவேளை

வருணனின் கப்பல்களாக இருக்கக்கூடும். என் மனத்தில் ஒரு திட்டம் உருவானது. நான் செயலில் இறங்க விரும்பினேன். நான் வெறுமனே உட்கார்ந்திருக்க, மற்றவர்கள் என் வாழ்க்கையைத் திட்டமிட்டதை என்னால் அனுமதிக்க முடியவில்லை. நான் சன்னலிலிருந்து என் பார்வையைத் திருப்பி . . .

"யாரது?" நான் என் வாளை அதன் உறையிலிருந்து உருவியிருந்தேன். ஒரு சிறிய உருவம், கதவின் சட்டத்தின் சாம்பல் நிற நிழலுக்கு எதிரே நின்றது. அது விரைவாக இருட்டிற்குள் தாவிய விதம் என்னைத் திடுக்கிட வைத்தது. வெளிச்சத்திற்குப் பழக்கப்படுவதற்கு என் கண்கள் போராடின. நான் மூலைக்குள் குதித்து, என் வாளைச் சுழற்றினேன். என் முதுகு அங்கிருந்த சுவரின்மீது சாய்ந்திருந்ததால், எனக்கு முன்னால் மட்டுமே நான் எச்சரிக்கையாக இருக்க வேண்டியிருந்தது. பின்னாலிருந்து யாரேனும் தாக்கிவிடுவார்களோ என்று நான் பயப்பட வேண்டியிருக்கவில்லை.

"மேன்மை பொருந்தியவரே, நான்தான்."

"யார் நீ?"

அமைதி . . . அவன் ஓர் எதிரியாக இருந்திருந்தால், வாய் திறந்து பேசித் தனது இடத்தைக் காட்டிக் கொடுத்திருக்க மாட்டான். நான் சற்று ஆசுவாசமடைந்தேன். பிறகு உடனடியாக, "நான் உன்னைக் காயப்படுத்த மாட்டேன். வெளிச்சத்திற்கு வா," என்று நான் கூறினேன். அவனுடைய பாதங்கள் அசைந்தது எனக்குக் கேட்டது. கதவின் அருகே அவன் தோன்றக்கூடும் என்று எதிர்பார்த்து, நான் அத்திசையையே பார்த்தேன். அப்போது ஓர் உறுதியான கரம் என் கணுக்கையைப் பிடித்து, "மேன்மை பொருந்தியவரே, நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும் . . ." என்று என் காதுகளில் கிசுகிசுத்தது. நான் அவனது வயிற்றை நோக்கி மிதித்தேன். ஆனால் அவன் என் காலைத் தடுத்தபடி, "நான் உங்கள் எதிரியல்ல, உங்கள் வேலைக்காரன். என்னை நம்புங்கள்," என்று கூறினான்.

நான் மீண்டும் சிறிது ஆசுவாசமடைந்தேன். நான் அவனை என்னிடமிருந்து விலக்கி, அவனது மூக்கில் ஒரு குத்து விட்டிருக்கலாம். அது அவனை நினைவிழக்கச் செய்திருக்கும். ஆனால் அவனது குரலில் இருந்த ஏதோ ஒன்று என்னை அவன்மீது நம்பிக்கை கொள்ள வைத்தது. பிரஹஸ்தன் இங்கு இருந்திருந்தால், ஓர் அரசன், தன்னையும் சேர்த்து யாரையுமே ஒருபோதும் நம்பக்கூடாது என்று கூறியிருந்திருப்பான். என் வாள் என் கையைவிட்டுப் பறந்து சென்று, ஒரு சத்தத்துடன் சுவரில் மோதித் தரையின்மீது விழுந்தது. என் கையிலிருந்த வாளைக் கீழே விழ வைத்திருந்த இந்தத் திடீர்த் தாக்குதலால் நான் ஆச்சரியமடைந்தேன்.

பிரஹஸ்தனின் கருத்து வழக்கம்போலச் சரியாகத்தான் இருந்தது என்று நான் நினைத்தேன். ஆனால் என் மணிக்கட்டைப் பிடித்திருந்த கை இப்போது அங்கிருந்து காணாமல் போயிருந்தது. நான் அங்கு விறைப்பாக நின்றேன். என் உடல் ஒரு சண்டைக்குத் தயாரான நிலையில் நின்றது. மகாபலியின் காடுகளில் நான் கற்றப் பாடங்கள் அனைத்தும் என் நரம்புகளின் வழியாக எனக்குச் சமிக்கைகளை அனுப்பிக் கொண்டிருந்தன. என் வாள் அசைந்து கொண்டிருந்த சத்தம் எனக்குக் கேட்டது. நான் அத்திசையை நோக்கி ஓங்கி உதைத்தேன். ஆனால் சுவரின்மீது வேகமாக இடித்ததில் என் கால் விரல்களிலிருந்து வேதனை அலைகள் பரவின. ஆனால் நான் அந்த வலியை உதாசீனப்படுத்திவிட்டு, உடனடியாக மீண்டும் சண்டைக்குத் தயாராக நின்றேன். அப்போது, தாழ்வாரத்தில் விட்டு விட்டு எரிந்து கொண்டிருந்த ஒரு விளக்கின் வெளிச்சத்தில் நான் அவனைப் பார்த்தேன். அவனது முகம் எனக்குப் பரிச்சயமானதாக இருந்தது. தாக்குவதற்குத் தயாராகப் படமெடுத்து நின்று கொண்டிருந்த ஒரு நாகத்தைப்போல் இருந்தது அது.

"பத்ரா . . ."

"கட்டளையிடுங்கள், அரசே."

"உனக்கு என்ன துணிச்சல்?"

"நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். ஆனால், தயவு செய்து நான் கூறுவதைக் கேளுங்கள்."

என்ன செய்வதென்று யோசித்தபடி நான் அங்கு நின்றேன்.

சிறிது யோசனைக்குப் பிறகு பத்ரன் கூறியதை நான் காதுகொடுத்துக் கேட்டேன். அவன் தனது இருண்ட கடந்தகாலத்தின் ஊடாகவும் சிக்கலான நிகழ்காலத்தின் ஊடாகவும் என்னை அழைத்துச் சென்றபோது நான் அவன் கூறியதைச் செவிமடுத்தேன். அவன் அழுதபோது, நான் அது குறித்து அக்கறையின்றி இருந்தேன். நான் இலங்கையை வெற்றி கொண்ட பிறகு நான் அவனைக் கை கழுவி விட்டுவிட்டதாக அவன் என்மீது குற்றம் சாட்டியபோது, எனக்கு உண்மையிலேயே ஆச்சரியமாக இருந்தது. எனது சொந்தத் திட்டம்தானே வெற்றி பெற்றிருந்தது? இவனுக்கு அதில் என்ன பங்கு இருந்தது? ஆனால் நான் அவன்மீது பரிதாபம் கொண்டேன். எனது மாற்றாந்தாயின் மகனின் ரதத்தின் அடியில் மிதிபட்டு, இரவு நெடுகிலும் ஊளையிட்டுக் கொண்டிருந்த ஒரு நாய்க்குட்டியின்மீது எனக்குச் சிறிதளவு பரிதாபம் ஏற்பட்டதுபோல, இவன்மீதும் எனக்குச் சிறிது பரிதாபம் ஏற்பட்டது. பிரஹஸ்தனை வெறுப்பேற்றுவதற்காக இவனை ஒரு நாய்க்குட்டியைப்போல என்னால் வைத்துக் கொள்ள முடியும். அந்த

எண்ணம் எனக்கு மகிழ்வூட்டியது. நான் புன்னகைத்தேன். நான் இறுதியில் மனமிரங்கியிருந்ததாக அந்த முட்டாள் பத்ரன் நினைத்தான். அவன் என் பாதங்களில் விழுந்து, அவற்றை முத்தமிடத் தொடங்கியபோது நான் அதிர்ச்சியடைந்தேன். ஒருவன் ஏன் தன்னை இவ்வளவு தூரம் சிறுமைப்படுத்திக் கொள்கிறான்? நான் என் பாதங்களைப் பின்னால் நகர்த்திக் கொள்ள முயற்சித்தேன், ஆனால் அவன் தன்னை இவ்வாறு இழிவுபடுத்திக் கொண்டது எனக்கு இன்பத்தைக் கொடுத்தது. நான் உள்ளூர மகிழ்ந்தேன். ஆனால் திடீரென்று, அந்தச் சிறிதளவு இன்பத்தை எனது குற்றவுணர்வு விரட்டியடித்தது. நான் அவனை உலுக்கினேன். எனக்கு அவன்மீது மட்டுமன்றி, என்மீதும் வெறுப்பு ஏற்பட்டது.

“நீ எனது தனிப்பட்ட வேலைக்காரன்தானே தவிர, ஓர் அரச உதவியாளனோ அல்லது வேறு பகட்டான பதவிக்கு உரியவனோ அல்ல. நீ ஒரு சாதாரணமான வேலைக்காரன், அவ்வளவுதான். நான் கூறுவதை நீ செய்தாக வேண்டும்.”

“மேன்மை பொருந்தியவரே, நான் ஒரு நாயைப்போல உங்களுக்குச் சேவை செய்வேன்.”

எனக்குள் ஏதோ ஒன்று உடைந்து நொறுங்கியது. அவன் என் எண்ணங்களைப் படித்தானா? எனக்குள் பொங்கிக் கொண்டிருந்த வெறுப்பை அவனால் உணர்ந்திருக்க முடியுமா? பத்ரா, என் நாய்க்குட்டியே! என் சொந்த மதிப்பீட்டின்படியே நான் மிகச் சிறியவனாக உணர்ந்தேன். இல்லை, நான் அவனை ஒரு நண்பனைப்போல நடத்துவேன், எனக்குச் சமமாக நடத்துவேன். முற்றிலும் சமமாக அல்ல, ஆனால் கிட்டத்தட்டச் சமமாக நடத்துவேன். ஓர் அடிமைக்குத் தனது எஜமானனுக்கு இணையான உரிமைகளா? நான் வயிறு குலுங்கச் சிரித்தபடியே இறந்துவிடுவேன். “ஆனால், ராவணா, அவனது முகத்தைப் பார். அவனது மெலிந்த கரங்களையும் பானை வயிற்றையும் பார். அவன் உனக்குச் சமமானவனா? பத்ரன் இவ்வுலகின் கசடு. உன்னால் ஆளப்பட வேண்டிய ஒரு கடைநிலை ஜந்து அவன்,” என்று என் உட்குரல் கூறியது. இல்லை, எனது பரிதாபமான அசுர இனத்தின் பிரதிநிதி அவன். பொதுமக்களுக்கும் எனக்கும் இடையேயான பாலம் அவன். என் மக்களின் கண்ணோட்டங்களை அவன் என்னிடம் கொண்டு வருவான். எல்லோருக்கும் நியாயத்தையும் செழிப்பையும் கொடுக்கும் விதத்தில் நான் ஆட்சி செய்வேன்.

“நீ இப்போது போகலாம்.” அவன் மிகவும் பணிவாகக் குனிந்து வணங்கிவிட்டு, அந்த அறையிலிருந்து மெதுவாக வெளியேறினான்.

நடவடிக்கைதான் இப்போது எனக்குத் தேவையாக இருந்தது. நான் பாதியிலேயே விட்டுவிட்டு வந்திருந்த திட்டங்களை நான் மீண்டும் முதலிலிருந்து பரிசீலித்தேன். அதன் விபரங்கள் ஒவ்வொன்றையும் நான் அசை போட்டேன். இடையில் ஏதோ ஒரு கணத்தில் நான் தூங்கி விழுந்தேன். மறுநாள் காலையில் குன்றுகளுக்குப் பின்னால் சூரியன் உதயமானபோது நான் கண்விழித்தேன். ஆனால் இன்னொரு சலிப்பூட்டும் நாளுக்குள் அடியெடுத்து வைக்க விருப்பமின்றி, என் படுக்கையில் நான் புரண்டேன். எத்தனைப் பேர் இறந்தார்கள், எத்தனைத் தீ வைப்புகள் நிகழ்ந்தன போன்றவற்றைப் பற்றிய அறிக்கையை, தங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற நினைப்பைக் கொண்ட நிர்வாகிகள் என்னிடம் எடுத்து வருவர். நான் எந்த மக்களைப் பாதுகாப்பதாக உறுதியெடுத்திருந்தேனோ, அவர்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டும் என் மரணத்திற்காகப் பிரார்த்தித்துக் கொண்டும் இருந்ததை நான் பார்க்க வேண்டியிருக்கும். எரிச்சலூட்டும் நிர்வாகப் பாடங்களில் இன்னும் அதிகமானவற்றைப் பிரஹஸ்தனைப் போன்றவர்களிடமிருந்து நான் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கும். அந்தக் கிறுக்கு அறிவியலறிஞனின் மகளான மண்டோதரியை மணமுடிக்குமாறு என் தாயார் என்னை நச்சரிப்பார். இப்படிப்பட்ட ஒரு சலிப்பான நாளை நான் மீண்டும் எதிர்கொள்ள விரும்பவில்லை.

ஒரே ஒரு வீரன் அரண்மனையின் வாசற்கதவருகே குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தான். நான் அவன்மீது பொறாமை கொண்டேன். அவன் வெறுமனே நண்பகல் வரை அப்படி நடந்துவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்று, மதிய உணவருந்திவிட்டு, ஒரு குட்டித் தூக்கம் போட்டுவிட்டு அல்லது தன் மனைவியோடு கொஞ்சிக் குலாவிவிட்டு, மாலையில் மூக்கு முட்டக் குடித்துவிட்டு, பிறகு ஒரு மரக்கட்டையைப்போலத் தூங்கப் போய்விடுவான். அவனது வாழ்க்கை எளிமையானதாகவும் இனிமையானதாகவும் இருந்தது. ஒருவேளை அது அவ்வளவு எளிமையானதாக இல்லாமல் இருக்கக்கூடும். அவனுடைய மனைவி அவனுக்கு விசுவாசமானவளாக இல்லாமல் இருக்கலாம், அவனுடைய மகன் ஒரு குடிகாரனாக இருக்கலாம், அவனுக்கு ஒரு நச்சரிப்பான தாயார் இருக்கலாம், அவனுடைய நோயாளித் தந்தையை அவன் பராமரிக்க வேண்டியிருக்கலாம். ஆனால் எனக்குள் ஏற்பட்டப் பொறாமை உணர்வை நான் விரும்பினேன். அந்தக் காவலாளியைப் பற்றி முதலில் நான் கற்பனை செய்திருந்த விதம் எனக்கு அதிகமாகப் பிடித்திருந்தது. அவனைக் கூப்பிட்டு, ஓர் இயலாத காரியத்தை நான் அவனுக்குக் கொடுக்க விரும்பினேன். அது வெறுமனே அவனுடைய

வாழ்க்கையைக் கடினமாக ஆக்குவதற்குத்தான். அடுத்தவர்களுடைய வாழ்க்கையைச் சீரழிப்பதற்கான அதிகாரத்தை அரசபதவி ஒருவனுக்குக் கொடுக்கிறது. அதன் ஒரே இனிமையான அம்சம் அதுதான்.

"உன் திருமணம் நாளைக்கு நடைபெறவிருக்கிறது." அந்தக் காவலாளியின் வாழ்க்கையைச் சீரழிப்பது குறித்து நான் மகிழ்ச்சியாகக் கனவு கண்டு கொண்டிருந்தபோது, அக்குரல் என்னைத் திடுக்கிடச் செய்தது. அங்கு நின்று கொண்டிருந்தது என் தாயார் என்பதை உணர்ந்து கொள்ள எனக்கு ஒருசில நொடிகள் ஆயின.

"அம்மா, நீங்கள் இன்றே அதைச் செய்திருக்கலாமே?"

"உன் பரிகாசத்தை நிறுத்து. நீ இதுபோல முன்பு ஒருபோதும் என்னிடம் பேசியது கிடையாது. அரச பதவி உன் தலைக்கு ஏறிவிட்டது. நான் . . ."

". . . எங்களை வளர்ப்பதற்குப் போராடினீர்கள், எங்கள் பசியைப் போக்குவதற்காக நீங்கள் பட்டினி கிடந்தீர்கள். ம்ம்ம் . . . ஒரு மகன் இப்படிக் கூறக்கூடாது . . . எங்களுக்கு உடையணிவித்துப் பார்ப்பதற்காக நீங்கள் நல்ல தரமான ஆடைகளை இழந்தீர்கள் என்று கூறினால் சரியா? . . ."

"போதும். அரசரே, ஒரு விஷயத்தை நீங்கள் மறந்து கொண்டிருக்கிறீர்கள். ஓர் ஏழைத் தாய் . . ."

". . . என்னைத் தன் கருவில் ஒன்பது மாதங்கள் சுமந்து, வலியின் ஊடாக என்னைப் பெற்று . . ." அவர் தேம்பி அழுதபடி அங்கு நின்றார். அவரிடம் நான் அவ்வாறு பேசியிருந்தது குறித்து நான் திகைத்தேன். அதுவும் எந்தத் தூண்டுதலும் இல்லாமலேயே நான் வரம்பு மீறிப் போயிருந்தேன். நான் அவரது முகத்தை என் கைகளில் தாங்கிப் பிடித்தேன். அவர் என்னைப் பார்த்தார். தனது அன்பை மறுத்துரைப்பதற்கு, தகதகவென எரிந்து கொண்டிருந்த தனது கருநிறக் கண்களால் அவர் எனக்குச் சவால்விட்டுக் கொண்டிருந்தார். "அம்மா, திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யுங்கள். ராஜாங்கத்தின் சுமை, பாவப்பட்ட உங்கள் மகனால் சுமக்க முடியாத அளவுக்கு இப்போது அதிகக் கனமாகிக் கொண்டிருக்கிறது. நான் உங்களிடம் தகாத முறையில் பேசியபோது நான் நானாகவே இல்லை."

"நீ இப்போதுதான் துவக்கியிருக்கிறாய். இனி இதைவிட மோசமாக ஆக மாட்டாய் என்று நான் நம்புகிறேன். நாளை மாலையில் உன் திருமணம் நடைபெறும். நான் போய் வருகிறேன்," என்று கூறிவிட்டு அவர் அங்கிருந்து உறுதியோடு நடந்து சென்றார். கழிவிரக்கமும் அவமானமும் அலைகளெனத் திரண்டு வந்து என்னைத் தாக்குவதற்கு முன்பாக நான் மாரீசனுக்கு அழைப்பு விடுத்தேன். தெருவில்

சண்டையிடுவதற்கு அவனுக்கு அதிக வயதாகியிருந்தது. எனவே, அரண்மனையில் இருந்த ஒரே மூத்த அதிகாரி அவன்தான். அதோடு, அவனைத்தான் நான் மிகவும் நேசித்தேன், மிக அதிகமாக மதித்தேன். தனக்கு எல்லாம் தெரியும் என்ற மமதையில் அலைந்து கொண்டிருந்த பிரஹஸ்தனைப் போலன்றி, இவன் ஒருபோதும் தனது அபிப்பிராயங்களை என்மீது திணித்ததில்லை.

"அரசரே, நீங்கள் என்னை அழைத்தீர்களா?" உட்காரும்படி நான் அவனுக்குச் சைகை காட்டினேன். அவன் நேராக எனக்கு முன்னால் உட்கார்ந்தான்.

"மாமா, நீ என்னை ராவணன் என்றே கூப்பிடு. குறைந்தபட்சம், தனியாக இருக்கும்போதாவது அப்படிக் கூப்பிடு."

"சரி. கும்பகர்ணன் திரும்பி வந்துவிட்டான்."

"நாம் அவனைக் கூப்பிடலாம்."

"ராவணா, அதற்கு முன்பாக நான் உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைக் கூற விரும்புகிறேன். உன் சகோதரன் நீ நினைப்பதைப் போன்றவன் இல்லை."

"கும்பகர்ணனிடம் என்ன பிரச்சனை? அல்லது, சமயப்பற்றுக் கொண்டவனான அந்த விபீஷணனைப் பற்றி நீங்கள் பேசிக் கொண்டிருக்கிறீர்களா?" நான் அவ்வாறு கேட்டபோது, விபீஷணன் குறித்து என்னுள் ஒரு பாச உணர்வு பொங்கியது.

"விபீஷணனைப் பற்றி நான் வேறொரு நாள் உன்னிடம் பேசுகிறேன். பேய்ப்பிள்ளையான கும்பகர்ணன்தான் நாம் உடனடியாகக் கையாள வேண்டிய பிரச்சனை." கும்பகர்ணனைப் பற்றி மாரீசன் குறிப்பிட்ட விதம் எனக்குச் சிரிப்பை வரவழைத்தது. "ராவணா, இது சிரிப்பதற்கான விஷயமல்ல. அவன் மோசமான பழக்கங்களை உருவாக்கிக் கொண்டுள்ளான். பெண்கள் விஷயத்தில் அவன் பலவீனமானவன் என்பது நாம் எல்லோரும் அறிந்ததுதான். அவன் அவற்றை ரகசியமாக வைத்துக் கொள்ளும்வரை, நாம் அவனது அந்த பலவீனத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அவன் மதுவகங்களுக்குச் சென்று, நாட்டுச் சரக்குகளை ஒரு யானையைப்போலக் குடிக்கிறான், ஆனால் அவற்றுக்குரிய கட்டணங்களை அவன் ஒருபோதும் செலுத்துவதில்லை."

"மாமா, அவன் சற்றுக் குதூகலமாக இருக்கிறான், அவ்வளவுதான். அவன் திருப்பிச் செலுத்த வேண்டிய கடன்களை அடைப்பதற்கு யாரையேனும் அனுப்புங்கள். அந்தத் தொகையை எனது தனிப்பட்டக் கணக்கில் சேர்த்துக் கொள்ளுங்கள். நான் என்ன கூறுகிறேன் என்றால், இலங்கையின்மீது தாக்குதல் நடத்துவதற்கு முன்பாக நாம் வசூலித்தப்

பணத்தில் மிச்சமுள்ளதிலிருந்து அதை எடுத்துக் கொள்ளுங்கள். என் சகோதரனின் குடிப் பழக்கத்திற்கு, நாட்டு மக்களின் வரிப் பணம் உதவி செய்வதை நான் விரும்பவில்லை.”

“ராவணா, அது மட்டுமல்ல. அவன் போதைப் பொருட்களையும் உட்கொள்ளத் துவங்கியுள்ளான். கஞ்சாவை அவனுக்குத் தருவித்துத் தரும் சில நண்பர்கள் அவனுக்கு இருக்கின்றனர். அவன் சோம பானத்திற்கும் அடிமையாகியுள்ளான். கும்பகர்ணன் இவற்றால் மிகவும் ஈர்க்கப்பட்டுள்ளதாக நான் நினைக்கிறேன். அவன் திருட்டுத்தனமாக என்ன செய்து கொண்டிருந்தான் என்று வேவு பார்த்து வருவதற்காக, எனது சிறந்த அதிகாரிகளில் இருவரை நான் அனுப்பி வைத்தேன். கடந்த ஒருசில நாட்களாக நான் சந்தேகித்து வந்திருந்த விஷயத்தை அவர்கள் இருவரும் உறுதி செய்தனர். ராவணா, பெரும்பாலான சமயம், அந்த மூடன் சுயநினைவின்றி விழுந்து கிடக்கிறான்.”

“விரைவில் நண்பர்களைச் சம்பாதித்துக் கொள்வதில் அவன் திறமைசாலி,” என்று நான் கூறினேன். கும்பகர்ணன் எப்போதுமே ஒரு தோழமையான ஆன்மாவாக இருந்து வந்திருந்தான். ஆனால் ஒரு பெரிய நாய்க்குட்டியைப்போல அவனைக் கொஞ்சி மகிழ முடியாது.

“அவர்களை நண்பர்கள் என்று அழைப்பது சரியா என்று எனக்குத் தெரியவில்லை. அந்தப் பேய்ப்பிள்ளையை அவர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அந்த முட்டாளுக்கு அது தெரியவில்லை.”

“மாமா, நான் என்ன செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்?”

“அவனுக்கு அதிகாரபூர்வமான ஒரு பதவியைக் கொடு. அவன் செய்வதற்கு உருப்படியாக எதையேனும் அவனுக்குக் கொடு.”

“ஆனால் நான் என் உறவினர்களுக்குத் தனிச் சலுகை காட்டுவதாகப் பழித்துக் கூறப்படுவதை நான் விரும்பவில்லை.”

“ராவணா, அர்த்தமில்லாத பேச்சைப் பேசாதே. அதிகாரபூர்வமான பதவிகளை வகிப்பவர்களில் பெரும்பாலானவர்கள், பிரஹஸ்தனையும் என்னையும்போல உனது உறவினர்கள்தான்.”

“அது வேறு விஷயம். உங்களுக்கு நீண்டகால நிர்வாக அனுபவம் இருக்கிறது. நீங்கள் ஒருமுறை ஒரு ராஜாங்கத்தை ஆண்டிருக்கிறீர்கள். கும்பகர்ணனும் விபீஷணனும் வெறும் குழந்தைகள்.”

“அவர்கள் குழந்தைகளாகவே இருந்துவிட வேண்டும் என்று நீ விரும்புகிறாயா? அவர்கள் வளர வேண்டும் என்று நீ விரும்பவில்லையா? ராவணா, நீ இந்தப் பதவிகளை உனது குழந்தைகளுக்காகப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறாயா? உனது

சகோதரர்கள் உனது சாம்ராஜ்யத்திற்கு ஒரு சவாலாக ஆகிவிடுவார்கள் என்று நீ பயப்படுகிறாயா?"

"மாமா, இப்போது நீ உன் அர்த்தமற்றப் பேச்சை நிறுத்து. நான் அப்படிப்பட்டவன் அல்ல என்று உனக்குத் தெரியும். என்றென்றும் இந்த ஆட்சி பீடத்தில் இருக்க வேண்டும் என்று நான் விரும்பவில்லை. எனக்கும் கொள்கைகள் இருக்கின்றன . . ."

"ராவணா, நீ அமர்ந்திருக்கும் இந்த அரியணை, அதில் அமர்ந்திருப்பவனின் வசதிக்கு ஏற்பக் கொள்கைகளைத் திரிப்பதற்கு ஒரு வழியைக் கொடுக்கும் திறனுடையது."

"அதிகாரத்தினால் நான் கெட்டுப் போய்க் கொண்டிருப்பதாக ஏன் எல்லோரும் என்மீது பழி சுமத்துகின்றனர்? எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? ஆள்வதற்கு என்னிடம் ஒரு நகரம் இருப்பதாலும், அதிலுள்ள பாதிப் பேர் நான் இறக்க வேண்டும் என்று விரும்புவதாலும், இழிவான அசுரக் கொடுங்கோலன் நானல்ல என்று நான் நிரூபிக்க வேண்டும் என்று அர்த்தமில்லை. ஆனால் நான் அப்படிப்பட்ட ஒரு கொடுங்கோலனாக ஆக வேண்டும் என்றுதான் அவர்கள் விரும்புகிறார்கள்," என்று நான் மாரீசனிடம் கூறினேன். பிறகு, "ஆனால், என் சகோதரர்களைப் போன்ற முட்டாள்களுடன் நான் ஏன் இந்த அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்?" என்று என் மனத்திற்குள் என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

"நீ அதிகாரத்தால் கெட்டுப் போகவில்லை என்பதில் நீ உறுதியாக இருந்தால், இனிமேலும் அதனால் நீ கெட்டுப் போக மாட்டாய் என்பதில் நீ உறுதியாக இருந்தால் . . ."

"மாமா, நீ பிரஹஸ்தனைப்போலப் பேசுவதை நிறுத்து. ஒரு திட்டம் குறித்துக் கலந்து பேசத்தான் நான் உன்னை அழைத்தேன். அத்திட்டம் குறித்து உன் அபிப்பிராயம் என்ன என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். பத்ரா . . ." பத்ரன் அங்கு வேகமாகத் தோன்றிய விதம் என்னை ஆச்சரியப்படுத்தியது. "நாங்கள் பேசிக் கொண்டிருந்ததை வெளியே நின்று அவன் கவனித்துக் கொண்டிருந்தானா? அவனை நான் எவ்வளவு தூரம் நம்பலாம்?" என்று என்னை நானே கேட்டுக் கொண்டு, "ம்ம்ம் . . . இளவரசன் . . . கும்பகர்ணனை அழைத்து வா," என்று அவனுக்கு உத்தரவிட்டேன்.

"இப்படிப்பட்ட ஜந்துக்களை நீ ஏன் உன் தனிப்பட்டச் சேவகர்களாக வைத்துக் கொள்கிறாய்?"

பத்ரன் வெளியே ஓடியபோது, மாரீசனின் இந்த ஏளனத் தொனியைக் கேட்டு நான் சிரித்தேன். "அதற்கான காரணங்கள் ஓர் அரசனுக்கு இருக்கும்."

“ஓ, அவன் உன் தனிப்பட்ட உளவாளியா?”

“ஏன் இருக்கக்கூடாது? அவன் சாதாரணமானவன். எந்தக் கூட்டத்துடனும் அவனால் ஒன்றுகலக்க முடியும். மற்றவர்களின் சித்தரவதையில் இன்பம் காணும் அளவுக்கு அவன் ஈவு இரக்கமற்றவன். அவன் அளவுக்கதிகமாகத் துன்புற்றுள்ளதுபோலத் தெரிகிறது. இழப்பதற்கு அவனிடம் ஏதுமில்லை.”

மாரீசன் திடீரென்று, “ராவணா, இவை அனைத்தையும் துவக்கியிருந்த நம்பிக்கைத் துரோகி அவன்தான், இல்லையா?” என்று கேட்டான். ஆனால் நான் பதில் கூறுவதற்கு முன்பாக, கும்பகர்ணன் உள்ளே நுழைந்தான். அவன் நன்றாகக் குடித்திருந்ததுபோலத் தோன்றினான்.

“கும்பகர்ணா, நீ ஏன் கைவிடப்பட்டவன்போல இருக்கிறாய்? உனக்கு என்ன பிரச்சனை?”

“நீ ஏன் அதைக் கேட்கிறாய்? நான் அரசனுமல்ல, யாரையும் மகிழ்விக்க வேண்டிய அவசியமும் எனக்கில்லை.”

“இங்கே உட்கார்ந்து கொண்டு, பணக்கார, கொடுமைக்கார அரசனால் கைவிடப்பட்டப் பரிதாபமான இளைய சகோதரனின் கதாபாத்திரத்தை ஏற்று நீ நடிக்க விரும்பினால், உன் விருப்பம்போல அதைச் செய். மாமா, நாம் இருவரும் வெளியே சென்று, தோட்டத்தில் காலாற நடந்துவிட்டு வரலாம். இந்த உணர்ச்சிகரமான நடிகன் இங்கேயே இருக்கட்டும்.”

“இல்லையில்லை, ராவணா, நான் வேடிக்கைக்காக அப்படிக் கூறினேன். நம்முடைய இந்த மாமன் எனது லீலாவினோதங்களைப் பற்றிய பல பாடல்களை உன்னிடம் பாடியிருப்பார். எனவே நான் சிறிது விளையாட விரும்பினேன், அவ்வளவுதான். சகோதரனே, உன் திட்டம் என்ன?”

நான் என் திட்டத்தை அவர்களிடம் கூறினேன். அங்கு ஒட்டுமொத்த மௌனம் நிலவியது.

“ஆனால் நாளை உன் திருமணம் நடைபெற உள்ளது. இது மிகவும் ஆபத்தான திட்டம்.” ஆழமான கவலை ரேகைகள் மாரீசனின் முகத்தில் படர்ந்ததை நான் கவனித்தேன். இத்திட்டம் புத்திசாலித்தனமானதுதானா என்ற சந்தேகம் முதன்முறையாக என்னுள் எழுந்தது.

“எனக்கு இத்திட்டம் மிகவும் பிடித்திருக்கிறது. இது மிக அற்புதமானது,” என்று கூறி, கும்பகர்ணன் அந்த அறையைச் சுற்றித் துள்ளல் நடை போட்டான்.

“உனக்கு எத்தனைப் பேர் வேண்டும்?”

“மாமா, நாம் நால்வர் மட்டும்தான் — நீ, கும்பகர்ணன், நான், பத்ரன் . . . நன்றாக நீந்தக்கூடிய ஒரு பன்னிரண்டு பேரையும் நம்மோடு சேர்த்துக் கொள்ளலாம்.”

மாரீசன் தன் தலையை உலுக்கியபடியே, “இது மிகவும் ஆபத்தானது. பத்ரனை நம்மால் எவ்வளவு தூரம் நம்ப முடியும்?” என்று கேட்டான்.

“நாம் நம்பித்தான் ஆக வேண்டும்.”

“ஆனால் நீ ஏன் இதைச் செய்ய விரும்புகிறாய்? நீ எங்களிடம் எதையேனும் நிரூபித்துக் காட்ட விரும்புகிறாயா? நீ துணிச்சல்காரன் என்று எங்களுக்குத் தெரியும், ஆனால் இறந்து போன ஒரு துணிச்சல்காரனைவிட உயிரோடு உள்ள ஒரு முட்டாள் எனது அசுர அரசனாக இருப்பதை நான் விரும்புவேன்,” என்று மாரீசன் கூறினான்.

கும்பகர்ணன் இதைக் கேட்டுவிட்டு, “தான் முழுக்க முழுக்க ஒரு வீரன் என்பதை அவன் நம்மிடம் நிரூபிக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறான். நாம் இந்த சாம்ராஜ்யத்தை வெற்றி கொண்டபோது, வாழ்க்கை இவ்வளவு சலிப்பூட்டுவதாக இருக்கும் என்று நான் ஒருபோதும் நினைக்கவே இல்லை. ஏதேனும் ஒரு சண்டை வராதா என்று நான் ஏங்கிக் கொண்டிருக்கிறேன். நாம் இப்போது நேரத்தை விரயம் செய்யாமல் இருப்பது நல்லது. நாளைய தினம் இதற்குப் பொருத்தமானதுதான்,” என்று கூறிவிட்டு, அங்கிருந்து போகத் துடித்தான்.

“நீ இங்கிருந்து புறப்பட்டுக் கொண்டிருக்கிறாயா?” என்று மாரீசன் அவனிடம் கேட்டான்.

“ஏன்? நான் மீண்டும் குடித்துவிட்டு, எல்லோரிடமும் இது பற்றிக் கூறிவிடுவேன் என்று நீ பயப்படுகிறாயா?”

“நீங்கள் இரண்டு பேரும் நிறுத்துகிறீர்களா? இன்றிரவு முழுவதும் நாம் இது பற்றிச் சிந்திக்கலாம்,” என்று நான் கூறினேன்.

கும்பகர்ணனுக்கு முன்பாக மாரீசன் அங்கிருந்து புறப்பட்டான். வெறுப்புக் கலந்த ஒரு லேசான கவலை என்னைப் பற்றியது. கும்பகர்ணன் என்னுடைய அன்புக்குரிய நண்பன். ஒரு சகோதரனைவிட மிக மிக மேலானவன். ஒவ்வொரு முறை நான் அவனோடு பேசியபோதும், ஏற்கனவே நொறுங்கிவிடும் நிலையிலிருந்த அவனது சுயமதிப்பை நான் காயப்படுத்திக் கொண்டிருந்தேனோ என்று நான் சிந்திக்க வேண்டியிருந்தது. “கும்பகர்ணா, என்னை மன்னித்துவிடு . . .” ஆனால் நான் அவனிடம் எதையும் கூறுவதற்கு முன்பாக அவன் அங்கிருந்து சென்றுவிட்டிருந்தான்.



# 19

## துணிகரத் திட்டம்

ராவணன்

அன்று மாலையில் ருத்ராக்கன் என்னைச் சந்தித்து, மூவாயிரத்திற்கும் அதிகமான கிளர்ச்சியாளர்களைத் தான் கைது செய்திருந்ததாகவும், தெற்கிலிருந்த பழங்குடியின கிராமங்களில் பெரும்பாலானவற்றை அழிக்கத் தான் உத்தரவிட்டிருந்ததாகவும், நாட்டின் கிழக்குப் பகுதியில் நிலைமை தொடர்ந்து பதற்றமாக இருந்ததாகவும் தெரிவித்தான்.

“எத்தனைப் பேர் கொல்லப்பட்டனர்?” என்று நான் அவனிடம் கேட்டேன். “ஒருசிலர் மட்டுமே,” என்று அவன் கூற வேண்டும் என்று நான் விரும்பினேன்.

“நமது வீரர்களில் சுமார் எண்ணூறு பேர்.”

“இதை நீ வெறுமனே ஒரு சட்ட ஒழுங்குப் பிரச்சனை என்று கூறுகிறாயா? அங்கு ஒரு கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. ஜம்புமாலியை நீக்குவது பிரச்சனையைத் தீர்க்குமா?”

“தீர்க்கக்கூடும். ஆனால், அது பற்றிப் பேசுவதற்கு நான் ஓர்

அரசியல்வாதி அல்ல, அரசே.” அந்தக் கடைசி வார்த்தையைக் கூறுவதற்கு அவன் போராடியதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. இலங்கையின் அரசனாக இருப்பதற்கு என்னைவிடத் தான் அதிகத் தகுதி வாய்ந்தவன் என்று அவன் தன்னைக் கருதினான் என்று நான் உறுதியாக நம்பினேன். அவனது நினைப்பு சரியானதாக இருக்கக்கூடும். “உண்மையில், நீ என்னுடைய கேள்வியைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். எத்தனைப் பேர் கொல்லப்பட்டார்கள் என்று நான் கேட்டபோது, நமது வீரர்களின் எண்ணிக்கையைப் பற்றி மட்டும் நான் கேட்கவில்லை.”

அங்கு அமைதி நிலவியது.

“பத்தாயிரத்திற்கும் அதிகமானோர் கொல்லப்பட்டிருப்பதாக எனக்குத் தகவல் வந்துள்ளது,” என்று நான் அவனிடம் கூறினேன்.

“இருக்கலாம்,” என்று அவன் பதிலளித்தான்.

நான் கோபத்தில் வெடித்தேன். “அதற்கு என்ன அர்த்தம்? நீதான் தலைமைப் படைத் தளபதி. ஆனால் ‘இருக்கலாம்’ என்று ஒரு பரிதாபகரமான ஒரு பதில் உன்னிடமிருந்து வருகிறது. பெண்களையும் குழந்தைகளையும் படுகொலை செய்ய யார் உனக்கு உத்தரவிட்டார்கள்? வயதான ஆண்களையும் பெண்களையும் கொல்வதற்கு யார் உனக்கு அதிகாரம் கொடுத்தார்கள்?”

“அந்தக் கழிசடை பத்ரன் உங்களுக்கு இந்த அபிப்பிராயங்களைக் கொடுத்தானா? அரசே!”

“என்னிடம் இப்படிப் பேசுவதற்கு உனக்கு என்ன துணிச்சல்? என்னுடைய சேவகர்களை என் விருப்பப்படி நான் தேர்ந்தெடுக்கிறேன். நான் தெரிந்து கொள்ள விரும்புவதெல்லாம், பொதுமக்களை வெட்டிச் சாய்ப்பதற்கு யார் உனக்குக் கட்டளைகளைக் கொடுத்தது என்பதைத்தான்.”

மீண்டும் அங்கு அமைதி நிலவியது.

“எனக்கு பதில் சொல்.”

அவன் எழுந்து நின்று, “உயர்மட்டக் குழு அதற்கு அதிகாரமளித்தது என்று நான் நம்புகிறேன்,” என்று கூறினான்.

“உயர்மட்டக் குழுவா? எந்த உயர்மட்டக் குழு? அசுரப் பஞ்சாயத்து எதுவும் இங்கு கிடையாது. நான் ஒரு பஞ்சாயத்துத் தலைவனும் இல்லை. நான்தான் இங்கு அரசன். இங்கு உத்தரவுகள் கொடுப்பது நான்தான். எந்தவொரு தோல்விக்கும் நான்தான் பொறுப்பு. இப்போது நீ உன்னுடைய வாளைக் கொண்டு ஓரிரு மாவட்டங்களைச் சுத்தமாகத் துடைத்தெறிந்துவிட்டு வந்திருக்கிறாய். ஆனால் என் மக்களின் கோபத்தை நான் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. யார் இந்தப்

படுகொலைக்கு உத்தரவிட்டது? பதில் சொல்.”

“அரசே, நான் என் பதவியிலிருந்து விலக வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், நான் தாராளமாக அதைச் செய்கிறேன்.” அவனது உதடுகளில் ஒரு சிறு புன்னகை அரும்பியது.

அது என்னைத் தூக்கி வாரிப் போட்டது. அவன் பதவி விலக வேண்டும் என்று நான் விரும்பவில்லை. அவன் அருமையாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் அவனது ஈவிரக்கமின்மைதான் எனக்குக் கவலையளித்துக் கொண்டிருந்தது. விஷயங்களை லேசாக எடுத்துக் கொண்டு, கிளர்ச்சியை ஒரு நாகரீகமான விதத்தில் அவன் ஒடுக்க வேண்டும் என்றுதான் நான் விரும்பினேன். அவனை உடனடியாகக் கைது செய்யும்படி என்னால் உத்தரவிட்டிருக்க முடியும், ஆனால் வீரர்களிடையே ஒரு கிளர்ச்சியைத் தூண்டுவதற்கான ஆபத்து அதில் இருந்தது. நான் என்னை அமைதிப்படுத்திக் கொள்ளும் ஒரு முயற்சியாக என் கண்களை மூடினேன். பிறகு, “ருத்ராக்கன், அப்பாவி மக்கள் கொல்லப்பட்டதற்கு நான் காரணமாகியுள்ளதை நினைக்கும்போது எனக்கு வேதனையாக இருக்கிறது. யுத்தத்தைக் கண்டு நான் பயப்படவில்லை, ஆனால் இது மிகவும் கொடூரமானது, அரக்கத்தனமானது. நாம் தொடர்ந்து இவ்வாறு செயல்படுவது தேவையா?” என்று நான் கேட்டேன்.

அவனது முகத்தில் ஆச்சரியம் படர்ந்தது. இந்த யுத்தத்திலும் நான் தோல்வியைத் தழுவிக் கொண்டிருந்தேன். நான் துணிச்சலாக இருந்ததுபோல நடந்து கொள்ள முயற்சித்தேன், ஆனால் அவன் அதைக் கண்டுகொண்டான் என்று நான் உறுதியாக நம்பினேன்.

“அரசே, கிளர்ச்சியை ஒடுக்குவதற்கு எல்லாவற்றையும் செய்யும்படி, பிரதம மந்திரியான பிரஹஸ்தனுக்கு நீங்கள் எழுத்துப்பூர்வமான கட்டளைகளைக் கொடுத்திருந்ததாக நான் நம்ப வைக்கப்பட்டேன். கைக்குழந்தைகளைக் கொல்வது எனக்கு மகிழ்ச்சியளிக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?”

நான் சன்னலுக்கு வெளியே பார்த்தேன். கடலில் வருணனின் கப்பல்கள் மேலும் கீழுமாக ஆடிக் கொண்டிருந்தன. பாய்மரங்கள் விரிக்கப்பட்டிருந்தன. கப்பல்களில் நிகழ்ந்த கொண்டாட்டங்களின் சத்தத்தைக் கடற்காற்று அரண்மனைக்கு அவ்வப்போது சுமந்து வந்தது. நான் என் கண்களை மூடினேன். எதைப் பற்றி யோசிப்பதற்கும் எனக்குத் தெம்பு இருக்கவில்லை. ருத்ராக்கனுடனான இந்த வார்த்தை மோதல் அவசியமற்றது என்று நான் சிந்திக்கத் துவங்கினேன். நான் என்னை வெளிப்படுத்திக் கொண்டிருந்தேனா? எனது சந்தேகங்களையும் எனது தீர்மானமின்மையையும் எனது

பலவீனங்களையும் நான் வெளிப்படுத்திக் கொண்டிருந்தேனா? நான் எது குறித்து பயப்பட்டேன்? நான் எனது மாற்றாந்தாயின் மகனிடமிருந்து ஒரு சாம்ராஜ்யத்தைத் திருடி, பிறகு, எனது குடிமக்களைக் கூட்டங்கூட்டமாகப் படுகொலை செய்வதற்கு எனது வீரர்களைப் பயன்படுத்திக் கொண்டதாக எனது ஆட்கள் நினைத்ததாக நான் பயந்தேனா? ஒருவேளை, நாளைக்கு எல்லாமே மாறக்கூடும். ஒரு கையசைப்பின் மூலம், அங்கிருந்து போகும்படி ருத்ராக்கனுக்கு நான் உத்தரவிட்டேன். எனது சகோதரன் குபேரன் இதே அரியணையில் அமர்ந்திருந்தபோது எப்படித் தன் கையால் அகங்காரத்தோடு சைகை காட்டினானோ, இப்போது நானும் அதையே செய்தேன். "ராவணா, நீ மிக வேகமாகக் கற்றுக் கொள்கிறாய்," என்று என் உட்குரல் கூறியது. நான் ஆணவம் பிடித்தவனாக ஆகிக் கொண்டிருந்தேன் என்பதை நான் அறிந்தேன், ஆனால் அது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.

நகரில் நடந்து கொண்டிருந்த அனைத்து விஷயங்கள் குறித்தும் நான்கு மணிநேரத்திற்கு ஒருமுறை பத்ரன் எனக்குத் தகவல் கொடுத்தான். அரண்மனைத் தோட்டத்தில் நான் சற்று ஓய்வாக நடந்தேன். அப்போது, ஒரு பெரிய ஆலமரத்தின் கீழே மண்டோதரி உட்கார்ந்திருந்ததை நான் கண்டேன். நான் தர்மசங்கடமாக உணர்ந்தேன். அவள் என்னை ஒருசில நொடிகள் வெறித்துப் பார்த்தாள். நான் பேச முயற்சித்துத் தட்டுத்தடுமாறினேன், இருமினேன், பிறகு இந்த வழியாக வந்ததற்காக என்னை நானே சபித்துக் கொண்டேன். அவள் என்னுடன் ஓர் உரையாடலைத் துவக்காமல் இருந்ததற்காக நான் என் மனத்திற்குள் அவளுக்கு நன்றி கூறிவிட்டு, அவளைத் தாண்டி வேகமாக நடந்தேன். என் சகோதரி என்னைப் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன், ஆனால் அவளது புன்னகையில் தெரிந்த ஒப்புதலை உதாசீனப்படுத்திவிட்டுத் தொடர்ந்து நடந்தேன்.

நகரில் நிலவிய சூழ்நிலை மாலைப் பொழுதிற்குள் ஓரளவுக்கு அமைதியடைந்திருந்தது குறித்து நான் நிம்மதியடைந்தேன். பிறகு என் தாயாரோடும் சகோதரியோடும் உணவருந்துவதற்காக அமர்ந்தேன். தன்னை இன்றியமையாதவனாக ஆக்கிக் கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்த பத்ரன், சமையற்காரர்களுக்கு உத்தரவுகளைப் பிறப்பித்தபடி, அரச குடும்பத்தினருக்கான சமையலறைக்குள் போவதும் வருவதுமாக மும்முரமாக இருந்தான்.

என் தாயார் முதலில் பேசினார். அவர் பத்ரனைப் பார்த்து, "நீ இப்போது இங்கிருந்து போகலாம். நான் இவர்களிடம் தனியாகப் பேச வேண்டியுள்ளது," என்று கூறிவிட்டு, என்னிடம் திரும்பி, "ராவணா, தீயவனைப் போன்ற தோற்றத்தைக் கொண்ட இவன் பெயர் என்ன?"

என்று கடுமையாகக் கேட்டார்.

என் தாயின் குரலில் இருந்த கடுமையை உதாசீனப்படுத்திவிட்டு, "பத்ரா, வெளியே காத்திரு," என்று நான் கூறினேன். தயக்கத்தோடு பத்ரன் அங்கிருந்து வெளியேறினான், ஆனால் அவனது காது, அந்த அறையின் கதவில் இருந்த சாவித் துவாரத்தில் இருக்கும் என்று நான் உறுதியாக நம்பினேன்.

"அளவுக்கதிகமான மக்கள் கொல்லப்பட்டதற்கு நீ பிரஹஸ்தனைக் குறைகூறியதாக நான் கேள்விப்பட்டேன்." தன் தலையை நிமிர்த்தாமல் தன் தட்டைப் பார்த்தபடியே அவர் இதை என்னிடம் கூறியபோது நான் அதிர்ச்சியடைந்தேன்.

"இல்லை, அது . . ."

"ராவணா, நீ இன்னும் ஓர் இளைஞன்தான். ஆட்சி செய்வதில் இவர்கள் அனைவரும் அனுபவம் வாய்ந்தவர்கள். நீ அவர்களுடைய அறிவுரைப்படி நடப்பது நல்லது. இந்த ஒரு குட்டித் தீவிற்கு நீ அரசனாக ஆகிவிட்டதாலும், அசுரர்களின் ஒரே மீட்பன் நீதான் என்பதாலும் இறுமாப்புக் கொள்ளாதே. நீ கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் ஏராளமானவை உள்ளன. திறமையான ஆலோசகர்கள் உன்னைச் சுற்றி இருப்பது குறித்து நீ நன்றியுடன் இருக்க வேண்டும்."

"அம்மா, நீங்கள் என்னை ஒரு குழந்தையைப்போல நடத்துகிறீர்கள். தங்களது சொந்த ராஜ்யங்களையும் கௌரவத்தையும் செல்வத்தையும் தாங்கள் சுவீகரித்த எல்லாவற்றையும் தேவர்களிடம் தொலைத்த அந்த முட்டாள்களிடமிருந்து எனக்கு எந்த ஆலோசனையும் தேவையில்லை. கைக்குட்டை அளவுக்குச் சிறிய ராஜ்யங்களை ஆண்டதன் மூலமும், தேவர்கள் எப்போது சூறையாடுவார்களோ என்ற நிரந்தரக் கவலையுடன் வாழ்ந்ததன் மூலமும் அவர்களுக்குக் கிடைத்த அனுபவம், அசுரர்களுக்கோ அல்லது எல்லாம் தெரியும் என்று அலைந்து கொண்டிருக்கும் கோமாளிகளுக்கோ எந்த விதத்திலும் உதவியிருக்கவில்லை. இவ்விஷயம் என்னைவிட உங்களுக்கு நன்றாகவே தெரியும்."

"நீ ஏன் என்னிடம் இப்படிப் பேசிக் கொண்டிருக்கிறாய்?"

"இப்போது மீண்டும் உங்கள் சோகக் கதையை விவரிக்கத் தொடங்கிவிடாதீர்கள். அது எனக்கு மனப்பாடமாகத் தெரியும். அம்மா, நான் உங்களை நேசிக்கிறேன், உங்களை மதிக்கிறேன். ஆனால் நான் எப்போதும் உங்கள் கைக்குழந்தையாகவே இருப்பேன் என்று அதற்கு அர்த்தமல்ல. ஆட்சியை என் பொறுப்பில் விட்டுவிடுங்கள்."

நான் இவ்வாறு பேசியதைக் கேட்டு என் சகோதரி திகைத்தாள். சாப்பிடுவதை நிறுத்திவிட்டு, கண்ணீர் நிரம்பிய கண்களுடன் அவள்

என்னைப் பார்த்தாள். என் தாயார் எழுந்து நின்றார். "போதும்! உன்னிடம் பேசுவதில் இனி அர்த்தமில்லை. அதிகார போதை உன் தலைக்கு ஏறிவிட்டது."

கோபம் என்னைப் பற்றிக் கொண்டது. மேசையில் விரிக்கப்பட்டிருந்த விரிப்பை ஒரே இழுப்பில் நான் இழுத்தேன். மேசைமீது இருந்த பாத்திரங்களும் தட்டுகளும் மற்ற அனைத்தும் தரையில் விழுந்தன. எல்லா இடங்களிலும் சிதறிக் கிடந்த உணவைச் சுத்தப்படுத்துவதற்காக வேலைக்காரர்கள் எல்லாத் திசைகளிலிருந்தும் விரைந்து வந்தனர். என் தாயார் கோபமாக அந்த அறையைவிட்டு வெளியேறினார். கூடவே, தயக்கத்தோடு நின்று கொண்டிருந்த என் சகோதரியையும் தன்னுடன் இழுத்துச் சென்றார். நான் சிந்தனையின்றி என் அறையை நோக்கி நடந்தேன். கோபம் மெல்ல மெல்ல என்னுள்ளிருந்து வெளியேறிக் கொண்டிருந்தது. என் கைகளைப் பட்டுத் திரைச்சீலைகளில் துடைத்தேன். அவற்றில் நான் ஏற்படுத்திக் கொண்டிருந்த கறைகளை நான் கண்டுகொள்ளவில்லை. பிறகு என் காலணிகளைக் கழற்றித் தரைமீது வீசிவிட்டு, எனது பெரிய படுக்கையின்மீது என் கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு படுத்தேன். நான் இந்த மக்களுக்கு என்ன தவறிழைத்தேன்? நான் இப்போதுதான் என் கனவு வாழ்க்கையை வாழத் துவங்கியிருந்தேன், ஆனால் அதற்குள் அது புளித்துப் போயிருந்தது. ஏன் எல்லோரும் என்னை அகங்காரக்காரனாகவும் கொடுங்கோலனாகவும் அடக்கியாள்பவனாகவும் பார்க்கிறார்கள்? அப்போது ஒரு விளக்கை ஏந்திக் கொண்டு ஒரு சேவகன் அங்கு வந்தான். நான் என் கையை அசைத்து அவனை அங்கிருந்து விரட்டினேன். இருட்டு இதமாகவும் சௌகரியமாகவும் இருந்தது. வரவர ஏன் இருட்டு எனக்குப் பிடித்துப் போனது என்பதை விளக்குவதற்குப் பிரஹஸ்தனிடம் ஏதேனும் ஒரு கோட்பாடு இருக்கக்கூடும். அது ஓர் இருண்ட ஆன்மாவின் பிரதிபலிப்பாக இருக்குமோ?

இந்த முட்டாள்தனத்திற்கு இன்று நான் ஒரு முடிவு கட்டியாக வேண்டியிருந்தது. எனது மந்திரிகள் என் முதுகிற்குப் பின்னால் பேசிக் கொண்டிருக்க, மக்கள் என்னைப் பார்த்து நடுங்கிக் கொண்டிருக்க, என் தாயார் என்னை நச்சரித்துக் கொண்டிருக்க, தான்தான் ஒழுக்கநெறியில் சிறந்தவன் என்ற பிரஹஸ்தனின் போக்கு எனக்கு எரிச்சலூட்டிக் கொண்டிருக்க, தொடர்ந்து என்னால் இப்படி வாழ முடியாது. நான் விரும்பியது ஒரு யுத்தத்தைத்தான். ராவணன் ஒரு கோழையல்ல. நான் என் படுக்கையிலிருந்து குதித்து, பத்ரனை உரத்தக் குரலில் அழைத்தேன். அவன் விரைவாகத் தோன்றி மீண்டும் என்னை

ஆச்சரியப்படுத்தினான். அவன் வெளியே காத்துக் கொண்டிருந்தானா? அவன் என்னைப் பணிந்து வணங்கினான். அவன் என்னைக் கேலி செய்ததுபோல நான் உணர்ந்தேன், ஆனால் அதைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிட முடிவு செய்தேன். அவன் எனக்கு முகஸ்துதி செய்ய முயற்சித்திருக்கக்கூடும். அசுரர்களாகிய நாங்கள் மிகத் தாழ்வாகக் குனிவதற்கு எப்போதுமே தயாராக இருந்தோம். ஆனால், அவன் என் முன்னால் குனிந்து வணங்கியிருக்காவிட்டால் அது என்னை எப்படி உணரச் செய்திருக்கும்? அவன் என்னை அவமதித்திருந்ததாக நான் கருதியிருக்க மாட்டேனா?

“பத்ரா . . . எத்தனை வீரர்களை உன்னால் ஏற்பாடு செய்ய முடியும்? அதாவது, ஒரு மணிநேரத்திற்குள் எத்தனைப் பேரை உன்னால் தயார் செய்ய முடியும்?”

“அரசே, நன்றாக நீந்தக்கூடியவர்கள் உங்களுக்கு வேண்டும், இல்லையா?”

“நன்றாக நீந்தக்கூடியவர்கள் எனக்குத் தேவை என்று உனக்கு எப்படித் தெரியும்?”

“தற்காப்புக் கலைகளில் திறம்படைத்த வீரர்கள் உங்களுக்கு வேண்டும். கொந்தளிப்பான கடலில் நீந்திச் சென்று, ஒரே நேரத்தில் பல கப்பலைகளை முற்றுகையிடுவதற்கான திறன் படைத்தவர்கள் உங்களுக்கு வேண்டும். எனக்கு அப்படிப்பட்டவர்களைத் தெரியும் என்று நினைக்கிறேன். அரசே, சுமார் இருபது பேரை என்னால் ஏற்பாடு செய்ய முடியும்.”

நான் ஒரு கணம் அமைதியானேன். அவன் என் மனத்தைப் படித்த விதம் நம்ப முடியாததாக இருந்தது. எப்படிப்பட்ட ஒரு ஜந்து இவன்? ஒரு மந்திரவாதியா? எனக்கு என்ன வேண்டும் என்று எனக்கே உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. இத்திட்டம் சுத்த முட்டாள்தனமானது. ஒரு கை நிறைய வீரர்களைக் கொண்டு பல கப்பல்களை முற்றுகையிட நினைப்பது மடத்தனத்தின் உச்சகட்டம். அதிர்ஷ்ட தேவதையும் இப்போது என்னுடன் ஊடல் கொண்டிருந்ததுபோலத் தெரிகிறது. ஓர் அரசன் இவ்வளவு பொறுப்பின்றி இருக்கக்கூடாது. உலகிலேயே பயங்கரமான கடற்கொள்ளைக்காரனைச் சிறைபிடிப்பதற்கு, அரைகுறைப் பயிற்சி பெற்றப் பல்வேறு வகையான நபர்களைக் கொண்ட ஒரு சிறு குழுவினருடன் நடுராத்திரியில் தனது அரசன் கடலுக்குப் புறப்பட்டுச் சென்றிருந்தான் என்பதைக் கேள்விப்படும்போது பிரஹஸ்தனின் முகம் எப்படி இருக்கும் என்று நான் கற்பனை செய்தேன். அந்த எண்ணம் என் உதடுகளில் ஒரு புன்னகையை வரவழைத்தது. பிரஹஸ்தனுக்கு

வெறுப்பூட்டுவதற்கேனும் இந்தத் தற்கொலை முயற்சி உதவக்கூடும் என்று நான் நினைத்தேன்.

பத்ரன் மீண்டும் தாழ்வாகக் குனிந்து வணங்கிவிட்டு, அந்த அறையிலிருந்து அமைதியாக வெளியேறினான். கடலில் மிதந்து கொண்டிருந்த கடற்கொள்ளையர்களின் கப்பல்களை நான் பார்த்தேன். கொண்டாட்டங்கள் முடிந்து, கப்பல்களில் இருந்த விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தன. எல்லோரும் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தனர். எந்தக் கப்பலில் வருணன் இருந்தான் என்பது எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. எதிர்பாராத தாக்குதல்தான் எங்களுக்கு இருந்த மிகப் பெரிய அனுகூலம். எனது அரச பதவி அதைச் சார்ந்திருந்தது. அந்த முயற்சி மிகவும் ஆபத்தானது என்பதையும், கடற்கொள்ளையர்கள் என்னைச் சிறைபிடித்தால், சூறையாடும் அந்தக் கொள்ளைக்கூட்டத்தினருக்கு இலங்கையின் கதவுகள் அகலமாகத் திறந்துவிடப்பட்டிருக்கும் என்பதையும் நான் அறிந்திருந்தேன். கூடவே எனக்கு பயமாகவும் இருந்தது. முற்றிலும் முடக்கிப் போடுகின்ற ஒரு பயம் அது. கடற்கொள்ளையர்களின் தலைவனின் கையில் சிக்கிய துரதிர்ஷ்டசாலிகள் எதிர்கொள்ள நேர்ந்த சித்தரவதைகள் உலகப் பிரசித்தி பெற்றவை. ஈவு இரக்கமற்ற அவனது கொடிய மனம், தேவர்களின் கடவுள்களின் நிலைக்கு அவனை உயர்த்தியிருந்தது. என் மனத்தில் எழுந்த பயம், எனது நாட்டு மக்கள் குறித்தும் எனது உறவினர்கள் குறித்தும் நான் கொண்டிருந்த அக்கறைதான் என்று எனக்கு நானே காரணம் கற்பித்துக் கொண்டேன்.

அப்போது என்னுள்ளிருந்து அந்த அசிங்கமான குரல் கேட்டது. “ராவணா, உன்னால் உன்னைக்கூட ஏமாற்றிக் கொள்ள முடியும். நீ அவ்வளவு உன்னதமானவன், அவ்வளவு துணிச்சல்காரன்! ஒரு சிறிய கிராமத்தின் மாபெரும் பேரரசன் தனது குடிமக்களின் தலைவிதியைப் பற்றிக் கவலைப்படுகிறான். உன்னைப் போன்ற உன்னதமான மனம் படைத்த அரசர்கள் எத்தனைப் பேர் உள்ளனர்?” இந்தக் குரலை எப்போது நான் அமைதிப்படுத்துவது? நான் எனது சொந்தப் பாதுகாப்புக் குறித்து அதிகமாக பயந்திருந்ததை நான் அறிந்தேன். எனது விலாவாரியான கற்பனை, நான் எதிர்கொள்ளக்கூடிய சித்தரவதைகள் குறித்தக் காட்சிகளை என் கண்முன்னே தீட்டியது. வருணனை நினைத்தால் எனக்கு பயமாக இருக்கிறது. என்னால் அந்த வலியைப் பொறுத்துக் கொள்ள முடியுமா? அதைவிட அதிகமாக, இலங்கையின் மண் தெருக்களில் நிர்வாணமாக நான் இழுத்துச் செல்லப்பட்டால், அந்த அவமானத்தை என்னால் தாங்கிக் கொள்ள முடியுமா? ஒரு சாதாரண விவசாயியின் வாழ்க்கையை வாழ்வதில் ஏன்

என்னால் திருப்தியடைய முடியவில்லை?

நள்ளிரவில், கடலில் கட்டுமரங்களைச் செலுத்தி, வருணனின் கப்பல்களை நோக்கி நாங்கள் மெதுவாகத் துடுப்புப் போடுவோம். அவனது கப்பல்களின் மேற்தளங்கள் நீருக்கு மேலே குறைந்தபட்சம் இருபதடி உயரத்தில் இருந்தன. சத்தம் எதுவும் ஏற்படுத்தாமல் நாங்கள் எப்படி அவற்றின்மீது ஏறுவோம்? நாங்கள் முதலில் எந்தக் கப்பலைத் தாக்க வேண்டும்? வருணனைச் சிறைபிடிப்பது அல்லது கொல்வதுதான் இங்கு முக்கியம். ஆறு கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நின்று கொண்டிருந்தன. வருணனின் மிதக்கும் அரண்மனை ஒரு குறிப்பிட்ட தூரத்திலிருந்து தெரிந்தது. ஆனால், ஒரு சாதாரண மீனவனாக இருந்த வருணன், கடற்கொள்ளையர்களின் தலைவனாக ஆனது தற்செயலான நிகழ்வு அல்ல. அசுரப் படையினரிடமிருந்து இப்படிப்பட்ட ஒரு தாக்குதலை எதிர்பார்த்து, அங்கிருந்த சிறிய கப்பல்கள் ஏதேனும் ஒன்றில் அவன் தயாராகக் காத்துக் கொண்டிருப்பதற்கான அனைத்துச் சாத்தியக்கூறுகளும் இருந்தன. எதிரி எங்கு இருந்தான் என்று தெரியாமல், நாங்கள் ஒரு முட்டாள்தனமான சண்டையைத் துவக்கவிருந்தோம். போதுமான தகவல்களும் படை பலமும் இல்லாமல், இப்படிப்பட்ட ஒரு பொறுப்பற்றக் காரியத்தில் நாங்கள் இறங்கியிருந்தோம் என்பதை அறிந்தால் பிரஹஸ்தனுக்கு மாரடைப்பே வந்துவிடும். நான் இந்த முயற்சியைக் கைவிட்டுவிட்டுத் திரும்பிச் செல்ல வேண்டுமா? என் கால்கள் நடுங்கின. என் கைகள் நடுங்கியதைக் கண்டு நான் பீதியடைந்தேன்.

எனக்குப் பின்னாலிருந்து வந்த ஓர் இருமல் சத்தம் என்னைத் திடுக்கிட வைத்தது. பின்னால் திரும்பிப் பார்த்தபோது, பத்ரனின் அருவருப்பான முகம் தெரிந்தது. எனக்குத் தெரியாமலேயே இவனால் என்னைக் கொல்ல முடியும். நடந்து வரும் சத்தம்கூடக் கேட்காத அளவுக்கு இவன் ஒரு பூனையின் பாதங்களைக் கொண்டிருந்தானா?

"அரசே, நாங்கள் அனைவரும் உங்களுக்காகச் சேவை செய்யக் காத்திருக்கிறோம்." அதாவது, இந்த ஐந்துவையும் சேர்த்து, என் உத்தரவின் பேரில் எனக்காக இறப்பதற்கு இருபது பேர் தயாராக இருந்தனர். ஆனால் நான் ஒரு படையை ஒரு யுத்தத்திற்கு வழிநடத்திச் சென்றபோது எனக்கு ஏற்பட்ட உணர்வு ஏன் இப்போது எனக்கு ஏற்படவில்லை? எனது முதல் யுத்தம் உற்சாகமூட்டுவதாக இருந்தது. ஆனால் அந்த உற்சாகத்தை இந்த இருபது பேரிடமும் என்னால் காண முடிந்தது. வெப்பமான ஈரக் காற்றில், அவர்களுடைய வியர்வையின் வாசனை, தோட்டத்திலிருந்த மல்லிகை மலர்களின் வாசனையோடு ஒன்றுகலந்தது. நிலவு, மேகங்களுக்குப் பின்னால் ஒளிந்திருந்தது. என்

கைகளில் ரத்தத்தை என்னால் உணர முடிந்தது, கூடவே பயத்தையும் நான் உணர்ந்தேன். எனக்கு ஏற்பட்டிருந்த பயத்தை, துணிச்சல்மிக்கவர்களாகத் தோன்றிய இவர்கள் யாரும் உணர்ந்துவிடக்கூடாது என்று, ஊர்பேர் தெரியாத, எனக்கு நம்பிக்கையில்லாத ஏதோ ஒரு கடவுளிடம் நான் பிரார்த்தித்தேன்.

நிமிர்ந்த தலையுடனும் நேரான தோள்களுடனும் நான் என் அறையைவிட்டு மெதுவாக வெளியே நடந்தேன். நான் தன்னம்பிக்கையோடு நடக்கவும், பழங்கால வீரர்களைப்போலத் தோற்றமளிக்கவும் முயற்சித்தேன். என் அளவுக்கு இந்த வீரர்களும் பயந்து போயிருந்தனரா? நான் இந்தத் தாக்குதலில் இருந்து உயிரோடு வெளியே வந்தால், ஆயிரம் வருடங்களுக்குப் பிறகு, என்னைப் பற்றியும் கதைகள் உலா வரும். எனக்குள் இருந்த குரல் மீண்டும் தன் சொற்பொழிவைத் தொடங்கியது. “ராவணா, இந்தப் பிரபஞ்சத்தில் நீ ஒரு சிறு துகள் மட்டுமே. இன்று நீ இறந்தாலும் சரி அல்லது வெற்றி பெற்றாலும் சரி, அது ஒரு பொருட்டே அல்ல. உனது மரணம் ஒரு புழுவின் மரணத்தைவிடக் குறைவான மதிப்புக் கொண்டதுதான். ஒரு புழு ஒரு பறவைக்கு உணவாகிறது அல்லது இந்த மண்ணுக்கு உரமாகிறது. ஆனால் நீ இறந்தால், உன் உடல் எரிக்கப்படும், அந்தப் புகை வளி மண்டலத்தில் சென்று கலக்கும். இயற்கையைப் பொறுத்தவரை, உனது போராட்டங்களும் துன்பங்களும் வெற்றிகளும் பிறப்பும் மரணமும் அற்ப நிகழ்வுகளே. அவை, காலச் சக்கரங்களின் கீழே நொறுக்கப்படுகின்ற சிறு கற்களே. நீ வாழ்ந்தால், தவிர்க்க முடியாத உனது மரணத்தை நீ ஒருநாள் தள்ளிப் போடுகிறாய். நீ இறந்து விட்டாலும் இப்பிரபஞ்சம் தொடர்ந்து இப்படியேதான் இருக்கும். ராவணா, நீ எப்பேற்பட்ட முட்டாள் தெரியுமா . . .”

பாறைகளின்மீது மோதிய அலைகள் எனது சோர்வூட்டும் உட்குரலின் தாலாட்டிலிருந்து என்னை எழுப்பின. பத்ரனும், சற்று திடகாத்திரமாக இருந்த இன்னொருவனும் மூன்று கட்டுமரங்களைக் கடலுக்குள் தள்ளினர். ஒவ்வொருவராக இடுப்பளவு நீரில் நடந்து சென்று அந்தக் கட்டுமரங்களில் ஏறிக் கொண்டனர். நான் அந்தக் கடலையும் எங்களது நிச்சயமான மரணத்தையும் வெறித்துப் பார்த்தபடி அங்கேயே அசையாமல் நின்றேன். வருணனின் கப்பல்கள் கடற்கரைக்கு அருகே நங்கூரம் பாய்ச்சப்பட்டு நிறுத்தப்பட்டிருந்தன, ஆனால் இப்போது, தொடுவானத்தின் விளிம்பை அவை தொட்டுக் கொண்டிருந்ததுபோல எனக்குத் தோன்றியது. நான் அலைகளுக்குள் கால் வைத்தேன். உடனடியாக நான் அவற்றில் மூழ்கினேன். அந்த அலைகள் என்னை உருட்டிச் சென்று மீண்டும் கரையில் தள்ளின. நான்

திட்டிக் கொண்டும் சபித்துக் கொண்டும் எழுந்து நின்று, கட்டுமரங்களை நோக்கி மீண்டும் நடக்கத் துவங்கினேன். எனது வீரர்களின் முகத்தில் தெரிந்த சிரிப்பைக் கண்டுகொள்ளாமல், முதல் கட்டுமரத்திற்குள் நான் குதித்தேன். உடனடியாக, அதிலிருந்தவர்கள் அந்தக் கட்டுமரத்தை வருணனின் கப்பல்களை நோக்கிச் செலுத்தத் துவங்கினர். மற்ற இரண்டு கட்டுமரங்களும் அதைப் பின்தொடர்ந்தன. தூரத்தில் இடி முழக்கம் கேட்டது. அந்த இருண்ட தொடுவானத்தில், வருணனின் கப்பலுக்குப் பின்னால் ஒரு நீண்ட மின்னல் பளிச்சிட்டது. கடல் முரட்டுத்தனமாக ஆகியது. மற்ற இரண்டு கட்டுமரங்களும் சிறிது பின்தங்கியிருந்தன, ஆனால் அவர்கள் வேகமாகத் துடுப்புப் போட்டனர். திரண்டெழுந்து கொண்டிருந்த பேரலைகளைச் சமாளித்தபடி, நாங்கள் வருணனின் கப்பல்களுக்கு வெகு அருகே மெதுவாகச் சென்றடைந்தோம். இன்னொரு மின்னல் கீற்று, அந்த இரவு வானத்தையும் உருண்டு கொண்டிருந்த கடல் நீரையும் ஒளியூட்டியது.

என்னுடைய இடுப்புக் கச்சையைத் தவிர மற்ற அனைத்து ஆடைகளையும் களைந்துவிட்டு, என்னுடைய வாளை என் பற்களுக்கு இடையே பற்றிக் கொண்டு, உறைய வைத்தத் தண்ணீருக்குள் குதித்து, கப்பல்களை நோக்கி நான் என் கைகளால் துடுப்புப் போட்டுச் செல்லத் துவங்கினேன். என்னைப் பின்தொடர்ந்து எனது வீரர்களும் தங்கள் கைகளால் மென்மையாகத் துடுப்பிட்டுக் கொண்டிருந்தது என் காதுகளில் விழுந்தது. உருண்டு கொண்டிருந்த நீரில் அக்கப்பல்கள் ஆடிக் கொண்டிருந்தன. நெடுநேரம் அவற்றுக்கு அருகே காத்திருப்பது சாத்தியமில்லை என்பதை நான் கண்டேன். நான் ஒரு குறிப்பிட்டக் கப்பலை நோக்கி நீந்தினேன். வருணன் அதில் இருப்பான் என்று நான் நம்பினேன். ஏதோ சமிக்கைக் கிடைத்ததுபோல, இரண்டு வீரர்கள் அக்கப்பலின் செங்குத்தான பகுதியின் மேற்தளத்தை நோக்கி ஏறினர். அவர்கள் பிரத்யேகமான விலங்கு நகங்களைப் பயன்படுத்தி ஏறியதைக் காண வியப்பாக இருந்தது. பல்லிகளைப்போல அவர்கள் வேகமாக ஏறினர். ஆனால் இரண்டு கயிறுகள் கீழே வருவதற்கு ஒரு யுகம் ஆனதுபோல இருந்தது. நான் குதித்து அவற்றில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு ஏறத் துவங்கினேன்.

பத்ரன் இன்னொரு கயிறில் ஏறிப் பின்தொடர்ந்தான். விரைவாக, மற்றவர்களும் பின்தொடர்ந்தனர். நான் முதலில் மேற்தளத்தை அடைந்தேன். அங்கு நான் கண்ட காட்சி என் இதயத்தை உறைய வைத்தது. முதலில் கப்பலில் ஏறிய துணிச்சலான இரண்டு வீரர்களும் அங்கு கொல்லப்பட்டுக் கிடந்தனர். அவர்களுடைய உடல்கள் அந்த மேற்தளத்தில் அலங்கோலமாகக் கிடந்தன.

“இங்கிருந்து போய்விடுங்கள். நாம் மாட்டிக் கொண்டிருக்கிறோம்,” என்று நான் கத்தினேன். அப்போது திடீரென்று மழை பெய்யத் துவங்கியது. ஒரு திடீர்ப் புயலும் உருவானது. அந்தக் கப்பல் பேய்த்தனமாக ஆடியது. எனது வீரர்களில் சிலர் கடலுக்குள் விழுந்தனர், ஆனால் மற்றவர்கள் மேற்தளத்திற்கு வந்து என்னுடன் சேர்ந்து கொண்டனர். ஊளையிட்டுக் கொண்டிருந்த காற்றின், காதைச் செவிடாக்கும் சத்தத்தைத் தவிர அங்கு அமைதி நிலவியது. எங்கள் வாள்களை எங்கள் கைகளில் பிடித்தபடி நாங்கள் அங்கு நின்றோம். கிட்டத்தட்ட நிர்வாணமாக, தொப்பலாக நனைந்தபடி, கொல்லப்படுவதற்காகக் காத்துக் கொண்டு நாங்கள் அங்கு நின்று கொண்டிருந்த காட்சி நகைப்புக்குரியதாக இருந்தது. மேற்தளத்தில் தேங்கிக் கிடந்த ரத்தக் குட்டைகளை மழை அடித்துச் சென்றது. நாங்கள் உருவாக்கியிருந்த பொய்யான துணிச்சலையும் அது எங்களிடமிருந்து அடித்துச் சென்றது. “அடக் கடவுளே, நான் என்ன காரியம் செய்துவிட்டேன்?”

அப்போது அந்த இருட்டில் ஒரு பேய்த்தனமான சிரிப்பொலி கேட்டது. ஒரு மின்னல் வெட்டியபோது, கையில் ஆயுதங்களுடன் கடற்கொள்ளையர்கள் எங்களைச் சூழ்ந்திருந்ததை நாங்கள் கண்டோம். அவர்களுடைய எண்ணிக்கையோடு ஒப்பிட்டபோது, எங்கள் எண்ணிக்கை மிக மிகக் குறைவாக இருந்தது. தப்பிப்பதற்கு எங்களுக்கு எந்த வழியும் இருக்கவில்லை. மிகவும் சிரமப்பட்டு மன உறுதியை வரவழைத்துக் கொண்டு, நான் முன்னால் குதித்து, பயங்கரமாகத் தோன்றிய ஒரு கொள்ளைக்காரனின் வயிற்றுக்குள் என் வாளைச் செருகினேன். இது எனது படையினருக்கு உற்சாகமூட்டியது. கடல்நீரில் ஆடிக் கொண்டிருந்த அந்தக் கப்பலின் மேற்தளத்தில் ஒரு போர் மூண்டது. நான் எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. ஆச்சரியப்படுத்தும் விதமாக, என் பயம் என்னைவிட்டு ஓடிப் போனது. நான் ஒரு வேகத்தோடு போரிட்டேன். எத்தனைத் தலைகளை வெட்டிச் சாய்த்தேன் என்று கணக்கு வைத்துக் கொள்ள முடியாதபடி நான் தொடர்ந்து முன்னேறினேன். மரத்தாலான அந்த மேற்தளம், ரத்தத்தால் வழுக்கலாக இருந்தது. பாய்மரங்களிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த கயிறுகள் கூடுதல் ஆபத்தைத் தோற்றுவித்தன. நான் மூன்று முறை காயப்படுத்தப்பட்டேன். என் உடலிலிருந்து ரத்தம் களகளவென்று வழிந்து கொண்டிருந்தது. ஆனால் அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. எங்களால் அக்கப்பலை வெற்றி கொள்ள முடியும் என்பதை மெல்ல மெல்ல நான் உணர்ந்தேன். ஆனால் மற்றக் கப்பல்கள் எங்களை நெருங்கியிருந்தது எங்கள் பிரச்சனையை அதிகரித்தது.

கொந்தளித்துக் கொண்டிருந்த கடலுக்குள் வருணனின் ஆட்கள் குதித்து, பைத்தியக்காரர்களைப்போல எங்கள் கப்பலை நோக்கி நீந்திக் கொண்டிருந்தனர். அவர்கள் எங்களை அடைந்துவிட்டால், ஒரு பெரும் சீரழிவை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது.

அந்தச் சண்டாளன் வருணன் எங்கே? அவன் மட்டும் என் கையில் அகப்பட்டால்! மற்றக் கப்பல்களிலிருந்த கடற்கொள்ளையர்கள் நாங்கள் இருந்த கப்பலின் மேற்தளத்திற்கு ஏறத் துவங்கினர். நான் ஒருவனுடைய முகத்தில் ஓங்கி மிதித்ததில், சீற்றமடைந்திருந்த கடலுக்குள் போய் அவன் விழுந்ததை நான் கண்டேன். ஒருவேளை, வருணன், கப்பலின் கீழ்த்தளத்தில் ஏதேனும் ஓர் அறையில் இருக்கக்கூடும். படிக்கட்டுகளுக்கு இட்டுச் சென்ற கதவை நான் ஓங்கி மிதித்துத் திறந்து, கீழ்த்தளத்தில் இருந்த அறைக்குள் குதித்தேன். அலங்கார வேலைப்பாடுகளுடன் இருந்த அந்த அறைக் கதவு மூடியிருந்தது. அதன் இடுக்குகளின் வழியாக ஒரு மங்கலான வெளிச்சம் வந்தது. கப்பலின் வளைவான சுவர்கள்மீது பயங்கரமான நிழல்கள் நடமாடியது தெரிந்தது. மேற்தளத்தின்மீது நடந்து கொண்டிருந்த சண்டையின் சத்தம் லேசாக என் காதுகளில் விழுந்தது. வருணன் இந்த அறைக்குள் இருந்தானா?

நான் அக்கதவை என் காலால் எட்டி உதைத்து, என் வாளை ஒரு சுழற்றுச் சுழற்றினேன். அந்த அறை காலியாக இருந்தது. பறந்து கொண்டிருந்த பட்டுத் திரைச்சீலைகளுக்குள் நான் என் வாளைச் செருகினேன். பிறகு, நான் தரையில் விழுந்து, அந்தக் கோழை அங்கிருந்த கட்டிலுக்கு அடியில் ஒளிந்து கொண்டிருந்தானா என்று பார்த்தேன். அப்போது, குளிர்ச்சியான, எஃகு வாள் ஒன்று என் பிடரியைத் தொட்டது.

"ஆஹா, அசுரர்களின் பேரரசர் இந்த ஏழை மீனவனின் அறைக்கு ஒரு ராஜ விஜயம் செய்து கொண்டிருக்கிறார். அரசே, நான் தன்யனானேன்."

எல்லோரும் வெறுத்த அந்தக் கடற்கொள்ளையர்களின் அரசனின் முகத்தை நான் பார்க்க முயற்சித்தேன், ஆனால் அவன் தனது மரக் காலணிகளால் என் முகத்தில் ஓங்கி மிதித்தான். என் மூக்கிலிருந்து ரத்தம் ஒழுகி, தரையில் ஒரு குளத்தை உருவாக்கியது. எனது பயம் திரும்பி வந்தது. நான் வசமாக மாட்டிக் கொண்டிருந்தேன்! என் முடிவு இதுதான்.

"அரசே, நீங்கள் என்னை ஆச்சரியப்படுத்துகிறீர்கள். உங்கள் விருந்தினரின் அறைக்குள் வரும்போது நீங்கள் வெறும் இடுப்புக் கச்சையுடனா வருவீர்கள்? இது இந்தியாவிலுள்ள அசுர வழக்கமா அல்லது உங்கள் குடிமக்கள் பின்பற்றுவதற்காக நீங்கள் ஒரு புதிய

பாணியை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்களா?"

நான் அவனது கணுக்கால்களில் ஓங்கி மிதித்தேன். நான் விரைவாகச் செயல்பட்ட விதம் வருணனையும் என்னையும் ஒருசேர ஆச்சரியப்படுத்தியது. கோபம் என்னுள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. அவனை மட்டும் என்னால் கொல்ல முடிந்தால், அதைவிடச் சிறப்பாக, அவனை என்னால் சிறைபிடிக்க முடிந்தால், நான் என்னுடைய சாம்ராஜ்யத்தைத் தக்க வைத்துக் கொள்வதோடு மட்டுமன்றி, சின்னாபின்னமாகிக் கிடந்த எனது பெருமையையும் நான் மீட்டெடுத்துவிடுவேன். நான் என் வாளைக் கொண்டு அவனை பலமாகத் தாக்க முயற்சித்தேன், ஆனால் அவன் அதைச் சுலபமாகத் தடுத்தான். என்னுள் பொங்கிக் கொண்டிருந்த கோபத்தாலும் வெறுப்பாலும் தூண்டப்பட்ட நான், ஆக்ரோஷமாகச் சண்டையிடத் துவங்கினேன். ஆனால், சுமார் நாற்பது வயது கொண்ட வருணன், எனது வேகமான வீச்சுக்களை மிகச் சுலபமாகவும் ஒருவிதமான சலிப்போடும் லாவகமாகத் தடுத்தான். அவனது வாள்வீச்சு ஈடு இணையற்றதாக இருந்தது. மகாபலி தனது புகழின் உச்சகட்டத்தில் இருந்தபோது கொண்டிருந்த வாள்வீச்சுத் திறமையை அது ஒத்திருந்தது. வருணனின் சலனமற்றத் தன்னம்பிக்கைக்கும் திறமையான வாள்வீச்சிற்கும் முன்னால், இருபதுகளில் இருந்த எனது இளமையாலும் ஆற்றலாலும் ஈடு கொடுக்க முடியவில்லை.

"ஆம், அப்படித்தான் . . . ஆனால் உங்களுக்கு இன்னும் அதிகப் பயிற்சி வேண்டியுள்ளது . . . அப்படியில்லை, இடது பக்கத்திலிருந்து வாளை வீச முயற்சியுங்கள் — ம்ம்ம் . . . இது பிரமாதம் . . . ஆனால் நீங்கள் இன்னும் அதிக ஆற்றலோடு வீச வேண்டும் . . ." எந்தவிதமான ஏற்ற இறக்கங்களுமின்றி ஒரே தொனியில் அவன் பேசிக் கொண்டிருந்தது எனக்கு எரிச்சலூட்டியது. தற்காப்புக் கலைகளில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த ஒரு குழந்தையைப்போல் அவன் என்னை நடத்தியதுபோல நான் உணர்ந்தேன். அவன் என் உடலில் பலமுறை ரத்தத்தை வரவழைத்திருந்தான், ஆனால் ஒருமுறைகூட என்னால் அவனைத் தொட முடியவில்லை. எனது காயங்களிலிருந்து மீண்டும் ரத்தம் வழியத் தொடங்கியது. நான் மயக்கமாக உணர்ந்தேன். எல்லாவற்றையும் இழந்திருந்த நான் இப்போது பரிதவிப்புடன் இருந்தேன்.

"வருணா, கடற்கொள்ளையனே! அப்படியே நில், அல்லது கர்வம் பிடித்த உன் தலையை நீ இழந்துவிடுவாய்."

நான் பின்னால் திரும்பிப் பார்த்தேன். கதவருகே இரண்டு வில்வீரர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் என் மாமன் மாரீசனும்

என் சகோதரன் கும்பகர்ணனும்தான் என்பதை அடையாளம் கண்டுகொள்ள எனக்கு ஒருசில நொடிகள் ஆனது. அவர்கள் தங்களது அம்புகளை வருணனை நோக்கிக் குறி வைத்தனர். வருணன் முதன்முறையாகத் தனது அமைதியை இழந்ததை நான் கண்டேன். நான் சுதாரிப்பதற்குள், திறந்திருந்த சன்னல் வழியாகக் கடலுக்குள் குதிக்க வருணன் முயற்சித்தான். நான் அவனுடைய கால்களைப் பற்றினேன். அவன் தன் முகம் குப்புறத் தரையில் விழுந்தான். வருணன் என்னை உதறித் தள்ளுவதற்கு முன்பாக, கும்பகர்ணன் அவன்மீது பாய்ந்தான். நாங்கள் இருவரும் அவனைத் தரையோடு தரையாகக் கிடத்தி, எங்கள் மாமன் மாரீசன் எங்களிடம் கிழித்துக் கொடுத்திருந்த பட்டுத் திரைச்சீலைகளைக் கொண்டு அவனது கைகளை அவனது முதுகிற்குப் பின்னால் கட்டினோம்.

"நீங்கள் இருவரும் எப்படிச் சரியான நேரத்தில் இங்கு வந்து சேர்ந்தீர்கள்?" என்னைக் காப்பாற்ற வந்த இந்தக் கதாநாயகர்களின் வரவு குறித்து நான் தொடர்ந்து வியந்தேன்.

மாரீசனுக்கு மூச்சு வாங்கியது, ஆனால் அவன் தன் கதையை நிறுத்தவில்லை. "இன்று காலையில் நீ எங்களுடன் உனது திட்டத்தைக் கலந்தாலோசித்தபோது, நான் அது பற்றித் தொடர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தேன். நான் எவ்வளவு அதிகமாகச் சிந்தித்தேனோ, உன் திட்டம் அவ்வளவு அதிகப் பொறுப்பற்றதாகவும் அதிக முட்டாள்தனமானதாகவும் எனக்குத் தோன்றியது. இந்தக் கிறுக்குத்தனமான முயற்சியைக் கைவிட்டுவிடுமாறு உன்னை எச்சரிப்பதற்காக நான் உன் அறைக்கு வந்தேன். ஆனால் அங்கு உன்னைக் காணவில்லை. நீ எங்கே சென்றிருப்பாய் என்பதைக் கண்டுபிடிப்பதற்குப் பிரஹஸ்தனின் புத்திசாலித்தனம் ஒருவனுக்குத் தேவையில்லை. அதுவும், நள்ளிரவு கடந்த பிறகு நீ எங்கே சுற்றச் சென்றிருப்பாய் என்பதை ஊகிக்க அவ்வளவு அறிவுக்கூர்மை தேவையிருக்கவில்லை. நான் இந்தப் பேய்ப்பிள்ளையை எழுப்பி, பிறகு ஒரு பைத்தியக்கார நாயைப்போல ஓடி, போர்ச்சங்கு கொண்டு ஒலி எழுப்பினேன். என்னால் ஒருசில நூறு வீரர்களை மட்டுமே திரட்ட முடிந்தது. அதில் பாதிப் பேர் மூக்கு முட்டக் குடித்திருந்தனர். இந்த அசுரர்கள் . . . பெருங்கடலில் நீ நடத்திக் கொண்டிருந்த கோமாளிக் கூத்தைப் பார்ப்பதற்கு நாங்கள் கண்மூடித்தனமாகத் துடுப்புப் போட்டு வந்தோம்."

"நாம் ஏதேனும் வீரர்களை இழந்தோமா?"

"வருணனின் கப்பல்களில் நமக்கு வெற்றிலைப் பாக்கு மற்றும் இனிப்புகளுடன் இனிய வரவேற்புக் கிடைத்ததாக நீ நினைக்கிறாயா?

நாம் சில டஜன் வீரர்களை இழந்துள்ளோம். அவர்களில் பாதிப் பேர், யுத்தத்தில் ஏற்பட்டக் காயங்களால் இறக்கவில்லை, மாறாக, இந்தக் கொந்தளிப்பான நீரின் சீற்றத்தைச் சமாளிக்க முடியாமல் இறந்து போனார்கள். நீயும் சில வீரர்களை இழந்ததாக நான் கேள்விப்பட்டேன்."

"இந்த மாபெரும் கடற்கொள்ளையனுடன் ஒரு சுவாரசியமான உரையாடலை நான் துவக்கியபோது, நமது ஆட்களில் ஆறு பேர் இறந்து போயிருந்தனர்."

"உனது பத்ரனும் கடலுக்குள் மூழ்கிவிட்டதாக நான் நினைக்கிறேன். அவன் கடலுக்குள் விழுந்ததை நமது படைத் தலைவனான வயிஸ்தன் பார்த்தான். அதன் பிறகு யாருமே பத்ரனைப் பார்க்கவில்லை. இந்த முரட்டுத்தனமான கடலில், அவன் இந்நேரம் சீனாவைச் சென்றடைந்திருப்பான் என்று நான் நினைக்கிறேன்."

"சகோதரா, நாம் இந்தக் கடற்கொள்ளையனை என்ன செய்யலாம்?" என்று கும்பகர்ணன் கேட்டான்.

மாரீசன் ஒரு கணம்கூடத் தயங்காமல், "அவனுடைய கால்களையும் கைகளையும் கட்டி இந்தக் கடலுக்குள் தூக்கி எறிந்துவிடு — கடல்களின் அரசனான அவனுக்கு அதுதான் சரியான முடிவு," என்று கூறினான்.

"அது அவனுக்குப் பொருத்தமான முடிவுதான். வேண்டாம், பொறு. அவனை நாம் இலங்கைக்குக் கொண்டு செல்லலாம். அவனைத் தனது இடுப்புக் கச்சையில் இலங்கையின் தெருக்கள் வழியாக இழுத்துச் செல்லலாம்." என்னுள் உற்சாகம் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. "தங்களது துயரங்களுக்குக் காரணமானவனை எனது குடிமக்கள் பார்க்கட்டும்."

"தங்கள் துயரத்திலிருந்து தங்களை விடுவித்த அரசன் ராவணனையும் அவர்கள் பார்க்கட்டும். ராவணன், கடற்கொள்ளையர்களைக் கொன்றவன், ஏழு கடல்களுக்கு அரசன்," என்று கும்பகர்ணன் ஒரு புன்னகையோடு கூறினான்.

மாரீசன் எங்கள் இருவரையும் முறைத்துப் பார்த்தான். பிறகு சிறிது சிந்தித்துவிட்டு, "கடற்கொள்ளையர்களின் அரசனை நீங்கள் இந்தக் கடலுக்குப் பரிசளித்துவிட்டால் நல்லது," என்று கூறினான்.

நான் அவனது இந்த அறிவுரையை உதாசீனப்படுத்தினேன். என் வாழ்க்கையை என்னால் மீண்டும் எழுத முடிந்தால், அக்கணத்திலிருந்து துவக்கி, வருணனைத் தூக்கிக் கடலுக்குள் எறிவதற்கு எனக்குக் கை கொடுத்து உதவுமாறு மாரீசனையும் கும்பகர்ணனையும் நான் கேட்டிருப்பேன்.



# 20

# திருமண வைபவம்

ராவணன்

நான் எனது அறைக்குள் நுழைய வேண்டியிருந்தது, ஆனால் அதற்கு எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை. அவள் அங்கு எனக்காகக் காத்துக் கொண்டிருப்பாள். இன்றுதான் எனக்குத் திருமணம் ஆனது. எல்லோரையும் விட்டுவிட்டு, கடைசியில் நான் அந்தக் கொடுமைக்காரி மண்டோதரியை மணமுடித்தேன். அது தவிர்க்க முடியாதது என்பதை நான் அறிந்திருந்தேன், ஆனால் இயன்ற அளவுக்கு நான் அதைத் தள்ளிப் போட விரும்பினேன். எனது ராஜ ஊர்வலம் திரிகோட்டாவின் தெருக்களுக்குள் நுழைந்தபோது, நான் என்னை மீறி நடந்து கொண்டேன். வெற்றி ஒருவனை மடையனாக ஆக்கக்கூடிய சக்தி கொண்டது. இந்த வாரம் பல விஷயங்கள் துரித வேகத்தில் நடந்திருந்ததால், என்னால் ஒழுங்காகச் சிந்திக்க முடியவில்லை.

இலங்கையின் சக்திவாய்ந்த பேரரசன், கடற்கொள்ளையர்களின் அரசனான வருணனைச் சிறைபிடித்திருந்தான் என்ற செய்தி எங்களுக்கு முன்பாகவே கரையை எட்டியிருந்தது. கடற்கொள்ளையர்கள்

அனைவரையும் தங்கள் இடுப்புக் கச்சைகளுடன் நிற்கச் செய்து, அவர்கள்மீது சேற்றைப் பூசி, எச்சிலை உமிழ்ந்து, அவர்களைக் கொடூரமான முறையில் அடித்து உதைத்து, அதன் பிறகு, தோற்றுப் போயிருந்த தங்களது அரசனுக்குப் பின்னால் ஊர்வலமாக அவர்கள் நடத்திச் செல்லப்பட்டனர். தெருக்களில் ஆயிரக்கணக்கான மக்கள் அணிவகுத்து நின்று வெற்றி முழக்கமிட்டனர். நான் ஒரு கதாநாயகனைப்போல அந்த ஊர்வலத்தின் முன்னால் நடந்து சென்றேன். கைதட்டி ஆரவாரம் செய்து கொண்டிருந்த மக்களை நோக்கி நான் அவ்வப்போது என் வாளை உயர்த்தினேன். அது அவர்களை மேலும் உற்சாகப்படுத்தியதுபோல இருந்தது. அவர்களைப் பொறுத்தவரை, அந்த பயங்கரமான கடற்கொள்ளையனின் இரும்புப் பிடிகளிலிருந்து இலங்கையைக் காப்பாற்றியிருந்த கதாநாயகன் நான், இலங்கையின் அரசன் நான். என் இதயம் பெருமிதத்தால் விரிவடைந்தது. நான் வருணனின் முகத்தை என் வாளால் தாக்கினேன். அது அவனது மூக்கிலிருந்து ரத்தத்தை வரவழைத்தது. அது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. நான் அவனை மீண்டும் அடித்துவிட்டு என் வாளை உயர்த்தினேன். “எங்கள் அரசன் ராவணன் நீடூழி வாழ்க!” என்று அங்கிருந்த மக்கள் கத்தத் துவங்கினர். பரிதாபமான ஆன்மா ஒன்று ஓடி வந்து என் பாதங்களில் விழுந்து பணிந்தது. என்னுடைய வீரர்களில் ஒருவன் அவனை எட்டி உதைத்தான். இதைக் கண்டு மற்றவர்கள் சிரித்தனர். எனக்கு அருகில் இருந்த யாரோ ஒருவன் அதை எதிர்த்து ஊளையிட்டான். நான் கூட்டத்திற்குள் முறைத்துப் பார்த்தேன். அந்த ஒட்டுமொத்தப் பகுதியில் இருந்தவர்களும் பயந்து நடுங்கினர். அவர்களுடைய பயத்தை என்னால் உணர முடிந்தது. என்னை என் பதவியிலிருந்து தூக்கி எறிவதற்கு ஒரு புரட்சியை ஆதரித்த அதே மக்கள் இப்போது என்னைக் கண்டு பயந்தனர். வெற்றி இவ்வளவு இனிமையானதா? மக்கள் என் முன்னால் குனிந்து வணங்கினர்.

நான் பின்னால் திரும்பிப் பார்த்தேன். கத்திக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்த எனது வீரர்கள் திடீரென்று மௌனமாயினர். நான் அவர்களை முறைத்துப் பார்த்தேன். அவர்களும் தங்கள் தலைகளைத் தாழ்த்தினர். நான் கும்பகர்ணனைப் பார்த்தேன். அவன் என்னைப் பார்த்துப் புன்னகைத்தான். நான் பதிலுக்குப் புன்னகைக்கவில்லை, மாறாக மாரீசனைப் பார்த்தேன். அவன் வருத்தத்தோடு தலையசைத்தான். “இவன் ஏன் என்னைப் பார்த்துக் குனிந்து வணங்கவில்லை?” நான் கொதிப்படையத் துவங்கினேன். வருணன், ரத்தம் தோய்ந்த தனது முகத்துடன், என்னைப் பார்த்து ஒரு பேய்ச்சிரிப்புச் சிரித்தான். அவனது சிரிப்பு எனக்கு அச்சமூட்டியது.

ஆனால் அதைவிட அதிகமாக, என்னைக் கண்டே நான் பயந்தேன். “நான் எப்படிப்பட்ட ஒரு ராட்சஸனாக மாறிக் கொண்டிருந்தேன்? நான் ஏன் என் மக்களை இப்படி நடத்திக் கொண்டிருந்தேன்? எனக்கு மரியாதை காட்டாத மாரீசன்மீதுகூட நான் ஏன் கோபப்பட்டேன்?” திடீரென்று, ஓடிச் சென்று அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு நான் அவனிடம் மன்னிப்புக் கேட்க விரும்பினேன். ஆனால் ஏதோ ஒன்று என்னைத் தடுத்து நிறுத்தியது. நான் என் நடையின் வேகத்தை அதிகரித்து, அரண்மனை வாசலுக்குள் நுழைந்தேன்.

அரண்மனையின் நீண்ட தாழ்வாரத்தின் மறுமுனையில் பிரஹஸ்தன் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தான். அவன் ஒரு முகச்சுளிப்புடனும் ஒப்புதலின்மையைத் தெரிவிக்கும் ஒரு பாவத்துடனும் அங்கு நின்றான். பிரஹஸ்தனைச் சுற்றி நான் நடனமாட விரும்பினேன். நான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று அந்த மூடன் எப்போதும் எனக்கு அறிவுறுத்தி வந்திருந்தான். அந்த எச்சரிக்கைதான் அவனையும் அவனது அசுரக் கோமாளிகள் கூட்டத்தையும் ஒன்றுமில்லாமல் செய்திருந்தது. நான் அவனை நெருங்கியபோது, என் வேகத்தைக் குறைத்து, அவனது கண்களுக்குள் உற்றுப் பார்த்தேன். பதிலுக்கு அவன் என்னை முறைத்துக் கொண்டிருந்தான். ஒரு முறைப்புப் போட்டி. அவனுக்கு இப்போது என்ன வேண்டியிருந்தது? ராஜ தந்திரம் மற்றும் அரசியல் செயலாண்மைத் திறன் பற்றி அவன் இப்போது எனக்குச் சொற்பொழிவாற்றத் துவங்கினால், அவனது பிடரியைப் பிடித்து, அவனது முகத்தைத் தரையோடு தரையாக அழுத்தித் தேய்த்துவிட நான் தயாராக இருந்தேன். தான் போதித்ததை அவன் கடைபிடித்துக் கொண்டிருந்தான் போலும். அவன் எச்சரிக்கையாக இருந்தான்.

“அரசவையைக் கூட்டுங்கள். எனது அனைத்து மந்திரிகளுடனும் நான் பேச விரும்புகிறேன்.” இன்னும் தனது முகத்தைச் சுளித்துக் கொண்டு என்னை முறைத்தபடி நின்று கொண்டிருந்த பிரஹஸ்தனிடம் நான் கட்டளையிட்டேன்.

பிரஹஸ்தன் பேசியபோது, நான் என் சகோதரியையும் கும்பகர்ணனையும் ஆரத் தழுவுவதில் மும்முரமாக இருந்தேன். “நகரின் தென்பகுதியிலுள்ள படைகள் திரும்பி வரும்படி நான் ஒரு செய்தி அனுப்பட்டுமா?” என்று அவன் கேட்டான்.

“எது சரி என்று உனக்குப் படுகிறதோ, அதைச் செய். நீதான் பிரதம மந்திரி.” நான் என் கையசைத்து அவனை அங்கிருந்து வெளியேற்றினேன். அவன் லேசாகக் குனிந்து பணிந்துவிட்டு அங்கிருந்து சென்றான். அவனது உறுதியான நடையை நான்

கவனித்துக் கொண்டிருந்தபோது, சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு நின்ற வருணனை என் கண்கள் பார்த்தன. அவனுடைய உதடுகளில் ஒரு புன்னகை மலர்ந்திருந்தது. என் ராஜாங்கத்தில் நிலவிய அரசியல் இறுக்கத்தை அந்தக் குள்ளநரி உணர்ந்துவிட்டிருந்தானா? ஒரு பைத்தியக்கார நாயைப்போலச் சங்கிலிகளால் அவன் கட்டப்பட்டுக் கிடந்தவரை, அது பற்றிக் கவலையில்லை. அரண்மனைக்கு வெளியே நடந்து கொண்டிருந்த கொண்டாட்டங்கள் என் காதுகளில் விழுந்தன. அசுரர்கள் குடித்துவிட்டு ஆட்டம் போடுவதற்கு அவர்களுக்கு இன்னொரு காரணம் கிடைத்திருந்தது. அவர்கள் தாராளமாகக் கொண்டாடட்டும். நான் அவர்கள்மீது பரிதாபப்பட்டேன். ஒரு வழியாக, என் மக்களின் எதிர்பார்ப்புகளை நான் நிறைவேற்றியிருந்தேன். மாரீசன் மட்டும் அங்கு என்னைக் காப்பாற்ற வராமல் இருந்திருந்தால், சுறாக்கள் என் உடலைச் சுவைத்துக் கொண்டிருந்திருக்கும் என்பதை நான் எனக்கு நினைவுபடுத்திக் கொள்ள விரும்பவில்லை.

“என் கதாநாயகனே, உன் வீரத்தை வெளிக்காட்டுவதற்கான உனது இன்றைய தேவை நிறைவேறிவிட்டதா?” என்று கேட்டுவிட்டு என் தாயார் என்னைப் பார்த்துப் புன்னகைத்தார். நான் அவரிடம் சென்று அவரைக் கட்டிக் கொண்டேன்.

“முட்டாளே! நீ கொல்லப்பட்டிருந்தால் என்ன ஆகியிருக்கும்?” அவரது கண்ணீர் என் வெற்றுத் தோள்களின்மீது வழிந்து கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. அவர் தன்னை என்னிடமிருந்து விடுவித்துக் கொண்டு என் முகத்தை உற்றுப் பார்த்தார். “ராவணா, நீ உன் தந்தையைப்போலத் தோன்றுகிறாய்.”

நான் விறைப்பானேன். நான் என் தந்தையைப்போலத் தோற்றமளிக்க விரும்பவில்லை. ஒரு தேரில் மிதிபட்ட ஒரு பூனையைப்போலத் தோன்றுவதை நான் தேர்ந்தெடுத்திருப்பேன். என் தாயார் அதை உணர்ந்து கொண்டார் போலும். அங்கு ஒரு கனத்த மௌனம் நிலவியது. நான் ஒருசில அடிகள் முன்னே எடுத்து வைத்து, பிறகு திடீரென்று ஆணியடித்தாற்போல நின்றேன். ஒரு தூணின்மீது சாய்ந்து கொண்டு, அதே உணர்ச்சியற்றத் தீவிரமான பார்வையுடன் மண்டோதரி என்னை வெறித்துக் கொண்டிருந்தாள். அவளிடம் என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை. “போ, போய் அவளது உதடுகளில் முத்தமிடு. வீரதீரச் செயல்களைப் புரிந்த பிறகு, கதாநாயகர்கள் அதைத்தான் செய்வார்கள். உன் கைவசம் ஒரு குதிரை இருந்தால், அவளை அதில் அமர்த்திக் கொண்டு, சூரிய அஸ்தமனத்தை நோக்கி ஓட்டிச் செல்,” என்று என் உட்குரல் கூறியது. மாறாக, நான் தடுமாறினேன்.

"இது என்ன, காதலர்களின் சந்திப்பா? கண்களால் அமைதியான கருத்துப் பரிமாற்றமா?" என் சகோதரி சூர்ப்பனகையின் பேய்த்தனமான குரல் அங்கு நிலவிய அமைதியைக் கலைத்தது. பின்னால் திரும்பி நான் அவளது காதைப் பிடித்துத் திருகினேன். வலியில் அவள் ஊளையிட்டாள்.

"நீ இன்னும் ஏதாவது உளறிக் கொட்டினால், இன்று எந்தக் குடிகார அசுரன் முதலில் என் பார்வையில் படுகிறானோ, அவனுக்கு நான் உன்னை மணமுடித்துக் கொடுத்துவிடுவேன்," என்று நான் பொய்க் கோபத்துடன் கூறினேன். மண்டோதரியுடன் ஓர் உரையாடலைத் தொடங்குவது குறித்தப் பிரச்சனையிலிருந்து நான் தப்பித்திருந்தது குறித்து நான் நிம்மதியடைந்தேன். மண்டோதரி வெட்கப்பட்டுக் கொண்டோ அல்லது கன்னங்கள் சிவக்கவோ நின்று கொண்டிருந்தாளா என்று பார்ப்பதற்காக நான் அவளை ஓரக் கண்ணால் பார்த்தேன். அப்படி எதுவும் என் பார்வையில் படவில்லை. அதே முறைப்புப் பார்வைதான். அந்தக் கூர்மையான பார்வை என் ஆன்மாவைத் துளைத்தது. எனது இருண்ட ரகசியங்களை அவளால் படிக்க முடியுமா? "அடக் கடவுளே, நான் இவளைத் திருமணம் செய்து கொண்டால், இவள் தினம் தினம் என்னை இப்படி முறைத்துப் பார்ப்பதில், ஒருநாள் நான் எரிந்து சாம்பலாகிவிடுவேன்."

என் தனிமை நேரத்தில் யாரோ அத்துமீறியிருந்ததுபோலத் திடீரென்று நான் உணர்ந்தேன். வருணனைப் பற்றி நான் மறந்து போயிருந்தேன். தனது உதடுகளில் ஓர் ஆணவப் புன்னகையுடன் அவன் அங்கே நின்று கொண்டு, தன் கண்முன்னே அரங்கேறிக் கொண்டிருந்த காட்சியை ரசித்துக் கொண்டிருந்தான். சங்கிலிகளால் கட்டப்பட்டு, கிட்டத்தட்ட நிர்வாணமாக இருந்த அவன், தனது பரிதாப நிலையைப் பற்றி எள்ளளவும் கவலைப்பட்டதுபோலத் தெரியவில்லை. ஒரு மந்திரியோ அல்லது ஓர் அரசாங்க அதிகாரியோ இந்தக் கைதியை ஏன் அவனது இருண்ட சிறைக்கு இழுத்துச் சென்றிருக்கவில்லை? பிரயோஜனமற்ற அசுர முட்டாள்கள் அனைவரும் தங்கள் அரசனையும் அவனது கைதியையும் முற்றிலுமாக மறந்துவிட்டு, தங்கள் அரசனின் வெற்றியைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். நான் என் தொண்டை கிழியக் கத்தினேன். ஐந்து நிமிடம் கழித்து யாரோ ஒருவன் வந்து, நன்றாகக் குனிந்து வணங்கினான். அவனது கருத்தப் பின்புறத்தில் நான் ஓங்கி மிதிக்க விரும்பினேன், ஆனால் துரிதமாகச் செயல்பட்ட இந்த அசுரனைத் தண்டிப்பது நியாயமற்றதாக இருக்கும் என்று நான் நினைத்தேன். குபேரன் தனது எதிரிகளைச் சிறை வைத்த அதே இருண்ட பாதாளச் சிறைகளில் ஒன்றிற்கு இந்தக்

கடற்கொள்ளையனை இழுத்துச் செல்லுமாறு நான் அவனுக்குக் கட்டளையிட்டேன்.

வருணனை எனது காவலாளி மரியாதையாக நடத்திய விதம் கிட்டத்தட்ட எனக்கு மூச்சுத்திணறலை ஏற்படுத்தியது. சங்கிலிகளை நீக்கிவிட்டால், வருணன் எனது நாட்டிற்கு விஜயம் செய்த ஓர் அதிகாரியைப்போலத் தோன்றுவான். இந்த அசுரக் கோமாளிகளை ஒழுங்குபடுத்துவதுதான் எனது மிகப் பெரிய சவாலாக இருக்கும். அவர்கள் குழந்தைகளைப்போல நடந்து கொண்டனர். ஒருசில மணிநேரத்திற்கு முன்பு, என்மீது முழுமையான நம்பிக்கை வைத்து, எனக்காகத் தங்கள் வாழ்க்கையைப் பணயம் வைத்த இருபது வீரர்களின் உருவங்கள் என் மனத்தின் ஊடாகப் பளிச்சிட்டன. அவர்களில் எத்தனைப் பேர் இறந்து போனார்கள்? நான் எத்தனை விதவைகளை உருவாக்கியிருந்தேன்? நகரச் சுவர்களுக்கு அப்பால் ஆங்காங்கே இருந்த குடிசைகளில், இனி வரும் நாட்களில், எத்தனைக் குழந்தைகள் தங்கள் தந்தையரை நினைத்து அழுது கொண்டே தூங்கும்? காணாமல் போயிருந்த அல்லது கொல்லப்பட்டிருந்த எனது வீரர்கள் ஒவ்வொருவரின் குடிசைக்கும் நாளைக்கு நான் விஜயம் செய்வேன். அவர்களுடைய குழந்தைகள் பட்டினி கிடக்காமல் இருப்பதையும், அந்த விதவைகள் விபச்சாரத்திற்குள் இழுக்கப்படாமல் இருப்பதையும் நான் உறுதி செய்வேன். என்னை நம்பியதற்கும் எனக்காகத் தங்கள் உயிர்களைத் தியாகம் செய்ததற்கும் அந்த வீரர்களுக்கு என்னால் செய்ய முடிந்த சிறு உபகாரம் அது. "நான் எவ்வளவு பெரிய மனிதன். ஆனால், ருத்ராக்கனும் அவனது வீரர்களும் கடந்த ஒருசில நாட்களாகக் கொன்று குவித்து வந்திருந்த சாதாரணமான மக்கள் குறித்து என்ன செய்வது? பொதுமக்களின் கிளர்ச்சியைத் திறமையாகவும் கொடூரமாகவும் ஒடுக்கியதால் உருவாக்கப்பட்ட அனாதைகள் குறித்து என்ன செய்வது?" எனக்குள் இருந்த இந்தக் கோமாளி, இப்படிப்பட்டக் கேலிக்குரிய எண்ணங்களை என் மனத்திற்குள் தொடர்ந்து எறிந்து கொண்டிருந்தால் எப்படி என்னால் மகிழ்ச்சியாக இருக்க முடியும்? நான் உன்னதமானவன், மாபெரும் மனிதன் என்று உணர்வதற்கான உரிமை, குறைந்தபட்சம் எப்போதாவதேனும் எனக்கு இருக்கக்கூடாதா?

பத்ரன் எங்கே போனான்? அவன் ஒரு புதிரானவன். அவனால் அவ்வளவு சுலபத்தில் இறந்து போயிருக்க முடியுமா? எனது அன்புக்குரிய சேவகனின் மரணத்திற்கு நான்தான் பொறுப்பு என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. அப்போது சூரியன் மேலெழுந்தது. முந்தைய நாள் பெய்த மழையில் எல்லாமே புதிதாகவும் கழுவி விடப்பட்டதுபோலவும் தோன்றியது. மரங்களில் பறவைகள் கீச்சிட்டன.

பெரிதாக வளர்ந்திருந்த செடிகொடிகள் நிறைந்த தோட்டத்தில் இருந்த மலர்களைச் சுற்றித் தும்பிகள் வட்டமிட்டன. நான் சன்னலுக்கு வெளியே பார்த்தேன். காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்த தென்னை மரங்களுக்கு மேலே காற்றாடிகள் பறந்து கொண்டிருந்தன. காகங்கள் கரைந்தன. தூரத்தில் பெண்கள் துணி துவைத்துக் கொண்டிருந்த சத்தங்கள் ஒன்றொடொன்று சுருதி சேர்ந்து கேட்டன. உலகம் நலமாக இருந்தது. அனைத்து எண்ணங்களும் மறைந்து போய், ஓர் இனிமையான வெறுமை என் மனத்தை நிரப்பிய அற்புதமான கணங்களில் ஒன்றாக அது இருந்தது.

"பிரார்த்தனை செய்யுங்கள். அரசே, உங்கள் ஆன்மாவுக்காகவும் நீங்கள் கொன்று குவித்துள்ள மக்களுக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள்."

"உன் வாயை மூடிக் கொள் . . . நான் என்ன செய்ய வேண்டும் என்று நீ எனக்குக் கூறாதே . . ." தீவிரமான பார்வையுடன் மண்டோதரி என்னருகே நின்று என்னைக் கவனித்துக் கொண்டிருந்ததை நான் அறியவில்லை. அவளது குரலைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். இயற்கையோடு நான் மிகவும் ஒன்றிப் போயிருந்தேன். எனக்கு இப்போது அவளுடைய தொண்டையைப் பிடித்து அழுத்தி அவளைக் கொல்ல வேண்டும்போல இருந்தது. இந்த நல்லொழுக்கக்காரியிடம் நான் அவளது அறிவுரையைக் கேட்டேனா? என் உலகிற்குள் நுழைந்து, முட்டாள்தனமானவற்றைப் பேசுவதற்கு அவளுக்கு என்ன துணிச்சல் இருக்க வேண்டும்? அவளது முகம் வெளிறிப் போனது. ஒரு லேசான விம்மல் ஒலி அவளது தொண்டைக்குள்ளிருந்து எழுந்தது. என்னுடைய கோப வெளிப்பாட்டைக் கண்டு நான் தர்மசங்கடமாக உணர்ந்தேன். என் கோபம் என்னிடமிருந்து கரைந்தோடியதை நான் உணர்ந்தேன். நான் இப்படிப்பட்டச் சூழ்நிலையில் ஒருபோதும் இருந்ததில்லை. எனவே, என்ன செய்வதென்று எனக்குத் தெரியவுமில்லை. நான் அவளிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமா? ஆனால் அவளுடைய துடுக்குத்தனத்திற்கு இது தேவைதான். என் கோபம் மீண்டும் என்னிடம் திரும்பி வந்ததை நான் உணர்ந்தேன்.

"என்னை மன்னித்துவிடுங்கள் . . ." என்று அவள் கூறினாள்.

"சரி, சரி . . ." அவள்தான் அதற்குக் காரணம் என்று நான் அவளிடம் கூற விரும்பினேன், ஆனால் புத்திசாலித்தனமாக என் வாயை மூடிக் கொண்டேன்.

அப்போது ஒரு காவலாளி, "அரசே, அரசவையில் அனைவரும் கூடிவிட்டனர்," என்று உரத்தக் குரலில் கூறினான். அந்த இடைவேளை கிடைத்ததற்காக நான் என் மனத்திற்குள் நன்றி கூறிவிட்டு,

மண்டோதரியைக் கடந்து சென்றேன். பிரஹஸ்தனும் மற்றவர்களும் என்னிடம் கேட்கச் சாத்தியமிருந்த கேள்விகளையும், அவற்றைச் சிறப்பாக எவ்வாறு கையாள்வது என்பது குறித்தும் என் மனம் வேகமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தது.

அரசவையில் அனைவரும் கூடியிருந்தனர். கதவருகே தூங்கி வழிந்து நின்று கொண்டிருந்த காவலாளி, நான் அவனைக் கடந்து சென்றபோது உஷாராகி நின்றான். அவன் எனக்குரிய மரியாதையைக் கொடுப்பதற்கு முன்பாக, நான் சற்றுச் செருமி என் வரவை அவனுக்குத் தெரியப்படுத்த வேண்டியிருந்தது என்னைச் சிறிது தொந்தரவு செய்தது. நான் அவனை எட்டி உதைத்து, அவனது மர மண்டைக்குள் சிறிது ஒழுங்கைத் திணிக்க விரும்பினேன். அப்படியென்றால், என் ஒட்டுமொத்தப் படையையும் நான் அப்படிச் செய்ய வேண்டியிருக்கும். அதோடு, நான் எனது வீரர்களுக்குப் பயிற்சியளிக்கும் ஒரு படைத்தலைவனைப்போல நடந்து கொள்வதைவிட, கவலைப்படுவதற்கு எனக்கு அதிக முக்கியமான விஷயங்கள் இருந்தன. எனது அதிகாரத்தை நிலை நிறுத்தி, உயர்மட்டக் குழு என்னை மீறிச் செயல்படாமல் பார்த்துக் கொள்வதுதான் இப்போதைய முன்னுரிமையாக இருந்தது. பிரஹஸ்தன், வருணனுக்கு எதிராக நான் பெற்றக் கண்கவர் வெற்றியைக் கண்டு கொதித்துப் போயிருந்ததால், என் முதுகிற்குப் பின்னால் ஏதேனும் சதித்திட்டம் தீட்டிக் கொண்டிருப்பான் என்று நான் சந்தேகித்தேன். கைது செய்யப்பட்டக் கடற்கொள்ளையனை எவ்வாறு நடத்த வேண்டும் என்பது பற்றி அவன் தனது அபிப்பிராயங்களையும் என்மீது திணிக்க முயற்சிக்கக்கூடும். அசுரர்களின் நன்னடத்தைக் குறித்த ஏதேனும் சில புத்தகங்களிலிருந்துகூட அவன் இது தொடர்பாக எதையேனும் மேற்கோள் காட்டக்கூடும். ஏதேனும் பண்டைய அசுர அறிஞரிடமிருந்து அவன் எதையேனும் மேற்கோள் காட்டி, வருணனை இலங்கைக்கு விஜயம் செய்த ஓர் அரசனாகக் கருதி முழு ராஜ மரியாதையுடன் வழியனுப்பி வைக்க வேண்டும் என்று என்னிடம் கூறினால், அந்தக் கடற்கொள்ளையனை எவ்வளவு தூரம் இழிவுபடுத்த முடியுமோ அவ்வளவு தூரம் அவன் இழிவுபடுத்தப்படுவதை நான் உறுதி செய்வேன். பொதுமக்கள் முன்னிலையில் நகரத் தெருக்களில் அவனைத் தரதரவென்று இழுத்துச் சென்று, சாட்டையால் அடித்து, இறுதியில், ஒரு மெதுவான, வேதனையான மரணத்தை அவன் அனுபவிப்பதை நான் நிச்சயமாக உறுதி செய்வேன். உயர்மட்டக் குழு எவ்வாறு நடந்து கொள்ளும் என்பது பற்றி எனக்குக் கவலையாக இருந்தது. அவர்கள் எப்படிப்பட்ட நடவடிக்கைகளை முன்வைப்பார்கள் என்பதும் எனக்கு

உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. இந்த ஒரு பொய்யான உயர்மட்டக் குழுவை நான் கலைத்தாக வேண்டியிருந்தது. நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் ஏன் எனக்கு அறிவுரை கொடுக்க வேண்டும்?

நான் அரசவைக்குள் நுழைந்தபோது, சுற்றுமுற்றும் பார்த்தேன். அந்த அறையின் மறுகோடியில், அலங்கார வேலைப்பாடுகளுடன் இருந்த அந்த இருக்கையின் மேலாக, அலங்கார ஜோடனையுடன்கூடிய ஒரு குடை விரிக்கப்பட்டிருந்தது. பல்வேறு வடிவங்களிலான முத்துக்களும் வைரங்களும் அக்குடையின் விளிம்பிலிருந்து தொங்கிக் கொண்டிருந்தன. இருக்கையின் முதுகில் ஒரு பெரிய வைரம் பதிக்கப்பட்டிருந்தது. இலங்கை அரசனின் அரியணை அது. அது என்னுடைய அரியணை என்ற எண்ணம் இயல்பாக எனக்கு வந்திருந்தது எனக்குக் கவலையளித்தது. எனது மாற்றாந்தாயின் மகன் அமர்ந்திருந்த அதே அரியணைதான் இது. இதன்மீது அமர்ந்துதான் அவன் தனது வகையான நியாயத் தீர்ப்புகளை வழங்கினான். நான் அங்கு ஆடாமல் அசையாமல் ஒரு சிலைபோல நின்றேன். குபேரனிடம் யாசிப்பதற்காக நான் என் தாயாருடனும் எனது சகோதர சகோதரிகளுடனும் இங்கு வந்தபோது, அவன் இதே அரியணையில் அமர்ந்தபடி ஒருசில நாணயங்களை எங்கள் பாதங்களை நோக்கித் தூக்கி எறிந்து, பிச்சைக்காரர்களைப்போல எங்களை இங்கிருந்து விரட்டியடித்த நாளிலிருந்து இப்போது நான் வெகுதூரம் வந்திருந்தேன்.

நான் அங்கிருந்த படிகளில் ஏறிச் சென்று அந்த அரியணையை அடைந்தேன்.

"நில்லுங்கள்!" அந்தக் கத்தல் அந்தப் பெரிய அரசவை நெடுகிலும் எதிரொலித்தது. நான் வேகமாகத் திரும்பியதில் என் கால்கள் இடறின. அப்போது, பிரஹஸ்தன் தன் கைகளைத் தனக்குப் பின்னால் கட்டியபடி நின்று கொண்டிருந்ததை நான் பார்த்தேன். ரத்தம் எனது நரம்புகளுக்குள் பாய்ந்தது. உள்ளுணர்வு என்னைத் தூண்டியதில், நான் என் வாளை உருவினேன். உட்கார்ந்து கொண்டிருந்த மந்திரிகள் தங்கள் இருக்கைகளிலிருந்து எழுந்து நின்றனர். "முதலில் அவர்கள் ஏன் உட்கார்ந்திருந்தார்கள்? அரசனான நான், அறைக்குள் நுழைந்தபோது, அவர்கள் நின்று கொண்டுதானே இருந்திருக்க வேண்டும்?" என் உதடுகள் துடித்தன. எனது கண்கள் ரத்தச் சிவப்பாக மாறியிருந்ததாக நான் உறுதியாக நம்பினேன். என் வாழ்வில் நான் இதுபோல ஒருபோதும் கோபப்பட்டிருக்கவில்லை. எனது பிரதம மந்திரியான பிரஹஸ்தன், நான் எனது சொந்த அரியணையைத் தொடுவதிலிருந்து என்னைத் தடுத்திருந்தான். எனக்கு மட்டும் தீர்க்க தரிசனப் பார்வை

இருந்திருந்தால், நான் அவனுக்கு நன்றி கூறிவிட்டு, அரண்மனைக்கு வெளியே எனக்காகக் காத்துக் கொண்டிருந்த சுதந்திரத்தை நோக்கி நடை போட்டிருந்திருப்பேன். பிரஹஸ்தனைப் போன்ற கற்றறிந்த நபர்களிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, எனக்கு மிகவும் விருப்பமான இசையில் நான் முழுமையாக ஈடுபட்டிருந்திருப்பேன். எனது அன்புக்குரிய மக்களுக்கு மரணத்தையும் சீரழிவையும் கொண்டு வருவதற்குப் பதிலாக, நான் இயற்றியிருந்திருக்கக்கூடிய ராகங்களைக் கொண்டு இனிமையான நினைவுகளை இந்த உலகத்திற்கு என்னால் வழங்கியிருக்க முடியும். ஆனால், பொன்னாலான அந்த அரியணையின் காந்தசக்திக்கு இவ்வுலகிலுள்ள எதுவும் ஈடாகாது.

நான் அந்த இடத்திலேயே அசையாமல் நின்று, எனது வாளை மெதுவாக உயர்த்தி, அதன் கூரிய முனையைப் பிரஹஸ்தனின் மார்பின்மீது அழுத்திப் பிடித்தேன். பிறகு, ஒரு புருவத்தை உயர்த்தி, கோபத்தோடு அவனை முறைத்துப் பார்த்தேன். அவன் கண்ணிமைக்காமல் அங்கு நின்றான். அறையில் ஏற்பட்டிருந்த இறுக்கத்தை என்னால் உணர முடிந்தது. பல கைகள் குத்துவாள்களையும் வாள்களையும் பற்றியிருந்தன.

“அரசே, அதிகாரபூர்வமான முடிசூட்டு விழா இன்னும் நடந்து முடியவில்லை. அதுவரை, இந்த அரியணையை உங்களால் தொட முடியாது. அரச மணிமுடி இல்லாமல் உங்களால் அதில் உட்கார முடியாது. நமது வழக்கம் அப்படித்தான் கூறுகிறது.” பிரஹஸ்தன் பாரபட்சமின்றிப் பேசினான். அந்த அறையில் நிலவிய இறுக்கம் தணிந்தது. நான் ஒரு முட்டாளைப்போல உணர்ந்தேன். நான் சுற்றுமுற்றும் பார்த்து மாரீசனைக் கண்டேன். வழக்கத்திற்கு மாறான ஒரு கவலை ரேகை அவனது முகத்தில் தென்பட்டது. ருத்ராக்கனின் பார்வையில் இளக்காரம் தெரிந்தது. ஜம்புமாலியும் மால்யவனும் சுமாலியுடன் எதையோ விவாதித்துக் கொண்டிருந்தனர். தும்ரக்ஷகனும் வஜ்ரதம்ஸ்டிரனும் தூரத்தில் வலப்பக்க மூலையில் இருந்த உருண்டையான தூணின் அருகே நின்று கொண்டு, வெளிப்படையான வெறுப்புடன் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களுடைய வெறுப்பைச் சம்பாதிப்பதற்கு நான் அப்படி என்ன செய்திருந்தேன் என்று எனக்குத் தெரியவில்லை. உட்காருவதற்குப் பொருத்தமான ஒரு நாற்காலியை நான் தேடினேன். எனக்கு ஏமாற்றம் ஏற்படுத்தும் விதத்தில், நைந்து போன ஒரு பழைய மர நாற்காலி மட்டுமே அங்கு எஞ்சியிருந்தது. மாரீசன் எனது இக்கட்டான நிலையைக் கவனித்து, தனது நாற்காலியை எடுத்து என்னிடம் கொண்டு வர முயற்சித்தான். நான் அவனை நோக்கி வேண்டாமென்று கையசைத்துவிட்டு,

கிறீச்சொலி எழுப்பிய அந்த மர நாற்காலியின்மீது அமர்ந்தேன்.

உடனடியாக, பிரஹஸ்தன் தனது கடுமையான குரலில், “உயர்மட்டக் குழுக் கூட்டம் துவங்குகிறது,” என்று அறிவித்தான்.

“ஒரு நிமிடம் பொறு, இந்த உயர்மட்டக் குழுவை நான் ஏற்கனவே கலைத்திருந்தேன், இல்லையா? பிறகு ஏன் இந்த முட்டாள், பழைய நாட்களைப்போல நாள் முழுவதும் நாங்கள் இங்கு அமர்ந்து பேசிக் கொண்டிருக்கப் போவதுபோல நடந்து கொண்டிருக்கிறான்? உயர்மட்டக் குழு, மண்ணாங்கட்டி! நான் இப்போது துரிதமாகச் செயல்படவில்லை என்றால், நான் அசுர இனத்தின் பஞ்சாயத்துத் தலைவனாக இருப்பேனே தவிர, அதன் அரசனாக இருக்க மாட்டேன்,” என்று நான் என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன்.

“நாம் இந்தத் தீவிற்குள் காலெடுத்து வைப்பதற்கு முன்பாகவே உயர்மட்டக் குழு கலைக்கப்பட்டிருந்தது உனக்கு மறந்து போய்விட்டதா? அடுத்த முறை நீ இந்தக் குழுவைப் பற்றிப் பேசுவது என் காதில் விழுந்தால், அடுத்தக் கப்பலைப் பிடித்து இந்தியாவிற்குச் சென்று, அந்த வயதான பேரரசரின் மடத்தனமான முயற்சிகளில் நீ கூட்டுச் சேர்ந்து கொள்ளலாம். அதாவது, நான் நல்ல மனநிலையில் இருந்தால் அது உனக்குச் சாத்தியம். நான் மோசமான மனநிலையில் இருந்தால், நடப்பதே வேறு. அரண்மனையைச் சுற்றி அமைந்துள்ள அகழியில் இருக்கும் முதலைகளுக்கு நீ உணவாவாய். நான் கூறுவது உனக்குப் புரிகிறதா?”

பிரஹஸ்தனின் முகம் செக்கச்செவேல் என்று சிவந்திருந்தது. “ஆனால் . . .” என்று அவன் ஆரம்பித்தான். ஜம்புமாலி ஏதோ கூற முயற்சித்துக் கொண்டிருந்தான்.

“அது எத்தனை அசுர வழக்கங்களையும் விதிகளையும் மீறினாலும் அது பற்றி எனக்குக் கவலையில்லை. என் சொந்த வழக்கங்களை நானே உருவாக்குகிறேன். நான் உருவாக்குகின்ற விதிகளின்படியே நான் நடப்பேன். இந்த ஆயிரம் வருடப் பழைய சம்பிரதாயங்கள் எனக்குச் சலிப்பூட்டுகின்றன. நான் என்ன கூறுகிறேன் என்று உனக்கு நிரூபிப்பதற்காக, குபேரன் விட்டுச் சென்றுள்ள இந்த அரியணையின்மீது நான் உட்காரப் போகிறேன். எந்தவிதமான விழாக்களைப் பற்றியும் எனக்கு அக்கறையில்லை. அசுர மூடநம்பிக்கைகளுக்கு எனது ராஜாங்கத்தில் எந்த இடமும் கிடையாது. இது ஒரு புதிய உலகம், ஒரு நவீன உலகம். பழைய இந்தியாவின் பழக்கங்களும் மூடநம்பிக்கைகளும் முன்னேற்றத்தை நோக்கிய நமது செயல்பாட்டில் சிக்கலை ஏற்படுத்தாமல் இருக்கட்டும்.”

சூட்டோடு சூடாக, நான் அந்தப் பழைய மர நாற்காலியைத் தூக்கி,

அருகிலிருந்த சுவரின்மீது எறிந்தேன். அது ஓர் உரத்தச் சத்தத்துடன் உடைந்தது. அது எனது கருத்தைக் குறிப்பால் உணர்த்தியதுபோல இருந்தது. நான் வேகமாகத் திரும்பி, அரியணையை நோக்கி நடந்தேன். எனது உயர்மட்டக் குழுவினர், அதாவது, எனது மந்திரிகளின் அதிர்ச்சி கலந்த சுவாசம் எனக்குக் கேட்டது. ஏதோ ஒன்றைச் சாதித்த உணர்வுடன் நான் அந்த அரியணையின்மீது அமர்ந்தேன். முதலில் எனக்குச் சிறிது பயமாக இருந்தது, பிறகு ஒரு நடுக்கம் என்னுள் பரவியது. நான் மெதுவாகப் பின்னால் சாய்ந்து அமர்ந்தேன். அரியணையின் கைப்பிடிகள்மீது பதிக்கப்பட்டிருந்த வைரங்களை எனது கைகள் தடவிக் கொடுத்தன. கடலில் இருந்து ஒரு குளிர்ந்த காற்று வீசியது. தெருக்களில் நிகழ்ந்து கொண்டிருந்தவற்றின் சத்தம் அரண்மனைக்குள் கேட்டது. உலகத்தார் நலமாக இருந்தனர். அலங்கார வேலைப்பாடுகளுடன் இருந்த அந்த அரியணையில், ராவணன் தனது முடிசூட்டு விழா நடைபெற்றப் பிறகு அமர்ந்தானா அல்லது அதற்கு முன்பே அதை ஆக்கிரமித்துக் கொண்டானா என்பது பற்றிக் கவலைப்படாமல் உலகம் வழக்கம்போல இயங்கியது. ஒரு கணத்திற்கு முன்பு நான் உணர்ந்த ஒரு வினோதமான மகிழ்ச்சி, இப்போது என்னிடமிருந்து மறைந்து போனது. அதற்குப் பதிலாக ஒரு வெறுமையுணர்வு என்னை ஆட்கொண்டது. எனது வீரர்கள் கடலில் மூழ்கிய காட்சியும், அவர்களுடைய வீடுகளில் நான் பார்த்த உருக்கமான காட்சிகளும் என் மனத்தைத் தொந்தரவு செய்தன. “இரண்டடி உயரம் கொண்ட இந்தப் பஞ்சு மெத்தை மதிப்பு வாய்ந்ததுதானா? நான் எப்படிப்பட்டவனாக ஆகியிருந்தேன்? நான் ஓர் அமைதி விரும்பியா? உலகத்தை வெல்வதுதான் எனது லட்சியமாக இருந்தது. நான் இந்தியாவின் பேரரசனாகவும், அசுர இனத்தின் ரட்சகனாகவும், தனது குடிமக்களுக்குச் செழிப்பையும் மகிழ்ச்சியையும் கொண்டு வரக்கூடிய, தயாள குணம் கொண்ட ஓர் ஆட்சியாளனாகவும் இருக்க விரும்பினேன்.”

எனது மந்திரிகள் ஏன் இன்னும் நின்று கொண்டிருந்தனர் என்று நான் வியந்தேன். “ஆஹா, இது நன்றாக இருக்கிறதே! உட்காருவதற்கு அவர்கள் என்னிடமிருந்து அனுமதியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தனர்.” எல்லோரையும் அமரும்படி நான் சைகை காட்டினேன். பிரஹஸ்தன் மட்டும் உட்காரவில்லை. அவன் ஏதோ கூறப் போராடினான். நான் வேண்டுமென்றே கால்மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டு, எனது இடது குதிங்காலைத் தடவிக் கொடுக்கத் துவங்கினேன். எனது மந்திரிகள் என்னை பயத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். யார் தலைவன் என்பதை அவர்கள் விரைவாகக்

கற்றுக் கொண்டிருந்தது குறித்து நான் மகிழ்ந்தேன். ஆனால் மாரீசனின் கண்களை என்னால் நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. அது எங்கள் இருவரையுமே தர்மசங்கடமாக உணரச் செய்திருக்கும்.

“அரசே,” என்று பிரஹஸ்தன் தன் பேச்சைத் தொடங்கினான். அவனது குரலில் லேசாக மழலை தெறித்ததை நான் கவனித்தேன். “கடற்கொள்ளையர்களின் அரசனான வருணனின் தலைவிதியைப் பற்றி நீங்கள் ஒரு முடிவெடுக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்.”

நான் அதைச் செய்தாக வேண்டும், இதைச் செய்தாக வேண்டும் என்ற போக்கில் ஒரு பிரதம மந்திரி பேசக்கூடாது என்று நான் அவனுக்குச் சுட்டிக்காட்டியிருக்க வேண்டும். நூற்றுக்கணக்கான நுணுக்கங்களுடன் ஜோடனையாக யாரும் என்னுடன் பேசுவதை நான் விரும்பவில்லை. நான் என் விருப்பத்தை நன்றாக வலியுறுத்தியிருந்தேன். அதை அதற்கு மேலும் அதிகமாக நான் வலியுறுத்த விரும்பவில்லை. ஆனால் இந்த மந்திரிகளில் யாரேனும் ஒருவன் தனது பதவியை ராஜினாமா செய்தால், அவனது இடத்தை நிரப்புவதற்குப் பொருத்தமான வேறொருவனைத் தேடிக் கண்டுபிடிக்கும் கட்டாயத்திற்கு நான் ஆளாவேன்.

“பிரதம மந்திரியே, உனது அறிவுரை என்ன?” வருணன் முழு மரியாதையுடன் நடத்தப்பட வேண்டும் என்றும், அவனுக்கு ஒரு ராஜ வரவேற்பு அளிக்கப்பட வேண்டும் என்றும், ஏராளமான பரிசுகளுடன் அவன் திருப்பி அனுப்பி வைக்கப்பட வேண்டும் என்றும் அவன் பரிந்துரைப்பான் என்று நான் உறுதியாக நம்பினேன். அதன் பிறகு, ஒருசில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த அல்லது வாழாமல் போன ஏதோ ஓர் அசுர அரசன் தனது கைதிகளை மிகுந்த மரியாதையோடு நடத்தியிருந்த சில கதைகளை அவன் தனது கருத்துக்குச் சாதகமாகக் கூறுவான். தனது பெருந்தன்மையை வெளிப்படுத்திய, தாராள மனம் படைத்த அந்த அரசனுக்கு ஒருசில ஆண்டுகளுக்குப் பிறகு என்ன நிகழ்ந்தது என்பதைத் தெரிந்து கொள்ள நான் விரும்பியிருப்பேன். அந்த அரசனால் விடுவிக்கப்பட்ட அந்தக் கைதி, அதிக பலத்துடன் திரும்பி வந்து, அந்த அரசனை வெற்றி கொண்டு, பெருந்தன்மையைப் பற்றி எள்ளளவும் நினைத்துப் பார்க்காமல், மனிதநேயமற்ற மிக மோசமான தண்டனையை அவனுக்கு வழங்கியிருந்திருப்பான். ஆனால் வரலாற்றிலிருந்து யாருமே பாடம் கற்றுக் கொள்வதில்லை. தேவர்களின் பக்கங்களிலும் சரி, அசுரர்களின் பக்கங்களிலும் சரி, போட்டி போட்டுக் கொண்டு ஒருவரை ஒருவர் கொன்று குவித்த ‘வீரம்’ குறித்தப் புதிய அத்தியாயங்களை எழுதத்

துணிந்த முட்டாள்களுக்கு ஒருபோதும் பஞ்சம் இருந்ததேயில்லை. தேவர்களைவிட அசுரர்கள் 'இக்கலை'யில் சிறந்து விளங்குகின்றனர் என்பதை நான் ஒப்புக் கொண்டாக வேண்டும். கற்றறிந்த அந்தப் பிரஹஸ்தன், பெருந்தன்மையைப் பற்றித் தன் மர மண்டையில் உதித்த அபிப்பிராயங்களை என்னிடம் கூறியிருந்தால், நான் அவனைத் துவம்சம் செய்துவிடுவதாக இருந்தேன்.

இதற்கிடையே, விபீஷணன் எழுந்து நின்று, அசுரர்களின் தயாள குணத்தைப் பற்றியும், போர்க் கைதிகளை அவர்கள் மனிதாபிமானத்துடன் நடத்திய விதம் குறித்தும் நீண்டச் சொற்பொழிவு ஒன்றை ஆற்றினான். அவையில் இருந்த அனைவருக்கும் சலிப்பையும் எரிச்சலையும் ஏற்படுத்துவதில் அவன் வெற்றி கண்டான். பயங்கரமான அந்தக் கடற்கொள்ளையனுக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டும் என்று ஏற்கனவே நான் தீர்மானித்திருந்தேன். நான் காத்திருந்தேன். உயர்ந்தெழுந்து கொண்டிருந்த முணுமுணுப்பு அலைகளும், கனத்த எதிர்ப்பார்ப்பு மேகங்களும் யதார்த்தத்தை மீறிய ஒரு சூழலை அங்கு உருவாக்கியிருந்தன.

இறுதியில், ஒரு யுகம் கழிந்திருந்தது போன்ற ஒரு நிலையில், பிரஹஸ்தன் பேசத் தொடங்கினான். "அரசே, வருணன் கொல்லப்பட வேண்டும் என்று நாங்கள் நினைக்கிறோம். அவனை விடுவிப்பது நமக்கு மிகவும் ஆபத்தாக அமையும். நாம் மிகவும் பலவீனமாக இருக்கும் நேரத்தில் அவன் நமக்கு எதிராகத் திரும்பக்கூடும். நாடு மற்றும் உயர்மட்டக் குழுவின் எதிரிகளுக்கு ஒரு வலிமையான பாடத்தைக் கற்றுக் கொடுக்கும் விதத்தில், இருப்பதிலேயே மிகவும் கடுமையான தண்டனையை அவனுக்கு வழங்குவது புத்திசாலித்தனமான காரியம். அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட வேண்டும் என்று மந்திரிகளாகிய நாங்கள் அனைவரும் பரிந்துரைக்கிறோம்."

நான் அதிர்ச்சியடைந்தேன். இதை நான் முற்றிலும் எதிர்பார்க்கவில்லை. சுமாலியும் வஜ்ரதம்ஸ்டிரனும் மால்யவனும் சீற்றத்துடன் தங்களுக்கிடையே கலந்து பேசிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். கும்பகர்ணனும் விபீஷணனும் விவாதித்துக் கொண்டிருந்தனர். தான் புறக்கணிக்கப்பட்டிருந்தது குறித்து, தும்ரக்ஷகன், சிடுசிடுப்பாக ஒரு மூலையில் அமர்ந்திருந்தான். நான் ஓர் இக்கட்டான சூழ்நிலையில் இருந்தேன் என்பது எனக்கு உறுதியாகத் தெரிந்தது. நான் வருணனை விடுவித்துவிட்டால், எனது சகோதரன் விபீஷணனுக்கு ஆதரவாக நான் நடந்து கொள்வதைப்போல இருக்கும். அவனை நான் கொன்றுவிட்டால், நான் பிரஹஸ்தனால் கட்டுப்படுத்தப்பட்டுக் கொண்டிருந்ததுபோலத் தோன்றும். அடக்

கடவுளே, இது என்ன சிக்கல்?

பிரஹஸ்தன் தனது எஃகுப் பார்வையால் என்னைத் துளைத்துவிடுவதுபோலப் பார்த்தான். தன்னோடு முரண்பட்டு நிற்பதற்கு அவன் என்னைச் சவாலுக்கு அழைத்ததுபோல இருந்தது அது. ஆனால், அந்தக் கடற்கொள்ளையர்களின் அரசன், எந்தவிதமான மனக்கலக்கமும் இன்றி அங்கு நின்று கொண்டிருந்தான். அவனது முகம் உணர்ச்சியற்று இருந்தது. அவன் பதற்றப்படாமல் அமைதியாக இருந்ததைக் கண்டு நான் பிரமித்தேன். அவன் துணிச்சலானவன். நிச்சயமாக அவன் என்னைவிட அதிகத் துணிச்சல் வாய்ந்தவன்தான். நான் ஒரு பெரும் சிக்கலில் மாட்டியிருந்தேன். உயர்மட்டக் குழுவின் விருப்பப்படி வருணனைக் கொன்றுவிடுவது எனக்குச் சுலபமானதாக இருந்திருக்கும். ஆனால், அவர்கள் அனைவர்மீதும் எனது அதிகாரத்தை நான் வலியுறுத்த வேண்டியது அவசியமாக இருந்தது. அதே நேரத்தில், பலத்த மரியாதையுடனும் மதிப்புடனும் வருணனை நான் விடுவிக்க விரும்பவில்லை. அவனுக்கு நான் விடுதலையளிக்க விரும்பவில்லை.

"நான் அவனைக் கொல்லப் போவதில்லை." முணுமுணுப்புகள் திடீரென்று நின்றன. ஒருசில கணங்கள் நிலவிய அதிர்ச்சி கலந்த அமைதிக்குப் பிறகு, எனது மந்திரிகள் ஒவ்வொருவராக எழுந்து நின்றனர். "நான் உங்கள் அனைவருக்கும் விளக்கமளிக்கக் கடமைப்பட்டுள்ளேன். இந்தக் கடற்கொள்ளையனை விடுவிப்பது எனது நோக்கமல்ல. அவனது கப்பல்கள் அனைத்தும் கைப்பற்றப்பட்டு, நமது அரசக் கடற்படையுடன் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று நான் கட்டளையிட்டுள்ளேன். கடற்கொள்ளையர்களுக்கு முறையான ராணுவப் பயிற்சி அளித்து, கடற்படையில் அவர்கள் பணியில் அமர்த்தப்பட வேண்டும். கடற்கொள்ளையர்களின் அரசனைப் பொறுத்தவரை, . . ." நான் வருணனை நோக்கி நடந்து சென்றேன். அவன் என்னைவிடக் குறைந்தபட்சம் ஓர் அரையடி உயரமாக இருந்தான். நான் அவனுடைய கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்து, எனது பற்களின் ஊடாக, "நான் இவனது தலையைப் பாதி மழித்து, நமது தெருக்களின் வழியாக இவனை இழுத்துச் சென்று, பிறகு ஒரு கழுதையின்மீது அமர்த்தி நமது நகரைச் சுற்றி ஊர்வலமாகக் கூட்டிச் செல்லப் போகிறேன். பிறகு, இவனுக்கும் ஒரு பன்றிக்கும் திருமணம் செய்து வைக்கப் போகிறேன். அரசாங்கக் கருவூலம் அதற்கான செலவுகளைப் பார்த்துக் கொள்ளும். அரசாங்கத்தின் செலவில் இத்திருமணம் நடைபெறும். அது என்னுடைய திருமணத்தோடு இணைந்து நடத்தப்படும்," என்று கூறினேன்.

வருணனின் உதட்டோரமாக ஒரு சிறு புன்னகை மலர்ந்தது. அவன்

எனது முறைப்புக்கு இணையாக என்னை முறைத்தபடி, "எல்லாப் பன்றிகளுக்கும் ஒரே நாளில் திருமணம்," என்று கூறினான்.

நான் அவனது முகத்தில் ஓங்கி அறைந்தேன். எனது மந்திரிகளின் சிரிப்பு என் காதுகளை எரித்தது. பிறகு, வருணனின் சாதுரியமான பதிலில் இருந்த நகைச்சுவையுணர்வைப் புரிந்து கொண்டு நானும் சிரிக்கத் துவங்கினேன். பிரஹஸ்தன் மட்டுமே சிலையாக நின்றான். அவனது மேட்டுக்குடி முகத்தில் ஒரு லேசான புன்னகைகூட அரும்பவில்லை.

"அரசே, இந்தக் கைதியை நீங்கள் கொல்லப் போவதில்லை என்றால், பொதுமக்கள் முன்னிலையில் அவனை மேலும் அவமதிக்காமல், தனது வாழ்நாள் முழுவதும் அவனை ஓர் இருண்ட சிறையில் அடைக்குமாறு நான் பரிந்துரைக்கலாமா?"

"நான் என் விருப்பம்போலச் செய்வேன். நீ கூற வேண்டியதைக் கூறிவிட்டாய். உன்னுடைய ஆலோசனையை நீ உன்னுடனேயே வைத்துக் கொள்," என்று நான் பிரஹஸ்தனிடம் வெடுக்கென்று கூறி, பிரச்சனையை அதோடு முடித்தேன். பிரச்சனை அதோடு முடிந்துவிட்டதாகத்தான் நான் நினைத்தேன். எனது மந்திரிகள் என்னைப் பின்தொடர, அவையைவிட்டு நான் வெளியே நடந்தேன். தனது தலை பாதி மழிக்கப்படுவதற்காகவும், மற்றச் சித்தரவதைகளுக்காகவும் வருணன் அங்கிருந்து இழுத்துச் செல்லப்பட்டான்.

மாரீசனும் கும்பகர்ணனும் ஓடி வந்து, ஆளுக்கு ஒரு பக்கமாக என்னருகே நடந்து வந்தனர். "ராவணா, நீ வருணனைக் கொல்லப் போவதாக நான் நினைத்தேன்." "அது நான் இந்த அவைக்குள் நுழைவதற்கு முன்பு," என்று நான் என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன். மாரீசனின் கண்களில் ஆச்சரியம் தெரிந்ததை என்னால் காண முடிந்தது, ஆனால் நான் அவனுக்கு பதில் கூறவில்லை.

எனக்கு இணையாக நடப்பதற்குச் சிரமப்பட்டவாறே, கும்பகர்ணன், "நான் ஒன்றைப் பரிந்துரைக்கலாமா?" என்று கேட்டான். "வருணனை ஏன் நமது கடற்படைத் தளபதியாக ஆக்கக்கூடாது?"

"இலங்கையின் எல்லையைவிட்டுப் போன பிறகு அவன் நமது கப்பல்களைத் தாக்க மாட்டான் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது?" என்று நான் அவனிடம் கேட்டேன்.

"மனத்தளவில், வருணன் ஒரு கடற்கொள்ளையன் என்பதைவிட அதிகமாக, ஒரு வியாபாரி என்று கூறலாம். அவனுக்குச் சாதகமான நிபந்தனைகளை நாம் வழங்கினால், அவன் அவற்றை ஏற்றுக் கொண்டு நடந்து கொள்வான். ஆனால் நாம் எப்போதும் எச்சரிக்கையாக இருக்க

வேண்டும். அவனை அளவுக்கதிகமாக நம்பக்கூடாது.”

“ஒரு கடற்கொள்ளைக்காரனுடன் ஓர் ஒப்பந்தம் செய்வதால் நமக்கு என்ன லாபம்?”

“ஒரு பாதுகாப்பான வர்த்தக வழி, கடற்கொள்ளையர்களின் தாக்குதல்களிலிருந்து துறைமுகங்களுக்கு விடுதலை, வெளியுலகத்துடனான நல்ல நட்புறவு.”

“இந்த யோசனை எனக்கு உற்சாகமளிக்கவில்லை.” வருணனை இழிவுபடுத்துவதில் நான் குறியாக இருந்தேன். கப்பலில் அவன் தனது அறைக்குள் என்னுடன் ஒற்றைக்கு ஒற்றையாகச் சண்டையிட்டபோது என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தது இன்னும் என் காதுகளை உறுத்தியது.

மாரீசன் குறுக்கிட்டு, “நான் இவ்விஷயத்தில் பிரஹஸ்தனின் முடிவோடு ஒத்துப் போகிறேன். இது மிகவும் ஆபத்தானது. நீ ஏன் இப்படிப்பட்ட ஒரு முட்டாள்தனமான தீர்மானத்தை மேற்கொண்டாய் என்று எனக்குத் தெரியவில்லை,” என்று கூறினான். நான் மௌனமாக இருந்தேன். பிரஹஸ்தன் அறிவுறுத்தியதைத்தான் நானும் விரும்பினேன், ஆனால் எனது அதிகாரத்தை வலியுறுத்துவதற்காக நான் ஒரு முட்டாள்தனமான தீர்மானத்தை எடுத்தேன் என்று எப்படி என்னால் கூற முடியும்?

அத்தாழ்வாரத்தின் மறுமுனையில் என் தாயார் நின்று கொண்டிருந்தார். பனை ஓலை ஒன்றில் எதையோ வேகவேகமாகக் கிறுக்கியவாறு மயனும் அங்கு நின்றான். “மாரீசா, அவனை விட்டுவிட்டு, தயவு செய்து என்னோடு வா. சில முக்கியமான விஷயங்களை நாம் கலந்து பேச வேண்டியுள்ளது,” என்று என் தாயார் கூறினார்.

மாரீசன் என்னைப் பார்த்துக் கண்ணடித்துவிட்டு என் தாயாருடனும் மயனுடனும் அங்கிருந்து மறைந்தான். அவர்கள் எதைக் கலந்து பேசவிருந்தார்கள் என்பதை நான் அறிந்திருந்தேன். எனது சுதந்திரமான நாட்கள் முடிவுக்கு வரவிருந்தன. எனக்குக் கால்கட்டுப் போடப்படவிருந்தது. அப்போது கிட்டத்தட்ட நண்பகல் நெருங்கியிருந்தது. அரண்மனைக்கு வெளியே, நகர மக்கள் தங்களது ஓய்விற்குத் தயாராகிக் கொண்டிருந்தபோது, சந்தை மெதுவாகக் காலியாகிக் கொண்டிருந்தது. ஒருசில காற்றாடிகள் வானில் மிக உயரத்தில் மீண்டும் மீண்டும் வட்டமிட்டன. வெளியே எங்கோ, மீன்களை விற்றக் கடைக்காரன் ஒருவன், தனது கூடையில் எஞ்சியிருந்த மீன்களை விற்பதற்கான கடைசி முயற்சியாகப் பெருங்குரலெடுத்துக் கத்தினான். சூரிய ஒளியில் கடல் தகதகத்தது.

மதியச் சூரியனை ஓராயிரம் சிறிய கண்ணாடிகளில் அது பிரதிபலித்தது. தூரத்தில், மேற்குத் தொடுவானில், மேகங்கள் உருவாகிக் கொண்டிருந்தன. வெப்பம் பொறுத்துக் கொள்ள முடியாதபடி இருந்தது. காற்றில் ஈரப்பதம் கலந்து, ஒரு கனத்தப் போர்வையைப்போல நகரைப் போர்த்தியது. எனது அரண்மனையின் மேல்மாடத்தில் நின்று கொண்டு, நான் எனது வாழ்க்கையைத் திரும்பிப் பார்த்தேன்.

வெள்ளிக்கிழமையன்று என் திருமணம் நடைபெற இருந்தது. அதற்கு இன்னும் நான்கு நாட்கள் இருந்தன. எல்லா ஏற்பாடுகளையும் நான் தனிப்பட்ட முறையில் மேற்பார்வையிட்டேன். நான் இங்கு பேசுவது என் திருமண ஏற்பாடுகளைப் பற்றி அல்ல. வருணனுக்கு அதிகபட்ச அவமதிப்பையும் சித்தரவதையையும் நிகழ்த்துவதற்கான ஏற்பாடுகளைத்தான் நான் மும்முரமாக மேற்பார்வையிட்டேன். அவனுடைய துணிச்சலை என்னால் மெச்சாமல் இருக்க முடியவில்லை. ஒரு சிறு முணுமுணுப்புக்கூட இல்லாமல் அவன் அத்தனையையும் ஏற்றுக் கொண்டிருந்தான். அவன் என்னைப் பார்த்தபோது, ரத்தம் தோய்ந்த உதடுகளுடன் என்னைப் பார்த்துப் புன்னகைத்து, தனது உடைந்த பற்களை எனக்குக் காட்டினான். நான் அவனை அடிப்பதற்காக என் கையை உயர்த்தினேன். பிறகு அவனது கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்துவிட்டு, அவனை அடிக்கும் முயற்சியைக் கைவிட்டேன். எனக்கு வெறுப்பாக இருந்தது. எப்படிப்பட்ட ஒரு மூர்க்கன் நான்?

திருமண ஏற்பாடுகள் ஒரு நிரந்தரப் பல்வலிபோல இருந்தன. ஏகப்பட்ட அசுரர்கள் படகுகளிலும் பல்வேறு வகையான கப்பல்களிலும் இந்தியாவிலிருந்து வந்து இறங்கினர். எங்களுக்கு இத்தனை உறவினர்கள் இருந்தார்கள் என்று நான் ஒருபோதும் நினைத்திருக்கவே இல்லை. நாங்கள் பட்டினியால் வாடிக் கொண்டிருந்தபோது இக்கூட்டத்தினர் அனைவரும் எங்கே இருந்தார்கள்? அளவுக்கதிகமான பருமனைக் கொண்ட மாமன்களும் அத்தைகளும் என்னைப் பார்க்க எனது படுக்கையறைக்குப் படையெடுத்தனர். கடந்த முறை என்னைப் பார்த்தபோது, ஒரு பூனை நன்றாகச் சவைத்துத் துப்பியிருந்த ஏதோ ஒன்றைப்போல நான் இருந்ததாக எவனோ ஒருவன் என்னைத் துணிச்சலாகக் கேலி செய்தான். நான் எனது காவலாளிகளை அழைத்து, அந்த வயோதிகனைத் தூக்கி வெளியே எறிந்தேன். குழந்தைகள் அங்குமிங்கும் ஓடியாடி, படிகத்தாலான பூச்சாடிகளை உடைத்தனர், சுவர்களில் கறைகளை ஏற்படுத்தினர். கைக்குழந்தகைள் இரவில் ஊளையிட்டன. பருத்த உடலைக் கொண்ட, கருப்பான அசுரப் பெண்கள் தரைகளிலும் கட்டில்களிலும் படிக்கட்டுகளிலும் படுத்துக்

கொண்டனர். தங்களுக்குக் கிடைத்த இடங்களில் அவர்கள் தங்கள் உடல்களைக் கிடத்தினர். அர்த்த ராத்திரியில் அவர்கள் என்னை எழுப்பி, இவ்வளவு சாதனைகளை நிகழ்த்தியிருந்ததற்கு நான் மிகவும் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும் என்றும், மிக அருமையான ஒரு பெண்ணை நான் திருமணம் செய்து கொள்ளவிருந்தேன் என்றும் என்னிடம் கூறினர். சிலர் தங்களது உதவாக்கரை மகன்களை என்னிடம் கூட்டி வந்து, அரசாங்கத்தில் அவர்களுக்கு வேலை போட்டுத் தரும்படி என்னிடம் அதிகாரமாகக் கூறினர். இவர்கள் அனைவருக்கும் அரண்மனையில் இலவச உணவும் மதுவும் தாராளமாகப் பரிமாறப்பட்டன.



# 21

## குடும்பத் தகராறு

ராவணன்

என் சகோதரி, தனக்குப் புதிதாகச் செய்து கொடுக்கப்பட்டிருந்த நகைகளை அணிந்து கொண்டு, எல்லோரும் பார்க்கும்படி அங்குமிங்கும் ஓடியாடிக் கொண்டிருந்தாள். பிறகு எல்லோருக்கும் தனது அண்ணியாரைக் காட்டுவதற்காக மண்டோதரியின் அறைக்கு அவள் அவர்களை அழைத்துச் சென்று கொண்டிருந்தாள். ஒரு மாற்றத்திற்கு நான் அந்தப் பேராசிரியரின் மகளுக்காகப் பரிதாப்பட்டேன். நான் என் கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு, எல்லோரையும் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டு, உலகிலேயே நான்தான் மிகவும் மகிழ்ச்சியானவன் என்பதுபோல நடந்து கொள்ள வேண்டியிருந்தது. நான் உள்ளுக்குள் புகைந்து கொண்டிருந்தபோது, வெளியே புன்னகைக்க வேண்டியிருந்தது எனக்கு மன அழுத்தத்தை ஏற்படுத்தத் துவங்கியிருந்தது. கண்ணாடியில் நான் என்னைப் பார்த்தபோது, எனக்காக நான் பரிதாபப்பட்டேன். எந்த வகையான திருமணம் இது? இதில் அன்போ, காதல் களியாட்டமோ, நிலவுக்கு அடியில்

கிசுகிசுப்புகளோ, திருட்டுத்தனமான முத்தங்களோ இருக்கவில்லை. பெயரளவுக்கு மட்டுமே இது திருமணமாக இருந்தது. எனது வளமான கற்பனையால்கூட மண்டோதரியுடன் ஒரு காதல்மயமான உறவை உருவாக்க முடியவில்லை.

வெள்ளிக்கிழமை அதிகாலையில் நான் என் தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்டு, அரண்மனைக் குளத்தில் ஒரு சம்பிரதாயமான குளியலுக்காகக் கிட்டத்தட்டத் தரதரவென்று இழுத்துச் செல்லப்பட்டேன். ஆங்காங்கே சிரிப்பொலி கேட்டது. ஆண்களும் பெண்களும் திறந்த வாய் மூடாமல் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தனர்; முதியவர்கள் என்னைச் சுட்டிக்காட்டி ஏதோ பேசிக் கொண்டிருந்தனர்; இளம்பெண்கள் மூலைகளில் நின்று கொண்டு நக்கலாகச் சிரித்துக் கொண்டிருந்தனர்; இன்னும் பலவகையான இரைச்சல்கள்; இலங்கையின் தெருக்களிலிருந்து வந்த, மலர்கள், இனிப்புகள், வறுத்த இறைச்சி, பழங்கள், அழுகிக் கொண்டிருந்த குப்பைகள் ஆகியவற்றின் வாசனை; கோட்டைக்கு வெளியே ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டும் கத்திக் கொண்டும் வேகாத வெயிலில் அங்குமிங்கும் அலைமோதிக் கொண்டிருந்த கூட்டம்; புதிய, பழைய, காய்ந்த மற்றும் எரிக்கப்பட்டப் பசுஞ்சாணி; வாசனைப் பத்திகள்; மசாலாக்கள்; மீன்கள்; ஓடையின் துர்நாற்றம்; இன்னும் நூற்றுக்கணக்கான விஷயங்கள் எனது புலன்களைத் தாக்கின. என் உறவினர்கள் என்னை ஓர் அறைக்கு அழைத்துச் சென்று, ஒரு பெண்ணுக்குச் செய்யப்படுவதுபோல எனது கால்விரல்களிலும் உள்ளங்கைகளிலும் எனக்கு மருதாணி பூசினர். வெயிலில் காய வைக்கப்பட்டப் பாக்கைப்போலச் சுருங்கிய தோல்களுடன் இருந்த மூதாட்டிகள் இல்லற சுகத்தைப் பற்றிய பாடல்களைப் பாடினர். இவை மனித ஆன்மாவின் ஆழத்திலிருந்து வந்தன. இனப்பெருக்கம்தான் மனிதகுலம் பிழைத்திருப்பதற்கான ஒரே கருவி என்ற ஒரு நிலையான உண்மையை அப்பாடல்கள் போற்றின. நான் அந்த மூதாட்டிகளைப் பார்த்துச் சிரிக்காமல் இருந்திருக்க வேண்டும்.

ஒரு பெரிய மேடை நிர்மாணிக்கப்பட்டிருந்த ஓர் அறைக்கு அவர்கள் என்னை அழைத்துச் சென்றனர். அது கண்ணைக் கூசச் செய்யும் விதத்தில் அலங்கரிக்கப்பட்டிருந்தது, ஆனாலும் அது அழகாக இருந்தது. சாமந்தி மற்றும் மல்லிகை மலர்களால் ஆன மாலைகள் எல்லா இடங்களிலும் தொங்கவிடப்பட்டிருந்தன. சிவன் மற்றும் பார்வதியின் உருவங்கள் வரையப்பட்ட ஒரு பெரிய ஓவியம் மேடையின் பின்னால் மாட்டப்பட்டிருந்தது. இவை போதாதென்று, மூன்று பிராமணர்கள், ஒரு நெருப்பைச் சுற்றி அமர்ந்து கொண்டு, தவளைகளைப்போலக் கத்திக்

கொண்டிருந்தனர். என்ன இது? தேவர்களின் வழக்கமல்லவா இது? அசுரர்களின் திருமணங்கள் எப்போதுமே எளிமையான விவகாரங்களாகவே இருந்து வந்திருந்தன. இந்த மூன்று பிராமணர்களை அழைத்துச் சடங்குகளை நடத்திக் கொண்டிருந்தது யாருடைய யோசனை என்று எனக்குத் தெரியவில்லை. அப்போது என் தந்தை அங்கே வந்து ஒரு பெரிய நாற்காலியில் அமர்ந்திருந்ததை நான் கண்டேன். அவரது பாதங்களை இதமாகப் பிடித்துவிட்டபடி என் தாயார் அவரருகே தரையில் அமர்ந்திருந்தார். என் சகோதரன் விபீஷணனும் மரியாதையோடு எங்கள் தந்தையின் அருகே நின்று கொண்டிருந்தான். பிரஹஸ்தனைத் தவிர எனது மந்திரிகள் அனைவரும் அடிமைகளைப்போலப் பணிவாக நின்று கொண்டிருந்தனர். எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்திருந்த ஒரு பேரரசர்போல அவர்கள் என் தந்தையை நடத்தினர். சூர்ப்பனகை எங்கள் தந்தையின் மனத்தைக் கவர்வதற்குப் பெரிதும் முயற்சித்துக் கொண்டிருந்தாள், ஆனால் அவர் அவள் கூறிய எதையும் கண்டுகொள்ளவே இல்லை. ஒழுக்கங்கெட்ட அந்த வயதான மனிதனின் கண்கள், தோட்டத்துச் செடிகளுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்த வேலைக்காரப் பெண்ணின் உடலை அளந்து கொண்டிருந்தன.

"பெருமைமிக்கத் தந்தை, மாபெரும் சாதனையாளனான தனது மகனைச் சந்திக்கிறார். ஆஹா! எப்பேற்பட்ட உணர்ச்சிகரமான காட்சி," என்று கூறி, கும்பகர்ணன் பெரிதாகச் சிரித்தான்.

"இங்கு மீண்டும் ஒன்றாகக் கூடியிருக்கும் நமது குடும்பத்தினருடன் நீ சேர்ந்து கொள்ளவில்லையா?" என்று நான் கும்பகர்ணனிடம் கத்தினேன். என் கோபத்தை என்னால் அடக்க முடியவில்லை.

"அதில் கலந்து கொள்ள வேண்டாம் என்று நான் தீர்மானித்தேன். நமது குடும்பப் பாடலின் வரிகள் எனக்கு மறந்துவிட்டது என்று நான் நினைக்கிறேன்." கும்பகர்ணன் இப்போது தன் வயிறு குலுங்கச் சிரித்துக் கொண்டிருந்தான். அவனுக்குள்ளே போயிருந்த நாட்டுச் சாராயத்தின் நெடி என்னை ஒரு வெடிபோலத் தாக்கியது. நான் அவனை வெறுப்போடு பார்த்தேன். குண்டாகவும் அசிங்கமாகவும் ஒரு பானை வயிற்றுடனும் இருந்த அவன் நாற்பது வயதுக்காரனைப்போலத் தோன்றினான். அவனுக்கு இருபது வயது என்று கூறினால் யாரும் நம்ப மாட்டார்கள். நான் அவனுடைய தலைமுடியை இறுகப் பற்றி, அவனது தலையைச் சுவரின்மீது மோதினேன். பிறகு, "இப்படிக் குடித்துவிட்டு வருவதற்கு உனக்கு என்ன துணிச்சல்? ஒன்றுக்கும் உதவாத கயவனே . . ." என்று அவனைப் பார்த்துக் கத்தினேன். நான் தொடர்ந்து அவனது தலையைச் சுவரின்மீது மோதிக் கொண்டே இருந்தேன். அவன் எனது

தாக்குதலைச் சமாளிக்க முயன்று தோற்றுப் போனான்.

இந்த அமளிச் சத்தத்தைக் கேட்ட எங்கள் குடும்பத்தினரின் ஒன்றுகூடல் கலைந்தது. அவர்கள் எல்லோரும் நானும் கும்பகர்ணனும் இருந்த இடத்திற்கு ஓடி வந்தனர். கும்பகர்ணன் நிலை குலைந்து ஓர் உரக் குவியல்போலத் தரையில் விழுந்தான். அவனது மூக்கிலிருந்து ரத்தம் ஒழுகியது. அவன் வலியில் முனகினான். பளார்! எனது தாயாரின் கை எனது காதணியில் வெட்டுப்பட்டிருந்ததை நான் வியப்போடு பார்த்தேன். அவர் என்னை எனது மந்திரிகள் மற்றும் எனது வேலைக்காரர்களின் முன்னிலையில் அடித்திருந்தார். இப்போது இக்கதை நாடு முழுவதிலும் ஒரு காட்டுத்தீயைப்போலப் பரவிவிடும். தனது தாயாரின் முந்தானைக்குப் பின்னால் நடந்து வந்த ஓர் அரசன் என்றும், தனது தாயாரால் ஒரு குழந்தையைப்போல நடத்தப்பட்ட ஓர் அரசன் என்றும் எல்லோரும் என்னை ஏளனம் செய்வார்கள்.

நான் மாரீசனை வேகமாக விலக்கிக் கொண்டு போனபோது அவன் பின்னோக்கி விழுந்ததில் அவனது தலை அத்தரையின்மீது மோதியதை நான் என் ஓரக்கண்ணால் பார்த்தேன். ஆனால் அது குறித்து நான் கவலைப்படவில்லை. நான் என் தாயாரின் தலைமுடியைப் பற்றி, அந்த அறைக்கு வெளியே அவரை இழுத்துச் சென்றேன். பிரஹஸ்தன் தன் கைகளைத் தனது முதுகிற்குப் பின்னால் கட்டிக் கொண்டு என்னை முறைத்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்ததைக் கண்ட நான் ஆணியடித்தாற்போல நின்றேன். என் தாயாரின்மீதான பிடியை நான் தளர்த்தினேன். என் தாயார் தட்டுத்தடுமாறித் தன் நிலையைச் சரி செய்து கொண்டார். நான் செய்திருந்த குற்றத்தின் தீவிரம் என்னை ஓர் இடியைப்போலத் தாக்கியது. நான் அதிர்ச்சியடைந்தேன், சின்னாபின்னமானேன், ஆனால் என் மனத்தில் எங்கோ ஒரு மூலையில் நான் திருப்தியும் மகிழ்ச்சியும் கொண்டேன்.

பிரஹஸ்தன் என்னை லேசாகப் பணிந்து வணங்கிவிட்டு, "அரசே, உங்கள் கைதி தனது தண்டனைக்குத் தயாராக இருக்கிறான்," என்று கூறினான். ஒரு கணம் என் மனம் வெறுமையாகிப் போனது. கைதியா? எந்தக் கைதி? வருணனின் விவகாரம் என் மரணப்படுக்கைவரை என்னைப் பின்தொடர்ந்து வரும்போலத் தோன்றியது.

என் தாயார் எனக்குப் பின்னாலிருந்து, "முதலில் நீ என்னுடைய விவாகரத்தை முடிக்கும் வழியைப் பார். நான்தான் உனது முதல் கைதி!" என்று உரத்தக் குரலில் கத்தினார். "என்னுடைய தலையை மழித்து, என்னை ஒரு கழுதையின்மீது நிர்வாணமாக அமர்த்தி இந்த நகரைச் சுற்றி அழைத்துச் செல். ஏன் நிறுத்திவிட்டாய்? சண்டாளா!"

நான் அவமானத்தில் தலை குனிந்து நின்றேன். எனது தாயாரின்

காட்டுக் கத்தல், அடக்க முடியாத அழுகையாக மாறியிருந்தது. என் கைகள் நடுங்கின. யாருடைய முகத்தையும் என்னால் பார்க்க முடியவில்லை. யாரோ என் தோளில் ஒரு கை போட்டனர். "கைகசி, அவன் இன்னும் மாறவில்லை. இந்த அரக்கன் பிறப்பதற்கு நான் காரணம் என்று கூற எனக்கு அவமானமாக இருக்கிறது. நான் இந்த விழாவில் கலந்து கொண்டு பெருமைப்படுத்தலாம் என்று நினைத்து, இந்தப் பேயின் திருமணச் சடங்குகளை நடத்தி வைப்பதற்கு, கற்றறிந்த எனது நண்பர்களை இங்கு அழைத்து வந்தேன். என் நண்பர்களின் முன்னிலையில், இந்தச் சாத்தான் தனது தாயாரை அடித்து உதைத்து, தனது சகோதரனைக் கிட்டத்தட்டக் கொல்ல முயற்சிக்கிறது!"

என் நரம்புகளில் கோபம் ஏறிக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. கோபத்தில் நான் அந்த மேல்மாடத்தின் கைப்பிடிச் சுவரை இறுக்கமாகப் பிடித்தேன். ஒன்றுக்கும் உதவாத இந்த பிராமணன், நாங்கள் பசியால் வாடியபோது எங்கே போயிருந்தான்? உணவிற்காகவும் உடைகளுக்காகவும் என் தாயார் யாசகம் கேட்டு நின்றபோது இவன் எங்கே இருந்தான்? மழைக்காலத்தில் ஏற்பட்டத் திடீர்ப்புயல்களில் ஆட்டம் கண்ட எங்களது சிறிய குடிலில், எங்கள் உயிர்களைக் கையில் பிடித்துக் கொண்டு மிக ஆபத்தான நிலையில் நாங்கள் வாழ்ந்த நேரத்தில் இவன் எங்கே போயிருந்தான்? நாங்கள் இவ்வளவு துன்பத்தையும் அனுபவித்துக் கொண்டிருந்த நேரம் முழுவதும், ஒழுக்கங்கெட்ட இந்த பிராமணன், இந்தியாவின் இன்ப விடுதிகளில் உல்லாசமாக இருந்திருப்பான்.

"நான் அவனைத் தனியாகக் குறைகூறக்கூடாது. என்ன இருந்தாலும், அவன் ஓர் அசுரன்தானே? இதைவிட அதிக இழிவான ஓர் இனத்தை நான் இன்னும் பார்க்கவில்லை. வரம்பு மீறிய ஒழுக்கக்கேடு, பேராசை, மிதமிஞ்சியக் குடிப்பழக்கம் — எந்தவொரு தீமையை எடுத்துக் கொண்டாலும், இந்த இனத்தால் அதில் சுலபமாக ஏகபோக உரிமை கொண்டாட முடியும். கருத்தத் தோலைக் கொண்ட அசிங்கமான ஜந்துக்கள் . . ."

"நாங்கள் அவ்வளவு மோசமானவர்களாக இருந்தால், நீ ஏன் என் சகோதரியை மணந்து கொண்டாய்?" என் மாமன் மாரீசனின் குரலைக் கேட்டு நான் ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தேன். அவன் அமைதியாகத்தான் இருந்தான், ஆனால் அவனது கோபத்தை என்னால் உணர முடிந்தது.

"மூட அசுரனே, நீ உன் வாயை மூடிக் கொள். நான் என் மனைவியிடமும் மகனிடமும் பேசிக் கொண்டிருக்கிறேன். உன்னைப் போன்ற ஒருவனுக்கு நான் பதில் கூறுவதில்லை." சிவந்த நிறத்தில் ஒரு

சிறு துளி வெற்றிலைச் சாறு என் தந்தையின் வாயின் ஓரத்திலிருந்து வழிந்தது.

மாரீசன் அவரை வெறுப்போடு பார்த்துவிட்டு, பிறகு என்னை நோக்கித் திரும்பினான். நான் என்னால் இயன்ற அளவுக்கு என்னை நிமிர்த்திக் கொண்டு, பயமுறுத்தும் விதத்தில் என் தந்தையை நோக்கி அடியெடுத்து வைத்தேன். அவர் பயத்தில் சுருளத் துவங்கினார். நான் அவரைவிட இரண்டடி உயரமாக இருந்தேன். ஒரே அடியில் அவரைக் கொல்லும் அளவுக்கு நான் கோபமாக இருந்தேன், ஆனால் என் தாயாரிடம் நான் நடந்து கொண்ட விதம் குறித்து நான் இன்னும் அவமானமாக உணர்ந்தேன். இதுதான் சரியான கணம் என்பதைப் புரிந்து கொண்ட என் தாயார், எங்கள் இருவருக்கும் நடுவில் நுழைந்தார். பிறகு, எனது கைகளை எனது மார்பின்மீது தூக்கி வைத்து என்னைப் பின்னால் தள்ளினார். நான் அவரது முகத்தைப் பார்த்தேன். அவரை நான் அடித்தது குறித்த அவமானம் மீண்டும் என்னைத் தாக்கியது.

என் தாயார் பேசத் துவங்கினார். "நான் இங்கிருந்து போகிறேன். உன் தந்தையும் சகோதரர்களும் சகோதரியும் நானும் இங்கிருந்து போகிறோம். இனி ஒருபோதும் உன் வீட்டிற்குள் நான் அடியெடுத்து வைக்க மாட்டேன். நாங்கள் மீண்டும் உன்னைப் பார்க்க விரும்பவில்லை. நாங்கள் இறக்கும்போது, எங்களது சடலங்களைப் பார்க்க நீ வராதே. அதிகாரம் உன்னை ஓர் அரக்கனாக மாற்றியுள்ளது. நீ . . . நீ . . . ஒருபோதும் அமைதியைக் காண மாட்டாய் . . ."

தள்ளாடிப் பின்னால் சாய்ந்த நான், நிலைகுலைந்து கீழே விழுந்துவிடாமல் இருப்பதற்காக, அந்த அறையின் மூலையில் இருந்த ஒரு தூணைப் பிடித்தேன். என் தாயார் என் சகோதரி சூர்ப்பனகையின் கையைப் பற்றியதை நான் கண்டேன். அவர் அவளை இழுத்துச் சென்றபோது அவள் அழுது கொண்டிருந்தாள். அப்போது என் முகத்தைப் பார்த்த அவள், என் கண்களிலிருந்து வழிந்து கொண்டிருந்த கண்ணீரைக் கண்டதும், மெல்ல மெல்ல என் தாயாரின் பிடியிலிருந்து தன்னை விடுவித்தாள். அப்போது என் தாயாரின் முகத்தில் தென்பட்ட அதிர்ச்சியை என்னால் பார்க்க முடிந்தது. அவர் நேராகக் கும்பகர்ணனை நோக்கி நடந்து சென்றார். அவன் தன் கைகளையும் கால்களையும் தரையில் பரப்பிய நிலையில் விழுந்து கிடந்தான்.

"கும்பகர்ணா, எழுந்திரு! எழுந்திரு!" ஆனால் என் தாயாரின் கத்தலால், குடி மயக்கத்திலிருந்த அவனை எழுப்ப முடியவில்லை. அதைக் கண்டு நான் கிட்டத்தட்டச் சிரித்துவிட்டேன். "ராவணா, நீ அவனைக் கொன்றுவிட்டாய். உன் சொந்தச் சகோதரனை நீ

கொன்றுவிட்டாய்," என்று என் தாயார் அலறினார்.

அங்கு நிலவிய சூழ்நிலை இப்போது வேடிக்கையாக ஆகத் துவங்கியிருந்தது. "அம்மா, அவன் சாகவில்லை. குடி மயக்கத்தில் அவன் தன்னினைவின்றி விழுந்து கிடக்கிறான். அவனைத் தனது தோள்களில் தூக்கிச் செல்லுமாறு, சிவந்த தோலைக் கொண்ட உன்னுடைய வசீகரமான கணவரிடம் கூறுங்கள்." அந்த குண்டுக் கோமாளி, யானையைப்போல இருந்த தனது மகனைத் தனது தோள்களில் சுமந்து செல்லும் காட்சியைக் கற்பனை செய்த நான் வாய்விட்டு உரக்கச் சிரித்தேன்.

நான் எனது இளைய சகோதரனான விபீஷணனை நோக்கி நடந்து சென்றபடி, "விபீஷணா, மாபெரும் தேவ மகானான, கற்றறிந்த இந்த பிராமணனுடன் நீயும் போக விரும்புகிறாயா?" என்று கேட்டேன்.

"இல்லை, அண்ணா . . . வந்து . . ." விபீஷணன் திக்கித்திக்கிப் பேசினான். நான் அவனுக்கு மிக அருகில் வந்தபோது, அவன் தனது நெற்றியில் பூசியிருந்த விபூதியின் வாசனை என் மூக்கைத் துளைத்தது. அவன் வியர்வையில் குளித்திருந்தான்.

"உனது பிராமணத் தகப்பனை நீ ஏன் பின்தொடர்ந்து செல்லவில்லை? அனைத்து விதமான மந்திரங்களையும் உனக்குக் கற்றுக் கொடுத்து, மிக உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த ஒரு திருடனாக அவரால் உன்னை உருவாக்க முடியும். உன்னுடைய வழக்கமான தியானங்களை உன்னால் தடையின்றி மேற்கொள்ள முடியும். விஷ்ணு அல்லது இந்திரன் அல்லது வேறு ஏதேனும் தேவக் கடவுளை உனது தனிப்பட்டப் பாதுகாப்பாளனாக உன்னால் வைத்துக் கொள்ள முடியும். அதையும் அதைவிட அதிகமானவற்றையும் உன் தந்தையால் உனக்குக் கற்றுக் கொடுக்க முடியும்." நான் என் தந்தையை நோக்கி நடந்தேன். அவரது முகம் பேயறைந்தாற்போல இருந்தது. நெருப்பைச் சுற்றி அமர்ந்து ஓதிக் கொண்டிருந்த பிராமணர்கள் தங்கள் மந்திரங்களை நிறுத்தியிருந்தனர். அவர்களில் ஒருவன், தன் கைகளுக்கு அகப்பட்ட அனைத்தையும் அள்ளிப் போட்டுக் கொண்டு, அங்கிருந்து புறப்பட உண்மையிலேயே தயாராகிக் கொண்டிருந்தான். மற்றவர்களின் உடமைகள் குறித்து அவன் கொண்டிருந்த பேராசை, மரணம் குறித்த அவனது பயத்தைவிட அதிகமாக இருந்தது. நான் சத்தம் போட்டுச் சிரித்தேன். அந்த மூவரில் ஒரு பிராமணன், என்னுடைய நல்ல பித்தளை விளக்குகள் இரண்டைத் தன் மார்போடு சேர்த்துப் பிடித்துக் கொண்டு, அங்கிருந்த சன்னல் வழியாக வெளியே குதித்தான். இன்னொருவனிடம் ஒருசில பாத்திரங்கள் இருந்தன. அவன் அவற்றுடன் யாருக்கும் தெரியாமல் அங்கிருந்து வெளியேற முயற்சித்தான். நான் அவனுடைய

குடுமியை இறுக்கமாகப் பிடித்தேன். அவன் என் பாதங்களில் விழுந்து எதையோ முணுமுணுக்கத் தொடங்கினான். அவன் தனது குவளையிலிருந்து தனது புனித நீரை எடுத்து என்மீது தெளித்துவிட்டு என்னைச் சபிப்பான் என்றும், பிறகு நான் ஒரு தவளையாகத் தோட்டத்தைச் சுற்றித் தாவிக் குதித்துக் கொண்டிருப்பேன் என்றும் நான் நினைத்தேன்.

மாறாக, அவன் என்னைப் புகழ்ந்து கொண்டிருந்தான் என்பதை உணர்ந்து கொள்ள எனக்குச் சிறிது நேரம் ஆனது. சிவசிவா! என்னைப் புகழ்ந்து ஒரு மிகப் பெரிய பாடலைப் பாடி, அந்த இடத்திலேயே நீட்டி முழக்கி ஒரு சொற்பொழிவாற்றுவதற்குள் அந்தக் கோமாளியை நான் அங்கிருந்து துரத்த வேண்டியிருந்தது. அதுவும், அவன் அத்தரையில் விழுந்து கிடந்த நிலையில் அவற்றைச் செய்வதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. நான் அவனை எட்டி உதைத்தேன். அவன் விறுவிறுவென்று எழுந்து, தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அங்கிருந்து ஓட்டமெடுத்தான். என் தந்தை என்னைச் சபிக்க விரும்பினார்போலும், ஆனால் தனது பயத்தால், அவரால் தன் வாயைத் திறக்கக்கூட முடியவில்லை. எனது தாயார், தன்னால் இயன்ற அளவுக்கு மதிப்பை வரவழைத்துக் கொண்டு, என் தந்தையின் நடுங்கிக் கொண்டிருந்த கைகளைப் பிடித்துக் கொண்டு, மிகவும் உணர்ச்சிகரமான முறையில், “நான் இறக்கும்போதுகூட இந்த நரகத்திற்குள் நான் காலெடுத்து வைக்க மாட்டேன். நீயோ, உனது சகோதரியோ அல்லது உனது சகோதரர்களோ என் சடலத்தைப் பார்ப்பதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். உன் பெற்றோரை நீ அவமதித்துள்ளதற்கு நீ ஒரு விலையைக் கொடுக்கப் போகிறாய். அது இந்தப் பிறவியிலா அல்லது அடுத்தப் பிறவியிலா என்று எனக்குத் தெரியாது, ஆனால் நீ நிச்சயமாக இதற்கு மிகப் பெரிய ஒரு விலையைக் கொடுப்பாய்,” என்று முழங்கினார்.

என் தந்தை மிகவும் சிரமப்பட்டுப் பின்தொடர, என் தாயார் எனது அரண்மனையிலிருந்து வெளியேறினார். அரண்மனைச் சேவகர்களும், மற்றவர்களும், அரண்மனையில் நடந்து கொண்டிருந்த நாடகத்தை ரகசியமாக அனுபவிக்க அங்கு கூடியிருந்தவர்களும், இவர்களுக்கு வழிவிட்டு ஒதுங்கி நின்றனர். இரண்டு பிராமணர்களும் ஒருசில வேலைக்காரர்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். அறையின் மூலையிலிருந்து ஒரு லேசான அழுகை வந்தது. என் சகோதரி தனது கைகளில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு, கட்டுப்படுத்த முடியாதபடி அழுது கொண்டிருந்தாள். விபீஷணன் செய்வதறியாமல் அவளுக்கு முன்னால் நின்றான். நான் அவளிடம் சென்று, அவளது

தோள்களில் என் கைகளை வைத்தேன். அவள் என் மார்பின்மீது சாய்ந்து என்னை இறுக்கமாக அணைத்துக் கொண்டாள். நான் அவளை ஏமாற்றியிருந்தேனா? நான் அவளுக்குத் தவறிழைத்துவிட்டிருந்தேனா? எதோ ஒன்று என்னைச் சுண்டி இழுத்தது. "எனதருமைச் சகோதரியே, நான் உன்னிடமிருந்து எதைப் பறித்துள்ளேன்?"

"அங்கே . . . அங்கே . . ." எனது அந்த வார்த்தைகள் எனக்கே அர்த்தமற்றவையாக இருந்தன. ஆனால் நான் தொடர்ந்து, "அங்கே . . . அங்கே . . ." என்று கூறினேன். மாரீசன் என்னிடம் வந்து, என் தோள்களை மென்மையாகத் தொட்டான். பிரஹஸ்தன் ஒரு தூணைப்போல நின்றான். அவனது கண்கள், தூரத்துத் தொடுவானில் ஏதோ ஒரு புள்ளியில் நிலைத்திருந்தன. நான் என் சகோதரியின் முகவாயை உயர்த்தி, ஒரு சகோதரனால் வெளிப்படுத்தக்கூடிய அன்பு முழுவதையும் ஒன்றுதிரட்டி, "சூர்ப்பனகை, என்ன நிகழ்ந்தாலும் சரி, நம் வாழ்விலிருந்து யார் விலகிச் சென்றாலும் சரி, நான் உனக்காக என்றென்றும் இருப்பேன். ஒரு சகோதரனாக, ஒரு நண்பனாக, ஒரு தகப்பனாக, ஒரு தாயாக நான் உனக்கு இருப்பேன். உன் அன்புக்குரிய சகோதரனை நீ நம்புகிறாயா?" என்று அவளிடம் கேட்டேன்.

தனது கண்களில் கண்ணீர் மின்ன, அவள் என்னைப் பார்த்துப் புன்னகைத்துத் தலையாட்டினாள். நான் பயந்தேன். இந்த வாக்குறுதியை என்னால் காப்பாற்ற முடியுமா? அவளது சூதுவாதின்மையை நான் சின்னாபின்னமாக்க விரும்பவில்லை. எனவே, அவளது தலைமுடியை என் விரல்களால் கோதியவாறு, அவளை இன்னும் சிறிது நேரம் அப்படியே தாங்கிப் பிடித்தேன். அப்போது எனது கர்வமும் கோபமும் திரும்பி வந்தன. நான் மீண்டும் நானாக ஆனேன். மெதுவாக, ஆனால் உறுதியாக, நான் அந்த அறையிலிருந்து வெளியே நடந்தேன். கதவருகே நின்ற காவலர்கள் குனிந்து வணங்கினர், ஆனால் உள்ளுக்குள் அவர்கள் நகைத்துக் கொண்டிருந்ததை நான் அறிந்தேன். ஆனால் அவர்களைக் கண்டுகொள்ளாமல், தோட்டத்தில் சிறிது நேரம் உலவுவதற்காக அவர்களை வேகமாகக் கடந்து சென்றேன். என் வாழ்வில் ஓர் அத்தியாயம் முடிந்துவிட்டது. வார்த்தைகளால் விவரிக்க முடியாத அளவுக்கு நான் வருத்தமாக இருந்தேன். என் தாயாரின் உருவமும், எங்களுக்கு உணவும் உடையும் வழங்குவதற்கு அவர் சந்தித்தப் போராட்டங்கள், உயிரோடு இருப்பதற்கு நாங்கள் பட்டச் சிரமங்கள், அவர் எனக்கு உத்வேகமாக இருந்து வந்தது போன்ற காட்சிகளும், செரிமானமாகாத உணவு மேலே வந்து தொண்டையை அடைப்பதைப்போல என் நினைவில் வந்து என்னைத் திணறடித்தன.

ஆனால் ஒரு சிறு மகிழ்ச்சிக் குமிழ் என் மனத்தில் மேலும் மேலும் பெரிதாக வளரத் துவங்கி, பிறகு என் முழு மனத்தையும் நிரப்பியது. ஒருவழியாக எனக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டது! தாய்ப் பறவையின் பாதுகாப்பான சிறகுகளிலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது. இப்போது என்னைத் தடுத்து நிறுத்துவதற்கு எது இருந்தது?பழங்கால நன்னெறிகள் எதுவும் இல்லை, ஒரு கண்டிப்பான தாயாரின் குரல் இல்லை, சம்பிரதாயத்தின் பெயரைச் சொல்லி என்னைக் கட்டிப் போடுவதற்கு நான் உண்மையிலேயே மதித்த ஒருவர்கூட இல்லை. ராவணன் இனிமேலும் ஒரு சிறுவனல்ல. இன்றிலிருந்து, அரச பதவி ஒரு சுமையாக இருக்காது. நான் அரசனாகவும் பேரரசனாகவும் உலகின் அதிபதியாகவும் இருப்பதை மகிழ்ச்சியாக அனுபவித்தேன். அன்று காலையில், எனது திருமண நாளில், ராவணன் மீண்டும் பிறந்தான்.

என்னுடைய அனைத்துக் கனவுகளையும்போலவே, இதுவும் பிரஹஸ்தனால் தகர்க்கப்பட்டது. திருமணத்திற்காக மணப்பெண் காத்துக் கொண்டிருந்ததாகவும், தண்டிக்கப்படுவதற்காக எனது கைதி காத்துக் கொண்டிருந்ததாகவும் அவன் கூறினான். நான் சோர்வாக எழுந்து நின்று, எனது வேலைகளைச் செய்து முடிக்கச் சென்றேன். இனி வரும் நாட்களில், நான் மீண்டும் மீண்டும் கனவு காண்பேன். இளமையின் அமுதத்தை நான் கண்டுபிடித்திருந்தேன். நான் தொடர்ந்து மிகவும் பிரம்மாண்டமாகக் கனவு கண்டுகொண்டிருக்கும்வரை அந்த அமுதம் ஒருபோதும் தீராது. எனது கனவுகள் எனது கதையாக ஆயின.



# 22

## கலகக்காரர்கள்

பத்ரன்

ஊளையிட்டுக் கொண்டிருந்த பெருங்கடலுக்குள், மரணத்தின் வாய்க்குள் நான் விழுந்தேன். நான் என் முயற்சியைக் கைவிடவிருந்த நேரத்தில், கொந்தளித்துக் கொண்டிருந்த தண்ணீருக்கு மேலே என் தலை வெளியே வந்தது. நான் பலமாக இருமினேன். அப்போது இன்னோர் அலை என்னை நீருக்கு அடியில் மீண்டும் கொண்டு சென்றது. அது என் உடலின் பலநூறு பாகங்களில் வேதனையை ஏற்படுத்தியது. உயிர் பிழைத்திருப்பதற்கான முயற்சியைக் கைவிட்டுவிட்டு, வெறுமனே கடலின் ஆழத்திற்குள் மூழ்கிப் போவது சுலபமானதாக இருந்திருக்கும். ஆனால் தேவர்கள் எனும் பேய்களால் வெட்டிக் கொல்லப்பட்ட என் மனைவி மற்றும் மகளின் உருவங்கள் என் கண்களின் முன்னே நடனமாடின. அது என் கைகளுக்கு வலிமையையும் கால்களுக்கு சக்தியையும் கொடுத்தது. நான் மீண்டும் நீரை என் கால்களால் உதைக்கத் துவங்கினேன். நான் மீண்டும் நீரின் மேற்பரப்பிற்கு வந்தபோது, கடலின்மீது மிதந்து சென்ற கப்பல்கள்

தொலைதூரத் தொடுவானின்மீது புள்ளிகளைப்போலத் தோன்றியதை என்னால் காண முடிந்தது. சூறாவளிக் காற்று என்னைத் துவைத்தெடுத்தது. தண்ணீர் பாளம்பாளமாக என் முகத்தின்மீது வந்து விழுந்தது. நான் என் தலையை அலைகளுக்கு மேலே வைத்திருக்க முயற்சித்தேன், ஆனால் எங்கே நீந்திச் செல்ல வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. ஊளையிட்டுக் கொண்டும் பலமாக ஆடிக் கொண்டும் கும்மிருட்டாக இருந்த அந்தக் கடலில், உதவுவதற்கு ஆளின்றி நான் மேலும் கீழும் மிதந்து கொண்டிருந்தேன். கடலின் சீற்றம் போதாதென்று, ஒரு சாம்பல்நிற வானமும் அச்சுறுத்தத் துவங்கியிருந்தது.

ஒருசில அடிகள் தள்ளி எதுவோ மிதந்து கொண்டிருந்தது. நான் அதை நோக்கி நீந்தினேன். கொல்லப்பட்ட ஒரு வீரன் ஒரு மரக்கட்டையைப்போல மிதந்து கொண்டிருந்ததைக் கண்டு நான் பீதியடைந்தேன். நான் என்னால் முடிந்த அளவுக்கு வேகமாக நீந்தி, மல்லாக்க மிதந்தபடி இருக்க முயற்சித்தேன். சிறிது நேரத்திற்குப் பிறகு, ஒருசில நூறு அடிகள் தள்ளி ஒரு பழைய மரக்கட்டை மிதந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். அதுவும் கொல்லப்பட்ட இன்னொரு வீரனாகவோ அல்லது கடற்கொள்ளையனாகவோ இருக்குமோ என்று பயந்தேன். இறுதியில், அது என்னவென்று பார்க்கத் தீர்மானித்து, அதை நோக்கி நீந்தினேன். அது ஒரு பழைய மரத்தின் தண்டுப் பகுதி. நான் அதன்மீது ஏறினேன். மிகவும் களைத்துப் போயிருந்த நான், என்னிடம் எஞ்சியிருந்த வலிமை அனைத்தையும் ஒன்றுதிரட்டி அதை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன். அந்தக் கொடூரமான அலைகள் இரண்டு முறை என்னைக் கீழே தள்ளின, ஆனால் சிறிது நேரத்தில் அக்கடல் மெல்ல மெல்ல அமைதியடைந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். மழையும் வெறிக்கத் துவங்கியது. நீலவானில் நட்சத்திரங்கள் வெளியே தலைகாட்டின. நான் எனது முண்டாசைக் கழற்றி, என்னை அந்த மரத்துண்டோடு சேர்த்துக் கட்டிவிட்டுத் தூங்கிவிட்டேன். நான் கண்விழித்தபோது, முன்பு எனக்குப் பரிச்சயமான முகம் ஒன்று என் முன்னால் நின்றது. அந்த முகத்தை நினைவுபடுத்திப் பார்க்க நான் முயற்சித்தேன், ஆனால் என் தலை மிகவும் கனத்துப் போயிருந்தது.

“அவன் உயிர் பிழைப்பானா?” என்று ஓர் ஆழமான குரல் யாரோ ஒருவரிடம் கேட்டுக் கொண்டிருந்தது என் காதுகளில் விழுந்தது.

“நான் அப்படித்தான் நினைக்கிறேன்,” என்று ஒரு பெண்ணின் குரல் பதிலளித்தது. ஒரு கணத்தில் அவள் யாரென்பது எனக்குத் தெரிந்துவிட்டது. அது மாலா! நான் மறந்துவிட்டக் காதலி! நான் எழுந்து உட்கார முயற்சித்தேன், ஆனால் அவள் என்னை மீண்டும் தரையின்மீது

தள்ளினாள். அவள் ஏன் அந்தத் துரோகிக்காக என்னை விட்டுவிட்டுச் சென்றாள் என்று நான் அவளிடம் கேட்க விரும்பினேன். நாள் அவளைப் பார்த்துக் கத்தி, அவளுடைய தலைமுடியைப் பிய்த்தெறிந்து, அவளை எட்டி உதைக்க விரும்பினேன். நான் அவளை முத்தமிட விரும்பினேன். ஆனால் இவற்றில் எதையும் செய்ய வலுவற்றவனாக, களைப்போடு வெறுமனே அங்கு படுத்துக் கிடந்தேன்.

ஒரு நிழல் அவளுக்குப் பின்னால் அசைந்து, அங்கு தனியாக எரிந்து கொண்டிருந்த எண்ணெய் விளக்கை நோக்கிச் சென்றது. அந்த விளக்கொளியில் அதன் பாதி முகம் எனக்குத் தெரிந்தது. என்னை என் வாயை மூடிக் கொண்டு இருக்கும்படிச் செய்ததற்கு சிவனுக்கு நான் நன்றி கூறினேன். அந்த உருவம் வேறு யாருமல்ல, வித்யுத்ஜீவன்தான். அவன் என்னை அடையாளம் கண்டுகொண்டிருந்தால், நான் இறந்து நீண்ட நேரமாகியிருக்கும். கோபமும் பொறாமையும், சற்று முன் நான் தப்பித்திருந்த சூறாவளிக் காற்றைவிட அதிக ஆற்றலுடன் என்னைத் தாக்கின. அந்தச் சண்டாளி அவனோடு வாழ்ந்து கொண்டிருந்தாள். நீண்ட தலைமுடியையும், நல்ல நிறமான தோலையும், மேட்டுக்குடியினரைப் போன்ற மூக்கையும், ஆழமான, கரிய நிறக் கண்களையும், அகன்ற தோள்களையும், சிறந்த பேச்சுத் திறமையையும், திறன்மிக்கப் போர் உத்திகளையும் கொண்டிருந்த, நூற்றுக்கணக்கான மக்களின் கதாநாயகனாகத் திகழ்ந்த, எனது எஜமான் ராவணனின் எதிரியான அந்த நெட்டையான அசுரன், தனது உதடுகளில் ஓர் இகழ்ச்சிப் புன்னகையுடன் அங்கு நின்றான். என்மீது நானே பரிதாபப்பட்டேன். மாலா ஏன் எனக்குப் பதிலாக அவனைத் தேர்ந்தெடுத்திருந்தாள் என்பது அப்போது எனக்குப் புரிந்தது. ஒரு கரிய பானை வயிற்றையும், சீரற்ற மஞ்சள் நிறப் பற்களையும், சுருளான தலைமுடியையும் கொண்ட, குள்ளமான, குண்டான ஓர் அசுரன் நான். அவளைப் பொறுத்தவரை, நான் எதுவுமே இல்லை. மாலாவைப் போன்ற ஓர் அழகி, அந்தக் கதாநாயகனை விட்டுவிட்டு என்னைத் தேர்ந்தெடுப்பாள் என்று எப்படி என்னால் எதிர்பார்க்க முடிந்தது? “ஆனால், அசுரனே, நான் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன். என்றேனும் ஒருநாள் நீ என் பாதங்களில் விழுந்து கெஞ்சுவாய். அப்போது உனது இந்த இகழ்ச்சிப் புன்னகைக்குரிய விலையை நான் உன்னைக் கொடுக்கச் செய்வேன்,” என்று நான் என் மனத்திற்குள் பொருமினேன். எனது பிரம்மாண்டமான பழிவாங்கும் படலத்தைக் கற்பனை செய்தபடியே நான் மீண்டும் தூங்கிப் போனேன்.

நான் மீண்டும் கண்விழித்தபோது, கிட்டத்தட்ட நண்பகல் ஆகியிருந்தது. நான் படுத்திருந்த படுக்கைக்கு அருகே இருந்த மர

மேசையின்மீது ஏதோ கஞ்சி இருந்தது. அதன் மேற்பரப்பின்மீது மிதந்து கொண்டிருந்த ஒரு செத்த ஈயைத் தூக்கித் தூர எறிந்துவிட்டு, அக்கஞ்சியை நான் குடித்தேன். வெளியே அனைத்தும் ஆடாமல் அசையாமல் இருந்தன. கதவு பூட்டப்படாமல் இருந்தது எனக்கு ஆச்சரியமூட்டியது. நான் அந்த ஓலைக் குடிசைக்கு வெளியே வந்து நின்றேன். சூரிய ஒளி என் கண்களைக் கூசச் செய்தது.

வீட்டின் பின்புறத்திலிருந்து வந்த மாலா, "நீ எங்கே போயிருந்தாய்? நீ இந்தியாவிற்குத் திரும்பிச் சென்றுவிட்டதாக நான் நினைத்தேன்," என்று கூறினாள். துவைக்கப்பட்டத் துணிகளின் குவியல் ஒன்று அவளது இடது கையில் இருந்தது. அவற்றிலிருந்து தண்ணீர் வடிந்து, மணலின்மீது சுவாரசியமான வடிவங்களை ஏற்படுத்தியது.

"நான் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பல எடுபிடி வேலைகளைச் செய்து வாழ்க்கையை ஓட்ட முயற்சித்தேன்," என்று நான் அவளிடம் கூறினேன். நான் உண்மையில் என்ன செய்து கொண்டிருந்தேன் என்பதை அவள் தெரிந்து கொள்வதை நான் விரும்பவில்லை. நான் புன்னகைத்தேன். "நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" அவள் அந்தக் கயவனோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தாளா என்று நான் அவளிடம் கேட்க விரும்பினேன், ஆனால் என் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். அவள் என் உணர்வுகளைப் புரிந்து கொண்டதுபோலத் தோன்றியது. அவள் என்னருகில் வந்து, கோபமாக, "நீ என்னை விட்டுவிட்டுப் போய்விட்டாய். அவன் மட்டும்தான் அங்கு இருந்தான்," என்று கூறினாள்.

அவளை வேதனைப்படுத்தக்கூடிய பல சாதுரியமான பதில்களைப் பற்றி நான் சிந்திக்க முயற்சித்தேன், ஆனால் எதுவும் என் மனத்தில் உதிக்கவில்லை. மாறாக, நான் ஒரு முட்டாளைப்போலப் புன்னகைத்தேன்.

"அதோடு, நீ எப்போதும் என்னை ஒரு விலைமாதுவைப்போலவே நடத்தினாய். நான் உன்னை நேசிக்க முயற்சித்தபோதுகூட, நீ என்னை ஒரு போகப் பொருளாகவே பார்த்தாய். ஆனால் அவன் என்னை ஓர் உண்மையான பெண்ணைப்போல நடத்துகிறான்."

"நான் ஓர் ஏழை. அரசனைத் தூக்கியெறிவது குறித்த லட்சியங்கள் கொண்ட ஒரு வசீகரமான மனிதனல்ல நான். எனவே . . ."

"தொடர்ந்து பேசு. பத்ரா, உன்னுடைய குறைபாடுகள் அனைத்தையும் பட்டியலிடு. உன்னைப் பற்றி அவ்விதத்தில் பேசுவதில் உனக்கு ஒரு குரூர இன்பம் கிடைக்கிறது. நீ கூறும் இவ்விஷயங்கள் அனைத்தையும் நான் பல நூறு முறை உன் வாயிலிருந்து

கேட்டிருக்கிறேன்.”

அவளைப் பிடித்து நன்றாக அடித்து நொறுக்க வேண்டும்போல எனக்குத் தோன்றியது. அவள் என்னைக் கடந்து சென்றாள். அவளது முதுகில் அரும்பியிருந்த வியர்வை முத்துக்கள் சூரிய ஒளியில் ஒளிர்ந்தன. நான் ஓடிச் சென்று அவளை அணைத்துக் கொண்டேன். அவளும் தன் கையிலிருந்த துணிகளைக் கீழே போட்டுவிட்டு என்னை அணைத்துக் கொண்டாள். பிறகு திடீரென்று, அவள் என்னைத் தள்ளிவிட்டாள். நான் அவளைப் பிடிக்க முயன்றேன், ஆனால் அவள் என்னை மீண்டும் தள்ளிவிட்டு, கட்டுப்படுத்த முடியாதபடி, “இல்லை . . . இல்லை . . .” என்று கூறித் தேம்பினாள்.

கோபமும் பொறாமையும் வருத்தமும் என்னுள் அலையெனத் திரண்டன. அவளை நார்நாராகக் கிழித்துவிட வேண்டும்போலத் தோன்றியது. திடீரென்று, நான் நிராதரவாக இருந்தது போன்ற ஓர் உணர்வு என்னை ஆட்கொண்டது. நான் அவளை அங்கேயே விட்டுவிட்டு, அருகிலிருந்த செங்குத்துப் பாறைகளை நோக்கி நடந்தேன். அவற்றிலிருந்து கீழே குதித்து, எல்லாவற்றையும் அங்கேயே முடித்துக் கொண்டுவிடலாமா என்று நான் யோசித்தேன். நான் மிகவும் தனிமையாகவும் யாருக்கும் வேண்டாதவனாகவும் உணர்ந்தேன். கீழே குதிப்பதற்கும் பயந்து கொண்டு, வாழ்க்கையை நோக்கித் திரும்பிப் போகவும் பயந்து கொண்டு, நான் ஒரு பாறையின்மீது அமர்ந்தேன். எனது அரசனின் பொற்கொடி அவரது கோட்டையின் மேலே, ஓர் இருண்ட, கருப்பான புயல் மேகத்திற்கு எதிராகக் காற்றில் படபடத்துப் பறந்து கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. பிறகு நான் என் வாழ்க்கையை நோக்கித் திரும்பி நடந்தேன். நான் எனது குடிசையை அடைந்தபோது, முழுவதுமாக நனைந்திருந்தேன். ஆனால் அதீதக் களைப்பின் காரணமாக நான் அதைக் கண்டுகொள்ளாமல் படுக்கையில் விழுந்தபோது, ஒரு பல்லி ஓர் ஈயின்மீது பாய்வதற்குத் தயாராகக் காத்துக் கொண்டிருந்ததை நான் கவனித்தேன். அப்போது கதவை யாரோ லேசாகத் தட்டிய சத்தம் எனக்குக் கேட்டது. நான் எழுந்திருப்பதற்குள் மாலா அந்த அறைக்குள் நுழைந்தாள். அதிகரித்துக் கொண்டிருந்த எரிச்சலோடு நான் அவளைப் பார்த்தேன், ஆனால் நான் என் எரிச்சலை அவளிடம் வெளிக்காட்டுவதற்கு முன்பாக, வித்யுத்ஜீவனின் உயரமான உருவம் உள்ளே வந்தது.

“உட்கார்ந்து கொள், உட்கார்ந்து கொள்,” என்று அவன் என்னிடம் கூறினான். “நீ வேலை தேடிக் கொண்டிருப்பதாக மாலா கூறுகிறாள். இது ஒரு சண்டையிடும் அமைப்பே தவிர, ஒரு வர்த்தகச் சங்கம் அல்ல. இங்கு யாருக்கும் எந்த வேலையும் வரையறுக்கப்படவில்லை.” பிறகு

அவன் அங்குமிங்கும் நடந்து கொண்டு, தனது கைகளை ஆட்டியபடி, மிகைப்படுத்தும் விதத்தில் பேசினான். “அனைவருக்கும் சமமான மற்றும் நியாயமான ஓர் உலகை உருவாக்கவே நாங்கள் இங்கு இருக்கிறோம். நாங்கள் உருவாக்க விரும்புகின்ற உலகில் ராவணனைப் போன்ற கொடுங்கோலர்களுக்கு இடமில்லை. எல்லோரும் சமமானவர்களாக இருப்பார்கள். அரசர்களோ அல்லது ஜமீந்தாரர்களோ அங்கு இருக்க மாட்டார்கள். சாமியார்கள், மந்திரவாதிகள், வணிகர்கள் போன்ற, மக்களைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்ற ஏமாற்றுக்காரர்கள் இருக்க மாட்டார்கள். நான் உருவாக்குகின்ற புதிய உலகில் அனைத்து மக்களும் சமமானவர்களாக இருப்பார்கள்.” மூச்சு வாங்குவதற்காக அவன் சற்று நிறுத்தினான். ‘நாங்கள்’ என்பதிலிருந்து ‘நான்’ என்ற போக்கில் அவனது பேச்சு மாறியிருந்ததை நான் கவனிக்கத் தவறவில்லை.

“சாதி அமைப்புமுறை எனும் தீவினை முற்றிலுமாக ஒழிக்கப்பட்டுவிடும். வர்த்தகச் சங்கங்களை நான் ரத்து செய்வேன். நம் ஒவ்வொருவரிடமும் என்ன இருக்க வேண்டும் என்பதை மக்கள் அடங்கிய உயர்மட்டக் குழு ஒன்று தீர்மானிக்கும். எந்தவிதமான சுரண்டலையும் நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். இவ்வுலகிலுள்ள ராவணன்கள் அனைவரும் ஒடுக்கப்படுவர். எனது புதிய உலகில் எந்தவிதமான கடவுள்களும் இருக்க மாட்டார்கள். இவ்வுலகிலுள்ள இந்திரர்கள் முறியடிக்கப்படுவார்கள். சாமியார்கள் யாரும் இருக்க மாட்டார்கள். பணம் என்ற ஒன்று இருக்கவே இருக்காது. மக்கள் ஒருவருக்கொருவர் சேவை செய்து மகிழ்ச்சியாக வாழ்வார்கள். அவ்வுலகம் பத்ரனைப் போன்ற சாதாரணமான மக்களுக்குச் சொந்தமானதாக இருக்கும். பத்ரா, உங்களைப் போன்ற மக்களுக்கு நான் ஒரு சொர்க்கத்தை உருவாக்குவேன். ஒரு கச்சிதமான உலகத்திற்கான இந்த இறுதிச் சண்டையில் நீ எங்களோடு சேர்ந்து கொள்.”

அவனது பேச்சு என்னைக் கவரவில்லை என்று நான் கூற மாட்டேன். உலகத்தைச் சொந்தமாக்கிக் கொள்வது பற்றிய யோசனை கவர்ந்திழுப்பதாகத்தான் இருந்தது. எனக்கென்று சொந்தமாக இரண்டு நல்ல ஆடைகள்கூட என்னிடம் இருக்கவில்லை. ஆனால், முட்டாளான நான், அவனை ஒருபோதும் நம்பவில்லை. அவனது யோசனை குறித்து நான் உற்சாகமடைந்திருந்ததுபோலப் பாசாங்கு செய்தேன். ஆனால் உள்ளுக்குள், உருவாகிக் கொண்டிருந்த இன்னொரு கொடுங்கோலன் அவன் என்பதை நான் நன்றாக அறிந்திருந்தேன். எனது மட்டுப்படுத்தப்பட்ட அறிவு அந்த மாமனிதனின் முன்னோக்கைப்

புரிந்து கொள்ள மறுத்தது. என்னையும் ராவணனையும் நான் பார்த்திருந்த அனைத்து மனிதர்களையும் போலவே இவனும் கபடதாரி என்றே நான் எண்ணினேன். அசுர நாகரீகத்தை மீட்டெடுத்து மறுசீரமைப்பதென்று ராவணன் கொண்டிருந்த பிரம்மாண்டமான முன்னோக்கோ, சமதர்மச் சமுதாயத்தை அமைத்து, அதில் தான் கடவுளாக இருப்பதென்று வித்யுத்ஜீவன் கொண்டிருந்த கனவோ எனக்கு இருக்கவில்லை. உலகை எப்போதும் ஒரு சந்தேகக் கண்ணோட்டத்திலேயே நான் பார்த்தேன். வித்யுத்ஜீவனின் வார்த்தைகளில் கூறினால், ஒரு சாதாரண மனிதனின் தத்துவத்தை நான்கே வார்த்தைகளில் தொகுத்துக் கூறிவிடலாம்: எனக்கு அதில் என்ன இருக்கிறது? ஒரு சமதர்மச் சமுதாயத்தை நான் வரவேற்கிறேன். எனக்கு அதிலிருந்து பலன் கிடைக்கும் என்றால், ஒரு பிரம்மாண்டமான அசுர நாகரீகத்தைக்கூட நான் வரவேற்கிறேன். எனக்குத் தேவையெல்லாம் பழிக்குப் பழி, இரண்டு வேளை உணவு, கூடலின்பம் ஆகியவையே. முடிந்தால், மற்றவர்கள் இப்போது எவ்வாறு என்னை வெறுப்போடு நடத்துகிறார்களோ, அதேபோல நான் அவர்களை நடத்துவதற்குத் தேவையான செல்வத்தையும் பதவியையும் அடைவதற்கான ஒரு வாய்ப்பையும் நான் விரும்புவேன்.

எனது சொந்தத் தத்துவத்தை நினைத்து நான் புன்னகைத்தேன். எனது புன்னகையை எனது ஒப்புதலாக வித்யுத்ஜீவன் எடுத்துக் கொண்டான். அவன் எனது தோளில் தட்டிக் கொடுத்து, என்னை அணைத்துக் கொண்டான். ஆனால் எங்கள் இருவரின் உடல்களும் ஒன்றையொன்று தொடாமல் இருக்கும்படி அவன் பார்த்துக் கொண்டான். எல்லோரும் சமமானவர்களாக இருக்கக்கூடும், ஆனால் ஒரே விதத்தில் அல்ல. “எங்களுடைய பயிற்சி வகுப்பிற்கு வா. மாலா, இவனுக்கு உணவும் முறையான ஆடைகளும் கிடைக்குமாறு பார்த்துக் கொள். அவனைக் குளிக்கச் சொல்,” என்று கூறிவிட்டு, தனது பட்டு அங்கி சரசரக்க, வித்யுத்ஜீவன் அங்கிருந்து வெளியேறினான். அவனுக்குச் சமமான பத்ரனான நான் அவனுக்குச் சொந்தமானவளுடன் நின்றேன்.

“நீ அவனை நம்பவில்லை, இல்லையா?” என்று மாலா கேட்டாள்.

“நீ அவனை நம்புகிறாயா?” என்று நான் அவளிடம் திருப்பிக் கேட்டேன். அவள் ஒரு பெருமூச்செறிந்துவிட்டு வெளியே சென்றாள். நான் அவளைப் பின்தொடர்ந்தேன். கிளர்ச்சிக்காரர்கள் எப்படிப்பட்டப் பயிற்சிகளைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தனர் என்று தெரிந்து கொள்ள நான் ஆவலாக இருந்தேன். உருவத்தில் சிறியவனாக இருந்த, வித்யுத்ஜீவனுக்குச் சமமான இன்னோர் அசுரன், நான் குளிப்பதற்குச்

சில மூலிகைககளையும் ஒரு துவாலையையும் என்னிடம் கொடுத்தான். அவனது வெற்றுக் கால்விரல்கள் புண்பட்டிருந்தன. அவன் கந்தலான ஆடைகளை அணிந்திருந்தான். குளிப்பதற்காக அங்கிருந்த சிறிய கிணற்றை நோக்கி நான் நடந்தேன். வித்யுத்ஜீவன் என்னைத் தொட்டிருந்த இடங்கள் அனைத்தையும் நான் நன்றாகத் தேய்த்துக் குளித்தேன். ஆனால் சமதர்மம் எனும் நெடி என்னுடனேயே தங்கிவிட்டது. விரைவில், அதுவும் எனக்குப் பழகிவிட்டது.



# 23

## வீட்டு வாசற்படியில் கலகம்

பத்ரன்

நான் வித்யுத்ஜீவனின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாக ஆகியிருந்தேன். கிளர்ச்சியாளர்களின் தலைவனின் உளவாளிகள் அரண்மனை பற்றிய செய்திகளைக் கொண்டு வந்தனர். வருணன் சிறைபிடிக்கப்பட்டிருந்ததாக நான் கேள்விப்பட்டேன். அவனுக்குத் தண்டனை கொடுத்தப் பிறகு, இலங்கையின் கடற்கரையையும் எதிர்காலத்தில் தான் கைப்பற்றக்கூடிய எல்லைகளையும் பாதுகாக்கும் பொறுப்பை ராவணன் அவனுக்குக் கொடுத்திருந்ததையும் நான் தெரிந்து கொண்டேன். கடற்கொள்ளையர்களின் அரசனை அரசாங்கக் கடற்படைத் தலைவனாக நியமிப்பதற்குக் காரணமாக இருந்த அறிவை நான் சந்தேகித்தேன், ஆனால் கற்றறிந்தவர்களுக்கு என்னைவிடச் சிறப்பாகத் தெரிந்திருக்கும். அரசனின் தாயாரும் தன் மகனுடனான ஒரு வாக்குவாதத்திற்குப் பிறகு இலங்கையைவிட்டு வெளியேறியிருந்ததையும் நான் அறிந்தேன். இளவரசன் கும்பகர்ணன் இப்போது போதைப் பொருட்கள், கஞ்சா, மது, சூதாட்டம், பெண்கள்

ஆகிய விஷயங்களுக்கு முழுமையாக அடிமையாகியிருந்தான். வடகிழக்கு முனையில் இருந்த ஒரு சிறிய பகுதியைத் தவிர இலங்கை முழுவதும் ராவணனின் கட்டுப்பாட்டிற்குள் வந்திருந்தது. அங்கு எனது புதிய எஜமானனுக்கு அவ்வளவு அதிகமான செல்வாக்கு இருக்கவில்லை.

யார் எனக்கு எஜமானாக இருப்பார்கள் என்பதையும், எனது அதிர்ஷ்டத்தை நான் ராவணனை நம்பி ஒப்படைக்க வேண்டுமா அல்லது வித்யுத்ஜீவனிடம் ஒப்படைக்க வேண்டுமா என்பதையும் நான் தீர்மானிக்க வேண்டியிருந்தது. சூழ்நிலை இப்போதைக்கு ராவணனுக்குச் சாதகமாக இருந்ததால், நான் திரும்பிச் சென்றிருக்க வேண்டும். ஆனால் எனது எதிர்காலம் இந்த வசீகரமான புரட்சித் தலைவனுடன் தொடர்பு கொண்டிருந்ததாக ஏதோ ஒன்று என்னுள் தொடர்ந்து கூறிக் கொண்டே இருந்தது. மேலும், அவன் எளிதில் ஏமாறக்கூடியவனாகவும் தோன்றினான். அவனது பிரம்மாண்டமான அகங்காரத்தையும் சமத்துவச் சமுதாயக் கோட்பாடுகளையும் தவிர, பழகுவதற்கு அவன் இனிமையானவனாகவே இருந்தான். எங்கள் அனைவரையும் சமமானவர்களாக நடத்துவதற்கு அவன் மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தும் வெறும் நடிப்பாக இருந்தபோதிலும், அவனது ஆட்கள் அது உண்மை என்று நம்ப விரும்பினர். ஏனெனில், அவர்களிடம் யாரும் இவ்வாறு நடித்திருக்கக்கூட இல்லை. அவ்வப்போது நான் மாலாவைத் திருட்டுத்தனமாக முத்தமிட்டேன். புரட்சியாளர்களின் தலைவனுடன் இருப்பதற்கு இதுவும் எனக்கு ஒரு கவர்ச்சிகரமான காரணமாக இருந்தது.

ஒரு நாள், கடற்கரைக்கு வருமாறு வித்யுத்ஜீவன் என்னை அழைத்தான். மாலை வெகுநேரம் ஆகியிருந்தது. வானில் பௌர்ணமி நிலவு ஒளிர்ந்தது. கடல் வெள்ளிபோல மினுமினுத்தது. காற்றில் மல்லிகை மலரின் வாசனை மிதந்து வந்தது. முகாம்களிலிருந்து ஒரு பாடலும் காற்றில் மிதந்து வந்தது. கடலுக்குள் நீண்டு நின்ற ஒரு பாறையின்மீது வித்யுத்ஜீவன் நின்று கொண்டிருந்தான். நான் அதன்மீது ஏறினேன். எனக்கு பயமாக இருந்தது. அவனுக்குச் சொந்தமானவளை நான் முத்தமிட்டிருந்ததை அவன் கண்டுபிடித்திருந்தானா?

“இன்றிரவு நாம் கடலுக்குள் ஓர் உலா சென்று வரலாமா?” என்று அவன் என்னிடம் கேட்டான். அவனுடைய முகத்தை என்னால் பார்க்க முடியவில்லை. எனவே, அவன் கோபமாக இருந்தானா இல்லையா என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை.

“சரி,” என்று நான் முணுமுணுத்தேன். அவன் என்னை விலக்கித் தள்ளிவிட்டு, கடற்கரைக்கு இட்டுச் சென்ற கரடுமுரடான படிகளில்

இறங்கத் துவங்கினான். சிறிய நாட்டுப் படகு ஒன்று தண்ணீருக்குள் மேலும் கீழுமாக ஆடியபடி இருந்தது. அவன் அதற்குள் குதித்தான். நானும் தட்டுத்தடுமாறி அவனைப் பின்தொடர்ந்தேன். அவன் மிக அகலமாகத் துடுப்புப் போட்டு, அலைகளைத் தள்ளினான். ஒருசில நிமிடங்களுக்குப் பிறகு, அவன் தன் கையிலிருந்த துடுப்புகளை என்னிடம் கொடுத்தான். நான் துடுப்புப் போடத் துவங்கினேன். அவன் காட்டிய திசையில் படகைச் செலுத்தினேன். நாங்கள் அந்த இடத்தை நெருங்கியபோது, செங்குத்துப் பாறையின்மீது நின்ற கோட்டையின் நிழல் வடிவத் தோற்றத்தை என்னால் பார்க்க முடிந்தது. திரிகோட்டாவின் மலைச் சரிவுகளின்மீது மூடுபனி படர்ந்திருந்தது. இரவில் அந்த அரண்மனை அச்சுறுத்துவதாக இருந்தது. அது அரக்கர்களால் ஆட்கொள்ளப்பட்டு இருந்ததைப்போலத் தோன்றியது. தீய ஆவிகள் மற்றும் ராட்சஸர்களைப் பற்றிய பழைய கதைகள் அனைத்தும் என் மனத்தில் பேயாட்டம் போட்டு என்னை அச்சுறுத்தின. படகு மெல்ல மெல்லக் கரையை அடைந்தது.

"நான் வரும்வரை இங்கேயே இரு," என்று என்னிடம் கூறிவிட்டு, வித்யுத்ஜீவன், கோட்டையின் பின்பக்க வாசலை நோக்கி நடந்தான். நூறு முறைக்கு மேல் இதைச் செய்திருந்த ஒருவனுக்குரிய உறுதியான தன்னம்பிக்கையோடு அவன் நடந்தான். புரட்சியாளர்களின் தலைவனுடன் நான் எனது பழைய எஜமானனின் அரண்மனையில் இருந்தேன். நான் பிடிபட்டால், எனது மரணம் நிச்சயம். உள்ளுணர்வுரீதியாக, பாறைகளின் நிழல்களை நோக்கி நான் நகர்ந்தேன். குளிர் அதிகரித்துக் கொண்டிருந்தது. நான் எனது கைகளை ஒன்றோடொன்று அழுத்தித் தேய்த்தேன். ஒப்பிட்டுப் பார்த்தபோது, தண்ணீர் அதிக வெதுவெதுப்பாக இருந்தது. எனது புதிய எஜமான் திரும்பி வருவதற்குக் கிட்டத்தட்ட ஒரு மணிநேரம் ஆனது. அவன் திரும்பி வந்தபோது, ஒரு பாடலை முணுமுணுத்தபடி மிகவும் மகிழ்ச்சியான மனநிலையில் இருந்தான். நாங்கள் எங்கள் கரையை வந்தடைந்த பிறகுகூட அந்த இசை என்னைத் துரத்தியது. வித்யுத்ஜீவன் தனது வீட்டிற்குச் சென்றுவிட்டிருந்தான். அன்றிரவு நான் அந்தப் பாடலை என்னோடு என் படுக்கைக்கு எடுத்துச் சென்றேன்.

எனது புதிய எஜமானனுடன் இந்த இரவு உலாக்களுக்கு நான் மீண்டும் மீண்டும் உடன் சென்றேன். என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்று தெரிந்து கொள்ள நான் மேலும் மேலும் அதிக ஆர்வம் கொண்டேன். அவன் எப்படி யாருக்கும் தெரியாமல் ராவணனின் கோட்டைக்குள் நுழைந்து, காயப்படாமல் திரும்பி வந்தான் என்று நான் வியந்தேன். அரண்மனைக்கு உள்ளே இருந்து யாரோ ஒருவன்

அவனுக்கு உதவினான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ஆனால் வித்யுத்ஜீவன் செய்து வந்த இந்தக் காரியம் மிக ஆபத்தானதாக இருந்தது. அவனை உயிருடனோ அல்லது பிணமாகவோ பிடிக்க ராவணனின் ஒட்டுமொத்தப் படையும் அவனைத் தேடிக் கொண்டிருந்தது. இவன் என்னவென்றால், அரசனின் நிலங்களில் கவலையின்றிச் சுற்றித் திரிந்தான். அவனது இந்தத் துணிச்சல் வியப்பூட்டுவதாகவும் அச்சமூட்டுவதாகவும் இருந்தது.

அவன் இன்னொரு முறை அந்த இரவு உலாவிற்கு என்னை அழைத்தான். என்னுள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த ஆர்வத்திற்கு ஒரு முடிவு கட்டுவதென்றும், அவனைப் பின்தொடர்ந்து செல்வதென்றும் நான் தீர்மானித்தேன். நான் ஒருசில வினாடிகள் காத்திருந்துவிட்டு, பிறகு அவனுக்குப் பின்னால் செல்லத் துவங்கினேன். அவன் திரும்பிப் பார்க்காமல் வேகமாக நடந்தான். அவன் யாருக்கும் தெரியாத விதத்தில் நிழல்களின் ஊடாகக்கூட நடக்க முயற்சிக்கவில்லை. கோட்டை வாசலை அவன் அடைந்தபோது, இடது பக்கமாகத் திரும்பினான். நான் குழம்பினேன். எனக்குத் தெரிந்தவரை, அங்கு எந்தக் கதவோ அல்லது நுழைவு வாயிலோ கிடையாது. நான் சற்று நெருங்கிச் சென்றபோது, அதற்கான விடையை நான் பார்த்தேன் — சுவரின்மீது ஒரு கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. அவன் அதைப் பிடித்து அந்த உயரமான சுவரின்மீது ஏறி, கண்ணிமைப்பதற்குள் அங்கிருந்து மறைந்தான். நான் அருகே சென்று அந்தக் கயிற்றை ஆராய்ந்தேன். அது ஆடியது. அது என்னுடைய எடையைத் தாங்குமா என்று பார்ப்பதற்காக அதை இழுத்தேன். அது முட்டாள்தனமான காரியம் என்பதை நான் உணர்ந்தேன். ஏனெனில், சற்று முன்தான், ஆஜானுபாகுவான வித்யுத்ஜீவன் அதைப் பிடித்து ஏறியிருந்தான்.

நான் மிகவும் சிரமப்பட்டு ஏறினேன். நான் உச்சியைச் சென்றடைந்த நேரத்தில், வியர்வையில் முழுவதுமாகக் குளித்திருந்தேன். எனக்கு மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. கோட்டை வளாகத்திற்குள் நான் மெதுவாக விழுந்தபோது என்னை நானே சபித்தேன். அங்கு நிலவிய கனத்த மௌனம் அச்சுறுத்துவதாக இருந்தது. எங்கிருந்தோ ஓர் ஆந்தை அலறியது. உள்ளுணர்வுரீதியாக, நான் என் குத்துவாளை எடுக்க முற்பட்டேன், ஆனால் அதை என்னுடன் எடுத்து வர நான் மறந்திருந்தேன். மீண்டும் என்னை நானே சபித்துக் கொண்டு, நான் சுதாரித்துக் கொள்ள முயற்சித்தேன். தோட்டத்தில் இருந்த புதர்ச்செடிகளின் ஊடாக, வினோதமான வெளிச்சக் கீற்றுகள் மினுமினுத்தன. வானம் மேகமூட்டமாகவும் கனமாகவும் இருந்தது. ஆடைகள் உரசுவது போன்ற ஓர் ஒலியும், மிக லேசான ஒரு கிசுகிசுப்புச்

சத்தமும் அருகில் எங்கோ கேட்டது. அந்தச் சத்தங்கள் வந்த திசையை நோக்கி நான் மெதுவாகச் சென்றேன். இருட்டில் இரண்டு உருவங்கள் ஒன்றையொன்று ஆரத் தழுவிக் கொண்டு, உணர்ச்சிமயமாக முத்தமிட்டுக் கொண்டிருந்தன. அந்த உயரமான உருவம் வித்யுத்ஜீவன் என்பதை என்னால் பார்க்க முடிந்தது. அந்தப் பெண் எனக்குப் பரிச்சயமானவளைப்போல இருந்தாள், ஆனால் அவள் யார் என்று என்னால் உடனடியாக நினைவுகூர முடியவில்லை. நான் ஒருசில நிமிடங்கள் அக்காட்சியைப் பார்த்தேன். அப்போது அப்பெண் சற்றுப் பின்னால் நகர்ந்தாள். இளவரசி சூர்ப்பனகை! நாட்டின் பரம எதிரியுடன் கொஞ்சிக் குலாவல்! நான் அதிர்ச்சியடைந்தேன்.

என் மனத்தில் ஒரு திட்டம் உருவானது. எனது எதிரியை ஒழித்துக் கட்டுவதற்கான சரியான வாய்ப்பு இதுதான். அக்கணத்தில்தான் நான் எனது இரண்டு தலைவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்தேன். நான் அரண்மனையை நெருங்கிய நேரத்தில், என் மனத்தில் மகிழ்ச்சியும் உற்சாகமும் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தன. ஒரே அடியில் பல பறவைகளை நான் கொல்லப் போகிறேன். எனது எதிராளி வித்யுத்ஜீவனை அப்புறப்படுத்திவிட்டு, ராவணனிடம் நற்பெயரைச் சம்பாதித்துக் கொண்டு, மாலாவை எனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு, அசுர குலம் இரண்டு வசீகரமான மற்றும் சக்திவாய்ந்த தலைவர்களுக்கு இடையே பிளவுபடாமல் இருப்பதை உறுதி செய்வேன். உளரீதியாகவும் உடல்ரீதியாகவும் எந்தவிதமான பாதுகாப்பும் இல்லாமல் வித்யுத்ஜீவன் ராவணனின் கோட்டைக்குள் முட்டாள்தனமாகத் தனியாக நுழைந்திருந்தான். தாக்குவதற்கு எனக்குக் கிடைத்திருந்த சரியான நேரம் அதுதான். அரசனைத் தனியாகச் சந்தித்து, இச்செய்தியை அவரிடம் நான் கூற வேண்டியிருந்தது.

அவரது அறை எங்கு இருந்தது என்று எனக்குத் தெரியவில்லை. நிச்சயமாக அது பலத்தக் காவலுடன்கூடியதாகத்தான் இருக்கும், இல்லையா? ஆனால் எனது குலத்தின் அடிப்படைக் கவனக்குறைவு குறித்து மட்டுமே என்னால் உறுதியாக இருக்க முடிந்தது. நள்ளிரவு தாண்டி வெகுநேரம் ஆகியிருந்ததால், காவலாளிகள் தூங்கிக் கொண்டிருப்பார்கள் அல்லது குடித்துவிட்டு மயங்கிக் கிடப்பார்கள். பகலில் போர்க்களங்களில் ஆக்ரோஷமாகச் சண்டையிடும் அசுரர்கள், இரவில், குதூகலத்தை விரும்பிய, பெண்களைத் துரத்திய, சச்சரவுகளில் ஈடுபட்டவர்களாக, வித்தியாசமானவர்களாக இருந்தனர். அசுரர்களின் மிகவும் பாதுகாப்பான ரகசியங்களில் அதுவும் ஒன்றாக இருக்கக்கூடும். அசுரர்களைத் தோற்கடிக்க வேண்டும் என்றால், அவர்களை இரவு வெகுநேரம் கழித்துத் தாக்க வேண்டும். அதனால்தான் பண்டைய அசுர

நெறிகள் தர்மயுத்தத்தை வலியுறுத்தினபோலும். தர்மயுத்தத்தில் யுத்தங்கள் ஒழுக்கக் கொள்கைகளின் அடிப்படையில் அமைந்திருந்தன. இரவில் யுத்தங்கள் நடைபெறவில்லை என்பதுதான் இங்கு மிக முக்கியமான விஷயம்.

நான் அரண்மனையைச் சுற்றி ஒருமுறை சென்று வந்தேன். உள்ளே நுழைவதற்கு எது சிறந்த வழி என்று பார்ப்பதற்காக, முட்புதர்களை ஒட்டியே மறைவாகச் சென்றேன். நான் ஒரு மாமரத்தின்மீது ஏறினேன். மேல்மாடத்தின் சன்னல்கள் திறந்திருக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். அன்று மிகவும் சூடாக இருந்தது. யாரோ இருமிய சத்தம் கேட்டு நான் அப்படியே உறைந்தேன். என் இதயம் படபடவெனத் துடித்துக் கொண்டிருந்தது என் காதுகளில் விழுந்தது. நான் ஒருசில நிமிடங்கள் அசையாமல் நின்றுவிட்டு, பிறகு மீண்டும் நகர்ந்தேன். தாழ்வாரங்களை ஒட்டி அமைந்திருந்த சன்னல்கள் அனைத்தும் மூடப்பட்டிருந்தன. நான் சபித்தேன். நேரம் கரைந்து கொண்டிருந்தது. வித்யுத்ஜீவன் எங்கள் படகிற்குத் திரும்பிச் சென்றுவிட்டாலோ அல்லது திரும்பி வரும் வழியில் இளவரசி என்னைப் பார்த்துவிட்டாலோ, எனது இறுதிப் பிரார்த்தனையை நான் கூறத் தொடங்கிவிடலாம். ஒரு சன்னல் திறந்திருந்தது. நான் அதன் அருகே சென்றேன். அறைக்குள் இருந்த படுக்கையின்மீது யாரோ தூங்கிக் கொண்டிருந்தார்கள். அது அரசனா என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. ஏனெனில், அந்தப் படுக்கையில் அரசியின் உருவம் இருக்கவில்லை. ஆனால் அவனது உருவம் அரசனுடையதை ஒத்திருந்தது. நான் தயங்கினேன், ஆனால் நேரம் நழுவிக் கொண்டிருந்ததை நான் அறிந்தேன். ஒரு சிறிய எண்ணெய் விளக்கு அந்தப் படுக்கைக்கு அருகே எரிந்தது. அவ்வுருவத்தின் முகம் நிழலில் இருந்தது.

நான் அந்த அறைக்குள் நுழைந்து, "அரசே . . ." என்று கிசுகிசுத்தேன். அந்த உருவத்திடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. அது ராவணன்தானா என்பதை உறுதி செய்து கொள்வதற்காக நான் சற்று அருகே சென்றேன். திடீரென்று, சீறிப் பாயும் ஒரு புலியைப்போல, அந்த நபர் என்மீது குதித்து, என் தொண்டையைப் பிடித்தான். பேச முடியாத அளவுக்கு நான் பயந்து போயிருந்தேன். அவன் தனது இன்னொரு கையால் விளக்கு வெளிச்சத்தை அதிகரித்தான். நான் தவறான அறையில் இருந்ததைக் கண்டு வெலவெலத்துப் போனேன். நான் சரியான அறையில் இருந்திருந்தால் வேறு விதமாக நடத்தப்பட்டிருப்பேன் என்று கூற முடியாது. ஆனால் இது மிகவும் அச்சுறுத்துவதாக இருந்தது. என் கழுத்தைப் பிடித்துக் கொண்டிருந்தவன் விபீஷணன். சமயப்பற்றுக் கொண்ட இந்தப்

பாவியின் அறைக்குள் நான் வசமாக மாட்டிக் கொண்டிருந்தேன். அவன் கணிக்கப்பட முடியாதவனாக இருந்ததால் நான் இன்னும் அதிகமாக அஞ்சி நடுங்கினேன். அவன் தனது பிடியை மெதுவாகத் தளர்த்தி, என்னைக் கீழே தள்ளினான். நான் நிலை குலைந்து தரையில் விழுந்தேன். அவன் தன் வாளை உருவி எனக்கு மேலே குனிந்து நின்றான்.

"பிரபு, என்னைக் கொன்றுவிடாதீர்கள். தயவு செய்து என்னைத் தாக்கிவிடாதீர்கள்," என்று நான் கெஞ்சினேன்.

"பத்ரா, ராஸ்கல். நீ என்னைக் கொல்ல முயற்சித்துக் கொண்டிருந்தாய். ஒன்று, நீ ஓர் ஆவியாக இருக்க வேண்டும் அல்லது நீ இறக்க மறுப்பவனாக வேண்டும்!" அவனும் குழம்பிப் போயிருந்ததுபோலத் தோன்றியது. அவனது தடுமாற்றத்தை எனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, நான் தொடர்ந்து அவனிடம் கெஞ்சினேன். கோபத்தில் அவன் தன் காலால் தரையை ஓங்கி மிதித்தான். நான் என் சிணுங்கலை நிறுத்திவிட்டு, தவழ்ந்து மீண்டும் சுவரருகே சென்று, அங்கு ஒரு பந்துபோலச் சுருண்டு கொண்டேன். ஆனாலும் நான் தொடர்ந்து நடுங்கிக் கொண்டிருந்தேன். அவனது கோபம் என்னை வலிமையிழக்கச் செய்து கொண்டிருந்தது. அவன் ஆபத்தானவன் என்றும், அவனுக்கே உரிய பண்புநலன்களான அமைதியும் சமநிலையும் ஒரு முகமூடியே என்றும் நான் எப்போதுமே சந்தேகித்து வந்திருந்தேன். இப்போது அவன் தனது வாளை என்மீது அழுத்திப் பிடித்துக் கொண்டு நின்ற காட்சியும், அவனது கண்களில் தென்பட்டக் குரூர ஒளியும் அவன் ஆபத்தானவன்தான் என்பதை எனக்கு உறுதிப்படுத்தின. நான் பார்த்திருந்ததிலேயே மிகவும் சூழ்ச்சிகரமான, மிகவும் கொடுமைக்கார மனிதன் அவன்தான் என்பதில் நான் உறுதியாக இருந்தேன். அவன் தனது சகோதரன் ராவணனைப் போன்றவன் அல்ல. ராவணனிடம் அளவுக்கதிகமான அகங்காரம் இருந்தாலும்கூட, தன் இதயத்தில் பரிவையும் ஒருவிதமான நியாய உணர்வையும் அறநெறியுணர்வையும் கொண்ட ஒரு நல்ல மனிதர் அவர். ஆனால் இந்த விபீஷணன் பேயின் மறுவடிவமாக இருந்தான். அவன் உணர்ச்சியற்றவன். அவனது பக்தியும் பணிவும் வெறும் வெளிவேஷங்களே. தனது காரியத்தைச் சாதிப்பதற்கு உதவும் என்றால், ஒருவனைக் கொல்லவோ, ஊனமாக்கவோ, அல்லது அவனுக்குச் சேவை செய்யவோ அவன் தயங்க மாட்டான். அவன் தனது லட்சியங்களை நன்றாக மறைத்து வைத்திருந்தான், ஆனால் விட்டு விட்டு எரிந்து கொண்டிருந்த அந்த எண்ணெய் விளக்கின் ஒளியிலும், எதிரே இருந்த சுவரில் அது ஏற்படுத்திய பயங்கரமான நிழலிலும்,

அவனது ஆன்மாவை என்னால் ஊடுருவிப் பார்க்க முடிந்தது. எதிர்காலத்தின் தீய நிழல்களைக்கூட நான் பார்த்ததாக நான் நினைத்தேன். சிறந்த கல்வியறிவைப் பெற்றிருந்த மந்திரிகளோ அல்லது சர்வ வல்லமை படைத்த ராவணனோ ஒருபோதும் சந்தேகிக்கக்கூட இல்லாத ஒன்றை, வடிகட்டிய முட்டாளான பத்ரனாகிய நான் அறிந்திருந்தேன். ஒரு நாள், தனக்கு ஒரு வாய்ப்புக் கிட்டினால், ஒரு துண்டு நிலத்திற்காகவோ அல்லது சில தங்க நாணயங்களுக்காகவோ இந்த சண்டாளன் தன் ஆன்மாவை விற்கக்கூடத் தயங்க மாட்டான். நான் மீண்டும் அவனது பாதங்களில் விழுந்தேன்.

"நீ எனது அறையில் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" அவனது குரலில் கெடு நோக்குத் தொனித்தது.

"பிரபு, அரசனிடம் ஒரு விஷயத்தைக் கூற எனக்கு மிகவும் பயமாக இருந்தது. அவரது கோபம் நீங்கள் அறியாததல்ல. ஆனால் நீங்கள் ஓர் அமைதியான மனத்துடன் தீர்மானங்களை எடுக்கிறீர்கள், சரியானவற்றை மட்டுமே செய்கிறீர்கள் . . ."

"முட்டாளே, இரவு இவ்வளவு நேரம் கழித்து அரண்மனைக்குள் நுழைய உனக்கு என்ன துணிச்சல்! யாரும் உன்னைத் தடுத்து நிறுத்தவில்லையா? அரண்மனைக் காவலாளிகள் எங்கே?" என்று கேட்ட அவனது குரல் ஒவ்வொரு கணமும் உயர்ந்தது.

அவன் என்னை எட்டி மிதித்தான். நான் வலியில் முனகினேன்.

"நான் ஏன் காவலாளிகளைக் கூப்பிடக்கூடாது? உன்னை ஏன் தூக்கில் தொங்கவிடக்கூடாது?"

"இது உங்கள் சகோதரி சம்பந்தப்பட்ட விஷயம். அவள் யாரையோ சந்தித்துக் கொண்டிருக்கிறாள் . . . தயவு செய்து என்னை எட்டி உதைக்காதீர்கள் . . ."

அவன் என்னை ஒரு கணம் பார்த்துவிட்டு, என் தொண்டையைப் பிடித்து என்னைத் தரையிலிருந்து தூக்கி, வன்மம் தொனித்த ஒரு குரலில், "மூர்க்கனே, என் சகோதரிக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?" என்று என்னிடம் கிசுகிசுத்தான்.

மூச்சித்திணறலுக்கும் இருமலுக்கும் இடையே, நான் ஓரளவு திருப்தியுடனும் ஓர் ஏளனப் புன்னகையுடனும், "கடந்த ஒருசில மாதங்களாக உங்களுடைய ஆட்கள் தேடி வந்துள்ள, புரட்சிக்காரர்களின் அரசனும் தேசத் துரோகியுமான வித்யுத்ஜீவன் இப்போது உங்களுடைய சகோதரியுடன் அரண்மனைத் தோட்டத்தில் இருக்கிறான்," என்று கூறி முடித்தேன். "மேட்டுக்குடி அசுரனே, இந்த அவமானத்தை ஏற்றுக் கொள்," என்று நான் என் மனத்திற்குள் இளக்காரமாகக் கூறிக் கொண்டேன்.

அவன் என்னைத் தரையின்மீது எறிந்தான். ஆனால் அவனது வலிமை குறைந்திருந்ததை என்னால் உணர முடிந்தது. என்ன செய்வதென்று தெரியாமல், களைத்துப் போய் அவன் தன் படுக்கையின்மீது அமர்ந்தான். என்னுடைய நேரம் குறைந்து கொண்டிருந்தது. எனவே நான் விரைவாகச் சிந்திக்க வேண்டியிருந்தது. “ஐயா, மாரீசன் பிரபுவை நாம் இங்கு வரவழைக்கலாமா?” என்று நான் கேட்டேன்.

“நானே போகிறேன். அவர்கள் இருவரும் இன்னும் அங்கேதான் இருக்கிறார்களா?” என்று கேட்டுவிட்டு, அவன் மெதுவாக எழுந்து, தனது வாளை அதன் உறைக்குள் போட்டுவிட்டு, அதைத் தன் இடுப்பைச் சுற்றிக் கட்டினான்.

என் வாயை வைத்துக் கொண்டு என்னால் சும்மா இருக்க முடியவில்லை. “அவர்களால் இப்போதைக்கு முடித்திருக்க முடியாது,” என்று கூறினேன். அவன் என்னைக் கோபத்தோடு பார்த்தான். இன்னுமொரு பலமான அடியை அவனிடமிருந்து நான் எதிர்பார்த்தேன், ஆனால் அவன் வெறுமனே அந்த அறையிலிருந்து வெளியேறினான். நான் அவனைப் பின்தொடர்ந்தேன். மாரீசன் தன் குடும்பத்துடன் கீழ்த்தளத்தில் இருந்த ஓர் அறையில் தூங்கினான். நாங்கள் அங்கிருந்த மரப் படிக்கட்டுகள் வழியாகக் கீழே இறங்கினோம். விபீஷணன் ஒருசில நொடிகள் தாமதித்துவிட்டு, பிறகு மாரீசனின் அறைக் கதவை லேசாகத் தட்டினான். சிறிது நேரம் எந்த பதிலும் வரவில்லை. எனவே அவன் மீண்டும் தட்டினான். ஒருசில நிமிட மௌனத்திற்குப் பிறகு, ஆடைகளின் உரசல் சத்தமும், மரத்தாலான தரையில் யாரோ பலமாக நடந்து வந்த சத்தமும் கேட்டது. கதவு கிறீச்சிட்டுத் திறந்தது. கண்களில் தூக்கக் கலக்கத்துடனும் அர்த்த ராத்திரியில் எழுப்பப்பட்டது குறித்த எரிச்சலுடனும் மாரீசன் அங்கு நின்றான்.

“மாமா, சூர்ப்பனகை நமக்கு ஒரு பிரச்சனையை ஏற்படுத்தியிருக்கிறாள்.” மாரீசன் திடீரென்று எச்சரிக்கையானான். அவன் தனக்குப் பின்னால் கதவைச் சாத்திவிட்டு வெளியே வந்தான். விபீஷணன் எல்லாவற்றையும் விளக்கினான். பிறகு அவன் என்னைப் பற்றிக் குறிப்பிட்டபோது, மாரீசனின் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. அவன் எல்லாவற்றையும் கேட்டுவிட்டுத் தனது அறைக்குள் சென்றான். அவன் திரும்பி வெளியே வந்தபோது, அவனிடம் எல்லா ஆயுதங்களும் இருந்தன. குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த காவலர்களைக் கடந்து நாங்கள் அரண்மனைக்கு வெளியே வந்தோம். நாங்கள் தோட்டத்தை அடைந்தபோது, இளவரசி சூர்ப்பனகை இருந்த இடத்தை நான் சுட்டிக்காட்டினேன். பிறகு அவர்களை முன்னால் போக

விட்டுவிட்டு, நான் மெதுவாக ஒதுங்கிக் கொண்டேன். மாரீசனும் விபீஷணனும் ஆளுக்கொரு பக்கத்திலிருந்து அவர்களை அணுகினர். திடீரென்று, காதைப் பிளக்கும் ஓர் அலறல் கேட்டது. இளவரசி அரண்மனைக்குள் ஓடியதை நான் கண்டேன். அவளது ஆடை அரைகுறையாக இருந்தது. பிறகு, ஒரு சண்டைச் சத்தம் கேட்டது. இளவரசி பாதுகாப்பாக அரண்மனையை அடைந்துவிட்டிருந்ததைப் பார்த்த மாரீசன், உரத்தக் குரலில் காவலாளிகளை அழைத்தான். வித்யுத்ஜீவன் துணிச்சலோடு சண்டையிட்டான். ஆயுதங்களைத் தாங்கிய ஏராளமான காவலர்கள் வந்து அவனைச் சிறைபிடித்திருக்காவிட்டால், அவன் விபீஷணனைக் கொன்றிருப்பான். அக்காவலாளிகள் தூக்கக் கலத்திலும் மூக்கு முட்டக் குடித்தும் இருந்தனர். அதோடு, அவர்கள் மிகவும் மெதுவாகச் செயல்பட்டனர். ஆனால் அவர்கள் ஏராளமானோர் இருந்தது வித்தியாசத்தை ஏற்படுத்தியது.

இறுதியில் நான் சுதந்திரமடைந்துவிட்டேன்! இப்போது மாலாவை எனக்கு மட்டுமே சொந்தமானவளாக என்னால் ஆக்கிக் கொள்ள முடியும். நான் மகிழ்ச்சியாக ஊளையிட்டு ஆடிப் பாட விரும்பினேன். ஆனால் தொடர்ந்து புதர்களுக்கிடையே மறைந்திருந்தேன். ஒருவேளை ஏதேனும் துணிச்சலான காரியத்தைச் செய்துவிட்டு வித்யுத்ஜீவன் அங்கிருந்து தப்பினாலோ, அல்லது சண்டையில் அவனது கை ஓங்கினாலோ, நான் அவனிடம் மாட்டிக் கொள்ள விரும்பவில்லை.



# 24

## ஒரு கலகக்காரனின் முடிவு

ராவணன்

நான் என் படுக்கையின்மீது புரண்டேன். தூக்கம் என்னோடு கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. துவக்கத்திலிருந்தே எனது திருமணம் ஒரு பேரழிவாகவே இருந்து வந்திருந்தது. எனது முதலிரவின்போது, எனது விறைப்பான மனைவி எனக்கு வளைந்து கொடுக்கவில்லை. அவள் எனது அரைமனதுத் தீண்டல்களை மட்டும் வெறுமனே பொறுத்துக் கொண்டாள். ஆனால் அவளுக்கு அதில் ஈடுபாடு இருக்கவே இல்லை. அது எனக்குச் சலிப்பூட்டியது. மற்ற எல்லா விஷயங்களையும் பொறுத்தவரை, அவள் ஒரு முன்மாதிரியான மனைவியாக இருந்தாள். அவள் என்னை ஒரு சிறு குழந்தையைப்போலப் பார்த்துக் கொண்டாள். அது எனக்குப் பெரும் எரிச்சலூட்டியது. அவள் எல்லோரிடமும் அன்பாக நடந்து கொண்டாள். அரண்மனையை ஒரு கிராமத்துக் குடும்பத் தலைவியைப்போல அவள் நடத்த முயற்சித்தாள். ஆனால் எனது நான்கு மாதகாலத் திருமண வாழ்வில், மூன்று முறை நான் அவளை நெருங்க முயற்சித்தபோது,

அவள் ஒரு மரக்கட்டையைப்போல இருந்தாள். ஒருசில நொடிகளுக்குள்ளாகவே என் ஆர்வம் மாயமாக மறைந்தது. அதன் பிறகு, நான் அவ்வாறு முயற்சிக்கத் துணியவே இல்லை. ஒவ்வோர் இரவும் நான் என்மீதும் என் மனைவியின்மீதும் இந்த ஒட்டுமொத்த உலகத்தின்மீதும் எரிச்சல்பட்டுக் கொண்டே பல மணிநேரத்தைக் கழித்தேன். ஆனால் என் மனைவியோ, ஒரு மூதாட்டியைப்போல நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டு எனக்குப் பக்கத்தில் படுத்து நன்றாகத் தூங்கினாள். அவள் என்னிடம் வெளிப்படுத்திய அக்கறையற்ற மனப்போக்கிற்காக ஒவ்வொரு கணமும் அவளை வெறுத்துக் கொண்டு அவளுக்குப் பக்கத்தில் நான் கொட்டக் கொட்ட விழித்தபடி படுத்துக் கிடந்தது குறித்து எந்தக் கவலையுமின்றி அவள் அயர்ந்து தூங்கினாள்.

தோட்டத்தில் எங்கோ சில சத்தங்கள் கேட்டன. நான் களைப்போடு என் படுக்கையைவிட்டு எழுந்து சன்னலருகே சென்றேன். அது மூடியிருந்தது. சூடாக இருந்த இரவுகளில்கூட, சன்னல்களைத் திறக்க என் மனைவி என்னை அனுமதிக்கவில்லை. எனக்கு எரிச்சலூட்டிய இன்னொரு விஷயம் அது. நான் அந்தச் சன்னலை நெம்பித் திறந்தேன். இப்போது அந்தச் சத்தங்கள் அதிகத் தெளிவாகக் கேட்டன. நாசமாய்ப் போன அசுரர்கள்! ஏதோ கைகலப்பு நடந்து கொண்டிருந்தது. யாரோ சில வீரர்கள் நன்றாகக் குடித்துவிட்டுச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். யாரோ என் அறைக் கதவைத் தட்டினார்கள். நான் கதவைச் சென்றடைவதற்கு முன்பாக, அவர்கள் அதிகச் சத்தத்துடன் மீண்டும் தட்டினார்கள். பின்னால் திரும்பி என் ராணியைப் பார்த்தபடியே நான் கதவைத் திறந்தேன். தன்னைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருந்த குழப்பங்கள் எதைப் பற்றியும் கவலைப்படாமல், அவள் ஒரு குழந்தையைப்போலத் தூங்கினாள். என் மாமன் மாரீசன், தனது ஆயுதங்கள் சகிதமாக அங்கு நின்று கொண்டிருந்தான். நான் அவனிடம் எதையும் கேட்பதற்கு முன்பாக, அமைதியாக இருக்குமாறு அவன் எனக்குச் சைகை காட்டிவிட்டு, எனது இடது கையைப் பிடித்து என்னை வெளியே இழுத்தான்.

"ஒரு பிரச்சனை முளைத்திருக்கிறது," என்று மாரீசன் என் காதில் கிசுகிசுத்தான். தேவர்களின் ஏதோ ஒரு படை எங்களை உடனடியாகத் தாக்கவிருந்தது அல்லது வருணன் எங்களுக்கு எதிராகத் திரும்பியிருந்தான் போன்ற செய்திகளைக் கேட்க நான் என்னைத் தயார்படுத்தினேன். என் சகோதரி அதில் சம்பந்தப்பட்டிருப்பாள் என்று நான் ஒருபோதும் கற்பனை செய்திருக்கவில்லை. உலகிலுள்ள அனைத்துக் கயவர்களையும் விட்டுவிட்டு, என் சகோதரி,

வித்யுத்ஜீவனுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டிருப்பாள் என்று நான் நினைக்கவே இல்லை. எனது சகோதரியின் இரவுநேர சாகசங்கள் குறித்த இழிவான கதையை முதலில் ஆச்சரியத்தோடும், பிறகு வருத்தத்தோடும் கோபத்தோடும் நான் கவனமாகக் கேட்டேன். அவள் தன்னைத் தனது அறையில் அடைத்துக் கொண்டு வெளியே வர மறுத்தாள். இதில் ஒரே நல்ல விஷயம் என்னவென்றால், எனது மிகப் பெரிய புரட்சியாளனும் எதிரியுமான வித்யுத்ஜீவன் சிறைபிடிக்கப்பட்டிருந்தான். சமயப்பற்றுமிக்க எனது சகோதரன் விபீஷணன் தன் வாழ்வில் முதன்முறையாக ஒரு மதிப்பான காரியத்தைச் செய்திருந்தான் என்பது என்னை மிகவும் ஆச்சரியப்படுத்தியது.

நான் என் காலணிகளை அணிந்து கொள்வதைப் பற்றியோ அல்லது சால்வையைப் போர்த்திக் கொள்வதைப் பற்றியோகூடக் கவலைப்படவில்லை. அனைத்து மந்திரிகளையும் அரசவைக்கு அழைத்து, உடனடியாக விசாரணையைத் துவக்க ஏற்பாடு செய்யுமாறு நான் மாரீசனிடம் கூறினேன். என்னால் இயன்ற அளவுக்கு வேகமாக நான் அரசவையை நோக்கி நடந்தேன். எங்கள் அறைக் கதவு ஓங்கித் தட்டப்பட்டச் சத்தம்கூட என் மனைவிக்குக் கேட்டிருக்காது என்று நான் உறுதியாக நம்பினேன். கடவுள் அவளை ஆசீர்வதிக்கட்டும்.

அரசவை இருட்டாக இருந்தது. காவலாளிகள் தங்கள் கைகளையும் கால்களையும் பரப்பியபடி தரையின்மீது படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவன் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். நான் அவனுடைய விலாவில் எட்டி உதைத்தேன். அவன் சபித்துக் கொண்டே தனது ஆடையை ஒழுங்குபடுத்திக் கொண்டு எழுந்தான். பிறகு என்னைப் பார்த்துவிட்டு ஓர் ஆந்தையைப்போல ஒருசில நிமிடங்கள் தன் கண்களைச் சிமிட்டினான். ஒருவழியாக அவன் என்னை அடையாளம் கண்டுகொண்டபோது, வேகவேகமாக என் பாதங்களில் விழுந்தான். அவனுடைய சேட்டைகளைக் கண்டு களிப்புற எனக்கு நேரம் இருக்கவில்லை. எனவே நான் அவனை மீண்டும் எட்டி உதைத்தேன். அவன் வெளியே ஓடினான். மற்றக் கோமாளிகளும் கண்விழித்து அங்கிருந்து ஓடினர். எனது மந்திரிகள் வரும்வரை நான் இருட்டிலேயே நின்றேன். என் வேலைக்காரர்கள் எண்ணெய் விளக்குகளையோ தீப்பந்தங்களையோ ஏற்றியிருக்கவில்லை. அந்த முட்டாள்கள் எலிகளைப்போல அங்குமிங்குமாக ஓடிக் கொண்டிருந்தபோது நாங்கள் அனைவரும் அரசவை அரங்கின் மத்தியில் நின்றோம். அந்த வேலைக்காரர்கள் தாறுமாறாக ஓடியதில் ஓரிரு நாற்காலிகள் கவிழ்க்கப்பட்டு, ஒரு நல்ல பூச்சாடி

உடைக்கப்பட்டப் பிறகு, அந்த அறை ஒருவழியாக ஒழுங்கமைக்கப்பட்டு, சந்திப்புக்கூட்டம் தொடங்கியது.

பிரஹஸ்தன் தனது துல்லியமான சிந்தனையாலும் இயல்பான, உணர்ச்சியற்றக் குரலாலும் வழக்கம்போல எல்லோருக்கும் எரிச்சலூட்டினான். அடுத்த நாள் காலையில், முக்கியச் சந்தையில் வைத்து அந்தப் புரட்சிக்காரனின் தலை துண்டிக்கப்பட வேண்டும் என்றும், அரசாங்கத்திற்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்துவது குறித்த எண்ணங்களை வளர்த்துக் கொண்டிருந்த அனைவருக்கும் அது ஒரு நல்ல எடுத்துக்காட்டாக இருக்கும் என்றும் அவன் பரிந்துரைத்தான். முதன்முறையாக நான் அவனோடு ஒத்துப் போனதை நான் கண்டேன். ஆனால் அவனது பேச்சு முடிந்த உடனேயே சந்திப்புக்கூட்டத்தை நிறைவு செய்ய நான் தயாராக இல்லை. யாரும் எழுந்து நின்று அவனது பரிந்துரைக்கு முரணாகப் பேசவில்லை. மாரீசன் ஏதோ கூற விரும்பி இருப்புக் கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். விபீஷணன் தன் இயல்புக்கு மாறாக அமைதியாக இருந்தான். தனக்கு வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் வழக்கமாக அவன் எங்களுக்குப் போதித்த ஒழுக்கநெறிகளையும் அறநெறிகளையும் அப்போது அவன் போதிக்கவில்லை. புரட்சிக்காரன் பிடிபட்டதற்குத் தான்தான் காரணம் என்ற பெருமையில் அவன் திளைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். எனவே தனது பெருமைமிகு கணத்தை அவன் இழக்க விரும்பாமல் இருந்திருக்க வேண்டும். அமைதி கோலோச்சிக் கொண்டிருந்தபோது, நான் எழுந்து நின்று, புரட்சிக்காரனின் தலை அடுத்த நாள் மாலையில் துண்டிக்கப்படும் என்று அறிவித்தேன். அதிகாலையில் அது நடத்தப்பட வேண்டும் என்று பிரஹஸ்தன் பரிந்துரைத்திருந்தான். எனவே, அவனோடு முரண்பட்டு நின்றது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. நான் களைப்போடு அந்தக் கூட்டத்தைக் கலைத்துவிட்டு, என் அறைக்குத் திரும்பினேன்.

என் மனைவி இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள். நிலவின் ஒரு வெள்ளி ஒளிக்கீற்று அவளது முகத்தை ஒளிரச் செய்தது. அவள் ஒரு தேவதையைப் போலவும் அப்பாவியாகவும் தோன்றினாள். அவளது முகத்தின் கவித்துவம் என் மனத்தை உருக்கியது. அவளை முத்தமிட வேண்டும் என்ற ஒரு திடீர்த் தூண்டுதல் எனக்கு ஏற்பட்டது. நான் அவளருகே அமர்ந்து, அவளது முகத்தை என் கையில் ஏந்தி, அவளது உதடுகளில் முத்தமிட்டேன். அவள் எதையோ முணுமுணுத்துவிட்டு மறுபக்கமாகத் திரும்பிப் படுத்துத் தன் தூக்கத்தைத் தொடர்ந்தாள். அவளால் மீண்டும் புறக்கணிக்கப்பட்ட எனக்கு, அவளது தலைமுடியைப் பிடித்து, அவளது தலையை நன்றாக மோதிக் கூழாக்க

வேண்டும்போல இருந்தது. ஆனால், எங்கள் திருமண வாழ்வின் கடந்த நான்கு மாதங்களில், ஓர் அன்பு விதை எனக்குத் தெரியாமலேயே என் ஆன்மாவினுள்ளே ஊன்றப்பட்டிருந்தது. எனது விருப்பத்திற்கும் மன உறுதிக்கும் எதிராக, நான் என் மனைவியின்மீது மிகவும் காதல் வயப்பட்டிருந்ததை நான் கண்டேன். அவளைத் தொட்டுவிடாமல் நான் அவளருகே படுத்தேன். பிறகு, பத்ரனைப் பற்றியும், அவன் எவ்வாறு மீண்டும் என் வாழ்விற்குள் வந்திருந்தான் என்பது பற்றியும் நான் சிந்திக்கத் துவங்கினேன். அதன் பிறகு, எனது எண்ணங்கள் என் சகோதரியின் பக்கமாகத் திரும்பின. வாழ்வில் எல்லாமே மறுக்கப்பட்ட ஒரு பிறவி அவள். அவள் ஒரு குழந்தையாக இருந்தபோதே, சௌகரியமும் அன்பும் பரிவும் அவளுக்கு மறுக்கப்பட்டிருந்தன. அவள் காதல் வலைக்குள் சிக்கியதில் எந்த வியப்புமில்லை. என் தாயார் என்மீதுதான் மிக அதிக அளவில் அன்பு வைத்திருந்தார். பிறகு, நாங்கள் வளர்ந்தபோது, நான் என்மீதும் எனது லட்சியத்தின்மீதும் மிகுந்த அன்பு கொண்டிருந்ததில், எனது சகோதரி எங்களுடன் இருந்ததைக்கூட நான் அங்கீகரிக்கத் தவறியிருந்தேன். அவள் எப்போதுமே ஒரு தனிமையான குழந்தையாக இருந்திருந்தாள். பார்க்க அழகாக இல்லாத அவள், கருப்பாகவும் குண்டாகவும் இருந்தாள். அவள் திடீரென்று இலங்கையின் இளவரசியாக ஆகும்வரை அவளை யாரும் அவ்வளவாகக் கண்டுகொள்ளவில்லை. அதன் பிறகு அவளை மணமுடிக்க அவளுக்கு ஏகப்பட்ட வரன்கள் வந்தன. ஆட்சி செய்வதில் மும்முரமாக மூழ்கிப் போயிருந்த நான், அவள்மீது ஒரு கண் வைக்கத் தவறியிருந்தேன். அவள் அதிக உற்சாகமாகவும் அதிக மகிழ்ச்சியாகவும் ஆகியிருந்ததை நான் கவனித்தேன், ஆனால் அது அவளுக்குக் கிடைத்த அந்தஸ்தினால்தான் என்று நினைத்து நான் எதுவும் செய்யாமல் இருந்துவிட்டேன். அவள் ஏன் அவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தாள் என்பதை இப்போது நான் புரிந்து கொண்டேன். அவள் காதல் வயப்பட்டிருந்தாள், அல்லது தான் காதல் வயப்பட்டிருந்ததாக நம்பினாள். அந்தச் சண்டாளன் உண்மையில் அவளை விரும்பினானா இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை. தன் தலைக்கு ஒரு விலை நிர்ணயிக்கப்பட்டிருந்தபோது அரசனின் சகோதரியோடு காதல் லீலைகளைப் புரிவதற்கு அவனுக்கு என்ன துணிச்சல் இருந்திருக்க வேண்டும்? அவன் எனது சகோதரியை ஒரு தூண்டிலாகப் பயன்படுத்திக் கொண்டிருந்தானா? அவனது இந்தத் திமிருக்கு அவன் ஒரு விலையைக் கொடுப்பதை நான் உறுதி செய்வேன். ருத்ராக்கனுக்கு நாளைய பொழுது ஒரு மகிழ்ச்சியான பொழுதாக இருக்கப் போகிறது.

நான் மீண்டும் என் படுக்கையில் புரண்டேன். தூக்கம்

என்னிடமிருந்து தப்பித்துக் கொண்டே இருந்தது. இறுதியில், தூங்கும் முயற்சியைக் கைவிட்டுவிட்டு, எனது காலைக் கடமைகளைச் செய்யத் தயாரானேன். என் மனைவி எந்தக் கவலையுமின்றித் தூங்கினாள். நான் சிறிது நேரம் அவளைப் பொறாமையுடன் பார்த்தேன். பிறகு அவளைத் தொந்தரவு செய்யாமல், என் அறையைவிட்டு நான் வெளியேறினேன்.

நான் அரசவையை அடைந்தபோது எனது மந்திரிகள் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். சற்றுத் தாமதமாகச் சென்றதால், என் அரியணையை நோக்கி நான் வேகமாக நடந்தேன். அங்கு இறுக்கம் நிலவியதை என்னால் உணர முடிந்தது. அப்போதுதான் நான் அவளைப் பார்த்தேன். அந்தக் காட்சி எனக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை. கலைந்த கூந்தலுடனும், சிவந்து போயும் வீங்கியும் இருந்த கண்களுடனும், கோபத்துடனும் சூர்ப்பனகை அங்கு நின்று கொண்டிருந்தாள். உணர்ச்சிரீதியான மிரட்டலை நான் விரும்பவில்லை. எனது ஆட்சி, எனது தனிப்பட்ட விவகாரங்களோடு ஒன்றுகலந்தபோது அதை நான் வெறுத்தேன். நான் இங்கு ஒரு தோல்விச் சூழ்நிலையில் இருந்தேன். எனது சகோதரி தனது காதலனை விடுவிப்பதற்குத் தனக்குத் தெரிந்த அனைத்துத் தந்திரங்களையும் பயன்படுத்தி என்னை ஒப்புக் கொள்ள வைப்பாள் என்பதை நான் உறுதியாக அறிந்திருந்தேன். அரசவையில் முணுமுணுப்புகள் அடங்கிய நேரத்தில் நான் ஏற்கனவே கோபமாக இருந்தேன். நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். மாரீசன் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் வருத்தத்தோடு தன் தலையை ஆட்டினான். ஏதோ மோசமாக நிகழவிருந்ததை எதிர்பார்த்து நான் தயாராக இருந்தேன். பிரஹஸ்தன் தன் கைகளைத் தனது மார்புக்குக் குறுக்காகக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனது உறுதியான முகம் நிமிர்ந்திருந்தது. அவனது பார்வையில் உச்சகட்ட ஆணவம் தெரிந்தது. அவனது முகம் எதிர்ப்பை வெளிப்படுத்தியது. கும்பகர்ணன் தன் வாயில் எச்சில் ஒழுகத் தனது இருக்கையில் அமர்ந்திருந்தான். விபீஷணன் சில ஓலைச் சுவடிகளை மும்முரமாகப் புரட்டிக் கொண்டிருந்தான். எனது மந்திரிகள் அனைவரும் வெவ்வேறு விதமாக அமர்ந்து தங்களது எதிர்ப்பை வெளிப்படுத்தினர்.

“நான் வித்யுத்ஜீவனைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன்.” அந்த அறையில் பெரும் மௌனம் நிலவியது. சூர்ப்பனகை ஒருசில அடிகள் முன்னே வந்து, என் கண்களை நேராகப் பார்த்து, மீண்டும், “நான் அவனை மணந்து கொள்வேன். அதன் பிறகு நீங்கள் அவனைத் தூக்கில் இடலாம். அவனை நீங்கள் கொன்ற பிறகு, அவனுடைய சிதையில் குதித்து நானும் என் உயிரை மாய்த்துக் கொள்வேன்,” என்று கூறினாள்.

நான் பிரக்ஞையின்றி நடுங்கினேன். ஓர் அசுரப் பெண், அவள் எனது சகோதரியாக இல்லாவிட்டாலும்கூட, தேவர்கள் குலத்தைச் சேர்ந்த விதவைகளின் வழக்கத்தைப் பின்பற்றுவது அதிர்ச்சியூட்டுவதாக இருக்கும். ஒட்டுமொத்த அசுர இனமும் எள்ளி நகையாடப்படும். "உணர்ச்சிரீதியாக என்னை அச்சுறுத்த முயற்சிக்காதே," என்று நான் என் தொண்டை கிழியக் கத்தினேன்.

பிறகு அவள் ஒரு பைத்தியக்காரியைப்போல நடந்து கொள்ளத் துவங்கினாள். அவள் தனது கைகளைக் கொண்டு தன் தலையில் அடிக்கவும், தலைமுடியைப் பிய்த்து எறியவும், பெருங்குரலெடுத்துக் கத்தவும் துவங்கினாள். மற்றவர்களுக்கு அது ஒரு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. வேலைக்காரர்களும் காவலாளிகளும் தங்கள் சிரிப்பை அடக்கப் பெரும் முயற்சி செய்து கொண்டிருந்ததை நான் கண்டேன். நான் வெளிறிப் போய், சூழ்நிலையை எவ்வாறு கையாள்வது என்று தெரியாமல் விழித்தேன். எனக்கு மிகவும் தர்மசங்கடமாக இருந்தது. நான் மாரீசனைப் பார்த்தேன். ஆனால், அவன், தனக்கு எதிரே இருந்த சுவரில் இருந்த ஒரு சிறிய புள்ளியின்மீது தன் கவனத்தை நிலைப்படுத்தி, அதை மிகவும் உன்னிப்பாக ஆய்வு செய்து கொண்டிருந்தான். சூர்ப்பனகை என்னைப் பல மோசமான பெயர்களைச் சொல்லி அழைத்தாள். தனது தலையையும் வெட்டி எறியுமாறு அவள் எனக்குச் சவால் விடுத்தாள். எனது சகோதரியின் பைத்தியக்காரத்தனமான ஊளைகள், கத்தல்கள், சாபங்கள் ஆகியவற்றைத் தவிர, அந்த ஒட்டுமொத்த அரண்மனையும் அமைதியாக இருந்தது. நான் ஆதரவற்றவனாகவும் கோபமாகவும் களைப்பாகவும் குழப்பமாகவும் உணர்ந்தேன். அதைவிட அதிகமாக, நான் ஒரு நல்ல சகோதரனாக இல்லாமல் போனது குறித்தும், என் குடும்பத்தின்மீது போதுமான அக்கறை காட்டாதவனாக இருந்தது குறித்தும், எனது சகோதரியையும் சகோதரர்களையும் எங்களுடைய பெற்றோர்களிடமிருந்து பிரித்தது குறித்தும், கண்மூடித்தமான லட்சியவாதியாக நான் இருந்து கொண்டிருந்தது குறித்தும் நான் குற்ற உணர்வு கொண்டேன். உள்ளுக்குள் நான் பலவீனமடைந்து கொண்டிருந்ததை நான் அறிந்தேன்.

கும்பகர்ணன் தன் இருக்கையைவிட்டு எழுந்து, எதையோ சிந்தித்தபடி, "சகோதரனே, இது ஒரு குடும்ப விவகாரம். நாம் இதைத் தனிமையில் கையாள வேண்டும்," என்று கூறினான். நான் அது குறித்து அவனுக்கு நன்றியுடையவனாக இருந்தேன். கூட்டம் முடிவடைந்துவிட்டதை அறிவிக்கும் விதத்தில் நான் எழுந்து நின்றேன். அப்போது எனது மிகப் பிரியமான நண்பனான பிரஹஸ்தன் எழுந்து

நின்றான். அவன் ஒரு வரட்டுத்தனமான, இனிமையற்றக் குரலில், "அரசே, இது இனிமேலும் ஒரு குடும்ப விவகாரம் அல்ல. இது ஒட்டுமொத்த அசுர சாம்ராஜ்யத்தையும் சார்ந்த விஷயம். இது நமது நாட்டின் எதிரி சம்பந்தப்பட்டது. தீவிரவாதத்தையும் தேசத் துரோகத்தையும் நாம் எவ்வளவு தீவிரமாகக் கையாள்கிறோம் என்பதைப் பொருத்த விஷயம் இது. இது ஒரு நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியது. புரட்சிக்காரன் அரசனின் சகோதரியின் காதலன் என்ற உண்மை எதையும் மாற்றிவிடாது," என்று கூறினான்.

நான் ஓர் உறுமலோடு அவனை இடைமறித்து, "பிரஹஸ்தா, உன் சொற்பொழிவுகளை நிறுத்து. அது என்ன என்பதையும், நமது இனத்திற்கும் நாகரீகத்திற்கும் அது எவ்வளவு முக்கியம் என்பதையும் நான் அறிவேன். ஆனால் அந்தப் பரிதாபமான பெண்ணிடம் சிறிது பொறுமையையும் இரக்கத்தையும் வெளிப்படுத்து . . ." என்று வெடித்தேன். அதன் பிறகு எனது குரல் தேய்ந்து போனது. இரக்கம் காட்டும்படி எனது சொந்த மந்திரியிடம் கேட்கும் அளவுக்கு நான் பலவீனமடைந்து இருந்தேனா?

"தனிப்பட்ட முறையில் கூறுவதற்கு எனக்கு எதுவுமில்லை. இதயமற்ற அந்த அரக்கனால் நான் தூக்கில் இடப்பட விரும்புகிறேன்," என்று சூர்ப்பனகை மீண்டும் கத்தத் துவங்கினாள்.

பிரஹஸ்தன் எழுந்து நின்று, குனிந்து வணங்கிவிட்டு, அங்கிருந்து வெளியேறினான். மாரீசன், விபீஷணன், கும்பகர்ணன் ஆகியோரைத் தவிர, என் மந்திரிகள் அனைவரும் ஒவ்வொருவராக அங்கிருந்து வெளியேறினர். நான் என் தலையை என் கைகளில் புதைத்துக் கொண்டு என் அரியணையின்மீது அமர்ந்தேன். ஒரு கடும் வலி என் தலையைக் குடையத் துவங்கியிருந்தது. மாரீசன் என்னருகே வந்து, என் தோளில் தட்டிக் கொடுத்துவிட்டு, எனது மனசாட்சிப்படி ஒரு தீர்மானத்திற்கு வருமாறு என்னிடம் கூறினான். விஷயங்கள் அங்கிருந்து என் கட்டுப்பாட்டை மீறிச் சென்றன. எங்களுடைய சகோதரியின் மகிழ்ச்சியைவிட வேறு எதுவும் அதிக முக்கியமானதல்ல என்று விபீஷணனும் கும்பகர்ணனும் விவாதித்தனர். எங்களுடைய சொந்தச் சகோதரியை எங்களால் மகிழ்ச்சிப்படுத்த முடியாவிட்டால், இந்த சாம்ராஜ்யத்தைக் கைப்பற்றியதற்கு எந்த மதிப்பும் இல்லை என்று அவர்கள் வலியுறுத்தினர். என் தங்கை அவனை நேசித்தாள் என்ற ஒரே காரணத்திற்காக, தேசத் துரோகக் குற்றம் இழைத்த ஒருவனை என்னால் தண்டிக்காமல் விட முடியாது என்று நான் அவர்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க விரும்பினேன். ஓர் அரசனான நான், ஒரு மோசமான எடுத்துக்காட்டாக இருக்க விரும்பவில்லை. வித்யுத்ஜீவன் ஏன்

தூக்கிலிடப்பட வேண்டும் என்பதற்கு என்னிடம் ஏகப்பட்ட வாதங்கள் இருந்தன, ஆனால் நான் அமைதியாக இருந்தேன் என்பதை நான் வெட்கத்துடன் கூற வேண்டியுள்ளது. சூர்ப்பனகையைத் தனது காதலனுக்கு மணமுடித்துக் கொடுக்க வேண்டியது அவசியம் என்று என்னை ஒப்புக் கொள்ள வைக்க நான் அவர்களை அனுமதித்தேன். எனவே, எனது சிந்தனைக்கு எதிராக, எனது மந்திரிகளின் அறிவுரைக்கு எதிராக, சரியானதற்கும் ஒழுக்கநெறிக்கும் அறநெறிக்கும் நடைமுறை அறிவிற்கும்கூட எதிராக, என் சகோதரி என் எதிரியை மணமுடிக்க நான் அனுமதித்தேன். அச்செய்தியை என் சகோதரியிடம் தெரிவிக்கும்படி விபீஷணனிடம் கூறிவிட்டு, மனமுடைந்த ஒரு மனிதனாக நான் என்னுடைய அறைக்குத் திரும்பினேன்.



# 25

## ஓர் அற்பப் புழு

பத்ரன்

வித்யுத்ஜீவன் ராவணனின் மைத்துனனாக ஆகி ஆறு மாதங்கள் ஆகியிருந்தது. என் வாழ்க்கை, வழக்கம்போல, தொடர்ந்து அவலமானதாகவே இருந்தது. அரண்மனையில் என்னால் என் முகத்தைக் காட்ட முடியவில்லை. ஏனெனில், நான் அவ்வாறு செய்தால், வித்யுத்ஜீவன் என் மரணத்தை உறுதி செய்திருப்பான். ராவணனைப் பற்றியும் என்னால் உறுதியாகக் கூற முடியவில்லை. அவர்கள் இப்போது உறவினர்களாக ஆகியிருந்தனர். என் நிலை என்ன என்பதும் எனக்குத் தெரியவில்லை. நான் ஒருசில நாட்கள் காட்டில் ஒளிந்திருந்தேன். பசி என்னை அக்காட்டிலிருந்து துரத்தியபோது, தற்காலிகமாக நான் தெருக்களுக்கு வந்தேன். ஒருசில வாரங்கள், நான் பிடிபட்டுவிடுவேனோ என்ற பயத்தில் வாழ்ந்தேன். நான் ஒரு படைவீரனைப் பார்த்த ஒவ்வொரு முறையும், அல்லது காவலர்களின் ரதங்கள் தெருக்களின் வழியாகச் சென்ற சத்தம் என் காதுகளில் விழுந்த ஒவ்வொரு முறையும் ஓடி ஒளிந்தேன். பிறகு என் பயம் மெல்ல மெல்லக்

குறைந்தது. அரசர்களும் அவர்களது உறவினர்களும் என்னைப் பற்றி அக்கறை கொள்ளும் அளவுக்கு நான் அவ்வளவு பெரிய மனிதனாக இருக்கவில்லை.

கூடுதலாக ஒருசில வாரங்கள் அந்நகரின் தெருக்களில் சுற்றித் திரிந்த பிறகு, நான் மாலாவோடு போய்ச் சேர்ந்து கொண்டேன். முதலில் அவள் மிகவும் கவலையாக இருந்தாள். அவள் என்னிடம் சகவாசம் வைத்துக் கொள்ள விரும்பவில்லை. ஒட்டுமொத்தப் புரட்சிப் படையும் கலைக்கப்பட்டிருந்தது. மாயை இருள் விலகிய முன்னாள் புரட்சிக்காரர்கள் இந்தியாவிலிருந்த தங்களது சொந்தக் கிராமங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். ஆனால், அப்படையில் பெரும் எண்ணிக்கையில் இருந்த சந்தர்ப்பவாதிகள், ராவணனின் படையில் சேர்ந்து கொண்டு, அதிகாரத்துடன்கூடிய பதவிகளைப் பெறுவதற்காகச் சென்றனர். மாலாவின் கதாநாயகனும் காதலனுமான வித்யுத்ஜீவன், கருப்பான மற்றும் அசிங்கமான ஓர் இளவரசிக்காக, மாலாவைக் கைவிட்டுவிட்டுச் சென்றிருந்ததால், எல்லோரும் அவளை எள்ளி நகையாடினர். முதல் நாளன்று அவள் என்னைத் தன் வீட்டிற்குள் அனுமதிக்க மறுத்தாள், என்மீது வசை பாடினாள். அவளைப் பெறுவதில் நான் வெற்றி பெற்றிருந்தேன் என்பதை நான் அறிந்ததால் நான் பெரிதாகப் புன்னகைத்தேன். இறுதியில், நள்ளிரவில் அவள் என்னை உள்ளே அனுமதித்தாள். பல மாதங்களுக்குப் பிறகு அன்று நான் வயிறார உணவு உண்டேன். அதன் பிறகு அவளும் நானும் அன்றிரவை மிகவும் மகிழ்ச்சியாகக் கழித்துவிட்டுத் தூங்கினோம். ஆனால் மறுநாள் காலையில் அவள் மீண்டும் கோபமாக இருந்தாள். நான் அவளது மனநிலையைக் கண்டுகொள்ளாமல், அவளுக்கு எரிச்சலூட்டிய அந்தப் பழைய அசுர நாட்டுப்புறப் பாடலை முணுமுணுத்தேன். அப்பாடல், கருப்பான மற்றும் குண்டான ஓர் அசுரப் பெண், நகரிலிருந்த ஒவ்வோர் ஆணையும் துரத்திச் சென்றதைப் பற்றியது. அது ஒரு போக்கிரித்தனமான பாடல். நான் பாடிக் கொண்டிருந்த பாடலின் கதாநாயகி யார் என்பதைப் புரிந்து கொள்வதற்கு, பாடலின் இடையிடையே நான் அவளுக்குச் சிறிது அவகாசம் கொடுத்தேன். அவள் என்னை இன்னும் அதிகமாகத் திட்டிவிட்டு வெளியே சென்றாள். ஆனால் என் உற்சாகத்தை எதுவொன்றாலும் குறைக்க முடியவில்லை. ஆனால் திடீரென்று ஒருநாள், அவள் தனது பழைய காதலனைத் திருட்டுத்தனமாகச் சந்தித்துக் கொண்டிருந்தாள் என்பதை நான் அறிந்தேன். அன்று என் உற்சாகம் முற்றிலுமாக வற்றிப் போனது.

அவள்மீது எனக்கு ஏற்பட்டக் கடுங்கோபத்தில், அவளைப் பற்றி எனக்குத் தெரிய வந்த இரவன்றே நான் அவளைக் கொல்ல

விரும்பினேன். மாறாக, நான் அவளிடம் சரணாகதி அடைந்தேன். அவள் என்னை ஏமாற்றுவதற்கு நான் அனுமதித்தது குறித்து என்மீதும், அவள் என்னை இவ்வாறு நடத்தியது குறித்து அவள்மீதும் எனக்கு ஏற்பட்டக் கோபத்தில், அவளைப் பழி வாங்கத் திட்டமிட்டேன். ஆனாலும் நான் மனத்தளவில் மிகவும் காயப்பட்டிருந்தேன். இவ்வுலகில் நான் மிகச் சாதாரணமான புழுவேயன்றி வேறு எதுவும் இல்லை என்ற எண்ணம் என்னைத் தாக்க, என் திட்டத்தை யோசித்தபடியே நான் தூங்கிப் போனேன்.

மறுநாள் காலையில் நான் கண்விழித்தபோது, எனக்கு எரிச்சலாக இருந்தது. நான் சோம்பலுடன் எழுந்து, என் இடுப்பில் ஒரு துவாலையைச் சுற்றிக் கொண்டு, கிணற்றை நோக்கி நடந்தேன். நான் குடித்திருந்த கள்ளின் வாடை என் உடல்மீது வீசியதை என்னால் நுகர முடிந்தது. எல்லாமாகச் சேர்ந்து எனக்கு வெறுப்பூட்டியது. ஒளிர்ந்து கொண்டிருந்த கிணற்றுத் தண்ணீரில் என் கரிய முகத்தின் பிரதிபலிப்பைப் பார்த்தபடி நான் நெடுநேரம் அங்கு நின்றேன். கிணற்றுக்குள் குதித்து என் வாழ்க்கையை முடித்துக் கொள்ளலாமா என்று நான் யோசித்தேன். ஆனால் அதில் இரண்டடி தண்ணீர் மட்டுமே இருந்தது. மெல்ல மெல்ல, ஒரு திட்டம் என் மனத்தில் உருவாகியது. நான் எப்படியாவது ராவணனைச் சந்தித்தாக வேண்டும் என்று முடிவு செய்தேன்.

நான் என் அறைக்குத் திரும்பி வந்து, உடை மாற்றினேன். கசங்கிப் போயிருந்த எனது வேட்டியில் துர்நாற்றம் வீசியது, ஆனால் என்னிடம் மாற்று உடை எதுவும் இருக்கவில்லை. நான் ஒரு பிச்சைக்காரனைப்போலத் தோன்றினேன். நான் என் கைகளால் என் தலையை ஒழுங்குபடுத்திவிட்டு, என் நெற்றியில் திருநீறு பூசிக் கொண்டு, ராவணனின் அரண்மனையை நோக்கி நடந்தேன். நான் அதன் முக்கிய வாயிலைச் சென்றடைந்தபோது, வெளியே ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்தது. அங்கு என்ன குழப்பம் நிலவியது என்பதைத் தெரிந்து கொள்ள நான் மிகவும் ஆவலாக இருந்தேன். ஏராளமான இனிப்பு விற்பனையாளர்களும் நிலக்கடலை விற்பனையாளர்களும் அங்குமிங்கும் ஓடியாடித் தங்கள் பொருட்களை விற்றனர். பருவ வயதினர் நிரம்பிய ஒரு குழு அக்கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே செல்ல முயன்றது. நெடுநெடுவென்றும் நோஞ்சானாகவும் இருந்த ஒரு கருத்த இளைஞனிடம் அங்கு நடந்து கொண்டிருந்த விவகாரத்தைப் பற்றிக் கேட்டேன்.

“உனக்குத் தெரியாதா?” என்று கேட்ட அவனது கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன.

“எனக்கு எப்படித் தெரியும்?”

“அது சரி, உனக்கு மிகவும் வயதாகிவிட்டது. எனவே நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்,” என்று அவன் கூறினான்.

எனக்கு எரிச்சல் ஏற்பட்டது. எனக்கு முப்பத்தைந்து வயதுதான் ஆகியிருந்தது. முடிந்த அளவுக்கு நான் என் எரிச்சலை மறைத்துக் கொண்டு, “அந்தக் கோமாளிகள் எது குறித்துச் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள்?” என்று அவனிடம் கேட்டேன்.

“முட்டாள் கிழவனே, நாங்கள் எல்லோரும் நமது பேரரசரின் படையில் வீரர்களாக ஆகப் போகிறோம்.”

“பேரரசரா? எந்தப் பேரரசர்?” என்று கேட்ட நான் பாதியிலேயே நிறுத்தினேன். ஒருவேளை, ராவணன் தனக்குப் பேரரசனாகப் பதவி உயர்வு கொடுத்திருக்கக்கூடும். அவர் பேரரசராக இருந்தாலும் சரி, அல்லது மகாராஜாவாக இருந்தாலும் சரி, அல்லது யாராக இருந்தாலும் சரி, ஆட்சி அவர் வசம் இருக்கும்வரை அது பற்றி எனக்குக் கவலையில்லை.

“பேரரசருக்கு ஒரு பெரிய படை தேவை. அதனால்தான் உன்னைப் போன்ற முட்டாள்கள் அவருக்குத் தேவைப்படுகின்றனர்,” என்று அவன் என்னைக் கேலி செய்தான். அரசனின் படையில் இந்த நோஞ்சான் என்ன செய்யப் போவதாக இருந்தான் என்று என்னால் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை.

அவனது நண்பர்கள் என்னைப் பார்த்து இளக்காரமாகச் சிரித்துவிட்டு, “மாமா, நீங்கள் உண்மையிலேயே ஒரு வடிகட்டிய முட்டாள்தான். நமது பேரரசர் வட இந்தியாவைத் தாக்கத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார். அசுரர்களாகிய நாம் பழி வாங்கப் போகிறோம். அந்த தேவச் சண்டாளர்களால் ஒருபோதும் மறக்க முடியாத அளவுக்கு நாம் அவர்களுக்கு ஒரு நல்ல படிப்பினையைக் கற்றுக் கொடுக்கப் போகிறோம்.”

அக்கணத்தில், கூட்டத்தினர் உற்சாகமாகக் குரலெழுப்பினர். ஒரு நெட்டையான, ஒளிமயமான உருவம், அரண்மனை மேல்மாடத்தில் தோன்றியதை நான் கண்டேன். “நமது பேரரசர் வாழ்க! அசுரர்களுக்கு வெற்றி! தேவர்களுக்கு மரணம்!” போன்ற முழக்கங்கள் கூட்டத்தினரிடையே எழுந்தன. நகையலங்காரத்துடனும், மற்றவர்கள்மீது ஒரு மாயாஜாலமான வசியத்தை ஏற்படுத்திக் கொண்டும், தனது உருவிய வாளுடன் ராவணனின் அந்த உயரமான உருவம், “ஹர ஹர மகாதேவா! சம்போ மகாதேவா!” என்று உரத்தக் குரலில் முழங்கியது. கூட்டம் அதைத் திருப்பிக் கூறியது. ‘ஹர ஹர மகாதேவா’ என்ற முழக்கம் அக்கூட்டம் நெடுகிலுமிருந்தும் கேட்டது.

கூட்டம் பெருகியது. நான் கிட்டத்தட்ட மத்திக்கு வந்திருந்தேன். விரைவில், இன்னொரு வசீகரமான உருவம் ராவணனுடன் சேர்ந்து கொண்டது. கண்ணைக் கவரும் விதத்தில் உடையணிந்திருந்த வித்யுத்ஜீவன், ராவணனுடன் மேல்மாடத்தில் வந்து நின்றான். அவனைத் தொடர்ந்து, குண்டோதரன் கும்பகர்ணனும் அவனது சகோதரன் விபீஷணனும் வந்தனர். பிறகு ராவணனின் படைத் தளபதிகளும் மந்திரிகளும் ஒவ்வொருவராக மேல்மாடத்திற்கு வந்து, பேரரசருடன் சேர்ந்து கொண்டனர். கூட்டத்தினரைக் கையில் பிடிக்க முடியவில்லை. மேளச் சத்தம் விண்ணைப் பிளந்தது. செண்டை ஒலியும் உடுக்கை ஒலியும் ஒரு பெரிய ஆரவாரத்தை ஏற்படுத்தின. அங்கு நிலவிய சூழல் பெரும் உற்சாகமூட்டுவதாக இருந்தது. யுத்தக் கொம்புகள் முழங்கின, சங்குகள் ஊதப்பட்டன.

நானும் உற்சாகமடைந்தேன். எனது இளவயது மகளின் தலையைச் சிதறடித்து என் மனைவியைக் கற்பழித்திருந்த தேவர்களைப் பழிக்குப் பழி வாங்குவது என்று என் இதயத்தில் நான் வளர்த்து வந்திருந்த ரகசிய விருப்பம் என்னைத் தீவிரமாக ஆட்கொண்டது. நான் இக்கணத்திற்காகத்தான் காத்திருந்தேன். “ஹர ஹர மகாதேவா! தேவர்களுக்கு மரணம்! இந்திரனுக்கு மரணம்! மகேஸ்வரனுக்கு வெற்றி!” என்று நான் உரத்தக் குரலில் கத்தினேன். விரைவில் பலர் என்னுடன் சேர்ந்து கொண்டனர். பிறகு ஐம்பது பேர் அடங்கிய ஒரு குழு, பெரும் ஆற்றலுடனும் உற்சாகத்துடனும், நான் கூறியதையெல்லாம் திருப்பிக் கூறியது. எனக்கு அருகில் நின்று கொண்டிருந்த ஒரு குண்டான அசுரன், என்னைவிடச் சத்தமாகக் கத்த முயற்சித்தான், ஆனால் ரகசியமாகவும் லாவகமாகவும் நான் அவனது பாதத்தில் எட்டி ஓர் உதை விட்டது, அன்று முழுவதும் அவனை அமைதிப்படுத்தியது. குறைந்தபட்சம் அக்கணத்தில், எனது தலைமைத்துவம் உறுதி செய்யப்பட்டது. வித்யுத்ஜீவன் எதையோ கூற முயற்சித்தான், ஆனால் மேல்மாடத்திலிருந்து பேசப்பட்ட எதுவும் கூட்டத்தை வந்தடையவில்லை.

அந்தப் பெரிய கூட்டத்தில் பல சிறிய வட்டங்கள் உருவாகியிருந்தன. ஒவ்வொரு குழுவும் அதிக அளவில் சத்தத்தை உருவாக்க முயற்சித்தது. ஒருசிலர் ஒருவருக்கொருவர் சண்டையிட்டனர். ஆனால் பொதுவாக அங்கு நிலவிய உற்சாகம் கட்டுக்கடங்காததாக இருந்தது. இது ஒரு மணிநேரத்திற்கும் அதிகமாக நீடித்தது. சூரியன் உச்சி வானிற்கு வந்திருந்தது. ஆயிரக்கணக்கான கரிய உடல்கள் அதன் ஒளியில் தகதகத்தன. வாசனைகளும் வெப்பமும் ஈரத்தன்மையும் என் புலன்களைத் தாக்கின. எனது வறண்ட தொண்டை என்னைத்

தொந்தரவு செய்தது, ஆனாலும் நான் என் முழக்கத்தை நிறுத்தினால் யாரேனும் என் இடத்தை எடுத்துக் கொண்டுவிடுவார்களோ என்று பயந்து நான் தொடர்ந்து கோஷமிட்டேன். அப்போது திடீரென்று அனைவரும் அமைதியானார்கள். சூரியனின் கதிர்கள் இப்போது ஈவு இரக்கமின்றி வதைக்கத் துவங்கியிருந்ததால் அரசாங்கப் பிரதிநிகள் அனைவரும் மேல்மாடத்திலிருந்து சென்றுவிட்டிருந்தனர். அவர்கள் தங்களுடைய குளுமையான அறைகளைச் சென்றடைந்திருந்தனர். பின்னாலிருந்த யாரோ ஒருவன் மீண்டும் ஒருமுறை ‘மகேஸ்வரனுக்கு வெற்றி’ என்று உரக்கக் கத்தினான். குதிரை வீரர்கள் அக்கூட்டத்திற்குள் நுழைந்து கொண்டிருந்ததை என்னால் காண முடிந்தது. குதிரைகளுக்கு அருகே ஒரு பெரும் சலசலப்பு ஏற்பட்டது. இலவச உணவுப் பொட்டலங்கள் தூக்கி எறியப்பட்டுக் கொண்டிருந்தன. அவற்றைப் பிடிப்பதற்கு ஆயிரக்கணக்கான கைகள் உயர்ந்தன. அந்தப் பொட்டலங்களில் ஒன்றைப் பிடிப்பதற்காக நானும் எல்லோரையும் தள்ளிக் கொண்டு வெற்றிகரமாக முன்னால் சென்றேன். நாட்பட்ட இறைச்சியும், சிறிது சோறும், காரசாரமான மீன் குழம்பும், காய்ந்து போன வாழை இலைகளில் மடிக்கப்பட்டுப் பொட்டலங்களாகக் கட்டப்பட்டிருந்தன. நான் என் பொட்டலத்தில் இருந்தவற்றை விழுங்கினேன். மாலை வேளை நெருங்கியபோது, கூட்டம் கலைந்தது. அரண்மனை வளாகம் முழுவதும் வாழை இலைகளும் மீன் முட்களும் உணவுத் துகள்களும் சிதறிக் கிடந்தன.

அரண்மனைக்குள் நுழைவதற்கு ஒரு வழியைப் பற்றி யோசித்தவாறே நகரின் முக்கிய வீதியில் நான் நடந்தேன். கூட்டத்தில் நான் சந்தித்த அந்த நெட்டையான அசுரனும் அவனது தோழர்களும் சிவன் கோவிலின் படிக்கட்டுகளில் உட்கார்ந்து கொண்டு, அவ்வழியாகச் சென்ற பெண்கள்மீது ஓரப் பார்வை வீசிக் கொண்டிருந்தனர். எப்பேற்பட்டச் சிக்கலற்ற வாழ்க்கை! அந்த நெட்டை இளைஞன் என்னைப் பார்த்துக் கையசைத்தான். எனக்கும் உருப்படியாக எந்த வேலையும் இருக்காததால் நான் அவனை நோக்கி நடந்தேன். அவன் தனக்கு அருகே இருந்த படியைத் தனது கையால் துடைத்து, என்னை அதில் உட்காரும்படிச் சைகை காட்டினான். அவன் துடைத்த இடத்திலிருந்து தூசி பறந்தது. ஆலமரத்திற்கு அடியில், வேக வைத்த வேர்க்கடலைகளை விற்றுக் கொண்டிருந்த ஒருவனிடம் சென்று, என்னிடமிருந்த கடைசிச் சில்லறையைக் கொடுத்து, ஒரு குத்துக் கடலைகளை வாங்கினேன். ஆவி பறந்து கொண்டிருந்த கடலைகளை, அந்த விற்பனையாளன், வாழை இலையில் அழகாகப் பொட்டலம் கட்டிக் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு அந்த இளைஞனுடன்

சென்று அமர்ந்து கொண்டு, வேர்க்கடலைகளை அந்தக் கும்பலிடம் நீட்டினேன். அவர்கள் ஒவ்வொருவராக அதிலிருந்து எடுத்தப் பிறகு, கடைசியாக அந்தப் பொட்டலம் என்னிடம் வந்தபோது, அதில் ஒருசில கடலைகள் மட்டுமே மிச்சமிருந்தன.

“அவர்கள் இன்று போருக்குப் போகப் போகிறார்கள் என்று நான் நினைத்தேன்,” என்று நான் விட்டேத்தியாகக் கூறினேன். நான் ஏதோ ஒரு பெரிய நகைச்சுவைத் துணுக்கைக் கூறியதுபோல அந்த இளைஞர்கள் அனைவரும் வெடிச் சிரிப்புச் சிரித்தனர். நான் வெறுமனே பல்லிளித்தேன். அந்த நெட்டையன் என் முதுகில் பலமாகத் தட்டினான். நான் இன்னும் பெரிதாகப் பல்லிளித்தேன்.

“கடந்த சில வாரங்களாக இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. நாங்களும் பொறுமை இழந்துவிட்டோம். தேவர்களை நையப்புடைக்க நாங்கள் துடித்துக் கொண்டிருக்கிறோம்,” என்று அந்த இளைஞன் சர்வசாதாரணமாகக் கூறினான்.

“நீ ஏன் ராணுவத்தில் சேர விரும்புகிறாய்? தேவர்களுக்கு எதிராகத் தனிப்பட்ட முறையில் உனக்கு ஏதேனும் மனவெறுப்பு இருக்கிறதா?” என்று நான் அவனிடம் கேட்டேன். அக்கேள்வி எனக்கே முட்டாள்தனமாகத் தோன்றியது.

“அவர்கள் ஏராளமான அசுரர்களைக் கொன்றுள்ளார்கள், இல்லையா? அவர்கள் நமது கோவில்களை அழித்தனர். அவர்கள் சிவனை மதிப்பதில்லை, சரிதானே?” அந்த இளைஞர்கள் குழப்பமடைந்திருந்ததுபோலக் காணப்பட்டனர்.

“தேவர்களுக்குக் கொம்புகளும் வால்களும் இருப்பதாக என் தாயார் கூறுகிறார். அவர்கள் தங்களுடைய வால்களைத் தங்கள் வேட்டியின் மடிப்புகளில் மறைத்து வைத்துக் கொண்டுள்ளனராம்.”

புத்திசாலியைப்போலத் தோன்றிய இன்னொருவன், “இது பழங்காலக் கட்டுக்கதைகளில் ஒன்று,” என்று கூறிவிட்டு, “தேவர்கள் அனைவரும் நாகரீகமற்றக் காட்டுமிராண்டிகள்,” என்றான்.

“நீங்கள் அனைவரும் வெறுமனே உலகத்தைச் சுற்றிப் பார்க்க விரும்புகிறீர்கள், அப்படித்தானே?” என்று நான் கேட்டேன்.

“ஆமாம், ஆனால் நாங்கள் நமது இனத்திற்காக உயிரைக் கொடுப்போம்.” அந்த நெட்டையன் எழுந்து நின்று, தனது முஷ்டிகளை மடக்கிக் கொண்டு, சற்று மிகையாக, “என் உடல் மண்ணுக்கு, உயிர் அசுர இனத்திற்கு,” என்று முழங்கினான். மற்றவர்கள் அவனை உற்சாகப்படுத்தினர். பிறகு எல்லோரும் தங்கள் அரட்டையைத் தொடர்ந்தனர்.

நான் அவர்களது இளமையையும் அப்பாவித்தனத்தையும் கண்டு

பொறாமை கொண்டேன். பரிதாபமான இவர்களுடைய வாழ்வில் ஒரு போர் எவற்றையெல்லாம் கொண்டு வரும் என்று எண்ணி நான் பயந்தேன். போரைப் பற்றி இந்தச் சாமானியர்களுக்கு என்ன தெரியும்? அவர்களுக்கு அருகே நான் மிகவும் வயதானவனாக உணர்ந்தேன். நான் அவர்களுடன் இருப்பதற்குப் பொருத்தமானவனல்ல என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. என் மனமுதிர்ச்சி என்னையே அச்சுறுத்தியது. நான் அங்கு நீண்ட நேரம் அமர்ந்திருந்தேன். உயரமான தென்னை மரங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்த நேரத்தில், மாலைநேரக் கடற்காற்று, களைத்துப் போன எனது உடலை வருடியபோது, அரட்டையடித்துக் கொண்டிருந்த அந்த இளைஞர்களிடமிருந்து என்னை விடுவித்துக் கொண்டு, என் வீட்டை நோக்கி நடந்தேன்.

மாலைநேரப் பிரார்த்தனைகளின் சத்தமும் கோவில் மணிகளின் கிணுகிணுப்பும் கோவில் படிகளில் ஏறிக் கொண்டிருந்த அழகான பெண்களின் வளையலோசையுடன் ஒன்றுகலந்தன. மகிழ்ச்சியும் உற்சாகமும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் வழிந்தோடிக் கொண்டிருந்தன. ஆனால், இந்த அழகிய மாலைப் பொழுது, மூடுபனியைப்போல மறைந்து போய்விடும் என்ற ஒரு கொடிய பயம் என்னுள் எழுந்தது. மூடுபனியின் மடிப்புகளுக்குப் பின்னாலிருந்து வரும்போது, அந்த இருள், எதைக் கொண்டு வருமோ என்று நான் குலை நடுங்கினேன். லேசான ரத்த வாசனையையும் போர் மற்றும் மரணத்தின் நெடியையும் என்னால் உணர முடிந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக, மிக மோசமான நயவஞ்சகத்தையும் சிதைவையும் என்னால் நுகர முடிந்தது. பரிதாபகரமான எங்களுடைய இனத்தின் கனவு இனிமையற்றதாக மாறத் துவங்கியிருந்தது.

நான் களைப்போடு அரண்மனைக்குச் சென்று, பேரரசரை நான் சந்திக்க விரும்பியதாகக் கூறினேன். பருத்த உடலைக் கொண்டிருந்த அரண்மனைக் காவலாளி, நான் ஏதோ ஒரு பைத்தியக்கார விடுதியிலிருந்து தப்பி வந்திருந்ததுபோல என்னைப் பார்த்துவிட்டு, உடனடியாக என்னை அங்கிருந்து விரட்டினான். அரண்மனையைச் சுற்றி இருந்த தோட்டத்தில், ஓர் அசோக மரத்தின் அடியில் நான் காத்திருந்தேன். தனது மேல்மாடத்திலிருந்தோ அல்லது சன்னல் வழியாகவோ பேரரசர் என்னைப் பார்ப்பார் என்று நான் நம்பினேன். நான் இன்னும் என் பாடங்களைக் கற்க வேண்டியிருந்தது என்பதை இது நிரூபித்தது. அன்றிரவு அந்தத் தடிமனான மரத்தின் கீழே நான் படுத்துத் தூங்கினேன். அதிகாலையில் மழை பெய்தபோது, நான் என் குடிசைக்குத் திரும்பினேன். ஆனால் அன்று மாலையில் மீண்டும் அரண்மனைக்கு நடந்து சென்று, அந்த அசோக மரத்தின் அடியில் நான்



# 26

## தீண்டத்தகாத அரசன்

ராவணன்

அன்றைய தினம் மெல்ல மெல்லக் கரைந்தது. ஆனால் அன்று நிலவிய வெப்பத்தில், இலங்கைத் தீவு, சற்று முன் வெந்நீரில் துவைக்கப்பட்ட ஓர் ஈரத் துணியைப்போல இருந்தது. நான் இறுக்கத்தோடும் பதற்றத்தோடும் இருந்தேன். போருக்கான ஆயத்தங்கள் கடந்த ஒருசில வாரங்களாக நடைபெற்று வந்து கொண்டிருந்தன. எனக்கு அது ஒரு வகையான புனிதப் பயணத்தைப்போல இருந்தது. காட்டுப் பாதைகளின் ஊடாக இமயமலைக்கு ஒருமுறை ஒரு சிறு பிரயாணம் சென்றிருந்ததைத் தவிர, நர்மதை ஆற்றை நான் ஒருபோதும் கடந்ததில்லை. அசுர நாகரீகம் உச்சகட்டத்தில் இருந்தபோது, சரஸ்வதி மற்றும் சிந்து நதிக் கரைகளில் அது கட்டியெழுப்பியிருந்த புகழ்வாய்ந்த நகரங்களைப் பார்க்க அப்போது நான் ஆவலாக இருந்தேன். ஆனால் இப்போது, சொல்லிக் கொள்ளும்படியாக அவற்றில் அதிகம் எஞ்சியிருக்கவில்லை. சிந்து நதியின் சீற்றம், சரஸ்வதி நதியின் வற்றல், முற்றுகைகள்,

சூறையாடல்கள் போன்றவை அந்நகரங்களை எங்கள் இனம் மற்றும் நாகரீகத்தின் மாபெரும் மயான பூமியாக மாற்றியிருந்தன.

ஓர் ஒட்டுமொத்த நாகரீகமும் அதன் மக்களும் முற்றிலுமாக நசுக்கப்பட்டு, அவர்களுடைய உணர்வுகள் நிர்மூலமாக்கப்பட்டு இருந்தன. தாங்கள் கீழ்த்தரமான ஜந்துக்கள் என்று சிந்திக்கவும், தங்களது தோலின் நிறத்தை வெறுக்கவும், வெள்ளைத் தோல்தான் உன்னதமானது என்று கருதவும் ஒரு மாபெரும் இனத்திற்குக் கற்றுக் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் இப்போது, சிந்திப்பதற்கான நேரம் வந்திருந்தது. இந்தப் பரந்த நிலத்தின் தென்முனையில் இருந்த ஒரு தொலைதூரத் தீவிலிருந்து, அரச ரத்தமோ அல்லது மாபெரும் வம்சப் பரம்பரையோ இல்லாத, ஓர் அரைச்சாதி அசுரன், ஒரு பழைய நாகரீகத்தின் தொலைந்து போன நிலங்களை மீட்கவிருந்தான். எனது நாடி நரம்புகளில் சிலிர்ப்பு ஏற்பட்டதை நான் உணர்ந்தேன். இது ஒரு புதிய விடியல். வரலாறு ராவணனைப் பற்றிப் பேசும்போது, ஆன்மீகரீதியாக நசுக்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டிருந்த தனது மக்களை, ஏழ்மையையும் எதிர்ப்பையும் சமாளித்துப் புகழுக்கு இட்டுச் சென்ற ஒரு மனிதன் என்று பெருமையோடும் வியப்போடும் பேசும். எல்லாம் திட்டப்படி நடக்கும் பட்சத்தில், சிவனின் ஆசீர்வாதத்தோடு, இந்தப் பரந்த நிலத்தை அசுரர்கள் மீண்டும் ஆள்வார்கள்.

நான் எனது தனிப்பட்ட அறைக்குள் நுழைந்து, ஒரு துணியில் கையால் வரையப்பட்டிருந்த இந்தியத் துணைக்கண்டத்தின் வரைபடத்தை விரித்தேன். நான் ஒரு தாக்குதலைத் துவக்குவதாக இருந்தால், கிழக்குக் கடற்கரையைப் பின்தொடர்ந்து செல்ல வேண்டும். வழியில், சிறிய அசுர ராஜ்யங்களைத் தவிடுபொடியாக்கி, பிறகு அலகாபுரியை அடைய வேண்டும். எனது மாற்றாந்தாய் மகன் அங்கு ஆண்டு கொண்டிருந்தான். அவன் தனது வியாபாரத் திறமையைக் கொண்டு, தனது வியாபார சாம்ராஜ்யத்தை அங்கு மீண்டும் நிலைநாட்டியிருந்தான். அவனது கப்பல்கள் மேற்கிற்குப் பதிலாக இப்போது கிழக்கு நோக்கிப் பயணிக்கின்றன. தீவுகளை ஒட்டுமொத்தமாக அவன் புறக்கணித்தான். அவன் மீண்டும் இவ்வுலகின் மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவனாக ஆகியிருந்தான். என்னுடைய தாக்குதல்களுக்குத் தேவையான நிதியைக் கைவசப்படுத்துவதற்கு, நான் எனது சகோதரனிடமிருந்து மீண்டும் கொள்ளையடிக்க வேண்டியிருக்கும்.

ஆனால், நிதி அல்லது போர்த் திட்டங்களைவிட அதிகமாக, எனது கைக்குழந்தையின் எதிர்காலம்தான் என்னைப் பெரிதும் கவலைக்கு உள்ளாக்கியது. அவளுடைய பிறப்பு மிகவும் சிரமமானதாக இருந்தது.

அவள் பிழைப்பாள் என்றே நான் நம்பவில்லை. அவளை நான் என் கைகளில் ஏந்தியபோது, வருடக்கணக்கில் போர்களில் ஈடுபட்டு வந்திருந்ததால் கடினமாகிப் போயிருந்த எனது கைகளில் தவழ்ந்த அந்தப் பிஞ்சு உடல், எனக்குப் பெரும் திருப்தியைக் கொடுத்தது. ஒட்டுமொத்த உலகமும் எனக்குச் சொந்தமாகியிருந்ததாக நான் உணர்ந்தேன். என் மனைவி என் குழந்தையைக் கொஞ்சியதையும் அவளுக்குப் பாலூட்டியதையும் அவளைக் குளிப்பாட்டியதையும் பார்ப்பதில் நான் செலவிட்டச் சமயங்களில் வேறு எதுவுமே எனக்குப் பெரிதாகப் படவில்லை. நான் என்றென்றும் அந்த வாழ்க்கையை வாழ்ந்திருப்பேன். ஆனால் திடீரென்று ஒருநாள் எல்லாமே மாறியது. எனது தந்தையின் நண்பன் என்று கூறிக் கொண்டு எனது அரண்மனைக்கு வந்த ஜோதிடன் ஒருவன், என்னுடைய குழந்தையைப் பார்த்துவிட்டு, அசுரர்களுக்கு அவள் அழிவைக் கொண்டு வருவாள் என்று எல்லோர் முன்னிலையிலும் பிரகடனம் செய்தான். அன்றிலிருந்து, எனது அனைத்துக் குடும்ப உறுப்பினர்களும் அரண்மனை வேலைக்காரர்களும் எனது மந்திரிகளும் ஒரு வினோதமான முறையில் நடந்து கொள்ளத் துவங்கினர். என் மகள் என் கைகளில் அல்லது மண்டோதரியின் கைகளில் இருந்தபோது அவர்கள் அவளிடம் மரியாதையையும் அன்பையும் வெளிப்படுத்தினர். ஆனால் அவள்மீது அவர்கள் கொண்டிருந்த பயத்தையும் வெறுப்பையும் என்னால் உணர முடிந்தது. அசுரர்கள் எப்போதுமே மூடநம்பிக்கையில் மூழ்கியிருந்தனர். என்னுடைய மகளை இங்கு விட்டுவிட்டு, ஒரு தாக்குதலைத் தொடங்க எனக்கு அச்சமாக இருந்தது. அவள் பிறந்து ஒருசில வாரங்களே ஆகியிருந்தன. அசுரர்கள் எதற்கும் துணிந்தவர்கள். நான் என் மகளின் உயிருக்காக பயந்தேன். அவளை என்னுடன் கூட்டிச் செல்வதற்கு மண்டோதரியை ஒப்புக் கொள்ள வைப்பது கடினமாக இருக்கும். ஆனால் நான் அதற்கு ஒரு வழியைக் கண்டுபிடிப்பேன். ஒரு கைக்குழந்தையைப் போர் முகாம்களுக்குக் கூட்டிச் செல்வது நகைப்புக்குரிய விஷயம், ஆனால் நான் எனது சாம்ராஜ்யத்தை நிர்மாணித்துக் கொண்டிருக்கையில், யாரேனும் அவளுக்கு விஷம் வைத்துக் கொல்வதைவிடவோ அல்லது கத்தியால் குத்திக் கொல்வதைவிடவோ அது சிறந்ததுதான். அவள் என்னுடன் இருந்தால் அவளை என்னால் கண்காணிக்க முடியும். அவள்மீது ஒரு கண் வைத்திருக்குமாறு நான் பத்ரனிடம் கேட்டுக் கொள்ளலாம். ஆனால் அவனை என்னால் நம்ப முடியுமா?

எங்களுடைய சிறிய குழுவால், இரவில் தோன்றும் மின்னலைப்போலத் தொடர்ச்சியாகத் தாக்கிவிட்டு மறைய முடிந்தால்,

அர்ப்பணிப்புடன்கூடிய ஒரு சிறிய படைதான் எங்கள் தாக்குதலுக்குக் கச்சிதமானதாக இருந்திருக்கும். அவ்வழியில், எதிரியின் அமைதியையும் மன உறுதியையும் எங்களால் உடைத்தெறிய முடியும். மேற்குக் கடற்கரையோரமாக இருந்த கார்த்த வீர்யார்ஜுனனையும் மத்திய இந்தியாவில் இருந்த வாலியையும் மட்டும்தான் ஒரு சிறிய படையைக் கொண்டு தாக்க முடியாது. அவ்வாறு செய்வது எங்களுக்கு அதிக ஆபத்தானதாக இருக்கும். அவர்களது ராஜ்யங்கள் கடலிலிருந்து வெகுதூரத்தில் பரந்து விரிந்திருந்தன. உள்நாட்டில் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட ஒரு களத்தில் நாங்கள் ஒரு திட்டமிட்டத் தாக்குதலை நடத்த வேண்டியிருக்கும். அசுரக் கடற்படையின் பெரிய கப்பல்கள் செல்லும் அளவுக்கு நர்மதை நதியின் சதுப்பு நிலங்கள் அவ்வளவு ஆழமாக இருக்கவில்லை. மத்திய இந்தியாவின் கரடுமுரடான நிலங்களை, அடர்த்தியான புதர்கள் அடங்கிய காடுகள் வழியாக நடந்து சென்று அடைவது சிக்கலானதாக இருக்கும். ஆனால் கங்கைச் சமவெளிகளில் இருந்த காட்டுமிராண்டிகளான தேவப் பழங்குடியினரைத் துவம்சம் செய்வது ஒரு பிரச்சனையாக இருக்காது.

அந்தி சாய்ந்து கொண்டிருந்தபோது நான் தூங்கப் போகவிருந்த நேரத்தில், ஒரு தனிமையான உருவம் அரண்மனையிலிருந்து மெதுவாக நொண்டிக் கொண்டே சென்று கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அச்சிறிய, கருத்த உருவம் எனக்குப் பரிச்சயமானதாக இருந்தது. திடீரென்று தோன்றிய ஒரு மின்னல், ஒரு கணம் அந்த ஒட்டுமொத்த இடத்தையும் பகலாக மாற்றியது. அப்போது அந்த உருவம் பயந்து போய் நிமிர்ந்து பார்த்தபோது நான் அதைத் தெளிவாகக் கண்டேன். பத்ரன்! அவனால் இறந்து போகவே முடியாதுபோலும். நிம்மதியா அல்லது வெறுப்பா அல்லது பரிதாபமா? என்னுள் என்ன உணர்வுகள் எழுந்தன என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், நேரங்கெட்ட நேரத்தில் நான் ஏன் என் காவலாளியை அழைத்து அவனை என் அறைக்குள் கொண்டு வருமாறு கூறினேன்?



## பத்ரன்

அலகாபுரியின் முற்றுகைதான் நான் இதுவரை சண்டையிட்டிருந்ததிலேயே மிகவும் பயங்கரமான யுத்தமாகும். நாங்கள் குபேரனின் ராஜ்யத்தை அடைந்தபோது, அசுரப் படையின்

எண்ணிக்கை ஒருசில லட்சங்களை எட்டியிருந்தது. வழியில் அது பல கிராமங்களை நெருப்புக்கு இரையாக்கி, பல நகரங்களைச் சின்னாபின்னமாக்கியது. அந்த நேரத்தில், அறுபதுக்கும் மேற்பட்டச் சிறிய மற்றும் பெரிய அரசர்களும் பழங்குடியினத் தலைவர்களும் ராவணனின் அதிகாரத்திற்குப் பணிந்து, ராவணனின் வெற்றிப் படையுடன் இணைந்து கொண்டனர். பல நகரங்களில் பிராமணர்கள் தேடிக் கண்டுபிடிக்கப்பட்டுத் தூக்கில் இடப்பட்டனர். விஷ்ணுவின் சிலைகள் நொறுக்கப்பட்டு மிதிக்கப்பட்டன. அவை இருந்த இடங்களில் சிவலிங்கங்கள் நிர்மாணிக்கப்பட்டன. அசுரர்களின் பெருமை மீட்கப்பட்டுக் கொண்டிருந்தது. அது தேவக் கொடுங்கோலர்களுக்கு எதிராக ஒட்டுமொத்த நாட்டையும் கிளர்ந்தெழச் செய்தது. ராவணன் முன்னின்று வழிநடத்தினார். அவரது துணிச்சல் அனைவருக்கும் உத்வேகமூட்டுவதாக இருந்தது. அந்தத் துணிச்சல் சில சமயங்களில் மடத்தனமான துணிச்சலாக இருந்தது. ஆனால், மரணத்தை ஏளனமாகப் பார்த்த ஒரு தலைவனைவிட அதிகமாக வேறு எதுவும் அசுரர்களை உத்வேகப்படுத்தவில்லை.

விரைவில், தற்கொலைப் படையினர், சிறிய கோட்டைகளை முற்றுகையிட்டு, அவற்றை ஒவ்வொன்றாகக் கைப்பற்றினர். சில சமயங்களில் அது சலிப்பூட்டும் விதத்தில் சுலபமானதாக இருந்தது. வேறு சமயங்களில், மிகவும் பயங்கரமான, திட்டமிடப்பட்ட யுத்தங்களுக்குப் பிறகு அவர்கள் அவற்றைக் கைப்பற்றினர். பிரஹஸ்தன், ருத்ராக்கன், வஜ்ரதம்ஸ்டிரன், மாரீசன், வித்யுத்ஜீவன், கும்பகர்ணன், தும்ரக்ஷகன் ஆகிய அசுரக் கதாநாயகர்கள், ராவணனின் உத்திகளை ஈவு இரக்கமின்றிச் செயல்படுத்தியதன் ஊடாகத் தங்களுக்கென்று ஒரு பெயரை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். சில ஆயிரம் தேவர்களோ அல்லது அசுரர்களோ மடிந்ததைப் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. அவர்கள் புகழை நாடிச் சென்றனர். அவர்கள் அதை ரத்தத்தின் மூலமாகவும் வன்முறையின் மூலமாகவும் பெற்றனர். போரில் இறந்து போன ஒருசில அசுர இளைஞர்கள் இரண்டாம்பட்சமானவர்கள், முக்கியத்துவமற்றவர்கள். போரில் ஈடுபடுவதற்குப் பேரார்வத்துடன் இருந்த நெட்டை அசுர இளைஞன், மேற்குக் கடற்கரையில் இருந்த ஒரு சிறிய தென்னிந்திய ராஜ்யத்தின்மீதான தாக்குதலின்போது முதல் ஒரு மணிநேரத்திலேயே இறந்து போனான். தலை துண்டிக்கப்பட்ட நிலையில் கிடந்த அவனது உடலைத் தொட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஒரு வினோதமான ஆசை எனக்குள் எழுந்தது, ஆனால் நான் அசைவதற்கு முன்பாக, அணிவகுத்துச் சென்று கொண்டிருந்த யானைகளின் கால்கள் அவனது

எஞ்சிய உடலை மிதித்துச் சிதைத்தன.

இறுதியில், குபேரனின் தலைநகரான அலகாபுரி நகருக்கு வெளியே இருந்த விவசாயப் பண்ணைகளில் எங்கள் படை முகாமிட்டது. மளிகைச் சாமான்களுக்காகவும் இறைச்சிக்காகவும் புறநகர்ப் பகுதியிலிருந்த கிராமங்களை நாங்கள் கொள்ளையடித்தோம். பெண்களையும் நாங்கள் விட்டு வைக்கவில்லை. புறநகர்ப் பகுதி செழிப்பாகவும் வளமாகவும் இருந்தது. ஆண்கள் வலிமையானவர்களாக இருந்தனர். பெண்கள் மென்மையான, பெரிய, கரியநிறக் கண்களைக் கொண்டவர்களாகவும் அழகாகவும் இருந்தனர். எனவே, ஆண்களை வெட்டிச் சாய்த்துவிட்டுப் பெண்களைச் சூறையாடுவது எங்களுக்கு இன்பமளித்தது. சில சமயங்களில், எனது கிராமத்தைக் கொடூரமாகவும் கட்டுப்பாடின்றியும் முற்றிலுமாகத் தகர்த்து எறிந்திருந்த கயவர்களான தேவர்களிடமிருந்து நாங்கள் எந்த விதத்திலும் வித்தியாசப்பட்டு இருக்கவில்லை என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. ஆனால், கூட்டாளிகளின் தூண்டுதல்களுக்கு அடிபணிந்துவிடாமல் இருப்பது மாபெரும் மனிதர்களுக்குக்கூட கடினமாக இருக்கிறது. புராணக் கதைகள் மற்றும் கற்பனைக் கதைகளின் மூலமாக மட்டுமே வழக்கமாக நாம் கேள்விப்படுகின்ற பெருந்தன்மையான நடத்தையை சுவீகரிக்கும் நிலைக்கு என்னை நானே உயர்த்திக் கொள்வதைவிட, தூண்டுதலுக்கும் சபலத்திற்கும் அடிபணிந்து போவது சுலபமாக இருந்தது. என்ன இருந்தாலும், அவர்கள் வெறும் தேவர்கள்தானே? சமுதாயத்தில் அவர்கள் எந்த நிலையில் இருந்தாலும் சரி, வெறுக்கப்படுவதற்கு அவர்கள் தகுதியானவர்கள்தான். மற்ற எந்தவோர் அசுரனையும்போலவே, நானும் அக்கருத்தில் உறுதியாக இருந்தேன்.

நாங்கள் வெற்றிக்காகத் துடித்துக் கொண்டிருந்தோம். போர் தொடங்கி இரண்டு மாதங்கள் கழிந்திருந்த நிலையில், குபேரன் சரணடைவதற்கான அறிகுறி தென்படவே இல்லை. மழைக்காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. எதுவொன்றையும் விட்டு வைக்காமல் நாட்டுப்புறங்களை நாங்கள் முழுவதுமாகச் சூறையாடியிருந்தோம். அப்போது, காட்டிற்குள் ஒருசில மீட்டர் தூரத்தில், நிலத்திலிருந்த ஒரு பொந்திலிருந்து தெரு நாய்கள் வெளியே வந்ததைப் பிரஹஸ்தன் பார்த்தான். அக்காட்சியினால் சுவாரசியமடைந்த அவன், அந்த இடத்தைத் தொடர்ந்து கண்காணித்தான். நள்ளிரவு தாண்டிய பிறகு, உணவுப் பொருட்கள் சகிதம் இருந்த ஆண்கள் சிலர், நிலத்திலிருந்து சிறிது மண்ணைத் தோண்டி, அங்கிருந்த ஒரு ரகசிய அறைக்குள் நுழைந்ததைக் கண்டு பிரஹஸ்தன் ஆச்சரியமடைந்தான். இச்செய்தியைத் எடுத்துக் கொண்டு அவன் எங்கள் முகாமிற்கு வந்தான்.

விரைவில், எங்கள் படையினரில் பாதிப் பேர், மண்ணைத் தோண்டுவதில் மும்முரமாக ஈடுபட்டனர். ஒருசில நிமிடங்களுக்குள், வட்ட வடிவிலான, மிகப் பெரிய இரும்புக் கதவு ஒன்றை நாங்கள் கண்டுபிடித்தோம். அதை நாங்கள் நெம்பித் திறந்து, ஒவ்வொருவராக, ஆயிரக்கணக்கான வீரர்கள் அந்த ரகசியத் தாழ்வாரத்திற்குள் நுழைந்தோம். அத்தாழ்வாரம் கோட்டைக்கு இட்டுச் சென்றது.

அத்தாழ்வாரத்திற்குள் முதலில் நுழைந்த துணிச்சலான முட்டாள்களில் நானும் ஒருவன். குபேரனின் படை எங்களை எதிர்பார்க்கவில்லை. அவர்கள் எங்கள் படையுடன் சிறப்பாகச் சண்டையிட்டனர், ஆனால் எங்களது படை, குபேரனின் கோட்டையை எல்லாப் பக்கங்களில் இருந்தும் சூழ்ந்திருந்தது. நாங்கள் மெல்ல மெல்ல முன்னேறினோம். இறுதியில், கிழக்கு வானில் சூரியன் தன் முகத்தைக் காட்டிய நேரத்தில், குபேரனின் படைவீரர்கள் வெட்டிச் சாய்க்கப்பட்டிருந்தனர் அல்லது தப்பி ஓடியிருந்தனர். நாங்கள் குபேரனின் அறையை அடைந்தபோது, அது தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது. அவன் இறந்துவிட்டதாக நினைத்து நாங்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தோம். ஆனால், பிரஹஸ்தன் அந்தக் காட்சியை ஆய்வு செய்துவிட்டு, அது எங்களை ஏமாற்றுவதற்காக மேற்கொள்ளப்பட்டத் தந்திரம் என்றும், குபேரன் தப்பிவிட்டதாகவும் அறிவித்தான். அப்போது, காட்டிற்கு இட்டுச் சென்ற இன்னொரு ரகசிய அறையை நாங்கள் கண்டுபிடித்தோம். ஆனால் அதற்குள் மிகவும் தாமதமாகிவிட்டது. குபேரன் தப்பியிருந்தான். அவன் எந்த இடத்தில் வைத்துத் தனது குதிரையின்மீது ஏறித் தப்பித்திருந்தான் என்பதை அக்குதிரையின் குளம்புத்தடங்கள் சுட்டிக்காட்டின. எங்களுடைய காவலர்கள் புறநகர்ப் பகுதி முழுவதையும் வலைவீசித் தேடினர், ஆனால் அவர்களுடைய சகாக்கள் அரண்மனையைக் கொள்ளையடிப்பதில் மும்முரமாக இருந்ததால், அவர்கள் தங்களது தேடலைத் தொடர்வதற்கான மனநிலையில் இருக்கவில்லை. அலகாபுரியிலிருந்து நாங்கள் கொள்ளையடித்தப் புதையல்கள் ராவணனின் படைகள் பெருகுவதற்கு உதவின.

அலகாபுரியின் வீழ்ச்சிக்குப் பிறகு, விஷயங்கள் மீண்டும் பழைய நிலைமைக்குச் சென்றன. நாங்கள் தேவ சாம்ராஜ்யங்களைச் சிதைத்தோம், அவற்றைச் சீரழித்தோம்; விஷ்ணு கோவில்களை எரித்தோம்; சாத்தியப்பட்ட இடங்களிலெல்லாம் சிவன் கோவில்களைக் கட்டினோம்; தீவைப்பு, கற்பழிப்பு போன்ற, சண்டையின்போது வழக்கமாக நடைபெற்ற விஷயங்களை நாங்கள் முறையாகக் கடைபிடித்தோம். பிராமணர்களை வெளியே இழுத்து, தேவர்களின்

சொர்க்கமான, விஷ்ணுவின் உறைவிடமான வைகுண்டத்திற்கு அவர்களை அனுப்பி வைத்தோம். பயத்தில் நடுங்கிக் கொண்டே அவர்கள் எங்களைச் சபித்ததைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. தங்களுடைய சாபங்கள் இளக்காரச் சிரிப்புகளை மட்டுமே பெற்றுக் கொடுத்ததை அவர்கள் கண்டபோது, அவர்கள் முதலில் விஷ்ணுவிடமும், பிறகு சிவனிடமும் பிரார்த்தித்தனர். இறுதியில், தங்கள் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள் எங்கள் காலடிகளில் விழுந்தனர். நாங்கள் அவர்களை வெட்டிச் சாய்த்துவிட்டு, அவர்கள் வீட்டுப் பெண்களை எங்களுடன் இழுத்துச் சென்றோம்.

சரயு நதிக்கரையில் அமைந்த சிறிய ராஜ்யமான அயோத்தியை நாங்கள் அடைந்த நேரத்தில், மழைக்காலம் முடிந்திருந்தது. சரயு நதி சீற்றத்துடன் சுழன்று சென்று கொண்டிருந்தது. தூரத்தில், ஒருசில குடிசைகளையும் சிதிலடைந்து போன கட்டடங்களையும் எங்களால் பார்க்க முடிந்தது. அவற்றின்மீது ஒரு கிழிந்த கொடி பறந்து கொண்டிருந்தது. உதயமாகிக் கொண்டிருந்த சூரியச் சின்னம் அதில் இருந்தது. ஆனால் அந்நகரின் சூழ்நிலையை வைத்துப் பார்த்தபோது, அஸ்தமனமாகிக் கொண்டிருந்த சூரியனின் நகரம் என்று அதை அழைப்பது பொருத்தமானதாக இருந்திருக்கும். தன்னிடம் சரணடைந்துவிடுமாறு அயோத்தி அரசன் அனர்னியனிடம் ராவணன் ஒரு தூதுவனை அனுப்பினார். ஆனால் ஆறு நாட்கள் கடந்தும் அவனிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. பொறுமையிழந்த ராவணன், நதியைக் கடந்து சென்று நகரைத் தாக்குமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார். ஆனால் நாங்கள் அந்நகருக்குள் நுழைந்தபோது ஒரு பெரும் அதிர்ச்சி எங்களுக்காகக் காத்திருந்தது. நான் பார்த்திருந்த அனைத்து இடங்களிலும், அதுதான் மிக மோசமானதாக இருந்தது. தெருக்கள் அழுக்காகவும் அருவருப்பாகவும் இருந்தன. பிச்சைக்காரச் சிறுவர்கள் நிர்வாணமாக எல்லா இடங்களிலும் ஓடித் திரிந்தனர். இறந்து கிடந்த தெரு நாய்களின் அழுகிக் கொண்டிருந்த உடல்கள் முழுவதும் ஈக்கள் மொய்த்தன. குப்பைகள்மீது பன்றிகள் மேய்ந்தன. மக்கள் சாலைகளில் வசித்தனர், அங்கேயே சிறுநீர்க் கழித்தனர், தங்கள் வயிறுகளைச் சுத்தம் செய்தனர். தெருக்கள் குறுகலாகவும் வளைந்து வளைந்தும் இருந்தன. அந்நகரம் ஒரு குப்பை மேடாக இருந்தது. அது எங்கள் வழியில் மட்டும் இருந்திருக்காவிட்டால், இந்த நரகத்திற்குள் நாங்கள் நுழைந்திருக்கவே மாட்டோம். சூறையாடுவதற்கு இங்கு எதுவும் இருக்கவில்லை. எங்களை வரவேற்க எந்த எதிரிப் படையும் இருக்கவில்லை. மாறாக, தங்கள் கைகளை நீட்டிக் கொண்டு, பிச்சைக்காரர்கள் மட்டுமே எங்களை நோக்கி விரைந்து வந்தனர்.

நாங்கள் குழப்பமடைந்து சில்லறைகளைத் தேடினோம். பிச்சைக்காரச் சிறுவர்கள் தங்கள் கைகளைத் தட்டி எங்களை உற்சாகப்படுத்த, அரைகுறை ஆடைகள் அணிந்த பெண்கள் எங்களை முறைத்துக் கொண்டிருக்க, அந்தக் குறுகலான தெருக்களின் ஊடாக எங்கள் படை அணிவகுத்துச் சென்றது. அரண்மனை வாசலை நாங்கள் அடைந்தபோது, இரண்டு வயதான காவலாளிகள் மட்டுமே அங்கு இருந்தனர். வாசல் கதவுகள், சிதிலமாகிக் கொண்டிருந்த மரத்தால் செய்யப்பட்டிருந்தன. ஒரு காவலாளி அக்கதவைக் கவனமாகத் திறந்து, எங்களது படையினர் உள்ளே போக அனுமதித்தான்.

வித்யுத்ஜீவன் எங்கள் தளபதியாக இருந்தான். அனர்னியன் தன்னிடம் சரணடைய வேண்டும் என்று ராவணன் இட்டக் கட்டளையை வலியுறுத்திய ஓலைச்சுவடியை, அயோத்தியின் படைத் தலைவனைப்போலத் தோன்றிய ஒரு முதியவனிடம் வித்யுத்ஜீவன் கொடுத்தான். அந்த முதியவன் அந்தச் சுவடியை நெடுநேரம் வெறித்துப் பார்த்தான். வித்யுத்ஜீவன் இறுக்கமடைந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. எதிரிப் படையின் தலைவன் அந்தச் சுவடியைத் தலைகீழாகப் பிடித்துக் கொண்டிருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். அவன் மீண்டும் மீண்டும் அதையும் எங்களையும் மாற்றி மாற்றி வெறித்துப் பார்த்தபடி இருந்தான்.

“அவனுக்குப் படிக்கத் தெரியவில்லை,” என்று எனக்கு அருகிலிருந்த ஒரு வீரன் இளக்காரமாகக் கூறினான்.

“என்ன இது?” என்று அந்த வயதான படைத்தலைவன் வித்யுத்ஜீவனிடம் ஒரு மெல்லிய குரலில் கேட்டான்.

“உன்னுடைய அரசனிடம் சென்று, அசுரப் படை அவரது நகருக்குள் வந்துள்ளது என்று கூறு,” என்று வித்யுத்ஜீவன் சீறினான்.

“எங்கள் அரசர் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்,” என்று கூறிவிட்டு, அந்த முதியவன் ஒருசில முறை தன் கண்களைச் சிமிட்டினான்.

வித்யுத்ஜீவன் கிட்டத்தட்ட வெறி கொண்டவனாக, “அந்தக் கோமாளியை உடனடியாக இங்கு வரச் சொல்,” என்று கூறினான்.

“சரி, சரி . . . ஆனால் அரசர் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்.” தன்னை மிகவும் உயர்ந்தவனாகக் கருதிய அந்த முதியவன், வித்யுத்ஜீவனைப் பார்த்து, தான் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும், புத்திக்கூர்மை இல்லாத ஒரு குழந்தைக்குச் சொல்வதுபோல மிகவும் அழுத்தந்திருத்தமாகவும் மெதுவாகவும் கூறினான். பிறகு, அதிர்ஷ்டவசமாக, “உங்களுக்கு ஏதேனும் ஒரு வேண்டுகோள் இருந்தால், நீங்கள் நாளைக்கு வர வேண்டும். இன்று

செவ்வாய்க்கிழமை. அரசர் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார்," என்று கூறினான்.

அச்சூழ்நிலை நகைச்சுவையாக ஆகியிருந்தது. ராவணன் அங்கு நுழைந்தபோது நாங்கள் எல்லோரும் சிரித்துக் கொண்டிருந்தோம். அவர் தனது குதிரையிலிருந்து கீழே குதித்து, அயோத்தி அரசனைக் கூப்பிடுமாறு அந்த முதிய படைத்தலைவனிடம் கூறினார். அந்த வயோதிகனுக்கு அன்று நாள் சரியில்லைபோலும். பிரார்த்தனை நாளன்று அரசனைச் சந்திக்க முடியாதென்று ஒரு முட்டாள் இளைஞனுக்கு அப்போதுதான் அந்த முதியவன் படித்துப் படித்துக் கூறி முடித்திருந்தான். இப்போது இன்னொருவன் வந்து அதே விஷயத்தைக் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனால் ராவணனுக்கு நாசூக்கெல்லாம் தெரியாது என்பதால், அவர் அந்த வயோதிகனை விலக்கித் தள்ளிவிட்டு, தன் வாளை உருவிக் கொண்டே கோட்டைக்குள் நுழைந்தார். நாங்கள் எல்லோரும் அவரைப் பின்தொடர்ந்தோம்.

இலங்கை மற்றும் அலகாபுரியின் ஆடம்பர அரண்மனைகளைப் பார்த்தப் பிறகு, சிதிலடைந்து போயிருந்த இந்த அரண்மனையைப் பார்க்க எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. எங்கள் கால்களுக்கு அடியில் தரைகள் நொறுங்கிக் கொண்டிருந்தன, தூண்களை அந்துப்பூச்சிகள் அரித்திருந்தன, கூரைகளில் ஓட்டைகள் இருந்தன. ஒரு வயோதிகன் விஷ்ணுவின் சிலையின் முன்பாகச் சம்மணமிட்டு அமர்ந்து, எதையோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான். ராவணன் ஒருசில கணங்கள் காத்திருந்தார். பிறகு அந்த வயோதிகனின் தோளைத் தட்டினார். ஒருசில நொடிகள் எதுவுமே நிகழவில்லை. பிறகு மெதுவாக, அந்த வயோதிகன் தனக்குப் பின்னால் திரும்பி, தட்டுத்தடுமாறி எழுந்து நின்றான். அந்த வயதான அரசன் எழுந்திருக்க உதவுவதற்கு ராவணன் ஒரு கை கொடுத்து உதவ முன்வந்தார். ஆனால் அந்த அரசன் அதைத் தட்டி விட்டுவிட்டு, தனது வயதிற்கு முற்றிலும் பொருத்தமில்லாத விதத்தில், "தீண்டத்தகாத சூத்திரனே, என்னை அசுத்தப்படுத்தாதே," என்று உரத்தக் குரலில் கத்தினான்.

நாங்கள் அனைவரும் அதிர்ச்சியடைந்தோம். கிட்டத்தட்டப் பாதி உலகில் தனது அதிகாரத்தை நிலை நாட்டியிருந்த வல்லமைமிக்க ஓர் அரசன், பலவீனமான, வயதான, ஒரு சிதிலமடைந்த நகரின் அரசன் என்று வெட்கமின்றித் தன்னை அழைத்த ஒருவனை எதிர்கொண்டு நின்றார். பயத்தில் அடிபணிவதற்குப் பதிலாக, தன்னை அசுத்தப்படுத்தக்கூடாது என்று அவன் தனது எதிராளிக்குக் கட்டளையிட்டிருந்தான். நான் எனது அரசனை வெறித்துப் பார்த்தேன். ஒரு கணம் திகைத்துப் போன அவர், அந்த முதியவனிடம் எதையோ

முணுமுணுத்தார். அது, ‘என் தந்தையும் ஒரு பிராமணன்தான்,’ என்பதுபோல எனக்குக் கேட்டது.

“தீண்டத்தகாதவனே, உன் தாய் சாதியற்றவள். எனவே நீயும் சாதியற்றவன்,” என்று அந்த வயோதிக அரசன் கத்தினான்.

ராவணனின் கண்களில் கோபம் கொப்பளித்தது. அவர் அந்த வயோதிகனின் தொண்டையைப் பற்றிக் கொண்டு, அவனது பின்னங்கழுத்தில் தனது வாளை வைத்து அழுத்தினார். “சண்டையிட முடியாத ஒரு முதியவனை நான் கொல்ல விரும்பவில்லை. நீயாகச் சரணடைந்துவிட்டால் உன்னை உயிரோடு விட்டுவிடுகிறேன்.”

“ஒரு சூத்திரனிடம் நான் சரணடைய மாட்டேன்.”

“நான் ஒரு சூத்திரன் அல்ல, நான் ஓர் அசுரன்.” ராவணன் கெஞ்சியதுபோலத் தோன்றியது. அந்த வயோதிக அரசன் ஏளனமாகச் சிரித்தான். அதைக் கேட்ட ராவணன், “கிழவனே, அப்படியென்றால் எங்களோடு சண்டையிடு,” என்று கர்ஜித்தார்.

“ஒரு சூத்திரனுடன் சண்டையிடுவதன் மூலம் நான் என்னைத் தரம் தாழ்த்திக் கொள்ள மாட்டேன்.”

“அப்படியென்றால், ஒரு சூத்திரனின் கையால் மடிந்து போ,” என்று ராவணன் உறுமினார்.

“சூத்திரனே, விஷ்ணுவின் பெயரில் நான் உன்னைச் சபிக்கிறேன். நீ என்னை அசுத்தப்படுத்துவதற்கு எனது வம்சாவழியினர் உன்னைப் பழி வாங்குவார்கள். அவர்கள் உனது நகரத்தையும் உனது குலத்தையும் உன் மனைவியரின் மானத்தையும் உனது மகன்களையும் அழிப்பார்கள். அவர்கள் உனது . . .” ராவணன் ஒரே வீச்சில் அயோத்தி அரசன் அனர்னியனின் தலையைச் சீவினார். அவர் அந்த முதியவனின் துண்டிக்கப்பட்டத் தலையை விஷ்ணுவின் சிலையின் முன்னால் தூக்கிப் பிடித்தார். அத்தலையிலிருந்து ரத்தம் வடிந்து, விஷ்ணு சிலையின் தலையின்மீது வழிந்தோடியது.

“விஷ்ணுவே, உன் பக்தனின் ரத்தத்தைக் குடி,” என்று கூறிவிட்டு, ராவணன் அத்தலையை ஒரு பந்துபோல எட்டி உதைத்தார். அது பெருத்தச் சத்தத்துடன் அச்சிலையின் காலடியில் போய் விழுந்தது. விஷ்ணுவின் ரத்தம் தோய்ந்த உதடுகள் பேரரசரைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தன. ராவணன் தனது வாளின் கைப்பிடியால் அச்சிலையைத் தாக்கி அதன் தலையைப் பிளந்தார்.

அதற்காகவே காத்திருந்ததுபோல, எங்களுடைய படை, இறந்து போன அந்த அரசனின் சிறிய கோவிலின்மீது பாய்ந்து, அதைக் கச்சிதமாகத் தகர்த்தது. சிலைக்குள் விலைமதிக்க முடியாத சிவப்புக் கற்கள் இருந்ததை நாங்கள் கண்டுபிடித்தோம். அச்சிலையை

அலங்கரித்த மாலைகள் சுத்தத் தங்கத்தால் செய்யப்பட்டிருந்தன. அவற்றில் மாணிக்கங்கள் பதிக்கப்பட்டிருந்தன. இறந்து போன அரசன், எங்களுடைய தீண்டல் தனது உடலை அசுத்தப்படுத்திவிடும் என்று ஏளனமாகக் கூறியது, இறந்து போன கடவுள்களையும் அவர்களது கொழுமையான மனைவியரையும் நாங்கள் சூறையாடுவதற்குப் போதுமான அளவுக்கு எங்களைக் கொதித்தெழ வைத்திருந்தது. ஆனால், என் இதயத்தின் ஒரு மூலையில், ஒரு பெரும் கவலை என்னை வாட்டிக் கொண்டிருந்தது. பேராற்றல் வாய்ந்த பேரரசரும், அசுரர்களின் ரட்சகருமான ராவணன், தன்னுடைய தந்தையும் ஒரு பிராமணன்தான் என்று அந்த தேவ அரசனிடம் முணுமுணுத்ததுதான் என் இதயத்தை வாட்டிக் கொண்டிருந்த அந்தக் கவலை.



# 27

## காதல் பித்து

ராவணன்

அந்தச் சிதிலடைந்த அரண்மனையை எனது படையினர் சூறையாடுவதற்கு அனுமதித்துவிட்டு நான் வெளியேறினேன். அரண்மனையிலிருந்த பழைய கோவிலைத் தவிர, கொள்ளையடிப்பதற்குப் பெரிதாக அங்கு எதுவும் இருக்கவில்லை. அந்த அரசனின் குடிமக்கள் பசியால் இறந்தபோது, அவன் தனது கடவுளைச் சிவப்புக்கற்களாலும் வைரங்களாலும் அலங்கரித்துக் கொண்டிருந்தான். இப்படிப்பட்டவன், எனது தீண்டல் தன்னை அசுத்தப்படுத்திவிடும் என்று என்னிடம் துணிச்சலாகக் கூறினான். ஆனால், என் தந்தையும் ஒரு பிராமணன்தான் என்று கூறி நான் ஏன் அவனது ஒப்புதலைப் பெற முயற்சித்தேன்? அதற்காக என்னை நானே உதைத்துக் கொள்ள விரும்பினேன். நான் அவனிடம் அவ்வாறு கூறியதற்கு என்ன பொருள்? எனக்குள்ளும் ஓர் இனவெறிப் பேய் ஒளிந்து கொண்டிருந்ததா? அல்லது நான் அசுரன் என்ற எனது அடையாளம் என்னை அசௌகரியமாக உணரச் செய்ததா? பிரஹஸ்தன் ஒரு பிரசங்கம் செய்யும் மனநிலையில்

இருந்தால், நான் இன்னும் என் தந்தையின் அன்புக்காக ஏங்கியதால்தான் நான் அவ்வாறு பேசினேன் என்று கூறியிருப்பான். நான் என் தந்தையையும் அவர் பிரதிநிதித்துவப்படுத்திய எல்லாவற்றையும் வெறுத்தேன். பிராமணர்களையும் தேவர்களையும் அவர்களது கலாச்சாரத்தையும் அல்லது கலாச்சாரமின்மையையும் நான் வெறுத்தேன். நான் அந்த அயோத்தி அரசனிடம் அவ்வாறு முணுமுணுத்தது யார் காதுகளிலும் விழுந்திருக்கக்கூடாது என்று பிரார்த்தித்தேன். நான் அவர்களது தலைவன். இந்தப் பாவப்பட்ட மக்கள், புகழ் குறித்த எனது தேடலுக்காகத் தங்கள் மனைவியரையும் குழந்தைகளையும் வயதான பெற்றோர்களையும் விட்டுவிட்டு என் பின்னால் வந்திருந்தனர். அதற்குப் பதிலீடாக நான் அவர்களுக்கு என்ன கொடுத்தேன்? நான் என்னைக் குறித்து வெட்கப்பட வேண்டும். இனிமேல் ஒருபோதும் நான் என்னை ஒரு பிராமணனாகக் கருத மாட்டேன். என்னுடைய பொன்னிறத்தை நான் வெறுத்தேன், என் உயரத்தை நான் வெறுத்தேன். நான் ஓர் அசுரன். மகாபலி, ஹிரண்யன், ஹிரண்யக்ஷன், மற்றும் இந்திய நாகரீகத்தை வடிவமைத்திருந்த, பேராற்றல் வாய்ந்த, பெருமைக்குரிய பேரரசர்கள் இன்னும் ஏராளமானவர்களின் வழி வந்தவன் நான்.

சந்தையின் வழியாக நான் நடந்து சென்றபோது, மக்கள் எனக்கு ஒதுங்கி வழிவிட்டனர். வெற்றி கொண்ட ஒரு பேரரசனுக்குரிய மரியாதையின் காரணமாக அவர்கள் அவ்வாறு நடந்து கொண்டதாக முதலில் நான் நினைத்தேன். ஆனால் நான் ஒரு சூத்திரனாக இருந்ததுதான் அதற்குக் காரணம் என்பதைப் பின்னர்தான் கண்டுபிடித்தேன். நான் அவர்களுடைய பிரம்மாண்டமான நகரத்தை அசுத்தப்படுத்திக் கொண்டிருந்தேன். நாங்கள் அவர்களுடைய பார்வையில் பட்டாலே அவர்கள் அசுத்தமானார்கள். அழுக்கான ஆடைகளை அணிந்திருந்த பிராமணர்கள், தங்களை அசுத்தப்படுத்தக்கூடிய சாதியினரை விரட்டியடிப்பதற்காகத் தங்களுடைய கைத்தடிகளை நிலத்தில் வேகமாக ஊன்றிச் சத்தம் ஏற்படுத்தியபடி நடந்து சென்றதை நான் கண்டேன். ஒருவரையொருவர் தொட்டுவிடக்கூடாது அல்லது அசுத்தப்படுத்திவிடக்கூடாது என்பதற்காக, சந்தையில், விலாவாரியான சடங்குகளுடன் மக்கள் தங்கள் பரிவர்த்தனைகளை நடத்தினர். ஆனால் வெற்றிலைச் சாற்றைத் தெருக்கள் நெடுகிலும் துப்பி வைத்து, அவர்கள் அதன்மீது நடந்து சென்றனர். அவர்கள் பொது இடங்களில் மலங்கழித்தனர், ஆனால் ஒருவரையொருவர் தொடுவது குறித்து எச்சரிக்கையாக இருந்தனர். மிகவும் பரிதாபகரமான, வேடிக்கையான கலாச்சாரம் அது! இந்த

மக்களிடம் நாகரீகத்தை வளர்த்தெடுப்பதற்கான சுமை எங்கள் தோள்களில் விழுந்திருந்ததாக நான் நினைத்தேன். இந்த அபத்தத்தை நான் தடுத்து நிறுத்தாவிட்டால், இந்தத் தீவிரமான சாதிப் பழக்கம் இந்தியா நெடுகிலும் பரவிவிடும். அவ்வாறு நடந்தால், எங்களுடைய சுதந்திரத்திற்கு நாங்கள் விடைகொடுத்துவிட வேண்டியதுதான்.

எனது வீரர்களில் ஒருசிலர், கடைகளைக் கொள்ளையடிப்பதில் மும்முரமாக இருந்தனர். அவர்களைத் தடுத்து நிறுத்துவதற்கு என் இதயம் என்னை அனுமதிக்கவில்லை. எப்படிப் பார்த்தாலும், முன்பொரு சமயம் எங்கள் மக்களிடமிருந்து திருடப்பட்டதைத்தானே அவர்கள் எடுத்துக் கொண்டிருந்தார்கள்? இதில் வேடிக்கை என்னவென்றால், அசுரர்களால் கொல்லப்படுவதைவிட, அவர்களால் தொடப்படுவது குறித்து இந்த உள்ளூர்வாசிகள் அதிகமாக பயந்தனர். உண்மையிலேயே இது ஓர் இருண்ட பகுதிதான். நான் கவனித்த இன்னொரு வினோதமான விஷயம் என்னவென்றால், தெருக்களில் ஆண்களைவிடப் பெண்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் இருந்தனர். அவர்கள் முகத்திரையை அணிந்திருந்தனர். ஆண்களை அவர்கள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அப்பெண்கள் நடந்தபோது, அவர்களது கண்கள் தங்களது தூசி படிந்த பாதங்களில் நிலைத்திருந்தன. இப்படி அளவுக்கு மீறிப் பணிந்து போன பெண்களை என் வாழ்வில் நான் ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. இது ஒரு வித்தியாசமான கலாச்சாரம். அசுரர்கள், வானரர்கள், யக்ஷர்கள், அல்லது நாகர்களின் சாம்ராஜ்யங்களில் நான் ஒருபோதும் பார்த்திராத, பல நூற்றாண்டுகள் பின்தங்கியிருந்த ஒரு வினோதமான நாகரீகம் அது.

அவல நிலையில் இருந்த அயோத்தி நகரைப் பார்த்தது போதும் என்று முடிவு செய்து, நான் என் குதிரையில் ஏறி மீண்டும் அரண்மனைக்குச் சென்றேன். கொள்ளையடிக்கப்பட்டப் பிறகு அது இன்னும் அதிக வெறுமையாகத் தோன்றியது. அரச குடும்பத்தின் சில உறுப்பினர்கள், அருகிலிருந்த காடுகளுக்குத் தப்பிச் சென்றிருந்தனர். அவர்களைப் பின்தொடர்ந்து சென்று கொல்வதற்கு உத்தரவிடுமாறு வஜ்ரதம்ஸ்டிரன் என்னிடம் கேட்டான். இந்த இடத்தைவிட்டுப் போகுமாறும், சிறிய அரசர்களைப் பற்றியும், பேய்கள்போலத் தோற்றமளித்த அவர்களது மனைவியரைப் பற்றியும் மறந்துவிடுமாறும் நான் என் படையினருக்கு உத்தரவிட்டேன். வெற்றி கொள்ளப்பட்ட ஓர் அரண்மனையின் உறுப்பினர்களை, எந்தவொரு முறையான ஒப்பந்தமும் இல்லாமல் அல்லது எங்களுடைய குடிமக்களாக இருப்பதற்கு அவர்கள் உடன்படாமல், அரண்மனையைவிட்டுத் தப்பிச் செல்ல அனுமதிப்பது ஒரு மோசமான உத்தி என்று பிரஹஸ்தன்

கூறினான். நடைமுறைக்கு ஒத்துவராத இப்படிப்பட்டக் கோட்பாடுகளின் உண்மைத்தன்மையைப் பரிசோதிப்பதற்கான நேரமோ அல்லது விருப்பமோ எனக்கு இருக்கவில்லை. எனவே, நான் அவன் கூறியதைப் புறக்கணித்தேன். பிறகு நாங்கள் கிழக்கு நோக்கி எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

எங்கள் படை அயோத்தியைவிட்டு வெளியேறிய உடனேயே அந்தப் பெயரை என் நினைவிலிருந்து தூக்கியெறிந்தேன். அதோடு, எங்களது படையினர் அணிவகுத்துச் சென்ற பிற வட இந்தியக் குப்பைத் தொட்டிகளின் பெயர்களையும் நான் என் மனத்திலிருந்து நீக்கினேன். வெகு காலத்திற்குப் பிறகு, இந்த அவலமான இடத்தைச் சேர்ந்த ஓர் இளவரசன் எனது உலகைத் தலைகீழாக மாற்றுவான் என்பதை நான் அப்போது அறிந்திருக்கவில்லை. ஒருவேளை, பிரஹஸ்தனின் அறிவுரையின்படி, அரச குடும்பத்தினரை வேட்டையாடி, அவர்களைத் தீர்த்துக் கட்டியிருந்தால், விஷயங்கள் வேறு விதமாக அமைந்திருக்கக்கூடும். எங்கள் இனம் பாதுகாக்கப்பட்டிருக்கும்; தனது சொந்த மக்களுக்கு எதிராகப் பாரபட்சமாக நடந்து கொண்ட ஒரு மதத்தின் இரும்புப் பிடியிலிருந்து எங்கள் நாடு மீட்கப்பட்டிருக்கும். வடக்கிலிருந்த இந்த இருள், எனது அன்புக்குரிய நாடு முழுவதும் பரவி, எனது மக்களைப் பிரிக்கும் என்று நான் உறுதியாக நம்பினேன். மக்களிடையே பிரிவினை ஏற்படுவதற்கு மொழியோ அல்லது இனமோ அல்லது செல்வச் செழிப்போ காரணமாக இருக்காது, மாறாக, எது தூய்மை என்றும் எது அசுத்தம் என்றும் தீர்மானித்த ஒரு பிராமணர்கள் குழுவின் தற்சார்புக் கண்ணோட்டங்களே அதற்குக் காரணமாக இருக்கும் என்று நான் நம்பினேன். ஆனால் இப்படிப்பட்ட விஷயங்களை யாரால் முன்கூட்டியே கணிக்க முடியும்? நான் பல ராஜ்யங்களை அழித்திருந்தேன், பல இளவரசர்களைக் கொன்றிருந்தேன். நூற்றுக்கணக்கில் இருந்த அவர்களில் யாரேனும் ஒருவன் என் எதிரியாக இருந்திருக்கக்கூடும். அல்லது ஒருவேளை, நான் ஒரு நல்ல அரசன் இல்லையோ என்னவோ. நான் ஒருபோதும் விதிமுறைகளின்படி நடந்து கொண்டதில்லை. விதிமுறைகளின்படி நடந்து கொண்ட மக்கள், இப்படிப்பட்ட அசட்டுத்தனமான தவறுகளைச் செய்யவில்லை.

ஒரு நாள் முழுவதும் பயணம் செய்த பிறகு, மிதிலை என்ற ஒரு சிறிய தேவ சாம்ராஜ்யத்திற்குச் சொந்தமான காடுகளின் எல்லையில் அமைந்திருந்த ஒரு சிறிய கிராமத்தின் சந்தைக்கு நாங்கள் வந்தோம். இந்த ஒட்டுமொத்தப் படையெடுப்பும் எனக்கு மிகவும் சலிப்பூட்டியது. மேற்கு மற்றும் தென்னிந்தியாவைப் போலன்றி, இப்பகுதியில் இருந்த

கிராமங்கள் மிக மோசமான ஏழ்மையில் இருந்தன. சூறையாடுவதற்கு இங்கு அவ்வளவு பெரிய நகரங்கள் இருக்கவில்லை. பிரம்மாண்டமான சிவன் கோவில்களும் இல்லை. வயதான, சுருக்கங்கள் விழுந்த பிராமணர்கள் மட்டுமே இருந்தனர். அவர்கள் மக்களை அச்சுறுத்தி, வளைந்து கொடுக்காத ஒரு சாதி அமைப்புமுறையைப் பின்பற்றினர். தென்னிந்தியாவின் இதமான வெப்பதற்கு நாங்கள் திரும்பிச் செல்ல விரும்பினோம். பெருங்கடல் எங்களைக் கவர்ந்திழுத்தது. ஆனால் கிழக்குக் கடற்கரையோரமாக மகாபலிபுரத்திற்குள் நுழைந்து, பிறகு இலங்கைக்குத் திரும்பிச் செல்வதற்கு ஒரு வழியைக் கண்டுபிடிக்க நான் விரும்பினேன்.

நான் களைத்துப் போய் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தபோது, எனது முகாமிற்கு வெளியே கேட்ட ஓர் அமளிச் சத்தம் என்னை எழுப்பியது. என் முகாமைவிட்டு வெளியே வந்த நான், அதிர்ச்சியில் சிலையாக நின்றேன். நான்கைந்து அசுரர்கள் ஒரு பெண்ணைப் பிடிக்க முயற்சித்துக் கொண்டிருந்தனர். நான் சீற்றமடைந்தேன். கடுமையாகப் போரிட்டு ஒரு நகரத்தை வெற்றி கொண்ட பிறகு ஒரு பெண்ணை அபகரிப்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு விஷயம். குறிப்பாக அவள் தேவர்கள் இனத்தைச் சேர்ந்த ஒருத்தியாக இருந்தால் அதற்குத் தடையே கிடையாது. ஆனால் அதற்கும் ஓர் எல்லை இருந்தது. என்னுடைய மெய்க்காப்பாளர்கள் எங்கே போனார்கள்? அந்தப் பெண்ணுக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்த அசுரர்களுக்கு மத்தியில் எனது மெய்க்காப்பாளர்களும் இருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன்.

"அவளை விடுங்கள்!" என்று நான் கர்ஜித்தேன். மண்ணில் உருண்டு கொண்டிருந்த ஓர் அசுரன் உட்பட, மூன்று அசுரர்கள் அங்கிருந்து ஓட்டமெடுத்தனர். மீதி இருவரும், நான் என் வாளை என் உறையிலிருந்து உருவியதைப் பார்த்தவுடன் மாயமாய் மறைந்தனர். அவர்கள் அனைவரும் எந்தப் பெண்ணுக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர் என்பதை அப்போதுதான் நான் பார்த்தேன். அவளது முகத்திரை அவளது முகத்திலிருந்து கீழே விழுந்திருந்தது. எப்பேற்பட்ட ஒரு முகம் அது! அவளது கரிய கண்கள் நெருப்பைப்போல எரிந்தன, ஆழமாக வளைந்த இமைகள் சூதுவாதறியாத ஒரு தோற்றத்தை அவளுக்குக் கொடுத்தன. ஒரு நேரான, கூர்மையான மூக்கிற்குக் கீழே, அவளது இதழ்கள் முழுமையாகவும் சிவப்பாகவும் இருந்தன. சுருண்ட, கருப்பு நிறத் தலைமுடி அவளது நெற்றியில் விழுந்து கிடந்தது. அவளது தோல் அப்பழுக்கின்றி இருந்தது. அவள் தனது கீழுதட்டைப் பிதுக்கி நின்றது, அவள் நாணப்பட்டது போன்ற ஒரு தோற்றத்தை அவளுக்குக் கொடுத்தது. என் கண்களால் நான் அவளது உடலை அளந்தேன். என்

கண்களில் தென்பட்டக் காமத்தை உணர்ந்து கொண்ட அவள் வெட்கப்பட்டாள். நான் பார்த்ததிலேயே மிகவும் அழகான பெண் அவள்தான். பெண்மையின் வசீகரத்தையும் மென்மையையும் அவள் வெளிப்படுத்தினாள்.

அவள் தனது ஆடைகளைச் சரி செய்து கொண்டு, என் கண்களைப் பார்ப்பதைத் தவிர்த்தாள் எங்களது படை ஒரு நகரை வெற்றி கொண்டபோது, எந்தவொரு பெண்ணையும் சிறைபிடிப்பதிலிருந்தோ அல்லது மானபங்கப்படுத்துவதிலிருந்தோ நான் யாரையும் தடுத்திருந்ததில்லை என்றாலும்கூட, தனிப்பட்ட முறையில் நான் அப்படிப்பட்ட எந்தவொரு காரியத்தையும் ஒருபோதும் செய்தது கிடையாது. அது எனது வளர்ப்புக்கு எதிராக இருந்தது. குழந்தைகளும் வயதானவர்களும் துன்புறுத்தப்படக்கூடாது என்பதை நான் உறுதி செய்தேன். ஆனால் எனக்கு இவள் தேவைப்பட்டாள். நான் கிட்டத்தட்ட மறந்து போயிருந்த என் மனைவி மண்டோதரியிடம் காலப்போக்கில் நான் வளர்த்துக் கொண்ட விருப்பத்தைப் போன்றதாக இது இருக்கவில்லை. பார்த்தவுடன் ஏற்படும் விருப்பமா இது? இப்பெண் என்னிடம் ஒரு மிருகத்தனமான வெறியை ஏற்படுத்தினாள். நான் அவளை நோக்கிச் சென்று, அவளது மணிக்கட்டைப் பற்றினேன். அவள் தனது கையை என்னிடமிருந்து விடுவித்தாள். நான் மீண்டும் அவளைப் பிடிக்க முயற்சித்தேன். அப்போது அவள் என் முகத்தில் ஓங்கி அறைந்தாள். என் கன்னம் விண்ணென்று வலித்தது. நான் அதிர்ச்சியடைந்தேன். நான் அவளை மீண்டும் பிடித்து இழுத்தபோது, அவள் மீண்டும் என் கன்னத்தில் அறைந்தாள். இம்முறை என் மூக்கிலிருந்து ரத்தம் வழிந்தது. அவள் ஒரு சாமானியப் பெண்ணல்ல. நான் என் முயற்சியைக் கைவிட்டதுபோலப் பாசாங்கு செய்து மறுபக்கமாகத் திரும்பினேன். பிறகு விரைவாக அவளை நோக்கித் திரும்பி, அவளைத் தூக்கினேன். அவளுடைய பிராண்டல்களையும் கத்தல்களையும் உதாசீனப்படுத்திவிட்டு, அவளை எனது கூடாரத்திற்குள் கொண்டு சென்றேன். நான் கோபமாக இருந்தேன், ஆனால் அதைவிட மேலாக, அவள் எனக்குத் தேவைப்பட்டாள். நான் அவளை எனது படுக்கையின்மீது தூக்கி எறிந்தேன். அவள் அங்கிருந்து ஓட முயற்சித்தபோது, நான் அவளது முகத்தில் அறைந்தேன். அவள் என் முகத்தில் உமிழ்ந்தாள். நான் எனது பட்டுப் போர்வையை எடுத்து, அவளுடைய கைகளையும் கால்களையும் கட்டி, படுக்கையின்மீது ஒரு குவியலாகப் போட்டேன். இதற்கிடையே அவள் என்னை மூன்று முறை கடித்தாள், என் உடலில் ஏராளமான கீறல்களை ஏற்படுத்தினாள்.

பிறகு மூச்சிறைத்தபடி, நான் அருகிலிருந்த நாற்காலியில் போய்

விழுந்தேன். அவள் எனக்கு முதுகு காட்டிப் படுத்திருந்தாள். அவள் என் இச்சைக்கு அடிபணிய மறுத்தது எனக்குக் கோபத்தையும் வெறுப்பையும் ஏற்படுத்தியது. நான் என் நாற்காலியின் கைப்பிடிகளின்மீது ஓங்கிக் குத்தினேன். “அவள் ஏன் எனக்கு அடிபணிய மறுக்கிறாள்? நான் இந்தியாவின் சக்கரவர்த்தி. பேராற்றல் வாய்ந்த அசுர அரசனான ராவணன் நான்.”

ஒருசில கணங்கள் நிலவிய மௌனத்திற்குப் பிறகு, நான் அவளை என் பக்கமாகத் திருப்ப முயற்சித்தேன். “உன் பெயர் என்ன?” என்று நான் அவளிடம் கேட்டேன். அப்படிக் கேட்ட உடனேயே நான் முட்டாள்போல உணர்ந்தேன். அவள் மெதுவாகத் தன் முகத்தைத் திருப்பினாள். அவளுடைய கண்கள் என்னைத் துளைத்தன. நான் திடீரென்று பயந்தேன். எனக்குள் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. “இது ஒரு வரலாற்றுக் கணம். எனது தலைவிதியையும் எனது இனம் மற்றும் எனது நாட்டின் தலைவிதியையும் நிர்ணயிக்கவிருந்த ஒரு கணம்.” அந்த முட்டாள்தனமான எண்ணத்தை என் மனத்திலிருந்து அகற்றிவிட்டு, நான் மீண்டும் என் கோபத்தை வரவழைத்தேன்.

“ஒரு பெண்ணைச் சீரழிப்பதற்கு முன்பு அவளுடைய வரலாறு உனக்குத் தேவையா?” என்று அவள் கேட்டாள்.

அதற்கு என்ன பதில் கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை. அந்தக் கேள்வியில் ஏதோ நகைச்சுவையான ஒன்றை என் மனம் கண்டுபிடித்திருந்தது. அது எனக்குச் சிரிப்பை வரவழைத்தது. ஆனால் என்ன கூறுவதென்று தெரியாமல் நான் முட்டாள்தனமாக எழுந்து நின்றேன். நான் இருமினேன், திக்கித் திணறினேன், பிறகு அவளிடமிருந்து விலகிச் சென்றேன்.

“நீ என்னுடனான உன் வேலையை முடித்தப் பிறகு, ஒருசில நிமிடங்கள் என்னை உயிரோடு விட்டு வை. மாபெரும் அசுரனான உனது அரசன் ராவணனை நான் பார்க்க விரும்புகிறேன்,” என்று கூறிவிட்டு, அவள் தரையில் உமிழ்ந்தாள்.

“ஆனால் . . . நான்தான் ராவணன்.” என் குரல் அப்படியே கரைந்தது.

அவளிடமிருந்து ஒரு காட்டுத்தனமான அழுகை எழுந்தது. நான் திடுக்கிட்டேன். இப்படிப்பட்ட ஓர் அழகான ஜீவனால் எப்படி இப்படி ஒரு பயங்கரமான சத்தத்தை ஏற்படுத்த முடிந்தது? அவள் எனது கட்டுக்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளப் போராடினாள், ஆனால் இறுதியில் தன் முயற்சியைக் கைவிட்டுவிட்டு, தேம்பி அழத் துவங்கினாள். தூரத்தில் நின்று நான் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்திற்குப் பிறகு, நான் அவளுக்கு அருகில்

சென்றேன். நான் அவளைத் தொட விரும்பினேன், ஆனால் என் கைகள் நடுங்கியதால் நான் தயங்கினேன். பிறகு மெதுவாக ஒரு கையை அவளது தோளின்மீது வைத்தேன். அவள் திடுக்கிட்டு என்னை வெறுப்புடன் பார்த்தாள். உடனே நான் என் கையை விலக்கிக் கொண்டேன்.

"ஒரு தேவ விதவையின் வாழ்க்கை எப்படி இருக்கும் என்று உனக்குத் தெரியுமா?" என்று அவள் தன் அழுகையினூடே கேட்டாள். "அவள் தேர்ந்தெடுப்பதற்கு என்னென்ன வழிகள் இருக்கின்ற என்று உனக்குத் தெரியுமா? . . . உனக்கு எப்படித் தெரியும்? நீ வெற்றி வாகை சூடுபவன். ஒருசில உயிர்கள்மீது நீ ஏன் அக்கறை காட்ட வேண்டும் . . .?"

அவளது பேச்சு என்னை நெகிழ வைத்தது. ஆனால் நான் வேறொரு கலாச்சாரத்திலிருந்து வந்தவன். தேவகுலப் பெண்களின் பரிதாப நிலைமையைப் பற்றி நான் கேள்விப்பட்டிருந்தேன், ஆனால் தேவர்களை அவமதிப்பதற்கு அசுரர்கள் மற்றும் நாகர்களின் பிரச்சாரப் பிரதிநிதிகள் புனைந்த கற்பனைக் கதைகள் அவை என்று நான் நினைத்திருந்தேன்.

"நீயும் உனது படையினரும் என் கணவரைக் கொன்றீர்கள். அவர் ஓர் ஏழை பிராமணன் . . . யாருக்கும் எந்தத் தீங்கும் இழைக்காதவர் . . . நீங்கள் ஏன் அவரைக் கொன்றீர்கள்?"

நான் தேள் கொட்டியதுபோல உணர்ந்தேன். "ஒரு பிராமண விதவையுடன் நான் என்ன செய்து கொண்டிருந்தேன்? அவள் பிராமண வகுப்பைச் சேர்ந்தவள் என்பதால் அவள் என்னைக் கவர்ந்தாளா? அவளுடைய சிவப்புத் தோல் என்னுள் ஆசையைக் கிளறியதா?" எனக்கே என்மீது வெறுப்பு ஏற்பட்டது. ஆனால், நான் அவளை முதன்முதலில் பார்த்தக் கணத்திலேயே, உயர்ந்த குடும்பத்தில் பிறந்த ஒரு பிராமணப் பெண் அவள் என்பதைத் தெரிந்து கொண்டிருந்தேன். அப்படியானால், அவள் தனது வம்சத்தைப் பற்றிப் பேசியபோது நான் ஏன் அதிர்ச்சியடைந்தேன்?

"எங்களுடைய மாமியார்களின் வீடுகளில் ஓர் அடிமையின் வாழ்வை நாங்கள் வாழ்வோம் . . . எங்கள் தலைகள் மழிக்கப்படும் . . . எங்கள் கைகளும் கழுத்துக்களும் அணிகலன்கள் ஏதுமின்றி வெறுமையாக ஆக்கப்படும் . . . வேண்டுமென்றே வசீகரமற்றவர்களாக நாங்கள் ஆக்கப்படுவோம் . . . ஒரு நடைபிணம்போல . . . எங்களால் பொட்டு வைத்துக் கொள்ள முடியாது . . . வளையல் கிடையாது . . . வண்ணச் சேலைகள் கிடையாது . . . ஒரு வெள்ளைப் புடவை மட்டுமே . . . எங்களுக்கு வாழ்க்கையே கிடையாது . . . கூலியில்லா

வேலைக்காரிகள் நாங்கள் . . .”

என் மனம் இரங்கியது. இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கையை ஓர் அசுரப் பெண்ணுக்கு என்னால் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. தன் கணவன் இறந்தால், ஒரு குறிப்பிட்டக் காலம்வரை அவள் துக்கத்தைக் கடைபிடிப்பாள், பிறகு இன்னொரு வாழ்க்கைத் துணையைத் தேடிக் கொண்டு, தன் வாழ்க்கையைத் தொடர்வாள்.

“நீ பேராற்றல் வாய்ந்த ஓர் அரசன் . . . என்னால் என் கணவனின் சிதைக்குள் குதித்து ஒரு கடவுளாக மாற முடியும் . . . உடன்கட்டை ஏறி, கற்புக்கரசி என்று என்னால் பெயரெடுக்க முடியும் . . . அப்போது, வாழ்வில் ஒரு விலங்கைவிட மோசமாக என்னை நடத்தியிருக்கக்கூடிய அதே மக்கள், எனக்காகக் கோவில்களை நிர்மாணித்து என்னை வழிபடுவார்கள்.”

“உன் பெயர் என்ன?” என்று நான் அவளிடம் கேட்டேன். நான் அவளுக்கு அருகே சென்று, அவளது தாடையைத் தொட்டு உயர்த்தினேன். அவளுடைய கரிய கண்களில் கண்ணீர் நிரம்பியதில் அக்கண்கள் மினுமினுத்தன. எனது சொந்தப் பிரதிபலிப்பை நான் அவற்றில் கண்டேன். அவற்றில் தென்பட்ட எனது சிறிய உருவம், நான் முக்கியத்துவமற்றவன் என்ற உணர்வை எனக்கு ஏற்படுத்தியது. அவள் என் முகத்தை நெடுநேரம் கண்ணிமைக்காமல் பார்த்தாள். பிறகு, ஒரு சிறு புன்னகை அவளது முகத்தைப் பிரகாசப்படுத்தியது. நான் முற்றிலுமாகக் கரைந்து போனேன்.

அவள் வெறுமனே, “வேதவதி,” என்று கூறினாள். அக்கணத்தில் அந்த தேவ பிராமணப் பெண்ணின்மீது நான் தலைகால் புரியாமல் காதல் வயப்பட்டேன்.



# 28

## ஓர் அசுர இளவரசி

பத்ரன்

அந்தக் காவலாளி என்னை என் தூக்கத்திலிருந்து எழுப்பியபோது, நான் அவனையும் அவனது மூதாதையர்களையும் சபித்தேன். அவன் தனது ஈட்டியின் மங்கிய முனையைக் கொண்டு என்னைக் குத்தி எழுப்பி, பிரதம மந்திரி என்னைப் பார்க்க விரும்பியதாகக் கூறினான். முந்தைய நாள் இரவு நான் அளவுக்கதிகமாகக் குடித்திருந்ததில் என் தலை கனத்தது. நான் அந்தக் காவலாளியைச் சபித்துக் கொண்டே, எழுந்து என் வேட்டியை ஒழுங்காகக் கட்டிக் கொண்டு, அருகே மந்தமாக ஓடிக் கொண்டிருந்த நீரோடையில் என் முகத்தைக் கழுவினேன். என் வாயில் நாட்டுச் சாராயத்தின் நெடி இன்னும் இருந்ததால், மீண்டும் ஒரு முறை வாய்க் கொப்பளித்துவிட்டு, பிரதம மந்திரியின் முகாமை நோக்கி நான் என்னை வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றேன். அவன் ஏன் என்னை அழைத்தான்? கடந்த சில மாதங்கள் எங்கள் இனத்திற்குப் பேரழிவுகளை மட்டுமே கொண்டு வந்திருந்தன. எங்கள் படையினரில் பெரும்பாலானோர், இந்தத் தாக்குதல் குறித்த மாயை நீங்கப்

பெற்றிருந்தனர். நர்மதை நதியின் குறுக்கே முகாமிட்டு வந்திருந்த நாங்கள், காட்டுக் கனிகளை உண்டு கொண்டு, அவ்வப்போது எங்கள் முகாமிற்கு அருகே வந்து, மோசமாகக் காய்ச்சப்பட்டிருந்த சாராயத்தைக் குடித்த முட்டாள்தனமான குரங்குகளைப் பார்த்துக் கொண்டு, ஏதேனும் சண்டை நடக்காதா என்ற ஏக்கத்துடன் முடிவின்றிக் காத்திருந்தோம்.

பிரஹஸ்தனைப் போன்ற, அரச குடும்பத்தைச் சேர்ந்த, அறிவார்ந்த, மாபெரும் மனிதர்களும் மற்றவர்களும் ஒன்றுகூடி எதையோ கிசுகிசுப்பாகப் பேசிக் கொண்டிருந்தனர். ஆனால், பேராற்றல் படைத்த எங்கள் அரசனான ராவணன் பிரச்சனையில் இருந்தார். இந்தப் படையெடுப்பில் தன்னை நம்பித் தனக்குப் பின்னால் வந்திருந்த முட்டாள்களைப் பற்றி எந்தச் சிந்தனையுமின்றி, ஒரு பிடிவாதமான பிராமணப் பெண்ணைக் கவர்ந்திழுப்பதில் அவர் மும்முரமாக இருந்தார். அவர் தனது மந்திரிகளைச் சந்திக்க மறுத்தார். தனது வீரர்களைப் பார்வையிடுவதையும், அவர்களுக்கிடையே தான் நிகழ்த்திய உத்வேகச் சொற்பொழிவுகளையும்கூட அவர் நிறுத்தினார். அவள் நதியருகே சம்மணமிட்டு அமர்ந்து கொண்டு, சில சமயங்களில் தியானம் செய்து கொண்டும், வேறு சமயங்களில், தனது மக்களுக்கு அசுர அரசனான ராவணன் இழைத்திருந்த கொடுமைக்காக அவரைச் சபித்துக் கொண்டும் இருந்தாள். ஆனால் அரசனோ, காதல் வயப்பட்ட ஒரு பருவ வயதினனைப்போல, அர்த்தமற்றக் காதல் மொழிகளைப் பேசி, அவள் முன்னால் மண்டியிட்டு, அவளது அன்பை யாசித்துக் கொண்டிருந்தார். தன்னுடன் கொண்டு வந்திருந்த தனது கைக்குழந்தையைக்கூட அவர் மறந்துவிட்டிருந்தார். பசியால் அக்குழந்தை அழுததுகூட ராவணனின் காதல் மயக்கத்தைக் கலைக்கவில்லை. அந்த பிராமணப் பெண், அவரது சலசலப்புக்கு அசைந்து கொடுக்கவில்லை. இது அவள்மீது அவருக்கு இன்னும் அதிக ஆர்வத்தை ஏற்படுத்தியது. அவளை ஏன் வலுக்கட்டாயமாக அவர் தன் இச்சைக்கு இணங்க வைக்கவில்லை என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

படையெடுப்பு முயற்சி எந்த இலக்குமின்றிப் பாதை மாறிச் சென்று கொண்டிருந்தது. நாங்கள் பெரிய சாம்ராஜ்யங்களைத் தவிர்த்துவிட்டு, பெரும்பாலும் காட்டோரமாக முகாமிட்டுக் கொண்டு, அவ்வப்போது சில கிராமங்களின் தானியக்களஞ்சியங்களைக் கொள்ளையடித்தோம். இறுதியில், பல மாதங்கள் சுற்றித் திரிந்த பிறகு, ஆற்றல்மிக்க நர்மதை நதியின் கரைகளை நாங்கள் அடைந்தோம். அப்போது எங்கள் அரசன், தனது நீச்சல் திறமையைக் கொண்டு வேதவதிக்கு பிரமிப்பூட்டுவதென்று தீர்மானித்தார். அவர் தன் உடைகளைக் களைந்துவிட்டு, வேகமாகப் பாய்ந்து கொண்டிருந்த அந்நதியில்

இறங்கியபோது, நதியின் வேகமான ஓட்டம் அவரை இழுத்துச் சென்றுவிட்டது. அந்தப் பெண் அப்படித்தான் எங்கள் உயர்மட்டக் குழுவினரிடம் கூறினாள். பேராற்றல் வாய்ந்த எங்கள் அரசர் தனது மெய்க்காப்பாளர்களை அங்கிருந்து விரட்டியிருந்ததால், உண்மையில் என்ன நிகழ்ந்தது என்பதை யாரும் பார்க்கவில்லை.

ஒருசில நாட்களுக்குப் பிறகு, அரசன் கார்த்த வீர்யார்ஜுனனிடம் இருந்து ஒரு தூதுவன் வந்தான். அந்த அரசன் எங்களது அசுர அரசரைத் தனது கைதியாக வைத்திருந்ததாக அத்தூதுவன் செய்தி கொண்டு வந்திருந்தான். ஒட்டுமொத்தப் படையும் இப்போது பிரச்சனைக்கு உள்ளாகியிருந்தது. மூன்று நாட்களாக, அசுர உயர்மட்டக் குழுவினர், பிரதம மந்திரியின் முகாமிற்குள்ளேயே அடைந்து கிடந்தனர். அடுத்தக் கட்ட நடவடிக்கைக் குறித்து அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தனர். இதற்கிடையே, முகாம் இரண்டுபட்டது. ராவணன் ஏற்கனவே இறந்துவிட்டதாக வித்யுத்ஜீவனின் விசுவாசிகள் வதந்திகளைப் பரப்பினார்கள். இலங்கைக்குத் திரும்பிச் சென்றுவிடுவது நல்லது என்று அவர்கள் வாதிட்டனர்.

ருத்ராக்கனின் கீழ் இருந்த இன்னொரு குழு, கார்த்த வீர்யார்ஜுனனின் கோட்டைக்குள் புயலெனப் புகுந்து, அந்த அரைச்சாதியினருக்கு ஒரு படிப்பினையைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்ற ஒரு கருத்தை முன்மொழிந்தனர். அந்த முயற்சியில் எங்கள் அரசனின் உயிரை விலையாகக் கொடுக்கவும் அவர்கள் தயாராக இருந்தனர். சுமாலியும் மால்யவனும் அவர்களை ஆதரித்தனர். அசுரப் பெருமை இப்போது பிரச்சனைக்கு ஆளாகியிருந்ததாகவும், ஒரு திட்டவட்டமான முடிவைக் கொண்டு வரக்கூடிய ஒரு யுத்தம் தேவை என்றும் அவர்கள் வாதிட்டனர். இவை அனைத்துமே, உயர்மட்டக் குழுவினர் கூடியிருந்த முகாமிற்கு வெளியே காவலுக்கு நின்று கொண்டிருந்த வீரர்களின் அனுமானங்கள் மட்டுமே.

நான் அந்தக் கூடாரத்திற்குள் நுழைந்தபோது, உயர்மட்டக் குழு உறுப்பினர்கள் அனைவரும் பஞ்சு மெத்தைகளுடன்கூடிய நாற்காலிகளில் அமர்ந்திருந்தனர். நான் குனிந்து வணங்கிவிட்டு, என் கையை என் வாயின்மீது வைத்து, என் கண்கள் தரையைப் பார்க்க, என் முதுகு வளைந்திருக்க, யாருடைய கண்களையும் நேருக்கு நேர் பார்க்காமல் மௌனமாக நின்றேன். அரசனின் அரியணை காலியாக இருந்தது, ஆனால் பிரஹஸ்தன் அதற்கு அருகில் அமர்ந்திருந்தான். அங்கு ஓர் அசௌகரியமான அமைதி நிலவியது. அப்போது, பிரஹஸ்தன், “பத்ரா, உன்னிடம் ஒரு தனிச்சிறப்பான வேலையை நாங்கள் ஒப்படைக்கிறோம். உன் ஒருவனால் மட்டுமே அதைச் செய்ய

முடியும் என்று எங்களுக்குத் தோன்றுகிறது,” என்று கூறினான்.

என் இதயம் துள்ளிக் குதித்தது. “ஆஹா! ஒரு கதாநாயகனாக ஆவதற்கும், வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒருவனாக இடம்பெறுவதற்கும், சலிப்பூட்டும் அன்றாட வேலையிலிருந்து தப்பிப்பதற்கும் நான் கனவு கண்டிருந்த ஒரு வாய்ப்பு இதுதான்!” என்று நான் என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன். துணிகரமான காரியங்களைச் செய்வதற்கு நான் எப்போதுமே ஆர்வமாக இருந்தேன் என்று கூறிவிட முடியாது, ஆனால் என் அரசனைக் காப்பாற்றுவதற்கும் அவரது மனத்திற்குப் பிடித்த ஒருவனாக ஆவதற்கும் ஒட்டுமொத்த அசுர இனத்தின் கதாநாயகனாக ஆவதற்கும் என் விதி எனக்கு ஒரு வாய்ப்பைக் கொடுக்க வேண்டும் என்று நான் சில சமயங்களில் ஆசைப்பட்டேன்.

மாரீசன் என்னிடம் நடந்து வந்து, தனது கையை ஆறுதலாக எனது தோளின்மீது வைத்து, “அது உனக்கு அருவருப்பாகத் தோன்றக்கூடும், ஆனால் நீ அதைச் செய்துதான் ஆக வேண்டும்,” என்று கூறினான். என் காதுகள் எரிந்தன. “இவர்கள் எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்?” என்று என்னை நானே என் மனத்திற்குள் கேட்டுக் கொண்டேன். கதாநாயகன் ஆவது பற்றிய கனவு சுக்குநூறாக உடைந்தது. அவர்கள் என்னிடம் கொடுக்கவிருந்த வேலை, எங்களது அசுர அரசனை மீட்பதென்று நான் கனவு கண்டு கொண்டிருந்த ஒரு துணிச்சலான காரியம் அல்ல. என்னைச் சுற்றி இருந்த உன்னத ஜீவன்கள் அதைப் பார்த்துக் கொள்வார்கள்.

“நீ செய்ய வேண்டிய வேலை என்னவென்றால் . . . “ மாரீசனால் தொடர்ந்து பேச முடியவில்லை. வார்த்தைகளைத் தேடி அவன் தடுமாறினான். வித்யுத்ஜீவன் அச்சுறுத்தும் விதத்தில் என்னை நோக்கி நடந்து வந்தான். நான் பயத்தில் நடுங்கி ஒடுங்கினேன். நான் எழுந்து நின்று அவனது முகத்தை நேருக்கு நேர் பார்க்க விரும்பினேன், ஆனால் என் உடல் வளைந்தே இருந்தது. “நீ அந்த தேவப் பெண்ணைக் கூட்டிச் சென்று, அவளை ஒழித்துக்கட்டிவிடு,” என்று கூறிய அவன், என்னை இகழ்ச்சியாகப் பார்த்துவிட்டு, “கூடவே, நம் இனத்திற்கு அழிவைக் கொண்டு வரக்கூடிய அந்தக் குட்டி இளவரசியையும் கொன்றுவிடு,” என்று முடித்தான்.

நான் செவிமடுத்திருந்த விஷயம் எனக்கு ஏற்படுத்திய அதிர்ச்சியில் நான் வெடுக்கென்று நிமிர்ந்து நின்றேன். அந்தப் பெண்ணை எனக்கு ஒருபோதும் பிடித்ததில்லை, ஆனால் எங்கள் அரசன் அவளை நேசித்தார். நான் ராவணனை நேசிக்காமல் இருக்கக்கூடும், ஆனால் என்றேனும் ஒருநாள் அவர் இந்தக் கோமாளிகள் அனைவரையும் மிஞ்சி

நிற்பார் என்று நான் நம்பியதால் தொடர்ந்து அவருக்கு விசுவாசமாக இருந்தேன். அது என்னுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ளவும் எனக்கு உதவும். ஆனால் இப்போது, அவர் ஆபத்தில் இருந்தபோது, அவரது நல்ல நண்பர்களாகத் தோன்றியவர்கள் அவரது காதலியையும் அவரது குழந்தையையும் தீர்த்துக் கட்டச் சதித்திட்டம் தீட்டிக் கொண்டிருந்தனர்.

"நாம் அவளைக் கொல்லத்தான் வேண்டுமா? அந்தக் குட்டி இளவரசி . . ." என்று மாரீசன் தடுமாறினான்.

"தூ!" என்று வித்யுத்ஜீவன் துப்பினான். "நமது அரசன் இந்தப் பெண்ணுடன் வெட்கமின்றிச் சுற்றித் திரிந்தது நமக்கு ஏற்கனவே பல துரதிர்ஷ்டங்களைக் கொண்டு வந்துவிட்டது. ராவணனின் அச்சிறு குழந்தை ஒட்டுமொத்த அசுர இனத்திற்கும் ஒரு தீய சகுனம் என்று ஜோதிடர்கள் கணித்தது உனக்கு மறந்து போய்விட்டதா? அவள் நமக்கு மரணத்தையும் அழிவுகளையும் கொண்டு வருவாள். ஆனால் இவை அனைத்தும் மூடநம்பிக்கைகள் என்று நம் அரசன் நினைக்கிறார். நான் தேவையின்றி எதையும் விட்டுவைக்க விரும்பவில்லை."

"போதும்!" பிரஹஸ்தனின் குரல் அமைதியாகவும் தெளிவாகவும் இருந்தது. அது என்னை இன்னும் அதிகமாக அச்சுறுத்தியது. அவன் அசௌகரியமாகவும் தீர்மானிக்க முடியாதவனாகவும் தோன்றினான். "பத்ரா, நான் இதை உன்னிடம் கூற வேண்டியதில்லை. ஆனால், எங்களது இந்தத் தீர்மானத்திற்கான காரணத்தை நீ தெரிந்து கொள்வது, நம்முடைய இனத்திற்கு நீ உன் கடமையை ஒரு தெளிவான மனசாட்சியுடன் மேற்கொள்வதற்கு உதவும் என்று நான் நம்புகிறேன்," என்று அவன் கூறினான்.

மாரீசன் தன் வாயில் எதையோ மென்று கொண்டே பேசியதுபோல, மிக மெல்லிய குரலில், "நமது படையெடுப்பு ஒரு முக்கியமான நிலையை அடைந்துள்ளது. நாம் முழு வீச்சிலான ஒரு சண்டையை எதிர்கொண்டிருக்கிறோம். நமது அரசன் ஒரு பிணைக் கைதியாக எடுத்துச் செல்லப்பட்டுள்ளார். அவரை மீட்பதற்கு, கார்த்த வீர்யார்ஜுனனுக்கு நாம் கப்பம் கட்டியாக வேண்டும். நமது வீரர்களின் உற்சாகம் அதளபாதாளத்தில் இருக்கிறது. உயர்மட்டக் குழு தனது அறிவின் அடிப்படையில் ஒரு முடிவெடுத்துள்ளது. அந்தப் பெண் நமது அரசனின் கவனச் சிதறலுக்கு ஒரு முக்கியக் காரணம் என்று நாங்கள் நினைக்கிறோம். அவள் தேவர்களின் உளவாளி என்று நான் கூற மாட்டேன், ஆனால் அந்த மாதிரியான கதைகளைப் பலர் ஒப்புக் கொள்வார்கள் என்று எனக்குத் தெரியும். அதில் உண்மை இருக்கிறதோ இல்லையோ, அவள் நமது ஒட்டுமொத்த அசுர இனத்தின் கழுத்தில் ஓர்

அரவைக்கல்லாக ஆகியிருக்கிறாள்,'' என்று கூறினான். சிறிது நேர இடைவெளிக்குப் பிறகு, அவன் என்னுடைய முகத்தைத் தீவிரமாக உற்றுப் பார்த்தான். அந்தக் கூடாரத்திலிருந்த அந்தப் 'பெரிய' மனிதர்கள் குறித்து நான் கொண்டிருந்த அதீத வெறுப்பை அவனால் உணர்ந்து கொள்ள முடியும் என்பதை நான் உறுதியாக அறிந்திருந்தேன். அவன் பெருமூச்செறிந்துவிட்டு, தனது கையை என் தோளின்மீது வைத்தான். எனக்கு அருகே மிக உயரமாக இருந்த அவனை நான் ஏறிட்டுப் பார்த்தேன். ஒரு நாய்க்குட்டி தன் எஜமானனை அண்ணாந்து பார்ப்பது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது.

பிரஹஸ்தன் என்னை நோக்கி வந்து, சற்றுக் குனிந்து, என் காதில், "அவளைக் கூட்டிச் சென்று அவளைத் தீர்த்துக்கட்டிவிடு,'' என்று கிசுகிசுத்தான்.

வித்யுத்ஜீவன் எனக்கு இன்னும் அதிக அருகில் வந்து, "அந்தக் குட்டிப் பிசாசை மறந்துவிடாதே,'' என்று முணுமுணுத்தான்.

நான் சிறிது நேரம் கல்லாக நின்றுவிட்டு, கீழ்நிலையில் இருந்த அசுரர்களுக்கே உரிய கையாலாகாத்தனத்துடன், என் இடுப்பிலிருந்து குனிந்து வணங்கி, "உங்கள் விருப்பம்தான் எனது உத்தரவு,'' என்று கூறினேன்.

பிரஹஸ்தன் ஒரு கையை அசைத்து என்னை அங்கிருந்து போகும்படிச் சமிக்கைக் காட்டினான். நான் ஒரு கனத்த இதயத்துடன் அங்கிருந்து வெளியேறினேன். வித்யுத்ஜீவனின் இகழ்ச்சி என் இதயத்தின் ஆழத்தில் எரிந்து கொண்டிருந்தது. நான் எனது முகாமிற்குச் சென்று, கந்தலாக இருந்த எனது படுக்கையின்மீது விழுந்தேன். இந்தப் பெரிய மனிதர்களுடைய நாயாக இருந்து நான் மிகவும் களைத்துப் போயிருந்தேன். "என்னைப் போன்ற ஏழை மக்களின்மீது ஏறி மிதித்துச் செல்வதற்கு இந்தக் கயவர்களுக்கு யார் தெய்வீக உரிமையைக் கொடுத்தது?'' கடுஞ்சினமும் வெறுப்பும் என்னுள் எழுந்து கொண்டிருந்ததை நான் உணர்ந்தேன், ஆனால் அது பொங்கி வழியவிருந்த கணத்தில் ஒரு வீரன் எனது கூடாரத்திற்குள் நுழைந்து, ஒரு தட்டு நிறையச் சாப்பாட்டைத் தரையில் எனக்குப் பக்கத்தில் வைத்தான். பிறகு ஓர் உலோக டம்ளரைத் தரையில் ஓங்கி வைத்து, அதில் அருமையான மதுரசத்தை ஊற்றினான். நான் என் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து, அந்தச் சம்பிரதாயத்தைத் துளிகூட ஆர்வமின்றிப் பார்த்தேன்.

அவன் என்னை இகழ்ச்சியாகப் பார்த்து, "நீ அவர்கள் முன்னால் மண்டியிட்டுக் கெஞ்சினாய், இல்லையா? இதோ, அவர்கள் உனக்கு நல்லச் சாப்பாட்டைக் கொடுத்து அனுப்பியிருக்கிறார்கள்,'' என்று

கூறிவிட்டு அங்கிருந்து போய்விட்டான்.

கடந்த ஒருசில நாட்களாக ஒருசில கரண்டிச் சாதமும் நீர்த்துப் போன சிறிது கஞ்சியும் மட்டுமே எங்களுக்கு வழங்கப்பட்டு வந்தது. ஆனால் முக்கியமானவர்களுக்கு மட்டும் அவர்களிடம் எப்போதுமே போதுமான அளவு இருந்தது. அவர்கள் கூறியபடி ஒருவன் நடந்து கொண்டால், சில சமயங்களில் அவர்கள் தங்கள் மேசையிலிருந்து ஓரிரு பருக்கைகளை அவனுக்குக் கொடுத்தார்கள். நான் எனக்குப் பக்கத்தில் இருந்த தட்டையே நெடுநேரம் பார்த்தேன். திடீரென்று எனக்குப் பெரும் பசி ஏற்பட்டது. நான் என் வேட்டியில் என் கைகளைத் துடைத்துவிட்டு, எனக்காக அனுப்பி வைக்கப்பட்டிருந்த விருந்தை ஆர்வத்தோடு சாப்பிட்டுவிட்டு, அத்தட்டை நன்றாக நக்கிச் சுத்தப்படுத்தினேன். பிறகு, டம்ளரில் இருந்த மதுபானத்தை ஒரே மடக்கில் குடித்துவிட்டு, அந்த உலோக டம்ளரை வெளியே வீசினேன். அது இருட்டில் எங்கோ போய் விழுந்து, ஒரு பலத்தச் சத்தத்தை ஏற்படுத்தித் தனது எதிர்ப்பைக் காட்டியது.

நான் மதுமயக்கம் தெளிந்து கண்விழித்தபோது இன்னும் இருட்டாக இருந்தது. என் தலை மிகக் கடுமையாக வலித்தது. காளை மாட்டு வண்டி தயாராகிக் கொண்டிருந்த சத்தம் எனக்குக் கேட்டது. நான் வெளியே சென்று, குளிர்ந்த நீரில் முகம் கழுவினேன். வெடவெடவென்று நடுங்கிக் கொண்டே கைகால்களை நீட்டி முறித்தேன். மாரீசனின் உயரமான உருவம் என்னை நோக்கி வந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். நான் விரைவாக என் கூடாரத்திற்குள் சென்று, ஓரளவுக்கு நல்ல உடைக்கு மாறிக் கொண்டு, தட்டுத்தடுமாறியபடி, அவனைச் சந்திப்பதற்காக வெளியே சென்று, அவனைக் குனிந்து வணங்கினேன். ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்த அவன், மௌனமாக என்னருகே வந்து, என்னைத் தொடுவதற்கு ஒரு கையை நீட்டினான், ஆனால் திடீரென்று அதை விசுக்கென்று இழுத்துக் கொண்டான். ஒருசில கண மௌனத்திற்குப் பிறகு, அவன், “பத்ரா, நாங்கள் உன்னிடம் ஒப்படைத்துள்ள காரியம் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் நம் இனத்திற்காகவும் நமது அரசனுக்காகவும் அதைச் செய்து முடித்துவிடு,” என்று கூறினான்.

நான் எதுவும் பேசாமல் இருந்தேன். எங்கோ ஓரிடத்தில், ஒரு கோழி, உரிய நேரத்திற்கு முன்பாகவே கூவியது. அப்போது மாரீசன் என்னிடம், “நாம் இப்போது செய்து கொண்டிருக்கும் காரியம் சரியானதாக இருக்க வேண்டும் என்று நான் வேண்டிக் கொள்கிறேன் . . . அந்தச் சின்னஞ்சிறு குழந்தைக்காக நான் வருத்தப்படுகிறேன் . . . அந்த பிராமணப் பெண்ணிற்காகவும்தான். பத்ரா, கடவுள் உனக்குத் துணையிருக்கட்டும் .

. . உன் கடமையைச் செய். உன்னுடைய எளிய மனத்தில் எதையும் போட்டுக் குழப்பிக் கொள்ளாதே. கவலைப்படுவதை எங்களிடம் விட்டுவிடு,” என்று கூறினான். பிறகு வேகமாகத் திரும்பி அங்கிருந்து நடந்தான்.

நான் குனிந்த நிலையிலேயே கூடுதலாக ஒருசில கணங்கள் அங்கு நின்றேன். ‘எளிய மனமா?’ நான் என் கைகளில் ரத்தத்தை உணர்ந்தேன். நான் என்னை நிமிர்த்திக் கொண்டபோது, வலிமைக்காகவும் உள்ளார்ந்த அமைதிக்காகவும் பிரார்த்தித்தேன். நான் என் கடமையைத்தான் செய்து கொண்டிருந்தேன் என்பதை அறிந்திருந்த நான், உற்சாகம் என்னை ஆட்கொள்வதற்காகக் காத்திருந்தேன். பயம், சுயபச்சாதாபம், வெறுப்பு ஆகியவற்றைத் தவிர வேறு எந்த உணர்ச்சியும் என்னுள் எழவில்லை. அதே மனநிலையில் நான் சமையலறையை நோக்கி நடந்தேன். அங்கிருந்த கணக்கன் என்னைப் பார்த்துப் புன்னகைத்துவிட்டு, ஒரு சாப்பாட்டு மூட்டையை என்னிடம் கொடுத்தான். அந்த அதிகாலை நேரத்தில் அச்சமையலறையில் மும்முரமாக வேலை நடந்து கொண்டிருந்தது என்னை ஆச்சரியப்படுத்தியது. நான் திரும்பி நடந்தபோது, லேசான சாரல் வீசத் தொடங்கியிருந்தது. நான் என் சாப்பாட்டு மூட்டையை மாட்டு வண்டிக்குள் எறிந்துவிட்டு, ஓட்டுனர் இருக்கையில் ஏறி அமர்ந்து காத்திருந்தேன்.

அவர்கள் அவளைக் கொண்டு வந்தபோது, கிழக்கு வானில் சில ஒளிக்கீற்றுகள் தென்பட்டன. அவளுக்கு மயக்க மருந்து கொடுக்கப்பட்டிருந்தது. இரண்டு பேர் அவளைத் தூக்கி வந்தனர். அவர்கள் அவளை எனது வண்டிக்குள் போட்டுவிட்டு அங்கிருந்து போய்விட்டனர். சிறிது நேரம் கழித்து, தன் கைகளில் ஒரு சிறிய மூட்டையை மிகவும் எச்சரிக்கையாகப் பிடித்தபடி மாரீசன் அங்கு வந்தான். அவன் அக்குழந்தையின் நெற்றியின்மீது முத்தமிட்டுவிட்டு, அவளை அந்தப் பெண்ணுக்குப் பக்கத்தில் மெதுவாகப் படுக்க வைத்தான். என் கண்களைத் தவிர்ப்பதற்காக அவன் வேறு பக்கமாகத் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அக்குழந்தையின் தொடையின்மீது ஒரு சிறிய கண்ணீர்த்துளி இருந்ததை நான் பார்த்தேன். அக்குழந்தை லேசாக அசைந்து, தனது தூக்கத்தில் ஒரு தேவதையைப்போலப் புன்னகைத்து, பிறகு அமைதியாகத் தூங்கினாள்.

நான் அந்தக் காளை மாட்டைச் சாட்டையால் அடித்தேன். வண்டி லேசாகக் குலுங்கி, தனது பயணத்தைத் தொடங்கியது. பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்த நர்மதை நதியை நான் அடைந்தபோது, கிழக்கு நன்றாக வெளுத்திருந்தது. காலைநேரச் சூரிய ஒளியில், மழைச்சாரல்

பொன்னிறமாக மாறியிருந்தது. தூரத்துத் தொடுவானில் ஒரு பெரிய வானவில் தோன்றியது. நான் அதிலிருந்து என் பார்வையை விலக்கிக் கொண்டேன். எங்கள் வண்டி அசைந்தாடிக் கொண்டும் குலுங்கிக் கொண்டும், குறுகலான காட்டுப் பாதை வழியாக, தேவர்களின் சாம்ராஜ்யத்தை நோக்கிச் சென்றது. காட்டின் அழகு என்னை உற்சாகப்படுத்தியது. என் மனத்தில் இருந்த இருண்ட எண்ணங்களைச் சிறிது நேரம் என்னால் ஒதுக்கித் தள்ள முடிந்தது. என் முகத்தின்மீது விழுந்த குளிர்ந்த மழைத் துளியையும், என் உடலை வருடிச் சென்ற நறுமணக் காற்றையும் நான் மகிழ்ச்சியாக அனுபவித்தேன். என்னிடம் ஒப்படைக்கப்பட்டக் காரியத்தைப் பற்றிச் சிறிது நேரம் நான் மறந்து போனேன். நான் ஓர் எளிய மனம் படைத்தவன், இல்லையா?

நான் சிறிது ஓய்வெடுப்பதற்காக வண்டியை நிறுத்தியபோது, இருட்டாகியிருந்தது. சூரியன் தூரத்துக் குன்றுகளுக்குப் பின்னால் மறைந்து கொண்டிருந்தான். அந்த பிராமணப் பெண் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளும் அந்தக் குட்டி இளவரசியும் ஒருவிதமான காய்ச்சலால் துன்புற்றுக் கொண்டிருந்ததால், ஒரு கிராமத்து வைத்தியரிடம் நான் அவர்களைக் கூட்டிச் சென்றிருந்ததாகவும், ஆனால் அவர்கள் அக்காய்ச்சலுக்குப் பலியாகிவிட்டிருந்ததாகவும் ஒரு கதை பரப்பப்படுவதாக இருந்தது.

இப்போது நான் என் முகாமிலிருந்து வெகுதூரத்தில் இருந்தேன். அப்பெண்ணை நான் ஒருமுறை அனுபவித்தால், யாருக்கு என்ன தெரியப் போகிறது? ஒருவேளை, உயர்மட்டக் குழு எனது நடவடிக்கையை மெச்சக்கூடும். நான் அவளருகே சென்று, அவளுடைய ஆடைகளை இறுகப் பற்றினேன். திடீரென்று அவள் கண்விழித்து என்னை முறைத்துப் பார்த்தாள். நான் நடுங்கிக் கொண்டே அவளிடமிருந்து விலகினேன். அவளது கண்களில் கண்ணீர் அரும்பியது. அதில் ஒரு சிறு துளி, வண்டியினுள்ளே விரிக்கப்பட்டிருந்த சிவப்புநிறப் பட்டுத் துணியின்மீது விழுந்து அதை நனைத்தது. நான் என்னைக் குறித்து அவமானம் கொண்டு, என் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். அப்போது, வலி, வேதனை, புறக்கணிப்பு ஆகியவற்றை வெளிப்படுத்திய ஒரு குரலில் அவள் பெரிதாக ஊளையிட்டாள். அது அந்த இடத்தைச் சுற்றியிருந்த பறவைகளைத் திடுக்கிடச் செய்தது. நான் சுமந்து வந்திருந்த சிறிய எண்ணெய் விளக்குக் கீழே சரிந்து, அந்தப் பட்டு விரிப்பின்மீதும் அவளுடைய ஆடையின்மீதும் எண்ணெய் தெறித்தது. நான் அந்த விளக்கை நேராக நிமிர்த்தி வைக்க முயன்றேன், ஆனால் என் கைகள் நடுங்கின.

அந்தப் பெண் ஓர் உச்சஸ்தாயிக் குரலில், "பண்பாடற்ற அசுரனே, உனக்கு என்ன துணிச்சல் இருந்தால் என்னை நீ தொடுவாய்?" என்று பெரும் கூச்சலிட்டாள். அவளது கத்தலில் அந்தக் குழந்தை விழித்துக் கொண்டு அழத் துவங்கியது.

"உனது அரசன் ஒருபோதும் என்னைத் தொட முயற்சிக்கவில்லை. நீ . . . சண்டாளா . . . உனக்கு என்ன துணிச்சல்?"

கோபம் என்னுள் ஊற்றெடுத்தது. அவள் இக்காட்டில் தனியாக இருந்தாள். நான் அவளைக் கொல்ல வேண்டும் என்று எனக்கு உத்தரவு இடப்பட்டிருந்தது. நான் அவளை நோக்கி நகர்ந்தபோது, அவள் என்னிடமிருந்து விலகிச் செல்ல முயன்றாள். வண்டியிலிருந்து வெளியே குதிக்க அவள் முயற்சித்தபோது, விட்டு விட்டு எரிந்து கொண்டிருந்த அந்த எண்ணெய் விளக்கு, காற்றில் திடீரென்று உயிர்ப்பெற்றதில் அவளது ஆடையில் நெருப்புப் பற்றியது. நான் அவளது ஆடையில் இருந்த நெருப்பை அணைக்க முயற்சித்தேன், ஆனால் அவள் என் கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டு, ஆற்றை நோக்கி ஓடினாள். அவளது உடம்பு இப்போது ஒரு நெருப்புப் பந்துபோல இருந்தது. வேதனையும் கோபமும் ஒருசேர அவள் ஓலமிட்டுக் கொண்டே ஓடினாள். ஆனால் அவளால் ஆற்றை அடைய முடியவில்லை. அவள் தொடர்ந்து அலறினாள். நெருப்பு அவளை விழுங்கிக் கொண்டிருந்தது. யாராலும் உதவி செய்ய முடியாதபடி, ஆற்றங்கரையிலிருந்து ஒருசில அடிகள் தூரத்தில் அவள் கீழே விழுந்தாள். அவளைக் காப்பாற்றும் முயற்சியை நான் கைவிட்டேன். என்னுடைய வேலை அவளைத் தீர்த்துக்கட்டுவதுதான், இல்லையா? அவள் நெடுநேரம் துடித்துக் கொண்டிருந்தாள். ஆற்றின் அருகே எரிந்து கொண்டிருந்த அவள், பார்ப்பதற்கு மிகவும் பயங்கரமாக இருந்தாள். அவள் ஒட்டுமொத்த அசுர இனத்தையும் தொடர்ந்து சபித்தாள். ராவணன்தான் தன்னை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்திருந்ததாகவும், இன்னொரு பிறவி எடுத்து வந்து தான் அவனைப் பழி வாங்கப் போவதாகவும் அவள் கத்தினாள். அவள் இறந்ததைச் சலிப்போடும் அக்கறையின்றியும் நான் பார்த்தேன். அவள் இறப்பதற்கு முன்பு, அந்தக் குட்டி அசுர இளவரசியின் உடலில் ஓர் ஆவியாகத் தான் புகப் போவதாகவும், ஒட்டுமொத்த அசுர இனமும் அழிவதைத் தான் உறுதி செய்யப் போவதாகவும், அந்த ஜோசியரின் கணிப்புத் தனது கோபத்தின் மூலமும் தனது கற்பின் மூலமும் உண்மையாகும் என்றும், இன்னும் பல அர்த்தமற்ற விஷயங்களையும் கூறி ஊளையிட்டாள். ஒரு வழியாக அவள் இறந்தபோது, கிழக்கில் வானம் லேசாகச் சிவந்து கொண்டிருந்தது.

குட்டி இளவரசி தன் அழுகையை நிறுத்தியிருந்தாள். நான்

வண்டியை நோக்கி ஓடினேன். அவள் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். அவளது முகத்தில் சூதுவாதற்ற ஒரு புன்னகை மலர்ந்தது. என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. அருகிலிருந்த ஒரு பாறையின்மீது அவளது தலையை மோதி உடைக்கலாமா என்று நான் நினைத்தேன். அப்போது, தேவர்களால் எனது மகளின் மண்டை பிளக்கப்பட்டு, என் வீடு முழுவதும் அவளது மூளை சிதறிக் கிடந்த காட்சி என் மனத்தில் உதித்தது. அதே போன்ற ஒரு காரியத்தை நான் இந்தக் கைக்குழந்தைக்குச் செய்ய விரும்பினேனா? நான் அக்குழந்தையைத் தூக்கினேன். அவள் தனது உள்ளங்கையால் என்னுடைய சுண்டுவிரலை இறுக்கமாகப் பிடித்தாள். என்னால் இவளைக் கொல்ல முடியாது. நான் அக்குழந்தையை என் மடியில் கிடத்திவிட்டு அழுதேன்.

அவளும் என் மடியில் படுத்தபடி அழுது கொண்டிருக்க, நான் அங்கு நெடுநேரம் அமர்ந்து, பிறகு அப்படியே தூங்கிவிட்டேன். திடீரென்று, வேறு சில சத்தங்கள் கேட்டு நான் கண்விழித்தேன். ஒரு பெரிய வேட்டைக் கும்பல் அங்கு தோன்றியது. ஆயுதங்கள் தாங்கிய நூற்றுக்கணக்கான வீரர்கள் குதிரைகள்மீதும் நடந்தும் வந்தனர். ஆற்றின் பக்கத்தில் இருந்த ஒரு வெற்றிடத்தில் அவர்கள் ஒரு முகாமை அமைத்துக் கொண்டிருந்தனர். என் மடியில் கிடந்த குழந்தை தளர்ந்து போயும் கிட்டத்தட்ட நீல நிறத்திலும் இருந்தாள். ஒருவேளை அவள் இறந்து போய்விட்டாளோ என்னவோ. நான் அந்த இடத்திலிருந்து போயாக வேண்டியிருந்தது. அந்த வேட்டைக்காரக் கும்பல், ஓர் ஒட்டுமொத்தக் கிராமத்தையும் விழிக்கச் செய்யும் அளவுக்குச் சத்தத்தை ஏற்படுத்தியது. இந்தச் சத்தத்தில் அக்குழந்தை விழித்துக் கொண்டு அழத் தொடங்கக்கூடும் என்று நான் பயந்தேன். அந்தக் கும்பலில் இருந்தவர்கள் தேவர்களைப்போலத் தோன்றினர். ஆனால் கருத்தத் தோல்களுடன் இருந்தவர்களும் அவர்களுக்கிடையே இருந்தனர். இறந்து போய்க் கிடந்த அந்த பிராமணப் பெண்ணையும், கைக்குழந்தையுடன் இருந்த என்னையும் அவர்கள் பார்த்துவிடக்கூடாது என்று நான் பயந்தேன். நான் உடனடியாக அங்கிருந்து வெளியேற வேண்டியிருந்தது.

ஆனால் நான் அங்கிருந்து திரும்பியபோது, ஏதோ ஒன்று என் காலை இடறியதில், மரங்களுக்குக் கீழே வளர்ந்திருந்த புதரில் நான் விழுந்தேன். குட்டி இளவரசி என் கைகளில் இருந்து தவறிக் கீழே விழுந்து, ஒருசில அடிகள் உருண்டு போய், ஒரு பெரிய குழிக்குள் விழுந்து ஓலமிட்டாள். கொழகொழவென்று ஏதோ ஒன்று அக்குழியை நிரப்பியிருந்தது. முகாமை அமைத்துக் கொண்டிருந்த வீரர்களில்

ஒருவன் நாங்கள் இருந்த திசையில் திரும்பிப் பார்த்தான். அவன் எங்கள் திசையைச் சுட்டிக்காட்டி மற்றவர்களிடம் ஏதோ கூறினான். என்னவென்று பார்ப்பதற்காக அவர்கள் எங்களை நோக்கி வந்தனர். அவர்கள் என்னைப் பார்த்துவிடக்கூடாது என்று பிரார்த்தித்துக் கொண்டே, அருகிலிருந்த ஓர் ஆலமரத்தின்மீது நான் ஏறினேன். அதிர்ஷ்டவசமாக, அந்தக் காவலாளிகள் நிமிர்ந்து மேலே பார்க்கவில்லை. இப்போது இன்னும் அதிகமான வீரர்கள் எங்களை நோக்கி வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். திடீரென்று, வித்தியாசமான ஓர் அலறல் சத்தம் கேட்டது. ஆற்றின் அருகே எரிந்து கிடந்த பிராமணப் பெண்ணை அவர்கள் கண்டுபிடித்திருந்தனர். முக்கிய முகாமை நோக்கி ஒரு வீரன் ஓடியதை நான் பார்த்தேன். அங்கு ஏதோ ஒரு சலசப்புக் கேட்டது. குழிக்குள் இருந்து அக்குழந்தையை மீட்க அவர்கள் முயற்சித்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். அது அவ்வளவு ஆழமான குழியொன்றும் அல்ல, ஆனால் அக்குழந்தை மெதுவாக மூழ்கிக் கொண்டிருந்தாள். புதைமணல் அடங்கிய ஒரு குழி அது. தாங்கள் அதற்குள் இறங்கிய மறுகணம் தாங்கள் அதில் மூழ்கிவிடுவோம் என்பதை அந்த வீரர்கள் அறிந்திருந்தனர்.

அப்போது, குள்ளமான, திடகாத்திரமான ஒருவன் அங்கே வந்தான். அவன் முக்கியமானவன்போலத் தோன்றினான். ஒட்டுமொத்தக் கும்பலும் அவன் முன்னே குனிந்து பணிந்துவிட்டு, மிகவும் உற்சாகமாகப் பேசத் தொடங்கியது. அவன் அக்குழிக்குள் எட்டிப் பார்த்துவிட்டு, ஓர் ஏரைக் கொண்டு வரும்படி தனது எடுபிடி ஒருவனிடம் ஆணையிட்டான். அதைக் கொண்டு அவன் அக்குழந்தையை அக்குழிக்குள் இருந்து மெதுவாக வெளியே எடுத்தான். குழந்தையின் இதயத்துடிப்பை அவன் பரிசோதித்தான். பிறகு ஏதேதோ கொண்டு வரும்படி அவன் தனது வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டான். ஒருசில நிமிடங்களுக்குப் பிறகு, அக்குழந்தை மீண்டும் அழத் துவங்கினாள். எல்லோரும் கைதட்டித் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். மர உச்சியின்மீதிருந்த நானும் மகிழ்ச்சியாகக் கைதட்ட விரும்பினேன், ஆனால் என் ஆர்வத்தை அடக்கிக் கொண்டேன். வேதவதியின் எஞ்சிய உடலை அவர்கள் தகனம் செய்ததை மரக்கிளைகளுக்கு இடையே மறைந்து கொண்டு நான் பார்த்தேன். கற்றறிந்த ஒருவனைப்போலத் தோன்றிய அந்த முக்கியமான நபர், மிதிலை நாட்டு அரசனான ஜனகன் என்பதை அந்த வீரர்களின் உரையாடல்களிலிருந்து நான் தெரிந்து கொண்டேன்.

அன்று மதியம், அந்த வீரர்கள் அனைவரும் தங்களது அரசனைச் சூழ்ந்திருக்க, சில பிராமண குருக்கள் மந்திரங்களை ஓத, அந்த அரசன்

அக்குழந்தையை நோக்கிக் குனிந்து, தான் அக்குழந்தைக்காகத் தேர்ந்தெடுத்திருந்த பெயரை அவளுடைய காதில் கிசுகிசுத்தான். ஒட்டுமொத்த முகாமும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தது. 'சீதை' என்ற பெயர் முழக்கம் விண்ணைப் பிளந்தது. நான் அக்குழந்தைக்காக மகிழ்ச்சி கொண்டேன். ஏதோ ஒரு காட்டு விலங்கிற்குப் பலியாவதற்குப் பதிலாக, அவள் இப்போது ஓர் அரண்மனையில் ஓர் இளவரசியாக இருப்பாள். இவள் ஓர் அதிர்ஷ்டக்காரக் குழந்தை. அந்த அதிர்ஷ்டம் தனது வாழ்நாள் முழுக்க அவளுக்கு நீடித்திருக்க வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். அவள் எனது எஜமானனின் மகள், இலங்கையின் இளவரசி, ஓர் அசுர இளவரசி, ஆனால் தனது இனத்திற்கு அழிவைக் கொண்டு வரக்கூடிய ஒரு சாபத்துடன் பிறந்தவள் அவள்.

கேளிக்கைக் கொண்டாட்டங்கள் முடிந்து, அந்த வீரர்களில் பெரும்பாலானவர்கள் குடித்துவிட்டு மயங்கியோ அல்லது தூங்கியோ விழுந்த பிறகு, நான் மரத்திலிருந்து கீழே இறங்கி, அந்த முகாமிற்குள் அமைதியாக நுழைந்தேன். சமையலறையிலிருந்து சிறிது உணவைத் திருடிக் கொண்டு, பாதி காலியான நிலையில் ஆங்காங்கே சிதறிக் கிடந்த ஜாடிகளிலிருந்து சிறிது மதுவைக் குடித்தேன். அப்போது, அந்த அசுர இளவரசியை மீண்டும் பார்ப்பதற்கான, கட்டுப்படுத்த முடியாத ஒரு தூண்டுதல் என்னுள் எழுந்தது. இருப்பதிலேயே மிகவும் ஆடம்பரமாகத் தோன்றிய முகாமிற்குள் நான் நுழைந்தேன். அங்கு மெல்லியதாக எரிந்து கொண்டிருந்த எண்ணெய் விளக்கின் ஒளியில், நன்றாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த அரசனுக்குப் பக்கத்தில், குட்டி இளவரசி ஒரு சிறிய மூட்டையாக ஒரு வெள்ளைப் பட்டுத் துணியின்மீது சௌகரியமாகச் சுருண்டு படுத்திருந்ததை நான் கண்டேன். நான் அவளருகே சென்று, அவளுடைய அழகான முகத்தைப் பார்த்தேன், குனிந்து அவளது கன்னத்தில் ஒரு முத்தமிட்டேன். அவள் தன் உதட்டைப் பிதுக்கிவிட்டு, பிறகு ஒருசில முறை லேசாகச் சப்புக் கொட்டினாள். நான் அவளுடைய சின்னஞ்சிறிய கைகளையும் கால்களையும் பார்த்தபடி ஒருசில நிமிடங்கள் அங்கு நின்றேன். பெரும் தயக்கத்திற்குப் பிறகு, என் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருக்க, உணர்ச்சிப் பெருக்கால் என் கால்கள் பலவீனமடைந்திருக்க, யார் கண்களிலும் படாமல் நான் அந்த முகாமைவிட்டு வெளியேறினேன்.

நான் அந்த வெற்றிடத்தை அடைந்தபோது, மீண்டும் ஒருமுறை பின்னால் திரும்பிப் பார்த்தேன். நான் என்னுடைய சொந்த மகளை அங்கே விட்டுவிட்டு வந்திருந்தது போன்ற ஓர் உணர்வு என்னுள் மேலோங்கியது. அவளை மகிழ்ச்சியாக வைத்திருக்கும்படி நான் சிவனிடம் பிரார்த்தனை செய்தேன். அவள் ஓர் அழகான இளவரசியாக வளர்ந்து, தன்னை என்றென்றும் மகிழ்ச்சியாக வைத்திருக்கக்கூடிய ஒரு நல்ல தேவ இளவரசனை மணமுடிக்க வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். இந்த மிதிலை அரசன் மென்மையான குணம் படைத்தவனாகவும் கற்றறிந்தவனாகவும் அறிவார்ந்தவனாகவும் தெரிந்தான். அசுர முகாமை நோக்கிக் காட்டின் ஊடாக நான் திரும்பி நடந்தபோது, அவளை என்னுடன் எடுத்துச் சென்று, என்னுடைய சொந்த மகளாகத் தத்தெடுத்துக் கொள்ள விரும்பினேன். அவளை எனது அரசனிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, நடந்த உண்மையை அவரிடம் கூற விரும்பினேன். நான் பல விஷயங்களைச் செய்ய விரும்பினேன்,

ஆனால் இறுதியில் குழப்பம்தான் மிஞ்சியது.

தெளிவாகச் சிந்திக்கக்கூடிய அளவுக்கு நான் வெகுதூரம் வந்த பிறகு, ஒரு விஷயம் என்னைத் தாக்கியது. நான் அக்குழந்தையைக் கொன்றிருக்க வேண்டும். அந்த எண்ணம் என்னை உலுக்கியது, ஆனால் அவள் என்றேனும் ஒருநாள் திரும்பி வருவாள் என்ற முன்னுணர்வு எனக்கு ஏற்பட்டது. அவள் தனது இனத்தாரிடம் திரும்பி வந்து, தனது தந்தை எதற்காகப் போராடியிருந்தாரோ, அவை அனைத்தும் அழிவதற்கு அவள் காரணமாக இருப்பாள். இது எனக்கு எப்படித் தெரியும் என்று எனக்குத் தெரியவில்லை, ஆனால் இந்த எண்ணம் மீண்டும் மீண்டும் என்னிடம் திரும்பி வந்தது. எங்களை ரட்சிக்குமாறு நான் சிவனிடம் வேண்டினேன், ஆனால் இந்த விஷயத்தில் அவரால் செய்யக்கூடியது எதுவுமில்லை என்பதை நான் அறிந்தேன். அது ஒருவேளை, வாழ்க்கையைப் பற்றித் தான் தெரிந்து கொள்வதற்கு முன்பே தன்னைக் கொலை செய்ய விரும்பிய, அகங்காரம் கொண்ட, இதயமற்ற ஓர் இனத்தின்மீதான, ஓர் அசுர இளவரசியின் பழி வாங்கும் நடவடிக்கையாக இருக்கலாம். மனிதகுல வரலாற்றை அவள் மாற்றுவாள். எனக்கு இவ்வளவு விஷயங்கள் எப்படித் தெரியும் என்றும், புலனுக்கு அப்பாற்பட்டதை உணரும் திறன் எனக்கு இருந்ததா என்றும் வியந்து கொண்டே, நான் எனக்கு முன்பாக ஓடிக் கொண்டிருந்தேன். அவை அனைத்தும் பின்னர் நிகழ்ந்து எங்கள் அனைவரையும் ஆட்கொள்ளும், ஜென்ம ஜென்மங்களுக்கும் எங்கள் நாட்டை இருளில் மூழ்கடிக்கும்.



# 29

## எங்கிருந்தாலும் வாழ்க

ராவணன்

நான் யாரையும் பார்க்க விரும்பவில்லை. ஒரு சந்தையில் ஒரு காளை மாட்டைப்போல, பொருட்களுக்காக நான் பண்டமாற்றுச் செய்யப்பட்டேன். எங்களுடைய படையெடுப்பின் மூலம் நாங்கள் சம்பாதித்திருந்த அனைத்தையும் கொடுத்து, என்னுடைய மக்கள் என்னை மீட்டிருந்தனர். அவமானம் முடிந்துவிட்டது. ஒரே அடியில், கார்த்த வீர்யார்ஜுனன் எனது படையை ஆற்றலிழக்கச் செய்துவிட்டான். இலங்கைக்குத் திருப்பி எடுத்துச் செல்ல எங்களிடம் எதுவும் இருக்கவில்லை. எங்களது தனிப்பட்ட வாள்கள், குதிரைகள், யானைகள், மற்றும் தங்கத்தைத் தவிர, நாங்கள் எங்களுடைய ஆயுதங்கள் அனைத்தையும் அவனிடம் ஒப்படைக்க வேண்டியதாயிற்று. இவற்றுக்குப் பதிலாக எங்களுக்குக் கிடைத்தது, மதிப்பற்ற எனது வாழ்க்கை மட்டுமே. நான் இறந்து போக விரும்பினேன், ஆனால் அந்த ஒட்டுமொத்தத் தியாகமும் வீணாகப் போயிருக்கும். என்னால் சண்டைகூடஜீ போட முடியவில்லை என்பது எனக்கு அதிக

வருத்தத்தை ஏற்படுத்தியது.

வேகமாக ஓடிக் கொண்டிருந்த நர்மதை ஆற்றைக் கடக்குமாறு வேதவதி எனக்குச் சவால் விட்டாள். நான் ஒரு முட்டாளைப்போல, சீற்றத்துடன் பாய்ந்து கொண்டிருந்த நதிக்குள் குதித்தேன். தனது காதலிக்கு பிரமிப்பூட்ட முயற்சித்த ஒரு பருவ வயது இளைஞனைப்போல் நான் உணர்ந்தேன். ஆனால் நீரோட்டத்தின் வேகத்தை நான் குறைத்து மதிப்பிட்டிருந்தேன். எனது தவறை உணர்ந்து நான் சுதாரிப்பதற்கு முன்பாகவே, ஆற்றின் அடியிலிருந்த ஒரு பாறையின்மீது என் தலை மோதியது. நான் கிட்டத்தட்ட மூழ்கினேன், பிறகு ஆற்றின் நீரோட்டம் என்னை இழுத்துச் சென்றது. நான் என் கண்களைத் திறந்தபோது, ஒரு பைத்தியக்காரனைப்போல, ஓர் இரும்புக் கட்டிலுடன் சங்கிலியால் பிணைக்கப்பட்டு, ஒரு பாதாளச் சிறையில் இருந்தேன். துவக்கத்தில் நான் என்மீதும் வேதவதியின்மீதும் அசுரர்கள்மீதும் என்னைப் பிடித்து வைத்திருந்த கார்த்த வீர்யார்ஜுனன்மீதும் கோபப்பட்டேன். ஆனால் விரைவில், ஈரமான அந்தப் பாதாளச் சிறையில் என் கோபம் மாயமாய் மறைந்து போனது. நாட்பட்ட உணவை என்னிடம் தூக்கி எறிவதற்காக என் சிறைக் கதவு திறக்கப்பட்டபோதெல்லாம், ஒரு சிறு நம்பிக்கைக் கீற்று எனக்குத் தென்பட்டது. ஒருசில நாட்களுக்குப் பிறகு அதுவும் மறைந்து போனது. விரைவில், எத்தனை நாட்கள் நான் அங்கு இருந்தேன் என்ற கணக்கும் நேரமும் எனக்கு மறந்து போனது. எனது லட்சியம், மதிப்பு, பெருமை எல்லாமும்கூட எனக்கு மறந்துவிட்டது. பாதாளச் சிறையில் உயிர்பிழைத்து இருப்பதற்கு வெறுமனே அங்குமிங்கும் ஓடித் திரிந்த ஓர் எலியைப்போல நான் இருந்தேன்.

சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் என்னைச் சங்கிலியிலிருந்து விடுவித்திருந்தனர். என்னுடைய மன உறுதி தகர்க்கப்பட்டிருந்தது, ஆனால் வெளியே இருந்த காவலாளிகளின் காலடிகளை நான் தொடர்ந்து எண்ணிக் கொண்டிருந்ததன் மூலம் எனக்குப் பைத்தியம் பிடிக்காமல் இருக்கும்படி நான் பார்த்துக் கொண்டேன். நான் தப்பிக்க முயற்சித்தேன், ஆனால் அம்முயற்சியில் படுதோல்வி அடைந்தேன். கீழ்நிலையில் இருந்த காவலாளிகள் என்னை அடித்து உதைத்தனர். எனது சித்தரவதையை மேற்பார்வையிடுவதற்குக் கார்த்த வீர்யார்ஜுனன் வந்திருந்தால், நான் எனது அடி உதைகளைக் கண்டுகொண்டிருக்க மாட்டேன். அவனுக்கு அதிர்ச்சியூட்டுவதற்கான வார்த்தைகளை நான் ஏற்கனவே பல முறை ஒத்திகை பார்த்திருந்தேன். என்னால் எதையும் தாங்கிக் கொள்ள முடியும் என்பதையும், எனது மன உறுதியை யாராலும் ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது

என்பதையும் அவன் பார்க்க வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் அவன் வரவே இல்லை. வேறு எதுவொன்றையும்விட அது என்னை அதிகமாகக் காயப்படுத்தியது என்று நினைக்கிறேன். அந்த இருட்டான பாதாளச் சிறையில் நான் ஒரு குழந்தையைப்போல அழுதேன். நான் இழந்திருந்த எனது புகழுக்காகவும், எனது விடுதலைக்காகவும், எனது லட்சியங்களுக்காகவும் நான் அழுதேன். சில சமயங்களில், இலங்கையைப் பற்றியும், நான் கிட்டத்தட்ட மறந்து போயிருந்த என் மனைவி மண்டோதரியைப் பற்றியும் நினைத்தேன். பழுத்த மாம்பழங்களின் வாசனைக்காக நான் ஏங்கினேன். மஞ்சள் நிறப் பலாச்சுளைகளின் சுவை, பூரண நதியின் பிரம்மாண்டமான நீர்வீழ்ச்சிகளிலிருந்து தெறித்தத் தண்ணீர், வெள்ளை மணலின்மீது வந்து மோதிய அலைகள், நிலவொளி வீசிய ஓர் இரவில் அழகாக அசைந்தாடிய தென்னை மரங்கள், மல்லிகையின் நறுமணம், மற்றும் இன்னும் பலவற்றை நான் நினைத்துப் பார்த்தேன்.

அப்போது ஒருநாள், எனது நம்பிக்கை முழுவதும் எனக்குள் மடிந்து மண்ணோடு மண்ணாகி மக்கிப் போயிருந்தபோது, வெளியுலகிற்கான கதவு திறந்தது. என்னை வழியனுப்புவதற்காக, கார்த்த வீர்யார்ஜுனனின் வீரர்களும் சேவகர்களும் ஓர் இகழ்ச்சிப் பார்வையுடன் பாதாளச் சிறைக்கு வெளியே வரிசையாக நின்றனர். பகல் வெளிச்சம் என் கண்களைத் தாக்கியதால் நான் என் கண்களை மூடிக் கொண்டேன். பார்வையற்ற ஒருவனைப்போல நான் தட்டுத்தடுமாறி என் சுதந்திரத்திற்குள் அடியெடுத்து வைத்தேன். என் மனம் ஆவேசமாக இருந்த அக்கணத்தில், பழிக்குப் பழி வாங்குவதென்று நான் உறுதியெடுத்திருக்க வேண்டும். என் பகைவனைப் பழி தீர்ப்பதற்கு நான் ஒரு திட்டம் தீட்டியிருக்க வேண்டும். ஆனால், ஒரு சவரக் கத்தியைப் பெறுவதைப் பற்றி மட்டுமே என் மனம் சிந்தித்தது. என் தாடி மிக நீளமாகவும் மோசமாகவும் வளர்ந்திருந்தது. நான் உடனடியாகச் சவரம் செய்ய வேண்டியிருந்தது. அக்கணத்தில் வேறு எந்த எண்ணமும் என் மனத்தில் தோன்றாமல் போனது குறித்து இப்போதுகூட நான் அவமானமாக உணர்கிறேன்.

நான் என் முகாமிற்குத் திரும்பி வந்தபோது, யாரும் என்னைக் கண்டுகொள்ளவில்லை. அவர்களைப் பொறுத்தவரை, இனி நான் அவர்களது அரசன் அல்ல. நான் என் காதலியையும் என் குழந்தையையும் எல்லா இடங்களிலும் தேடினேன். என்னுடைய மந்திரிகளில் எவரையும் எதிர்கொள்ள நான் பயந்தேன். இலங்கைக்குத் திரும்பிச் செல்வதற்கான தயாரிப்பு வேலைகளை மேற்பார்வையிடுவதில் அவர்கள் அனைவரும் மும்முரமாக இருந்தனர்.

நம்பிக்கை இழந்திருந்த நான், இறுதியில் மாரீசனைப் பிடித்து, வேதவதியைப் பற்றிய தகவல்களை அவனிடம் அதிகாரமாகக் கேட்டேன், பிறகு அவனிடம் கெஞ்சினேன்.

“ராவணா, உன் மனத்தைத் தேற்றிக் கொள்.” பெருமையற்ற விதத்தில் நான் திரும்பி வந்ததிலிருந்து நான் எது குறித்து பயந்து கொண்டிருந்தேனோ, அதை அவனது வார்த்தைகள் உறுதிப்படுத்தின. நான் மனம் தளர்ந்து, என் தலையை என் கைகளில் பிடித்தபடி கீழே அமர்ந்தேன்.

“எப்படி நடந்தது? எப்போது நடந்தது?” என்று நான் திக்கித் திணறிக் கேட்டேன்.

“இக்காடுகளில் பலர் நோய்வாய்ப்பட்டனர், பலர் இறந்துவிட்டனர். அவளும் குட்டி இளவரசியும் அதே நோய்க்கு இரையாகிவிட்டனர். ஒரு நாட்டு வைத்தியரிடம் அவர்கள் கூட்டிச் செல்லப்பட்டனர், ஆனால் பாதி வழியிலேயே காய்ச்சலுக்கு அவர்கள் இருவரும் பலியாகிவிட்டனர்,” என்று கூறிவிட்டு, மாரீசன் தன் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டான்.

நான் அழுதேன். நான் இனிமேலும் பாசாங்கு செய்யத் தேவையிருக்கவில்லை. நான் ஒரு சாம்ராஜ்யத்தையோ அல்லது புகழையோ விரும்பவில்லை. அசுர இனம் தன்னைத் தானே பார்த்துக் கொள்ளட்டும். பிரஹஸ்தனோ அல்லது வித்யுத்ஜீவனோ, யார் வேண்டுமானாலும் அரச பதவியை எடுத்துக் கொள்ளட்டும். நான் இப்படி என்னவெல்லாமோ உளறினேன். மாரீசனின் சூடான கண்ணீர்த் துளிகள் என் தோளின்மீது விழுந்தன. அப்போது வேதனையோடுகூடிய ஒரு சந்தேகம் என்னுள் எழுந்தது. பிறகு, “இல்லை, அது உண்மையாக இருக்க முடியாது. மாரீசன் என்னுடைய நண்பன். அது நிகழ அவன் ஒருபோதும் அனுமதித்திருக்க மாட்டான்,” என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். நான் என்னை அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டு, “யார் அவளை வைத்தியரிடம் அழைத்துக் கொண்டு போனது?” என்று அவனிடம் கேட்டேன்.

மாரீசனின் கண்கள் உற்சாகமிழந்திருந்தன. அங்கிருந்த சுவரில் ஒரு குறிப்பிட்ட இடத்தை வெறித்துப் பார்த்தபடி அவன் எதையோ முணுமுணுத்தான். “யாரோ ஒரு வீரன் . . . யாரென்று விசாரித்து நான் உன்னிடம் கூறுகிறேன். ஆனால் அதை நீ மறந்தாக வேண்டும் . . .”

“முடியாது!” என்று நான் கத்தினேன். “யார் அவளை வைத்தியரிடம் அழைத்துச் சென்றது என்று என்னிடம் கூறு.” நான் மாரீசனை உலுக்கினேன். அவனது கண்களில் இருந்த பயத்தை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. ஆனால் அவனது உதடுகள் இறுக்கமாக

மூடியிருந்தன. அவன் என் பார்வையைத் தவிர்த்தான். “பத்ரனா?” என்று நான் உரத்தக் குரலில் கேட்டேன். சபிக்கப்பட்ட அந்தப் பெயரை நான் உச்சரித்தபோது, என் வயிற்றில் ஒரு பயம் பரவியது.

சிறிது நேரம் மௌனம் நிலவியது. பிறகு அவன் மீண்டும், “ராவணா, தயவு செய்து . . . அதை மறந்துவிடு . . .” என்று கூறினான்.

நான் அவனை விலக்கித் தள்ளிவிட்டு வெளியே ஓடினேன். நான் என் வாளை உருவிக் கொண்டு, பத்ரனை உரக்க அழைத்தேன். ஒரு மரத்தின் அடியில் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்த ஒருசில வீரர்கள் தங்கள் தலைகளைத் திருப்பி என்னைப் பார்த்தனர். என் கையில் இருந்த வாளைக் கண்டவுடன், அவர்கள் வேகமாக எழுந்து நின்றனர். அவர்களில் ஒருவன் அங்கிருந்து ஓடிச் சென்று, பிறகு ஒருசில நிமிடங்களில் திரும்பி வந்து, என் முன்னால் குனிந்து, “அரசே, பத்ரன் வந்து கொண்டிருக்கிறான்,” என்று கிசுகிசுத்தான். அவன் என்னை மரியாதையாக அழைத்த விதம் எப்படியோ எனக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. ஒருவன் என்னை அரசன் என்று அழைத்து நீண்டகாலம் ஆகியிருந்தது. ஒருவேளை என் கையில் இருந்த வாள் அதற்குக் காரணமாக இருந்திருக்கக்கூடும். “நான் என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்? ஒரு கீழ்நிலை வீரன் என்னிடம் மரியாதையாக நடந்து கொண்டவுடன், நான் என் காதலியின் மரணத்தையும் என் குழந்தையின் மரணத்தையும் மறந்து, கீழ்த்தரமாக நடந்து கொள்ளும் அளவுக்கு அதிகார வெறி என்னை ஆட்கொண்டுள்ளதா?”

அந்தத் தந்திரக்கார பத்ரன் என்னிடம் வருவதற்குள், மீண்டும் என்னுள் கோபத்தை வரவழைத்துக் கொள்வதற்கு நான் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது. அவன் தனது பாம்புக் கண்களுடன் என்னைப் பார்த்த விதம் என்னை அசௌகரியமாக உணரச் செய்தது. நான் திரும்பிக் கொண்டு, என்னைப் பின்தொடர்ந்து வருமாறு அவனுக்குக் கட்டளையிட்டேன். அவனது பயத்தை என்னால் உணர முடிந்தது. மக்கள் இன்னும் என்னைக் கண்டு பயந்தனர் என்பதை நினைத்து உள்ளூர ரகசியமாக நான் மகிழ்ந்தேன். நான் எனது முகாமிற்குள் நுழைந்தவுடனேயே, பத்ரனின் தொண்டையைப் பிடித்து, எனது வாளை அதில் அழுத்திப் பிடித்தேன். அதிலிருந்து ஒரு சொட்டு ரத்தம் வழிந்தது. அவன் பயந்து போய், சம்பந்தமில்லாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக உளறத் துவங்கினான். “வேதவதியையும் என் கைக்குழந்தையையும் நீ என்ன செய்தாய்?” என்று நான் கத்தினேன்.

அவன் தேம்பத் துவங்கி, எனது மன்னிப்பை யாசித்து நின்றான். வேதவதிக்கும் என் குழந்தைக்கும் என்ன நேர்ந்தது என்று அவன்

என்னிடம் கூறியபோது நான் ஒரு தூணைப்போல அங்கு நின்றேன். நடந்துவிட்டிருந்த பயங்கரம் என்னை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. அவர்கள் இருவரும் இறந்து போய்விட்டதாக நான் பயந்திருந்தேன், ஆனால் பத்ரன் என்னிடம் கூறிய விஷயம் எனக்கு ஆழ்ந்த வருத்தத்தையும் அதிர்ச்சியையும் ஏற்படுத்தியது. என் காலடியில் விழுந்து கிடந்த அவனை எட்டி உதைக்க வேண்டும்போல எனக்குத் தோன்றியது, ஆனால் அவன் ஒரு மலைப்பாம்பைப்போல என் கால்களை இறுக்கமாகப் பற்றியிருந்தான். அவனது தொடர்ச்சியான புலம்பல்களுக்கும் புரிந்து கொள்ள முடியாதபடி அவன் ஏற்படுத்திய சத்தங்களுக்கும் இடையே, அவன் கூறிய சில விஷயங்கள் என் மனத்திற்குள் நுழைந்தன. நான் அவற்றைப் புரிந்து கொள்ள முயற்சித்தேன். மெல்ல மெல்ல அது எனக்குப் புரிபட்டது. “என் மகள் சாகவில்லை. தேவர்கள் குலத்தைச் சேர்ந்த ஓர் அன்பான அரசன் அவளைத் தத்தெடுத்திருக்கிறான். இப்போது அவள் ஓர் இளவரசியாக வளர்ந்து கொண்டிருக்கிறாள்.”

ஒரு கணநேரம் நான் மகிழ்ச்சி அடைந்தேன். என் மகள் உயிரோடு இருந்தாள். ஆனால் அவள் இப்போது எனது எதிரியின் இளவரசியாக இருந்தாள். ஒரு புதிய ஆற்றல் என்னுள் பெருக்கெடுத்தது. எனது படையைத் திரட்டி, ஜனகனின் ராஜ்யத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்று, அவனது படைகளைத் தகர்த்தெறிந்து, அவனது ராஜ்யத்தைச் சூறையாடி, எனது மகளைத் திரும்பப் பெறுவேன். அவள் ஓர் அசுரப் பேரரசி. எந்தவொரு தேவ அரசனாலும் அவளை என்னிடமிருந்து பறிக்க முடியாது. அவள் இலங்கையின் இளவரசி. அவள் ஓர் அசுர இளவரசியாகத்தான் வளர வேண்டும். பிறகு திடீரென்று நான் பயந்தேன். அவளை மீட்பதற்கு நான் என்னுடைய வலிமையைத் திரும்பப் பெற வேண்டியிருந்தது. “எனது படை போதுமான அளவு வலிமையானதாக இருந்ததா? முதலில், என்னிடம் படையென்று ஒன்று இருந்ததா?” நான் வெற்றி பெற்றாலும்கூட, பிரஹஸ்தன் அல்லது வித்யுத்ஜீவன் போன்ற விஷமிக்கப் பாம்புகள் எனது சாம்ராஜ்யத்தில் சுதந்திரமாக உலா வரும்போது, என் மகளின் பாதுகாப்பை என்னால் உறுதி செய்ய முடியுமா? நான் ஆதரவற்றவனாக உணர்ந்தேன். வெறுப்பு என்னுள் தலைதூக்கியது. நான் பத்ரனை ஓங்கி உதைத்தேன். இம்முறை அவனது மூக்கிலிருந்து ரத்தம் வந்தது. “கீழ்த்தரமான ஜந்து.” சில சமயங்களில், தேவர்கள் பின்பற்றிய சாதி அமைப்புமுறையில் ஏதோ அர்த்தம் இருந்ததாக எனக்குத் தோன்றியது. பத்ரனால் எப்படி எனக்குச் சமமானவனாக இருக்க முடியும்?

என் மகளைப் பற்றிய எண்ணங்கள் என் மனத்திற்குள் பாய்ந்து

வந்தன. “அவள் என்னைப்போல இருந்தாளா அல்லது மண்டோதரியைப்போல இருந்தாளா?” மண்டோதரியைப் பற்றிய எண்ணம் எனக்குப் பல இனிமையான விஷயங்களை நினைவுபடுத்தியது. பூரண நதிக்கரையிலும் காவிரி நதிக்கரையிலும் நாங்கள் கழித்த இனிமையான மாலைப் பொழுதுகள், மலர்கள் பூத்துக் குலுங்கிய மரங்களின் நறுமணம், மண்டோதரியின் மென்மையான உடல், மல்லிகையின் வாசம், குளிர்ந்த காற்றின் ஸ்பரிசம், நூற்றுக்கணக்கில் வட்டமிட்டுத் திரிந்த தேனீக்களின் ரீங்காரம், அணில்கள் பேசிக் கொண்ட சத்தம் . . .

அந்தக் கடைநிலை அசுரனின் பிடியிலிருந்து சிரமப்பட்டு நான் என்னை விடுவித்துக் கொண்டு, ஆற்றை நோக்கி நடந்தேன். நான் என் நினைவுகளுடன் தனிமையில் இருக்க விரும்பினேன். எனது விருப்பங்கள் எனது ஆன்மாவின் அழுகையில் கரைந்து போயின.



# 30
# பறிபோன இலங்கை

பத்ரன்

மத்திய இந்தியாவிலிருந்து நாங்கள் வெற்றுக் கைகளுடன் திரும்பினோம். எல்லோரும் எங்கள் அரசன்மீதும், எங்கள் படையினர்மீதும், எங்களது மந்திரிகள்மீதும், ஒருவர்மீது ஒருவரும் கோபமாக இருந்தனர். எங்கள் அரசன் விடுவிக்கப்படுவதற்கு முன்பே, வித்யுத்ஜீவன் சில மந்திரிகளோடு சேர்ந்து இலங்கைக்குப் பயணமாகியிருந்தான். அவன் மாலாவுடனான தொடர்பைப் புதுப்பித்திருப்பான் என்று நான் உறுதியாக நம்பினேன். அது குறித்து நான் பொறாமை கொண்டேன். மாலா ஒரு கயவனை வரவேற்றுக் கொண்டிருந்தபோது, நான் ஒரு முட்டாள் அரசனிடம் மாட்டிக் கொண்டு விழித்தேன். மாலாவைப் பற்றிய நினைப்பு இந்தப் படையெடுப்பு நெடுகிலும் என்னைத் தொந்தரவு செய்து வந்திருந்தது, ஆனால் வித்யுத்ஜீவன் இலங்கைக்குப் புறப்பட்டுச் சென்றபோதுதான் நான் அதிகமாகக் கவலைப்பட்டேன். அதோடு கூடவே, தோல்வியுணர்வும், இப்படிப் பிச்சைக்காரத்தனமான விதத்தில் இலங்கைக்குத் திரும்பிச்

சென்றது குறித்து அதன் குடிமக்கள் எங்களுக்குக் கொடுக்கவிருந்த கோபமான வரவேற்பும் என் கவலையை அதிகரித்தன. வேதவதிக்கு நேர்ந்திருந்த கதிக்கு என்மீது மட்டுமே குற்றம் சுமத்தப்பட்டது என்னை மனச்சோர்வுக்கு ஆளாக்கியது.

இலங்கைக்குத் திரும்பிச் சென்ற வழியில், நாங்கள் இன்னொரு அவமானத்தையும் தேடிக் கொண்டோம். விந்திய மலைத்தொடரின் தெற்கு அடிவாரங்களில், அரைச்சாதியினனான வாலி ஆண்டு வந்தான். பேராற்றல் வாய்ந்த அவனை எல்லோரும் வானர அரசன் என்று இழிவாக அழைத்தனர். அவனது மக்கள் வானரர்கள் என்று அழைக்கப்பட்டனர். அசுர மற்றும் தேவ இனங்களின் கலப்பு அவர்கள். ஆனால் இரு இனங்களுமே அவர்களை வெறுத்து ஒதுக்கி வைத்தன. வானர இனத்தோருக்கு இடையேயான சச்சரவுகளைத் தகர்த்து, வானர இனத்தை வாலி ஒன்றுசேர்க்கும்வரை, அவர்கள் அவ்விரு நாகரீகங்களின் விளிம்பின்மீது வாழ்க்கை நடத்தினர். கிஷ்கிந்தையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வானர இனத்தினர், வடக்கிலிருந்த தேவ சாம்ராஜ்யங்களுக்கும் தெற்கிலிருந்த அசுர சாம்ராஜ்யங்களுக்கும் ஓர் அச்சுறுத்தலாக உருவாயினர். வானரர்கள் தங்களை மத்திய இந்தியாவின் காடுகளுக்குள் மட்டுப்படுத்திக் கொண்டிருந்ததால், கடற்கரை வழியாக நாங்கள் வடக்கு நோக்கிப் படையெடுத்தபோது அவர்களை நாங்கள் எதிர்கொள்ளவில்லை.

வானர அரசனான வாலியின் இளைய சகோதரன் சுக்ரீவன், வாலியின் எதிரி என்ற விஷயமும், அனுமானைப் போன்ற மதிப்புவாய்ந்த மிகப் பெரிய வீரர்கள் வாலியைக் கைவிட்டுவிட்டு சுக்ரீவனுடன் போய்ச் சேர்ந்து கொண்ட விஷயமும், எள்ளளவு மதிப்பையேனும் சம்பாதிப்பதற்குச் சிறிது வெற்றியைத் தேடித் தவித்துக் கொண்டிருந்த எங்கள் அரசனைத் தூண்டியிருக்கக்கூடும். ராவணன் ஒரு பிச்சைக்காரனாக ஆகியிருக்கவில்லை, ஆனால் அவரது பதவி மிகவும் ஆபத்தான நிலையில் இருந்தது. பிரஹஸ்தனோ அல்லது வித்யுத்ஜீவனோ தனது இடத்தை எடுத்துக் கொள்வார்கள் என்ற நிரந்தர பயத்துடன் அவர் வாழ்ந்தார். அவர்கள் தனக்கு முன்பாக இலங்கைக்குப் புறப்பட்டுச் சென்றிருந்தது, அவருக்குப் பெரும் சந்தேகத்தையும் பதற்றத்தையும் ஏற்படுத்தியது. எனவே, தனது இழந்த புகழை மீட்டெடுப்பதற்குக் கிஷ்கிந்தையைத் தாக்குவதென்று அவர் தீர்மானித்தார்.

உற்சாகமிழந்திருந்த எங்கள் படை, ஓர் அமாவாசை நாளன்று கிஷ்கிந்தையின்மீது தாக்குதல் நடத்தியது. ஆனால் நாங்கள் எந்தத் தாமதமுமின்றித் தோற்கடிக்கப்பட்டோம். நாங்கள் சுலபமாகச்

சரணடைந்தோம். அடுத்த நாள் காலையில், அந்த வானர அரசன் தனது பிணைக்கைதிகளைப் பார்க்க வந்தபோது, தன்மீது தாக்குதல் நடத்தியிருந்தது அசுரப் படை என்பதைக் கேள்விப்பட்டு ஆச்சரியமடைந்தான். நாங்கள் இரவில் கொள்ளையடிக்க வந்திருந்த சாதாரணக் கொள்ளைக்காரர்கள் என்று தான் நினைத்திருந்ததாக அவன் எங்களிடம் கூறியபோது, எண்ணற்றச் சண்டைகளில் நாங்கள் அடைந்திருந்த அனைத்துக் காயங்களையும்விட அதிகமான வேதனையை அது எங்களுக்குக் கொடுத்தது. அவன் எங்களை ஆதரவோடு கையாண்ட விதம், எங்களை அதிகமாக இழிவுபடுத்துவதாக இருந்தது. அவன் எங்கள் அனைவரையும் சம அளவு மரியாதையுடன் நடத்தினான். எங்களுக்கு ஏற்பட்ட அசௌகரியத்திற்காக அவன் எங்களிடம் மன்னிப்பும் கேட்டான். பிறகு, கௌரவமான விருந்தினர்களைப்போல அவன் எங்களை உபசரித்தான். நாங்கள் வயிறு புடைக்கச் சாப்பிட்டோம், மூக்கு முட்டக் குடித்தோம். வானர மேளங்களின் இசைக்கு ஏற்பக் காலைவரை நடனமாடினோம். பொழுது விடிந்தபோது, நாங்கள் எங்கள் அவமானத்தை மறந்துவிட்டு, வானரர்களின் நெருங்கிய நண்பர்களாக ஆகியிருந்தோம். வானரர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே ஒரு நிரந்தரமான நட்பு நீடிக்கும் என்று நாங்கள் உறுதிமொழி எடுத்துக் கொண்டோம். பிறகு நாங்கள் அந்த வானர தேசத்தைவிட்டுப் புறப்பட்டபோது, சில சுவாரசியமான காட்சிகளைக் கண்டோம். எங்கள் அரசனான ராவணன், வானர அரசனைக் கட்டியணைத்துக் கொண்டிருந்ததையும், அந்த வானர அரசன் எங்கள் அசுர அரசனுக்கு அறிவுரை கொடுத்துக் கொண்டிருந்ததையும் நாங்கள் பார்த்தோம். நாங்கள் அனைவரும் மிகுந்த உற்சாகத்துடனும் மன உறுதியுடனும் அந்த இடத்திலிருந்து வெளியேறினோம். அந்த வானர ராஜ்யத்துடன் நிரந்தர நட்பு உடன்படிக்கை ஒன்று கையெழுத்தாகியிருந்தது என்பதையும், வாலி எங்கள் அரசனின் நண்பனாகவும் தத்துவவியலாளராகவும் வழிகாட்டியாகவும் ஆகியிருந்தான் என்பதையும் நான் ஒட்டுக் கேட்டேன். எளிய மனம் கொண்ட என்னைப் போன்ற ஒருவனுக்கு அது சுவாரசியமாகவும், என் புரிதலுக்கு அப்பாற்பட்டதாகவும் இருந்தது. அடுத்த வேளைச் சாப்பாடுதான் எனது முக்கியக் கவலையாக இருந்தது.

இந்தியாவின் தெற்குக் கடற்கரையை அடைவதற்கு எங்களுக்குக் கிட்டத்தட்ட ஒரு மாதகாலம் ஆனது. கடலைக் கடந்து சென்று, எங்களது அன்புக்குரிய தீவை விரைவாக அடைய வேண்டும் என்று நாங்கள் அனைவரும் விரும்பினோம். ஆனால் எங்களை இந்தியாவிற்குக் கூட்டி வந்திருந்த வருணனின் கப்பல்கள் எங்கள் கண்களில் தென்படவே

இல்லை. நாங்கள் பதினைந்து நாட்கள் காத்திருந்தோம். ஒவ்வொரு நாள் கடந்தபோதும் எங்களுடைய பதற்றம் அதிகரித்துக் கொண்டே போனது. இறுதியில், விஷயத்தைத் தன் கையில் எடுப்பதென்று எங்கள் அரசனான ராவணன் தீர்மானித்தார். மரங்களை வெட்டுமாறு அவர் எங்களுக்குக் கட்டளையிட்டார். விரைவில் ஒருசில படகுகள் எங்கள் வசம் இருந்தன. அது ஒரு துணிச்சலான திட்டம்தான், ஆனால் மாரீசன் இருப்புக் கொள்ளாமல் தவித்தான். இறுதியில், ஒருசில வீரர்கள் மட்டுமே இலங்கைக்குப் பயணிக்க வேண்டும் என்று அவன் பரிந்துரைத்தான். ராவணனை ஓரங்கட்டிவிட்டு, வித்யுத்ஜீவனோ அல்லது பிரஹஸ்தனோ இலங்கையின் அரசனாக ஆகியிருக்கக்கூடும் என்று அவன் பெரிதும் சந்தேகித்தான். பயண வேலைகள் நடந்து முடிந்தபோது, நாங்கள் முகாமிட்டிருந்த காவிரி நதியின் முகத்துவாரத்தில் இருந்த துறைமுகத்தை நோக்கிப் பல கப்பல்கள் வந்து கொண்டிருந்ததை நாங்கள் பார்த்தோம்.

காட்டுக்குள் சென்று ஒளிந்து கொள்ளுமாறு ராவணன் எங்களுக்குக் கட்டளையிட்டார். நாங்கள் மறைவாக இருந்தபடியே அக்கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தபடுவதைப் பார்த்தோம். கடற்கொள்ளையர்களின் அரசனான வருணனின் கப்பல்கள்தான் அவை. சரக்குகள் ஏற்றப்படும் வழக்கமான நாவாய்த்துறைகளில் அவை நங்கூரமிடப்படவில்லை. அவை போர்க்கப்பல்கள். ஆட்களுடன் சிறிய படகுகள் அக்கப்பல்களிலிருந்து நீருக்குள் இறக்கப்பட்டன. விரைவில் அவர்கள் நாங்கள் முகாமிட்டிருந்த கடற்கரையை நோக்கிக் கோபத்துடன் துடுப்புப் போட்டு வந்து கொண்டிருந்தனர். அவர்கள் வந்து சேர்வதற்காக நாங்கள் சுமார் அரை மணிநேரம் காத்திருந்தோம். அப்போது பிரஹஸ்தனும் ஒருசில காவலாளிகளும் எங்களை நோக்கி நடந்து வந்ததை நாங்கள் கண்டோம். ராவணனும் மாரீசனும் தாங்கள் மறைந்திருந்த இடங்களைவிட்டு வெளியே வந்தனர். தங்கள் கைகளில் வாள்களை ஏந்தியபடி அவர்கள் பிரஹஸ்தனை நோக்கிச் சென்றனர்.

பிரஹஸ்தன், நிமிர்ந்த தலையுடன் ராவணனை வெளிப்படையான வெறுப்போடு பார்த்தான். ராவணன் தனது முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார். மாரீசன் விரைவாகச் சுதாரித்துக் கொண்டு, பிரஹஸ்தனுக்கும் ராவணனுக்கும் இடையே நின்றான். பிரஹஸ்தன் சற்று விலகி, ராவணனின் முன்னால் குனிந்து பணிந்து எங்களை ஆச்சரியப்படுத்தினான். நாங்கள் அனைவரும் உற்சாகமாகக் கைதட்டி ஆர்ப்பரித்தோம். மாரீசன் திகைத்தான், பிறகு இனிமையாக ஆச்சரியப்பட்டான். அவன் பிரஹஸ்தனைக் கட்டியணைத்தான். ஒழுங்கை மறந்துவிட்டு, நாங்கள் வேகமாக முன்னால் ஓடினோம்.

பிரஹஸ்தன் அசௌகரியமாக உணர்ந்தான், ஆனால் மாரீசன் அவனுக்கு மீண்டும் உறுதியளித்துவிட்டு, என்ன நிகழ்ந்திருந்தது என்று அவனிடம் கேட்டான்.

பிரஹஸ்தன் சிறிது தயக்கத்துடன், மாரீசனைப் பார்த்து, "ராவண — அதாவது, அரசனையும் உன்னையும் விட்டுவிட்டு வித்யுத்ஜீவனுடன் இலங்கைக்குச் செல்வதென்று நான் தீர்மானித்தது ஒரு பெரும் தவறு என்று நான் நினைக்கிறேன். நான் அந்தக் கயவனை எப்போதுமே சந்தேகித்து வந்திருந்தேன், ஆனால் அவன் எவ்வளவு தூரம் தன்னைத் தரம் தாழ்த்திக் கொள்வான் என்பது என் புரிதலுக்கு அப்பாற்பட்டு இருந்தது. நாங்கள் இலங்கையை அடையும்வரை அவன் இனிமையாகவும் நயமாகவும் நடந்து கொண்டான். ஆனால் நாங்கள் இலங்கையில் கால் வைத்தவுடனேயே, நீங்கள் திரும்பி வரும்வரை ஒரு தற்காலிக அரசனை நியமிக்க வேண்டும் என்று நச்சரிக்கத் துவங்கினான். அசுரப் பாரம்பரியத்தில், அரச பதவி என்பதே ஒரு புதிய கோட்பாடு என்று நான் அவனிடம் வலியுறுத்தினேன்," என்று கூறினான். பிறகு அவன் ராவணனைப் பார்த்தான். ராவணன் பிரஹஸ்தனின் கண்களைத் தவிர்த்தார். பிரஹஸ்தன் தொடர்ந்தான். "ஆனால் அவன் நயவஞ்சகமாகப் பேசி மக்களை ஏமாற்றுவதில் வல்லவன் என்று உங்கள் எல்லோருக்குமே தெரியும். உயர்மட்டக் குழுவின் பிற உறுப்பினர்களுக்கு அவன் லஞ்சம் கொடுத்தான், அவர்களை அச்சுறுத்தினான், அவர்களைத் தாஜா செய்தான். ஜம்புமாலியும் நானும் மட்டுமே மறுப்புத் தெரிவித்தோம். அவனது யோசனையை எதிர்க்கும் விதமாக நான் உயர்மட்டக் குழுவிலிருந்து ராஜினாமா செய்துவிட்டேன். நான் அரசியலைவிட்டே ஒட்டுமொத்தமாக ஒதுங்கியிருப்பேன். ஆனால் புதிய அரசனான வித்யுத்ஜீவன் ஒரு கொடுங்கோலாட்சி நடத்தி வருகிறான். அவனது பெரும்பாலான நடவடிக்கைகள் தேவையற்றவையாக உள்ளன. மூன்று மாதங்களில், தான் விரும்பியபோதெல்லாம் வரிகளை அதிகரித்து, நாட்டின் பொருளாதாரத்தை அவன் சீரழித்துவிட்டான். சூறையாடுவதற்கு அவன் வருணனுக்கு முழுச் சுதந்திரத்தைக் கொடுத்தான். அப்படிக் கொள்ளையடிக்கப்பட்டப் பணத்தை அவர்கள் இருவரும் பங்கு போட்டுக் கொண்டனர். இப்போது சில கருத்து வேறுபாடுகளால் அவர்கள் பிரிந்துவிட்டனர். வருணன் ராவண — அதாவது, அரசனுக்காகக் கப்பலில் காத்துக் கொண்டிருக்கிறான். கடற்படைக்கு நமது அரசன் பொறுப்பேற்க வேண்டும் என்று அவன் விரும்புகிறான். அவன் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருக்கிறான்."

ராவணன் இப்போது முன்னால் வந்து, பிரஹஸ்தனிடம், "ஆனால்

எனது சகோதரர்கள், என் மனைவி மற்றும் என் சகோதரியின் நிலை எப்படி உள்ளது?" என்று கேட்டார். அவரது குரலில் பதற்றமும் அக்கறையும் தொனித்ததை எங்களால் உணர முடிந்தது.

"அரசே, உங்கள் சகோதரி பாதுகாப்பாக இருக்கிறாள், ஆனால் மிகவும் மகிழ்ச்சியற்று இருக்கிறாள். அவள் இன்னும் தன் கணவனின்மீது தீராத காதல் கொண்டுள்ளாள். குன்றுகளில் உள்ள ஒரு மறைவான இடத்திற்கு நான் உங்கள் மனைவியைக் கூட்டிச் சென்றுவிட்டு, பிறகு அவரது தந்தையிடம் அவரை அனுப்பி வைத்துவிட்டேன். இளவரசன் கும்பகர்ணனைப் பற்றித்தான் எங்களுக்குப் பெரும் கவலையாக உள்ளது. வித்யுத்ஜீவனின் கொடுங்கோலுக்கு எதிராகக் குரல் எழுப்பிய ஒரே ஆண்மகன் அவன் மட்டும்தான். அரசே, இதைக் கூறுவதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். அவன் துணிச்சலானவன்தான், ஆனால் மிக எளிதில் உணர்ச்சிவசப்பட்டுவிடுகிறான். ஆனாலும் அவன் ஒரு வெகுளி. அவன் தனது நண்பர்களால் நம்பிக்கைத் துரோகத்திற்கு ஆளாகி, சிறைப்படுத்தப்பட்டு, சித்தரவதைப்படுத்தப்பட்டு, எமலோகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டுவிட்டான். அவன் சாகவில்லை. சாயத்ரி மலையின் கிழக்குப் பகுதியில், காட்டினுள்ளே வெகு தூரத்தில், எமன் என்ற ஒரு கொள்ளைக்காரன் விஷத் திரவங்களையும் மது வகைகளையும் காய்ச்சுகிறான், மூலிகைகளையும் போதை மருந்துகளையும் தயாரிக்கிறான். வித்யுத்ஜீவன் அவனது சீடர்களில் ஒருவனாக இருந்தான். எமனின் பரிசோதனைகளுக்காக வித்யுத்ஜீவன் ஓர் அசுர இளவரசனைத் தனது குருவிற்கு வெகுமதியாகக் கொடுத்திருக்கிறான். இளவரசன் கும்பகர்ணன் இப்போது அங்குதான் இருக்கிறான்."

ராவணன் இப்போது கோபத்தில் கொதித்துக் கொண்டிருந்தார். மாரீசன் அவரது தோளில் ஆறுதலாகக் கை வைத்தார், ஆனால் ராவணன் அதை வேகமாகத் தட்டிவிட்டுவிட்டு, "போருக்குத் தயாராகுங்கள். அந்தக் கபடதாரியை நாம் சிறைபிடித்தாக வேண்டும்," என்று கத்தினார்.

திடீரென்று அங்கு ஒரு சலசலப்பு ஏற்பட்டது. இப்போது எங்களுக்கு ஒரு குறிக்கோள் இருந்தது. ஒரு தனிமனிதனின் புகழுக்கான ஓர் அர்த்தமற்ற யுத்தமல்ல இது. எங்களுடைய சகோதர சகோதரிகளையும், எங்கள் மனைவியர் மற்றும் குழந்தைகளையும் ஒரு கொடுங்கோலனின் கைகளிலிருந்து விடுவிப்பதற்கான ஒரு யுத்தம் இது. நான் மாலாவைப் பற்றிக் கவலைப்பட்டேன்.

அப்போது பிரஹஸ்தன் தன் கையை உயர்த்தினான். ஒருசில

நொடிகளுக்குப் பிறகு, அங்கு ஓர் ஆழ்ந்த அமைதி நிலவியது. “அரசே, முதலில் நாம் இளவரசன் கும்பகர்ணனை விடுவிக்க வேண்டும். அந்தக் கயவனின் பரிசோதனைகளுக்கு உட்படுத்தப்பட்டப் பிறகு இளவரசனின் நிலைமை எப்படி இருக்கிறது என்று நமக்குத் தெரியாது.”

அதற்கு பதிலளிப்பதற்கு முன்பு ராவணன் ஒருசில நொடிகள் காத்திருந்தார். பிறகு லேசாகத் தலையைக் குனிந்து வணங்கிவிட்டு, “பிரதம மந்திரியே, உனது அறிவார்ந்த ஆலோசனையையும் உனது ஞானத்தையும் நான் மதிக்கிறேன். நான் உன் வழிகாட்டுதலின்படி நடக்கிறேன்,” என்று கூறினார். பிறகு, முகத்தில் மகிழ்ச்சி பொங்க நின்று கொண்டிருந்த மாரீசனைத் திரும்பிப் பார்த்து, “மாமா, நமது நண்பனான அரசன் வாலியிடம் ஒரு தூதுவனை அனுப்புங்கள். போதை மருந்து அரசனான எமனை நாம் தீர்த்துக் கட்டுவதற்கு அவனது உதவி தேவை என்று அவனுக்குத் தகவல் கொடுங்கள். நமக்கு அவனது உதவி நிச்சயமாகத் தேவை,” என்று கூறினார்.

பிறகு, திடீரென்று ஏதோ யோசனை வந்தவராக, பிரஹஸ்தனைப் பார்த்து, “எங்களது இளைய சகோதரன் விபீஷணன் என்னவானான்?” என்று கேட்டார்.

பிரஹஸ்தன் தனது புன்னகையைக் கட்டுப்படுத்திக் கொண்டு, “அரசே, அவன் தனது சொந்தக் கைகளால் ஒரு சிறிய கோவிலை நிர்மாணித்து, அதற்குள் தன்னை அடைத்துக் கொண்டுள்ளான். இத்தீங்கிலிருந்து ரட்சித்து அருளுமாறு தேவக் கடவுளான விஷ்ணுவிடம் அவன் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறான். பிரார்த்தனையைத் தவிர அவன் வேறு எதுவும் செய்வதில்லை,” என்று கூறினான்.

ராவணன் வெறுப்புடன், “தூ!” என்று துப்பினார். எங்களில் பலர் அமைதியாகச் சிரித்தோம்.



# 31

## மரணக் குகை

ராவணன்

எங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களையும் குதிரைகளையும் ஆயுதங்களையும் வாங்குவதற்காக, மீன் கடவுளான மீனாட்சியின் புராதனக் கோவில் நகரமான மதுரையில் நாங்கள் ஒருசில நாட்கள் தங்கினோம். இந்தப் படையெடுப்பிற்கான அனைத்துச் செலவுகளையும் வருணன் ஏற்றுக் கொண்டான். ஆனால் நான் இலங்கையின் அரியணையை மீண்டும் கைப்பற்றியவுடன், அவனிடம் வாங்கிய பணத்தை ஏராளமான வட்டியுடன் அவனுக்குத் திருப்பித் தருவதாக ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. அந்தக் கடற்கொள்ளைக்காரனைச் சார்ந்திருக்க நான் விரும்பவில்லை, ஆனால் எனக்கு அப்போது வேறு என்ன வழி இருந்தது? மேலும், அந்த சாமர்த்தியமான கடற்கொள்ளைக்காரன், நான் மீண்டும் அரியணையைக் கைப்பற்றுவேன் என்று நினைத்தான் என்ற உண்மை எனக்குச் சிறிது நம்பிக்கையைக் கொடுத்தது. அவன் பந்தயம் கட்டிய விஷயங்களில் அவன் ஒருபோதும் தோற்றுப் போனதில்லை. ஆனால்

எங்களுடைய குறைபாடுகளை நான் நன்றாக அறிந்திருந்தேன். நாங்கள் மதுரையிலிருந்து புறப்பட்டு, மரணப் பள்ளத்தாக்கை அடைந்தோம்.

எமனின் கோட்டை, வானளாவ உயர்ந்திருந்த ஒரு மலையின் உச்சியின்மீது இருந்தது. அதன் மூன்று பக்கங்களைச் சுற்றிலும் செங்குத்தான பாறைகளுடன்கூடிய பள்ளத்தாக்கு இருந்தது. அது, திரிகோட்டாவில் இருந்த எனது கோட்டையைப்போல இருந்தது, ஆனால் அதிக இறுக்கமாகவும் மிக அதிக உயரத்திலும் இருந்தது. இந்த வறண்ட மலையின் கிழக்குப் பகுதியிலிருந்த புதர்ச்செடிகளிலும் சிறிய மரங்களிலும், அதன் மேற்குப் பகுதியிலிருந்த வளமான பசுமைக் காடுகளிலும் எமனின் வீரர்கள் மறைந்திருந்தனர். போதை மயக்கத்தில் இருந்த அவர்கள், தங்களது எல்லையைப் பாதுகாப்பதில் குறியாக இருந்தன. அபின் கலந்த திரவங்களைக் குடித்திருந்த அவர்கள், உடல்ரீதியான காயங்களைப் பொருட்படுத்தவில்லை, பயமும் அவர்களைத் தாக்கவில்லை. அச்சுறுத்தும் தோற்றத்தைக் கொண்ட அந்த இருண்ட கோட்டைக்குள் எங்கோ ஓரிடத்தில், ஓர் இருட்டான பாதாள அறையில், என் அன்புக்குரிய சகோதரன் கும்பகர்ணன், போதை மருந்து ஊட்டப்பட்டு மயங்கிக் கிடக்கக்கூடும் அல்லது ஒருவேளை இறந்து போயும் இருக்கலாம்.

ஓர் அமாவாசை நாளில் தாக்குதல் நடத்த நாங்கள் திட்டமிட்டோம். நள்ளிரவு தாண்டிய பிறகு, எங்களது படை அக்கோட்டையை முற்றுகையிட்டது. நாங்கள் அதுவரை சண்டையிட்டிருந்ததிலேயே மிகக் கடுமையான யுத்தம் அதுதான். எமனின் வீரர்கள் பயமற்றவர்களாக இருந்ததோடு, இம்மியளவுகூட மனிதத்தன்மையற்றவர்களாகவும் இருந்தனர். பொழுது விடிந்த நேரத்தில்தான் எங்களால் அக்கோட்டைக்குள் அத்துமீறி நுழைய முடிந்தது. அதற்குள், எங்கள் தரப்பில் நூற்றுக்கணக்கானவர்கள் கொல்லப்பட்டிருந்தனர். இதனோடு ஒப்பிடுகையில், வட இந்தியாவில் நாங்கள் மேற்கொண்ட படையெடுப்பை ஓர் உல்லாசப் பயணம் என்று கூறலாம். பயத்தில் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்த எங்கள் வீரர்கள்மீது, எமனின் வீரர்கள், உருக்கிய உலோகங்களைக் கொட்டினர். மிகப் பெரிய பாறாங்கற்களை பிரம்மாண்டமான கவண் இயந்திரங்களின் மூலம் எறிந்தனர். அவர்களது வில்வீரர்கள் குறி தவறாமல் துல்லியமாக எங்கள்மீது அம்புகளை எய்தனர். நிலைமை மிகவும் மோசமடைந்தது. அப்போது, கோட்டையின் மேற்குப் பகுதியிலிருந்து பிரஹஸ்தனின் படை எழுப்பிய வெற்றி முழக்கம் என் காதுகளில் விழுந்தது. அது எனக்கு வியப்பூட்டியது. மேற்குப் பகுதியைப் பற்றி நாங்கள் கவலைப்பட்டிருக்கவே இல்லை. அது, ஊடுருவிச் செல்ல முடியாத

மழைக் காடுகளால் சூழப்பட்டிருந்ததோடு, மிக மிகச் செங்குத்தாகவும் ஆபத்தானதாகவும் இருந்தது. மேலும், அது நாங்கள் முன்னேறிச் செல்வதைத் தடுத்திருக்கும், இரவுநேரத் தாக்குதலின் அனுகூலத்தை எங்களுக்கு மறுத்திருக்கும். எனவே, கோட்டையின் மேற்கு வாசலில் இருந்து வெற்றி முழக்கம் வந்தபோது, நான் ஆச்சரியப்பட்டேன். சுமார் ஒரு மணிநேரச் சண்டைக்குப் பிறகு, மற்ற மூன்று கதவுகளும் திறக்கப்பட்டன. எங்களது படை எல்லாப் பக்கங்களிலிருந்தும் எமனின் கோட்டைக்குள் புயலென நுழைந்தது. எங்கள் வழியில் குறுக்கிட்டவர்களை வெட்டிச் சாய்த்தபடி நாங்கள் முன்னேறினோம். சின்னாபின்னமாக்கப்பட்டுக் கிடந்த கைகள் மற்றும் கால்கள்மீதும், துண்டிக்கப்பட்டத் தலைகள்மீதும் எங்களுடைய குதிரைகள் ஏறி மிதித்துச் சென்றன. அது அருவருப்பாகவும் வெறுப்பூட்டுவதாகவும் இருந்தது. மனிதர்கள் மற்றும் விலங்குகளின் ரத்தம், சதை, மற்றும் கழிவுகளின் நெடி அங்கு நிரம்பியிருந்தது. நான் அந்த இடத்தைவிட்டு உடனடியாக வெளியேற விரும்பினேன்.

என்னை வழிமறித்த எம கிங்கரர்களைக் குத்திக் கிழித்தபடி நான் முன்னேறிக் கொண்டிருந்தபோது, என் மனம் அலைபாய்ந்தது. அர்த்தமற்ற இந்த அனைத்தையும் கண்டு எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. “நான் என் சகோதரனை விடுவித்து என்னுடன் கூட்டிச் செல்ல விரும்புகிறேன். ஆனால் உண்மையிலேயே நான் அதை விரும்புகிறேனா?” எல்லாப் பக்கங்களிலிருந்தும் என்னைத் தாக்கிக் கொண்டிருந்த எமனின் வீரர்களிடமிருந்து என் உயிரைப் பாதுகாத்துக் கொள்வதற்கு நான் எனது போர்த் திறமையின்மீது முழுமையான கவனம் செலுத்த வேண்டியிருந்தது என்றாலும்கூட, வினோதமாக, பல வருடங்களுக்கு முன்பு பிரஹஸ்தன் என்னிடம் கூறிய வார்த்தைகள் என் மனத்திற்குள் பாய்ந்து வந்தன. அவை கொடுமையான, துல்லியமான, இனிமையற்ற வார்த்தைகள். தனது குடும்பத்தினருக்குத் தான் ஆற்ற வேண்டிய கடமைகள் குறித்தும், தனது எதிர்காலத்தைப் பற்றியும் பல சுவாரசியமான யோசனைகளைக் கொண்டிருந்த ஓர் இருபத்து நான்கு வயது இளைஞனுக்கு, அவ்வார்த்தைகள் பேரிடியாக அமைந்தன. “நீ வெற்றியின்மீது ஆழ்ந்த விருப்பம் கொள்ளும்போது யாரையும் நம்பாதே. குறிப்பாக உனது உடன்பிறந்தவர்களை ஒருபோதும் நம்பாதே. ஏனெனில், அவர்கள்தான் உன்னுடைய பயங்கரமான எதிரிகளாக இருப்பார்கள்.”

வழக்கம்போல, நான் கேட்காமல் எனக்குக் கொடுக்கப்பட்ட அறிவுரை அது. பிரஹஸ்தனை நான் வெறுப்பதற்கு அது ஒரு கூடுதல் காரணமாக இருந்தது. ஆனால் இப்போது, என் சகோதரனின்

வாழ்க்கையைக் காப்பாற்றுவதற்கு நான் என் வாழ்க்கையைப் பணயம் வைத்துக் கொண்டிருந்தபோது, அந்த அறிவுரை என்னை உறுத்தியது. “நான் என் சகோதரனை நம்பலாமா?” அப்போது ஒரு விஷயம் எனக்குத் தெள்ளத் தெளிவாகப் புரிந்தது. இந்த யுத்தம், கும்பகர்ணனைக் காப்பாற்றுவதைப் பற்றியது அல்ல, மாறாக, என்னையும், சின்னாபின்னமாக்கப்பட்டிருந்த எனது பெருமையையும், தன்னம்பிக்கையையும், லட்சியத்தையும், எனது எதிர்காலத்தையும் காப்பாற்றுவதைப் பற்றியதுதான். நான் சுதாரித்துக் கொண்டு, ஒரு பதினாறு வயதுச் சிறுவனின் இதயத்திற்குள் எனது வாளைச் செருகுவதில் கவனம் செலுத்தினேன். அவனது முகமறியாத தாயாரைப் பற்றி நான் சிந்தித்தேன். ஆனால் அச்சிறுவனைப் பற்றியோ அல்லது அவனது தாயாரைப் பற்றியோ நான் சிறிதளவும் உணர்ச்சிவசப்படவில்லை.

இறுதியில், மாலை வேளை நெருங்கிக் கொண்டிருந்தபோது, நாங்கள் அக்கோட்டையை முற்றிலுமாகக் கைப்பற்றியிருந்தோம். எனது சகோதரன் கும்பகர்ணனைத் தேடும் படலம் தொடங்கியிருந்தது. என் உடலில் ஏற்பட்டிருந்த ஓராயிரம் வெட்டுக் காயங்களிலிருந்து ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. எனது குதிரையின்மீது நான் கிறங்கிப் போய் உட்கார்ந்தேன். இறந்து கொண்டிருந்த மனிதர்கள் மற்றும் விலங்குகளின் முனகல்களையும் மூச்சுத் திணறல்களையும் தவிர, அந்த இடம், அச்சுறுத்தும் விதத்தில் மிக அமைதியாக இருந்தது. ரத்த வாடை இப்போது எங்களுக்குப் பழக்கமாகியிருந்தது. அதை நாங்கள் கண்டுகொள்ளவில்லை. நான் பிரஹஸ்தனையும் மாரீசனையும் பார்த்துவிட்டு, அவர்களை நோக்கிச் சென்றேன். மாரீசன் புன்னகைத்தான், ஆனால் பிரஹஸ்தன் லேசாகக் குனிந்து பணிந்துவிட்டு, தேடல் குழுக்களுக்கு உத்தரவிட்டுக் கொண்டு தன் வேலையைத் தொடர்ந்தான். திடீரென்று, மாரீசன் என்னிடம் திரும்பி, “பிரஹஸ்தனின் யோசனைப்படிதான் நாங்கள் மேற்கிலிருந்து கோட்டையைத் தாக்கினோம். கோட்டைக்குள் அவனுடைய நண்பன் ஒருவன் இருந்தான். அவன்தான் மேற்கு வாசற்கதவை எங்களுக்காகத் திறந்துவிட்டான். யுத்தம் தொடங்கிய உடனேயே, நாங்கள் மேற்குப் பகுதிக்குச் சென்றுவிட்டோம். உண்மையில், யுத்தம் தொடங்குவதற்கு முன்பாகவே, பிரஹஸ்தன், நமது வீரர்கள் ஏராளமானோரை மேற்குப் பகுதியில் நிறுத்தியிருந்தான்,” என்று கூறினான்.

நான் கோபத்தில் குமுறினேன். நான் ஒரு சாதாரண வீரன்போலச் சண்டையிட வைக்கப்பட்டிருந்தேன். எதிரியின் கவனத்தைத் திசை திருப்புவதற்கான ஒரு கருவியாக எனது மந்திரிகள் என்னைப்

பயன்படுத்தியிருந்தனர். அந்த யோசனை எனக்கு உதித்திருக்கவில்லை என்பது என் கோபத்தை அதிகரித்தது. அதோடு, தவறாகப் போயிருக்கக்கூடிய ஆயிரக்கணக்கான விஷயங்கள் என் மனத்தை ஆக்கிரமித்திருந்தன. அப்போது, கோட்டையின் மேற்கு முனையிலிருந்து ஒரு பெரிய மகிழ்ச்சி ஆரவாரம் எழுந்தது. சில வீரர்கள், மிகப் பெரிய உருவத்தைக் கொண்ட ஒருவனைத் தங்கள் தோள்களில் சுமந்து கொண்டு, நடனமாடியபடி வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்ததால், அவர்கள் யாரைச் சுமந்து வந்தனர் என்பதைப் பார்ப்பது எனக்குச் சிரமமாக இருந்தது, ஆனாலும் என்னால் ஊகிக்க முடிந்தது. அவர்கள் எங்களை நெருங்கியபோது, கிட்டத்தட்ட உணர்விழந்த மயக்க நிலையில் இருந்த கும்பகர்ணன், எங்கள் வீரர்களின் கரிய தோள்களின்மீது அசைந்தாடிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். பார்ப்பதற்கு அக்காட்சி மிகவும் வேடிக்கையாக இருந்தது. நான் புன்னகைத்துவிட்டு மாரீசனைத் திரும்பிப் பார்த்தேன். அவனது முகம் பிரகாசமாக இருந்தது. பிரஹஸ்தன் தனது வழக்கமான கடுமையான பார்வையுடன் மாரீசனுக்குப் பக்கத்தில் நின்றான். அவன் ஏன் தனது திட்டத்தை என்னுடன் பகிர்ந்து கொண்டிருக்கவில்லை என்று நான் அவனைக் கேட்க விரும்பினேன். என் கோபம் வேகமாக என்னிடம் திரும்பி வந்தது. நான் அவனிடம் அக்கேள்வியைக் கேட்க எத்தனித்தபோது, மாரீசன் என்னைப் பார்த்துவிட்டு, என்னை நோக்கி அவசரமாக நடந்து வந்து, "நமக்கிடையே சில புல்லுருவிகள் இருந்ததாக நாங்கள் சந்தேகித்தோம். நான் உன்னிடம் இத்திட்டம் பற்றிக் கூற விரும்பினேன், ஆனால் அது உனக்குத் தெரியக்கூடாது என்று பிரஹஸ்தன் வலியுறுத்தினான். அது உனக்குத் தெரிந்தால், நீ இந்த யுத்தத்தை முன்னின்று நடத்தும்போது, முழுமனத்துடன் அதில் உன்னால் ஈடுபட முடியாது என்றும், எதிரி நமது தந்திரத்தை ஊகித்திருப்பான் என்றும் அவன் காரணம் கூறினான். எனவே, வீரமாகச் சண்டையிடுவதற்கு உன்னைத் தனியாக விட்டுவிட்டு, நாங்கள் யாருக்கும் தெரியாமல் பின்புறமாக உள்ளே நுழைந்தோம்," என்று என் காதில் கிசுகிசுத்தான்.

நான் ஏமாற்றப்பட்டதாக உணர்ந்தேன். அவர்கள் என்னைச் சிறுமைப்படுத்தியதாகவும், என்னிடம் சூழ்ச்சிகரமாக நடந்து கொண்டதாகவும் உணர்ந்தேன். "நான்தான் அரசன், ஆனால் இந்தக் கிழவர்கள் என்னோடு கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருக்கின்றனர்," என்று என் மனத்திற்குள் நான் பொருமினேன். எனக்கு அந்தக் கிழவர்களைப் பார்த்துக் கத்த வேண்டும்போல இருந்தது. அவர்களைப் பற்றி நான் என்ன நினைத்தேன் என்று நான்

அவர்களிடம் கூறவிருந்த நேரத்தில், பிரஹஸ்தன் என்னை நோக்கித் தன் தலையைத் திருப்பிப் புன்னகைத்தான். மாரீசனும் புன்னகைத்தான்.

"ராவணா, நாம் வென்றுவிட்டோம். நாம் மிகச் சிறப்பாகச் சண்டையிட்டிருக்காவிட்டால், நம்மால் ஒருபோதும் வெற்றி பெற்றிருக்க முடியாது," என்று அவன் தேவைக்கதிகமாகவே உரத்தக் குரலில் கூறினான்.

எங்கள் ஒட்டுமொத்தப் படையும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தது. எங்களது வீரர்கள் அலையலையாகத் தங்கள் ஆயுதங்களை உயர்த்தி, "ஹர ஹர மகாதேவா!" என்று முழக்கமிட்டனர். "சிவனுக்கு வெற்றி!" "பேராற்றல்மிக்க அசுர அரசனான ராவணனுக்கு வெற்றி!" "அசுரர்களுக்கு வெற்றி!" போன்ற முழக்கங்கள் விண்ணைத் தொட்டன.

என் இதயம் பெருமிதத்தால் நிரம்பியது. எனக்கு என்ன செய்வதென்று தெரியாததால், நானும் என் வாளை உயர்த்தினேன். எனது வீரர்கள் உற்சாகக் கூச்சலிட்டனர். திடீரென்று, "இந்த இரண்டு கிழவர்களுக்கும் நான் பெரிதாகக் கடமைப்பட்டுள்ளேன்," என்ற எண்ணம் என் மனத்தில் உதித்தது. ஆனால் என் கோபம் மீண்டும் தலைதூக்கியதை உணர்ந்த நான், என் மனத்தை மாற்றிக் கொண்டு, "மாமா, எமனின் படையிலிருந்து நமக்கு உதவிய உளவாளி யார்?" என்று கேட்டேன். ஆச்சரியத்தில் விரிந்த மாரீசனின் கண்களை நான் தவிர்த்தேன். நான் எனது வைர அட்டிகையை என் கழுத்திலிருந்து கழற்றி, "நான் அவனுக்கு வெகுமதி அளிக்க விரும்புகிறேன்," என்று கூறினேன்.

"ராவணா, உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?"

என் எரிச்சல் அதிகரித்தது. "ஒன்று, நீயாகக் கூறிவிடு, இல்லையென்றால் நானே அவனைத் தேடிக் கண்டுபிடித்துக் கொள்கிறேன்," என்று நான் அதிகாரமாகக் கூறினேன்.

மாரீசன் வருத்தமாகத் தலையசைத்துவிட்டு, "ராவணா, சில சமயங்களில் நீ என்னை ஆச்சரியப்படுத்துகிறாய். நாங்கள் இக்கோட்டைக்குள் நுழைந்த அடுத்தக் கணம், பிரஹஸ்தன் தனது வாளைச் செருகிய முதல் நபர் அவன்தான்," என்று கூறினான்.

எனது முகத்தில் தென்பட்ட அதிர்ச்சியைக் கண்ட அவன், "ராவணா, அரசியலின் ஓர் அடிப்படைப் பாடம் இது. ஒரு நம்பிக்கைத் துரோகியை ஒருபோதும் நம்பாதே — உனக்காக அவன் அந்தக் கீழ்த்தரமான காரியத்தைச் செய்திருந்தாலும்கூட. நாளைக்கு அவன் உனக்கு எதிராகத் திரும்பக்கூடும்," என்று கூறிச் சற்று நிறுத்திவிட்டு, பிறகு, "நீ அப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. எமன் தப்பியோடிவிட்டாலும்கூட, நாம் இந்த

யுத்தத்தில் வெற்றி பெற்றுவிட்டோம். உனது சகோதரனும் பத்திரமாக இருக்கிறான்,” என்று கூறினான்.

எனது வைர அட்டிகையை என் கை இறுக்கமாகப் பற்றியிருக்க, நான் ஒரு முட்டாளைப்போல உணர்ந்தேன். பிரஹஸ்தன் தன் தலையைத் திருப்பி என் கையிலிருந்த அட்டிகையைப் பார்ப்பதற்கு முன்பாக அதை நான் யாருக்காவது கொடுக்க விரும்பினேன். அவனது இகழ்ச்சிப் புன்னகையை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது. எனவே நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒரு வீரன், கோட்டைச் சுவரில் தனது முதுகைச் சாய்த்து, தனது கால்களை விரித்து கொண்டு அமர்ந்திருந்ததை நான் கண்டேன். அவனுக்கு மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. அவனது மூக்கின் ஒரு பகுதி அறுபட்டிருந்ததால், பார்ப்பதற்கு அவன் விகாரமாக இருந்தான். அவனது உடலில் பல இடங்களில் ஏற்பட்டிருந்த காயங்களிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவன்மீது எனக்குப் பரிதாபம் ஏற்பட்டது. இவன் எனக்காகத் துன்புற்றிருந்தான், கிட்டத்தட்டத் தன் உயிரைக் கொடுத்திருந்தான்.

நான் அவனுக்குச் சைகை காட்டினேன். ஒருசில நொடிகள் அவனால் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை. அவன் வெறுமனே திருதிருவென்று முழித்தான். பிறகு, அவனது முகத்தில் ஒரு கடுமையான பயம் தென்பட்டது. அவன் எழுந்திருக்க முயற்சித்தான், ஆனால் நிலை தடுமாறிக் கீழே விழுந்தான். பிறகு, காயப்பட்ட ஒரு நாயைப்போல அவன் என்னை நோக்கித் தவழ்ந்து வந்தான். எனக்கு வெறுப்பாக இருந்தது. நான் என் கையிலிருந்த வைர அட்டிகையைப் பார்த்தேன். இவனைப் போன்ற ஒரு கீழ்த்தரமானவனுக்கு இது மிகவும் அதிகம் என்று நான் நினைத்தேன். ஆனாலும், நான் என் மனத்தை மாற்றிக் கொள்வதற்குள், அதை அவனிடம் வீசினேன். அது அவனுக்கு ஒருசில அடிகளுக்கு முன்னால் போய் விழுந்தது. அவன் அதை வேகமாக எடுத்து, ஒரு குரங்கைப்போல முகர்ந்து பார்த்தான். “அவன் எனது பரிசை மதிக்கவில்லை. என்ன துணிச்சல் அவனுக்கு?” என்று நான் குமுறினேன். பிறகு, அது அவனது மனத்திற்குள் மெல்ல மெல்ல நுழைந்தது. அவன் என்னை அதிர்ச்சியோடு பார்த்தான். அது வெறுப்புக் கலந்த பார்வையோ என்று முதலில் நான் பயந்தேன். பிறகு அவன் எனக்கு நன்றி தெரிவிக்கும் விதமாக, என் முன்னால் குனிந்து வணங்கி, தரையை முத்தமிட்டான். அவனது உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் இறந்துவிடப் போவதாகத்தான் நான் நினைத்தேன். நான் அக்காட்சியை மிக சுவாரசியமாகக் கவனித்தேன். அவன் தன் தலையை மெல்ல உயர்த்தினான். கண்களில் கண்ணீருடன் அவன் என்னைப்

பார்த்துப் புன்னகைத்தான். அவனது முன்பற்கள் இரண்டு காணாமல் போயிருந்தன. பார்க்க அவன் அருவருப்பாக இருந்தான். அந்தப் பிச்சைக்காரனை எனக்குத் தெரியும் என்ற ஓர் எண்ணம் என்னை நச்சரித்துக் கொண்டிருந்தது. அருகில் சென்று அவனைப் பார்க்க விரும்பிய நான், என் குதிரையைச் சாட்டையால் லேசாகக் குத்தி, ஒருசில அடிகள் முன்னால் சென்றேன். பத்ரன்! "பாழாய்ப் போன இவன் ஏன் என் வாழ்வில் எப்போதும் குறுக்கிட்டுக் கொண்டே இருக்கிறான்?" நான் அந்த அட்டிகையை அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டு, அவனது அருவருப்பான முகத்தை எட்டி உதைத்து, அவனது கருத்த முதுகைச் சாட்டையால் பின்னியெடுக்க விரும்பினேன். ஆனால் அந்தப் பரிசை அவன் என்னிடமிருந்து வாங்கியபோது அவனிடமிருந்து வெளிப்பட்ட நன்றியுணர்வு என் மனத்திற்குள் வந்து என்னை அமைதிப்படுத்தியது. "சரி, போகட்டும்!" என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். சிறு சிறு பரிசுகளுக்கு அவனும் தகுதியானவன்தான். ஏதோ சரியான காரியம் ஒன்றைச் செய்திருந்த உணர்வு என்னுள் மேலோங்கியதில், நான் மகிழ்ச்சியாகவும் நிறைவாகவும் உணர்ந்தேன்.

பின்னர், கேளிக்கை விருந்து முடிந்து, நாங்கள் அனைவரும் ஓய்வெடுக்கச் சென்றோம். உறக்கம் வராமல் நான் என் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தபோது, பத்ரனின் நன்றிமிக்க முகம் என் நினைவிற்கு வரவில்லை, மாறாக, அவன் எனது பரிசை முதன்முதலில் தொட்டபோது அவனது முகத்தில் தோன்றிய வெறுப்புதான் என் நினைவிற்கு வந்தது. பிறகு, நிலை கொள்ளாமல் என் படுக்கையில் புரண்டு கொண்டு, அசுரர்களின் கரிய, அசிங்கமான முகங்களிலிருந்து எனது மனத்தை வலுக்கட்டாயமாக விலக்கி, எனது புகழ், லட்சியம், மற்றும் எனது எதிர்காலத்தின் பொன்வீதிகள் குறித்தக் கனவுகளை நோக்கி என் மனத்தைத் திசை திருப்பினேன்.



# 32

## நாட்டுப்பற்று மிக்கவன்

பத்ரன்

நாங்கள் இந்தியாவிலிருந்து திரும்பி வந்திருந்தோம். நாட்டைக் கொள்ளையடிப்பதில் மும்முரமாக இருந்த வித்யுத்ஜீவனையும் அவனது குழுவையும் தீர்த்துக்கட்டப் போவதாக ராவணன் அச்சுறுத்தியிருந்தார். அதிர்ச்சியடைந்த வித்யுத்ஜீவன், ஓர் அமைதி உடன்படிக்கையை முன்வைத்தான். ராவணன் தானாகவே வெற்றி கொண்டிருந்த இந்தியா முழுவதையும் ராவணனுக்குத் தர அவன் முன்வந்தான். இலங்கையின் தென்பகுதிகள் மட்டும் தனக்கு வேண்டும் என்று அவன் கோரினான். ஆனால் ஒட்டுமொத்த ராஜ்யத்தையும் திருப்பி எடுத்துக் கொள்ள ராவணன் விரும்பினார், ஆனால் சூர்ப்பனகையின் விருப்பங்கள் எங்கள் அரசனைக் கட்டிப் போட்டன. இரு தரப்பினரும் அறுசுவை உணவை உண்டு கொண்டும், மதுபானங்களை ருசித்துக் கொண்டும், பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டும் இருந்தபோது, மக்கள், உணவுக்காகவும் தண்ணீருக்காகவும் மருந்துகளுக்காகவும் தெருவில் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர் அல்லது இறந்து கொண்டிருந்தனர்.

நான் எந்த அழைப்புக்காக பயந்து கொண்டிருந்தேனோ, அந்த அழைப்பு வந்தது. நான் என் படுக்கையிலிருந்து எழுந்து, என் தலையைக் கைகளால் வாரிவிட்டுக் கொண்டு, உயர்மட்டக் குழு இருந்த முகாமை நோக்கி நடந்தேன். முகாமிற்குள் நுழைந்து, என்னால் இயன்ற அளவுக்கு மிக நன்றாகக் குனிந்து வணங்கினேன். நான் இன்னும் சற்று அதிகமாகக் குனிந்திருந்தால், தரையைத் தொட்டிருப்பேன். உள்ளே இருட்டாக இருந்தது, ஏதோ நெடியடித்தது. வழக்கமான கொள்ளையர்கள் அங்கு கூடியிருந்தனர். தனது கடுமையான, உணர்ச்சியற்ற முகத்துடன் பிரஹஸ்தனும், தனது வஞ்சகப் புன்னகையுடன் மாரீசனும், என்னைப் போன்ற ஓர் இழிவான நபரைக் கையாள வேண்டியிருந்த வெறுப்பில் ராவணனும், தனது குழப்பமான, கணக்காளனின் பார்வையுடன் ஜம்புமாலியும், ஆர்வத்தை வெளிக்காட்டிய முகத்துடன் கும்பகர்ணனும், வெறுப்பூட்டும் ஏளனப் பார்வையுடன் ருத்ராக்கனும், ஏதோ யோசனையில் தனது கண்களை மூடிக் கொண்டு, தனது அர்த்தமற்றப் பிதற்றல்களால் உலகைக் காப்பாற்றுவதில் மும்முரமாக இருந்த, சமயப்பற்று மிக்கக் கயவனான விபீஷணனும் அங்கு குழுமியிருந்தனர்.

“பத்ரா,” என்று மாரீசன் அன்பொழுக அழைத்தான். “அசுர இனம் மீண்டும் உன்னைச் சார்ந்துள்ளது. உனது நாடும் உனது அரசனும் உனது சேவையை நாடி . . .” அவன் ஏதோ உளறினான். நான் எந்த இழிவான காரியத்தைச் செய்ய வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள் என்று வெறுமனே அவர்கள் என்னிடம் கூறியிருந்தால் நன்றாக இருந்திருக்கும். தேச பக்தியைப் பற்றியும் இனத்தைப் பற்றியுமான இப்படிப்பட்டப் பேச்சு எனக்குக் கோபத்தை ஏற்படுத்தியது, ஆனால் என் வெறுப்பை வெளிக்காட்டும் துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. எனது நாட்டின் பெரும்பாலான குடிமக்களைப் போலவே, குறிப்பாக, கருநிறத் தோலுடன்கூடிய, கீழ்நிலையில் இருந்த, எளிய மனத்தைக் கொண்ட, படிப்பறிவற்ற, கோடிக்கணக்கான அப்பாவி மக்களைப் போலவே, அடிபணிந்து போவது, அமைதியாக இருப்பது, ஆட்சியாளர்களிடம் கீழ்ப்படிதல்மிக்கச் சேவர்களாகத் தோன்றுவது ஆகிய கலைகளில் நான் கைதேர்ந்தவனாக ஆகியிருந்தேன். ஆனால் என்னுள் லட்சக்கணக்கான கலகங்கள் குமுறிக் கொண்டிருந்தன.

வித்யுத்ஜீவனைத் தீர்த்துக்கட்டும் வேலை என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்ததைப் புரிந்து கொள்வதற்கு எனக்குச் சிறிது நேரம் ஆனது. என் இதயம் மகிழ்ச்சியில் துள்ளியது. உயர்மட்டக் குழுவினரை நான் மிகக் கடுமையாகவும் மிக விரைவாகவும்

எடைபோட்டுவிட்டேனோ என்று எனக்குத் தோன்றியது. கடவுள் எனக்குக் கொடுத்த ஒரு வாய்ப்பு இது. நான் குனிந்து வணங்கிவிட்டு, என் முதுகைக் காட்டாமல் அங்கிருந்து வெளியேறினேன்.

இருட்டும்வரை நான் காத்திருக்க வேண்டியிருந்தது. இந்தப் பணி உற்சாகமூட்டுவதாகவும் ஆபத்தானதாகவும் இருந்தது. யாருக்கும் தெரியாமல் கோட்டைக்குள் நுழைந்து, வித்யுத்ஜீவனைக் கொலை செய்வது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. ஆனால் அவன்மீது நான் கொண்டிருந்த தனிப்பட்ட வெறுப்பும், மதிப்புவாய்ந்த எதையேனும் செய்ய வேண்டும் என்ற எனது லட்சியமும் என்னைத் தூண்டின. உயர்மட்டக் குழுவைச் சந்தித்துவிட்டு நான் திரும்பி வந்த உடனேயே, எனது குத்துவாளை அதன் உறையிலிருந்து எடுத்து, அதன் கூர்மையை ஆய்வு செய்தேன். பிறகு எனது சாக்குமூட்டையை எடுத்து, ஒரு விஷத் திரவத்தைத் தயாரிப்பதற்குத் தேவையான பொருட்கள் அனைத்தும் இருந்தனவா என்று தேடினேன். எனக்குத் தேவைப்பட்ட ஏழு மூலிகைகளையும் நான் ஒரு நேர்க்கோட்டில் அடுக்கி வைத்து, பிறகு தேவையான அளவுகளில் அவற்றை எடுத்துக் கலந்து அரைத்தேன். அந்த விஷக் கலவையைக் கவனமாக எனது குத்துவாளின்மீது தேய்த்தேன். பிறகு, ஒரு சிறிய, மெல்லிய துணியை எடுத்து, அதை அந்த விஷத் திரவத்தில் நனைத்தெடுத்து, என் குத்துவாளின்மீது சுற்றினேன். மீதியிருந்த விஷக் கலவையை ஒரு மூலையில் பத்திரமாகப் புதைத்து வைத்தேன். பிறகு, நான் எனது இடுப்புக் கச்சையைத் தவிர மீதி உடைகளைக் களைந்துவிட்டு, எண்ணெய் விளக்கை அணைத்துவிட்டு, அதில் மீதிமிருந்த எண்ணெயை எடுத்து என் உடல் முழுவதும் தேய்த்துக் கொண்டு, கோட்டையை நோக்கிப் புறப்பட்டேன்.

பொழுது புலர்வதற்கு முந்தைய மிக இருட்டான நேரத்தைத்தான் நான் எனது பணிக்காகத் தேர்ந்தெடுத்திருந்தேன். எனவே விடியலுக்கு மூன்று மணிநேரம் முன்பாக நான் எனது முகாமைவிட்டுப் புறப்பட்டு, கோட்டையின் பின்வாசல் கதவருகே காத்திருந்தேன். இரண்டு காவலாளிகள் தங்கள் இடத்தில் நின்றபடியே தூங்கினர். பருவ வயதுச் சிறுவனைப்போலத் தோன்றிய இன்னொருவன், தனது ஈட்டியைத் தூக்கிக் கொண்டு மேலும் கீழுமாக நடந்து கொண்டிருந்தான். அவன் புதிதாக வேலைக்குச் சேர்ந்திருக்க வேண்டும். ஏனெனில், தனது மேலதிகாரியை மகிழ்விப்பதற்காக, அவன் மிகவும் உற்சாகமாக வேலை செய்தான். நான் ஓசைபடாமல் அவனைக் கடந்து சென்றேன். தூங்கிக் கொண்டிருந்த காவலர்களில் ஒருவனின் இடுப்புத் துணியில் ஒரு வளையத்தில் தொங்கிக் கொண்டிருந்த சாவிக் கொத்தை நான் எடுக்க முயன்றேன். கோட்டையின் பின்வாசல் கதவுக்கான சாவிகள் அவை.

இருட்டில் நான் தடுமாறியதால், சாவிக் கொத்து எனது கைகளிலிருந்து தவறிக் கீழே விழுந்து, அதன் வளையம் தரையில் பட்டுக் கணீரென்ற ஓர் ஒலியை எழுப்பியது. நான் பயத்தில் உறைந்து போனேன். தூங்கிக் கொண்டிருந்த காவலாளி லேசாக அசைந்தான், ஆனால் கண்விழிக்கவில்லை. கோட்டை வாசலில் இருந்த மிகப் பெரிய தூண்கள் ஏற்படுத்திய ஆழமான நிழல்களுக்குள் நான் விரைவாக ஒதுங்கினேன். அப்போது அச்சிறுவன் என்னிடமிருந்து ஒருசில அடிகள் தூரத்தில் நின்று கொண்டு, நான் மாயமாக மறைந்து போயிருந்த இருட்டிற்குள் உற்றுப் பார்த்தான். நான் என் மூச்சைப் பிடித்துக் கொண்டு நின்றேன். அவன் என்னை நோக்கி ஓரிரு அடிகள் எடுத்து வைத்துவிட்டு, பிறகு அப்படியே நின்றான். மூத்தக் காவலாளிகளை எழுப்ப வேண்டுமா அல்லது என்ன சத்தம் என்று தானே ஆய்வு செய்ய வேண்டுமா என்று தீர்மானிக்க முடியாமல் அவன் தடுமாறிக் கொண்டிருந்ததைப் போலத் தோன்றியது. பிறகு அவன் என்னை நோக்கி மெல்ல நகர்ந்து வந்து, இருட்டிற்குத் தனது கண்களைப் பழக்கப்படுத்திக் கொள்ள முயன்றான். நான் செயல்படுவதற்கு ஒரு நொடிக்கும் குறைவான நேரமே என்னிடமிருந்தது. நான் என் குத்துவாளை உருவி அவன்மீது பாய்ந்து, அவன் சுதாரிப்பதற்குள் அதை அவனது கழுத்தில் ஆழமாகச் செருகினேன். அவன் அமைதியாகத் தரையில் சரிந்தான்.

நான் மற்ற இரண்டு காவலர்களையும் நோக்கித் திரும்பினேன். அவர்கள் இப்போது விழித்திருந்தனர். என் குத்துவாளில் இருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. அவர்களில் ஒருவன் என்னைக் கண்டதும் அலறினான். நான் அவனை நோக்கி நடந்து சென்று, அமைதியாக அவனது தொண்டையை அறுத்தேன். அதிக அனுபவம் வாய்ந்தவன்போலத் தோன்றிய மூன்றாமவன், தனது வாளை உருவச் சென்றான். நான் அவன்மீது பாய்ந்தேன், ஆனால் அவன் மிக விரைவாகச் செயல்பட்டான். அவன் பலமாக என்னை எட்டி உதைத்ததில், நான் எனது கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு நிலத்தில் போய் விழுந்தேன். பிறகு அவன் தனது வாளைத் தனது தலைக்கு மேலே உயர்த்தி, எனது இதயத்திற்குள் ஆழமாகச் செருக முயன்றான். என் முடிவு நெருங்கிக் கொண்டிருந்ததை நான் கண்டேன், ஆனால் இழப்பதற்கு என்னிடம் எதுவும் இருக்கவில்லை. நான் எனது குத்துவாளை அவனது முகத்தைக் குறி வைத்து எறிந்தேன். அவன் ஓர் அலங்கோலமான நிலையில் அப்படியே உறைந்து நின்றான். என் குறி தப்பிவிட்டிருந்ததாக நான் பயந்தேன். அப்போது, சிதைந்து போயிருந்த முகத்துடன், தனது இடது கண்ணில் குத்துவாள் செருகப்பட்ட நிலையில், அவன் துடிதுடித்துக் கீழே சரிந்தான். அவனது

ஒட்டுமொத்த உடலும் என்மீது விழுந்தது. அவனது வாள், என் தலைக்கு மேலே ஒருசில அடி தூரத்தில், நிலத்திலிருந்த மண்ணில் குத்திட்டு நின்றது. குள்ளமாக இருப்பதில் அனுகூலமும் இருந்ததுபோலும். நான் அந்த மாமிச மலைக்கு அடியிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு, எனது குத்துவாளை அவனது கண்ணிலிருந்து கவனமாகப் பிடுங்கினேன்.

அப்போது யாரோ சிலர் ஓடி வந்தக் காலடி ஓசை என் காதில் கேட்டது. என்ன நடந்து கொண்டிருந்தது என்று விசாரிப்பதற்காக மற்றக் காவலாளிகள் வந்து கொண்டிருந்தனர். தப்பிக்கும் வழியை நான் பதற்றத்தோடு தேடினேன். கதவைத் திறப்பதற்கான சரியான சாவி எது என்று தெரியாமல் நான் தடுமாறினேன். உற்சாகத்திலும் பயத்திலும் என் கைகள் நடுங்கின.

"ஏய்!" என்று யாரோ கத்தினார்கள். நான் மீண்டும் தடுமாறினேன். எனது கழுத்தின் வலது பக்கத்தில் இரண்டு அங்குலம் தள்ளி ஓர் அம்பு பாய்ந்து சென்று, கோட்டை வாசலின் மரக் கதவைத் துளைத்தது. அடுத்தது பாய்ந்து வந்து, எனது இடது தோள்பட்டைக்கு ஒருசில அங்குலங்கள் தள்ளிச் சென்று அக்கதவில் குத்திட்டு நின்றது. அதன் இறகுகள் என்னை உரசிச் சென்றன. யாரோ சிலர் என்னை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்த சத்தத்தை என்னால் கேட்க முடிந்தது, ஆனால் அதற்குள் கதவு திறந்து கொண்டது. நான் கோட்டைக்குள் நுழைந்து கதவை மூடிய கணத்தில், ஒரு வாளின் செப்பு முனை அக்கதவின்மீது ஒரு பயங்கரச் சத்தத்துடன் மோதியது. கதவைப் பூட்டுவதற்குச் சாவிகளுடன் மீண்டும் நான் போராட வேண்டியிருந்தது. அவர்கள் வெளியே இருந்து கதவைத் தள்ளித் திறக்க முயன்று கொண்டிருந்தனர், ஆனால் நான் என் பலம் முழுவதையும் பயன்படுத்தி, கதவைப் பின்னுக்குத் தள்ளி, இறுதியில் ஒருவழியாக அதைப் பூட்டினேன். பிறகு என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தலை தெறிக்க ஓடினேன்.

நான் அரண்மனையை நோக்கி ஓடியபோது, கோட்டையின் பல்வேறு பகுதிகளில் ஆங்காங்கே தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டதை நான் கண்டேன். அரசனின் அறை முதற்தளத்தில் இருந்தது. சுவரில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு கொடியைப் பிடித்துக் கொண்டு, தட்டுத்தடுமாறியபடி நான் மேலே ஏறி, ஒரு தாழ்வாரத்தில் ஒரு பூனையைப்போல வந்து இறங்கினேன். கீழே என்ன சத்தம் என்று பார்ப்பதற்காக, அறைக் காவலாளிகள், கைப்பிடிச் சுவரில் சாய்ந்து எட்டிப் பார்த்தார்கள். நான் ஒரே தள்ளில் அவர்கள் இருவரின் கால்களையும் இடறி அவர்களைக் கீழே தள்ளிவிட்டு, அறைக் கதவை என் காலால் எட்டித் திறந்தேன். நான் என் குத்துவாளை என் கையில்

பிடித்துக் கொண்டு காத்திருந்தேன், ஆனால் ஒன்றுமே நிகழவில்லை, எதுவும் அசையவுமில்லை.

படுக்கையின்மீது ஒரு கரிய உருவம் தூங்கிக் கொண்டிருந்தது. எண்ணெய் விளக்கு விட்டுவிட்டு எரிந்து கொண்டிருந்தது. நான் அக்கதவை ஓசையின்றி மூடிவிட்டு, உள்ளிருந்து அதைத் தாளிட்டேன். நான் அந்த விளக்கை நோக்கி எச்சரிக்கையாக நடந்து சென்று, அதன் ஒளியைக் கூட்டினேன். இளவரசி சூர்ப்பனகை! "அந்தச் சண்டாளன் எங்கே போனான்? அவன் தப்பிவிட்டானா?" ஓர் ஏமாற்ற உணர்வு என்னை நிரப்பியது. நான் தாமதித்த ஒவ்வொரு நொடியும் நான் மரணத்தை நெருங்கிக் கொண்டிருந்தேன். வெறுப்பில் உச்சக்குரலில் கத்த வேண்டும்போலத் தோன்றியது. அப்போது, ஒரு மணிச் சத்தம்போல ஒரு சிறிய சிரிப்பொலி எனக்குக் கேட்டது. அது மிக லேசான சத்தமாக இருந்தது, ஆனாலும் ஒரு மைலுக்கு அப்பாலிருந்துகூட அது யாருடைய சிரிப்பு என்று என்னால் அடையாளம் கண்டுகொண்டிருக்க முடியும். "மாலா! அவள் இங்கே என்ன செய்து கொண்டிருந்தாள்?" தனது இரையைத் தேடிச் சுற்றுமுற்றுப் பார்த்த ஒரு காட்டுப் பூனையைப்போல நான் அந்தச் சத்தத்தைக் கவனித்தேன். நான் நின்று கொண்டிருந்த அறையை ஒட்டி இருந்த அறையிலிருந்து அந்தச் சிரிப்பு வந்தது. மாலா வித்யுத்ஜீவனுடன் இருந்தாள் என்பதைத் திடீரென்று நான் உணர்ந்தேன். அந்த அறைக்கான கதவை நான் தேடினேன். காவலாளிகள் என்னைத் தேடிக் கொண்டிருந்த சத்தம் என் காதுகளில் விழுந்தது. நான் தப்பிப்பதற்கான வாய்ப்பு ஒவ்வொரு கணமும் குறைந்து கொண்டிருந்ததை நான் அறிந்தேன். யாரோ கதவைத் தட்டினார்கள். இளவரசி உசும்பினாள். நான் சுவரோடு சுவராக ஒட்டி நின்றேன். அவள் தன் கண்களைத் திறந்து, கதவை நோக்கிப் பார்த்தாள். பிறகு தன் கைகளால் படுக்கையைத் துழாவித் தன் கணவனைத் தேடினாள். ஆனால் அவனைக் காணாததால், அவள் கவலை கொண்டாள். கதவு மீண்டும் ஓங்கித் தட்டப்பட்டது. பக்கத்து அறைக்கான கதவை என் விரல்களால் பதற்றத்துடன் துழாவினேன்.

"யாரது?" என்று அவள் அந்தக் காவலாளிகளிடம் கேட்டாள்.

"அரசியாரே, யாரோ உங்கள் அறைக்குள் நுழைந்திருக்கிறார்கள்," என்று ஒரு குரல் பதிலளித்தது. என் இதயம் வேகமாகத் துடித்தது. அந்தக் காவலாளி என்ன கூறியிருந்தான் என்பதை உணர்ந்து கொள்ள அவளுக்குச் சிறிது நேரம் ஆனது. பிறகு அவள் மெதுவாக எழுந்து கொண்டு, ஒருசில நொடிகள் தயக்கத்திற்குப் பிறகு, கதவை நோக்கி நடந்தாள். வீரர்கள் விரைந்து உள்ளே வந்து, இளவரசியை வேகமாக

ஒதுக்கித் தள்ளினர். அடுத்த அறைக்கான ரகசியத் தாழ்ப்பாள் என் கையில் அகப்பட்டது. நான் அதை ஓங்கி இழுத்தேன். ஒரு கதவு திறந்தது. அது திறந்த வேகத்தில் நான் மல்லாக்க விழுந்தேன். நான் சுதாரித்து எழுந்து, அந்த அறைக்குள் சென்று, அக்கதவை என் காலால் எட்டி உதைத்து மூடித் தாளிட்டேன். பிறகு நான் வேகமாகத் திரும்பினேன். வித்யுத்ஜீவன் தனது காதலியுடன் அங்கு கொஞ்சிக் குலாவியபடி படுத்திருந்தான். அவள் அவனருகில் உட்கார்ந்திருந்தாள். என்னைக் கண்டதும் அவர்கள் இருவரும் பயத்தில் உறைந்தனர். வெளியே, காவலாளிகள் அந்த அறையின் கதவைத் தட்டிக் கொண்டிருந்தனர். எக்கணத்திலும் அவர்கள் அதை உடைத்துக் கொண்டு உள்ளே வரக்கூடும்.

நான் எனது இடது கையின் பின்புறத்தால் மாலாவின் முகத்தில் வேகமாக ஓங்கி அறைந்ததில், மூன்றடிகள் தள்ளி இருந்த சுவரின்மீது அவள் மோதிக் கீழே சரிந்தாள். நான் வித்யுத்ஜீவன்மீது ஏறிக் குதித்து, அவனது வயிற்றின்மீது அமர்ந்தேன். என்னால் அவனைப் பார்த்து ஏளனப் புன்னகை ஒன்றை வீசாமல் இருக்க முடியவில்லை. எனக்கே தெரியாமல் என்னிடம் மறைந்திருந்த ஒரு முரட்டுத்தனத்துடன், விஷம் தடவப்பட்ட எனது குத்துவாளைக் கொண்டு நான் அவனது வசீகரமான முகத்தை மாறி மாறிக் கீறினேன். தனது காதலனைக் காப்பாற்றுவதற்காக மாலா என் முதுகைத் தனது நகங்களால் கிழித்துக் கொண்டிருந்தது குறித்தோ, அல்லது காவலாளிகள் அந்த அறையின் கதவை இழுத்துத் திறந்து கொண்டிருந்தது குறித்தோ எனக்கு எந்த உணர்வும் இருக்கவில்லை. இளவரசியின் அலறல் மட்டுமே என்னை மீண்டும் இவ்வுலகிற்குக் கூட்டி வந்தது. கொல்லப்பட்டத் தனது கணவனைப் பார்த்து அவள் கத்தினாளா அல்லது அவனது நம்பிக்கைத் துரோகத்தைக் கண்டு அவள் அலறினாளா என்று என்னால் உறுதியாகக் கூற முடியவில்லை. நான் அவளைக் கண்டு பரிதாபப்பட்டேன். என் உடலிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. நான் மிகவும் களைத்துப் போயிருந்தேன். அப்போது இளவரசி சூர்ப்பனகை, "பத்ரா, பத்ரா . . . என் கணவனைக் கொல்வதற்கு என் சகோதரன் உன்னை அனுப்பினானா? ராவணா . . . ஏன், ஏன்?" என்று கத்திக் கொண்டே, தனது கைகளால் தனது தலையில் அடித்துக் கொண்டாள்.

நான் அதிர்ச்சியடைந்தேன், ஆனால் அனைத்துக் காவலாளிகளின் கவனமும் இளவரசியின்மீது திரும்பியதுபோது, நான் அங்கிருந்து தப்பித்தேன். சன்னல் திறந்திருந்தது. கணப்பொழுதில் நான் அதன் வழியாக வெளியே குதித்தேன். நான் கீழே விழுந்த நேரத்தில்,

காவலாளிகளின் தலைவன் கத்தினான். பரந்து விரிந்திருந்த அசோக மரத்தின்மீது விழுந்த நான், அதன் கிளைகளால் பந்தாடப்பட்டு, இறுதியில் நிலத்தில் உருண்டேன். நான் கீழே விழுந்ததில் எனது விலா எலும்புகளில் மூன்றும் எனது கையும் உடைந்திருந்ததை அப்போது நான் அறியவில்லை. ஆனால் அந்த நேரத்தில் எதைப் பற்றியும் எனக்கு அக்கறை இருக்கவில்லை. நான் என் உயிருக்காக ஓடினேன். எனது எஜமானனுக்கும், எனது இனத்திற்கும், எனது நாட்டிற்கும், எனக்கும் ஏதோ ஒன்றைச் சாதித்திருந்த உற்சாகக் களிப்பில் நான் இருந்தேன். எல்லாப் பக்கங்களிலிருந்தும் அம்புகள் பாய்ந்து வந்தன, ஆனால் அதிர்ஷ்டவசமாக அவற்றில் ஒன்றுகூட என்னைத் தாக்கவில்லை. கோட்டையின் மேற்குப் பகுதியிலிருந்த சுவரை மட்டும் என்னால் அடைய முடிந்தால், அதிலிருந்த ஒரு பெரிய கீறலிலிருந்து கடலுக்குள் என்னால் குதித்துவிட முடியும் என்பதை நான் அறிந்திருந்தேன். என்னிடம் எஞ்சியிருந்த வலிமை முழுவதையும் ஒன்றுதிரட்டி நான் வேகமாக ஓடினேன். ஒருசில அடிகள்தான் . . . இன்னும் ஒருசில அடிகள்தான் . . . கடலன்னை என்னைப் பாதுகாப்பாகத் தனது மார்பின்மீது தாங்கிக் கொள்வாள். மேற்குச் சுவரை நான் அடைந்தபோது, ஒரு வினோதமான உணர்வு எனக்கு ஏற்பட்டது. யாரும் என்னைத் துரத்திக் கொண்டிருக்கவில்லை. “இது ஒரு கனவா?” என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். ஆனால் அங்கு நின்று, பின்னால் திரும்பிப் பார்க்கும் துணிச்சல் எனக்கு இருக்கவில்லை.

சங்குகள் முழங்கும் ஓசை அப்போது எனக்குக் கேட்டது. ஆச்சரியமடைந்த நான், அங்கு நின்று, பின்னால் திரும்பிப் பார்த்தேன். அகலமாக விரிந்து திறந்து கிடந்த, கோட்டையின் முக்கியக் கதவின் வழியாக ஓர் ஊர்வலம் கோட்டையினுள்ளே நுழைந்தது. ராவணன் ஒரு பேரரசரைப்போல ஒரு யானையின்மீது அமர்ந்திருந்தார். யானைகள், குதிரைகள், ரதங்கள், காலாட்படை வீரர்கள், இசைக் கலைஞர்கள் உட்பட, தனது பெரும் படையுடன் அவர் வந்து கொண்டிருந்தார். அனைவரும் பெருமையோடும் சிறப்போடும் அணிவகுத்து வந்து கொண்டிருந்தனர். மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் செண்டைகள் அடிக்கப்பட்டன, வளைவான ஊதுகொம்புகள் முழங்கப்பட்டன, கிணிகள் தட்டப்பட்டன. வித்யுத்ஜீவனின் விசுவாசமான காவலாளிகள் ஒவ்வொருவராகத் தங்களது ஆயுதங்களைக் கீழே வைத்தனர். “ஹர ஹர மகாதேவா!” “ராவணன் வாழ்க!” “வெற்றி! வெற்றி!” போன்ற முழக்கங்கள் உச்சக்குரலில் எழுந்தன. அதற்கு நான் காரணமாக இருந்தேன். என் இதயத்தில் பெருமை பொங்கியது. எனது உடலில் இருந்த வேதனையை உதாசீனப்படுத்திவிட்டு, ஊர்வலத்தை நோக்கி

நான் ஓடினேன்.

நான் அதை நெருங்கியபோது, திடீரென்று நான் அவமானமாக உணர்ந்தேன். நான் வெறும் இடுப்புக் கச்சை மட்டுமே அணிந்திருந்தேன். நான் கருப்பாகவும் அசிங்கமாகவும் எண்ணற்ற இடங்களிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டும் இருந்தேன். இவர்கள் அனைவரும், முழுமையான புகழோடு அணிவகுத்துச் சென்று கொண்டிருந்த அசுர மேன்மக்கள். ஊர்வலத்தின் பாதையில் நான் நின்றபோது, இரண்டு வீரர்கள் என்னை நோக்கி வேகமாக ஓடி வந்து, வெற்றி அணிவகுப்பின் வழியிலிருந்து என்னை வலுக்கட்டாயமாக அப்புறப்படுத்தி, நடைபாதையின்மீது என்னைத் தள்ளினர். நான் அவமானத்தில் அங்கு விழுந்து கிடந்தேன். எனக்கு நம்பிக்கைத் துரோகம் இழைக்கப்பட்டிருந்தது போன்ற ஓர் உணர்வு என் இதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. நான் இருந்த இடத்தை நெருங்கிக் கொண்டிருந்த ராஜ யானையின் மணியோசை என் காதுகளில் விழுந்தது. நான் என் தலையை உயர்த்தி ராவணனைப் பார்த்தேன். அவரும் என்னைப் பார்த்தார். “அவருடைய முகத்தில் நான் பார்த்தது வெறுப்பா, பகைமையா, அல்லது நன்றியுணர்வா?” அது இன்னும் எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. நான் தயாள மனநிலையில் இருந்தபோது, அவரது கண்களில் நான் பார்த்தது நன்றியுணர்வுதான் என்று நினைத்துக் கொண்டேன், ஆனால் சில சமயங்களில், அது வெறுப்பு என்று எனக்குத் தோன்றியது. ராவணன் என்னை அடையாளம்கூடக் கண்டிருக்கவில்லை என்பதற்கான சாத்தியத்தையும் ஒதுக்குவதற்கில்லை.

ஊர்வலம் என்னைக் கடந்து சென்றது. என் முகத்தின்மீது ஒரு நிழல் விழுந்தபோது நான் நிமிர்ந்து பார்த்தேன். மாரீசன் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனது கண்களில் பரிதாபமும் சிறிதளவு நன்றியுணர்வும் தென்பட்டன. முதன்முறையாக, யாரோ என்னைக் குறித்து அக்கறை கொண்டிருந்தனர் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. என் கண்கள் கண்ணீரால் நிரம்பின. நான் எழுந்து நிற்க முயற்சித்தேன், ஆனால் தடுமாறிக் கீழே விழுந்தேன். மாரீசன் தனது குதிரையிலிருந்து இறங்க முயற்சித்துப் பாதியிலேயே உறைந்தான். நான் அவனது பார்வை போன திசையைப் பின்தொடர்ந்தேன். அவனுக்கு முன்னால் சென்ற பிரஹஸ்தன், தன் குதிரையை நிறுத்திவிட்டு, எங்களை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். மாரீசன் தனது குதிரையின் கடிவாளத்தை உறுதியாகப் பற்றிக் கொண்டு, திரும்பிக்கூடப் பார்க்காமல், பிரதம மந்திரியை நோக்கித் தனது குதிரையைச் செலுத்தினான்.

நான் வேதனையாகச் சிரித்துவிட்டு, மீண்டும் அந்த நடைபாதையின்மீது விழுந்து, ஒரு பைத்தியக்காரனைப்போலச் சிரிக்கத் துவங்கினேன். சூரியன் உதயமாகி, பகல் பொழுது கழிந்து கொண்டிருந்தபோது, அந்த வேகாத வெயிலில், நடை தள்ளாடியபடி, சிறிது தெம்பைத் திரட்டிக் கொண்டு நான் என் குடிசைக்குத் திரும்பினேன். கொண்டாட்டங்களின் சத்தங்கள் எல்லா இடங்களிலும் கேட்டன. நான் அந்த நடைபாதையில் கிடந்தபோது, சிலர் ஒருசில நாணயங்களை என்னை நோக்கி வீசி எறிந்திருந்தனர். ஒருசில நிமிடத் தயக்கத்திற்குப் பிறகு, நான் அவற்றைப் பொறுக்கிக் கொண்டேன். என்னுடைய வலி மிகவும் தீவிரமடைந்திருந்ததால், இன்னும் ஒருசில நாட்களுக்கு என்னால் ஏதேனும் வேலை பார்க்க முடியுமா என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. எனவே, ஒவ்வொரு நாணயமும் எனக்கு மிக முக்கியமானதாக இருந்தது. எல்லா இடங்களிலும் கொண்டாட்டங்கள் துவங்கின. பேரரசர், இளவரசர்கள், மேன்மக்கள், மற்றும் அனைவருமே ஒரு மகிழ்ச்சியான மனநிலையில் இருந்தனர். அவர்கள் வெற்றி அடைந்திருந்தனர். ஆனால் நான் என் காயங்களை நக்கிக் கொண்டு, ஒரு விசுவாசமற்றப் பெண்ணைக் கையாண்டு கொண்டு, வாழ்க்கை நடத்துவதற்கு ஒரு வேலையைத் தேடிக் கொண்டு, என் குடிசைக்குள் தஞ்சம் புக வேண்டியிருந்தது. என்னைப் பொறுத்தவரை, பேரரசர்களின் முடிசூட்டு விழாக்களைவிட இவ்விஷயங்கள் எனக்கு அதிக முக்கியமானவையாக இருந்தன. எனவே, நான் தொடர்ந்து நடந்தேன்.



# 33
# இருட்டின் புதல்வன்

ராவணன்

சூர்ப்பனகை உணர்ச்சிவசப்பட்டுக் கத்திக் கொண்டிருந்தாள். அவள் என்னை நோக்கி விரைந்து வந்து, என் கன்னங்களைத் தனது வெற்றுக் கைகளால் கிழித்தாள். தன்னை நெருங்க முற்பட்ட எவரொருவரையும் அவள் கடிக்கவும் சிதைக்கவும் முயற்சித்தாள். அலங்கோலமான தலைமுடியுடனும், வேதனை தோய்ந்த கரிய முகத்துடனும், அவள் என்னையும் இலங்கையின் மந்திரிகள் அனைவரையும் சபித்துக் கொண்டிருந்தாள். அவ்வப்போது தனது முஷ்டிகளைக் கொண்டு தனது மார்பில் ஓங்கிக் குத்தினாள். வித்யுத்ஜீவனின் சடலத்தை அவள் ஒரு வேட்டை நாயைப்போலப் பாதுகாத்தாள். அவனுக்கு ஈமச் சடங்கு செய்ய வந்தவரையும் அவள் அவனது உடலை நெருங்க அனுமதிக்கவில்லை. அவனது உடலுக்கு அவளே எண்ணெய் தேய்த்தாள். எங்கள் எல்லோரையும், குறிப்பாக என்னைச் சபித்துக் கொண்டே, அதற்குப் புதிய உடைகளை அணிவித்தாள். நான் அவளுக்கு ஆறுதல் கூற விரும்பவில்லை. அவளது

கணவன் இறந்து போக வேண்டும் என்று நான் விரும்பியதும், அவனது மரணத்திற்கு நான்தான் பொறுப்பு என்பதும் உண்மைதான். ஆனால் இதை அவன் தானாகவே தனக்கு வரவழைத்துக் கொண்டிருந்தான். என் ஆட்சியைக் கவிழ்த்தபோதே அவன் தனது மரண சாசனத்தில் கையெழுத்திட்டிருந்தான். அவன் தானாகவே தேடிக் கொண்ட பிரச்சனை இது.

பத்ரன் எனக்காக அக்காரியத்தைச் செய்திருந்தான். இந்த மோசமான விவகாரம் பற்றி நான் மிகவும் வெறுக்கும் ஒரு விஷயம், அந்த முட்டாளுக்கு நான் கடன்பட்டுள்ளேன் என்பதுதான். "நான் உண்மையிலேயே அவனுக்குக் கடன்பட்டுள்ளேனா? அவன் எனது அடிமை. நான் சொல்வதைச் செய்வதுதான் அவனது வேலை. அதற்கு மேல் அவனுக்கு வேறு எந்த யோக்கியதையும் இல்லை," என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். வித்யுத்ஜீவனின் சடலத்தை நான் பார்த்தேன். அவர்கள் அதைச் சுத்தப்படுத்தியிருந்தனர், ஆனாலும் அது மிகவும் விகாரமாகக் காட்சியளித்தது. அதை நான் முதன்முதலில் பார்த்தபோது, நான் கிட்டத்தட்ட வாந்தியெடுத்திருந்தேன். இப்படிப்பட்ட ஒரு நாச வேலையைச் செய்வதற்கு ஒருவன் உண்மையிலேயே வக்கிரம் படைத்தவனாகத்தான் இருக்க வேண்டும். பத்ரன் எப்படிப்பட்ட ஜந்து? நினைத்தாலே குமட்டிக் கொண்டு வருகிறது! ஓர் உரத்த ஓலம் எனக்குத் திகைப்பூட்டியது. சூர்ப்பனகை தனது தலையைத் தரையின்மீது மோதிக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால், அதைவிட உரத்தக் குரல் ஒன்று ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தது. என் தாயார்! அவர் இவ்வளவு வேகமாக வருவார் என்று நான் எதிர்பார்த்திருக்கவில்லை.

"ரத்தத்தை உறிஞ்சும் ராட்சஸனே, இப்போது உனக்குத் திருப்திதானா?" இந்த எதிர்பாராதத் தாக்குதலால் நான் முகம் வெளிறினேன். "உன் சொந்தச் சகோதரியை நீ விதவையாக்கிவிட்டாய். உன்னை என் கருவில் சுமந்து பெற்றது குறித்து நான் வெட்கப்படுகிறேன்."

நான் என் கோபத்தை அடக்க மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது. அவர் என்னைப் பற்றி ஒவ்வொன்றாகக் கூறக் கூற, சூர்ப்பனகையின் ஒப்பாரிச் சத்தம் புதிய உயரங்களைத் தொட்டது. "கொடுங்கோலனே . . . கேடு கெட்டவனே . . . நீ என் மகளை இப்படி ஒப்பாரி வைக்கச் செய்துவிட்டாய் . . . இதற்கு நீ ஒரு விலையை கொடுக்கத்தான் போகிறாய் . . . நிச்சயமாக நீ இதற்கு ஒரு விலையைக் கொடுக்கப் போகிறாய்." அடுத்த அரை மணிநேரம் அவர் தொடர்ந்து என்னைச் சபித்துக் கொண்டும், தனது மருமகனின் பல்வேறு அம்சங்களைப்

புகழ்ந்து கொண்டும் இருந்தார். இந்தப் பாசாங்கில் அவர் என்னை உள்ளே இழுக்காமல் இருந்திருந்தால், இக்காட்சி மிகவும் நகைச்சுவையானதாக இருந்திருக்கும். தனது நெற்றியிலும் மார்பிலும் அடித்துக் கொண்டே, என் தாயார், “நீ அதிகார போதையில் மிதந்து கொண்டிருக்கிறாய். லட்சிய வெறி உன் சித்தத்தைக் கலங்கடித்துவிட்டது. என்னையும் கொன்றுவிடு! என்னுடைய சடலத்தை உனது அரசியல் வெற்றிக்கான ஒரு படிக்கல்லாகப் பயன்படுத்திக் கொள்,” என்று கத்தினார்.

என் தந்தையும் அங்கு வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, எப்போதும் தன்னுடன் வந்த இரண்டு பிராமணர்களிடம் எதைப் பற்றியோ மும்முரமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவரது தலையைப் பிடித்து இழுத்து, சுவரில் அதை மோத வேண்டும்போல எனக்குத் தோன்றியது. அவர் தனது மருமகனுக்குத் தேவர்களின் முறைப்படி ஈமச் சடங்குகளை நடத்தவும் பிராமணர்களுக்குப் பரிசுகள் கொடுக்கவும் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். இந்தக் கூத்து எப்போது முடியும் என்று நான் காத்துக் கொண்டிருந்தேன்.

சூர்ப்பனகையின் நடத்தை எவ்வளவு சிரமமானதாக இருந்தாலும் சரி, கும்பகர்ணனின் நடத்தையோடு அதை ஒருபோதும் ஒப்பிட முடியவில்லை. எமனின் பாதாளச் சிறையில் அவன் சிறை வைக்கப்பட்டிருந்தது அவனை மோசமான நிலைக்கு மாற்றியிருந்தது. பெரும்பாலான நேரம் அவன் போதையிலேயே இருந்தான். நாளின் பெரும்பகுதியை அவன் தூங்கியே கழித்தான். கண்விழித்தபோது ஒரு பெரும் களேபரத்தை ஏற்படுத்தினான். நான் அவனைப் பற்றிக் கவலைப்பட்டேன். நான் என்னைப் பற்றிக் கவலைப்பட்டேன். எங்கள் குடும்பம் மிகவும் நெருக்கமான குடும்பம். நான் என் சகோதரர்களுடனும் சகோதரியுடனும் இருப்பதை விரும்பினேன். “இந்தப் பிணைப்பைத் தகர்க்கும் விதத்தில் எங்களிடம் அப்படி என்ன மாற்றம் ஏற்பட்டிருந்தது? சூர்ப்பனகை ஏன் எனது பரம எதிரியை மணமுடித்தாள்? நான் என் நிலையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அவனைக் கொன்றபோது, அவள் ஏன் அதைத் தனிப்பட்ட முறையில் எடுத்துக் கொண்டாள்?” இந்த எண்ணங்கள் என் மனத்திற்குள் ஓடிக் கொண்டிருந்தபோதுகூட, நான் அவளுக்காக அனுதாபப்பட்டேன். என்ன இருந்தாலும், இறந்து கிடந்தது அவளது கணவன் அல்லவா? என்னைப் பற்றி அவள் அவ்வாறு உணர்வதற்கு அவளுக்கு உரிமை இருந்தது. “பாவப்பட்டப் பெண், நான் இவ்வளவு கடுமையாக நடந்து கொண்டிருக்கக்கூடாது.” நான் அவளது கணவனைச் சிறையில் அடைத்திருக்க வேண்டும். நான் சற்று விட்டுக் கொடுத்திருக்கலாம்.

வித்யுத்ஜீவனின் முகம் சின்னாபின்னமாக ஆக்கப்பட்டிருந்தது. பத்ரன்மீது எனக்கு ஓர் ஆழமான வெறுப்பு ஏற்பட்டது. “எப்படி அவனால் இப்படி ஒரு காரியத்தைச் செய்ய முடிந்தது? ஓர் அசுர மேட்டுக்குடியினன், ஒரு கீழ்த்தரமான ஒட்டுண்ணியால் ஒரு காட்டு விலங்கைப்போலக் கண்டதுண்டமாக வெட்டப்பட்டிருந்தான்.” வித்யுத்ஜீவனைக் கொலை செய்யும் வேலையை நான் பத்ரனிடன் ஒப்படைத்திருந்தது குறித்து நான் அவமானம் கொண்டேன். இந்த வெற்றியில் எந்த வீரதிரமும் இருக்கவில்லை. “பத்ரனைப்போல நானும் கீழ்த்தரமான ஒருவன்தான். நான் ஏன் பிரஹஸ்தனின் அறிவுரையைச் செவிமடுத்தேன்? சிவசிவா, நான் என் சகோதரிக்கு என்ன காரியம் செய்துவிட்டேன்?” அவளுக்குக் கிடைத்திருந்த இச்சிறு மகிழ்ச்சியைக்கூட நான் ஏன் தட்டிப் பறித்தேன்? இவ்வளவு விலை கொடுக்கப்பட வேண்டிய அளவுக்கு இந்த சாம்ராஜ்யம் மதிப்பு வாய்ந்ததுதானா? என்னுடைய லட்சிய வெறியைத் தணிப்பதற்கு இலங்கையோ அல்லது இந்தியாவோகூடப் போதுமா? எனது மக்களின் சடலங்கள்மீது நான் அப்படி எதைக் கட்டியெழுப்பிக் கொண்டிருந்தேன்? நான் எத்தனை மரணங்களுக்குக் காரணமாக இருக்கப் போகிறேன்? அந்தச் செங்குத்துப் பாறையின்மீது ஆபத்தான நிலையில் தொங்கிக் கொண்டிருந்த குடிசையில் நாங்கள் இதைவிட அதிக மகிழ்ச்சியாக இருக்கவில்லையா? நாம் வளர்ந்து பெரியவர்களாக ஆன பிறகு, நமது குழந்தைப்பருவத்துக் கனவுகளை அடைவதுதான் வாழ்வின் மாபெரும் சீரழிவு.

என் முகத்தின்மீது விழுந்த கடுமையான அறை, எனது பக்குவமற்றத் தத்துவரீதியான சிந்தனையிலிருந்து என்னை உலுக்கியது. நாங்கள் இருந்த அந்த ஒட்டுமொத்த அறையும் என் கண்களுக்கு முன்னால் நீந்திச் சென்றது. நான் நிலை தடுமாறிக் கீழே விழுந்தேன். ஒருசில கணங்கள் என்னால் எதையும் பார்க்க முடியவில்லை. என் தலை வேகமாகச் சுற்றியது. நான் எழுந்து நிற்க முயன்றேன், ஆனால் யாரோ என் கால்களுக்கிடையே எட்டி உதைத்தார்கள். “சண்டாளா!” கும்பகர்ணனின் கத்தல்கள் எனக்குக் கேட்டன. அவை எங்கோ ஒரு கிணற்றின் ஆழத்திலிருந்து வந்ததைப்போல இருந்தது. நான் மீண்டும் எழ முயற்சித்தபோது, என் தலை சுற்றியது. ஆனால் மீண்டும் நான் உதைக்கப்பட்டேன். என் கண்கள் வீங்கின, என் உதடுகள் கிழிந்தன. எல்லாவற்றையும் சமாளித்து எப்படியோ எழுந்து நின்றேன். கீழே விழுந்துவிடாமல் இருப்பதற்காக, அறையின் மத்தியிலிருந்த ஒரு தூணைத் தாங்கிப் பிடித்தேன். மெல்ல மெல்ல, எல்லாம் தெளிவடையத் துவங்கியது. மாரீசனும் மூன்று

வீரர்களும் கும்பகர்ணனை இழுத்துப் பிடிக்க முயற்சித்துக் கொண்டிருந்தனர். அவனது கண்களில் கொலை வெறி தாண்டவமாடியது. அவன் போதையின் பிடியில் இருந்தான். அவன் தன்னை விடுவித்துக் கொண்டு, என்மீது பாய்ந்து மீண்டும் என்னை எட்டி உதைக்க முயற்சித்தான், ஆனால் அவனால் என்னை நெருங்க முடியவில்லை.

நான் பின்னால் திரும்பினேன். என் தந்தையும், அந்த இரண்டு குண்டு பிராமணர்களும் என்னை ஏளனமாகப் பார்த்தபடி அந்தக் காட்சியை ரசித்துக் கொண்டிருந்தனர். என் தாயார் உணர்ச்சிப் பெருக்குடன் தன் தலையைத் தன் கைகளால் அடித்தார். சூர்ப்பனகை எந்த உணர்ச்சியுமின்றித் தனக்கு முன்னால் வெறித்துப் பார்த்தபடி நின்றாள். ஒருசில காவலாளிகள் தங்கள் சிரிப்பை அடக்கிக் கொள்வதற்குப் போராடினர். இந்த மாதிரியான குடும்ப நாடகங்கள் எங்கள் சமுதாயத்தின் கழிசடைகளுக்கு மிகவும் உற்சாகமூட்டின. அன்று மாலைக்குள், ஒட்டுமொத்த நகரமும் இந்த நாடகத்தைப் பற்றித்தான் மிகைப்படுத்திப் பேசிக் கொண்டிருக்கும். எதிர்பாராத இந்தத் தாக்குதலால் ஏற்பட்ட வேதனையைவிட, இதனால் ஏற்பட்ட அவமானம்தான் என்னை அதிகமாகத் தாக்கியது.

எனது முகத்தில் இருள் கூடிக் கொண்டிருந்ததைக் கவனித்த மாரீசன், எனது சகோதரனை அந்த அறையிலிருந்து வெளியே அழைத்துச் சென்றான். கும்பகர்ணனை நான் அந்த இடத்திலேயே கொன்று போட்டிருப்பேன், ஆனால் எனது குற்ற உணர்வு என்னை அழுத்திப் பிடித்தது. எனது ஒவ்வொரு நரம்பிலும் அவமானமும் குற்ற உணர்வும் எரிந்து கொண்டிருக்க, நான் அங்கேயே சிலையாக நின்றேன். கும்பகர்ணன் எனது லட்சியங்களைப் பற்றியும், நான் கொண்டிருந்த மிகையான சுயமுக்கியத்துவ உணர்வைப் பற்றியும், எனது சுயநலத்தைப் பற்றியும், எனது குடிமக்கள்மீதான எனது வெறுப்பைப் பற்றியும், எனது தகுதியற்றப் பெருமிதத்தைப் பற்றியும், எனது உண்மையான மற்றும் கற்பனையான தீயொழுக்கத்தைப் பற்றியும் கத்திக் கூச்சலிட்டான். அவன் என்னைச் சபித்துவிட்டு, நான் இறந்துவிட்டால் நன்றாக இருக்கும் என்றுகூடக் கூறினான்.

அங்கு நடந்து கொண்டிருந்ததை அதற்கு மேல் என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நான் என் அறைக்குச் சென்று, நினைவிழந்து போகும் அளவுக்குக் குடிக்க விரும்பினேன். நான் திரும்பியபோது, சன்னலுக்கு வெளியே தோட்டத்தைப் பார்த்தேன். அங்கு, சமயப்பற்றுமிக்க எனது சகோதரன் விபீஷணன், தன் கண்களை மூடிக் கொண்டு சம்மணமிட்டு அமர்ந்திருந்தான். நிறைவான அற்பப்

புன்னகை ஒன்று அவனது முகத்தில் படர்ந்திருந்தது. "ஒட்டுமொத்தக் குடும்பமும் தாள முடியாத வேதனையில் இருந்தபோது, இவ்வளவு மனநிறைவோடும் மகிழ்ச்சியோடும் இருப்பதற்கு அப்படி என்ன விஷயம் இருந்தது?" நான் அவனருகில் சென்று, அவனது முகத்திலிருந்து அந்த வறட்டுப் புன்னகையைத் துடைத்தெறிய விரும்பினேன். ஆனால் எங்களது ஒட்டுமொத்தக் குலத்திலேயே, அவன்தான் தீங்கற்ற மனிதன். அவனுக்கென்று எந்த லட்சியமும் இருக்கவில்லை. அவன் தன்னைக் குறித்து சுயதிருப்தியுடன் இருந்தான். வாழ்க்கையிடமிருந்தும் அதன் பிரச்சனைகளிடமிருந்தும் அவன் எப்போதுமே விலகி இருந்தான். கும்பகர்ணன், சூர்ப்பனகை, எனது தாயார், மற்றும் என்னோடு ஒப்பிடுகையில், அது ஒரு வரவேற்கத்தக்க மாற்றம்தான். எனக்கு ஓர் எளிய மனம் வாய்த்திருக்கவில்லை. என் வாழ்வில் எனக்கு அந்த ஆசீர்வாதம் கிடைத்திருக்கவில்லை. விபீஷணனின் மனநிறைவையும் அவனது சிக்கலற்ற வாழ்க்கைமுறையையும் கண்டு நான் அவன்மீது பொறாமை கொண்டேன். குறிக்கோளற்ற ஒரு வாழ்க்கைதான் வாழத் தகுதியான ஒரு வாழ்க்கை போலும்! நான் விரும்பியிருந்தால்கூட, என்னால் ஒருபோதும் விபீஷணனாக ஆகியிருக்க முடியாது. ஆனால் நான் ராவணனைத் தவிர வேறு எவராகவும் ஆவதற்கு ஒருபோதும் விரும்பியது கிடையாது. நான் பெருமூச்செறிந்துவிட்டு, எனது தத்துவச் சகோதரனைத் தனது மகிழ்ச்சியான முட்டாள்தனத்துடன் இருக்க விட்டுவிட்டு, என் அறையை நோக்கி நடந்தேன். எனக்கு ஒரு குவளை மதுரசம் தேவைப்பட்டது. நான் என் அறைக்குள் நுழைந்தபோது, மண்டோதரி எங்கள் படுக்கையின்மீது அமர்ந்திருந்தாள். அவள் மினுமினுப்பான பட்டாடைகளும் வைரம் மற்றும் தங்க ஆபரணங்களும் அணிந்திருந்தாள். அவள் ஒரு நடமாடும் கருவூலத்தைப்போல இருந்தாள். என்னைப் பார்த்தக் கணத்தில் அவளது முகம் மலர்ந்தது.

திடீரென்று ஒரு விதமான குற்ற உணர்வும் அவமானமும் என்னைத் தாக்கின. வேதவதியின் தங்க முகம் என் மனத்தில் பசுமையாக இருந்தது. அவளை என்னால் என் மனைவியுடன் ஒப்பிடாமல் இருக்க முடியவில்லை. மண்டோதரி ஒரு கண்டிப்பான விதத்தில் அழகாக இருந்தாலும், அவளிடம் வசீகரம் இல்லை. அவள் கிட்டத்தட்ட ஒரு துறவியைப்போல இருந்தாள். அவளைக் கண்டு நான் பதற்றமும் பயமும் கொண்டேன். அவள் ஒரு கண்ணாடியை என் ஆன்மாவின் முன்னால் நீட்டிப் பிடித்துக் கொண்டிருந்ததுபோலவும், அக்கண்ணாடி எனது மறைவான, அசிங்கமான தழும்புகளையும் மருக்களையும் காட்டிக் கொண்டிருந்ததுபோலவும் நான் உணர்ந்தேன். வெறுப்பையும்

எரிச்சலையும் வெளிப்படுத்தி எனது பயத்தை நான் அவளிடமிருந்து மறைத்தேன். எனது நீண்ட படையெடுப்பின்போது அவளைப் பற்றி நான் ஒருமுறைகூட நினைத்துப் பார்த்திருக்கவில்லை என்பதை உணர்ந்து நான் ஆச்சரியப்பட்டேன். கார்த்த வீர்யார்ஜுனனின் பாதாளச் சிறையில் இருந்தபோதோ அல்லது யுத்தங்களில் ஈடுபட்டிருந்தபோதோகூட நான் அவளைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்திருக்கவில்லை. நான் வேதவதிக்காக மட்டுமே ஏங்கினேன். எனது முதல் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று நான் துடித்தேன்.

நான் ஏகப்பட்டச் சிந்தனைகளுடன் அங்கு அசையாமல் நின்றபோது, மண்டோதரி எழுந்து நின்று வருத்தமாகப் புன்னகைத்தாள். அவளது புன்னகை அவளது முகத்தை ஒளிரச் செய்தது, ஆனால் என்னால் அவளைப் பார்க்க முடியவில்லை. நான் வெளியே பார்த்தேன். என் சகோதரன் தொடர்ந்து தியானித்துக் கொண்டிருந்ததை நான் கண்டபோது, அது என் எரிச்சலை அதிகரித்தது. நான் என் பார்வையை மீண்டும் அறைக்குள் திருப்பியபோது, என்னால் நுகரக்கூடிய அளவுக்கு அவள் எனக்கு மிக அருகில் நின்றாள். மல்லிகை மணமும் கற்பூர மணமும் அவளிடமிருந்து வீசின. அவள் தனது இமைகளை மூடித் திறந்தபோது, அவளது கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது. அவள் நாணத்தோடும் அப்பாவியாகவும் காணப்பட்டாள். அவளைக் கட்டியணைத்து, அவளது அழகான கண்களிலிருந்து கண்ணீரைத் துடைத்துவிட வேண்டும்போல எனக்குத் தோன்றியது, ஆனால் என் கைகள் அசைய மறுத்தன. ஏதோ ஒன்று என்னை இழுத்துப் பிடித்தது.

"ஏய், மதுவை எங்கே வைத்திருக்கிறாய்?" எனது கத்தல் எனக்கே முரட்டுத்தனமாகப் பட்டது. நான் என் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். அது அவளைக் காயப்படுத்தியதை என்னால் உணர முடிந்தது. நான் அவளது முகத்தைப் பார்க்க விரும்பவில்லை. நான் ஓர் இருக்கையை நோக்கி நடந்து சென்று, அதன் முனையில் உட்கார்ந்தபடி, மேற்கூரையை வெறித்துப் பார்த்தேன். "அவள் என்ன மனநிலையில் இருந்தாள்? வித்யுத்ஜீவன் அவளை எப்படி நடத்தினான்? அவள் என்னைத் தேடினாளா?" நூற்றுக்கணக்கான கேள்விகள் என்னுள் வட்டமிட்டன, ஆனால் நான் அமைதியாக இருந்தேன். நான் எனது படையெடுப்புகளைப் பற்றி அவளிடம் பெருமையடித்துக் கொள்ள விரும்பினேன். தேவர்களின் சாம்ராஜ்யங்களில் நான் பார்த்திருந்த வினோதமான, கண்களைக் கவர்ந்த காட்சிகளைப் பற்றியும், வீழ்த்தப்பட்டப் பழங்குடியினரைப் பற்றிய கதைகளையும், சிறை வைக்கப்பட்டபோது நான் அனுபவித்த வேதனையையும், வானர அரசனான வாலியிடம் நாங்கள் அடைந்த படுதோல்வியைப் பற்றியும்,

ஒரு தேவ பிராமணப் பெண்ணுடனான எனது சூறாவளிக் காதல் விவகாரத்தைப் பற்றியும்கூட நான் அவளிடம் கூற விரும்பினேன். ஆனால் நான் வெறுமனே வாயை மூடிக் கொண்டு, மேற்கூரையைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தேன்.

மண்டோதரி எனக்கு மதுவை ஊற்றிக் கொடுத்துவிட்டு, எங்களது பெரிய படுக்கையின் நிழலை நோக்கிப் பின்வாங்கினாள். நான் ஒரு வார்த்தைகூடப் பேசாமல், ஒரே மடக்கில் அதைக் காலி செய்துவிட்டு, பொறுமையின்றி என் விரல்களால் அந்த முக்காலியின்மீது தாளமிட்டேன். அவள் வேகவேகமாக வந்து, இன்னொரு முறை மதுவை ஊற்றினாள். நான் தொடர்ந்து குடித்துக் கொண்டே இருந்தேன். ஓர் அச்சுறுத்தலான அமைதி அந்த ஒட்டுமொத்த அரண்மனையையும் ஆட்கொண்டது. என் தாயாரின் ஓலமோ அல்லது எனது சகோதரியின் ஒப்பாரியோ மட்டும் தூரத்திலிருந்து அவ்வப்போது கேட்டது. அந்தப் பரிதாபமான அழுகைக் குரல்கள் என் காதுகளில் விழுந்தபோது, நான் குற்ற உணர்வு கொண்டேன். மேலும் அதிகமான மதுவை உள்ளிறக்கி, எனது உணர்வுகளை மூழ்கடிக்க முயற்சித்தேன். அப்போது, வித்யுத்ஜீவனின் சடலம் வைக்கப்பட்டிருந்த அறையிலிருந்து வேத மந்திரங்களின் ஒலி எழுந்தது. அந்த பிராமணர்கள் என் மைத்துனனின் ஆன்மாவை தேவ சொர்க்கத்திற்கு அனுப்பி வைக்க அதைத் தயார்படுத்தி கொண்டிருந்தனர். வெண்ணெய், தேன், மற்றும் பலவற்றால் அந்த பிராமணர்கள் உருவாக்கியிருந்த நதிகளை அந்த ஆன்மா கடக்க வேண்டியிருந்தது. வித்யுத்ஜீவனின் உடல் மயானத்திற்குக் கொண்டு செல்லப்படவிருந்ததாகவும், நான் அவனது உடலுக்கு இறுதி அஞ்சலி செலுத்துவதற்காக எல்லோரும் காத்துக் கொண்டிருந்ததாகவும் ஒரு காவலாளி என்னிடம் தெரிவித்தான்.

நான் கோபத்தில் வேகமாக எழுந்ததில், முக்காலியில் இருந்த மதுக் குவளைகள் கீழே உருண்டு விழுந்து, தரையில் விரிக்கப்பட்டிருந்த ஆடம்பரமான கம்பளத்தின்மீது கறைகளை ஏற்படுத்தின. நான் அந்தப் பாவப்பட்டக் காவலாளியைப் பார்த்துக் கத்திவிட்டு, ஒரு குவளையை அவனை நோக்கி எறிந்தேன். நான் எறிந்த வேகத்திற்கு, அது அவனைத் தாக்கியிருந்தால் அவன் அந்த இடத்திலேயே இறந்திருப்பான். அந்தக் குவளையிலிருந்த மது கீழே கொட்டியது. அவன் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத் தலைதெறிக்க ஓடினான். நான் என் அறையின் கதவை ஓங்கிச் சாத்தினேன். பிறகு அந்த அறையின் சன்னலையும் படாரென்று வேகமாக அறைந்து மூடினேன். தோட்டத்தில் இருந்த எனது சகோதரன், தனது கேலிக்கூத்தான யோக நிலையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு இப்போது அங்கிருந்து காணாமல்

போயிருந்தான். ஒருவேளை அவன் அந்தக் கொழுத்த பிராமணர்களுக்கு ஒத்தாசை செய்யப் போயிருக்கக்கூடும்.

அப்போது நான் என் மனைவியைத் திரும்பிப் பார்த்தேன். பயத்தில் அவள் நடுநடுங்கிக் கொண்டிருந்தாள். நான் அவளது இடையைப் பிடித்து இழுத்தேன், ஆனால் என்னை ஆச்சரியப்படுத்தும் விதத்தில் அவள் என்னை வேகமாகத் தள்ளினாள். நான் நிறையக் குடித்திருந்ததால், நிலை தடுமாறிக் கீழே விழுந்தேன். “என்னைத் தொடாதீர்கள்,” என்று அவள் ஒரு தாழ்வான, ஆனால் உறுதியான குரலில் கூறினாள். அவள் ஒரு பாம்பைப்போலச் சீறினாள். நான் ஒரு முட்டாளைப்போல, தரையில் உட்கார்ந்து திருதிருவென்று விழித்தேன். ஒரு பணிவான பெண் வெளிப்படுத்தியிருந்த வலிமையைக் கண்டு குழம்பிப் போன நான், செய்வதறியாமல் திகைத்தேன். “இந்தக் குடி மயக்கத்தில் என்னைத் தொட ஒருபோதும் முயற்சிக்காதீர்கள்.” தன்னைத் தொடுவதற்கு எனக்குச் சவால் விடுவதுபோல, எனக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் விதத்தில், அவள் தன் தலையை நன்றாக உயர்த்தி நின்றாள்.

நான் பெரும் கோபத்துடன் எழுந்து, அவளைப் பிடித்து இழுக்க மீண்டும் முயற்சித்தேன். அவள் அங்கிருந்த ஒரு பழக் கூடையில் இருந்த ஒரு கத்தியை எடுத்து என்னை நோக்கி நீட்டினாள். “ஆஹா, இது எனக்குப் பிடித்திருக்கிறது. அவளுக்குத் துணிச்சல் இருக்கிறது. இது சுவாரசியமான காட்சிதான்,” என்று நான் உள்ளூரக் களித்தேன். அப்போது எனக்கு ஏமாற்றமளிக்கும் விதத்தில், அவள் அந்தக் கத்தியைத் தன் வயிற்றை நோக்கித் திருப்பிவிட்டு, “என்னைத் தொட நீங்கள் ஓரடி முன்னால் எடுத்து வைத்தால் . . .” என்று கூறிவிட்டுக் குலுங்கிக் குலுங்கி அழுதாள். இந்த ஒட்டுமொத்த விவகாரமும் எனக்கு வெறுப்பூட்டியது. அவளை என்னால் மிகச் சுலபமாக என் வசப்படுத்தியிருக்க முடியும், ஆனால் அதற்குமேல் அவள்மீது எனக்கு விருப்பம் இருக்கவில்லை. மாறாக, நான் அங்கிருந்த தலையணைகளைக் கிழித்தேன், பட்டுப் படுக்கை விரிப்பை உருவிக் கீழே எறிந்துவிட்டு, அதை மிதித்துச் சவட்டினேன். சிறிது நேரத்திற்குப் பிறகு, நான் ஒரு முட்டாளைப்போல உணர்ந்தேன். பிறகு என் மனைவியைச் சபித்துக் கொண்டே நான் அந்த அறையைவிட்டு வெளியேறி, எனக்குப் பின்னால் கதவை ஓங்கி மூடினேன்.

நான் ஒரு கொலை வெறித்தனமான, கையாள முடியாத கோபத்தில் இருந்தேன். அந்த நேரத்தில், துரதிர்ஷ்டவசமாக, மாநிறத்தில் ஓர் அழகான வேலைக்காரி, தாழ்வாரத்தைப் பெருக்கிச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தாள். நான் எனது அறையைவிட்டுக் கோபமாக

வெளியேறிக் கொண்டிருந்ததை அவள் பார்த்தபோது, அவள் என்னைப் பார்த்து முட்டாள்தனமாக வாயைப் பிளந்துவிட்டு, பிறகு தனது துடப்பத்தை அங்கேயே போட்டுவிட்டு ஓடத் துவங்கினாள். முதலில் நான் அவளைக் கவனித்திருக்கவில்லை, ஆனால் அவளது பதற்றம் என் பார்வையில் பட்டது. நான் அவளைத் துரத்திக் கொண்டு ஓடி, அவளது இடையைப் பிடித்து இழுத்தேன். எனது உள்ளங்கையால் அவளது வாயை இறுக்கமாக மூடி அவளது கத்தல்களை அடக்கினேன். பிறகு, அருகிலிருந்த ஓர் அறைக்குள் அவளை இழுத்துச் சென்று, அவளது கற்பைச் சூறையாடினேன். முதலில், அவள் என்னுடன் ஒத்துழைக்க மறுத்தாள். நான் தன்னைக் கொலை செய்யவிருந்ததாக அவள் நினைத்தாள் போலும். ஆனால் சிறிது நேரத்திற்குப் பிறகு, அவள் அமைதியாக எனது இச்சைக்குத் தானாகவே உட்பட்டாள். கொலை செய்யப்பட்டுக் கிடந்த தனது கணவனைக் குறித்து எனது சகோதரி அழுது புலம்பிக் கொண்டிருக்க, எனது தாயார் என்னைக் கண்டபடி சபித்துக் கொண்டிருக்க, எனது சகோதரர்கள் எனது மைத்துனனின் சிதைக்கு நெருப்பு வைத்துக் கொண்டிருக்க, எனது மனைவி பரிதாபமாக அழுது புலம்பிக் கொண்டிருக்க, இந்தியாவின் பேரரசனான நான், ஒரு கீழ்ச்சாதி வேலைக்காரியுடன் மும்முரமாக இருந்தேன். எனது அந்தப் பாவம் மற்றும் குற்ற உணர்வின் விளைவாக, கருப்பான, குண்டான, அசிங்கமான எனது மகன் அதிகாயன் பிறந்தான்.



# 34

## கலவரம்

பத்ரன்

நான் முழுவதுமாகக் குணமடைவதற்கு எனக்குக் கிட்டத்தட்ட ஓராண்டு ஆனது. அசுரர்கள் கொள்ளையடித்துக் கொண்டும் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டும் இருந்தபோது, எனது குடிசை நாசமடைந்தது. ராவணனும் வித்யுத்ஜீவனும் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்காக் கொடூரமாக நடந்து கொண்ட அந்த நாட்களில், எனது குடியிருப்பு மட்டுமன்றி, பெரும்பாலான வீடுகளும் கடைகளும்கூட எரித்துச் சாம்பலாக்கப்பட்டன. நான் சில நாட்கள் மனக்கசப்போடு இருந்தேன். ராஜ வீதியின் பக்கவாட்டில் இருந்த ஒரு பெரிய ஆலமரத்திற்கு அடியில் நான் அமைத்திருந்த ஒரு சிறிய குடிசைக்கு மாலா திரும்பியிருந்தாள். அதற்கு முன்பு, நான் என்னால் முடிந்த அளவுக்கு அவளைப் பற்றி விசாரித்து, அவள் அந்த அரண்மனையில் ஒரு சாதாரண வேலைக்காரியாக இருந்ததைக் கண்டுபிடித்திருந்தேன். ராவணன் அவளைக் கருவுறச் செய்திருந்ததாகவும், அவர் அவளைத் தனது இரண்டாவது ராணியாக

ஆக்கியிருந்ததாகவும் வதந்திகள் நிலவின. நான் பொறாமை கொண்டேன், மிகுந்த வேதனை அடைந்தேன். நான் அவளைக் கொலை செய்யத் துடித்தேன், ஆனால் அவள் இப்போது மிக உயரத்தில் இருந்தாள்.

அப்போது ஒருநாள் அவள் திரும்பி வந்தாள். அவள் ஒரு ராணியைப்போலக் காணப்படவில்லை. அவள் சாதாரணமாகவும் அழுக்காகவும் இருந்தாள். சில கந்தல் துணிகள் அடங்கிய ஒரு மூட்டை அவளது தோள்களின்மீது இருந்தது. மறைந்து கொண்டிருந்த அவளது அழகு, அவளை அசிங்கமானவளாக ஆக்கிக் கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. அவளது நிலை பரிதாபகரமானதாக இருந்தது. அவளது நம்பிக்கைத் துரோகத்தால் எனக்கு ஏற்பட்டிருந்த கோபம் ஒரு வேதனையாக மாறியது. அவள் சிறிதளவு உணவிற்காகவும் சிறிய இன்பங்களுக்காகவும் தன்னை விற்றுக் கொண்டிருந்திருக்கக்கூடும். அல்லது, ஓர் அழகான, ஆனால் ஏழைப் பெண், வித்யுத்ஜீவன் மற்றும் ராவணனைப் போன்றவர்களுக்கிடையே உயிர் பிழைத்து இருப்பதற்கு அதுதான் ஒரே வழியாக இருந்திருக்கக்கூடும். நான் ராவணனுக்காக எனது உயிரைப் பணயம் வைத்து எனது வீரத்தை வெளிக்காட்டி வெற்றிக் கொடி நாட்டிவிட்டுத் திரும்பி வந்த பிறகு, ஒருசில மாதங்கள், கோபத்தாலும் சுயபச்சாதாபத்தாலும் பொறாமையாலும் நான் உள்ளூரக் கொதித்துக் கொண்டிருந்தேன். ஆனால் மாலா என்னிடம் திரும்பி வந்த நேரத்தில், நான் என் கோபம் தணிந்து அமைதியடைந்திருந்தேன். அவள் என் குடிசைக்குத் திரும்பிய அந்தக் குறிப்பிட்ட நாளன்று, எனக்குக் கடும் காயச்சல் அடித்துக் கொண்டிருந்தது. அவள் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் என்னைக் கவனித்துக் கொள்ளத் துவங்கினாள். அவள் யாசித்திருந்தாளா அல்லது திருடியிருந்தாளா என்று எனக்குத் தெரியாது, ஆனால் அவள் சிறிது அரிசிக் கஞ்சியைத் தயாரித்து எனக்கு ஊட்டினாள். என்ன காரணமோ தெரியவில்லை, நான் அழத் துவங்கினேன். அவள் அப்போதும் என்னிடம் எதுவும் பேசாமல், வெறுமனே ஓர் இலையைக் கொண்டு எனக்கு அந்தக் கஞ்சியை ஊட்டிக் கொண்டே இருந்தாள்.

நான் முழுமையாக நலமடைந்தபோது, நான் அவளிடம் கேட்க விரும்பியிருந்த கேள்வியைக் கேட்பதற்கு மிகவும் தாமதமாகிவிட்டிருந்தது. அவள் எனக்குத் தேவைப்பட்டாள். நானும் அவளுக்குத் தேவைப்பட்டேன் என்று நான் நினைக்கிறேன். மெல்ல மெல்ல, நான் ஒரு வழக்கத்திற்குள் தஞ்சம் புகுந்தேன். ஓரளவு அமைதி நிலவிய ஒரு காலகட்டம் அது. பெரும்பாலான நாட்கள், குறைந்தபட்சம் ஒரு வேளைச் சாப்பாட்டிற்காவது எங்களால் சம்பாதிக்க முடிந்தது. நகரச்

சந்தைகள், நகரின் தெருக்கள் மற்றும் குறுகிய, வளைவான சந்துகள், அரண்மனை, கோவில்கள், புறநகர்ப் பகுதிகள் ஆகிய இடங்களுக்கு அடிக்கடி விஜயம் செய்த பிச்சைக்காரர்களும் கதியற்றோரும் மந்திரவாதிகளும் பாம்பாட்டிகளும் கழைக்கூத்தாடிகளும் நாடோடிகளும் வழக்கமாக ஆலமரத்தின் அடியில் ஓய்வெடுப்பதற்காக வந்தனர். அது பயணியரின் இயல்பான ஓய்வெடுக்கும் இடமாக இருந்தது. சலிப்பின் காரணமாக, நான் சில உணவுப் பதார்த்தங்களைத் தயாரித்து, அந்தப் பயணியருடன் அவற்றைப் பகிர்ந்து கொண்டேன். மாலாவின் உதவியுடன், ஒரு கூரையுடன்கூடிய ஒரு கடையை அங்கு நான் அமைத்தேன். நாங்கள் அதில் இனிப்புகளையும் மற்றப் பண்டங்களையும் விற்றோம். மாலா அவ்வப்போது அரண்மனையில் சில எடுபிடி வேலைகளைச் செய்து வந்தாள். அவள் தனது மகன் அதிகாயனையும் அரண்மனைக்குத் தன்னுடன் எப்போதும் அழைத்துச் சென்றாள். அதற்காக நான் அவளை வெறுத்தாலும்கூட, நிறைவான வயிறு தந்த அமைதியையும் இன்பத்தையும் நான் அனுபவித்து வெகுநாட்கள் ஆகியிருந்ததால், ஒழுங்காகச் சென்று கொண்டிருந்த எங்கள் வாழ்க்கையில் பிரச்சனையை ஏற்படுத்தி, அதைச் சீர்குலைக்க நான் விரும்பவில்லை.

பண்டங்களையும் மற்ற உணவு வகைகளையும் சமைப்பது மற்றும் பரிமாறுவதற்கான பொறுப்பை மாலா ஏற்றுக் கொண்டாள். நான் எனக்குள் இன்னொரு திறமையைக் கண்டுபிடித்திருந்தேன். ஒரு சிறிய கட்டணத்திற்குப் பயணியரின் ஆடைகளை நான் துவைத்துக் கொடுத்தேன். எந்தச் செடி அல்லது எந்த விதை ஆடைகளைச் சுத்தம் செய்தது என்பதை நான் அறிந்திருந்தேன். எனவே நான் தொடர்ந்து அவற்றைக் கொண்டு பரிசோதித்தேன். ஓரிரு முறைகள், உடைகள் தமது நிறத்தை இழந்தன, ஆனால் விரைவில், சரியான அளவில் அவற்றைப் பயன்படுத்துவது எப்படி என்பதை நான் கண்டுபிடித்தேன். நான் ஒரு நல்ல சலவைக்காரன் என்ற பெயர் எல்லா இடங்களிலும் பரவியது. எனது வாடிக்கையாளர்களும் மாறினர். பணக்கார வணிகர்கள் தங்கள் விலையுயர்ந்த, சீனாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டப் பட்டாடைகளையும், இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டக் காலிகோ அல்லது மஸ்லின் ஆடைகளையும் என்னை நம்பி ஒப்படைக்கத் துவங்கினர்.

ஒரு நடைபாதைக் கடை, விரைவில், கிசுகிசுக்களுக்கும் கொண்டாட்டங்களுக்குமான ஒரு மையமாக மாறியது. அரண்மனையில் நடைபெற்ற மிகப் பெரிய விருந்துகளில் என்னால் கலந்து கொள்ள முடியாதது குறித்து நான் வருத்தப்பட்டாலும்கூட, என் தகுதிக்கு மீறி

ஆசைப்பட்டதற்காக என்னை நானே கண்டித்துக் கொண்டேன். தங்களுடைய தணியாத லட்சியங்களை அடைவதற்கு எவனோ ஒருவனைப் பலி கொடுக்கத் தயாராக இருந்த, அளவுக்கதிகமான அகங்காரம் கொண்ட வினோதமான அரசர்களுடனும் மேன்மக்களுடனும் சுற்றித் திரிந்து நான் பட்டது போதும். இங்கு, வாழ்க்கை எளிமையானதாகவும் வெளிப்படையானதாகவும் இருந்தது. எங்களுடைய சொந்தக் கைகளைக் கொண்டு நாங்கள் உருவாக்கியிருந்த இந்தச் சிறிய, கூரையுடன்கூடிய குடிசைக்கு நான்தான் முதலாளி.

இளவரசி சூர்ப்பனகை இலங்கையை விட்டுவிட்டுத் தனது பெற்றோருடன் இந்தியாவிற்குச் சென்றுவிட்டிருந்ததாக நான் கேள்விப்பட்டேன். தனது மூத்த சகோதரனான ராவணனைத் தான் இனி ஒருபோதும் பார்க்கப் போவதில்லை என்று அவள் சபதம் செய்திருந்தாள். அது மிகைப்படுத்திக் கூறப்பட்டதாக இருக்கக்கூடும், ஆனால் அவள் தனது சகோதரனையும் இலங்கையையும் அசுரர்களையும் வண்ண மயமான வார்த்தைகளால் சபித்துவிட்டு, வருணனின் கப்பலில் ஏறியிருந்தாள். அரசன் இவற்றால் பாதிக்கப்பட்டிருந்தாரா இல்லையா என்று கண்டுபிடிக்க முடியவில்லை. அவர் எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டாமல் இருந்தார். சூர்ப்பனகை அவரை ராட்சஸன் என்று அழைத்திருந்தாள். அந்தப் பெயர் எல்லோர் மனத்திலும் தங்கிவிட்டபோதிலும், யாரும் அவரது முகத்திற்கு நேராக அதைச் சொல்லத் துணியவில்லை.

அரண்மனையில் நடந்த அடுத்தப் பெரிய நிகழ்வு, இளவரசர்கள் கும்பகர்ணன் மற்றும் விபீஷணனின் திருமணங்கள்தான். அது ஒரு பெரிய, கோலாகலமான கொண்டாட்டமாக இருந்தது. ஒட்டுமொத்த நகரமும் அதில் கலந்து கொண்டது. நானும் அதில் கலந்து கொள்ள விரும்பினேன், ஆனால் எனக்கென்று தனிப்பட்ட அழைப்பிதழ் எதுவும் அனுப்பப்பட்டிருக்கவில்லை என்பது குறித்து நான் வெறுப்போடு இருந்தேன். ஒரு சாதாரண அசுரப் பிச்சைக்காரனைப்போல அங்கு செல்ல எனது அகங்காரம் எனக்கு இடம் கொடுக்கவில்லை. திருமணத்தன்று இரவு, அசுர மேன்மக்கள் அனைவரும், கடல் கடந்து வரவழைக்கப்பட்டிருந்த மதுவை மூக்கு முட்டக் குடித்தனர். ஆனால் எங்களைப் போன்ற சாமானியர்கள், நாங்களாகவே இறக்கிய கள்ளைக் குடித்தோம். எனது வாடிக்கையாளர்களான பாம்பாட்டிகளும் தெரு மந்திரவாதிகளும் கழைக்கூத்தாடிகளும், தங்களுடைய வித்தைகளின் மூலம் ஈட்டிய பணத்தை, நான் தனிச்சிறப்புடன் தயாரித்த நாட்டுச் சாராயத்திற்காக என்னிடம் கொடுத்தனர்.

அரண்மனைக் கிசுகிசுக்கள் எப்போதும் சுவாரசியமாக இருந்தன. மேல் நிலையில் இருந்தவர்கள் மற்றும் வலிமை மிக்கவர்களை உள்ளடக்கிய வம்புதும்புகளில் நாங்கள் எப்போதுமே மகிழ்ச்சியில் திளைத்தோம். இதில் எல்லோருக்கும் மிகவும் சுவாரசியமாக அமைந்தது, அரண்மனையைப் பெருக்கிச் சுத்தப்படுத்திய ஒருத்தியைப் பற்றியது. அவள் ஓர் அசிங்கமான, கருப்பான குழந்தையைப் பெற்றெடுத்திருந்ததாகவும், அது ராவணனின் சாயலில் இருந்ததாகவும் கூறப்பட்டது. முதலில் அரசன் அவளைக் கற்பழித்திருந்ததாகவும், ஆனால் பின்னாளில் அவள் அவரது வைப்பாட்டியாக ஆகியிருந்ததாகவும் ஒரு வதந்தி நிலவியது. இக்கதைகள் அனைத்தையும் என் கடைக்கு வந்த வணிகர்களும் விற்பனையாளர்களுமே கூறினர். இந்தப் பேச்சு எழுந்தபோதெல்லாம், நான் முற்றிலும் அமைதி காத்தேன். அரசியால் அரசனை மகிழ்விக்க முடியவில்லை என்பதால், ராவணன் அந்த வேலைக்காரிக்கு அழைப்பு விடுத்தார் என்று கூறும் அளவுக்கு அந்த வதந்தி விஸ்வரூபம் எடுத்தது. விரைவில், மாலாதான் அந்த வேலைக்காரி என்று எல்லோருக்கும் தெரிந்துவிட்டது. எனவே, அவர்கள் அவளை இன்னும் அதிகமாகச் சீண்டத் துவங்கினர்.

அரண்மனைக்குப் போகக்கூடாது என்று நான் பல முறை அவளைத் தடுக்க முயற்சித்தேன், ஆனால் அவள் எனக்குத் தெரியாமல் எப்படியோ அங்கு சென்றாள். அவள் திரும்பி வந்தபோது, நான் அவளுக்கு நரக வேதனையைக் கொடுத்தேன், ஆனால் அவள் என்னுடைய மிதிகளையும் அடிகளையும் அசாத்தியமான விதத்தில் பொறுத்துக் கொண்டாள். ஒருநாள், ராவணன் தன்னைக் கற்பழித்திருந்ததையும், அதிகாயன் அவரது குழந்தைதான் என்பதையும் அவள் என்னிடம் ஒப்புக் கொண்டாள். ஆனால் அந்த நிகழ்விற்குப் பிறகு, அரசன் ஒருபோதும் தன்னைக் கண்டுகொள்ளவில்லை என்றும், அவர் எப்போதும் தன்னை உச்சபட்ச வெறுப்போடு மட்டுமே நடத்தியிருந்ததாகவும் அவள் கூறினாள். அரசி மண்டோதரிதான் தன்னை அரண்மனைக்கு வரும்படி கட்டளையிட்டதாகவும் அவள் தெரிவித்தாள். அதிகாயன்மீது அரசியார் கொண்டிருந்த அன்புதான் மாலாவை அரண்மனைக்கு இழுத்துச் சென்றது. அவளது வழக்கமான அரண்மனை விஜயங்களுக்குப் பிறகு அவளை உடல்ரீதியாக நான் வதைத்தது வெறும் ஒரு சம்பிரதாயமாக மாறியது. எங்களுடைய திருமண வாழ்க்கை எப்படியோ தப்பிப் பிழைத்துக் கொண்டிருந்தது, அதைத் திருமணம் என்று கூற முடியும் பட்சத்தில்!

அதிகயன் பிறந்த ஒரு மாதத்தில், அரசியார் ஓர் அழகான ஆண் குழந்தையை ஈன்றெடுத்தார். மழைக்காலத்தின்போது, ஓர் இருட்டான,

இடிமுழக்கத்துடன்கூடிய இரவில் அவன் பிறந்ததால், அவனுக்கு மேகநாதன் என்ற பெயர் சூட்டப்பட்டது. ‘இடி முழக்கம் போன்ற குரலைக் கொண்டவன்’ என்பது அதன் பொருள்.

விரைவில், இளவரசன் கும்பகர்ணனும் ஓர் அழகிய பெண் குழந்தைக்குத் தகப்பனானான். விபீஷணனும் ஓர் ஆரோக்கியமான, வலிமையான பெண் குழந்தைக்குத் தந்தையானான். இந்த அனைத்து நிகழ்வுகளும் எங்களுக்கு முக்கியமானவையாக இருந்தன. அரச குடும்பத்தின் வாரிசுகள்மீது நாங்கள் அக்கறை கொண்டிருந்தது அதற்குக் காரணமல்ல, மாறாக, இலங்கையிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் அவை பலரைக் கவர்ந்திழுத்தன. அவர்களுடைய வருகை எங்கள் வியாபாரத்திற்கு நன்மை பயப்பதாக இருந்தது. மெதுவாகவும் சீராகவும், அரசன் ராவணன், அனைத்து மக்களின் மதிப்பையும் பெற்றார். ஒருவேளை, அவர் தனது இயல்பான லட்சியத்தை அடக்கிக் கொண்டிருக்கக்கூடும், அல்லது அவரது மகனின் பிறப்பு, போர் குறித்தும் புதிய எல்லைகளைக் கைவசப்படுத்துவது குறித்தும் அவர் கொண்டிருந்த தணியாத தாகத்தைத் தீர்த்திருக்கக்கூடும்.

மெல்ல மெல்ல, இலங்கைத் தீவு உட்பட, இந்தியாவின் பல பகுதிகள், முன்பொரு காலத்தில் தாம் அனுபவித்தச் செழிப்பை மீண்டும் அடையத் துவங்கியிருந்தன. வர்த்தகம் மீண்டும் கொழிக்கத் துவங்கியது. இதில் ஆச்சரியகரமான விஷயம் என்னவென்றால், கடைந்தெடுத்தக் கொடுமைக்காரர்கள் என்று நான் கருதிய மக்கள் அனைவரும் தலைசிறந்த நிர்வாகிகளாக இருந்தனர். நெடுஞ்சாலைகளிலும் துறைமுகங்களிலும் காவலர்களை நிலைப்படுத்துவது என்று ருத்ராக்கன் மேற்கொண்ட நடவடிக்கையை மக்கள் துவக்கத்தில் எதிர்த்தனர். இக்காவலர்கள் அடக்குமுறையாளர்களாகவும் திருடர்களாகவும் ஆகிவிடக்கூடும் என்று அவர்கள் பயந்ததுதான் அவர்களது எதிர்ப்புக்குக் காரணமாக இருந்தது. ஆனால் ருத்ராக்கன், ஊழல் புரிந்த காவலர்களுக்குப் பொதுமக்கள் முன்னிலையில் மரண தண்டனையை நிறைவேற்றியதன் மூலம், தனக்குக் கீழே வேலை பார்த்த அனைத்துக் காவலர்களிடமும் ஒரு பெரும் பயத்தை ஏற்படுத்தி வைத்திருந்தான். இதன் விளைவாக, மக்களிடம் காவலர்கள் பணத்தைச் சூறையாடுவது உடனடியாக நின்றது. குறைந்தபட்சம், தலைநகருக்கு அருகே இருந்த பகுதிகளில் அவர்கள் அவ்வாறு நடந்து கொள்ளத் துணியவில்லை. ஒரு பிரதம மந்திரி என்ற முறையில், பிரஹஸ்தன், ஒட்டுமொத்த மந்திரிகள் குழுவையும் தனது உறுதியான கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருந்தான்.

ஒரு மனிதனாக மக்கள் அவனை ஒருபோதும் விரும்பாமல் போனபோதும்கூட, அவனது தனிப்பட்ட நாணயத்தை அவர்கள் மதித்தனர். ஒரு கணக்காளனாகத் தடுமாறிக் கொண்டிருந்த ஜம்புமாலி, ஒரு பக்குவப்பட்ட நிதியமைச்சராக உருவானான். அவனது வரிக் கொள்கைகளைப் பற்றி எங்களுக்கு எள்ளளவும் புரியவில்லை என்றபோதிலும், எனது சலவைக் கடைக்கு விஜயம் செய்த பணக்கார வணிகர்கள் எப்போதும் அவனை வாயாரப் புகழ்ந்தனர். அவன் உண்மையிலேயே மிகவும் சிறந்தவனாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், இந்தச் செட்டியார்கள், பண விஷயத்தில் எவ்வளவு கருமிகளாக இருந்தனரோ, ஒருவனைப் புகழ்வதிலும் அவ்வளவு கருமிகளாக இருந்தனர்.

மருத்துவமனைகள், கல்வி நிறுவனங்கள், அறக்கட்டளைகள் ஆகியவற்றுக்கு மாரீசன் அமைச்சராகப் பொறுப்பு வகித்தான். மக்கள் அவனைப் பெரிதும் விரும்பினர். மிகவும் கொந்தளிப்பான சமயங்களில்கூட அவன் காட்டிய பரிவு, குறிப்பிடத்தக்கதாக இருந்திருந்தது. எனவே, அமைதி நிலவிய காலகட்டங்களில் அவன் மிகச் சிறப்பாக மிளிர்ந்தான். அனாதை ஆசிரமங்களையும் மருத்துவமனைகளையும் அவன் நேரில் சென்று பார்வையிட்டான். அவன் கண்டிப்பானவனாகவும், அதே சமயத்தில், அன்பானவனாகவும் இருந்தான். ராவணனின் மாபெரும் புகழுக்காகத் தங்களது இன்னுயிரை நீத்த வீரர்களின் குழந்தைகளுக்காக அனாதை விடுதியுடன்கூடிய ஒரு பள்ளிக்கூடத்தை அவன் துவக்கினான். அது ஒரு சிறிய விஷயமாக இருந்தாலும்கூட, ஒரு மந்திரி, ஏழைகள்மீதும் கீழ்நிலையில் இருந்தவர்கள்மீதும் கரிசனம் காட்டினார் என்ற எண்ணமும், போரில் இறந்தவர்கள் குறித்து அரசாங்கம் நன்றியுணர்வுடன் இருந்தது என்ற எண்ணமும் புத்துணர்ச்சியூட்டுவதாக இருந்தது. அரசாங்கம் மனிதநேயத்துடன் நடந்து கொண்டதுபோலத் தோன்றியது.

அரசனின் மாமனார்தான் நகர்ப்புற வளர்ச்சி மற்றும் நிர்வாகத்திற்கு மந்திரியாக இருந்தார். அவர் எல்லோரின் நகைப்புக்கும் ஆளானார். அவர் அதுவரை யாரும் பார்த்திராத அல்லது யாரும் கட்டியிராத மாபெரும் நகரங்கள் மற்றும் பிரம்மாண்டமான சாலைகள் குறித்தத் திட்டங்களை வரைந்தார். யாரும் அவரைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளவில்லை. யாரும் அவரை நம்பவில்லை. ஆனால் அவரது குறைபாடுகளுக்காகவும் ஞாபகமறதிக்காகவும் மக்கள் அவரைப் பொறுத்துக் கொண்டனர். நெடுஞ்சாலைகளிலும் தெருக்களிலும் தனக்குத் தானே எதையோ முணுமுணுத்துக் கொண்டு அவர் நடந்து போவதைக் காண்பது மக்களுக்குப் பழக்கமாகியிருந்தது. இந்தியாவில்

இருந்த அவரது மையத்தைச் சேர்ந்த மாணவர்கள் ஓரிருவர் அவருக்குப் பின்னால் மரியாதையோடு சென்றனர். அவர் அவ்வப்போது நின்று, சிக்கலான படங்களை மணலில் வரைந்தார்.

அடிக்கடி, தெருவோரச் சிறுவர்கள் இந்த சுவாரசியமான கும்பலைச் சுற்றிக் குழுமினர். ஆனால் நல்லியல்பு கொண்ட அந்தப் பேராசிரியர், தன்னைச் சுற்றி அந்தச் சிறுவர்கள் இருந்ததுகூடத் தெரியாமல், சிக்கலான கணிதக் கோட்பாடுகள் நிறைந்த தன் சொந்த உலகத்தில் மூழ்கிப் போயிருந்தார். சில சமயங்களில், அச்சிறுவர்களில் யாரேனும் ஒருவனின் தலையை லேசாகக் கலைத்துவிட்டு, எதையோ முனகிக் கொண்டு, கூட்டத்தினர் தன்னைப் பார்த்து ஊளையிட்டதைப் புறக்கணித்துவிட்டுக் காற்றில் கற்பனையான படங்களை வரைந்தார். அவரது வேடிக்கைக்காக மக்கள் அவரைப் பொறுத்துக் கொண்டனர். ஆனால் ஒருநாள், அரசன், தனது சாம்ராஜ்யத்தின் மேற்குக் கடற்கரையின் வடகோடி முனையில் அமைந்த கோகர்ணம் எனும் இடத்தில் ஒரு பிரம்மாண்டமான கோவிலைக் கட்டும் பொறுப்பை அந்தப் பேராசிரியரிடம் ஒப்படைத்தார். கட்டி முடிக்கப்பட்ட அந்தக் கோவிலைப் பார்த்தப் பிறகு, அந்தப் பேராசிரியரைக் கேலி செய்ய எவனும் துணியவில்லை. அது ஓர் அற்புதமான கலைப் படைப்பு. சொர்க்கத்திலிருந்து விழுந்திருந்த ஓர் அழகான, ஒப்புயர்வற்ற ஆபரணம்போல, அக்கோவில், கடற்கரையில் கம்பீரமாக நின்றது. ஆனால் அது பல காலத்திற்குப் பிந்தைய விஷயம்.

துவக்கத்தில் விபீஷணனை எல்லோரும் விரும்பினர். எல்லோரும் மறந்துவிட்ட, தெருவில் அமைந்த சிவன் கோவில்களையும், கீழ்நிலையில் இருந்த கடவுள்களுக்கான கோவில்களையும் மறுசீரமைக்க அவன் மேற்கொண்ட முயற்சிகளையும், கோவில் நிர்வாகத்தைச் சீரமைக்க அவன் மேற்கொண்ட நடவடிக்கைகளையும் கண்டு பலர் பிரமித்தனர். ஆனால் விரைவில், அவன் பல சிறிய விஷ்ணு கோவில்களை நிர்மாணித்து, வினோதமான தேவ வழக்கங்களை அறிமுகப்படுத்தத் துவங்கினான். அவன் சில பிராமணர்களையும்கூட அழைத்து வந்தான். அவர்கள் தங்களது கேடுகெட்ட தேவப் பாரம்பரியமான சாதி அமைப்புமுறையை அசுரச் சமுதாயத்திற்குள் மெல்ல மெல்ல அறிமுகப்படுத்தத் துவங்கினர். விபீஷணனைக் கண்டு பிரமித்த முட்டாள்கள் விரைவில் இந்த பிராமண வழக்கங்களை சுவீகரித்தனர். மேட்டுக்குடியைச் சேர்ந்த மக்கள், அதிக எண்ணிக்கையில் பிராமணர்களாக மாறத் துவங்கினர். ஒரு பிராமணன் எப்போதும் அணிந்திருக்க வேண்டிய பூணூலை அவர்கள் அணிந்தனர். பயனுள்ள வேலையைச் செய்த எவரொருவரையும் இவர்கள் இழிவாகப்

பார்க்கத் துவங்கினர்.

புதிதாக பிராமணர்களாக மாறியவர்கள், மற்றவர்கள் தங்களைத் தீண்டிவிடாமல் இருப்பதற்காக மேற்கொண்ட நடவடிக்கைகள் துவக்கத்தில் வேடிக்கையாக இருந்தன. எங்களைப் போன்ற ரவுடிகள், தங்களது தூய்மைக் குளியலை முடித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த சுத்தமான பிராமணர்களை கட்டியணைப்பதற்கோ அல்லது தொடுவதற்கோ அவர்களை நோக்கி விரைந்தோம். எங்களில் ஒருவன், அந்தத் தூய்மையான பிராமணர்களில் ஒருவனைத் தொட்டுவிட்டால், அந்த ஒட்டுமொத்தக் கும்பலும் எங்களைச் சபித்துவிட்டு, எங்கள் சிரிப்பிற்கும் குதூகலத்திற்கும் இடையே, தங்கள் உடல்களை மீண்டும் தூய்மைப்படுத்துவதற்காக நதியை நோக்கி விரைந்து செல்லும். பல நாட்கள், அவர்களைப் பத்துப் பன்னிரண்டு முறை குளிக்கச் செய்து நாங்கள் ஏராளமான குதூகலத்தை அனுபவித்தோம்.

ஆனால், முட்டாள்களான நாங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டுக் கொண்டிருந்ததை நாங்கள் உணர்ந்தபோது, காலம் கடந்துவிட்டிருந்தது. முக்கியமான அரசாங்கப் பதவிகள் அனைத்தையும் பிராமணர்களுக்கு ஒதுக்கி வைப்பதற்கு விபீஷணன் ஒரு ரகசிய முயற்சியில் ஈடுபட்டிருந்தான். மூன்று வருடங்களுக்குள், கிட்டத்தட்ட அனைத்து வர்த்தக வேலைகளும் வடக்கிலிருந்து வந்து குடியேறிய பிராமணர்களின் கைகளிலோ அல்லது பிராமணர்களாக மாறியவர்களின் வசமோ இருந்தன. மக்களிடையே கோபம் அதிகரித்தது. கொழுத்துப் போயிருந்த, வெள்ளைத்தோல் கொண்ட பிராமணர்கள், வட இந்தியாவிலிருந்து கூட்டங்கூட்டமாக வந்து இறங்கத் துவங்கினர். விரைவில், முக்கியமான நகரங்களிலும் கிராமங்களிலும் பிராமணக் குடியிருப்புகள் முளைத்தன.

தேவர்களின் வழக்கங்களை ஏற்றுக் கொள்ள மறுத்த வர்த்தகர்கள் மெல்ல மெல்ல அரண்மனையிலிருந்து ஓரங்கட்டப்பட்டனர். சாலைகள் மற்றும் கோவில்களுக்கான பொது ஒப்பந்தங்கள் அனைத்தும் பிராமணர்களாக மாறியவர்களுக்கு மட்டுமே ஒதுக்கீடு செய்யப்பட்டன. பிறகு, சாலைகளைப் பயன்படுத்துவதற்கு எங்களைப் போன்றவர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டது. எங்கள் சொந்த நாட்டில் விஷயங்கள் நடந்தேறிக் கொண்டிருந்த விதத்தைக் கண்டு மக்கள் கோபமும் வெறுப்பும் கொண்டதை என் கடையில் இருந்தபடி என்னால் காண முடிந்தது. புதிதாக நிர்மாணிக்கப்பட்ட பிரம்மாண்டமான கோவில்களில் நுழைவதற்கு எங்களுக்கு அனுமதி இருக்கவில்லை. பழைய பூசாரிகள் அனைவரும் வெளியே தள்ளப்பட்டு, அவர்களுக்குப் பதிலாக, பிராமணர்கள் அவசர அவசரமாக நியமிக்கப்பட்டனர்.

எல்லோரும் சமமாக நடத்தப்பட்ட மகாபலியின் ஆட்சியைப் பற்றி மக்கள் ஏக்கத்தோடு பேசினர். கடந்தகாலப் புகழ்மீது தூசிகள் குவிந்தன.

அடக்கி வைக்கப்பட்டக் கோபம் ஒருநாள் பொங்கி வெடித்தது. சந்தையில் கசாப்புக் கடைக்காரன் ஒருவன் ஒரு விவசாயியுடன் ஒரு வயதான பசுவை விலைபேசிக் கொண்டிருந்தபோது அது நிகழ்ந்தது. மகா சிவராத்திரிக்கு இரண்டு நாட்கள் இருந்தன. அந்தக் கொண்டாட்டத்திற்கான பொருட்களை வாங்குவதற்காகச் சந்தையில் மக்கள் கூட்டம் பெருகி வழிந்தது. பலி கொடுப்பதற்காகவும் உண்டு மகிழ்வதற்காகவும் பசுக்களையும் கோழிகளையும் ஆடுகளையும் அவர்கள் வாங்கிக் கொண்டிருந்தனர். பசுக்களை உட்கொள்வதைக் கைவிடுமாறு, பருத்துக் கொழுத்த பிராமணர்கள் மக்களிடம் வலியுறுத்திக் கொண்டிருந்தனர். அந்தக் கசாப்புக் கடைக்காரன் அந்த விவசாயியிடமிருந்து அப்பசுவை வாங்கியபோது, பிராமணப் பூசாரிகள் குழு ஒன்று அவனிடம் வந்து, அந்தப் பசுவைத் தனியாக விட்டுவிடுமாறு வலியுறுத்தினர். அதை ஒரு பிராமணனுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டுத் தனது பாவங்கள் அனைத்தையும் களையுமாறு அவர்களில் ஒருவன் பரிந்துரைத்தான். துவக்கத்தில் அந்தக் கசாப்புக் கடைக்காரன் ஆச்சரியமடைந்தான். ஒரு சாதாரணமான, முட்டாள் விலங்கு ஒன்றின்மீது அவர்கள் காட்டிய அன்பைப் பற்றி அவன் அவர்களிடம் பேசினான். ஏற்கனவே நன்றாகக் குடித்திருந்த அவன், அந்த பிராமணர்களின் தலைவனைக் கட்டியணைத்தான். அப்போது அவர்கள் அனைவரும் அவன்மீது விழுந்து, அவனை எட்டி உதைக்கவும் அடிக்கவும் துவங்கினர்.

இதற்கிடையே, அந்தக் கசாப்புக் கடைக்காரன் தனது பட்டாக்கத்தியை எடுத்துச் சரமாரியாக வெட்டத் துவங்கினான். விரைவில், பலர் அந்தச் சண்டையில் சேர்ந்து கொண்டனர். அந்த பிராமணர்கள் அந்த இடத்தைவிட்டு ஓட்டமெடுத்தப் பிறகுதான் அந்தச் சண்டை முடிவுக்கு வந்தது. மூன்று பிராமணர்களும் அந்த விவசாயியும் அந்தச் சந்தையின் நடுவில் இறந்து கிடந்தனர். அந்தக் கசாப்புக் கடைக்காரன், புதிதாகத் தான் கண்டுகொண்டிருந்த வீரத்தில், தனது கத்தியை ஒரு வாளைப்போல உயர்த்திப் பிடித்துக் கொண்டு, “பிராமணர்களுக்கு மரணம்!” என்று கத்தினான். கூட்டத்தினர் அதை ஆமோதித்து உரத்தக் குரலில் கத்தினர். விரைவில், வாள்கள், சமையலறைக் கத்திகள், கோடாலிகள், மரக் கட்டைகள், கற்கள் என்று, தங்கள் கைகளில் அகப்பட்டவற்றைத் தூக்கிக் கொண்டு மக்கள் வெளியே வந்தனர். அவர்கள் எனது கடையை அடைந்த நேரத்தில், அக்குழுவில் நூற்றுக்கணக்கானவர்கள் இருந்தனர். நானும்

அவர்களோடு சேர்ந்து கொள்ள விரைந்து சென்றேன். நான் ரத்தத்தைப் பார்க்க விரும்பினேன். அந்தக் கொழுத்த பிராமணர்களின் முகங்களிமீது நான் காறி உமிழ விரும்பினேன். இது எனது நாடு, எனது இனம், எனது அரசன். இங்கு வந்து எங்களது கலாச்சாரத்தைச் சீரழிப்பதற்கு அவர்களுக்கு என்ன துணிச்சல்?

அந்தக் கும்பல், பிராமணர்கள் தங்களது அருமையான வீடுகளில் வாழ்ந்து கொண்டிருந்த தெருக்களை நோக்கிச் சென்றது. யாரோ ஒருவன் ஒரு தீப்பந்தத்தைக் கண்டுபிடித்தான். விரைவில், அங்கிருந்த வீடுகள் ஒவ்வொன்றாகத் தீக்கு இரையாகின. பெண்களும் குழந்தைகளும் வெளியே ஓடி வந்தனர். அந்தக் கொழுத்த பிராமணர்கள், தங்களது மனைவியரையும் குழந்தைகளையும் எங்கள் தயவில் விட்டுவிட்டுத் தப்பி ஓடினர். தயவு என்ற வார்த்தையைப் புறக்கணிப்பதற்கு, தேவப் படைகளின் சூறையாடல்கள் எங்களுக்குக் கற்றுக் கொடுத்திருந்தன. நாங்கள் அவர்கள் அனைவரையும் தீர்த்துக் கட்டிய பிறகு, விபீஷணனின் ரத்தத்திற்காக யாரோ ஒருவன் குரல் கொடுத்தான். பிறகு அந்தக் கூட்டம் அரண்மனையை நோக்கித் திரும்பியது. பல பிராமணர்கள் அங்கு ஒளிந்திருந்தனர். அவர்களுடைய அகங்காரத்திற்காகவும், கர்வத்திற்காகவும், எங்களை அவர்கள் ஏளனப்படுத்தியதற்காகவும், எங்களைத் தீண்டத்தகாதவர்களைப்போல நடத்தி எங்களிடம் இருந்த சிறிதளவு மதிப்பைச் சீரழித்ததற்காகவும் நாங்கள் அவர்களைத் தண்டிக்க விரும்பினோம். இப்போது ஆயிரக்கணக்கான மக்கள் அக்கூட்டத்தில் சேர்ந்தனர். நாங்கள் ஈவு இரக்கமின்றி அழித்தோம். ஆறு விஷ்ணு கோவில்களையும் பொதுக் குளியலறைகளையும் அசுரர்களுக்கும் பிராமணர்களுக்கும் சொந்தமான கடைகளையும் தீயிட்டுக் கொளுத்திவிட்டு, நாங்கள் முன்னேறிச் சென்றோம். குதிரைகள்மீது வந்த ஒரு காவலர்கள் குழு எங்களைத் தடுத்து நிறுத்த முயற்சித்தது, ஆனால் ஒருசில நொடிகளில் அக்கூட்டம் அவர்கள் கதையை முடித்தது. அக்கூட்டம் ஒரு தலைமைக் காவலனை அருகிலிருந்த ஒரு மரத்தில் கட்டித் தொங்கவிட்டது. மூன்று காவல் நிலையங்கள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. நாங்கள் கோபத்தின் உச்சியில் இருந்தோம். ஆனால் ஏதோ ஒன்று என்னைத் தொந்தரவு செய்தது. “ராவணனின் படையினர் ஏன் இவ்வளவு சுலபமாக இரையானார்கள்? அவர்கள் ஏன் எதிர்ப்புக் காட்டவில்லை? அவர்கள் அவ்வளவு பெரிய கோழைகளா?”

அப்போது எனக்கு அருகே இருந்தவன் கீழே சரிந்தான். ஓர் அம்பு அவனது தொண்டையைத் துளைத்திருந்தது. அவனது ரத்தம் அவனுக்குப் பின் வரிசையில் இருந்தவர்கள்மீது தெறித்தது. விரைவில்

அம்பு மழை பெய்யத் துவங்கியது. நான் பீதியடைந்தேன். ஆயிரக்கணக்கான வில்வீரர்கள் தங்கள் குதிரைகளின்மீது அமர்ந்து எங்களை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தனர். அரண்மனைக் கதவுகள் திறக்கப்பட்டு, வீரர்கள் தேனீக்களைப்போல எங்களை மொய்த்தனர். ருத்ராக்கன் முன்னின்று சண்டையிட்டுக் கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. அவனது வாள் எல்லாப் பக்கங்களிலும் சுழன்று கொண்டிருந்தது. பல தலைகள் உருண்டன. கூட்டம் பதைபதைத்தது. நான் கீழே தள்ளப்பட்டேன். ஆயிரக்கணக்கான குதிரைக் குளம்புகள் என்னை மிதித்துச் சென்றிருக்கக்கூடும். விதியின் கைதான் என்னைக் காப்பாற்றியது. சாலையின் பக்கவாட்டில் இருந்த ஓர் ஓடைக்குள் குதித்து, ஒரு கற்பாலத்தின் அடியில் நான் ஒளிந்து கொண்டேன். ஏழு மணிநேரத்திற்கும் மேலாக நான் அங்கேயே இருந்தேன். இருட்டிய பிறகு, நான் என் பொந்தைவிட்டு வெளியே வந்தேன். அந்த ஒட்டுமொத்த இடமும் ரத்தக் களரியாக இருந்தது. புரட்சியின் கதாநாயகர்களாக ஆகியிருக்கக்கூடியவர்கள், கால்களும் கைகளும் துண்டிக்கப்பட்டுச் சிதறிக் கிடந்தனர். நாற்றம் குடலைப் புரட்டியது. அங்கு ஓர் அச்சுறுத்தலான, அடக்குமுறையான அமைதி நிலவியது. இறந்த உடல்களை மென்று கொண்டிருந்த எலிகளின் சத்தம் அதை அதிக அச்சுறுத்தலானதாக ஆக்கியது.

நான் என் வீட்டை நோக்கி நடந்தேன். வழியில், பல வீடுகள் எரிந்து கொண்டிருந்ததையும், மரங்களிலிருந்து உடல்கள் தொங்கியதையும், கோடையில் மாந்தோப்பில் மாம்பழங்கள் சிதறிக் கிடப்பதைப்போல ஏராளமான கைகளும் கால்களும் தலைகளும் ஆங்காங்கே சிதறிக் கிடந்ததையும் நான் பார்த்தேன். பாவப்பட்ட அசுரர்கள் வாழ்ந்த பல பகுதிகள் ஏற்கனவே யானைகளால் தரைமட்டமாக்கப்பட்டு இருந்தன. ஏழு மணிநேரத்தில் இவ்வளவு அழிவு ஏற்பட்டிருந்தது நம்ப முடியாததாக இருந்தது. ஆற்றை நோக்கிய திருப்பத்தில், அந்தக் கசாப்புக் கடைக்காரனின் உடல் ஒரு விளக்குக் கம்பத்தில் தொங்கிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். ஆற்றாமையுடன்கூடிய கோபத்தில், நான் அவனது தளர்ந்த உடலை நோக்கி விரைந்து சென்று, பக்கத்திலிருந்த மரத்தில் ஏறி, அவனது முகத்தை நெருங்கினேன். என் கோபம் சற்றுத் தணியும்வரை, என் கையில் இருந்த கத்தியைக் கொண்டு அவனது முகத்தில் தாறுமாறான கீறல்களை ஏற்படுத்தினேன். பிறகு மரத்திலிருந்து கீழே குதித்து, ஓர் ஊளையிட்டுவிட்டு, என் கைகளை என் வேட்டியில் துடைத்தேன். பிறகு மண்ணைக் கொண்டு என் கைகளைத் துடைத்தேன். இப்படியே பல முறை செய்தேன். பிறகு எழுந்து என்

வீட்டை நோக்கி நடந்தேன். நான் என் வீட்டை அடைந்தபோது, ஆலமரத்தின் கீழே மாலா படுத்துக் கிடந்ததை நான் பார்த்தேன். அவள் அடித்து உதைக்கப்பட்டு, பலரால் நாசம் செய்யப்பட்டு நிர்வாணமாகக் கிடந்தாள். அவள் வேகமாக மூச்செறிந்து கொண்டிருந்தாள். எனது கடையும் வீடும் இருந்த நிலத்தில் இப்போது ஒரு பெரிய ஓட்டை இருந்தது. மெல்லிய புகைச் சுருள்கள் விண்ணை நோக்கி மெதுவாகச் சென்று கொண்டிருந்தன.



# 35

## ஒற்றைக்கு ஒற்றைச் சண்டை

ராவணன்

தூக்கம் என்னிடம் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. பத்ரனின் கருப்பான, அருவருப்பான முகம், என் மனத்தில் பல விகாரமான வடிவங்களை எடுத்தது. சில சமயங்களில் அது என்னைப் பார்த்து இகழ்ச்சியாகச் சிரித்ததுபோலவும், சில சமயங்களில் பரிதாபமாகக் கெஞ்சியதுபோலவும் இருந்தது. நான் என் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன். நாளைக்கு நான் மாரீசனை அவனிடம் அனுப்புவேன். எனது குற்ற உணர்வைக் குறைத்துக் கொள்வதற்கு ஒருசில தங்க நாணயங்களை அவனிடம் வீசுவேன். ஆனால் அவன்மீது நான் கடுங்கோபத்தில் இருந்தேன். அவனால் நான் தர்மசங்கடமாகவும் உணர்ந்தேன். ஒரு பலவீனமான கணத்தில் அவை அனைத்தும் தொடங்கியிருந்தன. என்னால் எப்படி இவ்வளவு தரம் தாழ்ந்து போக முடிந்தது? எனது நடத்தை மன்னிக்க முடியாததாக இருந்தது. ஆனால் அதைப் பற்றி மறந்துவிட்டு, என் வாழ்க்கையின்மீது என்னால் கவனம் செலுத்தியிருக்க முடியும். ஆனால் சிவனிடம் இருந்து வந்த இந்தப்

பரிசை என்னவென்று சொல்வது? நானும் என் மனைவியும் என் மகன் மேகநாதனுக்கு ஒரு சகோதரனையோ அல்லது சகோதரியையோ கொடுக்கப் பன்னிரண்டு வருடங்களாகப் போராடி வந்தும் எந்தப் பலனும் ஏற்பட்டாமல் இருந்தபோது, ஒரு கணநேர வெறியால் எப்படி என்னால் ஒரு குழந்தையை உருவாக்க முடிந்தது என்பது என் புரிதலுக்கு அப்பாற்பட்டு இருந்தது. அதிகாயனைப் பற்றி மண்டோதரிக்குத் தெரியும். அவள் அவனை வெறுத்தாள்.

நான் ஆணையிட்டிருந்தால் அந்தப் பெண்ணையும் அவளது மகனையும் என்னால் காணாமல் போகச் செய்திருக்க முடியும். ஆனால் ஏதோ ஒன்று என்னை இழுத்துப் பிடித்தது. சிறிதளவு மனிதநேயம் இன்னும் என்னுள் மிச்சமிருந்தது போலும். அல்லது, நீண்ட நாட்களுக்கு முன்பு நான் இழந்த எனது காதலி, ஒரு தேவ அரசனால் ஒரு குழிக்குள் இருந்து எடுக்கப்பட்ட ஒரு சிறு பெண் குழந்தை ஆகியோரின் நினைவாக அது இருக்கலாம். அதிகாயன் கருப்பாகவும் அசிங்கமாகவும் முன்பற்கள் வெளியே தெரியும்படியும் இருந்தாலும், அவனும் எனது மகன்தான். எனக்கு வயதாகியிருந்ததும் அறிவு விசாலமாகியிருந்ததும் அப்படிப்பட்டக் கொடூரமான காரியத்தைச் செய்வதிலிருந்து என்னைத் தடுத்திருக்கலாம். வட இந்தியாவில் ஏதோ ஒரு தேவ சாம்ராஜ்யத்தில் எனது மகள் வளர்ந்து கொண்டிருந்ததைப்போலவே, எனது பாவத்தால் பிறந்த எனது மகனும் வேகமாக வளர்ந்து கொண்டிருந்தான்.

நான் எனது அன்றாட ஆட்சியின்மீது கவனம் செலுத்தியிருக்கவில்லை என்பது உண்மைதான். எனது மந்திரிகள் செயற்திறன் கொண்டவர்களாக இருந்தனர். நான் எனது குடும்ப வாழ்க்கையில் மூழ்கியிருந்தேன். எனது கருவூலங்கள் நிரம்பி வழிந்தன. எந்தவிதமான படையெடுப்பையும் மேற்கொள்வதற்கு எனக்கு எந்த லட்சியமும் இருக்கவில்லை. எனக்கு ஐம்பது வயதுக்கு மேல் ஆகியிருந்தது. நான் மனநிறைவோடு இருந்தேன். நான் ஒரு நல்ல அரசன் என்பதையும், நான் இறந்து வெகுகாலம் கழித்தும் மக்கள் எனது ஆட்சியைப் பற்றிப் பேசுவார்கள் என்பதையும் நான் அறிவேன். நடுத்தர வயதில் இருந்த பெரும்பாலான ஆட்சியாளர்களைப்போலவே, என் பெயர் சொல்லும்படியாக ஒன்றை விட்டுச் செல்ல நானும் அதிக ஆர்வமாக இருந்தேன். மரணம் மிக அருகில் இருந்ததுபோல எனக்குத் தோன்றியது. அதன் மூச்சை என் கழுத்தின்மீது என்னால் உணர முடிந்தது. நான் இனியும் தோற்கடிக்கப்பட முடியாதவனாகவோ அல்லது மரணமற்றவனாகவோ இருக்கவில்லை. வினோதமாக, வாழ்க்கையை நான் மதிக்கத் துவங்கியிருந்தேன். அதன் ஒவ்வொரு கணத்தையும் நான் மகிழ்ச்சியாக அனுபவித்தேன். தூரத்தில் ஒலித்தக்

கோவில் மணியோசை; என் அன்புக்குரிய மகன் மேகநாதனின் வாள் பயிற்சியின்போது வாள்கள் உரசிய சத்தம்; எனது இளைய மகன் அக்ஷய குமாரனை எனது மனைவி கொஞ்சிய ஓசை; கும்பகர்ணனின் மகள் திரிஜடை அரண்மனைத் தாழ்வாரங்களில் சிறகடித்துப் பறந்து திரிந்தபோது கேட்ட வளையலோசை . . . இது போன்ற சிறு விஷயங்கள் என்னை உற்சாகப்படுத்தின, என்னை மகிழ்வித்தன.

மாலா என்ற வேலைக்காரப் பெண்ணின் மூலம் எனக்குப் பிறந்த மகனான அதிகாயன்தான் இப்போது எனது பிரச்சனையின் மையமாக இருந்தான். என் மகன் மேகநாதனை, இவ்வுலகிலுள்ள வேறு எதுவொன்றைவிடவும் மிக அதிகமாக நான் நேசித்தேன். என்னைவிடவும் அவனை நான் மிகவும் நேசித்தேன். மேகநாதன் எதுவாகவெல்லாம் இருந்தானோ, அதிகாயன் அவற்றில் எதுவாகவும் இருக்கவில்லை. பார்த்துப் பார்த்து என் கண்கள் காயப்படும் அளவுக்கு மேகநாதன் மிகவும் அழகாக இருந்தான். அதிகாயன் ஒரு பெரிய, கரிய மாமிச மலையாக இருந்தான். மக்கள் தங்கள் திறந்த வாய் மூடாமல் பார்க்கும் அளவுக்கு அவன் மிகவும் அசிங்கமாக இருந்தான். மேகநாதன் ஒரு சீமைக் குதிரைபோல நளினமாக இருந்தான். மாலாவின் மகன் நயமின்றியும் வளைந்த கால்களுடனும் இருந்தான். மேகநாதனிடம் அறிவும் வசீகரமும் ஒளிர்ந்தன, ஆனால் அதிகாயன் நாளுக்கு நாள் அதிக முட்டாளாக ஆகிக் கொண்டிருந்தான். இயற்கை மேகநாதனுக்கு எல்லாவற்றையும் கொடுத்து ஆசீர்வதித்துவிட்டு, அதிகாயனுக்கு எதுவுமே கொடுக்காமல் விட்டுவிட்டதுபோல இருந்தது. ஒரே தந்தையால், இப்படி இரு துருவங்கள்போல வளர்ந்து கொண்டிருந்த வாரிசுகளை உருவாக்க முடியுமா என்று நான் வியந்தேன்.

மேகநாதனை நான் எவ்வளவு அதிகமாக நேசித்தேனோ, அதிகாயனை நான் அவ்வளவு அதிகமாக வெறுத்தேன். ஆனால், சபிக்கப்பட்ட அவன் என்னை ஒரு நாய்க்குட்டியைப்போலப் பின்தொடர்ந்தான். நான் அவனைத் தவிர்க்க எவ்வளவு முயற்சித்தும், எப்படியோ அவன் தன்னை என்னுடன் இணைத்துக் கொண்டான். பெரும்பாலான சமயங்களில் நான் அவனிடம் கொடுமைக்காரத்தனமாக நடந்து கொண்டேன். மற்றவர்கள் முன்னிலையில் அவனை எட்டி உதைத்தேன், அடித்தேன், அவனைப் பார்த்துக் கத்தினேன். ஆனால் அவன் தன் முன்னம்பற்கள் வெளியே தெரியும்படி முட்டாள்தனமாக என்னைப் பார்த்துப் பல்லிளித்தான். மேகநாதன் மட்டும் அங்கு இருந்தால், அதிகாயனைப் பார்த்து அவன் பெரிதாகச் சிரிப்பான். அதிகாயன் அவனுக்குக் குதூகலமூட்டினான். எனது இந்த முட்டாள் மகனை ஒரு வித்தியாசமான வழியில் நான் நேசித்து வந்திருந்தேன்

என்பதை நான் இளைஞனாக இருந்தபோது நான் உணரவில்லை. அவன்மீது நான் கொண்டிருந்த அன்பு, என் மகன் மேகநாதனின்மீதோ, என் மனைவி மண்டோதரியின்மீதோ, அல்லது எனது சகோதரர்கள் அல்லது அவர்களது குழந்தைகள்மீதோ நான் கொண்டிருந்த அன்பிலிருந்து வேறுபட்டிருந்தது. நீங்கள் எப்போதாவது உணவூட்டி வந்த, ஆனால் அதன் அருவருப்பான தோற்றம் மற்றும் நாற்றத்தின் காரணமாக அதை உங்கள் செல்லப் பிராணியாக வைத்துக் கொள்ள விரும்பாத ஒரு தெருநாயின்மீது நீங்கள் எப்படிப்பட்ட அன்பைக் கொண்டிருப்பீர்களோ, அதிகாயன்மீதான எனது அன்பு அதுபோலத்தான் இருந்தது.

பத்ரனுக்காக நான் அவனை விட்டு வைத்திருந்தேன். பத்ரனைப் போன்ற மக்களைப் பற்றிச் சிந்திப்பதற்கு நேரமில்லாத அளவுக்கு நான் அதிக முக்கியமானவனாக வளர்ந்திருந்தபோது, பத்ரன் என்னைத் தேடி வந்தான். நன்றாகத் தின்று கொழுத்த பிராமணர்களுக்கு எதிரான அசுரக் கிளர்ச்சியை விபீஷணன் ஒடுக்கியபோது அது நிகழ்ந்தது. பிராமணர்களை எனக்கு ஒருபோதும் பிடித்ததில்லை. அந்தக் கிளர்ச்சி குறித்து நான் ரகசியமாக மகிழ்ந்தேன். ரத்தம் ஒழுகிக் கொண்டும், நன்றாக அடித்துத் துவைக்கப்பட்டும் இருந்த எண்ணற்ற பிராமணர்களுடன் விபீஷணன் எனது அவைக்கு வந்தபோது, முதலில் எனக்குச் சிரிக்கத்தான் தோன்றியது. ஆனால் வழக்கம்போல, பிரஹஸ்தன்தான் எனக்குச் சரியான வழியைக் காட்டினான். அவன் தனது அறுபதாவது வயதை நெருங்கிக் கொண்டிருந்தாலும், தனது பிரசங்கங்களால் தொடர்ந்து எனக்கு எரிச்சலூட்டுவதை நிறுத்தவில்லை. நாங்கள் அதிகமாக விவாதித்தோம், ஆனால் நான் அவனை அதிகமாகச் சார்ந்திருக்கத் துவங்கினேன். அன்றாட ஆட்சி விவகாரங்களை நான் அவனது பொறுப்பில் விட்டிருந்தேன். ஆனால் முக்கியமான தருணங்களில், நான் என்னுடைய முழுமுதல் அதிகாரத்தைப் பயன்படுத்தினேன். நாங்கள் நண்பர்களாக இருந்தோம் என்று கூறிவிட முடியாது, ஆனால் நான் அந்த முதியவனை மதித்தேன். என்னைக் கண்டு பயப்படாத ஒருசிலரில் அவனும் ஒருவன். அவன் ஒருபோதும் என்னைத் துதி பாடியதில்லை. கிளர்ச்சி நடைபெற்ற அன்று, அவன் தனது பக்குவத்திற்கும் அறிவிற்கும் ஏற்றாற்போல நடந்து கொண்டான். மற்ற மந்திரிகளின் முன்னிலையில் என்னுடன் விவாதிப்பதற்குப் பதிலாக, அவன் என்னைத் தனியாகச் சந்திக்க என்னிடம் அனுமதி பெற்று, நாங்கள் காத்துக் கொண்டிருந்த சரியான தருணம் அதுதான் என்று என்னிடம் கூறினான். சட்டத்தைத் தனது சொந்தக் கைகளில் எடுக்க எந்தவோர் அசுரனும் துணியக்கூடாது

என்பதையும், பேரரசரின் ஆணைப்படியே எல்லாம் நடக்க வேண்டும் என்பதையும் வலியுறுத்துவதற்காக, அந்தக் கிளர்ச்சியை முழு ஆற்றலுடன் ஒடுக்க வேண்டும் என்று அவன் விவாதித்தான்.

நான் பேரரசனாக இருந்ததால், அவன் கூறியதை ஏற்றுக் கொள்வதில் எனக்கு எந்தப் பிரச்சனையும் இருக்கவில்லை. ஆனால் பிராமணர்களுக்கு ஆதரவாகச் செயல்படுவது எனக்கு அசௌகரியமாக இருந்தது. ஒரே கல்லால் இரண்டு பறவைகளை வீழ்த்த முடியும் என்ற யோசனை எனக்குத் திடீரென்று உதித்தது. எனவே, நகரம் ஒருசில மணிநேரம் எரியட்டும் என்று விட்டுவிட்டு, கிளர்ச்சிக் கும்பல் பிராமணர்களை வேட்டையாட அனுமதித்துவிட்டு, பிறகு அக்கிளர்ச்சியில் ஈடுபட்ட அனைவரையும் தாக்குவதென்று நான் தீர்மானித்தேன். எனது வீரர்கள் பாரபட்சமின்றி அசுரர்களையும் பிராமணர்களையும் கொன்று குவித்தனர். விஷ்ணு கோவில்களைக் கொள்ளையடிக்க நான் என் வீரர்களை அனுமதித்தேன். அவர்கள் அதை உற்சாகமாகச் செய்து, சிவன் கோவில்களாக அவற்றை மாற்றினார்கள். பிராமணர்கள் கூட்டங்கூட்டமாக இந்தியாவை நோக்கித் தப்பி ஓடினர். அதிகக் கட்டணம் வசூலித்து, வருணன் அவர்களைத் தனது கப்பல்களில் கூட்டிச் சென்றான். எந்தச் சூழ்நிலையிலும் வருணனால் லாபம் சம்பாதிக்க முடிந்தது. நான் இன்னொரு கிளர்ச்சியை எதிர்கொள்ள நேரிடாத அளவுக்கு ருத்ராக்கன் தன் வேலையை மிகவும் கச்சிதமாகச் செய்திருந்தான். விபீஷணன் சிறிது காலம் மன இறுக்கத்துடன் இருந்தான். ஆனால் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனாலும் நான் என் சகோதரனுக்காகப் பரிதாபப்பட்டேன். தொடர்ந்து இலங்கையில் தங்கிய பிராமணர்களுக்கு நான் எந்தத் தொந்தரவும் கொடுக்க மாட்டேன் என்று கூறி நான் அவனைச் சமாதானப்படுத்தினேன். மெல்ல மெல்ல, அவன் தன் பழைய நிலைக்கு வந்தான். எனது இளைய சகோதரனின் முட்டாள்தனமான யோசனைகளையும் கருத்துக்களையும் நான் ஒடுக்கியிருந்தேன் என்று நான் நினைத்தேன்.

பத்ரன் என்னிடம் வந்தபோது, அவன் உள்ளுக்குள் குமுறிக் கொண்டிருந்ததை நான் உணர்ந்தேன். அவனது நிராதரவான நிலைமையை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அடக்கி வைக்கப்பட்டக் கோபம் அவனுள் சுருண்டு கிடந்தது. ஆனால் பத்ரன் எப்போதுமே அப்படித்தான் இருந்தான். அவன் எழுந்து என்னை வெறித்துப் பார்த்தான். நான் ஆச்சரியமடைந்தேன். ஒதுக்குப்புறமாக இருந்த எனது அரண்மனைக்கு வெளியே நடந்து கொண்டிருந்த ரத்தக் களரியைக் கண்டுகொள்ளாமல், நான் எனது மேல்மாடத்தில் நின்று

எனது தோட்டத்தைப் பார்த்து மல்லிகையை நுகர்ந்தபடி, புறாக்களின் கொஞ்சல்களைக் கேட்டபடி இருந்தபோது, நான் எதிர்பார்க்காத நேரத்தில் அவன் அங்கு தோன்றினான். எனது கை எனது வாளுக்குச் சென்றது. ஒரு சிறு குழந்தையைப்போல, அதற்குச் சந்திரஹாசன் என்று நான் பெயரிட்டிருந்தேன். அதை நான் மிகவும் நேசித்தேன். ஒரு பிரபலமான கொல்லன் அதை எனக்குச் செய்து கொடுத்திருந்தான். அன்றிலிருந்து அது ஒருபோதும் என் பக்கத்தைவிட்டு அகலவில்லை.

அப்போது, காரணம் எதுவும் கூறாமல், பத்ரன் அழத் துவங்கினான். முதலில் அவனது அழுகை வெறும் தேம்பலாக வந்தது, பிறகு கோபமும் வேதனையும் ஒருசேர அவனது ஒட்டுமொத்த உடலும் பயங்கரமாகக் குலுங்கியது. அவன் என் பாதங்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான். முந்தைய சமயங்களில், இதே போன்ற ஒரு சூழ்நிலையில், நான் அவனது முகத்தை எட்டி உதைத்திருப்பேன். யாரிடமும் பலவீனத்தை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் பத்ரன் தனது பலவீனத்தால் அழவில்லை, மாறாக, தனது வாழ்க்கைக்காக அழுதான் என்பதை நான் கண்டேன். பெருமிதத்தை இழந்துவிட்டுத் தொடர்ந்து உயிர்வாழ்வதற்குத் துணிச்சல் தேவை. பெருங்குரலெடுத்துக் கத்துகின்ற அகங்காரத்தை அடக்கிவிட்டு, இன்னொரு மனிதனின் முன்னால் கெஞ்சி நிற்பதற்கு மன உறுதி தேவை. உள்ளுக்குள் கோபம் கொந்தளித்துக் கொண்டிருக்கும்போது, அடுத்தவன் முன்பு தலை குனிந்து, அவனிடம் பணிவாக நடந்து கொள்வதற்கு உறுதியான கட்டுப்பாடு தேவை. இறுதியில், வெற்றிகளோ, பெருமிதமோ, அல்லது புகழோ ஒரு பொருட்டே அல்ல. உயிர்பிழைத்திருப்பது மட்டுமே முக்கியமானதாக ஆகிறது. ஒருவனது வாழ்க்கையும் அவனது வாரிசுகளும் குலமும் இனமும் மொழியும் அவசியமாகின்றன. மற்ற விஷயங்கள் பயனற்றவையாகப் போய்விடுகின்றன. நான் கீழே குனிந்து, அவனுக்கு ஒரு கை கொடுத்து அவன் எழுந்திருக்க உதவினேன்.

“பத்ரா!” நிலக்கரி நிறத்தில் இருந்த எனது கரிய கண்களை அவன் ஏறிட்டுப் பார்த்தான். அவனது முகத்தில் ஒரு கணம் வெறுப்புப் பளிச்சிட்டு மறைந்தது. பிறகு அவன் உணர்ச்சியற்றவனாக நின்றான். நான் அவனது வெறுப்பை உதாசீனப்படுத்தினேன். அவனது உடலின் துர்நாற்றத்தையும் புறக்கணித்தேன். இப்படிப்பட்ட விஷயங்களில் கவனம் செலுத்தும் அளவுக்கு வாழ்க்கை அவ்வளவு நீண்ட ஒன்றல்ல. நான் கிட்டத்தட்ட உன்னதமானவன்போல உணர்ந்தேன். “நீ ஏதேனும் சாப்பிட்டாயா?” என்று நான் அவனிடம் கேட்டேன். அவன் இல்லையென்று தலையசைத்தான். “சமையலறைக்குச் சென்று

சாப்பிட்டுவிட்டு வா. நான் அதற்கான உத்தரவுகளை அவர்களுக்குக் கொடுக்கிறேன்.”

அவன் தொடர்ந்து அங்கு நின்றான். அது ஒரு தர்மசங்கடமான சூழ்நிலையாக இருந்தது. அவன் எதுவும் பேசவில்லை. என் வார்த்தைகளும் தொலைந்து போயின. அவனது உடலின் துர்நாற்றம் பொறுத்துக் கொள்ள முடியாததாக இருந்தது. நான் அந்த ஜந்துவைக் குறித்தப் பரிவையும் பரிதாபத்தையும் தக்க வைத்துக் கொள்ள முயன்றேன், ஆனால் என்னுள் வெறுப்பு உருவாகிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். நான் அதை எதிர்த்து நின்றேன். கீறல்களுடன்கூடிய அவனது கருத்தத் தோல், அலங்கோலமான தலைமுடி, அவனது கால்களில் இருந்த புண்கள், பானை வயிறு, அசுத்தமான பற்கள் ஆகியவற்றிலிருந்து என் கண்களை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். ஆனால் அந்த துர்நாற்றம் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. நான் என் கைகளைக் கழுவ விரும்பினேன். அவனைத் தொட்டுத் தூக்கியதில் அவை அசுத்தமடைந்திருந்ததுபோல நான் உணர்ந்தேன். என்னையும் அறியாமல், என் கைகளை ஒரு பட்டுக் கைக்குட்டையில் துடைத்தேன். அவனது கண்கள் நான் செய்ததை அப்படியே பின்தொடர்ந்தபோது நான் தர்மசங்கடமாக உணர்ந்தேன்.

அப்போது கலகலவென்று சிரித்தபடி அந்த அறைக்குள் ஓடி வந்த எனது மூன்று வயது மகன் மேகநாதன் ஆணியடித்தாற்போல அப்படியே நின்றான். தனது தந்தையும் இலங்கையின் அரசனுமான என் முன்னால், ஓர் அழுக்கான, கரிய நிற அசுரன் மரியாதையோடு பணிவாக நின்று கொண்டிருந்ததை அவனது அழகான, பெரிய கண்கள் ஆச்சரியத்தோடு பார்த்தன. நான் என் மகனைத் தூக்கிக் கொள்ள விரும்பி அவனை நோக்கி நடந்தேன். ஆனால் பத்ரனைத் தொட்டுத் தூக்கியதில் அழுக்கான கைகளால் என் மகனைத் தொட நான் விரும்பவில்லை. நான் மீண்டும் என் கைகளைத் துடைத்தேன். அப்போது அந்த அழுக்கான அசுரனிடமிருந்து ஓர் ஏளனச் சிரிப்பு எழுந்தது. ஒரு சுனாமிபோல நான் வெகுண்டெழுந்தேன். நான் கடுங்கோபத்துடன் அவனைத் திரும்பிப் பார்த்தேன். அப்போது எனது தகாத உறவால் பிறந்த அசிங்கமான அதிகாயன் அந்த அறைக்குள் ஓடி வந்தான். ஒரு கோவணத்தைத் தவிர அவன் வேறு எதையும் அணிந்திருக்கவில்லை. அவனது மூன்று வயது விரல்கள், அவன் தின்று கொண்டிருந்த மாம்பழத்திலிருந்து வடிந்த சாற்றினால் பார்க்க அருவருப்பாக இருந்தன. அவன் பத்ரனைப் பார்த்தான், பத்ரனும் அவனைப் பார்த்தான். அந்த மூன்று வயதுச் சிறுவனின் மனத்தில் என்ன ஓடியது என்று எனக்குத் தெரியவில்லை, ஆனால் பசியால் வாடிப் போயிருந்த பத்ரனை நோக்கி அவன் நடந்து

சென்று, அந்த மாம்பழத்தை அவனிடம் கொடுத்தான். நான் எதுவும் கூறுவதற்குள், தனது கடைசிச் சாப்பாடு அதுதான் என்பதுபோல, பத்ரன் அதை வாங்கி உறிஞ்சினான். அப்போது மேகநாதன் தன் சிறிய கைகளை அவனிடம் நீட்டினான். பத்ரன் தான் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு, பாதி உறிஞ்சப்பட்ட, கொழகொழவென்று இருந்த மாம்பழத்தை என் மகனிடம் கொடுத்தான். நான் அவனது கைகளை பலமாக எட்டி உதைத்தேன். அந்த மாம்பழம் மேல்மாடத்தைவிட்டு வெளியே எகிறியது. நான் பத்ரனை எனது பின்னங்கையால் மீண்டும் அடித்தேன். எனது பொதுநலப் பண்பு காணாமல் போனது. “என் அரண்மனைக்குள் வந்து, இளவரசனுக்கு மிச்சசொச்சத்தைக் கொடுப்பதற்கு இந்தக் கீழ்த்தரமான மனிதனுக்கு என்ன துணிச்சல்?” வருத்தத்துடன்கூடிய ஒரு நிறைவுடன் பத்ரன் கீழே விழுந்தான். நான் அவனது அசிங்கமான முகத்தில் தென்பட்ட அந்த உணர்ச்சியை என் வாளைக் கொண்டு துடைத்தெறிய விரும்பினேன்.

இரண்டு சிறுவர்களும் காட்டுக்கூச்சல் போட்டனர். நான் அதிகாயனை அவனது தோள்களைப் பிடித்துத் தூக்கி, பலமாக உலுக்கினேன். அவனை எனது பிடியிலிருந்து விடுவிக்க மேகநாதன் முயன்றான். அவன் தனது சின்னஞ்சிறிய கைகளால் என்னை அடித்தான். அப்போது மண்டோதரி வேகமாக ஓடி வந்து, அதிகாயனை எனது கைகளிலிருந்து இழுத்தாள்.

“ராவணா, உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? நீங்கள் இந்தக் குழந்தையைக் கொல்ல முயற்சிக்கிறீர்களா?” என்று அவள் கத்தினாள். அலறிக் கொண்டிருந்த அதிகாயனைத் தரையில் போட்டுவிட்டு, மேகநாதனை அவள் தன்னிடம் இழுத்துக் கொண்டாள். என் மகன் தனது தாயின் மார்பின்மீது சாய்ந்து தேம்பினான். அதிகாயன் இதைப் பார்த்து மேலும் அதிகமாக அலறினான்.

“மண்டோதரி, மேகநாதனை இந்த அழுக்கான குட்டிச்சாத்தானுடன் விளையாட நீ ஏன் அனுமதிக்கிறாய்?” ஆனால் என் வார்த்தைகள் எனக்கே கேட்கவில்லை.

என் மனைவியின் முகம் கோபத்தில் சிவந்தது. “ராவணா, இவன் உங்களுடைய அழுக்கான குட்டிச்சாத்தான்,” என்று கூறிய அவள், அழுது கொண்டிருந்த தனது மகனைத் தன் கைகளில் தூக்கிக் கொண்டு, அந்த அறையைவிட்டு வேகவேகமாக வெளியேறினாள். நான் அதிர்ச்சியடைந்தேன். “என்னிடம் இவ்வாறு பேசுவதற்கு அவளுக்கு என்ன துணிச்சல்?” ஒரு காலத்தில் என் அருகில் வருவதற்குக்கூட அவள் மிகவும் பயந்தாள். ஆனால் ஒரு மகன் பிறந்த பிறகு, நான் தனக்குச் சொந்தம் என்பதுபோல அவள் நடந்து கொண்டாள். அவள் என்னைக்

கண்டு இனியும் பயப்படவில்லை. என்னை எனது பெயரைச் சொல்லி அழைக்கவோ அல்லது என்னைப் பார்த்துக் கத்தவோ அல்லது தான் நினைத்தக் காரியத்தைச் சாதிப்பதற்குத் தனது கோபத்தையும் வெறுப்பையும் வெளிப்படுத்தவோ அவள் துளிகூட பயப்படவில்லை. அவ்வப்போது என்னிடமிருந்து கோபக்கனல்கள் தெறித்தாலும், நான் சற்றுப் பக்குவமடைந்திருந்தேன். நான் என் மனைவிக்கு அடங்கிப் போனதாகச் சிலர் கூறினர். அவளுடன் சண்டையிட்டதன் மூலமும் அவளிடம் கத்தியதன் மூலமும் அவளிடமிருந்து நான் அதை மறைத்தாலும்கூட, பெரும்பாலான சமயங்களில் அவள் தான் நினைத்ததைச் சாதித்துக் கொண்டாள். அவள்மீதும் என் மகன்மீதும் நான் கொண்டிருந்த அன்பை என்னைக் கட்டுப்படுத்துவதற்கு அவள் பயன்படுத்திக் கொண்டாள். உண்மையைக் கூறினால், அது குறித்து நான் மகிழ்ச்சியாகவே இருந்தேன்.

அந்த அறை எந்த ஓசையுமின்றி அமைதியாக இருந்ததை நான் உணர்ந்து கொள்ள எனக்கு ஒருசில நொடிகள் ஆனது. நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். என்னைத் தனியாக விட்டுவிட்டு, அதிகாயனும் பத்ரனும் மாயமாய் மறைந்திருந்தனர். நான் மேல்மாடத்தின் கைப்பிடிச் சுவரருகே சென்று, கீழே எட்டிப் பார்த்தேன். ஒரு கருத்த உருவம், ஓர் அழுக்கான சிறுவனின் சின்னஞ்சிறிய கையைப் பிடித்துக் கொண்டு, சமையலறையை நோக்கி நொண்டிக் கொண்டே சென்று கொண்டிருந்ததை நான் கண்டேன். கடலிலிருந்து ஓர் இனிமையான காற்று வந்தது. அது அவர்களது உரையாடலையும் என்னிடம் சுமந்து வந்தது. அவர்களுடைய சிரிப்புக்கு இடையே, ஒரு வார்த்தை ஓர் அம்புபோலப் பாய்ந்து வந்து என் இதயத்தின் ஒரு மென்மையான இடத்தில் தாக்கியது. நான் ஒருபோதும் பெற விரும்பியிராத மகனான அதிகாயன், தனது சூதுவாதற்றக் குரலில், பத்ரனை ‘அப்பா’ என்று அழைத்தான். தன்னை அவ்வாறு கூப்பிடும்படி பத்ரன் அவனிடம் கூறியிருந்தானா, அல்லது அச்சிறுவன் அவ்வாறு அழைக்க விரும்பினானா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது என்னைக் காயப்படுத்தியது. அந்த அருவருப்பான சிறுவன் என்னைவிட்டும் என் மகன் மேகநாதனைவிட்டும் தள்ளி இருப்பான் என்ற நினைவு வந்தபோது நான் சகஜ நிலைக்கு வந்தேன்.

அதிகயன் என்னுடைய மகன் என்பதை எல்லோரும் அறிந்திருந்தாலும், நெடுங்காலத்திற்கு முன்பு நான் கற்பழித்திருந்த அந்த வேலைக்காரியை பத்ரன் திருமணம் செய்து கொண்டிருந்தது எனக்கு உதவியது. எனவே, அதிகாயனுக்கும் பத்ரனுக்கும் இடையே சட்டப்படியான ஓர் உறவு இருந்தது. நான் எனது வேலைக்காரனின்

மனைவியைக் கற்பழித்துவிட்டு, ஒரு குழந்தையை அக்குடும்பத்திற்குக் கொடுத்திருந்தேன் என்ற உண்மை என்னை மிகவும் தர்மசங்கடமாக உணரச் செய்தது. ஆனால் அது எனக்குப் பழக்கமாகியிருந்தது. ஒரு சிறப்புச் சலுகையாக, இளவரசர்களுக்குப் பாடங்களைக் கற்றுக் கொடுத்தப் பிறகு, அதிகாயனுக்கும் அப்பாடங்களைக் கற்றுக் கொடுக்குமாறு பயிற்றுவிப்பாளர்களுக்கு நான் உத்தரவிட்டேன். ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்கு அவன் மிக வேகமாகக் கற்றுக் கொண்டிருந்ததாக நான் கேள்விப்பட்டபோது மிகவும் ஆச்சரியமடைந்தேன். அதை அவன் என்னிடமிருந்து சுவீகரித்திருக்கக்கூடும். மேகநாதனின் தோளுக்குத் தோளாக இணைந்து நின்று போராடக்கூடிய ஒரு நல்ல வீரனாக அவன் உருவெடுப்பான் என்று நான் நினைத்தேன்.

என் மகன் மேகநாதன் போர்க்கலையில் தேர்ச்சி பெற்றதைக் கொண்டாடும் வகையில் ஒரு விழாவை நான் மிகுந்த பெருமிதத்துடன் அறிவித்தேன். பௌர்ணமியன்று அதற்கு நாள் குறித்தேன். எனது மிக நெருங்கிய நண்பனான வாலியை அவ்விழாவிற்கான அரச விருந்தினனாக நான் அழைத்தேன். எனது இளவயதுத் தோல்விக்குப் பிறகு, எங்களுடைய நட்பு ஆழமாக வேரூன்றி வளர்ந்திருந்தது. நான் வாலியைக் கண்டு பிரமித்தேன், அவனை நம்பினேன். அவனும் என்னிடம் அதே பிரமிப்பையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்தினான். அவனது மனைவி தாராவும் என் மனைவியும் நல்ல தோழிகளாக இருந்தனர். வாலிக்கும் எனக்கும், இலக்கின்றித் திரிந்த சகோதரர்கள் இருந்தனர். அது குறித்து நாங்கள் பெருமளவில் விவாதித்தோம். அவனது ராஜ்யத்தின் எல்லையில் குடியேறியிருந்த எனது ஒழுங்கந்தவறிய சகோதரியை அவன் கண்காணித்து வந்தான். அவள் மிகவும் சுயநலவாதியாக இருந்ததால், அவள் எல்லோருக்கும் அழிவைக் கொண்டு வருவாள் என்று அவன் கூறினான். ஆனால், சூர்ப்பனகை, ஒரு பெரிய தாக்கத்தை விளைவிக்கக்கூடிய அளவுக்கு அவ்வளவு முக்கியமானவள் அல்ல என்று நான் நினைத்ததால் அவனது கருத்தை நான் உதாசீனப்படுத்தினேன். அவளுக்கு ஆண்கள் தேவைப்பட்டனர். எனவே அவள் அவர்களைப் பாரபட்சமின்றித் தன் வசப்படுத்தினாள். அவள் எங்கள் குடும்பத்தில் ஒரு கருப்புப் புள்ளியாக இருந்தாள், ஆனால் அவளும் என் தாயாரும் எனது வஞ்சகமான தந்தையும் இலங்கையிலிருந்து தள்ளி இருந்தவரை, மக்கள் என்ன கூறினர் என்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை.

வாலி அந்த விழாவில் கலந்து கொள்வதற்காகத் திரிகோட்டாவிற்கு விஜயம் செய்தபோது, தனது புகழின் உச்சகட்டத்தில் இருந்தான். என்

மகனைவிட ஒருசில வருடங்கள் மூத்தவனான அவனது சொந்த மகன் அங்கதனும் அவனுடன் வந்தான். அங்கதன் ஓர் எதிர்ப்புக் குணம் கொண்ட பருவ வயதுச் சிறுவனாக இருந்தான். ஆனால் துடிப்பான எந்தப் பருவ வயதுச் சிறுவன்தான் எதிர்ப்புக் குணமின்றி இருந்தான்? எனது நண்பன் தன் மகனிடம் சற்றுக் கடுமையாக நடந்து கொண்டதாக எனக்குத் தோன்றியது. தாங்கள் வளர்வதற்கான இடம் குழந்தைகளுக்குத் தேவை. அவர்களது தந்தை ஒரு மிகப் பெரிய ஆலமரமாக இருக்கும்போது, அந்த இடம் அக்குழந்தைகளுக்குக் கிடைப்பது சிரமமாகிவிடுகிறது. அந்த மரத்தின் கீழே எதுவொன்றாலும் வளர முடியாது. அச்சிறுவன் அமைதியாகவும் ஆழ்ந்த சிந்தனையிலும் இருந்தான். பல சமயங்களில் அவன் தனது கண்டிப்பான தந்தையிடம் வெளிப்படையாகத் தனது எதிர்ப்பை வெளிப்படுத்தினான். அங்கதனோடு ஒப்பிட்டபோது, என் மகன் சொக்கத் தங்கமாக இருந்தான். உண்மையில், எவரொருவரோடு ஒப்பிடப்பட்டபோதும், என் மகன் சொக்கத் தங்கமாகவே இருந்தான். அங்கதனுடனான அவனது நட்புக் குறித்து நன் எப்போதும் பயந்தேன், ஆனால் மேகநாதன், பலவீனமானவர்களின் உரிமைக்காகக் குரல் கொடுத்தான். நாங்கள் வாழ்ந்து கொண்டிருந்த நவீன உலகத்திற்கு அது பொருத்தமற்றதாக இருந்ததாக நான் நினைத்தேன். என் மகன் பழமையான கருத்துக்களையும் பண்டைய ஒழுக்கநெறியையும் கொண்டிருந்தான். அவனது எதிர்காலம் குறித்து ரகசியமாக நான் மிகவும் பயந்தேன். அடிப்படையில் மக்கள் நல்லவர்கள் என்றும் உன்னதமானவர்கள் என்றும் அவன் எப்போதுமே ஆணித்தரமாக வலியுறுத்தி வந்தான். அவர்களுடைய சாதி, இனம், அல்லது மதம் எதுவாக இருந்தாலும் சரி, அவர்கள் அனைவரும் சமமானவர்கள் என்று அவன் உறுதியாக நம்பினான். மதிப்பீடுகள், உண்மை, நல்லொழுக்க நெறிகள், சரியான நடத்தை ஆகியவை நிலைபேறு கொண்டவை என்றும், மனிதகுலத்தின் எந்தவொரு முன்னேற்றத்தாலும் அவற்றை மாற்ற முடியாது என்றும் அவன் விவாதித்தான். நான் அவனை நினைத்துப் பெருமைப்பட்டேன், அதே சமயத்தில் அவனைப் பற்றிக் கவலைப்படவும் செய்தேன்.

துரதிர்ஷ்டவசமாக, என் கவலை உண்மையாகியது. தங்களைக் கடவுள்போலக் கருதி நடந்து கொண்டு, கண்டிக்கத்தக்கத் தங்களது நடவடிக்கைகளைத் தெளிவற்ற சமஸ்கிருதப் பிதற்றல்களால் நியாயப்படுத்திய கபடதாரிகளைப் பற்றி, பரிதாபத்திற்குரிய ஜீவனான அவனுக்கு என்ன தெரியும்? சகோதரர்கள் மற்றும் நண்பர்களின் நம்பிக்கைத் துரோகத்தைப் பற்றியும், உள்ளொன்று வைத்துப்

புறமொன்று செய்யும் கயவர்களைப் பற்றியும், ஒருவரை ஒருவர் அடித்துப் பிழைத்து வாழும் இந்த உலகத்தைப் பற்றியும் அவனுக்கு என்ன தெரியும்? நான் அவனுடைய வயதில் இருந்தபோது, உலகத்தை மாற்றுவது குறித்த அற்புதமான கருத்துக்களும், ஒரு மகத்தான, செழிப்பான சமுதாயத்தை உருவாக்குவது பற்றிய யோசனைகளும் எனக்கும் இருந்தன. ஆனால் நான் வளர்ந்த பிறகு, அக்கனவுகள் என்னைவிட்டு மாயமாய் மறைந்துவிட்டன. மேகநாதன் ஆடம்பரத்தில் குளித்துக் கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய வயதில் நான் அனுபவித்த ஒரே விஷயம் பசி மட்டுதான்.

என் வாழ்வில் எனக்கு மிகுந்த தர்மசங்கடத்தை ஏற்படுத்திய நிகழ்வுகளில் ஒன்று அக்கணத்தில் நிகழ்ந்தது. என் மகன் தனது சேணத்திலிருந்து தவறினான். ஒட்டுமொத்தக் கூட்டமும் மூச்சுவிட மறந்து நின்றது. வாலிக்கும் தாராவுக்கும் இடையே அமர்ந்திருந்த அங்கதன், பெரிதாகச் சத்தம் போட்டுச் சிரித்தான். என் மகன் சுதாரித்துக் கொண்டு, தன்னைச் சமநிலைப்படுத்திக் கொண்டு, மிக ஒய்யாரமாகத் தனது குதிரையைச் செலுத்தினான். அங்கதனின் ஏளனச் சிரிப்புக் குறித்து உள்ளூர நான் குமுறிக் கொண்டிருந்தாலும், அவனது சிரிப்பை நான் புறக்கணித்தேன். ஆனால் அப்போது ஓர் அசம்பாவிதம் நடந்தது. ஒரு சிறு கைகலப்புச் சத்தம் எனக்குக் கேட்டது. "அசுரர்கள்! எப்போதும் குடித்துக் கொண்டும் சண்டையிட்டுக் கொண்டும் இருப்பதைத் தவிர, அவர்களுக்கு வேறு வேலையே இல்லை!" என்று நான் நினைத்தேன். என்ன குழப்பம் என்று தெரிந்து கொள்வதற்காகத் திரும்பிப் பார்த்த நான் பேரதிர்ச்சி அடைந்தேன். அங்கதன் தரையில் விழுந்து கிடந்தான். அங்கு ஓர் அசௌகரியமான மௌனம் நிலவியது. என் மகன் ஒருசில அடிகள் தள்ளித் தன் குதிரையை நிறுத்தியிருந்தான். அதிகாயனின் குண்டான, கருத்த உருவம் எங்களுக்குப் பின்னால் இருந்து எழுந்தது. பிறகு மெதுவாக அவன் அங்கிருந்து நடந்தான். "இந்த முட்டாள் இப்போது என்ன செய்து தொலைத்திருந்தான்? ஈனப் பிறவி!" என்று நான் என் மனத்திற்குள் பொருமினேன்.

"அந்த முட்டாளைப் பிடியுங்கள்!" என்று நான் கத்தினேன். நூற்றுக்கணக்கான காவலர்கள் தங்கள் வாள்களை உருவிக் கொண்டு, அங்கதனையும் அதிகாயனையும் சூழ்ந்தனர். வாலியின் முகம் கோபத்தில் சிவந்திருந்தது. நான் அஞ்சி நடுங்கினேன்.

தனது தடிமனான, கரிய இதழ்கள் பிரிந்திருக்க, காற்றில் தனது சுருள்முடி படபடக்க, அதிகாயன் உண்மையிலேயே குழப்பத்தோடு பார்த்தான். அவன் ஒரு முட்டாள் எருதைப்போலத் தோன்றினான், ஆனால் அவனது கைகள் நடுங்கிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன்.

ருத்ராக்கன் தனது வாளை உருவிக் கொண்டு அதிகாயனை நோக்கி நடந்தான்.

“அவன் . . . அவன் . . . எனது சகோதர . . . அதாவது . . . இளவரசன் மேகநாதனை . . . ஏளனப்படுத்தினான் . . . “ என்று அதிகாயன் திக்கித் திக்கிப் பேசினான். கூட்டத்தினரிடையே ஒரு முணுமுணுப்பு எழுந்தது. மேகநாதனின் முகம் குதூகலத்தையும் அன்பையும் வெளிப்படுத்தியது.

“அவனைப் பாதாளச் சிறைக்குள் தள்ளுங்கள். அவனது தலைவிதியை நாளைக்கு நாம் தீர்மானிக்கலாம்,” என்று நான் கத்திவிட்டு, வருத்தமாக இருந்த வாலியை ஓரக்கண்ணால் பார்த்தேன்.

அங்கதன் சுதாரித்து எழுந்து, “நான் அவனைக் கையாண்டு கொள்கிறேன்,” என்று கூறினான்.

“அங்கதா . . . “ என்று கத்திய வாலியின் குரல் மிகவும் அச்சுறுத்துவதாக இருந்தது. ஆனால் அங்கதன் தனது தந்தையின் கோபத்தைப் பொருட்படுத்தவில்லை. என் தந்தையின்மீது நான் கொண்டிருந்த அதே வெறுப்பை நான் அவனது கண்களில் பார்த்தேன். விவகாரம் என் கையை மீறிப் போய்க் கொண்டிருந்ததை அறிந்தபடி, நான் என் இருக்கையில் சோர்வுடன் விழுந்தேன். அங்கதன் இந்த மூடன் அதிகாயனின் கதையை முடித்துவிட்டு, விவகாரத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்பது மட்டுமே அப்போது எனது பிரார்த்தனையாக இருந்தது.

“முட்டாள் . . .” என்று வாலி சீறினான், ஆனால் அங்கதன் தனது கட்டுப்பாட்டை இழந்திருந்தான். அவன் அனைத்துக் காவலர்களையும் தனது சைகையின் மூலம் அங்கிருந்து விரட்டினான். உத்தரவு வேண்டி ருத்ராக்கன் என்னைப் பார்த்தான். நான் மென்மையாகத் தலையசைத்தேன். உடனே, பின்னால் நகர்ந்து கொள்ளுமாறு அவன் தனது காவலாளிகளுக்குக் கட்டளையிட்டான்.

“அவன் என்னை எட்டி உதைத்துவிட்டான். நான் என் கௌரவத்தை மீட்டெடுத்தாக வேண்டும்,” என்று அங்கதன் தன் தந்தையை நோக்கிச் சீறினான். பிறகு, அந்த மைதானத்தில் கூடியிருந்தவர்களிடம், உரத்தக் குரலில், “இலங்கையின் குடிமக்களே! தன்னை ஒரு சிங்கம் என்று நினைத்துக் கொண்டிருக்கின்ற ஒரு கழுதையை வானரர்களாகிய நாங்கள் எவ்வாறு கையாள்கிறோம் என்று பாருங்கள்!” என்று அறிவித்தான்.

அதிகயன் ஓர் ஆந்தையைப்போலத் திருதிருவென்று விழித்துக் கொண்டு, அங்கு ஒரு கிறுக்கனைப்போல நின்றான். மேகநாதன் தனது குதிரையின்மீதிருந்து கீழே இறங்கி, அதிகாயனிடம் வந்தான். அவன் அதிகாயனின் கைகளைப் பிடித்து, அவனது காதில் எதையோ

கிசுகிசுத்துவிட்டு, அந்த மைதானத்தின் மத்திக்கு அவனைக் கூட்டி வந்தான். "கேடுகெட்ட ஒரு வேலைக்காரியின் மகன்! என் பெருமையை அழிக்க வந்த சாபக்கேடு!" என்று நான் உள்ளுக்குள் குமுறினேன். நான் என் சொந்தக் கைகளால் அவனைக் கொல்ல விரும்பினேன். என் பாவத்தின் மகன் என் அன்புக்குரிய மகனான மேகநாதனுடன் மைதானத்தின் மையத்திற்கு வந்தபோது, கூட்டம் ஒப்புதலளித்து ஆர்ப்பரித்தது. இளவரசனின் அந்த ஒரு நடவடிக்கை, அவர்களை அதிகாயனின் ஆதரவாளர்களாக ஆக்கியிருந்தது. மேகநாதன் தனது வாளை உருவி அதிகாயனிடம் எறிந்தான். அதிகாயன் நடுவானில் அதைச் சுலபமாகப் பிடித்ததைக் கண்டு நான் திடுக்கிட்டேன். அவனிடம் ஓர் இயல்பான திறமை இருந்தது. இப்போது என் மனம் இருதலைக்கொள்ளி எறும்பாகத் தவித்தது. என் நாட்டையும், வாலியுடனான எனது நட்பையும் பாதுகாப்பதற்காக அதிகாயன் கொல்லப்பட வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் எனக்குள் எங்கோ ஓரிடத்தில், எந்தவொரு தந்தைக்கும் இருக்கும் பெருமிதம் தலைதூக்கியது. அதிகாயன் வெற்றி பெற வேண்டும் என்று நான் விரும்பினேன். என்ன இருந்தாலும், அவன் என் ரத்தமல்லவா?

அங்கதன் பல முறை வட்டமாகச் சுற்றி வந்தான். கூட்டம் அவனைப் பார்த்துக் கண்டனக் குரல்களை எழுப்பியது. பிறகு, "வானரர்களுக்கு மரணம்! வானரர்கள் ஒழிக!" என்று கோஷமிடத் துவங்கியது. நான் வாலியை ஓரக்கண்ணால் பார்த்தேன். அவனது கைகள் அவனது இருக்கையை இறுக்கமாகப் பற்றியிருந்தன. அவனது பெரிய கைகளில் இருந்த நரம்புகள் புடைத்திருந்தன, ஆனால் அவனது முகம் உணர்ச்சியற்று இருந்தது. கூட்டம் வானரர்களைப் பற்றி இழிவாகப் பேசத் துவங்கியது. அவர்களை அரைச்சாதியினர் என்றும் குரங்கு மனிதர்கள் என்றும் அது அழைத்தது. சிலர் வானர அரசனையே இகழ்ந்தனர். நான் ருத்ராக்கனைத் தேடினேன். ஆனால் அவன் எனக்கு முதுகு காட்டி அமர்ந்தபடி, அந்தச் சண்டையின் துவக்கத்தை உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தது எனக்கு வேடிக்கையாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. அரங்கில் நிலவிய சத்தம் காதுகளைச் செவிடாக்குவதுபோல இருந்தது.

கூட்டத்தினரின் இரைச்சலுக்கிடையே, வாள்கள் இரண்டும் முதன்முதலில் மோதிக் கொண்ட சத்தம் எனக்குக் கேட்டது. எனது நண்பனின் போர்க்குணம் கொண்ட மகனும், ஒரு வேலைக்காரியின் மகனும் சண்டையிட்டனர். முதல் ஒருசில நிமிடங்களில், அங்கதன் பல முறை அதிகாயனின் உடலிலிருந்து ரத்தத்தை வரவழைத்தான். அவன் நல்ல வளைவுத் தன்மையுடனும் விரைவாகச் செயல்படுபவனாகவும்

இருந்தான். அதிகாயன் சில சமயங்களில் நயமின்றிச் சண்டையிட்டான், மற்ற நேரங்களில் மிக லாவகமாகச் சண்டையிட்டான். ஆனால் அங்கதனின் உடலை அவனது வாளால் நெருங்கக்கூட முடியவில்லை. நான் ஆசுவாசமடையத் துவங்கினேன், ஆனால் எனக்கு வருத்தமாகவும் இருந்தது. கூட்டம் அமைதியாகியிருந்தது. அவர்களிடையே பதற்றம் நிலவியது. காற்றில் பகைமையும் வெறுப்பும் கலந்திருந்ததை என்னால் உணர முடிந்தது. வாலி சற்று ஆசுவாசமடையத் துவங்கியிருந்ததையும் என்னால் உணர முடிந்தது. அப்போது, அங்கதன், அதிகாயனின் கால்களுக்கிடையே பலமாக எட்டி உதைத்தான். அதிகாயன் பறந்து போய்த் தரையில் பலத்தச் சத்தத்துடன் மோதினான். கூட்டத்தினருக்கு மூச்சுத் திணறியது. அங்கதன் பெரிதாகச் சிரித்துவிட்டு உறுமினான்.

அதிகயன் நினைவிழந்து ஒரு குவியலாகக் கிடந்தான். அவன் ஒருவேளை இறந்து போயும் கிடக்கலாம். கூட்டத்தினரை நோக்கி அங்கதன் தனது வாளை ஆட்டினான். அதை அதிகாயனின் உடலில் செருகி அவனால் அவனைத் தீர்த்துக் கட்டியிருக்க முடியும். ஆனால் அவன் அப்படி எதுவும் செய்யவில்லை. அது அவனுக்குச் சவாலானதாக இருந்திருக்காது. ஒரு வானர இளவரசன் ஓர் அசுரனைத் தோற்கடித்தக் கணத்தை அவன் முழுவதுமாக அனுபவித்துக் கொண்டிருந்தான். அதன் ஒவ்வொரு நொடியையும் அவன் அனுபவிக்க விரும்பினான். வாலியின் முகத்தில் ஒரு புன்னகை அரும்பியதையும், ஒரு பெருமிதம் ஒளிவீசிச் சென்றதையும் என்னால் பார்க்க முடிந்தது. எனக்கு வருத்தமாக இருந்தாலும், நான் நிம்மதியடைந்தேன். ஒரு பெரும் நெருக்கடி எப்படியோ தவிர்க்கப்பட்டிருந்தது. ஆனால் அப்போது, என் மகனின் உயரமான, கம்பீரமான உருவம் அதிகாயனை நோக்கி நடந்து சென்றதை நான் பார்த்தேன். அங்கதன் தனது சேட்டைகளை நிறுத்திவிட்டு, பகைமை தெறித்தப் பார்வையை என் மகனின்மீது வீசினான். அவன் மேகநாதனை ஒற்றைக்கு ஒற்றைச் சண்டைக்கு அழைத்துவிடக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன். அப்படி அவன் அழைத்தால், மேகநாதன் அதை ஏற்றுக் கொண்டாக வேண்டியிருக்கும். அச்சண்டையின் முடிவு எதுவாக இருந்தாலும், அது ஒரு பேரழிவிற்குத்தான் வழிவகுக்கும். அரங்கில் நடந்தேறிக் கொண்டிருந்த காட்சியை நான் கண்டபோது, என் ஒட்டுமொத்த உடலும் நடுங்கிக் கொண்டிருந்ததை நான் உணர்ந்தேன். "வாலியின் முட்டாள் மகன்! அவனை நான் கொல்லத் துடிக்கிறேன். மக்களால் ஏன் தங்கள் குழந்தைகளை ஒழுங்காக வளர்க்க முடியவில்லை?" என்று எனக்கு நானே குறைபட்டுக் கொண்டேன்.

மேகநாதன் அதிகாயனின் தலையை எடுத்துத் தன் மடிமீது கிடத்திக்

கொண்டு, அவனது காதில் எதையோ கிசுகிசுத்தான். மைதானத்தில் மீண்டும் ஓர் அசௌகரியமான மௌனம் நிலவியது. நேரம் அப்படியே நின்றது. அன்று கடும் வெப்பம் நிலவியது. கடலிலிருந்து வீசிய காற்றும் நின்று போயிருந்தது. தூரத்தில் எங்கோ ஓர் ஆடு கத்தியது. விரைவில் அதன் குட்டியின் எதிர்க்குரல் கேட்டது. என் முதுகு வியர்வையில் குளித்திருந்தது. அதிகாயன் லேசாக அசைந்தான். கூட்டத்திலிருந்து ஒரு முணுமுணுப்பு எழுந்தது. அப்போது, மேகநாதனின் தோள்களைச் சுற்றி ஒரு கையைப் போட்டுக் கொண்டு அதிகாயன் மெதுவாக எழுந்திருக்க முயற்சித்தான். அவன் இரண்டு முறை தடுமாறினான், ஆனால் மேகநாதன் பலமாக அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான். பிறகு, அதிகாயன் மேகநாதனை விலக்கித் தள்ளிவிட்டு, தடுமாறியபடி அங்கதனை நோக்கி இரண்டு அடிகள் நடந்தான். பிறகு அவன் தன்னை நேராக்கிக் கொண்டு, பெரிதாக உறுமினான். அவனது உறுமல் ஒரு மனிதன் ஏற்படுத்தியதுபோல இருக்கவில்லை. அது அந்த ஒட்டுமொத்த அரங்கு நெடுகிலும் அதிர்ந்த்து. பதிலுக்கு, கூட்டத்திலிருந்து பத்தாயிரம் தொண்டைகள் பலமாக கர்ஜித்தன. அந்தச் சத்தம் என்னைப் பீதியடையச் செய்தது.

மேகநாதன் மாரீசனிடமிருந்து ஓர் உருட்டுக்கட்டையை எடுத்துக் கொண்டு, அதிகாயனை நோக்கி மிடுக்காக நடந்தான். தனது எதிரியின்மீது தன் பார்வையைத் தீவிரமாக நிலைப்படுத்தியிருந்த அதிகாயன், மேகநாதனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல், தனது இடது கையால் அந்த உருட்டுக்கட்டையை அவனிடமிருந்து வாங்கி, அதைத் தனது வலது கைக்கு மாற்றினான். அவனது உடலில் நூறு இடங்களிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவன் தன் கால்களை விரித்துக் கொண்டு, தனது பெரிய இடது கையால் தன் இடுப்பை உறுதியாகப் பிடித்துக் கொண்டு, அங்கதனைப் பார்த்துக் கோபத்தில் முகஞ்சுளித்தபடி நிலையாக நின்றான். அங்கதனுக்கு வேறு வழி இருக்கவில்லை. அவன் தனது கௌரவத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியிருந்தது. எனவே, அவன் தன் வாளைக் கீழே போட்டுவிட்டு, தனது உருட்டுக்கட்டையை எடுத்தான். அவன் அதைத் தன் கையில் எடுத்தபோது, கூட்டத்தினர், ஒரே குரலில், “வானரனுக்கு மரணம்! குரங்கு மனிதனுக்கு மரணம்!” என்று கோஷமிட்டனர்.

ஒட்டுமொத்தச் சண்டையும் முற்றிலுமாக மாறியது. முன்பு அதிகாயன் தனது வாளைக் கொண்டு அவ்வளவு நயமாகச் சண்டையிடவில்லை. அவனது பருத்த உடலால், மெல்லிய உடல் கொண்ட அங்கதனைப்போல வேகமாகவோ அல்லது சுறுசுறுப்பாகவோ செயல்பட முடியவில்லை. ஆனால் ஒரு கனமான

உருட்டுக்கட்டையைச் சுழற்றுவதற்கு அவனது பருத்த உடல் அவனுக்கு அனுகூலமாக இருந்தது. ஆனாலும் அங்கதன் வேகமாகவும் நளினமாகவும் செயல்பட்டதில், இப்போதும் அதிகாயன்தான் அதிக முறை அடி வாங்கினான். ஆனால் அதிகாயனின் தாக்குதல் பலமாகவும் துல்லியமாகவும் இருந்ததால், வெகுசில முறையே அவனது உருட்டுக்கட்டை அங்கதனின் உடலின்மீது பட்டாலும்கூட, அப்போது அது அவனை பலமாகக் காயப்படுத்தியது. எதிரியை ஒரு முறை தாக்கிவிட்டு அவனிடமிருந்து விலகிச் செல்வது வாள் சண்டையில் வேண்டுமானால் பலனளிப்பதாக இருக்கலாம். ஆனால் உருட்டுக்கட்டையால் தாக்குவதைப் பொறுத்தவரை, தாக்குதல் பலமாகவும் துல்லியமாகவும் இருந்தாலொழிய, அது அவ்வளவு தாக்கத்தை ஏற்படுத்தாது. குறிப்பாக, அதிகத் தசையுடன்கூடிய, அதிகாயனைப் போன்றவர்கள்மீது அது சிறிதளவு தாக்கத்தைக்கூட உண்டாக்காது. கூட்டத்தினரின் கூச்சல் அதிகரிக்க அதிகரிக்க, அதிகாயனின் வலிமையும் அதிகரித்துக் கொண்டே போனது.

நான் எனது மகன்கள் குறித்துப் பெருமிதமடைந்தேன். “அரைச்சாதிக் குரங்கு மனிதன் தனது காட்டுமிராண்டி மகனுடன் இங்கு வந்து எங்களது வீரர்களைத் தன்னால் புரட்டியெடுக்க முடியும் என்று நினைத்தானா?” என்று நான் என் மனத்திற்குள் எண்ணிக் கொண்டேன். ஆனால் ஒருவேளை அதிகாயன் வெற்றி பெற்றால், அதன் பிறகு என்ன நிகழும் என்று நினைத்து நான் பயந்தேன். நான் வாலியின் நண்பனாகத் தொடர்ந்து நீடிக்க விரும்பினேன். அவன் ஒரு நல்ல நண்பன், ஆனால் நல்ல நண்பர்கள் இல்லாமலும் நம்மால் சமாளிக்க முடியும். தனது நீண்டகால நோக்கையும், அதை அடைவதற்கான வழிகளையும் நன்றாக அறிந்திருந்த ஒரு நண்பன் அவன். கங்கைச் சமவெளியின் மேற்பகுதியைச் சேர்ந்த காட்டுமிராண்டித்தனமான எண்ணற்ற தேவர்கள் தங்கள் வால்களைச் சுருட்டிக் கொண்டு தத்தம் இடங்களில் இருப்பதை அவன் உறுதி செய்திருந்தான். இப்படிப்பட்ட நண்பர்கள் மிகவும் இன்றியமையாதவர்கள். மறுபுறம், முறை தவறிப் பிறந்த மகன்களைச் சுலபமாக நம்மால் தூக்கியெறிய முடியும். அவர்கள் இன்றியமையாதவர்கள் அல்ல. ஆனால் அந்த வேலைக்காரியின் முட்டாள் மகனின் உடலில் எனது ரத்தம் ஓடிக் கொண்டிருந்தது. அவன் சண்டையிட்டுக் கொண்டிருந்த விதத்தைப் பார்த்தபோது, வாலியை அவன் எனது மிகப் பெரிய எதிரியாக ஆக்கிவிடுவான்போலத் தோன்றியது.

அங்கதன் தனது கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு கீழே சரிந்தான். அவனது இரண்டு கைகளும் உடைந்து,

எடக்குமடக்காக முறுக்கிக் கொண்டிருந்தன. அதிகாயனின் உடலிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவனது இடது பாதத்திற்கு அடியில் ஒரு ரத்தக் குளம் உருவாகியிருந்தது. மூச்சுத்திணறிக் கொண்டிருந்த அங்கதனின் மார்பின்மீது அவன் தனது வலது காலை உறுதியாக ஊன்றினான். வாலி தனது முஷ்டிகளை மடக்கிக் கொண்டு தன் இருக்கையைவிட்டு எழுந்தான். அவனது முகம் விறைப்பாகவும் இறுக்கமாகவும் இருந்தது. அவனது அரசியின் முகம் பீதியில் உறைந்து போயிருந்தது. “அவனைக் கொல்! அவனைக் கொல்! அந்தக் குரங்கின் மகனைக் கொல்!” என்று கூட்டம் வெறித்தனமாகக் கத்தியது. அந்தக் காட்டுக்கத்தல் எல்லா இடங்களிலும் எதிரொலித்தது.

அதிகயன் தனது உருட்டுக்கட்டையைத் தனது தலைக்கு மேல் வளைவாக உயர்த்தினான். அது கிட்டத்தட்ட அவனது முதுகைத் தொட்டுக் கொண்டிருந்தது. அவன் அதை பலமாகச் சுழற்றி, அங்கதனின் தலையை உடைத்திருப்பான். வாலியின் மகன் ஒரு நொடியில் சுக்குநூறாகியிருப்பான்.

“ருத்ராக்கன்!” என்று நான் உச்சக்குரலில் கத்தினேன். அது அவனது காதுகளில் விழுந்ததா இல்லையா என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. ஒரு யுகம் கழிந்ததுபோல இருந்தது. ஆனால் அப்போது அதிகாயன் என்னைத் திரும்பிப் பார்த்தான். “அவன் கண்களில் நான் கண்டது பகையா, வியப்பா, இரக்கமா, அல்லது கடைந்தெடுத்த வெறுப்பா?” அவன் ஒரு கணம் என்னைப் பார்த்தபடி நின்றான். கூட்டம் அமைதியானது. அவனது உருவம் என் மனத்தில் இன்றும் அப்படியே உறைந்து நிற்கிறது. அப்போது ருத்ராக்கனின் கண்கள் எனது கண்களைச் சந்தித்தன. அவன் என் விருப்பத்தைப் புரிந்து கொண்டான். அவன் தன் கையை லேசாக ஆட்டியவுடன், இருபதுக்கும் அதிகமான காவலாளிகள் அந்த மைதானத்தின் மையத்தை நோக்கி விரைந்தனர். அவர்கள் தங்கள் உருட்டுக்கட்டைகளாலும் கம்புகளாலும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் அதிகாயனைத் தாக்கினர். ஆனால் அவன் அதைச் சற்றும் பொருட்படுத்தாமல் என் ஆன்மாவைத் துளைத்துப் பார்த்தபடி ஒரு மிகப் பெரிய ஆலமரம்போல அங்கேயே நின்றான். அங்கதன் இன்னும் அவனது காலடியில் மிதிபட்டுக் கிடந்தான். அதே சமயத்தில், கூட்டத்திலிருந்து ஒரு கரிய உருவம் திடீரென்று வெளிவந்து அதிகாயனை நோக்கி விரைந்தது. அது அந்தக் காவலர்களுக்கு முன்பாக அதிகாயனைக் கிட்டத்தட்ட அடைந்திருந்தது. ருத்ராக்கன் தனது வாளைக் கொண்டு மிகவும் ஆற்றலோடு அவனைத் தாக்கினான். அந்தக் கரிய உருவம் கீழே சாய்ந்தது. முட்டாள் பத்ரன்தான் அது என்பது பின்னர் எனக்குத் தெரிய வந்தது. அவன், ஓடிக் கொண்டிருந்த

வீரர்களின் கால்களில் மிதிபட்டு, ஒருசில கணங்கள் நெளிந்து புரண்டு, பிறகு அசைவின்றிக் கிடந்தான். மேகநாதனும் மாரீசனும் ருத்ராக்கனைத் தடுத்து நிறுத்த முயற்சித்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். கூட்டத்தினரும் பெரும் அதிர்ச்சி அடைந்தனர், என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தனர். ருத்ராக்கனின் செயல் முற்றிலும் நியாயமற்றது என்பதால், கூட்டம் தனது மயக்கம் தெளிந்து எழுந்தவுடன் எவ்வாறு நடந்து கொள்ளும் என்பதை நினைத்து நான் பயந்தேன். பிரஹஸ்தன் உரத்தக் குரலில் தனது காவலாளிகளுக்கு உத்தரவுகளைக் கொடுத்துக் கொண்டிருந்தது என் காதுகளில் விழுந்தது. கூட்டத்தினரை உடனடியாக அங்கிருந்து வெளியேற்றுவதற்கு அவன் அக்காவலர்களைப் பொருத்தமான இடங்களில் நிலைப்படுத்தினான். ஆனால் முறை தவறிப் பிறந்த என் மகனைக் காப்பாற்றுவதற்காக என் சொந்த மாமனும் என் அன்புக்குரிய மகனும் எனது விசுவாசமான படைத்தளபதியுடனும் அவனது படையினருடனும் சண்டையிட்டுக் கொண்டிருந்ததைக் கண்டு எனக்குக் குலை நடுக்கம் ஏற்பட்டது. அது ஒரு கொடுங்கனவுபோல இருந்தது. கூட்டத்தினர் அங்கிருந்த காவலர்களுடன் சண்டையிட்டனர். ஒருசில இடங்களில் நெருப்புப் பொறிகளும் வெடித்துச் சிதறின. அங்கு ஒரு பெரும் நெரிசலும் மிதிபாடும் உருவாகியிருந்தது.

அப்போது, அரங்கத்தின் மையத்தை நோக்கி வாலி ஓடிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். மாரீசன் ருத்ராக்கனுடன் மிகத் தீவிரமாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தான். மேகநாதன் அக்காவலர்களைக் கிட்டத்தட்ட ஊடுருவியிருந்தான். அப்போது வாலி தனது வாளைச் சரமாரியாகச் சுழற்றியவாறே அக்குழப்பத்தின் ஊடாகத் தனக்கொரு வழியை ஏற்படுத்திக் கொண்டு முன்னேறினான். மேகநாதன் வாலியை எதிர்த்துச் சண்டையிட முயன்றான். என் கைகள் தாமாக என் வாளுக்குச் சென்றன. ஆனால் நான் எதுவும் செய்வதற்கு முன்பாக, வாலி, மேகநாதனின் மணிக்கட்டைத் தன் கையால் வேகமாகப் பற்றி, அவனது வாளைத் தட்டிவிட்டான். பிறகு, ருத்ராக்கனைப் பலமாக எட்டி உதைத்துத் தரையில் சாய்த்தான். அவன் மேகநாதனை விலக்கித் தள்ளினான். என் மகன் ஒருசில அடிகள் தடுமாறி, தரையில் மல்லாக்க விழுந்தான். அடுத்து, எனது வீரமிக்க மாமனின் முறை. வாலி மாரீசனைத் தன் தலைக்கு மேலே தூக்கி, ஒரு பத்தடிகள் தள்ளி வீசி எறிந்தான். மற்றக் காவலாளிகள் அஞ்சி நடுங்கி, எதுவும் செய்யாமல் வாலிக்கு வழிவிட்டனர். அதிகாயன் அங்கதனின்மீது நிலைகுலைந்து விழுந்து கிடந்தான். அவனுக்குக் கடுமையாக மூச்சிறைத்தது. வாலி அதிகாயனின் பருத்த உடலைத் தன்

கைகளால் சுலபமாகத் தூக்கினான். “வாலி அவனைத் தூக்கித் தரையில் வேகமாக வீசப் போகிறான். என் மகனைக் கொல்வதற்கு அவனுக்கு என்ன துணிச்சல்?” என்று நான் எனக்குள் சீறினேன்.

வானர ரத்தம் வேண்டும் என்று கூட்டத்தினர் முழங்கினர். பலர், பாதுகாப்பு வளையத்தைத் தாண்டிச் சென்று, அரங்கத்தின் மையப் பகுதியை நோக்கி ஓடினர். வாலி தனது மகனைக் கவனிக்கச் செல்வதற்கு முன்பாக, அதியனைக் கீழே எறிந்து அவனது கதையை முடித்துவிடுவான் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் எல்லோரையும் ஆச்சரியப்படுத்தும் விதத்தில், அவன் என் மகனைத் தன் கைகளில் ஏந்திக் கொண்டு திரும்பி நடந்தான். ஒட்டுமொத்தக் கூட்டமும் மூச்சுப்பேச்சின்றி அமைதியானது. சண்டையிடுவதற்காக அரங்கின் மையத்திற்கு ஓடிய மக்கள், ஆணியடித்தாற்போல அப்படியே நின்று அக்காட்சியைக் கவனித்தனர். அரசி தாரா தேம்பித் தேம்பி அழுதாள். என் மனைவியும் அவளோடு சேர்ந்து கொண்டாள். என் கண்களில் கண்ணீர் நிரம்பியது, ஆனால் நான் அதை மறைத்துக் கொள்வதற்காக வேறு பக்கமாகத் திரும்பி எனது வீரர்களுக்கு உத்தரவுகளைப் பிறப்பித்தேன். ஆனால் யாரும் என்னைக் கண்டுகொள்ளவில்லை. என் வாழ்வில் இனியொருபோதும் நான் பார்க்காமல் போகவிருந்த எனதருமை நண்பனும் மிக உன்னதமான, நியாயமான வீரனுமான வாலி, வீழ்த்தப்பட்ட என் மகனைத் தூக்கிக் கொண்டு என்னிடம் வந்தான். மிகச் சிறந்தவன் என்று கூறுவதற்கு உண்மையிலேயே தகுதியானவன் வாலி ஒருவன்தான். அவனது மகன் அங்கு உயிரோடு கிடந்தானா அல்லது மாண்டு கிடந்தானா என்று எங்களுக்குத் தெரியவில்லை. ஆனால், நியாயமாக நடந்து கொள்வதற்கான மகத்துவமான இதயம் வாலியிடம் இருந்தது. நான் செய்திருந்த காரியம் இழிவானது. அது குறித்து நான் அவமானமாக உணர்ந்தேன். அசுரர்களின் பேராற்றல்மிக்க அரசனான நான், அன்று எனது ஆயிரக்கணக்கான குடிமக்களின் முன்னிலையில் வாய்விட்டு அழுதேன். உலகத்திடமிருந்து என் முகத்தை மறைத்துக் கொண்டு நான் அழுதேன். கிட்டத்தட்ட இறந்துவிட்டிருந்த என் மகன் அதிகாயனுக்காகவும், தனது நியாயம் மற்றும் உச்சகட்டத் தியாகத்திற்காக எனது நண்பனுக்காகவும், என் மகன் மேகநாதனுக்காகவும், நியாயத்திற்காக என்னையும் வாலியையும் துணிச்சலோடு எதிர்த்து நின்ற எனது மாமனுக்காகவும் நான் அழுதேன். நான் இப்படிப்பட்ட ஒரு கழிசடையாக இருந்ததற்காகவும் அழுதேன்.

அதிகயனையும் அந்த முட்டாள் பத்ரனையும் அவர்கள் ராஜ வைத்தியரிடம் கொண்டு சென்றனர். பாதி இறந்து போயிருந்த எனது நண்பனின் மகனையும் அவர்கள் அந்த வைத்தியரிடம் கூட்டிச் சென்றனர். அதிகாயனின் அடிகளைவிட, அவமானமும் பயமும்தான்

அவனை அதிகமாகக் காயப்படுத்தியிருந்தன. அடி உதைகளால் ஏற்படும் காயங்கள் குணமடைந்துவிடும், ஆனால் நமது இதயங்களுக்கு ஏற்படும் காயங்களின் கதி என்ன? அவை குணமாகுமா? ஒரு நண்பன் இன்னொரு நண்பனுக்குச் செய்யும் பெருந்தன்மையான காரியத்தை ஒரு நட்பால் பொறுத்துக் கொள்ள முடியுமா? நட்பால் நம்பிக்கைத் துரோகத்தைப் பொறுத்துக் கொள்ள முடியும், ஆனால் இப்படிப்பட்ட அசாதாரணமான அன்பான செயலையும் உன்னதமான இதயத்தையும் அதனால் தாங்கிக் கொள்ள முடியுமா?

கூட்டம் கலைந்தது. அந்தக் காட்டுமிராண்டி அங்கதன் தனது தந்தையைக் கடந்து சென்றபோது, “பலவீனமானவனே! நான் உன்னைப் பிறகு பார்த்துக் கொள்கிறேன்,” என்று சீறினான். ஆனால் எதுவும் தன் காதுகளில் விழுந்திருக்கவில்லை என்பதுபோல, வாலி, தொலைவில் எதையோ வெறித்தபடி நின்றான். அரசி தாரா தன் கணவனைக் கடுமையான வெறுப்போடு பார்த்ததை நான் பார்த்தேன். நான் என் நண்பனுக்காக பயந்தேன். அந்தக் கணத்தில், நான் அறிந்த உலகம் மாறிவிட்டிருந்தது என்பதை நான் உணர்ந்தேன். எங்களது தலைமுறையும் அதன் மதிப்பீடுகளும் ஒரு புதிய, ஆணவத்தனமான, தீவினைக்கு அஞ்சாத, அங்கதனைப் போன்ற இளைஞர்கள் நிரம்பி வழிந்த ஓர் உலகமாக மாறிக் கொண்டிருந்தது. இனிவரும் நாட்களில், எங்களைப் போன்ற மக்கள் சுத்தமாகத் துடைத்தெறியப்பட்டுவிடுவோம் என்று நான் பயந்தேன். எங்கள் மதிப்பீடுகள் தொலைந்து கொண்டிருந்தன. என்னைப் போன்ற வயதான மனிதர்களுக்கு, வாழ்க்கை மிக வேகமானதாகவும் நேர்மையும் நியாயமுமற்றதாகவும் ஆகிக் கொண்டிருந்தது. நான் மெதுவாக என் மனைவியின் கையைப் பிடித்து, எங்களது ரதத்தை நோக்கி நடந்தேன். அன்று என் மனைவி என்னை என் சொந்த உலகிற்குள் தனியாக விட்டுச் சென்றாள். நான் ஒரு புழுவைப்போல என் இருட்டுக்குள் சுருண்டு கிடந்தேன். அடுத்த நாள் அதிகாலையில், வாலியும் தாராவும் தங்களது காயப்பட்ட மகனுடன் என் அரண்மனையிலிருந்து புறப்பட்டுச் சென்றனர். நான் என் நண்பனை அதன் பிறகு ஒருபோதும் பார்க்கவே இல்லை.



# 36

## ஒரு நாடு தனது கதாநாயகனுக்கு நன்றி கூறுகிறது

பத்ரன்

அதிகயனை அவர்கள் என் வீட்டிற்குக் கொண்டு வந்தபோது, கிழக்கு வானம் கிட்டத்தட்ட வெளுரத்திருந்தது. அவன் பலத்தக் காயங்களோடும் கட்டுக்கள் போடப்பட்டும் வந்து சேர்ந்தான். அவர்கள் அவனை உள்ளே கொண்டு வந்தபோது, அவன் மென்மையாக முனகினான். அவர்கள் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவனைக் கீழே படுக்க வைத்தனர். அதேபோல, ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவர்கள் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றனர்.

அதிகயன் என் கைகளில் வளர்ந்தான். அவனுக்கு மூன்று வயதானபோதிலிருந்து அவன் என்னை அப்பா என்று அழைத்து வந்திருந்தான். துவக்கத்தில் அதைக் கேட்டு நான் பதறினேன். அவன் தகாத உறவின் மூலம் பிறந்திருந்தால்கூட, அவன் ஓர் இளவரசன். நான் ஒரு குப்பைமேட்டுக்காரன். அவன் என்னை அப்பா என்று அழைப்பதைத் தடுத்து நிறுத்துவதற்காக நான் அவனைப் பார்த்துக் காட்டுக்கூச்சல் போட்டிருந்தேன், அவனிடம் கெஞ்சியிருந்தேன், சில

சமயங்களில் அழுதும் இருந்தேன். ஆனால் அவன் தன் தீர்மானத்தில் உறுதியாக இருந்தான். அவன் என்னைத் தனது அப்பா என்று அழைக்க வேண்டும் என்ற ஓர் ஆசை என் இதயத்தில் இருந்தது என்பது உண்மைதான். அவன் இப்போது எனது மகன். எந்தவோர் அரசனாலும் அவனைச் சொந்தம் கொண்டாட முடியாது. அவன்தான் என்னை இந்த பூமியில் காலூன்றி நிற்க வைத்தான். நாங்கள் இருவருமாகச் சேர்ந்து, திரிகோட்டா நகரத்தையும், காடுகளையும், திரிகோட்டா நகரைச் சூழ்ந்திருந்த நீர்வழிகளையும் குன்றுகளையும் ஆராய்ந்தோம். ஆயுதங்களைப் பயன்படுத்த நான் அவனுக்குக் கற்றுக் கொடுத்தேன். என்னுடைய தாழ்மையான குடிலில் அவன் ஓர் இளவரசனாக இருந்தான். அவன்தான் என் பெருமையாகவும் என் எதிர்காலமாகவும் இருந்தான்.

அவன் கேலி செய்யப்பட்டபோது நான் வேதனையடைந்தேன். தனக்கு எல்லாம் தெரியும் என்ற நினைப்பில் இருந்த, அகந்தையுடன்கூடிய, முறையாகப் பிறந்த இளவரசனான மேகநாதன் இவனை ஒரு நாய்க்குட்டிபோல எல்லா இடங்களுக்கும் இழுத்துச் சென்றதைக் கண்டபோது என் மனம் சொல்லொணாத் துயரம் கொண்டது. ஆனால் அதிகாயன் தனது சகோதரன்மீது ஓர் ஆழமான பாசம் கொண்டிருந்தான். அதையும், அவன் தன் தாயார் மாலாவின்மீது காட்டிய அன்பையும் கண்டு நான் பொறாமைப்பட்டேன். அரண்மனைக்குச் செல்வதிலிருந்து நான் அவனைத் தடுத்து நிறுத்த முயற்சித்தேன். ஆனால் அரண்மனைக்கு வரும்படி அரசனிடமிருந்தோ அல்லது அவரது மகனிடமிருந்தோ அதிகாயனுக்கு எப்போதும் உத்தரவு வந்து கொண்டே இருந்தது. எடுபிடி வேலைகளைச் செய்வதற்கு அவர்களுக்கு எப்போதும் ஒருவன் தேவைப்பட்டான். அதிகாயன் எங்கள் அரசனிடமும் இளவரசனிடமும் ஒரு நாயைப் போன்ற விசுவாசத்தைக் கொண்டிருந்தான். அவன் மிகவும் எளிமையானவன், சூதுவாது அறியாதவன். உடல்ரீதியாக அவன் வலிமையானவனாக இருந்தாலும், மனத்தளவில் மிகவும் பலவீனமாக இருந்தான். அவன் வலியச் சென்று மக்களுக்கு உதவி செய்தான். சமுதாயத்தின் கீழ்மட்ட நிலையில் இருந்த, நல்ல உள்ளம் படைத்த மற்றவர்களைப்போலவே, அவனது நல்லியல்பை அனுபவமின்மை என்றும் அறிவின்மை என்றும் மக்கள் தவறாகக் கருதினர்.

எல்லோரும் அவனை முட்டாள் என்று கருதினர். ஆனால் அந்த மென்மையான, அன்பான முகத்திற்குப் பின்னால், மிக வலிமையான ஒரு தாங்குதிறன் ஒளிந்திருந்ததாக நான் உறுதியாக நம்பினேன். சில சமயங்களில், அந்த உறுதியான எஃகு அவ்வப்போது வெளியே

தலைகாட்டியதை நான் கண்டேன். ஆனால் அதிகாயன் பெரும்பாலும், எல்லோரையும் எளிதில் நம்பிவிடக்கூடிய, சூதுவாது அறியாத ஓர் அப்பாவி இளைஞனாக இருந்தான். உலகின் சூழ்ச்சிகரமான மக்கள் அவனைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். சமுதாயத்தில் எங்களுடைய நிலையில் இருந்தவர்களுக்கு, பரிவு, துணிச்சல், நன்னெறிகள், கொள்கைகள், அனுதாபம் ஆகியவை மிகவும் ஆபத்தான மதிப்பீடுகளாக இருந்தன. ஒரு கருத்தத் தோலுக்கு அடியில் ஒரு பொன்னான இதயத்தைக் கொண்டிருப்பது பாதுகாப்பற்றதாக இருந்தது. அவை அனைத்தும், பணக்காரர்களுக்கும் மேட்டுக்குடியினருக்கும் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர்களுக்கும் வெள்ளைத் தோல் கொண்டவர்களுக்குமான ஆடம்பரங்கள். தங்களுக்குத் தேவையான சமயங்களில் அவர்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டனர். வாட்டசாட்டமான, கரியநிற உடலைக் கொண்ட எனது அசிங்கமான மகனுக்கு அவை தேவையில்லை. சிறிதளவு துதிபாடுதல், கொடூரத்தன்மை, உயிர்வாழ்வதற்காக எந்தவோர் எஜமானனுக்கும் சேவை செய்வதற்கான விருப்பம், உள்ளூரப் பொங்கிக் கொண்டிருக்கும் கோபத்தை மறைப்பதற்கான திறன், அதிக வலிமையானவர்களுக்கு முன்னால் பணிந்து போகும் மனப்போக்கு ஆகியவைதான் எங்கள் உலகில் உயிர் பிழைத்திருப்பதற்கான அத்தியாவசியமான கருவிகள். ஆனால் அந்த முட்டாள் அதிகாயனுக்கு இவை எதையும் என்னால் புரிய வைக்க முடியவில்லை.

இப்போதுவரை அவன் ஒரு சிறப்பான வாழ்க்கையை வாழ்ந்திருந்தான். ஆனால் நாங்கள் அனுபவித்திருந்த சிரமங்களைத் தற்போதைய தலைமுறையினர் புரிந்து கொண்டனரா? ராவணன் என்னைப் போன்றவர்களின் சதையின்மீதும் வியர்வையின்மீதும் ரத்தத்தின்மீதும் தனது சாம்ராஜ்யத்தைத் கட்டியெழுப்பி, இன்று எட்டியிருந்த நிலையை அடைவதற்குப் போராடிக் கொண்டிருந்த சமயத்தில், இளவரசன் மேகநாதனும் ஒரு சிறப்பான வாழ்க்கையை வாழ்ந்திருந்தான். நாங்கள் எங்கள் வாழ்க்கையைத் துவக்கியபோது, எல்லோருக்குமே அதே வாய்ப்புகள் இருந்திருக்கலாம். ராவணன் இன்று எந்த நிலையில் இருந்தாரோ, அதே நிலையை எங்களில் எவரொருவராலும் அடைந்திருக்க முடியும். எங்களிடம் இருந்ததைவிட அதிகமாக அவரிடம் எதுவும் இருந்துவிடவில்லை. என்னிடம் இல்லாத எது ராவணனிடம் இருந்தது? ஆட்சி செய்வதற்குப் பிறந்தவன் தான் என்ற அமைதியான தன்னம்பிக்கையா? வெறும் அதிர்ஷ்டமா? அல்லது அவர் புத்திசாலியாகவும் ஈவு இரக்கமற்றவராகவும் இருந்தது அதற்குக்

காரணமா? அவர் ஈவு இரக்கமற்றவராக இருந்ததுதான் காரணம் என்றால், ருத்ராக்கன்தான் வேறு எவரொருவரைவிடவும் அதிகக் கடுமையானவனாகவும் கருணையற்றவனாகவும் இருந்தான். புத்திசாலித்தனமான உத்தியுடன்கூடிய நீண்டகாலச் சிந்தனைதான் அதற்கான விடை என்றால், பிரஹஸ்தனுக்கு யாரும் அதில் ஈடாக மாட்டார்கள். வீரம்தான் அதற்குக் காரணம் என்றால், வீரம் மிக்க அசுரர்கள் எண்ணற்றோர் இருந்தனர். அவர்கள் அனைவராலும் மேன்மையான நிலையை எட்டியிருக்க முடியும். வசீகரம்தான் மிக முக்கியமான காரணி என்றால், வித்யுத்ஜீவனால் ஏன் வெற்றி பெற முடியவில்லை? புத்திசாலித்தனம்தான் முக்கியம் என்றால், மயனால் ஏன் ஒரு நல்ல நிலையை எட்ட முடியவில்லை?

கனவின் அளவும், அது குறித்து நடவடிக்கை எடுப்பதற்குத் தயாராக இருப்பதும்தான் ஒருவன் மேன்மையான நிலையை அடைவதற்குக் காரணம் என்று நான் நினைக்கிறேன். ராவணன் பெரிதாகக் கனவு கண்டார். அதை அடைவதற்கு ஈவு இரக்கமின்றிக் கடுமையாக முயற்சித்தார். தனது லட்சியத்தை நிறைவேற்றுவதற்கு அனைத்து விதமான மக்களையும் அவர் தனக்காக வேலை பார்க்க வைத்தார். அவர் ஏராளமானோரைத் தன் காலில் போட்டு மிதித்தார். கொழுந்துவிட்டெரிந்த தனது லட்சியத்திற்காக என்னைப் போன்ற முட்டாள்களை அவர் ஒரு விறகுக் கட்டையைப்போலப் பயன்படுத்தினார். எனவே அவர் இப்போது ஒரு மாளிகையில் வசித்தார், நான் ஒரு குடிசையில் வசித்தேன். அதற்காக நான் ராவணனை வெறுத்தேன். அவர் என் மகனை அடித்துத் துவைத்துவிட்டு, என்னை ஒரு கீழ்த்தரமான நாயைப்போல நடத்திவிட்டு, எங்களுடைய அசிங்கமான, அழுக்கான, வியர்வையுடன்கூடிய, நாற்றமடித்த, கருப்பான தோல் தன்மீது பட்டுவிடாமல் பார்த்துக் கொண்டு, அதே சமயத்தில் சமத்துவத்தைப் பற்றி உரத்தக் குரலில் பேசுவதும், காட்டுமிராண்டித்தனமான தேவர்களிடம் இருந்து அசுரர்களைக் காக்கின்ற ரட்சகன் தான் என்பதுபோலத் தன்னைக் காட்டிக் கொள்வதும் ராவணனுக்கு அழகல்ல. ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அனைத்து விதமான தோல்களைக் கொண்ட அரசர்களும் போய்ச் சேர்ந்த பிறகும்கூட, என்னைப் போன்ற பணிவான மக்கள் நிச்சயமாக உயிர்பிழைத்திருப்போம். ராவணனுடைய அகங்காரம், ஆதரவு காட்டுவதுபோலப் பாசாங்கு செய்கின்ற அவரது மனப்போக்கு, அவரது செழிப்பு எல்லாவற்றையும்விட நாங்கள் அதிக காலம் உயிர்வாழ்வோம். நாங்கள் அவரது காலணிகளை நக்கக்கூடும், அவருக்கு முன்னால் மண்டியிட்டு அடிபணியக்கூடும், அவரது நிழல்

இந்த பூமியில் படும்போதெல்லாம் நாங்கள் சிரம் தாழ்த்தி வணங்கக்கூடும். ஆனால் வீணான பெருமைக்காக அவர் ஈடுபடுகின்ற பயனற்ற யுத்தங்கள் காரணமாக, என்றேனும் ஒருநாள் அவருடைய பழங்குடி இனம் மறையும்.

என் மகன் லேசாக நெளிந்தான். அவனிடமிருந்து ஒரு முனகலும் வெளிவந்தது. எனது வீரதீரமான மனப்போராட்டத்திலிருந்து அது என்னை உலுக்கி எழுப்பியது. கொடூரமான யதார்த்தம் என்னுள் தலைதூக்கியது. நான் யார்? தன் மனைவியால் ஏமாற்றப்பட்டு, முறை தவறி அவளுக்குப் பிறந்த மகனைச் சுமந்து கொண்டு, ஒரு சுயநல அரசனால் ஆளப்பட்டு, வாழ்க்கை நடத்துவதற்குச் சிரமப்பட்டுக் கொண்டிருந்த ஒரு சாமானியன் நான். கரியநிறத் தோலைக் கொண்ட, ஆரோக்கியமற்ற, தீண்டத்தகாத, பசியோடு இருந்த ஓர் ஏழை நான். இப்படிப்பட்ட எனக்கு, அரசர்களுக்குச் சவால்விடுவது குறித்துக் கனவு காண்பதற்கு என்ன துணிச்சல் இருக்க வேண்டும்? என்னைக் கண்டு நானே சிரித்தேன்.

அன்று மிகவும் சூடாக இருந்தது. என் வியர்வை என்னை வதைத்துக் கொண்டிருந்தது. நான் மெதுவாக எழுந்து உட்கார்ந்தபோது என் உடல் வலித்தது. பசி என் வயிற்றைக் கிள்ளியது. நான் எழுந்து நிற்க முயற்சித்தேன், ஆனால் என் தலை சுற்றியது. நான் சுவரைப் பிடித்துக் கொண்டு, வேகமாக மூச்சு வாங்கியபடி ஒருசில நிமிடங்கள் அப்படியே நின்றேன். பிறகு நிலைகுலைந்து கீழே விழுந்து, அசையாமல் கிடந்தேன். ஒரு சுயபச்சாதாப அலை என்னை முழுவதுமாக ஆட்கொண்டது. நான் என் கண்ணீரையும் கோபத்தையும் மென்று விழுங்கினேன். நான் பின்னால் திரும்பி, சமையலறையை நோக்கித் தவழ்ந்து சென்றேன். கரடுமுரடான தரையின்மீது ஓட்டைகள் இருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. எல்லா இடங்களிலும் தூசி படிந்திருந்தது. அதை என்னால் நுகர முடியும் அளவுக்கு நான் தரையோடு தரையாகக் கிடந்தேன். “அந்தக் கேடுகெட்டவளால் ஏன் தன் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ள முடியவில்லை?” என்று நான் என் மனைவியின்மீது கோபப்பட்டேன். “அவள் திரும்பி வரட்டும். வீட்டை முறையாகப் பராமரிப்பது எப்படி என்பது பற்றி நான் அவளுக்குக் கற்றுக் கொடுக்கிறேன்.”

நான் சமையலறைக்குள் நுழைந்தபோது, ஒரு பெரிய, கருப்புச் சிலந்தி வேகவேகமாக ஓடியது. நான் அதை ஒருசில நொடிகள் வெறித்துப் பார்த்தேன். ஆனால் பார்வையால் சிலந்திகளைக் கொல்ல முடியாது என்பதை விரைவில் உணர்ந்தேன். நான் தவழ்ந்து சென்று அடுப்பை அடைந்து, எப்படியோ சமாளித்துத் தரையில் உட்கார்ந்து என்

கால்களை அகல விரித்துக் கொண்டு, அங்கிருந்த பானைகள் மற்றும் பாத்திரங்களின் மூடிகளை ஒவ்வொன்றாகத் திறந்தேன். எல்லாமே காலியாக இருந்தது. பசியால் என் வயிறு கடமுடவென்று சத்தம் போட்டது. ஒரு மூலையில் ஒரு கயிற்றிலிருந்து ஒரு பானை தொங்கியது. அதில் ஒருவேளை சிறிதளவு தயிர் இருக்கக்கூடும் என்று நான் நினைத்தேன். எலிகளிடமிருந்து பாதுகாப்பதற்காக மாலா அதை உயரத்தில் வைத்திருக்கக்கூடும். அல்லது அதில் வெல்லமோ அல்லது வேறு ஏதேனும் நல்ல தின்பண்டமோ இருக்கக்கூடும். அதை நான் எப்படி அடைவது? என்னால் நிற்க முடியவில்லை. அப்போது என்னையும் அறியாமல் எனக்குச் சிரிப்பு வந்தது. தின்பண்டங்கள் இங்கேயா? தீண்டத்தகாதவனின் வீட்டிலா? ராவணனின் வறட்டுப் பெருமை என்னையும் பற்றிக் கொண்டதுபோலும். நான் மிகப் பெரிதாகக் கனவு கண்டு கொண்டிருந்தேன்.

“மாலா எங்கே போய்த் தொலைந்தாள்?” ஒரு வண்டி வந்து என் வீட்டின் முன்னால் நின்ற ஓசை எனக்குக் கேட்டது. அரசன் அவளைத் தனது ரதத்தில் அவளது வீட்டிற்கு அனுப்பி வைத்தாரா? நான் முன்வாசல் கதவை நோக்கித் தவழ்ந்து சென்றேன். வெளியே கிசுகிசுப்புக் குரல்கள் கேட்டன. பிறகு, பாதி மூடப்பட்டிருந்த கதவில் யாரோ மென்மையாகத் தட்டினார்கள். நான் மௌனமாகக் காத்திருந்தேன். நகைகள் அணிந்த ஒரு கை அந்தக் கதவைத் தள்ளியது. கதவு ஒரு சத்தத்துடன் திறந்தது. சூரிய ஒளி உள்ளே வந்து சுவர்களையும் தரையையும் ஒளிரச் செய்தது. என் மகன் மீண்டும் முனகினான். தூசி கலந்த காற்று மெதுவாக உள்ளே நுழைந்து, மூலையில் இருந்த துணிகளைக் கலைத்து, எதிரே இருந்த சன்னல் வழியாக வெளியே சென்றது. கண்ணைக் கூசச் செய்த சூரிய ஒளியின் ஊடாக நான் என் கண்களைச் சுருக்கிக் கொண்டு பார்த்தேன். நெடுநெடுவென்றிருந்த இளவரசன் மேகநாதன் உள்ளே நுழைந்தான். அவனைத் தொடர்ந்து, மாரீசனும் உள்ளே நுழைந்தான். ஒரு தீண்டத்தகாதவனின் குடிசையில் இரண்டு இளவரசர்களா! என்னால் அதை நம்ப முடியவில்லை. என்னையும் அறியாமல், நான் எழுந்து நிற்க முயற்சித்தேன், ஆனால் மீண்டும் தடுமாறிக் கீழே விழுந்தேன்.

மாரீசன் புன்னகைத்தபடியே சிறிது முன்னால் வந்து, என்னை மென்மையாகத் தூக்கி, அங்கிருந்த உடைந்த ஒற்றை நாற்காலியின்மீது உட்கார வைத்தான். நான் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்து, மீண்டும் எழுந்து நிற்க முயன்றேன். ஆனால் அவன் என்னை மென்மையாகவும் உறுதியாகவும் நாற்காலிக்குள் தள்ளினான். “கடவுளே, இந்த மக்களை நான் எவ்வாறு உபசரிப்பது?” அவர்கள் என் ஏழ்மையையும், உடைந்து

போயிருந்த எனது நாற்காலியையும், எனது கந்தலான ஆடைகளையும், எனது கிழிந்த படுக்கை விரிப்புகளையும், எனது குடிசையின் விரிசல் விழுந்த சுவர்களையும் தரைகளையும், எனது பலவீனமான உடலையும் பார்த்துவிட்டது குறித்து நான் கோபம் கொண்டேன். இது என் வீடு. இவர்கள் இருவரையும் போன்ற பணக்கார இளவரசர்கள் ஆதிக்கம் செலுத்துகின்ற ஒரு கொடூரமான உலகின் கண்களிலிருந்து எனது தோல்வியை மறைத்துக் கொள்வதற்கு எனக்குச் சிறிதளவு தனிமை தேவைப்பட்டது. ஆனால் திடீரென்று ஒருவிதமான பயம் என்னை ஆட்கொண்டது. இவர்கள் என்னுடைய மகனை என்னிடமிருந்து பறித்துச் செல்ல வந்திருந்தனரா? அதிகாயன் என்ற ஒரு வீர மகன் தனக்கு இருந்ததாக இறுதியில் அரசன் ஒப்புக் கொண்டுவிட்டாரா? என் மனைவி என்னைக் கைகழுவிவிட்டுச் சென்றுவிட்டாளா? அவள் அரசரின் மனைவியாகயும் அரசியாகவும் வாழ்ந்து கொண்டிருந்தாளா? அவள்தான் என் மகனை என்னிடமிருந்து அபகரித்து வர ஆள் அனுப்பியிருந்தாளா? அல்லது எங்களுடைய துயரத்தைக் கண்டு குரூர மகிழ்ச்சி கொள்வதற்காக இவர்கள் வந்திருந்தனரா? நூற்றுக்கணக்கான கேள்விகள் என் மனத்தைக் காட்டுப் பூனைகள்போலப் பிராண்டிக் கொண்டிருக்க, நான் வாயடைத்துப் போய், ஓர் ஆந்தைபோலத் திருதிருவென்று முழித்துக் கொண்டு அங்கு அமர்ந்திருந்தேன்.

“பத்ரா, நீ எப்படி இருக்கிறாய்?” மாரீசனின் குரலில் அவனது பரிவு அப்படியே இருந்தது. “உங்களது வீரர்கள் எனக்குக் கொடுத்த உதைகளுக்கு மிக்க நன்றி ஐயா!” என்று நான் கத்த விரும்பினேன். ஆனால், ஒரு வார்த்தைகூடப் பேசாமல் நான் அங்கு மௌனமாக உட்கார்ந்தேன். மேகநாதன் படுக்கையின்மீது அதிகாயனுக்கு அருகில் அமர்ந்து, அவனது காயங்களைப் பார்வையிட்டான். அவன் மென்மையாகப் பேசினான். ஒருவழியாகத் தனது எஜமானனைக் கண்டுபிடித்துவிட்ட, தொலைந்து போன ஒரு நாய்க்குட்டியைப்போல அதிகாயன் அவனுக்கு பதில் கூறினான். “அதிகயனுக்கு மட்டும் ஒரு வால் இருந்தால், அதை அவன் இந்நேரம் பலமாக ஆட்டிக் கொண்டிருப்பான்,” என்று நான் வெறுப்போடு எண்ணினேன்.

“பத்ரா, நாங்கள் உனக்குத் தவறு இழைத்திருக்கிறோம் என்பதை நான் அறிவேன்.” மாரீசனின் கைகள் இப்போது என் தோள்களின்மீது இருந்தன. அவன் தன் உடலின்மீது தெளித்திருந்த மிகவும் விலையுயர்ந்த வாசனைத் திரவியத்தை நான் நுகரக்கூடிய அளவுக்கு அவன் எனக்கு வெகு அருகில் நின்றான். நான் என் கண்களை வேறு பக்கமாகத் திருப்பினேன். இவ்வளவு பரிவை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. என்ன இருந்தாலும், நான் ஒரு

தீண்டத்தகாதவன்தானே? உலகின் கழிசடைகளில் ஒருவன்தானே? ராவணனைப்போல, என் கருநிறத் தோலைத் தொட்டப் பிறகு மாரீசனும் தன் கைகளைத் துடைத்திருந்தானா என்று பார்ப்பதற்காக நான் உற்றுப் பார்த்தேன். இல்லை, அவன் அப்படிச் செய்யவில்லை. நான் ஏமாற்றமடைந்தேன். ஒருவேளை, அரண்மனைக்குச் சென்றவுடன் அவன் ஒரு முழுக் குளியல் போடக்கூடும்.

“பத்ரா, நம் அரசன் பரிவற்றவர் என்று நீ நினைக்கக்கூடாது,” என்று அவன் கூறினான். நான் அவனை உற்றுப் பார்த்தேன். இப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க நான் யார்? அப்படியே நான் சிந்தித்தாலும்கூட, அது என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தப் போகிறது? “அவர் அதே ராவணன்தான். அவரது மீசை நரைத்துப் போயுள்ளது. ஆனால் பிரம்மாண்டமான கனவுகளையும் அவற்றை அடைவதற்கான மன உறுதியையும் கொண்ட, உணர்ச்சிமிக்க அதே ராவணனாகத்தான் அவர் இருக்கிறார். உன்னைப் போன்ற மக்களுக்கு மோசமான விஷயங்கள் நடந்துள்ளன என்பது உண்மைதான். பிராமணர்கள் இங்கிருந்து துரத்தப்பட்டுள்ளபோதிலும், பிராமணத்துவம் என்ற கொடிய விஷம் நமது சமுதாயத்திற்குள் மெல்ல மெல்ல ஊடுருவிக் கொண்டிருக்கிறது. ஒருவன் மற்ற எல்லோரையும்விட உயர்ந்தவன் என்று நம்புவது மிகவும் சுலபமானது. கரிய நிறத்தைக் கொண்ட, ஏழை அசுரர்கள் அசுத்தமானவர்கள் என்று கருதுகின்ற, உன்னைப் போன்றவர்களைத் தொட மறுக்கின்றவர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். உன்னைப் போன்ற ஏழைகளைத் தலைநகரைவிட்டே துரத்துவதற்கோ, முடிந்தால் இந்த நாட்டைவிட்டே துரத்துவதற்கோ விரும்புகின்ற மக்கள் இருக்கிறார்கள் என்பதையும் நான் அறிவேன். ஆனால், பத்ரா, நீ என்னை நம்பித்தான் ஆக வேண்டும். ராவணனின் பரிவுதான் இவை எதுவும் நிகழாமல் தடுத்து வந்துள்ளது. அவர் ஏழைகள்மீது அக்கறை கொண்டுள்ளார். சமத்துவமான சமுதாயத்தை அடைவதில் மகாபலியின் நிலையை நாம் இன்னும் எட்டியிருக்கவில்லை என்பது உண்மைதான். அது நமக்கு இன்னும் ஒரு கனவாகத்தான் இருக்கிறது. ஆனால் நாம் அதற்காகக் கடுமையாக முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். தனது சிந்தனையிலிருந்து அனைத்துச் சாதிகளையும் வர்ணாசிரமப் பிரிவுகளையும் தூக்கி எறியப் போவதாக அரசர் எங்கள் மூலம் உனக்குச் செய்தி அனுப்பியுள்ளார். அரசாங்கம் தனது குடிமக்களை இனியும் பாகுபடுத்திப் பார்க்காது. இது எங்களுடைய உள்ளார்ந்த வாக்குறுதியாகும். ஒரு மந்திரி என்ற முறையில், நமது அரசனின் சார்பில் நான் இந்த வாக்குறுதியை உனக்கு வழங்குகிறேன்.”

ஆஹா, எப்பேற்பட்டச் சொற்பொழிவு! ஆனால் அது என் மனத்தைக் கவரவில்லை. அந்த வயோதிகன் என்னைக் கட்டியணைத்தான். அவனது கண்களில் கண்ணீர் துளிர்த்திருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. என்னைக் கட்டியணைத்ததன் மூலமும், தொட்டதன் மூலமும், மேன்மையான யோசனைகளைப் பற்றி என்னிடம் பேசியதன் மூலமும் அவன் உன்னதமானவனாக உணர்ந்தான் போலும். தனது மகத்துவமான கணத்தை அவன் மகிழ்ச்சியாக அனுபவிக்கட்டும். இத்தனை வருடங்களாக நான் அனுபவித்து வந்திருந்த வேதனைகள் என்னைக் கடினமாக்கியிருந்தன. அதிகாயன் சத்தமாக அழுது கொண்டிருந்தது எனக்குக் கேட்டது. மாரீசனின் பேச்சு அவனது மனத்தைத் தொட்டிருந்தது. இப்படிப்பட்டப் பேச்சுக்களை அவன் இன்னும் நம்பியது அவனது அதிர்ஷ்டம்தான். எனது தலைமுறையைச் சேர்ந்த மக்கள் அனுபவித்த மனச்சோர்வும் அசௌகரியமும் இன்னும் இவனைத் தாக்கியிருக்கவில்லை. ஆனால் எனது குடிசைக்குள் நின்று கொண்டிருந்த மக்கள் சக்தி வாய்ந்தவர்கள், முக்கியமானவர்கள். எனவே நான் மாரீசனின் பேச்சை நம்பியதுபோலத் தொடர்ந்து பாசாங்கு செய்தேன். நான் ஆழ்ந்த நன்றி கொண்டிருந்ததுபோல நடித்தேன். அந்த வயதான முட்டாள் அதை நம்பியதை அவனது முகபாவம் எனக்குக் காட்டியது. அந்த மூடனை எவரொருவராலும் சுலபமாக ஏமாற்றிவிட முடிந்தது. பிறகு அவன்மீது நான் இரக்கம் கொண்டேன். மந்திரிகள் என்ற போர்வையில் வலம் வந்தவர்களிலேயே, இவன் ஒருவன் மட்டுமே உண்மையானவனாக இருந்தான். தான் கூறியவற்றை முழுமையாக நம்பினான். அவற்றை உண்மையிலேயே நிறைவேற்றுவதற்கு அவன் கடுமையாக முயற்சிக்கவும்கூடும். அவனது அரசன் அவற்றைப் பெருமைக்காகவும் புகழுக்காகவும் செய்யக்கூடும். பழமைவாதிகளான பிரஹஸ்தன், ஜம்புமாலி, மற்றும் பிற வயதான காவலர்கள் இப்படிப்பட்ட மாற்றங்களை அனுமதிப்பார்களா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும். ஒருவேளை அவர்கள் அனைவரும் ஒப்புக் கொண்டால்கூட, அசுரர்களிடையே மாறுவேடம் புனைந்து இருந்த பிராமணனான விபீஷணன், இப்படிப்பட்ட மாற்றங்கள் நிகழாமல் இருப்பதை உறுதி செய்வான். விபீஷணன், சகிப்புத்தன்மையற்ற ஒரு வெறியன். என்றேனும் ஒருநாள், ஒட்டுமொத்த அசுர நாகரீகத்தையும் பிராமணர்களிடமும் தேவர்களிடமும் அவன் விற்றுவிடுவான் என்று நான் உறுதியாக நம்பினேன்.

“அரசர் தனது நல்லெண்ணத்தின் ஓர் அடையாளமாக இச்சிறிய பரிசை உனக்குக் கொடுக்கும்படி எங்களைக் கேட்டுக் கொண்டுள்ளார். நம் இனம் மற்றும் நாட்டின் பெருமைக்காக நீ வழங்கியுள்ள அனைத்துச்

சேவைகளுக்கும், நீ அனுபவித்துள்ள அனைத்து இழப்புகளுக்கும் இது ஒருபோதும் ஈடாகாது. ஆனால் ஒரு நன்றியுள்ள அரசனின் இப்பரிசை தயவு செய்து ஏற்றுக் கொள்," என்று கூறிவிட்டு, குறிப்பிடத்தக்க அளவு பெரிய துணிமூட்டை ஒன்றை மாரீசன் என் மடியில் போட்டான். அதில் நாணயங்கள் குலுங்கிய சத்தம் கேட்டது. மாரீசனின் முகம் நிறைவாகக் காணப்பட்டது. நான் அபரிமிதமான நன்றியுணர்வை வெளிப்படுத்துவதற்காக அவன் காத்திருந்தான், ஆனால் நான் எதுவும் கூறவில்லை. நான் வெறுமனே அந்த மூட்டையை வெறித்துப் பார்த்தேன்.

மேகநாதன் அதிகாயனிடமிருந்து விடைபெற்றான். அப்போது என் மகன் அந்த இளவரசனிடம், "இளவரசே, அதை நீங்கள் உங்களுக்காகச் செய்யுமாறு நீங்கள் என்னிடம் கூறியபோது, மற்ற எல்லாம் எனக்கு மறந்து போனது. நான் உங்களுக்காக என் உயிரையும் கொடுப்பேன்," என்று கூறினான். பிறகு அவன் மேகநாதனின் கைகளில் முத்தமிட்டான். எனக்குள் ஏதோ ஒன்று அறுபட்டுத் தெறித்தது. "அந்த இளவரசனுக்காக இந்த முட்டாள் தன் உயிரைக் கொடுக்கப் போகிறானா?" என்று நான் என் மனத்திற்குள் பொருமினேன். மேட்டுக்குடியினருக்காகவும் பேராற்றல் மிக்கவர்களுக்காகவும் உழைத்து உழைத்து ஓடாய்த் தேய்வது, அவர்களுக்காக வாழ்வது, அவர்களுக்காகப் போராடுவது, அவர்களுக்காக மடிவது — இதுதான் எங்கள் தலைவிதி. இதே இளவரசனின் தந்தைக்காக முன்பு ஒருமுறை இதையேதான் நான் செய்தேன். மீண்டும் அதைச் செய்வதற்கு நான் கட்டாயப்படுத்தப்படக்கூடும். சிவசிவா! எங்களுக்கு விடிவுகாலமே கிடையாதா? எங்களைப் போன்ற புழுக்களைத் தங்களுக்காக இறக்கும்படித் தங்களால் கட்டளையிட முடியும் என்று இவர்கள் நினைத்தார்களா? கரிய உருவத்தைக் கொண்ட, சபிக்கப்பட்ட, பொருத்தமற்ற, எங்களைப் போன்ற முக்கியமற்ற ஒருசில மக்களைத் தங்கள் கால்களில் போட்டு மிதிப்பதன் மூலம் புகழையும் செல்வத்தையும் தங்கள் குறிக்கோளையும் அடைய முடியும் என்று அவர்கள் நினைத்தார்களா?

நான் எழுந்து நின்றேன். என் தலை சுற்றியது, ஆனால் எனக்குள் சுருண்டு கிடந்த கோபம், எனது பலவீனமான, காயப்படுத்தப்பட்ட உடலுக்குப் புதிய வலிமையைக் கொடுத்தது. "வெளியே போங்கள்! சண்டாளர்களே, என் வீட்டைவிட்டு வெளியேறுங்கள்!" என்று நான் கத்தினேன். நாணயங்கள் அடங்கிய அந்த மூட்டையை நான் வெளியே தூக்கி எறிந்தேன். திறந்திருந்த கதவின் வழியாக அது ஓர் ஏவுகணையைப்போலப் பாய்ந்து சென்றது. அந்தத் துணி கிழிந்து,

அதிலிருந்த நாணயங்கள், அழுக்கான சாலைகள் மற்றும் ஓடைகள் நெடுகிலும் சிதறின. அவை வெள்ளி நாணயங்கள் என்பதை நான் கண்டேன். என் மக்களின் கௌரவத்திற்காகவும் மதிப்பிற்காகவும் நான் தங்க நாணயங்களை வெளியே தூக்கி எறிந்தேன் என்றுகூட என்னால் மார்தட்டிக் கொள்ள முடியவில்லை. அவை தாமிர நாணயங்களாக இருந்திருந்தால், இளவரசர்களும் மேட்டுக்குடியினரும் கருமிகள், அவர்கள் இழிவானவர்கள் என்ற எனது நம்பிக்கையை அது நியாயப்படுத்தியிருக்கும். அவர்களுடைய பரிசுகள் எனக்குத் தேவையில்லை. ஆனால் அவை வெறும் வெள்ளி நாணயங்கள். அவை என்னைப் பணக்காரனாக ஆக்காது. சேரிச் சிறுவர்களும் பிச்சைக்காரர்களும் தெருவில் கூடியிருந்தனர், ஆனால் மினுமினுத்துக் கொண்டிருந்த அந்த நாணயங்களைத் தொட யாரும் துணியவில்லை. இளவரசனும் ஒரு மந்திரியும் அங்கு இருந்ததும், வயதான மூடனான பத்ரன் அவர்களை ஆபாச வார்த்தைகளால் திட்டிக் கொண்டு ஒரு நாடகத்தை அரங்கேற்றிக் கொண்டிருந்ததும் அவர்களது கவனத்தை ஈர்த்துக் கொண்டிருந்ததால், வெள்ளி நாணயங்கள்மீது பாய்ந்து அவற்றை உடனடியாக அள்ளிச் செல்லும் காரியத்தில் அவர்கள் இறங்கவில்லை.

நான் வெகுதூரம் வந்துவிட்டிருந்தேன். எனவே, நான் என் மனத்தில் இருந்ததை வெளிப்படையாகப் பேசிவிடுவதென்று தீர்மானித்தேன். “எனது குடிசைக்கு வருகை தந்ததன் மூலம் எனக்கு ஒரு மிகப் பெரிய உபகாரத்தை நீ செய்து கொண்டிருப்பதாக நீ நினைக்கிறாய். நீ என்னையும் என் மகனையும் கிட்டத்தட்டக் கொன்றுவிட்டாய். உன்னுடைய நாணயங்கள் யாருக்கு வேண்டும்? அவற்றை நீயே வைத்துக் கொள். அரசன் பரிவு கொண்டவன் என்று நீ கூறுகிறாய்,” என்று கூறி, தரையில் காறி உமிழ்ந்துவிட்டு, “ஒருவனுக்குத் தொற்றுநோய் இருப்பதுபோல அவனை நடத்துவது எப்படிப்பட்ட வேதனையான அனுபவம் என்பதை அவர் அறிவாரா? பசி மற்றும் தோல்வியால் ஏற்படும் வலியை அவர் அறிவாரா? முற்றிலும் நம்பிக்கை இழந்த நிலையால் ஏற்படும் தொடர்ச்சியான வேதனையைப் பற்றியோ அல்லது வீடுவாசலின்றி இருப்பதிலுள்ள துயரத்தைப் பற்றியோ அவருக்கு என்ன தெரியும்? கருப்பான, ஏழை அசுரர்கள் தீண்டத்தகாதவர்கள்போல நடத்தப்படக்கூடாது என்றும், நாங்கள் நகரங்களில் வாழ வேண்டும் என்றும் அவர் விரும்புகிறார் என்று நீ கூறுகிறாய். அதற்கு என்ன காரணம் என்று எனக்குத் தெரியும். நாங்கள் சுத்தமின்றி இருப்பதாகவும், எங்கள் தோலின் நிறம் கருப்பாக இருப்பதாகவும், எங்கள் உடலிலிருந்து துர்நாற்றம் வீசுவதாகவும்

மேட்டுக்குடியைச் சேர்ந்த பணக்காரர்களும் போலி பிராமணர்களுமாகிய நீங்கள் எங்களை வசை பாடுகிறீர்கள். ஆனால் எங்களுக்கு நீங்கள் தேவைப்படுவதைவிட, உங்களுக்கு எங்களுடைய தேவை அதிகமாக உள்ளது. நாங்கள் இங்கிருந்து துரத்தப்பட்டுவிட்டால் உங்களுடைய குப்பைகளையும் கழிவுகளையும் யார் சுமப்பார்கள்? யார் உங்களுடைய தெருக்களைப் பெருக்கிச் சுத்தப்படுத்துவார்கள்? யார் உங்களுடைய வண்டிகளை இழுப்பார்கள்? உங்களுடைய அற்பமான யுத்தங்களில் யார் உங்களுக்காக மடிவார்கள்?" என்று நான் கத்தினேன்.

என் தொண்டை வறண்டு போனது. இளவரசன் மேகநாதனின் பிரகாசமான கண்கள் என்னை வெறித்துப் பார்த்தன. அவற்றில் பயம் தென்பட்டது. என்னுள் அடக்கி வைக்கப்பட்டிருந்த கோபம் தன் அணையை உடைத்துக் கொண்டு வெளியே சீறிப் பாய்ந்ததில் என் உடல் முழுவதும் நடுங்கியது. நான் கூறியிருந்த விஷயங்களின் தீவிரம் என்னைக் கடுமையான வேகத்தில் தாக்கியது. என் உதடுகள் நடுங்கின. பயம் மற்றும் ஆதரவின்மையால் என் கண்களில் துளிர்த்தக் கண்ணீர், எரிந்து கொண்டிருந்த எனது கன்னங்களின்மீது வழிந்தோடியது. எல்லாம் முடிந்துவிட்டது. மேகநாதன் தன் வாளை என்மீது அழுத்திப் பிடித்தான். அது அழுத்திய இடத்திலிருந்து ரத்தம் வழிந்தது. எனது திமிருக்காக நான் நிச்சயமாக இறக்கத்தான் போகிறேன்.

"மேகநாதா, அவனை விட்டுவிடு. அவன் குடித்திருக்கிறான் என்று நான் நினைக்கிறேன்," என்று மாரீசன் கூறியது என் காதுகளில் விழுந்தது. மேகநாதன் தன் வாளை என்மீதிருந்து அகற்றி, அதன் முனையிலிருந்த எனது ரத்தத்தைத் தனது விரல்களால் துடைத்துவிட்டு, அந்த வாளை மீண்டும் அதன் உறைக்குள் போட்டான். ஆனால் அவனது பார்வை மட்டும் என் முகத்தைவிட்டு அகலவே இல்லை.

மாரீசன் புன்னகைத்தபடியே, "பத்ரா, நாங்கள் இப்போது இங்கிருந்து போகிறோம். உன்னுடைய உடல்நிலையைக் கவனித்துக் கொள். அதிகமாகக் குடிக்காதே. இல்லையென்றால், உண்மையிலேயே நீ உன் தலையை இழந்துவிடுவாய்," என்று கூறினான். ஆனால் அவனது கண்கள் புன்னகைக்கவில்லை என்பதை நான் பார்த்தேன். அக்கண்கள் வெறுப்பை உமிழ்ந்தன. மேகநாதன், அழுது கொண்டிருந்த அதிகாயனிடம் சென்று அவனைக் கட்டியணைத்துக் கொண்டான். பிறகு அவனும் மாரீசனும் அங்கிருந்து வெளியேறினர். குதிரைகள் சாட்டையால் அடிக்கப்பட்டச் சத்தமும், குறுகலான சாலையின் வழியாக அவர்களது ரதம் சென்ற சத்தமும் எனக்குக் கேட்டது. மனம் முழுக்க வெறுமையுடன் என் குடிசையில் நான் விழுந்து கிடந்தேன்.

அப்போது, வெளியே ஆண்கள் சண்டையிட்டுக் கொண்ட சத்தம்

எனக்குக் கேட்டது. முதலில் அது என்னவென்று எனக்குப் புரிபடவில்லை. நான் வெளியே எறிந்திருந்த வெள்ளி நாணயங்கள்தான் அவர்களது அடிதடிச் சண்டைக்குக் காரணம் என்பதை அப்போது நான் உணர்ந்தேன். அவை என்னுடைய நாணயங்கள்! நான் எழுந்து நிற்க முயற்சித்தேன், ஆனால் நிலை தடுமாறி முகம் குப்புற விழுந்தேன். பிறகு, நான் தவழ்ந்தபடியே வெளியே சென்று, எனக்குரிய நாணயங்களைப் பொறுக்குவதற்காக அக்கூட்டத்திற்குள் நானும் குதித்தேன். பெரும்பாலான நாணயங்கள் ஏற்கனவே காணாமல் போயிருந்தன. நான் அவர்களுக்கிடையே போராட வேண்டியிருந்தது. ஓரிரண்டு சேரிச் சிறுவர்களையும் ஒரு வயதான பிச்சைக்காரனையும் நான் எட்டி உதைத்தேன். அதே அளவு உதைகள் எனக்கும் கிடைத்தன, ஆனால் வலி என்னை எதுவும் செய்யவில்லை. அது என் பணம், நான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருந்த பணம். இறுதியில், ஓடையிலிருந்து ஒருசில நாணயங்கள் என் கைகளில் அகப்பட்டன. அவற்றை என்னிடமிருந்து பிடுங்குவதற்குப் பலர் முயன்றனர், ஆனால் அடி உதைகளுக்கு இடையே நான் அவற்றை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன். இறுதியில், அந்தப் பிச்சைக்காரர்களும் எனது அண்டைவீட்டாரும் தங்கள் முயற்சியைக் கைவிட்டுவிட்டு, என்னையும் மற்றவர்களையும் சபித்துக் கொண்டே அங்கிருந்து சென்றனர். நான் அந்த ஓடைக்குள் இருந்து மெதுவாக எழுந்து, என் கையிலிருந்த நாணயங்களை எண்ணினேன். அதில் இருபத்தியோரு நாணயங்கள் இருந்தன. முதலில் எனக்குக் கிடைத்ததில் அவை நூற்றில் ஒரு பங்காக இருக்கக்கூடும். நான் அவற்றை நெடுநேரம் பார்த்தேன். வாழ்க்கை, முன்பு பலமுறை எனக்குக் கொடுத்திருந்த வாய்ப்புகளை நான் தூக்கி எறிந்திருந்தேன். தெருமுனையில் இருந்த மதுவிடுதி இப்போது திறந்திருக்கும். மதுதான் இப்போது எனக்குத் தேவை. மற்றவர்களோடு போராடி நான் சேகரித்த நாணயங்களை எடுத்துக் கொண்டு, சூரியன் அஸ்தமனமான நேரத்தில், நான் தட்டுத்தடுமாறி அந்த விடுதியை நோக்கிச் சென்றேன்.



# 37

# ஒரு மகளின் திருமணம்

ராவணன்

மனத்தைச் சஞ்சலப்படுத்திய செய்திகள் எனக்குத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன. நான் தீட்டிக் கொண்டிருந்த சுவர்ச்சித்திரத்தின்மீது நான் என் மனத்தை ஒருமுகப்படுத்த விரும்பினேன், ஆனால் எப்படியோ என்னால் அதன்மீது கவனம் செலுத்த முடியவில்லை. வண்ணங்கள் நான் விரும்பிய விதத்தில் அமையவில்லை. என் மகள் சீதையைப் பற்றி எனக்கு வந்த செய்தி என்னை மிகவும் தொந்தரவு செய்தது. யாருடன் அதைப் பகிர்ந்து கொள்வது என்று நான் வியந்தேன். ஆனால் அது மிகவும் பாதுகாக்கப்பட்ட ஒரு ரகசியமாக இருந்தது. மாரீசனுடன் அதைப் பற்றிப் பேசலாமா? இல்லை, அவனோடும் அதை என்னால் பகிர்ந்து கொள்ள முடியாது. அந்தக் குறிப்பிட்ட உறவு குறித்து அவன் அவ்வளவு பரிவு கொண்டவனாக நடந்து கொள்ளவில்லை. என்னுடைய புலம்பல்களையும் சுயபச்சாதாபத்தையும் காதுகொடுத்துக் கேட்கக்கூட அவன் விரும்பாமல் போகக்கூடும்.

ஆன்மரீதியாகவும் உடல்ரீதியாகவும் எனக்கு வயதாகிவிட்டது

போல நான் உணர்ந்தேன். பல வருடங்களுக்கு முன்பு நான் அவளை ஒரே ஒரு முறை பார்த்திருந்தேன். அப்போது அவளுக்குப் பதினாறு அல்லது பதினேழு வயது இருந்திருக்கும். மாரீசனுக்கு மட்டுமே அது தெரியும். என் மகளைப் பற்றிய நினைவு என்னை வாட்டியது. மாரீசன் என்னிடம் வந்து என்னை உலுக்கும்வரை நான் அந்த வருத்தத்திலேயே மூழ்கிக் கிடந்தேன். அவன் ஒரே சமயத்தில் கொடுமைக்காரனாகவும் அப்பாவியாகவும் இருந்தான். வருத்தப்படுவதற்கு எனக்கு எந்தக் காரணமும் இருக்கவில்லை என்றும், எனது முதல் குழந்தையை நான்தான் கொடுமைக்காரத்தனமாகத் துரத்தியிருந்தேன் என்றும் அவன் என்னிடம் கூறினான்.

நான் அவனைப் பார்த்து வெறி பிடித்தவன்போலக் கத்திவிட்டு, உயர்மட்டக் குழுவைச் சேர்ந்த அறிவார்ந்த மந்திரிகளே அக்காரியத்தைச் செய்திருந்தனர் என்பதை அவனுக்கு நினைவூட்டினேன். ஆனால் அதன் பிறகு அது குறித்து நான் எதுவுமே செய்திருக்கவில்லை என்று அவன் என்னைக் குறைகூறினான். அதைக் கேட்டு ஆணியடித்தாற்போல நான் அப்படியே நின்றேன். பிறகு அலட்சியமாக நான் அவனை அங்கிருந்து அனுப்பிவிட்டு, மீண்டும் என் கூட்டுக்குள் சென்று அடைந்து கொண்டேன். நான் என் மனைவியிடம் கத்தினேன், மேகநாதனையும் அறையிலிருந்து தூக்கி எறிந்தேன். நடு இரவில், வியர்க்க விறுவிறுக்க நான் திடுக்கிட்டு விழித்தேன். அசுரப் பேரரசரின் அரண்மனைக்குள் ஒரு பேய் இருந்ததாக யாரேனும் என்னிடம் கூறியிருந்தால் நான் சிரித்திருப்பேன். அப்போதுவரை, குழந்தைகளுக்கான கதைகளில் மட்டுமே பேய்கள் வஞ்சகமாகப் பதுங்கியிருந்தன. ஆனால் அன்றிரவு நான் ஒரு பேயைத் தெளிவாகப் பார்த்தேன். அது ஒரு பெண். அவள் தன் முகத்தில் ஒரு முக்காடு போட்டிருந்தாள். சன்னலோரமாக நின்று கொண்டு என்னையே தீவிரமாக வெறித்துப் பார்த்த அவள் எனக்குப் பரிச்சயமானவளாக இருந்தாள். என்னால் ஒரு விரலைக்கூட அசைக்க முடியவில்லை. என் பயத்தை என்னாலேயே நுகர முடிந்தது. அந்த முகம் மெல்ல மெல்லத் தெளிவடைந்தது. நான் மண்டோதரியைத் தொட்டு எழுப்ப விரும்பினேன். ஆனால் என் கைகள் அசைய மறுத்தன. நிமிடங்கள் செல்லச் செல்ல, அந்த உருவத்தின் முகம் மேலும் மேலும் தெளிவடைந்து கொண்டே வந்தது. அது முழுதாக எனக்குத் தெரியும்வரை நான் பீதியோடும் எதிர்பார்ப்போடும் காத்திருந்தேன். தோட்டத்தில் ஓர் ஆந்தை அலறியது. அது அங்கு நிலவிய கனத்த அமைதியைக் கிழித்துக் கொண்டு சென்றது. லேசான ஒரு காற்று, அப்பெண்ணின் முகத்திரையை விலக்கியது. அது வேதவதி!

என் தொண்டை வறண்டு போனது. என் ஆன்மாவில் நான் புதைத்து வைத்திருந்த அனைத்து உணர்ச்சிகளும் வேகமாகத் திரும்பி வந்து என் தொண்டையில் அடைபட்டு நின்றன. வேதவதி வெறி பிடித்தவள்போலச் சிரிக்கத் தொடங்கினாள். பிறகு அவள் அந்தப் பனிமூட்டத்திற்குள் மெதுவாகக் கரைந்து போனாள். நான் பயத்தில் உறைந்து கிடந்தேன். அவளிடமிருந்து பதிலுக்கு எனக்குக் கிடைக்காத அன்பு பற்றிய காட்சிகளும், அதைத் தொடர்ந்து நடந்த அவலம் குறித்தக் காட்சிகளும் எனக்கு மூச்சுத்திணறலை ஏற்படுத்தின. மெல்ல மெல்ல, வலியோடு, நான் என் கால்களையும் கைகளையும் அசைத்து என் படுக்கையிலிருந்து கீழே இறங்கி, இருட்டில் என் காலணிகளைத் தேடினேன். வெள்ளி நிலவொளியில் குளித்துக் கொண்டிருந்த தென்னை மரங்களின் அசைவற்ற இலைகளைப் பார்த்தபடி, எந்தவிதமான எண்ணமோ அல்லது உணர்ச்சியோ இல்லாமல் சிறிது நேரம் அப்படியே நின்றேன். பிறகு நான் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெரிந்தது. அவை அனைத்தும் ஒரு சிறிய எண்ணமாகத் துவங்கின, ஆனால் விரைவில் அவை என்னை ஆட்கொண்டன. நான் என் அறைக் கதவைத் திறந்து, அதை அப்படியே விட்டுவிட்டு, வேகவேகமாக என் அறையைவிட்டு வெளியேறினேன். குறட்டைவிட்டுக் கொண்டிருந்த காவலர்களைக் கண்டுகொள்ளாமல், தாழ்வாரங்களின் வழியாக மாரீசனின் அறையை நோக்கி நான் ஓடினேன். நான் அவனது அறைக் கதவை வேகமாகவும் பலமாகவும் தட்டினேன். அப்போது, கதவின்மீது தலை வைத்துத் தூங்கிக் கொண்டிருந்த காவலாளி திடுக்கிட்டு விழித்து எதையோ முணுமுணுத்தான். அவனது முணுமுணுப்பைப் பொருட்படுத்தாமல், மாரீசன் வந்து கதவைத் திறக்கும்வரை அதை நான் தொடர்ந்து தட்டிக் கொண்டே இருந்தேன். அவன் என் முகத்தைப் பார்த்தபோது, அவன் முணுமுணுத்துக் கொண்டிருந்த சாபம் பாதியில் அப்படியே நின்றது.

“நாம் இப்போது போக வேண்டும் . . . நான் அவளை இப்போது பார்த்தாக வேண்டும்,” என்று நான் அவனிடம் கூறினேன்.

“யாரை?”

“உடை மாற்றிவிட்டு வேகமாக வா. அவளை நான் இப்போதே பார்க்க விரும்புகிறேன். நீயும் என்னோடு வரப் போகிறாய்.”

“நீ யாரைப் பார்க்க விரும்புகிறாய்?”

நான் அவனை அவனது அறையிலிருந்து வெளியே இழுத்தேன். வெளியே நின்ற காவலாளி துரிதமாகக் குனிந்து பணிந்தான். மாரீசனை நான் தோட்டத்திற்குள் தள்ளிச் சென்று, “நான் அவளைப் பார்த்தேன் . . . வேதவதி . . . “ என்று திக்கித்திணறிக் கூறினேன். நான் மாரீசனின்

முகத்தில் தென்பட்டக் குழப்பத்தையும் அதிர்ச்சியையும் உதாசீனப்படுத்திவிட்டு, "நான் என் மகளை இப்போதே பார்க்க விரும்புகிறேன்," என்று கூறினேன்.

மாரீசன் போராடித் தன்னை என் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு, "நீ குடிபோதையில் இருக்கிறாயா?" என்று கேட்டான்.

நான் பொறுமையிழந்து நிலத்தில் ஓங்கி மிதித்துவிட்டு, "பெரிய கொட்டகைக்கான சாவி யாரிடம் இருக்கிறது?" என்று கேட்டேன்.

"ராவணா, விழித்துக் கொள். இந்த நேரத்தில் நீ மிதிலைக்குப் போக விரும்புகிறாயா? தேவர்களுடைய நாட்டின் உள்ளே வெகுதூரம் தள்ளி இருக்கின்ற மிதிலைக்கு, உன் மாமனாரின் விசித்திரமான இயந்திரத்தில் நான் உன்னுடன் பறந்து வர வேண்டும் என்று நீ விரும்புகிறாயா? அந்த இயந்திரத்தைக் கடைசியாக நீ எப்போது பறக்கச் செய்தாய்?"

"சாவியை என்னிடம் கொண்டு வந்து கொடு. பிறகு மயனை எழுப்பு!" என்று நான் உரத்தக் குரலில் கூறினேன். எனக்குப் பதற்றமாக இருந்தது.

குழப்பச் சத்தத்தைக் கேட்டக் காவலாளி எங்களை நோக்கி ஓடி வந்தான். பறக்கும் இயந்திரம் நிறுத்தப்பட்டிருந்த கொட்டகைக்கான சாவியை எடுத்து வருமாறு நான் அவனைப் பார்த்துக் கத்தினேன். என் மாமனார் அதைப் புஷ்பக விமானம் என்று அழைத்தார். அந்தக் காவலாளி என் உத்தரவை நிறைவேற்ற விரைந்தபோது, மாரீசன் என்னை வெறித்துப் பார்த்தான்.

"நாம் இப்போது போகப் போகிறோம்," என்று நான் இறுதியாகவும் உறுதியாகவும் கூறினேன். நான் கூறியதை நம்ப முடியாதவனாகத் தன் தலையை ஆட்டிக் கொண்டே மாரீசன் அங்கிருந்து சென்றான். "நீ எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?" என்று நான் அவனைப் பார்த்துக் கத்தினேன். நிமிடங்கள் கடந்து செல்லச் செல்ல, என் கோபம் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டிருந்தது. "எனக்கு பதில் கூறாமல் அங்கிருந்து செல்வதற்கு அவனுக்கு என்ன துணிச்சல்?" என்று நான் என் மனத்திற்குள் பொருமினேன்.

"உடை மாற்றப் போய்க் கொண்டிருக்கிறேன்," என்று இரைந்துவிட்டு, அவன் தனது அறையின் கதவை ஓங்கிச் சாத்தினான். அந்த முதியவனைப் பார்த்து நான் புன்னகைத்தேன். அடுத்து என்ன நடக்கவிருந்தது என்று யோசித்தவாறு நான் அங்கே நின்றேன். இது பெரும் ஆபத்து நிறைந்த காரியம் என்று மாரீசன் கூறினான். ஏனெனில், முதலில், நான் அந்தப் புஷ்பக விமானத்தில் பறந்து நெடுங்காலம் ஆகியிருந்தது. பறப்பதில் எனக்கு விருப்பம் இருக்கவில்லை. மனிதன் பறப்பதற்காகப் படைக்கப்பட்டவன் அல்ல. இல்லையென்றால், சிவன்

அவனுக்குச் சிறகுகளைக் கொடுத்திருப்பார். எனவே, ஒரு பறக்கும் இயந்திரமானது, கடவுளுக்கு விடுக்கப்பட்ட ஒரு சவாலாகும். என் மகளைப் பார்க்க வேண்டும் என்று என்னைத் தூண்டிய உணர்ச்சி குறித்து நான் கேள்வி எழுப்பினேன். அவள் வளர்ந்து வந்ததை நான் தொடர்ந்து கண்காணித்து வந்திருந்தேன். ஆனால் என் மகன்கள் பிறந்த பிறகு, எனது மகளைப் பற்றி எனது உளவாளிகள் அனுப்பிய அறிக்கைகளை நான் படிக்கக்கூட இல்லை. மிதிலை வெகுதூரத்தில் இருந்தது. பேராற்றல் வாய்ந்த, தொடர்ந்து விரிவடைந்து கொண்டிருந்த எனது சாம்ராஜ்யத்தின்மீது தாக்கம் ஏற்படுத்தும் அளவுக்கு அது அவ்வளவு பெரிய ராஜ்யமும் அல்ல. என் மகள் வெகுதூரத்தில் இருந்ததால், அவளைப் பற்றி நான் அரிதாகவே நினைத்தேன். விரைவில், அவளை நான் முற்றிலுமாக என் சிந்தனையிலிருந்து வெளியேற்றினேன். அவள் எனக்குப் பிறந்திருக்கவே இல்லை என்பதுபோல நான் கருதிக் கொண்டேன். எனவே, எனது படை இல்லாமல், எதிரியின் எல்லைக்குள் ஊடுருவிச் செல்வது முட்டாள்தனமான, ஆபத்துக்கள் நிரம்பிய ஒரு யோசனைதான்.

“ராவணா . . . மகனே . . . எனக்கு மிகவும் மகிழ்ச்சி . . . நான் மிகவும் . . .” மண்டோதரியின் தந்தை, மூச்சிறைத்தபடி, ஒரு மகிழ்ச்சியான குழந்தையைப்போல அங்கு நின்றான். கொட்டகைக்கான சாவிக் கொத்துத் தன் இடுப்பில் தொங்கிக் கொண்டிருக்க, அவன் அங்கு ஓடி வந்திருந்தான். இந்த ஞாபகமறதிப் பேராசிரியரை நான் விரும்பத் துவங்கியிருந்தேன். கோகர்ணத்தில் அந்த மாபெரும் கோவிலின் கட்டுமான வேலைக்கு அவன் பொறுப்பேற்றிருந்ததற்கு முன்பாக, நான் ஒருபோதும் அவனைத் தீவிரமாகக் கருதியிருக்கவே இல்லை. அந்தக் கோவிலுக்குப் பிறகு, எங்களுடைய புனித நதிக்கரைகளில் அவன் அதே போன்ற எண்ணற்றக் கோவில்களைக் கட்டினான். அவன் மிகத் திறமையான ஒரு கைவினைக் கலைஞனாகவும் பொறியியல் வல்லுனராகவும் இருந்தான்.

துறுதுறுவென்று இருந்த அந்த வயதான மயன், புஷ்பக விமானம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கொட்டகையை நோக்கி வேகமாக ஓடினான். அவன் அந்தச் சாவிகளோடு போராடி, ஒரு வழியாக அந்தக் கொட்டகைக் கதவைத் திறந்தான். இந்த வினோதமான இயந்திரத்தின் வழுவழுப்பான ஏற்ற இறக்கங்களைக் கண்டு நான் எப்போதுமே பிரமித்திருந்தேன். அதற்கு இரண்டு பெரிய சிறகுகள் இருந்தன. ஆனால் பறவைகளைப்போலச் சிறகடித்துப் பறப்பதற்குப் பதிலாக, அந்த விமானம் வேகமாகச் சுற்றி வந்தது. அது ஒரு பறவையைப்போலவும், அதே சமயத்தில் ஒரு மீனைப்போலவும் தோற்றமளித்தது. நான் ஒரு

திறமையான விமானி அல்ல, ஆனால் ஓரளவுக்கு அதை என்னால் சிறப்பாக இயக்க முடிந்தது. விமானம் ஒரு குறிப்பிட்ட உயரத்தை அடைந்தவுடன், அது வெறுமனே மிதந்து செல்வதற்கு நான் பயன்படுத்த வேண்டியிருந்த பல்வேறு கருவிகள் குறித்து மயன் பல விஷயங்களை அடுக்கிக் கொண்டே போனான். ஆனால் நான் அவன் கூறியதைக் கவனிக்கவில்லை. "நான் இப்பயணம் குறித்து மண்டோதரியிடம் கூற வேண்டுமா?" என்ற கேள்விதான் என் மனத்திற்குள் ஓடிக் கொண்டிருந்தது. இரண்டாயிரம் மைல்கள் தூரத்தை உள்ளடக்கிய ஒரு பயணம் அது. மிதிலையைச் சென்றடைவதற்கு மூன்று நாட்கள் பிடிக்கும். எனவே, இறுதியில், நான் ஒரு வாரத்திற்குள் திரும்பி வந்துவிடுவதாக ஒரு குறிப்பை மட்டும் அவளுக்கு விட்டுச் சென்றேன். பிறகு ஒரு கணம் தயங்கினேன். ஒரு குற்ற உணர்வு என்னைத் தாக்க, நான் அவளை மிகவும் நேசிப்பதாகவும் அந்தக் குறிப்பில் ஒரு வரியைச் சேர்த்தேன்.

இதற்குள், எனது ஆடைகள், சிறிது உணவு, மது, எனது ஆயுதங்கள், மற்றும் தனது பொருட்கள் சகிதமாக மாரீசன் அங்கு வந்து சேர்ந்திருந்தான். அவை அனைத்தையும் அவன் அந்தப் பறக்கும் இயந்திரத்தின் பின்பகுதிக்குள் தூக்கி எறிந்துவிட்டு, ஒரு நப்பாசையுடன், "ராவணா, நீ உண்மையிலேயே போக விரும்புகிறாயா?" என்று கேட்டான்.

நான் அந்த விமானத்திற்குள் குதித்தேன். அவன் ஏமாற்றத்துடன் தலையசைத்தவாறே என்னைப் பின்தொடர்ந்து உள்ளே குதித்தான். முதலில் எனக்குச் சிறிது சந்தேகமாக இருந்தது, ஆனால் சிவனிடம் ஓர் அமைதியான பிரார்த்தனையைக் கூறிவிட்டு, விமானத்தைத் துவக்கினேன். அது மெதுவாக உருண்டு, கொட்டகையைவிட்டு வெளியே வந்தது. நான் இன்னொரு விசையை முடுக்கியபோது காற்றாடிகள் வேகமாகச் சுற்றின. அவற்றின் வேகம் மேலும் மேலும் கூடி, இறுதியில் ஒரு குலுக்கலுடன் விமானம் விண்ணில் எழும்பியது. மாரீசன் தனது இருக்கைக்கு முன்னால் இருந்த உலோகக் கம்பியை இறுக்கமாகப் பிடித்திருந்ததை நான் கண்டேன். எனக்கும் பயமாகத்தான் இருந்தது, ஆனால் நடுவானில் அந்த இயந்திரம் நின்று போய்விடுமோ என்ற எண்ணத்தை என் மனத்திலிருந்து தூக்கியெறிந்தேன். நாங்கள் பறவைகளின் கழிவுகளைப்போலக் கீழே விழுந்து, அங்கிருந்த பாறைகள்மீது மோதித் தெறிப்பது பற்றிச் சிந்திக்க மிகவும் நடுக்கமாக இருந்தது.

இலங்கை எங்கள் பார்வையைவிட்டு மெல்ல மெல்ல மறைந்தது. நிலவொளியில் கருவெள்ளி நிறத்தில் இருந்த ஒரு பெருங்கடலில் ஒரு

பசுமைநிறக் கண்ணீர்த்துளியைப்போல அது தோன்றியது. மையிருட்டு வானில் ஆயிரக்கணக்கான நட்சத்திரங்கள் சிதறிக் கிடந்தன. இறகு போன்ற மென்மையான மேகங்கள் எங்களுக்குப் பக்கத்தில் சுழன்று சென்றன. எனது தலைமுடி, ஊளையிட்டுக் கொண்டிருந்த காற்றில் வேகமாகப் பறந்தது. அப்போது என்னைப் பார்க்கும் ஒருவனுக்கு நான் எவ்வளவு வசீகரமானவனாகத் தெரிவேன் என்று கற்பனை செய்து பார்த்து, எனக்கு நானே புன்னகைத்துக் கொண்டேன். மாரீசனும் சற்று ஆசுவாசம் அடைந்திருந்தான். இந்தியாவின்மீது நாங்கள் பறந்தபோது நான் மகிழ்ச்சிக் கூக்குரலிட்டேன். மாரீசனும் என்னோடு சேர்ந்து கொண்டான். நான் பருவ வயதினனாக இருந்தபோது நான் பாடிய பாடல்களை நினைவுபடுத்திப் பார்க்க நான் முயற்சித்தேன். குறும்புத்தனமான அசுரப் பாடல்களைப் பாடியவாறே, வடக்கிலிருந்த காட்டுமிராண்டிகளின் நிலங்களுக்கு மேலே நாங்கள் பறந்தோம். அறுபது வயது முதியவனான மாரீசனும் நடுத்தர வயதினனான நானும், உலகில் எந்தக் கவலையும் இல்லாத இரண்டு பருவ வயது இளைஞர்கள், பெரியவர்களின் துணையின்றி முதன்முதலாகத் தனியாக ஓர் உல்லாச விடுமுறைக்குச் சென்று கொண்டிருந்ததைப்போல நடந்து கொண்டோம்.

பாய்மரங்களை நான் விரித்துவிட்டிருந்ததால், நாங்கள் ஒரு சீரான வேகத்தில் மிதந்து கொண்டிருந்தோம். தரையிறங்குவதற்கு மட்டுமே எங்களுக்குக் காற்றாடிகள் தேவைப்படும். எங்களுக்குக் கீழே, இந்தியா தனது செல்வ வளங்கள் மற்றும் துயரங்களுடன் பரந்து விரிந்து கிடந்தது. மேற்கில் கடல்வரை தொட்டுக் கொண்டிருந்த, பனி படர்ந்திருந்த வானுயர்ந்த காடுகள், கிழக்கில் ஆங்காங்கே சிதறிக் கிடந்த சிறிய மலைகள் மற்றும் குன்றுகள், பரந்து விரிந்து கிடந்த சமவெளிகள், தனது கரைகளில் நெடிதுயர்ந்து வளர்ந்திருந்த தென்னை மரங்கள் அணிவகுத்து நின்ற நீர்வழிகள், அம்மரங்களைவிட உயரமாக முளைத்திருந்த கோவில் கோபுரங்கள், பாம்புபோல வளைந்து நெளிந்து சென்ற, வெள்ளிபோல மினுமினுத்துக் கொண்டிருந்த நதிகள், நெல்வயல்களின் கதிர்களில் பட்டுப் பிரதிபலித்துக் கொண்டிருந்த லட்சக்கணக்கான நிலவுகள் என்று, கீழே நான் கண்ட காட்சி ரம்மியமாக இருந்தது. ஒரு காலத்தில் தரிசாகக் கிடந்த நகர்ப்புறத்திற்கு நான் கொண்டு வந்திருந்த செழுமையை நான் கண்டபோது என் இதயம் பெருமிதத்தால் நிரம்பியது. அது எனது இந்தியா, எனது சாம்ராஜ்யம், அசுரர்களின் பண்டைய பூமி.

நாளை இரவிற்குள், யாருக்கும் சொந்தமில்லாத, யாரும் கைப்பற்றியிராத எல்லையின்மீது நான் பறந்து கொண்டிருப்பேன்

என்பதை நான் அறிந்தேன். புதர்ச்செடிகளும் காடுகளும் சிக்கலான மணற்குன்றுகளும் நிரம்பிய மத்திய இந்தியப் பகுதி அது. புனித கங்கை நதி, யமுனை நதி, சரஸ்வதி நதி ஆகியவற்றின் கரைகளிலும் அவற்றுக்கு அப்பாலும் இருந்த, காட்டுமிராண்டிகளான தேவர்களின் ராஜ்யங்களிடமிருந்து அந்த மத்திய இந்தியப் பகுதிதான் எனது ராஜ்யத்தைப் பிரித்தது. எனது சாம்ராஜ்யத்தை, சிவனின் உறைவிடம்வரை நான் விரிவுபடுத்தியிருக்கவில்லை என்பது குறித்து நான் வருந்தினேன். இமயமலையும் அசுரர்களுக்குச் சொந்தமாக இருந்தது. அசுரக் கடவுளான சிவனின் தலையிலிருந்து பாய்ந்த கங்கையும் அசுரர்களுக்குச் சொந்தமாகவே இருந்தது. நான் ஏன் என் படையெடுப்பை நிறுத்தினேன்? நான் எனது சாம்ராஜ்யத்தை எங்களது ஒட்டுமொத்தப் பண்டைய பூமிவரை விரிவுபடுத்தி, தேவர்களை, சரஸ்வதி மற்றும் சிந்து நதிகளுக்கு அப்பால் இருந்த காடுகளுக்குள் துரத்தியடித்திருக்க வேண்டும். நான் அப்படிப்பட்ட ஒரு லட்சியத்துடன்தான் என் பயணத்தைத் துவக்கியிருந்தேன், ஆனால் காலப்போக்கில் எப்படியோ நான் என் லட்சியத்தைத் தொலைத்திருந்தேன், எனது கனவுகளும் சுருங்கியிருந்தன. பாதி இந்தியாவைச் செழிப்பானதாகவும் வளமானதாகவும் ஆக்கியது குறித்து நான் அளவுக்கதிகமான மகிழ்ச்சியைக் கொண்டிருந்தேன். அது ஓர் அறிவார்ந்த தீர்மானம்தான் போலும்.

மாரீசன் அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தான். நான் மீண்டும் கீழே பார்த்து, அன்னை பூமியின் பிரம்மாண்டமான அளவைக் கண்டு வியந்தேன். அது என்னைப் பணிவு கொள்ளச் செய்தது. புகழ் குறித்த அனைத்துக் கனவுகளும், நான் சண்டையிட்டிருந்த அனைத்து யுத்தங்களும், நான் சம்பாதித்திருந்த அனைத்து ராஜ்யங்களும், என் அன்னை பூமியோடு ஒப்பிடுகையில் மிகச் சிறியவையாகத் தோன்றின. பூமி நிலைபேறு கொண்டதாக இருந்தது, மற்ற அனைத்தும் அழிந்து போயின. எத்தனை நபர்கள் என்னைப்போல லட்சிய நோக்குடன் பெரும் கனவுகளைக் கண்டு, அவற்றை அடைந்திருந்தனர்? எத்தனைப் பேர் பெரும் சொத்துக்களைக் குவித்திருந்தனர்? இந்த பூமி எத்தனை அரசர்களைப் பார்த்திருந்தது? அது இன்னும் எத்தனை அரசர்களைப் பார்க்கவிருந்தது? இறுதியில், அவர்களுடைய கடின உழைப்பை அன்னை பூமி கண்டுகொள்ளுமா? மனிதனின் அற்பமான பிரச்சனைகளிடமிருந்து பூமி தனித்து நின்றது.

மக்கள் ஏமாற்றுகின்றனர், நம்பிக்கைத் துரோகம் செய்கின்றனர், நேசிக்கின்றனர், கடுமையாக உழைக்கின்றனர், போராடுகின்றனர், வீழ்கின்றனர், மீண்டும் எழுந்து கொள்கின்றனர். இறந்து போய்

என்றென்றைக்குமாக மறைந்துவிடும் வரையிலோ அல்லது மறுபிறவி எடுக்கும் வரையிலோ இதே செயல்முறையை அவர்கள் தொடர்ந்து பின்பற்றுகின்றனர். ஆனால், பூமி மட்டும் தனியாகவும் தூரத்திலும் மாற்றமற்றதாகவும் தொடர்ந்து நீடித்து வருகிறது. பேராற்றல் வாய்ந்த பிரபஞ்சத்தில் மிதந்து கொண்டிருந்த ஒரு சிறு துகள் மட்டுமே நான். நாளைக்கோ அல்லது அடுத்த நிமிடமோ நான் மறைந்துவிடக்கூடும். அது யாருடைய வாழ்விலாவது ஏதேனும் ஒரு வித்தியாசத்தை ஏற்படுத்துமா? ஒருசிலர் என் மரணம் குறித்து வருத்தப்படக்கூடும். மற்றவர்கள் அது குறித்து மகிழ்ச்சியடைவார்கள், ஆனால் அது சிறிது காலம் மட்டுமே நிலைத்து இருக்கும். காலப்போக்கில், எனது சாதனைகளும் எனது பிறப்பு மற்றும் இறப்பும் மறக்கப்பட்டுவிடும். எனவே எனது சாம்ராஜ்யத்தின் அளவு இங்கு முக்கியமானதல்ல. அதனால் அதிக ரத்தம் சிந்தப்பட வேண்டிய அவசியம் அங்கு இருக்கவில்லை. யுத்தங்களில் ஈடுபட்டு வாழ்நாளை வீணாக்கும் அளவுக்கு வாழ்க்கை ஒன்றும் அவ்வளவு நீண்ட ஒன்றல்ல. அதேபோல, லட்சியம் போன்ற அற்பமான விஷயங்களைப் பின்தொடர்ந்து சென்று வாழ்நாளைத் தொலைக்கும் அளவுக்கு அது கசப்பானதும் அல்ல. இறக்க நான் பயப்படவில்லை என்று நான் நம்ப விரும்பினேன். ஒருநாள் எல்லோருமே இறக்கத்தான் போகின்றனர். அதுதான் இயற்கையின் வழி. அடுத்தத் தலைமுறையினருக்கு நாம் வழிவிட்டாக வேண்டியுள்ளது. மனத்தளவில், இறப்பதற்கு நான் ஒருபோதும் அஞ்சியதே இல்லை. ஆனால் அதே சமயத்தில், இந்த அழகான வாழ்க்கையை எப்படி என்னால் விட்டுவிட்டுச் செல்ல முடியும்? காற்று என் காதுகளை ஒரு மெல்லிய ஒலியுடன் உரசிச் சென்றது. குளிர்ந்த காலைநேரக் காற்றை நான் ஆழமாக ஒருமுறை சுவாசித்தேன். அது எனக்குப் புத்துணர்ச்சியூட்டியது.

சிவப்புச் சாயத்தில் முக்கியெடுக்கப்பட்டப் பஞ்சுகளைப் போன்ற மேகங்கள் கிழக்குத் தொடுவானில் மிதந்து சென்றபோது, வானம் சிவப்பாக மாறியது. மேற்கு இன்னும் இருட்டாகவும் வெளிர் நிறத்திலும் இருந்தது. மாரீசன் தன் தூக்கத்தில் உசும்பினான். வேறு எவரொருவரையும்விட என்னிடம் அதிக விசுவாசமாக இருந்த அந்த மனிதனை நான் சற்று நேரம் பார்த்தேன். அவனது நரைமுடியையும், வழுக்கை விழுந்து கொண்டிருந்த தலையையும், இன்னும் வலிமையாக இருந்த கைகளையும் நான் பார்த்தேன். நான் அவனுக்காக வருந்தினேன். வாழ்க்கை எங்கள் அனைவரையும் வேகமாகக் கடந்து சென்று கொண்டிருந்தது. ஒருநாள் அவன் போய்விடுவான், அப்போது நான் தனியாக இருப்பேன்.

“அவள் இப்போது என்ன செய்து கொண்டிருப்பாள்? அவள் யாரைப்போல இருந்தாள்? அவளது தாயைப்போலவா?” நெடுங்காலத்திற்கு முன்பு தொலைந்து போன என் காதலியைப் பற்றி நான் நினைத்தபோது, என்னில் எதுவோ அறுபட்டது. அவளை இழந்ததன் மூலம் நான் பெற்ற இந்த சாம்ராஜ்யம் உண்மையிலேயே மதிப்பு வாய்ந்ததுதானா? இருக்கலாம். மண்டோதரி எனது கச்சிதமான வாழ்க்கைத் துணைவியாக இருந்தாள். ஒரு மனைவியாகவோ அல்லது ஓர் அரசியாகவோ அடங்கி இருப்பதற்கு வேதவதியின் அளவுக்கதிகமான ஆற்றலும் உறுதியும் இடம் கொடுத்திருக்காது. வேறு எதுவொன்றையும்விட, நான் என் மகளின் முகத்தைப் பார்க்க ஏங்கினேன். எனது உளவாளிகளிடம் இருந்து வந்த அறிக்கைகளை நான் சிறிது காலம் படித்திருக்கவில்லை. ஆனால் என் மகளுக்குத் திருமண ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்ததாக நான் படித்தது லேசாக எனக்கு நினைவிருக்கிறது. இந்த வடக்கத்திய மக்களிடம் ஒரு வினோதமான வழக்கம் இருந்தது. ஒரு தந்தை, தன் மகளுக்குப் பொருத்தமான ஆண்களுக்கிடையே ஒரு போட்டியை அறிவிப்பார். அது பட்டிக்காட்டுத்தனமானதாக எனக்குத் தோன்றியது. ஒரு மணப்பெண் என்பவள், ஒரு போட்டியில் வெல்லப்பட வேண்டிய ஒரு பரிசுப் பொருளா? தேவர்கள் குலத்தைச் சேர்ந்த ஆண்கள் தங்கள் மனைவியரை அடிமைகளாக விற்றதையும், அவர்களை அடகு வைத்ததையும், அல்லது பணயம் வைத்ததையும் பற்றிக்கூட நான் கேள்விப்பட்டிருந்தேன். அது கொடூரமானது, ஆனால் அவ்வளவாக நாகரீகமில்லாத நாடோடி மரபினரிடமிருந்து ஒருவரால் வேறு எதை எதிர்பார்க்க முடியும்? தேவர்கள் குலத்தைச் சேர்ந்த ஆண்கள், பெண்களை வெறும் பொருட்களாக மட்டுமே கருதினர். நான் முற்றிலும் வேறான ஒரு கலாச்சாரத்தைச் சேர்ந்தவன் என்பதால், நான் பாரபட்சமானவனாக இருக்கக்கூடும். ஆனால், தனது பெண்களையும் கீழ்மட்ட நிலையில் இருந்த மக்களையும் ஒழுங்காக நடத்தும் ஒரு சமுதாயத்தை மட்டுமே நாகரீகமான சமுதாயமாக என்னால் ஏற்றுக் கொள்ள முடியும் என்று நான் நம்பினேன். சாதி ஆழமாக வேரூன்றி இருந்தது. கீழ்மட்டங்களில் இருந்த மக்களின் சூழ்நிலை, கற்பனை செய்து பார்க்க முடியாத அளவுக்குக் கொடுமையானதாக இருந்தது. அந்த விதத்தில் பார்த்தபோது, புழுதி நிறைந்த வட இந்தியச் சமவெளிகளைச் சேர்ந்த மக்கள், மனிதர்களைவிடக் கீழ்நிலையில் இருந்த ஜந்துக்களைப் போல நடத்தப்பட்டனர். அசுரர்களுக்கும் பிரச்சனைகள் இல்லாமல் இருக்கவில்லை. அசுர ஆண்மக்கள் பௌதீகப் பொருட்களைப் பெரிதும் விரும்பினர். அசுரப் பெண்கள் பிடிவாதக்காரர்களாகவும் கிட்டத்தட்ட

நல்லொழுக்கநெறி அற்றவர்களாகவும் இருந்தனர், ஆனால் நாங்கள் எங்கள் ஆண்பிள்ளைகளை வளர்த்ததைப்போலவே எங்களது பெண்பிள்ளைகளையும் வளர்த்தோம். அசுரர்களுக்கு இடையேயும் சாதி அமைப்புமுறை போன்ற சமுதாய வேறுபாடுகள் இருந்தன, ஆனால் அது பிறப்பின் அடிப்படையிலோ அல்லது தோலின் நிறத்தின் அடிப்படையிலோ இருக்கவில்லை. கடின உழைப்பு மற்றும் அதிர்ஷ்டத்தின் மூலமாக எவரொருவராலும் அதிகாரத்துடன்கூடிய பதவிகளை அடைய முடியும். அதற்கான சிறந்த எடுத்துக்காட்டாக நான் இருந்தேன்.

என் மகளின் திருமணப் போட்டி துவங்குவதற்கு முன்பாக நான் மிதிலையை அடைந்துவிட வேண்டும் என்று நான் மனதாரப் பிரார்த்தனை செய்தேன். எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. “தேவர்கள் குலத்தைச் சேர்ந்த எந்தப் பட்டிக்காட்டான் அவளை மணமுடிக்கப் போகிறான்? அவளுடைய வாழ்க்கை எவ்வளவு வித்தியாசமானதாக இருக்கும்?” என்று பல கேள்விகள் என் மனத்தில் எழுந்தன. அவளது வாழ்க்கை அவ்வளவு சுலபமானதாக இருக்காது என்ற ஒரு முன்னுணர்வு என்னுள் எழுந்தது. அதற்கு என்னால் விளக்கமளிக்க முடியவில்லை, ஆனால் அந்த உணர்வு என்னைத் தொடர்ந்து நச்சரித்துக் கொண்டே இருந்தது. வேதவதியின் வெறித்தனமான சிரிப்பு எனக்கு விலாவாரியாக நினைவுக்கு வந்தது. அவளுடைய சாபம் என்னைத் துரத்தியது. எனது மகள் அசுரர்களுக்கு மரணத்தையும் அழிவையும் கொண்டு வருவாள் என்ற ஜோதிடர்களின் கணிப்பு ஒருவேளை சரியானதாக இருந்தால் என்ன செய்வது? வேதவதி எரிந்து சாம்பலானபோது விடுத்த சாபம் உண்மையாகிவிட்டால் என்ன செய்வது? இது முட்டாள்தனமான யோசனை. எனக்கு பிரமை ஏற்பட்டிருந்தது. என் மகளைக் கைவிட்டுவிட்டு, அவளை மீண்டும் திரும்பப் பெறுவதற்கு நான் எதுவும் செய்யாமல் இருந்ததால் ஏற்பட்டக் குற்ற உணர்வும், கடந்த இரவில் நான் அளவுக்கதிகமாகக் குடித்திருந்ததும் சேர்ந்து எனக்கு இந்த பிரமையை ஏற்படுத்தியிருக்க வேண்டும். என் மகளை நான் மீட்டெடுத்துவிட்டால், பிறகு என்ன நிகழும்? முற்றிலும் வித்தியாசமான ஒரு கலாச்சாரத்திற்குள் அவளைக் கொண்டு வருவதற்கு எனக்கு என்ன உரிமை இருந்தது? ஜனகன் அதற்கு ஒப்புக் கொள்வானா? அல்லது நான் மிதிலையைத் தாக்கி அவளை மீட்டுக் கொண்டு வந்திருக்க வேண்டுமா? அது ஓர் அரைநாள் வேலையாக இருந்திருக்கும். மிதிலை ஒரு சிறிய ராஜாங்கம், ஆனால் எந்தவிதமான ரத்தச் சிதறலையும் நான் விரும்பவில்லை. போதுமான அளவு யுத்தங்களை நான் பார்த்துவிட்டேன். மண்டோதரி எப்படி நடந்து

கொள்வாளோ என்றும் நான் பயந்தேன். வேதவதி குறித்து நான் கொண்டிருந்த ஏக்கம் அவளுக்குத் தெரியாது. அந்த விவகாரத்தைப் பற்றிப் பேச்செடுக்க நான் விரும்பவில்லை. நான் தறிகெட்டு அலைந்த நாட்கள் முடிந்துவிட்டன. என் திருமண வாழ்க்கையில் அமைதியையும் மகிழ்ச்சியையும் நான் கண்டுகொண்டிருந்தேன். எனது ஒரே தர்மசங்கடம் அதிகாயன்தான். இதனோடு இன்னொன்றும் சேர்ந்து கொள்வதை நான் விரும்பவில்லை.

நான் நர்மதை நதியை நெருங்கிக் கொண்டிருந்தேன். இன்னொரு நாள் பயணம் மிச்சமிருந்ததை நினைத்தபோது நான் களைப்பாக உணர்ந்தேன். பறப்பது குறித்த உற்சாகம் காணாமல் போய் வெகுநேரம் ஆகியிருந்தது. கீழே இருந்த சமவெளிகள் வறண்டு போயும், மனத்திற்கு உற்சாகம் தராதவையாகவும் இருந்தன. நான் பல முறை தூங்கி விழுந்தேன். வாலியுடனான எனது நட்பைப் புதுப்பித்துக் கொள்வதற்காக, என் பயணத்தில் ஒரு சிறு மாறுதலை ஏற்படுத்திக் கொண்டு, நான் கிஷ்கிந்தைக்குச் செல்ல விரும்பினேன். ஆனால் ஒரு பாறாங்கல்லைப்போல என் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த என் அகங்காரம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. வாலியின் ராஜ்யத்தைத் தொடாமல் பயணிப்பதற்கான ஒரு பாதையை நான் தேர்ந்தெடுத்தேன். உணவு உட்கொள்வதற்காகவும் எங்களை ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்காகவும் துங்கபத்ரா நதிக்கரையில் தரையிறங்கி, ஒருசில மணிநேரம் நாங்கள் அங்கு தங்கினோம். ஆனால் என் மகளின் சுயம்வர நிகழ்ச்சிக்குக் குறித்த நேரத்தில் சென்றடைவதற்காக நாங்கள் விரைந்தோம்.



# 38

## வந்துவிட்டது வேளை

ராவணன்

நாங்கள் அதிகாலையில் மிதிலைக்கு அருகே தரையிறங்கினோம். நகரைவிட்டு ஒருசில மைல்கள் தொலைவில் இருந்த ஓர் ஒதுக்குப்புறமான, மக்கள் வசிக்காத இடத்தை நான் தேர்ந்தெடுத்திருந்தேன். எங்களது புஷ்பக விமானத்தைத் தாவரங்களாலும் புதர்ச்செடிகளாலும் நாங்கள் மறைத்தோம். பிறகு தேவர்களின் உடைகளுக்கு மாறி அரண்மனையை நோக்கி நடந்தோம். பலர் அதே திசையில் போய்க் கொண்டிருந்தனர். பல்வேறு வகையான பொருட்களை விற்றுக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான விற்பனையாளர்கள், பாதசாரிகளுடனும் சுதந்திரமாகச் சுற்றித் திரிந்த பசுக்களுடனும் மோதினர். தெருக்கள் குறுகலாகவும் வளைந்தும் நெளிந்தும் இருந்ததையும், சொல்லிக் கொள்ளும்படியாகத் தண்ணீர் வடிகால் அமைப்புமுறை எதுவும் இல்லாததையும் நான் கவனித்தேன். வீடுகள் பட்டிக்காட்டுத்தனமாக இருந்தன. அரண்மனையோ, இலங்கையின் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த விவசாயி ஒருவனின்

பெரிய வீட்டைப்போல இருந்தது. மிதிலை எனக்கு பிரமிப்பூட்டவில்லை, ஆனால் நான் அதிகமாக எதிர்பார்த்திருக்கவும் இல்லை. கலாச்சாரரீதியாகவும் பொருளாதாரரீதியாகவும் இந்நகரம் பின்னடைந்திருந்தது. ஆனாலும், வடக்கில் இருந்த சிறந்த நகரங்களில் ஒன்று இது என்று நான் கேள்விப்பட்டிருந்தேன். பெரும்பாலான மக்கள் பழுப்புநிறத் தலைமுடியுடனும் நோயுற்றிருந்தது போன்ற வெளிறிய தோலுடனும் இருந்தனர். ஆனால் கருப்புத் தோலைக் கொண்டவர்களும் அங்கு இருந்தனர். கருப்புத் தோலைக் கொண்ட ஆண்கள் மற்றும் பெண்கள் பலரை அரண்மனையிலும் நான் பார்த்தேன். அவர்கள் வேறு ஏதேனும் தனியான பாதையில் வந்திருக்கக்கூடும். இவர்கள் தீண்டத்தகாதவர்களாக இருக்கக்கூடும் என்று நான் அனுமானித்தேன். சிறப்பாக உடையுடுத்தியிருந்த, வெள்ளைத் தோலைக் கொண்டவர்கள், இந்தப் பரிதாபகரமான ஜீவன்களைத் தவிர்த்தனர். மாபெரும் மனிதர்கள் கடந்து செல்வதற்கு வழிவிட்டு, இந்த ஜீவன்கள் பொறுமையாகக் காத்து நின்றனர். எந்த வகையான கலாச்சாரம் இது? என்னுடைய ஆட்சியில் இப்படிப்பட்ட ஒரு விஷயம் நடைபெற நான் விட்டுவிடுவேனா? அறிவார்ந்த அரசர்கள் ஒருசிலரில் ஜனகனும் ஒருவனாக இருந்தாலும், இந்தத் தீவினையிலிருந்து அவனும் விடுபட்டிருக்கவில்லை. நான் அவனைவிடச் சிறந்த அரசனாக இருந்தேன். ராவணன் மட்டுமே ஒரு செழிப்பான, நியாயமான சமுதாயம் உருவாவதை உறுதி செய்திருந்தான்.

பெருமிதமும் வெறுப்பும் ஒருசேர நான் அந்தத் திருமண அரங்கிற்குள் நுழைந்தேன். அரங்கின் மத்தியில் ஒரு வினோதமான வடிவில் இருந்த ஒரு வில் வைக்கப்பட்டிருந்தது. எதற்கும் பயன்படுத்த முடியாத அளவுக்கு அந்த வில் மிகவும் கனமானதாக இருந்ததாக நான் நினைத்தேன். உயர்ந்த பொறுப்புகளில் இருந்தவர்கள் பலர் அங்கு அமர்ந்திருந்தனர். ஓர் உயரமான பீடத்தில், என் வயதையொத்த ஒரு மனிதன் மிகவும் கண்ணியமாக வீற்றிருந்தான். அந்தப் பீடம் மரத்தால் ஆனதுபோல இருந்தது. அவனுக்கு மேலே இருந்த ஒரு மேல்மாடத்தில், திரைகள் இடப்பட்ட முகங்களுடன் பலர் அமர்ந்திருந்ததைக் கண்டு என் இதயம் மகிழ்ச்சியில் துள்ளியது. அவர்களில் ஒருத்தி என் மகளாக இருக்கக்கூடும். நான் அவளைத் தவிப்போடு தேடினேன். “அவள் எப்படி இருப்பாள்?” பெண்கள் முகத்திரைகள் அணிந்திருக்க வேண்டும் என்ற தேவ வழக்கத்தை நான் சபித்தேன். அரசனின் முன்னிலையில் மக்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடியதைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். “அரசனின் முன்னிலையில் எப்படி இவர்களால் பேச முடிந்தது?”

அரசன் ஜனகன் எழுந்து நின்றான். அவனது அறிவிப்பிற்காக எல்லோரும் காத்திருந்தனர். அவனது குரல் அந்தப் பெரிய அரங்கம் நெடுகிலும் எதிரொலித்தது. “பேராற்றல் வாய்ந்த அரசர்கள் மற்றும் இளவரசர்களே, இன்று ஒரு மங்களகரமான நாள். என் அன்பு மகள் சீதையின் சுயம்வர நாள் இது. உங்களுக்கிடையே இருக்கின்ற மிகவும் பேராற்றல் வாய்ந்த, மிகவும் துணிச்சலான, மிகவும் திறமையான ஒருவன்தான் என் அழகிய மகளை வெற்றி கொள்ளப் போகிறான்,” என்று கூறிவிட்டு, அவன் சிறிது நேரம் மௌனம் காத்தான். நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். பானை வயிற்றுடனோ அல்லது நோஞ்சான்களாகவோ இருந்த பலரும் கவலையுடன்கூடிய எதிர்பார்ப்புடன் அங்கு அமர்ந்திருந்தனர். “போட்டிக்கான விதிகள் மிகவும் எளிமையானவை. இங்கிருக்கின்ற கனமான வில்லை எடுத்து நீங்கள் நாணேற்ற வேண்டும், அவ்வளவுதான். ஆனால், மேன்மக்களே, இது ஒரு சுலபமான காரியம் அல்ல. திரியம்பகா என்பது இதன் பெயர். சிவபெருமானே ஒருமுறை இதைப் பயன்படுத்தினார். யாரால் இந்த வில்லைத் தூக்கி நாணேற்ற முடிகிறதோ, அந்த நபர்தான் என் மகளை மணமுடிப்பார்.”

சிரிப்பில் எனக்குப் புரையேறியது. “சிவனின் வில்லை இவர்கள் எங்கிருந்து பெற்றார்கள்?” சிவனின் வில்! அபத்தம்! பழங்கால அசுர அரசனும் கடவுளுமான சிவனின் வில்லை யாராலேனும் தூக்க முடியும் என்று கற்பனை செய்வது இவர்களுக்கு உற்சாகத்தைக் கொடுத்ததுபோலும்.

“அரசர்கள் மற்றும் இளவரசர்களே, என் மகளைப் பாருங்கள்!” ஜனகனின் குரல் என் சிந்தனையைக் கலைத்தது. நான் நடுக்கத்துடன் காத்திருந்தேன். கூட்டம் அமைதியானது. அப்போது, ஏராளமான மணிகள் பொருத்தப்பட்டக் கதவு ஒன்று, கணகணவென்ற ஓசையுடன் திறந்தது. உடல் முழுக்க நகைகளுடன் ஒரு பெரிய உருவம் அதன் வழியாக நடந்து வந்தது. பல சேடிப் பெண்கள் அவளுக்குப் பின்னால் வந்தனர். நான் மாரீசனின் கைகளை இறுக்கமாகப் பிடித்தேன். என் இதயம் காட்டுத்தனமாகத் துடித்தபோது, என் முகத்தின் தசைகள் இறுகியதை என்னால் உணர முடிந்தது. நூற்றுக்கணக்கான ஆண்களுக்கு மத்தியில், நடுங்கியவாறு அவள் நின்றாள். ஒரு முட்டாள்தனமான போட்டியின் பரிசுப் பொருளான அவளை, காமவெறி கொண்ட பல கண்கள் பேராசையுடன் மதிப்பீடு செய்தன. சேடிப் பெண்களில் ஒருத்தி முன்னால் வந்து, அவளது முகத்திரையை உயர்த்தினாள். கூட்டம் மூச்சுவிட மறந்து உட்கார்ந்திருந்தது. அவள் மிகவும் ஒளிமயமாகவும் அழகாகவும் அங்கு நின்றாள். என் கண்களில்

கண்ணீர் நிரம்பியது. சீதை! அவள் தனது தாயாரைப்போல இருந்தாள். ஆனால் அவளது நிறம் மட்டும் தேனின் நிறத்தை ஒத்திருந்தது. அவளது கூந்தல் நீளமாகவும் கருப்பாகவும் இருந்தது. அவள் என் மகள், அவள் ஓர் அசுர இளவரசி.

அந்த அரங்கில் கூடியிருந்த இளவரசர்களும் அரசர்களும், மாட்டுச் சந்தை ஒன்றிற்கு வந்து தங்களது பரிசுப் பசுவைக் கண்டுபிடித்திருந்ததுபோல, அவளை மேலும் கீழுமாக ஆய்வு செய்ததை நான் கவனித்தேன். நான் கோபத்தில் குமுறினேன். "என்ன அபத்தமான வழக்கம் இது? சூதுவாதறியாத ஒரு பருவ வயதுப் பெண்ணை, வயதான மனிதர்களின் காமாந்தகக் கண்களுக்கு முன்னால் ஒரு காட்சிப் பொருளாக வைப்பது என்ன வழக்கம்? அவளது உணர்வுகள், அவளது அன்பு, அவளது கனவுகள் மற்றும் விருப்பங்களுக்கு என்ன மதிப்பு இருக்கிறது? அந்த வில்லை உயர்த்துவதற்குப் போதிய வலிமை படைத்த எந்தவொரு மூர்க்கனாலும் அவளை மணமுடிக்க முடியும். திருமணத்திற்கு முன்பு தன் கணவனுடன் காதல் உறவாடுவதில் உள்ள மகிழ்ச்சியை அவள் அறியப் போவதில்லை, காதல் வார்த்தைகளின் கிசுகிசுப்பும் அங்கு இருக்காது, பிரிவுத் துயரை அவள் அனுபவிக்க மாட்டாள், நிலவொளி காயும் ஓர் இரவில் தன் காதலனைப் பார்ப்பதற்கான இனிமையான காத்திருப்பையும் அவள் அறியப் போவதில்லை. மாரீசன் என் கையை இறுக்கமாகப் பிடித்தான். துவக்கத்தில், மண்டோதரியுடன் எனக்கு ஏற்பாடு செய்யப்பட்டத் திருமணம் குறித்து நான் கோபம் கொண்டேன். என் விஷயத்தில் குறுக்கிட்ட என் தாயாரை நான் பல முறை சபித்தேன். ஆனால் நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் ஏற்கனவே அறிந்திருந்தோம், ஒருவரோடொருவர் பல முறை பேசியிருந்தோம். ஆனால் இது நாகரீகமற்றது."

என் மகள் சீதையின்மீது இருந்து என் பார்வையை என்னால் அகற்ற முடியவில்லை. அவள் அடக்கத்துடன் தன் தலையை நிமிர்த்தி, அங்கு கூடியிருந்த காமாந்தகக் கூட்டத்தைப் பார்வையிட்டாள். எவரொருவருடைய முகத்தையும் அவள் ஒருசில வினாடிகளுக்கு மேல் பார்க்கவில்லை. அவள் என்னைப் பார்த்தபோது, என் இதயம் துடிக்க மறந்தது. அவள் என்னைத் தீவிரமாகப் பார்த்தாள். அந்தப் பார்வை என்னை அச்சுறுத்தியது. என்னுள் எதுவோ என்னை இழுத்துப் பிடித்தது. அது குற்ற உணர்வா அல்லது பயமா? எனக்குத் தெரியவில்லை, ஆனால் நான் வேகமாக என் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். நான் மீண்டும் அவளை நிமிர்ந்து பார்த்தபோது, சுமார் பதினெட்டு வயது நிரம்பிய ஓர் இளைஞனை அவள் உற்றுப்

பார்த்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். அவன் ஓர் இளவரசனல்ல. அவன் சாதாரண உடை உடுத்தியிருந்தான், ஆனால் அவனது தோளின்மீது ஒரு வில் தொங்கியது. அவன் தனது தலைமுடியை ஒரு கொண்டையாக அள்ளி முடிந்திருந்தான். அவன் உயரமாகவும் நல்ல திடகாத்திரமாகவும் இருந்தான். அவனது தோற்றத்தில் ஏதோ ஒரு வசீகரம் இருந்தது. அவன் மன அமைதியுடனும் கட்டுப்பாட்டுடனும் இருந்தான். அவனுடைய இளம் வயதுக்கு, அவனது கட்டுப்பாடும் அமைதியும் குறிப்பிடத்தக்கவையாக இருந்தன.

என் மகளின் கண்களும் அவனுடைய கண்களும் சந்தித்துக் கொண்டதை நான் கண்டேன். அவள் வெட்கப்பட்டாள். அப்போது அவளுடைய கன்னத்தில் ஒரு குழி விழுந்து அவளது முகத்தை ஒளிரச் செய்தது. அவள் வேகமாகத் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு, பின்னால் திரும்பி நடந்தாள். கரிய உருவத்தைக் கொண்ட அந்த இளைஞனை நான் உற்றுப் பார்த்தேன். ஒரு வினோதமான பொறாமையும் வெறுப்பும் என் நாடி நரம்புகளின் ஊடாகப் பாய்ந்தன. அவன் என் உணர்வுகளைப் புரிந்து கொண்டிருக்கக்கூடும் என்று நினைக்கிறேன். ஏனெனில், அவன் என்னைத் திரும்பிப் பார்த்துப் புன்னகைத்தான். நான் சுதாரித்துக் கொண்டேன். ஏன் அல்லது எப்படி என்று எனக்குத் தெரியவில்லை, ஆனால் அவன் ஆபத்தானவன் என்பதை நான் அறிந்தேன். அவன் நிச்சயமாக என் மகளை வெற்றி கொள்வான் என்று நான் உறுதியாக நம்பினேன். நான் என் மகளுக்காகவும் எனக்காகவும் பயந்தேன். விரைந்து சென்று, தீங்கிலிருந்து நான் என் மகளைக் காப்பாற்ற விரும்பினேன். இந்தக் காட்டுமிராண்டிகளிடமிருந்தும் பட்டிக்காட்டுத்தனமான வழக்கங்களிலிருந்தும் அவளை மீட்டு, இலங்கைக்கு என்னோடு அழைத்துச் செல்ல விரும்பினேன். ஆனால் பயத்தோடும் சந்தேகங்களோடும் நான் அங்கேயே சிலையாக நின்றேன். என் மகளைக் காப்பாற்றுவதற்கு ஓர் அதிசயம் நிகழ வேண்டி நான் பிரார்த்தனை செய்தேன்.

நீண்ட வெண்தாடியுடன்கூடிய ஒரு வயதான பிராமணன் அந்த இளைஞனுக்கு அருகில் நின்றான். இன்னோர் இளைஞன் ஒரு கடுமையான முகத்துடன் என்னைப் பார்த்தான். என் கண்கள் அவனது கண்களைச் சந்தித்தபோது, அதில் தென்பட்டப் பகைமை என்னைத் திடுக்கிட வைத்தது. “இளைஞர்களால் இவ்வளவு முன்னதாகவே எப்படி இந்த அளவுக்குத் தன்னம்பிக்கையையும் அகங்காரத்தையும் வளர்த்துக் கொள்ள முடிகிறது?” நானும் ஒரு காலத்தில் இளைஞனாக இருந்திருந்தேன், ஆனால் இத்தகைய தன்னம்பிக்கையோ அல்லது

அகங்காரமோ என்னிடம் ஒருபோதும் இருந்ததில்லை. பெரியவர்களிடம் நான் எப்போதுமே பணிவோடும் மரியாதையோடும் நடந்து கொண்டிருந்தேன்.

போட்டி துவங்கியது. போட்டியாளர்கள் ஒவ்வொருவராக முன்னே வந்து, அந்தக் கனமான வில்லைத் தூக்க முயற்சித்துத் தோற்றுப் போயினர். அவர்களில் ஒருசிலரை நான் கவனித்தப் பிறகு, அந்த வில்லின் இரு முனைகளும் வெவ்வேறு எடைகளைக் கொண்டதாக இருந்ததை நான் உணர்ந்தேன். அந்த வில்லைப் பிடிப்பதற்கான சரியான வழியை முதலில் கண்டுபிடித்தப் பிறகே அதைத் தூக்க முயற்சிக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். விரைவில், அழைப்பு விடுக்கப்பட்ட அனைவரும் அதைத் தூக்க முயற்சித்துத் தோற்றுப் போயினர். அந்த அறையில் ஓர் அசௌகரியமான மௌனம் நிலவியது. ஆனால் நான் நிம்மதியடைந்தேன். எந்தவொரு மூர்க்கனாலும் என் மகளை இப்போது மணமுடிக்க முடியாது. ஜனகனுக்கு என்னுடைய உண்மையான அடையாளத்தை வெளிப்படுத்தி என் மகளை மீட்பதற்கான வேளை வந்திருந்தது. நான் அவளை இலங்கைக்குக் கூட்டிச் சென்று, ஓர் அசுர இளவரசிக்குப் பொருத்தமான வாழ்க்கையை அவளுக்கு அமைத்துக் கொடுப்பேன். தான் நேசிக்கும் ஒருவனை அவள் மணமுடிப்பாள் அல்லது அவளுக்கு ஒரு பொருத்தமான துணைவனை நான் தேடிக் கொடுப்பேன். மண்டோதரியிடம் உண்மையைக் கூறி, நான் அவளது மன்னிப்பைக் கோருவேன். இளமையில் நான் செய்த தவறுகளுக்கு என்னால் மட்டுமே பிராயச்சித்தம் தேடிக் கொள்ள முடியும். நான் முன்னால் அடியெடுத்து வைத்தேன்.

நான் ஜனகனை நோக்கி நடந்து சென்றபோது, ஒட்டுமொத்தக் கூட்டமும் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தது போன்ற ஓர் உணர்வு எனக்கு ஏற்பட்டது. நானும் ஒரு போட்டியாளன் என்று எல்லோரும் நினைத்தனர். ஜனகன் நம்பிக்கையோடு என்னைப் பார்த்துவிட்டு, பிறகு முகஞ்சுளித்தான். தன் மகளை மணமுடிப்பதற்கு எனக்கு அதிக வயதாகிவிட்டதாக அவன் நினைத்திருக்க வேண்டும். எனக்கு நடுத்தர வயதுதான், ஆனால் ஆறு வயதிலேயே சிறுமிகளுக்குத் திருமணம் செய்து வைத்த ஒரு சமுதாயத்தில் நான் பழங்காலத்தவன்போலத் தோன்றினேன். நான் அந்த வில்லை நெருங்கியபோது அப்படியே நின்றேன். அந்த வில் எனக்கு சுவாரசியமூட்டியது. நான் அதைத் தொட்டுப் பார்த்தேன், அதன் வளைவுகளை என் விரல்களால் ஆய்வு செய்தேன். பிறகு நான் அதைப் பற்றினேன். அது ஒன்றும் அவ்வளவு கலைநயத்துடன் செய்யப்பட்டிருக்கவில்லை. இந்த வில்லை ஒருபோதும் நாணேற்ற

முடியாது என்று நான் உறுதியாக நம்பினேன். அதை யாராலேனும் தூக்க முடிந்தால், அது நிச்சயமாக உடைந்துவிடும். சிவனால் இத்தகைய ஒரு மட்டமான பொருளை நிச்சயமாகப் பயன்படுத்தியிருக்க முடியாது. வில்களை உருவாக்கக் கற்றுக் கொடுத்தப் போர்த்தளவாடப் பள்ளிகள் ஏதேனும் ஒன்றிலிருந்து ஜனகன் இந்த வில்லைப் பெற்றிருக்க வேண்டும். இது ஒரு கச்சிதமற்ற வில். என் மகளை விற்பதற்கு இதை வைத்தா இவர்கள் ஒரு போட்டியை நடத்திக் கொண்டிருக்கிறார்கள்?

"ஐயா, நீங்கள் முயற்சித்துப் பார்க்க விரும்பினால், அதை நீங்கள் உடனடியாகச் செய்ய வேண்டும்," என்று ஒரு மந்திரி கூறினான். நான் அவனை முறைத்துப் பார்த்தேன். "அதை ஒருவேளை நான் தூக்கிவிட்டால், பிறகு நான் என்ன செய்ய வேண்டும்? என் சொந்த மகளை நானே மணமுடித்துக் கொள்ள வேண்டுமா?" என்று நான் நினைத்தேன். அப்போது அந்த வசீகரமான இளைஞன் முன்னால் வந்து, அரசனைப் பணிந்து வணங்கினான். நான் நிமிர்ந்து பார்த்தேன். சீதை தன் முகத்திரையை அகற்றியிருந்தாள். கவலையுடன்கூடிய எதிர்பார்ப்புடன் அவள் உட்கார்ந்திருந்தாள். இந்த இளைஞன் வெற்றி பெற வேண்டும் என்று என் இதயத்தின் ஒரு பகுதி விரும்பியது. தனக்குப் பிடித்தமான ஒரு கணவன் என் மகளுக்குக் கிடைப்பான். ஆனால் என் மனத்தின் இன்னோர் இருண்ட மூலை, இவனோடு என் மகள் ஒருபோதும் மகிழ்ச்சியாக இருக்க மாட்டாள் என்று என்னிடம் கூறியது. இவன் அந்த வில்லை வெற்றிகரமாகத் தூக்கிவிட்டாலும்கூட, அதை நாணேற்ற முயற்சித்தால் அது நிச்சயமாக உடைந்துவிடும் என்று நான் உறுதியாக நம்பினேன். அப்படி ஏதேனும் நிகழ்ந்துவிட்டால், தற்காலிகமாகவேனும் சீதை தப்பித்துவிடுவாள். நான் அவனுக்காகக் காத்திருந்தேன்.

"அரசே! என் பெயர் ராமன். அயோத்தியின் இளவரசன் நான். தசரதச் சக்கரவர்த்தியின் மூத்த மகன் நான்," என்று கூறிவிட்டு, அந்த இளைஞன் ஜனகனின் முன்னால் குனிந்து வணங்கினான். "அயோத்தி? . . . இந்தப் பெயரை நான் முன்பு எங்கே கேள்விப்பட்டிருந்தேன்? . . . தூசு படிந்த வடக்கத்தியச் சமவெளிகளில் இருந்த ஏதேனும் ஒரு சிறிய நாட்டுப்புறப் பகுதியாக அது இருக்கக்கூடும்," என்று நான் நினைத்தேன். அப்போது அது என் மனத்தில் பளிச்சிட்டது. அரசன் அனர்னியன் . . . எனது படையெடுப்பு. "அடக் கடவுளே, மிதிலையில் பாதியளவுகூட இல்லாத அந்த ஒற்றைக் குதிரை நகரம்!" அந்த இடம் எவ்வளவு புராதனமானதாக இருந்தது என்பது என் நினைவுக்கு வந்தது. ஆனால் நான் அந்தக் கடைசி அரசனை நெடுங்காலத்திற்கு முன்பே தீர்த்துக்கட்டியிருந்தேன், இல்லையா? இந்தச் சமவெளிகளில் அரசர்கள்

எப்போது காளான்களைப்போல முளைத்தனர்?

நான் பின்னால் நகர்ந்தேன். ராமன் அந்த வில்லைச் சுற்றி இரண்டு மூன்று முறை நடந்து வந்து, அதை உன்னிப்பாக ஆய்வு செய்தான். அவனைக் கண்டு நான் பிரமித்தேன். இந்த இளைஞன் அறிவார்ந்தவனாகவும் சிரமங்களிலிருந்து மீள்வதற்கான திறன் கொண்டவனாகவும் இருந்தான். அவன் தனது வலிமையை வெளிப்படுத்துவதற்கு விரையவில்லை. அவன் தனது நடுவிரல் மற்றும் கட்டைவிரலின் முனைகளைக் கொண்டு ஒரு முனையிலிருந்து மறுமுனை வரை அந்த வில்லை அளந்தான். பிறகு, மிக நேர்த்தியாக ஒரே தூக்கில் அந்த வில்லைத் தூக்கினான். அதன் எடையால் அவன் முதலில் சற்றுத் தடுமாறினாலும்கூட, விரைவாகத் தன்னைச் சமநிலைப்படுத்திக் கொண்டான். எனக்கு வியர்க்கத் துவங்கியது. "அவன் நாணேற்றிவிடுவானா?" ஆயுதங்களைப் பற்றிய எனது அறிவை வைத்துப் பார்த்தபோது, அந்த வில் உடைய வேண்டும். அதை நாணேற்ற முடியாது. நான் சீதையைப் பார்த்தேன். அவள் பதற்றமாக இருந்தாள். அவளது உள்ளங்கைகள் இரண்டும் ஓர் அமைதியான பிரார்த்தனையில் ஒன்றுசேர்ந்து இருந்தன.

ராமன் அந்த வில்லின் அடிப்பகுதியிலிருந்த நாணை எடுத்து, மேல்முனையில் கட்ட முயற்சித்தான். அவனது தசைகள் இறுக்கமடைந்திருந்தன. அவனது முயற்சியில் அவனுக்கு ஏற்பட்டிருந்த அழுத்தம் அவனது முகத்தில் தெரிந்தது. நான் பிரமிப்புடன் அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். "இந்த இளைஞன் ஒரு சிறந்த வீரன். மேகநாதன் அளவுக்கு இவன் சிறந்தவனாக இருக்கக்கூடும்," என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். அந்த வில் வளைந்தது. ராமன் அந்த நாணின் முதல் சுற்றை இறுக்கிக் கட்டினான். அந்த அரங்கில் நிலவிய இறுக்கத்தை என்னால் உணர முடிந்தது. சாத்தியமற்ற ஒன்றை அந்த இளைஞன் நடத்திக் காட்டிக் கொண்டிருந்ததை எல்லோரும் பார்த்தனர். அதிசயிக்கத்தக்க விதத்தில், நாணேற்றப்பட்ட அந்த வில் உறுதியாக நின்றது. எப்படி என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. "எனது அறிவு அவ்வளவு துருப்பிடித்துவிட்டதா?" நான் அயோத்தி இளவரசனிடமிருந்து என் பார்வையை விலக்கிவிட்டு என் மகளைப் பார்த்தேன். அக்கணத்தில், ஏதோ லேசாக முறிந்தது போன்ற ஒரு சத்தம் கேட்டது. நான் விரைவாகத் திரும்பிப் பார்த்தேன். என் இதயம் படபடத்தது. அந்தச் சத்தம் என்னவென்பது எனக்குத் தெரிந்திருந்தது. அடுத்தக் கணம், அந்த வில் ஒரு சாட்டையடி போன்ற ஓசையுடன் இரண்டாக உடைந்தது. ராமன் சிறிது நேரம் குழப்பத்தோடு நின்றான். எல்லோரும் வாயடைத்து நின்றனர். நான் மகிழ்ச்சியில் திளைத்தேன்.

யாராலும் அந்த வில்லுக்கு நாணேற்ற முடியாது. இப்போது சீதையை என்னால் இலங்கைக்குக் கூட்டிச் செல்ல முடியும். நான் மாரீசனைப் பார்த்தேன், ஆனால் அவன் வருத்தத்துடன் தலையசைத்தான். நான் குழப்பமடைந்து, ஒரு கேள்விக்குறியோடு என் புருவத்தை உயர்த்தினேன்.

அப்போது, காதைப் பிளக்கும் ஓர் உற்சாகக் கரகோஷம் என்னைச் சுற்றி எழுந்தது. என் மகள் அந்த அயோத்தி இளவரசனை நோக்கி நடந்து வந்து, அவனுடைய கழுத்தில் மாலையிட்டதை நான் ஏமாற்றத்துடனும் அதிர்ச்சியுடனும் பார்த்தேன். அந்தக் கணத்திலிருந்து, ராமனும் சீதையும் கணவனும் மனைவியுமாக ஆனார்கள். என் கண்களில் கண்ணீர் நிரம்பியது. நான் அந்த இளம் தம்பதியரைப் பார்த்தேன். தனக்குக் கிடைத்திருந்த எதிர்பாராத வெற்றியாலும், அந்த வெற்றிக்குக் கிடைத்திருந்த பரிசாலும், ராமனுக்கு ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் அவனது கண்களில் என்னால் பார்க்க முடிந்தது. அது எனக்கு ஏமாற்றமளித்தது. “இளைஞனே, நீ அவளுக்குத் தகுதியானவன் அல்ல,” என்று நான் கத்த விரும்பினேன். அப்போது, சீதையின் கண்களில் தூய்மையான, சூதுவாதற்ற அன்பைக் கண்ட நான், என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தேன். அவள் அனுபவித்துக் கொண்டிருந்த மகிழ்ச்சியை அழிப்பதற்கு எனக்கு என்ன உரிமை இருந்தது? தான் மிகவும் நேசித்த அந்த இளைஞனுடன் அவள் என்றென்றும் மகிழ்ச்சியாக வாழட்டும் என்று நான் பிரார்த்தித்தேன். அவன் அவளை அன்போடும் மரியாதையோடும் நடத்த வேண்டும் என்று நான் மனதார வேண்டினேன். என் மகள்மீது எனக்கு எந்த உரிமையும் இருக்கவில்லை, ஆனால் நான் அவளது மகிழ்ச்சிக்காகப் பிரார்த்தனை செய்தேன். ஆனால் என் மகள் தேர்ந்தெடுத்திருந்த இந்த இளைஞன், சரியாகக் கூறினால், அவளை ஒரு பரிசாக வென்றிருந்த அவன், அவளுக்கு வருத்தத்தை மட்டுமே கொடுப்பான் என்று ஏதோ ஒன்று என்னிடம் கூறியது. என் முன்னுணர்வு தவறாக இருக்க வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். ஆனால் இப்போதிலிருந்து நான் அவள்மீது ஒரு பாதுகாப்பான கண் வைத்திருப்பேன். உலகிலேயே மிகவும் சக்திவாய்ந்த பேரரசனின் மகள் அவள். அந்த இளைஞன் அவளைப் பெற்றிருப்பதற்குத் தகுதியானவன் அல்ல என்பது எப்போதாவது எனக்குத் தெரிய வந்தால், யாருக்கும் தெரியாமல் அவளை என் அரண்மனைக்குக் கூட்டி வந்து, அனைத்துத் தீங்கிலிருந்தும் அவளைப் பாதுகாப்பேன். நான் பின்னால் திரும்பி, முண்டியடித்துக் கொண்டிருந்த கூட்டத்தினரை விலக்கித் தள்ளிவிட்டு அங்கிருந்து வெளியேறினேன். வியர்த்தும் களைத்தும் போயிருந்த நான்,

என் அழுகையைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறினேன். சீதையை நான் என் மனத்திலிருந்து அகற்ற முயற்சித்தேன். இவ்வளவு தூரம் பயணம் செய்து வந்ததற்காக என்னை நானே சபித்துக் கொண்டேன்.

நாங்கள் மறைத்து வைத்திருந்த புஷ்பக விமானத்தை நோக்கி நான் நடந்தேன். இந்த தேவ சாம்ராஜ்யத்தையும் அவர்களது வினோதமான பழக்கங்களையும் என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நான் இலங்கைக்குத் திரும்பிச் சென்று, என் மனைவியோடும் என் மகன்களோடும் என் மக்களோடும் சேர்ந்து கொள்ள விரும்பினேன். புஷ்பக விமானத்தை நான் நெருங்கியபோதுதான், மாரீசன் என்னுடன் இல்லை என்பதை நான் உணர்ந்தேன். அவன் சிறிது நேரம் கழித்து வந்தான். நான் இன்னும் என் மகளைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். "அவளது கணவன் ஒரு சிறந்த வீரனாகவாவது இருக்கிறான். விஷயம் எப்படிப் போகிறது என்று பொறுத்திருந்து பார்க்கலாம்," என்று கூறி என்னை நானே தேற்றிக் கொண்டேன். நான் புஷ்பக விமானத்திற்குள் ஏறி, மாரீசனையும் அதற்குள் ஏறி வருமாறு சைகை காட்டியபோது எனக்குள் எழுந்த இருண்ட முன்னுணர்வுகளை என்னால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை.

"மாரீசா, அவர்கள் இருவர்மீதும் ஒரு கண் வைத்திருக்கும்படி நமது ஒட்டுமொத்த உளவுக் குழுவினரிடமும் கூறிவிடு. அந்த இளைஞன்மீது தனிக் கவனம் இருக்க வேண்டும். அவன் உன்னிப்பாகக் கவனிக்கப்பட வேண்டும்," என்று நான் கூறியதைக் கேட்டு மாரீசன் பலவீனமாகத் தலையசைத்தான்.

"அவளை வீட்டிற்குக் கூட்டிச் செல்வதற்கு நாம் இவ்வளவு காலம் காத்திருந்திருக்கக்கூடாது," என்று அவன் கூறினான். எனக்கும் அவ்வாறே தோன்றியது, ஆனால் இப்போது அதைப் பற்றிச் சிந்திப்பதில் எந்தப் பயனும் இருக்கவில்லை.

இரண்டு நாட்களில் நாங்கள் இலங்கையைச் சென்றடைந்தோம். அந்த தேவ பிராமணப் பெண்ணுடனான எனது உறவு பற்றி மண்டோதரியிடம் நான் கூறினேன். அது கடினமாக இருந்தது, ஆனால் நான் அவளிடம் எல்லாவற்றையும் கூறினேன். எங்களது மகளைப் பற்றியும், அவளைக் குறித்து எனக்கு ஏற்பட்டிருந்த பயத்தைப் பற்றியும் நான் அவளிடம் கூறினேன். எனது நம்பிக்கைத் துரோகம் குறித்து அவள் அழுதாள், ஆனால் அவள் என்னை மன்னித்தாள். மண்டோதரிக்கு இது பற்றி ஏற்கனவே எல்லாம் தெரிந்திருந்தது என்றும், ஆனால் இது பற்றி அவள் என்னிடம் எதுவும் கேட்டிருக்கவில்லை என்றும் எனக்குத் தோன்றியது. நான் என் தவறுகளை அவளிடம் ஒப்புக் கொண்டது எங்கள் இருவருக்கும் நல்லதாக இருந்தது. அன்றிலிருந்து

அவள் என்னை அதிகமாக மதித்ததுபோல நான் உணர்ந்தேன். எங்கள் மகளை எங்களுடன் கூட்டிக் கொள்ள வேண்டும் என்று தான் விரும்பியதாகவும், ஆனால் அவளுக்கு ஏற்கனவே திருமணமாகிவிட்டதால், அவள் தன் கணவனுடன் இருப்பதுதான் நல்லது என்றும் மண்டோதரி என்னிடம் கூறினாள். இறுதியில், நான் மன அமைதியோடு உறங்கினேன்.

நான் வாக்குக் கொடுத்திருந்தபடியே, சீதையை நான் உன்னிப்பாகக் கண்காணித்தேன். தனது மாற்றாந்தாய் தன் மகன் அரசனாக வேண்டும் என்று விரும்பியதால், ராமன் தனது உரிமையை விட்டுக் கொடுத்திருந்ததைக் கேள்விப்பட்டு நான் அதிர்ச்சியடைந்தேன். ராமனைப் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் அனுப்ப வேண்டும் என்றும், தனது மகன் பரதன் அரசனாக முடிசூட்டப்பட வேண்டும் என்றும் அவள் தனது கணவன் தசரதனை வற்புறுத்தி, அவனிடமிருந்து ஒரு வாக்குறுதியைப் பெற்றிருந்தாள். முட்டாளான என் மருமகன், தனது பதவியைத் துறந்துவிட்டு, காட்டிற்குள் காணாமல் போவதற்குத் தானே முன்வந்தான். ராமன்தான் தங்கள் அரசனாக இருக்க வேண்டும் என்று அயோத்தியின் மக்கள் விரும்பியபோதும்கூட, தனது மனைவியரில் ஒருத்தியின் கூத்திற்கு ஆடிக் கொண்டிருந்த தனது தந்தையைத் திருப்திப்படுத்துவதற்காக, அவன் தனது மக்களின் விருப்பத்தை நிராகரித்தான். அவனது பொய்யான அகந்தைக்காகவும், உலகத்தாருக்குத் தனது நல்லொழுக்கத்தை நிரூபிக்கத் துடித்த அவனது ஆர்வத்திற்காகவும் ராமனை நான் வெறுத்தேன். அவன் அவ்வாறு செய்ததற்கான காரணத்தை என்னால் ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாது. அவனுடைய தந்தையால் எப்படி இப்படிப்பட்ட ஒரு நியாயமற்ற வாக்குறுதியைக் கொடுக்க முடிந்தது? ஓர் அரசனால் அவ்வாறு நடந்து கொள்ள முடியாது. அது ராஜ தர்மத்திற்கு எதிரானது. ஒரு வாரிசு என்ற முறையில், நியாயமற்ற முறையில் செயல்பட்டிருந்த தனது தந்தைக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தியிருக்க வேண்டியது ராமனின் கடமை. அவன் தன் தந்தையை அரச பதவியிலிருந்து நீக்கிவிட்டு, தான் அரசனாகப் பொறுப்பேற்றிருக்க வேண்டும். மாறாக, தனது மாற்றாந்தாயின் மகனுக்காக அவன் தனது பதவியைத் தானம் கொடுத்தான். அவனது இன்னொரு மாற்றாந்தாய்க்குப் பிறந்த சகோதரனான லட்சுமணன், அவனோடு தானும் காட்டிற்குச் சென்றான். இப்போது எனது அருமை மகளும் அவர்களோடு இழுத்துச் செல்லப்பட்டிருந்தாள்.

அந்த மூவரையும் எதிரிகளிடமிருந்து பாதுகாக்கும்படியும், அவர்களைப் பற்றிய தகவல்களை என்னிடம் தொடர்ந்து அனுப்பி

வைக்குமாறும் எனது வீரர்களுக்கு நான் உத்தரவிட்டேன். ராமன் இந்தியா நெடுகிலும் சுற்றித் திரிந்ததையும், சீதை பல சமயங்களில் தனிமையில் அமைதியாக அழுததையும் எனது உளவாளிகள் மூலம் நான் தெரிந்து கொண்டேன். லட்சுமணன் ஒரு நாகரீகமற்ற மூர்க்கன் என்று நான் எப்போதுமே சந்தேகித்து வந்தேன். அவன் என் மகளுக்குத் தீங்கு விளைவிக்கக்கூடும் என்று நான் பயந்தேன். ஆனால் எனது பயங்கள் பொய்யாகின. லட்சுமணன் தனது சகோதரனிடமும் அவனது மனைவியிடமும் அர்ப்பணிப்புடன் நடந்து கொண்டான். இதற்கிடையே, இலங்கை செழிப்படைந்தது. நான் பல புதிய சீர்திருத்தங்களை அறிமுகப்படுத்தினேன். ஆனாலும் சீதை தொடர்ந்து என் எண்ணங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தாள். நான் மிகவும் கவலைப்பட்டேன். அப்போது ஒருநாள், சூர்ப்பனகை என் அரசவைக்குள் ஓடி வந்தாள். வேளை வந்துவிட்டிருந்தது.



# 39

## அசுர இளவரசியின் மறுபிரவேசம்

பத்ரன்

எனக்கு இப்போது கிட்டத்தட்ட ஐம்பது வயதாகியிருந்தது. என் தலையில் வழுக்கை விழுந்திருந்தது. என்னுடைய கைகளும் கால்களும் வலிமையிழந்திருந்தன. என் மனம்கூடத்தான். ஒவ்வொரு நாளும் முந்தைய நாளைப்போலவே இருந்தது. தினமும் காலையில் பொழுது விடிந்ததும், நான் என் படுக்கையைவிட்டு எழுந்து, என் காலைக் கடமைகளை முடித்துவிட்டு, சாப்பிட்டுவிட்டு, என் வாழ்வில் ஏதோ ஒரு சமயத்தில் நான் பார்த்திருந்த அழகான பெண்களைக் கற்பனை செய்துவிட்டு, விஷயங்கள் நடந்தேறிக் கொண்டிருந்த விதத்தைப் பற்றிச் சிந்தித்துவிட்டு, குடித்துவிட்டு, உலக விவகாரங்களைப் பற்றிக் குறைகூறிவிட்டு, எனது இளமைக்காலத்தின் உண்மையான மற்றும் கற்பனையான சாதனைகளைப் பற்றி மற்றவர்களுக்கு அலுப்பு ஏற்படும்வரை அவர்களிடம் கூறிவிட்டு, நாளின் முடிவில் என் படுக்கையில் சென்று விழுந்து, மீண்டும் அடுத்த நாள் காலையில் கண்விழித்தேன். இந்தச் சுழற்சி தினமும் தொடர்ந்தது. ராவணனின்

புரட்சி எங்களுக்கு எதையும் கொடுத்திருக்கவில்லை. எங்கள் நிலைமையில் சிறிதளவு முன்னேற்றம் ஏற்பட்டிருந்தது, அவ்வளவுதான். நாங்கள் சற்று அதிக நாகரீகம் கொண்டவர்களாக ஆகியிருந்தோம். ஆனால் நாங்கள் வைக்கப்பட வேண்டிய இடத்தில் வைக்கப்பட்டிருந்தோம். எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை நாங்கள் விரைவாகக் கற்றுக் கொண்டோம். மேட்டுக்குடியினர், சிறப்புரிமை பெற்றவர்கள், பிறகு நாங்கள் என்று எங்கள் சமுதாயம் வகைபிரிக்கப்பட்டு இருந்தது. நாங்கள் எங்கள் இடத்தில் இருந்து கொண்டவரை, எங்களால் உயிர்வாழ முடிந்தது. ஆனால் எங்களில் பலர், வணிகம் மூலமும், அதிர்ஷ்டத்தின் மூலமும், முகஸ்துதியின் மூலமும் உயர்ந்த நிலையை அடைந்திருந்தோம். அரசனின் படையில் என்னுடன் இருந்த எனது பழைய தோழர்களில் பலர் என்னைப்போலவே தொடர்ந்து ஏழைகளாக இருந்தனர். ஆனால் ஒருசிலர் மிகவும் முக்கியமானவர்களாக ஆகியிருந்தார்கள்.

சமீப காலங்களில் பிராமணர்கள் மிக அதிகமாக வளர்ந்திருந்தது எங்களுக்கு மிகவும் எரிச்சலூட்டியது. தோல்வியைத் தழுவிய புரட்சிக்கும் கசாப்புக்கடைக்காரன் சம்பவத்திற்கும் பிறகு, பிராமணர்கள் தெற்கு நோக்கி வருவது தற்காலிகமாக நின்றது. அவர்களுடைய மதத்தையும் வெகுசிலரே பின்பற்றினர். ஆனால் சிறிது காலத்திற்குள், அவர்கள் மீண்டும் ஊடுருவத் துவங்கினர். அதற்குள், ஒரு மாபெரும் அரசன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது குறித்து ராவணன் தனது சொந்த யோசனைகளை உருவாக்கியிருந்தான். அகத்தியன் எனும் ஒரு முனிவனின் தலைமையின்கீழ் பிராமணர்கள் குழுவொன்று அசுர சாம்ராஜ்யத்தில் அடைக்கலம் வேண்டி நின்றது. அவர்களுக்கு அடைக்கலம் கொடுப்பதற்குப் பிரஹஸ்தன் மறுப்புத் தெரிவித்தான். பிராமணர்களின் இந்த வருகை குறித்துப் பொதுமக்களுக்கிடையேயும் அதிக வெறுப்பு நிலவியது. ஆனால் ராவணன், தனது அரச ஞானத்தில், அவர்களுக்கு அடைக்கலம் தருவதென்று தீர்மானித்தான்.

ஒருசில வருடங்களுக்கு, அகத்தியனும் அவனது பிராமணர்கள் குழுவும் நகரங்களுக்கு வெளியே, சத்தமின்றி வாழ்க்கை நடத்தினர். அவர்கள் தங்கள் வேலைகளைப் பார்த்துக் கொண்டு, எங்களுக்கு எந்தத் தொந்தரவும் கொடுக்காமல் இருந்தனர். எங்களது சாம்ராஜ்யத்திற்குள் கிராமங்களை நிர்மாணிக்கத் தனக்கு அனுமதியளிக்குமாறு, அகத்தியன், கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் ராவணனிடம் சென்று கெஞ்சினான். விபீஷணனும் இந்தக் கோரிக்கைக்கு ஆதரவாகப் பேசினான். இறுதியில், இலங்கைத் தீவு உட்பட, தென்னிந்தியாவின் மேற்கு மற்றும் கிழக்குக் கடற்கரையோரங்களில் அவர்கள் பல கிராமங்களை

உருவாக்கினர். அது ஒரு சிறு துளியாகத் துவங்கியது. வெள்ளைத் தோலும் கொழுத்த உடலும் கொண்ட பிராமணர்கள், மெல்ல மெல்ல, சாம்ராஜ்யத்தின் முக்கியமான அனைத்துப் பெருநகரங்களிலும் சிறிய நகரங்களிலும் தங்களது சொந்தக் குட்டித் தீவுகளை உருவாக்கினர். என்ன நிகழ்ந்திருந்தது என்று நாங்கள் அறிந்து கொள்வதற்கு முன்பாக, குடிமுறை அரசுப் பணிகளில் இருந்த அனைத்து முக்கியப் பதவிகளையும் அவர்கள் ஆக்கிரமித்திருந்தனர், கோவில்களைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்திருந்தனர், அதிக ஊதியம் கொண்ட பதவிகள் மற்றும் முக்கியமான பதவிகள் அனைத்திலிருந்தும் மற்ற அனைவரையும் அவர்கள் திறமையாக வெளியே தூக்கி எறிந்திருந்தனர்.

உலகில் தான் மதிக்கப்பட வேண்டும் என்றால், மதச்சார்பற்ற ஓர் அரசனாகத் தான் இருக்க வேண்டும் என்றும், அனைத்து மதங்களையும் மரியாதையோடும் சகிப்புத்தன்மையோடும் நடத்த வேண்டும் என்றும் ராவணன் நம்பினார். எந்தக் கொள்கைகள் குறித்து என்னைப் போன்ற பல அசுரர்கள் சண்டையிட்டிருந்தார்களோ, அவை மறக்கப்பட்டன. சிறுபான்மையினருக்கும் நாட்டின் வளவசதிகளில் சம உரிமை இருந்ததாகவும், ஓர் அரசன் என்ற முறையில், அவர்களைப் பாதுகாப்பது தனது கடமை என்றும்கூட அவர் கூறினார்.

மக்கள் உள்ளூரப் புகைந்தனர். அசுரர்களின் பெருமைக்காகப் போராடி, ஒரு கச்சிதமான அசுர சாம்ராஜ்யம் உருவாவதற்காக எல்லாவற்றையும் தியாகம் செய்த பிறகு, இதுதான் எங்களுக்குக் கிடைத்த வெகுமதியா? சிறுபான்மையினரின் உரிமைகளும் அவர்களுடைய சமய உணர்வுகளும் மட்டுமே முக்கியம் என்பதுபோலவும், எங்களுடைய உரிமைகளும் சமய உணர்வுகளும் அவ்வளவு முக்கியமானவை அல்ல என்பதுபோலவும் விஷயங்கள் நடந்து கொண்டிருந்தன. பிராமணர்களின் காரணமாக, அசுரர்களின் முக்கிய உணவான மாட்டிறைச்சி, எல்லா இடங்களிலும் தடை செய்யப்பட்டது. பிராமணர்கள் எங்கள் கோவில்களுக்குள் நுழைந்து, எங்களுடைய எளிய கடவுள்களை நிந்தித்தனர். எங்களுடைய எந்தக் கோவில்களில் நல்ல வருமானம் வந்ததோ, அக்கோவில்களை அவர்கள் தங்களது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்கு வழிவகை உருவாக்கப்பட்டது. இறுதியில், எங்களுடைய சொந்தக் கோவில்களுக்குள் நுழைய எங்களை அவர்கள் அனுமதிக்கவில்லை. நாங்கள் அசுத்தமானவர்கள் என்று அவர்கள் கூறினர். சிறுபான்மையினரின் உரிமை, ஆளும் வர்க்கத்தினருக்கு ஒரு வெறியாக மாறியிருந்தது. பல அசுரர்கள் தேவ மதங்களுக்கு மாறினர். ஆனால் என்னைப் போன்ற பிடிவாதக்காரப் பன்றிகள், அந்த மதங்களுக்கு மாற

மறுத்தன.

ஒற்றைக்கு ஒற்றைச் சண்டையின்போது அதிகாயனும் நானும் கிட்டத்தட்ட அடித்துக் கொல்லப்பட்ட நிகழ்விற்குப் பிறகு, அரண்மனைக்குச் செல்வதற்கான விருப்பம் என்னிடமிருந்து முற்றிலுமாக மறைந்தது. ஒரு மிதியடியாக இருந்து நான் சலித்துப் போயிருந்தேன். நான் என் சொந்தத் தொழிலைத் துவக்க விரும்பினேன், ஆனால் என்னுடைய பழைய குடிசை இருந்த இடம் காணாமல் போயிருந்தது. அவர்கள் சாலைகளை விரிவுபடுத்தியிருந்தனர். எனது பழைய ஆலமரம் நின்றிருந்த இடத்தில் பல தோட்டங்கள் உருவாக்கப்பட்டிருந்தன. திரிகோட்டா நகரம் எல்லாப் பக்கங்களிலும் விரிவடைந்திருந்தது. நாங்கள் மேலும் மேலும் தொலைதூரத்திற்குத் தள்ளப்பட்டோம். முக்கியத் துறைமுக நகரமான முசிறியைவிட, திரிகோட்டா நகரம் அதிக அழகாக இருந்ததாகப் பயணிகள் தெரிவித்தனர். ஆனால் என்னைப் போன்ற மக்களுக்கு, வாழ்க்கை அப்படியேதான் இருந்தது. அதில் எந்த மாற்றமும் ஏற்பட்டிருக்கவில்லை. நாங்கள் தீண்டத்தகாதவர்களாக இருந்தோம். நாங்கள் முக்கியமான நபர்களின் கண்களில் படாமல் இருக்க வேண்டியிருந்தது. ஆனால் அவர்களுக்கு எங்கள் தேவையும் இருந்தது. யார் அவர்களுடைய தோட்டங்களைப் பராமரிப்பது? யார் அவர்களுடைய வேலைக்காரர்களாக இருப்பது? ஆற்றிலிருந்து யார் நீரெடுத்து வருவது? யார் அவர்களுக்கு விறகுகளை வெட்டிக் கொண்டு வருவது? யார் அவர்களுடைய தெருக்களைச் சுத்தம் செய்வது? யார் அவர்களுடைய அழுக்குத் துணிகளைத் துவைப்பது? எனவே, அவர்களுக்கு எங்களைப் பிடிக்காவிட்டாலும்கூட, அவர்கள் எங்களைப் பொறுத்துக் கொண்டனர். கண்ணுக்குப் புலப்படாதவாறு ஆவது எப்படி என்பதை நாங்கள் கற்றுக் கொண்டோம். எங்களில் பெரும்பான்மையினர், எங்களுடைய வேலைகள் அனைத்தையும் முடித்துவிட்டு, நகரம் கண்விழிப்பதற்கு முன்பாக மாயமாய் மறைந்தோம். வாழ்க்கை இப்படியே சென்றது. அவர்கள் எனது மகனையும் என்னையும் அடித்துக் காயப்படுத்தியதிலிருந்து கிட்டத்தட்டப் பதினான்கு ஆண்டுகள் ஆகியிருந்தது.

திரிகோட்டா விரிவடைந்து வளர்ந்தபோது, நகரின் தெற்கே பல மைல்கள் தூரத்தில், நான் என் மனைவியுடன் ஒரு குடிசையில் குடியேறி விவசாயம் செய்யத் துவங்கினேன். காட்டில் ஒரு சிறு பகுதியிலிருந்த செடி கொடிகளையும் புதர்ச்செடிகளையும் மரங்களையும் வெட்டிச் சாய்த்து, அந்த இடத்தை ஒரு விவசாய நிலமாக உருவாக்கி, மிளகு மற்றும் ஏலக்காயைப் பயிரிடுவதென்று நான் தீர்மானித்தேன். ஆனால்

அவற்றுக்கான விதைகள் என்னிடம் இருக்கவில்லை. எனவே, உள்ளூரில் வட்டிக்குக் கடன் கொடுத்த ஒருவனிடம் ஒரு சிறு தொகையைக் கடன் வாங்கினேன். பிறகு, பணக்காரர்களாக ஆவது குறித்த எங்கள் கனவுகளை நாங்கள் முடையத் துவங்கினோம். சில நாட்களுக்குப் பிறகு, அந்தக் கனவுகள், சௌகரியமாக வாழ்வது குறித்தக் கனவுகளாக நீர்த்துப் போயின. பின்னாளில், செலவுகளைச் சமாளிப்பது குறித்து மட்டுமே நாங்கள் கனவு கண்டோம். அதன் பிறகு, ஒரு நாளைக்கு ஒரு வேளையாவது உணவு கிடைக்க வேண்டும் என்பது மட்டுமே எங்கள் கனவாக ஆகிப் போனது. கடனிலிருந்து எப்படியாவது விடுபட வேண்டும் என்று நாங்கள் கனவு கண்டோம். இறுதியில், கனவு காண்பதையே ஒட்டுமொத்தமாக நாங்கள் கைவிட்டுவிட்டோம்.

ஆனால் மேட்டுக்குடியினர் செழித்துக் கொழித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் தங்களது செல்வச் செழிப்பைப் பெருமிதத்தோடும் பகட்டோடும் வெளிப்படுத்தி, உலகை மினுமினுக்கச் செய்தனர். ராவணனின் ஆட்சியின்கீழ், அசுர சாம்ராஜ்யம் மிகப் பெரிய அளவில் செழிப்படைந்ததாக எல்லோரும் கூறினர். அது உண்மைதான். மேற்தட்டு மக்கள் செழிப்படைந்தனர், அதனால் நாடும் செழிப்படைந்தது. பெரும்பான்மையான மக்கள் வாழ்க்கை நடத்தப் போராடியது குறித்தோ, அல்லது அதிக வட்டிக்குக் கடன் கொடுத்த ஈட்டிக்காரர்களிடமிருந்து தப்பிப்பதற்காக விவசாயிகள் தற்கொலை செய்து கொண்டது பற்றியோ யாரும் கவலைப்படவில்லை. நாங்கள் கண்ணுக்குப் புலப்படாத மக்களாக இருந்ததால், யாரும் எங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. உலகில் மிக வேகமாக வளர்ந்து வந்த நாடுகளில் எனது நாடும் ஒன்றாக இருந்தது என்பதை நினைத்து நான் என்னைச் சமாதானப்படுத்திக் கொண்டேன். அது என் வயிற்றை நிரப்பவில்லை, ஆனால் மார்தட்டிக் கொள்வதற்கும் என்னுடைய அகங்காரத்திற்குத் தீனி போடுவதற்கும் அது உதவியது. என்னைப் போன்ற பல நண்பர்கள் எனக்கு இருந்தனர். உள்ளூரில் இருந்த அலங்கோலமான மதுவிடுதிகளில் நாங்கள் ஒவ்வொரு நாளும் குடித்தோம். எங்களுடைய அரசனின் செழிப்பையும் அசுர சாம்ராஜ்யத்தின் செழிப்பையும் நாங்கள் கொண்டாடினோம்.

அன்றும் மற்ற எந்தவொரு நாளைப்போலவே சூடாகவும் சலிப்பூட்டுவதாகவும் மந்தமாகவும் இருந்தது. பெயரளவுக்குக்கூடக் காற்று வீசவில்லை. உள்ளூரில் இருந்த கள்ளுக் கடையில் நான் மூக்கு முட்டக் குடித்திருந்ததால் கிட்டத்தட்ட நினைவிழந்து இருந்தேன். நான் என் வீட்டிற்குச் செல்ல விரும்பவில்லை. இங்கு சௌகரியமாக இருந்தது. கடன் கொடுத்தவனையும் விவசாயப் பயிர்களையும் நான்

மறந்தேன். அரசனையும் மேட்டுக்குடியினரையும் அனைத்து பிராமணர்களையும்கூட நான் மறந்துவிட்டேன். என்னால் இங்கு சிறிது நேரம் உட்கார்ந்திருக்க முடிந்தால், ஏதேனும் ஒரு மடையன் எனக்கு இன்னொரு சுற்றுக் கள்ளை வாங்கிக் கொடுப்பான். எனவே, இளவரசி சூர்ப்பனகை பற்றியும் அவளது சல்லாப முயற்சிகளைப் பற்றியும் கூறப்பட்டக் காரசாரமான கதைகளைக் கேட்டபடியே நான் அங்கு உட்கார்ந்திருந்தேன். காட்டில் வசித்த யாரோ சிலரால் அவள் இழிவுபடுத்தப்பட்டக் கதையும் மும்முரமாக உலா வந்தது. அவர்கள் நாகர்கள் அல்லது வானரர்கள் அல்லது தேவர்களாக இருக்கக்கூடும் என்று கிசுகிசுக்கப்பட்டது. அவர்கள் அவளது கற்பைச் சூறையாடிய பிறகு, அவளது மார்பகங்களையும் மூக்கையும் அறுத்து எறிந்திருந்தனர். தனது சகோதரிக்கு ஏற்பட்ட அவமானத்திற்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காக ராவணன் ஒரு பெரிய யுத்தத்தைத் துவக்கவிருந்ததாகவும் மக்கள் பேசிக் கொண்டனர். அப்போது, பறக்கும் இயந்திரத்தின், காதைச் செவிடாக்கும் சத்தம் கேட்டது. நாங்கள் அனைவரும் வெளியே ஓடினோம். ஒரு பெரிய கூட்டம் வானத்தை நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தது. அக்காட்சியைக் காண, மக்கள் முண்டியடித்துக் கொண்டும் ஒருவரையொருவர் தள்ளிக் கொண்டும் இருந்தனர். நான் வசதியாக நின்று பார்ப்பதற்காக மற்றவர்களை இடித்துத் தள்ளினேன். தெருக்களில் போக்குவரத்து ஸ்தம்பித்திருந்தது. மூடப் பேராசிரியனான மயன் மீண்டும் ஏதேனும் செப்படி வித்தைக் காட்டிக் கொண்டிருந்தானா?

அப்போது, மக்கள் அதிர்ச்சியில் வாய் பிளந்தனர். ராவணனின் கடுமையான முகத்தை என்னால் பார்க்க முடிந்தது. அந்தச் சிக்கலான இயந்திரத்தைக் கட்டுப்படுத்துவதற்கு அவர் கடினமாகக் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். அந்தப் பெரிய இரும்புப் பறவை எங்களுக்கு மேலே பறந்து சென்றது. அப்போது, தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, அந்த இயந்திரத்திற்குள் ஒரு பெண்ணின் உருவம் ஒடுங்கி உட்கார்ந்திருந்ததை நான் பார்த்தேன். அக்காட்சி எனது போதை மயக்கத்தைத் தெளிய வைத்தது. அவள் அழுது கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. மறைந்து கொண்டிருந்த சூரிய ஒளியில் அப்பெண்ணின் அழகான முகம் தெளிவாகத் தெரிந்தது. ஒரு நடுக்கம் என் ஊடாகச் சென்றது. நெடுங்காலத்திற்கு முன்பு நான் மறந்துவிட்டிருந்த எனது கடந்தகாலத்தைச் சேர்ந்த ஒரு முகம் அது. அது மண்டோதரியாக இருக்குமோ? அரசியார் தனது இளமைப்பருவத்தில் எப்படி இருந்தாரோ, அப்பெண் அப்படியே இருந்தாள். ஆனால் அவளது தோல் மட்டும் கருப்பாக இருந்தது. “அரசன் இப்போது என்ன

காரியத்தில் ஈடுபட்டிருந்தார்?" அது எனக்குத் தெரியவில்லை. என் பாதங்களிலிருந்து என்னுள் ஊடுருவிய பயம் மட்டுமே எனக்குத் தெரிந்தது. ஏதோ ஒரு பெரிய பிரச்சனை ஏற்படவிருந்ததாக என் உள்ளுணர்வு என்னிடம் கூறியது.



# 40

## போய் வா, மாரீசா!

ராவணன்

மாரீசன் இறந்துவிட்டான். உண்மையில், அவன் மிகவும் கொடூரமாகக் கொலை செய்யப்பட்டிருந்தான். அதற்கு நான்தான் பொறுப்பு. நான் அவனது எதிர்பார்ப்புகளுக்கு ஏற்றாற்போல நடந்து கொண்டிருக்கவில்லை. ஆபத்துக்கள் நிரம்பிய ஒரு முட்டாள்தனமான திட்டமாக அது இருந்திருந்தது. நான் பொறுப்பின்றி அத்திட்டத்தினுள் குதித்து, மாரீசனை இழந்திருந்தேன். அவன் இத்திட்டத்தைத் துவக்கத்திலிருந்தே எதிர்த்து வந்திருந்தான். நான் என் மகளை ராமனிடமிருந்து தூக்கி வந்தேன், ஆனால் என் அன்புக்குரிய மாமனைத் தியாகம் செய்தேன். இப்போது அதைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்கும்போது, அந்த ஒட்டுமொத்தக் காரியமும் முட்டாள்தனமானது என்பது புரிந்தது. முந்தைய நாள் மாலையில், மார்பகங்களும் மூக்கும் அறுபட்ட நிலையில் கூப்பாடு போட்டுக் கொண்டு என் சகோதரி எனது அரசவைக்கு ஓடி வந்த காட்சிக்குப் பதிலளிக்கும் விதமாக, நான் முன்பின் யோசிக்காமல் உடனடியாகச் செயல்பட்டிருந்தேன்.

அங்கு கூடியிருந்த அனைவரும் அதிர்ச்சியடைந்தனர். சில நிமிடங்களுக்கு, அவள் என்ன உளறிக் கொண்டிருந்தாள் என்று எங்களுக்குப் புரியவில்லை. அவள் பிரமை பிடித்திருந்தவள்போல இருந்தாள். அவள் ஒருவித அதிர்ச்சியில் இருந்தாள். அவள் கூறியதைப் புரிந்து கொள்வதற்கு எங்களுக்குக் கிட்டத்தட்ட அரைமணிநேரம் ஆனது. அவள் கூறியிருந்ததை நான் புரிந்து கொண்டபோது, நான் கோபத்தில் குமுறினேன். “என் சகோதரியின்மீது கை வைப்பதற்கு அந்தக் கீழ்த்தரமான மனிதனுக்கு என்ன துணிச்சல்?” என்று உள்ளூர நான் கொதித்தேன். சூர்ப்பனகை பரிதாபகரமாகத் தோன்றினாள். அவள் தன் இளமையில்கூட ஒருபோதும் ஒரு பேரழகியாக இருந்ததில்லை. ஆனால் இப்போது, நாற்பது வயதை நெருங்கிக் கொண்டிருந்த அவள், அறுபட்ட மூக்குடன் மிகவும் விகாரமாக இருந்தாள். காட்டில் ஓர் அழகான பெண் இரண்டு ஆண்களுடன் உலவிக் கொண்டிருந்ததாகவும், அசுரப் பேரரசனான தனது சகோதரனை மணந்து கொள்ள அவளுக்குச் சம்மதமா என்று தான் அவளிடம் கேட்டதாகவும், அக்கணத்தில், அந்த இரண்டு ஆண்களில் இளையவன் தன்மீது பாய்ந்து தன்னை அலங்கோலப்படுத்தியதாகவும் அவள் புலம்பினாள். அவள் இவ்வாறு தொடர்ந்து கத்தியதில் நான் பொறுமையிழந்து, கோபத்தில் அவளது முகத்தின்மீது ஓங்கி அறைந்தேன். அவள் அதிர்ச்சியில் சிலையானாள். அவளைச் சமாதானப்படுத்தும் முயற்சியாக, அவளது தோள்களில் என் கைகளை வைத்தேன். ஆனால் அவள் அவற்றைத் தட்டிவிட்டு, என்னைச் சபித்தபடி வெளியே ஓடினாள். நான் முதுகெலும்பற்ற ஒரு சகோதரன் என்றும் அவள் புலம்பித் தள்ளினாள்.

என் சகோதரிக்கு ஏற்பட்ட அவமானம் என்னை முள்ளாய்க் குத்தியது. ஆனால் அவளைப் போன்ற ஒரு சகோதரி எனக்கு இருந்ததுதான் அதைவிட அதிக வெட்கத்திற்குரிய விஷயம். எங்களுடைய தூரத்து உறவினர்களான கரன் மற்றும் தூஷணனுடைய ராஜ்யத்திற்குள் அவள் தஞ்சம் புகுந்திருந்த காலத்திலிருந்தே நான் அவளைக் கண்காணித்து வந்திருந்தேன். அவர்கள் இருவரும், இந்தியாவின் வடக்கிலிருந்த தேவ ராஜ்யங்களின் எல்லைகளை ஒட்டி அமைந்திருந்த இரண்டு சிறிய ராஜ்யங்களின் அரசர்களாகவும் எனது அடிமைகளாகவும் இருந்தனர். அவள் பலருடன் உறவு கொண்டது குறித்துத் துவக்கத்தில் எனக்கு ஆச்சரியமாக இருந்தாலும், பின்னாளில் அது எனக்கு வெறுப்பூட்டியது. அசுரர்களின் சமுதாய விதிப்படி அது ஒரு குற்றமல்ல, ஆனால் காலம் மாறியிருந்தது. தேவர்களின் நல்லொழுக்க நெறிகளில் ஒருசில என்னிடம் ஒட்டிக் கொண்டனபோலும். அவள்

யாரோ ஓர் ஆண்மகனைத் துரத்திக் கொண்டிருந்தபோதுதான், காட்டில் அந்த இருவரையும் அந்தப் பெண்ணையும் அவள் எதிர்கொண்டிருக்க வேண்டும். அப்பெண் என் மகள் என்றும், அந்த ஆண்கள் இருவரும் என் மருமகன் மற்றும் அவனது சகோதரன் என்றும் நான் உறுதியாக நம்பினேன். சூர்ப்பனைக்கு இந்த உறவுமுறை பற்றித் தெரிந்திருக்கவில்லை. இல்லையென்றால் அவள் என்னிடம் வேறு ஏதேனும் ஒரு பொய்யைக் கூறியிருந்திருப்பாள்.

இன்னொரு சிந்தனையும் எனக்குக் கவலையளித்தது. “இந்த ஆபத்தான ஆண்களிடம் என் மகள் எவ்வளவு பாதுகாப்பாக இருப்பாள்?” அரசவையைத் தொடர்ந்து நடத்தும் மனநிலையில் நான் இருக்கவில்லை. எனவே, எல்லோரையும் கலைந்து போகும்படி கூறிவிட்டு, என் தனிப்பட்ட அறைக்குச் சென்றேன். நான் மண்டோதரியை அழைத்து, எனது தீர்மானத்தை அவளிடம் கூறினேன். அது அவ்வளவு சுலபமானதாக இருக்கவில்லை. நான் செய்யத் திட்டமிட்டிருந்த விஷயத்தை அவள் செவிமடுத்தபோது, அவள் மகிழ்ச்சியடையவில்லை. ஒரு பெண்ணின் மார்பகங்களையும் மூக்கையும் துண்டித்திருந்த ஆண்களுடன் எங்கள் மகளை என்னால் விட்டு வைக்க முடியாது என்று நான் அவளிடம் கூறினேன். நான் சீதையின் பாதுகாப்புக் குறித்துக் கரிசனம் கொண்டிருந்தேன். அவ்விருவருடனும் சண்டையிட்டு எங்கள் மகளை மீட்டு வரும்படி மண்டோதரி எனக்கு அறிவுறுத்தினாள். இரண்டு சாமானியர்களுக்கு எதிராக ஒரு போரைத் துவக்குவது குறித்த யோசனையைக் கேட்டு நான் சிரித்தேன். அதில் ஏகப்பட்டப் பிரச்சனைகள் இருக்கும் என்பதோடு, அதற்கு எக்கச்சக்கமாகச் செலவாகும் என்றும் நான் நினைத்தேன். நான் என்ன செய்யவிருந்தேன் என்பதை நான் முழுவதுமாக அறிந்திருந்தேன். இதிலிருந்து பின்வாங்குவது சாத்தியமே இல்லை.

மாரீசனிடம் நான் எனது திட்டத்தை எடுத்துரைத்தேன். அவனுக்கு அதில் உடன்பாடு இருக்கவில்லை. நான் உணர்ச்சிவசப்பட்டும் குழந்தைத்தனமாகவும் நடந்து கொண்டிருந்ததாக அவன் என்னிடம் கூறினான். நான் கோபத்தில் கொதித்தேன். அந்த முதியவனின் கண்களில் வேதனையையும் வலியையும் என்னால் பார்க்க முடிந்தது, ஆனால் அவன் என்னுடன் தொடர்ந்து விவாதித்தான். இதனால் பெருஞ்சினம் கொண்ட நான், இத்திட்டத்தைத் தனியொருவனாகச் செயல்படுத்துவதென்று முடிவு செய்தேன். இறுதியில், அவன் என் திட்டத்தோடு உடன்பட்டான். நாங்கள் என் மகளைத் தேடி விண்ணில் பறந்தோம்.

நாங்கள் வடக்கு நோக்கிப் பறந்து கொண்டிருந்தபோது, என்

முயற்சியைக் கைவிடுமாறு மாரீசன் மீண்டும் என்னிடம் கேட்டுப் பார்த்தான். நான் அவனை உதாசீனப்படுத்தினேன். "ராவணா, நீ ராமனையும் அவனது சகோதரனையும் கொன்றுவிட்டு, சீதையிடம் அவளது பிறப்பைப் பற்றிய உண்மையைக் கூறிய பிறகு அவளை இலங்கைக்குக் கொண்டு செல்," என்று அவன் கூறினான். ஆனால் நான் ராமனைக் கொல்ல விரும்பவில்லை. என் மகள் அவனிடம் மிகவும் அர்ப்பணிப்புடன் இருந்தாள். அவளுக்கு மேலும் அதிக வருத்தத்தை ஏற்படுத்த நான் விரும்பவில்லை. ராமன் தானாக ஏற்றுக் கொண்ட வனவாசம் முடியும்வரை, சீதையை இலங்கையில் பத்திரமாக வைக்க மட்டுமே நான் திட்டமிட்டேன். அவன் தனது சிறிய ராஜ்யத்திற்கு அரசனானவுடன் அவள் அவனுடன் போய்ச் சேர்ந்து கொள்ளலாம். நான் அவளை இலங்கைக்குக் கொண்டு வந்த பிறகு, அவள் தனது தந்தையின் ஆடம்பரமான வீட்டைப் பார்த்துவிட்டு, எங்களுடன் தங்குவதற்குத் தன் கணவனைச் சம்மதிக்க வைப்பாள் என்று நான் ரகசியமாக ஒரு நப்பாசை கொண்டிருந்தேன். ராமன்மீது திடீரென்று எனக்கு ஏதோ ஒரு கரிசனம் வந்திருந்தது என்று இதற்கு அர்த்தமில்லை, ஆனால் நான் அவனை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தேன். எனது சாம்ராஜ்யத்தின் வடக்குப் பகுதியில் ஒரு குறிப்பிட்ட அளவு நிலத்தை அவன் ஆள்வதற்கு அவனுக்குக் கொடுக்கவும் நான் தயாராக இருந்தேன்.

ஆனால் துவக்கத்திலிருந்தே எல்லாம் திசை மாறிச் சென்றது. ராமன் தனது சகோதரனுடனும் சீதையுடனும் வாசம் செய்த இடத்தை நாங்கள் அடைந்தபோது, அதிகாலை நேரமாக இருந்தது. காடு மிக அமைதியாகவும் ரம்மியமாகவும் இருந்தது. அது வேறு ஏதேனும் ஒரு தருணமாக இருந்திருந்தால், நான் என் கவலைகள் அனைத்தையும் மறந்துவிட்டு, எனது தூரிகையையும் ஒரு வாழை இலையையும் எடுத்துக் கொண்டு, காட்டின் அழகான காட்சிகளை ஓவியமாகத் தீட்டியிருப்பேன். மரங்களுக்கு மேலே ஒரு மென்மையான மூடுபனித் திரை படர்ந்திருந்தது. ஒவ்வொரு புல்லும் சூரியனின் மென்மையான, ஒளிமயமான கதிர்களால் ஒளிர்ந்தன. களகளவென்ற சத்தத்துடன் ஓடிக் கொண்டிருந்த ஒரு நீரோடைக்கு இட்டுச் சென்ற ஒரு லேசான மேட்டின்மீது ஓலைக்கூரையுடன்கூடிய ஒரு சிறிய குடில் அமைந்திருந்தது. ஆயிரக்கணக்கான பட்டாம்பூச்சிகள் அங்கு சிறகடித்துப் பறந்தன. மரங்களின் உச்சி, குளிர்ந்த காற்றில் அங்குமிங்கும் சாய்ந்தாடியபோது, திடீரென்று தோன்றித் திடீரென்று மறைந்த துளைகள் வழியாகச் சூரியனின் பொன்னிறக் கதிர்கள் ஊடுருவின. பறவைகளும் வெட்டுக்கிளிகளும் ரீங்காரமிட்டுக்

கொண்டிருந்த தேனீக்களும் தும்பிக்களும், அந்தக் காட்டின் இனிமையான இரைச்சலுக்கு மேலும் இனிமையூட்டின. மான்கள் நிதானமாக மேய்ந்து கொண்டிருந்தன. பிரகாசமாக ஒளிர்ந்து கொண்டிருந்த புல்லின் நுனிகளை மோப்பம் பிடித்தவாறு, முயல்கள் இலக்கின்றி அங்குமிங்கும் துள்ளிக் குதித்து ஓடிக் கொண்டிருந்தன. ஒரு பாறையின்மீது, அந்தக் காட்டின் கடவுளைப்போல, என் மகள் சீதை அமர்ந்திருந்தாள். அவள் தனது இரு கைகளையும் வயிற்றின் குறுக்காக இணைத்துக் கொண்டு, ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்தாள். அருகில் ஓடிய நீரோடை விளையாட்டுத்தனமாக அவள்மீது தெறித்த நீர்த்துளிகள், அவளது வழுவழுப்பான, கரிய நிறக் கால்களின்மீது பட்டு அவளது தோலை மினுமினுக்கச் செய்தன.

மாரீசன் என் தோளின்மீது தட்டியபோது என் மயக்கம் தெளிந்தது. பிறகு நான் எனது நிலையை உணர்ந்தேன். அது என் எதிரியின் எல்லை. அவன் அருகே எங்கேனும் இருக்கக்கூடும். நான் ராமனை எதிர்கொண்டால், நான் அவனைக் கொல்ல வேண்டியிருக்கும். என்னுடைய உளவாளிகள் எனக்கு அனுப்பிய அறிக்கைகளில் கூறப்பட்டிருந்ததைப் போலன்றி, சீதை மகிழ்ச்சியாக இருந்ததுபோலத்தான் தோன்றியது. "கோழைகள்! நான் எதைக் கேட்க விரும்பினேனோ, அவர்கள் அதை என்னிடம் கூறியிருந்தனர்," என்று நான் உள்ளூரச் சினம் கொண்டேன். அப்பெண்ணின்மீது நான் ஆர்வம் கொண்டிருந்தேன் என்பதை அவர்கள் ஊகித்திருக்க வேண்டும். இப்போது யாரோ இருவர் உரையாடும் சத்தம் கேட்டது. மாரீசன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த திசையில் நானும் பார்த்தேன். இரண்டு நபர்கள் அக்காட்டினுள் இருந்து வெளியே வந்தனர். அவர்கள் வேடுவர்களைப்போல இருந்தனர். ஆனால் அவர்கள் ராமனும் லட்சுமணனும்தான் என்பதை நான் உணர்ந்து கொண்டேன். பதினான்கு வருடங்களுக்கு முன்பு நான் அவர்களைப் பார்த்ததிலிருந்து, அவர்கள் கூடுதலாகக் கருத்துப் போயிருந்தனர். அவர்களுக்கு வயதும் கூடியிருந்தது. அவர்கள் இருவரும் என் பார்வைக்குக் கருப்பாகவும் அசிங்கமாகவும் இருந்தனர். ஆனால் ராமனின் முகத்தில் மட்டும் சிறிதளவு உள்ளார்ந்த ஒளி இன்னும் இருந்தது. "தேவ இளவரசர்களால் எப்படிக் கருப்புத் தோல் கொண்டவர்களாக இருக்க முடியும்? நானே அவர்களைவிட அதிக வெளுப்பாக இருந்தேன்," என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன்.

"நான் ராமனின் கவனத்தை இளவரசியிடமிருந்து திசை திருப்புகிறேன். இளையவனை உன்னால் பார்த்துக் கொள்ள முடியும் என்று நான் நினைக்கிறேன்," என்று மாரீசன் என் காதில்

கிசுகிசுத்துவிட்டு, மின்னல் வேகத்தில் காட்டிற்குள் சென்று மறைந்தான். அவர்கள் இருவரையும் என்னால் கையாள முடியும் என்று நான் அவனிடம் கூற விரும்பினேன், ஆனால் அவன் அதற்குள் அங்கிருந்து போய்விட்டிருந்தான். அதுதான் நான் அவனைக் கடைசியாகப் பார்த்தது. நான் முன்பே கூறியதுபோல, அது ஒரு முட்டாள்தனமான, அவரசமான திட்டம். நன்கு ஆராயப்பட்டத் திட்டங்களை வகுப்பதில் சிறப்பாகத் திகழ்ந்த, மாரீசனைப் போன்றவர்களுக்குப் பொருந்தாத ஒரு திட்டம் அது. எனக்கும் அனுபவத்திற்குக் குறைச்சல் இருக்கவில்லை. ஆனால் அன்றைய தினம் நடந்தவற்றைத் தலைவிதி என்று கூறலாம். அன்று அடுக்கடுக்காகப் பல தவறுகள் நிகழ்ந்தன. நான் கிட்டத்தட்ட இரண்டு மணிநேரமாகக் காத்திருந்துவிட்டு, பிறகு பொறுமை இழந்திருந்தேன். “நான் வேகமாகச் சென்று, அவர்கள் இருவரையும் கீழே சாய்த்துவிட்டு, என் மகளைத் தூக்கிக் கொண்டு சென்றுவிடலாமா?” என்றுகூட நான் யோசித்தேன். நான் அந்த யோசனையைச் செயல்படுத்துவதென்று தீர்மானிக்கவிருந்த நேரத்தில், நீரோடையின் மறுபக்கக் கரையில் திடீரென்று ஓர் ஒளி தோன்றியது. நான் அதை பிரமிப்புடன் பார்த்தேன். அது ஒரு பொன்மான். அதன் முன்பக்கமும் அதன் வளைவான கொம்புகளும் மட்டுமே கண்ணுக்குப் புலப்பட்டன, ஆனால் அது சொர்க்கத்திலிருந்து வந்த ஒரு ஜீவனைப்போலத் தோன்றியது. அது ஒரு மென்மையான, இனிமையான ஒலியை எழுப்பிவிட்டுப் புதர்களுக்குள் சென்று மறைந்தது.

அந்தச் சத்தம் எங்கிருந்து வந்தது என்று பார்ப்பதற்காக அவ்விரு சகோதரர்களும் சீதையும் வேகமாகத் திரும்பினர். காற்றினால் உரசிக் கொண்ட இலைகள் ஏற்படுத்திய சத்தம் மற்றும் பறவைகளின் கீச்சொலி தவிர, அந்தக் காடு மிகவும் அமைதியாக இருந்தது. அப்போது அந்தப் பொன்மான் மீண்டும் துள்ளி வந்து தலைகாட்டிவிட்டுப் புதர்களுக்குள் ஓடி மறைந்தது. சீதை மகிழ்ச்சிக் கூக்குரலிட்டாள். லட்சுமணன் அந்தப் புதரை நோக்கித் தனது அம்பைக் குறி வைத்ததை நான் கண்டேன். ராமனும் சீதையும் ஒருசில கணங்கள் அந்தப் புதரை பிரமிப்புடன் பார்த்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு, அந்த மான் மீண்டும் வெளியே எட்டிப் பார்த்தது. லட்சுமணனின் வில்லிலிருந்து ஓர் அம்பு சீறிப் பாய்ந்து, ஒருசில நொடிகளுக்கு முன்னே அந்த மான் எந்த மரத்தின் அடியில் நின்று கொண்டிருந்ததோ, அதே மரத்தைச் சென்று துளைத்தது. மரத்தைத் துளைத்த அம்பு அதிர்ந்தது. நான் அவனை ஒரு புதிய மரியாதையுடன் பார்த்தேன். “அவன் நாகரீகமற்றவனாக இருக்கலாம், ஆனால் அவன் ஒரு நல்ல வில்வீரன். அவன் நன்றாகப்

பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறான்," என்று எனக்குள் நினைத்துக் கொண்டேன். என் சிரிப்பை அடக்குவதற்கு நான் மிகவும் சிரமப்பட்டேன். மாரீசன்தான் அந்த மான் என்பதையும், தாக்குதலிலிருந்து தப்பிக்கக்கூடிய திறமை பெற்றவன் அவன் என்பதையும் நான் அறிந்தேன். மாரீசன் ஒரு மானைக் கொன்றுவிட்டு, அதன் தோலை உரித்து, அதைத் தன்மீது போர்த்திக் கொண்டு நாடகமாடிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அது ஒரு புத்திசாலித்தனமான, எளிமையான மாறுவேடம். சீதை லட்சுமணனைக் கடிந்து கொண்டதையும், தனக்கு அந்த மானைப் பிடித்துத் தருமாறு ராமனிடம் கெஞ்சியதையும் என்னால் பார்க்க முடிந்தது. ராமன் சிறிது நேரம் தயங்கிவிட்டு, பிறகு அந்த மானின் மறைவிடத்தை நோக்கிச் சென்றதை நான் கண்டேன். அவன் அந்த நீரோடையின் மறுகரையை அடையவிருந்த நேரத்தில், அந்த மான் பெரும் வேகத்துடன் துள்ளி ஓடியது. சீதையைப் பார்த்துக் கொள்ளுமாறு லட்சுமணனிடம் கத்திவிட்டு, அந்த மானைப் பின்தொடர்வதற்காக ராமன் மறுபக்கக் கரையை நோக்கி வேகமாக ஓடினான்.

நன்றாகக் குறி பார்த்து லட்சுமணனைக் கொன்றுவிடுவதென்று நான் நினைத்தேன். ஆனால் உண்மையான ஆண்கள் அப்படிச் சண்டையிடுவதில்லை என்ற நினைப்பும் என்னுள் எழுந்தது. ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்து கொண்டு, எதிர்பாராத நேரத்தில் ஓர் எதிரியைத் தாக்குவது வீரமிக்க ஆண்களின் போர்முறை அல்ல. நான் ஓர் அசுரன், ஒரு பேரரசன். இப்படிப்பட்ட நடவடிக்கைகள் என் பண்புநலனுக்கு அப்பாற்பட்டவை, எனது நியாய உணர்வுக்கு எதிரானவை. ஆனால் ராமனும் அவனது சகோதரனும் எந்த அளவுக்குத் தரம் தாழ்ந்து போவார்கள் என்பதை நான் அறிந்திருந்தால், அவர்களை அங்கேயே அப்போதே நிச்சயமாகத் தீர்த்துக் கட்டியிருப்பேன். ஆனால் நான் ஒரு முட்டாள். வாய்ப்பு என்னை வலியத் தேடி வந்தபோதே நான் அதைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் இப்போது நான் வஞ்சிக்கப்பட்டு, ஏமாற்றப்பட்டு, கீழ்த்தரமான மனிதர்களால் வஞ்சகமான வழியில் வீழ்த்தப்பட்டு, ரத்தம் ஒழுகிக் கொண்டு விழுந்து கிடந்தேன். எலிகள் என்னைக் கூறுபோட்டுக் கொண்டிருந்தன. எனக்கு இந்த முடிவு தேவைதான். ஏனெனில், இந்த இருவரின் கதையையும் முடிப்பதற்கான ஒரு வாய்ப்பை விதி என்னிடம் வழங்கியிருந்த நேரத்தில், நியாயம் பற்றிப் பிதற்றிக் கொண்டு என் அகங்காரத்திற்குத் தீனி போடுவதில் மும்முரமாக இருந்து, நான் அந்த வாய்ப்பை வீணாக்கியிருந்தேன். என் வாழ்வில் எனக்குத் தவறான அறிவுரையாளர்கள் வாய்த்திருந்தனர். அதுதான் என்னைத்

தோற்கடித்துவிட்டது. நியாயம் மற்றும் நாணயத்தின் சின்னமாக விளங்கிய வாலி, உண்மைக்காகத் தனது சாம்ராஜ்யத்தைத் தூக்கி எறிந்திருந்த மகாபலி போன்றவர்கள் எனது ஆசான்களாக இருந்தனர். எனவே, அவர்களுக்கு நேர்ந்த அதே கதியை நானும் எதிர்கொள்ள வேண்டியதாகிவிட்டது. ராமனையும் லட்சுமணனையும் நான் அப்போதே கொன்றிருந்தால், என்மீது நம்பிக்கை வைத்து, தீங்கிலிருந்து நான் தங்களைக் காப்பாற்றுவேன் என்பதில் உறுதியாக இருந்த பலரின் கண்ணீரை என்னால் பாதுகாத்திருக்க முடியும்.

அன்று என் கைகள் நடுங்கியபோது, வாழ்வில் நான் தோற்றுப் போயிருந்தேன் என்பதை நான் அறிந்தேன். எனது அன்புக்குரிய குழந்தைகளின் சிதைகளுக்குத் தீ மூட்டிவிட்டு, என் வாழ்நாள் முழுவதும் நான் எவற்றுக்காகப் போராடி வந்திருந்தேனோ, அவற்றையெல்லாம் இழந்துவிட்டு, இங்கு நான் என் சொந்த ரத்தத்திலும் என் உறவினர்களின் ரத்தத்திலும் குளித்துக் கொண்டு விழுந்து கிடந்தேன். ராமனும் லட்சுமணனும் நான் தாக்கக்கூடிய விதத்தில் எனது சுலபமான இலக்காக இருந்து, நான் ஒரு மரத்திற்குப் பின்னால் மறைந்து நின்ற சூழ்நிலை மீண்டும் எழுந்தால், அப்போதும் நான் அவர்களையோ அல்லது வேறு எவரொருவரையுமோ கொல்ல மாட்டேன். அது கோழைகளின் வழி. அதனால்தான் நான் இப்போது மெல்ல மெல்ல இறந்து கொண்டிருந்தேன். ஆனால் நான் நிமிர்ந்த தலையுடன் இறப்பேன். தெய்வீக நிலையை அடைவதற்காக இவ்வளவு தூரம் கீழ்த்தரமாக நடந்து கொண்ட ஒருவனைக் குறித்து எனக்கு வருத்தம் மட்டுமே ஏற்பட்டது. “ராமா, இது உனக்கு அழகுதானா?” நீ சிந்த வைத்துள்ள ரத்தம், நாங்கள் அனைவரும் இறந்து வெகுகாலம் கழித்தும் உன்னையும் இந்த நாட்டையும் பலப்பல வருடங்கள் தொடர்ந்து துரத்தும். நியாயமற்ற வழிகளில் நீ அடைந்த தெய்வீக நிலையை நீ வைத்துக் கொள். நான் எனது ஆண்மைநிலையைத் தக்க வைத்துக் கொண்டு, ஒரு வீரனைப்போல இறக்கிறேன்.

லட்சுமணனைத் தீர்த்துக் கட்டுவதா அல்லது வேண்டாமா என்று எனக்குள் விவாதித்தபடி நான் அங்கு அமர்ந்திருந்தபோது, ரத்தத்தை உறைய வைத்த ஓர் அழுகைக் குரல் கேட்டது. லட்சுமணனுக்கும் சீதைக்கும்கூட அது கேட்டது. அதைக் கேட்டு நாங்கள் அனைவரும் அதிர்ச்சியடைந்தோம். அந்தக் குரல் யாருடையது என்பது எனக்குத் தெரிந்தது. ஆனால் அது என் அன்புக்குரிய மாமனின் மரண ஓலம் என்று எனக்கு அப்போது தெரியவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் நான் அப்படியே உறைந்து நின்றேன். அது மாரீசனுடைய திட்டத்தின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

அப்போது சீதை ஏதோ பெரிதாகச் சத்தமிட்டாள். லட்சுமணனும் தன் குரலை உயர்த்தினான். அவன் தனது சகோதரன் சென்றிருந்த திசையை நோக்கிச் சென்றதை நான் பார்த்தேன். நான் இன்னும் தயங்கினேன். “அவனைப் பின்தொடர்ந்து சென்று, மாரீசன் உண்மையிலேயே ஆபத்தில் சிக்கியிருந்தால் அவனைக் காப்பாற்றலாமா?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். ஆனால் மாரீசன் ஓர் அனுபவசாலி. அவனால் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். அப்போது நான் வேகமாகச் செயல்பட்டேன். சீதையை நான் அச்சுறுத்த விரும்பாததால், என் ஆயுதங்களை மறைத்து வைத்தேன். பிறகு என் நகைகளைக் கழற்றி, அவற்றை ஒரு மூட்டையில் கட்டி, அதை என் இடுப்பைச் சுற்றிக் கட்டினேன். சிவனின் பிற எந்தவொரு பக்தனைப்போலவே, என் நெற்றியில் ஏற்கனவே திருநீறு இருந்தது. ஆனால் எனது அரச ஆபரணங்கள் எதுவும் இல்லாமல், யாசகம் கேட்டு நின்ற ஒரு துறவியைப்போல நான் இருந்ததை நான் அறிந்தேன்.

நான் சீதையை நெருங்கிய சமயத்தில், பின்னால் திரும்பி அவள் என்னைப் பார்த்தாள். அவளது அழகான கருப்புக் கண்கள் என்மீது நிலைத்தன. எனக்குத் தொண்டை அடைத்தது. நான் அவளைத் தொட்டு, என் கைகளில் தாங்கிக் கொள்ள விரும்பினேன். “சீதை, என் மகளே!” என்று என் மனத்திற்குள் கூறினேன். நான் வேறு பக்கமாகத் திரும்பி, என் கண்களை மூடிக் கொண்டு நின்றேன். என்னை நானே கொன்றுவிட விரும்பினேன். “நான் ஏன் அவளைக் கைவிட்டேன்? நான் ஏன் அவளை மறந்தேன்? அவளது குழந்தைப்பருவம் முழுவதையும் நான் இழந்திருந்தேன். மிதிலையின்மீது படையெடுத்து நான் ஏன் அவளை மீட்கவில்லை?” ஜனகனிடம் நான் உண்மையைக் கூறியிருந்தால், ரத்தச் சிதறலைத் தவிர்த்திருக்கலாம். மிகவும் புத்திசாலியான, சிறப்பாகக் கற்றறிந்த தேவ அரசர்களில் ஒருவனாக இருந்த அவன் என் மகளை என்னிடம் திருப்பிக் கொடுத்திருக்கக்கூடும். ஆனால் எனக்கு அவளது கணவனின்மீது நம்பிக்கை இருக்கவில்லை. அவ்விரு சகோதரர்களும் என் சகோதரிக்குச் செய்திருந்த கொடுமைக்காக அவர்களை என்னால் ஒருபோதும் மன்னிக்க முடியாது. சீதைக்கு அவர்களிடம் எந்தப் பாதுகாப்பும் இருக்கவில்லை. ஓர் அசுர இளவரசியும் ராவணனின் மகளுமான அவள், காட்டில் சுற்றித் திரிந்து, ஒரு பிச்சைக்காரியைப்போல வாழ்ந்து தன் வாழ்க்கையை வீணாக்கக்கூடாது. நான் சாதித்திருந்த அனைத்தும், நான் சம்பாதித்திருந்த எல்லாமும், ஒட்டுமொத்த இலங்கையும், அசுர சாம்ராஜ்யமும் அவளுடையது. ஆனால் அவள் ஒருவேளை எனது செல்வங்களையும், என் சாம்ராஜ்யத்தையும், என் அன்பையும்

அலட்சியப்படுத்திவிட்டால்? அவள் தன் கணவனைக் குறித்துக் கொண்டிருந்த ஆழ்ந்த அன்பையும் அர்ப்பணிப்பையும் கண்டு நான் பயந்தேன். நெடுங்காலத்திற்கு முன்பு ஜோதிடர்கள் கணித்துக் கூறிய விஷயம் உண்மையாவதற்கு நான் காரணமாக ஆகிவிட்டால்? வேதவதி இறக்கும்போது கூறிய வார்த்தைகளை நினைத்து நான் பயந்தேன்.

அப்போது, என் இயல்புக்குப் புறம்பான இந்த உணர்வுகள், வந்த வேகத்திலேயே மாயமாக மறைந்தன. நான் என் மனத்தில் ஒரு பிரார்த்தனையைக் கூறிவிட்டுத் திரும்பியபோது, சீதை அங்கு இல்லை. எனக்கு ஏதேனும் கொடுப்பதற்காக அவள் தன் குடிலுக்குள் சென்றிருந்தாள். சிறிது நேரத்தில் அவள் என்னை நோக்கி வந்து, எனது பாத்திரத்தைத் தேடினாள். ஆனால் நான் அவளை என்னை நோக்கி இழுத்து, அவளது மெல்லிய இடையைச் சுற்றி என் கைகளைப் பிணைத்து, அவளை என் தோள்களுக்கு மேலே தூக்கி, நான் மறைத்து வைத்திருந்த புஷ்பக விமானத்தை நோக்கி ஓடினேன். துவக்கத்தில் அவள் மிகவும் அதிர்ச்சியடைந்திருந்தாள். ஆனால் ஒருசில நொடிகள் கழித்து, அவள் அழத் தொடங்கினாள், என்னுடன் சண்டையிடத் துவங்கினாள். அவள் தனது விரல் நகங்களால் என் முகத்தையும் முதுகையும் கீறினாள். என் உடலிலிருந்து ரத்தம் வழிந்ததை என்னால் உணர முடிந்தது. நான் அவளைக் கைவிட்டதற்காகவும், அறிவியல் ஆதாரமற்ற ஏதோ ஒரு கணிப்பை நம்பியதற்காகவும், என் சொந்த மகளைக் கண்டு பயந்ததற்காகவும், ஒரு தகப்பன் என்ற முறையில் நான் அவளுக்குக் கொடுக்கத் தவறியிருந்த விஷயங்களுக்காகவும் இது எனக்குத் தேவைதான் என்ற ஒரு வினோதமான எண்ணம் என்னுள் எழுந்தது.

இறுதியில், நான் அவளை அந்தப் பறக்கும் இயந்திரத்திற்குள் போட்டுவிட்டுக் கதவைத் தாளிட்டேன். பிறகு மாரீசனுக்காக நான் காத்திருந்தேன். சூரியன் மேற்கு நோக்கி முக்கால்வாசி தூரம் போகும்வரை நான் காத்திருந்தேன். என் மகளிடமிருந்து எழுந்த தேம்பல்களையும், தூரத்தில் கேட்டப் பறவைகள் மற்றும் விலங்குகளின் சத்தத்தையும் தவிர அந்தக் காட்டில் வேறு எந்தச் சத்தமும் கேட்கவில்லை. மாரீசனைத் தேடுவதற்காக அவளைத் தனியாக விட்டுவிட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. இறுதியில், ஒரு கனத்த இதயத்துடனும், என் அத்தையை எதிர்கொள்ள வேண்டுமே என்ற பயத்துடனும், நான் மீண்டும் அந்த விமானத்திற்குள் ஏறி, இலங்கையை நோக்கிப் பயணிக்கத் துவங்கினேன்.

இலங்கைக்கான பயணம் நரக வேதனையாக இருந்தது. ஒரு பெரிய ராஜாளிக் கழுகு என் புஷ்பக விமானத்தின் காற்றாடியில் சிக்கிக்

கொண்டது. அது மிகக் கொடூரமான கணமாக இருந்தது. காற்றாடி நின்று போனதால், விமானம் தொடர்ந்து கீழ்நோக்கிச் செல்லத் துவங்கியது. ஒரு கல்லைப்போல நாங்கள் வேகமாகக் கீழே வந்தோம். காற்றாடியில் சிக்கியிருந்த அந்தப் பறவை தன் உயிருக்காகப் போராடி, இன்னும் அதிகமாகச் சிக்கிக் கொண்டது. திகைப்பும் பிரமிப்பும் ஒருசேர, மரணம் எங்களை நோக்கி விரைந்து வந்ததை நான் கண்டேன். சீதையின் அலறல் என் மாயையிலிருந்து என்னை வெளிக்கொண்டு வந்தது. நான் என் வாளை உருவி, அந்தப் பறவையை வெட்டிச் சாய்க்க முயன்றேன். புஷ்பக விமானம் தள்ளாடியது. பிறகு திடீரென்று, அந்த இயந்திரம் தலைகுப்புறக் கவிழ்ந்து, ஒரு குட்டிக்கரணம் போட்டு, தலைகீழாக பூமியை நோக்கி விரைந்தது. சீதை வழுக்கிக் கீழே விழவிருந்தாள், ஆனால் நான் என் ஒரு கையால் அவளது இடையைப் பற்றினேன். என் வாள் என் கையிலிருந்து நழுவியது. விமானம் இன்னொரு முறை குட்டிக்கரணம் போட்டிருந்தால், கீழே விழுந்த வேகத்தில் அந்த வாள் எங்கள் இருவரில் யாரேனும் ஒருவரை வெட்டியிருக்கும். காற்று ஓர் அலறலோடு எங்களைக் கடந்து சென்றபோது, சீதை அந்த விமானத்திற்கு வெளியே தொங்கிக் கொண்டிருந்தாள். நான் என் பலத்தை ஒன்றுதிரட்டி, ஒரே இழுப்பில் அவளை உள்ளே இழுத்தேன். அந்த விமானம் இன்னும் அதிகமாகத் தள்ளாடியது. இவை அனைத்தும் ஒருசில நொடிகளுக்குள் நிகழ்ந்தன. பிறகு என் மகளின் குறுகிய இடையை என் கைகளால் தாங்கிக் கொண்டு, என் வாளை ஒரு காலைக் கொண்டு மேலே இழுத்தேன். ஒரு கையில் வாளுடன் நான் அந்தப் பறவையைத் தாறுமாறாக வெட்டினேன். அதன் பல துண்டுகள் கீழே விழுந்ததை என்னால் பார்க்க முடிந்தது. பூமியை நாங்கள் வேகமாக நெருங்கிக் கொண்டிருந்தோம். மரங்களின் இலைகளை என்னால் பார்க்க முடிந்தது. பிறகு, என் முழு பலத்தையும் கொண்டு, அந்தப் பறவையை மீண்டும் வெட்டினேன். இப்போது எங்கள் விமானம் பேய்த்தனமாக ஆடியது. பாய்மரங்கள் அவிழ்ந்துவிட்டால், நாங்கள் இந்த உலகத்திடமிருந்து விடைபெற்றுக் கொண்டாக வேண்டியிருக்கும்.

இறுதியில், விமானத்தின் காற்றாடியில் சிக்கியிருந்த அந்தப் பறவையின் எஞ்சிய பாகமும் கீழே விழுந்தது. அதன் ரத்தம் எங்கள் இருவர்மீதும் தாராளமாகத் தெறித்திருந்தது. விமானத்தை ஒரு நிலைக்குக் கொண்டு வருவதற்காக நான் என் கைகளை நீட்டி நெம்புகோல்களை இழுத்தேன். ஆனால் காற்றாடி சுற்றவில்லை. நான் இழுத்துப் பார்த்தேன், தள்ளியும் பார்த்தேன், ஆனால் அது அசையவே இல்லை. நாங்கள் உயரமான மரங்களுக்கு வெகு அருகே வந்து

கொண்டிருந்தோம். இந்த இரும்புப் பறவையைக் கண்டு, அந்த மரங்களின்மீது இருந்த உண்மையான பறவைகள் பயத்தில் பறந்தோடிச் சென்றன. “திக்குத் தெரியாத ஓரிடத்தில் ஓர் அவலமான மரணம்! அதுவும், என் மகளை மீட்டுக் கொண்டு வரும்போது!” என்று நான் நினைத்துக் கொண்டேன். என் வாழ்க்கை என் கண்முன் பளிச்சிட்டது. நான் பரிதவிப்புடன் அதைப் பார்த்தேன். சீதையிடமிருந்து வந்த திடீர் அழுகை என்னைத் திடுக்கிட வைத்தது. “அவளை நான் காப்பாற்றியாக வேண்டும். அவள் ஓர் இளம் பெண். அவள் தன் வாழ்க்கையை முழுமையாக வாழ வேண்டும். கொல்லப்படுவதற்காகவா அவளை நான் அவளது கணவனிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்தேன்?” என்று நான் நினைத்தேன். என் பலம் முழுவதையும் திரட்டி, அந்த நெம்புகோலை மேலும் கீழும் பலமாக ஆட்டினேன். இறுதியில் அந்தக் காற்றாடிக்கு உயிர் வந்தது. அது சுழலத் தொடங்கியது. நான் நிம்மதிப் பெருமூச்சுடன் கண்களை மூடினேன். ஆனால் மீண்டும் பீதியில் கண்களைத் திறந்தேன். “மிகவும் தாமதமாகிவிட்டது! காற்றாடியின் இறக்கைகள் மரங்களின் மேற்பகுதியை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தன. எங்களால் தப்பிக்க முடியுமா? சிவபெருமானே!” அப்போது அந்த இயந்திரம் மெல்ல மெல்ல மேலே எழும்பியது. அங்கு இருந்ததிலேயே மிக உயரமான மரத்திலிருந்து ஒருசில அடிகள் உயரத்தில் நாங்கள் பறந்தோம். நான் அந்த விமானத்தை மேலும் உயரமாக எடுத்துச் சென்றேன். பத்தடி . . . இருபது . . . நாங்கள் தப்பிவிட்டதாக நான் நினைத்த அந்த நேரத்தில், ஒரு பெரிய பாறை எங்களுக்கு முன்னால் மறைந்திருந்ததை நான் கண்டேன். நாங்கள் அதன்மீது மோதவிருந்ததாக நான் நினைத்தேன். “அதை எங்களால் தவிர்க்க முடியுமா?” நான் வியர்வையில் குளித்திருந்தேன். என் விரல்கள் வலித்தன. அந்தப் பாறை இப்போது வெறும் இருபதடி தூரத்தில் இருந்தது, ஆனால் நாங்கள் அதன்மீது மோதாமல் இருப்பதற்கு, நாங்கள் இன்னும் முப்பதடி உயரமாகச் செல்ல வேண்டியிருந்தது. விமானத்தின் காற்றாடி அந்தப் பாறையைக் கிட்டத்தட்டத் தொட்டது. நாங்கள் அதன்மீது மோதப் போவதாக நான் நினைத்தக் கணத்தில், எங்கள் புஷ்பக விமானம் ஒருசில அங்குல இடைவெளியில் அந்த மோதலிலிருந்து தப்பியது.

நான் தொடர்ந்து மேலே சென்று, இறுதியில், விமானம் மிதப்பதற்கான உயரத்தை எட்டினேன். பிறகு காற்றாடியை மடக்கிவிட்டு, பாய்மரங்களை அவிழ்த்தேன். இறுதியில் நான் களைத்துப் போய் மல்லாக்க விழுந்தேன். என் மனம் நிம்மதியடைந்தது. என் மகள் ஒரு கல்லைப்போல அமர்ந்திருந்தாள். நான் அவளுக்காக

வருந்தினேன். பிறகு மாரீசனை நான் நினைத்துப் பார்த்தேன். அவனை நான் இழந்திருந்தேன். அது என்னை ஒரு மின்னல்போலத் தாக்கியது. எங்களுடைய சொந்த உலகிற்குள் மூழ்கியிருந்த அப்பாவும் மகளுமான நாங்கள் இலங்கைக்குப் பறந்தோம்.

சீதை முதன்முதலில் இலங்கையைப் பார்த்தபோது, அவளது முகம் ஆச்சரியத்தில் விரிந்ததை என்னால் காண முடிந்தது. ஒரு கணம் அவள் தன் துயரத்தை மறந்தாள். என் இதயம் பெருமிதத்தால் விம்மியது. அவளுக்காக நான் எந்தெந்தப் பெருமைகளையெல்லாம் பாதுகாத்து வைத்திருந்தேன் என்பதை நான் அவளுக்குக் காட்ட விரும்பினேன். "சீதை, என் மகளே! உன் இலங்கையைப் பார்!" என்று என் மனத்திற்குள் கூறினேன். அவள் வாழவிருந்த பொன் மாளிகை கீழே தெரிந்தது. அவள் அதன் தோட்டங்களைப் பார்க்க வேண்டும் என்றும், கடலின் வாசனையை நுகர வேண்டும் என்றும் நான் விரும்பினேன். ஜொலித்துக் கொண்டிருந்த சந்தைகள், பசுமைநிற நெல் வயல்கள், அசைந்தாடிக் கொண்டிருந்த தென்னை மரங்கள், மசாலாத் தோட்டங்கள், பரந்து விரிந்த எனது ராஜ வீதிகள், உயரமான கோட்டைகள், அரண்மனைகள் ஆகியவற்றை அவள் பார்க்க வேண்டும் என்று நான் விரும்பினேன். அவள் அவை அனைத்தையும் பார்த்துவிட்டு, அரண்மனை என்று தனது கணவன் அழைத்த ஒரு சாதாரண வீட்டோடு அவற்றை ஒப்பிட்டுக் கொள்ளட்டும். ஆனால் நான் அமைதியாக இருந்தேன். மறைந்து கொண்டிருந்த சூரியன், எனது அரண்மனையின் பொற்குவிமாடத்தைப் பிரதிபலித்தபோது அவளது கண்கள் ஆச்சரியத்தால் நிரம்பியதை நான் கண்டேன். நான் எங்களது இரும்புப் பறவையை எந்த ஆரவாரமும் இல்லாமல் தரையிறக்கினேன். காற்றாடி முழுவதுமாக நிற்பதற்கு முன்பே சீதையைப் பற்றி மறந்துவிட்டு, நான் அந்த விமானத்திலிருந்து வெளியே குதித்தேன். திரிஜடையும் மேகநாதனும் பின்னால் ஓடிவர, மண்டோதரி எங்களை நோக்கி வேகமாக ஓடி வந்து கொண்டிருந்தாள். எங்களுடைய விருந்தினரைப் பார்ப்பதற்கு அவர்கள் மிகவும் ஆவலாக இருந்தனர்.

என் அத்தை தனது கணவனைத் தேடினாள், ஆனால் நான் வேறு பக்கமாகப் பார்த்தேன். நான் பயந்த கணம் வந்துவிட்டிருந்தது. என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை. நான் உணர்ச்சியற்று நின்றேன். மாரீசன் இறந்துவிட்டான். அதுதான் எனது முட்டாள்தனமான சாகச முயற்சி பற்றிய உண்மை. காட்டிற்குள் எங்கோ ஓர் ஆழத்தில் அந்த முதியவன் மடிந்து கிடந்தான். அந்த இரண்டுக் காட்டுமிராண்டிகளிடமும் நான் அவனை விட்டுவிட்டு வந்திருந்தேன். அந்த நேரத்தில், அவனையோ அல்லது அவனது தன்னலமற்ற

அன்பையோ, அல்லது நான் இன்று அடைந்திருந்த நிலைக்கு என்னைக் கொண்டு வருவதற்கு அவன் செய்திருந்த தியாகங்களைப் பற்றியோ நான் நினைத்துப் பார்த்திருக்கவில்லை. அவனது அழுகையைக் கேட்டிருந்தும்கூட, நான் அந்த இடத்தைவிட்டு அசையவில்லை. ராமனின் அம்பு, களைத்துப் போயிருந்த அந்த வயோதிகனின் உடலைத் துளைத்தச் சத்தத்தை நான் கேட்டேன். மாரீசன் தனது கடைசிக் கணங்களில்கூட என்னைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தான் என்பதையும் நான் அறிந்தேன். ஆனாலும் நான் அசையவில்லை. லட்சுமணனுக்காக அவன் விடுத்த ஓலம், ராமனின் குரலைப்போலவே இருந்திருந்ததால்தான், ராமனைத் தேடிச் செல்லுமாறு லட்சுமணனை என் மகள் சீதை கட்டாயப்படுத்தியிருந்தாள். அப்போது நான் மாரீசனைப் பற்றிய சிந்தனை ஏதுமின்றி, அவளை இழுத்துக் கொண்டு வேகமாக இலங்கைக்குத் திரும்பினேன். இலங்கைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது நாங்கள் எதிர்கொண்ட சவால்களும், என் மகளை எங்கள் வீட்டிற்குத் திரும்ப அழைத்து வந்து கொண்டிருந்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சியும், மாரீசனின் மரணம் பற்றிய இருண்ட எண்ணங்களை மறக்கடிக்கச் செய்திருந்தன. ஆனால் நான் என் அத்தையின் முகத்தைப் பார்த்தபோது, தோல்வி, குற்ற உணர்வு, என் கையாலாகாத்தனம் ஆகிய அனைத்து உணர்ச்சிகளும் ஒருசேர என்னுள் பொங்கி எழுந்தன. நான் என் அத்தையைக் கட்டிக் கொண்டு, என் அழுகையைக் கட்டுப்படுத்துவதற்காக என் உதடுகளை இறுக்கமாக மூடினேன். அவள் என் கண்களுக்குள் பார்த்துவிட்டு, விஷயத்தைப் புரிந்து கொண்டு, என் கைகளில் நிலை குலைந்து சரிந்தாள்.

நான் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தும், சீதை என் அரண்மனைக்குள் நுழைய மறுத்தாள். மேகநாதன் ஒரு குழந்தையாக இருந்தபோது விளையாடிய ஓர் அசோக மரத்தின் கீழே ஒரு நிழலான மூலையை அவள் தனது இருப்பிடமாக ஆக்கிக் கொண்டாள். அவளை அரண்மனைக்குள் வரவழைக்க முயற்சித்துக் களைத்துப் போன நான், அவளைக் கண்காணிக்கும்படி திரிஜடையிடம் கூறிவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டேன். மாரீசனை நான் ஏன் அந்தக் காட்டுமிராண்டிகளிடம் விட்டுவிட்டு வந்தேன் என்று அவனது மனைவிக்கும், சந்தேகப்பட்ட என் மனைவிக்கும் விளக்கிவிட்டு, ஓர் அறைக்குள் என்னை அடைத்துக் கொண்டு, என் மாமனைக் காப்பாற்ற முடியாமல் போனதால் ஏற்பட்டக் குற்ற உணர்ச்சியை அடக்க முடியாமல், என் பிரியமான நண்பனும் ஆலோசனையாளனுமான அவனது இழப்பிற்காக நான் அழுதேன்.

இரவு கரைந்து கொண்டும் புழுக்கமாகவும் இருந்தது. நான் என் படுக்கையின்மீது புரண்டேன். அன்று அமாவாசை. மண்டோதரியும்

உறங்கவில்லை என்பதை நான் உணர்ந்தேன், நான் அவளுக்கு அருகில் சென்று அவளைத் தொட்டேன், ஆனால் அவள் அசையவில்லை. நான் அவளது பதிலுக்காகக் காத்திருந்தேன். அவள் என்னைக் கட்டியணைத்துக் கொண்டு, நான் செய்திருந்த காரியம் சரியானதுதான் என்று என்னிடம் கூற வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் அவள் துளிகூட அசையவில்லை. எனவே நான் என் கையை மெதுவாக விலக்கிக் கொண்டு வேறு பக்கமாகத் திரும்பினேன்.

திடீரென்று நான் திடுக்கிட்டு விழித்தேன். யாரோ தேம்பி அழுது கொண்டிருந்தது போன்ற சத்தம் எனக்குக் கேட்டது. அது மண்டோதரியிடமிருந்து வரவில்லை. “அது என் கற்பனையா?” நான் சன்னலுருகே சென்று வெளியே எட்டிப் பார்த்தேன். வெளியே கும்மிருட்டாக இருந்தது. தோட்டத்தில் அணைந்து கொண்டிருந்த ஒருசில தீப்பந்தங்கள் அந்த இடத்தை அதிக இருட்டாக ஆக்கின. அப்போது, எந்த முன்னறிவிப்புமின்றி, மழை பெய்யத் துவங்கியது. தீப்பந்தங்கள் அனைத்தும் ஒரு சீற்றக் குரலெழுப்பி அணைந்தன. எங்கோ ஒரு சன்னல் முன்னும் பின்னுமாக ஆடி, ஒரு மந்தமான, சீரான சத்தத்தை எழுப்பியது. அச்சத்தம், வெறுமையாக இருந்த தாழ்வாரங்கள் நெடுகிலும் எதிரொலித்தது.

என்னுள் ஓர் ஆழமான பயம் உருவானது. என் மகள் தன்னந்தனியாக, மழையில் முழுவதுமாக நனைந்து, அந்த இருட்டில் சிரமப்பட்டுக் கொண்டிருப்பாள் என்று நான் கற்பனை செய்தேன். ஆனால் நான் அசையவில்லை. எனக்கு பயமாக இருந்தது. எனக்கு என்மீதே பயமாக இருந்தது. பூமி விண்ணின் கண்ணீரால் குளிப்பாட்டப்பட்டுக் கொண்டு நடுநடுங்கிக் கொண்டிருக்க, வானம் குமுறிக் கொண்டிருக்க, ஜோதிடர்களின் கணிப்பையும் வேதவதியின் சாபத்தையும் பற்றி நினைத்து நடுங்கியவாறு, என் படுக்கையின்மீது நான் தனியாக அமர்ந்தேன்.



# 41

## காவல் நிலையத்தில்

பத்ரன்

இன்று நான் ஒரு வினோதமான காட்சியைப் பார்த்தேன். அரசாங்கத்தில் பெரிய பதவியில் இருந்த யாரிடமேனும் அதைத் தெரிவிக்க வேண்டுமா என்று நான் யோசித்தேன். நேரமாகிக் கொண்டிருந்தது. நான் அன்று முழுவதும் ஊர் சுற்றிவிட்டு, கொழுத்த வணிகர்களின் குதிரை வண்டிகளைக் கழுவிச் சுத்தப்படுத்தியதன் மூலம் நான் சம்பாதித்திருந்த ஒருசில நாணயங்களைக் கள்ளுக் கடையில் செலவழித்தேன். எனக்குப் பசித்தது, ஆனால் சாப்பிடுவதற்கு வீட்டில் எதுவும் இல்லை என்பதை நான் அறிந்தேன். உண்மையில், நான் நல்ல சாப்பாடு சாப்பிட்டுக் கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் ஆகியிருந்தன.

மாரீசனின் பிரம்மாண்டமான இறுதிச் சடங்கை நான் நினைத்துப் பார்த்தேன். துவக்கத்தில், மாரீசன் எப்படி இறந்திருந்தான் என்று எங்கள் யாருக்கும் தெரியவில்லை. அவனுக்கு வயதாகியிருந்தது, ஆனால் நோய்நொடி எதுவும் அவனுக்கு இருக்கவில்லை. அவன் தனது கருப்புக் குதிரையின்மீது சவாரி செய்ததை நான் கடைசியாகப்

பார்த்தபோது, அவன் சுறுசுறுப்பாகத்தான் இருந்தான். அவனது மரணம் எங்கள் அனைவருக்கும் அதிர்ச்சியளித்தது. மாரீசன் தனது முதுமையின் காரணமாக இறந்திருந்ததாகவும், அவனது இறப்பு, இந்தியாவில் அசுர சாம்ராஜ்யத்தின் வட எல்லைகளில் நிகழ்ந்திருந்ததாகவும் அதிகாரபூர்வமான அறிவுப்பு ஒன்று தெரிவித்தது. மாரீசனின் உடல் அங்கேயே தகனம் செய்யப்பட்டிருந்ததாகவும் அந்த அறிவிப்பில் கூறப்பட்டது. அவன் தனது மரணத்திற்கு முன்பு ஏன் அவ்வளவு தூரம் சென்றான், எதற்காகச் சென்றான் என்பது இன்னொரு மர்மமான விஷயம். அவன் இறப்பதற்கு முந்தைய நாள்தான் மக்கள் அவனைப் பார்த்திருந்தனர். அவ்வளவு அதிக தூரத்தை ஒருவனால் அவ்வளவு வேகமாகச் சென்றடைவது எவனொருவனுக்கும் இயலாத காரியம். மயனின் பறக்கும் இயந்திரத்தைப் பற்றிய பேச்சு எழுந்தது. பேரரசன் தனது இரும்புப் பறவையில் மாரீசனுடன் வடக்கு நோக்கிப் பறந்து சென்றதைத் தாங்கள் பார்த்திருந்ததாகச் சிலர் கூறினர். ஆனால் அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தவில்லை. அரண்மனையில் அன்று ஏழைகளுக்கு நல்ல சாப்பாடு போடப்படும் என்றும், புதிய ஆடைகள் வழங்கப்படும் என்றும் நாங்கள் கேள்விப்பட்டிருந்ததால், அந்தக் கிசுகிசுப்புகளில் கலந்து கொள்ள எனக்கும் என் மனைவிக்கும் நேரம் இருக்கவில்லை. நாங்கள் இருவரும் அரண்மனையை நோக்கி விரைந்தோம்.

அரண்மனைக்கு இட்டுச் சென்ற தெருக்கள் அனைத்திலும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. நான் அரண்மனையை நெருங்கியபோது, அங்கு ஏற்கனவே ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்தது. இடத்திற்காக மக்கள் ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளினர். காதைச் செவிடாக்கும் கூச்சல் அங்கு எழுந்தது. வசவுகள் வேகமாகவும் கோபத்தோடும் அள்ளி வீசப்பட்டன. கூட்டம் முண்டியடித்தது, இடித்துத் தள்ளியது, கால்களால் மிதித்தது. உடல்கள் வியர்வையில் குளித்திருக்க, கால்களில் மண் அப்பியிருக்க, குடல்கள் புழுதியால் நிரம்பியிருக்க, கூட்டம் அங்குலம் அங்குலமாக முன்னேறியது. அங்கு வந்த இன்னும் அதிகமான மக்கள், அவர்களைப் பின்னாலிருந்து தள்ளினர். சூரியன் எள்ளளவுகூடக் கருணை காட்டவில்லை. பசியோடு இருந்த ஆயிரக்கணக்கான மக்களின் வியர்வை, சிறுநீர், மற்றும் உடலின் துர்நாற்றம் மூச்சுத் திணறடிப்பதாக இருந்தது. நான் என் மனைவியின் இடது மணிக்கட்டை இறுக்கமாகப் பிடித்திருந்தேன், ஆனால் வேறு சில கைகள் அவளைச் சீண்டிக் கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. அவள் நெளிந்தாள், வளைந்தாள், ஆனால் அந்தக் கூட்டத்தில் இருந்த பிற பெண்களைப்போலவே, அதைப் பொறுத்துக் கொள்வதைத் தவிர

அவளுக்கு வேறு வழி இருக்கவில்லை. இலவசப் பொருட்களுக்காக இந்தத் தள்ளல்களையும் மிதிபாடுகளையும் உடல் தீண்டல்களையும் பொறுத்துக் கொண்டுதான் ஆக வேண்டியிருந்தது. அது ஒரு பிரச்சனையாக இருக்கவில்லை. நாங்கள் முன்னால் சென்றோம்.

அரண்மனையை நாங்கள் நெருங்கியபோது, எங்களுக்குப் பின்னால் இருந்தவர்கள் எங்களை இன்னும் வேகமாகத் தள்ளினார்கள். நானும் மற்றவர்களை எட்டி உதைத்துக் கொண்டும் இடித்துக் கொண்டும் முன்னால் சென்று, சண்டையிட்டுக் கொண்டிருந்த மற்ற ஆண்கள் மற்றும் பெண்களின் தலைகளுக்கு மேலாக வினியோகிக்கப்பட்டுக் கொண்டிருந்த, புதிய ஆடைகள் அடங்கிய பொட்டலங்களில் ஒன்றைக் கைப்பற்றினேன். அதை என் மனைவியிடம் கொடுத்துவிட்டு, என் பங்கிற்காக மீண்டும் அதே சுழற்சியில் ஈடுபட்டேன். ஒரு வீரன் என்னை விலக்கித் தள்ளியதில் நான் நிலை தடுமாறிக் கீழே விழுந்தேன். கூட்டம் என்னை மிதித்துப் புரட்டியது. சபித்தவாறே, அங்கிருந்து நான் எப்படியோ என்னை விடுவித்துக் கொண்டேன். எங்களுக்கு ஒரே ஒரு பொட்டலம் மட்டுமே கிடைத்திருந்தது குறித்து எனக்கு ஏமாற்றமாக இருந்தது. இறந்து போன தனது மாமனின் நினைவாக அரசன் கொடுத்துக் கொண்டிருந்த புதையலைப் பெறுவதற்காக முண்டியடித்துக் கொண்டிருந்த ஏழை மக்களை விலக்கித் தள்ளிக் கொண்டு நாங்கள் வெளியேறினோம். அப்போது, அரசன் ஒவ்வொரு நாளும் ஒரு மாமனை இழந்தால் நன்றாக இருக்கும் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

பிறகு இலவசச் சாப்பாட்டிற்காக நாங்கள் விரைய வேண்டியிருந்தது. ராஜ நெடுஞ்சாலையின் இருபுறமும் குழிகள் பறிக்கப்பட்டு, அவற்றுக்குள் வாழை இலைகள் வைக்கப்பட்டிருந்தன. பிறகு, இந்தத் தற்காலிகக் கலயங்களில் கஞ்சி ஊற்றப்பட்டது. என்னைப் போன்ற ஆயிரக்கணக்கான மக்கள் இதை மிகவும் ஆசையோடு ருசித்துச் சாப்பிட்டனர். நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, இலங்கையின் மேட்டுக்குடியினரையும் இந்தியாவிலிருந்து ஒருசிலரையும் அரண்மனைக்குச் சுமந்து சென்ற குதிரை வண்டிகளின் வேகமான ஓட்டத்திலிருந்து கிளம்பிய புழுதியும் மண்ணும் எங்கள் கலயங்களுக்குள் விழுந்தன. ஈக்கள் எல்லா இடங்களிலும் பறந்தன. சில தெரு நாய்களும் எங்களுடைய சாப்பாட்டில் பங்கு போட முயன்றன. மாலையில், புதிய கள் நிரப்பப்பட்ட மரப் பீப்பாய்களை அரண்மனைச் சேவகர்கள் வெளியே உருட்டிக் கொண்டு வந்தனர். இன்னொரு காட்டுமிராண்டித்தனமான மோதல் துவங்கியது. நள்ளிரவிற்குள் ஆண் பெண் என்ற பாகுபாடின்றி,

நாங்கள் அனைவரும் குடித்துக் களித்திருந்தோம். பல்வேறு இடங்களில் ஏற்பட்டக் கைகலப்புகளில் நான்கு பேர் கொல்லப்பட்டனர். ஆனால் அச்செய்தி மறுநாள் காலையில்தான் எங்களுக்குத் தெரிய வந்தது. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் சூழ்நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்தது. நான் சம்பாதித்தப் பணம் ஒரு வாரத்தில் செலவழிந்தது. அதில் பெருமளவு, கள்ளுக்கடையில் போனது. ஆனால் மாலா சிறிதளவு பணத்தை எனக்குத் தெரியாமல் சேமித்திருந்தாள். அது எனக்குத் தெரிய வந்தபோது, நான் அவளைத் துவைத்தெடுத்தேன். அதை அவளிடமிருந்து பிடுங்கிக் கொண்டு மீண்டும் கள்ளுக்கடைக்கு விரைந்தேன். நான் கொண்டாடிய கடைசி நாள் அதுதான்.

அடுத்த நாள் காலையில், பசி எங்களை மீண்டும் துரத்தியது. அவ்வப்போது எனக்கு ஒருசில எடுபிடி வேலைகள் கிடைத்தபோது நாங்கள் பசியாறினோம். நாங்கள் ஆதரவற்றவர்களாக இருந்தோம். உண்மை மெல்ல மெல்ல உள்ளிறங்கியது. ஒருவருடைய முந்தைய பிறவி குறித்தும் கர்மவினை குறித்தும் பிராமணர்கள் கூறியதில் ஓரளவுக்கு உண்மை இருக்கக்கூடும் என்று நான் நினைத்தேன். எங்களுடைய கடந்தகாலப் பாவங்களுக்கு நாங்கள் இந்தப் பிறவியில் விலை கொடுத்துக் கொண்டிருந்தோம். பெரும்பாலான மக்கள் ஏழைகளாக இருந்தனர். எனவே, முந்தைய பிறவிகளில் ஏராளமான பாவிகள் இருந்திருக்க வேண்டும். ஆனால் இதில் விதிவிலக்குகளும் இருந்தன. வணிக வகுப்பினர், அதிகார வர்க்கத்தினர், அரசாங்க ஊழியர்கள், நடிகர்கள், இசைக்கலைஞர்கள் ஆகியோர் நாளுக்கு நாள் பருத்துக் கொழுத்துக் கொண்டே போனார்கள். ஆங்காங்கே மாளிகைகள் முளைத்துக் கொண்டிருந்தன. பகட்டான ஆடைகளையும் நவீனக் காலணிகளையும் விற்றக் கடைகளுக்கு, ஜொலிப்பான குதிரை வண்டிகளில் வந்த அழகான மக்கள் அடிக்கடி விஜயம் செய்தனர். அவர்களுடைய வீடுகளுக்கு உண்மையான கூரைகள் இருந்தன. அவர்கள் உட்கார்வதற்கு முறையான அறைகலன்களும், மேற்கிலிருந்த தொலைதூர நாடுகளிலிருந்து வரவழைக்கப்பட்டக் கம்பளங்களும் இருந்தன. அந்தக் கம்பளங்களின் விலைக்கு ஈடான பணத்தைக் கொண்டு ஓர் ஒட்டுமொத்தக் கிராமத்திற்கும் ஒரு வருடத்திற்கு உணவளிக்க முடியும். பணக்காரர்களின் வாரிசுகளுக்கு மட்டுமே பாடம் கற்றுக் கொடுத்த குருமார்களிடம் சாமர்த்தியமான குழந்தைகள் படிக்கச் சென்றதை நாங்கள் பார்த்தோம். நகரில் பல நாடக அரங்குகளும் இருந்தன. ஆனால் நாங்கள் அவற்றுக்கு அருகே செல்ல முயன்றபோது, காவலாளிகள் எங்களை விரட்டியடித்தனர்.

எழுதவும் படிக்கவும் முன்பொரு முறை எனக்குத் தெரிந்திருந்தது.

நான் முறையாகப் பயிற்றுவிக்கப்பட்ட ஒரு வீரனும்கூட. அல்லது, இவை அனைத்தும், கடந்தகாலப் பெருமைகளையும் துணிச்சலான காரியங்களையும் வீணாகக் கற்பனை செய்து கொண்டிருந்த ஒரு வயதான மனிதனின் மாயைகளா? மெலிந்த உடலுடனும், வெடிப்புடன்கூடிய தோலுடனும், வழுக்கைத் தலையுடனும், ஒட்டிப் போன கன்னங்களுடனும் இப்போது நான் இருந்த விதத்தில் யாரேனும் என்னைப் பார்த்தால், முன்பொரு காலத்தில் நான் ஒரு போர்வீரனாக இருந்தேன் என்று நம்ப மாட்டார்கள். என்னால் இப்போது படிக்க முடியவில்லை. அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தவில்லை. செய்வதற்குப் பெரிதாக ஒன்றும் இருக்கவில்லை. ஒருநாள் என்னையும் நான்கு பேர் சுமந்து சென்று எரிப்பார்கள். அந்தப் பயணத்திற்காக நான் காத்திருக்கவில்லை என்பது வேறு விஷயம். இறப்பதற்கான வயது இன்னும் எனக்கு வரவில்லை என்று கூறி என் மனைவி என்னை ஆறுதல்படுத்த வேண்டும் என்று நான் விரும்பினேன். சமீப காலமாக, என்னுடைய நல்லொழுக்கம் குறித்து நான் கூறிய எதுவொன்றுக்கும் என் மனைவி பதிலளிக்க மறுத்ததை நான் கண்டேன். ஒருவேளை நான் இறந்து போக வேண்டும் என்று அவள் விரும்பினாள்போலும். அவள்மீதும் குறைகூற முடியாது. ஆனால் எனக்கு பயமாக இருந்தது. நான் என்றென்றும் நிலைத்து வாழ விரும்பினேன்.

நான் என் வீட்டிற்குத் திரும்பி நடந்தபோது, தெருவில் பல வண்ணமயமான நிழல்களையும் பிரதிபலிப்புகளையும் உருவாக்கிய ஒளிமயமான விளக்குகளை ஆச்சரியத்தோடு பார்த்தேன். ஓர் அழகான பெண் என்னைக் கடந்து சென்றபோது, அவள் தன் உடலின்மீது பூசியிருந்த வாசனைத் திரவியத்தை நான் முகர்ந்தேன். இசை மென்மையாகத் தவழ்ந்து வந்தது. ஒருசில குடும்பங்கள், நடைபாதையில் தங்கள் படுக்கைகளை விரித்துக் கொண்டிருந்தனர். பாவப்பட்ட ஜீவன்கள்! அவர்கள் கிராமத்திலிருந்தோ அல்லது இந்தியாவிலிருந்தோ வந்திருக்க வேண்டும். ஆனால் விரைவில் அவர்கள் அங்கிருந்து துரத்தியடிக்கப்படுவார்கள். இந்த அழுக்கு மூட்டைகள் தூங்குவதற்காக அந்த அழகான நடைபாதைகள் அமைக்கப்பட்டிருக்கவில்லை. நான் சந்தைகளைக் கடந்து, ஆற்றின் பக்கத்தில் இருந்த என் வீட்டை நோக்கி நடந்தேன். ஓராயிரம் மசாலாக்களின் கார்ப்பு நெடி என் மூக்கைத் தாக்கியது. கடைக்காரர்கள் தங்கள் கடைகளை மூடிக் கொண்டிருந்தனர். சில குண்டோதரர்கள் தங்கள் பணத்தை எண்ணிக் கொண்டிருந்தனர். அப்படிப்பட்டக் கடைகளுக்கு வெளியே நிலை கொண்டிருந்த முரடர்களை நேருக்கு நேர் பார்க்காமல் நான் அக்கடைகளை விரைவாகக் கடந்து சென்றபோது, அவர்கள் என்னைச்

சந்தேகத்தோடு பார்த்தனர். சந்தையின் முடிவில் இடது பக்கமாக நான் திரும்பினேன். அழுகிய காய்கறிகளும் மீன்களும் அந்த மூலையில் நாற்றமடித்தன. ஒருசில நாய்கள் அந்தக் குப்பையைக் கிளறிக் கொண்டிருந்தன. அவற்றில் ஒன்று என்னைப் பார்த்துத் தொடர்ந்து குரைத்தது. ஒரு கல்லை எடுப்பதற்காக நான் குனிந்தபோது, அந்த நாய் தனது வாலைத் தனது கால்களுக்கு இடையே வைத்துக் கொண்டு என்னைத் தாண்டி வேகமாக ஓடியது.

தூரத்தில், ராவணனின் கோட்டை, பிரம்மாண்டமானதாகவும் ஊடுருவ முடியாததுபோலவும் தோன்றியது. அதிகாயன் தனது எஜமானனான இளவரசன் மேகநாதனுடன் இருக்கக்கூடும். முட்டாள்! நான் அவனைப் பார்த்துக் கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் கடந்திருந்தது. அவன் உண்மையில் அரண்மனைக்குச் சொந்தம் என்பதையும், நான் அவனது பராமரிப்பாளன் மட்டுமே என்பதையும் நினைத்தபோது எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது. நான் பூரண நதிக்கரையில் இருந்த எனது கிராமத்திலேயே தங்கியிருந்து, என் மனைவியும் மகளும் உயிரோடு இருந்திருந்தால், அந்த தேவச் சண்டாளர்கள் மட்டும் என் கிராமத்தைத் தாக்காமல் இருந்திருந்தால், என் வாழ்க்கை எப்படி இருந்திருக்கும்? நிச்சயமாக அது நல்லவிதமாகவும் வித்தியாசமாகவும் இருந்திருக்கும். நான் ஓர் அரசனின் கனவுக்காகப் போரிட்டு, ராவணனைப் போன்ற மூர்க்கர்கள் செல்வத்திலும் பெருமையிலும் அதிகாரத்திலும் திளைப்பதற்கு என் வாழ்வின் பொன்னான பகுதிகளைக் கொடுத்திருந்தேன். என் வாழ்வில் நான் பல விஷயங்கள் குறித்துப் பின்வருத்தம் கொண்டிருந்தேன். என் வாழ்க்கை தனக்கென்று ஒரு போக்கைக் கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. என் மகனாவது வயிறாரச் சாப்பிட்டான். அவன் ஓர் இளவரசனைப்போல வாழ்ந்தான். ஆனால் அந்த எண்ணம் எனக்கு ஆறுதலளிக்கவில்லை. “ஏன் அவனுக்கு மட்டும் இந்த உபசரிப்பு? அவர்கள் என்னையும் ஏன் அவ்வாறு நடத்தக்கூடாது?” எனக்கு வெறுப்பாக இருந்தது. நான் மீண்டும் அந்தப் பிரகாசமான மாளிகையைப் பார்த்தேன். அப்போதுதான் அந்த வினோதமான காட்சியை நான் கண்டேன். நான் அங்கேயே நின்று கவனமாக உற்றுப் பார்த்தேன். துவக்கத்தில் அது என்னவென்று என்னால் கூற முடியவில்லை. ஏதோ ஒன்று அந்தக் கோட்டையின்மீது ஏறிக் கொண்டிருந்தது. அது ஒரு திருடனாக இருக்குமோ? பேராற்றல் வாய்ந்த அசுரப் பேரரசரின் அரண்மனைக்குள் அத்துமீறி நுழைவதற்கு எந்த மடையனுக்கு அவ்வளவு துணிச்சல் இருக்கும்? அவன் பிடிபட்டுவிட்டால், உயிரோடு தோலுறிக்கப்படுவான். அங்கு வேறு ஏதேனும் அசைவு தென்பட்டதா என்று பார்ப்பதற்காக நான் ஒருசில

நிமிடங்கள் காத்திருந்தேன், ஆனால் எல்லாம் அமைதியாக இருந்தது. நான் குடித்திருந்த கள்ளு, நான் நினைத்திருந்ததைவிட அதிக வீரியமாக இருந்ததுபோலும். நான் என் கண்களை அந்தக் கோட்டையிலிருந்து அகற்றி, எனது பயனற்ற வாழ்க்கைக்குத் திரும்பிச் செல்லவிருந்த நேரத்தில், நான் அவனைப் பார்த்தேன்.

ஒளிர்ந்து கொண்டிருந்த அரண்மனையின் பின்புலத்திற்கு எதிராக அவனது உருவம் ஒரு நிழல் வடிவத் தோற்றம்போலத் தெரிந்தது. என்னால் அவனது முகத்தைப் பார்க்க முடியவில்லை. ஆனால் அவன் நல்ல வாட்டசாட்டமாக இருந்தான். கோட்டையின் உச்சியில் நின்று, அவன் அந்த அரண்மனையை ஆய்வு செய்தான். அவனது தோளில் ஒரு பெரிய கதாயுதம் இருந்தது. "யார் அவன்?" என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன், பிறகு திடுக்கிட்டேன். மாபெரும் வானர அரசனான வாலி என் நினைவிற்கு வந்தான். கோட்டையின் மேலே நின்று கொண்டிருந்த அந்த மனிதன் வாலியைப்போலவே இருந்தான். ஆனால் வானர அரசன் ஏன் ராவணனின் அரண்மனைக்குள் திருட்டுத்தனமாக நுழைய வேண்டும்? சில நாட்களுக்கு முன்பு, ஏதோ ஒரு தேவ வேடன் ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்து நின்று, வஞ்சகமாக வாலியைக் கொன்றிருந்ததாக நிலவிய ஒரு வதந்தி என் நினைவிற்கு வந்தது. கோட்டையின் மேலே நின்றவன் தன் தலையைத் திருப்பியபோது, அவன் அணிந்திருந்த விலையுயர்ந்த காதணியிலிருந்து ஒளி பிரதிபலித்தது. "இல்லை, இவன் வாலி இல்லை!" அப்போது, வானரர்களுக்கே உரிய வேகத்துடன் அவன் கீழே குதித்தான். அவன் குதித்ததில், மரங்களின் உச்சி பலமாகக் குலுங்கியதை நான் பார்த்தேன். நான் உறைந்து நின்றபோது வெறுமை என்னை வெறித்துப் பார்த்தது. சற்று முன் யாரோ ராவணனின் அரண்மனைக்குள் நுழைந்திருந்தனர். நான் குழம்பிப் போய் நின்றேன். "நான் யாரிடமாவது இந்த விஷயத்தைத் தெரிவிக்க வேண்டுமா? அல்லது நேராக என் வீட்டிற்குச் சென்று உறங்க வேண்டுமா?" யாரேனும் அரசனின் அரண்மனைக்குள் நுழைந்திருந்தால், அது அரசனின் பிரச்சனை. நான் ஏன் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? ஆனால் நெடுங்காலத்திற்கு முன்பு தேவர்கள் என் வீட்டிற்குள் அத்துமீறி நுழைந்த காட்சி அப்போது என் நினைவிற்கு வந்ததால், நான் வந்திருந்த வழியாகத் திரும்பி ஓடினேன். இது குறித்து ஏதேனும் நடவடிக்கை எடுக்கக்கூடிய ஒருவனை நான் கண்டுபிடித்தாக வேண்டியிருந்தது. மூலையில் ஆபத்து ஒளிந்து கொண்டிருந்தது.

ராஜ வீதியில் இருந்த காவல் நிலையத்தை நான் சென்றடைந்தபோது, ஒரு நாயைப்போல எனக்கு மூச்சிறைத்தது. நான் அந்தக் காவல் நிலையத்தை நெருங்கியபோது சற்றுத் தயங்கினேன்.

உள்ளே ஒரு தீப்பந்தம் எரிந்து கொண்டிருந்தது. நான்கு காவலர்கள் அங்கு ஒன்றாக அமர்ந்து, சொக்கட்டான் விளையாட்டில் மூழ்கியிருந்தனர். பருத்த உடலைக் கொண்ட ஒரு காவலன் தன் கால்கள் இரண்டையும் மேசையின்மீது நீட்டித் தூங்கிக் கொண்டிருந்தான். மூலையில் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த ஒரு தீப்பந்தத்தைச் சுற்றி விட்டில்பூச்சிகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

“ஐயா,” என்று நான் அழைத்தேன். உள்ளேயிருந்து எந்த பதிலும் வரவில்லை. “ஐயா,” என்று நான் மீண்டும் அழைத்தேன். அக்காவலர்களில் ஒருவன் தன் தலையை உயர்த்திப் பார்த்தான். அவனது கண்கள் ஆச்சரியத்தில் மிகப் பெரிதாக விரிந்தன. என் கால்கள் நடுங்கின. பயத்தில் நான் கூனிக் குறுகினேன். “நான் ஒரு குற்றவாளி அல்ல!” என்று என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன். ஆனால் நான் ஓர் ஏழை. அதுவே ஒரு மிகப் பெரிய குற்றம்தான்.

“உனக்கு என்ன வேண்டும்?” என்று அவன் என்னைப் பார்த்துக் குரைத்தான். எனது குறுக்கீடு அவனுக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருந்தது வெளிப்படையாகத் தெரிந்தது.

“ஐயா, நான் ஒருவனைப் பார்த்தேன் . . .”

“நானும் கூடத்தான் . . .” என்று கூறிவிட்டு, அவன் தனது பரிதாபமான நகைச்சுவை உணர்வைக் கண்டு தானே சிரித்துக் கொண்டான். மற்றவர்களும் அதில் சேர்ந்து கொண்டனர். தலைமைக் காவலன் தன் கண்களைத் திறந்து, ஒருசில முறை அவற்றைச் சிமிட்டிவிட்டு மீண்டும் தூங்கிவிட்டான். நான் அங்கிருந்து திரும்பிப் போக விரும்பினேன். அரசன் தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ளட்டும். எனவே நான் அங்கிருந்து வெளியே நடக்கத் துவங்கினேன். “ஏய்! இங்கு வந்து ஏதோ ஒரு முட்டாள்தனமான கதையைக் கூறிவிட்டு, பிறகு திரும்பி நடப்பதற்கு உனக்கு என்ன துணிச்சல்?” என்று அந்தக் காவலாளி என்னைப் பார்த்துக் கத்தினான்.

“ஐயா, நான் உங்களைக் கேலி செய்யவில்லை.” நான் சிறிது மதிப்பாகத் தோன்ற முயற்சித்தேன்.

“நீ என்னை எதிர்த்துப் பேசுகிறாயா?” என்று அவன் கேட்டான். அடுத்து நிகழவிருந்ததை நான் எதிர்பார்க்கவில்லை. அவன் ஒரு கணத்தில் என்மீது பாய்ந்து, என் கால்களுக்கு இடையே ஓங்கி மிதித்தான். நான் நிலைகுலைந்து விழுந்தேன். கோபம், அவமானம், வலி ஆகியவை ஒருசேர என் கண்களைக் குளமாக்கின. என் கண்களில் தேங்கிய கண்ணீர் என் பார்வையைத் தடுத்தது.

மற்றக் காவலாளிகளும் விளையாட்டை நிறுத்திவிட்டு எங்களை நோக்கி வந்தனர். விளையாட்டைவிட அதிக சுவாரசியமான ஒன்று என்

வடிவில் அவர்களுக்குக் கிடைத்திருந்தது. "பிச்சைக்கார நாய்! திருட்டுக் கழுதை! இந்த நேரத்தில் ராஜ வீதியில் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

நான் அடுத்த அடியைத் தடுக்க முயற்சித்தேன், ஆனால் நான் மிகவும் பலவீனமாக இருந்தேன். "ஐயா, ஐயா, தயவு செய்து நான் கூறுவதைக் காதுகொடுத்துக் கேளுங்கள். யாரோ அரண்மனைக்குள் அத்துமீறி நுழைந்துள்ளனர்," என்று நான் கூறியபோது என் முகத்தின்மீது இறங்கிய ஒரு குத்து, தரையில் என்னை மல்லாக்க விழ வைத்தது. அந்தக் காவலர்கள் என்னை மிதித்தனர், உதைத்தனர், புரட்டி எடுத்தனர். நான் தரையில் பரிதாபமாகத் தவழ்ந்தேன். அப்போது திடீரென்று அவர்கள் தங்கள் தாக்குதலை நிறுத்தினர். நான் என் தலையை உயர்த்திப் பார்த்தபோது, தலைமைக் காவலன் எனக்கு மேலாக நின்று கொண்டிருந்தான். அவன் என் தலையில் எஞ்சியிருந்த முடியைப் பிடித்துத் தூக்கினான். நான் அதிர்ச்சியில் உறைந்தேன். பிறகு அவன் என்னைத் தனது மேசையை நோக்கித் தள்ளியபோது, நான் நிலை தடுமாறிக் கீழே விழுந்தேன். நான் நிமிர்ந்து பார்த்தபோது, அவனது கனத்த உடல் மேசையின்மீது நிலை கொண்டிருந்தது. அவனது எடை தாங்காமல் அதில் ஒரு கிறீச்சொலி எழுந்தது, ஆனால் அந்தச் சத்தம் எனக்கு ஆறுதலளிப்பதாக இருந்தது. ஒருவேளை அந்த மேசை உடையக்கூடும்.

"என்ன விஷயம் என்று கூறு," என்று அவன் அதிகாரமாகக் கேட்டான். நான் மௌனமாக இருந்தேன். எனவே அவன் மீண்டும் என்னை எட்டி உதைத்தான். அப்போது, நான் பார்த்திருந்ததை அவனிடம் கூறினேன். அவன் கோபத்தில் முகஞ்சுளித்தான். அவன் எதையோ சவைத்துக் கொண்டே சிந்தனையில் மூழ்கினான். பிறகு அங்கிருந்த நால்வரில் ஒருவனிடம், "நீ போய் அரண்மனையின் தலைமைக் காவலனிடம் விஷயத்தைக் கூறு," என்று கூறினான். பிறகு, ஏதோ யோசித்தவனாக, "இவனை அடைத்து வை. இவன் பன்றிபோலக் குடித்திருக்கிறான்," என்று சேர்த்துக் கூறினான்.

மற்ற இரண்டு காவலர்களும் என்னைத் தரதரவென்று இழுத்துச் சென்று, மூலையில் இருந்த ஓர் இருண்ட சிறைக்குள் தள்ளினர். நான் மூலையில் சென்று விழுந்தேன். சிறைக் கதவை மூடுவது பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. அவர்கள் தங்கள் விளையாட்டைத் தொடர்வதற்குச் சென்றனர். அரண்மனையின் தலைமைக் காவலனிடம் விஷயத்தைக் கூறி வரும்படி உத்தரவிடப்பட்டக் காவலாளி என்னைச் சபித்துக் கொண்டே அரண்மனைக் காவலர்களைத் தேடிப் புறப்பட்டான். நான் இவ்வளவு தூரம் மனசாட்சிக்குக் கட்டுப்பட்டு

நடந்து கொண்டிருந்ததை நினைத்து என்னை நானே சபித்தேன். “அரண்மனை விவகாரம் அரசனின் தலைவலி. இதில் நான் ஏன் குறுக்கிட வேண்டும்?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். நான் ஒரு முட்டாள். நான் இருந்த சிறையின் இன்னொரு மூலையில் ஏதோ ஒரு குற்றவாளி சுருண்டு கிடந்தான். அந்த குண்டுக் காவலன் மீண்டும் தன் நாற்காலியில் அமர்ந்து குறட்டைவிடத் துவங்கியிருந்தான். என் உடல் முழுவதும் வலியால் துடித்தது. நான் ஒரு வடிகட்டிய முட்டாள்! என் தலைவிதியையும், உணர்ச்சிவசப்பட்டு நான் செயல்பட்ட விதத்தையும் சபித்தபடி, நான் மெதுவாகத் தூங்கிப் போனேன்.

நான் கண்விழித்தபோது, இலங்கை எரிந்து கொண்டிருந்தது.



# 42

## மரணத்தின் தூதுவன்

ராவணன்

என் தோட்டத்திலிருந்து வந்த அலறல்களும் குழப்பச் சத்தமும் என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பின. மக்கள் இலக்கின்றி அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தனர். காவலாளிகள் கத்திக் கொண்டும் ஒருவரையொருவர் சபித்துக் கொண்டும் இருந்தனர். கொழுந்துவிட்டெரிந்த நூற்றுக்கணக்கான தீப்பந்தங்கள் அரண்மனைக்கு ஒளியூட்டிக் கொண்டிருந்தன. மண்டோதரியும் கண்விழித்துக் குழப்பத்துடன் என்னைப் பார்த்தாள். நான் என் அறைக் கதவைத் திறந்தபோது, வெளியே இருந்த காவலர்கள், தாழ்வாரச் சுவரின்மீது சாய்ந்து கொண்டு எதையோ கத்திக் கொண்டிருந்தனர். நான் அவர்களை நெருங்கியபோது, அவர்கள் தங்களை நிமிர்த்திக் கொண்டு என்னைப் பணிந்து வணங்கினர்.

“என்ன சத்தம் இது?”

ஒரு மூத்தக் காவலாளி எச்சரிக்கையோடு ஓரடி முன்னால் வந்து நன்றாகக் குனிந்து பணிந்தான். “அரசே, ஒரு குரங்கு மனிதன் நமது

அரசத் தோட்டங்களுக்குள் அத்துமீறி நுழைந்து, அந்த தேவப் பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தான். நமது காவலர்களில் சிலர் அவனைச் சிறைபிடிக்க முயன்றபோது, அவன் அவர்களோடு சண்டையிட்டான். அவன் இரண்டு மூன்று பேரைக் கொல்லவும் செய்தான். சிலருக்குப் படுகாயம் ஏற்பட்டுள்ளது. அவன் இப்போது மரங்களுக்கிடையே காணாமல் போய்விட்டான்."

நான் அதிர்ச்சியடைந்தேன். குரங்கு மனிதன் எனது அரண்மனைத் தோட்டங்களுக்குள் புகுவது என்பது என் கற்பனைக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. நான் என் மகள் சீதையைப் பற்றிக் கவலைப்பட்டேன். எனது காவலர்கள் அவளைக் கண்காணித்துக் கொண்டிருந்தாலும்கூட, அசோக மரத்தின் அடியில், எளிதில் தாக்குதலுக்கு ஆளாகக்கூடிய நிலையில் அவள் இருந்தாள். ஆனாலும் நான் சற்று அசௌகரியமாக உணர்ந்தேன். வானரர்களின் அரசனான வாலி, தேவ இளவரசன் ராமனால் வஞ்சகமான முறையில் கொல்லப்பட்டிருந்தான். ஒழுங்கங்கெட்ட, கெடுநோக்குக் கொண்ட, வாலியின் இளைய சகோதரனான சுக்ரீவன் இப்போது வானரர்களை ஆண்டான். என் மருமகன் ராமன், தவறான வழியில் வாலியின் அதிகாரத்தைக் கைப்பற்றிய விதத்தை நினைத்தாலே அருவருப்பாக இருக்கிறது. அந்தக் கோழை, ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து நின்று வாலியின் இதயத்தைத் தனது அம்பால் துளைத்துக் கொன்றான். சுக்ரீவன் தனது சகோதரன் வாலியுடன் ஒற்றைக்கு ஒற்றைச் சண்டயில் ஈடுபட்டுத் தோல்வியைத் தழுவிக் கொண்டிருந்த நேரத்தில் ராமன் வஞ்சகமாக இதைத் செய்திருந்தான் என்பது எனக்கு மேலும் அதிகக் கோபத்தை ஏற்படுத்தியது. "என் மருமகன் எத்தகைய ஒழுக்கநெறியையும் அறத்தையும் கடைபிடித்தான்?" தற்போதைய வானர அரசனான சுக்ரீவனை அவனது பதவியிலிருந்து தூக்கியெறிந்துவிட்டு, என் நண்பனின் மரணத்திற்காக அவனைப் பழி வாங்குவதற்கு நான் பல முறை உந்தப்பட்டிருந்தேன். வானரர்கள்மீது தாக்குதல் நடத்துமாறு நான் என் வீரர்களுக்கும் எனது கடற்படைக்கும் உத்தரவுகூடப் பிறப்பித்திருந்தேன். ஆனால் தெற்குக் கடல்களில் தொடங்கி வடக்கில் இமயம்வரை ஒட்டுமொத்த இந்தியத் துணைக்கண்டத்தையும் என் மகன் வெற்றி கொண்ட பிறகு, போர் குறித்த எனது பசி குறைந்து போனது. மேலும், சுக்ரீவன் மேகநாதனுக்குப் பாராட்டுத் தெரிவிக்க ஒப்புக் கொண்டிருந்தான். மழைக்காலமும் தொடங்கியிருந்தது. எனவே, படையெடுப்புப் பற்றிய திட்டத்தை நாங்கள் ஒத்தி வைத்தோம்.

ஆனால் மழைக்காலம் துவங்கிய பிறகு, அந்தக் கயவன் சுக்ரீவன்,

மீண்டும் தனது ஒழுங்கங்கெட்ட வாழ்க்கைக்குத் திரும்பினான். ஒழுங்கங்கெட்ட வானரர்களைக் கொண்ட ஒரு படையின் துணையுடன் ராமன் எந்தவொரு முட்டாள்தனமான சாகசத்தையும் துவக்க மாட்டான் என்பதில் நான் உறுதியாக இருந்தேன். நான் சற்றுக் கவனக்குறைவாக இருந்துவிட்டேன் என்று நினைக்கிறேன். என் தோட்டத்தில் புகுந்திருந்த குரங்கு மனிதன் அதற்கான நல்ல ஆதாரம். எனக்கு முன்னோக்குப் பார்வை இல்லாமல் போனது குறித்து என்னை நானே நொந்து கொண்டேன்.

இது ஒரு நெருக்கடி நிலையாக இருந்தது. உயர்மட்டக் குழு ஒன்றுகூடியாக வேண்டியிருந்தது. கதவுகளையும் சன்னல்களையும் மூடிக் கொள்ளுமாறு என் மனைவி மண்டோதரியிடம் நான் கூறினேன். வழக்கத்திற்கு மாறான எனது எச்சரிக்கையகைக் கண்டு அவள் கவலைப்பட்டாள். ஆனால் நான் அவளைக் கண்டுகொள்ளாமல், வெளியே சென்று என் அறைக் கதவைப் படாரென்று ஓங்கி மூடினேன். நான் மேகநாதனின் அறையை நோக்கி நடந்தேன், ஆனால் அந்த அறைக் கதவு திறந்திருந்ததைக் கண்டேன். அரசவை பிரகாசமாக ஒளியூட்டப்பட்டிருந்தது. காவலாளிகள் தத்தம் இடங்களில் கவனத்துடன் இருந்தனர். எனது மந்திரிகள் உற்சாகமாக ஒருவரோடு ஒருவர் அரட்டையடித்தபடி நின்றனர்.

"இளவரசன் மேகநாதன் எங்கே?" என்று கேட்டுவிட்டு, என் மகனின் வசீகரமான முகத்தை நான் தேடினேன்.

"அரசே, வடக்கில் அவன் தனது தேடல் குழுவை வழிநடத்திக் கொண்டிருக்கிறான்," என்று பிரஹஸ்தன் பதிலளித்தான்.

"பாதுகாப்பை மீறி எப்படி ஒருவன் உள்ளே நுழைந்தான்?" என்று நான் சீறினேன். நான் பேசப் பேச, என் கோபம் மீண்டும் விசுவரூபம் எடுத்தது. நான் என் முஷ்டியை என் உள்ளங்கைக்குள் ஓங்கிக் குத்தியபோது, அங்கு முழு அமைதி நிலவியது. "எனக்கு இப்போது அதற்கான பதில் தெரிந்தாக வேண்டும்!" என்று நான் கத்தினேன். எனது கவலை மறைந்து, அதனிடத்தை எனது கோபம் விரைவாக எடுத்துக் கொண்டபோது, எனக்குச் சற்றுத் தெம்பாக இருந்தது.

"காவலாளிகள் தூங்கிக் கொண்டிருந்தபோது, வடக்குப் பகுதியில் இருந்த சுவரின் ஊடாக அவன் ரகசியமாக உள்ளே புகுந்தான். பிறகு அவன் அவர்களைக் கொன்றுவிட்டு அசோக வனத்தைச் சென்றடைந்தான். தொண்டைகள் அறுக்கப்பட்ட நிலையில் அந்தக் காவலர்களின் உடல்கள் ஓடைகளிலிருந்து கண்டெடுக்கப்பட்டன," என்று பிரஹஸ்தன் மெதுவாகக் கூறினான்.

"பிரமாதம்! இது நல்ல விஷயம்! அவன் ராவணனின்

கோட்டைக்குள் நுழைந்ததை ஓர் அசுரன்கூடப் பார்க்கவில்லை, இல்லையா? எனது காவலர்கள் தங்கள் தூக்கத்தில் கொலை செய்யப்பட்டுள்ளனர். என்னிடம் ஐம்பதாயிரம் வீரர்கள் இருக்கின்றனர். ஆனால் அந்த ஒரே ஒரு குரங்கு மனிதன் யாருடைய கண்களிலும் படாமல் தப்பித்ததோடு மட்டுமல்லாமல், இன்னும் சிறைபிடிக்கப்படாமல் இருக்கிறான். எப்பேற்பட்டச் சிறப்பான கண்காணிப்பு அமைப்புமுறை! எப்பேற்பட்டப் பிரமாதமான உளவுத்துறை!" என்று நான் வெடித்தேன். எனது வசவிற்குப் பிறகு, பிரஹஸ்தனும் ஜம்புமாலியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டதை நான் பார்த்தேன்.

"அரசே, உண்மையில், போதையில் இருந்த ஒரு குடிகாரன், அரண்மனைக்குள் எவனோ ஒருவன் ரகசியமாக நுழைந்திருந்ததைத் தான் பார்த்ததாக ராஜ வீதியில் இருந்த காவல் நிலையத்தில் தெரிவித்திருந்தான். ஆனால் . . ."

"ஆனால், பொறுப்பில் இருந்த அதிகாரிக்குத் தனது இருக்கையிலிருந்து எழுந்திருக்க மனமிருக்கவில்லை. எந்த நடவடிக்கையும் எடுக்கப்படாமல், விஷயம் அப்படியே உதாசீனப்படுத்தப்பட்டது. இதைத்தானே நீ என்னிடம் கூற விரும்புகிறாய்?" என்று நான் உறுமினேன். மேகநாதன் எங்கே போனான் என்று நான் கவலை கொண்டேன். அந்தக் குரங்கு மனிதன் எங்கு வேண்டுமானாலும் ஒளிந்திருக்கக்கூடும். இருட்டில் ஒரு மர உச்சியிலிருந்து வஞ்சகமாக எறியப்படும் அம்பு என் மகனின் தொண்டையைச் சுலபமாகத் துளைத்துவிடும். இது ஓர் ஆபத்தான விளையாட்டு. இது ஒரு யுத்தமல்ல. இங்கு எந்த விதிமுறைகளுக்கும் இடமில்லை. அதைவிட மோசமான விஷயம் என்னவென்றால், என் எதிரிகளுக்கு ஒழுக்கநெறி எதுவும் கிடையாது.

அரசவையில் ஓர் அசௌகரியமான அமைதி கோலோச்சியது. வெளியே, மக்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டும், அடுத்தவரைப் பார்த்துக் கத்திக் கொண்டும் இருந்த சத்தமும், வாள்கள் ஒன்றோடொன்று உரசிய சத்தமும் எங்களுக்குக் கேட்டன. திடீரென்று, ஒரு பெரும் உற்சாக ஆரவாரம் எங்களுக்குக் கேட்டது. எல்லோரும் நிமிர்ந்து பார்த்தனர். "ராவணனுக்கு வெற்றி! . . . அசுரப் பேரசனுக்கு வெற்றி!" என்ற முழக்கம் விண்ணைத் தொட்டது. நான் உற்சாகத்தில் எழுந்து நின்றேன். ஒட்டுமொத்த அரசவையும் என்னுடன் சேர்ந்து எழுந்தது. நான் வெளியே ஓடிச் சென்று, என் மகன் கொண்டு வந்து கொண்டிருந்த பரிசைப் பார்க்க விரும்பினேன். ஆனால், என் உற்சாகத்தை மறைக்கக் கடுமையாக முயற்சித்துக் கொண்டு,

மகிழ்ச்சியிலும் எதிர்பார்ப்பிலும் என் கைகளைப் பிசைந்து கொண்டு நான் அங்கேயே நின்றேன். ஊர்வலத்தின் முன்னால், எனது உயரமான, பெருமையான மகன், தனது வில்லைத் தன் கையில் உறுதியாகப் பிடித்தபடி என் அரசவைக்குள் நுழைந்தான். ஒட்டுமொத்த அரசவையும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தது. அசுரக் காவலாளிகள் மகிழ்ச்சிக் கூத்தாடினர். செண்டைகள் பலத்தச் சத்தத்துடன் முழங்கப்பட்டன. நான் என் மகனை நோக்கி நடந்து சென்று, அவனை ஆரத் தழுவினேன்.

அப்போது, உயரமான, திடகாத்திரமான, கருப்பு நிற வானரன் ஒருவன் அவனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அவனது கைகளும் கால்களும் கயிறுகளால் கட்டப்பட்டிருந்தன. அவனது தசைகள் புடைத்துக் கொண்டு நின்றன. “செதுக்கப்பட்ட ஒரு சிலையைப் போன்ற இதே உடற்கட்டு, நான் இளைஞனாக இருந்தபோது எனக்கும் இருந்தது,” என்று நான் என் மனத்திற்குள் கூறிக் கொண்டேன். நான் என் வயிற்றை உள்ளே இழுத்துக் கொண்டேன். அவன் கிட்டத்தட்ட மேகநாதன் அளவுக்கு உயரமாக இருந்தான். அவனது உடல் முழுவதும் கருப்பான சுருள்முடி இருந்தது. அவனது முகத்தின் இருபுறமும், அலை போன்ற, கருப்பான முடி வழிந்தோடியது. அவன் ஒரு வலிமை மிக்க வீரனைப்போல இருந்தான். அவன் ராமனால் வஞ்சகமாகக் கொல்லப்பட்ட எனது நண்பன் வாலியைப்போல இருந்ததைத் திடீரென்று நான் உணர்ந்தேன்.

நான் நிதானமாக என் அரியணைக்குத் திரும்பி நடந்தேன். என் மந்திரிகளும் தங்கள் இருக்கைகளுக்குத் திரும்பினர். மேகநாதன், உருவிய வாளுடன், அந்த வானரனுக்கு அருகில் நின்றான். நான் ஒரு கையசைப்பின் மூலம், செண்டை வாத்தியங்களை இசைத்துக் கொண்டிருந்தவர்களையும் முக்கியமற்றப் பிற நபர்களையும் எனது அரசவையிலிருந்து வெளியேறும்படி உத்தரவிட்டேன். ஒருசில நிமிட அமைதிக்குப் பிறகு, நான் விசாரணையைத் துவக்கினேன். முதல் சில கேள்விகளுக்கு அந்த வானரன் பதில் கூறவில்லை. அவன் எனக்குச் சவால்விடும் விதத்தில் என்னை வெறித்துப் பார்த்தபடி நின்றான். அவனது கம்பீரமும் தன்னம்பிக்கையும் என்னைத் தடுமாறச் செய்தன. அவன் ஓர் உளவாளியாகப் பிடிக்கப்பட்டு, மரண தண்டனையை எதிர்கொண்டு, உலகிலேயே அதிக ஆற்றல் வாய்ந்த ஒரு பேரரசனின் அரசவையில் நின்று கொண்டிருந்தான். ஆனாலும், குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்ததை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்ததுபோல அவன் சர்வசாதாரணமாக அங்கு நின்றான்.

நான் ஒரு பதில் வேண்டிப் பிரஹஸ்தனைப் பார்த்தேன். அவன் எழுந்து நின்றான், ஆனால் அவன் பேசுவதற்குள், அந்த வானரன் ஓர்

ஆழமான குரலில் பேசினான். "என் பெயர் அனுமான். மாருதியின் மகன் நான். எனது அரசரும் ரட்சகருமான ஸ்ரீ ராமசந்திரப் பிரபுவின் தூதுவனாக நான் இங்கு வந்திருக்கிறேன். ஓர் அரசனின் தூதுவனுக்கு இன்னோர் அரசனின் அரசவையில் கொடுக்கப்பட வேண்டிய உரிய மரியாதையை நான் உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன். அசுரர்களின் பேரரசரும், சிறப்பாகக் கற்றுத் தேர்ந்த வீர அரசருமான ராவணப் பிரபு, ராஜ தர்மத்தின்படி ஒரு தூதுவனுக்குரிய மரியாதையைக் கொடுக்கத் தயங்க மாட்டார் என்று நான் உறுதியாக நம்புகிறேன்," என்று கூறி, அவன் ஒரு புன்னகையுடன் தனது பேச்சை முடித்தான். அந்தப் புன்னகை அவனது முகத்திற்கு ஒளியூட்டியது.

பிரஹஸ்தன் அவனைப் பார்த்து மிகவும் உறுதியான குரலில், "ஸ்ரீ அனுமான் அவர்களே, தூதுவர்கள் நடு இரவில் யாருக்கும் தெரியாமல் அத்துமீறி நுழைவதில்லை. நீ ஓர் உளவாளி என்பதற்கு எங்களிடம் வலிமையான காரணங்கள் உள்ளன. நீ குறிப்பிட்ட அதே ராஜ தர்மத்தின் நெறிமுறைகளின்படி, ஓர் உளவாளிக்கான தண்டனை மரணம் மட்டும்தான். எங்களுக்குத் தெரிந்தவரை, உன் எஜமானன் ராஜ தர்மத்தின்மீது அவ்வளவு அக்கறை காட்டுபவனல்ல. என்னுடைய மட்டான அறிவின்படி, ஒரு வீரன் இன்னொருவனுடன் ஒற்றைக்கு ஒற்றைச் சண்டையில் ஈடுபட்டிருக்கும்போது, அவன் எதிர்பார்க்காத நேரத்தில் ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்து நின்று அம்பை எய்து அவனை வஞ்சகமாக வீழ்த்துவது ராஜ தர்மத்தின் ஒரு பகுதி அல்ல," என்று கூறினான்.

அந்த வானரன் அசௌகரியமாகக் காணப்பட்டான். ஓர் உளவியல்ரீதியான மேன்மையை நிலைப்படுத்த அவன் மேற்கொண்ட முயற்சியை எனது பிரதம மந்திரி சிறப்பாக முறியடித்தான். அந்த வானரன் இப்போது மற்றுமோர் உத்தியை முயற்சித்துப் பார்த்தான். "ராவண மகாராஜா, நான் கயிறுகளால் கட்டுண்டு கிடக்கும்போது நான் உங்களிடம் பேச மறுக்கிறேன். எனது கயிறுகளை அவிழ்த்துவிட்டு எனக்கு ஓர் இருக்கையைக் கொடுங்கள். அதன் பிறகு நான் உங்கள் கேள்விகள் அனைத்திற்கும் விடையளிக்கிறேன்."

"அவனைப் பாதாளச் சிறைக்குள் தள்ளுங்கள். இந்தக் கருங்குரங்கின் உடலின்மீது ருத்ராக்கன் தனது கைவண்ணத்தைத் துவக்கும்போது இவன் பேசுகிறானா இல்லையா என்று நாம் பார்த்துவிடலாம்," என்று கூறிவிட்டு, அனுமானின் கண்களை நான் நேராகப் பார்த்து, அவற்றில் பய ரேகைகள் ஏதேனும் தென்பட்டனவா என்று தேடினேன். அப்படி எதையும் அங்கு என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் அமைதியாகவும் சஞ்சலமின்றியும் இருந்தான்.

எனது காவலாளிகள் அவனை நெருங்கி அவனது முழங்கைகளைப் பற்றினர்.

அப்போது என் சகோதரன் விபீஷணன், தான் பேசுவதற்காக எழுந்தான். என்னுள் அதிகரித்துக் கொண்டிருந்த எரிச்சலை மறைக்க முயற்சித்துக் கொண்டே நான் அவனைப் பார்த்தேன். "அரசே, எந்தக் குற்றமும் செய்யப்பட்டிருக்காத நிலையில், தான் ஓர் உளவாளி அல்ல, ஒரு தூதுவன்தான் என்று ஒருவன் கூறிய பிறகு, அவன் ஒரு தூதுவனாகத்தான் நடத்தப்பட வேண்டும் என்று நமது நெறிமுறை விதி கூறுகிறது."

தான் அரசவையில் இருந்தோம் என்பதை ஒரு கணம் மறந்துவிட்டு, மேகநாதன், "சிற்றப்பா!" என்று கத்தினான். "அவன் நமது காவலாளிகள் இருவரைக் கொன்றுவிட்டு, நமது தோட்டத்தையும் நாசப்படுத்தியுள்ளான். அவன் ஓர் உளவாளிதான். அவன் ஒரு குற்றவாளி. அவன் அதற்கு ஏற்றாற்போலத்தான் நடத்தப்பட வேண்டும்."

"அனுமான் அந்தக் காவலாளிகளைக் கொன்றான் என்பதற்குச் சாட்சிகள் யாரேனும் இருக்கின்றனரா? அவனது குற்றம் நிரூபிக்கப்படாதவரை அவன் ஓர் அப்பாவிதான். அவனை விடுவிக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. ஒரு நாகரீகமற்ற வானரனைக் கையாண்டபோது, நமது அசுரப் பேரரசர், ஒழுங்குமுறையையும் ராஜ தர்மத்தையும் கடைபிடிக்கவில்லை என்று யாரும் அவரைக் குற்றப்படுத்தக்கூடாது என்பதுதான் என் நோக்கம்." விபீஷணன் தன் பேச்சை முடித்தபோது என்னைப் பார்த்தான்.

பிரஹஸ்தன் தனது இருக்கையிலிருந்து எழுந்து, "இந்த உளவாளி எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்று பேரரசர் விரும்புகிறாரோ, அவ்வாறே அவன் கையாளப்பட வேண்டும் என்று நான் பரிந்துரைக்கிறேன்," என்று கூறினான்.

"அசுரர்கள்! இரண்டு அசுரர்கள் உடன்படுகின்ற ஒரு விஷயம் இவ்வுலகில் ஒன்றுகூடக் கிடையாது. எப்போதும் விவாதித்துக் கொண்டும், விஷயங்கள் தங்கள் வழியில் மட்டுமே செய்யப்பட வேண்டும் என்று பிடிவாதமாக இருப்பதும்தான் அவர்களுடைய வேலை," என்று என் மனத்திற்குள் நொந்து கொண்டேன். பிரஹஸ்தனையும் விபீஷணனையும் ஒரே நேரத்தில் திருப்திப்படுத்துவதென்று நான் ஓர் அறிவார்ந்த முட்டாளைப்போலத் தீர்மானித்தேன். "கட்டுக்களிலிருந்து அவனை விடுவியுங்கள். அவனது கைகளும் கால்களும் மட்டும் கட்டப்பட்டிருக்கட்டும். அவன் ஏதேனும் கூற விரும்பினால், நின்றபடியே அவன் அதைக் கூறட்டும். அவனை

என்ன செய்ய வேண்டும் என்பதை அதன் பிறகு நான் முடிவு செய்கிறேன்," என்று நான் கூறினேன்.

"ஆனால், அப்பா . . ." என்று மேகநாதன் இடைமறித்தான். நான் ஒரு கடுமையான பார்வையின் மூலம் அவனை அமைதிப்படுத்தினேன். ஒரு காவலாளி அனுமானின் கட்டுக்களை மெதுவாக அவிழ்த்தான்.

கயிறுகள் அவிழ்க்கப்பட்டவுடன் அனுமான் பேசினான். "கிஷ்கிந்தையைச் சேர்ந்த மாருதியின் மைந்தனும், வானர அரசன் சுக்ரீவனின் மந்திரியும், அயோத்தி இளவரசர் ஸ்ரீ ராமசந்திரனின் சேவகனுமான நான், பேராற்றல் வாய்ந்த அரசன் இலங்கேஸ்வரனுக்கு என் எஜமானிடமிருந்து ஒரு தோழமையான அறிவுரையைக் கொண்டு வந்திருக்கிறேன். அயோத்தி இளவரசரின் மனைவியும், அயோத்தியின் அரசியுமான சீதா தேவியை நீங்கள் தவறாக அபகரித்து வந்து, அவரை உங்களுடைய கண்காணிப்பின்கீழ் வைத்திருக்கிறீர்கள். தனது அரசியை அவருக்குரிய அனைத்து மரியாதையுடன் தன்னிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, நீங்கள் தன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று என் அரசர் உங்களைக் கேட்டுக் கொள்கிறார். நீங்கள் இந்த அறிவுரையை உதாசீனப்படுத்தினால், இலங்கையின்மீதும் அசுரர்களின்மீதும் போர் தொடுக்க என் எஜமானின் சார்பில் எனக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. அப்படி ஒரு நிகழ்வு ஏற்பட்டால், அசுரர்களாகிய உங்களை அழித்துவிட்டு, உங்களுடைய பாவ நகரங்களை மண்ணோடு மண்ணாக ஆக்கிவிட்டு, எங்கள் அரசியாரை மீட்டுச் செல்வோம் என்று நாங்கள் உங்களை எச்சரிக்கிறோம்."

அங்கு ஒரு பெரும் அமளி ஏற்பட்டது. நூற்றுக்கணக்கான வாள்கள் தம் உறைகளிலிருந்து சீறிப் பாய்ந்து வெளியே வந்தன. மேகநாதன் தனது வாளை, மரியாதையற்ற அந்த வானரனின் தொண்டையின்மீது வைத்து அழுத்தினான். இந்தக் குரங்கு மனிதனின் பேச்சு அதிகமாக ஏளனப்படுத்துவதாக இருந்தது. அசுரப் பேரரசனான என்னிடம் வந்து, எனக்கே சவால்விடுவதற்கு இந்தக் குரங்கு மனிதனுக்கு எவ்வளவு துணிச்சல்? அரைவேக்காட்டு நாகரீகம் கொண்ட வானரர்களின் குடிகார அரசனின் பெயரில் இவ்வாறு செய்வதற்கு அவனுக்கு எவ்வளவு துணிச்சல்? தன் மனைவியை மோசமாக நடத்திய ஒரு நாடோடி வேடுவனின் சார்பில், உலகின் மிகவும் ஆற்றல் வாய்ந்த பேரரசனிடம் சவால் விடுவதற்கு இந்த வானரனுக்கு எவ்வளவு துணிச்சல்? என் அரசவையில் எல்லோர் முன்னிலையிலும் வெளிப்படையாக என்னைச் சவாலுக்கு அழைப்பதற்கு இவனுக்கு எவ்வளவு துணிச்சல்?

"இவனைக் கற்களால் அடித்துக் கொல்லுங்கள்!" என்று நான்

உறுமினேன். ஒட்டுமொத்த அரசவையும் என்னுடன் சேர்ந்து கர்ஜித்தது. நான் அவனுக்குரிய தண்டனையை அறிவித்தபோது, அவன் இதற்கெல்லாம் கலங்காதவனாக எந்தச் சலனமுமின்றி நின்றான்.

விபீஷணன் மெதுவாக எழுந்து நின்றபோது, அங்கு நிலவிய அமளி அடங்கியது. அப்போது அவன் ஒரு மென்மையான குரலில், "அரசே, இவன் தனது மரணத்தைச் சம்பாதித்திருக்கிறான். நீங்கள் உங்கள் அறிவைக் கொண்டு ஒரு நியாயமான தண்டனையை வழங்கியிருக்கிறீர்கள். அவன் வெறும் ஒரு தூதுவனாக இல்லாமல் எல்லை மீறி நடந்து கொண்டதால், வாழ்வதற்கான உரிமையை அவன் இழந்துவிட்டான். அவனுடைய பேச்சு ஒரு யுத்தக்களத்தில் வேண்டுமானால் பொருத்தமானதாக இருந்திருக்கும். இலங்கையையும் இந்தியா முழுவதையும் ஆளுகின்ற பெருமைக்குரிய அசுரப் பேரரசரின் அரசவைக்கு அது பொருத்தமான ஒன்றல்ல. ஆனால் . . ." என்று கூறி அவன் சற்று நிறுத்தினான்.

நான் பொறுமையிழந்து கொண்டிருந்தேன். "விபீஷணா, நீ கூற வருவதை விரைவாகக் கூறிவிடு."

"ஆனால், அண்ணா, நம்முடைய செய்தியை அவனிடம் கொடுத்தனுப்புவது அறிவார்ந்த செயலாக இருக்குமல்லவா? தான் ஏதேனும் தவறான சாகசத்தை நிகழ்த்த முயற்சித்தால், இலங்கை அதற்கு ஏற்றவாறு விடையளிக்கும் என்று அவனுடைய எஜமானனும் தெரிந்து கொள்ளட்டும். நாம் இவனை வெறுமனே கொன்றுவிட்டால், இவனை இங்கு அனுப்பியவர்களுக்கு ஒரு பொருத்தமான பதிலைக் கொடுக்கும் வாய்ப்பை நாம் இழந்துவிடுவோம். இவனிடம் ஒரு செய்தியைக் கொடுத்தனுப்பினால், தேவையற்ற ஒரு யுத்தத்தையும் நாம் தவிர்க்கக்கூடும். ராமன் தனது நாகரீகமற்றச் சகோதரனான லட்சுமணனை நம்மிடம் ஒப்படைக்கும்வரை அவனது மனைவியை நாம் ஒரு பணயக் கைதியாக வைத்திருப்போம் என்று நாம் அவனுக்குத் தெரிவிக்கலாம். பிறகு, லட்சுமணனை விசாரணைக்கு உட்படுத்தி, அவன் நமது சகோதரிக்கு எதிராகச் செய்த அட்டூழியங்களுக்கு அவனுக்குத் தகுந்த தண்டனையைக் கொடுக்கலாம்."

நான் விபீஷணனைப் பார்த்துக் கொண்டே, "அவன் கூறுவதிலும் ஓர் அர்த்தம் உள்ளது," என்று நினைத்தேன். ஆனால் அந்தக் குரங்கு என்னை ஏளனப்படுத்தியிருந்தது குறித்து உள்ளூர நான் இன்னும் கொதித்துக் கொண்டிருந்தேன்.

பிரஹஸ்தன் எழுந்து நின்று, என்னைப் பார்த்துத் திரும்பி, "அரசே, நாம் அவசரப்பட்டு அவனைக் கொல்வதற்கு முன்பாகவோ அல்லது திருப்பி அனுப்பி வைப்பதற்குப் பதிலாகவோ, அவனிடமிருந்து சிறிது

தகவல்களை வாங்கிக் கொள்ளலாம். ஸ்ரீ ராமசந்திரனிடமிருந்து வந்துள்ள இந்த மதிப்பிற்குரிய தூதுவனைத் தனிப்பட்ட முறையில் விசாரிப்பதற்கான கௌரவத்தை நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டும் என்று நான் உங்களைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்," என்று கூறினான்.

நான் ஒரு தீர்மானத்திற்கு வர முடியாமல் தடுமாறினேன். ஆனால் அனுமானுக்கு நான் உடனடியாக ஒரு பாடம் கற்பிக்க விரும்பினேன். அவன் என் அரசவைக்கு வந்து என்னை ஏளனம் செய்துவிட்டு, அந்தக் குற்றத்திலிருந்து தப்பித்துக் கொள்ள என்னால் அனுமதிக்க முடியவில்லை. விபீஷணன் இதற்கும் ஒரு தீர்வைக் கண்டுபிடித்தான்.

"நாம் அவனுக்கு அடையாளச் சூடு போடலாம்," என்று விபீஷணன் வெறுமனே கூறினான். நெருப்பாலோ அல்லது பழுக்கக் காய்ச்சிய ஓர் இரும்பாலோ அடையாளச் சூடு போடுவது அசுரர்களின் பண்டைய வழக்கமாக இருந்தது. அது மிகக் கொடூரமான ஒரு தண்டனை. அது அதிக வேதனையானதோடு மட்டுமன்றி, ஒருவனது சுயமதிப்பைக் காயப்படுத்தி, அவனை அவமானத்திற்கு உள்ளாக்கும் ஒரு தண்டனையாகும். இந்த அடையாளச் சூட்டால் ஏற்படும் தழும்பு நிரந்தரமானது. இதற்கு உள்ளாகியவன், இந்த அடையாளக் குறியையும் மனவேதனையையும் தனது வாழ்நாள் முழுக்கச் சுமந்து திரிய வேண்டியிருக்கும். இந்த அடையாளக் குறி, இவன் ஒரு மாபெரும் குற்றத்தைச் செய்தவன் என்பதை உலகத்தாரிடம் முழங்கும். அவனது குற்றம் மற்றும் தோல்வியின் இந்த அடையாளக் குறி, ஒட்டுமொத்த உலகமும் அவனைப் பார்த்து எள்ளி நகையாடுவதற்காக அவனது உடலின்மீது வலுக்கட்டாயமாக ஏற்படுத்தப்பட்டது என்பதையும் அது அறிவிக்கும். நான் இந்த யோசனையைப் பற்றி எவ்வளவு அதிகமாகச் சிந்தித்தேனோ, அவ்வளவு அதிகமாக அது எனக்குப் பிடித்துப் போனது. இந்தக் குரங்கு, ராவணனின் அடையாளக் குறியோடு தனது எஜமானிடம் திரும்பிச் செல்லும் . . . அவனுக்கு எங்கே சூடு போடலாம் . . . அவனுடைய பரந்த மார்பிலா . . . அவனது பருத்த வயிற்றிலா . . . அல்லது அவனது பரந்த முதுகிலா?

"அவனது ஆடைகளைக் களைந்துவிட்டு, அவனுடைய வாலில் சூடு போடுங்கள்."

பிரஹஸ்தன் மீண்டும் எனக்கு எரிச்சலூட்டினான். "அரசே, நாம் இப்படிப்பட்டக் கீழ்த்தரமான, காட்டுமிராண்டித்தனமாக நடவடிக்கைகளைத் தவிர்ப்பது நல்லது என்பது என் அபிப்பிராயம். அவனை ஓர் உளவாளிபோல நடத்தி, அதற்கு ஏற்றாற்போல அவனைக் கையாள வேண்டும். நாம் இவ்வளவு தூரம் தரம் தாழ்ந்து போக

வேண்டியதில்லை.”

“அவனது வாலுக்குத் தீ வையுங்கள். அவன் உட்காரும்போதும், நிற்கும்போதும், படுக்கும்போதும், அல்லது தூங்கும்போதும் அந்த வலியை அவன் உணரட்டும். ஓர் அசுரப் பேரரசனை ஏளனம் செய்வதால் ஏற்படும் வலியை அவன் உணரட்டும்,” என்று நான் கத்தினேன். நம்ப முடியாதவன்போலத் தனது தலையைப் பக்கவாட்டில் ஆட்டிய பிரஹஸ்தனை நான் உதாசீனப்படுத்திவிட்டு, என் அரசவையிலிருந்து எழுந்த மகிழ்ச்சி ஆரவாரத்தில் நான் திளைத்தேன்.

எனது காவலாளிகள் ருத்ராக்கனை அழைத்து வர ஓடினர். ருத்ராக்கன் தனது உதவியாளர்களுடன் வந்து அரசவைக்கு முன்னால் குனிந்து வணங்கினான். அனுமான் எதற்கும் அஞ்சாமல் அங்கு நின்றான். அவனுக்குச் சூடு போடுவதற்காக, ருத்ராக்கனின் ஆட்கள், உருகிய ஈயத்தைத் தயாரித்தனர். நெருப்பு கொழுந்துவிட்டு எரிந்தது. அப்போது, யாராலும் நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று நிகழ்ந்தது. அந்தக் குரங்கு மனிதன், தனது கால்களைப் பிணைத்திருந்த கயிறுகளைச் சுலபமாக அறுத்தெறிந்துவிட்டு, மேகநாதனின் கையிலிருந்த வாளைத் தன் காலால் எட்டிப் பறித்தான். ஒரு கணம் எல்லோரும் திடுக்கிட்டு நின்றனர். அந்த வானர வீரனுக்கு அது போதுமானதாக இருந்தது. பிறகு, அவன் தன் கைகளையும் விடுவித்துக் கொண்டு, உருக்கிய ஈயம் இருந்த கலயத்தைத் தன் கைகளால் தூக்கி, அதை என்னை நோக்கி வீசி எறிந்தான். சரியான நேரத்தில் நான் குனிந்து, அதிலிருந்து தப்பினேன். ஆனால் அந்தக் கலயம், எனது அரியணைக்குப் பின்னால் இருந்த திரைச்சீலைகளின்மீது பட்டதில், அவை தீப்பிடித்துக் கொண்டன. சரியான நேரத்தில் நான் என் அரியணையிலிருந்து குதித்தேன். என் அரியணைக்கு மேலே இருந்த ஒட்டுமொத்தக் குடையும் தீப்பற்றி எரிந்து கீழே சரிந்தது. பிறகு என் அரசவை முழுவதும் கொழுந்துவிட்டு எரிந்தது.

அங்கு பெருங்குழப்பம் நிலவியது. அனுமான் ருத்ராக்கனை நெருப்பிற்குள் தள்ளினான். கட்டுறுதியான தேகத்தைக் கொண்ட அந்த முதன்மைக் காவலன் தன் உயிருக்குப் போராடினான். அவனது ஆட்கள் அவனை வெளியே இழுத்து, அவனை முழுவதுமாக ஆட்கொள்ளவிருந்த நெருப்பை அணைப்பதற்குள், அனுமான், எரிந்து கொண்டிருந்த கட்டைகள் சிலவற்றை உருவி வெளியே எடுத்து, என் அரண்மனைக்குத் தீ வைத்தான். என் காவலாளிகள், பீதியடைந்த முயல்களைப்போலத் தறிகெட்டு ஓடினர். எரிந்து சாம்பலாகிக் கொண்டிருந்த என் அரியணையின்மீது சிலர் தண்ணீரைக் கொட்டினர். இந்தக் குழப்பத்தில், எரிந்து கொண்டிருந்த கட்டைகளைத் தன் கைகளில் எடுத்துக் கொண்டு,

அனுமான், நகரத்திற்குள் தப்பிச் சென்றான். பிரஹஸ்தன் மட்டும், தப்பித்துக் கொண்டிருந்த அந்தக் கயவனின்மீது தனது குத்துவாளை எறிந்தான். ஆனால் அது அனுமானின் காதையொட்டிச் சென்று, அரசவையின் கதவின்மீது குத்திட்டு நின்றது. மேகநாதன் அனுமானைத் துரத்திக் கொண்டு ஓடினான், ஆனால் எரிந்து கொண்டிருந்த உத்தரங்களின் துண்டுகள் கீழே விழுந்து அவனது வேகத்தைக் குறைத்தன. நான் ஒரு கோழையைப்போல் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடினேன். திரும்பி வந்துவிடுமாறு மேகநாதனை நான் அழைத்தேன். அந்த வானரனை எப்போது வேண்டுமானாலும் எங்களால் சிறைபிடிக்க முடியும், ஆனால் இப்போதைக்கு, அரண்மனை தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது.

அது ஒரு கொடுங்கனவாக இருந்தது. எல்லா இடங்களிலும் குழப்பமும் பீதியும் கோலோச்சின. நான் என் சகோதரனுடனும், எங்களைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்த மற்றவர்களுடனும் பெண்கள் குடியிருப்பிற்குள் ஓடினேன். தனது ஆட்களிடம் சிறிது ஒழுங்கைக் கொண்டுவர முயற்சித்த ருத்ராக்கன், அவர்களைப் பார்த்துக் கத்தினான். ஆனால் அந்தக் காவலர்கள் அவனது உத்தரவுகளை உதாசீனப்படுத்திவிட்டு, தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடினர். எரிந்து கொண்டிருந்த ஒரு பெரிய உத்தரக்கட்டை எங்களுக்கு முன்னால் ஒருசில அடி தூரத்தில் விழுந்தது. நாங்கள் மயிரிழையில் தப்பினோம். அங்கு நிலவிய வெப்பம், கற்பனைக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. எல்லா இடங்களும் புகை மண்டலமாகக் காட்சியளித்தது. நான் ஒரு சன்னலை எட்டி உதைத்துத் திறந்து, வெளியே குதித்து, பன்னிரண்டு அடி கீழே இருந்த தரையில் வந்து நின்றேன். என் கணுக்கால்களிலிருந்து எழுந்த வலியைப் பொருட்படுத்தாமல் நான் தொடர்ந்து ஓடினேன். என் அந்தப்புரத்திலிருந்து எழுந்த அலறல்களை என்னால் கேட்க முடிந்தது. நெருப்பு என் அரசவையை எரித்துத் தரைமட்டமாக்கிவிட்டு, அதைச் சுற்றியிருந்த கட்டடங்களை நோக்கி வேகமாக நகர்ந்து கொண்டிருந்தது. என் கண்களுக்கு முன்னால் என் நகரம் பற்றி எரிந்தது. நெருப்பு ஜுவாலைகள் கூரைவீடுகளைக் கபளீகரம் செய்தன. எல்லா இடங்களிலும் பீதி தாண்டவமாடியது. ஆயிரக்கணக்கான மரண ஓலங்களும் அலறல்களும் விண்ணின் ஊடாக எதிரொலித்தன. மக்கள் தங்கள் வீடுகளிலிருந்து தப்பி ஓடினர். ஒருசில துணிச்சல்காரர்கள் நெருப்பை எதிர்த்துப் போராடினர், ஆனால் அவர்கள் வேகமாகத் தோற்றுக் கொண்டிருந்தனர். எரிந்து கொண்டிருந்த சதைகள், மரக்கட்டைகள், ஆடைகள் ஆகியவற்றிலிருந்து எழுந்த மோசமான நெடி, காற்றை நிரப்பியது. குதிரைகள் தங்களது

லாயங்களிலிருந்து தெருக்களின் ஊடாகத் தறிகெட்டு ஓடின, தங்கள் வழியில் வந்த மக்களை எட்டி உதைத்தன, மிதித்துச் சவட்டின. நான் என் அந்தப்புரத்தை நோக்கி ஓடினேன். என் மனைவியும் என் மகன்களும் அங்கு இருந்தனர். நான் அவர்களைக் காப்பாற்றியாக வேண்டியிருந்தது. ஆனால் நெருப்பு எனக்கு முன்பாக அங்கு சென்றடைந்திருந்தது. அரண்மனையின் ஒட்டுமொத்தக் கூரையும் தீப்பிடித்தது. உத்தரவுகளைக் கொடுத்துக் கொடுத்து என் தொண்டை வறண்டு போனது. ஆனால் அவற்றைக் கேட்பதற்கு அங்கு யாரும் இருக்கவில்லை. "என் காவலாளிகள் எங்கே? என்னுடைய பேராற்றல் வாய்ந்த படை எங்கே? என் மந்திரிகள் எங்கே?" என் அரண்மனை எரிந்து சாம்பலானதை நான் கலக்கத்தோடு பார்த்தபடி நின்றேன்.

அப்போது ஒரு பெரிய கருப்பு உருவம், எரிந்து கொண்டிருந்த அந்தப்புரத்தை நோக்கி ஓடியதை நான் பார்த்தேன். அந்த முட்டாளைத் தடுத்து நிறுத்துவதற்காக நான் அவனைப் பார்த்துக் கத்தினேன், ஆனால் அவன் அந்த நெருப்பிற்குள் குதித்து மாயமாய் மறைந்தான். இந்தத் துணிச்சலான காரியத்தைக் கண்டு ஒரு கணம் நான் ஸ்தம்பித்தேன். "அவன் ஒரு முழுக் கிறுக்கனாக இருக்க வேண்டும்," என்று எனக்குள் கூறிக் கொண்டேன். இதற்குள், பிரஹஸ்தன் உட்பட, ஒருசில மந்திரிகள் அங்கு என்னுடன் சேர்ந்து கொண்டனர். ஆனால் நான் அவர்களிடம் ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை. ருத்ராக்கன் சிறிதளவு ஒழுங்கைக் கொண்டு வந்திருந்தான். நெருப்பை அணைப்பதற்கு அவனுடைய ஆட்கள் கடுமையாக முயற்சித்தனர். அரண்மனையின் ஒரு பகுதி முற்றிலுமாக எரிந்து தரைமட்டமாகியிருந்தது. கிழக்குப் பகுதியில் நெருப்புக் கட்டுப்படுத்தப்பட்டிருந்ததுபோலத் தோன்றியது. ஆனால் அந்த நெருப்பு என் அந்தப்புரத்தைச் சூறையாடியிருந்தது. என் குடும்பத்தாரின் நிலைமை பற்றிச் சிந்திக்காமல் இருக்க நான் மிகவும் சிரமப்பட்டேன்.

நெருப்பை அணைப்பதற்காக அறுபது யானைகள் கொண்டு வரப்பட்டன. அப்போது, எரிந்து கொண்டிருந்த அந்தப்புரத்திற்குள் மாயமாய் மறைந்து போயிருந்த அந்தப் பெரிய கருப்பு உருவம், முதல் தளத்தின் மேல்மாடத்திலிருந்து குதித்து, நெருப்பைத் தவிர்த்து, முற்றத்தில் விழுந்து உருண்டது. அவன் தன் முதுகின்மீது என் மனைவி மண்டோதரியைச் சுமந்து கொண்டிருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். நாங்கள் அவர்களை நெருங்கியபோது, அவன் யாரென்பதைக் கண்டு திகைத்தேன். எனது தகாத உறவால் பிறந்த என் மகன் அதிகாயன்தான் அவன். மூச்சுப்பேச்சின்றிக் கிடந்த எனது அரசிக்கு நினைவை வரவழைக்க அவன் முயற்சித்துக்

கொண்டிருந்தான். அவனது கைகள் மிக மோசமாக எரிந்திருந்ததை நான் பார்த்தேன். ஆனால் நான் எதுவும் கூறுவதற்கு முன்பாக, அதிகாயன், எரிந்து கொண்டிருந்த அரண்மனைக்குள் மீண்டும் ஓடினான். இம்முறை, பல காவலர்களும் அவனுக்குப் பின்னால் ஓடினர். நெருப்பின் தீவிரம் குறைந்திருந்தது, ஆனால் அது இன்னும் ஆபத்தானதாகத்தான் இருந்தது.

அரண்மனைக்குள் நெருப்பு மெதுவாகக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது. ஆனால் வெளியில், அது தொடர்ந்து சீற்றத்துடன் எரிந்து கொண்டிருந்தது. எரிந்து கொண்டிருந்த நகரில் தீயணைப்பு முயற்சிகளை வழிநடத்துவதற்காக மேகநாதனும் ஜம்புமாலியும் அரண்மனையிலிருந்து வேகமாக வெளியேறி நகரத்தை நோக்கிப் போயிருந்தது என் மனத்தில் எங்கோ பதிவாகியிருந்தது. இவ்வளவு கொடுமையான சேதத்தை விளைவித்திருந்த அந்தக் குரங்கைத் தேடுவதற்கு ருத்ராக்கன் மீண்டும் ஒரு குழுவை ஏற்பாடு செய்தான். பழி வாங்குவது அல்லது தண்டனையளிப்பது குறித்துச் சிந்திக்கும் நிலையில் அப்போது நான் இருக்கவில்லை. திடீரென்று நடந்து முடிந்த இவ்வளவு பயங்கரமான நிகழ்வுகளிலிருந்து மீள முடியாமல், நான் அதிர்ச்சியில் வாயடைத்துப் போயிருந்தேன். நான் என் அரசியைப் பற்றி மிகவும் கவலைப்பட்டேன். காவலாளிகள் அந்தப்புரத்திலிருந்து உடல்களைக் கொண்டு வந்தனர். சிலர் உயிரோடும், ஆனால் மிக மோசமாக எரிந்து போயோ அல்லது நினைவிழந்து போயோ இருந்தனர். மற்றவர்கள் அடையாளம் காண முடியாத அளவுக்கு எரிக்கப்பட்டு நெருப்புக்கு இரையாகியிருந்தனர்.

என் அரசி மெதுவாகத் தன் கண்களைத் திறந்தாள். நான் அவளைக் கட்டியணைத்தேன். என்னால் என் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆனால் அவள் என்னை விலக்கித் தள்ளினாள். அவள் தன் ஆடைகளை ஒழுங்குபடுத்துவது பற்றிக்கூடக் கவலைப்படாமல், எழுந்து நிற்கப் போராடியவாறு, “அக்ஷயன்! என் அக்ஷயன் எங்கே?” என்று முணுமுணுத்தாள். நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். எனது எட்டு வயது மகன் அக்ஷய குமாரன் எங்கே? நான் எழுந்து நின்றேன், ஆனால் ஏதோ மோசமான ஒன்று நடந்திருந்ததாக நான் பயந்தேன். என் மனைவியை எதிர்கொள்வதற்கான துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. பிரஹஸ்தன் குனிந்து வணங்கிவிட்டு, காவலாளிகளை அழைத்து, அவர்களிடம் எதையோ கிசுகிசுத்தான். அவர்கள் அரண்மனையை நோக்கி ஓடினர். ஆனால் எல்லோரும் என் கண்களைத் தவிர்த்ததை நான் கவனித்தேன். துணிவை இழந்துவிடக்கூடாது என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். சிவன் என் மகனைக் காப்பான். எல்லா

இடங்களிலும் தேடுமாறு நான் உத்தரவுகளைக் கொடுத்துக் கொண்டே இருந்தேன். இன்னும் என்னவெல்லாமோ உளறினேன். இந்தத் தேடல் முயற்சி வீணானது என்பதை நான் அறிந்தேன். ஆனால் நான் ஏதேனும் செய்ய விரும்பினேன்.

எனக்குப் பின்னாலிருந்து ஓர் ஒப்பாரிச் சத்தம் எழுந்தது, ஆனால் திரும்பிப் பார்க்க நான் பயந்தேன். யாரோ ஒருவர் என் தோளின்மீது ஆறுதலாகக் கை வைத்தார், ஆனால் அது எனக்கு ஆறுதலளிக்கத் தவறியது. நான் கோபம் கொண்டேன். அந்த ஒப்பாரிக்கான அர்த்தமும், அதற்குக் காரணமானவனையும் நான் அறிந்திருந்தேன். ஆனால் அதற்குள் என் கோபம் என்னிடமிருந்து விலகிப் போனது. நான் ஒரு பழைய கந்தல் துணியைப்போல நிலைகுலைந்து கீழே விழுந்தேன். சாம்பல் சிதறிக் கிடந்த நிலத்தின்மீது என் முகம் மோதியது. என் முகத்திலிருந்து ரத்தம் வடிந்து கொண்டிருக்க, என் கண்ணீர் என் ரத்தத்துடன் கலந்து கொண்டிருக்க, நான் அப்படியே கிடந்தேன். சில காலடிச் சத்தங்களும் கிசுகிசுப்புகளும் எனக்குக் கேட்டன. எனது ஆட்கள் என்னருகில் வருவதற்கு அஞ்சினர். அவர்கள் எனது துயரத்தை மதித்து ஒதுங்கியிருக்கக்கூடும் அல்லது வெறுமனே வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கக்கூடும். அது என்னவென்று யாருக்குத் தெரியும்? அதைப் பற்றி எனக்கு அக்கறையும் இருக்கவில்லை. நான் ஏன் என் வருத்தத்தை இந்தக் கொடூரமான, அக்கறையற்ற உலகத்துடன் பகிர்ந்து கொள்ள வேண்டும்? எனது இளவயது மகன் ஒரு கோழிக் குஞ்சைப்போல உயிரோடு எரிக்கப்பட்டிருந்தான். நான் அவனை இந்த நிலையில் பார்க்க விரும்பவில்லை. அவனுடைய அழகான, புன்னகையுடன்கூடிய முகம்தான் அவனைப் பற்றிய எனது கடைசி நினைவாக இருக்க வேண்டும். நான் தட்டுத்தடுமாறி எழுந்து நின்றேன். அந்தப் புகை மண்டலத்தின் ஊடாக, என் மனைவி யாரையோ கொடூரமாக அடித்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். சுருண்டு கிடந்த அதிகாயனிடமிருந்து அவளைப் பிரித்தெடுக்கச் சிலர் முயற்சித்தனர். அவள் அவனைப் பார்த்து, “நீ ஏன் என்னைத் தனியாகக் காப்பாற்றினாய் . . . என்மீது கை போட்டுத் தூங்கிக் கொண்டிருந்த என் செல்ல மகனை எப்படி உன்னால் விட்டுவிட்டு வர முடிந்தது . . . காட்டுமிராண்டியே . . .” என்று கத்தினாள்.

அவள் தன் வலிமை முழுவதையும் ஒன்றுதிரட்டி, மிகப் பெரிய உருவத்தைக் கொண்ட அவனை மீண்டும் மீண்டும் அடித்தாள். அவன் அவமானத்திலும் குற்ற உணர்விலும் தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, எதுவும் பேசாமல் அப்படியே நின்றான். அல்லது ஒருவேளை, தன் உயிரைப் பணயம் வைத்துத் தான் காப்பாற்றியிருந்த

நபரிடமிருந்து தனக்குக் கிடைத்துக் கொண்டிருந்த இந்த நியாயமற்ற வெகுமதி குறித்தக் கோபம் அவனுள் பொங்கிக் கொண்டிருந்திருக்கக்கூடும். அது என்னவாக வேண்டுமானாலும் இருந்திருக்கலாம். அதைப் பற்றி எனக்கு அக்கறை இருக்கவில்லை. அதிகாயனும் அவனது கோபமும் குற்ற உணர்வும் எனக்கு அப்போது முக்கியமாக இருக்கவில்லை. நான் என் இளவயது மகனை இழந்திருந்தேன். முன்பொரு சமயத்தில் பச்சைப் பசேலென்று இருந்த எனது முற்றத்தில் இப்போது வரிசையாகப் படுக்க வைக்கப்பட்டிருந்த உடல்களை நோக்கி நான் நடந்து சென்றேன். விகாரமான உடல்கள் என்னை வரவேற்றன. நான் தொடர்ந்து நடந்தேன். அப்போது அந்தச் சிறிய மூட்டையை நான் கண்டேன். காவலாளிகள் மரியாதையோடு பணிந்தனர், ஆனால் அவர்கள் என் முகத்தின்மீது துப்பியிருந்தால்கூட அப்போது நான் அதைக் கண்டுகொண்டிருக்க மாட்டேன். என் மகனின் கருகிய உடலை என் கைகளில் எடுத்துக் கொண்டேன். அந்தச் சிறிய முகம் என்னைச் சந்தேகமாகப் பார்த்தது. எனது கர்வம், என் வாழ்க்கை, என் சாதனைகள், என் அகங்காரம் என்று, என்னைப் பற்றிய அனைத்தையும் என் மகன் கேலி செய்தான். அது எனக்குத் தெரிந்தது. இந்தக் கொடுமையை எனக்குச் செய்திருந்த விதியின்மீதும் கடவுள்களின்மீதும் நான் கோபம் கொண்டேன். எனது சுமையைக் குறைப்பதற்காக எனது சேவகர்கள் ஓடி வந்தனர், ஆனால் நான் அவர்களுடைய உதவியை மறுத்தேன். இது என்னுடைய சுமை. நான் இதைத் தனியாகச் சுமப்பேன். என் மகனோடு ஒப்பிடும்போது, என் சாம்ராஜ்யம் உண்மையிலேயே மதிப்பு வாய்ந்ததுதானா? ஒரு குழந்தையைப் பாதுகாப்பதற்காக நான் இன்னொரு குழந்தையைத் தியாகம் செய்திருந்தேன். நான் பாதுக்காக்க வேண்டியிருந்த மக்களுக்கு நான் பேரழிவைக் கொண்டு வந்திருந்தேன்.

அப்போது, என் மகள் சீதையின் கொடூரமான சிரிப்புச் சத்தம், அந்த இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு வந்தது. “ராவணா, கெடுநோக்குக் கொண்ட அசுரனே! உனது இந்த நிலைமைக்கு நீ தகுதியானவன்தான். நீயும் உன் உறவினர்கள் அனைவரும் என் கணவனான ராமனின் கைகளில் பயங்கரமான மரணத்தைச் சந்திப்பீர்கள்.”

“மகளே, என் நிலைமைக்கு நான் தகுதியானவனா? உனக்காக நான் உனது தம்பியைத் தியாகம் செய்திருக்கிறேன். நான் எல்லாவற்றையும் இழக்கக்கூடும், ஆனால் நான் எப்போதும் உனக்காகக் குரல் கொடுப்பேன். ஒருமுறை உன்னை நான் கைவிட்டேன், ஆனால் இனி ஒருபோதும் உன்னை நான் கைவிட மாட்டேன். உன் வயதான

தந்தையின் பாதுகாப்பை நீ இழக்கும்போதுதான் உன் கணவன் எப்படிப்பட்டவன் என்பதை நீ புரிந்து கொள்வாய். ஆனால், மகளே, அதற்குள் காலம் கடந்து போயிருக்கும்.” இவை அனைத்தையும் நான் சீதையைப் பார்த்துக் கத்த விரும்பினேன், ஆனால் அதற்குத் தேவையான வலிமை அப்போது என்னிடம் மிச்சமிருக்கவில்லை. என் குட்டி இளவரசனின் உடலைச் சுமந்து கொண்டு, இரவின் இருண்ட ஆழங்களுக்குள் நான் தனியாக நடந்தேன். என் கண்ணீரைத் துடைப்பதற்கும், என் தலையைச் சாய்ப்பதற்கும், எனக்கு ஆறுதலளிப்பதற்கும் எதையேனும் நான் கண்டுபிடிக்கக்கூடும். என் மகன் என் கைகளில் அமைதியாக உறங்கிக் கொண்டிருக்க, நான் தொடர்ந்து நடந்தேன்.



# 43

## என் நகரம் எரியட்டும்

பத்ரன்

நகரம் எரிந்து கொண்டிருந்தது. காவலர்கள் காணாமல் போயிருந்தனர். காவல் நிலையத்தின் முன்பகுதி தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. நான் தப்பிச் செல்வதற்கான பாதை மறிக்கப்பட்டு இருந்தது. எக்கணத்திலும் அந்த நெருப்பு எனது சிறையை அடைந்துவிடும். அடர்த்தியான புகைச் சுருள்கள் உள்நோக்கி வந்தன. எனக்கு மூச்சுத் திணறியது, தொண்டை அடைத்தது. நான் வசமாகச் சிக்கியிருந்தேன். கட்டுப்பாடின்றி எரிந்து கொண்டிருந்த நெருப்பின் ஊடாக ஓடிச் செல்ல நான் முயற்சித்தேன், ஆனால் அந்த நெருப்பிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த தீவிரமான வெப்பத்தைக் கண்டு பயந்து நான் என் முயற்சியைக் கைவிட்டேன். என்னால் சுவாசிக்க முடியவில்லை. என்ன செய்வதென்றும் எனக்குத் தெரியவில்லை, ஆனால் நான் அவ்வளவு எளிதாக மாண்டு போகக்கூடியவன் அல்ல. ஆனால் இம்முறை அது குறித்து என்னால் உறுதியாகக் கூற முடியவில்லை. நெருப்பின் ஆரஞ்சு நிற

ஜுவாலைகள், தமது வழியில் இருந்த அனைத்தையும் கபளீகரம் செய்தன. கூரையின் ஒரு பகுதி இடிந்து விழுந்தது. இருண்ட வானம் அந்த அறைக்குள் எட்டிப் பார்த்தது. அதன் வழியாகப் புகை வெளியேறியதில், காற்று ஓரளவுக்குத் தெளிவடைந்தது.

நான் சுவரின்மீது ஏற முயன்றேன், ஆனால் பிடிமானத்திற்கு எதுவும் இல்லாததால் மீண்டும் கீழே விழுந்தேன். மேலே ஏறி நிற்பதற்கு ஏதேனும் கிடைக்குமா என்று நான் தேடினேன். முதன்மைக் காவலனின் மேசையின் குறுக்காகக் கூரையிலிருந்து ஒரு பெரிய உத்தரக்கட்டை விழுந்து கிடந்ததால், அந்த மேசையும் பற்றி எரிந்து கொண்டிருந்தது. அதை நான் வெளியே இழுக்க முயற்சித்தேன். இறுதியில், பல வேதனையான, இறுக்கமான கணங்களுக்குப் பிறகு, அது வளைந்து கொடுத்தது. நான் அதைச் சுவரை நோக்கி வேகமாகத் தள்ளினேன். என் கைகள் எரிந்தன, ஆனால் வலி குறித்தப் பிரக்ஞை எனக்கு இருக்கவில்லை. அது பிறகு வரும். நான் அந்த மேசையின்மீது ஏறி, சுவரைத் தாண்டிக் குதித்து, என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஓடினேன்.

வெளியே பெருத்தக் குழப்பமும் அமளியும் நிலவின. வீடுகளும் கடைகளும் தெருவிலிருந்த அனைத்தும் எரிந்து கொண்டிருந்தன. தூரத்தில் அரண்மனை எரிந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. நான் என் வீட்டை நோக்கி ஓடினேன். நெருப்பு எந்தப் பாரபட்சமுமின்றி மக்களைக் கொன்றிருந்தது. பிராமணர்கள், தீண்டத்தகாதவர்கள், அடிமைகள், சவரத் தொழிலாளிகள், வணிகர்கள், குடிகாரர்கள், சமயப்பற்றுக் கொண்டவர்கள், காவலாளிகள், சூதாடிகள், விலைமாதர்கள், மூதாட்டிகள், குழந்தைகள், துறவிகள், ரவுடிகள் என்று சகலரும் இறந்து போயிருந்தனர். எரிந்து கொண்டிருந்த உடல்களின் கார்ப்பு நெடியால் வானம் நிரம்பியது. பலர் மிதிபட்டு இறந்திருந்தனர். ஒருசிலர் குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்தனர். சிலர் நெருப்போடு போராடிக் கொண்டிருந்தனர். மற்றவர்கள் தங்களது அன்புக்குரியவர்கள் மற்றும் தங்களது உடமைகளை இழந்தது குறித்து ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தனர். மரணம் ருத்ரதாண்டவம் ஆடியிருந்த தெருக்களின் வழியாக நான் ஓடினேன். பசியும் பயமும் ஒருசேர என்னைத் தாக்கின, ஆனாலும் நான் தொடர்ந்து ஓடினேன். முக்கியத் தெருக்களைக் கடந்து, சாதாரணப்பட்டவர்களின் குடியிருப்புப் பகுதியை நோக்கி நான் திரும்பியபோது, நெருப்பு அங்கு அவ்வளவு சேதத்தை ஏற்படுத்தியிருக்கவில்லை என்பதை நான் கண்டேன். அதற்கு என்ன காரணம் என்பதோ அல்லது அது எப்படிச் சாத்தியமானது என்பதோ எனக்குத் தெரியாது. மக்கள் அனைவரும் வெளியே வந்து, எங்களுடைய

நகரத்தைச் சுத்தமாகத் துடைத்தெறிந்து கொண்டிருந்த நெருப்பை முட்டாள்தனமாக வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களில் பலர், என்னை நிறுத்தி, என்ன நடந்து கொண்டிருந்தது என்று என்னிடம் விசாரிக்க முயன்றனர். ஆனால் நான் என் ஓட்டத்தை நிறுத்தவில்லை. வீட்டை அடைந்து, அரசர்கள், அரண்மனைகள், உளவாளிகள், அவர்களது ஆபத்தான விளையாட்டுகள் ஆகியவற்றிடமிருந்து தூர விலகிச் செல்ல மட்டுமே நான் விரும்பினேன். நகரம் எரிந்து சாம்பலாகட்டும். ஆண்களும் பெண்களும் இறந்து போகட்டும். நான் என் வீட்டில் பாதுகாப்பாக இருக்க விரும்பினேன். நான் என்னுடைய தெருவை அடைந்தபோது, எல்லாம் ஒரு மோசமான கனவுபோல இருந்தது. எங்களுடைய ஓடைகளில் வாசம் செய்த பெருச்சாளிகளைத் துரத்திய ஒருசில தெருநாய்களின் சத்தம் மட்டுமே அங்கு நிலவிய அமைதியை ஊடுருவிக் கொண்டிருந்தது.

நான் என் வீட்டை அடைந்தபோது, வாசல் கதவு லேசாகத் திறந்திருந்ததைக் கண்டு திடுக்கிட்டேன். நான் அந்தப் பழைய மரக் கதவைத் திறந்தபோது ஏற்பட்டக் கிரீச்சொலியை உதாசீனப்படுத்திவிட்டு, மெதுவாக உள்ளே நுழைந்தேன். தனது நகரத்தைச் சீரழித்துக் கொண்டிருந்த ஆக்ரோஷமான நெருப்பைப் பற்றி எதுவும் தெரியாமல், என் மனைவி, தன் கட்டிலில் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டு ஆனந்தமாகத் தூங்கிக் கொண்டிருந்ததை லேசான வெளிச்சத்தில் என்னால் பார்க்க முடிந்தது. அவளைச் சபித்துவிட்டு நான் என்னுடைய படுக்கைக்குச் சென்றேன். யாரோ அதன்மீது படுத்திருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. எரிந்து கொண்டிருந்த நகரத்திலிருந்து வந்த வெளிச்சத்தில் அந்த உருவத்தை என்னால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. நான் என் குத்துவாளைத் தேடினேன், ஆனால் அதை என் இடுப்பில் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. அடுத்த அடியை எடுக்க வைப்பதற்கு எனக்கு பயமாக இருந்தது.

"அப்பா . . ." என்று ஒரு நடுக்கமான குரல் கூப்பிட்டது.

"யாரது . . .?" என்று நான் நடுங்கியபடி கேட்டேன்.

"நான் அதிகாயன் . . ."

"ஏன் . . . முட்டாள் . . . நீ . . . நீ . . ." இப்போது தன் கைகளுக்குள் தன் தலையைப் புதைத்தபடி என் படுக்கையின்மீது உட்கார்ந்து கொண்டிருந்த அந்த உருவத்தை நோக்கி நான் நகர்ந்தேன்.

"இளவரசனை நான் கொன்றுவிட்டேன் . . . நான் அவனைக் கொன்றுவிட்டேன் . . ."

"என்ன . . . ?!" இந்த முட்டாள் என்ன காரியம் செய்திருந்தான்?

இளவரசன் மேகநாதனை இவன் கொன்றுவிட்டானா? இப்போது என்ன நிகழும்? நான் பீதியடையத் துவங்கினேன். “ஒருவேளை, ஒட்டுமொத்தப் படையும் எங்களைத் தேடி வந்து கைது செய்யுமா?” என்று என் மனத்திற்குள் என்னை நானே கேட்டுக் கொண்டேன். என் மனைவி கண்விழித்து, சம்பந்தமில்லாமல் உளறிக் கொட்டினாள். நான் அவளைப் பார்த்துக் கத்தினேன். அவள் மீண்டும் சுருண்டு படுத்துக் கொண்டாள். நான் அதிகாயனை உலுக்கி, அவனது முகத்தில் ஓங்கி அறைந்தேன். “முட்டாள்! எழுந்திரு . . . அபத்தமாகப் பேசுவதை நிறுத்து.”

பிறகு, மெல்ல மெல்ல, என்ன நடந்திருந்தது என்பதை நான் கேட்டுத் தெரிந்து கொண்டேன். குட்டி இளவரசனின் மரணத்தில் என்னுடைய இந்த முட்டாள் மகன் எந்தப் பங்கும் வகித்திருக்கவில்லை என்பதைக் கண்டு நான் நிம்மதியடைந்தேன். மாறாக, அரசியை அவன் துணிச்சலோடு காப்பாற்றியிருந்தான். பிறகு எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. “அரசனோ, அல்லது அவருடன் எப்போதும் உலா வந்த வெள்ளைத் தோல் நபர்களோ, எங்களைப் போன்ற மக்களின் வீரதீரச் செயல்களை ஒருபோதும் அங்கீகரிக்க மாட்டார்கள். எங்களைப் போன்ற சாதாரணமான மக்களின் தன்னலமற்றச் செயல்களைப் புகழ்ந்து எந்தக் கவிஞனும் பாடல் இயற்ற மாட்டான். கவிஞர்களை விட்டுத் தள்ளுங்கள். அவர்கள் யாருக்குத் தேவை?” என்று நான் உள்ளூர எண்ணிக் கொண்டேன்.

சம்பந்தமில்லாமல் பிதற்றிக் கொண்டிருந்த என் மகனை என் மனைவி பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டு, நான் வெளியே சென்றேன். உதயமாகிக் கொண்டிருந்த சூரியனால் கிழக்கு வானம் செந்நிறத்தில் இருந்தது. எரிந்து கொண்டிருந்த நகரத்தால் மேற்கு வானமும் சிவந்திருந்தது. நான் களைப்போடு என் கைகால்களை நீட்டி முறித்துவிட்டு நதியை நோக்கி நடந்தேன். சூதுவாதறியாத பச்சிளம் குழந்தைகளையும் ஆண்களையும் பெண்களையும் கொன்றுவிட்டு, ஓர் அழகான அரண்மனைக்குத் தீ வைத்ததன் மூலம், அந்தக் குரங்கு மனிதன் எதைச் சம்பாதித்திருந்தான் என்று எண்ணியபடியே நடையை எட்டிப் போட்டேன். நதியின் மறுபக்கத்தில், இறந்தவர்களுடைய இறுதி ஊர்வலங்கள் சுடுகாட்டை நோக்கிப் போகத் துவங்கியிருந்தன. அந்த உடல்களுடன் சென்ற ஆண்கள் மற்றும் பெண்களின் முகங்களை என்னால் பார்க்க முடியவில்லை, ஆனால் கண்ணீருடன்கூடிய அவர்களது முகங்களை என்னால் கற்பனை செய்ய முடிந்தது. முதல் சிதைக்குத் தீ வைக்கப்பட்டு, அடர்த்தியான புகை விண்ணோக்கி எழும்பியபோது, நான் உணர்ச்சியின்றி அதைப் பார்த்தேன். பிறகு நான்

என் வீட்டிற்குச் சென்று, என் வீட்டின் மண் தாழ்வாரத்தில் அமர்ந்து, எரிந்து கொண்டிருந்த எனது நகரத்தின் மேலே சூழ்ந்திருந்த புகையை வேடிக்கைப் பார்க்கத் துவங்கினேன்.



# 44

## அமைதித் தூதுவன்

ராவணன்

நான் வெளியே வந்து நகரைப் பார்வையிட வேண்டும் என்று பிரஹஸ்தன்தான் வலியுறுத்தினான். அந்த நேரத்தில் நான் அவன்மீது கோபப்பட்டேன், ஆனால் அவன் தொடர்ந்து என்னை வற்புறுத்தினான். தனது குடிமக்கள் எவ்வாறு துன்புற்றனர் என்பதைப் பார்ப்பதும், அந்தத் துயரத்தைக் குறைப்பதற்குத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்வதும் ஓர் அரசனின் கடமை என்று அவன் என்னிடம் கூறினான். நான் அவனைப் பார்த்துக் கத்தினேன். அவனைப் பதவி நீக்கம் செய்யப் போவதாகவும் அவனது தலையைத் துண்டிக்கப் போவதாகவும்கூட மிரட்டினேன். ஆனால் அவன் பதிலுக்கு எதுவும் கூறாமல், தன் நிலையில் உறுதியாக இருந்தான். நான் என் கடமையைச் செய்ய வேண்டும் என்று அவன் அமைதியாக வலியுறுத்தினான். இறுதியில், அவனிடம் பேசிக் களைத்துப் போய், அவன் கூறியபடி செய்வதற்கு நான் ஒத்துக் கொண்டேன்.

எனது குடிமக்கள்மீது வந்து விடிந்திருந்த கொடுமையான

துன்பங்களை நான் பார்த்தேன். நான் ஓர் அரசன் என்ற எண்ணத்தைக் களைந்துவிட்டு, எளிய உடைகள் அணிந்து, பிரஹஸ்தனுடன் நடந்து சென்று என் நகரைப் பார்வையிட்டேன். நானும் அவர்களைப்போல பாதிக்கப்பட்டிருந்தேன். வீடுகள் தரைமட்டமாக்கப்பட்டு இருந்தன, கந்தல் ஆடைகளும் கருகிய அறைகலன்களும் தெருக்கள் முழுவதிலும் சிதறிக் கிடந்தன. குப்பைக் குவியல்கள் பல்வேறு மூலைகளில் புகைந்து கொண்டிருந்தன. அவை மனித உடல்களின் குவியல்கள்போலத் தோன்றின. பல கட்டடங்கள் இடிந்து விழுந்திருந்தன. புகைக்கரியால் கருப்பாகத் தோன்றிய உடைந்த சுவர்கள் ஆபத்தான நிலையில் நின்று கொண்டிருந்தன. சில கட்டடங்களில் கூரைகள் ஏதுமின்றி, வெறும் சன்னல்களும் கதவுச் சட்டங்களும் மட்டுமே இருந்தன. வேறு சில கட்டடங்களில், புகைந்து கொண்டிருந்த சாம்பல்களுக்கு இடையே வெறும் தூண்கள் மட்டும் நின்று கொண்டிருந்தன. தங்கள் அன்புக்குரிய ஒருவரின் சிதையைச் சுற்றி ஆழ்ந்த துக்கத்தோடு நின்ற உறவினர்களைப்போல அத்தூண்கள் காட்சியளித்தன. தங்களுடைய இழப்பால் இடிந்து போயும், திடீரென்று நிகழ்ந்திருந்த விஷயங்களைக் கண்டு திகைத்துப் போயும், ஆண்களும் பெண்களும் மூலைகளில் நின்று கொண்டிருந்தனர். இடிந்து விழக்கூடிய ஆபத்தான நிலையில் நின்று கொண்டிருந்த வீடுகளிலிருந்து வெளிப்பட்ட விம்மல்களும் ஒப்பாரிகளும் என் காதுகளில் விழுந்தன. விலங்குகளின் உடல்கள், பாதி கருகிய நிலையில் எல்லா இடங்களிலும் சிதறிக் கிடந்தன. எனக்கு வயிற்றைப் புரட்டிக் கொண்டு வந்தது. இந்தத் துயரக் காட்சிகளிலிருந்து விலகி, நான் அரண்மனைக்குத் திரும்பிச் செல்ல விரும்பினேன்.

ஆனால், இறந்து போன என் மகனின் திடீர் நினைவு, என்னுள் இருந்த வருத்தத்தைக் கட்டவிழ்த்துவிட்டது. நான் பிரஹஸ்தனை ஒரு கெஞ்சல் பார்வை பார்த்தேன், ஆனால் அவன் இரக்கமற்றவன்போலத் தோன்றினான். என் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல், என்னை இந்தச் சூழ்நிலைக்கு ஆளாக்கியிருந்த அந்தக் குரங்கு மனிதன்மீதும் பிரஹஸ்தன்மீதும் ஒட்டுமொத்த உலகின்மீதும் நான் கோபம் கொண்டேன். ஆனால் அசைய முடியாத அளவுக்கு நான் திகைத்துப் போயிருந்தேன். புகைக்கரியாலும் தண்ணீராலும் சாலைகள் சதசதவென்று இருந்தன. என் ஆடைகளிலும் காலணிகளிலும் சேறு ஒட்டிக் கொண்டது. இந்த மரண வீதிகளின் ஊடாக ஒரு சோகமான காற்று வீசிச் சென்றது. நான் என் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சாலையோரமாக வாந்தியெடுத்தேன். அப்போது ஒரு மூதாட்டி என்னை அடையாளம் கண்டுகொண்டாள். அவள் பெருங்குரலெடுத்துக் கத்திக் கொண்டே தன் வீட்டிலிருந்து வேகமாக வெளியே ஓடி வந்தாள். நான்

அதிர்ச்சியடைந்தேன், வாந்தியெடுப்பதை நிறுத்தினேன்.

“சண்டாளா! உன் காமவெறி எங்களுக்கு எதைக் கொண்டு வந்துள்ளது என்று பார்!” என்று அவள் கத்தினாள். பிரஹஸ்தன் அவளைத் தடுத்து நிறுத்த முயற்சித்தான், ஆனால் அவள் அவனை பலமாக விலக்கித் தள்ளினாள். பிறகு அவள் தன் நெஞ்சில் அடித்துக் கொண்டு ஒப்பாரி வைத்தாள். “நான் பல தியாகங்களைச் செய்து இரண்டு மகன்களை வளர்த்தேன். அவர்களுடைய மனைவியரும் என் பேரக் குழந்தைகளும் போய்ச் சேர்ந்துவிட்டனர். எல்லோரும் உன்னுடைய மோகத்தின் ஜுவாலைகளில் மறைந்துவிட்டனர். ஒரு தேவதையைப் போன்ற ஒரு மனைவி உனக்கு வாய்த்திருக்கிறாள். அப்படி இருக்கும்போது, ஒரு தேவப் பெண்ணின்மீது நீ அவசியம் மோகம் கொள்ளத்தான் வேண்டுமா? உனது வேட்கை, அசுரர்களாகிய எங்களுக்கு எதைக் கொண்டு வந்துள்ளது என்று பார்.”

அவளைச் சுற்றி ஒரு கூட்டம் கூடியது. பல கோப முணுமுணுப்புகள் எழுந்தன. பலர் தங்களது முஷ்டிகளை மடக்கினர். அவர்கள் என்னைக் கல்லால் அடித்துக் கொன்றுவிடுவார்களோ என்று பயந்து, நான் ஆணியடித்தாற்போல அங்கேயே நின்றேன். எப்படிப்பட்ட ஓர் ஆட்சியாளன் நான்? என்மீது எனக்கே வெறுப்பாக இருந்தது. இலங்கை எல்லாப் பக்கங்களிலும் எரிந்து கொண்டிருந்தது. நான் கட்டியிருந்த அனைத்தும் எரிந்து கொண்டிருந்தன. மக்கள் தங்கள் கனவுகளாலும் லட்சியங்களாலும் விருப்பத்தாலும் கடின உழைப்பாலும் உருவாக்கியிருந்த அனைத்தும் என்னைச் சுற்றிச் சின்னாபின்னமாகிக் கிடந்தன. ஓர் அரசன் என்ற முறையில் நான் தோற்றுப் போயிருந்தேன். ஒரு கீழ்த்தரமான குரங்கிடமிருந்து என் மக்களை என்னால் காப்பாற்ற முடியவில்லை. நான் ஒரு தோல்வியாளன். நான் என் அரண்மனையைவிட்டு வெளியே வந்து, துயரப்பட்டுக் கொண்டிருந்த மக்கள்மீது அனுதாபம் காட்டுவதற்குப் பிரஹஸ்தன் என்னை வற்புறுத்த வேண்டியிருந்தது. என் கால்கள் நடுங்கின. நான் நிலைகுலைந்து தரையில் விழுந்தேன். நடுங்கிய கைகளுடன் அந்தக் கோபமான மூதாட்டியின் பாதங்களை நான் தொட முயற்சித்தேன்.

“அம்மா . . . என்னை மன்னித்துவிடுங்கள் . . . நான் . . . நான் . . .” என்று நான் தடுமாறினேன். கூட்டத்தனர் மூச்சுப் பேச்சின்றி நின்றனர்.

பிரஹஸ்தன் என்னைத் தூக்கினான், ஆனால் அந்த மூதாட்டி என் பாதங்களில் விழுந்து, “அரசே, என்னை மன்னித்துவிடுங்கள் . . . நீங்கள் எங்களுடைய பேரரசர் . . . நீங்கள் என்னுடைய பாதங்களில் விழக்கூடாது,” என்று கூறிவிட்டுத் தேம்பித் தேம்பி அழுதாள். என்னைக் கல்லால் அடித்துக் கொல்வதற்குப் போதுமான அளவு கோபத்துடன்

இருந்த கூட்டம், நான் என் பிரதம மந்திரியின் வயதான, ஆனால் வலிமையான கையில் சாய்ந்து கொண்டு, கருகிப் போயிருந்த எனது அரண்மனையை நோக்கித் தடுமாறியபடி நடந்து சென்றபோது, அக்கறையின்றி விலகிச் சென்றது.

"ராவணன் வாழ்க!" என்று யாரோ ஒருவன் கத்தினான். அப்போது அந்த ஒட்டுமொத்தக் கூட்டமும், ஒரே குரலில், "ஹர ஹர மகாதேவா!" என்று முழங்கியது.

"அரசே, நாங்கள் இறக்கும்வரை உங்களைப் பின்தொடர்ந்து வருவோம்," என்று வேறொருவன் கத்தினான்.

"தேவர்களுக்குச் சாவுமணி அடிப்போம் . . ." என்று இன்னொரு குரல் சேர்ந்து கொண்டது.

"அரசே, அசுரர்களை வெற்றிக்கு வழிநடத்திச் செல்லுங்கள். . . நமது நகரின்மீது நடத்தப்பட்ட இந்தக் கொடூரமான தாக்குதலுக்கு நாம் பழி வாங்க வேண்டும். இந்நகரை நாங்கள் எங்கள் கைகளால் மீண்டும் உருவாக்குவோம்."

"ஹர ஹர மகாதேவா!" என்று சுமார் நூறு குரல்கள் கோஷமிட்டன. "ராமனுக்கு மரணம், அந்தக் குரங்கு மனிதனுக்கு மரணம்."

நான் என் கோட்டைப் படிகளில் ஏறிக் கொண்டிருந்தபோது, எனது நரம்புகளுக்குள் ஆற்றல் பாய்ந்து கொண்டிருந்ததை என்னால் உணர முடிந்தது. பிரஹஸ்தனைக் கண்டு அதற்கு மேல் நான் பயப்படவில்லை. தெருக்கள் முழுக்க எனது மக்கள் நிரம்பியிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. கூட்டத்தினர் மிகவும் உற்சாகமாக இருந்தனர். ஆயிரக்கணக்கான வாள்கள் சூரிய ஒளியில் ஒளிர்ந்தன. நான் என் கைகளை அசைத்தேன். அப்போது கூட்டத்தினரிடையே ஒரு பெருங்கூச்சல் எழுந்தது.

"இலங்கையை நாம் மீண்டும் உருவாக்குவோம்!" என்று நான் கத்தினேன். "ஹர ஹர மகாதேவா!" என்று முழங்கி, மக்கள் மீண்டும் தங்கள் உற்சாகத்தை வெளிப்படுத்தினர். "குடிமக்களே, சிவனின் கருணையால், இந்தக் குரங்கு மனிதர்களும் தேவர்களும் நம்மீது நடத்திய கொடுமையான தாக்குதலுக்கு நாம் அவர்களைப் பழி வாங்குவோம்."

"ஆமாம், நாம் பழி வாங்கியே தீருவோம்!" என்று கூட்டத்தினர் பதிலளித்தனர்.

பிரஹஸ்தன் புன்னகை பூத்தவாறு என் பக்கத்தில் நின்றான். நான் அவனிடம், "நாம் இந்த நகரை மீண்டும் கட்டியெழுப்பத் துவங்கலாம்," என்று கிசுகிசுத்தேன். அவன் குனிந்து பணிந்துவிட்டு, தனக்கே உரிய செயற்திறனுடன் என் உத்தரவை நிறைவேற்றுவதற்காக என்னிடமிருந்து விடைபெற்றான். நகர நிர்வாகம் மற்றும் பொறியியல் மந்திரியான பேராசிரியன் மயன் அங்கு வரவழைக்கப்பட்டான். ஒரு மிட்டாயைப் பெற்ற ஒரு மகிழ்ச்சியான குழந்தையைப்போல அவன் துள்ளியோடி வந்தான். நகரங்கள் ஏற்கனவே சிறப்பாக உருவாக்கப்பட்டிருந்ததால், அவற்றை வெறுமனே திறமையாக நிர்வகிக்கும் வேலையை மட்டுமே அவன் செய்ய வேண்டியிருந்தது. ஆனால் இப்போது, எரிந்து கிடந்த நகரத்தை மீண்டும் கட்டியெழுப்புவதற்கும், கடந்தகாலப் பெருமையை மீட்டுக் கொண்டு வருவதற்கும் அவனுக்கு இன்னொரு வாய்ப்பு வழங்கப்பட்டிருந்தது. என் இரண்டு மந்திரிகளும் மும்முரமாகக் கலந்து ஆலோசித்துக்

கொண்டிருந்தனர். நான் அந்த இடத்தைவிட்டு அகன்றேன்.

அரண்மனை இருளில் மூழ்கிக் கிடந்தது. இறந்து போன எனது மகனின் நினைவும் எனது தனிப்பட்ட இழப்பின் நினைவும் என்னை மீண்டும் தாக்கின. எனது ஆயிரக்கணக்கான குடிமக்களின் குரல்களிலிருந்து நான் பெற்றிருந்த ஆற்றலும், தோல்வியடைவதற்கு ஒருபோதும் சம்மதிக்காத அவர்களது மனப்போக்கும், என்னுடைய அரண்மனை வாசலிலேயே என்னிடமிருந்து விடைபெற்றுக் கொண்டன. மூழ்கியிருந்த துயரத்திலிருந்து விழித்தெழுந்து, தட்டுத் தடுமாறி நடந்து கொண்டிருந்த என் நகரத்தின் இரைச்சல், இருண்டு கிடந்த எனது அறையின் திரைச்சீலைகளால் மட்டுப்படுத்தப்பட்டு உள்ளே நுழைந்தது. என் தனிப்பட்ட இழப்பில் மூழ்கி நான் தனியாக அமர்ந்திருந்தபோது, தனது சிறு குழந்தையை இழந்திருந்த, துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருந்த ஒரு சாதாரணத் தகப்பனாக நான் ஆனேன். எனது குடிமக்களின் அன்புகூட எனக்கு அற்பமாகத் தோன்றியது. தெருவில் நான் சந்தித்த அந்த மூதாட்டியின் முன்னால் நான் வருந்தி நின்றது உட்பட, எல்லாமே ஒரு நாடகம்போலத் தோன்றியது. "துயரப்பட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின்மீது நான் உண்மையிலேயே அனுதாபம் கொண்டிருந்தேனா? அல்லது என்னைக் கல்லால் அடித்துக் கொல்லத் துடித்துக் கொண்டிருந்த ஒரு கோபமான கூட்டத்திடமிருந்து தப்பிப்பதற்காக உள்ளுணர்வுரீதியாக நான் அவ்வாறு நடந்து கொண்டேனா? எனது தனிப்பட்ட லட்சியங்களை அடைவதற்காக, என்னுடைய குடிமக்கள் பலரைத் துயரத்திற்கும் மரணத்திற்கும் நான் வழிநடத்தியிருந்தேனா?" போன்ற சந்தேகங்கள் என் மனத்தில் உலா வந்தன. என் மனம் உணர்ச்சியற்றுப் போயிருந்தது. "நான் என் மக்களை நேசித்தேன். ஒன்றுமில்லாத நிலையிலிருந்து துவக்கி, நான் ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கியிருக்கவில்லையா? காயப்படுத்தப்பட்ட, அடக்குமுறைக்கு ஆளாக்கப்பட்ட ஓர் இனத்திற்கு, சுயமதிப்பையும் பெருமையையும் நான் கொடுத்திருக்கவில்லையா? ஆனால் ஒருவேளை, இவை அனைத்தும் எனது கொள்கைகளால் வழிநடத்தப்படாமல், எனது சுயநலத்தின் காரணமாக மேற்கொள்ளப்பட்டிருந்தால்?" நான் ஏன் இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்? சுயநலமும் பேராசையும் மனிதகுலத்தின் முன்னேற்றத்திற்கான இரண்டு மாபெரும் தூண்கள் என்று ஒரு காலத்தில் நான் அவற்றைப் பெருமைப்படுத்தி இருக்கவில்லையா? அப்படியானால், நான் ஏன் ஒரு கசடுபோல உணர்கிறேன்? தனது மக்களை அழிவுக்கும் நரகத்திற்கும் இட்டுச் சென்ற ஒரு போலியைப்போல நான் ஏன் உணர்கிறேன்?

கதவு கிரீச்சிட்டது. ஒரு கணநேர அமைதிக்குப் பிறகு, கதவின்மீது சரிவாக விழுந்து கொண்டிருந்த சூரிய ஒளியில் என் அரசியின் உயரமான நிழலுருவம் தோன்றியது. அவள் மெதுவாக என்னை நோக்கி நடந்து வந்து, என்னருகே அமர்ந்தாள். அவளை நேருக்கு நேர் பார்ப்பதற்கான துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. என் கண்கள் ஈரமாக இருந்ததை நான் அறிந்தேன். நான் சிறிது அசைந்தால்கூட, என் கண்களில் தேங்கி நின்ற கண்ணீரை அது அவளிடம் காட்டிக் கொடுத்துவிடும். அவள் தன் கைகளை என் தோள்களின்மீது வைத்தாள். என் கண்களில் தேங்கிய கண்ணீர் என் கன்னங்கள்மீது வழிந்தோடியது.

“ராவணா, நான் எப்போதும் உங்களுடன் இருப்பேன். சீதையை அவளது கணவனிடம் விட்டுவிடாதீர்கள். அவன் அவளை எப்படி நடத்துவான் என்று நமக்குத் தெரியாது. எது வந்தாலும் சரி, நாம் இருவரும் சேர்ந்து அதை எதிர்கொள்ளலாம். சீதை நமது மகள். நான் உங்களைப் புரிந்து கொண்டுள்ளேன்,” என்று அவள் கூறினாள்.

நான் என் தலையை உலுக்கினேன். “என் மகள் எனது பாதுகாப்பை விரும்பாதபோது, நான் ஏன் அவளுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்ய வேண்டும்?” என்று நான் நினைத்தேன். அந்த நேரம்வரை சீதையை அந்தக் காட்டுமிராண்டிகளிடம் திருப்பி ஒப்படைப்பது பற்றி நான் யோசித்திருக்கவே இல்லை. ஆனால் மண்டோதரி அந்த விவகாரத்தைப் பற்றிப் பேச்செடுத்ததால், சீதையைத் தனது விதியிடம் ஒப்படைத்துவிட்டு, என் வாழ்க்கையின்மீது கவனம் செலுத்துவதென்று நான் சிந்திக்கத் துவங்கினேன். “என் மகளைக் காப்பாற்ற வேண்டும் என்ற சுயநலமான காரணத்திற்காக என் சொந்த மக்களுக்கு அழிவைக் கொண்டு வருவதற்கு நான் யார்?” என்று நான் யோசித்தேன். நான் ஒரு கச்சிதமான மனிதனாகவோ அல்லது ஒரு கச்சிதமான அரசனாகவோ இல்லாமல் போயிருக்கலாம், ஆனால் தங்களுடைய குழந்தைகளையும் தங்களுடைய மதிப்பையும் இழந்திருந்த மக்களின் சாபத்திற்கு நான் ஆளாக விரும்பவில்லை. அந்தச் சாபங்கள் என்னை என்றென்றும் துரத்துவதை நான் விரும்பவில்லை. போதும்! நான் விபீஷணனை அழைத்து, சீதையை ராமனிடம் ஒப்படைக்கும்படி அவனிடம் கூறுவேன்.

மண்டோதரி என் எண்ணங்களைப் படித்தவள்போல, “ராவணா, வேண்டாம். தேவர்கள் பெண்களை எவ்வாறு நடத்துகின்றனர் என்று நமக்குத் தெரியும். அவள் இப்போது நம்மிடையே வாழ்ந்துள்ளதால், அவர்கள் அவளைத் தூய்மையற்றவளாகக் கருதுவார்கள். நாம் ஏற்கனவே ஒரு குழந்தையை இழந்திருக்கிறோம்,” என்று கூறிவிட்டு, என் தோள்களை பலமாக அழுத்தினாள். “இன்னொரு குழந்தையையும்

நாம் இழந்துவிடக்கூடாது.”

அப்போது ஒரு காவலாளி அங்கு வந்து, “அரசே, பிரஹஸ்தன் உங்களை அரசவையில் சந்தித்துப் பேச உங்கள் அனுமதியை வேண்டுகிறார்,” என்று கூறினான். நான் என் மனைவியைப் பார்க்காமல் எழுந்து நின்று, போய் என் முகத்தைக் கழுவினேன். அந்தக் குளிர்ந்த நீரில், என் கண்ணீர் தாராளமாக வழிந்தோட நான் அனுமதித்தேன். கண்ணாடியில் நான் என்னைப் பார்த்தபோது, ஒரு முதியவன் என்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டேன். அவனுக்கு நரைத்தத் தலைமுடியும் லேசாக அரும்பியிருந்த தாடியும் இருந்தன. வீங்கிப் போயிருந்த அவனது கண்களைச் சுற்றி இருந்த கருவளையங்களும் சுருக்கங்களும், மனமுடைந்து போயிருந்த ஒரு மனிதனின் தோற்றத்தை அவனுக்குக் கொடுத்தன. என் இளமை எங்கே போய்விட்டது? கடவுள்களுக்குச் சவால்விட்ட ராவணன் எங்கே போனான்? மற்றவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமல், வாழ்க்கையில் ஏராளமானவற்றைச் சாதிக்க விரும்பியிருந்த அந்த அரசன் எங்கே போனான்? எண்ணற்ற யுத்தங்களை முன்னின்று நடத்தி, ஏராளமான நகரங்களை அழித்து, ஆண்களையும் பெண்களையும் கொன்று குவித்து, இந்த முத்துத் தீவிலிருந்து இந்தியாவிலுள்ள நர்மதை நதியின் தெற்குக் கரைகள்வரை பரந்து விரிந்திருந்த ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கிய அவனது ஆக்ரோஷமான இளமை எங்கே போனது? மாபெரும் அரசனான மகாபலியைவிட அதிகமாக அசுரர்களுக்கு சுயமதிப்பையும் பெருமையையும் பெற்றுக் கொடுத்த மனிதன் எங்கே போனான்? இயற்கை, இசை, கலை, வாழ்க்கை ஆகியவற்றின்மீதான நேசம் எங்கே போனது? ராவணன் எங்கே போனான்?

அதற்கான விடை, நிமிர்ந்த தலையுடன் என் அறையின் கதவருகே நின்றது. கண்ணாடியில் காணாமல் போயிருந்த ராவணன், உலகை வெற்றி கொள்வதற்கான வெறியுடனும், வாழ்க்கை குறித்தப் பசியுடனும், தனது இளமையின் பெருமையுடனும், கோடிக்கணக்கான கனவுகளுடனும், வாழ்வின் அனைத்து நல்ல விஷயங்கள் குறித்தத் தணியாத தாகத்துடனும் கதவருகில் நின்று கொண்டு, வாழ்வதற்கு என்னைத் திருப்பி அழைத்துக் கொண்டிருந்தான். என் மகன் மேகநாதன்தான் அவன். “அப்பா, மந்திரிகள் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றனர்,” என்று அவன் கூறினான்.

நான் அவனை நோக்கித் திரும்பி, என் அங்கவஸ்திரத்தைச் சரி செய்துவிட்டு, அவனது தோளின்மீது ஒரு கையை வைத்தேன். என்னால் அதற்குமேல் சுயபச்சாதாபத்தில் மூழ்கிக் கிடக்க முடியவில்லை. நான்

ஆட்சி செய்ய வேண்டிய ஒரு நாடு இருந்தது. என் மகனின் இளமைத் துடிப்பிடமிருந்து ஆற்றலைப் பெற்றுக் கொண்டு, அவன்மீது லேசாகச் சாய்ந்தபடி, என் வாழ்க்கையை மீண்டும் தொடர்வதற்காக என் அரசவையை நோக்கி நடந்தேன். தேம்பிக் கொண்டிருந்த என் மனைவியை என் அறையில் விட்டுவிட்டு, காற்றில் மிதந்து வந்த ஒலிகளை நான் செவிமடுத்தேன். ஒரு கொடூரமான தீவிரவாதத் தாக்குதலுக்குப் பிறகு தங்கள் நகரத்தையும் தங்கள் வாழ்க்கையையும் மீண்டும் கட்டியெழுப்பிக் கொண்டிருந்த எனதருமை மக்களான அசுரர்களின் சத்தம் அந்தக் காற்றில் மிதந்து வந்தது. நம்பிக்கை என்னுள் மீண்டும் துளிர்விடத் துவங்கியது. நான் என் மகனைப் பின்னால் விட்டுவிட்டு அரசவைக்குள் நுழைந்தேன். நான் என் அரியணையில் அமர்ந்தபோது, பழுதுபார்ப்புப் பணி ஏனோதானோவென்று செய்யப்பட்டிருந்ததைக் கண்டேன். இச்சிறிய எரிச்சலை ஒதுக்கிவிட்டு, நான் அரசவை நடவடிக்கைகளைத் துவக்கினேன். என் மனத்தில், நான் மீண்டும் ஒரு பேரரசனாகவும் உலகின் மாபெரும் அரசனாகவும் ஆனேன். இன்னும் வெற்றி கொள்ளப்பட வேண்டிய எராளமான யுத்தங்கள் எனக்காகக் காத்திருந்தன.

போர்த் திட்டங்களைப் பற்றி நாங்கள் விவாதித்தோம். பழி வாங்குவதற்கு நான் தனிப்பட்ட முறையில் துடித்துக் கொண்டிருந்தேன். என் மகளுக்காக ராமனை உயிரோடு பிடிக்க நான் விரும்பினேன். ஆனால், லட்சுமணன் என் சகோதரிக்கு இழைத்திருந்த கொடுமைக்காக அவனது தொண்டையை அறுக்கவும், அனுமானை என் வெற்றுக் கைகளால் கொல்லவும் நான் துடித்தேன். போருக்குத் திட்டமிடுவதிலும் அதற்கான உத்திகளை வகுப்பதிலும் ஏகப்பட்ட நேரம் விரயமாகிக் கொண்டிருந்ததைக் கண்டு நான் பொறுமையிழந்தேன். மேகநாதனும் பொறுமையின்றி இருந்ததை நான் கவனித்தேன். ஆனால், யுத்தத்தைப் பற்றி மறந்துவிட்டு, சமாதானத்தை நோக்கிச் செயல்பட எங்களை ஒப்புக் கொள்ள வைப்பதற்கு, விபீஷணன் கடைசியாக ஒரு முறை முயற்சித்துப் பார்த்தான். தானே தனிப்பட்ட முறையில் எனது தூதுவனாகச் சென்று, ராமனிடம் பேச்சுவார்த்தை நடத்துவதாக அவன் கூறினான். இலங்கையின் இளவரசன் ஒருவன், அமைதிப் பேச்சுவார்த்தைகளுக்காக அந்தக் காட்டுமிராண்டிகளிடம் போவது ஆபத்தானதாக இருக்கும் என்று பிரஹஸ்தன் கருத்துத் தெரிவித்தான். அவர்கள் அவனைப் பிணைக் கைதியாகப் பிடித்து வைத்துக் கொண்டு, பதிலுக்கு, சீதையைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்கக்கூடும் என்று அவன் கூறினான். இறுதியில், குறிப்பிடத்தக்க அளவு கொண்ட ஒரு படையுடன் விபீஷணன் ஒரு தூதுவனாகச் செல்வதென்றும்,

வருணனின் கடற்படை, கடலிலிருந்து அவனைப் பாதுகாக்கும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. ராமன் நியாயமான பேச்சுவார்த்தைக்கு உடன்படாவிட்டால், போரிட்டு அவனைக் கைது செய்து கொண்டு வருவதாக விபீஷணன் எங்களுக்கு உறுதியளிக்கவும் செய்தான்.

பிரஹஸ்தனுக்கு இதில் துளிகூட உடன்பாடு இருக்கவில்லை. “நாம் விரைவாகச் செயலில் இறங்கி, ராமனின் அற்பப் படையை ஒழித்துக்கட்டிவிட வேண்டும். அவன் எதிர்பார்க்காத நேரத்தில் நாம் தாக்குதல் நடத்த வேண்டும். போரின் வழக்கமான விதிமுறைகள் இம்முறை பொருந்தாது. ஏனெனில், ஓர் அசுர இளவரசியை விகாரப்படுத்தி, அசுர சாம்ராஜ்யத்திற்கு எதிராகத் தீவிரவாத நடவடிக்கைகளில் ஈடுபட்டு அவர்கள்தான் முதலில் சண்டையைத் துவக்கினர்,” என்று அவன் கூறினான். விபீஷணன் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. நான் களைத்துப் போனேன். இறுதியில், ஒரு தூதுவனாகப் போவதற்கு விபீஷணனுக்கு நான் அனுமதியளித்தேன். ராமன் ஏதேனும் இழிவான தேவத் தந்திரங்களைப் பயன்படுத்த முயற்சித்தால், வருணன் தன் படையினருடன் அதைச் சமாளிப்பதற்குத் தயாராக இருக்க வேண்டும் என்று நான் வருணனுக்கும் அறிவுறுத்தினேன்.

பிரஹஸ்தன் பெருங்கோபம் கொண்டான். ஆனால் நான் என் தீர்மானத்தை அறிவித்தவுடன், இளவரசன் விபீஷணன், சிறப்பாகப் பயிற்றுவிக்கப்பட்ட வீரர்களைத் தன்னுடன் அழைத்துச் செல்வதை உறுதி செய்வதற்குத் தேவையான அனைத்து ஏற்பாடுகளையும் பிரஹஸ்தன் செய்தான். சோர்வடைந்திருந்த நான், அரசவையைக் கலைத்துவிட்டு என் அறைக்குத் திரும்பினேன். எனக்கு மிகவும் களைப்பாக இருந்தது. ஒருசில மணிநேரத்திற்கு முன்பு என் செல்ல மகனின் உடலைத் தகனம் செய்துவிட்டு வந்திருந்த எனக்கு நல்ல தூக்கம் தேவைப்பட்டது.



# 45

## சூழ்ந்தன போர் மேகங்கள்

பத்ரன்

முற்றுகை துவங்கியது. இன்றியமையாத பொருட்கள் சந்தையிலிருந்து மாயமாய் மறைந்தன. விலைவாசி விண்ணைத் தொட்டது. மோசமான காலகட்டம் நிலவியது. ஆனால், சொரசொரப்பான கைகளுடனும் கந்தலான ஆடைகளுடனும் யார் கண்ணிலும் புலப்படாமலும் தகுதியற்றவர்களாகவும் அமைதியாகவும் இருந்த என்னைப் போன்ற மக்கள், நல்ல நேரங்கள் நிலவியபோதும் துன்புற்றோம். மோசமான சமயங்களில் நாங்கள் பட்டினியால் மடிந்தோம். எந்த நேரத்திலும் நிகழவிருந்த யுத்தத்தைப் பற்றி நாங்கள் கிசுகிசுப்பான குரல்களில் பேசிக் கொண்டோம். இளைய தலைமுறையினரில் பலர், லேசான மோதல்களைக்கூட ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. மேகநாதன் வட திசையை நோக்கிப் படையெடுத்தபோது, அவனுக்குத் துணையாகச் சிலர் சென்றிருந்தனர், ஆனால் அந்த யுத்தங்கள் அனைத்தும் அயல் நாடுகளில் நடைபெற்ற யுத்தங்கள். அந்த யுத்தங்களில் கொல்லப்பட்டவர்களும்

கற்பழிக்கப்பட்டவர்களும் சூறையாடப்பட்டவர்களும், வேற்று நாடுகளைச் சேர்ந்த, எங்களைப் போன்ற ஏழைகள்தான், எங்களைப்போலப் பசியால் வாடியவர்கள்தான். இதில் ஒரே வித்தியாசம், அவர்கள் வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள், அவர்களுடைய தோலின் நிறமும் வேறு, அவ்வளவுதான். ஆனால் அந்த யுத்தம் இப்போது எங்கள் நாட்டிற்கு வந்து கொண்டிருந்தது. ஒருபோதும் கலையாத பனிமூட்டத்தைப்போல, காற்றில் பயம் நிரம்பியிருந்தது.

ஒரு முட்டாள் அரசன் எங்களுக்கு வாய்த்திருந்தார். இல்லையென்றால், இந்த முட்டாள்தனத்திற்கு வேறு என்ன விளக்கம் அளிக்க முடியும்? சாலையில் சென்று கொண்டிருக்கும் எந்தவொரு சாதாரண மனிதனையும் கேட்டுப் பார்த்தால், இளவரசன் விபீஷணன் எப்படிப்பட்டத் தீயவன் என்பதையும் எப்படிப்பட்டப் பாசாங்குக்காரன் என்பதையும் அவன் தெளிவாகக் கூறுவான். ராவணனைப் போன்ற, ஏமாளியான, வெகுளியான ஓர் அரசனால்தான் இப்படிப்பட்ட ஒரு காரியத்தை விபீஷணனையும் வருணனையும் நம்பி ஒப்படைத்திருக்க முடியும். ஒருசில நாட்களுக்கு முன்பு, ஒரு பிரம்மாண்டமான பொது விழாவிற்குப் பிறகு, இளவரசன் விபீஷணனை, பொதுமக்கள் கோலாகலமாக வழியனுப்பி வைத்தனர். அசுரக் கொடிகளைக் கைகளில் பிடித்தபடி ஆயிரக்கணக்கான மக்கள் கடற்கரையில் கூடினர். ராமனைச் சிறைபிடித்து அவனது குரங்குகளின் கொட்டத்தை அடக்குவதற்காக, இலங்கையின் ஒட்டுமொத்தக் கடற்படையையும் அசுரக் காலாட்படையின் முக்கால்வாசி வீரர்களையும் சுமந்து கொண்டு, நாற்பத்தியிரண்டு போர்க்கப்பல்கள் இந்தியாவை நோக்கிப் பயணித்தன. அமைதிப் பேச்சுவார்த்தை வெறும் தந்திர உத்திதான் என்பதை எல்லோரும் அறிந்திருந்தனர். அந்தக் காட்டுமிராண்டி தேவ இளவரசனான ராமனைச் சங்கிலிகளால் பிணைத்துக் கூட்டிக் கொண்டு, பதினைந்து நாட்களுக்குள் அக்கப்பல்கள் திரும்பி வந்துவிடும் என்று நாங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்தோம்.

ஆனால் இருபது நாட்களுக்குப் பிறகும் அசுரக் காலாட்படையைப் பற்றியோ அல்லது கப்பற்படையைப் பற்றியோ எந்தத் தகவலும் வரவில்லை. மகாபலிபுரத்திற்கு அருகிலிருந்த கடற்கரையில் அமைந்த சிவன் கோவிலின் அருகே, குரங்கு மனிதர்கள் அசுரப் படையினரைத் தோற்கடித்திருந்ததாக வதந்திகள் வேகமாகப் பரவின. ஆனால் விபீஷணன் கட்சி மாறிவிட்டிருந்ததாக என்னைப் போன்ற சந்தேகவாதிகள் நினைத்தனர். அப்போது அரசாங்கத்திடமிருந்து ஓர் அறிவிப்பு வந்தது. நாங்கள் நினைத்தது சரியாக இருந்தது. இளவரசன் விபீஷணனும் கடற்படைத் தளபதி வருணனும் ராமனோடு சேர்ந்து

கொண்டிருந்ததாக இலங்கைத் தீவின் அனைத்து மூலைகளிலும் அறிவிக்கப்பட்டது. அரியணையைத் தன்னிடம் கொடுத்துவிட்டு, சீதையை ராமனிடம் ஒப்படைக்கும்படி விபீஷணன் தனது சகோதரனான பேரரசனுக்குத் துணிச்சலாகச் செய்தி அனுப்பியிருந்தான். மகாபலிபுரத்தில் நடத்தப்பட்ட ஒரு விழாவில், விபீஷணனை இலங்கையின் அரசனாகவும் அசுரர்களின் அரசனாகவும் ராமன் அறிவித்திருந்ததால், ராவணன் இனி அசுரர்களின் சக்கரவர்த்தி அல்ல என்று வருணனும் தன் பங்கிற்குச் செய்தி அனுப்பியிருந்தான். அதோடு கூடவே, அசுரக் காலாட்படையின் பெரும்பகுதியும், அசுரக் கடற்படையின் பெரும்பகுதியும் தேவர்கள் பக்கம் சேர்ந்துவிட்டிருந்ததாகவும் அந்த இரண்டு வில்லன்களும் ஒரு கடிதத்தில் கையெழுத்திட்டு அனுப்பியிருந்தனர்.

ராவணன் வெற்றி பெறுவதற்கான எந்த வாய்ப்பும் இருக்கவில்லை. இலங்கையை இரண்டாவது சீரழிவிலிருந்தும் தேவையற்ற ரத்தச் சிதறலிலிருந்தும் பாதுகாப்பதற்கு, ராவணன் தன் அரியணையை விபீஷணனிடம் அமைதியாக ஒப்படைத்துவிட்டு, அவர் தன் உயிரை மதித்தால் தன் குடும்பத்தினரோடு இயமமலைக்குச் சென்று நிரந்தரமாகத் தங்குவதுதான் ஒரே வழியாக இருந்தது. ஆனால் அவரோ, அந்த தேவக் காட்டுமிராண்டிகளிடமிருந்தும், பிராமணத்துவத்தையும் சாதி அமைப்புமுறையையும் நிறுவ விரும்பிய நயவஞ்சக அசுரர்களிடமிருந்தும் தங்கள் தாய்நாட்டையும் தங்கள் கலாச்சாரத்தையும் பாதுகாப்பதற்காக வீறு கொண்டு எழுந்து போரிடுமாறு தன் குடிமக்கள் ஒவ்வொருவரிடமும் வலியுறுத்தினார். அடுக்குமுறை அதிகாரமற்ற அல்லது சாதிப் பாகுபாடற்ற ஒரு செழிப்பான, சமத்துவமான வாழ்க்கை, இலங்கையிலோ அல்லது இந்தியாவிலோ வாழ்ந்த எல்லாக் குடிமக்களுக்கும் வாய்த்திருக்கவில்லை என்பதுதான் உண்மை. அசுரச் சமுதாயத்திற்குள் மெல்ல மெல்ல ஊடுருவியிருந்த சாதி அமைப்புமுறையையும், தோலின் நிறத்தைக் கொண்டு மக்கள் பாரபட்சமாக நடத்தப்பட்டதையும் கண்டு நாங்கள் கொதிப்படைந்திருந்தபோதும், ராவணனின் ஆட்சி குறித்து நாங்கள் பின்வருத்தம் கொண்டிருந்தபோதும், அசுரச் சமுதாயம் சீரழிந்திருந்ததற்கு எங்கள் அரசன் நேரடிப் பொறுப்பு அல்ல என்பதை எங்கள் இதயங்களில் நாங்கள் அறிந்திருந்தோம். உண்மையில், விபீஷணனும் அவனது பிராமணச் சீடர்களும், மக்களைப் பாகுபடுத்திய மதத்தைப் பின்வாசல் கதவு வழியாக வஞ்சகமாக அறிமுகப்படுத்த முயற்சித்திருந்தும்கூட, இந்தியாவின் வடக்கிலிருந்து மெல்ல நுழைந்த சாதி அமைப்புமுறையை ராவணனும் பிரஹஸ்தனும் சேர்ந்து

தடுத்திருந்தனர். இப்போது அதே விபீஷணன், தேவ அரசனோடு சேர்ந்து கொண்டு, ராவணனை அரச பதவியிலிருந்து தூக்கியெறியப் போவதாக அச்சுறுத்தியிருந்தான். விபீஷணனுக்கும் பிராமணர்களுக்கும் உச்சகட்ட அதிகாரம் கொடுக்கப்பட்டால், வாழ்க்கை எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார்ப்பதற்கு மக்கள் நடுங்கினர். நாங்கள் மிகவும் பயந்து போயிருந்தோம்.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையேயான இறுதி யுத்தத்திற்கான ஏற்பாடுகள் துவங்கியிருந்தன. இரண்டு நாகரீகங்களின் இறுதி மோதலாக அது இருக்கும். எங்கள் தலைவிதியைத் தீர்மானிக்கவிருந்த இந்த யுத்தத்தில், அசுரர்கள் தங்களது ஒரு கை தங்கள் முதுகிற்குப் பின்னால் கட்டப்பட்ட நிலையில் போரிடவிருந்தனர். சாமானியர்களான எங்களைப் பொறுத்தவரை, ராவணனுடைய முந்தைய படையெடுப்புகளில் நாங்கள் கலந்து கொண்டதற்கான ஒரே காரணம், கொள்ளையடிக்கப்பட்டவற்றைப் பங்கு போட்டுக் கொள்வதற்காக மட்டும்தான். இந்திரன் இந்தியாவை முற்றுகையிட்டபோது பத்து அரசர்களும் எதிர்கொண்ட அதே போன்ற தாக்குதலை, நெடுங்காலத்திற்குப் பிறகு, சிறப்பாக நிறுவப்பட்டிருந்த அசுர சாம்ராஜ்யம் எதிர்கொள்ளவிருந்தது. சமத்துவத்தையும் சுதந்திரத்தையும் கொண்ட ஒரு கலாச்சாரத்தையும், பௌதீக இன்பத்தை மிகவும் மதித்து வாழ்க்கையைக் கொண்டாடிய ஒரு பாரம்பரியத்தையும் உள்ளடக்கிய ஒரு தனித்துவமான வாழ்க்கைமுறை, இன்னொரு கலாச்சாரத்திடமிருந்து ஓர் இறுதித் தாக்குதலை எதிர்கொள்வதற்குத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டது. இது ராவணனுக்கும் ராமனுக்கும் இடையேயான ஒரு தனிப்பட்ட விவகாரமாக இருந்த காலம் மலையேறியிருந்தது. துவக்கத்தில், சீதையின்மீது ராவணன் மோகம் கொண்டிருந்ததாகவும், அது அசுரர்களுக்குத் துரதிர்ஷ்டத்தைக் கொண்டு வந்திருந்ததாகவும் நினைத்து மக்கள் ராவணனை வெறுத்தனர். ஆனால், சீதை ஓர் அசுர இளவரசி என்றும், அவள் எங்கள் அரசனின் சொந்த மகள் என்றும் உலா வந்த வதந்திகளை மக்கள் செவிமடுத்தபோது, இளவரசியை ராமனின் கைகளில் ஒப்படைப்பது குறித்து மக்கள் பீதியடைந்தனர். ஆனால் எங்கள் அரசனால் தனது தனிப்பட்ட விவகாரங்களுக்காக எங்களை ஒரு யுத்தத்திற்கு இழுக்க முடியாது. அது ஒரு குடும்பத் தகராறு. நாங்கள் அதற்கான விலையைக் கொடுத்துக் கொண்டிருந்தோம். அது மட்டுமல்லாமல், எனது வளர்ப்பு மகனும், அவரது சொந்த ரத்தமுமான அதிகாயனை அவர் நடத்தியிருந்த விதத்திற்காகவும் அவரை என்னால் மன்னிக்க முடியவில்லை. ஆனால் சீதையைப் போலன்றி, அதிகாயனைச் சுமந்திருந்த கருப்பை, ஒரு கருப்பு

வேலைக்காரியினுடையதே தவிர, ஒரு மாபெரும் அறிவியலறிஞனின் மேட்டுக்குடி மகளுடையது அல்ல. நன்மைக்கும் தீமைக்கும் இடையேயான இறுதி யுத்தத்திற்காக அசுரர்கள் தயாராயினர்.

அசுரக் காலாட்படையையும் குதிரைப் படையையும், ருத்ராக்கன், தெருக்களின் ஊடாக ஊர்வலமாக நடத்திச் சென்றான். மக்கள் நடுக்கத்தோடு நடமாடினர். வீரர்களும் பாதுகாப்புக் காவலர்களும் பதற்றத்தோடும் எரிச்சலோடும் இருந்தனர். அவர்கள் எந்தக் காரணமுமின்றி மக்களைப் பார்த்துக் கத்தினர் அல்லது அவர்களை அடித்தனர். பிறகு, கோட்டைக்கு வெளியே இருந்த மக்களும், விரிகுடாவிற்கு அருகே வாழ்ந்த மீனவர்களும் தங்களது வளர்ப்புப் பறவைகளுடனும் விலங்குகளுடனும் வந்து சேர்ந்தனர். மக்கள் நடைபாதைகளில் வசிக்கத் துவங்கினர். அப்போது, குரங்கு மனிதர்கள் நீரின் குறுக்காக ஒரு பாலம் கட்டிக் கொண்டிருந்ததாக, துறைமுகத்திற்கு அருகே வாழ்ந்த அசுரர்கள் செய்தி கொண்டு வந்தனர். கேட்பதற்கு அது வினோதமாகவும் பிரமிப்பாகவும் பயமுறுத்துவதாகவும் இருந்தது. ஆனால் அந்தப் பாலம், அங்குலம் அங்குலமாக எங்களது குட்டித் தீவை நோக்கித் தொடர்ந்து முன்னேறியது. அது எவ்வளவு நீளமாக வளர்ந்ததோ, எங்கள் பயமும் அவ்வளவு அதிகமாக அதிகரித்தது. மக்கள், கோவில் கோபுரங்களின்மீதும், மர உச்சிகளின்மீதும், அல்லது ஏதேனும் ஒரு மேட்டுப் பகுதியின்மீதும் ஏறிக் கொண்டு உற்சாகக் குரல்களில் பேசிக் கொண்டனர்.

அசுரர்களின் பாரம்பரியத் தற்காப்புக் கலையான களரிச் சண்டையைக் கற்றுக் கொடுத்த மையங்கள் இரவோடு இரவாக முளைத்தன. இளைஞர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என்ற பாகுபாடின்றி, வாள்கள், ஈட்டிகள், வில்கள் மற்றும் அம்புகள், மற்றும் இன்னும் பலதரப்பட்ட ஆயுதங்களைத் தாங்கியபடி அசுரர்கள் அனைவரும் தெருக்களை நிறைத்தனர். ஆயுதங்களை ஏந்தி எதிரிகளை எதிர்த்துப் போராடுமாறு ராவணன் தனது குடிமக்களை உற்சாகப்படுத்தினார். முன்பு சாதாரண அசுரர்கள் நுழைவதற்கு அனுமதி மறுக்கப்பட்டக் கோவில்கள், இப்போது தற்காலிகப் படை முகாம்களாக மாறின. அசுர சாம்ராஜ்யத்தில் பிராமணத்துவத்திற்கு மாறியிருந்த மேட்டுக்குடி மக்களில் பெரும்பாலானவர்கள் ராமனின் படையில் சேர்வதற்காக இலங்கையைவிட்டுச் சென்றிருந்ததால், அசுரச் சமுதாயத்தின்மீது அவர்கள் திணித்திருந்த பிரிவினை இரவோடு இரவாகக் காணாமல் போனது. சமுதாயத்தில் முன்பு நிலவிய சமத்துவ உணர்வு அசுரர்களிடம் திரும்பி வந்திருந்தது. நாங்கள் இப்போது எங்கள் கலாச்சாரத்திற்காகவும், எங்கள் இனத்திற்காகவும், எங்கள்

வாழ்க்கைமுறைக்காகவும், எங்கள் பாரம்பரியங்களுக்காகவும் சண்டையிட்டுக் கொண்டிருந்தோம். இந்தியாவைச் சேர்ந்த ஏழைகளுக்கும் கீழ்த்தட்டு மக்களுக்கும் சமத்துவத்தை அடைவதற்கான ஒரு வாய்ப்புக் கிடைக்குமா இல்லையா என்பதைத் தீர்மானிக்கவிருந்த கடைசி யுத்தம் இதுதான். ஈவு இரக்கமற்றச் சாதி அமைப்புமுறைக்கும் தீண்டாமைக்கும் எதிரான ஒரு போர் அது. இழிவான பிராமணத்துவத்திற்கு எதிரான ஒரு யுத்தம் அது. இதிலிருந்த வேடிக்கையைக் கண்டு நான் புன்னகைத்தேன். பிராமணத்துவத்திற்கு எதிரான ஒரு யுத்தம், தனது பிராமணப் பரம்பரை குறித்து ரகசியமாகப் பெருமிதம் கொண்டிருந்த ஓர் அரசனின் கீழ் நடத்தப்படவிருந்தது. ஆனாலும், எங்களைப் போன்ற ஏழைகளும் துரதிர்ஷ்டசாலிகளும் கருப்பர்களும் தேர்ந்தெடுப்பதற்கு வேறு என்ன இருந்தது? இந்நாட்டின் கருப்பர்களாகிய எங்களுக்கு இதுவரை வாய்த்திருந்த அரசர்களில், ராவணன்தான் சிறந்தவராக இருந்தார். அவரது தவறுகள் ஒரு பக்கம் இருந்தாலும், அவர் இரக்க உணர்வு கொண்டவராக இருந்தார். ராவணன் வேண்டாம் என்றால், எங்களை ஆள்வதற்கு வேறு யார் இருந்தார்கள்? ராமனோ அல்லது விபீஷணனோதான். இவர்கள் இருவரது ஆட்சியையும் கற்பனை செய்து பார்க்கவே நடுக்கமாக இருந்தது.

இந்த யுத்தம், இந்தியாவின் எதிர்காலத்தையும் அதன் கோடிக்கணக்கான கருப்பர்கள் மற்றும் ஏழைகளின் எதிர்காலத்தையும் தீர்மானிக்கும் என்பதை ஒவ்வொரு சாதாரண அசுரனும் உள்ளுணர்வுரீதியாக அறிந்திருந்தான். இந்த யுத்தத்தில் அசுரர்கள் தோல்வியடைந்து ராமன் வெற்றி பெற்றால், நாங்கள் என்றென்றைக்குமாகப் படுகுழியில் தள்ளப்பட்டுவிடுவோம். ஒரு தெருநாயின் வாழ்க்கையைவிட அதிக மோசமான வாழ்க்கை எங்களுக்காகக் காத்திருக்கும் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். நாங்கள் ராவணனுக்காகப் போராடுவோம். இந்த யுத்தத்திற்காக நாங்கள் எங்கள் ரத்தத்தையும், எங்கள் வாழ்க்கையையும், எங்களிடமுள்ள எல்லாவற்றையும் கொடுப்போம். ஏனெனில், நாங்கள் இதில் தோற்றுப் போனால், வாழ்க்கையைவிட அதிக விலையுயர்ந்த ஒன்றை நாங்கள் இழந்துவிடுவோம். பிறகு, நம்பிக்கையற்ற, இருண்ட எதிர்காலம் ஒன்றுதான் எங்கள் குழந்தைகளுக்காகக் காத்திருக்கும். நாங்கள் பீதியடைந்தும் பசியோடும் தாகத்தோடும் இருந்தோம், ஆனாலும் ராமனையும் அவனது வானரர்களையும் எதிர்த்துச் சண்டையிடுவதற்கு நாங்கள் ஆர்வத்தோடு காத்திருந்தோம். நாங்கள் வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகள் குறைவாகவே இருந்தன. அதை

நாங்கள் நன்றாகவே அறிந்திருந்தோம். ஆனால் இறுதிவரை போராடிப் பார்த்துவிடுவது என்று நாங்கள் உறுதியாக இருந்தோம். எங்கள் தலைவிதியைத் தீர்மானிக்கவிருந்த ஒரு யுத்தம் இது. நன்மைக்கும் தீமைக்கும் இடையேயான ஒரு யுத்தம் இது. தீமை வெற்றி பெறுவதற்கு சிவன் ஒருபோதும் அனுமதிக்க மாட்டார் என்று நாங்கள் உறுதியாக நம்பினோம்.

ஆனாலும், கடவுள்களின் முக்கியத்துவமற்றக் குழந்தைகள் நாங்கள் என்பதையும், கருணையும் சர்வ வல்லமையும் படைத்த சிவனைப் போன்ற கடவுள்கூட எங்கள் தோலின் நிறத்தைப் பார்த்து முகஞ்சுளிப்பார் என்பதையும் என் மனத்தின் ஓர் ஆழமான மூலையில் நான் அறிந்திருந்தேன்.



# 46

## என் மக்களுக்காக

ராவணன்

அரண்மனை இருட்டாக இருந்தது. ஈரம் கலந்த காற்றின் ஊடாக வினோதமான சத்தங்கள் வந்தன. ஓர் இலைகூட அசையவில்லை. கடலை நோக்கி இருந்த இந்தத் தாழ்வாரத்தில் நான் உட்கார்ந்திருந்தேன். தோல்வியும் மரணமும் என் முகத்தை வெறித்துக் கொண்டிருந்தன. நெடுங்காலத்திற்கு முன்பே, கடல் கொந்தளித்த அந்த இரவில், வருணனை நான் அந்தச் சீற்றமான கடலுக்குள் தூக்கிப் போடாமல் போயிருந்தது குறித்து என்னை நானே கடிந்து கொண்டேன். நான் உணர்ச்சியற்றுப் போயிருந்தேன். கண்ணீராலும் கடின உழைப்பாலும் மரணத்தாலும் நான் கட்டியெழுப்பியிருந்த வாழ்க்கை என் கண்முன்னால் சுக்குநூறாகிக் கொண்டிருந்தது. எனது அரண்மனைச் சேவகர்கள், பல மணிநேரத்திற்கு முன்பு ஏற்றியிருந்த தீப்பந்தங்களும் விளக்குகளும் மெல்ல மெல்ல இறந்து கொண்டிருந்தன. அரண்மனைத் தோட்டத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக, ஒருசில எண்ணெய் விளக்குகள், பிழைத்திருப்பதற்கான ஓர் இறுதிப்

போராட்டத்தில் ஈடுபட்டிருந்தன.

பல மணிநேரமாக என் மனம் ஒரு வெற்றுக் காகிதத்தைப்போல இருந்திருந்தது. பிறகு, நெற்றியின் இரு பக்கங்களிலும் ஒரு சிறிய வலியோடு திடீரென்று துவங்குகின்ற ஒரு தலைவலியைப்போல, என் உணர்ச்சிகள் என்னிடம் திரும்பி வந்தன. நான் என் மகளைப் பார்க்க விரும்பினேன். ஆனால் நான் அந்த எண்ணத்தை என் மனத்திலிருந்து தூக்கியெறிய முயற்சித்தேன். சிறிது நேரம் அது அடங்கியிருந்தது. ஆனால் விரைவில் அது மீண்டும் என்னைப் பிடித்துக் கொண்டது. நான் எழுந்து நின்று, என் மகள் வாழ்ந்து வந்த பெரிய அசோக மரத்தை நோக்கி நடந்தேன். அந்த இடம் இருட்டாக இருந்தது. அரண்மனைச் சன்னல்கள் வழியாக வெளியேறிய வெளிச்சம், புதர்ச்செடிகளின்மீது பெரிய நிழல்களைத் தோற்றுவித்து, அவற்றைப் பயங்கரமானவையாகத் தோன்றச் செய்தது. நான் அசோக மரத்தை நெருங்கியபோது, ஒரு பறவை தன் சிறகுகளைப் படபடவென்று சத்தமாக அடித்துக் கொண்டு பறந்து போனது. எலிகள் வேகவேகமாக என்னைக் கடந்து சென்றன. ஒரு வௌவால், ஆபத்தான விதத்தில் என் தலைக்கு வெகு அருகே பறந்து வந்து, பிறகு தனது பாதையை மாற்றிக் கொண்டு இருட்டிற்குள் காணாமல் போனது.

என் மகள் தூங்கிக் கொண்டிருந்தாள். குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த இரண்டு அசுர வீராங்கனைகளுக்கு நான் அங்கு வந்திருந்தது குறித்து எந்தப் பிரக்ஞையும் இருக்கவில்லை. “அவளுக்கு இவர்கள் பாதுகாப்பா?” என்று நான் நினைத்தேன். என் கைகளின் நடுக்கம் குறித்து எனக்கே என்மீது வெறுப்பு ஏற்பட்டது. நான் என் மகளைத் தொட்டு, நான் ஒருபோதும் பார்த்திராத அவளது குழந்தைப்பருவத்திற்குத் திரும்பிப் போக விரும்பினேன். என் கைக்குழந்தையின் சிறிய விரல்களைத் தொட்டு, அவளை என் கைகளில் போட்டுத் தாலாட்டி, அவள் வளர்வதைப் பார்க்க விரும்பினேன். இருண்ட மேகங்களை உடைத்துக் கொண்டு நிலவொளி பாய்ந்து வந்தது. நிலவின் இன்னோர் ஒளிக்கீற்று லேசாகத் தயங்கியபடியே அசோக மரத்தின் இலைகளின் ஊடாகப் பாய்ந்து வந்து, தேவதையை ஒத்த அவளது முகத்தைப் பிரகாசிக்கச் செய்தது. மங்கலான நிலவொளி, தோட்டத்தின் நிழல்களுடன் கண்ணாமூச்சி விளையாடியது. அவளது கண்களின் முனையிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் அவளது அழகான மூக்கின் மேலாக வழிந்து, மூக்கின் நுனியில் நின்று, பிறகு கீழே விழுந்தது. என் மகள்மீது எனக்கு அனுதாபம் ஏற்பட்டது. அவள் தன் கணவனின் அன்பிற்காக ஏங்கினாள். தான் நேசித்த ஒருவனிடமிருந்து அவளை வலுக்கட்டாயமாகக் கூட்டி வந்ததன் மூலம் நான்

தவறிழைத்துவிட்டேனா? திடீரென்று எனக்குக் கோபம் ஏற்பட்டது. அவளால் ஏன் தன் தந்தையின் அன்பைப் பார்க்க முடியவில்லை? நான் சம்பாதித்திருந்த அனைத்துச் செல்வத்தையும் மறக்கச் செய்யும் அளவுக்கு அந்த ராமனிடம் அப்படி என்னதான் இருந்தது? பிறகு என் கோபம் கரைந்து, ஒரு நிராதரவான உணர்வு என்னுள் மேலோங்கியது. நான் அவளுக்குத் தவறிழைத்திருந்தேன். அவளுக்கு மிகவும் தேவைப்பட்ட நேரத்தில் நான் அவளைக் கைவிட்டிருந்தேன். நான் ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்குவதில் மும்முரமாக இருந்தேன். வெற்றிக்கான என் முட்டாள்தனமான பந்தயத்தில் என் மகளின் குழந்தைப்பருவத்தை நான் தொலைத்திருந்தேன். இப்போது அவள் தன் கணவனின்மீது தீராத காதல் கொண்டிருந்தாள். நான் அவளை அவனிடமிருந்தும் பறித்திருந்தேன். அவ்வாறு செய்ததற்காக என்னை நானே வெறுத்தேன். ஆனால் அவளால் ஏன் புரிந்து கொள்ள முடியவில்லை? அவளது கணவன் அவளை ஒருபோதும் தன்னுடன் அழைத்துச் செல்ல மாட்டான். அவன் எனது நகர வாசலில் நின்று, வயதான எனக்கு மரணத்தையும் அழிவையும் முழங்கிக் கொண்டிருந்தது, தன் மனைவியின்மீதான காதலால் அல்ல. அவன் உண்மையிலேயே தன் மனைவியை நேசித்தானா? நான் என் குழந்தையை மீண்டும் இழக்க விரும்பவில்லை. அவன் அவளை என்னிடமிருந்து எடுத்துச் செல்வதை நான் விரும்பவில்லை. அவள் ஓர் அசுர இளவரசி. அவள் என் மகள். நான் அவளை ஒருமுறை தொலைத்திருந்தேன். அது மீண்டும் நிகழ நான் ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன்.

உள்ளுணர்வு உந்தித் தள்ள, அவள் கண்விழித்து, பரிதாபமும் குழப்பமும் கலந்த ஒரு முகத்தோடு நான் அங்கு நின்று கொண்டிருந்ததைக் கண்டாள். தனது பெற்றோராகிய எங்களுடன் தங்கிவிடுவதற்கு நான் அவளை ஒப்புக் கொள்ள வைக்க விரும்பினேன். ஆனால் நான் அவளை நோக்கி அடியெடுத்து வைத்தபோது அவள் அலறினாள். நான் தடுமாறிப் பின்வாங்கினேன். என்மீது எனக்கே அருவருப்பாக இருந்தது. அவள் என்னைப் பழித்துரைத்தாள், கட்டுப்படுத்த முடியாமல் அழுதாள், தன்னைக் காப்பாற்றுவதற்காகத் தன் கணவனை அழைத்தாள். அவளுக்குக் காவலாக இருந்த அசுரப் பெண்கள் திடுக்கிட்டு விழித்து, குழப்பத்தோடு பார்த்தனர். ஆனால் அவர்கள் என்னைப் பார்ப்பதற்கு முன்பாக, நான் நிழல்களுக்குள் ஓடிச் சென்று, என் அரண்மனையை நோக்கி விரைந்தேன். நான் என் படுக்கையறைக்குள் நுழைந்தபோது என் இதயம் வலி தாளாமல் அழுதது. மண்டோதரி எங்கள் படுக்கையின்மீது உட்கார்ந்திருந்தாள்.

என்னால் அவளுடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை.

"நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்?" என்று அவள் கேட்டத் தொனி சற்றுத் தீவிரமானதாக இருந்தது. நான் வெறுமனே என் தோள்களைக் குலுக்கிவிட்டு, அவளுக்கு முதுகு காட்டிப் படுத்துக் கொண்டேன். எல்லாவற்றைக் குறித்தும் எனக்குக் கோபமாகவும் வெறுப்பாகவும் இருந்தது. "அவள் ஏன் என் வாழ்க்கைக்குள் வந்தாள்?" என்று என்னை நானே கேட்டுக் கொண்டு என் படுக்கையின்மீது புரண்டேன். ஆனால் அந்த எண்ணம் என்னவிட்டுப் போக மறுத்தது. கூடவே, அர்த்தமற்ற எண்ணங்களும் என் மனத்தை அலைக்கழித்தன. அமைதியான தூக்கம் என்னிடமிருந்து விலகி ஓடியது. மனச்சோர்வும் தோல்வியுணர்வும் மெல்ல மெல்ல என்னுள் தலைதூக்கின. நான் எல்லாவற்றையும் ஒரு முடிவுக்குக் கொண்டுவர விரும்பினேன். வாழ்க்கையில் எந்த அர்த்தமும் இருக்கவில்லை. அனைத்தும் பயனற்றவையாக இருந்தன. நான் புரண்டு புரண்டு படுத்தேன். பிறகு ஒருவித மயக்க நிலைக்குள் புகுந்தேன்.

கிழக்கு வானம் வெளுத்திருந்தபோது, நான் திடுக்கிட்டுக் கண் விழித்தேன். என் உடல் வியர்வையில் குளித்திருந்தது. நான் மயனிடமிருந்து ஜோதிடத்தையும் வானவியலையும் கற்று வந்து கொண்டிருந்தேன். எனக்கு வயது ஆக ஆக, மனத்திற்கு மட்டுமே புலப்படக்கூடிய இந்த வகையான அறிவியலுக்கு என் மனம் அதிக ஏற்புத்தன்மை கொண்டதாக ஆகியிருந்தது. எந்தவொரு விஷயம் எனக்கு சுவாரசியத்தை ஏற்படுத்தினாலும், அது பற்றி முழுவதுமாகத் தெரிந்து கொள்வதற்கு நீண்ட நேரங்களை நான் செலவிட்டேன். வாழ்க்கை மிகவும் சிறியது, ஆனால் கற்றுக் கொள்வதற்கு ஏராளமான விஷயங்கள் இருந்தன. ஜோதிடம் மற்றும் சகுனங்கள் பற்றி, சம்ஹிதம் எனும் நூலை நான் எழுதிக் கொண்டிருந்தேன். ராமன் ஓர் உயரமான அரியணையில் துயரத்தோடு வீற்றிருக்க, உயரமான, வெள்ளைத் தோல் கொண்ட நபர்கள் என் மகள் சீதையை இழுத்துச் சென்று, கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த நெருப்பிற்குள் தள்ளியதுபோல ஒரு கொடுங்கனவை ஒருவேளை அந்தப் புத்தகம் என்னுள் தூண்டியிருக்கக்கூடும். அந்த நெருப்புக்கு அருகே இன்னொரு நெருப்பும் எரிந்து கொண்டிருந்தது. என் மகளின் கொடூரமான விதியைவிட, அந்த இரண்டாவது நெருப்பு மிகுந்த பசியோடு கபளீகரம் செய்து கொண்டிருந்த பயங்கரமான முகம்தான், என் இதயம் படபடக்க என்னைத் திடுக்கிட்டு விழிக்கச் செய்தது. அசுரப் பேரரசனின் முகம் அது. வரவிருந்த விஷயங்கள் குறித்த ஒரு சகுனமா அது? அது ஒரு முன்னறிகுறியா?ஜோதிடம் என்பது ஒரு முகத்திரையிடப்பட்ட

அறிவியல். சகுனங்களில் எனக்கு நம்பிக்கை இருக்கவில்லை. தூக்கம் மறுபடியும் என்னைத் தன் மார்போடு சேர்த்துத் தழுவிக் கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நான் ஏங்கினேன். ஆனால் சஞ்சலமூட்டும் காட்சிகள் என்னைத் தூங்க விடாமல் தடுத்தன, எனக்குக் களைப்பூட்டின. இரண்டு முறை எனது சேவகர்கள் வந்து என்னை எழுப்பினர், ஆனால் நான் அவர்களை உதாசீனப்படுத்தினேன். பயந்து போயிருந்த ஒரு குழந்தையைப்போல நான் என் போர்வைக்கு அடியில் சுருண்டு கொண்டேன். அந்தப் போர்வையின் ஊடாக அவர்களுடைய திகிலை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. இறுதியில், மண்டோதரி வந்து என்னை உலுக்கி எழுப்பினாள். அது ஒரு மங்கலான காலைப் பொழுது. வானம் மேகமூட்டத்துடன் இருந்தது. பெருங்கடலின் மேலாக இருட்டு ஒரு பெரிய நிழலுருவம்போலத் தோன்றியது.

"அரசே, உயர்மட்டக் குழு உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது," என்ற பிரஹஸ்தனின் குரல் என்னைத் திடுக்கிட வைத்தது. நான் மங்கலான கண்களால் அவனைப் பார்த்தேன். "உயர்மட்டக் குழுவா . . . என்ன உயர்மட்டக் குழு . . . இப்போது அவர்கள் எதைப் பற்றி விவாதிக்க விரும்புகிறார்கள்?" என்று என் மனத்திற்குள் கேட்டேன். அற்பமான அரசியல், அகங்காரங்கள், அற்பமான விவாதங்கள், சிறு பூசல்கள், முடிவற்றச் சந்திப்புக்கூட்டங்கள், முகஸ்துதி செய்தவர்கள், மினுமினுப்பான எனது அரண்மனை, எனது சாம்ராஜ்யம், ராமனுடன் நான் புரிய வேண்டிய, தவிர்க்க முடியாத யுத்தம் . . . இவை எல்லாமே எனக்குச் சோர்வூட்டின. வாழ்க்கை மிகவும் சலுப்பூட்டுவதாக இருந்தது. பிரஹஸ்தனும் மற்ற மந்திரிகளும் என்னைவிட்டுப் போய்விடவும், என் உலகிலிருந்து மாயமாய் மறைந்து போகவும் நான் விரும்பினேன். "நான் ஏன் ஓர் அரசனாக இருப்பதைத் தேர்ந்தெடுத்தேன்?" என்று நொந்து கொண்டேன். பூரண நதியின் அழகான கரையில் நான் ஓர் எளிமையான வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்து, சிறிய கனவுகளைக் கண்டுகொண்டு, இவ்வுலகிலுள்ள கோடிக்கணக்கான சாதாரணமான மக்களைப் போல வாழ்ந்து மடிந்திருக்க வேண்டும். ஒரு சிறிய குடில், ஒரு விசுவாசமான மனைவி, அழகான குழந்தைகள், உழுவதற்குச் சிறிது நிலம், வாழ்க்கையை அனுபவிப்பதற்குப் போதுமான நேரம் . . . இப்படிப்பட்டக் கனவுகள் எல்லாம் வெறும் கனவுகளாகவே இருந்துவிடும் என்பதை நான் அறிந்திருந்தேன்.

பிரஹஸ்தன் போன பிறகும் நான் நெடுநேரம் அங்கேயே உட்கார்ந்திருந்தேன். சிவனுக்குப் பூசை செய்யும் மனநிலையில் அப்போது நான் இருக்கவில்லை. "இன்று ஒருநாள் பூசை

செய்யாவிட்டால் ஒன்றும் ஆகிவிடாது.'' கடவுள் என்னுடைய பிரார்த்தனையைச் செவிமடுத்தாரா இல்லையா என்று தெரியாமலேயே நான் போதுமான அளவு பிரார்த்தித்திருந்தேன். நான் ஒருவழியாக என் அரசவையை அடைந்தபோது, குழு உறுப்பினர்கள் வட்டமாக அமர்ந்து, பள்ளிக் குழந்தைகளைப்போல மரியாதையின்றி அரட்டையடித்துக் கொண்டிருந்தனர். நான் அங்கு நுழைந்தபோது, அவர்கள் திடீரென்று மௌனமாகித் தங்களுடைய இருக்கைகளை நோக்கி ஓடினர். அவர்கள் தங்கள் ஆடைகளையும் தலைப்பாகைகளையும் தட்டுத்தடுமாறியபடி சரி செய்தபோது, நான் எரிச்சலோடு காத்திருந்தேன்.

பிரஹஸ்தன் எழுந்து நின்றான், ஆனால் ஒரு கையசைப்பின் மூலம் நான் அவனை இடைமறித்தேன். அவனது முகத்தில் தெரிந்த தர்மசங்கடத்தையும் வேதனையையும் என்னால் பார்க்க முடிந்தது, ஆனால் அவனுடைய மெல்லிய உணர்வுகளைப் பற்றி அப்போது எனக்கு எந்த அக்கறையும் இருக்கவில்லை. முணுமுணுப்புகள் அடங்குவதற்காக நான் மீண்டும் ஒருமுறை காத்திருந்துவிட்டு, பிறகு, "எதிரி நம் கழுத்துக்களை நெரித்துக் கொண்டிருக்கிறான். தொடர்ந்து ஒவ்வொருவராக நமக்கு நம்பிக்கைத் துரோகம் இழைத்துக் கொண்டிருக்கின்றனர். என் கைகளில் போட்டு நான் தாலாட்டி, என் மகனைப்போல நான் கருதிய எனது சகோதரன் விபீஷணன், எதிரியுடன் சேர்ந்து கொண்டான். எனது சிறந்த நண்பன் என்று கருதி, எனது கடற்படையை எந்த விஷப் பாம்பிடம் நான் ஒப்படைத்திருந்தேனோ, அந்த வருணனும், இறுமாப்புக்காரனான அந்த ராமனின் அடிமையாக மாறியுள்ளான். நமது காலாட்படையில் பாதியும் நமது ஒட்டுமொத்தக் கடற்படையும் கட்சி மாறிவிட்டன. என் ரத்தத்தையும், என் உறவினர்களையும், என் கனவுகளையும், என் வாழ்க்கையையும் நான் எதற்காகக் கொடுத்திருந்தேனோ, அந்த அசுர சாம்ராஜ்யமும் நமது இனத்தின் பெருமையும் இப்போது மண்ணோடு மண்ணாக ஆகப் போகின்றன,'' என்று கூறினேன்.

"நாம் சுபேல மலைக்கு இடம்பெயர வேண்டும். அங்கிருக்கும் கோட்டை, எந்தவொரு எதிரித் தாக்குதலிலிருந்தும் நம்மைப் பாதுகாக்கும். பல மாதங்களுக்குத் தேவையான பலசரக்குப் பொருட்கள் நம்மிடம் இருக்கின்றன. நாம் அங்கு காத்திருந்து, எதிரியைச் சோர்வடையச் செய்ய வேண்டும்,'' என்று பிரஹஸ்தன் இடைமறித்தான்.

பிரஹஸ்தன் என்ன கூறிக் கொண்டிருந்தான் என்பதைப் புரிந்து கொள்வதற்கு எனக்குச் சிறிது நேரம் ஆனது. பிறகு திடீரென்று நான் கோபமடைந்தேன். "முடியாது. அந்த இரண்டு காட்டுமிராண்டிகளுக்கும்

அவர்களது குரங்குப் படைக்கும் பயந்து கொண்டு நான் ஓடி ஒளிய மாட்டேன். நான் அசுரர்களின் பேரரசன். நான் மலைகளில் மறைந்திருக்க மாட்டேன். நான் அவர்களை நசுக்கிக் கொல்லப் போகிறேன்."

என் மந்திரிகளிடையே பெருங்குழப்பம் நிலவியது வெளிப்படையாகத் தெரிந்தது. பிறகு ஜம்புமாலி வேதனையோடு எழுந்து நின்று, "அரசே, அடுத்த மழைக்காலம்வரை நாம் அங்கு பதுங்கியிருந்தால், ராமனின் படையை, கொந்தளிக்கும் கடலுக்கும் நகரத்திற்கும் இடையே நம்மால் சிக்க வைத்துவிட முடியும். அதுவரை, நாம் கொரில்லா உத்தியைப் பயன்படுத்தி எதிரியை பலமிழக்கச் செய்துவிடலாம்," என்று கூறினான்.

"நான் இந்நகரத்தை அந்தக் காட்டுமிராண்டிகளின் தயவில் விட்டுச் செல்ல வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? வரலாறு கற்றுக் கொடுத்தப் பாடங்கள் முட்டாள்களான உங்களுக்கு மறந்துவிட்டது என்று நான் நினைக்கிறேன். கடந்தகாலத்தில், தேவர்கள் எத்தனை அற்புதமான அசுர நகரங்களைச் சூறையாடியுள்ளனர்? எத்தனை நகரங்களை எரித்துச் சாம்பலாக்கியுள்ளனர்? பலர் ஒன்றாகக் கூடி எத்தனைப் பெண்களைக் கற்பழித்துள்ளனர்? இந்திரனின் வம்சாவழியினர் நமது அற்புதமான நகரத்தை விட்டு வைப்பார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

"ஆனால், அரசே, நாம் இப்போது பலவீனமாக இருக்கிறோம். போருக்கான உத்திகளையும் திட்டங்களையும் நாம் வகுக்க வேண்டும். நமக்குச் சாதகமான வழியில் நாம் போரிட வேண்டும். சுபேல மலையை யாராலும் ஊடுருவ முடியாது. மழைக்காலம் இப்போது எந்த நேரத்திலும் தொடங்கிவிடும். சுபேல மலையின் செங்குத்தான சுவர்கள், குரங்கு மனிதர்களுக்குக்கூட ஒரு வலிமையான தடுப்பாக இருக்கும். மேலும், வருணனின் கப்பல்களிலிருந்து எறியப்படக்கூடிய தீவட்டிகளால் இந்த இடத்தை அடைய முடியாது," என்று கூறிவிட்டு, பிரஹஸ்தன் என் பதிலுக்காகப் பொறுமையாகக் காத்திருந்தான்.

அறையில் நிலவிய இறுக்கத்தை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது, ஆனால் நான் எதுவும் கூறவில்லை. என் பிரதம மந்திரி கூறியது சரிதான். சுபேல மலையில் ராமனால் ஒருபோதும் எங்களுக்குத் தீங்கு விளைவிக்க முடியாது. பிறகு, வருணனின் ஆட்களுக்கு லஞ்சம் கொடுத்து அவர்களை எங்கள் பக்கமாக இழுத்துக் கொண்டு, கோடையில் ராமனை எங்களால் தாக்க முடியும். மத்திய இந்தியாவில், எனது சாம்ராஜ்யத்தின் வடகோடி எல்லையில் எனது ஆளுனராக இருந்த கரண், இப்போது பின்னாலிருந்து ராமனை வேகமாக நெருங்கிக்

கொண்டிருந்தான். ராமன் பலவீனமடைந்தவுடன், வருணன் மீண்டும் கட்சி மாறுவான் என்பதில் நான் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தேன். ஆனால் அவன் தன் பெரும்படையைக் கூட்டிக் கொண்டு, இவ்வளவு பெரிய தூரத்தைக் கடந்து வருவதற்கு ஒருசில மாதங்கள் ஆகும். அதுவரை எங்களால் தாக்குப்பிடிக்க முடியுமா? அப்படியே நாங்கள் தாக்குப்பிடித்தாலும், என் நகரத்திற்கும் என் மக்களுக்கும் என்னவாகும்? ஒருவேளை, என்னை அரச பதவியிலிருந்து நீக்குவதற்காகப் பிரஹஸ்தன் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தால் என்ன செய்வது? இல்லை, நான் ஒரு கோழையைப்போல ஓட மாட்டேன். உத்தியோ இல்லையோ, நான் இங்கேயே இருந்து என் மக்களைப் பாதுகாப்பேன்.

தெருக்களிலிருந்து திடீரென்று வந்த ஒரு பெருங்கூச்சல் எங்கள் காதுகளில் விழுந்தது. துவக்கத்தில் அது எங்களுக்கு லேசாகக் கேட்டது, பிறகு அச்சத்தம் மெல்ல மெல்ல அதிகரித்து உச்சகட்டத்தை எட்டியது. குழு உறுப்பினர்கள் சந்தேகத்துடன் தங்கள் இருக்கைகளைவிட்டு எழுந்தனர். என்னால் என் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ராமனின் படை எங்கள்மீது தாக்குதல் நடத்திக் கொண்டிருந்ததா? தினமும் காலையில் என் குடிமக்களுக்கு தரிசனம் கொடுத்து, அவர்களுடைய குறைகளை நான் செவிமடுத்தத் தாழ்வாரத்திற்கு நான் விரைந்தேன். மிக நீளமான ஓர் ஊர்வலம், அரண்மனையை நோக்கி அணிவகுத்து வந்து கொண்டிருந்தது. பார்வைக்கு எட்டியவரை, ஆண்கள், பெண்கள், வயதானவர்கள், இளைஞர்கள் என்று அனைத்து மக்களும் அரண்மனையை நோக்கி நடைபோட்டுக் கொண்டிருந்தனர். கோட்டைக் கதவுகளுக்கு அருகே நின்ற காவலாளிகள் அவர்களைத் தடுக்க முயற்சித்தனர், ஆனால் கூட்டத்தினர் அவர்களைத் தொடர்ந்து தள்ளிக் கொண்டிருந்தனர்.

“தேவர்களுக்குச் சாவுமணி அடிப்போம்!” “ஹர ஹர மகாதேவா!” “ராவணனுக்கு வெற்றி!” கோபக் குரல்கள் விண்ணைத் தாண்டிச் சென்றன. பத்தடி நீளமிருந்த ஈட்டிகள், வாள்கள், தோட்ட வேலைக்கான கருவிகள், சமையல் கத்திகள் உட்பட, அனைத்து விதமான ஆயுதங்களும் அவர்கள் வசம் இருந்தன. செண்டைக் கலைஞர்கள், காலங்காலமாக நிலைத்து வந்திருந்த அசுரப் பாடல்களைச் சத்தமாக இசைத்தனர்.

“இந்த மக்களை விட்டுவிட்டு சுபேல மலையில் ஓடி ஒளிவதைப் பற்றி எப்படி என்னால் சிந்திக்க முடிந்தது?” நான் என் கைகளை அசைத்தேன். கூட்டம் அதற்கு ஒப்புதலளித்து, பதிலுக்குக் கூச்சலிட்டது. அவர்களை உள்ளே அனுமதிக்குமாறு காவலாளிகளுக்கு நான் சைகை

காட்டினேன். “அவர்களைத் தடுப்பதற்கு நான் யார்?” கூட்டம் வேகமாக உள்ளே புகுந்தது. அவர்கள், சீராக வைக்கப்பட்டிருந்த தோட்டங்களை மிதித்தனர், பூச்சாடிகளைக் கவிழ்த்தனர், சில சிறுவர்கள் அங்கிருந்த நீரூற்றுக்குள் குதித்தனர். அரண்மனை தன் கதவுகளை எனது குடிமக்களுக்குத் திறந்துவிட்டது. அது என்னை நல்லவிதமாக உணரச் செய்தது. நான் என் கையை வானத்தை நோக்கி உயர்த்தினேன். கூட்டத்தினர் திடீரென்று அமைதியானார்கள். அக்கணத்தில் நான் கடவுள்போல உணர்ந்தேன். அதிகாரத்தின் சிக்கல்களில் எங்கோ ஓரிடத்தில் நான் தொலைத்திருந்த எனது வசீகரம் என்னிடம் திரும்பி வந்தது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. நான் மீண்டும் என் மக்களுடன் ஓர் இணைப்பை ஏற்படுத்தியிருந்ததுபோல உணர்ந்தேன். மீண்டும் நான் என் இளமையைக் கைப்பற்றினேன்.

“நெடுங்காலத்திற்கு முன்பு, எனக்குப் பதினேழு வயதாக இருந்தபோது, நான் உங்களுக்கு ஒரு வாக்குக் கொடுத்திருந்தேன். அனைத்து மக்களும் சமமாக நடத்தப்படுகின்ற, ஏற்றத்தாழ்வற்ற ஓர் உலகத்தை நான் உங்களுக்கு உருவாக்கித் தரப் போவதாக நான் உங்களுக்கு வாக்குக் கொடுத்திருந்தேன். மகாபலியின் பொற்காலத்தை நான் உங்களுக்கு மீட்டுக் கொடுப்பதாக வாக்குறுதி அளித்திருந்தேன். நமது பெருமையை மீட்டெடுக்க முடியும் என்று நாம் நம்பினோம். நம்பிக்கையைத் தவிர நம்மிடம் வேறு எதுவும் இருக்கவில்லை. நீங்கள் என் தலைமைத்துவத்தின்மீது நம்பிக்கை வைத்தீர்கள், நான் உங்கள் விசுவாசத்தின்மீது நம்பிக்கை வைத்தேன். நாம் அனைவருமாகச் சேர்ந்து, பேராற்றல் வாய்ந்த தேவ சாம்ராஜ்யத்திற்குத் துணிந்து சவால்விட்டோம். ஒரு கையளவு ஆட்களைக் கொண்டு, ஏற்றத்தாழ்வு, பிராமணத்துவம், அடக்குமுறை, அர்த்தமற்றச் சடங்குகள் ஆகியவற்றுக்கு எதிராக ஒரு தாக்குதலைத் துவக்கினோம். உங்களுடைய வியர்வையையும் ரத்தத்தையும் கொண்டு, இன்று நம்மைச் சுற்றி நாம் பார்க்கின்ற அனைத்தையும் நாம் உருவாக்கினோம். இந்த முத்துத் தீவிலிருந்து விந்திய மலையின் அடிவாரம்வரை அசுரக் கொடியை மிக உயரமாகப் பறக்கச் செய்தோம்.

“நம் மக்கள் செழிப்படைந்தனர். நாம் அற்புதமான நகரங்களை உருவாக்கினோம், அறிவியலிலும் கலையிலும் கலாச்சாரத்திலும் பெரும் முன்னேற்றத்தைக் கண்டோம். நமது மாபெரும் கோவில்கள், சிவனின் பெருமையை உலகிற்குப் பறைசாற்றின. தானியக்களஞ்சியங்கள் அசுரர்களின் கடும் உழைப்பிற்கான பலன்களால் நிரம்பி வழிந்தன. நாம் அறிவுக் கோவில்களைக் கட்டினோம். ஒவ்வோர் அசுரனும் கல்வியறிவு பெற்றிருந்ததை நாம்

உறுதி செய்தோம். நமது மருத்துவமனைகள், நோயுற்றவர்களைக் கவனித்துக் கொண்டன. நாம் சாலைகளையும் கால்வாய்களையும் உருவாக்கினோம். உலகிலேயே மிகப் பணக்கார சாம்ராஜ்யம் நம்முடையதுதான் என்று இப்போது நம்மால் உறுதியாகப் பிரகடனம் செய்ய முடியும்," என்று கூறிச் சற்று நிறுத்தினேன். "ஹர ஹர மகாதேவா!" "ராவணனுக்கு வெற்றி!" ஆகிய முழக்கங்கள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் எழுந்தன.

"ஆனாலும், நாம் முன்னோக்கித் தொடர்ந்து நடைபோட்ட நேரத்தில், நாம் சில தவறுகளைச் செய்தோம். பண்டைக் காலத்தைச் சேர்ந்த நமது மாபெரும் தலைவர்கள் மிகுந்த வலியோடு நடந்து சென்ற நல்லொழுக்கப் பாதையிலிருந்து நாம் விலகிவிட்டோம், நம் எண்ணத்தின் தூய்மையை இழந்துவிட்டோம், வாழ்வின் எளிமையைத் தொலைத்துவிட்டோம். தேவர்களைப் போலவே, சிலர் சிறப்புரிமை பெற்றவர்கள் என்று நாம் நினைக்கத் துவங்கினோம். அந்தச் சிறப்புரிமை, நமது திறன்கள் மற்றும் தகுதியின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்தால், ஒருவேளை அதை நியாயப்படுத்தியிருக்க முடியும். ஆனால் பேராற்றல் வாய்ந்த அசுரக் கரங்களால் தோற்கடிக்கப்பட்ட தேவ நாகரீகம் — அதை நாகரீகம் என்று அழைக்க முடியுமா — மெல்ல மெல்ல நம் மனங்களுக்குள் ஊடுருவி, அவற்றில் விஷத்தை ஏற்றிவிட்டது. தேவர்களைப் போலவே, செயல்கள் அல்லது சிந்தனைகளின் அடிப்படையிலன்றி, பிறப்பின் அடிப்படையில் சில மனிதர்களை நாம் தெய்வீகமானவர்களாகக் கருதத் துவங்கினோம்; சிலர் தூய்மையானவர்கள், மற்றவர்கள் தூய்மையற்றவர்கள் என்று பார்க்கத் துவங்கினோம். உங்களுடைய தலைவன் என்ற முறையில், சாதி அமைப்புமுறையின் தீய எண்ணங்கள் நம் சமுதாயத்திற்குள் ஊடுருவிக் கொண்டிருந்ததை நான் பார்த்திருக்க வேண்டும். ஆனால், நான் என் பெருமையைத் தம்பட்டம் அடித்துக் கொள்வதில் மும்முரமாக இருந்துவிட்டேன்." கூட்டத்தினர் வேதனைக் குரல்களை எழுப்பினர்.

"நல்ல மதிப்பீடுகளை நானே மறந்துவிட்டபோது, சமுதாயத்தை நான் ஏன் குறைகூற வேண்டும்? பிராமணர்கள்மீது தனிப்பட்ட முறையில் எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால், பயனுள்ள அனைத்தையும் அவர்கள் உங்களிடமிருந்து அபகரித்துக் கொண்டு, உங்களில் பெரும்பாலானவர்களைப் படுகுழியில் தள்ளிவிட்டனர். ஒரு தலைவன் என்ற முறையில், உங்கள் எதிர்பார்ப்புகளை நிறைவேற்ற முடியாமல் நான் தோற்றுப் போய்விட்டேன். ஏனெனில், நம்பிக்கைத் துரோகியான எனது சகோதரன் விபீஷணன் பிராமணர்களுடனும் விஷ்ணுவுடனும் சகவாசம் வைத்துக் கொள்ள நான்

அனுமதித்துவிட்டேன். பிறப்பால் நான் பாதி பிராமணன் என்பதால் நான் உங்களைவிட மேலானவன் என்று பெருமிதம் கொண்டிருந்தேன் என்று கூற எனக்கு அவமானமாக இருக்கிறது. என்னுடைய வெள்ளைத் தோல் குறித்து நான் ரகசியமாக கர்வம் கொண்டிருந்தேன். கருப்புத் தோல் அசிங்கமானது, தீயது என்று நான் கருதினேன்."

என் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் தம் விருப்பம்போல வந்ததைக் கண்ட கூட்டத்தினர், கவனமாகக் காதுகொடுத்துக் கேட்டனர். "இன்று, நமது நாகரீகம் நாற்சந்தியில் நிற்கிறது. நான் இப்போது உங்கள் பேரரசனாகவோ அல்லது அகங்காரத்துடன்கூடிய ராட்சஸனாகவோ உங்கள் முன்னால் நிற்கவில்லை. மாறாக, ஓர் எளிய மனிதனாக, ஒரு சக அசுரனாகத் திறந்த மனத்துடன்தான் நான் உங்கள் முன்னால் நிற்கிறேன். நான் பாவம் செய்துள்ளேன், ஏனெனில் நான் கடவுளல்ல. உங்களைப்போல நானும் ஒரு மனிதன்தான். நான் செய்துள்ள தவறுகளுக்காக வருந்தி உங்கள் முன்னால் நிற்கிறேன். என் தலைமைத்துவத்தின்மீது நீங்கள் வைத்துள்ள எளிய நம்பிக்கைக்கு முன்னால் நான் பணிந்து நிற்கிறேன். இந்தக் கனமான சுமையைத் தாங்குவதற்கான வலிமையை சிவன் எனக்குத் தர வேண்டும் என்று நான் அவனிடம் பிரார்த்திக்கிறேன்.

"இந்த யுத்தம், பலர் நினைப்பதைப்போல, தேவ இளவரசனான ராமனின் மனைவி சீதையைப் பற்றியதோ அல்லது உங்களுடைய வயதான அரசன் இன்னொருவனின் மனைவியின்மீது கொண்ட காமவெறியைப் பற்றியதோ அல்ல. ராமனின் சகோதரனான லட்சுமணனின் கைகளால் என் சகோதரி சூர்ப்பனைக்கு நேர்ந்த அவமானத்திற்குப் பழி வாங்குவதற்காகத் தொடரப்படுகின்ற ஒரு யுத்தம் அல்ல இது. இது . . ." என்று கூறி நான் சற்று நிறுத்தினேன். திடீரென்று வார்த்தைகள் வற்றிப் போயின. கூட்டம் எதிர்பார்ப்புடன் காத்திருந்தது.

"எனதருமை அசுர நண்பர்களே . . . சீதை . . . என் மகள்." கூட்டத்தினரிடமிருந்து ஒரு பெரும் கர்ஜனை எழுந்தது. அது அடங்குவதற்காக நான் காத்திருந்தேன். நண்பகல் சூரியன் ஈவு இரக்கமின்றி வாட்டியது, என் ஆற்றலையும் என் மூளையையும் உறிஞ்சியது. என் முகத்தின் கீழாக வியர்வை ஆறாக வழிந்தோடிக் கொண்டிருந்தது. ஆயிரக்கணக்கான கருப்பு முகங்கள் கீழே ஒளிர்ந்தன. கோபமும் குழப்பமும் உற்சாகமும் ஒருசேர அக்கூட்டம் தள்ளாடியது. நான் திரும்பி என் மந்திரிகளை எதிர்கொள்ள விரும்பவில்லை. ஆனால் சீதையைப் பற்றி அவர்கள் அறிந்திருந்தனர் என்று நான் சந்தேகித்தேன். இப்போது அவர்களை எதிர்கொள்வதற்கான துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. ஒருசில நிமிடங்களுக்கு முன்பு, அசுர நாகரீகத்தின்

எதிர்காலத்தைப் பற்றி இக்கூட்டத்தினரிடையே உரையாற்றி, அவர்களைத் திக்குமுக்காடச் செய்ய வேண்டும் என்று நான் திட்டமிருந்தேன். ஆனால் இப்போது அந்த வார்த்தைகள் ஓடிச் சென்று ஒளிந்து கொண்டிருந்தன. கைப்பிடிச் சுவரின்மீது சாய்ந்து என்னை நிலைப்படுத்திக் கொண்டு நான் காத்திருந்தேன். இந்த நேரத்தில் அக்கூட்டத்தினர் ஆபத்தானவர்களாக மாறக்கூடும் என்பதை நான் அறிந்திருந்தேன். மனச்சோர்வும் களைப்பும் என்னை வாட்டின.

"அன்னை சீதா தேவிக்கு வெற்றி! அசுர இளவரசிக்கு வெற்றி!" என்ற ஒரு குரல் ஒரு மூலையிலிருந்து எழுந்தது. அங்கு ஒரு கனத்த மௌனம் நிலவியது. சத்தம் வந்த திசையை நோக்கிப் பல தலைகள் ஆச்சரியத்தோடு திரும்பின. யார் அதைக் கூறியிருந்தது என்று பார்ப்பதற்காக, சூரிய ஒளியில் நான் என் கண்களைச் சுருக்கிக் கொண்டு பார்த்தேன். பத்ரனா? தசைகள் சுருங்கிப் போயிருந்த ஒரு வயதான மனிதன், ஒரு கம்பத்தின்மீது சாய்ந்து நின்றதை என்னால் பார்க்க முடிந்தது. அவனுக்குப் பக்கத்தில், ஒரு கருப்பான, திடகாத்திரமான இளைஞன் நின்றான். ஆனால் அது யாரென்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. அந்த வயதான மனிதன், மீண்டும் ஒருமுறை, "அன்னை சீதா தேவிக்கு வெற்றி!" என்று கத்தினான். இப்போது அந்த ஒட்டுமொத்தக் கூட்டமும் சீதைக்கும் ராவணனுக்கும் வெற்றி முழக்கங்களை முழங்கின. அமைதியடைந்திருந்த செண்டைகள் காட்டுத்தனமான அசுர இசையைப் பெரும் சத்தத்தோடு இசைக்கத் துவங்கின. கூட்டத்தினர் ஆடிப் பாடியவாறு, தங்களுக்குப் பின்னால் ஒரு புழுதி மலையை உருவாக்கிவிட்டு, ஒரு மிகப் பெரிய பாம்பைப்போல என் அரண்மனையிலிருந்து வளைந்து நெளிந்து வெளியேறினர்.

போர் முழக்கம் அடங்கியவுடன் நான் என் மந்திரிகளிடம் திரும்பி, "நாம் இங்கேயே தங்கியிருந்து சண்டையிடப் போகிறோம். இதுதான் என் முடிவு," என்று கூறினேன். பிரஹஸ்தனைத் தவிர எல்லோரும் குனிந்து வணங்கினர். நான் உற்சாகத்தோடு என் அறைக்குத் திரும்பியபோது, பிரஹஸ்தனின் கண்கள் கண்ணாடிபோலப் பளிச்சிட்டதை என்னால் பார்க்க முடிந்தது. நான் அவனை நிமிர்ந்து பார்த்தேன். எனக்குப் புரியாத விதத்தில் அவன் தன் தலையை ஆட்டினான். என் குடிமக்கள் என் உடலில் ஏற்றியிருந்த சூடு தணிந்து வெகுநேரம் ஆன பிறகு, நான் எனது குளுமையான, இருண்ட அறையில், மக்களிடையே அதிகரித்துக் கொண்டிருந்த பீதியைத் தணிக்குமாறு சிவனிடம் பிரார்த்தித்தேன். பேரழிவுக்கான ஒரு முன்னெச்சரிக்கை, ஈரமான, கனத்தக் காற்றில் இலங்கையின்மீது ஒரு

படலமாகப் படர்ந்திருந்தது. அதை என்னால் முகர்ந்து பார்க்க முடிந்தது. பிரஹஸ்தன் வழக்கம்போலச் சரியாகத்தான் கூறியிருந்தான்போலும். ஆனாலும், ராமனின் கொடூரமான குரங்குப் படையினரிடம் என் மக்களைக் கைவிட்டுவிட்டு ஓடுவதற்குப் பதிலாக, எல்லாவற்றையும் இழந்துவிட்டு மரணம் எய்த நான் தயாராக இருந்தேன். சண்டையிலிருந்து பின்வாங்குவதுதான் இப்போதைக்கு அறிவான நடவடிக்கை என்பதை நான் அறிந்திருந்தாலும்கூட, அளவுக்கதிகமான என் கர்வம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. நான் இங்கேயே தங்கி, எனது பாதிப் படையினரைக் கொண்டு எதிரியுடன் சண்டையிடுவேன். என் மக்களுக்கு நான் அதையாவது செய்தாக வேண்டும்.

என் அறிவிற்கும் என் இதயத்திற்கும் இடையே நடைபெற்றப் போராட்டத்திற்குள் நான் சிக்கித் தடுமாறிக் கொண்டிருந்த அந்தத் தனிமையான வேளையில், இந்தியாவின் தலைவிதியும், அசுர சாம்ராஜ்யத்தின் தலைவிதியும், கோடிக்கணக்கான கருப்பர்களின் தலைவிதியும் என்றென்றைக்குமாகத் தீர்மானிக்கப்பட்டது. என் அறிவு கூறியதை நான் கேட்டிருந்தால், அந்தத் தலைவிதி வேறு விதமாக அமைந்திருக்கும். ஆனால், நான் எப்போதுமே உணர்ச்சிவசப்பட்ட ஒரு ஜீவனாக இருந்தேன். நான் ராவணனைப்போல வாழ்ந்திருந்தேன், ராவணனைப்போலவே இறப்பேன். கச்சிதமான மனிதனும் கடவுளுமான ராமனாக ஆவது எனது நோக்கமாக இருக்கவில்லை. என் நாட்டில் கடவுள்களுக்கு ஒருபோதும் பஞ்சம் இருக்கவில்லை. என் நாட்டில் மனிதர்களின் எண்ணிக்கைதான் குறைவாக இருந்தது.



# 47

## அதர்ம யுத்தம்

பத்ரன்

அசுர இளவரசிக்காக நான் உரக்கக் குரல் கொடுத்தேன். ஓர் ஆட்சியாளனுக்காவது உண்மையை ஒப்புக் கொள்வதற்கான நேர்மை இருந்தது. அதற்கு பிறகு, கூட்டத்தினரின் மனநிலை மாறியது. யாருக்குத் தெரியும்? ராவணனை அன்று நான் காப்பாற்றியிருக்கக்கூடும். அரண்மனையைவிட்டு வெளியேறிய கூட்டத்தினரை நான் பின்தொடர்ந்து சென்றேன், ஆனால் என் குடிலுக்குத் திரும்ப நடந்து செல்வதற்கு எனக்கு மிகவும் களைப்பாக இருந்தது. எனவே, ஒரு பட்டுக் கடையின் வாசலில், நடைபாதையில் நான் தூங்கினேன். இன்னும் பலரும் நடைபாதைகளில் தூங்கினர். எந்த நேரத்திலும் யுத்தம் தொடங்கக்கூடிய சூழ்நிலை நிலவியதால், மக்கள் நடைபாதைகளில் உறங்கியதைக் காவலர்கள் அவ்வளவாகக் கண்டுகொள்ளவில்லை.

திடீரென்று, நள்ளிரவில், சந்தையை நோக்கி நெருப்பு அம்புகள் எறியப்பட்டன. போர் ஒரு பெருத்தச் சத்தத்துடன் துவங்கியிருந்தது.

சந்தையெங்கும் நெருப்புப் பற்றியது. கடற்கரையிலிருந்து ஒருசில நூறு அடிகள் தள்ளி நங்கூரம் பாய்ச்சப்பட்டிருந்த வருணனின் கப்பல்களிலிருந்து அந்த அம்புகள் எறியப்பட்டிருந்தன. சீறிப் பாய்ந்து வந்த அம்புகள் பொருட்களைத் தாக்கின, மக்களைத் துளைத்தன, வைக்கோல் கூரைகளின்மீது விழுந்து அவற்றைக் கபளீகரம் செய்தன. மையிருட்டு வானம் ஆயிரக்கணக்கான செந்நிறத் தீ நாக்குகளால் ஒளியூட்டப்பட்டது. பருவ மழையைப்போல இலங்கையின்மீது மரண மழை பொழிந்து கொண்டிருந்ததைக் கண்டு அந்தத் தீ நாக்குகள் கோர தாண்டவமாடியதுபோல இருந்தது. நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஓடிக் கொண்டிருக்காமல் இருந்திருந்தால், வருணன் தனது முன்னாள் நண்பர்களுக்கு வழங்கிக் கொண்டிருந்த கண்கொள்ளாக் காட்சியை நின்று ரசித்திருப்பேன்.

மக்கள் வெளியே ஓடி வந்தனர். அலறல்கள் வானத்தின் ஊடாக ஒலித்தன. சதைகள் எரிந்தன. வீடுகள் நெருப்புக்கு இரையாயின. அடர்த்தியான கரும்புகை மேல்நோக்கிச் சுழன்றது. அது நரகத்தில் இருப்பதைப்போல இருந்தது. முதன்முறையாக, ஒரு யுத்தத்தை ஒரு வீரனாக எதிர்கொள்வதற்குப் பதிலாக, ஒரு சாதாரண மனிதனாக நான் எதிர்கொண்டேன். யுத்தக்களத்தைவிட இங்கு உயிர்பிழைத்திருப்பதற்கு அதிகத் துணிச்சல் தேவைப்பட்டதை நான் கண்டேன். யுத்தக்களத்தில் எதிரி யாரென்பதாவது எங்களுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் இங்கு, எரிந்தபடி கீழே விழுந்த உத்தரங்கள், பதுங்கியிருந்து தாக்கிய வீரர்கள், மூச்சுத்திணறல் ஏற்படுத்திய அடர்த்தியான கரும்புகை, நெருப்பு அம்புகள், சாதாரண அம்புகள் என்று, மரணம் பல்வேறு வடிவங்களில் வந்தது. இங்கு, மரணம் எங்களைக் கண்டுபிடிப்பதற்காக நாங்கள் காத்திருந்தோம்.

தேவர்களுக்கு நியாய உணர்வு எள்ளளவுகூட இருக்கவில்லை. அவர்கள் முதலில் பொதுமக்கள்மீது நெருப்பு அம்புகளை எறிந்து கொண்டிருந்தனர். எங்களுக்குப் பீதியை ஏற்படுத்தி, எங்களை பலவீனப்படுத்தி, எங்கள் தன்னம்பிக்கையைச் சூறையாடுவது அவர்களது நோக்கமாக இருந்தது. பொழுது விடிந்தவுடன், அவர்கள் தாங்கள் கட்டிய பாலத்தைக் கடந்து, தங்களுடைய காலாட்படையையும் குதிரைப் படையையும் கொண்டு எங்களைத் தாக்குவார்கள். "எங்கள் அரசன் என்ன செய்து கொண்டிருந்தார்?" என்று நான் யோசித்தேன். பெரிய பெரிய வார்த்தைகளையெல்லாம் கூறிவிட்டு, ஒருவேளை, சுபேல மலையில் அமைந்த கோட்டையில் அவர் ஒளிந்து கொண்டிருக்கக்கூடும். இந்த அரசர்களை நம்ப முடியாது. அதிகாயன் எங்கே போனான்? என் வயிற்றில் ஒரு பீதி உருவானது. தப்பி ஓடிக்

கொண்டிருந்த கூட்டங்களுக்கு எதிராக நான் ஓடினேன். இடையிடையே தடுமாறிக் கீழே விழுந்து, மீண்டும் எழுந்து, பயத்தில் எலிகளைப்போல ஓடிக் கொண்டிருந்த மக்களை இடித்துத் தள்ளி, அவர்களை மிதித்து நான் தலைதெறிக்க ஓடினேன். “அதிகயன் எங்கே?” எனக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. நான் ஒரு விளக்குக் கம்பத்தின்மீது சாய்ந்து, வேகமாக மூச்சு வாங்கியபடி நின்றேன். கரும்புகைகளால் வானம் இருட்டாக இருந்தது. எரிந்து கொண்டிருந்த உடல்களில் இருந்து வந்த நாற்றம் என்னை வாந்தியெடுக்க வைத்தது. “அசுரப் படை எங்கே போனது? இந்தக் குரங்கு மனிதர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றுவதற்காக அவர்கள் ஏன் எதுவும் செய்யாமல் இருக்கிறார்கள்?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். பீதியடைந்திருந்த கூட்டத்தினரிடையே, ஆதரவில்லாதது போன்ற ஓர் உணர்வும், எங்கள் ஆட்சியாளர்கள் குறித்து வெறுப்பும் நிலவியது. அவர்களுடைய பயத்தை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

என் கேள்விகளுக்கு விடையளிப்பதுபோல, ஒரு குதிரைப்படை, கரும்புகையின் ஊடாகத் திடீரென்று தோன்றியது. தப்பி ஓடிக் கொண்டிருந்த மக்களில் சிலர் நின்று திரும்பிப் பார்த்தனர், ஆனால் குதிரைப்படையினர் நிற்காமல் அக்கூட்டத்தின் ஊடாக வேகமாகச் சென்றதில், சிலர் மிதிபட்டனர், பலர் வேறு பக்கமாகத் தூக்கி எறியப்பட்டனர். குதிரைப்படையினர் தங்களது வாள்களைச் சுழற்றியும் சாட்டைகளை வீசியும் தங்களுக்கு வழி ஏற்படுத்தியபடி வேகமாகச் சென்றனர். “அடக் கடவுளே! இது ராமனின் குதிரைப்படை!” என்று நான் நினைத்தேன். ஆனால் அப்போது வஜ்ரதம்ஸ்டிரன் அப்படையினரை முன்னின்று வழிநடத்திச் சென்றதை நான் கண்டேன். அது அசுரக் குதிரைப்படை. குரங்கு மனிதர்களை எதிர்கொள்வதற்காக அது விரைந்து கொண்டிருந்தது.

சாலையில் மக்கள் இறந்தோ அல்லது காயப்பட்டோ கிடந்தனர். ராமனின் அம்புகள் மற்றும் ராவணனின் அம்புகள் குறித்து பயந்தவாறே, நான் அரண்மனையை நோக்கி நடந்தேன். மக்களின் கருகிய உடல்களும் விலங்குகளின் கருகிய உடல்களும் எல்லா இடங்களிலும் சிதறிக் கிடந்தன. ஒருசில நூறு அடிகளுக்குப் பிறகு, வானம் சிறிது தெளிவடைந்தது. சிறிதளவு நல்ல காற்றை சுவாசிப்பதற்காக நான் சற்று நின்றேன். அரண்மனையில் கனத்த அமைதி நிலவியது. கடற்கரையிலிருந்து அரண்மனை வெகுதூரத்தில் இருந்ததால், வருணனின் நெருப்பு அம்புகளால் அரண்மனையை அடைய முடியவில்லை. எனவே இப்போதைக்கு, அரசன் தன் குடிமக்களைப் போலன்றிப் பாதுகாப்பாக இருந்தார். நான் கடலை நோக்கிப்

பார்த்தேன். வருணனின் கப்பல்கள் அலைகளின்மீது மென்மையாகத் தவழ்ந்து கொண்டிருந்தன. ஆயுதங்களைத் தாங்கிய ஆயிரக்கணக்கான வீரர்கள், சந்தையை நோக்கியும் குடியிருப்புப் பகுதிகளை நோக்கியும் நெருப்பு அம்புகளை எய்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. முக்கிய வீதியிலிருந்து ஒருசில அடிகள் தூரத்தில் இருந்த ஒரு சிறிய குன்றின்மீது நான் ஏறி நின்றேன். கடலுக்குள் நீண்டிருந்த அந்தக் குன்றின்மீதிருந்து என்னால் நன்றாகப் பார்க்க முடிந்தது.

ராமனின் பாலம் கிட்டத்தட்ட நிறைவடைந்திருந்தது. யானைகளும் குதிரைகளும் கப்பல்களில் இருந்து தரையிறக்கப்பட்டன. வீரர்களும் அவற்றிலிருந்து இறங்கினர். ஒரு நீண்ட காலாட்படை இலங்கையை நோக்கி வரத் துவங்கியது. விஷ்ணுவின் சங்குச் சின்னத்தைத் தாங்கிய தேவக் கொடிகள் பறந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. செழிப்பான அசுரத் தலைநகரை முதன்முதலாகப் பார்த்த அந்தக் காட்டுமிராண்டிப் படையினரிடம் அதிகரித்துக் கொண்டிருந்த உற்சாகத்தையும் என்னால் உணர முடிந்தது.

வெள்ளை மணலைக் கொண்ட எங்களுடைய அழகான கடற்கரையில், வஜ்ரதம்ஸ்டிரனின் குதிரைப்படை, விரைந்து வந்து கொண்டிருந்த குரங்கு மனிதர்களுடன் மோதியதை நான் கண்டேன். ஒருசில நாட்களுக்கு முன்புவரை, அந்த வெள்ளை மணல்களில் காதலர்கள் கைகோர்த்து உலவிக் கொண்டிருந்தனர், தாய்மார்கள் தங்கள் மழலைகள் எடுத்து வைத்தச் சிறிய அடிகளைக் கண்டுகளித்திருந்தனர். வாழ்க்கை மிகவும் அழகாக இருந்திருந்த அதே மணல்களில், இப்போது மரணம் கோர தாண்டவம் ஆடிக் கொண்டிருந்தது. அருகிலிருந்த குன்றிலிருந்து அசுரப் படை எறிந்திருந்த ஒரு மிகப் பெரிய பாறாங்கல் தனது இலக்கைத் தாக்கியது. அடுத்து இன்னொன்று பறந்து வந்து தன் இலக்கைத் தாக்கியது. இப்படி அடுத்தடுத்து வந்த பாறாங்கற்கள் இறுதியில் ஒரு கப்பலை மூழ்கடித்தன. அசுரப் படையினரிடமிருந்து ஒரு பெரும் ஆர்ப்பரிப்பு எழுந்தது.

கோட்டைக் கதவு திறக்கப்பட்டு, மீதமிருந்த அசுரக் காலாட்படையும் குதிரைப்படையும், ஆயுதங்கள் தாங்கிய ஆயிரக்கணக்கான ஆண்களும், 'ஹர ஹர மகாதேவா' என்று முழங்கியபடி முன்னோக்கி விரைந்தனர். நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். அது ஓர் அருமையான நாளாக இருந்தது. அடர்நீல வானத்தைப் பிரதிபலித்தபடி, கடல் ஒரு கண்ணாடித் தாள்போலப் பரந்து விரிந்து கிடந்தது. என்னைச் சுற்றித் தும்பிகள் பறந்து கொண்டிருந்தன, மலர்கள் மலர்ந்து கொண்டிருந்தன. ரத்தத்தின் வாடையையும் மரணத்தின்

வாடையையும் எப்படியாவது என்னால் தடுத்து நிறுத்த முடிந்தால், பூமியின் புத்துணர்ச்சியூட்டிய வாசனையையும் பனித்துளியின் மணத்தையும் நான் நுகர்ந்திருப்பேன். அப்போது, திடீரென்று எல்லாம் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. மனிதர்களின் அற்பமான தேடல்கள் குறித்து இவ்வுலகம் எந்த அக்கறையும் காட்டவில்லை. ராமன் வெற்றி பெற்றாலும் சரி, அல்லது ராவணன் வெற்றி பெற்றாலும் சரி, இந்த உலகத்திற்கு அதைப் பற்றிக் கவலை இருக்கவில்லை. ஒரு சிறுத்தையிடம் மாட்டிக் கொண்டு மரணத்தின் விளிம்பில் நிற்கும் ஒரு மானின்மீது எப்படி அதற்கு அக்கறை இருக்கவில்லையோ, அதுபோலவே அசுரர்களின் பரிதாப நிலை குறித்தும் அது அக்கறையற்றதாக இருந்தது. மக்களின் ரத்தத்தாலும் விலங்குகளின் ரத்தத்தாலும் நிலம் ஈரமாக இருந்ததை அது கண்டுகொள்ளவில்லை. ஒவ்வொரு கணமும், எங்கோ ஓரிடத்தில் யாரோ ஒருவன் கொல்லப்பட்டுக் கொண்டிருந்தான் அல்லது ஏதோ ஒன்று கொல்லப்பட்டுக் கொண்டிருந்தது. அது, ஒரு யுத்தக்களத்தில் ஓர் எதிரியின் வேலையாகவோ அல்லது பலிகடாக்களைத் தேடி அடுத்தவனின் வீட்டிற்குள் நுழைந்திருந்த ஒரு கொலையாளியின் கைவண்ணமாகவோ அல்லது பசியோடு இருந்த ஒரு புலியின் வேலையாகவோ இருந்திருக்கக்கூடும். அல்லது, அது ஒரு சாலை விபத்தின் மூலமாகவோ அல்லது கடவுள்களின் ரத்த வெறியைத் தணிப்பதற்குக் கொடுக்கப்பட்ட ஒரு பலியாலோ இருக்கக்கூடும். வன்முறை மட்டுமே உலகை ஆண்டது. அவ்வப்போது சிறிது இடைவெளி கொடுத்து, அது இன்னும் அதிக முரட்டுத்தனத்தோடு தாக்கியது. ஆனால் இவை எதுவும் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தவில்லை என்பது விசித்திரமான விஷயம். கௌரவம், பெருமை, இனம், தோலின் நிறம், ஒழுக்கநெறிகள், பாரம்பரியங்கள், வெற்றிகள், தோல்விகள் ஆகியவற்றைப் பற்றிய பேச்சு அனைத்தும், ஒட்டுமொத்தக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது அற்பமானவையாகவே இருந்தன.

ஆனாலும் ஏதோ ஒன்று என்னுள் துடித்தது. அது பயமா? நம்பிக்கையா? பழி வாங்குவதற்கான தாகமா? இந்த எண்ணங்கள் ஏற்படுத்திய அதீதக் களைப்பும் அவை எல்லாம் அர்த்தமற்றவையாக இருந்ததும் எனக்குத் தலைவேதனையை ஏற்படுத்தின. கட்டுப்படுத்தப்பட முடியாத உணர்ச்சிகளுக்கு இடையே எங்கோ ஓரிடத்தில், வாழ்வின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள நான் துடியாய்த் துடித்தேன். ஆனால் அதற்கு எந்த அர்த்தமும் இல்லை என்பதுதான் அதற்கான ஒரே பதில் என்பதை வெகுகாலத்திற்குப் பிறகே நான்

உணர்ந்தேன். ஆனால் அதற்குள் மிகவும் தாமதமாகியிருந்தது. நான் களைப்போடு அரண்மனையை நோக்கி நடந்தேன். பயங்கரமான யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்த கடற்கரையிலிருந்து அலறல்களும் கத்தல்களும் எனக்குக் கேட்டன. பெரும்புழுதி வானத்தை நோக்கிச் சுழன்றது. நான் என் குதிங்கால்களில் நின்று அதிகாயனைத் தேடினேன். “என் மகன் எங்கே? அவன் தானே வலியப் போய்த் தனது மரணத்தைத் தேடிக் கொள்வதற்கு முன்பாக நான் அவனைக் கண்டுபிடித்தாக வேண்டும்.” நான் என் வீட்டிற்குச் சென்று என் மனைவி மாலாவைப் பார்க்க விரும்பினேன். பிறகு, ஒருவேளை என்னால் அதிகாயனைக் கண்டுபிடிக்க முடிந்தால், இந்த மடத்தனத்தைத் துறந்துவிட்டு, ராமன்களும் ராவணன்களும் வசித்த இந்தப் பைத்தியக்கார உலகிலிருந்து தப்பித்துச் செல்வதற்கு நான் அவனை எப்படியாவது சம்மதிக்க வைப்பேன். “அவன் எங்கே போனான்? அல்லது, அவன் ஏற்கனவே கடற்கரையில் இறந்து கிடந்தானா?” கனத்தக் கால்களுடன், அரண்மனையை நோக்கி என்னை நான் வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றேன்.

ராவணனின் அரண்மனை, மேலெழுந்து கொண்டிருந்த புழுதி மேகத்திற்குப் பின்னால் ஒளிந்திருந்தது. கதவுகள் மூடப்பட்டிருந்தன. காவலாளிகள் பதற்றமாகவும் எச்சரிக்கையாகவும் இருந்தனர். எனக்கு மூச்சு வாங்கியது. நான் சற்று நேரம் நின்று என்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டேன். என்னுடைய முட்டாள் மகனையும், இந்த யுத்தத்தைத் துவக்கியிருந்த மூடர்களையும் நான் சபித்தேன். இந்த யுத்தம் விரைவில் முடிய வேண்டும் என்று நான் பிரார்த்தனை செய்தேன். இலங்கைக்குள் அத்துமீறி நுழைந்திருந்த ராமனைச் சிறைபிடித்து, அவனைத் தூக்கில் தொங்கவிட நான் விரும்பியிருப்பேன். அதற்காக ராவணனை நான் நேசித்தேன் என்று அர்த்தமாகிவிடாது. ஆனால் ராவணனின் ஆட்சி, பொறுத்துக் கொள்ளத்தக்க ஒன்றாக இருந்தது. இருந்தாலும், அந்த வஞ்சகமான தேவ இளவரசனுக்கு இணையாக ராவணனால் போட்டியிட்டு வெல்ல முடியுமா? சூரியன் என் முதுகைச் சுட்டெரித்தது. அதன் கதிர்களிலிருந்து என் கண்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, முடிச்சுகளுடன்கூடிய என் விரல்களை என் கண்களின் மேலாக வைத்துக் கொண்டு, அதிகாயனைத் தேடி அரண்மனையின் மேல்மாடங்களின்மீது என் கண்களை மேயவிட்டேன். அரண்மனை காலியாக இருந்ததுபோலத் தோன்றியது. பிறகு நான் என் கண்களைச் சுருக்கிக் கொண்டு, லேசாக இருட்டாக இருந்த அந்த அரண்மனையை மீண்டும் பார்த்தபோது, அசுரப் பேரரசரின் உயரமான உருவம் ஒரு மேல்மாடத்தில் தனியாக நின்று கொண்டிருந்ததைக் கண்டேன். அவர்

எந்த உணர்ச்சியுமின்றிக் கடற்கரையை வெறித்துப் பார்த்தபடி நின்றார். தனக்காகவும் தன் மக்களுக்காகவும் தான் கட்டியெழுப்பியிருந்த ஒரு பெருமைமிகு வாழ்க்கை, தன்னைச் சுற்றிலும் சுக்குநூறாக நொறுங்கிக் கொண்டிருந்ததை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். ஆனாலும் அவரது முகத்தில் எந்த உணர்ச்சியும் தென்படவில்லை. அவர் பெருமிதத்தோடு நிமிர்ந்து நின்று கொண்டிருந்தார். அவரது நரைத்தத் தலைமுடி காற்றில் பறக்க, அவர் தெய்வீகமாகக் காட்சியளித்தார். நான் என்னையும் அறியாமல் அவரைப் பணிந்து வணங்கினேன். அப்போது அவர் என்னை நோக்கித் திரும்பினார். எங்கள் இருவரின் கண்களும் சந்தித்துக் கொண்டன. பிறகு அவர் என்னைப் பார்த்துத் தலையசைத்தபோது என் மனம் மகிழ்ச்சியில் துள்ளியது. எங்களுடைய இளமைப்பருவத்தில், தேவர்களின் கோட்டைகளை அவர் தகர்த்தெறிந்தபோது அவரது அணியில் அவருக்குப் பக்கத் துணையாக இருந்த இந்த ஏழைச் சேவகனை, பத்ரனை, அவர் நினைவில் வைத்திருந்தார்.

ஒரு காவலாளி என்னை நோக்கி வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். பேரரசர் தனது மேல்மாடத்திலிருந்து காணாமல் போயிருந்தார். அரண்மனைக்குள் நுழையுமாறு அந்தக் காவலாளி எனக்கு உத்தரவிட்டான். ராவணனின் அரண்மனையின் பொற்கதவுகள் வழியாக நான் அடியெடுத்து வைத்து, அந்த அரண்மனையின் அழகை நான் பருகிக் கொண்டிருந்தபோது, நான் வேகமாக விலக்கித் தள்ளப்பட்டேன். நான் என் எதிர்ப்பைத் தெரிவிப்பதற்கு முன்பு, ஒரு குதிரை வண்டி மிக வேகமாக என்னைக் கடந்து சென்றது. அடையாளம் காண முடியாத அளவுக்குச் சிதைக்கப்பட்டத் தலையுடன் ஒரு தொய்வான உருவத்தை அதில் நான் கண்டபோது, நான் முணுமுணுத்துக் கொண்டிருந்த சாபங்கள் நின்றன. அந்த வண்டி திரும்பியபோது, நான் அந்த முகத்தைப் பார்த்தேன். அது வஜ்ரதம்ஸ்டிரன். “அந்தக் குரங்கு மனிதர்கள் அவனைப் பின்னாலிருந்து தாக்கினர்!” என்று, ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டிருந்தவர்களிடம் ஒரு வீரன் விளக்கிக் கொண்டிருந்தான். இது நெறிமுறைகள் எதுவுமில்லாத ஒரு மோசமான யுத்தமாக இருந்தது. நான் அந்த இடத்தைவிட்டு அகன்று, அதிகாயனைத் தேடி அரண்மனைக்குள் ஓடினேன்.



# 48

## ஆண்பிள்ளைகள் ஆண்பிள்ளைகள்தான்

ராவணன்

அன்றைய நாள் வெற்றிகரமானதாக முடிந்தது. வஜ்ரதம்ஸ்டிரனுக்குப் பிறகு, படையின் பொறுப்பை நான் ருத்ராக்கனிடம் ஒப்படைத்திருந்தேன். அவனும் சுமாலியும் பிரஹஸ்தனும் சேர்ந்து அன்றைய நாளைக் காப்பாற்றினர். சுமாலியும் பிரஹஸ்தனும் கட்டுமரங்களில் சென்று அற்புதமாகப் போரிட்டு ராமனின் படையை மறித்தனர். ராமனின் குரங்கு மனிதர்கள் பன்றிகளைப்போல வெட்டிச் சாய்க்கப்பட்டனர். பிரஹஸ்தனும் வருணனின் கப்பல்களில் மூன்றைக் கைப்பற்றினான். இனி வரும் நாட்களில் இது எங்களுக்குப் பெரும் சாதகமாக அமையக்கூடும்.

அரண்மனைக் கதவுகளுக்கு அருகே வைக்கப்பட்டிருந்த வஜ்ரனின் உயிரற்ற உடலுக்குப் பலர் இறுதி மரியாதை செலுத்தினர். அவன் உயிரோடு இருந்தபோது அவனைக் கண்டு அஞ்சி நடுங்கிய மக்கள், உயிரிழந்து கிடந்த அந்த அசுரத் தளபதியைப் பார்க்கப் பெருந்திரளாக வந்தனர். அவனது தனிப்பட்டத் துணிச்சலையும், எதைப் பற்றியும்

கவலைப்படாத அவனது மனப்போக்கையும், அவனது அளவுக்கதிகமான தலைக்கனத்தையும் நான் வெறுத்தேன். பிராமணப் புரட்சியை அவன் அடக்கி ஒடுக்கியிருந்த விதம் மிகவும் இழிவானதாக இருந்தது. நிலையற்ற அந்த நேரங்களில் அவன் கட்டவிழ்த்துவிட்டிருந்த கொடுங்கோன்மை, அசுரர்களின் அடையாளச் சின்னமான தர்மத்தையும் பரிவையும் என்றென்றைக்குமாகக் கறைபடுத்தியிருந்தது. ஆனால், வஜ்ரதம்ஸ்டிரனைப் போன்றவர்களின் தோள்களின்மீதுதான் நான் என் சாம்ராஜ்யத்தை உருவாக்கியிருந்தேன். எந்தத் தயக்கமுமின்றி அடுத்தவரின் உயிரைப் பறித்த, கொடூரத்தில் மகிழ்ச்சி கொண்ட அவனைப் போன்றவர்கள் மட்டும் எனக்கு வாய்க்காமல் போயிருந்தால், இந்த சாம்ராஜ்யம், அரைச்சாதியினனான, அரை வயிறு நிரம்பிய ஓர் ஏழை அசுரச் சிறுவனின் வெறும் கனவாக மட்டுமே இருந்திருக்கும்.

நான் என் மந்திரிகளோடும் உறவினர்களோடும் வெளியே வந்தபோது, இறந்து போன தளபதியைப் பார்க்க வந்திருந்த கூட்டத்தினர் கலைந்து போயினர். எனது பிரதான வீரனின் உயிரற்ற உடலின் முன்பு நான் குனிந்த தலையோடு நின்றேன். அவனது மனைவி மற்றும் மகளின் லேசான அழுகையொலி, அங்கு நிலவிய அசௌகரியமான அமைதியில் என் காதுகளில் விழுந்தது. நான் அவனது சடலத்தின் குளிர்ந்த பாதங்களைத் தொட்டபோது என் கைகள் நடுங்கியதை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. எல்லாவற்றையும் மன்னிக்கின்ற சிவனிடம் நான் பிரார்த்தனை செய்தேன். தனது மக்கள், தாங்கள் இழந்த பெருமையை மீண்டும் அடைய வேண்டும் என்பதற்காக, சாத்தியமிருந்த அனைத்து மாபெரும் குற்றங்களையும் புரிந்திருந்த இந்த மனிதனின் ஆன்மாவிற்காக நான் பிரார்த்தனை செய்தேன்.

இறந்தவர்களின் சடலங்கள் தெருக்களில் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டன. தங்களுடைய படைத்தளபதியுடன் சேர்த்துக் கொல்லப்பட்டிருந்த கீழ்நிலை வீரர்களும் கொண்டு வரப்பட்டனர். செந்நிறச் சூரியன் தன்னைக் கடலுக்குள் மூழ்கடித்துக் கொண்டபோது, ராமனின் படையினரிடமிருந்து தங்களது தாய்த்திருநாட்டைக் காப்பதற்காகத் தங்களது இன்னுயிர்களைக் கொடுத்திருந்த எனது வீரர்களின் சிதைகளிலிருந்து அடர்த்தியான கரும்புகை எழுந்தது. கடலின் குறுக்கே, ஜலசந்தியின் எதிர்முனையில், எதிரிப் படையினரின் சிதைகள் எரிந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. ஆனால், கொல்லப்பட்டிருந்த எங்களது வீரர்களின் உறவினர்களின் ஒட்டுமொத்த வருத்தமும், எங்கள் முகாமை நிரப்பிய பொதுவான மகிழ்ச்சியைவிட மேலோங்கி இருந்தது. எங்களைவிட அதிக பலம்

பொருந்திய தேவர்களை நாங்கள் சமாளித்திருந்தோம். அவர்களால் மறக்க முடியாத அளவுக்கு நாங்கள் அவர்களுக்கு பதிலடி கொடுத்திருந்தோம். அந்தக் காட்டுமிராண்டிகள் என் மகளை என்னிடம் விட்டுவிட்டு இங்கிருந்து ஓடிவிட வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். எனது வயதான காலத்தில், ஓர் அர்த்தமற்றப் போரில் பல நல்ல மனிதர்களைப் பலி கொடுப்பதற்கு என் மனம் இடமளிக்கவில்லை. தேவர்கள் குறித்து நான் கொண்டிருந்த பகைமையுணர்வு நீர்த்துப் போய் நெடுங்காலம் ஆகியிருந்தது. கௌரவம், பழி, போர், படையெடுப்புகள், இன மேன்மைத்துவம் போன்ற இளம்பருவ விருப்பங்களைக் கடந்து நான் பக்குவமடைந்திருந்தேன். தேவர்களும் அசுரர்களும் வாழ இடமளிக்கும் அளவுக்கு இந்த உலகம் போதுமான அளவு பரந்து விரிந்து இருந்தது. ராமன் என் மகளை என்னிடம் விட்டுவிட்டுச் சென்றால் போதும். அவன் அவளை ஒருபோதும் நல்லவிதமாக நடத்தியிருக்கவில்லை. இனியும் அவன் ஒருபோதும் அவ்வாறு செய்யப் போவதில்லை. அது அவனது ரத்தத்தில் ஊறிப் போயிருந்தது. பெண்களைப் புழுக்களைப்போல நடத்துவதற்கு அவன் பயிற்றுவிக்கப்பட்டிருந்தான். ராமனும் லட்சுமணனும் ஒரு வினோதமான ஜோடியாக இருந்தனர். தான் ஒருபோதும் விரும்பியிராத தனது மனைவிக்காக ஒரு யுத்தத்தைத் தொடங்கி ஆயிரக்கணக்கான மக்களைப் பலி கொடுக்க ஒருவன் தயாராக இருந்தான். இன்னொருவன், பதினான்கு ஆண்டுகளாகத் தனது மனைவியைத் தனது அரண்மனையில் தவிக்க விட்டுவிட்டுத் தன் அண்ணனோடு காடுகளில் அலைந்து கொண்டிருந்தான்.

சிதை நெருப்புகள் மெல்ல மெல்ல அணைந்து முடிந்து, பொதுமக்களும் அங்கிருந்து கலைந்து சென்ற பிறகு, நான் என் அறையை நோக்கி நடந்தேன். முக்கால் பாகம் வெளியே தெரிந்த நிலவு, இலங்கையின்மீது ஒரு மாயாஜாலமான, வெள்ளி நிற ஒளியைப் படரச் செய்தது. கடல் அமைதியாக இருந்தது. ஒரு மென்மையான காற்று, தென்னை மரங்களை அசைய வைத்தது. அந்தத் தென்னை மரங்களின் மெல்லிய, வெள்ளி நிற இலைகள், நிலவொளியைத் தமது விளிம்புகளில் பிடித்து, மணலின்மீது அழகான வடிவங்களை ஏற்படுத்தின. சமீபத்தில் விதவைகளான பெண்களையும் அனாதைகளான குழந்தைகளையும் விட்டுவிட்டுப் பார்த்தால், அது ஓர் அழகான இரவாக இருந்தது. போரின் கொடூரத்தைப் பற்றி நான் சிந்திக்க விரும்பவில்லை. என் தலையில் ராகங்கள் உருவாகிக் கொண்டிருந்தன. நான் என் அறைக்குள் நுழைந்தபோது, எனது ருத்ர வீணையின் கம்பிகளின்மீது நிலவொளி பிரதிபலித்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். நான் அந்த

வீணையை வாசித்து நெடுங்காலம் ஆகியிருந்தது. இந்தக் குறிப்பிட்ட இசைக்கருவி, இமயமலையின் அடிவாரத்திலிருந்து எனக்குக் கிடைத்தது. அந்தப் பயணத்தின்போது, நாங்கள் அனைவரும் ஒரு பனிச்சரிவின் கீழே புதைக்கப்பட்டிருந்தோம். மாபெரும் மலைகளின் கம்பீரமும் என் அன்புக்குரிய கடவுளான சிவனின் உறைவிடமும் எனக்கு பிரமிப்பூட்டி என்னைத் திக்குமுக்காட வைத்திருந்தன. மரணத்தின் விளிம்புவரை சென்றுவிட்டு வந்த அனுபவமும், அதைத் தொடர்ந்து ஓர் உழவனின் குடிசையில் தங்கி நலம் பெற்றதும் அடக்கத்தைப் பற்றி எனக்குக் கற்றுக் கொடுத்தது. இமயமலையின் அடிவாரத்தில் தொலைவிலிருந்த அந்த கிராமத்தில், நான் வாழ்வின் அழகைப் பற்றிக் கற்றேன், என்னுள் இருந்த இசைக்கலைஞனைக் கண்டறிந்தேன். ருத்ர வீணையின் ஒலி, துவக்கத்தில் என் காதுகளுக்கு எரிச்சலூட்டியது. ஆனால் மெல்ல மெல்ல, அது என் கற்பனையைக் கவர்ந்தது. இலங்கைக்குத் திரும்புவதற்காக நான் என் விமானத்தில் ஏறுவதற்குள், வீணை வாசிப்பதில் நான் கைதேர்ந்தவனாக ஆகியிருந்தேன். அந்த நேரத்திலிருந்து, இசையின்மீது எனக்கு ஆழ்ந்த விருப்பம் ஏற்பட்டது. அசுரர்களின் இசைக் கருவியான செண்டை, மிருதங்கம், மிழவு, உடுக்கை, மத்தளம் போன்றவற்றையும், மயங்க வைக்கும் புல்லாங்குழலின் காந்தர்வ இசையையும் நான் முயற்சித்துப் பார்த்தேன். பல கலைகளில் நேர்த்தியான அறிவு பெற்றவன் என்று நான் புகழ் பெற்றிருந்ததால், நாடு நெடுகிலுமிருந்தும், அதற்கு அப்பாலிருந்தும் பல கலைஞர்கள் என்னைத் தேடி வந்தனர். ஒரு சாம்ராஜ்யத்தை நடத்துவதிலிருந்த மன அழுத்தங்களையும் இறுக்கங்களையும் மறந்துவிட்டு, எனது இசைக் கலைஞர்களின் தாளங்களிலும் ராகங்களிலும் மனம் மயங்கி, எனது சுறுசுறுப்பான விரல்கள் எனது ருத்ர வீணையின் தந்திகளை வருடியதிலிருந்து தவழ்ந்து வந்த இசையில் மெய்மறந்து, இலங்கையின் பூங்காக்களில் பல மாயாஜாலமான இரவுகளை நான் கழித்திருந்தேன்.

இன்றும் அதேபோன்ற ஒரு மாயாஜாலமான இரவுதான். வளைவு நெளிவுகளுடன் பாந்தமாக இருந்த எனது ருத்ர வீணையின் உடலைத் தழுவுவதற்கான தூண்டுதல் என்னுள் பொங்கியது. ஒரு காதலன் தன் காதலியைத் தொட்டுத் தூக்குவதைப்போலவே, நான் என் வீணையை எடுத்து, அதை என் மடிமீது வைத்தேன். பிறகு, நான் எனது யுத்தத்தை மறந்தேன், ராமனையும் அவனது குரங்கு மனிதர்களையும் மறந்தேன், போரில் இறந்தவர்களையும் இன்னும் உயிரோடு இருந்தவர்களையும் மறந்தேன், ஏன், என்னையே நான் மறந்தேன். எந்தக் கவலையுமின்றி, எந்தக் குறிக்கோளும் இன்றி, எந்த வேர்களும் இன்றி, எந்தச் சுமையும்

இன்றி, காற்றில் சுகமாக மிதந்து கொண்டிருந்த ஓர் இறகைப்போல நான் ஆனேன். நான் இந்த பூமியோடும் பிணைக்கப்பட்டிருக்கவில்லை, அந்த வானத்தோடும் பிணைக்கப்பட்டிருக்கவில்லை. நான் நானாக மட்டுமே இருந்தேன். என் அன்பு மனைவி மண்டோதரி, என் அருகில் வந்து அமர்ந்து தனது அழகான முகத்தை எனது தோளின்மீது வைத்து என்னை மென்மையாகத் தொட்டதைக்கூட நான் உணரவில்லை. அசுரர்களின் தற்காலிக வெற்றியைக் கொண்டாடும் விதத்தில், கீழே இருந்த தோட்டத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த கேளிக்கை விருந்து குறித்தப் பிரக்ஞைகூட எனக்கு இருக்கவில்லை.

“அரசே, என் மகன் எங்கே?” என்ற குரல் என் மயக்கத்திலிருந்து என்னை விடுவித்து, யுத்தம் மற்றும் மரணம் குறித்த யதார்த்தத்திற்கு என்னை அழைத்து வந்தது. என் கண்களில் கோபக்கனல் தெறிக்க, நான் என் கண்களைத் திறந்தேன். திரைச்சீலைகளின் நிழல்களிலிருந்து பத்ரனின் அசிங்கமான, கூன் விழுந்த உருவம் வெளிப்பட்டது. “என் தனிப்பட்ட அறைக்குள் நுழைவதற்கு இந்தப் பிச்சைக்காரனுக்கு என்ன துணிச்சல்? யார் இவனை உள்ளே அனுமதித்தது?” என்று நான் உள்ளூரச் சீறினேன். என்ன செய்வதென்று நான் யோசிப்பதற்குள், அவன் என் பாதங்களில் விழுந்து, என் கால்களைத் தன் கைகளால் இறுகப் பற்றினான். செய்வதறியாமல் திகைத்து நான் ஒரு சிலையாக நின்றேன். பிறகு நான் அவனை மெதுவாகத் தூக்கினேன். வியர்வை நாற்றமும் நாட்டச் சாராயத்தின் நெடியும் என் மூக்கைத் தாக்கின. எனக்கு மூச்சுத் திணறியது. உடனடியாக, பத்ரன் என்னிடமிருந்து வேகமாக ஒதுங்கி, பயந்து போன ஓர் எலியைப்போல மூலையில் சுருண்டான்.

நான் உறுதியற்ற ஒரு குரலில், “பத்ரா, பரவாயில்லை,” என்று கூறினேன்.

“அரசே, உங்களைத் தொட்டு அசுத்தப்படுத்தியதற்காக என்னை மன்னித்துவிடுங்கள்,” என்று அவன் கூறியபோது, அவனது குரல் உடைந்தது, அவனது கண்கள் நிலத்தைப் பார்த்தன.

மண்டோதரி அந்த முதியவனை நோக்கி வேகமாகச் சென்று, அவனது கைகளைத் தனது கைகளில் எடுத்துக் கொண்டாள். அவன் அவளிடமிருந்து விடுபட முயற்சித்தான். அவள் அதிகப் பரிவோடு, “பத்ரா, என்ன நிகழ்ந்தது?” என்று கேட்டாள்.

பதிலுக்கு அவன் அழத் துவங்கினான். என் வாழ்வின் மிக மாயாஜாலமான கணங்களில் ஒன்றுக்குள் அவன் அத்துமீறி நுழைந்திருந்ததற்காக அவன்மீது எனக்கு ஏற்பட்டக் கடுங்கோபம், என் மனத்தின் இருண்ட மூலைகளில் எங்கோ ஓரிடத்தில் ஆழமாகப்

புதைந்திருந்த, அசுத்தம் குறித்த எண்ணங்களுக்கு அவன் விழிப்பூட்டியிருந்தது குறித்த அவமானம், இந்தப் பிச்சைக்காரனை ஒரு பரிவான விதத்தில் நான் நடத்தியிருக்காதது குறித்த வருத்தம், இந்தப் பரிதாபகரமான மனிதனின் துயரத்தைப் புரிந்து கொள்வதற்குப் போதுமான பரிவு என் அரசிக்காவது இருந்தது குறித்த மகிழ்ச்சி என்று, பல்வேறு உணர்ச்சிகள் ஒருசேர என்னைத் தாக்கின. என் மனம் தாறுமாறாக அலைபாய்ந்து கொண்டிருந்தபோது, தனது வளர்ப்பு மகனான அதிகாயனைத் தான் தேடிக் கொண்டிருந்ததாக பத்ரன் கூறியது என் காதுகளில் விழுந்தது. என் மனத்தின் ஏதோ ஒரு மூலையில், அதியகன் என் ரத்தம் என்பதையும், அவனை நான் வேண்டுமென்றே மறந்திருந்தேன் என்பதையும் நான் அறிந்தேன். எரிச்சலூட்டிய அந்த எண்ணங்களை மீண்டும் என் மனத்தின் மூலைக்குள் தள்ளி அடைத்தேன். இந்த வயதான பிச்சைக்காரன், நான் எனது இருண்ட ரகசியங்களை உலகத்தாரிடமிருந்து மறைத்து வைத்திருந்த, என் அந்தரங்கமான, அழுக்கான அறைக்குள் அத்துமீறி நுழைந்து, அதைக் கைப்பற்றிக் கொண்டிருந்தது போன்ற ஓர் உணர்வு எனக்கு ஏற்பட்டது.

என் மகன் மேகநாதன் அந்த அறைக்குள் வேகமாக நுழைந்தான். அவன் குடிபோதையில் இருந்ததை என்னால் நுகர முடிந்தது. சாராய நெடியும், பெண்கள் வாடையும், அகங்கார போதையும் அவன்மீது வீசின. அவனது நிழலைப்போல, அவனை ஒட்டி ஒரு கரிய உருவம் அந்த அறைக்குள் நுழைந்தது. அவனைப் பார்த்ததும், பத்ரன் அவனை நோக்கி விரைந்தான். ஆனால் அதிகாயன் அந்த முதியவனை மரியாதையின்றி விலக்கித் தள்ளினான். பத்ரன் தடுமாறிக் கீழே விழுந்தான். என் முகம் கோபத்தாலும் அவமானத்தாலும் எரிந்தது. அந்தக் கயவன் அதிகாயன் என் மகன் மேகநாதனின் தோளின்மீது அவனுக்குச் சமமானவனைப்போலச் சாய்ந்திருந்தான். அவர்கள் இருவருமாகச் சேர்ந்து, பேரரசனின் தனிப்பட்ட அறையில் ஒரு ரகளையை உருவாக்கிக் கொண்டிருந்தனர்.

மேகநாதன், “அப்பா, நாங்கள் அந்தச் சண்டாளர்களைப் புரட்டியெடுத்துவிட்டோம். நான் ஒரு வேட்டிக்குத் தீ வைத்த விதத்தை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். ஊஊஊ . . . அதிகாயனின் அம்பு லட்சுமணனின் பிட்டத்தைத் தாக்கியது . . . ஹா ஹா . . . லட்சுமணன் எப்படி உட்காருவான் என்று நான் யோசிக்கிறேன் . . .” என்று கூறிச் சிரித்தான். அதிகாயனும் அவனோடு சேர்ந்து சிரித்தான். நான் என் மகனின் முதுகில் ஓங்கி அறைந்தேன்.

“மேகநாதா . . .” என்று நான் உச்சஸ்தாயியில் கத்தினேன். “நீ உன்

பெற்றோர்கள் முன்னால் பேசுவதற்கான முறை இதுவல்ல.”

“அதிகயா . . . அப்பாவிடம் மன்னிப்புக் கேட்டுவிடு . . .” என்று மேகநாதன் திக்கித் திணறினான். நான் ஓரடி முன்னால் வந்து, அவனது முகத்தின்மீது பலமாக அறைந்தேன். அவன் ஒரு கணம் திகைத்தான். பிறகு, ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அவமானத்தில் தன் தலையைக் கவிழ்த்தபடி அங்கிருந்து வெளியேறினான். அதிகாயன் அவனைப் பின்தொடர்ந்தான்.

பத்ரன் அவர்களுக்கு முன்னால் பாய்ந்து, அவர்களுடைய வழியை மறிக்க முயற்சித்தான். “அதிகயா, போகாதே! தயவு செய்து என்னுடன் வந்துவிடு. நாம் இங்கிருந்து போய்விடலாம். நாம் இந்தியாவிற்குப் போய்விடலாம். தயவு செய்து எங்களோடு வந்துவிடு.”

“மூடனே, என் வழியைவிட்டு விலகு,” என்று கூறி, அதிகாயன் பத்ரனை வேகமாகத் தள்ளினான். அந்த வயோதிகன் நிலைதடுமாறி விழுந்தான். “நீ நரகத்தில் வெந்து கருகு!” என்று சபித்துவிட்டு, அதிகாயன், மேகநாதனைத் தொடர்ந்து இருட்டில் மாயமாய் மறைந்தான்.

மண்டோதரி என்னிடம் ஏதோ கூறினாள், ஆனால் நான் என் கையை உயர்த்தி, அவளை அங்கிருந்து வெளியேறும்படி சைகை காட்டினேன். நான் தனிமையில் இருக்க விரும்பினேன். அச்சுறுத்தும் விதத்தில் அழகாக இருந்த, நிலவொளி வீசிய இரவை வெறித்தபடி நான் நின்றேன். ஆண்பிள்ளைகள் ஆண்பிள்ளைகள்தான், அவர்கள் ஓர் அரண்மனையில் பிறந்தாலும் சரி, அல்லது ஒரு குடிசையில் பிறந்தாலும் சரி. ஆனால் இந்த வகையான அகங்காரம், வரவிருந்த பேரழிவிற்கான முன்னறிகுறியாக எனக்குத் தோன்றியது. ஆனால் இளைமையுடன் யாரால் குறைகாண முடியும்? நான் என்னுடைய தந்தையிடம் இதைவிட மோசமாக நடந்திருந்தேன். கேளிக்கைக் கொண்டாட்டம் நடந்து கொண்டிருந்த அரண்மனைத் தோட்டத்தில், திடீரென்று ஓர் அலறலும், அதைத் தொடர்ந்து ஒரு பெரிய குழப்பச் சத்தமும் கேட்டது. என் அறையின் தரையில், சுக்குநூறாக நொறுங்கிய இதயத்துடன் படுத்துக் கிடந்த பத்ரனின் உடலின்மீது மிதித்து, என் இதயம் படபடக்க அரண்மனைத் தோட்டத்தை நோக்கி நான் ஓடினேன்.



# 49

## மரணத்தின் மறுபிரவேசம்

பத்ரன்

நான் சிறிது நேரம் கழித்து எழுந்தேன். என் இதயம் கனத்திருந்தது. எதனாலும் என்ன பயன்? எதிர்பார்ப்பதற்கு இப்போது எதுவும் இருக்கவில்லை. என் மகன் என்றென்றைக்குமாகத் தொலைந்து போயிருந்தான். நான் அவனை இனி ஒருபோதும் பார்க்க மாட்டேன் என்பதை நான் அறிந்தேன். அல்லது அவனை ஓர் உயிரற்ற உடலாக மட்டுமே நான் பார்க்கக்கூடும். வினோதமாக, அசுரப் பேரரசரின்மீது எனக்குப் பரிதாபம் ஏற்பட்டது. அவர் ஓர் அரசன் என்பதாலோ, அசுர இனத்திற்காகத் தனது வாழ்க்கையையும் வீரத்தையும் கொடுத்திருந்த ஒரு மாபெரும் தலைவன் என்பதாலோ எனக்கு அந்தப் பரிவு ஏற்படவில்லை. மாறாக, மனமுடைந்து போயிருந்த ஒரு தகப்பன் இன்னொரு தகப்பன்மீது காட்டிய பரிதாபம்தான் அது. அவருடைய அரச உடைகளையும் பளபளப்பான மகுடத்தையும் அவரிடமிருந்து எடுத்துவிட்டால், அவரும் என்னைப் போன்ற ஒரு சாதாரண மனிதர்தான். அல்லது, அப்படி நினைத்து என்னை நானே ஏமாற்றிக்

கொண்டிருக்கிறேனா? அதிகாரமும் வல்லமையும் கொண்ட மக்கள் வேறு ஏதேனும் ஒரு விதத்தில் மகிழ்ச்சியற்று இருந்தார்களா?

அரண்மனையில் ஒரு மயான அமைதி நிலவியது. அரசவையிலிருந்து வந்து கொண்டிருந்த லேசான வெளிச்சத்தில், தோட்டத்திலிருந்த புதர்ச்செடிகளுக்கும் மரங்களுக்கும் இடையே நிழல்களை நான் பார்த்தேன். ஏதோ ரகசியமான ஒன்று நடந்து கொண்டிருந்தது. முக்கியமான மனிதர்களின் விவகாரங்களுக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று நெடுங்காலத்திற்கு முன்பே நான் தீர்மானித்திருந்தேன். ஆனால் ஆர்வம் என்னை வதைத்தது. திறந்திருந்த சன்னல் வழியாக நான் எட்டிப் பார்த்தேன். பேரரசர் தன் அரியணையில் அமர்ந்திருந்தார். அவரது முகம் பேயறைந்தாற்போல இருந்தது. அவரது மந்திரிகள், தரையில் ஒருசில உடல்களைச் சுற்றிக் கூடியிருந்தனர். நான் பதற்றமடைந்தேன். அதிகாயனுக்கு ஏதேனும் நிகழ்ந்திருந்ததா? அங்கு என்ன நடந்து கொண்டிருந்தது என்பதைப் பார்ப்பதற்காக, யாரேனும் நகர்ந்து கொள்ள மாட்டார்களா என்று நான் தவிப்போடு காத்திருந்தேன்.

"இது மன்னிக்க முடியாதது," என்று பேரரசர் ஓர் உறைய வைக்கும் குரலில் கூறினார். அவரது மந்திரிகள் இருப்புக் கொள்ளாமல் நெளிந்தனர்.

அப்போது பிரஹஸ்தன் பேசினான். "நான் மூன்று மணிநேரத்திற்கு முன்பு கண்விழித்தேன். நான் நமது அரண்மனைத் தோட்டத்தைச் சென்றடைந்தபோது, அங்கு நிலவிய காட்சி மிகவும் கோரமாக இருந்தது. நமது மக்கள் சரமாரியாகக் கொல்லப்பட்டுக் கொண்டிருந்தனர். அங்கு கும்மிருட்டாக இருந்தது. யார் யாரை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தார்கள் என்று தெளிவாகத் தெரியவில்லை. துவக்கத்தில், ஒரு வெற்றிக் கொண்டாட்டம் தாறுமாறாகப் போயிருந்ததாகவும், நமது மக்களே ஒருவரையொருவர் வெட்டிக் கொன்று கொண்டிருந்ததாகவும் நான் நினைத்தேன். நான் அங்கிருந்து விரைந்து சென்று நமது காவலர்களை அழைத்தேன். நாங்கள் அந்த இடத்தை நெருங்கியபோது, இரண்டு கரிய உருவங்களை நான் கண்டேன். அனுமானும் அங்கதனும்தான் அவர்கள் என்பது எனக்குக் கிட்டத்தட்ட உறுதியாகத் தெரிந்தது. நான் அவர்களைக் கைது செய்ய முயற்சித்து, அங்கதன்மீது என் குத்துவாளைத் தூக்கியெறிந்து அவனைக் காயப்படுத்தினேன். ஆனால் அந்தக் குழப்பத்தில் அவர்கள் இருவரும் தப்பிவிட்டனர். அரசே, அப்போதுதான் நீங்கள் அந்த இடத்திற்கு வந்தீர்கள். அங்கதனின் குரல்தான் உங்களை உலுக்கியிருக்க வேண்டும்," என்று அவன் கூறினான். அதைத்

தொடர்ந்து ஓர் இறுக்கமான மௌனம் நிலவியது.

"இது யாரோ உள்ளிருந்து செய்த சதி வேலைதான். நாம் வழக்கமான அசுர வழியில் வீழ்ச்சி அடையப் போகிறோம் என்று நான் நினைக்கிறேன். நாம் இன்று கிட்டத்தட்ட வெற்றி பெற்றுவிட்டோம், ஆனால் பிறகு, வெற்றியின் வாயிலிருந்து தோல்வியைப் பிடித்து இழுத்தோம். நாம் அடிமைகளாக இருப்பதற்குத்தான் தகுதியானவர்கள் என்று நினைக்கிறேன். என்னுடைய மூத்த மந்திரிகளில் இருவர் என் சொந்தத் தோட்டத்திலேயே வெட்டிக் கொல்லப்பட்டுள்ளனர். எந்தவிதமான நெறிமுறையோ, நியாய உணர்வோ, அல்லது தர்மமோ இல்லாத ஓர் எதிரியை நாம் கையாண்டு கொண்டிருக்கிறோம். ஈவு இரக்கமற்றக் காட்டுமிராண்டிகள் அவர்கள். தங்களுடைய இலக்குகளை அடைவதற்குத் தங்களால் எவ்வளவு கீழ்த்தரமாகப் போக முடியுமோ, அவ்வளவு கீழ்த்தரமாகப் போகக்கூடியவர்கள் அவர்கள். ஆனால் நம்மிடையே உளவாளிகளும் நம்பிக்கைத் துரோகிகளும் பெருகிக் கிடக்கின்றனர். என் சகோதரன் ஒரு நம்பிக்கைத் துரோகியாக மாறினான். என் நண்பனும் ஒரு நம்பிக்கைத் துரோகியாக ஆனான். இந்த தேவர்களுக்கு வேறு யாரெல்லாம் உதவுவார்கள் என்று நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். சுமாலியும் மால்யவனும் நல்லவர்கள். அவர்கள் படைவீரர்களாக இல்லாமல் போயிருக்கக்கூடும், ஆனால் அவர்களுக்கு இந்த முடிவு ஏற்பட்டிருக்கக்கூடாது. ருத்ராக்கா, இப்போது இது நெறிமுறைகளற்ற ஒரு யுத்தமாக மாறியுள்ளது. எதிரிப் படைகளில் உச்சபட்ச அழிவை உண்டாக்குவதுதான் நமது ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அவர்களைப்போலக் கொடூரமான தீவிரத் தாக்குதலில் ஈடுபடுவது, மக்களைத் தூக்கத்தில் கொல்வது போன்ற தரக்குறைவான காரியங்களில் ஈடுபடுவதில் எனக்கு விருப்பமில்லை. ஆனால் நாம் தந்திரத்தைப் பயன்படுத்தி அவர்களைச் சிறைபிடிப்பதில் நியாயம் உள்ளதாக நான் நினைக்கிறேன். என் மகனைத் தேடிக் கண்டுபிடியுங்கள். அவன் போதை தெளிந்து நிதானமான நிலையில் இருந்தால், அவனை இங்கே அழைத்து வாருங்கள். பிரஹஸ்தா, அமைதி திரும்பும்வரை, சுமாலியும் மால்யவனும் செய்த வேலைகளை நீ பார்த்துக் கொள். நாம் திறமையாகத் திட்டமிட்டு, அந்தக் காட்டுமிராண்டுகளுக்கு அவர்களது சொந்த வழியில் ஒரு பாடம் கற்றுக் கொடுக்கலாம்," என்று கூறிய பேரரசரின் குரல் உறுதியாகவும் கடுமையாகவும் இருந்தது.

நான் ஒருமுறை ஆழமாக சுவாசித்தேன். கொல்லப்பட்டிருந்தது இரண்டு வயதான மந்திரிகள். அவர்கள் நல்லவர்கள். தங்கள் பொதுவாழ்க்கையில் நாணயமாக நடந்து கொண்டவர்கள். ஆனால்

அவர்களுடைய மரணங்கள் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இருக்கவில்லை. உலகத்தில் அவர்களைப் போன்ற மனிதர்கள் ஏராளமானோர் இருக்கின்றனர். அவர்கள் இருவரின் இடத்தில் அவர்களைப் போன்ற வேறு யாரையேனும் நியமிக்க முடியும். யாராலும் எந்த வித்தியாசத்தையும் கூற முடியாது. ஆனால் அரசவைக்குள் நிகழ்ந்து கொண்டிருந்த விஷயம் சுவாரசியமூட்டுவதாக இருந்ததால், நான் என் இடத்தைவிட்டு அசையாமல் அங்கேயே நின்றேன். விரைவில், மேகநாதனும் அதிகாயனும் அரசவைக்குள் நுழைந்ததை நான் பார்த்தேன். மந்திரிகள் தங்கள் இருக்கைகளில் அமர்ந்திருந்தனர். அவர்களுடைய தலைகள் தெற்கு நோக்கித் திரும்பியிருந்தன. தேங்காய்ச் சிரட்டைகளிலிருந்து செய்யப்பட்ட எண்ணெய் விளக்குகள் மினுக்மினுக்கென்று ஒளிர்ந்து கொண்டிருந்தன. தரையில் கிடத்தப்பட்டிருந்த உடல்களைக் கண்டதும் அதிகாயனும் மேகநாதனும் அதிர்ச்சியடைந்தனர். சிறிது நேரம் யாரும் பேசவில்லை. இறந்து போன அந்த மந்திரிகளுக்கு இறுதி மரியாதை செலுத்துவதற்காக அந்த இளைஞர்கள் இருவரும் நிலத்தில் விழுந்து வணங்கினர். பிறகு, மேகநாதன் அதிகாயனோடு சேர்ந்து தரையில் அமர்ந்து கொண்டான். அதிகாயனைக் கண்டதும் ராவணனின் புருவங்கள் உயர்ந்தன, ஆனால் அந்த இளைஞர்கள், வயதில் தங்களுக்கு மூத்தவர்களின் வெறுப்பைக் கண்டுகொள்ளவில்லை.

“நாளைக்கு, ருத்ராக்கன் கிழக்குப் பகுதியிலிருந்து தாக்கும்போது, நாம் கைப்பற்றியுள்ள கப்பல்களைக் கொண்டு பிரஹஸ்தன் கடலிலிருந்து தாக்கி, கடற்கொள்ளையர்களின் கப்பல்களில் இன்னும் பலவற்றைக் கடலில் மூழ்கடிக்கவோ அல்லது கைப்பற்றவோ முயற்சிப்பான். அந்த தேவ சகோதரர்கள் முன்னின்று தாக்குவார்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். நேற்று அவர்களுடைய பாலம் இடிந்து விழுந்துவிட்டதால், அவர்கள் இன்று கட்டுமரங்களைப் பயன்படுத்தி, நகரின் வட பகுதியிலிருந்து நம்மைத் தாக்க முயற்சிக்கக்கூடும். குன்றுகளை நாம் நமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். பாறைகள் பெரிதாகப் பலனளிக்கும் விதத்தில் பயன்படுத்தப்படுவதை நாம் உறுதி செய்ய வேண்டும். எதிரி நம்முடைய நகர வாசல்களை அடையும்வரை காத்திருந்து, பிறகு அவர்களைப் பாறைகளாலும் கொதிக்கும் எண்ணெயாலும் நாம் குளிப்பாட்ட வேண்டும். கவட்டைகளையும் நெருப்புக் கனல்களை எறியும் கருவிகளையும் ஆற்றல்மிக்க வகையில் பயன்படுத்துங்கள். பிரஹஸ்தன் அவர்களைக் கடலிலிருந்து சூழ்ந்து கொண்டு, அவர்கள் பின்வாங்குவதைத் தடை செய்வான். குறைந்தபட்சம், கடலிலிருந்து

அவர்களுக்கு எந்த உதவியும் கிடைக்காத விதத்தில், வருணனுடன் போரிட்டு அவனைத் திசை திருப்புவான். அசுரப் படையின் துணைத்தளபதி தும்ரக்ஷகனை அந்தப் பணியில் ஈடுபடுத்துங்கள். அவன் வானரப் படையினர்மீது உச்சபட்சத் தாக்கத்தை உருவாக்கி, அவர்களிடையே பீதியை உருவாக்கட்டும். அவர்கள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் தாக்கப்படும்போது, லாயங்களின் தலைவனான சுராந்தகன், கோட்டைக் கதவின் வழியாக நமது யானைகளைத் திறந்துவிடுவான். நாம் கோட்டைக் கதவைத் திறப்போம் என்று அவர்கள் எதிர்பார்க்க மாட்டார்கள். அவர்களை உள்ளே வரவழைத்து, அசுரக் கோட்டையின் பாதுகாப்பைத் தாங்கள் தகர்த்தெறிந்துவிட்டிருந்ததாக அவர்களை நம்ப வையுங்கள். குன்றுகளுக்கும் நகரச் சுவர்களுக்கும் இடையேயான குறுகிய இடைவெளிகளில் அவர்கள் சிக்கிக் கொள்ளும்போது, அந்த யானைகளைக் கட்டவிழ்த்துவிடுங்கள். நாம் எவ்வளவு திறன் படைத்தவர்கள் என்பதை நாம் அந்த வானரர்களுக்குக் காட்டலாம்.

“மேகநாதா, நான் உன்னுடன் தனியாகப் பேச விரும்புகிறேன். தேவப் படையின் முதுகெலும்பை உடைக்கக்கூடிய ஒரு காரியத்தை நான் உன் பொறுப்பில் ஒப்படைக்கப் போகிறேன். கொல்லப்பட்டுள்ள நமது வீரர்களின் இறுதிச் சடங்கிற்கான ஏற்பாடுகளைச் செய். இன்றைய யுத்தத்தில் உயிரிழந்துள்ளவர்களின் வீடுகளுக்குச் சென்று, அவர்களுடைய குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறு. அவர்களுடைய இந்தத் துயரமான நேரத்தில், ஒட்டுமொத்த அசுரச் சமூகமும் அவர்களுடன் இருப்பதாகவும், தனக்காகத் தங்களது இன்னுயிர்களை ஈந்தவர்களை நாடு ஒருபோதும் கைவிடாது என்பதையும் நாம் அவர்களுக்கு உறுதியளிக்க வேண்டும்,” என்று கூறிவிட்டு, பேரரசர் ராவணன் தன் அரியணையிலிருந்து எழுந்தார். உடனே ஒட்டுமொத்த அரசவையும் எழுந்து நின்றது.

கிழக்கு வானம் ஆரஞ்சு நிறத்திற்கு மாறியிருந்தது. மரங்களில் பறவைகள் ஒலியெழுப்பிக் கொண்டிருந்தன. அசுரப் பேரரசர் செய்து கொண்டிருந்த காரியம் எனக்கு சுவாரசியமாக இருந்தது. அதே சமயத்தில், அது எனக்கு பயத்தையும் ஏற்படுத்தியது. ஒருவழியாக, அவர் முன்னின்று யுத்தம் புரியவிருந்தது குறித்து நான் மகிழ்ச்சியடைந்தேன். அவர் தனது உடலுறுதியைத் திரும்பப் பெற்றிருந்தார். இப்போது அனுபவமும் அவருக்குக் கைகூடியிருந்தது. அதே நேரத்தில், பொதுமக்கள் கொல்லப்பட்டது குறித்துச் சிறிதளவுகூடக் கவலைப்படாமல், தீவைப்புகள் மற்றும் நயவஞ்சகத்தின் மூலம் எதிரியின் நகரங்களை எரித்துக் கொண்டிருந்த, ஈவு இரக்கமற்ற ஓர்

எதிரியை அவர் எதிர்கொண்டிருந்தார். அது ஒரு கொடூரமான யுத்தமாக இருந்தது. என் மகனும் ஏதோ ஒரு ரகசியத் திட்டத்தின் ஒரு பகுதியாக இருந்தான். நான் இந்த யுத்தத்தில் எந்தப் பங்கும் வகிக்க விரும்பவில்லை. ஆனால் மகன்கள் மகன்கள்தான். நான் களைத்துப் போயிருந்தேன். போருக்கான திட்டங்களைத் தீட்டிக் கொண்டிருந்த அரசர்களையும் முற்றுகையிட்டுக் கொண்டிருந்த இளவரசர்களையும் எனக்குப் பின்னால் வெகுதூரத்தில் விட்டுவிட்டு, நான் என் வீட்டிற்குச் சென்றேன். நான் மூக்கு முட்டக் குடித்துவிட்டு, ஒரு மரக்கட்டையைப்போலத் தூங்க விரும்பினேன்.



# 50

## யாருக்காக?

ராவணன்

என் மந்திரிகள் இருவரின் மரணம் எனக்கு மிகப் பெரிய ஒரு பின்னடைவாக இருந்தது. இந்த யுத்தம், இதுவரை நான் சண்டையிட்டிருந்த மற்ற எந்தவொரு யுத்தத்திலிருந்தும் மாறுபட்டு இருந்தது. என் அரண்மனையை உளவாளிகள் மொய்த்தனர். கொலையாளிகளுக்குத் தண்டனைகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. இந்த இறுமாப்புக்கார தேவ இளவரசனின் கதையை இன்று நாங்கள் முடித்துவிடுவோம் என்று நான் நம்பினேன். அவன் விஷ்ணுவின் மறு அவதாரம் என்று வானரர்கள் நம்பியதாக நான் கேள்விப்பட்டிருந்தேன். "இது ஒரு நல்ல விளம்பரம் என்று நான் ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். கடவுள் உங்களுக்குள் இருப்பதாகக் கூறுங்கள், அல்லது, அதைவிடச் சிறப்பாக, நீங்கள்தான் கடவுள் என்று கூறுங்கள். அப்போது நீங்கள் செய்யும் எதுவொன்றும், நீங்கள் செய்யும் எந்தவோர் அதர்மமும் தெய்வீக நாடகம் என்று ஏற்றுக் கொள்ளப்படும்." ராமன் தெய்வீகத்தன்மை கொண்டவன் என்று பல அசுரர்களும் நம்பத்

துவங்கியிருந்ததைக் கேள்விப்பட்டு நான் அதிர்ச்சியடைந்தேன். வனவாசத்திற்குத் தன் மனைவியை ஆட்படுத்தித் துன்புறுத்துவது, நட்புணர்வு கொண்ட ஓர் அரசனை வஞ்சகமாகக் கொல்வது, நகரங்களுக்குத் தீவிரவாதிகளை அனுப்பி வைத்து அப்பாவி ஆண்களையும் பெண்களையும் சூதுவாதற்றக் குழந்தைகளையும் ஒழித்துக்கட்டுவது . . . இவை அனைத்தும் தெய்வீகத்தின் அறிகுறிகளா? மக்களின் அறியாமையானது திகைப்பூட்டுவதாக இருந்தது.

இன்று, சிவனின் கருணையிருந்தால், அந்த தெய்வீகத்தின் முகமூடியை நான் கிழித்தெறிவேன். எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. நான் உடனடியாகச் செயலில் இறங்க விரும்பினேன். அந்த தேவ இளவரசனை நான் நேருக்கு நேர் எதிர்கொள்ள விரும்பினேன். வயதில் அவன் என்னைவிட மிகவும் இளையவனாக இருந்தான், ஆனால் என் கைகளில் இருந்த வலிமை குறைந்திருக்கவில்லை. நான் யுத்தக்களத்திற்குள் அடியெடுத்து வைக்கக்கூடாது என்று பிரஹஸ்தன் எனக்கு அறிவுறுத்தியிருந்தான். நான் அவ்வாறு செய்வது ஆபத்தானதாக இருக்கும் என்று அவன் என்னை எச்சரித்தான். எங்களுக்கிடையே ஏராளமான துரோகிகள் இருந்தனர். எனது சொந்தப் படையில் உள்ள ஒருவனிடமிருந்து வரும் ஒரே ஓர் அம்பு, அசுர சாம்ராஜ்யத்தை என்றென்றைக்குமாக ஒழித்துக்கட்டிவிடும். ஆனால், நான் சண்டையிட ஏங்கினேன். என் மக்கள் பெரும் ஆபத்தில் இருந்தபோது, கதவை மூடிக் கொண்டு எப்படி என்னால் என் அறைக்குள் அடைந்து கிடக்க முடியும்? நான் ஒரு காவலாளியை அழைத்து, காவலுக்கு நின்ற அனைத்து வீரர்களையும் தாழ்வாரத்தில் அணிவகுத்து நிற்கச் செய்யும்படி உத்தரவிட்டேன். அவர்களில் என்னைப் போன்ற கட்டுறுதியான உடலைக் கொண்ட ஒருவனைத் தேர்ந்தெடுத்துவிட்டு, அங்கிருந்து கலைந்து போகும்படி மற்றவர்களுக்கு உத்தரவிட்டேன். தனது ஆடைகளைக் களையும்படி, நான் தேர்ந்தெடுத்திருந்தவனுக்கு நான் உத்தரவிட்டேன். அவன் அவ்வாறு செய்த பிறகு, அவனை ஒரு சிறிய அறையில் வைத்துப் பூட்டினேன். பிறகு, அவனுடைய ஆடைகளை அணிந்து கொண்டு நான் சண்டைக்குத் தயாரானேன். அது மடத்தனமானது என்பதையும், சிறுபிள்ளைத்தனமானது என்பதையும் நான் அறிந்திருந்தேன், ஆனால் என் ஆர்வத்தை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. நானும் போரில் கலந்து கொள்ள விரும்பினேன், மக்கள் எவ்வாறு செயல்பட்டுக் கொண்டிருந்தனர் என்பதைப் பார்க்க விரும்பினேன்.

குதிரை லாயத்திற்குச் சென்று, என்னால் கண்டுபிடிக்க முடிந்த முதல் குதிரையின்மீது ஏறி, கிழக்கு வாசற்கதவுகளை நோக்கிச்

சென்றேன். புழுதி ஒரு மேகம்போல உயர்ந்தெழுந்து கொண்டிருந்ததை அங்கிருந்து என்னால் பார்க்க முடிந்தது. நான் சண்டைக்குள் நுழைந்தபோது அங்கு நான் எதிர்கொண்ட குழப்பமும் வன்முறையும் கற்பனை செய்ய முடியாதவையாக இருந்தன. திட்டமிட்டபடியே, சுராந்தகன், குரங்கு மனிதர்கள்மீது யானைகளைக் கட்டவிழ்த்துவிட்டிருந்தான். கோட்டைச் சுவருக்கும், முந்நூறு அடி உயரத்திற்கு எழுந்த ஒரு செங்குத்துப் பாறைக்கும் இடையே இருந்த குறுகலான தாழ்வாரத்தில் அவர்கள் சிக்கிக் கொண்டனர். கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டபோது வேகமாக உள்ளே நுழைந்திருந்த குரங்குக் காலாட்படையினர், வீறு கொண்டு வந்து கொண்டிருந்த யானைகளுக்கு இடையேயும் ருத்ராக்கனின் ஆற்றல்வாய்ந்த குதிரைப் படையினருக்கு இடையேயும் தாங்கள் சிக்கிக் கொண்டிருந்ததைக் கண்டனர். அங்கு நடந்து கொண்டிருந்தவற்றைத் தெளிவாகப் பார்ப்பதற்காக, கோட்டைக்கு உள்ளேயே இருந்த ஒரு சிறிய குன்றை நோக்கி நான் என் குதிரையில் விரைந்தேன்.

வானரர்கள் வெட்டிச் சாய்க்கப்பட்டுக் கொண்டிருந்தனர். செங்குத்துப் பாறையின் உச்சியிலிருந்து எறியப்பட்டப் பெரிய பாறாங்கற்கள் அவர்கள்மீது வந்து விழுந்தன. ருத்ராக்கனின் ஆட்களிடமிருந்து அம்புகள் மழையெனப் பொழிந்தன. கொதிக்கும் எண்ணெய் அடங்கிய மிகப் பெரிய பீப்பாய்கள், துரதிர்ஷ்டசாலிகளான அந்த வானரர்கள்மீது போடப்பட்டன. அவற்றிலிருந்து சிறிது எண்ணெய், தவறுதலாக, வானரர்களை மிதித்துச் சவட்டிக் கொண்டிருந்த யானைகள்மீதும் கொட்டியதில், அந்த யானைகள் வலியால் பித்துப் பிடித்துத் தறிகெட்டு ஓடின. சுக்ரீவன்தான் அந்தத் தாக்குதலை முன்னின்று வழிநடத்தி வந்திருந்தான். அவன் பரிதவிப்போடு தன் ஆட்களை ஒன்றுதிரட்ட முயற்சித்ததை நான் கண்டேன். பல அம்புகள் அவனது தலையை ஒட்டிச் சீறிப் பாய்ந்தன. ஒருசில அம்புகள் அவனது தோள்களையும் தொடைகளையும் தாக்கின, ஆனால் அந்தக் குரங்குத் தலைவன் தொடர்ந்து தாக்குப்பிடித்தான். ஆனால் அவனது பாதுகாப்பு வழி முற்றிலுமாக அடைக்கப்பட்டிருந்தது. இந்தச் சிக்கலிலிருந்து அவனால் உயிரோடு திரும்பிச் செல்ல முடியாது. ருத்ராக்கன் அதை உறுதி செய்வான். எங்கள் திட்டத்தின் இந்தப் பகுதி மிகச் சிறப்பாகப் பலனளித்திருந்தது. நான் வட திசையை நோக்கிச் சென்றேன். அங்கு ராமனும் லட்சுமணனும் தங்கள் படையினருடன் முன்னின்று தாக்கிக் கொண்டிருந்தனர்.

எதிரிகள் வடக்கு வாசலுக்கு வரும்வரை மேகநாதன் காத்திருந்தான். பிறகு, அசுரத் தேர்கள், கோட்டைக்கு வெளியே இருந்து உள்ளே

உருண்டு வந்தன. குதிரைகள் அனைத்தும், நள்ளிரவில், பக்கத்திலிருந்த ஒரு காட்டிற்குள் நடத்திக் கொண்டு வரப்பட்டு, அங்கு மறைத்து வைக்கப்பட்டன. வடக்கு வாசலில் பெயரளவுக்கு மட்டுமே ஒரு படை நிலைப்படுத்தப்பட்டது. தேர்கள் பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, அந்தக் காட்டிற்குள் சுமந்து வரப்பட்டன. பிறகு, பொழுது விடிவதற்கு முன்பாக, அந்தத் தேர்கள் மீண்டும் பொருத்தப்பட்டன. நண்பகலுக்கு முன்பாக, மேகநாதன் தனது தேரோட்டிகளுடன் ராமன்மீது பின்னாலிருந்து தாக்குதல் நடத்தினான்.

இதற்கிடையே, பிரஹஸ்தன், வருணனின் கப்பல்களை வெகு தூரத்திற்கு விரட்டியடித்திருந்தான். எனவே, ராமனின் படையினருக்குக் கடற்படையிடமிருந்து எந்த உதவியும் கிடைக்கவில்லை. மேகநாதனின் தேரோட்டிகள், பிரமிக்க வைக்கும் வேகத்துடன் வானரப் படையைச் சூழ்ந்து, அவர்களை வெட்டிச் சாய்க்கத் துவங்கினர். மரங்களிலும் அரண்களிலும் மறைந்திருந்த அசுரர்கள், காலைநேரத் தாக்குதலின்போது பதுங்கியிருந்துவிட்டு, திட்டமிட்டபடி, ஒன்றாக வெளியே வந்து ராமனின் ஆட்களின்மீது அம்புகளை எய்தனர். அந்த தேவ சகோதரர்கள் வசமாகச் சிக்கிக் கொண்டனர். மேகநாதன் ஒரு பக்கத்திலிருந்து நெருக்கினான். "அடுத்தப் பக்கத்தை யார் நெருக்கிக் கொண்டிருந்தார்கள்?" என்று நான் யோசித்துவிட்டு, அது யாரென்பதைப் பார்ப்பதற்காக என் கழுத்தை நீட்டிப் பார்த்தேன். அது யாராக இருந்தாலும் சரி, மேகநாதனைவிட அவன் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தான். அப்போது புழுதி சற்று நீங்கியபோது நான் அவனைத் தெளிவாகப் பார்த்தேன். அது அதிகாயன், என் மகன். வானரப் படை அனைத்துப் பகுதிகளிலிருந்தும் சூழப்பட்டிருந்தது. அசுரர்கள் வானரர்களைப் பெருமளவில் கொன்று குவித்துக் கொண்டிருந்தனர். அனுமானின் காலாட்படையினர் மட்டுமே தாக்குப்பிடித்து, தொடர்ந்து உறுதியோடு சண்டையிட்டனர். ராமனின் ஆட்களில் பெரும்பாலானோர், இப்போது, பாதி உடைந்து போன பாலத்தின் மறுபக்கத்தில் இந்தியாவில் மாட்டிக் கொண்டிருந்தனர். எதிரிகளைத் தேடிய கட்டுமரங்களும், பிரஹஸ்தன் கைப்பற்றியிருந்த கப்பல்களும், எச்சரிக்கையோடு இந்தியாவில் தங்கியிருந்த எதிரிப் படையினரை ஆற்றலோடு தடுத்து நிறுத்தியிருந்தன. அந்த வீரர்கள் அனைவரும், வாலியின் படைத்தளபதியாக இருந்து இப்போது சுக்ரீவனின்கீழ் சேவை செய்து கொண்டிருந்த, எண்பது வயதுக்கு மேல் ஆகியிருந்த, அந்த வஞ்சகக் குள்ளநரியான ஜாம்பவானின் ஆணைக்கு உட்பட்டு இருந்தனர்.

வீரதீரச் செயல்களைச் செய்ய வேண்டும் என்று எனக்கு

ஏற்பட்டிருந்த, இளைஞர்களுக்கே உரிய வேகம் குறித்து மகிழ்ந்தபடியே நான் என் அரண்மனைக்குத் திரும்பினேன். எங்கள் திட்டப்படியே என் வீரர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். எல்லாம் திட்டப்படிச் சிறப்பாக நடந்தால், இன்றிரவு ஒரு வெற்றிக் கொண்டாட்டத்தை நாங்கள் நிகழ்த்திக் கொண்டிருப்போம். நான் என் அரண்மனை வாசலை அடைவதற்குள் என் மாறுவேடத்தைக் களைந்திருந்தேன். ஆனால் ஜாம்பவானின் மௌனம் என்னை நச்சரித்தது. “அந்த வஞ்சகப் படைத்தளபதி ஏன் தன் ஆட்களைச் செயலில் இறங்கவிடாமல் இழுத்துப் பிடித்து வைத்திருந்தான்? இது இன்னொரு தந்திரமா? வருணன் எங்கே?” இப்படிப் பல கேள்விகள் என்னுள் முளைத்தன. அவன் தனது கப்பல்களை இலங்கைத் தீவிலிருந்து வெகுதூரம் கடலுக்குள் கூட்டிச் சென்றிருந்ததாகவும், அவை இந்தியாவை நோக்கிப் பயணித்துக் கொண்டிருந்ததாகவும் எனக்குக் கிடைத்த அறிக்கைகள் சுட்டிக்காட்டின. ஆனால் கடற்கொள்ளையர்களின் அரசான வருணனின் இயல்புக்கு இது புறம்பானதாக இருந்தது. “இங்கு நான் எதைத் தவறவிட்டுக் கொண்டிருந்தேன்? எந்த விஷயம் எனக்குப் புலப்படவில்லை?” என்று நான் யோசித்தேன். இந்த நேரத்தில் பிரஹஸ்தன் என்னுடன் இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்தேன்.

நான் என் மகளைப் பார்ப்பதற்காக எனது தோட்டத்தை நோக்கி நடந்தேன். இங்கு இத்தோட்டத்தில், நான் முற்றிலும் வேறோர் உலகில் இருந்தேன். யுத்தத்தின் லேசான சத்தம், உன்னிப்பாகக் கவனித்துக் கேட்கும் காதுகளுக்கு மட்டுமே கேட்டது. ஆனால் மற்றபடி, அது ஒரு சாதாரண நாளாக இருந்தது. யுத்தம் மற்றும் ராமனைப் பற்றிய எண்ணங்களையும் கவலைகளையும் அடக்கிக் கொண்டு, பரந்து விரிந்திருந்த ஒரு புளிய மரத்தின் நிழலுக்கு அடியில் நின்று, என்னைச் சுற்றி இருந்த உலகத்தின் அழகில் மூழ்கிப் போனேன். கடலின் மெல்லிய கிசுகிசுப்பு ஒலியை என்னால் கேட்க முடிந்தது. இலைகளை ஒன்றோடொன்று உரச வைத்தக் காற்றை என்னால் பார்க்க முடிந்தது. எனது அரண்மனையின் பின்புறத்தில், வெட்டுக்கிளிகள் அரங்கேற்றிக் கொண்டிருந்த இசைக் கச்சேரியில் என்னால் தாளத்தைக் கண்டுபிடிக்க முடிந்தது. இத்தீவின் காடுகளிலும் இந்தியாவின் சாயத்ரி மலையிலும் ஒரு சிறுவனாக நான் செலவிட்டிருந்த நாட்களுக்கு என் மனம் வேகமாகத் திரும்பிச் சென்றது. வேதனையான கடந்தகாலத்தையும், வறுத்தெடுத்த ஏழ்மையையும், தினசரி அவமானங்களையும், பசிக் கொடுமையையும் சுலபமாக மறந்துவிட்டு, சிறு சிறு மகிழ்ச்சிக் கணங்களை மட்டும் எப்படி மனத்தால் நினைவில் வைத்துக் கொள்ள

முடிந்தது என்று நான் வியந்தேன். கடந்தகாலத்தைத் திரும்பிப் பார்ப்பதில் ஓர் இன்ப வேதனை இருந்தது. என்றென்றைக்குமாகத் தொலைந்து போன விஷயங்கள் குறித்த ஏக்கம்; நிறைவேறாமல் போன ஆசைகள்; ரகசியமான நம்பிக்கைகள்; இனிமையான, வெறுப்பூட்டும் ஏக்கங்கள். ஒருவன் தன் இதயத்தைக் கொண்டு செவிமடுக்கும் பட்சத்தில், குயிலின் கூவல், அணில்களின் ஆர்ப்பரிப்பு போன்ற, அன்றாட உலகின் சிறிய விஷயங்கள்கூட, வேதனையூட்டும் விஷயங்களை ஒளித்து வைத்துவிட்டு, நீண்டகாலமாக மறக்கப்பட்டுவிட்ட மகிழ்ச்சியை மீண்டும் நம்முள் மலரச் செய்யும்.

அசோக மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்த அவள் ஒரு தேவதையைப்போலக் காட்சியளித்தாள். அவளுக்குப் பக்கத்தில், தான் அழகாக இருந்ததாக நினைத்துப் பெருமிதம் கொண்டிருந்த, கும்பகர்ணனின் மகளான திரிஜடை அமர்ந்திருந்தாள். பல விதங்களில், சோம்பேறியான தனது தந்தையைப்போலவே அவள் இருந்தாள். கும்பகர்ணன் வரம்பு மீறிய, ஒழுக்கக்கேடான வாழ்க்கையை வாழ்ந்து வந்தான். முன்பொரு காலத்தில் அவனுக்கு இருந்த லட்சியங்கள் அனைத்தும், மன உறுதியும் நன்னடத்தையும் இல்லாத காரணத்தால், வெகுகாலத்திற்கு முன்பே அவனிடமிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஓடியிருந்தன. வழக்கமாக, அவன் நன்றாகக் குடித்துவிட்டுத் தன் அறையில் நினைவின்றிக் கிடந்தான். அழியாப் புகழுக்காகவும் தனக்கென்று ஒரு சாம்ராஜ்யத்திற்காகவும் அவன் ஏங்கியிருந்தான், ஆனால் வாழ்வில் மாபெரும் விஷயங்களைச் சாதிப்பதற்கான மன உறுதி அவனிடம் ஒருபோதும் இருந்ததே இல்லை. ஒருவேளை, எல்லோரது கவனமும் என்மீது இருக்கும்படி நான் பார்த்துக் கொண்டேன்போலும். நான் எப்போதுமே 'மூத்த சகோதரனாக' இருந்திருந்தேன். உங்கள் வெற்றியை உங்களது உடன்பிறப்புகளைவிட அதிகமாக வேறு எவரும் வெறுப்பதில்லை. நான் இப்போது என்னவாக ஆகியிருந்தேனோ, அது வெறும் துரதிர்ஷ்டமாக இருந்திருக்கலாம். கடின உழைப்பும் மன உறுதியும் லட்சிய நோக்குமே ஒருவனது எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்று நினைக்கும் வயதை நான் கடந்துவிட்டிருந்தேன். எனக்குள் இருந்த நாத்திகன் நாதியற்று இறந்து போய் நெடுங்காலம் ஆகியிருந்தது. நான் பல விஷயங்களைப் பார்த்திருந்ததால், மனிதன்தான் தனது சொந்தத் தலைவிதியைத் தீர்மானித்தான், வேறு எதுவும் ஒரு பொருட்டே அல்ல என்று அப்பாவியாக நம்புவதற்கு நான் தயாராக இருக்கவில்லை. நான் என் வாழ்க்கையைப் பின்னோக்கி அசைபோட்டபோது, பல வருடங்களுக்கு முன்பு அந்த இருண்ட குகையில் வைத்து, உண்மையான அசுரப்

பேரரசரான மகாபலியுடன் நான் மேற்கொண்டிருந்த சிறுபிள்ளைத்தனமான உரையாடல் பற்றிய நினைப்பு என்னை அவமானமாக உணரச் செய்தது. அந்த முதியவருக்கு பிரமிப்பூட்ட வேண்டும் என்பதற்காக நான் வெளிப்படுத்திய பகட்டையும் முட்டாள்தனத்தையும் நினைத்து நான் புன்னகைத்தேன். மனிதனின் சாதாரணப் பகுத்தறிவிற்குள் அடக்க முடியாத, அதை மீறிய ஏதோ ஒன்று உண்மையில் இருக்கத்தான் செய்கிறது. நமது ஆசான்கள் நமக்கு போதித்த மன உறுதி, கடின உழைப்பு மற்றும் பல விஷயங்கள் அனைத்தும், தன்னிச்சையான விஷயங்கள் நிகழ்ந்தபோது நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதைத் தீர்மானிப்பதற்கு மட்டுமே பயனுள்ளவையாக இருந்தன. ஆனால் விஷயங்களில் நான் ஓர் ஒழுங்கைப் பார்த்தேன். இரவும் பகலும் மாறி மாறி வருகின்ற விதத்தையும், பிறப்பு, வாழ்க்கை, இறப்பு என்று உயிரினங்களிடம் நிலவும் ஒரு சுழற்சியையும் அதற்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம். ஆனாலும், பல விஷயங்களை வெறும் விதி என்று மட்டுமே நம்மால் விளக்க முடியும்.

சீதையின் சிரிப்பு என்னை என் கடந்தகால மயக்கத்திலிருந்து கலைத்தது. நான் அவளைப் பார்த்தேன். அவள் தெய்வீக அழகுடன் காணப்பட்டாள். அவள் தனது உறுதியையும் ஆழ்விருப்பத்தையும் என்னிடமிருந்து சுவீகரித்திருந்தாள். தனது கச்சிதமான முகத்தையும் உடலையும் மண்டோதரியிடமிருந்து சுவீகரித்திருந்தாள். இப்போது அவளை எப்படி என்னால் இழக்க முடியும்?

“ஓ! அரசர்களுக்கெல்லாம் அரசனே, அசுரர்களின் பேரரசனே . . . என்னைப் பார்த்துவிட்டுப் போக வந்தாயா? ராவணா, உன் நேரத்தை எண்ணிக் கொள். உன்னையும் உன்னுடைய தீய சாம்ராஜ்யத்தையும் ஒழித்துக்கட்டுவதற்காக என் ராமன் வந்திருக்கிறார். உன்னைப் போன்ற ராட்சஸர்களும், நீ உருவாக்கியுள்ள அனைத்தும், நீ பெருமிதம் கொள்ளும் அனைத்தும் விரைவில் சாம்பலாகப் போவது நிச்சயம். என்னை இங்கிருந்து மீட்டுச் செல்வதற்காக என் கணவர் இங்கு வந்துள்ளார். உனது தீய சாம்ராஜ்யம் நிலைகுலைந்து கொண்டிருப்பதை என்னால் பார்க்க முடிகிறது. உன் குடும்பத்தினரின் உயிர்களை நீ மதித்தால், போய் என் கணவரின் பாதங்களில் விழு. ஆனால் நீ அப்படிச் செய்ய மாட்டாய் என்று எனக்குத் தெரியும். உன் கர்வம் அந்த அறிவார்ந்த காரியத்திற்கு இடமளிக்காது. ராட்சஸனே, என் வார்த்தைகளைக் குறித்துக் கொள். உனக்கான வேளை வந்துவிட்டது,” என்று கூறிவிட்டு, அவள் உரத்தக் குரலில் சிரித்தாள். அவளது பகைமையுணர்வில் அவள் முற்றிலும் வெறுக்கத்தக்கவள்போலத்

தோன்றினாள். திரிஜடை தர்மசங்கடத்துடனும் பயத்துடனும் என்னைப் பார்த்தாள்.

நான் மனச்சோர்வடைந்து, வெட்கித் தலைகுனிந்து அங்கிருந்து திரும்பினேன். "நான் அவளது தந்தை என்ற உண்மையை ஏன் என்னால் அவளிடம் கூற முடியவில்லை?" என்று என்னை நானே நொந்து கொண்டேன். நான் அவளை அவளது கணவனிடமிருந்து மீட்க முயற்சித்து வந்திருந்தேன். ஆனால் ஏதோ சில மூடநம்பிக்கைகளின் காரணமாக நான் அவளைக் கைவிட்டதை அவளது முகத்தைப் பார்த்து எப்படி என்னால் தைரியமாகக் கூற முடியும்? அதை எப்படி என்னால் நியாயப்படுத்த முடியும்? அவள் தன் கணவனான ராமனின்மீது கொண்டிருந்த, கொழுந்துவிட்டெரிந்த காதலை எப்படி என்னால் உதாசீனப்படுத்த முடியும்? தனது கணவனைவிடத் தனது தந்தைதான் தன்னை அதிகமாக நேசித்தார் என்பதை அவளால் ஏன் பார்க்க முடியவில்லை? அவளது மகிழ்ச்சிக்காக நான் எல்லாவற்றையும் பணயம் வைத்துக் கொண்டிருந்தேன் என்பதை ஏன் அவளால் பார்க்க முடியவில்லை? ஆனால், தன் கணவனுடன் தன்னால் ஒருபோதும் மகிழ்ச்சியாக இருக்க முடியாது என்பதையும், நான் கொடுத்து வந்துள்ள பாதுகாப்புப் போய்விட்டால், பிறகு தன்னுடைய துன்பம் தொடங்கிவிடும் என்பதையும் ஏன் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை? ஒருவேளை நானே என்னை முட்டாளாக்கிக் கொண்டேன் போலும். அவர்கள் இருவரும் உண்மையிலேயே மிகக் கச்சிதமான தம்பதியராக வாழக்கூடும், ஆனால் நான் அவர்களது மகிழ்ச்சியை அழிக்க முயற்சித்தத் தீய அரக்கனாக ஆகக்கூடும். அனைத்து சகுனங்களும் ஜோதிடக் கணிப்புகளும் அவளுக்குத் துயரத்தையும், எனக்கும் என் மக்களுக்கும் ஒரு கொடூரமான எதிர்காலத்தையும் சுட்டிக்காட்டின. ராவணனால் தனது எதிர்காலத்தை மாற்ற முடியுமா? என் இளவயதில் நான் நினைத்திருந்தது சரிதான் போலும். ஜோதிடம் என்பது வெறும் பொய்தான். நான்தான் என்னுடைய சொந்த எதிர்காலத்தைத் தீர்மானித்தேனே தவிர, அக்கறையற்ற ஒரு வானத்தின் மையிருட்டில் எங்கோ மூழ்கிக் கிடந்த ஏதோ சில நட்சத்திரங்கள் அதைத் தீர்மானிக்கவில்லை. ஆனால் என் மகள் ஏன் என்மீது இவ்வளவு வன்மத்துடனும் பகைமையுடனும் இருந்தாள்? எந்தவொரு தகப்பனுக்கும் இப்படிப்பட்டச் சித்தரவதை ஏற்படக்கூடாது. ஒருவேளை என் நேரம் வந்துவிட்டிருந்தது போலும். இந்தப் பெண்ணிற்காக நான் ஏன் என் ஒட்டுமொத்த வாழ்க்கையையும் பணயம் வைக்கிறேன்? நான் வெறுமனே என் வாழ்க்கைக்காக மட்டும் இந்தச் சூதாட்டத்தில் இறங்கியிருக்கவில்லை. மாறாக, ஓர் ஒட்டுமொத்த

இனத்தின் எதிர்காலத்திற்காகவும்தான் நான் அப்படிச் செய்தேன். இக்கணத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்பட்டுக் கொண்டிருந்தனர். தகப்பன்கள், சகோதரர்கள், மகன்கள் என்று, என்னை நம்பியிருந்த குடும்பங்கள் எனக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. என்னுடைய வேளை வந்திருந்ததுதான் சரியான முடிவு போலும். தனது மக்களைத் தேவையற்ற ஒரு யுத்தத்திற்கும் மரணத்திற்கும் அழிவிற்கும் வலுக்கட்டாயமாக இழுத்து வந்த ஒரு வீணான அரசன் நான். ஆனால், ராமன் என் மகளை மோசமாக நடத்துவான் என்று தெரிந்தும், எப்படி அவளை என்னால் அவனிடம் ஒப்படைக்க முடியும்? எதிர்காலத்தை விதி பார்த்துக் கொள்ளட்டும். நான் கடைசிவரை போரிடுவேன். ஒருவேளை நான் வெற்றி பெறவும்கூடும்.

அரண்மனைக்கு வெளியே யுத்தம் தீவிரமடைந்தது. நிழல்கள் நீண்டன. ஒரு தெய்வீகச் சிவப்பு என் ஒட்டுமொத்த நகரத்தின் மேலாகப் படர்ந்து, எல்லாவற்றையும் தெய்வீகமாக ஒளிரச் செய்தது. என் மகளின் வார்த்தைகள் என் காதுகளில் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தன. “உன்னைப் போன்ற ராட்சஸர்களும், நீ உருவாக்கியுள்ள அனைத்தும், நீ பெருமிதம் கொள்ளும் அனைத்தும் விரைவில் சாம்பலாகப் போவது நிச்சயம்!” நான் நன்றாகக் குடித்துவிட்டு எல்லாவற்றையும் மறக்க விரும்பினேன். நான் என் அரண்மனைக்குள் நுழைந்தபோது, எனது தளபதி ருத்ராக்கனின் அசைவற்ற உடலை என் வீரர்கள் கொண்டு வந்தனர். என் மகளுக்கு என்னைவிட அதிகமாகத் தெரிந்திருந்தது போலும்.



# 51

## வெற்றிக் கதாநாயகன்

பத்ரன்

ஓலைக்கூரையுடன்கூடிய என் குடிசையின் தாழ்வாரத்தில் நான் அமர்ந்திருந்தேன். என் மனைவி என்னருகே வைத்துவிட்டுப் போயிருந்த சூடான கஞ்சியும் மாங்காய் ஊறுகாயும் ஆறிப் போய், பிசுபிசுவென்று ஒட்டின. ஈக்களுக்கு அதிகத் துணிச்சல் ஏற்பட்டிருந்தது போலும். கஞ்சிக் கலயத்தின் விளிம்புகளின்மீது அவை நீண்ட நேரம் சுற்றிக் கொண்டிருந்தன. அவற்றை விரட்ட எனக்கு மனமிருக்கவில்லை. சமையலறையில் பாத்திரங்களை உருட்டிக் கொண்டிருந்த என் மனைவி, வீட்டு வேலையில் மும்முரமாக இருந்தாள். எனக்கு லேசாகத் தலை வலித்தது. நேற்றைய தினத்தின் மிதமிஞ்சியக் குடியின் விளைவு அது. வியாபாரம் மந்தமாக இருந்தது. நாளைக்கு நீங்கள் இறந்து போகக்கூடும் என்ற நிலை இருந்தபோது, துணிகளைத் துவைப்பதற்கு என்ன அவசியம்?

என் மகன் விஷயத்தைப் பொறுத்தவரை, எல்லாம் அவனது தலைவிதிப்படி நடக்கட்டும் என்று நான் ஒதுங்கியிருந்தாலும்கூட,

அவனது உயரமான, பருத்த உருவம் என் கண்முன்னே தோன்றாதா என்று நான் ஏங்கினேன். சில சமயங்களில், போரில் அவன் காயப்பட்டு வீட்டிற்கு வருவான் என்றும், நாங்கள் அவனைக் கவனித்துக் கொண்டு, அவனை மீண்டும் நலமடையச் செய்வோம் என்றும் நான் நம்பினேன். ஆனால், அவன் அந்த யுத்தக்களத்தையோ அல்லது தனது நண்பனும் சகோதரனுமான மேகநாதனையோ விட்டு ஒருபோதும் திரும்பி வர மாட்டான் என்பதை நான் அறிந்திருந்தேன். போர் தொடங்கியதிலிருந்து, மரணம் பல முறை எங்கள் தெருவிற்குள் ஊர்வலமாக வந்திருந்தது. எங்களது அண்டைவீட்டாரில் பலர் ஏற்கனவே தங்கள் அன்புக்குரியவர்களை இழந்திருந்தனர். இப்போது மக்கள் பொதுவாக உணர்ச்சியற்றுப் போயிருந்தனர். துவக்கத்தில் பலர் உணர்ச்சிவசப்பட்டு நடந்து கொண்டனர். ஆனால் போரில் இறந்தவர்களின் எண்ணிக்கை அதிகரித்தபோது, மரணம் தனது முக்கியத்துவத்தை இழந்தது, வீரச் செயல்களும் மலிவானவையாகவும் பொதுவானவையாகவும் ஆயின. இறந்தவர்களின் நெருங்கிய உறவினர்களிடையே நிலவிய ஒரு சிறு வருத்தத்தைத் தவிர, தங்கள் நாட்டிற்காக உயிரிழந்தவர்கள் புரிந்த வீரதீரச் செயல்கள்மீது யாரும் அவ்வளவு அக்கறை காட்டவில்லை. தவிர்க்க முடியாத தோல்விக்கு ஒட்டுமொத்த நாடும் தன்னைத் தயார்படுத்திக் கொண்டு, ஒரு கூட்டிற்குள் போய்ச் சுருண்டு கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. தந்தையர் எந்த உணர்ச்சியுமின்றித் தங்களது மகன்களின் உடல்களின் மிச்சசொச்சங்களைச் சிதைகளில் வைத்துத் தீ மூட்டினர். தாய்மார்கள் ஒன்றாகக் கூடி அமர்ந்து அமைதியாகக் கண்ணீர் வடித்தனர். இறந்து போன வீரர்களின் மனைவியர் தங்களைத் தனிமைச் சிறைகளுக்குள் அடைத்துக் கொண்டனர். மழுங்கடிக்கப்பட்ட இந்த உணர்ச்சிகளுக்கு மேலே ஒருவிதமான பயம் நிலவியது. தேவர்கள் வெற்றி பெற்றுவிடுவார்கள் என்று அசுரர்கள் நினைத்தனர். ராமனின் ஆட்சியின் கீழோ, அல்லது அதைவிட மோசமாக, விபீஷணனின் ஆட்சியின் கீழோ தாங்கள் எதிர்கொள்ளவிருந்த தங்களது கொடுமையான எதிர்காலம் குறித்து அவர்கள் பயந்தனர்.

தெருக்கள் பல நாட்களுக்கு முன்பே பாலைவனங்களாக மாறியிருந்தன. அசுரப் பொதுமக்கள் பலர், காடுகளுக்குள் தஞ்சம் புகுந்திருந்தனர். சிலர், கரடுமுரடான நாட்டுப் படகுகளில் ஏறி இந்தியாவிற்குத் தப்பி ஓடியிருந்தனர். ஆனால், பெரும்பாலானவர்கள் தங்கள் வீடுகளுக்குள் அடைந்து கொண்டனர். அசுரர்களுக்கு ஏற்படவிருந்த தோல்வியையும் அழிவையும் மேன்மக்கள் உணர்ந்து கொள்வதற்கு முன்பாகவே, ஏழை அசுரர்கள் உணர்ந்துவிட்டனர்.

ஆனால் யாரும் அதைப் பற்றி வெளிப்படையாகப் பேசவில்லை. இரவுகள் அச்சுறுத்துபவையாக இருந்தன. இந்த யுத்தம் வித்தியாசமானதாக இருந்தது. ஈவு இரக்கமற்ற, பழிபாவத்திற்கு அஞ்சாத ஓர் எதிரியைத் தாங்கள் கையாண்டு கொண்டிருந்ததை ஒவ்வோர் அசுரனும் அறிந்திருந்தான். இரவில் மக்கள் தூங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில் நகரங்களுக்கு நெருப்பு வைக்கத் தயங்காத தளபதிகள் எதிரிப் படைகளுக்குத் தலைமை தாங்கினர். ஓர் உன்னதமான அரசன் தன் சகோதரனோடு ஒற்றைக்கு ஒற்றைச் சண்டையில் ஈடுபட்டிருந்தபோது ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்து நின்று அம்பு எறிந்து கொன்ற ஓர் எதிரியை அசுரர்கள் எதிர்கொண்டிருந்தனர். ஒரு பெண்ணின் மார்பகங்களையும் மூக்கையும் வெட்டியெறியும் அளவுக்குத் தரம் தாழ்ந்து போயிருந்த ஓர் இளவரசனும் எதிரியின் படை ஒன்றிற்குத் தலைமை தாங்கினான். நிழல்கள் நீண்டு கொண்டே போயின. முன்பு ஒருபோதும் இல்லாத அளவுக்கு நாங்கள் பயந்து போயிருந்தோம்.

போர் தொடங்கிப் பத்து நாட்கள் ஆகியிருந்தது. இரண்டு பக்கங்களிலும் இழப்புகள் மிகவும் அதிகமாக இருந்தன. எதிரியைப் பற்றிய செய்தி அவ்வளவாக எங்களுக்கு வரவில்லை, ஆனால் ருத்ராக்கன், வஜ்ரதம்ஸ்டிரன், சுமாலி, மால்யவன் போன்ற எங்களது மந்திரிகளும் தளபதிகளும் மடிந்தனர். அசுரப் படைக்குத் தலைவர்கள் தேவைப்பட்டனர். வருணனைத் தடுத்து, ராமனின் படையினர் கடல் வழியாகப் பின்வாங்குவதற்கு முட்டுக்கட்டை ஏற்படுத்திய அந்தத் துணிச்சல்காரப் பிரஹஸ்தனும் இளவரசன் மேகநாதனும் மட்டுமே எஞ்சி நின்ற அனுபவசாலித் தலைவர்கள். எப்போதும் எதையாவது முணுமுணுத்துக் கொண்டிருந்த மயனுக்குப் படைத்தளபதியாக ஆவதற்கான வாய்ப்பு வழங்கப்பட்டது, ஆனால் அவன் அதை மறுத்துவிட்டதாக நாங்கள் கேள்விப்பட்டோம். வயோதிக நிதியமைச்சரான ஜம்புமாலிக்கு நடக்கக்கூட இயலவில்லை. அசுரப் படைகளுக்குத் தலைமை தாங்கும்படி எண்பது வயதுக்கு மேற்பட்ட அறிவியலறிஞர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர் என்றால், சூழ்நிலை உண்மையிலேயே மிகவும் மோசமாக இருந்திருக்க வேண்டும். ராவணனே தன் படைக்குத் தலைமை தாங்கி அவர்களை வழிநடத்தியிருக்க வேண்டும், ஆனால் பேரரசருக்கு வயதாகிவிட்டதுபோலும். அரண்மனையை நோக்கி நடப்பதற்கான உந்துதல் எனக்குள் எழுந்தது. அதிகாயன் அங்கு எங்கோ காயப்பட்டுக் கிடக்கக்கூடும். அது உண்மையாக இருக்கும்பட்சத்தில், நான் அவனை எங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்வேன். என் அழுக்கான வேட்டியில்

என் கைகளைத் துடைத்துவிட்டு, என் மனைவியிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் நான் அரண்மனையை நோக்கி நடந்தேன். சாலையில் நான் சிறிது நேரம் தனியாக இருந்தேன். சிறு உணவகங்களுக்கு அருகே சிலர் கூடி வம்பு பேசிக் கொண்டிருந்ததை நான் கண்டேன். பெரும்பாலான வீடுகளின் கதவுகள் தாளிடப்பட்டிருந்தன. அவற்றில் யாரும் இல்லாததுபோலத் தோன்றியது. சிலர் தங்கள் வீடுகளின் முன்வாசல் கதவுகளைத் திறந்து வைத்து, எல்லாம் இயல்பாக இருந்ததுபோலப் பாசாங்கு செய்து கொண்டிருந்தனர். மூடியிருந்த சில வீடுகளுக்கு உள்ளேயிருந்து லேசான அழுகுரல்கள் கேட்டன. ஒரு மகனோ அல்லது ஒரு கணவனோ இறந்து போயிருக்கக்கூடும்.

என் தலைக்கு மேலே வெயில் சுள்ளெனக் காய்ந்தது. என் உடல் முழுவதும் வியர்வையில் குளித்திருந்தது. என் உடலின் துர்நாற்றத்தை என்னாலேயே சகித்துக் கொள்ள முடியவில்லை. நான் ஒரு குளியல் போட்டிருந்திருக்க வேண்டும். நான் அரண்மனையை நெருங்கியபோது, அதிகாயனுக்கு அங்கு சிகிச்சையளிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் என்று நான் நினைத்ததில் இருந்த அபத்தத்தை அப்போதுதான் நான் உணர்ந்தேன். அவன் காயப்பட்டிருந்தால், யுத்தக்களத்திலேயே அவன் கைவிடப்பட்டிருப்பான். இப்படிப்பட்ட முட்டாள்களின் வாழ்க்கை எந்த அரசாங்கத்திற்கு மதிப்பு வாய்ந்ததாக இருந்திருந்தது? ஆனால், இரவு நேரங்களில் அவன் எங்கே தங்கினான்? அவன் எங்கள் வீட்டிற்கு வந்து வெகுகாலம் ஆகியிருந்தது. "அவன் இளவரசன் மேகநாதனின் அறைக்கு வெளியே தூங்கினானா? அல்லது கோட்டைக்குள் இருந்த காவலர்கள் விடுதியில் தங்கினானா?" இன்று எப்படியும் அவனைப் பார்த்து, முக்கியமான நபர்களின் இந்த முட்டாள்தனமான போரைத் துறந்துவிட்டு வீட்டிற்குத் திரும்பி வருவதற்கு அவனைச் சம்மதிக்க வைப்பதென்று நான் தீர்மானித்தேன். ஆனால் அது ஒரு வீணான முயற்சி என்பதையும் நான் அறிந்திருந்தேன்.

தூரத்திலிருந்து பார்ப்பதற்கு, அரண்மனை, யாரும் ஊடுருவ முடியாததாகவும் அச்சுறுத்துவதாகவும் இருந்தது. அதன் பொற்குவிமாடங்களும் தூபிகளும் சூரிய ஒளியில் ஒளிர்ந்தன. "பொன் — எங்களைப் போன்ற மக்களுக்கு ஒரு வேளைச் சாப்பாடுகூட கிடைக்காதபோது, பேரரசர், தன் கூரையை அலங்கரிப்பதற்குப் பொன்னைப் பயன்படுத்திக் கொண்டிருந்தார்!" என்று நான் நினைத்துக் கொண்டேன். அவர் தோற்பதுதான் சரியான முடிவாக இருக்கக்கூடும். ஆனால் அவர் கொடுமைக்காரராக இருக்கவில்லை. மாறாக, தன் மக்களை மேல்நிலைக்குக் கொண்டு வரவே அவர் முயற்சித்திருந்தார். விபீஷணனின் ஆட்சியின்கீழ் இலங்கை எப்படி இருக்கும் என்று

நினைத்தபோது என் குலை நடுங்கியது. ராவணனின் சாம்ராஜ்யத்தில் மேன்மை பொருந்திய மக்களும் சாதாரண மக்களும் இருந்தாலும்கூட, வெறும் கடின உழைப்பின் மூலமும் அதிர்ஷ்டத்தின் மூலமும் எவரொருவராலும் உயர்ந்த நிலைக்கு வர முடிந்தது. முன்பு ஒரு கசாப்புக் கடைக்காரனாக இருந்து பின்னாளில் ஓர் இதயமற்ற வீரனாக ஆகியிருந்த ருத்ராக்கன், குபேரனின் ஆட்சியில் மசாலாப் பொருட்கள் ஏற்றுமதித் துறையில் ஒரு சாதாரண எழுத்தராக இருந்து பின்னாளில் ஒரு மந்திரியாகவும் தளபதியாகவும் உயர்ந்திருந்த சுமாலி போன்றவர்களின் எடுத்துக்காட்டுகளை, ராவணனின் ஆட்சியைப் புகழ்ந்து பேசியவர்கள் மேற்கோள் காட்டினர். ஆனால் நான், பிராமணத்துவத்திற்கு வேகமாக மாறிக் கொண்டிருந்த ஒரு நாட்டில் இருந்த கோடிக்கணக்கான ஏழை அசுரர்களில் ஒருவனாக இருந்தேன். போரின் முடிவில், நான் ஒரு தீண்டத்தகாதவனாகவும் பூமியின் ஒரு கசடாகவும் ஆகியிருப்பேன். எனக்கு மதுவருந்த வேண்டும்போல இருந்தது, ஆனால் அருகில் எந்த மதுவகமும் இருக்கவில்லை. யாரேனும் ஒரு முக்கியமான அதிகாரி என்னை அடையாளம் கண்டுகொண்டு, அரண்மனைக்குள் என்னை அழைத்துச் செல்லக்கூடும் என்ற நம்பிக்கையில் நான் அங்கேயே உட்கார்ந்து காத்திருந்தேன். என் மகன் அங்கு இருந்தானா என்று நான் பார்த்தே ஆக வேண்டியிருந்தது.

அன்றைய யுத்தம் முடிந்து கோட்டைக்குத் திரும்பிக் கொண்டிருந்த படையினர் அணிவகுத்து வந்து கொண்டிருந்த சத்தம், களைத்துப் போய் உறங்கிக் கொண்டிருந்த எனக்கு விழிப்பூட்டியபோது, மாலையில் வெகுநேரம் ஆகியிருந்தது. மிக மோசமாகக் காயப்பட்டிருந்த அல்லது இறந்து போயிருந்த முக்கியமான வீரர்கள் அரண்மனைக்குத் திருப்பிக் கொண்டு வரப்பட்டனர். சாதாரண வீரர்கள், பிணந்தின்னிக் கழுகுகளுக்கு இரையாக யுத்தக்களத்திலேயே விடப்பட்டனர். என்னைக் கடந்து சென்ற வீரர்களிடையே நான் பரிதவிப்புடன் அதிகாயனைத் தேடியபோது, என் இதயம் படபடத்ததை என்னால் கேட்க முடிந்தது. வீரர்கள் மிகவும் உற்சாகமாக இருந்தனர். அதிகாயன் அவர்களுக்கிடையே இருந்தான். "இல்லை, அது அவனல்ல. அவன் இறந்து போய், ஒரு கருப்பு அசுரன் என்பதற்காக யுத்தக்களத்திலேயே விடப்பட்டிருந்தானா?" அதிகாயனைத் தேடி, களைத்துப் போயிருந்த வீரர்களுக்கு இடையே நான் ஓடினேன். அவர்களைத் தடுத்து நிறுத்தி, என் மகனைக் கூப்பிட முயற்சித்தேன். ஆனால் அந்தக் கூட்டத்திடமிருந்து சில ஏளனப் பார்வைகளும் கோப முணுமுணுப்புகளும் வந்தன, ஆனால் நான் அவற்றைக் கண்டுகொள்ளவில்லை. அவர்கள் சுமந்து வந்து கொண்டிருந்தவர்களின்

முகங்களை எம்பிப் பார்த்துக் கொண்டே, அவர்களுக்கிடையே நான் அங்குமிங்கும் ஓடினேன். அவர்கள் என்னை இடித்துத் தள்ளினார்கள், ஆனால் நான் அதைக் கண்டுகொள்ளவில்லை. என் பரிதவிப்புக் கூடியது. இறுதியில், ரதத்தில் இளவரசன் மேகநாதனுடன் அவன் இருந்ததை நான் கண்டேன். அவன் நேராக நின்றான். இளவரசனின் கைகளிலிருந்தும் தோள்களிலிருந்தும் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அதிகாயனின் மார்பில் ஒரு பெரிய வெட்டுக்காயம் இருந்தது. அவன் அதற்கு ஒரு ரத்தம் தோய்ந்த கந்தல் துணியினால் கட்டுப் போட்டிருந்தான். நான் ரதத்தை நோக்கி ஓடினேன், ஆனால் இளவரசனின் மெய்க்காப்பாளர்கள் என்னை ஆக்ரோஷமாக விலக்கித் தள்ளினர்.

“அதிகயா, என் மகனே . . .” என்று நான் தேம்பினேன். வீரர்கள் போட்டுக் கொண்டிருந்த கூச்சலில் என்னுடைய கரகரப்பான குரல் அவனுக்குக் கேட்கவில்லை. நல்ல வாட்டசாட்டமாக இருந்த அசுர வீரர்களுக்கிடையே நான் மிகவும் குள்ளமாக இருந்தேன். “இந்தக் காலத்தில் இளைஞர்கள் எவ்வளவு உயரமாக வளர்கின்றனர்!” என்று நான் நினைத்துக் கொண்டேன். என் மகனின் கவனத்தைக் கவர்வதற்காக நான் தவிப்போடு என் கைகளை ஆட்டினேன், மேலும் கீழும் குதித்தேன், கத்தினேன். திடீரென்று அவன் என்னைப் பார்த்தான். இளவரசனின் ரதத்தை நோக்கிச் செல்ல நான் கடுமையாக முயற்சித்தேன். அதிகாயனின் கண்களில் முதலில் ஆச்சரியமும், பிறகு தர்மசங்கடமும் தென்பட்டதை நான் கண்டேன். அசுர இளவரசனுடன் சேர்ந்து பயணித்துக் கொண்டிருந்த என் மகனுக்கு அது ஒரு பொன்னான நாளாக இருந்தது. ஆனால், ஓர் ஏழை சலவைத் தொழிலாளியான நான் அவனுடைய மிக உயர்ந்த வாழ்க்கையில் குறுக்கிட முயற்சித்துக் கொண்டிருந்தேன். அவனுடைய அந்த ஒரு பார்வை, என்னிடம் இருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையையையும் கொன்றுவிட்டது. என்ன இருந்தாலும், நான் அவனுடைய வளர்ப்புத் தந்தைதானே? அவன் ஓர் ஏழை அசுரனின் குடிசையில் இருக்க வேண்டியவனல்ல. அவன் எங்கள் பேரரசரின் ரத்தம். அவன் முறைதவறிப் பிறந்திருக்கலாம், ஆனாலும் அவன் ஒரு பாதி இளவரசன் என்பதை யாராலும் மறுக்க முடியாது. என்னைப் போன்ற புழுக்களுக்கு இடமில்லாத ஓர் உலகம்தான் அவனுக்குரியது. தங்கள் மரணத்திற்குப் பின் ஆயிரக்கணக்கான வருடங்கள் கழித்தும் பேசப்படவிருந்த பேராற்றல் வாய்ந்த வீரர்கள் மற்றும் கதாநாயகர்களின் உலகைச் சேர்ந்தவன் அவன். பத்ரனைப் போன்றவர்களுக்கு அங்கு இடமிருக்கவில்லை.

திடீரென்று, இளவரசன் மேகநாதன் என்னைப் பார்த்தான். அவன் எனக்குச் சைகை காட்டியபோது, அவனது மெய்க்காப்பாளர்கள் விலகி வழிவிட்டனர். ஒரு கணம், நான் அங்கு சிலையாக நின்றேன். பிறகு சந்தேகத்துடன் நான் அவனது ரதத்தை நோக்கி நடந்தேன். “ஒட்டுமொத்தப் படையும் எனக்காக நின்றுவிட்டிருந்ததா? நான் அருகில் சென்றதும் அவர்கள் எனக்கு அனுமதி மறுப்பார்களா?” இளவரசன் தன் இதழ்களில் ஒரு களைப்பான புன்னகையுடன் என்னைத் தீவிரமாகப் பார்த்தான். நான் மரியாதையோடு ஒருசில அடிகள் தள்ளி நின்றேன். நலிந்தும் மெலிந்தும் போயிருந்த என்னுடைய உடல் தனக்கு அவமானத்தை ஏற்படுத்தியதுபோல, என் மகன் என்னைப் பார்க்காமல் வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டான். என்னைப் பற்றி நான் அதிக அவமானமாக உண்ர்ந்தேன். நான் குளித்துவிட்டு வந்திருக்க வேண்டும். என்மீது சாராய நெடியும் அழுகிய நாற்றமும் அடித்தது. இளவரசன் என்னை அழைத்தான், ஆனால் நான் நின்ற இடத்திலேயே அசையாமல் நின்றேன். ஒரு வீரன் என்னைப் பார்த்து, “முட்டாளே! இளவரசர் உன்னை அழைப்பது உன் கண்களுக்குத் தெரியவில்லையா?” என்று குரைத்தான்.

நான் நடுக்கத்துடன் அந்த ரதத்தை நோக்கி நடந்தேன். நான் அதை நெருங்கியபோது, இளவரசன் என்னிடம் தன் கையை நீட்டினான். அவனது ராஜ விரல்களைத் தொடத் தயங்கி நான் விலகினேன், ஆனால் அவன் வேகமாக என்னைத் தன் ரதத்திற்குள் இழுத்தான். கீழ்நிலையில் இருந்த, துர்நாற்றம் வீசிய உடலைக் கொண்ட ஒரு பிச்சைக்காரன், அசுர இளவரசனுடன் ஒரே ரதத்தில் பயணம் செய்வதா? எனக்குப் பெருமையாக இருந்தது. கூட்டத்தினர் மூச்சுவிட மறந்து நின்றனர். இவனுடைய தந்தை ஒரு முறைகூட இப்படிச் செய்திருக்கவில்லை. நான் என் வளர்ப்பு மகனைத் திரும்பிப் பார்த்தபோது, அவனது கண்களில் பகைமை தென்பட்டதைக் கண்டேன். அவனுடைய அவமானத்தை நானும் பகிர்ந்து கொண்டேன். இளவரசன் மேகநாதன் தனது பெருமைமிகு கணத்தை என்னைப் போன்ற ஓர் இழிவான பிறவியுடன் பகிர்ந்து கொண்டதன் மூலம் அரசியல் விளையாட்டில் மேலும் ஒரு புள்ளியைத் தனக்குச் சம்பாதித்திருக்கக்கூடும். ஒருவேளை அது ஓர் உண்மையான இதயத்திலிருந்து வந்த உன்னதமான செயலாகவும் இருக்கலாம், ஆனால் என் வாழ்வில் எனக்குக் கிடைத்திருந்த அனுபவங்கள், இளவரசனின் செய்கையைக் கருணையின் வெளிப்பாடாகக் கருதுவதற்கு என்னை அனுமதிக்கவில்லை. தரும காரியங்கள் உட்பட, பணக்காரர்களும் அதிகாரம் படைத்தவர்களும் செய்த அனைத்தும் சுயநலத்தால் தூண்டப்பட்டவைதான். எனது

பயனற்ற வாழ்க்கையில் நான் கற்றிருந்த மிகக் கடினமான பாடங்களில் அதுவும் ஒன்று. என்னைப் போன்ற மக்களிடம் கனிவோடு நடந்து கொள்வதில் அவர்கள் கொண்ட பெருமிதத்தை நான் பார்த்திருந்தேன். எல்லாவற்றையும்விட மேலாக, பேராற்றல் வாய்ந்த பேரரசர் ராவணன் உட்பட, அவர்கள் அனைவரின் கண்களிலும் நான் பயத்தைப் பார்த்திருந்தேன். அறியாமை நிறந்த, அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டு நடந்த, கருப்பு நிறத் தோலைக் கொண்ட, ஏழைகளான எங்களைக் கண்டு அவர்கள் பயந்தனர். இரக்கம், ஆதரவு, ஈகை, அகங்காரம், கர்வம், அக்கறையின்மை ஆகியவை அனைத்தும், தங்களுடைய பயத்திலிருந்து தங்களைத் தற்காத்துக் கொள்வதற்காகப் பணக்காரர்கள் பயன்படுத்திய உத்தியின் பல்வேறு வடிவங்களே.

திடீரென்று, அசுர இளவரசன்மீது என்னால் அதிகாரம் செலுத்த முடியும் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. எல்லாம் மிகத் தெளிவாகத் தெரிந்தது. இந்த யுத்தத்தில், அவன் தனது இளமையிலேயே, பாதி மலர்ந்த ஒரு மலரைப்போல வாடிவிடுவான், ஆனால் நான் உயிரோடு இருப்பேன். வரலாற்றின் பக்கங்களில் உள்ள இடைவெளிகளில் அவன் இடம்பிடிப்பான். ஆனால் நானோ, எனது அன்றாடப் போராட்டங்களைச் சமாளித்தவாறு, சிரமப்பட்டு வாழ்க்கை நடத்துவேன். ஒரு கடவுளை மதிப்பதைப்போல யாரும் என்னை மதிக்க மாட்டார்கள், ஆனால் கடவுள்கள் பயனற்றவர்கள். யார் ஒரு கடவுளாக இருக்க விரும்புவார்கள்? இந்த யுத்தம் விரைவில் முடிந்துவிடும். அதேபோல, கதாநாயகர்கள் மற்றும் வில்லன்களின் வாழ்க்கையும் விரைவில் முடிந்துவிடும். ஆனால் என் போராட்டம் தொடரும். என்னைப் போன்ற கோடிக்கணக்கான மக்கள், உணவிற்காகவும் நீருக்காகவும் காற்றுக்காகவும் உறைவிடத்திற்காகவும் சிறிது மரியாதைக்காகவும் இவ்வுலகின் பல்வேறு மூலைகளில் தங்களது சிறிய யுத்தங்களைத் தொடர்ந்து நடத்துவர்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்த என்னை இளவரசரின் குரல் திடுக்கிட்டு விழிக்கச் செய்தது. “இன்று உங்கள் மகன் என் உயிரைக் காப்பாற்றினான். நீங்கள் ஒரு கதாநாயகனின் தந்தை. நான் உங்களைப் பணிந்து வணங்குகிறேன்.” எனக்குள் என்னவோ செய்தது. இந்த யுத்தத்தில் எந்தப் பங்கையும் நான் விரும்பவில்லை. இளவரசன் ஓர் அதிரடி அரசியல் நடவடிக்கைக்காக என்னைப் பயன்படுத்திக் கொண்டிருந்தது குறித்து நான் கோபம் கொண்டேன். தனது ரதத்தை என்னைப் போன்ற ஓர் இழிவான பிறவியுடன் பகிர்ந்து கொண்டிருந்த, உண்மையிலேயே உன்னதமான ஓர் இளவரசனைச் சந்தேகிக்கும் அளவுக்கு வாழ்க்கை என்னை ஒரு சந்தேகப் பிராணியாக

மாற்றியிருந்ததா? என் கண்களை நிரப்பிக் கொண்டிருந்த கண்ணீரை அடக்க முயற்சித்தவாறு நான் அமைதியாக இருந்தேன். நடுங்கிக் கொண்டிருந்த என் உதடுகளைக் கட்டுப்படுத்துவதற்கு நான் துணிச்சலாக முயற்சித்தேன், ஆனால் அது இயலாமல் போய் நான் அழத் தொடங்கினேன். இளவரசன் என்னைப் பரிவோடு அணைத்துக் கொண்டு என் கன்னங்களில் முத்தமிட்டான். என் மகன் தன் கண்களை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டான். நான் தொடர்ந்து தேம்பினேன். ரதம் மீண்டும் ஓடத் துவங்கியது. ரதத்தின் இருபுறங்களிலும் இருந்த வீரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

கோட்டைக் கதவு திறக்கப்பட்டபோது, அரண்மனைக்கு இட்டுச் சென்ற படிக்கட்டுகளின் உச்சியில் அரசனும் அரசியும் நின்று கொண்டிருந்ததை நான் கண்டேன். ஆடல் மங்கையர், சேவகர்கள், அரசவை ஐந்துக்கள் ஆகியோரால் மேல்மாடங்கள் நிரம்பி வழிந்தன. அவர்கள் அனைவரும் இளவரசனை உற்சாகப்படுத்தினர். மேற்கில் மறைந்து கொண்டிருந்த சூரியன், பேரரசரின்மீது சிவப்புச் சாயத்தைப் பூசினான். ராவணன் முன்பொரு காலத்தில் எப்பேற்பட்ட ஆற்றல்வாய்ந்த அசுரப் பேரரசனாக இருந்திருந்தாரோ, இப்போதும் ஒவ்வோர் அங்குலத்திலும் அவர் அப்படியே தோன்றினார். அவரது வெள்ளி நிறத் தலைமுடி காற்றில் பறந்தது. அவர் கம்பீரத்தோடும் பெருமிதத்தோடும் நிமிர்ந்து நின்று தன் மகனை வரவேற்கத் தயாரானார்.

இது ஒரு வெற்றி ஊர்வலம் என்பதை அப்போதுதான் நான் உணர்ந்தேன். “போர் முடிந்துவிட்டதா?” ராவணன் தன் கைகளை உயர்த்தினார். கூட்டம் உற்சாக ஆரவாரம் செய்தது. “ஹர ஹர மகாதேவா!” என்ற முழக்கம் காற்றைக் கிழித்துக் கொண்டு சென்று ஒவ்வோர் அசுரனையும் உற்சாகப்படுத்தியது. தேவ இளவரசர்கள் இருவரையும் மேகநாதன் வெட்டிக் கொன்றிருந்ததாகக் கூட்டத்தில் யாரோ சிலர் கிசுகிசுத்ததை நான் கேட்டேன். செண்டை வாத்தியங்கள் சத்தமாகவும் வேகமாகவும் இசைக்கப்பட்டன. வெற்றி வாகை சூடி வீடு திரும்பியிருந்த வீரர்கள்மீது மலர்கள் பொழியப்பட்டன. ஒரு பெரிய சுமை என் இதயத்திலிருந்து கீழே விழுந்தது. நாங்கள் பாதுகாப்பாக இருந்தோம். என் மகன் பாதுகாப்பாகவும் உயிரோடும் இருந்தான். பிராமணத்துவம், சாதீயம் ஆகிய சங்கிலிகளை அசுரர்கள் இனி ஒருபோதும் அணிய வேண்டியிருக்காது. தீண்டாமை, இனப் பாகுபாடு, மற்றும் தேவர்களின் கலாச்சாரத்தோடு தொடர்புடைய பிற அனைத்துக் கொடுமைகளும், வட இந்தியர்களின் அரைவேக்காட்டு நாகரீகத்தின் விந்தையான கலாச்சாரங்களாக மட்டுமே இனி நீடிக்கும். அசுரர்கள்

தங்களது கலாச்சாரத்தின் மேன்மைத்துவம் குறித்தப் பெருமிதத்துடன், தேவர்களின் அந்த விந்தையான கலாச்சாரங்களைப் பற்றி இகழ்ச்சியான குரலில் பேசுவர். இளவரசன் மேகநாதன், அசுரர்களை இந்த உடனடி ஆபத்திலிருந்து காப்பாற்றியிருந்தால், அவன் உண்மையிலேயே மேன்மையான ஒருவனாகத்தான் இருக்க வேண்டும். இது ஒரு புதிய யுகத்தின் தொடக்கம். ராமனும் அவன் பிரதிநிதித்துவப்படுத்திய வேத அராஜகங்கள் அனைத்தும் கடலில் புதைக்கப்பட்டன.

என் மகனும் இந்த வெற்றியில் ஒரு பங்கு வகித்தான். அவன்தான் இந்த வெற்றியின் கதாநாயகன். மேகநாதன் என்னைத் தனது ரதத்திற்குள் ஏற்றிக் கொண்டிருந்ததில் வியப்பில்லை. உண்மையில், கதாநாயகனின் தந்தை என்ற முறையில், இன்னும் அதிக மரியாதையை அவன் எனக்குக் கொடுத்திருக்க வேண்டும். இளவரசனின் ரதம் படிக்கட்டுகளுக்கு முன்னால் வந்து நின்றபோது, பேரரசர் வேகமாகக் கீழே இறங்கி ஓடி வந்தார். பெருமிதம் கொண்ட அந்தத் தகப்பன் தன் மகனை ஆரத் தழுவுவதற்கு முன்பாக, இளவரசனின் தாயார் ஓடி வந்து அவனை இறுக்கமாக அணைத்தார். தன் மகனைக் கட்டிப் பிடித்து, அவனுடைய கைகளின் வலிமையைத் தன்னால் உணர முடியாமல் போனது குறித்த எரிச்சலுடன், மேகநாதனின் தந்தை ஒருசில அடிகள் தள்ளி நின்றார். மேகநாதனுக்குப் பின்னால் ஒருசில அடிகள் தள்ளி, அந்த வெள்ளை நிற இளவரசனின் கரிய நிழல்போல அதிகாயன் நின்றான். அவனது வெற்று முகத்தில் ஒரு முட்டாள்தனமான, தர்மசங்கடமான புன்னகை மலர்ந்திருந்தது.

மண்டோதரி தன் மகனை விடுவித்தப் பிறகு, தந்தையும் மகனும் ஒருவரையொருவர் இறுக்கமாகப் பார்த்தனர். ஒருசில நிமிட இறுக்கமான மௌனத்திற்குப் பிறகு, ராவணன் மேகநாதனைக் கட்டியணைத்தார். கூட்டம் உற்சாகமாகக் குரலெழுப்பியது. செண்டை வாத்தியங்கள் காட்டுத்தனமாக இசைக்கப்பட்டன. பிறகு அவர்கள் இருவரும் அரண்மனைக்குள் நுழைந்தனர். தன் எஜமானனைப் பின்தொடர்ந்து சென்ற ஒரு நாயைப்போல, என் மகன் அதிகாயன் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றான். அவன் என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. நான் அங்கு இருந்ததை அவன் அங்கீகரிக்கக்கூட இல்லை. நான் அதிர்ச்சியில் உறைந்து நின்றேன். படிக்கட்டுகளுக்குக் கீழே நின்று கொண்டிருந்த கூட்டத்தினர் தங்கள் கொண்டாட்டங்களைத் துவக்கினர். என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு ஒரு காவலாளி என் தோளைத் தட்டி, “இளவரசர் இதை உனக்குக் கொடுத்தனுப்பினார்,”

என்று கூறிவிட்டு, சந்தேகப்படும்படியாகத் தோன்றிய ஒரு துணி மூட்டையை என்னிடம் கொடுத்தான். நான் அந்தத் துணியை லேசாகத் திறந்து பார்த்தேன். பழைய பட்டுத் துணிகள் சில அதில் இருந்தன. கூடவே, சில செப்புப் பாத்திரங்களும் சில இனிப்புகளும் இருந்தன. ஒரு கதாநாயகனை வளர்ந்திருந்ததற்கு அசுர இளவரசன் அன்போடு அளித்த வெகுமதி அது. இளவரசன் தன் உயிருக்கு நிர்ணயித்திருந்த விலை இதுதான். அந்த மூட்டையை என்னிடம் கொடுத்தக் காவலாளி, பொறாமையோடும், தனக்கு அதன்மீது அக்கறையில்லை என்ற பாசாங்கோடும் என்னைக் கவனித்தான். அவன் தன் 'அன்பளிப்பிற்காக' ஆர்வத்தோடு காத்திருந்தான். "இந்த நாடு ஒருபோதும் மாறாது. உன்னால் முடியும்போது எல்லாவற்றையும் சுருட்டிக் கொள் என்பதுதான் அதன் தாரக மந்திரமாக இருந்தது," என்று என் மனத்திற்குள் நான் கூறிக் கொண்டேன். பேராசைதான் இந்தக் கேடுகெட்ட நாட்டின் அடிப்படையாக இருந்தது.

அரசாங்கம் என்மீது தூக்கியெறிந்திருந்த வெகுமதியுடன் நான் மௌனமாக அங்கு நின்றேன். என்னிடம் அந்த வெகுமதியைக் கொண்டு வந்திருந்த அந்த விசுவாசமான அரசாங்க ஊழியன், என்னிடமிருந்து எதையாவது பெற்றே தீருவது என்ற முடிவோடு இருந்தான். வெறுப்படைந்த நான், அந்த ஒட்டுமொத்த மூட்டையையும் அப்படியே அவனுடைய கைகளுக்குள் போட்டுவிட்டு அங்கிருந்து வெளியே நடந்தேன். அந்தக் காவலாளி அதை எடுத்துக் கொண்டு அரண்மனைக்குள் நடந்தான். ராமனின் மரணத்தை மதுவருந்திக் கொண்டாடிக் கொண்டிருந்த கூட்டத்தினருடன் நானும் சேர்ந்து கொண்டேன்.



# 52

## ஒரு பிரதம மந்திரியின் முக்கியப் பயணம்

ராவணன்

யுத்தம் ஒருவழியாக முடிந்துவிட்டது. எங்களுடைய மிகப் பெரிய எதிரிகளை என் மகன் ஒழித்துக்கட்டியிருந்தான். நான் அவனைக் குறித்துப் பெருமிதம் கொண்டேன், ஆனால் நான் கவலையும் கொண்டேன். ஏதோ தவறு நடந்திருந்ததுபோலத் தோன்றியது. அவனும் அவனது நண்பன் அதிகாயனும் ராமன் மற்றும் லட்சுமணனை அவர்களது வீரர்களிடமிருந்து பிரித்து, ஒரு கடுமையான சண்டையில் சிக்க வைத்திருந்தனர். பிரஹஸ்தன், முந்தைய நாளே தனது படையில் பாதியை இலங்கையின் கிழக்குப் பகுதியில் நிலைப்படுத்தியிருந்தான். தேவர்களைப் பின்னாலிருந்து தாக்குவதற்காக இரவு முழுவதும் அவன் அவர்களை நடத்தி அழைத்துச் சென்றிருந்தான். அனுமானையும் சுக்ரீவனையும் தங்களது எஜமானர்களிடமிருந்து பிரித்து, அசுரப் படை பின்வாங்கிக் கொண்டிருந்தது போன்ற ஒரு தோற்றத்தை அவன் அவர்களுக்குக் கொடுத்திருந்தான். ஊக்கமடைந்த குரங்கு மனிதர்கள், அசுரர்களைப் பின்தொடர்ந்திருந்தனர். அவர்கள் ராமனிடமிருந்து

போதுமான தூரத்தை அடைந்தவுடன், அசுரர்கள் வானரர்களை நோக்கித் திரும்பி, ஒரு பயங்கரமான சண்டையில் ஈடுபட்டனர். நான் என் கோட்டையிலிருந்து அந்த யுத்தத்தைக் கவனித்தேன். பிரஹஸ்தனின் தலைமைத்துவம் எனக்கு பிரமிப்பூட்டியது.

ராமனிடம் ஒருசில காவலாளிகள் மட்டுமே எஞ்சியிருந்தனர். விரைவில், மேகநாதனும் அதிகாயனும் பெரும் படையுடன் அங்கு வந்து, ராமனின் உறுதிமிக்க வீரர்களை வெட்டிச் சாய்த்தனர். அவர்களிடம் அதிக நேரம் இருக்கவில்லை. மேகநாதன் நேராக ராமனை நோக்கிச் சென்றான். தேவ இளவரசர்கள் விரைவாகவும் துல்லியமாகவும் அம்புகளை எய்து, என் மகனையும் அவனுடைய வேலைக்காரனையும் பல முறை காயப்படுத்தினர். அந்த இளவரசர்களின் அம்புகளிடமிருந்து தப்புவதற்காக, முடிந்த அளவுக்கு அவர்களுக்கு மிக நெருக்கமாகச் செல்ல வேண்டும் என்று அதிகாயன்தான் பரிந்துரைத்தான்.

மேகநாதனும் அதிகாயனும் தங்கள் ரதத்தைவிட்டு இறங்கி, உருவிய வாள்களுடன் அந்த தேவ இளவரசர்களை நோக்கி விரைந்து, சண்டையிட்டுக் கொண்டிருந்த ஆட்களின் ஊடாகப் புகுந்து, தேவ இளவரசர்களை நெருங்கிவிட்டனர். ஆனால், கணநேரத்திற்குள் ராமன் எய்த ஓர் அம்பு, மேகநாதனின் தோளின்மீது வந்து இறங்கியது. மேகநாதன் தன் வாளை உருவி, ஒரே வீச்சில் ராமனை வீழ்த்தினான். அதிகாயன் லட்சுமணனோடு கடுமையாகச் சண்டையிட்டான். லட்சுமணன் தன் வில்லையும் அம்பையும் கீழே போட்டுவிட்டுத் தன் வாளை உருவினான். தேவர்களின் வாள் மிகவும் பயங்கரமான ஓர் ஆயுதம். அசுரர்களுடைய வளைவான, கனமான, இரும்பாலான வாளைப் போலன்றி, தேவர்களின் வாள் நீளமாகவும் மெல்லியதாகவும் இருந்தது. அவர்கள் அதை ஒரு குத்துவாளைப்போலப் பயன்படுத்தினர். அதிகாயனுக்கு உதவி செய்வதற்காக மேகநாதன் அவனிடம் ஓடினான். ஆனால் அவன் திரும்பியபோது, இறந்துவிட்டதாக அவன் நினைத்திருந்த ராமன், திடீரென்று அவனது காலைப் பிடித்து அவனைத் தடுமாறி விழச் செய்தான். அதிகாயன் தனது எஜமானனைப் பார்ப்பதற்காகத் திரும்பிய அந்தக் கணநேரத்தில், லட்சுமணன் தன் வாளை அதிகாயனின் உடலுக்குள் செருகினான்.

லட்சுமணன் வேகமாகத் திரும்பி, தனது வாளைத் தனது இரண்டு கைகளாலும் உயர்த்திப் பிடித்தபடி, நிலத்தில் முகம் குப்புற விழுந்து கிடைந்த என் மகனின் இதயத்தைக் குறி வைத்துப் பாய்ந்தான். அப்போது, மண்டியிட்டு அமர்ந்திருந்த அதிகாயன், மேகநாதனை அங்கிருந்து வேகமாக இழுத்தான். லட்சுமணன் அசுர இளவரசனுக்கு வைத்தக் குறி தவறி, அவனது வாள், நிலத்திற்குள் ஆழமாக இறங்கியது.

மேகநாதன் தனது வாளை லட்சுமணனின் வயிற்றுக்குள் ஆழமாகச் செருகினான். லட்சுமணன் வலியில் துடித்துப் புரண்டு, பிறகு அசைவின்றி அப்படியே கிடந்ததை அவன் பார்த்தான்.

இதற்குள், வானரர்களின் வயதான தளபதியான ஜாம்பவான், தன் ஆட்களுடன், தான் ஒளிந்திருந்த சிறு குன்றின்மீதிருந்து குதித்து, அசுரப் படையினரின் முன்னால் வந்து நின்றான். அந்தக் குன்றின் ஓர் உயரத்திலிருந்து, யுத்தம் எவ்வாறு சென்று கொண்டிருந்தது என்பதைக் கண்காணித்து வந்திருந்த அந்த வஞ்சகத் தளபதி, பிரஹஸ்தனின் சதித் திட்டத்தைக் கண்டபோது, தனது படையினரை அதற்கு ஏற்றாற்போல வழிநடத்தினான். ராமனுக்கு உதவுவதற்காக அவன் தனது ஆட்களுடன் விரைந்தான். ஆபத்தை உணர்ந்து கொண்ட அதிகாயன், பின்வாங்கிச் செல்லுமாறு மேகநாதனைத் தூண்டினான், ஆனால் அதற்குள் மேகநாதன் நினைவிழந்து போயிருந்தான். அதிகாயன் அவனைத் தன் தோளில் சுமந்து கொண்டு, தன் உடலிலிருந்தும் ரத்தம் வழிந்து கொண்டிருக்க, கூட்டத்தினரை வெட்டிச் சாய்த்தபடி இளவரசனின் ரதத்தை நோக்கிச் சென்று, அசுர இளவரசனை விழிப்பூட்ட முயற்சித்தான். ஆனால் ஜாம்பவானின் ஆட்கள் நெருங்கிக் கொண்டிருந்ததை அவனால் பார்க்க முடிந்தது.

தங்கள் தலைவனுக்கு உதவுவதற்காகத் திரும்பி வருமாறு சுக்ரீவனுக்கும் அனுமானுக்கும் ஜாம்பவான் தகவல் அனுப்பினான். அந்த ஒட்டுமொத்த வானரப் படையும், பின்வாங்கிச் சென்று கொண்டிருந்த மேகநாதனின் ஆட்களை மறிப்பதற்காக அவர்களை நோக்கித் திரும்பி, அவர்களை நெருக்கினர். பிரஹஸ்தனின் படை, பின்னாலிருந்து துரத்தியது. என் மகன் சிக்கியிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது, ஆனால் அவன் நினைவிழந்திருந்தான் என்பதை நான் அறியவில்லை. என் கோட்டையிலிருந்து பார்த்தபோது, அவனுடைய ரதத்தில் பறந்து கொண்டிருந்த கொடி மட்டுமே என் கண்களுக்குத் தெரிந்தது. அவனுடைய ரதம் யுத்தக்களத்திற்கு நடுவே நின்று கொண்டிருந்ததைக் கண்டபோது நான் கவலை கொண்டேன். "தன் ரதத்தைப் புறக்கணித்துவிட்டு, எதிரியோடு நிலத்தில் நின்று சண்டையில் ஈடுபடும் அளவுக்கு எப்படி அவனால் பொறுப்பின்றி நடந்து கொள்ள முடிந்தது?" என்று நான் யோசித்தேன். பக்குவப்பட்டப் போர் வீரர்கள் அவ்வாறு சண்டையிடுவதில்லை. இது ஆபத்தானதோடு மட்டுமன்றி, முட்டாள்தனமானதும்கூட. ஆனால் இளைஞர்கள் இளைஞர்களாகத்தான் இருப்பார்கள். இறுதியில், பொறுப்பற்றத் துணிச்சல் மற்றும் அதிர்ஷ்டத்தின் மூலம், அந்தத் தீய ஆற்றல்களை அவன் தீர்த்துக்கட்டினான். அப்போது, அதிகாயன், "ராமனும்

லட்சுமணனும் இறந்துவிட்டனர். இளவரசன் மேகநாதனுக்கு வெற்றி!” என்று தன் தொண்டை கிழியக் கத்தினான். வெற்றிக் குரல்கள் அசுரப் படை நெடுகிலும் முழங்கின. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பது எனக்கு லேசாகக் கேட்டது, ஆனால் வானரப் படைகள் செயல்பட்டுக் கொண்டிருந்த விதத்தை என் கண்கள் கவனித்தன. அசுரர்களின் வெற்றி முழக்கத்தைக் கேட்ட வானரர்களின் வேகம் திடீரென்று குறைந்தது. அசுரர்களுக்கு அது போதுமானதாக இருந்தது. அது அசுரர்களின் சதித் திட்டம் என்று மீண்டும் மீண்டும் கத்திக் கொண்டே, ஜாம்பவான் தன் படைகளை ஒன்றுதிரட்ட முயற்சித்தான். ஆனால் செய்தி விரைவாகப் பரவியது.

வானரர்களால் அதை நம்ப முடியவில்லை. அவர்களைப் பொறுத்தவரை, ராமன் ஒரு கடவுள், யாராலும் அழிக்க முடியாத ஓர் இயற்கை ஆற்றல். ஒரு சாதாரண அசுர இளவரசன் அவனைக் கொன்றிருந்தான் என்பதை அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அனுமான் வழிநடத்திய வீரர்களின் வேகமும் கணிசமாகக் குறைந்தது. பிரஹஸ்தனின் ஆட்கள் வேகமாக முன்னேறி, அவர்களுடன் சண்டையில் ஈடுபட்டனர். அதிகாயனின் ஆட்கள் இந்தக் குழப்பத்தின் ஊடாக வெளியேறி, கோட்டையை நோக்கி விரைந்தனர். இதற்குள், மேகநாதனுக்கு நினைவு திரும்பியிருந்தது. ராமனைத் தான் கொன்றிருந்ததாக அவனும் உரத்தக் குரலில் முழங்கினான். ராமனின் படை மேலும் உற்சாகமிழந்தது. எப்படிப் பார்த்தாலும், யுத்தம் முடிந்துவிட்டிருந்தது. எஞ்சியிருந்த வானரர்களைப் பிரஹஸ்தனின் படைகள் சூழ்ந்ததை நான் கண்டேன். ஆனால் தேவ இளவரசர்களின் உடல்கள் விழுந்து கிடந்த இடத்தைச் சென்றடைய ஜாம்பவான் முயற்சித்தான்.

வெட்டிச் சாய்க்கப்பட்டிருந்த அந்த தேவ இளவரசர்களை நோக்கி என் சகோதரன் விபீஷணன் விரைந்து கொண்டிருந்ததைப் பார்த்தபோது என்னுள் கோபம் பொங்கியது. கழிசடையான அவன், அசுரர்கள் வென்றுவிட்டதை அறிந்தவுடன், என்னிடம் ஓடி வந்து, என் முன்னால் மண்டியிட்டு, என் பாதங்களைத் தொட்டு வணங்கிக் கெஞ்சுவான். அந்த தேவ இளவரசர்களின் தொய்வான உடல்களை ஜாம்பவானின் ஆட்கள் தூக்கியதை நான் கண்டேன். “ஏதோ தவறு நடந்துள்ளதுபோலத் தெரிகிறது. நிச்சயமாக ஏதோ தவறு நடந்துள்ளது!” வானரர்களின் உடல்மொழி மாறிய விதத்தை என்னால் பார்க்க முடிந்தது. அந்த இளவரசர்களின் உடல்களை ரதத்தில் வைத்து, அந்த வானரத் தளபதி, தனது படையைக் கடலை நோக்கிச் செலுத்தினான். பிரஹஸ்தன் அவனைப் பின்தொடர முயற்சித்தான்,

ஆனால் சுக்ரீவனும் அனுமானும் அவனை முன்னேற விடாமல் இழுத்துப் பிடித்தனர். ஒரு படகு அந்தக் கடற்கரையை நெருங்கியதையும், தேவ இளவரசர்களின் உடல்கள் அதில் வைக்கப்பட்டதையும் நான் பார்த்தேன்.

அதற்குள், மேகநாதனின் வெற்றி ஊர்வலம் என் கோட்டைக் கதவுகளை அடைந்திருந்தது. கவலையுடன் இருந்த என் மனைவி வெளியே விரைந்தாள். நானும் வெளியே வந்து, வெற்றி வாகை சூடித் திரும்பி வந்திருந்த எங்கள் மகனை வரவேற்க வேண்டும் என்று அவள் என்னை நச்சரித்தாள். ஆனால், கடலில் நடந்தேறிக் கொண்டிருந்த நாடகத்திலேயே என் கண்கள் நிலைத்திருந்தன. வடமேற்குக் கடலில், இந்தியாவிற்கு அருகே இருந்த, ஆள் நடமாட்டமில்லாத ஒரு தீவை நோக்கி அந்தப் படகு விரைந்தது. அது ஒரு பாதுகாப்பான தூரத்தை அடைந்தவுடன், இலங்கைத் தீவிலிருந்த அனுமானின் படை, கடலை நோக்கி ஓடி, ராமனின் பாலத்தின் வழியாகத் தப்பித்துக் கொண்டிருந்தது. பிரஹஸ்தன் அவர்களை வேகமாகப் பின்தொடர்ந்தான், ஆனால் திடீரென்று, வருணனின் படையினர் அவனுக்குப் பின்னாலிருந்து தோன்றினர். குரங்கு மனிதர்கள் தப்பிச் செல்வதற்காகத் தீட்டப்பட்ட ஒரு சதித்திட்டம் அது. அனுமானின் ஆட்கள் அந்தப் பாலத்தைக் கடந்த பிறகு, இலங்கைத் தீவுடனான அதன் இணைப்பை அவர்கள் துண்டித்தனர்.

எதிரியின் தலைவனை மேகநாதன் வெட்டி வீழ்த்தியிருந்த செய்தி பரவியபோது, அசுரப் படையினர் ஒன்றுகூடித் தங்களது கொண்டாட்டங்களைத் துவக்கினர். ராமனின் எஞ்சிய படையினரைத் தீர்த்துக்கட்ட வேண்டிய ஒரு சிறிய வேலை மட்டும் பாக்கியிருந்தது, ஆனால் அதை நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம். வெற்றியைக் கொண்டாடுவதற்காகக் கோட்டைக்கு வேகமாகத் திரும்பியிருந்த தனது வீரர்களைக் கட்டுப்படுத்தப் பிரஹஸ்தன் முயற்சித்தான். ஆனால் ஏதோ என்னைத் தொந்தரவு செய்தது. பிரஹஸ்தன் என்னிடம் வந்து அறிக்கை வழங்குவதற்காக நான் கவலையோடு காத்திருந்தேன். எங்கள் வெற்றி குறித்து நான் மகிழ்ச்சியடைந்தேன், ஆனால் ஜாம்பவான் அந்த இளவரசர்களைக் கொண்டு சென்றிருந்த விதம் எனக்குக் கவலையளித்தது. "அவர்கள் உண்மையிலேயே இறந்துவிட்டனரா?" என்ற கேள்வி என்னைத் துளைத்துக் கொண்டிருந்தது. அவர்கள் மிக மோசமாகக் காயப்பட்டிருந்தனர் என்பது எனக்கு உறுதியாகத் தெரிந்தது. மேகநாதன் அவ்விருவரின் தலைகளைக் கொய்யாமல் போனது எனக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. அவன் சமீப காலமாக ஏராளமான அழுத்தத்திற்கு ஆளாகியிருந்தான். அவன் துணிவாகத்தான்

சண்டையிட்டான், ஆனால், இது போன்ற சிறிய விஷயங்கள்தான் யுத்தங்களின் போக்கை மாற்றின. தனது வாளைக் கொண்டு ஒருசில முறை குத்தியவுடனோ அல்லது ஒருசில அம்புகளை எறிந்தவுடனோ எதிரி இறந்துவிட்டதாக மேகநாதன் ஒருபோதும் அனுமானித்திருக்கக்கூடாது. தலை கொய்யப்பட்ட ஒருவன் மீண்டும் உயிர் பெறுவதற்கு நிச்சயமாக ஓர் அதிசயம் தேவைப்படும். நெடுங்காலத்திற்கு முன்பு, அந்த அடர்ந்த காடுகளில், மகாபலியிடமும் பிரம்மாவிடமும் நான் கற்றுக் கொண்ட ஒரு பாடம் அது.

என் இளமைப் பருவத்தில் இப்படிப்பட்ட ஒரு வாய்ப்பு எனக்கு வாய்த்திருந்தால், ராமன் மற்றும் லட்சுமணனின் தலைகளைக் கொய்து, அவர்களுடைய வீரர்கள் பார்க்கும்படி, அவற்றைக் கம்பங்களின்மீது நான் உயர்த்தியிருப்பேன். தலைவனைக் கைப்பற்றியதும் போர் முடிந்துவிடும். வீரர்களின் உற்சாகத்தை அது குழி தோண்டிப் புதைத்துவிடும். என் இளமைக் காலத்தில், பல படையெடுப்புகளின்போது நான் அதைப் பார்த்திருக்கிறேன். எனது வாளான சந்திரஹாசத்தைக் கையில் ஏந்தியவாறு எதிரித் தலைவர்களை நோக்கிப் பொறுப்பற்ற வேகத்துடன் நான் பாய்ந்து சென்ற பல சமயங்களின்போது, வெட்டிச் சாய்க்கப்படும் ஆபத்தான சூழ்நிலைகளில் நான் பலமுறை இருந்திருந்தேன், ஆனால் எப்படியோ அவர்களை நான் கொன்றேன். எத்தனை எதிரிகள் என்னைச் சூழ்ந்திருந்தாலும் சரி, நான் மரணத்திற்கு வெகு அருகில் இருந்தாலும் சரி, எதிரிப் படையினரின் தலைவனின் தலையை நான் வெட்டிச் சாய்த்துவிட்டு, அதை அவனது வீரர்கள் பார்ப்பதை உறுதி செய்துவிட்டால், போர் முடிந்துவிடும். ஆனால், முட்டாள் மேகநாதன், ராமன் மற்றும் லட்சுமணனின் தலைகள் கொய்யப்படுவதை உறுதி செய்யவில்லை. போர் உத்தியைப் பொறுத்தவரை, அது ஒரு பெருந்தவறு. மாபெரும் யுத்தங்களில் சண்டையிட்ட மாபெரும் வீரர்களிடம் மட்டுமே இருந்த ஏதோ ஒன்றை மேகநாதன் இன்னும் கைவசப்படுத்தியிருக்கவில்லை. அந்த ஏதோ ஒன்று, ஈவு இரக்கமின்மையா? அவன் ஓர் உண்மையான வீரனாக இருப்பதை அவனது மென்மையான இதயம் தடுத்துக் கொண்டிருந்தது. நான் அவனுடைய இடத்தில் இருந்திருந்தால், கண்ணிமைக்கும் நேரத்திற்குள் காரியத்தை நான் கச்சிதமாக முடித்திருப்பேன். வாலி, ராமன், அனுமான், பிரஹஸ்தன், ருத்ராக்கன், மகாபலி போன்றவர்களும் அதையேதான் செய்திருப்பார்கள்.

அப்படியென்றால், எதிரி இன்னும் சாகவில்லை என்று அர்த்தம். ராமன் மற்றும் லட்சுமணனின் உடல்களில் சிறிது உயிர் இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், ஜாம்பவான் ஏன் அவர்களைப் படகில்

ஏற்றி அந்தத் தீவிற்குக் கொண்டு செல்ல வேண்டும்? எதிரி மீண்டும் எங்களைத் தாக்கக்கூடும். “முட்டாள் மேகநாதன்!” என்று நான் என் மனத்திற்குள் பொருமினேன். வாழ்வின் கடுமையை அவன் இன்னும் பார்த்திருக்கவில்லை. நான் என் வியர்வையாலும் ரத்தத்தாலும் உருவாக்கியிருந்தவற்றை அவன் அவ்வளவு பெரிதாகக் கருதவில்லை. அடுத்த வேளைச் சாப்பாடு எப்போது கிடைக்கும் என்பது தெரியாமல் ஆதரவற்று நிற்கின்ற நிலையை அவன் இன்னும் உணர்ந்திருக்கவில்லை. தனது குழந்தைகளுக்கு உணவளிக்க இயலாத ஒரு தாயின் கண்களில் உள்ள வருத்தத்தை அவன் இன்னும் பார்த்திருக்கவில்லை. நான் மண்டோதரியைக் குறைகூறினேன். உலகிலேயே அவன்தான் விலைமதிக்க முடியாத ஒருவன் என்பதுபோல அவள் அவனுக்குச் செல்லம் கொடுத்திருந்தாள். அவன் வசீகரமானவனாகவும் அன்பானவனாகவும் பரிவு கொண்டவனாகவும் இருந்தான். அவனை யாராலும் நேசிக்காமல் இருக்க முடியாது. ஆனால், நான் அவனை இன்னும் அதிகச் சிறப்பாக வளர்த்திருக்க வேண்டும். யுத்தத்தில் ஒரு பொன்னான வாய்ப்பு அவனால் வீணாகியிருந்தது. முட்டாள்!

நான் உள்ளே சென்று, அவனுடைய முட்டாள்தனத்திற்காக அவனைக் குடைந்தெடுக்க விரும்பினேன். தன் முகத்தில் பெருமிதம் ஒளிர, அவன் என்னைப் பார்த்துப் புன்னகைத்தான். நான் அவனுடன் தனியாகப் பேச விரும்பியதால், சிறிது நேரம் பொறுமையாகக் காத்திருந்தேன். இன்னொரு முட்டாளான அதிகாயன், ஒரு மகிழ்ச்சியான முகத்துடன் தரையில் உட்கார்ந்திருந்தான். அவர்கள் செய்திருந்த காரியத்திற்காக அவர்கள் இருவருடைய தலைகளையும் சேர்த்து உடைக்க நான் விரும்பினேன். அசுரர்களுக்குக் கிடைத்திருந்த மிகச் சிறந்த வாய்ப்பைத் தவறவிட்டப் பிறகு, அவர்கள் இருவரும் கதாநாயகர்களைப்போல உட்கார்ந்திருந்தனர்.

மேகநாதனின் உடலில் ஏற்பட்டிருந்த வெட்டுக்களையும் காயங்களையும் என்னிடம் சுட்டிக்காட்டி, மண்டோதரி, “ராவணா, அவனுடைய உடலில் ஏற்பட்டுள்ள வெட்டுக்களைப் பாருங்கள். என் மகன் இன்று கொல்லப்பட்டிருக்கக்கூடும்,” என்று கூறிவிட்டுத் தேம்பினாள். மேகநாதன் தனக்குக் கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்த கவனிப்பை மகிழ்ச்சியாக அனுபவித்துக் கொண்டிருந்தான். “இவள் வேறு எதை எதிர்பார்த்தாள்? அவன் போருக்குச் சென்றிருந்தான். இது ஒரு யுத்தம். இவள் ஏன் அவனைப் பற்றி இவ்வளவு தூரம் அலட்டிக் கொண்டிருக்கிறாள்?” என்று நான் எனக்குள் நொந்து கொண்டேன். அப்போது ஒரு விஷயம் எனக்குத் தெளிவானது. மண்டோதரி

முதன்முறையாக ஒரு யுத்தத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். என்னுடைய மற்றப் படையெடுப்புகள் அனைத்தும் தொலைதூர நாடுகளில் நிகழ்த்தப்பட்டிருந்தன. மேகநாதனைத் தனியாகப் போருக்கு அனுப்புவதற்கு நான் பயந்தேன். யுத்தக்களத்தில் கணநேரத்தில் ஏற்படக்கூடிய கொடூரங்களை நான் அறிந்திருந்தேன். ஏதேனும் ஓர் அம்பு அவனுடைய கண்களைத் துளைத்துச் சென்று, அவனுடைய மூளையைக் கொய்துவிடுமோ என்று நினைத்து நான் அஞ்சினேன். யுத்தக்களங்களில் முட்டாள் ஆண்கள் ஒருவரையொருவர் வெட்டிச் சாய்ப்பதைப் பெண்கள் பார்த்தால், இவ்வுலகில் யுத்தமே இருக்காது. நான் என் மனைவிக்கும் என் மகனுக்கும் இடையே வர என் இதயம் என்னை அனுமதிக்கவில்லை. எனவே நான் அந்த அறையைவிட்டு வெளியேறினேன். பிரஹஸ்தன் என்னிடம் வந்து, என்னைப் பணிந்து வணங்கினான். நான் அவனது கையைப் பிடித்து மேல்மாடத்திற்கு அவனைக் கூட்டிச் சென்றேன்.

“பிரஹஸ்தா, நீ என்ன நினைக்கிறாய்? ராமன் உண்மையிலேயே இறந்துவிட்டானா?” என்று நான் அவனிடம் கேட்டேன். அதற்கான பதில் எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தும்கூட, என்னால் அவனிடம் அதைக் கேட்காமல் இருக்க முடியவில்லை.

அவன் இல்லையென்று தலையசைத்தான்.

“மேகநாதனும் அதிகாயனும் வாய்ப்பைத் தவறவிட்டுவிட்டார்கள் என்று நான் நினைக்கிறேன்,” என்று நான் கூறினேன். அவன் வருத்தமாகப் புன்னகைத்தான்.

“நம்மால் அவர்களைக் குறைகூற முடியாது. மேகநாதனுக்கு அனுபவம் போதாது. அவன் மென்மையான இதயத்தைக் கொண்டவனும்கூட. ஆனால், இதற்கு நாம் ஒரு விலை கொடுக்க வேண்டியிருக்கும்,” என்று கூறிய பிரஹஸ்தன் என் பார்வையைத் தவிர்த்தான். அவனுள் இருந்த விரக்தியையும் வெறுப்பையும் என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அந்த இரண்டு தேவ இளவரசர்களையும் அழைத்துக் கொண்டு ஜாம்பவனான் ஓடி ஒளிந்திருந்த அந்தத் தொலைதூரத் தீவின்மீது தன் கவனத்தைக் குவித்தபடி, பிரஹஸ்தன், “அவன் தடுத்து நிறுத்தப்பட வேண்டும்,” என்று கூறினான். நான் குழப்பத்தோடு அவனைப் பார்த்தேன்.

“அரசே, எனக்குக் கிடைத்தத் தகவலின்படி, அந்த இரண்டு இளவரசர்களும் மரணத்தின் விளிம்பில் இருக்கின்றனர். ஆனால் வானரர்களின் மருத்துவ அறிவு மிகவும் புகழ்பெற்றது. உயிரைக் காப்பாற்றக்கூடிய சாறுகளை வினோதமான தாவரங்களிலிருந்து எவ்வாறு தயாரிப்பது என்பது அவர்களுக்குத் தெரியும். நம்மைப்

போலன்றி, வேதியல் பொடிகளை அவர்கள் பயன்படுத்துவதில்லை. மாறாக, ஆயுர்வேதம் எனும் ஒரு மருத்துவ முறையை அவர்கள் பயன்படுத்துகின்றனர். மூலிகளைக் கொண்டு செய்யப்படும் மருத்துவம் அது.”

“உன் பரிந்துரை என்ன?”

“ராமன் உயிரோடு இருக்கிறானா இல்லையா என்று நமக்கு உறுதியாகத் தெரியாது. அவன் மிக மோசமாகக் காயப்பட்டுள்ளான். இந்நேரத்திற்குள் அவன் இறந்து போயிருக்கவும்கூடும். ஆனால் அவன் உயிரோடு இருந்தாலோ, அல்லது வானர மருத்துவர்கள் அதிசயிக்கத்தக்க விதத்தில் எப்படியோ அவனைக் காப்பாற்றியிருந்தாலோ, அவனை முற்றிலுமாகக் குணப்படுத்துவதற்கு அவர்கள் அந்த மருந்துகளைத் தயாரிக்க வேண்டும். அவர்கள் பயன்படுத்துகின்ற இந்த வகையான தாவரங்கள் வழக்கமாக இந்தியாவின் மூன்று பகுதிகளில் மட்டுமே கிடைக்கும். இலங்கை அதில் ஒன்று. இந்தியாவின் தென்மேற்குக் கடற்கரைகளில் இருக்கும் தட்பவெப்பக் காடுகள் இன்னொன்று. இயமமலை மூன்றாவது. ஆனால் இமயமலை வெகு தூரத்தில் உள்ளது. இலங்கைக்குள் அவர்களால் நுழைய முடியாது. ஏனெனில், அது அவர்களுக்கு மிகவும் ஆபத்தானதாக இருக்கும். ஆனாலும்கூட அவர்கள் அதற்கு முயற்சிக்கக்கூடும். எனவே அப்படிப்பட்ட ஒரு சாத்தியக்கூற்றை எதிர்கொள்வதற்கு நாம் தயாராக இருக்க வேண்டும். அவர்களுக்கு இருக்கும் ஒரே வழி, இந்தியாவின் மேற்குப் பகுதிக்குச் செல்வதுதான். வானரர்கள் இந்த இரண்டு வாய்ப்புகளையும் உடனடியாக ஆய்வு செய்வார்கள்.”

“நாம் ஏன் இன்றிரவே அந்தத் தீவின்மீது படையெடுக்கக்கூடாது?” என்று நான் கேட்டேன். எனக்கே என் பரிந்துரையின்மீது நம்பிக்கை இருக்கவில்லை, ஆனால் பிரஹஸ்தனுடன் நான் அதைக் கலந்தாலோசிக்க விரும்பினேன்.

“அது கூடாது. வருணனின் கப்பல்கள் அங்கு காவல் காத்துக் கொண்டிருக்கின்றன. அது மிகவும் ஆபத்தான முயற்சி. நம்மால் செய்யக்கூடியதெல்லாம், ராமனும் லட்சுமணனும் இறந்துவிடுவார்கள் என்று நம்புவது மட்டுமே. பிறகு, பேராசைக்கார வானர அரசனான சுக்ரீவனை நம்மால் மிக மலிவாக விலைக்கு வாங்கிவிட முடியும். இதற்கிடையே, நமது தீவின் பாதுகாப்பையும் நாம் பலப்படுத்த வேண்டும். அங்கதன் இலங்கைக்குள் ஊடுருவ முயற்சிக்கக்கூடும். அரசே, நாம் லங்கினிக்கு உடனடியாகத் தகவல் அனுப்ப வேண்டும்.”

இந்தியாவின் தென்முனையில், மூன்று கடல்களும் சந்தித்த இடத்தில் நிலைகொண்டிருந்த அசுர ஆளுனர்தான் லங்கினி.

இந்தியாவின் தெற்குப் பிராந்தியங்களை அவள் ஓர் இரும்புக் கரத்துடன் ஆண்டு வந்திருந்தாள். பின்னாலிருந்து ராமனைத் தாக்குவதற்கு அவள் எனக்கு உதவியிருக்க வேண்டும், ஆனால் என்னுடைய ஆட்சியின்கீழ் இருந்த எந்தவொரு நல்ல தன்னாட்சி ஆட்சியாளரைப்போலவே, விஷயங்கள் எவ்வாறு சென்று கொண்டிருந்தன என்பதைப் பார்த்துவிட்டு, பிறகு வெற்றியாளனுடன் கூட்டு சேர்ந்து கொள்வதற்காக அவள் காத்திருந்தாள். படைகளை அனுப்புவது குறித்து நான் அவளுக்குப் பல கடிதங்கள் அனுப்பியிருந்தும், அவற்றில் ஒன்றுக்குக்கூட அவளிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. எனக்கு வெறுப்பாக இருந்தது, ஆனால் இதுதான் வாழ்க்கை என்பதை நான் அறிந்திருந்தேன்.

“லங்கினிக்கு நாம் எவ்வாறு தகவல் அனுப்புவது?” என்று நான் பிரஹஸ்தனிடம் கேட்டேன். இந்த ஒட்டுமொத்தத் திட்டம் குறித்து என் சந்தேகம் அதிகரித்துக் கொண்டே போனது, ஆனால் எப்படியோ, பிரஹஸ்தன் கூறியதில் அர்த்தம் இருந்ததுபோலத் தோன்றியது. அந்தச் சிறிய தீவில் தஞ்சம் புகுந்திருந்த வானரர்களின்மீது தாக்குதல் நடத்துவது குறித்து நான் யோசித்து, அதன் சாதக பாதகங்களை அலசினேன். ஆனால் அது ஒரு பொறுப்பற்றக் காரியமாக இருக்கும். ராமன் இறப்பதை உறுதி செய்வதுதான் சிறந்த வழி. என் மகள்மீது எனக்குப் பரிதாபம் ஏற்பட்டது, ஆனால் நான் அவசர அவசரமாக அந்த உணர்வை வெளியேற்றினேன்.

“நாம் விரைவாகச் செயல்பட வேண்டும். பாம்புப் படகுகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு நானே லங்கினியிடம் போகிறேன்,” என்று பிரஹஸ்தன் கூறினான். அவன் தன்னிடமே உரக்கப் பேசிக் கொண்டதுபோல இருந்தது அது. மகாபலி, இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து ஆட்சி செய்தபோது, அவரது கடற்படையினர் பிரத்யேகமாகப் பயன்படுத்திய படகுகள்தான் பாம்புப் படகுகள். அவை நீளமாகவும் நேர்த்தியாகவும் இருந்தன. அவை ஒவ்வொன்றிலும் துடுப்புப் போடுவதற்கு 120 நபர்கள் தேவைப்பட்டனர். மேற்குக் கடற்கரையை ஒட்டி இருந்த பகுதியைக் கடந்து செல்வதற்கு அவை கச்சிதமானவையாக இருந்தன, ஆனால் திறந்த கடலில் அவை அரிதாகவே பயன்படுத்தப்பட்டன. ஆனால் புஷ்பக விமானத்தைத் தவிர, மிக வேகமாகப் பயணிப்பதற்கான ஒரே வழி அவைதான்.

“அரசே, நானே இந்தக் காரியத்தைச் செய்கிறேன். வருணனின் கப்பல்களை ஓசையின்றிக் கடந்து சென்று, காலைக்குள் நான் இந்தியாவை அடைய வேண்டும். அது ஆபத்தானது. சாத்தியம்

இருந்தால், இந்தக் காரியத்தை நான் தவிர்த்திருப்பேன். ஆனால் கடலைப் பற்றி என்னைவிட அதிகமாகத் தெரிந்தவர்கள் வேறு யாரும் கிடையாது. தங்களுடைய இளவரசர்கள் மீண்டும் நலம் பெறும்வரை, வானரர்கள் இன்னொரு தாக்குதலுக்கு முயற்சிக்க மாட்டார்கள் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். நான் இப்போதே புறப்படுகிறேன். நான் இங்கு இல்லாத சமயத்தில், எனக்குப் பதிலாக, படைகளுக்குத் தலைமை தாங்கும் பொறுப்பைக் கும்பகர்ணனிடம் ஒப்படைப்பது ஒரு நல்ல யோசனையாக இருக்கும்.”

பிறகு, நான் அவனைத் தடுத்து நிறுத்துவதற்கு முன்பாகவே, பிரஹஸ்தன் என்னைப் பணிந்து வணங்கிவிட்டு அங்கிருந்து வேகமாக வெளியேறினான். என் இளைய சகோதரன் நெடுநாட்களாகக் குடிபோதையில் மிதந்து கொண்டிருந்தான். போதைப் பொருட்களுக்கும் மதுவிற்கும் அடிமையாகியிருந்த அவனுக்கு அவை ஒரு திசனரி வழக்கமாக ஆகியிருந்தன. என் கண்முன்னாலேயே அவன் வீணாகிக் கொண்டும் சீரழிந்து கொண்டும் இருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. அவன் எனக்கு ஒரு போட்டியாளனாக உருவாகிவிடுவான் என்ற பயத்தில்தான் அவனுடைய தீய பழக்கங்களிலிருந்து அவனை விடுவிக்க நான் முயற்சித்திருக்கவில்லையா? எனக்குத் தெரியாது. நான் அவனைப் பற்றி நினைத்தே பல நாட்கள் ஆகியிருந்தன. மாரீசனைப் பற்றி நான் ஒரு கணம்கூடச் சிந்தித்திருக்கவில்லை. அனுமானால் கொல்லப்பட்டிருந்த என் இளைய மகன் அக்ஷய குமாரனைப் பற்றியும் நான் நினைத்துப் பார்த்திருக்கவில்லை. இப்போது, படைகளுக்குத் தலைமை தாங்குவதற்கு நல்ல வீரர்கள் குறைவாக இருந்த நிலையில், பிரஹஸ்தன் என் சகோதரனை எனக்கு நினைவுபடுத்தினான். அரண்மனையின் எந்தப் பொந்திற்குள் என் சகோதரன் ஒளிந்திருந்தான் என்பதைக் கண்டுபிடித்து, அவனைத் தனது மகிழ்ச்சியான இருண்ட உலகிற்குள்ளிருந்து வெளியே கொண்டு வந்து, என்னுடைய யுத்தத்தில் சண்டையிட வைக்க வேண்டும். அது அவ்வளவு சுலபமானதாக இருக்கப் போவதில்லை.



# 53

## அத்துமீறல்

பத்ரன்

விடியலுக்கு முந்தைய மிக இருட்டான அக்கணங்களில், சில காலடியோசைகள் எனக்குக் கேட்டன. எனக்கு வயதாகியிருந்தாலும்கூட, என்னுடைய உள்ளுணர்வு பலவீனமடைந்திருக்கவில்லை. நான் மூக்கு முட்டக் குடித்துவிட்டு ஒரு மரக்கட்டையைப்போலக் கிடந்தபோதும்கூட, ஆபத்தை என் செவிகள் துல்லியமாக உணர்ந்து கொண்டன. என் தலையை உயர்த்த எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை, ஆனால் யாரோ அமைதியாக அங்கு அலைந்து கொண்டிருந்தனர். நிச்சயமாக ஏதோ பிரச்சனை இருந்தது. எரிந்து கொண்டிருந்த கடைசி எண்ணெய் விளக்கும் அணைந்து போய் நெடுநேரம் ஆகியிருந்தது. வானம் மேகமூட்டத்துடன் இருந்தது. ஏதோ ஓர் இரவுப் பறவை அவ்வப்போது ஏற்படுத்திய ஒலிகளைத் தவிர வேறு எந்தச் சத்தமும் அங்கு கேட்கவில்லை. மூச்சுவிடுவதற்குக்கூட மிகவும் பயந்து போய், நான் என் காதைக் கூர்தீட்டிக் கொண்டேன்.

இம்முறை அந்தக் காலடியோசைகள் எனக்குத் துல்லியமாகக்

கேட்டன. பலர் அங்கு நடமாடிக் கொண்டிருந்தனர். நன்றாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான அசுர வீரர்களின்மீது ஏறி, மரங்களின் உச்சிகளில் போய் அவர்கள் உட்கார்ந்திருந்தனர். நான் என் கண்களை மெதுவாகத் திறந்தேன். அரண்மனை வாசலில் அசுரக் காவலாளிகளின் தளர்வான உடல்களை என்னால் பார்க்க முடிந்தது. அரண்மனையின் முதற்தளத்திற்கு வெகு அருகே இருந்த மரங்களில் ஒரு சலசலப்பு எனக்குக் கேட்டது. சில கரிய உருவங்கள் அந்த முதற்தளத் தாழ்வாரத்தில் மிக நேர்த்தியாகக் குதித்தன. அது வானரர்களாக மட்டுமே இருக்க முடியும்.

என் உடல் அப்படியே உறைந்து போனது. “அவர்கள் ஏன் இங்கு இருக்கிறார்கள்?” என்ற கேள்வி என்னைக் குடைந்தது. நேற்றைய வெற்றிக் கொண்டாட்டத்தில் நன்றாகக் குடித்திருந்த காவலாளிகள் இன்னும் போதை தெளியாமல் இருந்தனர். நான் அரண்மனையை நோக்கி மெதுவாகத் தவழ்ந்து சென்றேன். மிக மோசமாக ஏதோ நடக்கவிருந்ததுபோல எனக்குத் தோன்றியது. நான் அரண்மனைக் கதவுகளை அடைந்தபோது, அந்தக் காவலாளிகள் தொண்டை அறுக்கப்பட்டுக் கொல்லப்பட்டிருந்ததைக் கண்டேன். எதிரி அரண்மனைக்குள் இருந்தான். நான் என்ன செய்ய வேண்டும்? உரக்கக் கத்திச் சத்தம் போடட்டுமா? யாரேனும் கண்விழித்து எழுந்து கொள்வார்களா? நான் ராவணனை எச்சரித்தாக வேண்டும். அரசனின் அறை எங்கு இருந்தது என்பதை நான் அறிந்திருந்தேன். ஆனால் எனக்கு பயமாக இருந்தது. எதிரி எங்கு வேண்டுமானாலும் இருக்கக்கூடும். அரண்மனையின் இருண்ட நிழல்களில், என்மீது பாய்வதற்காக மரணம் காத்துக் கொண்டிருந்தது. மரணத்திற்கு நான் தயாராக இருந்ததாக எப்போதுமே நான் நம்பி வந்திருந்தேன். நான் இறந்தால், என் மனைவி உட்பட யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். என் மகன் நிச்சயமாக என் மரணத்தைப் பற்றி எள்ளளவுகூடக் கவலைப்பட மாட்டான். ஆனாலும் நான் வாழ விரும்பினேன். ராவணன் தோற்றுவிட்டால் என்ன நிகழும் என்பதை நான் நன்றாகவே அறிந்திருந்தேன். என் இனத்தைச் சேர்ந்த மக்கள், பிராமணர்களின் கைகளில் தங்கள் வாழ்நாள் முழுவதும் தினம் தினம் செத்துப் பிழைப்பார்கள். லேசான சத்தம்கூட நடுக்கம் ஏற்படுத்த, மூச்சுவிடக்கூட பயந்து கொண்டு, களைத்துப் போயிருந்த எனது உடலை முதற்தளத்தில் இருந்த ராவணனின் அறைக்கு நான் வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றேன். நான் மீண்டும் இளைஞனாக மாறி, என் உடலில் அதிக வலிமையும் மனத்தில் அதிகத் துணிச்சலும் இருந்தால் நன்றாக இருக்கும் என்று நான் நப்பாசை கொண்டேன்.

நான் என் குதிங்கால்களில் மாடிப்படிகளின் வழியாக ஏறினேன். ஒரு லேசான அழுகைச் சத்தமும், பிறகு யாரோ ஓங்கி அடித்தச் சத்தமும், ஏதோ ஒன்று இழுத்துச் செல்லப்பட்டச் சத்தமும் எனக்குக் கேட்டது. என் இதயம் படபடவெனத் துடிக்க, மாடிப்படிகளிலிருந்து நான் எட்டிப் பார்த்தேன். ஒருசில வானரர்கள் அங்கிருந்து ஓடிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய தீய இளவரசனான அங்கதனை நான் அடையாளம் கண்டுகொண்டேன். ஒரு தளர்ந்த உடலை அவன் தன் தோளின்மீது போட்டுக் கொண்டு, அந்த அறையைவிட்டு ஓடிக் கொண்டிருந்தான். குடிபோதையின்றி நிதானத்தில் இருந்த சில காவலாளிகள் ஒருவழியாக விழித்துக் கொண்டு, அங்கதனைத் தடுத்து நிறுத்த முயற்சித்தனர். ஆனால் அங்கதன் தன் வேகத்தைச் சிறிதுகூடக் குறைத்துக் கொள்ளாமல், அதிர்ச்சியில் இருந்த அக்காவலாளிகளைத் தாறுமாறாக வெட்டி வீழ்த்திக் கொண்டும் அவர்களுடைய உடல்களில் தன் வாளைப் பாய்ச்சிக் கொண்டும் வெளியே ஓடினான். நான் அரசனின் அறையை நோக்கி ஓடினேன். அறை வாசலில் காவலாளிகள் ரத்தக் குளத்தில் மிதந்து கொண்டிருந்ததை நான் கண்டேன். வானர இளவரசனைத் துணிச்சலோடு எதிர்கொண்டிருந்த அவர்களது குடல்கள் வெளியே தெறித்து, தரையில் இருந்த அழகான கம்பளங்களில் பெரும் ரத்தக் கறைகளை ஏற்படுத்தியிருந்தன. அவர்கள் வலியில் துடித்துக் கொண்டிருந்தனர்.

முன்னும் பின்னும் ஆடிக் கொண்டிருந்த அறைக் கதவைப் பார்த்துவிட்டு, ஒருசில நொடிகள் நான் தயங்கினேன். இதயத்தில் குத்துவாள் செருகப்பட்ட நிலையில் பேரரசர் தன் படுக்கையில் கிடந்ததை எதிர்கொள்ள என்னைத் தயார்படுத்திக் கொண்டு, நான் அந்தக் கதவைத் தள்ளித் திறந்தேன். ஆனால் அந்த அறை காலியாக இருந்தது. உயிரற்ற உடல்கள் எதுவும் அங்கு இருக்கவில்லை. ஏதோ போராட்டம் நடந்திருந்ததை அங்கிருந்த படுக்கை மட்டும் பறைசாற்றியது. அப்போது விஷயம் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. “அங்கதன், அசுர அரசியான மண்டோதரியைக் கடத்திச் சென்றிருந்தான். அரசனைக் கொல்லும் எண்ணத்துடன்தான் அவன் அங்கு வந்திருந்தான், ஆனால் அவர் தன் அறையில் இல்லாததைக் கண்ட அவன், அதற்குப் பதிலாக அவரது மனைவியைக் கடத்தியிருந்தான். ராவணனுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டாக வேண்டும். அவர் எங்கே இருந்தார்?” நான் அரண்மனைத் தாழ்வாரங்களின் ஊடாக ஓடிச் சென்று, அறைக் கதவுகளைப் பலமாகத் தட்டி, உரத்தக் குரலெழுப்பி, அதிகாயனைச் சத்தம் போட்டு அழைத்தேன். பலர் எழுந்து கொண்டனர். அரசியாரை அங்கதன்

கடத்திச் சென்றிருந்தாக நான் என் தொண்டை கிழியக் கத்தினேன். துவக்கத்தில் யாரும் எதுவும் செய்யவில்லை. குடி போதையில் நான் பிதற்றியதாக அவர்கள் நினைத்திருக்கக்கூடும். பிறகு பீதி தொடங்கியது. காவலர்கள் நன்றாக விழித்துக் கொண்டு, தலையற்றக் கோழிகளைப்போல அங்குமிங்கும் ஓடினர். பலர் சத்தமாக ஓலமிட்டனர், சிலர் உரத்தக் குரலில் உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அவற்றுக்குக் கீழ்ப்படிந்து நடக்க எவரும் இல்லை. மற்றவர்கள், என்ன நடந்து கொண்டிருந்தது என்று தெரியாமல் திருதிருவென்று முழித்தபடி உட்கார்ந்திருந்தனர்.

நான் அரை மணிநேரத்திற்குப் பிறகு மேகநாதனையும் அதிகாயனையும் கண்டுபிடித்தேன். நான் என் மகனைக் காலால் எட்டி மிதித்தேன். அவன் தனது மது மயக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்துத் துள்ளினான். யார் வேண்டுமானாலும் அங்கு வந்து, அசுர இளவரசனையும் அவனது வேலைக்காரனையும் கொன்றிருக்க முடியும். அசுரப் பாதுகாப்பு அப்படிப்பட்டது! பேராற்றல் வாய்ந்த அசுரர்களின் வீழ்ச்சிக்கான ஒரு காரணத்தை யாரேனும் தெரிந்து கொள்ள விரும்பினால், அதை ஒரு வார்த்தையில் தொகுத்துக் கூறிவிடலாம்: சாராயம்! அது என் இனத்தின் சாபக்கேடு. இளவரசனுக்கு விரைவில் மயக்கம் கலைந்தது. நிகழ்ந்திருந்த சம்பவத்தை நான் அவனிடம் விளக்குவதற்குள் அவன் உஷாரானான். பிறகு, தன் வாளை உருவிக் கொண்டு வெளியே ஓடினான். நான் பார்த்தக் காட்சியை அவனிடம் சத்தமாகக் கூறிக் கொண்டே, நானும் இளவரசனைப் பின்தொடர்ந்து ஓடினேன். நாங்கள் இருவரும் முன்முற்றத்தைக் கடந்தபோது, அதிகாயனும் எங்களோடு சேர்ந்து கொண்டான். கோட்டை மணியை நோக்கி மேகநாதன் ஓடினான். அவன் இரண்டிரண்டு படிகளாகத் தாவி ஓடினான். நான் மிகவும் களைத்திருந்ததால், நான் அங்கேயே நின்றுவிட்டேன். அதிகாயன் என்னைக் கடந்து சென்று, இளவரசனை நோக்கி விரைந்தான். விரைவில், அந்த மிகப் பெரிய கோட்டை மணியின் சத்தம் அந்த அரண்மனை நெடுகிலும் தொடர்ந்து ஒலித்தது. “இந்த யோசனை ஏன் எனக்கு முன்பே தோன்றவில்லை?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். ஒருசில நிமிடங்களுக்குள், அந்த ஒட்டுமொத்த முற்றமும் உஷாரான காவலாளிகளால் நிரம்பியது.

“இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது?” என்று உரத்தக் குரலில் வினவியபடி, மணிக்கூண்டை நோக்கிப் பேரரசர் விரைந்து வந்தார். நடந்திருந்த விஷயத்தை மேகநாதன் அவருக்கு விளக்கினான். அவரது முகம் வெளிறிப் போனது. மணிக்கூண்டின் சுவரின்மீது கோபத்துடன் அவர் தன் முஷ்டியை ஓங்கிக் குத்தியபோது, அதிலிருந்து தூசியும்

சுண்ணாம்பும் பறந்தன. “அந்தச் சண்டாளன் அங்கதனைப் பிடித்து என்னிடம் கொண்டு வா!” என்று அவர் கத்தினார்.

“அப்பா, நான் ஒரு குழுவைக் கூட்டிக் கொண்டு அவனைத் தேடப் போகிறேன். இது ஒரு சதித்திட்டமாக இருக்கலாம். நீங்கள் அரண்மனையில்தான் இருந்தாக வேண்டும். ஒரு தலைவன் இல்லாதபோது வானரர்கள் இக்கோட்டையைத் தாக்கினால், நாம் பெரும் பிரச்சனைக்குள் மாட்டிக் கொள்வோம்,” என்று மேகநாதன் கூறினான்.

“மேகநாதா, நீ இங்கு இருந்து கொள். அவன் கடத்திச் சென்றுள்ளது என் மனைவியைத்தான். தேடும் குழுவை நான் முன்னடத்திச் சென்று, அந்தக் காட்டுமிராண்டிகளுக்கு ஒரு பாடத்தைக் கற்றுக் கொடுக்கப் போகிறேன். கும்பகர்ணனை எழுப்ப வேண்டிய நேரம் வந்துவிட்டது என்று நான் நினைக்கிறேன். அவனுடைய உதவி இப்போது எனக்கு மிகவும் தேவை. அவனுக்குப் புத்திமதி கூறுவதிலேயே நேற்றிரவு முழுவதும் கரைந்துவிட்டது.”

ராவணன் தனக்குப் பிரியமான குதிரையின்மீது ஏறி இருட்டிற்குள் மாயமாய் மறைந்தார். தேடும் குழுவைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான வீரர்கள், கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த தீப்பந்தங்களைத் தங்கள் கைகளில் ஏந்திக் கொண்டு, அசுரப் பேரரசரின் வேகத்திற்கு ஈடு கொடுக்கப் போராடியபடி தங்கள் குதிரைகளில் அவரைப் பின்தொடர்ந்தனர். காலாட்படை வீரர்கள் தங்கள் கைகளில் ஈட்டிகளையும் உருட்டுக்கட்டைகளையும் சுமந்து கொண்டு அந்தக் குதிரைகளுக்குப் பின்னால் ஓடினர். ஆனால் பொதுவாக, தங்களுக்குத் தாங்களே தொந்தரவு கொடுத்துக் கொள்வதற்குத் தவிர, இந்தக் காலாட்படை வீரர்கள் வேறு எதற்கும் பயனற்றவர்களாக இருந்தனர். நானும் அவர்களோடு சேர்ந்து ஓடினேன்.

நாங்கள் சுபேல மலையின் எல்லையை அடைந்தபோது, தேடும் குழுவினர் தங்கள் குதிரைகளை அங்கேயே விட்டுவிட்டு, அந்தச் செங்குத்தான மலையின் மேலே கால்வாசி தூரம் ஏறியிருந்தனர். பெரிய தொங்கல் பாறைகளுடன்கூடிய சுபேல மலையின் அடர்த்தியான, இருண்ட காடு பெரிதாகவும் எளிதில் ஊடுருவ முடியாததாகவும் இருந்தது. என்னுடைய வயதான, சோர்வான உடலால், மலையேறுவதில் இருந்த பிரச்சனைகளைச் சமாளிக்க முடியுமா என்ற சந்தேகம் எனக்கு எழுந்தது. ஆனால் ஆர்வத்தைவிட அதிகமாக ஊக்குவிக்கக்கூடிய ஏதேனும் ஒன்று உள்ளதா என்ன? தேடும் குழுவினர் ஏற்படுத்தியிருந்த பாதையைப் பின்தொடர்ந்து உற்சாகமாக மலையேறிய இளவயதுக் காவலாளிகளுடன் சேர்ந்து, நான் மேல்மூச்சுக்

கீழ்மூச்சு வாங்கியவாறு, என் உடலை என்னோடு இழுத்துக் கொண்டு ஏறினேன்.

அந்த அடர்த்தியான காட்டின் ஊடாக அவ்வப்போது தென்பட்டத் தீப்பந்த வெளிச்சம் மட்டுமே எங்களை வழிநடத்தியது. நான் இரண்டு முறை கால் இடறிக் கீழே விழுந்தேன். ஆனால் வலியைக் கண்டுகொள்ளாமலும், அந்தக் காடுகளில் சர்வசாதாரணமாகச் சுற்றித் திரிந்த விஷப் பாம்புகள் பற்றிய பயத்தை எனக்குள் அடக்கிக் கொண்டும், என்னைவிட இருபத்தைந்து வயது குறைவான ஆட்களுக்கு இணையாக வேகமாக ஏறுவதற்கு நான் கடுமையாக முயற்சித்தேன். நான் நினைத்திருந்ததைவிட நான் அதிக வலிமையோடு இருந்ததைக் கண்டேன். தற்போது பேரரசனாக இருந்த ராவணனோடு சேர்ந்து, இளமையில் நாங்கள் மேற்கொண்ட இப்படிப்பட்ட சாகசங்கள் பற்றிய நினைவுகளும், துணிச்சல் மற்றும் வீரம் கொடுத்த சாகச உணர்வும், ஆபத்தை மிகச் சுலபமாக எதிர்கொள்வது குறித்த இளமை வேகமும் என் மனத்திற்குள் வேகமாகப் பாய்ந்து வந்தன. அரசிக்கான தேடல் பணி துவங்கியபோது இருந்ததைவிட, நான் பல வருடங்கள் இளமையானதுபோல நான் உணர்ந்தேன்.

அந்தக் குன்றுக்கு நூற்றுக்கணக்கான அடிகள் கீழே இருந்த ஒரு சிறிய வெற்றிடத்தை நாங்கள் அடைந்தபோது, வியர்வையில் நாங்கள் முற்றிலுமாகக் குளித்திருந்தோம். எங்களுக்கு மிகவும் மூச்சு வாங்கியது. எங்களுக்கு முன்பாகச் சென்ற தேடல் குழுவினர், தூரத்தில் ஒன்றாக அமர்ந்திருந்ததை எங்களால் பார்க்க முடிந்தது. கிழக்கு வானத்தில் ஒரு சாம்பல்நிறக் கற்றை உருவாகியிருந்தது. நட்சத்திரங்கள் சற்று மங்கலாகியிருந்தன. பல தீப்பந்தங்கள் அணைந்திருந்தன. என் குழுவில் இருந்த இளைஞர்கள், நாங்கள் இருந்த வெற்றிடத்தின் விளிம்பில் நின்று கொண்டிருந்த தங்களுடைய நண்பர்களை நோக்கி விரைந்தபோது, நான் என்னை ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்காகக் கீழே உட்கார்ந்தேன். பிறகு மீண்டும் மெதுவாக மலையேறத் துவங்கினேன்.

நான் கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு முன்னால் போனேன். அந்தக் கட்டாந்தரையில், அரசியார், நிர்வாணமாகவும் சுயநினைவின்றியும் கிடந்தார். ராவணன் அதிர்ச்சியோடும் அமைதியாக அழுது கொண்டும் நின்றார். நான் ஓரடி முன்னால் சென்று, என்னுடைய கிழிந்த சால்வையை எடுத்து அரசியாரின் உடலின்மீது போர்த்தினேன். அப்போது அவர் லேசாக அசைந்தார். பிறகு அவர் தன் கண்களை மெதுவாகத் திறந்தார். ராவணன் அவரைத் தன் கைகளில் எடுத்து, இறுக்கமாக அணைத்துக் கொண்டார். தன்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தினரை, அரசியார், எதுவும் புரியாமல் ஒரு கணம்

பார்த்தார். பிறகு, தனது நிர்வாணமும், தனது அவமானமும், தன்மீது நடந்த அத்துமீறலும் அவருக்குப் புரிந்தது. அவர் பெருங்குரலெடுத்து அலறிக் கொண்டு, நாற்றம் வீசிய என்னுடைய சால்வையால் தன்னை மறைத்துக் கொள்ள முயற்சித்தார். பிறகு அவர் தட்டுத்தடுமாறி எழுந்து அங்கிருந்து ஓட முயன்றார். ஆனால் ராவணன் ஒரே தாவலில் அவரது கையைப் பிடித்து இழுத்து அவரை இறுக்கமாக அணைத்துக் கொண்டார். அரசியார் தன் முகத்தைத் தன் கணவனின் தோளில் புதைத்து அழுதார். கூட்டம் தயக்கத்தோடு அங்கிருந்து கலைந்து சென்றது. சிலர் தங்கள் அரசிக்குத் தண்ணீர் கொண்டு வருவதற்காக ஓடினர், மற்றவர்கள் அவருக்காகச் சில ஆடைகளைச் சேகரித்தனர். வேறு சிலர், அரசியை அரண்மனைக்கு அழைத்துச் செல்வதற்காக ஒரு தற்காலிகமான பல்லக்கைத் தயார் செய்தனர். இந்த எதிர்பாராத விபத்தைப் பற்றி யோசித்தபடி நான் அங்கு நின்றேன். இந்த அவமானத்துடன் இனி தான் வாழ விரும்பவில்லை என்று அரசியார் தொடர்ந்து புலம்பினார். அங்கதனும் அவனுடைய பட்டிக்காட்டான்களும் அவரிடம் அத்துமீறியிருந்தனர். அரசியார் ராவணனின் மனைவியாகத் தொடர்ந்து நீடிக்க விரும்பவில்லை. அவர் இறந்து போக விரும்பினார்.

ஆனால் ராவணன், சட்டபூர்வமாக அவர் தன்னுடைய மனைவி என்றும், அவர் என்றென்றும் தன் மனைவியாகவே தொடர்ந்து இருப்பார் என்றும் கூறியதைத் தவிர, வேறு எதுவும் பேசவில்லை. இந்தத் தீவிரமான தனிப்பட்ட வேதனையைப் பார்ப்பதற்கு மிகவும் தர்மசங்கடமாக இருந்தது. இப்படிப்பட்ட ஒரு கடுமையான சூழ்நிலையில் தன் மனைவிக்கு ஆதரவாக நின்ற மனிதனைக் கண்டு நான் பெரிதும் பிரமித்தேன். ஓர் ஆட்சியாளன் என்ற முறையில், அவரது சொந்த மரணம் உட்பட, இதைவிட மோசமான எதுவும் அவருக்கு நடந்துவிட முடியாது. அரசியார் என்றென்றைக்குமாகக் கறைபடுத்தப்பட்டிருந்தார். பயன்படுத்தப்பட்ட ஒரு கந்தல் துணியைப்போல அவரைத் தூக்கி எறிவதுதான் ராவணனுக்கு மிகச் சுலபமான காரியமாக இருந்திருக்கும். ஆனால், தன் முதுகுக்குப் பின்னால் தன் மனைவியைப் பற்றி எள்ளி நகையாடக்கூடிய தனது பணியாளர்களுடன் வாழ்கின்ற கடினமான வழியை அவர் தேர்ந்தெடுத்தார். இப்படிப்பட்டத் தேர்ந்தெடுப்புகளில்தான் அவரது மகத்துவமும் அவரது பலவீனமும் அடங்கியிருந்தனபோலும். அந்த நேரத்தில், பலாத்காரம் செய்யப்பட்டத் தனது மனைவி குறித்து அவர் நடந்து கொண்ட விதத்தை நான் முற்றிலும் பாராட்டினேனா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் வெகுகாலம் கழித்து, இன்னொருவன்

தான் விருப்பப்பட்டுத் தேர்ந்தெடுத்தத் தனது மனைவியை நடத்திய விதத்தை நான் காண நேர்ந்தபோதுதான், ராவணனை ஏன் ஒரு கடவுளாக ஒருபோதும் வழிபட முடியாது என்பது எனக்குப் புரிந்தது. தன்னால் ஒருபோதும் கடவுளாக ஆக முடியாத அளவுக்கு அவர் மிக அதிக மனிதாபிமானம் கொண்டவராக இருந்ததுதான் அதற்குக் காரணம்.

நான் அங்கிருந்து அமைதியாக நழுவ விரும்பினேன், ஆனால் நான் நகர்ந்து கொண்டிருந்ததைக் கவனித்த ராவணன், "பத்ரா," என்று அழைத்தார். நான் திரும்பி அவரைப் பார்த்தேன். ஒரு தனிப்பட்டக் கணத்தை நான் பார்த்துவிட்டிருந்தது குறித்து அவர் கோபமும் தர்மசங்கடமும் கொண்டதை என்னால் பார்க்க முடிந்தது. அவர் என்னைப் பார்க்காமலேயே, "மேகநாதன் எங்கே?" என்று கேட்டார். இளவரசன் எங்கே இருந்தான் என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் இளவரசனும் அதிகாயனும் அங்கதனையும் அவனது ஆட்களையும் துரத்திச் சென்று கொண்டிருந்ததாக யாரோ ஒருவன் பதிலளித்தான்.

"அந்தச் சண்டாளன் உயிரோடு பிடிபட்டால் நன்றாக இருக்கும்," என்று நான் என் மனத்திற்குள் எண்ணிக் கொண்டேன். நான் என் அரசனுக்காக வருந்தினேன். சுக்குநூறாகிப் போயிருந்த தனது மதிப்பின் துண்டுகளை அவர் பொறுக்கியெடுக்க முயற்சித்துக் கொண்டிருந்தார். விரைவில், ஒரு தற்காலிகப் பல்லக்குத் தயாரானது. அரசனும் அரசியும் அதில் அமர்ந்தவுடன், ஆபத்தான அந்தக் காட்டுப் பாதை வழியாக, வீரர்கள் அவர்களை அரண்மனையை நோக்கிக் கொண்டு சென்றனர்.

"ஓர் அசிங்கமான குரங்கு விட்டுவிட்டுச் சென்ற மிச்சத்தை நம் அரசர் இப்போது ருசிக்கப் போகிறார்," என்று ஓர் இளைஞன் ஏளனம் செய்தான். அவனைச் சுற்றி இருந்த பலர் நமுட்டுச் சிரிப்புச் சிரித்தனர்.

"அரசியை அவர் அப்போதே கொன்று போட்டிருக்க வேண்டும். ஒரு குரங்கால் இழுத்துச் செல்லப்பட்டு நிர்வாணப்படுத்தப்பட்ட அவமானத்துடன் அரசி இனி எப்போதும் வாழ வேண்டியிருப்பதைக் கற்பனை செய்து பாருங்கள். அந்தக் குரங்கு மனிதன் அரசிக்கு வேறு என்னவெல்லாம் செய்திருப்பானோ, யாருக்குத் தெரியும்?" என்று இன்னொருவன் கூறினான். இன்னும் ஏராளமான சிரிப்புகளும் சீட்டிகளும் கேட்டன.

"மூர்க்கர்களே, கொஞ்சம் இரக்கத்தோடு நடந்து கொள்ளுங்கள்," என்று ஒரு மூத்த வீரன் அவர்களைப் பார்த்துக் கத்தினான். "அவர் செய்தது உண்மையிலேயே உன்னதமான, சரியான காரியம். இப்படி அவமானப்படுத்தப்பட்ட ஒரு மனைவியை எத்தனை ஆண்கள் ஏற்றுக் கொள்வார்கள்?" இப்போது ஏராளமானோர் பெரிதாகச் சிரித்தனர்.

அந்தக் குழுவின் தலைவன் அவர்கள் அனைவரையும் திரும்பிப் பார்த்து, “இளைஞர்களாகிய உங்களுக்கு எதுவும் புரியாது. தேவர்கள் ஒவ்வொரு நகரமாகச் சூறையாடி அழித்தபோது நீங்கள் பிறந்திருந்தால், இப்போது நீங்கள் இப்படிப் பேசியிருக்க மாட்டீர்கள். தன் மனைவிக்குத் தேவையான நேரத்தில் அவருக்குப் பக்கத் துணையாக நின்று கொண்டிருப்பதற்காக நீங்கள் கேலி செய்து கொண்டிருக்கின்ற இந்த மனிதர்தான் நீங்கள் மதிப்போடு இருப்பதற்குக் காரணம் என்பது நினைவிருக்கட்டும்,” என்று கத்தினான்.

அந்த வயதான வீரனின் பேச்சைத் தொடர்ந்து ஏகப்பட்ட ஏளனக் கருத்துக்களும் கேலிச் சிரிப்புகளும் வெடித்தன. அவர்களைக் கன்னாபின்னாவென்று சபித்தபடி, அந்த வயதான வீரன் அமைதியானான். அவன் கூறியிருந்ததைப் பற்றி நான் சிந்தித்தேன். “அரசன் செய்திருந்தது உண்மையிலேயே ஒரு மாபெரும் விஷயமா? நானும் அதே விஷயத்தைத்தான் செய்திருந்தேன். அந்த அரசன் என் மனைவியைக் கற்பழித்து, என் மகன் அதிகாயனுக்குத் தந்தையானார். ஆனால் அதிகாயனை நான் என் சொந்த மகனைப்போல வளர்க்கவில்லையா? நானும் என் மனைவியைத் தூக்கி வெளியே எறியவில்லையே!” நான் அதைப் பற்றி எவ்வளவு அதிகமாகச் சிந்தித்தேனோ அரசிக்கு நடந்திருந்தது நியாயமானதுதான் என்று அவ்வளவு அதிகமாக நம்பினேன். நான் அரசிக்காக வருந்தினேன், ஆனால் ராவணன், தான் விதைத்திருந்ததை இப்போது அறுவடை செய்து கொண்டிருந்தார். தன் மனைவி கற்பழிக்கப்பட்டிருந்தால்கூட அவளை அவளது கணவன் ஏற்றுக் கொள்வதில் எந்த உன்னதமும் இல்லை. ஆனால் அரசியின் விஷயத்தில் சந்தேகம் இருந்தது. நீங்கள் ஓர் ஆணாக இருந்தால், உங்கள் மனைவிக்கு ஆதரவாக இருக்க வேண்டும், இல்லையென்றால் நீங்கள் ஒரு பன்றிக்குச் சமம். இதில் மகத்துவம் என்ற பேச்சிற்கு இடமில்லை. ஆனால், ஒரு சாதாரண அசுரனிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டத் தரங்களும், அதிகாரத்தில் இருந்தோரிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டத் தரங்களும் வேறுவேறாக இருந்தன. அதிகாரத்தில் இருந்தோர் சண்டாளர்களாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. எனவே, ராவணன் செய்திருந்த காரியம், பிற எந்தவொரு சாதாரண அசுரனைப்போலவே அவரும் விளங்கினார் என்பதை நிரூபித்தது. வினோதமாக, அவர் எங்களைப்போலவே இருந்தார் என்ற எண்ணம் எங்களுக்கு ஆறுதலளிப்பதாக இருந்தது. ராமனுடனான இந்த யுத்தத்தில் அவர் வெற்றி பெற்றால், எங்களுக்கு ஒரு நல்ல எதிர்காலம் உருவாகக்கூடும் என்று நாங்கள் சிறிதளவு நம்பிக்கை கொள்ளலாம்.

நாங்கள் அரண்மனையை நெருங்கியபோது, அரசிக்கு நான்

போர்த்திவிட்டிருந்த சால்வை, பாதையில் தூக்கி எறியப்பட்டிருந்ததை நான் கண்டேன். என்னால் அதை அடையாளம் காண முடியவில்லை. ஏராளமான வீரர்கள் அதன்மீது நடந்தும் மிதித்தும் சென்றிருந்ததில், அது மேலும் கந்தலாகி, ஓர் அழுக்குத் துணியைப்போல ஆகியிருந்தது. துவக்கத்தில், நான் அதைச் சாக்கடைக்குள் உதைத்துத் தள்ளலாம் என்று நினைத்தேன். ஆனால் சிறிது நேர யோசனைக்குப் பிறகு, கீழே குனிந்து நான் அதை எடுத்தேன். அந்த அடக்கமான துணி, அரசர்களுக்கும் அரசியருக்கும் தன் கடமையைச் செய்து முடித்திருக்கக்கூடும், ஆனால் என்னைப் போன்ற ஓர் ஏழைக்கு, அது இன்னும் பயனுள்ளதாக இருக்கக்கூடும். அதைச் சரி செய்து, மீண்டும் என்னால் பயன்படுத்த முடியும். என்னிடம் வேறு சால்வை ஏதும் இல்லாததால், அதை வைத்து நான் சமாளிக்க வேண்டியிருந்தது. அதை நான் கவனமாகத் துவைத்தால், அங்கதர்கள் மற்றும் ராவணர்களின் நாற்றத்தை அது போக்கக்கூடும்.



# 54

## ஒரு லட்சியவாதியின் முடிவு

ராவணன்

சூரியன் மறைந்த நேரத்தில் பிரஹஸ்தனின் உயிரற்ற உடல் அரண்மனைக்குக் கொண்டு வரப்பட்டது. நான் என் மனைவியோடு ஒளிந்து கொண்டிருந்த எனது தனிப்பட்ட நரகத்திலிருந்து நான் வெளியே வந்தபோது, அரசவை அரங்கின் குளிர்ந்த தரையின்மீது அவன் கிடத்தப்பட்டிருந்தான். அவனது உடல் நீலநிறமாக மாறியிருந்தது. அவன் அதிக வயதானவன்போலத் தோன்றினான். ஒரு சாம்ராஜ்யம் குறித்தக் கவலைகள், திட்டமிடுதல் மற்றும் சதித்திட்டம் தீட்டுதல், தடுக்கப்பட்ட லட்சியங்கள், தன்னொழுக்க உணர்வு, தர்மத்தின்படி வாழ வேண்டும் என்ற சாத்தியமற்ற விருப்பம், முற்றிலும் வண்ணமிழந்த ஒரு வாழ்க்கை ஆகியவற்றால் அவன் ஓடாய்த் தேய்ந்து போயிருந்ததுபோலத் தோன்றினான். எனது மிகச் சிறந்த நண்பனும், மிக மோசமான எதிரியுமான அவனுக்காக வந்த ஒரு துளி கண்ணீரை நான் அடக்கிக் கொண்டேன். அவனது உயிரற்ற உடலை நோக்கி நான் சாய்ந்தபோது, என்னையும் அறியாமல் என் கண்களிலிருந்து கண்ணீர்

வழிந்து, தரையின்மீது ஒரு வினோதமான கோலமிட்டது. "யார் இவன்?" நெடுங்காலத்திற்கு முன்பு ஒருமுறை நான் அவனைக் கண்டு பயந்திருந்தேன். அவன் என் அரியணையைத் தட்டிப் பறிக்க முயற்சித்துக் கொண்டிருந்ததாக நான் எப்போதும் நம்பி வந்தேன். என்னிடம் இருக்க வேண்டும் என்று நான் விரும்பிய அனைத்தும் அவனிடம் இருந்தன. என்னுள் இருந்த விலங்கைக் கட்டிப் போட்டு, என்னைக் கட்டுப்பாட்டுடன் வைத்தது அவன்தான். அவன்தான் என் மனசாட்சியாக இருந்தான். நான் ஒரு ராட்சஸனாக ஆவதிலிருந்து என்னைத் தடுத்தவன் அவன்தான். வேறு எதுவொன்றையும்விட அதிகமாக, நான் அவனைக் கண்டு பயந்தேன். அசுரர்களுக்கு அவன் என்னைவிடச் சிறந்த ஒரு தலைவனாக இருந்திருப்பான் என்பதை நான் என் இதயபூர்வமாக அறிந்திருந்தேன்.

அவன்தான் கச்சிதமான அசுரத் தலைவன். மகாபலியின் உண்மையான வாரிசு அவன்தான். அவன் துணிச்சல்காரன், நல்லொழுக்கம் தவறாதவன், நேர்மையானவன், நியாயமானவன், ஒழுக்கக்கேட்டிற்கு உட்படுத்தப்பட முடியாதவன். என்னைப் போலன்றி, ராமன் என்ற பேரழிவுக்கு அவன் அழைப்பு விடுத்திருக்க மாட்டான். சரியான பாதையிலிருந்து அவன் தவறியிருக்க மாட்டான். அவன் ஒரு பரந்த சாம்ராஜ்யத்தை உருவாக்காமல் போயிருக்கக்கூடும், ஆனால் வேதவதியுடன் அவன் முட்டாள்தனமாகக் காதல் வயப்பட்டிருக்க மாட்டான். அசுரர்களுக்காக ஒரு மகளைத் தியாகம் செய்ய அவன் சிறிதுகூடத் தயங்கியிருக்க மாட்டான். ஜோதிடக் கணிப்பு அபத்தமானது என்று அவன் நம்பியிருந்தால், துணிச்சலோடு இவ்வுலகத்திற்கு அதைத் தெரிவித்திருப்பான். ஜனகனிடம் தன் மகளைத் தொலைத்துவிட்டப் பிறகு, பேச்சுவார்த்தையின் மூலமாகவோ அல்லது சண்டையின் மூலமாகவோ துணிச்சலாக அவளைத் திரும்பப் பெற்றிருப்பான். நெடுங்காலத்திற்கு முன்பே அவன் தன் மகளைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்திருப்பான். குரங்கு மனிதர்கள் தன் மனைவியை பலாத்காரம் செய்ய அவன் அனுமதித்திருக்க மாட்டான். ஆனால் . . . அவளுக்கு ஏற்பட்ட அவமானத்திற்குப் பிறகு அவளைத் திரும்ப அழைத்துச் சென்று, பழையபடி அவளை நேசித்திருக்க மாட்டான். நான் செய்திருந்த பலவற்றை அவன் செய்யாமல் போயிருப்பான், ஆனால் அப்படிச் செய்திருந்தால், அவனால் பிரஹஸ்தனாக இருந்திருக்க முடியாது, என்னால் ராவணனாக இருந்திருக்க முடியாது.

என் அரசவையினர் அமைதியாக இருந்தனர். ஜம்புமாலி இடிந்து போயிருந்தான். குழந்தைப்பருவத்திலிருந்தே பிரஹஸ்தன் அவனுடைய நண்பனாக இருந்து வந்திருந்தான். சிந்தனையைப் பொறுத்தவரை,

அவர்கள் இருவரும் ஒரே தலைமுறையைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பழைய நண்பர்கள் இறந்து போகும்போது, அவர்கள் உங்கள் வாழ்விலிருந்து எதையேனும் தங்களுடன் எடுத்துச் சென்றுவிடுகின்றனர். துயரத்தில் இருந்த ஜம்புமாலியை நான் கட்டியணைத்து அவனுக்கு ஆறுதலளிக்க விரும்பினேன். ஆனால் எவரையும் எதிர்கொள்வதற்கான துணிச்சல் என்னிடம் இருக்கவில்லை. நான் யதார்த்தமாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது. அந்தி சாய்வதற்குள் பிரஹஸ்தனின் உடல் தகனம் செய்யப்பட வேண்டியிருந்தது. பிரஹஸ்தனின் அசைவற்ற உடலைக் கட்டிக் கொண்டு, வேறு எவரொருவரையும்விட அவனை நான் அதிகமாக மதித்ததாகவும் நேசித்ததாகவும் அவனிடம் கூற விரும்பினேன். நான் கேட்காமலேயே எனக்கு அறிவுரை வழங்கிய அவனது போக்கும் அசுர தர்மத்தைப் பற்றிய அவனது பேச்சும் எப்போதும் எனக்கு எரிச்சலூட்டியதாகவும் நான் அவனிடம் கூற விரும்பினேன். திடீரென்று எனக்கு அவன்மீது ஓர் ஆழமான வெறுப்பு ஏற்பட்டது. "நீ என்னுடைய அரியணையைக் குறி வைத்தாய். நீ என்னைவிடச் சிறந்த ஓர் அரசனாக இருந்திருப்பாய். ஏனென்றால், நீ என்னைவிடச் சிறந்த மனிதன்," என்ற எண்ணம் எனக்குள் தோன்றியது. அவன் அரசனாக இருந்து, நான் அவனுடைய பிரதம மந்திரியாக இருந்திருந்தால், நான் எப்படி நடந்து கொண்டிருப்பேன்? அதை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. ஏனெனில், நான் அந்தப் பதவியில் நீண்ட காலம் நிலைத்திருந்திருக்க மாட்டேன். நான் என் எஜமானனைத் தீர்த்துக்கட்டிவிட்டு, எனக்குரிய நியாயமான பதவியைக் கைவசப்படுத்தியிருப்பேன். "அதைச் செய்வதற்கு இவனுக்குப் பல வாய்ப்புகள் இருந்தன. அவனால் எனக்கு விஷத்தைக் கொடுத்திருக்க முடியும். எங்களுடைய படையெடுப்புகளின்போது நாங்கள் எங்கள் படுக்கையறைகளைப் பகிர்ந்து கொண்டபோது, என்னைக் குத்திக் கொன்றிருக்க முடியும். நூற்றுக்கணக்கான வழிகளில் அவனால் என்னை ஒழித்துக்கட்டியிருக்க முடியும்." ஆனால் பிரஹஸ்தன் அப்படிச் செய்வான் என்று என்னில் இருந்த சந்தேகப் பேர்வழிகூட நினைக்கவில்லை. நான் அவனைப் பெரிதும் நம்பியிருந்தேன். அவன் தனது சொந்தக் கொள்கைகளுடனும் தர்மத்துடனும் ஆழமாகப் பிணைக்கப்பட்டிருந்தான். அரச பதவியை அடைவதற்கு அவன் அவற்றை ஒருபோதும் விட்டுக்கொடுத்திருக்க மாட்டான். ரத்தக்கறையுடன்கூடிய ஓர் அரியணையைவிட, களங்கமற்ற ஓர் ஆன்மாவை அவன் அதிகமாக மதித்தான்.

நான் எழுந்து நின்றேன். ஓர் இளநிலை நிர்வாக அதிகாரி என்னிடம்

வந்து, என்னைக் குனிந்து பணிந்தான். இறுதிச் சடங்கிற்கான ஏற்பாடுகள் விரைவில் செய்யப்பட வேண்டும் என்று நான் அவனுக்கு உத்தரவிட்டேன். இறுதிச் சடங்குகளைச் செய்வதில் திறன் பெற்றிருந்தவர்கள் ஆக வேண்டியதைப் பார்த்துக் கொண்டனர். என் பிரதம மந்திரியின் உடலின்மீது சிவப்பு வண்ண அசுரக் கொடி போர்த்தப்பட்டு, அவனது பாடை உயர்த்தப்பட்டது. நானும் அதற்குத் தோள் கொடுக்க விரும்பினேன், ஆனால் அது ஒரு பாசாங்குபோலத் தோன்றும் என்பதால் அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். என்ன இருந்தாலும், நான் இன்னும் அரசனாக இருந்தேன். எனவே, பிரஹஸ்தனின் இறுதி ஊர்வலத்தின் பின்னால் நான் அமைதியாக நடந்தேன். சாலையின் இருபுறங்களிலும் மக்கள் அணிவகுத்திருந்தனர். மேல்மாடங்களும் மர உச்சிகளும் மக்களால் நிரம்பி வழிந்தன. யுத்தத்தால் சீரழிந்து போயிருந்த சாலைகளின் ஊடாகவும், ஆயிரக்கணக்கான வன்கொலைகளைப் பார்த்திருந்த தெருக்களின் ஊடாகவும் அந்த ஊர்வலம் வளைந்து சென்றது. என்னுடைய அழகான நகரத்திற்கு நேர்ந்திருந்த நிலைமையைப் பார்த்து நான் அதிர்ச்சியடைந்தேன்.

நான் என் வீட்டிற்குத் திரும்பிச் சென்று தூங்க விரும்பியதால், இந்த இறுதிச் சடங்கு விவகாரம் விரைவாக முடிய வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனாலும் நான் என் கடமையைச் செய்ய வேண்டியிருந்தது. வீழ்த்தப்பட்ட என் நண்பனுக்கும் அன்பான எதிரிக்கும் நான் அதைச் செய்யக் கடமைப்பட்டிருந்தேன். அழுது கொண்டிருந்த கூட்டத்தினரிடையே நான் நடந்து சென்றபோது, அவன் எவ்வளவு பிரபலமாக இருந்திருந்தான் என்பதைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். அவன் ஒருபோதும் மக்களை நேரடியாகச் சென்று சந்தித்ததில்லை. மக்கள் வரவேற்காத பல தீர்மானங்களை அவன் எடுத்திருந்தான். ஆனால் பிரபலமானவற்றைச் செய்வதைவிட, சரியானவற்றைச் செய்வதில் அவன் ஒருபோதும் நிலை பிறழாமல் இருந்தான். அவன் எப்போதுமே நியாயமாக நடந்து கொண்டான். அது எனக்குப் புதிதாக இருந்தது. ஓர் ஆட்சியாளன் என்ற முறையில் நீங்கள் செய்யும் குறுகியகாலப் பிரபலமான விஷயங்களுக்காக மக்கள் உங்களை நேசிப்பதில்லை, மாறாக, நீங்கள் நியாயமாக நடந்து கொள்வதற்காகவே அவர்கள் உங்களை நேசிக்கின்றனர். தங்களுக்கு ஒரு கண்டிப்பான தந்தையைப்போல இருந்த ஒரு மனிதனுக்காக நாடே அமைதியாக அழுதது.

திடீரென்று, கடந்தகாலம் குறித்து நான் பயந்தேன். பிரஹஸ்தனுக்கும் என் அரியணைக்கும் இடையே நின்ற அனைத்தும்,

அவனுடைய நியாய உணர்வும் சரியான காரியத்தை அவன் செய்ததும்தான். பிரஹஸ்தனைக் கடைசியாக ஒருமுறை பார்ப்பதற்கு முண்டியடித்த மக்கள் அனைவரும், ஒருசில மணிநேரத்திற்கு முன்பு தங்களுடைய அன்புக்குரியவர்களைத் தகனம் செய்திருக்கக்கூடும். ஆனாலும், பிரஹஸ்தனுக்கு இறுதி அஞ்சலி செலுத்துவதற்கு இங்கு வருவது அவர்களுக்கு முக்கியமானதாக இருந்தது. பிரஹஸ்தன் இவர்கள் அனைவருக்கும் ஒரே ஓர் அழைப்பு விடுத்திருந்தால், காற்றில் ஓர் இறகைப்போல நான் அடித்துச் செல்லப்பட்டிருப்பேன். ஆனால் பிரஹஸ்தன் ஒருபோதும் அரண்மனையில் வாழ்ந்திருக்கவில்லை. தன்னால் முடிந்தபோதெல்லாம், நகருக்கு வெளியே ஒருசில மைல்கள் தூரத்தில் இருந்த தனது கிராமத்து வீட்டிற்குச் சென்றுவிடுவதை அவன் வழக்கமாகக் கொண்டிருந்தான். கிராமத்துக் காற்று தனக்கு அதிக இதமளித்ததாக அவன் கூறினான். இப்போது அதைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்கும்போது, அவன் தன் குடும்பத்தைப் பற்றி ஒருமுறைகூடக் குறிப்பிட்டதில்லை என்பதும், தன்னுடைய உறவினர்களில் ஒருவரைக்கூட ஓர் அரசாங்க வேலைக்கு அவன் ஒருபோதும் பரிந்துரைத்திருக்கவில்லை என்பதும், என்னைச் சுற்றிலும் இருந்த மற்றவர்களைப் போலன்றி அவன் என்னிடம் எந்தச் சிறிய உபகாரங்களையும் நாடியதில்லை என்பதையும் நான் உணர்கிறேன். அது அவனது அளவுக்கதிகமான அகங்காரம் என்று நினைத்து, அதை நான் வெறுத்தேன். ஆனால் இப்போது, அவனது இறுதி ஊர்வலம் அவனுடைய கிராமத்து வீட்டை நோக்கிப் புறப்பட்டுக் கொண்டிருந்த வேளையில், அவன் தனது உறுதியான நம்பிக்கைகளினால்தான் அவ்வாறு செய்யத் தேர்ந்தெடுத்திருந்தான் என்பதை என்னால் பார்க்க முடிந்தது. அவனது வீடு இருந்த இடம் அவ்வளவு ஆடம்பரமானதாகவோ அல்லது செழிப்பானதாகவோ இருக்கவில்லை, ஆனால் ஒரு கிராமத்து வசீகரம் அதற்கு இருந்தது. மக்களும் நாட்டுப்புறத்தவர்களாக இருந்தனர்.

ஓர் உழவனின் குடிலைப்போலத் தோன்றிய ஒன்றின் முன்னால் அந்த ஊர்வலம் நின்றது. பிரஹஸ்தனின் வீடு அது. அந்தக் குடில் நேர்த்தியாகவும் சுத்தமாகவும் இருந்தது. அதன் ஓலைக்கூரை இதமாகவும் கதகதப்பூட்டுவதாகவும் இருந்தது. முற்றம் தூய்மையாக இருந்தது. அங்கு ஒரு மாட்டுத் தொழுவமும், அருகில் ஒரு கிணறும் இருந்தன. அதோடு, கனிகளுடன்கூடிய ஒருசில மரங்களும் மலர்களுடன்கூடிய கொடிகளும் ஒரு சிறிய செயற்கைத் தடாகமும் அங்கு இருந்தன. என் பிரதம மந்திரி எனது படாடோபமான மாளிகையிலிருந்து தப்பித்து, நாட்டுப்புறத்திலிருந்த இந்த

சொர்க்கத்திற்கு ஏன் வர விரும்பினான் என்பது இப்போது எனக்குப் புரிந்தது. அவன் ஏழ்மையைத் தேர்ந்தெடுத்திருக்கவில்லை, மாறாக, செழிப்பான எளிமையையே அவன் சுவீகரித்திருந்தான். முன்பொரு காலத்தில் நான் வெறுத்தும் பகைத்தும் வந்திருந்த இந்த மனிதனுக்கு இப்படி ஒரு பக்கம் இருந்ததை நான் ஒருபோதும் அறிந்திருக்கவில்லை. அவனுக்கு அஞ்சலி செலுத்துவதற்காகப் பலர் அங்கு கூடினர். அவர்கள் பணக்காரர்களோ அல்லது சமூக அந்தஸ்து மிக்கவர்களோ அல்ல. மாறாக, ஏழைக் கிராமவாசிகளும் சாதாரண அதிகாரிகளுமே பல குழுக்களாக நின்றனர். நான் உள்ளே நுழைய முற்பட்டபோது, திடீரென்று எல்லோரும் மௌனமானார்கள். அவர்களுடைய தனிப்பட்டத் துயரத்திற்குள் நான் குறுக்கிட்டுவிட்டது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. பிரஹஸ்தனைப் போலவே தோன்றிய ஒருவன் வெளியே வந்து என்னைப் பணிந்து வணங்கினான். அவன் பிரதம மந்திரியின் மகன் என்று யாரோ கிசுகிசுத்தனர். நான் அவனுடைய தோளைத் தட்டிக் கொடுத்துவிட்டு உள்ளே நுழைந்தேன். குடிலின் இருட்டில், பெண்கள் துயரத்துடன் குனிந்து உட்கார்ந்திருந்ததை என்னால் உணர முடிந்தது. ஒரு பெண் மெதுவாக எழுந்து நின்று, என்னை நோக்கி நடந்து வந்தாள். அவளது முகத்தில் வெளிச்சம் பட்டபோது, அவள் என் பிரதம மந்திரியின் மனைவி என்பதை நான் அடையாளம் கண்டுகொண்டேன்.

“பிரஹஸ்தனுக்காகவும் உங்கள் குடும்பத்தினருக்காகவும் நான் மிகவும் வருந்துகிறேன்,” என்று நான் கூறினேன். ஆனால் என்னுடைய வார்த்தைகள் எனக்கே மேலோட்டமாக மட்டுமே தோன்றின. அவள் அசையாமல் அங்கேயே நின்றாள். எனக்குச் சற்று அசௌகரியமாக இருந்தது. மரணச் சடங்குகளில் நான் ஒருபோதும் சௌகரியமாக உணர்ந்ததே இல்லை. அவை என்னுடைய சொந்த மரணத்தை எனக்கு நினைவுபடுத்தின. சிதையைத் தயாரிப்பதற்காக, அக்குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் ஒரு பெரிய மாமரத்தை வெட்டிச் சாய்த்தச் சத்தம் எனக்குக் கேட்டது. ஒரு குழந்தை பிறந்தபோது ஒரு மாமரத்தை நடுவது எங்களது அசுர வழக்கமாக இருந்தது. குழந்தையோடு சேர்ந்து அந்த மரமும் வளர்ந்து, அனைத்து உயிர்களுக்கும் அது தன் கனிகளைக் கொடுத்து, இவ்வுலகத்தை ஒரு சிறந்த இடமாக ஆக்கியது. அக்குழந்தை வளர்ந்து பெரியவனாகும்போது, அவனும் இதைப்போலவே செய்ய வேண்டும் என்று அவனிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது. அவனது இறுதிப் பயணத்திற்கான நேரம் வந்தபோது, அந்த மரம் தனது இறுதித் தியாகத்தைச் செய்து, தனது தோழனோடு சேர்ந்து, சிதையின் தீயில் கருகிப் புகையாக மாறிக் காற்றோடு காற்றாக மறைந்தது.

இறுதிச் சடங்கு ஒருவழியாக முடிந்தது. அவனது மரணத்தால் மக்களுக்கு ஏற்பட்டிருந்த துயரம் என்னைப் பொறாமை கொள்ள வைத்தது. ஆனால் அவர்களும் தங்கள் சொந்த வாழ்க்கைக்கும் சொந்த இன்னல்களுக்கும் மெதுவாகக் கலைந்து சென்றனர். வெளியே இருட்டியிருந்தது. வெட்டுக்கிளிகள் சத்தமிட்டுக் கொண்டிருந்தன. எனது சேவகர்கள் எனக்காக வெளியே காத்திருந்தனர். நான் என் மயக்கத்திலிருந்து விடுபட்டு வெளியே வந்தேன். என் இதயம் கனத்திருந்தது. பிரஹஸ்தனின் மனைவிக்கும் அவனது மகனுக்கும் ஒருசில ஆறுதல் வார்த்தைகளைக் கூற நான் விரும்பினேன். "அவனுக்கு ஒரு மகன் மட்டும்தானா அல்லது ஒரு மகளும் இருந்தாளா? எப்படிப்பட்டத் தலைவன் நான்? என் பிரதம மந்திரிக்கு எத்தனைக் குழந்தைகள் என்றுகூடத் தெரியாமல் நான் ஆட்சி செய்திருக்கிறேன். இளமையில் நான் கொண்டிருந்த லட்சியவாதச் சிந்தனைகள் எங்கே போயின? ஓர் அக்கறையுள்ள தலைவன், பரிவும் அன்பும் கொண்ட ஒரு மனிதன் ஆகியோர் குறித்து நான் சுமந்திருந்த யோசனைகள் என்னவாயின? என் பிரதம மந்திரி எந்த ஏழ்மையான சூழ்நிலையில் தன் குடும்பத்தினரைத் தவிக்கவிட்டுச் சென்றிருந்தான்? அவர்கள் உழவர்கள். அவர்கள் இப்போது மிகவும் ஏழ்மையில் இருந்தனர்." குடும்பத் தலைவன் ஒரு சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரியாக இருந்தபோது, எளிமை வசீகரமானதாகத் தோன்றியது. அது அரசியல்ரீதியாக அவனுக்கு அனுகூலத்தைக் கொடுத்திருக்கவும்கூடும். ஆனால், இப்போது அவனுடைய குடும்பத்தினர் பெரும் ஏழைகளாக இருந்தனர். அவர்களுக்கு உதவ வேண்டியது எனது கடமை.

பிரஹஸ்தனின் மகனுக்கு நான் அழைப்பு விடுக்கவிருந்த நேரத்தில், அவன் என் முன்னால் வந்து மரியாதையோடு குனிந்து பணிந்தான். சிறிது தயக்கத்துடன், பட்டுத் துணியால் கட்டப்பட்ட ஒரு மூட்டையை அவன் என் காலடியில் போட்டுவிட்டு, மீண்டும் குனிந்து பணிந்தான். என் காவலாளிகளில் ஒருவன் என்னைப் பார்த்தான். என் ஒப்புதலைப் புரிந்து கொண்டு, அந்த மூட்டையை அவன் என் முன்னால் பிரித்தான். நான் வெகுண்டெழுந்தேன். அசுரச் சின்னம் பொறிக்கப்பட்ட ஒரு தங்கக் காப்பும், தங்க முனைகளைக் கொண்ட புலி நகங்களுடன்கூடிய ஒரு தங்கச் சங்கிலியும், நேர்த்தியாக மடிக்கப்பட்ட ஒருசில பட்டு ஆடைகளும் அந்த மூட்டையில் இருந்தன. பிரஹஸ்தனின் தனிப்பட்டச் சொத்துக்கள் அவை. என் அரசவைக்கு அவன் விஜயம் செய்தபோது அவன் தனக்கு அனுமதித்துக் கொண்ட ஒரே ஆடம்பரம் இவை மட்டுமே.

"என்ன இது?" என்று நான் கர்ஜித்தேன். என் கைகள் என் வாளின்

பிடிவரை சென்றிருந்தன.

அந்த இளைஞன் ஒரு கணம் மௌனமாக நின்றான். நான் அவனை அச்சுறுத்தியிருந்ததுபோலத் தோன்றியது. பிறகு அவன் தன் கண்களை மெதுவாக உயர்த்தி, "அரசே, எங்களை மன்னித்துவிடுங்கள். இது எங்கள் தந்தையின் விருப்பம். இவை எங்களுக்குச் சொந்தமல்ல என்றும், நாட்டு மக்களுக்கே இவை சொந்தம் என்றும் அவர் எங்களிடம் அடிக்கடிக் கூறி வந்தார். அரண்மனைக் காவலாளிகளுக்கான சீருடைகளைப்போலவே, தான் இவற்றை அணிவதற்கு மக்கள் தனக்கு வெறுமனே அனுமதியளித்திருந்ததாக அவர் கூறினார். அவர் தன் பதவியைவிட்டு விலகினாலோ அல்லது தனது பொறுப்பிலிருந்து ஓய்வு பெற்றாலோ அல்லது இறந்து போனாலோ, இவற்றை அரசரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று அவர் கூறினார். நான் வெறுமனே என் தந்தையின் விருப்பத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கிறேன், அவ்வளவுதான்," என்று கூறினான்.

அங்கு ஒரு மயான அமைதி நிலவியது. பிறகு, ஓர் ஓட்டையான ஜாடியிலிருந்து தண்ணீர் ஒழுகுவதைப்போல, என் சீற்றம் கரைந்தோடியது. என் கண்கள் கண்ணீரால் நிரம்பின. பிரஹஸ்தன்தான் அசுரர்களின் பேரரசனாக இருப்பதற்குத் தகுதி வாய்ந்தவனாக இருந்திருந்தான். ஆனால், அவனுக்கு எனது வசீகரம் இருந்ததா என்ன? என்னிடம் இருந்த ஈவு இரக்கமற்றக் குணம் அவனுக்கு இருந்ததா? அவனிடம் இவை அனைத்தும் இருந்திருக்கலாம், ஆனால் இவற்றையெல்லாம் கடந்து வாழ்வதையும் மடிவதையும் அவன் தேர்ந்தெடுத்திருந்தான். எல்லாவற்றுக்கும் மேலாக, இந்த நாடு, அவனை விட்டுவிட்டு என்னைத் தேர்ந்தெடுத்திருந்தது. அதுதான் மோசமான உண்மை. அதை அவனும் அறிந்திருந்தான். நான் அவர்களுடைய அரசனாக ஆகியிருந்தேன். இந்த நாடும் அதன் முட்டாள் மக்களும் பிரஹஸ்தனைப் பெறத் தகுதி படைத்தவர்கள் அல்ல. அவர்களுக்கு நான்தான் சரியானவன். அதைவிட மோசமாக, ஒருசில தங்க நாணயங்களுக்காக, கடல் கடந்து படையெடுத்து வந்த வெள்ளைத்தோல்காரர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் தங்கள் நாட்டை விற்றுவிடக்கூடிய எனது சகோதரன் விபீஷணனைப் போன்ற சுயநலப் பேய்களின்கீழ் வாழ்வதற்குத்தான் இவர்கள் தகுதியானவர்கள்.

பிரஹஸ்தனின் எளிய குடிலிலிருந்து நான் வெளியேறினேன். அவனது வாக்குவாதங்கள், அவனது பிடிவாதம், அவனது அறிவுரை ஆகியவற்றுக்காக நான் ஏற்கனவே ஏங்கத் துவங்கியிருந்தேன். எங்களுடைய இளமைக்காகவும், எங்கள் இருவருக்கும் இடையே

நிலவிய உணர்ச்சிகரமான உறவுக்காகவும் நான் ஏங்கினேன். நான் இந்தப் போரிலிருந்து உயிருடன் வெளியே வந்துவிட்டால், என் சாம்ராஜ்யத்தை மீண்டும் கட்டியெழுப்புவேன். ஆனால் இம்முறை நான் அதிகப் பரிவோடு நடந்து கொள்வேன், அரசாங்க ஊழியர்களிடம் அதிக நேர்மையாக நடந்து கொள்வேன், ஒளிவுமறைவற்ற ஆட்சி நடத்துவேன், அடுக்கதிகார அமைப்புமுறையை ஒழித்துக்கட்டுவேன், மக்களின் நலனுக்கு முன்னுரிமையளிப்பேன். பிரஹஸ்தன் உயிரோடு இருந்தபோது என்மீது ஏற்படுத்தியிருந்த தாக்கத்தைவிட, இறந்த பிறகு இப்போது என்மீது அதிகத் தாக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தான். அவனுடைய தியாகம் வீணாகிவிடக்கூடாது என்று நான் பிரார்த்தித்தேன், ஆனால் எந்தத் தியாகம்தான் வீணாகியிருக்கவில்லை?

லங்கினி. அவள் எங்களுக்குத் துரோகம் இழைத்துவிட்டாள். ஆனால் நான் ஓரளவுக்கு அதை எதிர்பார்த்திருந்தேன். நம்பிக்கைத் துரோகங்கள் இல்லாமல் அசுரர்கள் அசுரர்களாக இருக்க மாட்டார்கள். அதனால்தான், கன்னியாகுமரியின் வஞ்சக ஆளுனரின் உதவியுடன், பிரஹஸ்தன் அனுமானைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று நான் விரும்பினேன். “இவை அனைத்தும் ஒரே நாளில் எவ்வாறு நிகழ்ந்தன? நேற்று, நாங்கள் ஒரு வியத்தகு வெற்றியின் விளிம்பில் இருந்தோம். இன்று, எல்லாமே தலைகீழாகிவிட்டது.”

எனக்கு வந்த அறிக்கைகளில் முழு விபரங்கள் இடம்பெற்றிருக்கவில்லை. ஆனால் அவை அனைத்தும் ஒரே செய்தியைத்தான் கூறின. மோசமான வானிலையால் பிரஹஸ்தன் தாமதிக்க வேண்டியதாயிற்று. அவன் இந்தியாவை அடைவதற்குள், லங்கினி அனுமானோடு ஒரு வியாபாரப் பரிவர்த்தனையை நடத்தி முடித்திருந்தாள். ராமனின் பக்கம் இணைந்து கொள்வதால் லங்கினிக்கு ஏகப்பட்ட நன்மைகள் கிடைக்கவிருந்தன. எனவே, அனுமான் இன்னும் இந்தியாவை வந்தடையவில்லை என்று கூறி, சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளுமாறு பிரஹஸ்தனை அவள் வற்புறுத்தினாள். அவள் பிரஹஸ்தனின் உணவில் போதை மருந்தைக் கலந்து, அவன் மயக்க நிலையில் இருந்தபோது அவனைக் குத்திக் கொன்றிருந்தாள். அதற்குள், தேவ இளவரசர்களுக்கான மூலிகைகளை எடுத்துக் கொண்டு அனுமான் அங்கு வந்திருந்தான். ராமனையும் லட்சுமணனையும் மீட்டெடுப்பதில் அவர்கள் வெற்றி கண்டார்களா என்று எனக்குத் தெரியவில்லை, ஆனால் கொல்லப்பட்ட எனது பிரதம மந்திரியின் உடலை, லங்கினி துணிச்சலாக எனக்கு அனுப்பியிருந்தாள். நான் ராமனைத் தீர்த்துக்கட்டியவுடன், லங்கினியிடம் சில பொருத்தமான கேள்விகளைக் கேட்க வேண்டும் என்று நான் தீர்மானித்தேன்.

போர் எனக்கு வெறுப்பூட்டியது. ஆனால் அதை நிறுத்துவதற்கான அதிகாரம் எனக்கு இருக்கவில்லை. சரியான நேரம் வரும்போது அது தானே நின்றுவிடுமே ஒழிய, அதில் ஈடுபட்டுள்ளவர்களின் விருப்பபடி அது நிற்பதில்லை. பெருமிதம், அதிகாரம், வாழ்க்கை, கௌரவம் என்று, தன் வழியில் குறுக்கிடும் எல்லாவற்றையும் அது அழித்துவிடும்.

நான் அரண்மனையை அடைந்தபோது இருட்டியிருந்தது. கடலிலிருந்து வந்த குளிரான உப்புக் காற்றில் தீப்பந்தங்கள் படபடவென்று சத்தமிட்டன. வானம், ஓட்டைகள் நிரம்பிய ஒரு மையிருட்டுப் போர்வையைப்போல இருந்தது. அந்த ஓட்டைகளின் ஊடாக நட்சத்திரங்கள் மினுமினுத்து மறைந்து மீண்டும் பிரகாசமாக ஒளிர்ந்தன. எனக்குக் களைப்பாக இருந்தது, ஆனால் என் படுக்கையறைக்குச் சென்று என் மனைவியை எதிர்கொள்ள எனக்குத் தயக்கமாகவும் இருந்தது. அதற்குப் பதிலாக நான் என் மகளைப் பார்க்கப் போனேன். இரவு மிகவும் குளிராக இருந்தது. அசோக மரத்தின் அடியில் அவள் தனியாக இருந்தாள். அங்குதான் அவள் இன்னும் வாழ்ந்து வந்தாள். நான் என் மகன்கள் மேகநாதனையும் அக்ஷய குமாரனையும் அதிகாயனையும்கூட நினைத்துப் பார்த்தேன். ராமன் இறந்திருக்க வேண்டும் என்றும், அந்தக் குரங்கு மனிதர்கள் தங்கள் வன சாம்ராஜ்யத்திற்குத் திரும்பிச் சென்றிருக்க வேண்டும் என்றும் நான் ஆசைப்பட்டேன். எல்லாச் சிந்தனைகளும் ஒரு கணம் நின்றபோது, ஒரு பேரானந்தம் அங்கு தலைதூக்கியது.

தொலைதூரத்தில் இருட்டில் ஒளிந்திருந்த அந்தக் குட்டித் தீவிலிருந்து உற்சாகக் கூக்குரல்கள் எழுந்தது எனக்குக் கேட்டது. என் கேள்விக்கான விடை எனக்குக் கிடைத்தது. ராமன் உயிரோடு இருந்தான். அடுத்த நாள் அவன் வன்மத்துடன் என்னைத் தாக்குவான். ஆனால், ஒரு விதத்தில் அந்த எண்ணம் எனக்கு ஆறுதலளித்தது. உணர்ச்சியற்றுப் போயிருந்த என் ஆன்மாவைச் சுத்திகரிக்கும் ஒன்றாக இந்த யுத்தம் அமைந்தது. ஒரு வழியில் இல்லாவிட்டால் இன்னொரு வழியில், அது விரைவில் தீர்மானிக்கப்பட்டுவிடும்.

ஒரு காவலாளி என் முன்னால் வந்து பணிந்துவிட்டு, “அரசே, இளவரசன் கும்பகர்ணன் விழித்துவிட்டார். அவர் உங்களைப் பார்க்க அனுமதி கோரி நிற்கிறார்,” என்று கூறினான். நான் என் தலையசைத்து அனுமதியளித்தேன். கும்பகர்ணன் நடந்து உள்ளே வந்தான். நான் அவனுடைய முகத்தைப் பார்த்தக் கணத்தில், பெரும் பிரச்சனை எழவிருந்ததை நான் அறிந்தேன்.



# 55

## கும்பகர்ணனின் தாக்குதல்

பத்ரன்

ராமனும் லட்சுமணனும் ஏதோ அதிசயமான வானர மருந்தால் காப்பாற்றப்பட்டனர். எங்கள் இதயங்களில் எழுந்திருந்த சிறு நம்பிக்கைத் துளி மறைந்தது. கோட்டைக் கதவுகள் திறந்து, ராமனையும் அவனது குரங்குப் படையினரையும் மீண்டும் எதிர்கொள்வதற்கு ஏராளமான அசுரர்கள் படைதிரண்டு சென்றபோது, எழுந்து நிற்கக்கூட சக்தியில்லாமல் நான் அமைதியாகக் கவனித்தேன். அவர்களுக்கு மத்தியில் ஓர் உயரமான யானையின்மீது இளவரசன் கும்பகர்ணன் அமர்ந்து சென்றான். இந்த அணிவகுப்பு வித்தியாசமானதாக இருந்தது. பெரும்பாலான படைவீரர்களிடம் வில்களோ, அம்புகளோ, அல்லது வாள்களோ இருக்கவில்லை. முன்னால் சென்ற அணியினர், கூரிய முனைகளுடன்கூடிய நீளமான மூங்கில் கம்புகளைச் சுமந்து சென்றனர். அவர்களுக்குப் பின்னால் கும்பகர்ணன் சென்றான். அவனுடன் ஒரு பெரிய யானைப்படை சென்றது. இம்முறை அந்த அணிவகுப்பில் குதிரைகள் எதுவும் இடம்பெறவில்லை. இலங்கையின் மென்மையான,

வெள்ளை வெளேரென்று இருந்த மணற்கடற்கரைகளில் அவை பயனற்றவையாக இருந்தன. அசுரர்களின் தற்காப்பில் இருந்த பலவீனத்தைக் கும்பகர்ணன் ஒரே நாளில் கண்டுபிடித்திருந்தான். அசுரர்கள் இந்தியாவின் சமவெளிகளில் எப்படிப் போரிட்டிருப்பார்களோ, அதுபோல அவர்கள் இந்த யுத்தத்திலும் சண்டையிட்டு வந்திருந்தனர். கும்பகர்ணன் தேர்ந்தெடுத்திருந்தது ஒரு நல்ல தற்காப்பு உத்தி. திடீரென்று உற்சாகம் என்னைப் பற்றிக் கொண்டது. வரவிருந்த ஆபத்தைப் பற்றிக் கவலைப்படாமல், படைதிரண்டு சென்று கொண்டிருந்த வீரர்களுடன் நானும் சேர்ந்து கொண்டேன். கும்பகர்ணன் அந்த யுத்தத்தை எதிரியின் முகாமிற்கு எடுத்துச் சென்று கொண்டிருந்தான்.

பொதுமக்கள் பலரும் ராவணனின் படையில் சேர்ந்திருந்ததை நான் கண்டேன். எனக்குப் பரிச்சயமானவர்கள் ஒருசிலரும் அதில் இருந்தனர். தங்களோடு இணைந்து கொள்ள அவர்கள் எனக்கு அழைப்பு விடுத்தனர். அது சுத்த முட்டாள்தனமான காரியம், ஆனாலும் நான் அவர்களோடு சேர்ந்து கொண்டேன். எங்களுக்குப் பின்னால் மைல் கணக்கில் அசுரப் படை நீண்டிருந்தது. குதிரைகளின்மீது இரண்டு பளபளப்பான உருவங்கள் வந்து கொண்டிருந்ததை அப்போதுதான் நான் பார்த்தேன். சூரியன் அவர்களுக்குப் பின்னால் இருந்ததால், அவர்களுடைய முகங்களை என்னால் பார்க்க முடியவில்லை.

"அவர்கள் இருவரும் இளவரசன் மேகநாதனும் அவனுடைய வேலைக்காரனும்தான்," என்று என்னுடன் வந்த ஒருவன் கூறினான். அவன் பகுதிநேரச் சவரத் தொழிலாளியாகவும், என் வீட்டின் அருகில் இருந்த தெருக்கோவிலின் பூசாரியின் உதவியாளனாகவும் இருந்தான். அவன் தன் கையில் சுமந்து கொண்டிருந்த கல் உருட்டுக்கட்டை அவனுக்கு மிகப் பெரியதாக இருந்தது. இளவரசன் மேகநாதன் ஒரு வெள்ளைக் குதிரையின்மீது வந்தான். அதிகாயன் விசுவாசத்துடன் ஒரு கருப்புக் குதிரையின்மீது அவனைப் பின்தொடர்ந்தான். அசுரர்களின் பிரகாசமான கருப்பு உடல்களுக்கு நடுவே இவர்கள் இருவரும் தனித்து நின்றனர். அவர்களுடைய ஆபரணங்கள் வெயிலில் ஒளிர்ந்தன. "வானர வில்வீரர்களுக்கு இவர்கள் சுலபமான குறியாக இருந்தார்கள். இளைஞர்களால் இதைவிட அதிக முட்டாள்தனமாக இருக்க முடியுமா?" என்று நான் என் மனத்திற்குள் நொந்து கொண்டேன். நான் என் மகனையும் இளவரசனையும் நோக்கி ஓட முயற்சித்தேன், ஆனால் முன்னேறிக் கொண்டிருந்த வீரர்கள் என்னை முன்னால் இடித்துத் தள்ளினர்.

வானரர்களின் நீண்ட படை, கடல்வரை நீண்டிருந்ததை என்னால்

பார்க்க முடிந்தது. அவர்கள் மீண்டும் கட்டியிருந்த பாலத்தின்மீது இன்னும் அதிகமான வானரர்கள் இருந்தனர். வருணனின் கப்பல்கள் தொடுவானம்வரை நீண்டிருந்தன. கடற்கரையில் எல்லா இடங்களிலும் வானரர்கள் கத்திக் கொண்டும் பெருங்கூச்சல் போட்டுக் கொண்டும் இருந்தனர். கப்பல்களிலிருந்து இறக்கப்பட்டுக் கொண்டிருந்த படகுகளிலும் அவர்கள் இருந்தனர். வருணனின் கப்பலில் இருந்து எறியப்பட்ட நெருப்பு முனையுடன்கூடிய அம்பு ஒன்று எல்லோருடைய தலைகளுக்கும் மேலாகச் சென்றது. ஆட்கள் அலறினர். செங்குத்துப் பாறையின்மீது இருந்த மரங்களின்மீது நிலைப்படுத்தப்பட்டிருந்த அசுர வில்வீரர்கள், கடற்கரையில் வந்து இறங்கிக் கொண்டிருந்த வானரர்கள்மீது அம்பு மழை பொழிந்தனர். பல வானரர்கள் வீழ்ந்தனர், ஆனால் வெட்டுக்கிளிகளைப்போல அவர்கள் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தனர்.

எங்கள் படையினர் கடற்கரையில் இருந்த ஒரு வெற்றிடத்தை அடைவதற்கு முன்பு, கும்பகர்ணன், எல்லோரையும் நிற்கும்படி கூறினான். பிறகு வேகவேகமான உத்தரவுகள் கொடுக்கப்பட்டன. அங்கு ஏகப்பட்டக் குழப்பம் நிலவியது. படைத் தலைவர்கள் தங்கள் வீரர்களுக்கு உரத்தக் குரலில் பல்வேறு கட்டளைகளைப் பிறப்பித்தனர். எல்லோரும் ஒருவரையொருவர் இடித்துத் தள்ளினர். ஆனால் இறுதியில், எங்கள் படை வெற்றிடத்திற்குப் போகாமல், மரங்களின் பாதுகாப்பில் ஒரு வளைவுபோலப் பரவி நின்றது. அசுரர்கள் காத்திருந்தனர். வெற்றிடத்தின் ஓரத்தில், யானைகள் தமது துதிக்கைகளில் பெரிய மரக்கட்டைகளையும் மரங்களையும் தாங்கி நின்றன. மேகநாதன் தன் குதிரையின்மீது இருப்புக் கொள்ளாமல் தவித்ததையும், எல்லோரையும் இடித்துத் தள்ளிக் கொண்டு அவன் படைத் தளபதியை நோக்கி விரைந்ததையும் என்னால் பார்க்க முடிந்தது. இறுதியில், இளவரசன் கும்பகர்ணனை அவன் வெற்றிகரமாகச் சென்றடைந்தான். அதிகாயனும் விசுவாசத்துடன் அவனைப் பின்தொடர்ந்தான்.

திடீரென்று, அசுரப் படையினரின் முணுமுணுப்பு அடங்கியது. இரண்டு இளவரசர்களும் விவாதித்துக் கொண்டிருந்தனர். கும்பகர்ணன் மேலும் மேலும் எரிச்சலடைந்தான், ஆனால் மேகநாதன் தன் சிற்றப்பாவைப் பார்த்துக் கத்திக் கொண்டே இருந்தான். அதிகாயனும் அவனோடு சேர்ந்து கொண்டு கும்பகர்ணனை அவதூறாகப் பேசினான். மேகநாதன் உடனடியாகத் தாக்குதல் நடத்த விரும்பினான், ஆனால் கும்பகர்ணனிடம் ஒரு திட்டம் இருந்தது. ஆனால் அது அவ்வளவு பிரமாதமான திட்டமல்ல என்று மேகநாதன் நினைத்தான். அவன்

கும்பகர்ணனை ஒரு கோழை என்றும் ஒரு மூதாட்டி என்றும் அழைத்தான். பதிலுக்கு, மேகநாதனையும் அதிகாயனையும் கைது செய்யும்படி கும்பகர்ணன் தன் ஆட்களுக்கு உத்தரவிட்டான். சூழ்நிலை மிகவும் மோசமாகியது. கும்பகர்ணனின் ஆட்கள் தங்கள் வாள்களை உருவிக் கொண்டு மேகநாதனையும் அதிகாயனையும் சூழ்ந்தனர். மேகநாதனின் ஆட்கள் தங்கள் தலைவனை நோக்கி விரைந்து வந்தனர். விரைவில், அந்தச் சண்டை, ஒட்டுமொத்தப் படைக்கும் பரவியது. தேவர்கள் தோற்கடிக்கப்படுவதை அசுரர்கள் விரும்பவில்லைபோலும். நான் உடனடியாக அங்கிருந்து வெளியேற விரும்பினேன்.

அந்தக் கணத்தில்தான், ஒருசில வானர வீரர்கள் காட்டிற்குள்ளிருந்து வேகமாக வெளியே வந்தனர். வானரத் தளபதியான ஜாம்பவான், காட்டிற்குள்ளேயே இருக்குமாறு அவர்களைப் பார்த்துக் கத்தினார். ஆனால் இளவரசன் அங்கதன் அந்த முட்டாள்தனமான தாக்குதலை நடத்திக் கொண்டிருந்ததை நான் கண்டேன். “வயதான மற்றும் அதிக அனுபவம் வாய்ந்த வீரர்கள் கூறுவதை எதிர்த்து, இளைஞர்கள் ஏன் முட்டாள்தனமான காரியங்களைச் செய்தனர்?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். வானரர்கள்மீது தாக்குதல் நடத்தும்படி கும்பகர்ணன் தன் ஆட்களுக்கு உத்தரவிட்டபோது, அதுவரை நிகழ்ந்து வந்த உட்போர் நின்றது. யானைகள் தம் துதிக்கைகளில் மரக்கட்டைகளுடன் முன்னேறின. நம்ப முடியாத வேகத்தில் வானரப் படையை நோக்கி அவை விரைந்தன. ஒருசில நிமிடங்களுக்கு முன் பெரும் உற்சாகத்துடனும் துணிச்சலோடும் இருந்த அங்கதனும் அவனது ஆட்களும் நிலைதடுமாறி, தங்கள் உயிர்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஓடினர். ஆனால் பேராற்றல் வாய்ந்த மலைகளைப்போல இருந்த யானைகள், அயராது முன்னேறி, வானரப் படையினரைத் தமது கால்களால் மிதித்துச் சவட்டியபடி முன்னோக்கிச் சென்றன. பீதியடைந்த வானரர்கள் கடலை நோக்கி ஓடினர். பின்னாலிருந்து, அசுரக் காலாட்படையினர் அவர்களை நோக்கி முன்னேறி, தப்பி ஓட முயற்சித்துக் கொண்டிருந்த வானரர்களைத் தங்களது உருட்டுக்கட்டைகளால் அடித்துக் கொன்றனர்.

வானரப் படைகளில் யானைகள் பெருத்தச் சேதத்தை ஏற்படுத்தின. நீண்ட மூங்கில் கம்புகளைச் சுமந்து வந்திருந்த அசுர வீரர்கள், அவற்றைக் கொண்டு வானர வீரர்களின் உடல்களை துளைத்தனர். விரைவில், அந்தக் குரங்கு மனிதர்கள் பீதியும் பரிதவிப்பும் அடைந்தனர். தப்பி ஓடிக் கொண்டிருந்த வானரர்கள்மீது செங்குத்துப் பாறையின்மீதிருந்து பெரிய பாறாங்கற்கள் உருட்டிவிடப்பட்டன. ஒரு யானை அங்கதனைப் பிடித்துத் தூக்கி எறிந்ததில், அவன், தப்பியோடிக்

கொண்டிருந்த தனது வீரர்களுக்கு மத்தியில் போய் விழுந்தான். தன் சொந்த வீரர்களின் கால்களில் மிதிபட்டு அவன் இறந்திருக்கக்கூடும், ஆனால் அவன் எப்படியோ சமாளித்து எழுந்து, யுத்தக்களத்திலிருந்து புறமுதுகிட்டு ஓடிக் கொண்டிருந்த தனது குதிரைவீரன் ஒருவனை இழுத்துக் கீழே தள்ளிவிட்டு, அவனுடைய குதிரையின்மீது ஏறி, தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கோழைத்தனமாக ஓடியதை நான் வெறுப்புடன் பார்த்தேன். குதிரையின்மீதிருந்து இழுத்துக் கீழே தள்ளப்பட்டவன், மற்றக் குதிரைகளின் கால்களில் மிதிபட்டு இறந்து போனதையும் நான் கண்டேன்.

கப்பல்கள் இப்போது பின்னோக்கி மிதக்கத் துவங்கியதால், அவற்றிலிருந்து எறியப்பட்ட, நெருப்பு முனையுடன்கூடிய அம்பு மழை நின்றது. நிலத்தின்மீதும் கடலின்மீதும் நடந்த அந்த யுத்தத்தில் அசுரர்கள் அன்று ஒரு சாதகமான நிலையை எட்டியிருந்தனர். நான் முன்னால் சென்று போரிடவில்லை. வானரர்கள் அசுரர்களின் அம்புகளில் அடிபட்டுக் கைகால்களை இழந்ததையும், யானைகளின் கால்களில் மிதிபட்டு இறந்ததையும் நான் பார்த்தேன். மதியத்திற்குள், அசுரர்கள் ராமனின் பாலம்வரை முன்னேறி, தப்பிச் சென்று கொண்டிருந்த வானரர்களைத் துரத்திக் கொண்டிருந்தனர். அனுமானால் உற்சாகத்துடன் வழிநடத்தப்பட்ட ஒரு சிறு வானரக் குழு மட்டும்தான் ராமனுக்கும் அவனுடைய ஒட்டுமொத்தப் படையின் அழிவுக்கும் இடையே எஞ்சியிருந்தது. அனுமான் தன் ஆட்களைத் திறமையாகக் கட்டுப்படுத்தவும் பயன்படுத்தவும் செய்தான். அவர்கள், பெரிய முரசுகளைக் கொண்டு உரத்தச் சத்தத்தை ஏற்படுத்தி, அசுரர்களின் யானைகளுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தினர். அதே சமயத்தில், யானைகளின்மீது அமர்ந்து வந்த வீரர்கள்மீது குறி வைத்து அம்புகளையும் எறிந்தனர்.

மேகநாதன் எங்கே போயிருந்தான் என்று நான் வியந்தபோது, காற்றைக் கிழித்துக் கொண்டு ஒரு வினோதமான சத்தம் வந்தது. அந்தச் சத்தம் வேகமாக அதிகரித்தது. ஒருவரையொருவர் வெட்டிக் கொல்வதை நிறுத்திவிட்டு, பலர் உண்மையிலேயே மேலே பார்த்தனர். இளவரசன் மேகநாதன், மயனின் புஷ்பக விமானத்தில் அந்தக் கூட்டத்தினருக்கு மேலே மிகத் தாழ்வாகப் பறந்து கொண்டிருந்தான். அந்த இயந்திரத்தின் பெரிய இறக்கைகள் வேகமாகச் சுழன்று, மணலையும் நீரையும் தெறிக்கச் செய்தன. அதிகாயனும் அந்த இயந்திரத்தில் இருந்ததை நான் பார்த்தேன். அவர்கள் இருவரும், நெருப்பு முனையுடன்கூடிய அம்புகளை வானரர்களை நோக்கி எறிந்து கொண்டிருந்தனர். சில அசுரர்கள் தங்கள் கதாநாயகனை உற்சாகப்படுத்தினர், ஆனால்

கும்பகர்ணனின் முகம் கோபத்தில் சிவந்ததை நான் கண்டேன். அவன் எதையோ கத்தினான், ஆனால் யாருக்கும் அது கேட்கவில்லை. அவன் புஷ்பக விமானத்தை நோக்கித் தன் கைகளை வேகமாக ஆட்டினான், ஆனால், மேகநாதன் அந்த இயந்திரத்தைக் கும்பகர்ணனின் மகுடத்திற்கு வெகு அருகே கொண்டு வந்து வட்டமிட்டான். கும்பகர்ணன் தனது யானைகளைக் கட்டுப்படுத்த முயற்சித்தான். அவை பீதியடைந்து இருந்தன. தமது மாவுத்தர்களின் கட்டளைகளின்படிச் செயல்பட அவை மறுத்தன.

மேகநாதனும் அதிகாயனும் எறிந்த அம்புகள் பல வானரர்களைக் கொன்றன. ஆனால், வானத்தில் நடந்து கொண்டிருந்த இந்தக் கண்கொள்ளாக் காட்சியைப் பார்ப்பதில் அசுரர்கள் மும்முரமாக இருந்தபோது, தாக்குதலின் வேகம் கணிசமாகக் குறைந்தது. அப்போதுதான் பேரழிவு வந்து தாக்கியது. புஷ்பக விமானத்திலிருந்து ஒரு வினோதமான சத்தம் வந்தது. அதன் காற்றாடிகளின் சுழற்சி மெதுவானது. பிறகு பாலத்திற்கு அருகே அது ஒரு கல்லைப்போலத் தண்ணீருக்குள் விழுந்தது. அது ஒருமுறை நீரில் மூழ்கிவிட்டு, மீண்டும் மேற்பரப்பிற்கு வந்தது. என் இதயம் தளர்ந்து போனது. "அதிகயா!" என்று அது அலறியது. நான் வேகமாக முன்னால் ஓடினேன், ஆனால் அந்தக் காட்சியைக் காண விரைந்து கொண்டிருந்த பலசாலிகள் என்னைப் பின்னுக்குத் தள்ளினர்.

எனக்கு ஒரு தெளிவான காட்சி கிடைத்தபோது, மேகநாதன் எப்படியோ சமாளித்து அந்தப் பாலத்தின்மீது ஏறி, தனது விமானத்தை மேலே இழுக்க முயற்சித்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தன் வாய்ப்பைக் கண்டுகொண்ட அனுமான், முன்னால் சென்று இளவரசனைச் சிறைபிடிக்குமாறு தன் ஆட்களுக்கு ஆணையிட்டான். அதிகாயன் தட்டுத்தடுமாறி அந்தப் பாலத்தின்மீது ஏறி, விமானத்தை உயரே தூக்குவதற்கு இளவரசனுக்கு உதவ முயற்சித்தான். மேகநாதனைக் காப்பாற்ற இளவரசன் கும்பகர்ணன் முன்னால் விரைந்தான். ஆனால் அனுமான் மேகநாதனைப் பிடிப்பதற்குள் தான் அங்கு சென்று அவனைக் காப்பாற்றிவிட வேண்டும் என்ற துடிப்பில், அவன் தன் படையினரிடமிருந்து சிறிது தூரம் தள்ளி வந்துவிட்டிருந்தான். கும்பர்கர்ணின் யானைக்கும் மேகநாதனுக்கும் இடையே வெறும் பத்தடி தூரம் மட்டுமே இருந்தது. அப்போது, இரும்பு முனையுடன்கூடிய ஓர் அம்பு அவனுடைய யானையின் தலையைத் துளைத்து, அதன் மூளைக்குள் இரண்டடி தூரம் நுழைந்தது. அதன் பெரிய உடல் ஆக்ரோஷமாகக் குலுங்கியது. அது பெரிதாக அலறிக் கொண்டே கீழே சரிந்ததில், அதன்மீது இருந்த கும்பகர்ணன் வெகு

தூரம் தள்ளித் தூக்கி எறியப்பட்டான்.

அம்புகள் மேகநாதனையும் அதிகாயனையும் வேகமாக உரசிக் கடந்து சென்றன, ஆனால் அதிர்ஷ்டவசமாக, அவர்களை எதுவும் தாக்கவில்லை. அவர்கள் இருவரும் ஒருவழியாக அந்த விமானத்தைத் தூக்கிப் பாலத்தின்மீது ஏற்றி, தங்களைத் தற்காத்துக் கொள்வதற்கு அதைப் பயன்படுத்திக் கொண்டனர். பல அம்புகள் அந்த இயந்திரத்தைத் தாக்கின, சில அதையொட்டி வேகமாகக் கடந்து சென்றன. கும்பகர்ணன் தன் உருட்டுக்கட்டையை எடுப்பதற்காக, இறந்து போன தனது யானையை நோக்கி ஓடினான். வானரர்களின் பலமான தோள்கள்மீது அமர்ந்திருந்த ராமனும் லட்சுமணனும் கும்பகர்ணன்மீதும் மேகநாதன்மீதும் அம்புகளைப் பொழிந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. தங்கள் கண்களுக்கு முன்னால் நிகழ்ந்து கொண்டிருந்தவற்றை நம்ப முடியாமல் அதிர்ச்சியடைந்த அசுரப் படையினர் தயங்கினர். கும்பகர்ணன் தனது யானைக்கு அடியிலிருந்து தனது உருட்டுக்கட்டையை வெளியே இழுக்க முயற்சித்துக் கொண்டிருந்த நேரத்தில், அனுமானும் அவனது ஆட்களும் மேகநாதனிடமிருந்து ஒருசில அடி தூரத்தில்தான் இருந்தனர்.

நெருப்பு முனையுடன்கூடிய அம்புகளை யானைகளைக் குறி வைத்து எறியுமாறு தன் ஆட்களுக்குக் கட்டளையிடுவதற்கு, அந்த வஞ்சக முதியவனான ஜாம்பவான் அந்தக் கணத்தைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்தியதை, என்னுள் அதிகரித்துக் கொண்டிருந்த பீதியின் ஊடாக நான் கவனித்தேன். கடற்கரையின்மீது யானைகள் பலமான சுவர்களைப்போல நகர்ந்ததால், அவற்றைச் சுலபமாகக் கட்டுப்படுத்த முடிந்தது. ஆனால், கீழே கடல் கோபத்தோடு கூத்தாடிக் கொண்டிருக்க, யானைகள் ஒன்றன்பின் ஒன்றாக வர வேண்டியிருந்த அந்தக் குறுகலான பாலத்தின்மீது, அவற்றைக் கையாள்வது சிரமமானதாக இருந்தது. நெருப்பு முனையைக் கொண்ட ஓர் அம்பு ஒரு யானையைத் தாக்கியபோது, அது பீதியடைந்து, பின்னால் திரும்பி வேகமாக ஓடியதில், தனக்கு எதிரே இருந்த யானையின்மீது அது மோதியது. அந்த இரண்டாவது யானையும் பீதியடைந்தது. விரைவில், அசுரப் படையில் ஒட்டுமொத்தக் குழப்பம் தாண்டவமாடியது. யானைகள் பித்துப்பிடித்து, தம் வழியில் இருந்த அனைத்தையும் சிதைத்துத் தறிகெட்டு ஓடின. வானரர்களை நோக்கி ஓடிய ஒருசில யானைகளிடமிருந்து மேகநாதனும் கும்பகர்ணனும் மயிரிழையில் தப்பினர். ஆனால் பீதியடைந்திருந்த பெரும்பாலான யானைகள் அசுரர்களை நோக்கியே ஓடின. ஒருசில யானைகள் தண்ணீருக்குள் விழுந்தன.

நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடி, ஒரு தென்னை மரத்தின்மீது ஏறிக் கொண்டேன். கீழே, இரண்டு படையைச் சேர்ந்தவர்களும் ஒருவரோடு ஒருவர் சண்டையிடுவதற்குப் பதிலாக, அவர்கள் அனைவருமே விலங்குகளோடு சண்டையிட்டனர். அப்போது ராமனின் பாலம் ஒரு பெரும் சத்தத்துடன் உடைந்தது. மேகநாதனும் அதிகாயனும் கும்பகர்ணனும் ஆயிரக்கணக்கான எதிரிகள் தங்களுக்கு எதிரே நிற்க, எதிரியின் பக்கத்தில் மாட்டிக் கொண்டனர். தங்கள் பக்கமாக வந்த ஒருசில யானைகளை வானரர்கள் வெட்டிச் சாய்த்தனர். கும்பகர்ணன் தனது உருட்டுக்கட்டையைத் தனது யானைக்கு அடியிலிருந்து வெற்றிகரமாக உருவி எடுத்துக் கையில் ஏந்தியபடி, அனுமானின் ஆட்களுக்கும் மேகநாதன் மற்றும் அதிகாயனுக்கும் இடையே நின்றான். அசுரப் படை, ஒழுங்கு குலைந்து போய் அங்குமிங்கும் ஓடியது. மேகநாதனும் அதிகாயனும் தங்களது பறக்கும் இயந்திரத்திற்குள் ஏறி, அதைப் பறக்க வைக்க முயற்சித்துக் கொண்டிருந்ததைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். “அவர்கள் தங்கள் சிற்றப்பனைக் காப்பாற்ற முயற்சிக்கவில்லை!” என்று நான் எனக்குள் கூறிக் கொண்டேன். அனுமானுடைய ஆட்களின் தலைகளைச் சிதைப்பதற்காகத் தனது உருட்டுக்கட்டையுடன் முன்னேறிக் கொண்டிருந்த கும்பகர்ணன், தன்னை நோக்கி எய்யப்பட்ட ஒருசில அம்புகளைத் தவிர்த்தவாறு தொடர்ந்து முன்னேறினான்.

கும்பகர்ணன் அவர்களுக்கு மிகவும் அருகில் சென்றுவிட்டான். ராமனுக்கும் லட்சுமணனுக்கும் மற்ற வில்வீரர்களுக்கும் கும்பகர்ணன்மீது அம்புகள் எய்வதற்குப் போதுமான தூரம் கிடைக்கவில்லை. அவன் அவர்களோடு கிட்டத்தட்ட ஒன்றுகலந்திருந்தான். வானரர்கள் தங்களுடைய வாள்களை உருவுவதற்கு முன்பு அல்லது தங்கள் அம்புகளைக் குறி வைப்பதற்கு முன்பு, அவன் தனது பெரிய உருட்டுக்கட்டையைக் கொண்டு அவர்களுடைய தலைகளைச் சிதைத்து அவர்களுடைய மண்டை ஓடுகளைச் சுக்குநூறாக்கினான். பேராற்றல் வாய்ந்த அந்த வானரப் படையை அந்தக் குறுகலான பாலத்தின்மீது அவன் தனியொருவனாகக் கையாண்டான். கும்பகர்ணனைச் சூழ்ந்து கொண்டு அவனைப் பின்னாலிருந்து தாக்குமாறு படகுகளில் இருந்த தனது ஆட்களைப் பார்த்து ஜாம்பவான் கத்தினான். ஆனால் சில அசுர வீரர்கள் சுதாரித்துக் கொண்டு, ஜாம்பவானின் படகுகள் கும்பகர்ணனை நெருங்காதவாறு பார்த்துக் கொண்டனர். யுத்தம் கடலில் மீண்டும் துவங்கியது. வருணனின் கப்பல்கள் திரும்பி வந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. தூரத்தில் கட்டுமரங்கள் கடலுக்குள் இறக்கப்பட்டன.

அவை கரையை நோக்கி வேகமாக வந்தன. “நம்மால் எவ்வளவு நேரம் தாக்குப்பிடிக்க முடியும்? அந்த முட்டாள் மேகநாதன் தன் திறமையைத் தம்பட்டம் அடித்ததால் அதிர்ஷ்டங்கள் எவ்வளவு வேகமாக மாறியிருந்தன!” என்று நான் என் மனத்திற்குள் நினைத்துக் கொண்டேன்.

அதற்குள், வானர அரசனான சுக்ரீவனும் அனுமானும் தங்களுடைய பெரிய இரும்பு உருட்டுக்கட்டைகளைச் சுமந்து கொண்டு தங்கள் படையினரை விலக்கிக் கொண்டு முன்னால் வந்தனர். எதிரிப் படையின் தலைவனை நான் தேடினேன். “ராமனும் லட்சுமணனும் எங்கே போனார்கள்?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அவர்கள் மாயமாய் மறைந்துவிட்டிருந்ததுபோல இருந்தது. பறக்கும் இயந்திரத்தின் காற்றாடிகள் மெதுவாகச் சுழலத் துவங்கி, பிறகு நின்றுவிட்டன. பிறகு மீண்டும் சுழலத் தொடங்கி, ஒருசில கணங்களுக்குப் பிறகு மீண்டும் நின்றுவிட்டன. இந்த நேரம் முழுவதும், கும்பகர்ணன் அனுமானோடும் சுக்ரீவனோடும் தனியாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தான். தனது சகோதரனின் மகன் ஏதோ ஓர் இயந்திரத்தை நோண்டிக் கொண்டிருந்தபோது, இரண்டு மாபெரும் வீரர்களைத் தனியொருவனாக அவன் சமாளித்தான். அசுரப் படை இப்போது தலைவர்கள் இல்லாமல் இருந்தது. தங்கள் இளவரசர்கள் இருவரும் எதிரிக்கு நடுவே மாட்டிக் கொண்டு, தங்கள் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்ததை அவர்கள் பார்த்தனர்.

கும்பகர்ணன் தன் உருட்டுக்கட்டையால் பலமாகக் கொடுத்த ஓர் அடியில், சுக்ரீவன் நேராகத் தண்ணீருக்குள் போய் விழுந்தான். ஆனால் அனுமான் தனது தற்காப்பை விலக்கிக் கொண்டு மேகநாதனை நோக்கி விரைந்தான். கும்பகர்ணன் திரும்பி, அனுமானின் காலை இறுகப் பற்றினான். இரண்டு வீரர்களும் சண்டையிட்டுக் காயமடைந்து கீழே விழுந்தனர். கும்பகர்ணனை ஒருசில அம்புகள் தாக்கின. அனுமானும் காயப்பட்டிருந்தான். கும்பகர்ணன் அனுமானைத் தன் தலைக்கு மேலே தூக்கித் தரையின்மீது ஆக்ரோஷமாகவும் பலமாகவும் எறிந்ததில், அனுமான் எந்த அசைவுமின்றிக் கிடந்தான். அப்போது மேற்கு வானம் சிவப்பாக மாறியிருந்தது. நான் ஓர் உற்சாகக் குரலெழுப்பினேன். அக்கணத்தில், பின்னாலிருந்து ஓர் அம்பு கும்பகர்ணனின் கழுத்தைத் தாக்கியது. அதன் முனை அவனது தொண்டையைத் துளைத்து, சூரியனின் செந்நிறக் கதிர்களைப் பிரதிலித்தது. விரைவில், வீரம் மிக்க அந்தப் பெரிய அசுர இளவரசனின் உயிரற்ற உடல் அந்தப் பாலத்தின்மீது விழுந்து, பிறகு கடலுக்குள் உருண்டது. கூடவே, பாலத்தின் ஒரு பகுதியும் உடைந்து கடலுக்குள் விழுந்தது. இறுதியில்,

ஜாம்பவான் ராமனுக்கு ஒரு நல்ல இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்திருந்தான். மக்களுக்குப் பின்னாலிருந்து அம்புகளை எய்வதில் திறமை பெற்றவனான ராமன், இம்முறையும் தன் குறியைத் தவறவிடவில்லை.

தங்களது தளபதி இறந்ததையும், வசமாக மாட்டிக் கொண்டிருந்த இளவரசன் மேகநாதனையும் அவனது வேலைக்காரனையும் தீர்த்துக்கட்டுவதற்காக வானரர்கள் விரைந்து கொண்டிருந்ததையும் அசுரர்கள் நடுக்கத்தோடு பார்த்தனர். என் மகன் துண்டு துண்டாக ஆக்கப்படுவதை நான் பார்க்கவிருந்தேனா? எனக்குத் தலை சுற்றியது. அப்போது அனுமான் லேசாக அசைந்தான். தங்கள் தலைவன் இறந்துவிட்டதாக நினைத்திருந்த வானரப் படையினர் ஆச்சரியமடைந்தனர். அனுமான் மெல்ல மெல்ல உயிர் பெறும்வரை அவர்கள் காத்திருந்தனர். அவன் சற்றுத் தடுமாறி, அங்குமிங்கும் தள்ளாடி, இறுதியில், பறக்கும் இயந்திரத்தின்மீது தன்னை நிதானப்படுத்திக் கொண்டான். சரியாக அக்கணத்தில், அந்த இயந்திரத்தின் காற்றாடிகளுக்கு உயிர் வந்தது. அவன் அதிர்ச்சியில் பின்னால் குதித்தான். என்ன நிகழ்ந்திருந்தது என்பதை வானரர்கள் புரிந்து கொள்வதற்கு முன்பாக, அந்தக் காற்றாடிகள் மிகவும் வேகமாகச் சுழலத் தொடங்கின. அந்த இயந்திரம் மேலே எழுந்தபோது, அதைத் தடுத்து நிறுத்துமாறு ஜாம்பவான் தன் ஆட்களுக்குக் கட்டளையிட்டான். வானரர்கள் விரைந்து முன்னால் ஓடி வந்து, வேகமாக மேலெழுந்து கொண்டிருந்த அந்த இயந்திரத்தின்மீது அம்புகளை எய்தனர், உருட்டுக்கட்டைகளை எறிந்தனர், அவர்களே அதை நோக்கிப் பாய்ந்தனர். விடாப்பிடியாக அதைப் பிடித்துத் தொங்கிய ஒருசில துணிச்சல்காரர்கள், சுழன்று கொண்டிருந்த அதன் இறக்கைகளால் துண்டுதுண்டாயினர்.

சூரியன் மறைந்தபோது, இளவரசனும் என் மகனும், பரிதாபகரமான மற்ற அசுரர்களை வானரர்களின் தயவில் விட்டுவிட்டுத் தங்கள் இயந்திரத்தில் ஏறித் தப்பித்து ராவணனின் அரண்மனையை அடைந்தனர். தங்களது இனத்தின் மாபெரும் புகழுக்காகத் தங்களது குடும்பங்களை விட்டுவிட்டு வந்திருந்த அசுர வீரர்கள், எதிரியுடன் சண்டையிட்டனர், அவர்களைக் கொன்றனர், அவர்களும் கொல்லப்பட்டனர். அதேபோல, ஒருசில மாதங்களுக்கு முன்புவரை கேள்விப்பட்டிராத யாரோ ஒருவனின் புகழுக்காக வானரர்களும் சண்டையிட்டனர். சிறிது நேரத்திற்குப் பிறகு, திரும்பி வருமாறு ஜாம்பவான் தன் ஆட்களுக்குக் கட்டளையிட்டான். வானரர்கள் அனைவரும் தங்கள் தீவை நோக்கிச் சென்றனர். நான் தென்னை

மரத்திலிருந்து கீழே இறங்கினேன். நான் திரும்பிச் சென்ற வழியில், மகிழ்ச்சியாக விருந்தை அனுபவித்துக் கொண்டிருந்த ஒருசில நரிகளும் பெருச்சாளிகளும் என்னைக் கண்டு பயந்தன. பிறகு, நான் சிறிதுகூட யோசிக்காமல், அன்று காலையில் இளரவசன் மேகநாதனை எனக்குச் சுட்டிக்காட்டிய அந்தப் பகுதிநேரச் சவரத் தொழிலாளியின் உடலின்மீது ஏறிச் சென்றேன். மற்றுமோர் இளவரசனான கும்பகர்ணன், இப்போது சுறாக்களுக்கு இரையாகியிருந்தான். அதிர்ஷ்டவசமாக, வீரப் பிரதாபங்களை அவன் அவ்வளவாக மதிக்கவில்லை. கதாநாயகர்களையும் வில்லன்களையும் அவன் சமமான ஆர்வத்துடனேயே மதித்தான். ஒரு குவளை மதுவிற்காக நான் எதை வேண்டுமானாலும் கொடுத்திருப்பேன். அன்றைய இரவு மிகவும் அழகாகவும் இருட்டாகவும் வினோதமாகவும் இருந்தது. நன்றாகக் குடித்துவிட்டு ஒரு மரக்கட்டையைப்போலத் தூங்குவதற்குப் பொருத்தமான ஓர் இரவு அது.



# 56
# அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டிருக்கும்போது

ராவணன்

நான் மண்டோதரியிடம் மிகுந்த ஆத்திரத்தில் இருந்தேன். என் மகனை அன்றே ஒரேயடியாகத் தீர்த்துக்கட்டிவிட வேண்டும்போல எனக்குத் தோன்றியது. முட்டாள்! அவனை என்னவென்று புரிந்து கொள்வதென்று எனக்குத் தெரியவில்லை. சில சமயங்களில் அவன் மாபெரும் வீரத்தை வெளிப்படுத்தினான், பக்குவமானவன்போலச் சிந்திக்கவும் நடந்து கொள்ளவும் செய்தான், உண்மையான தலைமைத்துவத்தை வெளிப்படுத்தினான். மற்ற சமயங்களில், தன்னை ஒரு முட்டாளாக ஆக்கிக் கொண்டான். எனக்குக் கிடைத்தத் தகவல் அறிக்கைகள் தெளிவாக இருந்தன. இந்த முட்டாளின் வீரம்தான் எங்களுடைய மிகச் சிறந்த தளபதியைப் போரில் நாங்கள் இழந்ததற்குக் காரணமாக இருந்தது. பிரஹஸ்தன் மற்றும் மாரீசனின் மரணங்களைவிட, கும்பகர்ணனின் மரணம் என்னை அதிகமாக பாதித்தது.

வெற்றி பெறுவதற்கான வாய்ப்பைக் கடந்த இரண்டு நாட்களில்

இரண்டு முறை என் மகன் வீணாக்கியிருந்தான். அந்த முட்டாள் எப்போதுமே தன் தாயின் பாதுகாப்பை நோக்கி விரைந்தான். அரசனுடைய அறையில் அந்தக் கருப்பன் என்ன செய்து கொண்டிருந்தான்? தன்னுடைய பெரிய உருவத்தை மறைக்க முயற்சித்தபடி, அவன் தனியாக நின்றான். நான் மேகநாதனை நோக்கி விரைந்தேன், ஆனால் மண்டோதரி மீண்டும் குறுக்கிட்டு, "ராவணா, அவர்களை விட்டுவிட்டு இங்கிருந்து போய்விடுங்கள்," என்றாள்.

"அவர்களை விட்டுவிட்டுப் போய்விடுங்கள், அவர்களை விட்டுவிட்டுப் போய்விடுங்கள்! அது எங்கே போய் முடிந்திருக்கிறது என்று பார்த்தாயா? இந்த முட்டாள்கள் எப்போதுதான் வளர்வார்கள்? அவனுடைய சகவாசம்தான் அவனை ஒரு முட்டாளாக ஆக்கி வைத்திருக்கிறது," என்று கத்திவிட்டு, நான் அதிகாயனைப் பார்த்தேன். அவன் வேதனைப்பட்டதுபோல எனக்குத் தோன்றியது.

"ராவணா, பின்னாளில் நான் வருத்தப்படக்கூடிய விதத்தில், தேவையற்ற விஷயங்களை இப்போது என்னைப் பேச வைக்காதீர்கள். இந்தப் போர் ஏன் துவங்கியது என்று நான் உங்களுக்கு நினைவுபடுத்த வேண்டும் என்று நீங்கள் உண்மையிலேயே விரும்புகிறீர்களா? உங்களுடைய பிடிவாதத்தாலும் கர்வத்தாலும் இந்த ஒட்டுமொத்த அசுர இனமும் அழிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது என்று நான் உங்களிடம் கூற வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? தயவு செய்து நீங்கள் என் வாயைக் கிளறாதீர்கள்."

கோபத்தில் இருந்த எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவள் கூறிய அனைத்தும் உண்மையாக இருந்ததால் அவளது பேச்சு என்னைக் காயப்படுத்தியது. "மண்டோதரி, வார்த்தைகளை அளந்து பேசு. அசுரர்களின் பேரரசனிடம் நீ பேசிக் கொண்டிருக்கிறாய் என்பதை நினைவில் கொள்." இந்த வார்த்தைகள் எனக்கே நகைப்புக்குரியவையாகத் தோன்றின.

அவள் என்னை வெறித்துப் பார்த்துவிட்டு, "ராவணா, நீங்கள் போய் ஓய்வெடுத்துக் கொள்வது நல்லது," என்று கூறினாள்.

என்ன செய்வதென்று யோசித்தபடி சிறிது நேரம் நான் அங்கு நின்றேன். பிறகு நான் அங்கிருந்து போய்விட்டேன். நான் தனிமையாகவும் கைவிடப்பட்டதுபோலவும் உணர்ந்தேன். கோபமும் வெறுப்பும் என்னுள் ருத்ரதாண்டவமாடின. இப்படிப்பட்டக் கொடூரமான விஷயங்கள் எனக்கு ஏன் நிகழ வேண்டும்? வாழ்க்கையில் நான் ஏன் மகிழ்ச்சியற்றவனாகவும் துரதிர்ஷ்டமானவனாகவும் இருக்க வேண்டும்? செல்லம் கொடுத்துக் கெடுக்கப்பட்டிருந்த என் மகன் செய்திருந்ததைப் போன்ற முட்டாள்தனமான தவறுகளை நான்

ஒருபோதும் செய்திருக்க மாட்டேன். உலகம் இதுவரை பார்த்திராத ஒரு மாபெரும் சாம்ராஜ்யத்தை என்றேனும் ஒருநாள் அவன் சுவீரிக்கப் போகிறான்.

கும்பகர்ணா, என் சகோதரனே! நெடுங்காலத்திற்கு முன்பே நான் உன்னைக் கைவிட்டுவிட்டேன். உன்னுடைய சரிவைத் தடுத்து நிறுத்த நான் ஒருபோதும் முயற்சிக்கவில்லை. அது எனக்குச் சாதகமாக அமைந்ததால் நான் அதை ஊக்குவித்தேன் என்றுகூடக் கூறலாம். உன் மனத்தில் சிறகடித்துப் பறந்த லட்சியங்களை என்னால் பார்க்க முடிந்தது, உனது பொறாமையை என்னால் உணர முடிந்தது. நீ அரசனாக ஆக விரும்பினாய். ஆனால் அரச பதவியில் இருக்கும் ஆபத்துக்களையோ அல்லது அதிகாரம் எப்படி ஒருவனது ஆன்மாவை மாசுபடுத்தி அரித்துவிடுகிறது என்பதையோ நீ அறிய மாட்டாய். நீ உன்னுடைய லட்சியங்களை மதுவிலும் போதைப் பொருட்களிலும் மூழ்கடித்தாய். ஆனால் நான் உட்கொண்ட அதிகாரம் எனும் போதைப் பொருள், நீ உட்கொண்டிருந்த எதுவொன்றையும்விட அதிக வீரியம் வாய்ந்ததாக இருந்தது. உன்னுடைய போதை நீ தொடர்ந்து உட்கொண்டு வந்த விஷத்தால் தழைத்தது, ஆனால் என்னுடைய போதை, பல கொடுங்கோன்மைச் செயல்களினால் தழைத்தது. நீ உன்னுடைய அறியாமையில் உறங்கிக் கிடந்த ஒரு பெரிய மனிதன். ஆனால் நானோ, என் அதிகாரத்தில் நன்றாக விழித்திருந்த ஒரு சிறிய மனிதன். உனது லட்சியம் எப்போதும் தெளிவானதாகவும் வெளிப்படையானதாகவும் இருந்தது. நான் உன்னைவிட என் அரியணையை அதிகமாக நேசித்ததால், உன்னைக் கண்டு பயந்தேன். நான் என்னைவிடவும் என் பதவியையும் அதிகாரத்தையும் அதிகமாக நேசித்தேன். என்றேனும் ஒருநாள் நீ விழித்தெழுந்து என்னுடைய பதவியைப் பறிப்பதற்கு எனக்குப் பின்னால் சதித்திட்டம் தீட்டுவாய் என்று நான் பயந்தேன். மது உன்னை ஆட்கொண்டபோது நான் நிம்மதியடைந்தேன். ஆனாலும் நான் உன்னைத் தொடர்ந்து கண்காணித்து வந்தேன். நீ எப்போதும் மயக்கத்திலும் உறக்கத்திலும் இருப்பதை நான் உறுதி செய்தேன்.

கும்பகர்ணா, நீ என் உறக்கத்திற்குத் தொந்தரவாக இருந்தாய். ஆனால், நம்பிக்கைத் துரோகத்தை நான் எதிர்கொள்ள வேண்டியிருந்தபோது, அது உன்னிடமிருந்து வரவில்லை. நம் எல்லோருக்கும் மிகவும் பிரியமான நமது இளைய சகோதரனிடமிருந்துதான் அது வந்தது. அவனை நாம் எப்படியெல்லாம் கேலி செய்தோம், அவனுடைய முதுகுக்குப் பின்னால் எப்படியெல்லாம் சிரித்தோம், ஒரு பிராமணனாக இருக்கக் கடுமையாக முயற்சித்த அந்த

அசுரச் சிறுவனைப் பற்றி நாம் எப்படிப்பட்ட சுவாரசியமான கதைகளையெல்லாம் புனைந்தோம்! ஆனால் இப்போது நாம்தான் நகைப்புக்குரியவர்களாக ஆகியிருக்கிறோம். எதிரி நம் வாசலில் நிற்கிறான். நமது இளைய சகோதரன் ஒரு தீப்பந்தத்துடன் அவர்களை வழிநடத்திக் கொண்டிருக்கிறான். அவன் நமது கனவுகளைத் திருடி, அவற்றைக் கொடுங்கனவுகளாக மாற்றவிருக்கிறான். நான் செய்தது பெரும் தவறு. நீதான் ஆபத்தானவன் என்று நினைத்து, நான் அந்த விஷப் பாம்பைக் கண்காணிக்காமல் விட்டுவிட்டதற்காக என்னை மன்னித்துவிடு.

கும்பகர்ணா, உன் சிந்தனை எப்போதுமே சரியாக இருந்தது. விபீஷணனின் நேர்மையைப் பற்றிய சந்தேகங்களை நெடுங்காலத்திற்கு முன்பே என்னிடம் நீ வெளிப்படுத்தியிருந்தது எனக்கு நினைவிருக்கிறது. ஆனால் நான் ஒரு வெகுளியாக இருந்தேன். நீ என் முதுகிற்குப் பின்னால் சதித்திட்டம் தீட்டிக் கொண்டிருந்ததாகவும், அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான உனது பாதை தெளிவடைவதற்காக நமது இளைய சகோதரனுடன் என்னைச் சண்டையிட வைக்க நீ முயற்சித்துக் கொண்டிருந்ததாகவும் நான் நினைத்தேன். ஆனால் நீ எனக்குத் தேவைப்பட்டபோது, பாழாய்ப் போன நமது அசுர இனத்திற்கு வழிகாட்டுதல் தேவைப்பட்டபோது, நான் உன் உதவியை நாடினேன். என்னுடைய தவறை என்னிடம் நீ துணிச்சலாகச் சுட்டிக்காட்டினாய், ஆனால் அளவுக்கதிகமாக எனக்கு அறிவுறுத்துவதைத் தவிர்த்தாய். நீ எப்படிப்பட்டவனாக இருந்தாய் என்பதை இப்போது நான் உணர்கிறேன், ஆனால் காலம் கடந்துவிட்டது. இந்த யுத்தம் இப்போது நமக்கு எதிராகத் திரும்பிக் கொண்டிருக்கிறது. விரைவில், நாம் மீட்டெடுத்த நமது நாகரீகமும், நாம் அமல்படுத்திய சமத்துவக் கொள்கைகளும், நமது அழகான நகரங்களும் அரண்மனைகளும் பிரம்மாண்டமான கோவில்களும் ராஜ வீதிகளும், அருமையான மசாலாப் பொருட்களுக்காகவும் ஆடைகளுக்காகவும் வணிகர்களின் கப்பல்கள் காத்துக் கொண்டிருந்த நமது துறைமுகங்களும், கலையும் நாடக மன்றங்களும் ஒரு தேவக் கொடுங்கோலனின் கால்களில் மிதிபட்டுச் சின்னாபின்னமாகப் போகின்றன. நீ அதிர்ஷ்டக்காரன். மாபெரும் அசுரக் கனவு ஒரு சிறு சுவடுகூட இல்லாமல் மாயமாய் மறையும்போது நீ இருக்க மாட்டாய். பிராமணர்கள் நமது பிரம்மாண்டமான சமுதாயத்தின் மூளையாகவும், தேவ வீரர்கள் அதன் கைகள் மற்றும் கால்களாகவும், குபேரனைப் போன்ற குறுக்குப் புத்திக்காரர்கள் அதன் மற்றப் பகுதிகளாகவும் ஆகும்போது நீ இங்கு இருக்க மாட்டாய். நமது இளைய சகோதரன்

நமது உயிரற்ற உடல்களின்மீது கட்டியெழுப்ப விரும்புகின்ற ஒரு சமுதாயத்தைப் பார்க்க நீ இங்கு இருக்க மாட்டாய். சகோதரனே, நீ சாமானியர்களின் துரதிர்ஷ்டங்களைக் கடந்து சென்றுவிட்டாய். விரைவில் நான் உன்னைப் பின்தொடரக்கூடும். நான் உன்னை மீண்டும் சந்திக்கும்போது, என்னால் உன் கண்களை நேருக்கு நேர் பார்க்க முடியுமா என்பதுதான் எனக்கு இருக்கும் ஒரே பயம்.

மண்டோதரி என் அறைக்குள் வந்து என்னருகே நின்றாள். அவள் என்னைத் தொட்டபோது என் சிந்தனை கலைந்தது. "ராவணா, தன் சிற்றப்பாவுக்கு நடந்த விஷயம் குறித்து மேகநாதன் மனமுடைந்து போயுள்ளான். அது தன்னுடைய தவறு என்று அவன் நினைக்கிறான்."

"அது அவனுடைய தவறுதான். மக்களுக்கு பிரமிப்பூட்டுவதற்குத் தனது சாகசத் துணிச்சலைக் காட்டுவதற்கான இடம் யுத்தக்களம் அல்ல. கும்பகர்ணனின் இழப்பு நமக்கு ஏற்பட்டுள்ள மிகப் பெரிய பின்னடைவு. என்னுடைய மகன் அதற்குக் காரணமாக ஆகியுள்ளது குறித்து எனக்கு அவமானமாக இருக்கிறது. இனி அவன் யுத்தக்களத்திற்குச் செல்வதை நான் விரும்பவில்லை. இதுபோன்ற தவறுகள் அசுரர்களுக்குப் பெரும் பாதகத்தை ஏற்படுத்தும். அவர்களுக்கு இது கட்டுப்படியாகாது."

"ராவணா, மேகநாதன் ஏற்கனவே இடிந்து போயிருக்கிறான் . . . அவனை உங்களால் மன்னிக்க முடியாதா?"

என் கோபம் மீண்டும் என் தலைக்கேறியது. "அவனுடைய சகவாசம்தான் அவனுடைய அழிவுக்குக் காரணம். தான் போகும் இடமெல்லாம் அந்தக் கருப்பனை அவன் ஏன் எப்போதும் தன்னுடன் இழுத்துச் செல்கிறான்? . . ." மண்டோதரியின் கண்களில் தெறித்தப் பார்வையில் நான் தடுமாறினேன்.

"ராவணா, போதும்! இதோடு நிறுத்திக் கொள்ளுங்கள்! நீங்கள் ஏன் இந்தப் போரைத் தொடர்கிறீர்கள்? நாம் ஏன் ஒரு சமரசத்திற்கு முயற்சிக்கக்கூடாது? ராமனிடம் அவனுடைய மனைவியை ஏன் நாம் திருப்பிக் கொடுக்கக்கூடாது?" என்று கேட்டுவிட்டு அவள் தேம்பினாள்.

"எனக்கு எந்த கௌரவமோ அல்லது பெருமிதமோ இல்லை என்று நீ நினைக்கிறாயா? நான் எனது சிறந்த படைத்தலைவர்களையும் என் சகோதரனையும் என் நண்பர்களையும் இழந்த பிறகு, ராமனிடம் சென்று அவனுடைய கால்களில் நான் விழ வேண்டும் என்று நீ விரும்புகிறாயா? அசுரர்களின் பேரரசனான நான், காட்டுமிராண்டித்தனமான ஒரு சிறிய ராஜ்யத்தின் இளவரசனிடம் சென்று கருணைப் பிச்சை கேட்க வேண்டும் என்று நீ விரும்புகிறாயா?"

"அச்சிறிய சாம்ராஜ்யத்தின் இளவரசன் ஏற்கனவே பாதி அசுர சாம்ராஜ்யத்தைக் கபளீகரம் செய்துவிட்டான். இந்த முட்டாள்தனமான

போரை நிறுத்துவதற்கு முன்பு இன்னும் எத்தனைப் பேரை நீங்கள் இழக்க விரும்புகிறீர்கள்? யாருக்காக நீங்கள் இந்தப் போரை நடத்திக் கொண்டிருக்கிறீர்கள் . . .”

“இந்த யுத்தம் அசுரர்களின் கௌரவத்திற்கானது. சாதீயமும் பிராமண அடுக்கதிகார அமைப்பும் பரவுவதைத் தடுப்பதற்கான ஒரு யுத்தம் இது . . .”

“உங்களுடைய அரசியல் பேச்சை மக்களை முட்டாளாக்குவதற்குப் பாதுகாத்து வையுங்கள். இந்த யுத்தத்தை நீங்கள் உங்கள் சுயநலக் காரணங்களுக்காக நடத்திக் கொண்டிருக்கிறீர்கள்.”

“மண்டோதரி, இதே இளவரசன்தான் என்னுடைய சகோதரியை அவமானப்படுத்தி அவளது உருவத்தை உருக்குலைத்தான் என்பதை நீ மறந்து கொண்டிருக்கிறாய். அவன் செய்த காரியத்தை நான் அப்படியே விழுங்கிவிட வேண்டும் என்று நீ கூறுகிறாயா?”

“நீங்கள் விதவையாக்கிய அதே சகோதரி . . .”

“போதும், நிறுத்து! பெண்களுக்கு இந்த யுத்தத்தைப் பற்றி என்ன புரியும் . . .”

“ராவணா, எனக்கு நன்றாகவே புரிகிறது. உங்களுடைய உன்னதமான முகத்தை உங்களுடைய முட்டாள்தனமான குடிமக்களுக்காகப் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் ஆசைகளுக்கு அடிமையாகியுள்ள ஒரு விலங்கு. நீங்கள் யாரையும் மதிக்காதவர், அகங்காரம் படைத்தவர், காம வெறி கொண்டவர். சாமானியமான அசுரர்களைத் தாக்குகின்ற மூடநம்பிக்கைகளால் பாதிக்கப்படாதவர் நீங்கள் என்று மக்களிடம் நீங்கள் உங்களை வெளிக்காட்டிக் கொள்ள விரும்புகிறீர்கள். ஆனால், உங்கள் இதயத்தில், தெருவில் போகின்ற எவரொருவரையும் போலவே நீங்களும் மூடநம்பிக்கைகளைக் கடைபிடிக்கிறீர்கள், அவர்களைப் போலவே நீங்களும் பயப்படுகிறீர்கள். உங்கள் அதிகாரத்தை நீங்கள் கைப்பற்றியபோது, ஜனகனிடமிருந்து நம்முடைய மகளை மீண்டும் இலங்கைக்கு அழைத்து வருவதிலிருந்து எது உங்களைத் தடுத்து நிறுத்தியது? நம்முடைய மகள் திரும்பி வந்தால், அழிவையும் அவள் தன்னுடன் அழைத்து வந்து, அசுரர்களின் கனவுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடுவாள் என்று நீங்கள் பயந்தீர்கள். எனவே ஒரு தாயின் அன்பு அவளுக்குக் கிடைக்காமல் தடுத்துவிட்டீர்கள். ஒரு தந்தையின் அன்பையும் அவளுக்கு நீங்கள் மறுத்தீர்கள். நீங்கள் அதிகார போதையில் இருந்தீர்கள். உங்கள் குடும்பத்தாரைவிட உங்கள் மகுடத்தை நீங்கள் அதிகமாக நேசித்தீர்கள். ஜோதிடக் கணிப்புக் குறித்து நீங்கள் பயந்தீர்கள். ஆனால் சூர்ப்பனகையின் உருவம்

உருக்குலைக்கப்பட்டபோது, அது உங்களுடைய கர்வத்திற்கு ஒரு பெரும் சாட்டையடியாக இருந்தது. எனவே உங்களுடைய மகளை அவளது கணவனிடமிருந்து திருடுவதென்று நீங்கள் தீர்மானித்தீர்கள். வெட்கக்கேடு! அவள் நம் மகளாக இருந்தாலும்கூட, ராமனிடமிருந்து அவளைத் திருடுவதற்குப் பதிலாக, நீங்கள் அவனை எதிர்த்துச் சண்டையிட்டிருக்க வேண்டும். இப்போது எதிரி நம் வாசலில் நிற்கிறான். ஜோதிடக் கணிப்புகள் உண்மையாகவிருக்கின்றன. இந்த நேரத்தில், நீங்கள் உங்களுடைய முட்டாள்தனமான கர்வத்தையும் அகங்காரத்தையும் பிடிவாதமாகக் கட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் முதலில் ஓர் அரசன், பிறகுதான் ஒரு தந்தை என்பதை மறந்துவிட்டீர்கள்.

“இதுவரை மௌனமாக இருந்து, உங்களுடைய ஆணவத்தாலும் அகங்காரத்தாலும் நான் துன்புற்று வந்திருக்கிறேன். நீங்கள் என்னுடைய வேலைக்காரியைக் கற்பழித்து அவளைக் கருவுறச் செய்தபோது நான் மௌனமாக இருந்தேன். நீங்கள் அந்த பிராமணப் பெண்ணுடன் கொஞ்சிக் குலவிக் கொண்டிருந்ததைக் கேள்விப்பட்டபோது நான் மௌனமாக இருந்தேன். உங்கள் தூக்கத்தில் வேதவதியின் பெயரை நீங்கள் முணுமுணுத்ததை நான் கேட்டபோது நான் மௌனமாக இருந்தேன். நெடுங்காலம் என்னைத் தனியாக விட்டுவிட்டு, உங்கள் சாம்ராஜ்யத்தைக் கட்டியெழுப்புவதிலும், கொடூரமான யுத்தங்களைப் புரிவதிலும், தொலைதூர நாடுகளில் நீண்ட படையெடுப்புகளை மேற்கொள்வதிலும் நீங்கள் மும்முரமாக இருந்தபோது, நான் மௌனத்தில் வாழ்ந்து வந்துள்ளேன். உங்களைப் போன்ற முட்டாள்கள் இந்த பூமிக்குச் சிவப்பு வண்ணம் தீட்டியபோது, மற்றப் பெண்களைப் போலவே நானும் மௌனமாக இருந்தேன். நீங்கள் எங்களை எந்த நிலைமைக்குக் கூட்டி வந்திருக்கிறீர்கள் என்று பாருங்கள். என் அன்புக்குரிய கணவனே, இந்த ஒரு முறை மட்டும் நான் கூறுவதைக் காதுகொடுத்துக் கேளுங்கள். சீதையை அவளுடைய கணவனிடம் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்.”

“முட்டாள் பெண்ணே, உன் வாயை மூடு!” என்று நான் வெடித்தேன். “நீ அளவுக்கதிகமாகப் பேசுகிறாய்.”

அதற்கு மேல் என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை. சாலையில் நான் நிர்வாணமாக நின்று கொண்டிருந்ததுபோல உணர்ந்தேன். எனக்குள் ஆழமாகப் புதைந்து கிடந்த எண்ணங்கள் அனைத்தும் இப்போது வெட்டவெளிச்சத்திற்கு வந்திருந்தன. ஆனால் அவை இனிமையானவையாக இருக்கவில்லை.

“ராவணா, சீதையை ராமனிடம் திருப்பி அனுப்புவது குறித்த எண்ணம் எனக்கு மகிழ்ச்சி அளிப்பதாக நினைக்கிறீர்களா? நம்

மகளைவிட நான் உங்களை அதிகமாக நேசிக்கிறேன். நான் உங்களை இழக்க விரும்பவில்லை. ராவணா, நாம் இந்த யுத்தத்தில் நிச்சயமாகத் தோற்கப் போகிறோம். இலங்கைக்கு அவளை நீங்கள் அழைத்து வந்த கணமே, அவளுக்காகவும் எனக்காகவும் உங்களுக்காகவும் நான் பயந்தேன். அவளைத் தனது கணவனிடம் நீங்கள் திருப்பி அனுப்ப வேண்டும் என்று நான் விரும்பினேன். ஆனால் என்னால் எதுவும் செய்ய முடிவதற்குள், நீங்கள் இந்த யுத்தத்தைத் துவக்கிவிட்டீர்கள். ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்பட்டுள்ளனர். பெண்களாகிய எங்களின் துயரத்தைப் பற்றி நீங்கள் எப்போதாவது சிந்தித்துப் பார்த்துள்ளீர்களா? நான் ஒரு மகனை இழந்திருக்கிறேன். ஆனால், தங்களுடைய மகன்களையும் கணவன்களையும் தந்தையரையும் சகோதரர்களையும் மட்டுமன்றி, தங்களுடைய வீடுகளையும் தங்கள் கௌரவத்தையும் பெருமிதத்தையும் இழந்துள்ள பரிதாபகரமான பெண்களில் வெறுமனே நானும் ஒருத்தி. உங்கள் எதிரிகள் எனக்கு என்ன கொடுமையைச் செய்தனர் என்று உங்களுக்குத் தெரியும். பதிலுக்கு நீங்கள் என்ன செய்தீர்கள்? நீங்கள் யுத்தக்களத்திற்காவது போனீர்களா? இல்லை! நீங்கள் உங்கள் மகனையும் உங்கள் சகோதரனையும் உங்கள் நண்பர்கள் மற்றும் மந்திரிகளையும் அனுப்பி வைத்தீர்கள். ஆனால் நீங்கள் மட்டும் ஒரு கோழையைப்போல இங்கே ஒளிந்து கொண்டீர் . . .”

“வாயை மூடு . . .” நான் அவளுடைய தொண்டையைப் பிடித்தேன்.

“ஏன் நிறுத்திவிட்டீர்கள், என்னைக் கொல்லுங்கள்!”

வெறுப்பில் நான் அவளைக் கீழே தள்ளிவிட்டு, அந்த அறையைவிட்டுப் புயலென வெளியேறினேன். ஆற்ற முடியாத கோபம் என்னுள் குமுறியது. நான் பயனற்றவனாக உணர்ந்தேன். நான் என்னையும் அறியாமல், சீதை அமர்ந்திருந்த அசோக மரத்தை நோக்கித் திரும்பினேன். குனிந்து உட்கார்ந்திருந்த அந்த உருவத்தை இருட்டில் என்னால் பார்க்க முடிந்தது. ஒரு சிறிய எண்ணெய் விளக்கிலிருந்து லேசான வெளிச்சம் வந்தது. நான் அவளுக்கு அருகே சென்றபோது, அவள் நிமிர்ந்து பார்த்துவிட்டு, பிறகு வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டாள். நான் அவளைத் தொட்டு, பாசத்தோடு அவளைக் கட்டியணைத்து, “மகளே, நான் உனக்காக எவ்வளவு தியாகங்களைச் செய்து கொண்டிருக்கிறேன் என்று பார்,” என்று கூற விரும்பினேன். ஆனால் எனக்குள் இருந்து ஏதோ ஒன்று என்னைத் தடுத்து நிறுத்தியது. என் மகளிடம் பேசுவதற்கான துணிச்சலை வரவழைத்துக் கொள்ள முயற்சித்து நான் நெடுநேரம் அங்கு நின்றேன். அப்போது, எனக்கே சரியாகக் கேட்காத ஒரு குரலில், “மகளே . . .” என்று நான் அழைத்தேன்.

சிறிது நேரம் அவளிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. அவளை மீண்டும் ஒருமுறை அழைப்பதற்கு எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை. அப்போது அவளுடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அவளுடைய லேசான தேம்பல்கள் என் காதுகளில் விழுந்தன.

“சீதை, நீ என் மகள் . . . என் வாழ்வில் எதுவொன்றையும்விட என் மனைவியை நான் அதிகமாக நேசித்தேன். ஆனால் இப்போது என்மீது நான் கொண்டுள்ள நேசத்தைவிட அதிகமாக நான் உன்னை நேசிக்கிறேன்.” அவளுடைய தேம்பல் ஒலியைத் தவிர வேறு எதுவும் எனக்குக் கேட்கவில்லை. பேச்சை எவ்வாறு தொடர்வது என்று எனக்குத் தெரியவில்லை, ஆனாலும், “இலங்கையின் இளவரசியாக நீ உன் தந்தையுடன் இங்கேயே தங்கிவிடுவாயா? நீ விரும்பினால் . . . நான் ஒரு சமரச ஒப்பந்தம் செய்ய ஏற்பாடு செய்கிறேன் . . . ராமன் உனக்குக் கணவனாக இருக்கத் தகுதியற்றவன். நீ எப்போதும் உன் தந்தையுடனேயே இருந்துவிடு,” என்று கூறினேன்.

அவளிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. அவள் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

“தயவு செய்து உன் கணவனுடன் போகாதே . . . அவன் ஒரு காட்டுமிராண்டி.”

அவள் கோபத்துடன் திரும்பி என்னைப் பார்த்து, “நான் அவரை நேசிக்கிறேன் . . . அவர் எனது சட்டபூர்வமான கணவர்,” என்று கூறினாள்.

அவள் திடீரென்று கோபத்தை வெளிக்காட்டியதைக் கண்டு நான் திகைத்தேன். அவளிடம் என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை, ஆனால் கடைசியாக ஒரு முறை முயற்சித்தேன். “சீதை, நான் உன்னுடைய தந்தை. நான் . . .”

“அரசன் ஜனகன்தான் என் தந்தை. ராமபிரான் என் கணவர்.”

நான் நிராதரவாக அங்கே நின்றேன். நான் அங்கிருந்து திரும்பியபோது வலி என் ஆன்மாவை அரித்தது.

“சிற்றப்பா . . .” திரிஜடை அங்கு இருந்ததை அப்போதுதான் நான் கவனித்தேன். அவளை இப்போது நான் எதிர்கொள்ள விரும்பவில்லை. அவள் தன் தந்தையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்திருப்பாள். “சிற்றப்பா, இன்று என் தந்தை ஒரு துணிச்சலான அசுர வீரனைப்போலச் சண்டையிட்டாரா?” என்று அவள் கேட்டாள்.

“திரிஜடை, உன் தகப்பன் . . . உனக்காக நான் வருந்துகிறேன் . . .” அவளிடம் கூறுவதற்குத் தகுந்த வார்த்தைகள் என்னிடம் இருக்கவில்லை.

“என் தந்தை மதுவுக்கு அடிமையாவதற்கு முன்பு, எப்போதுமே ஒரு மாபெரும் வீரனாக இருந்திருந்ததாகவும், உங்களைவிடவும் மிகச் சிறந்தவராக இருந்திருந்ததாகவும் என் தாயாரிடமிருந்து நான் கேள்விப்பட்டுள்ளேன். ஆனால் நான் வளர்ந்து வந்த காலத்தில் அவர் ஏற்கனவே தன் வாழ்க்கையை வீணாக்கியிருந்தார். ஒரு குடிகாரனின் மகள் என்ற முத்திரையோடு வளர்வது எனக்கு அவ்வளவு சுலபமானதாக இருக்கவில்லை. அவர் தன் குடிப்பழக்கத்தைக் கைவிட்டுவிட்டு, என்னுடைய தோழிகளின் தந்தையரைப்போல இயல்பானவராக இருக்க மாட்டாரா என்று நான் மிகவும் ஏங்கினேன். நான் அவரை வெறுத்தேன். ஆனால் இப்போது . . .”

“திரிஜடை, உன் தந்தை ஒரு துணிச்சலான ஆண்மகன். பலரையும்விட மிகச் சிறந்தவன் . . .” என்று நான் கூறிக் கொண்டிருந்தபோது அவள் என் தோளின்மீது சாய்ந்து அழத் தொடங்கினாள். அவளை நான் ஆறுதலாக அணைத்துக் கொண்டேன். அப்போது இருட்டாக இருந்ததாலும், அங்கு நிகழ்ந்து கொண்டிருந்ததைப் பார்ப்பதற்கு அங்கு யாரும் இல்லாததாலும், நானும் அழுதேன். கௌரவத்தாலும் பெருமிதத்தாலும் இவ்வளவு துயரங்களை ஏற்படுத்த முடியுமா என்று நான் வியந்தேன். துயரம் நிறைந்த இந்த யுத்தம், மகிழ்ச்சியிழந்த இந்த வாழ்க்கை, வீரப்பிரதாபத்திற்கும் வன்முறைக்கும் புகழாரம் சூட்டுதல் போன்ற அனைத்தும் எனக்கு வெறுப்பூட்டின.

சுயபச்சாதாபத்தில் மூழ்கிக் கிடந்த என்னை, மூச்சிறைக்க என்னிடம் ஓடி வந்த ஒரு தூதுவனின் குரல் விழித்தெழச் செய்தது. அதன் பிறகு, நடந்த அனைத்துமே அர்த்தமற்றவையாக இருந்தன. இனி எதுவுமே முக்கியமாக இருக்கவில்லை. காலச் சக்கரத்தில் நான் ஒரு சக்கரப் பல்லாக ஆகியிருந்தேன். யாரோ ஒருவன் மகத்துவத்தையும் தெய்வீக நிலையையும் அடைவதற்கு அவன் ஏறிச் சென்ற ஒரு படிக்கல்லாக நான் ஆனேன். அதன் பிறகு, ராமனின் வீரமிக்க இதிகாசத்தில் நான் ஒரு சிறு கதாபாத்திரமாக ஆனேன். அக்கணத்தில் எல்லாமே மாறியது.

“அரசே!” என்று படபடப்புடன் அழைத்த அந்தப் பரிதாபகரமான தூதுவனுக்கு வியர்த்துக் கொட்டியது. அவனுடைய முகத்தை நான் ஏறிட்டுப் பார்த்தபோது நான் நிலைதடுமாறினேன். என்னுள் இருந்த ரத்தம் முழுவதும் வடிந்து வெளியேறியது.

“அரசே, இளவரசன் மேகநாதனுக்கு ஏதோ நடந்துள்ளது . . .” என்று கூறிவிட்டு நிலத்தை வெறித்துப் பார்த்தபடி அவன் நின்றான். நான் திரிஜடையை விலக்கித் தள்ளிவிட்டு, அந்தத் தூதுவனைத் தாண்டி

ஓடினேன். அவன் எனக்குப் பின்னால் ஓடி வந்தான்.

“அவன் எங்கே? என்ன நிகழ்ந்தது?” என்று கேட்ட நான், அந்தத் தூதுவனின் பதிலுக்காகக் காத்திருக்கவில்லை. ஏதோ மோசமான ஒன்று நடந்திருந்ததாக நான் பயந்தேன், ஆனால் என் மனத்தில் அதை மறுத்துக் கொண்டே இருந்தேன். நான் காவலர் சாவடியை விரைவாகக் கடந்து சென்று, ஒரு குதிரையைப் பற்றினேன். கோட்டைக் கதவுகள் திறந்தன. நான் ஒரு பைத்தியக்காரனைப்போல மலைக்கோட்டையை நோக்கி விரைந்தேன். என் நகரம் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்ததை நான் திரும்பிப் பார்த்தேன், ஆனால் அதை நான் நின்று கவனிக்கவில்லை. “என் நகரம் எரியட்டும். ஒட்டுமொத்த மனிதகுலமும் அழியட்டும். என் மகன் எங்கே? மேகநாதா! சிவபெருமானே, என் மகனுக்கு எதுவும் ஆகிவிடக்கூடாது,” என்று என் மனம் அலைபாய்ந்தது. வாயில் நுரை ஒழுகிக் கொண்டிருந்த அந்தக் குதிரையின் பிசுபிசுப்பான வியர்வையை என்னால் நுகர முடிந்தது, ஆனாலும் நான் மிகவும் மெதுவாகப் பயணித்துக் கொண்டிருந்ததுபோல எனக்குத் தோன்றியது. நான் கோட்டையை நெருங்கியபோது, அதன் கதவுகள் அகலமாகத் திறந்து கிடந்ததையும், வெட்டிச் சாய்க்கப்பட்டிருந்த வீரர்கள் தங்கள் சொந்த ரத்தத்தில் உயிரற்றுக் கிடந்ததையும் என்னால் பார்க்க முடிந்தது. கோட்டை மயான அமைதியில் மூழ்கிக் கிடந்தது. நான் குதிரையைவிட்டுக் கீழே இறங்கி, அரண்மனையை நோக்கி நடந்தேன். நான் அங்கு செல்ல விரும்பவில்லை. அங்கு எனக்கு என்ன காத்திருந்தது என்பதை நான் அறிந்திருந்தேன். ஆனாலும், தலைகளற்றுக் கிடந்த உடல்களையும், கைகால்களற்ற முண்டங்களையும், ரத்தக் கறை படிந்த சுவர்களையும் கடந்து நடந்து சென்றேன்.

“அரசே!” அந்தக் குரல் என்னைத் திடுக்கிடச் செய்தது. எனது நிதியமைச்சரும் கோட்டைக் காவலருமான ஜம்புமாலி, தன் முதுகை ஒரு தூணின்மீது சாய்த்துத் தரையில் உட்கார்ந்திருந்தான். ரத்தத்தில் குளித்திருந்த அந்த முதியவன் எழுந்து நிற்க முயற்சித்தான்.

என்ன பதில் வரும் என்று தெரிந்திருந்தும், “மேகநாதன் எங்கே?” என்று நான் கேட்டேன். என் மகன் வழக்கமாகப் பிரார்த்தனை செய்த அறையை அவன் சுட்டிக்காட்டினான். நடராஜரின் ஒரு பெரிய சிலை அந்த அறையில் இருந்தது. அதன் முன்னால்தான் என் மகன் பிரார்த்தனை செய்வது வழக்கம். என் மனத்தில் ஒரு லேசான நம்பிக்கை சிறகடித்தது. “மேகநாதா! மேகநாதா! என் மகனே!” என்று நான் கூப்பிட்டேன். திருட்டு முழி முழித்துக் கொண்டு அவன் என்னை நோக்கி ஓடி வருவான் என்று நான் எதிர்பார்த்தேன். நடுங்கிய

கைகளுடன் நான் அந்த அறையின் கதவைத் தள்ளித் திறந்தேன். அங்கு என் மகன் இறந்து கிடந்தான். நான் நிலைகுலைந்து தரையில் விழுந்தேன். அந்தக் கொடூரமான காட்சியை நான் பார்க்க விரும்பவில்லை, ஆனாலும் அது வினோதமாக என்னை ஈர்த்தது. மேகநாதனின் தலை, ஒருசில அடிகள் தள்ளிக் கிடந்த அவனது உடலிலிருந்து துண்டிக்கப்பட்டு, சிவனின் காலடியில் வைக்கப்பட்டிருந்தது. நான்கு அம்புகள் அவனது முதுகைத் துளைத்திருந்தன. தன்னைச் சுற்றி என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதை என் மகன் உணர்ந்து கொள்வதற்கு முன்பாகவே அவன் இறந்திருந்தான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. பின்னாலிருந்து அவன் தாக்கப்பட்டிருந்தான். அவன் இறந்து கீழே விழுந்த பிறகு, அவர்கள் அவனைக் கூறு போட்டிருந்தனர்.

"லட்சுமணன்தான் கோட்டைக்குள் அத்துமீறி நுழைந்தான். அவர்கள் சுமார் நாற்பது பேர் வந்தனர். அவர்கள் எப்படி வந்து கோட்டைக்குள் நுழைந்தனர் என்பதோ இளவரசன் இங்கு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தது அவர்களுக்கு எப்படித் தெரிந்தது என்பதோ யாருக்கும் தெரியவில்லை," என்று கூறிய ஜம்புமாலி, தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அழுதான். "இளவரசன் இங்கே வந்தபோது மிகுந்த வருத்தத்துடன் இருந்தான். யுத்தத்தில் தான் தோற்றுவிட்டிருந்ததாகவும், தனது சிற்றப்பாவின் மரணத்திற்குத் தானே பொறுப்பு என்றும் அவன் என்னிடம் கூறினான். அவன் பிரார்த்தனை செய்ய விரும்பினான். ஆனால் . . . அவன் இப்போது எப்படிக் கிடக்கிறான் . . ."

"அவனுடன் இருந்த இன்னொருவன் எங்கே?" நான் கிட்டத்தட்ட உணர்ச்சியற்றுப் போயிருந்தேன்.

"அவனும் கொல்லப்பட்டிருக்கலாம். அவனது உடல் வெளியே எங்கேனும் கிடக்கக்கூடும். எல்லோரையுமே அவர்கள் கொன்றுவிட்டனர். எனக்கு வயதாகிவிட்டதாலோ என்னவோ, என்னை மட்டும் அவர்கள் விட்டு வைத்துள்ளனர்."

அந்தப் பெரிய நடராஜர் சிலைக்குப் பின்னால் ஏற்பட்ட ஒரு சிறு அசைவு என் கவனத்தைக் கவர்ந்தது. ஆனால் அங்கு செல்வதற்கான துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. ஏனெனில், நான் அங்கு செல்வதற்கு என்னுடைய மகனின் உடலைத் தாண்டிச் சென்றாக வேண்டியிருந்தது. ஒரு பெரிய, கரிய உருவம் அந்தச் சிலையைப் பிடித்து மெதுவாக எழுந்தது. அதிகாயன்! அவனது உடல் ரத்தத்தால் அபிஷேகம் செய்யப்பட்டிருந்தது. அவன் எங்களிடம் நடந்து வர முயன்றான். அவன் மேகநாதனைக் கண்டபோது, ஒரு பரிதாபகரமான ஓலம் அவனுடைய

உதடுகளிலிருந்து எழுந்தது. அவன் என்னை உணர்ச்சியற்றுப் பார்த்துவிட்டு, பிறகு ஜம்புமாலியைப் பார்த்தான். அதிகாயனின் முகம் கோபத்தால் கொப்பளித்தது. நான் என்னுடைய வயதான மந்திரியைப் பார்த்தேன். அவன் வெளிறிப் போயிருந்தான். அவன் அங்கிருந்து ஓடியபோது, அதிகாயன் தன்னால் முடிந்த அளவுக்கு வேகமாக ஜம்புமாலியை நோக்கி ஓடினான். ஜம்புமாலி மேலும் ஓடுவதற்கு முன் நான் அவனுடைய கைகளைப் பிடித்து அவனைத் தடுத்து நிறுத்தினேன். ஆனால் எங்களை நெருங்குவதற்கு முன்பே அதிகாயன் நிலைகுலைந்து முகம் குப்புறத் தரையில் விழுந்தான். அவன் மீண்டும் ஒருமுறை எழுந்திருக்க முயன்றான், ஆனால் மறுபடியும் கீழே விழுந்தான். ஜம்புமாலி என்னைக் கடந்து ஓட முடியாத விதத்தில், எதிரிலிருந்த ஒரு மூலையை நோக்கி நான் அவனைத் தள்ளினேன். அவன் பயத்தில் நடுங்கியபடி அந்த மூலையில் உட்கார்ந்தான். நான் அதிகாயனை நெருங்கி, அவனது முகத்தை என்னை நோக்கித் திருப்பினேன்.

"அவன்தான் . . . ஜம்புமாலிதான் . . . கதவுகளைத் திறந்தான் . . . நான் இளவரசனைக் காப்பாற்ற முயன்றேன் . . . என்னை மன்னித்துவிடுங்கள் . . . என்னால் முடியவில்லை . . . நான் முயற்சித்தேன் . . . உண்மையிலேயே முயற்சித்தேன் . . . லட்சுமணன் வந்திருந்தான் . . . ஜம்புமாலி அவர்களை இங்கு வழிநடத்திக் கூட்டி வந்தான் . . . நான் வெளியே இருந்தேன் . . . அதைப் பார்த்தேன் . . . இளவரசர் . . . தனியாக இருக்க விரும்பினார் . . . எனவே நான் அவரை விட்டுவிட்டு . . . கதவருகே . . . வெளியே காத்திருந்தேன் . . . நான் திரும்பி வந்தபோது . . . லட்சுமணன் இளவரசனின் உடலின் மேலே நின்று கொண்டிருந்ததை . . . நான் பார்த்தேன் . . . நான் சண்டையிட்டேன் . . . ஆனால் அவர்கள் . . . தப்பி ஓடிவிட்டனர் . . . நான் முயற்சித்தேன் . . . என்னால் முடியவில்லை . . ." அவனுடைய உயிர் வேகமாக வெளியேறிக் கொண்டிருந்தது. நான் அவனைத் தூக்க முயன்றேன், ஆனால் அவனுடைய பருத்த உடலைத் தூக்குவது கடினமாக இருந்தது. என்னுடைய தகாத உறவினால் எனக்குப் பிறந்த என் மகன் என் கைகளில் மெதுவாக இறந்து போனதை நான் கண்டேன். நான் அவனை மென்மையாகத் தரையில் கிடத்தினேன். நான் பெருங்குரலெடுத்து அழ விரும்பினேன், ஆனால் மெல்ல எழுந்து நின்றேன். ஜம்புமாலி ஓர் எலியைப்போல நடுங்கிக் கொண்டு அந்த மூலையில் உட்கார்ந்திருந்தான். நான் அவனருகே சென்று, அவனுடைய கால்களுக்கு இடையில் எட்டி மிதித்தேன். அவன் என் பாதங்களைப் பிடித்துக் கொண்டு அலறினான். "அரசே . . . கருணை காட்டுங்கள் . . . கருணை காட்டுங்கள் . . ." என்று அவன் கீச்சிட்டான். நான் என்னுடைய

குத்துவாளை எடுத்து, மெல்ல மெல்ல அவனைக் கூறு போட்டேன். இப்போது எனக்கு ஏகப்பட்ட நேரம் இருந்தது. நான் அவனுடைய கண்களிலிருந்து துவக்கி, கீழ்நோக்கிச் செயல்பட்டேன். அந்த வேலையை நான் மிகவும் ரசித்தேன். அவனது அலறல்கள் எனது காதுகளுக்கு இனிய இசையாக இருந்தன.



# 57

## தியாகிகளின் இறுதிச் சடங்கு

பத்ரன்

நான் எந்தச் செய்தியைக் குறித்து மிகவும் பயந்து போயிருந்தேனோ, அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டவுடன் அரண்மனையை நோக்கி நான் விரைந்தேன். அப்போது அதிகாலை நேரம். இறுதியில் அது முடிந்துவிட்டது. என் முட்டாள் மகன், இளவரசனோடு சேர்ந்து தானும் கொல்லப்பட்டிருந்தான். என்றேனும் ஒருநாள் இது நிகழத்தான் போகிறது என்பதை நான் அறிந்திருந்தேன். ஆனால் அது குறித்து என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. ஒரு தந்தை தன் மகன்மீது கொண்டிருக்கும் அன்பு எப்போதுமே ஒருதலைபட்சமானதுதான். நான் அரண்மனையை அடைந்தபோது, என் நெஞ்சிலடித்துக் கொண்டு கதறி அழுதேன், தெருவில் புரண்டேன். என் வேதனையை என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இளவரசனுக்காக என் மகன் கொல்லப்பட்டிருந்ததாக, காதுகொடுத்துக் கேட்ட எவரொருவரிடமும் நான் புலம்பினேன். ஆனால் யாரும் அதில் அக்கறை காட்டவில்லை. அவர்கள் அனைவருமே இளவரசனின்

மரணம் குறித்து துக்கம் அனுசரிப்பதற்கும், ஒரு பிரம்மாண்டமான இறுதிச் சடங்கைக் கண்டுகளிப்பதற்கும் விரைந்து கொண்டிருந்தனர். தெருவின் இரண்டு பக்கங்களிலும் ஒரு பெரிய கூட்டம் திரண்டிருந்தது. இன்று ஏன் யுத்தம் நடைபெறவில்லை என்று நான் யோசித்தேன். யுத்தம் இப்போது வழக்கமாகியிருந்ததால், யுத்தம் இல்லாத ஒரு நாள் வினோதமானதாகத் தோன்றியது. அரண்மனைக்குள் நுழைய அவர்கள் என்னை அனுமதிக்கவில்லை. நான் அவர்களிடம் கெஞ்சினேன், அவர்களுக்கு லஞ்சம் கொடுக்க முயற்சித்தேன், ஆனால் அந்தக் காவலாளிகள் வழக்கத்தைவிட இன்று அதிகக் கறாராக இருந்தனர். அவர்கள் என்னை விலக்கித் தள்ளினர்.

“என் மகன் கொல்லப்பட்டிருக்கிறான். இளவரசனுக்காக என் மகன் கொல்லப்பட்டிருக்கிறான். என் மகன் . . .”

“பிச்சைக்கார நாயே, வழியைவிட்டு விலகு!” என்று ஒரு காவலாளி என்னைப் பார்த்துக் கத்திவிட்டு என்னை வேகமாகத் தள்ளியதில், நான் நிலை தடுமாறி, முகம் குப்புறக் கீழே விழுந்தேன். ஆனால் நான் கோபத்தோடு எழுந்தேன். என் மகன் இந்த நாட்டிற்குத் தன் உயிரைத் தியாகம் செய்திருந்தான். ஒரு தியாகியின் தந்தை என்ற முறையில் என்னை மரியாதையுடன் நடத்துவதற்குப் பதிலாக, அவர்கள் என்னை ஒரு பிச்சைக்காரனைப்போல நடத்திக் கொண்டிருந்தனர்.

“தயவு செய்து என்னை உள்ளே போக அனுமதியுங்கள் . . .”

“முட்டாளே, இளவரசனின் உடலைச் சுமந்து வருகின்ற பாடை, சுபேல மலையிலிருந்து வந்து கொண்டிருக்கிறது.”

மூர்க்கத்தனமாக இருந்த காவலர்களில் ஒருவன் என்னை ஒரு பக்கமாகத் தள்ளினான். நான் வேறு வழியின்றி மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்கியவாறு நின்றேன். யாரும் என் பேச்சுக்குச் செவிசாய்க்கவில்லை. என் மகன் இறந்து போயிருந்தான். அது குறித்து யாரும் எள்ளளவுகூடப் பரிதாபமோ அல்லது அனுதாபமோ காட்டவில்லை. நேரம் செல்லச் செல்ல என் கோபம் அதிகரித்தது. ராவணனையும் என்னால் நினைத்துப் பார்க்க முடிந்த அனைவரையும் நான் சபித்தேன். சிறிது நேரம் எல்லோரும் என்னை உதாசீனப்படுத்தினர், ஆனால் சற்று நேரம் கழித்து, ஒரு காவலாளி என்னை நோக்கி நடந்து வந்து, என் முகத்தின்மீது ஓங்கி அறைந்தான். நான் தலைசுற்றி அருகிலிருந்த ஓடைக்குள் விழுந்தேன். எழுந்திருப்பதற்கான ஆற்றலோ அல்லது விருப்பமோ இல்லாமல், முனகிக் கொண்டே நான் அங்கு விழுந்து கிடந்தேன். தூரத்தில் ரதச் சக்கரங்களின் சத்தம் கேட்டபோது, நான் அந்த ஓடைக்குள்ளிருந்து தட்டுத்தடுமாறி எழுந்து வெளியே வந்தேன். கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு நான் முன்னால் செல்ல

முயற்சித்தபோது மக்கள் என்னைப் பிடித்துத் தள்ளினர்.

ரதம் கோட்டையை நெருங்கியபோது, ஒரு பெரிய கூட்டம் முண்டியடித்துக் கொண்டும் இடித்துத் தள்ளிக் கொண்டும் கோஷமிட்டுக் கொண்டும் இருந்தது. அவர்கள் தங்கள் வருத்தத்தை மகிழ்ச்சியாகக் கொண்டாடிக் கொண்டிருந்தனர். இறந்தவர்களின் உடல்களைச் சுமந்து வந்த பாடைகள் அரண்மனைக்குள் மெதுவாகக் கொண்டு செல்லப்பட்டபோது, கூட்டத்திலிருந்து ஒப்பாரிகள் எழுந்தன. உரத்தக் குரலில் ஒப்பாரி வைப்பதற்கு மக்கள் ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டனர். இறந்தவர்களின் உடல்களின்மீது மலர்கள் எறியப்பட்டன. இளவரசன் மேகநாதனுக்காக எல்லோரும் அழுதனர். "என் மகன் இறந்து போயிருந்தான், ஆனால் இந்த மக்கள் இதை ஒரு கண்காட்சியாக ஆக்கிக் கொண்டிருந்தனர்," என்று நான் கோபம் கொண்டேன்.

ஊர்வலத்தின் முன்னால் வந்து கொண்டிருந்த ரதத்தில் ராவணன் தன் தலையைக் குனிந்து உட்கார்ந்திருந்தார். அவரது மடியில் மேகநாதனின் உடல் கிடந்தது. அமைதியான கண்ணீரும் வியர்வையும் அரசனின் முகத்திலிருந்து வழிந்து அவரது அன்புக்குரிய மகனின் முகத்தின்மீது விழுந்தது. இளவரசனின் முகம் ரத்தம் தோய்ந்தும் விகாரமாகவும் இருந்தது. மரணம் அவனது இளமை மற்றும் அழகு முழுவதையும் அவனிடமிருந்து பறித்திருந்தது. அவர்கள் என்னை நெருங்கியபோது என் இதயம் படபடவென்று துடித்தது. "என் மகன் அதிகாயன் எங்கே?" என்று என் மனம் தத்தளித்தது. ஊர்வலம் அரண்மனையை நெருங்க நெருங்க, கூட்டத்தினர் நிலை கொள்ளாமல் தவித்தனர். நான் எனக்கு முன்னால் இருந்தவர்களைத் தள்ளினேன், ஆனால் அவர்கள் என்னை மீண்டும் பின்னால் தள்ளினார்கள். ராஜ ரதத்தைத் தொடர்ந்து, காளைமாட்டு வண்டிகள் பல வந்ததை நான் பார்த்தேன். முக்கியமற்ற வீரர்கள் பலரின் உயிரற்ற உடல்கள் அவற்றில் குவித்து வைக்கப்பட்டிருந்தன. அதிகாயன் அவற்றில் ஏதேனும் ஒரு வண்டியில் கிடக்கக்கூடும்.

பலர் அந்த வண்டிகளுக்குப் பின்னால் ஓடினார்கள். அவர்களில் சிலர் இதயத்தை உருக்கும் அளவுக்கு ஒப்பாரி வைத்தனர். நானும் அவர்களோடு சேர்ந்து ஓடினேன். நான் கடைசி வண்டியை அடைந்தபோது நான் பெரிதாக மூச்சிறைத்துக் கொண்டிருந்தேன். காய்கறி மூட்டைகள் வண்டிகளுக்குள் தூக்கி எறியப்படுவதுபோல, கொல்லப்பட்ட வீரர்களின் தளர்வான உடல்கள் வண்டிகளுக்குள் எறியப்பட்டிருந்தன. ரத்தம் ஒழுகி, தெருவில் ஒரு நீண்ட சுவடை ஏற்படுத்தியிருந்தது. மரணம் எய்தியிருந்த மனிதர்களின் சதைகளைக்

கொத்துவதற்காகக் காகங்கள் வஞ்சகமாக அந்த மாட்டு வண்டிகளின்மீது வந்து அமர்ந்தன. மரணம் மலிவானதாக இருந்தது. ஆனால் என் மகன் இறந்து போயிருந்தான். “அவனுடைய உடல் எங்கே? அவனைக் கொண்டு வர அவர்கள் மறந்துவிட்டார்களா?” என்று நான் துடியாய்த் துடித்தேன். என் மகனை அந்தக் குவியல்களில் நான் தேடினேன், ஆனால் இறந்து போன அனைவரும் ஒரே மாதிரித் தோன்றினர். என் பார்வை மங்கியது. “என் மகன் ஏன் நான் கூறியதைக் காதுகொடுத்துக் கேட்காமல் போனான்?” என்று நான் மனம் நொந்தேன். அவனுடைய சகவாசம் மோசமானதாக இருந்தது. நான் நெடுங்காலத்திற்கு முன்பே இலங்கையைவிட்டுச் சென்றிருக்க வேண்டும். பூரண நதிக் கரையிலிருந்த எனது சிறிய கிராமத்திற்கு நான் சென்றிருக்க வேண்டும். நான் ஏன் இங்கு தங்கினேன்? இவ்வுலகில் இருந்த ராவணன்களுடனும் ராமன்களுடனும் எனக்கு என்ன உறவு? அவர்களும் அவர்களுடைய யுத்தங்களும் அவர்களுடைய தலைவலி. ராவணன் என் மனைவியைக் கற்பழித்து எனக்கு ஒரு மகனைக் கொடுத்திருந்தார். பிறகு, நான் என் மகனை நேசிக்கக் கற்றுக் கொண்டபோது அவனை என்னிடமிருந்து பறித்துக் கொண்டார்.

என் மகனின் இழப்புக் குறித்தும், என் வாழ்க்கையில் நான் மிகவும் மதித்த அனைத்தைக் குறித்தும், யார்மீதும் காட்ட முடியாத கோபத்தில் நான் உரக்கச் சத்தமிட்டேன். வண்டிகள் இப்போது வேகமாகப் போய்க் கொண்டிருந்தன. என்னுடைய வயதான கால்களால் எப்படி அவற்றுக்கு ஈடு கொடுக்க முடியும்? அவர்கள் என் மகனை என்னிடமிருந்து எடுத்துச் சென்று கொண்டிருந்தனர். நான் அரண்மனைக் கதவை அடைவதற்குள், இறந்தவர்களின் சடலங்களை வண்டியிலிருந்து இறக்கி, நிலத்தில் ஒரு நேர்க்கோட்டு வரிசையில் கிடத்தத் துவங்கியிருந்தனர். கொல்லப்பட்டக் கதாநாயகர்களைப் பார்ப்பதற்கு முண்டியடித்தக் கூட்டத்தினரை விரட்டுவதற்கு, பெரிய கம்புகளை ஏந்திய காவலாளிகள் அந்த உடல்களைச் சுற்றி நின்றனர். இளவரசனின் சடலத்தைச் சுமந்து வந்திருந்த ரதம் அரண்மனைக் கதவுகளைக் கடந்து அரண்மனைத் தோட்டத்தை அடைந்திருந்தது. எப்படியோ எல்லோரையும் தள்ளிக் கொண்டு நான் முன்னால் வந்துவிட்டேன். இறந்தவர்களின் உடல்களை எரிப்பதற்குத் தேவையான மரக்கட்டைகள் ஒரு வண்டியிலிருந்து கீழே கொட்டப்பட்டன. சிதைகளை அமைப்பதில் ஒருசிலர் மும்முரமாயினர். என் மகன் அங்கு எங்கோ இருந்ததாகவும், கடைசி முறையாக அவனை நான் பார்க்க விரும்பியதாகவும் ஒரு காவலாளியிடம் நான் கெஞ்சினேன். இறுதியில் ஒரு காவலாளி என்மீது பரிதாபம் கொண்டு, உயிரற்ற உடல்கள் கிடத்தப்பட்டிருந்த வரிசைக்கு என் கையைப்

பிடித்துக் கூட்டிச் சென்றான். இந்த அர்த்தமற்றப் போரில் கொல்லப்பட்டிருந்த துரதிர்ஷ்டமான அந்த நபர்கள் ஒவ்வொருவரின் முகத்தையும் நான் கூர்ந்து பார்த்தேன். ஆனால் என் மகன் அங்கு இருக்கவில்லை. "அதிகயன் எங்கே? அவன் இன்னும் உயிரோடு இருக்கிறானா?" என் மனத்தில் ஒரு லேசான நம்பிக்கை முளைத்தது. "ஒருவேளை அவன் தன் துணிச்சலை இழந்து, எங்கேனும் சென்று ஒளிந்து கொண்டிருக்கக்கூடும். ஒருசில நாட்களுக்குப் பிறகு அவன் திரும்பி வருவானோ என்னவோ," என்று நான் நினைத்துக் கொண்டேன்.

அப்போது, அரண்மனைக்குள் நுழைய முயற்சித்தக் கூட்டத்தினரை விலக்கித் தள்ளியவாறு, அரண்மனைக் கதவுகள் மெதுவாக மூடப்பட்டுக் கொண்டிருந்ததை நான் கவனித்தேன். உள்ளே இரண்டு சிதைகள் தயாரிக்கப்பட்டுக் கொண்டிருந்தன. ஒரு சிதையின்மீது இளவரசன் மேகநாதனின் உடல் வைக்கப்பட்டிருந்தது. இன்னொன்றின்மீது இருந்த உடல் சந்தேகமின்றி என் பருத்த மகனுடையதுதான். மூடப்பட்டுக் கொண்டிருந்த கதவுகளை நோக்கி நான் ஓடினேன். எப்படியாவது உள்ளே நுழைந்துவிட வேண்டும் என்ற தவிப்பில், கூட்டத்தினரை முட்டித் தள்ளிக் கொண்டும் கத்திக் கொண்டும் ஓடி, அரண்மனை வாசலை எப்படியோ அடைந்துவிட்டேன். வியர்வையில் தொப்பலாக நனைந்திருந்த காவலாளிகள், கட்டுக்கடங்காத கூட்டத்தினரைக் கையாண்ட பிறகு, எரிச்சலோடும் களைப்பாகவும் காணப்பட்டனர். கதவுகளுக்கு இடையே இருந்த சிறிய இடைவெளியின் ஊடாக நான் உள்ளே நுழைய முயற்சித்தேன், ஆனால் இரக்கமற்ற முறையில் அவர்கள் என்னை வெளியே தள்ளினர். என் வழியைத் தடுத்தக் காவலாளியின் முகத்தின்மீது நான் ஓங்கிக் குத்தினேன். என் வலிமையைக் கண்டு நானே ஆச்சரியப்பட்டேன். ஆஜானுபாகுவாக இருந்த அந்தக் காவலாளி, முதியவனான என்னால் தாக்கப்பட்டு மண்ணில் மல்லாக்க விழுந்து கிடந்தான். அங்கு என்ன நடந்திருந்தது என்பதை மற்றக் காவலாளிகள் புரிந்து கொள்வதற்குள், நான் அவர்களைக் கடந்து ஓடினேன். என்னைத் தொடர்ந்து, எனக்குப் பின்னால் இருந்தவர்களும் உள்ளே நுழைய முயற்சித்தனர். இதனால், மற்றக் காவலாளிகள் அவர்களைத் தடுத்துச் சண்டையிடுவதில் மும்முரமடைந்தனர். இந்தக் குழப்பத்தில், நான் என் மகனின் சிதையை அடைந்தேன்.

அரசன் அவனுக்காக ஏற்பாடு செய்திருந்த, சந்தனக் கட்டைகளால் ஆன சிதையின்மீது என் மகன் அமைதியாகப் படுத்துக் கிடந்தான். அவனுடைய உடலின்மீது நூற்றுக்கணக்கான காயங்கள் இருந்தன.

அவனுடைய முகம் தனது பட்டிக்காட்டு வசீகரம் முழுவதையும் தொலைத்திருந்தது. மரணத்தில் அவன் ஓர் அசிங்கமான அரக்கனைப்போலத் தோன்றினான். ஆனாலும் அவன் என் மகன். என் வாழ்வின் ஒரே நோக்கம் அவன்தான். எந்த அரசனும் அவனை என்னிடமிருந்து பறிக்க நான் அனுமதிக்கப் போவதில்லை. அவன் உயிரோடு இருந்தபோது அவர்கள் அவனை என்னிடமிருந்து எடுத்துச் சென்றிருந்தனர். அவன் இறந்த பிறகும், என்னால் எட்ட முடியாத இடத்திற்கு அவர்கள் அவனை எடுத்துச் சென்று கொண்டிருந்தனர். எங்களுடைய சிறிய குடிசையில் அவனுடைய தாயார் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். நான் என் மகனைத் தனது தாயிடம் கொண்டு போய்ச் சேர்ப்பதை எந்த ராவணனாலும் தடுத்து நிறுத்த முடியாது.

துயரமும் வருத்தமும் தோய்ந்த முகத்துடன் அரசன் அங்கு நின்றார். அரசியார் தலைவிரி கோலமாகத் தரையில் கிடந்து, உடல் குலுங்க அமைதியாக அழுது கொண்டிருந்தார். ஒருசிலர், அந்த இரண்டு சிதைகளிலும் கூடுதல் சந்தனக் கட்டைகளை அடுக்கிக் கொண்டிருந்தனர். என் மகனுக்கு இந்த அரண்மனையில் ஆரம்பத்திலிருந்தே ஒருபோதும் எந்த இடமும் இருந்ததில்லை. அவன் உயிரோடு இருந்த காலத்தில், அவன் என் பேச்சிற்குச் செவிசாய்க்கவில்லை. அவன் இந்த அரண்மனையில் வெறுமனே ஒரு நாயாக இருந்தான். மரணத்திலாவது தன் ஆண்மைத்தன்மையை அவனால் திரும்பப் பெற முடியும். நான் நேராக அரசனிடம் சென்று அவரைத் துணிச்சலாக எதிர்கொண்டேன். நான் அவரைப் பார்த்துக் குனிந்து வணங்கவும் இல்லை. “அவர் என் தலையை வேண்டுமானால் கொய்து கொள்ளட்டும்!”

“எனக்கு என் மகன் வேண்டும்,” என்று நான் அவரிடம் கூறினேன். ஆனால் அவர் என்னை வெறுமனே உற்றுப் பார்த்தார். நான் கூறியது அவருடைய காதுகளில் விழுந்ததுபோலத் தெரியவில்லை.

“என் மகன் திரும்ப எனக்கு வேண்டும்,” என்று நான் கத்தியது எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது. நான் அங்கு இருந்த உணர்வு அரசனுக்கு இருக்கவில்லை என்பதுபோலத் தோன்றியது. “அவரது தலைமுடியைப் பிடித்து இழுத்து, அவருடைய காதுக்குள் நான் கத்த வேண்டுமா?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். நான் அதைச் செய்வதற்கான மனநிலையில் இருந்தேன். அரசன் மெதுவாக என் முகத்தைப் பார்த்தார்.

நான் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் விம்மினேன். அவர் தன் கையை என் தோளின்மீது வைத்தார், ஆனால் நான் அதை

உதறிவிட்டு, "என் மகனை என்னிடம் திருப்பித் தாருங்கள்!" என்று கத்தினேன்.

அரசியார் தன் துயரத்திலிருந்து உலுக்கப்பட்டு, எங்களிடம் வந்தார். "ராவணா," என்று அவர் மெதுவாக அழைத்தார். பேசுவதே தனக்கு வலி ஏற்படுத்தியதுபோல, அரசியார், "அவனுடைய மகனை அவனிடம் கொடுத்துவிடுங்கள். அவன் அவனைக் கொண்டு போகட்டும்," என்று மெதுவாகக் கூறினார்.

அரசனின் முகம் கோபத்தில் சிவந்தது. "அவன் என் மகன்," என்று அவர் தன் மனைவியிடம் கிசுகிசுப்பான குரலில் கூறினார்.

"இல்லவே இல்லை. அவன் உயிரோடு இருந்தபோது நீங்கள் அதைக் கூறியிருக்க வேண்டும். மேகநாதன்தான் உங்களுடைய மகன். வேறு யாரும் உங்கள் மகனல்ல. நீங்கள் உங்கள் தவறை ஒப்புக் கொண்டு, அவன் குழந்தையாக இருந்தபோதே அவனை இந்த அரண்மனைக்குள் கூட்டி வைத்திருந்தால், மேகநாதனை வளர்த்ததுபோலவே நான் அவனையும் வளர்த்திருப்பேன். ஆனால் நீங்கள் அவனை கைவிட்டீர்கள். இப்போது அவன்மீது நம்மால் உரிமை கொண்டாட முடியாது. உண்மையில், அவன்மீது நமக்கு ஒருபோதும் எந்த உரிமையும் இருந்ததில்லை."

ராவணன் தன் கண்களில் கோபம் கொப்பளிக்க என்னைப் பார்த்துவிட்டு, பிறகு தன் மனைவியைப் பார்த்தார். ஆனால் அரசியார் அவரைக் கண்ணிமைக்காமல் நேருக்கு நேர் பார்த்தார். ராவணனை எதிர்கொள்வதற்கான துணிச்சல் எனக்கு இருக்கவில்லை. எனவே நான் என் விம்மல்களில் என்னை மறைத்துக் கொண்டு, வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டேன்.

"அவனை எடுத்துக் கொண்டு போ. அவன் என் மேகநாதனின் நண்பனாக இல்லாமல் போயிருந்தால், ஒரு நாய்கூட அவனது மரணத்தின்மீது அக்கறை காட்டியிருக்காது," என்று அந்த மாபெரும் பேரரசர் என் காதில் கோபமாகக் கிசுகிசுத்தார்.

"ஆம், அரசே! உங்களுக்காக உயிர் நீத்த என் மகனைப் போன்ற இளைஞர்களின் மரணம் குறித்து ஒரு நாய்கூட அக்கறை காட்டாது என்பது எனக்குத் தெரியும். நீங்கள் வழங்குகின்ற வட்ட வடிவப் பதக்கங்களும், உங்களுக்காகத் தங்கள் உயிர்களைத் துறக்கின்றவர்களின் குடும்ப உறுப்பினர்களுக்கு நீங்கள் கொடுக்கின்ற சில்லறை வேலைகளும், ததும்பி வழிந்து கொண்டிருக்கின்ற உங்களுடைய பணப் பெட்டகங்களிலிருந்து நீங்கள் தூக்கி எறிகின்ற அற்பமான இழப்பீடுகளும், உங்களுக்காக இறப்பதற்கு இன்னும் அதிக நாய்களைக் கவர்ந்திழுப்பதற்காக அவற்றுக்கு நீங்கள் போடுகின்ற

எலும்புத் துண்டுகளேயன்றி வேறெதுவும் இல்லை. என்னுடைய நாய்க்குட்டியை நான் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்கிறேன். அவன் தன் கடமையைச் செய்துவிட்டான். தாய்நாடு, இனப் பெருமை போன்ற உருவமற்ற நோக்கங்களுக்காக இறப்பது எவ்வளவு புகழ்மிக்கது என்பதை இளைஞர்களுக்கு நீங்கள் காட்டினீர்கள். இறந்தவர்களுக்கு இப்படிப்பட்ட ஒரு பெரிய ஊர்வலத்தை ஏற்பாடு செய்ததன் மூலம் நீங்கள் அவர்களை கௌரவப்படுத்தினீர்கள். ஆனால் பொதுமக்களை முட்டாளாக்கினீர்கள். தங்கள் தாய்நாட்டிற்காகத் தங்கள் உயிர்களைத் தியாகம் செய்த இளைஞர்களை இந்த நாடு மறந்துவிடவில்லை என்பது குறித்து எல்லோரும் மகிழ்ச்சியாக இருக்கின்றனர். அரசே, நீங்கள் ஒரு பிரம்மாண்டமான நாடகத்தை நடத்தியிருக்கிறீர்கள். இப்போதும் உங்களுடைய அற்பமான எலும்புகளாலும், இரண்டு நிமிடப் புகழாலும், தெரு முனையில் கல்லாலான ஒரு நினைவுச்சின்னத்தாலும் ஈர்க்கப்பட்டு, இன்னும் அதிகமான இளைஞர்கள் உங்களுக்காகத் தங்கள் உயிர்களைக் கொடுக்க முன்வருவார்கள். அந்த நினைவுச் சின்னங்கள் நாய்கள் சிறுநீர் கழிப்பதற்குத் தவிர வேறு எதற்கும் பயன்படாது. என் மகன் உங்கள் குறிக்கோளை நிறைவேற்றியிருக்கிறான். இப்போது நான் அவனை அவனது தாயாரிடம் அழைத்துச் செல்கிறேன்.”

நான் இது எதையும் கூறவில்லை. எனக்குத் துணிச்சல் இருந்திருந்தால், பிறகு என்னைப் போன்ற பலருக்கும் அதை எதிரொலிப்பதற்கான துணிச்சல் இருந்திருக்கும். அப்போது இவ்வுலகில் எந்த ராவணன்களும் ராமன்களும் எஞ்சியிருந்திருக்க மாட்டார்கள். நான் எனது அருமை மகனின் தளர்வான உடலருகே சென்று, அவனைக் கட்டியணைத்தேன். பிறகு நான் அவனைத் தூக்க முயற்சித்தேன், ஆனால் நெடுங்காலத்திற்கு முன்பே அவன் மிகப் பெரிதாக வளர்ந்திருந்தான். என் மகனைத் தூக்குவதற்கு இரண்டு வீரர்கள் எனக்கு உதவினார்கள். அதிகாயனின் உடல் விறைத்துப் போயிருந்தது. அவனுடைய எடை என்னால் சுமக்க முடியாத அளவுக்கு மிக அதிகமாக இருந்தது. ஒரு தள்ளுவண்டி என்னருகே இழுத்துக் கொண்டுவரப்பட்டது. அதில் நான் என் மகனைப் பாந்தமாகக் கிடத்தினேன். என் கைகளில் நரம்புகள் வலிக்க, அந்தக் கனத்தச் சுமையை நான் என் சிறிய குடிசையை நோக்கி இழுத்தேன். அவனைப் பார்ப்பதற்காக அவனுடைய தாயார் காத்துக் கொண்டிருந்தாள்.

நான் அரண்மனைக் கதவுகளைக் கடந்த நேரத்தில், மேகநாதனின் சிதைக்கு அவனது தந்தை நெருப்பு மூட்டியபோது, பெண்கள் பெருங்குரலெடுத்து ஓலமிட்டது என் காதுகளில் விழுந்தது.

ராஜவீதியிலிருந்து திரும்பி, என் வீட்டிற்கு இட்டுச் சென்ற அழுக்கான, கரிய தெருக்களுக்குள் நான் அடியெடுத்து வைத்தபோது, அசுரர்களின் இளவரசன் ஓர் அடர்த்தியான, சுருண்ட புகையாக மாறியிருந்தான். அவனுடைய தோழனும் வேலைக்காரனும் மாற்றாந்தாயின் மூலமாகப் பிறந்த சகோதரனுமான என் மகனின்மீது இந்த ஏழை அசுரன் உரிமை கோரியபோது, அவன் முற்றிலுமாக மறக்கப்பட்டான். என் மகனின் உயிரற்ற உடல் இருந்த வண்டியை இழுத்துக் கொண்டு நான் தனியாக நடந்தேன். வெயில் சுட்டெரித்தது. என் உடல் நெடுகிலுமிருந்த ஒவ்வொரு நுண்ணிய துளையிலிருந்தும் வியர்வை வழிந்தது. என் அண்டைவீட்டாரையோ அல்லது நண்பர்களையோ நான் பார்க்கவில்லை. அவர்கள் எல்லோரும் இளவரசனின் இறுதிச் சடங்கைக் கண்டுகளிப்பதற்காகச் சென்றிருந்தனர்.

நான் என் வீட்டை நெருங்கியபோது, முன்பொரு காலத்தில் மிக அழகாக இருந்த என் மனைவி, வாசல் கதவருகே குனிந்து அமர்ந்திருந்தைக் கண்டேன். தன் மகன் திரும்பி வருவதற்காக ஆர்வத்தோடு காத்திருந்த அவள், எங்களை நோக்கி விரைந்து வந்தாள். ஆனால் வண்டியில் கிடந்த தன் மகனைப் பார்த்ததும், அவளுடைய மகிழ்ச்சி மறைந்து, அதிர்ச்சி அங்கு குடியேறியது. பிறகு தனது மகன் இறந்துவிட்டிருந்ததை அவள் மறுத்தாள். இறுதியில், அவனுடைய கொடூரமான தலைவிதியை அவள் ஏற்றுக் கொண்டாள். அவள் அதிகாயனின் உடலின்மீது விழுந்து, அவன்மீது ஓங்கிக் குத்தினாள், அவனை பலமாக உலுக்கினாள். துயரம் தாளாமல் அவள் தன் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு அலறினாள்.

ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்த தாயையும் இறந்து போன அவளுடைய மகனையும் நான் அவர்களுடைய உலகத்தில் விட்டுவிட்டு, ஆக வேண்டியிருந்த காரியங்களைப் பார்க்கப் போய்விட்டேன். நான் என் மகனுக்கு ஒரு நல்ல இறுதிச் சடங்கை நடத்த விரும்பினேன். சூரியன் மறைந்து கொண்டிருந்தான். சூரியன் முழுவதுமாக மறைவதற்குள் நான் அவனுடைய காரியத்தைச் செய்து முடிக்க விரும்பினேன். தொடர்ந்து துயரத்தில் இருந்து நான் களைத்துப் போயிருந்தேன். என் மகன் இறந்துவிட்டான். அது நான் இறக்கும்வரை என் இதயத்தில் ஒரு கல்லாக நீடித்திருக்கும். அவனை எரிப்பதற்கு ஏதேனும் விறகுகள் இருக்குமா என்று நான் தேடினேன். ஆனால் ஒரு விறகுகூட அங்கு இருக்கவில்லை. நாங்கள் சமைத்து நெடுங்காலம் ஆகியிருந்தது. நான் அவ்வப்போது பிடித்து வந்த எலிகளோ, துரதிர்ஷ்டக்கார அணில்களோ அல்லது என் வழியில் குறுக்கிட்ட முயல்களோதான் எங்கள் உணவாக இருந்தது. தூரத்தில்,

கூட்டத்தினரின் அழுகை எனக்குக் கேட்டது. மேகநாதனின் வீரத்தைப் பற்றிப் பெருமையாகப் புலம்பி அழுத ஒருவனின் குரலும் எனக்குக் கேட்டது. கூட்டம் அவனை ஆமோதித்து, பதிலுக்குப் பெரிதாக உறுமியது. அவர்களுடைய கோஷங்களின் சத்தம் அதிகரிக்க அதிகரிக்க, என்னுடைய கோபமும் அதிகரித்தது. எல்லாம் எனக்கு வெறுப்பூட்டியது. என் இனத்தையும், நாங்கள் பரம ஏழைகளாக இருந்ததையும், தனது இளவரசனுக்காக முட்டாள்தனமாக இறந்து போயிருந்த எனது மகனை எரிப்பதற்கு விறகுகள்கூட இல்லாமல் போன எனது நிலையையும் நான் வெறுத்தேன்.

என்னுடைய ஏழ்மையான அரண்மனையைத் தாங்கிய முக்கியத் தூணின்மீது நான் எனது கோடாலியை இறக்கியபோது, ராவணனின் முகத்தை என் மனத்தில் நினைவுபடுத்தினேன். அடுத்து நான் அத்தூணைத் தாக்கிய ஒவ்வொரு முறையும், நான் பார்த்திருந்த அல்லது கேள்விப்பட்டிருந்த மாபெரும் மனிதர்களின் தலைகளை ஒவ்வொன்றாக நான் வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்ததுபோல நான் கற்பனை செய்தேன். என் மனைவி தன் ஒப்பாரியை நிறுத்திவிட்டு, என்னிடம் ஓடி வந்து, எனக்குப் பைத்தியம் பிடித்திருந்ததாகக் கூறி என்னைப் பார்த்துக் கத்தினாள். நான் தொடர்ந்து என் அரண்மனையைத் துண்டுதுண்டாக ஆக்கிக் கொண்டிருந்தேன். அது இப்போது ஒரு விளையாட்டாக மாறியிருந்தது. அதை நான் முழுவதுமாக ரசித்தேன். நான் ஒவ்வொரு முறை ஒரு துண்டை வெட்டியபோதும், விபீஷணன், கும்பகர்ணன், பிரஹஸ்தன், ராமன், லட்சுமணன், சீதை, மண்டோதரி, ஜம்புமாலி, வித்யுத்ஜீவன், குபேரன், வருணன் ஆகியோரை என் மனத்தில் கற்பனை செய்தபடி வெட்டினேன். ஆனால் நான் அவர்களுடைய தலைகளைச் சீவுவதற்குள், பெரும் சத்தத்துடன் என் குடிசை மொத்தமாகக் கீழே விழுந்தது.

என்னுடைய அன்பு மகனைச் சுமந்து நின்ற தள்ளுவண்டியை நோக்கி நான் விரைந்தேன். பிறகு, இடிந்து விழுந்து கிடந்த என் குடிசைக்குள் அந்த வண்டியை நான் தள்ளினேன். வண்டி தலைகீழாகக் கவிழ்ந்தது. அதிகாயனின் உடல், குவியலாகக் கிடந்த மரத் துண்டுகளின்மீது உருண்டு விழுந்தது. நான் என்னுடைய அண்டைவீட்டுக்காரனின் வீட்டிற்குச் சென்றேன். அவனுடைய வீட்டின் பூசை அறையில் எப்போதும் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நான் அவனுடைய வீட்டின் கதவைத் தள்ளித் திறந்து, அச்சிறிய விளக்கு இருந்த மூலைக்கு விரைந்தேன். நான் என் வேட்டியை எடுத்து எண்ணெயில் நனைத்தேன். அது உடனடியாக நெருப்புப் பிடித்தது. எரிந்து கொண்டிருந்த வேட்டியைத் தூக்கிக் கொண்டு நான் வெளியே

ஓடினேன்.

ஒருசில நிமிடங்களுக்கு முன்புவரை எங்களுடைய வீடாக இருந்திருந்த இடிபாடுகளிலிருந்து தனது சிறிய பொக்கிஷங்களை மீட்க என் மனைவி முயற்சித்துக் கொண்டிருந்தாள். நான் அவளை விலக்கித் தள்ளிவிட்டு, மதமதவென எரிந்து கொண்டிருந்த அந்தத் துணியை அந்தக் குவியலின்மீது எறிந்தேன். நான் எறிந்த வேகத்தில் அந்த நெருப்பு அணைந்தபோது ஒரு கணம் நான் மூச்சைப் பிடித்து நின்றேன். பிறகு, வெஞ்சினத்தோடு, அந்த நெருப்பு கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. எனக்குச் சொந்தமான அனைத்தையும் அது கபளீகரம் செய்தது. அது என் மகனை விழுங்கியது. அதிகாயன் தன் இளவரசனைப் பின்தொடர்ந்து போய்விட்டிருந்தான். தனது சகோதரனைப்போலவே, அவனும் ஒரு வீர மரணம் எய்தியிருந்தான். ஆனால் அவன் கருத்தத் தோலுடன் பிறந்து, நகரின் தவறான பகுதியில் வளர்ந்திருந்ததுதான் அவன் செய்திருந்த மிகப் பெரிய குற்றம். எனவே, அவனைப் புகழ்ந்து முழக்கமிடுவதற்கோ, உடன் முழங்குவதற்கோ அவனுக்கு யாரும் இருக்கவில்லை. ஆனால் நெருப்பு மட்டும் எந்தப் பாரபட்சமும் இல்லாமல் நடந்து கொண்டது. என் மகனையும் அரசனின் மகனையும் அது ஒரே மாதிரிதான் விழுங்கியது. அது எல்லாவற்றையும் சுத்தமாக வழித்துத் துடைத்ததைக் கண்டு நான் திருப்தியடைந்தேன். சூடான கண்ணீர், ஒட்டிப் போன என்னுடைய கன்னங்களைச் சுட்டன. நெருப்பு முற்றிலுமாக அணைந்து, சாம்பல்கள் இலங்கையின் செந்நிற மண்ணில் விழுந்தபோது, வானம் உடைந்து பேய்மழை பெய்யத் துவங்கியது. மழையின் சீற்றம் குறைந்தபோது, என் மகன் மற்றும் என் வீட்டின் எச்சசொச்சங்களை அது முழுவதுமாக அடித்துச் சென்றிருந்தது. என் இழப்பு என் மனத்தில் எங்கோ ஒரு மூலையில் ஒரு மந்தமான வலியாக மாறியிருந்தது. நான் எங்கள் மகனின் சிதைக்குத் தீ மூட்டியபோது என் மனைவி எந்த இடத்தில் கிடந்தாளோ, அந்த இடத்தைவிட்டு அவள் சிறிதுகூட அசைந்திருக்கவில்லை. எனக்குப் பசித்தது. ஒருவேளை, அரண்மனைக் கதவுகளுக்கு வெளியே ஏழைகளுக்கு இப்போது உணவு வழங்கப்பட்டுக் கொண்டிருக்கக்கூடும். இப்படிப்பட்டச் சமயங்களில் அது வழக்கமாக நிகழ்ந்த ஒன்றுதான். நான் எழுந்து நின்று, என் உடலைக் குலுக்கினேன். நான் வேகமாகச் சென்றால், ஒருவேளை எனக்கு ஒரு சாப்பாட்டுப் பொட்டலம் கிடைக்கக்கூடும். எனக்கு அதிர்ஷ்டம் இருந்தால், என் மனைவிக்கும் ஒரு பொட்டலத்தை என்னால் கொண்டு வர முடியும். யாரேனும் எனக்குச் சிறிது மதுவையும் கொடுக்கக்கூடும். நான் அரண்மனையை நோக்கி நடக்கத் துவங்கினேன்.



# 58

## ஓர் அரசன் என்ற முறையில் நான் தோற்றுப் போயிருந்தேனா?

ராவணன்

எதிரி மிக அருகில் இருந்தான். முடிவை என்னால் பார்க்க முடிந்தது, ஆனாலும் அதை நான் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. நேற்று நான் என் மகனின் சிதைக்குத் தீ மூட்டினேன். இப்போது மரணம்வரை ராமனோடு சண்டையிடுவதைத் தவிர, செய்வதற்கு வேறு எதுவும் இருக்கவில்லை — அது அவனுடைய மரணமாக இருக்கலாம் அல்லது என்னுடையதாக இருக்கலாம். “ஆனால் நான் எதற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தேன்? என் சாம்ராஜ்யம் நொறுங்கி விழுந்துவிட்டிருந்தது, என் மகன் இறந்து போயிருந்தான், என் அரசியின் கௌரவம் வீதிக்கு வந்திருந்தது. இப்போது என்ன மிச்சமிருந்தது?” என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். நான் கவனமாகத் திட்டமிட்டுக் கட்டியிருந்த இந்த அழகான நகரமும், நெடுங்காலத்திற்கு முன்பு தேவர்களிடமிருந்து நான் சூறையாடியிருந்த புதையல்களும், என் எதிரியின் மனைவியாக இருந்த மகளும் மட்டுமே இப்போது எனக்கு

எஞ்சியிருந்தனர்.

ஆனால், என்னிடமிருந்து ஒவ்வொன்றாகப் பறிபோய்க் கொண்டே இருந்ததால், என்னிடம் எஞ்சியிருந்தவற்றை நான் இன்னும் இறுக்கமாகப் பற்றிக் கொண்டேன். ஆனாலும், கடற்கரையில் உள்ள பாறையின்மீது கடலின் அலைகள் தொடர்ந்து வந்து மோதுவதுபோல, என்மீது அடிமேல் அடியாக விழுந்தது. நான் காயப்படுத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். நான் உள்ளுக்குள் மிகவும் தளர்வுற்றுக் கொண்டிருந்தேன். வாழ்வதற்கான விருப்பம் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போனது. நான் பொக்கிஷமாக மதித்த விஷயங்கள் இப்போது அர்த்தமற்றவையாக ஆகியிருந்தன. வடக்கிலிருந்த ஒரு முக்கியத்துவமற்ற சாம்ராஜ்யத்தின் பக்குவமற்ற இளவரசன்தான் ராமன். என் மகன் மேகநாதனைவிட ஒருசில வருடங்கள் மூத்தவன் அவன். இந்தியா இதுவரை பார்த்திராத ஒரு பேராற்றல்மிக்கப் பேரரசன் நான். அயோத்தி ஓர் அடிமை மாநிலம். ஆனால் என்னுடைய சாம்ராஜ்யம் எப்படி இப்படிச் சுக்குநூறாக நொறுங்கியது? வாலியின் மரணம்தான் எல்லாவற்றையும் புரட்டிப் போட்டிருந்ததா? அல்லது விபீஷணனின் நம்பிக்கைத் துரோகம்தான் அதற்குக் காரணமா? என்னுடைய கண்ணோட்டத்தை நான் எப்போது தொலைத்தேன்? பொருளாதாரரீதியாகவும் கலாச்சாரரீதியாகவும் தொழில்நுட்பரீதியாகவும் நாங்கள் மிக மேன்மையான நிலையில் இருந்தும்கூட, எங்களுக்கிடையே நிரந்தரமாக நிலவிய உட்பூசல்களால், அசுர சாம்ராஜ்யங்கள் அனைத்தும் தேவர்கள் வசமாயின. எங்களுடைய வரலாற்றையும் என் மக்களைப் பற்றியும் எனக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. நான் என் சாம்ராஜ்யத்தை ஓர் இரும்புக் கரத்துடன் ஆண்டு வந்திருந்தேன். நம்பிக்கையான மக்களை மட்டுமே அதிகாரம் நிறைந்த பதவிகளில் நான் அமர்த்தியிருந்தேன். யாரெல்லாம் தீவினைக்கு அஞ்சாதவர்கள் என்றும், என் அரியணையை அபகரிக்க முயற்சித்துக் கொண்டிருந்தார்கள் என்றும், பின்னாளில் அவர்கள் எனக்கு எதிராகத் திரும்பக்கூடும் என்றும் நான் சந்தேகப்பட்டேனோ, அவர்கள்மீது நான் எப்போதும் ஒரு கண் வைத்திருந்தேன். எப்பேற்பட்ட ஒரு முட்டாள் நான்.

பிரஹஸ்தனைப் போன்றவர்களை நான் கண்காணித்தேன். கும்பகர்ணன் எப்போதும் மது மற்றும் போதை மருந்துகளின் உலகில் விழுந்து கிடப்பதை நான் உறுதி செய்தேன். ருத்ராக்கனைப்போல இயல்பாகவே கொடூரமான மனிதர்களுக்கு அளவுக்கதிகமான அதிகாரம் கிடைக்காதபடி நான் பார்த்துக் கொண்டேன். 'ஏழு கடல்களின் தளபதி,' 'அசுரக் கடற்படையின் ஆணை அதிகாரி' போன்ற

கவர்ச்சிகரமான பட்டங்களைக் கொடுப்பதன் மூலம் வருணனைப் போன்ற ஒரு கடற்கொள்ளையனை என்னால் விலைக்கு வாங்கிவிட முடியும் என்று நான் முட்டாள்தனமாக நம்பினேன். நான் என் சகோதரியின் கணவனான வித்யுத்ஜீவனைக் கொன்றிருந்தேன். சமயப்பற்றுக் கொண்டவனைப்போலத் தோன்றிய விபீஷணன் போன்ற மக்களும், கணக்கர்களின் உலகில் மூழ்கியிருந்த, அதிகார மனப்பான்மை கொண்டவனைப்போலத் தோன்றிய ஜம்புமாலி போன்றவர்களும், தன் நாட்டின்மீதும் தன் அரசன்மீதும் தான் கொண்டிருந்த அன்பையும் பாசத்தையும் வெளிப்படையாகத் தெரிவிப்பதற்கு ஒருபோதும் சளைக்காத லங்கினி போன்ற பெண்களும் எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்திருந்தனர். பேராற்றல் வாய்ந்த நண்பர்கள் எனக்கு இருந்தனர், ஆனால் தேவை எழுந்தபோது நான் தனிமரமாக நின்றேன். என் சாம்ராஜ்யம் எஃகால் உருவாக்கப்பட்டிருந்ததாக நான் நினைத்தேன், ஆனால் ஒரு புயல் வந்தபோது, அது வெறும் வைக்கோலால் கட்டப்பட்டிருந்ததை நான் கண்டுபிடித்தேன். நான் யாரையெல்லாம் நம்பியிருந்தேனோ, அவர்கள் அனைவரும் எனக்குத் துரோகம் இழைத்தனர். என்னுடைய உளவுத்துறை குறித்து நான் மிகுந்த பெருமிதம் கொண்டிருந்தேன். அப்படியிருக்கும்போது, மக்களை எடைபோடுவதில் இப்படிப்பட்ட அடிப்படைத் தவறுகளை நான் எப்படிச் செய்தேன்?

நான் மீண்டும் முதலிலிருந்து துவக்க விரும்பினேன், ஆனால் இரண்டாவது வாய்ப்பு வரும் அளவுக்கு வாழ்க்கை அவ்வளவு நீண்டதல்ல. எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப்பட்டிருந்தது. அதை நான் என் இரண்டு கைகளாலும் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன். நான் மாபெரும் சாம்ராஜ்யம் ஒன்றை உருவாக்கியிருந்தேன். ஆனால் இப்போது, காலங்கள் மாறியிருந்தன. என்னைச் சுற்றி இருந்த அனைத்துமே சுக்குநூறாகிக் கொண்டிருந்தன. எனக்கு எந்தப் பின்வருத்தமும் இருக்கவில்லை. நான் ஒரு முழுமையான வாழ்க்கையை வாழ்ந்திருந்தேன். இந்த சுயபச்சாதாபம் போதும். என்னால் முடிந்த அளவுக்குச் சிறப்பாகச் செய்வதற்கான நேரம் வந்திருந்தது. நான் தோற்கக்கூடும், ஆனால் என் மக்களுக்குக் கடைசி முறையாக ஒரு பிரம்மாண்டமான தோல்வியைக் கொடுக்க வேண்டியது எனது கடமை என்பதை நான் அறிந்தேன். அவர்கள் மட்டும்தான் எனக்கு எந்தத் துரோகமும் செய்திருக்கவில்லை. அவர்கள் எனக்குக் கொடுத்திருந்த அன்பிற்குப் பதிலாக, நான் அவர்களுக்கு என்ன செய்தேன்? என் அசுரர்களுக்காக நான் ஒரு மாபெரும் சாம்ராஜ்யத்தை உருவாக்கியிருந்தது குறித்து நான் பெருமைப்பட்டேன். அவர்களுக்கு

நான் மதிப்பையும் சுதந்திரத்தையும் கொடுத்திருந்ததாக நான் நினைத்தேன், ஆனால் ஒருவேளை நான் தவறு இழைத்திருக்கக்கூடும். நான் கருணையுள்ளத்தோடுகூடிய ஒரு கொடுங்கோலனாக இருந்தேன், ஆனால் நிச்சயமாக நான் ஒரு மகாபலியாக இருக்கவில்லை. நான் என் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்திருக்கவில்லை. மக்களுடைய துயரங்களை நான் கண்டுகொள்ளாமல் இருந்துவிட்டேன். பெரிய நகரங்கள், பிரம்மாண்டமான கோவில்கள், அகலமான சாலைகள், சிறப்பான துறைமுகங்கள், பெரிய கப்பல்கள், அதிகரிக்கப்பட்ட வாணிகம், மேம்படுத்தப்பட்ட வியாபாரம், உலக அளவில் என் நாட்டைப் பிரபலப்படுத்துவது, எனது நாட்டை உலகிலேயே மிகப் பெரிய பணக்கார நாடாக ஆக்குவது போன்றவை குறித்து நான் மும்முரமாக உழைத்துக் கொண்டிருந்தபோது, எளிமையான, அடிப்படையான ஒன்றை நான் மறந்துவிட்டேன். நான் என் மக்களை மறந்துவிட்டேன். மினுமினுப்பான நகரங்கள்தான் முன்னேற்றத்தின் அடையாளச் சின்னங்கள் என்று நான் நினைத்தேன். சாக்கடைகளில் வாழ்ந்த மக்களைப் பற்றி நான் மறந்துவிட்டேன். நான் ஆடம்பரமான விருந்துகளைக் கொடுத்தபோது, என்னுடைய மக்களில் பெரும்பாலானவர்களுக்குச் சாப்பாட்டிற்கே வழியிருக்கவில்லை என்பதை நான் மறந்தேன்.

பிரஹஸ்தன் இதை எனக்குச் சுட்டிக்காட்டியிருந்தான். ஆனால் அவ்விஷயம் குறித்தப் பேச்சு எனக்குச் சலிப்பூட்டுவதாக இருந்தது. செல்வம் தானாகவே கீழ்மட்டத்தைச் சென்றடையும் என்று நான் நினைத்தேன். தெருக்களில் நின்று தங்கள் எதிர்ப்புகளைத் தெரிவிப்பதற்கும், தங்கள் சிந்தனைகளை வெளிப்படுத்துவதற்கும் நான் என் மக்களுக்குக் கொடுத்திருந்த சுதந்திரம் அவர்களுக்குப் போதுமானதாக இருந்ததாகவும், அதைக் கொண்டு அவர்கள் திருப்தியடைவார்கள் என்றும் நான் நினைத்தேன். மக்களைத் தங்களுடைய படைபலத்தால் கட்டுப்படுத்தி, தங்களது ராணுவ ஆட்சியாலும் வெட்கங்கெட்டப் படுகொலைகளாலும் அவர்களை அச்சுறுத்தி, வெறும் கொடுங்கோலர்களாகவும் காட்டுமிராண்டிகளாகவும் இருந்த மற்ற ஆட்சியாளர்களைப்போல நான் இருக்கவில்லை என்பது குறித்து நான் பெருமிதம் கொண்டிருந்தேன். அரசன் அதிகாரம் கொண்டவனாக இருந்தாலும்கூட, கிராமங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டப் பஞ்சாயத்துக்களிடம்தான் உண்மையான அதிகாரம் இருக்கும்படியான ஓர் அமைப்புமுறையை அசுரர்களாகிய நாங்கள் உருவாக்கியிருந்தது குறித்து நான் பெருமை கொண்டிருந்தேன். இதை உலகிற்கான ஒரு மாதிரியாக நான்

நிலைநிறுத்தியிருந்தேன். நான் உதாசீனப்படுத்தியிருந்த ஏழைகளும் துரதிர்ஷ்டசாலிகளும்தான் எனக்கு ஆதரவாக இருந்தனர். தாங்கள்தான் அதிகமான இழப்பைச் சந்திக்க நேரிடும் என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். வாழ்வில் தங்களால் சிறந்து விளங்க முடியும் என்று தங்களுக்கு நம்பிக்கையூட்டிய சுதந்திரம் தங்களிடமிருந்து பறி போய்விடும் என்பதும் அவர்களுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. நான் அதிகக் கவனம் செலுத்தி ஆதரவு காட்டி வந்திருந்த பணக்காரர்களும் நடுத்தர வர்க்கத்தினரும் அப்பட்டமாக என் எதிரியின் பக்கம் சேர்ந்து கொண்டனர் அல்லது யுத்தத்தில் ஒருவன் முழுமையாக வெற்றி பெறுவதற்காக மதில்மேல் பூனையாகக் காத்திருந்தனர். அந்த வெற்றியாளன் யார் என்பது இன்று தீர்மானிக்கப்பட்டுவிடும்.

எனக்கு எதிராகச் செயல்பட்டுக் கொண்டிருந்த ஏதோ ஒரு சக்தி எல்லாவற்றையும் முன்கூட்டியே தீர்மானித்ததா? ஆனால் நான் என்ன தவறு செய்தேன் என்பதுதான் இன்னும் எனக்குத் தெரியவில்லை. மக்களை எடைபோடுவதில் நான் தவறுகளைச் செய்திருந்தேன், ஆனால் ஒரு மாபெரும் சாம்ராஜ்யம் நிலைகுலைவதற்குரிய காரணமாக அவை இருக்க வாய்ப்பில்லை. இது கேட்பதற்கு அபத்தமானதாக இருக்கலாம். ஆனால், பரிதாபமான மனிதர்களாகிய நாம், காற்றில் பறக்கும் சருகு போன்றவர்கள் என்பதையும், விஷயங்கள் திட்டமிட்ட முறையில் நடக்காமல் திடீர்த்திடீரென்று நடக்கின்றன என்பதையும் அறிந்து கொள்ளும் அறிவு முதிர்ச்சி என்னிடம் ஏற்பட்டிருந்தது. நான் ஒரு மிகப் பெரிய பாவி என்றும், அடுத்தவனுடைய மனைவியை என் அரண்மனையில் வைத்துக் கொள்வதற்கு எனக்கு எந்த உரிமையும் இல்லை என்றும் நடுத்தர வர்க்கத்தினர் கூறிக் கொண்டிருந்தனர். கடந்தகாலத்தில் நான் பல பெண்களைக் கற்பழித்திருந்ததாகவும், என் அந்தப்புரத்தில் இன்னும் ஏராளமான பெண்கள் இருந்ததாகவும் ஒரு வதந்தி உலா வந்தது. என்னுடைய அரசாங்கம் கறை படிந்தது என்றும், எனது அரசாங்க அதிகாரிகள் பொதுமக்களின் வயிற்றில் அடித்துப் பெரும் சொத்துக்களைக் குவித்திருந்தனர் என்றும் அவர்கள் கூறினர்.

நான்தான் உலகிலேயே மிகப் பெரிய முட்டாள். இவர்களுடைய தங்க முலாம் பூசப்பட்ட ரதங்கள் வேகமாகச் செல்வதற்காக, ஏழைகளின் குடிசைகளை இடித்துத் தள்ளி, அங்கு மாபெரும் சாலைகளை அமைத்து இவர்களை நான் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி இருந்தேன். புறம்பேசிய இந்தக் கும்பல்கள் தங்களது மாளிகைகளையும் இன்பத் தோட்டங்களையும் கட்டுவதற்காக விவசாயிகளைத் தங்களது வளமான நிலங்களிலிருந்து நான் விரட்டியிருந்தேன். நடுத்தர வர்க்கத்தினருக்கு அருவருப்பாக இருந்தது என்பதற்காக, நடைபாதையில் வசித்த

ஏழைகள்மீது எனது காவலர்களை நான் ஏவினேன். பிழைப்புத் தேடி என்னுடைய நகரங்களுக்குக் கூட்டங்கூட்டமாகப் படையெடுத்து வந்து, ஆங்காங்கே இருந்த வெற்றிடங்களில், ஒரு பணக்காரனின் ரதம் நிற்பதற்குத் தேவையானதைவிடக் குறைவான சின்னஞ்சிறிய இடத்தில் தன் ஒட்டுமொத்தக் குடும்பத்தையும் தங்க வைத்து வாழ்க்கை நடத்திய ஏழைகளை நான் துரத்தியடித்தேன். இந்தப் பணக்காரப் பெருச்சாளிகளின் நீரூற்றுகளுக்குத் தண்ணீர் தேவைப்பட்டது என்பதற்காக, வயல்களிலிருந்து தண்ணீரை எனது நகரங்களுக்குத் திசை திருப்பினேன். கிராமங்களுக்கு நீர்ப்பாசன வசதிக்காக இருந்த நதிகளை, இந்த மக்களின் அழகுக் குளியல்களுக்காக நகரங்களுக்குத் திசை திருப்பினேன். இதனால் ஏழைகள் தாகத்தால் தவிக்கவோ அல்லது மடியவோ நேரிட்டது. அல்லது, பணக்காரர்களுடைய வீட்டில் வேலைக்காரர்களாகவும் தோட்டக்காரர்களாகவும் சமையற்காரர்களாகவும் விறகு வெட்டிகளாகவும் இருப்பதற்காக நகரங்களுக்குக் கூட்டங்கூட்டமாகக் குடிபெயர நேரிட்டது.

பருத்துக் கொழுத்திருந்த வர்க்கத்தினருக்குப் பட்டாடைகள், தங்கம் மற்றும் அதிக விலையுயர்ந்த கற்களால் ஆன அணிகலன்கள் போன்றவற்றை விற்பனை செய்வதற்குப் பெரிய விற்பனை வளாகங்களைக் கட்டுவதற்காக எனது யானைகள் சிறிய குடிசைகளை இழுத்துக் கீழே தள்ளின. இந்தப் பரிவர்த்தனைகள் அனைத்தின் மூலமாகவும் நான் வசூலித்த வரிகளால் எனது கருவூலப் பெட்டகங்கள் நிரம்பி வழிந்தன. நான் அவர்களிடம் வரி வசூலித்ததால், அதிகமான சாலைகளை அமைத்துக் கொடுக்குமாறு அவர்கள் என்னைக் கட்டாயப்படுத்தினர். துறைமுகங்களில் தங்களுடைய சொகுசுப் படகுகளை நிறுத்துவதற்குப் போதிய இடங்கள் இல்லை என்று அவர்கள் குறை கூறினர். தங்களுக்குப் போதிய கேளிக்கை வாய்ப்புகள் இல்லையென்று அவர்கள் வெறுப்புக் கொண்டனர். இந்த நாட்டில் எதுவுமே ஒழுங்காகச் செயல்படவில்லை என்றும், ஒட்டுமொத்த அரசாங்கமும் மாசுபட்டிருந்தது என்றும் குறை கூறி, என்னுடைய ஆட்சியை நியாயப்படுத்தும் விதத்தில் தங்களுக்காக ஏதேனும் செய்யுமாறு அவர்கள் என்னிடம் வலியுறுத்தினர். எனவே நான் இன்னும் அதிகமான குடிசைகளை இடித்துத் தரைமட்டமாக்கினேன், அதிக அணைகளைக் கட்டினேன், ஏழை விவசாயிகளை அதிக எண்ணிக்கையில் வேறு இடங்களுக்குக் குடிபெயர வைத்தேன். இவற்றின் ஊடாக என்னுடைய நகரத்தை நெரிசல்மிக்க ஒன்றாக ஆக்கினேன். நான் பெரிய கோவில்களைக் கட்டினேன். அங்கு கடவுளின் பெயரில் பூசாரிகள் மக்களைச் சுரண்டினர். அதிக அகலமான

தெருக்களையும் நான் கட்டினேன். ஒரு வேளைச் சாப்பாட்டிற்கு வழியில்லாமல் துன்புற்ற மக்கள், மலர்களின் அழகை ரசிப்பதற்காகப் பல மலர்ச்செடிகளையும் நான் நட்டு வைத்தேன். மதுவும் பெண்களும் நிரம்பி வழிந்த இன்ப விடுதிகள் செயல்படுவதற்கு நான் அனுமதியளித்தேன். நான் நடுத்தர வர்க்கத்தினருக்குப் பிரியமானவனாக ஆனேன். அவர்களுடைய பாராட்டு எனக்கு போதையூட்டியது. வளர்ச்சிக்காக அவர்கள் என்னைப் புகழ்ந்தனர். நான் என் நாட்டை முன்னோக்கி எடுத்துச் சென்று கொண்டிருந்ததாக முட்டாள்தனமாக நினைத்தேன். நான் எனது நகரங்களின் ஜொலிப்பைப் பார்த்தேன், ஆனால் துயரம் சூழ்ந்த, துர்நாற்றம் வீசிய, அழுகிக் கொண்டிருந்த பகுதிகளின் இருட்டிற்கு என் கண்களை மூடிக் கொண்டேன். ஜொலிப்பு மட்டுமே முக்கியம் என்று நான் நம்பினேன்.

அப்போது ராமன் எங்கள் வாசலில் வந்து நின்றான். எல்லாமே தலைகீழாக மாறியது. எதிரி என்னை அழைத்த நேரத்தில், நடுத்தர வர்க்கத்தினர் சுவடு தெரியாமல் காணாமல் போயினர். அவர்கள் தங்கள் வீட்டு வரவேற்பறைகளுக்குள் தங்களைப் புதைத்துக் கொண்டனர். திடகாத்திரமான தங்களுடைய மகன்களை அரசாங்கத்திடமிருந்து ஒளித்து வைத்தனர். தேவைப்படும் நேரத்தில், அவர்களுடைய குழந்தைகள் தங்கள் நாட்டிற்காகத் தங்கள் உடல்களையும் மனங்களையும் தருவார்கள் என்ற நம்பிக்கையில், அக்குழந்தைகளின் கல்விச் செலவை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருந்தது. ஆனால் யாரும் தங்கள் நாட்டின் உதவிக்கு வரவில்லை. நாட்டுப்பற்று என்ற பெயரில், ஏழை விவசாயிகளும் நடைபாதைவாசிகளும் மட்டுமே தங்களுடைய மகன்களைத் தங்கள் தாய்நாட்டிற்காகத் தியாகம் செய்தனர். அயல்நாட்டில் கல்வி கற்ற, சமஸ்கிருத மொழி பேசிய, வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்த செல்வந்தர்கள், தங்கள் பதுங்குக் குழிகளுக்குள் இருந்து கொண்டு எனக்கு அறிவுரைகள் கொடுத்தனரே தவிர, வேறு எதையும் செய்யவில்லை. ஏழைகளுக்கு நான் எறிந்திருந்த எலும்புத் துண்டுகளுக்கு, அவர்கள் தங்கள் ரத்ததால் பதிலீடு செய்தனர். என்னுடைய தலைநகரம் எரிந்தபோது, அதை மீண்டும் கட்டியெழுப்புவதற்காக, நகரைச் சுற்றிலும் இருந்த நாட்டுப்புறங்களிலிருந்து உழவர்கள் ஒன்றுதிரண்டு வந்தனர். அவர்களில் சிலர், தங்களுக்குக் கிடைத்தவற்றையெல்லாம் கொள்ளையடிக்கவும் செய்தனர். ஆனால் அதைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுமாறு முதன்முறையாக நான் என் காவலர்களுக்கு உத்தரவிட்டேன்.

எனக்கு ஓர் இரண்டாவது வாய்ப்புக் கிடைத்தால்,

பணக்காரர்களுக்கு நான் ஒரு பாடம் கற்றுக் கொடுப்பேன். ஒருவன் ஒரு பணக்கார வணிகனின் மகனாக இருந்தாலும் சரி, ஓர் அருவருப்பான பூசாரியின் மகனாக இருந்தாலும் சரி, அல்லது ஒரு பிசைக்காரனின் மகனாக இருந்தாலும் சரி, ராணுவச் சேவையை அவனுக்கு நான் கட்டாயமான ஒன்றாக ஆக்கியிருப்பேன். தொழில்நுட்பப் பள்ளிகளிலும் மருத்துவப் பள்ளிகளிலும் படித்துப் பட்டம் பெற்று வெளியே வரும் ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் ஐந்து ஆண்டுகள் கிராமப்புறங்களில் சேவை செய்வதை நான் கட்டாயமயமாக்கியிருப்பேன். நான் . . . ஆனால் இப்போது அதனால் என்ன பயன்?

இந்த எண்ணங்களை நான் எண்ணிக் கொண்டிருந்ததே, எனக்கு இரண்டாவதாக ஒரு வாய்ப்புக் கிடைக்கப் போவதில்லை என்பதைச் சுட்டிக்காட்டியது. அவை லட்சியவாதக் கனவுகள். அவை எனது சொந்த நடுத்தர வர்க்கத்து ஏக்கங்களின் சுவடுகள், சின்னாபின்னமாக்கப்பட்ட என் இளமைப்பருவத்து விருப்பங்களின் துகள்கள். அதிகாரம், முன்பு என்னைக் கறைபடுத்தியிருந்ததுபோல மீண்டும் என்னை மாசுபடுத்தும். லட்சியங்கள் மடிந்துபோய் எப்போதும்போலப் புதையுண்டு கிடக்கும். லட்சியவாதம் என்பது அதிகாரத்திற்கான ஒரு கருவி மட்டுமே என்பதைப் புரிந்து கொள்வதில்தான் உண்மையான ஞானம் அடங்கியுள்ளது. நானோ அல்லது ராமனோ நாளை இறந்தாலும்கூட, உலகம் எப்போதும்போலச் செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கும். துரதிர்ஷ்டசாலிகள் தொடர்ந்து துரதிர்ஷ்டசாலிகளாகவும் ஏழைகள் தொடர்ந்து ஏழைகளாகவும் இருப்பர். புதிய புரட்சிகள் ஏற்படலாம்; புதிய யோசனைகள் தழைக்கலாம்; புதிய நெறிமுறைகளும் ஒழுக்கநெறியும் பழையவற்றைக் காணாமல் போகச் செய்யலாம்; புதிய தீர்க்கதரிசிகள் பிறக்கலாம்; புதிய அரசர்கள் இவ்வுலகை ஆளலாம்; புதிய மதங்கள் முளைத்து, அவை ஒன்றோடு ஒன்று சண்டையிடலாம்; புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்த்தப்படலாம், ஆனால் எல்லாமே முன்பு போலவே இருக்கும். குற்ற உணர்வு கொள்வதால் என்ன பயன்? என்னால் முடிந்ததை நான் செய்தேன். என்னால் இன்னும் சிறப்பாகச் செய்திருக்க முடியும், ஆனால் யாரால்தான் தாங்கள் செய்திருந்ததைவிட அதிகச் சிறப்பாகச் செய்திருக்க முடியாது?

புகழ், பணம், அதிகாரம் ஆகிய அனைத்தையும் போரில் வெற்றி பெறுபவன் எடுத்துக் கொள்வான். கவிஞர்கள் அவனைப் புகழ்ந்து பாடுவர். காலம் செல்லச் செல்ல, அவனைப் பற்றிய புராணங்கள் பெருகும். வெற்றியாளன், நல்ல பண்புநலன்களின் மொத்த உருவமாகச் சித்தரிக்கப்படுவான். அவன்தான் எல்லோரைவிடவும் சிறந்தவனாக ஆவான். ஒவ்வொரு மனிதனையும்போலவே, அவனும் தன் வாழ்வில்

நல்ல காரியங்களையும் மோசமான காரியங்களையும் செய்திருப்பான் என்றாலும், வெற்றியாளனின் நல்ல செயல்கள் மட்டுமே மிகைப்படுத்தப்படும். அவனது மோசமான செயல்கள் நினைவிலிருந்து முற்றிலுமாகத் துடைத்தெறியப்படும். வெற்றியாளனின் நடவடிக்கைகளை, சமுதாயத்தில் வழக்கத்திலுள்ள ஒழுக்கநெறிகளால் நியாயப்படுத்த முடியாவிட்டால், அவன் தெய்வீக நிலைக்கு உயர்த்தப்படுவான். கடவுளை யாரால் கேள்வி கேட்க முடியும்? இவ்விதத்தில் என் நாடு பல கடவுள்களை உருவாக்கியது. வழி எதுவாக இருந்தாலும் சரி, வெற்றி பெற்ற ஒவ்வொருவனும் ஒரு கடவுளாகவோ அல்லது ஓர் அவதாரமாகவோ ஆகியிருந்தான். வீழ்த்தப்பட்டவர்களைப் பொறுத்தவரை, எப்போதுமே அது நேரெதிரானதாகவே இருந்தது.

ஆனாலும், வினோதமாக, இவை எதுவுமே எனக்கு இப்போது முக்கியமாகப் படவில்லை. பிரபஞ்சத்தில் நான் எவ்வளவு முக்கியத்துவமற்ற நிலையில் இருந்தேன் என்பதை என்னால் உணர முடிந்தது. அது என்னை ஒரு சுயநலவாதியாக ஆக்கியது. பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை நான் வெறுமனே ஒரு முக்கியமற்றப் புள்ளி மட்டுமே எனும்போது, நான் மட்டுமே எனக்கு முக்கியமானவனாக இருந்தேன். நான் மரணமடையும்போது, எனக்கான அனைத்தும் என்னுடன் சேர்ந்து மடிந்துவிடும். என்னுடைய மரணத்திற்குப் பிறகு என் மக்களுக்கு நிகழவிருந்த எதுவும் என் பிரச்சனையல்ல. மரணம்தான் கடைசி நிறுத்தமாக இருக்கும் என்பதையும், அதற்கு அப்பால் வேறு எதுவும் கிடையாது என்பதையும் நான் அறிந்திருந்தேன். நான் நிலத்தோடு நிலமாக, நீரோடு நீராக, காற்றோடு காற்றாக, நெருப்போடு நெருப்பாக மறைந்துவிடுவேன். அப்போது எல்லாம் நின்றுவிடும். ஆனால், நான் தேர்ந்தெடுப்பதற்கு எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப்பட்டால், நான் மீண்டும் திரும்பி வர விரும்புவேன். யார்தான் அதை விரும்ப மாட்டார்கள்?

பிடிவாத குணம் கொண்ட என் மகள் சீதை அமர்ந்திருந்த தோட்டத்தை நோக்கி நான் நடந்தேன். அவள் இன்னும் கோபத்தில் இருந்தாள். நான் என் மகளைப் பார்க்க விரும்பினேன். நேரம் கிடைத்தால், என் மனைவி மண்டோதரியுடனும் ஒருசில நிமிடங்களைச் செலவிட வேண்டும். பிறகு, யுத்தக்களத்தில் ராமனை நான் நேருக்கு நேர் எதிர்கொள்வேன்.



# 59

## உனக்கு ஒரு கொடுமையான மரணம் நிகழட்டும்

பத்ரன்

நேற்றிரவு நான் அரண்மனைக் கதவுகளை அடைவதற்குள், உணவு வினியோகம் முடிந்திருந்தது. ஒதுக்கீடு செய்யப்பட்ட உணவில் பாதி மட்டுமே ஏழைகளைச் சென்றடைந்திருக்கும் என்பதை எல்லோருமே அறிந்திருந்தனர். விவசாயிகளிடமிருந்து தானியங்களை வாங்குவதில் தொடங்கி, இறுதி வினியோகம்வரை, அச்சுறுத்திப் பணம் பறிப்பதையும் மோசடியையும் உள்ளடக்கிய ஒரு சங்கிலி இருந்தது. இதன் விளைவாக, விவசாயிகள், கொள்முதல் அதிகாரியை அளவிலும் தரத்திலும் ஏமாற்றினர். லஞ்சம் எல்லா இடங்களிலும் தலைவிரித்தாடியது. தானியத்தைத் தொட்ட ஒவ்வொருவரும் ஏதோ ஒரு வகையில் ஒரு லாபத்தை ஈட்டினர்.

பிரஹஸ்தனைப் போன்ற லட்சியவாத மந்திரிகளை இந்தக் குறுக்குப் புத்திக்காரர்கள் முட்டாளாக்கி வந்திருந்தனர். தான் துவக்கியிருந்த நலத் திட்டங்கள் பற்றி அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்து வந்தான். ஜம்புமாலியைப் போன்ற வேறு சிலர், தாங்கள்

அபரிமிதமாகச் செழிப்படைவதற்கு அரசாங்கத்தில் இருந்த அமைப்புமுறைகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். வருணனைப் போன்றவர்கள் கடத்தல் தங்கத்தையும் பணத்தையும் அசுர சாம்ராஜ்யத்தின் அதிகாரிகளிடமிருந்து வடக்கத்திய நாடுகளுக்குக் கடத்திச் சென்றனர். இது ஒரு தீய சுழற்சி, ஆனால் அர்த்தமற்ற ஒன்று. நேர்மையானவர்களும் ஒளிவுமறைவு அற்றவர்களும் மட்டுமே இதில் தோல்வியாளர்களாக இருந்தனர். எல்லோரும் தங்கள் தகுதிக்கு ஏற்ப ஏமாற்றினர். என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதை எல்லோரும் அறிந்திருந்தனர். ஆனால், விவசாயிகளிலிருந்து, கணக்கர்கள், வணிகர்கள், அரசாங்க அதிகாரிகள் மற்றும் மந்திரிகள்வரை எல்லோருமே குறுக்குப் புத்திக்காரர்களாக இருந்ததால், மக்களிடையே கோபம் எதுவும் இருக்கவில்லை. அமைப்புமுறையில் நிலவிய ஊழல் குறித்து அவர்கள் வேடிக்கையாகப் பேசினர், ஆனால் அரசியல்வாதிகளுக்கு எதிராகக் கடுமையாகப் பேசினர்.

ஆக, சாப்பிட எனக்கு எதுவும் கிடைக்காதது குறித்து நான் ஏமாற்றமடைந்திருந்தாலும்கூட, அது எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தவில்லை. உண்மையில், உணவை வினியோகித்தவன் என்னிடம் மரியாதையின்றி நடந்து கொள்ளாதது குறித்து நான் நிம்மதியடைந்தேன். அவன் வெறுமனே என்னைத் தொலைந்து போகுமாறு கூறிக் கதவை மூடினான். அவர்களுடைய கருணைக்காக நான் அவர்களிடம் யாசிக்க வேண்டியிருந்த ஒவ்வொரு முறையும், அது என் கர்வத்தைக் காயப்படுத்தியது. ஆனால் என் கர்வத்தை என்னால் சாப்பிட முடியாது என்பதை நெடுங்காலத்திற்கு முன்பே நான் கற்றிருந்தேன். எனவே, எனக்குப் பிரியமான ஆலமரத்தின் கீழே காத்திருப்பதென்று நான் தீர்மானித்தேன். நாளை காலையில் வரிசையில் முதலாவதாக நிற்பதற்கு எனக்கு இடம் கிடைக்கக்கூடும். அப்போது அவர்களிடமிருந்து சிறிது உணவை நான் பெறக்கூடும்.

யுத்தம் முடிவதுபோலத் தெரியவில்லை, ஆனால் என்றேனும் ஒருநாள் அது முடிவுக்கு வந்துதான் ஆக வேண்டும். எனக்குத் தெரிந்தவர்கள் மற்றும் எனது நண்பர்கள் பலரை இந்த யுத்தத்தில் நான் இழந்திருந்தேன். ஓர் உயிரிழப்பு வருத்தமானதுதான், ஆனால் அது தேவையான ஒன்றாக இருந்தது. ஆனால் நாங்கள் ஒரு காரணத்திற்காகப் போரிட்டுக் கொண்டிருந்தோம், இல்லையா? மற்றவர்களின் மகன்கள் இறந்தபோது, கூட்டத்தோடு கூட்டமாக நின்று நான் அந்தத் தியாகிகளைப் பாராட்டினேன். எனது அண்டைவீட்டாரின் குடும்பங்களுக்கு மரணம் விஜயம் செய்தபோது, என் குடும்பம் நல்லபடியாக இருந்தது குறித்தும் என் மகன் திடகாத்திரமாகவும்

ஆரோக்கியமாகவும் இருந்தது குறித்தும் ரகசியமாக நான் மகிழ்ச்சி கொண்டேன். என்றேனும் ஒருநாள் என்னுடைய மகனையும் நான் இழக்கக்கூடும் என்ற பயம் எனக்கு இருந்தது. ஆனாலும், கடவுள் என் மகனைக் காப்பாற்றுவார் என்று நான் முட்டாள்தனமாக நம்பினேன். நான் ஏற்கனவே போதுமான அளவு துன்புற்றிருக்கவில்லையா? நான் சம்பாதித்தக் கொஞ்சநஞ்சப் பணத்தையும் கடவுள்களோடும் அவர்களுடைய ஆட்களோடும் நான் பகிர்ந்திருக்கவில்லையா? கோவில் கருவூலங்களை நிரப்புவதற்கு நான் எனது சிறிய காணிக்கைகளைக் கொடுத்து உதவியிருக்கவில்லையா? சுருக்கமாகக் கூறினால், நான் கடவுள்களுக்கு லஞ்சம் கொடுத்திருந்தேன். ஆனால் எங்களுடைய கடவுள்கள் எங்களைப் போன்றே இருந்தனர். அவர்கள் எங்களுடைய லஞ்சங்களையும் காணிக்கைகளையும் ஏற்றுக் கொண்டாலும், எங்களுக்கு ஏதேனும் நல்லது செய்வார்கள் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இருக்கவில்லை. கடவுள்கள், பூசாரிகள், சிறு அதிகாரிகள், அரசாங்க ஊழியர்கள், அரசர்கள், குடும்பத்தினர், நண்பர்கள் என்று, எல்லோருக்குமே லஞ்சம் கொடுக்க வேண்டியிருந்தது. வாழ்க்கை ஒரு லஞ்ச மூட்டையாக இருந்தது.

அதிகயனின் முகம் எல்லா இடங்களிலும் என்னைப் பின்தொடர்ந்தது. நான் எவ்வளவு கடினமாக முயற்சித்தும், அவன் குழந்தையாக இருந்தபோது அவன் எப்படி இருந்தான் என்பது என் நினைவுக்கு வரவில்லை. ஆனால் வாழ்க்கையை சுவாரசியமானதாக ஆக்கியிருந்த சிறிய நிகழ்வுகள் எனக்கு நினைவிருந்தன. நாங்கள் இருவரும் சேர்ந்து பாடல்களைப் பாடியது, இருண்ட காடுகளுக்குள் நான் அவனைச் சுமந்து சென்றது, கடவுள்களையும் விலங்குகளையும் வெள்ளை அரக்கர்களையும் உள்ளடக்கிய கதைகளை நான் அவனுக்குக் கூறியது, அரக்கர்களைப் பற்றிய பயத்தினால் அவன் என்னுடைய கிழிந்த வேட்டியை இறுகப் பற்றிக் கொண்டது, கடவுள்களோடும் மனிதர்களோடும் பேசிய விலங்குகளின் சேட்டைகளைக் கேட்டு அவன் சிரித்தது போன்ற நிகழ்வுகள் என் மனத்தில் பளிச்சிட்டன. ஆனாலும் அவனுடைய சிறிய முகத்தை என்னால் நினைவுகூர முடியவில்லை. நான் பார்த்த முகம், விதியின் கூரிய நகங்களால் குத்திக் கிழிக்கப்பட்டு, இன வெறுப்பு எனும் கடினமான பாறையின்மீது மோதப்பட்டு, பாரபட்சம் எனும் சுமையின்கீழ் நசுக்கப்பட்ட, அவனுடைய சிதையின்மீது நான் பார்த்திருந்த முகம்தான். எனக்கு உடனே குடிக்க வேண்டும் போலிருந்தது. என் மகனை இழந்த வேதனை, என்னால் தாங்கிக் கொள்ள முடியாத அளவுக்கு இருந்தது. ஆனால் எதுவும் செய்ய முடியாமல், நான் அந்த ஆலமரத்தின் கீழே வெறுமனே படுத்திருந்தேன்.

இறந்து போன என் மகனைக் குறித்தத் துயரம் என்னை விடாமல் துரத்தி, வாழ்க்கைத் தத்துவத்தைப் பற்றிய எனது ஊகங்களை நொறுக்கியது. ஈரமான, செந்நிற பூமியை நான் என் நகங்களால் பிராண்டினேன். நான் உரத்தக் குரலில் முனகியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஏனெனில், யாரோ என் அருகில் வந்தார்கள். ஒளியிழந்து கொண்டிருந்த என் கண்களால் அந்தக் கரிய உருவத்தை அடையாளம் காண முடியவில்லை. நான் அஞ்சி நடுங்கினேன்.

"அது எமனா?" என்று என் மனத்திற்குள் என்னை நானே கேட்டுக் கொண்டேன். மரணத்தைப் பற்றி நினைத்துப் பார்ப்பதுகூட அபசகுனமாக இருந்தது. அது உங்கள் வழியில் குறுக்கிடக்கூடும். எனவே அந்தக் கரிய உருவம் என்மீது குனிந்து பார்த்தபோது, என் உடல் நடுநடுங்கியது. அந்த உருவம் தனது கரிய, வளைவான விரல்களை எனது மூக்குத் துவாரங்களுக்குக் கீழே வைத்தது. நான் என் மூச்சை அடக்கிக் கொண்டேன். ஓர் ஈரமான உள்ளங்கை என் புருவத்தின்மீது பட்டதை நான் உணர்ந்தேன். பிறகு அந்த உருவம் எழுந்து நின்று யாரையோ அழைத்தது. இரண்டு வீரர்கள் எங்களை நோக்கி ஓடி வந்தனர். "அவர்கள் என்னைக் கைது செய்யப் போகிறார்கள்," என்று என் மனம் பதைத்தது. நான் என்ன குற்றம் செய்திருக்கக்கூடும் என்று யோசித்து என் மூளையைக் குடைந்தேன்.

"அவன் இறந்து கொண்டிருக்கிறான். அவனுக்குக் காய்ச்சலும் அதிகமாக இருக்கிறது," என்று ஒரு குரல் கூறியது. நீண்ட வெண்தாடியுடன்கூடிய ஒரு கரடுமுரடான முகம் என் முகத்தின் அருகே தோன்றியது. நான் நிம்மதியடைந்தேன். பைத்தியக்கார அறிவியலறிஞன் மயன்தான் அது. அவன் கிறுக்கன் என்றாலும்கூட, முற்றிலும் தீங்கற்றவன். "அவனைக் கோட்டைக்குள் கொண்டு செல்லுங்கள்," என்று அவன் கூறியது என் காதுகளில் விழுந்தது.

"ஆனால், ஐயா, அவன் ஒரு குடிகாரன். நாம் அவனை . . ." என்று கூறிய வீரனின் குரலில் எரிச்சலும் இகழ்ச்சியும் தொனித்தன.

"அவன் இறந்து கொண்டிருக்கிறான். அவனுக்கு மருத்துவ உதவி தேவை. அவனை உள்ளே கொண்டு செல்லுங்கள். அந்தப் பரிதாப ஜீவன் பசியால் வாடிக் கொண்டிருக்கக்கூடும். இந்தக் கொடூரமான யுத்தம் . . . மக்கள் ஏன் ஒருவரையொருவர் கொல்கின்றனர்? சனி உச்சத்தில் இருக்கிறான். செவ்வாய் இப்போது சக்திவாய்ந்ததாக இருக்கிறது. கோள்களைத் தெளிவாகப் பார்ப்பதற்கு என்னால் ஓர் இயந்திரக் கண்ணைக் கண்டுபிடிக்க முடிந்தால் . . . கோடிக்கணக்கான நட்சத்திரங்களுக்கும் மனிதனின் தலைவிதிக்கும் இடையே ஏதேனும் தொடர்பு இருக்கிறதா? கோள்களும் எண்ணிக்கையில் அடங்காதவாறு

இருக்கின்றன . . . நாம் அனைவருமே, கோள்கள் எனும் அகலமான பெருங்கடலில் உட்கார்ந்திருக்கின்ற தூசுகள்தான் . . .”

அவன் தனது சொந்த உலகத்திற்குள் செல்லச் செல்ல, அவனுடைய குரல் தேய்ந்து கொண்டே போனது. அவன் எதைப் பற்றி உளறிக் கொண்டிருந்தான் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. வீரர்கள் தயங்கியபடி அங்கு நின்றனர். அவர்கள் என்னைத் தொட விரும்பவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ஒரு பன்றியைப்போல என்மீது துர்நாற்றம் வீசியது. ஆனால் ஒரு மூத்த மந்திரியின் ஆணையை அவர்களால் மறுக்க இயலவில்லை. மயன் என்னைப் பற்றி முற்றிலுமாக மறந்து போயிருப்பதற்கான சாத்தியக்கூறும் இருந்தாலும், அந்தப் பரிதாபகரமான வீரர்கள் மயனின் ஆணையை உதாசீனப்படுத்த முடியாத நிலையில் இருந்தனர். எனக்கு நினைவு வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்ததால், அவர்களை என்னால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. அந்த வீரர்கள் என்னைச் சிறிது தூரம் இழுத்துக் கொண்டும், சிறிது தூரம் தூக்கிக் கொண்டும் சென்றதை நான் அறிந்து கொண்டேன். வாசலுக்கு அருகே அவர்கள் என்னைத் தூக்கிப் போட்டனர். கண்காணிப்புப் பணியில் ஈடுபட்டிருந்த காவல் தலைவன் கோபமாக அவர்களிடம் எதுவோ கூறினான். நாங்கள் உள்ளே நுழைய அவன் அனுமதி மறுத்தான். எனவே, அகழிக்கு அருகில் இருந்த ஒரு மூலையில் அவர்கள் என்னை வீசி எறிந்தனர். என் தலையை நிமிர்த்தக்கூடத் தெம்பின்றி நான் அப்படியே கிடந்தேன். கொசுக்கள் என் ரத்தத்தைக் குடித்துக் கொழுத்துப் போயும், புழுக்களும் பூச்சிகளும் என் தோலைத் துளைத்துக் கொண்டு என் உடலுக்குள் போயும் பல மணிநேரம் கழித்து மயன் அங்கு திரும்பி வந்தான்.

“அவனைக் கொண்டுவந்துவிட்டீர்களா? என்னுடைய இருப்பிடத்தின் தாழ்வாரத்திற்கு அவனைக் கொண்டு செல்லுங்கள். நான் அவனைக் காப்பாற்ற முயற்சிக்கப் போகிறேன்,” என்று காவல் தலைவனுக்குக் கட்டளையிட்டுவிட்டு, மயன் அங்கிருந்து போய்விட்டான்.

மாயன் அங்கிருந்து போன பிறகு, அந்தக் காவல் தலைவன் என்னையும் தன் வேலையையும் மந்திரியையும் வாழ்க்கையையும் முழுதாகப் பத்து நிமிடங்கள் சபித்தான். பிறகு என்னை மயனின் தாழ்வாரத்திற்குக் கொண்டு செல்லுமாறு தன் வீரர்களுக்கு அவன் உத்தரவிட்டான். நான் மிகவும் பலவீனமாக இருந்ததால், அவர்கள் என்னை வழி நெடுகிலும் சுமந்து சென்றனர். ஒரு தேங்காய் மூட்டையைப்போல, அவர்கள் என்னை அந்தக் குளிரான, பளிச்சூட்டப்பட்ட, சுத்தமான தாழ்வாரத்தின்மீது எறிந்தனர். சிறிது

நேரத்திற்குப் பிறகு, மயன் ஓர் உதவியாளனோடும், மோசமான வாடை வீசிய ஒரு திரவத்தோடும் வெளியே வந்தான். அந்த உதவியாளன் என் நாசித் துவாரங்களைத் தனது விரல்களால் மூடினான். எனக்கு மூச்சுத் திணறியபோது, மயன் அந்தக் கசப்பான திரவத்தை எனது திறந்த வாயினுள் கொட்டிவிட்டு, என் வாயை இறுக்கமாக மூடினான். அந்தத் திரவம் என் வயிற்றுக்குள் சென்றபோது என் உடல் முழுவதும் உள்ளுக்குள் எரிந்தது. நான் வலியால் துடித்தேன். என் கைகால்களில் உதறல் ஏற்பட்டது. நான் இறந்து கொண்டிருந்ததாக நினைத்து நான் பயந்தேன். முறுக்கிக் கொண்டிருந்த என் உடலை அந்த இருவரும் அழுத்திப் பிடித்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு, நான் என் வலிமை முழுவதையும் இழந்து மயக்கத்திற்குள் விழுந்தேன்.

நான் என் கண்களைத் திறந்தபோது, எனக்குக் கடுமையான தலைவலி ஏற்பட்டிருந்தது. எனக்குக் கிறக்கமாகவும் களைப்பாகவும் இருந்தது. ஆனால், முந்தைய நாளைவிட இப்போது நான் அதிகத் தெம்புடன் இருந்தேன். வயதான அந்த மயனுக்கு மருத்துவத்தைப் பற்றி உண்மையிலேயே ஏதோ தெரிந்திருந்ததுபோலும். நான் மெதுவாக எழுந்து நின்றேன். என்னருகில் சிறிது உணவும் ஒரு குவளை மோரும் வைக்கப்பட்டிருந்ததை நான் கண்டேன். நான் அந்த உணவை எடுத்து, என்னால் முடிந்த அளவுக்கு வேகவேகமாக விழுங்கினேன். என் கைகால்கள் மீண்டும் வலிமை பெற்றன. மயனுக்கு நன்றி கூறிவிட்டு, முடிந்த அளவுக்குச் சீக்கிரமாக நான் என் வீட்டிற்குச் செல்ல விரும்பினேன். ஆனால் மயனை எங்கும் காணவில்லை. அங்கிருந்த ஓர் உயரமான, பிரம்மாண்டமான கதவைத் தட்டுவதற்கான துணிச்சல் என்னிடம் இருக்கவில்லை. இவர்கள் அனைவரும் முக்கியமான நபர்கள். பேராற்றலும் அதிகாரமும் படைத்தவர்களுடைய கதவுகளைத் தட்டும் அளவுக்கு நான் முக்கியமானவனாக இருக்கவில்லை. மயன் எக்கேடும் கெட்டுப் போகட்டும். நான் அந்த இடத்தைவிட்டு வேகமாக வெளியேற விரும்பினேன், அவ்வளவுதான்.

நான் அங்கிருந்து புறப்படவிருந்த நேரத்தில், அரசன் ராவணன், சீதை பிடிவாதமாக முகாமிட்டிருந்த அசோக மரத்தை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்ததை நான் கண்டேன். அவர் தனியாக இருந்தது வினோதமாக இருந்தது. அவர் சீதையை நோக்கி வேகமாக நடந்தார். அவர் என்ன செய்யவிருந்தார் என்று வியந்தபடி, நான் அவரை அமைதியாகவும் அவருக்குத் தெரியாமலும் கவனமாகப் பின்தொடர்ந்தேன். மல்லிகை மலர்கள் பூத்துக் குலுங்கிய ஒரு புதருக்குப் பின்னால் நான் ஒளிந்து கொண்ட நேரத்தில், அரசன் தன் மகளின் முன்னால் அமைதியாக நின்றார். ராவணன், சீதை, வேதவதி

ஆகியோரோடு என்னை இணைத்த, அச்சமூட்டிய கடந்தகாலத்தின் நினைவு எனக்கு நடுக்கத்தை ஏற்படுத்தியது. கொல்லப்படுவதற்காகப் பல வருடங்களுக்கு முன்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த அந்தச் சிறிய மூட்டை இங்கே என் முன்னால் இருந்தது. அந்த நினைவுகள் மிகத் தெளிவாக இருந்தன. தந்தையும் மகளும் தணியாத வெறுப்போடும் பகையுணர்வோடும் ஒருவரை ஒருவர் வெறித்துப் பார்த்தனர். அவள் அவரது கனவைச் சீரழித்திருந்தாள். ஒட்டுமொத்த அசுர சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தை அவர் அவளுக்காக மண்ணுக்குள் இழுத்திருந்தார். முப்பது வருடங்களுக்கு முன்பு என் கரிய கைகளில் அவள் தவழ்ந்தபோதே நான் அவளைக் கொன்றிருக்க வேண்டும். அவளுடைய மூக்கை மூடி, அவளை மூச்சுத்திணறடித்துக் கொல்வது எனக்குச் சுலபமானதாக இருந்திருக்கும். மாறாக, நான் அந்தச் சிறு குழந்தையின்மீது பரிதாபம் கொண்டேன். எப்பேற்பட்ட ஒரு முட்டாள் நான். நான் அவர்களுடைய விவகாரத்திலிருந்து ஒதுங்கியிருந்திருக்க வேண்டும் அல்லது ருத்ராக்கனையும் தும்ரக்ஷகனையும்போல முழு வீச்சில் கொலை செய்திருக்க வேண்டும்.

“நான் என் கணவரை நேசிக்கிறேன். நீ கூறும் எதுவும் அவர்மீது நான் வைத்திருக்கும் அன்பை என்னிடமிருந்து பறிக்காது,” என்று ராவணனைப் பார்த்து அவள் சீற்றத்துடன் கூறினாள்.

“நாசமாய்ப் போன ராமன். நான் அந்த முட்டாளைக் கொல்ல விரும்பவில்லை. அவனுடைய ரத்தம் என் கைகளில் படுவதை நான் விரும்பவில்லை. சூர்ப்பனகையின் கணவனை நான் கொன்றுவிட்டதாக ஏற்கனவே மக்கள் என்னைக் குற்றப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். இதற்கு மேலும் என் கைகளில் எந்த ரத்தக் கறையையும் நான் விரும்பவில்லை. ஆனால் உன் கணவன் ஒரு முட்டாள். அவன் தீயவன். நீ ஏன் அவனோடு அடிமைத்தனமாக வாழ்க்கை நடத்த விரும்புகிறாய்? தேவர்கள் தங்கள் வீட்டுப் பெண்களை விலங்குகளைப்போல நடத்துவதற்குப் பெயர்போனவர்கள்.”

“தேவர்களின் கலாச்சாரத்தைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? பெண்கள் கடவுள்களாக வழிபடப்படுகின்றனர். ஆனால் இங்கு, உங்கள் பெண்களுக்குத்தான் எந்த ஒழுக்கநெறியும் இல்லை. அவர்கள் முகத்திரையின்றி அலைந்து திரிகின்றனர். ஆண்களும் பெண்களும் தாராளமாகக் கலந்து பழகுகின்றனர். உன்னுடைய ராஜ்யத்தில் திருமணத்திற்கு ஒரு புனிதத்தன்மை இல்லை. அவர்கள் ஆண்களுக்கு இணையாகக் குடிக்கின்றனர், அவர்களோடு நடனமாடுகின்றனர். உன்னுடைய உலகம் பண்பாடு இல்லாதது. தங்களுடைய தந்தையருக்குக் கீழ்ப்படிந்து நல்ல மகள்களாக இருப்பதற்குப் பதிலாக,

உன் உலகத்தைச் சேர்ந்த பெண்கள் தங்களுக்கு விருப்பமான ஆண்களைத் தாங்களே தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து கொள்கின்றனர். உன் இனத்துப் பெண்கள், இவ்வுலகிலேயே தாங்கள்தான் மிகவும் அறிவார்ந்தவர்கள் என்று நினைக்கின்றனர். மற்றவர்களைக் கவர்வதற்காகத் தங்களை உயர்வாகக் காட்டிக் கொள்கின்றனர். நீங்கள் அனைவரும் இன்பத்திற்கு அடிமையான விலங்குகள். உன் இனத்து ஆண்மக்கள் பெண்களைப்போல இருக்கின்றனர். பாவக் கறை படிந்த இந்த அருவருப்பான நகரத்தை ஒரு குரங்கு மனிதன் எரித்துச் சாம்பலாக்கினான். பேராற்றல் வாய்ந்த உன்னுடைய படை அது குறித்து என்ன செய்தது? உன்னுடைய சமுதாயம் எப்படிப்பட்டப் பெண்களை உற்பத்தி செய்துள்ளது என்று பார். உன்னுடைய சகோதரியைப் பார். கண்டவர்களுடன் அவள் காமக் களியாட்டம் போடுகிறாள். உன்னுடைய சகோதரனின் மகளான இந்தத் திரிஜடையைப் பார். இவள் எவ்வளவு அசிங்கமாகவும் அழுக்காகவும் குண்டாகவும் கருப்பாகவும் இருக்கிறாள் என்று பார் . . . என்னுடைய ராமனை விட்டுவிட்டு, நான் இங்கே வாழ வேண்டும் என்று நீ விரும்புகிறாயா . . .”

நான் கோபத்தில் கொதித்தேன். அவளிடமிருந்து ஒருசில அடி தூரத்தில் நின்ற திரிஜடை விம்மிக் கொண்டிருந்தாள். சீதை இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டிருந்த நாளிலிருந்தே, திரிஜடை அவளுடைய ஒரு நல்ல தோழியாக இருந்து வந்திருந்தாள். இந்த சீதைக்காகத்தான் ராவணன் தனது சாம்ராஜ்யத்தையும் தனது கனவுகளையும் தொலைத்துக் கொண்டிருந்தார். இவளுக்காகத்தான் எண்ணற்ற ஏழை அசுரர்கள் இறந்திருந்தனர். அந்தக் கணத்திலேயே அவளை என்னால் கழுத்தை நெறித்துக் கொன்றிருக்க முடியும்.

பெருங்கோபம் கொண்ட ராவணன் தன் காலால் நிலத்தை ஓங்கி மிதித்துவிட்டுத் தன் வாளை அதன் உறையிலிருந்து உருவினார். “நீ . . . நீ . . . நான் உனக்காக எல்லாவற்றையும் பணயம் வைத்தேன். என் மகள் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதற்காக நான் என் மகன்களையும் என் மரியாதையையும் என் நகரத்தையும் இன்னும் எல்லாவற்றையும் இழந்தேன். அதற்கு நீ கூறும் பதில் இதுதானா? உனக்காக நான் ஆயிரக்கணக்கான மக்களைத் தியாகம் செய்தேன்,” என்று கூறிவிட்டு, அவர் தன் வாளை உயர்த்தினார். அடுத்தக் கணம் அவர் அதைக் கொண்டு அந்த தேவப் பெண்மணியின் தலையை ஒரே வீச்சில் கொய்து எறிந்துவிடுவார் என்று நான் எதிர்பார்த்தேன். அவள் சிறிதுகூடக் கலங்காமல் தன் தந்தையைப் பார்த்தாள். தனது கண்களில் கோபத்துடன், தன் தலையைக் கொய்யுமாறு மாபெரும் அசுரப்

பேரரசருக்கு அவள் தன் பார்வையால் சவால்விட்டுக் கொண்டிருந்தாள். ராவணனின் வாள் அவளுடைய கழுத்தின் அருகே வந்து, பிறகு அப்படியே நின்றது. கடந்த நாற்பது வருடங்களாகப் பல எதிரித் தலைகளைக் கொய்திருந்த ராவணனின் வலிமையான கரம், மெதுவாகத் தளர்ந்தது. "சீதை . . . நீ என் மகள் . . ." என்று அரசர் முணுமுணுத்தார். அவரது புகழ்மிக்க சந்திரஹாசம் இலங்கையின் செந்நிற பூமியின்மீது விழுந்தது.

ஓர் ஏளனச் சிரிப்புதான் சீதையிடமிருந்து விடையாக வந்தது. "மகள்! எப்படிப்பட்ட மகள்? உனக்கு அசௌகரியம் ஏற்படும்போது தூக்கி எறியப்படக்கூடிய ஒரு மகள். உன்னுடைய மக்கள் ஒருபோதும் விரும்பியிருக்காத ஒரு மகள். எப்பேற்பட்ட ஒரு தகப்பன் நீ!"

நான் என் மறைவிடத்தைவிட்டு வெளியே வந்து அந்தக் கொடுமைக்காரியின் தலைமுடியைப் பிடித்துத் தூக்க விரும்பினேன். ஆனால், ராவணன் தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றதைக் கண்டு நான் அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தேன். சிவந்து போயிருந்த அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருக்க, அவர் அப்படியே நின்றார். பிறகு, அவர் மெதுவாகத் திரும்பித் தனது அரண்மனையை நோக்கி நடந்தார்.

அசுரர்களின் அரசன் கனத்த இதயத்துடன் அங்கிருந்து திரும்பி நடந்தபோது, "உனக்கு ஒரு கொடுமையான மரணம் நிகழட்டும்! அது ஒரு வலி மிகுந்த, மெதுவான ஒன்றாக இருக்கட்டும்!" என்று சீதை கத்தினாள்.

ராவணனுக்குப் பத்து வயது கூடியிருந்ததுபோல எனக்குத் தோன்றியது. அவரது மகள் விரும்பியிருந்ததைப்போலவே, வலி மிகுந்த, நீண்டதொரு மரணம் அந்த வயோதிக அரசனுக்காகக் காத்திருந்தது. தந்தைக்கும் மகளுக்கும் மருமகனுக்கும் இடையேயான இந்தக் கொடுமையான குடும்பத் தகராறில் நான் பங்கு கொள்ள விரும்பவில்லை. ஆனால் என்னைப் போன்ற மக்களுக்கு என்ன விருப்பத்தேர்வு இருந்தது?



# 60

## ஒரு கருகிய கனவு

ராவணன்

நான் ஒரு சோர்வான மனநிலையில் யுத்தக்களத்திற்குச் சென்றேன். மண்டோதரி உணர்ச்சிவசப்பட்டிருந்தாள். நான் யுத்தத்திற்குச் செல்வதை அவள் விரும்பவில்லை. சீதையை ராமனிடம் ஒப்படைத்துவிட்டு, சமாதானத்தைக் கோருமாறு அவள் என்னிடம் கேட்டுக் கொண்டாள். சமாதானம் . . . கோழைகளுக்கான வார்த்தை அது. “பெண்கள்! காரணகாரியத்தை இவர்களால் ஒருபோதும் புரிந்து கொள்ளவே முடியாது!” என்று நான் நினைத்துக் கொண்டேன். எனது வீரர்கள் அனைவரின் முன்னிலையிலும் அவள் என்னைக் கட்டிக் கொண்டு கதறினாள், தலையிலும் மார்பிலும் அடித்துக் கொண்டு அழுது புரண்டாள். அவளை நான் என்னிடமிருந்து விலக்கித் தள்ள வேண்டியிருந்தது. அது எனக்கு தர்மசங்கடமாக இருந்தது. என்னுடைய கர்வத்திற்காக நான் எல்லோரையும் தியாகம் செய்து கொண்டிருந்ததாக அவள் என்மீது குற்றம் சுமத்தினாள். அவள் சீதையைச் சபித்தாள். சீற்றமடைந்த நான் அவளைப் பார்த்துக் கத்தினேன். என்னுடைய

கோபத்தைக் கண்ட அவள் பயத்தில் அடங்கி ஒடுங்கினாள். அந்தப் பரிதாபகரமான பெண் தன்னுடைய மகனின் இழப்பிலிருந்து இன்னும் மீண்டிருக்கவில்லை. நான் அவளிடம் அவ்வளவு கடுமையாக நடந்து கொண்டிருக்கக்கூடாது. “ஆனால் நான் எப்போதுமே அவளிடம் மோசமாகத்தான் நடந்து வந்துள்ளேன். அவள் மட்டுமல்ல, என் வாழ்வில் எல்லாப் பெண்களிடமும் நான் அப்படித்தான் நடந்து கொண்டுள்ளேன்.”

என் கோபத்தில், நான் என் வீணையை இரண்டாக உடைத்தேன். நான் இசையை நேசித்திருந்தேன், ஆனால் நான் இறந்த பிறகு எந்தக் குரங்கு மனிதனின் கையும் என்னுடைய இசைக்கருவிகளின்மீது படுவதை நான் விரும்பவில்லை. நானே இயற்றிருந்த ராகங்களையும் பாடல்களையும் நான் எழுத்தில் பதிவு செய்திருந்தேன். அவை என்னையும் என் சாம்ராஜ்யத்தையும் கடந்து என்றென்றும் நிலைத்திருக்க வேண்டும் என்று நான் பிரார்த்தித்தேன். குழந்தை மருத்துவம் மற்றும் வானவியலில் நான் பல பரிசோதனைகளை மேற்கொண்டு, ஓலைச் சுவடிகளில் அவற்றைக் கவனமாகக் குறித்து வைத்திருந்தேன். பிறகு அவற்றை மயனிடம் அனுப்பி வைத்தேன். அந்தப் பைத்தியக்காரனுக்கு அது ஏதேனும் ஒரு விதத்தில் பயன்படக்கூடும். நான் போருக்கான ஆடைகளை அணிந்து தயாரானபோது, மண்டோதரி தன்னை ஓர் அறைக்குள் அடைத்துக் கொண்டாள். நான் அவளைப் பலமுறை அழைத்தும் அவள் கதவைத் திறக்க மறுத்தாள். இறுதியில், அவளைச் சபித்துக் கொண்டே நான் திரும்பி என் ரதத்தை நோக்கி நடந்தேன். அப்போது அவள் தன் அறைக் கதவைத் திறந்து, என் பெயரைச் சொல்லி என்னைப் பரிதாபகரமாக அழைத்தவாறு என்னை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தது எனக்குத் தெரிந்தது. ஆனால் நான் பின்னால் திரும்பவில்லை. அவளுடைய முகத்தை மீண்டும் பார்ப்பதற்கு எனக்கு பயமாக இருந்தது. அவளைப் பார்த்தக் கணத்தில் எனது ஆணவமும் பொய்யான தன்னம்பிக்கையும் உருகிப் போயிருக்கும். நான் அசுரர்களின் அரசனாக இருப்பதற்குப் பதிலாக, அன்புள்ளம் கொண்ட ஒரு நல்ல பெண்ணின் ஒரு சராசரிக் கணவனாக மாறியிருப்பேன். நான் அவளுடைய முகத்தைப் பார்த்தால், என்னுடைய மன உறுதி மறைந்துவிடும் என்பதையும், அவளுடைய அறிவுரைக்கு நான் அடிபணிந்துவிடுவேன் என்பதையும் நான் அறிந்திருந்தேன். எனவே நான் என் ரதத்திற்குள் குதித்து, யுத்தக்களத்திற்குச் செல்லுமாறு என் தேரோட்டியிடம் கத்தினேன்.

கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டு, எனது படையினர் தேவர்களை எதிர்கொள்ள விரைந்தபோது, ஒரு வாழ்க்கை வீணாக்கப்பட்டுக்

கொண்டிருந்ததாக எனக்குள் எழுந்த துக்க உணர்வைக் கட்டுப்படுத்த நான் கடுமையாக முயற்சிக்க வேண்டியிருந்தது. முப்பத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாக என்னாலும் என்னுடைய நடத்தையினாலும் மௌனமாகத் துன்புற்று வந்திருந்த ஒரு தனிமையான பெண்ணை நான் தவிக்க விட்டுவிட்டு வந்திருந்தேன். தனது முட்டாள் கணவன் தனது தணியாத வெறியால் துவக்கிய ஒரு பயனற்றப் போரில் அவள் தன் குழந்தைகளைப் பறி கொடுத்திருந்தாள். உலகமே பயந்த ஒரு மனிதனைக் கேள்வி கேட்பதற்குரிய துணிச்சலைக் கொண்டிருந்த ஒரு பெண் அவள். அவளை நினைத்தபோது என் கண்கள் குளமாயின. இவ்வுலகிலுள்ள எதுவொன்றையும்விட என் மனைவியை நான் அதிகமாக நேசித்தேன். நான் அவளிடம் விடைபெற்று வந்திருக்க வேண்டும். அதற்கு இப்போது மிகவும் தாமதமாகியிருந்தது. ராமன் காத்துக் கொண்டிருந்தான்.

நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். வியர்வையில் ஒளிர்ந்து கொண்டிருந்த கருப்பான உடல்கள் என்னைச் சுற்றிலும் மிதந்து கொண்டிருந்தன. அவர்களில் எத்தனைப் பேர் இன்று உயிருடன் திரும்புவார்கள்? இன்று மாலைக்குள் எத்தனைப் பெண்கள் விதவையாவார்கள்? இந்தப் பாவப்பட்ட ஆன்மாக்களில் எத்தனைப் பேர் இன்று தங்கள் ரத்தத்தால் இந்த பூமியை நனைக்கப் போகிறார்கள்? எத்தனைக் குழந்தைகள் இன்று தங்கள் தந்தையரை இழந்து அனாதைகளாக ஆகப் போகின்றனர்? யாருக்காக இந்த முட்டாள்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்? இந்தப் பரிதாபகரமான ஜீவன்களை எவ்வளவு சுலபமாக ஏமாற்ற முடிகிறது! தூரத்தில், ராமனின் படையினர் கடற்கரையில் எங்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். அந்தக் குரங்கு மனிதர்கள் யாருக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்? ஏதோ ஒரு வடக்கத்திய இளவரசனுக்காகவும் அவனது மனைவிக்காகவுமா? அந்தச் சண்டாளர்களில் எவனும் ராமனின் மனைவியைப் பார்த்ததுகூடக் கிடையாது. அசுரர்களோடு அவர்களுக்கு எந்தப் பகைமையும் இருக்கவில்லை. ஆனால், இறப்பதற்குத் தயாராக அவர்கள் இங்கு வந்திருந்தனர். அவர்களில் பலரும் இன்று தங்களுடைய சின்னஞ்சிறுசுகளை அனாதைகளாக ஆக்கக்கூடும் அல்லது தங்களுடைய பெற்றோரை நிராதரவாக விட்டுச்செல்லக்கூடும்.

நான் ஒரு தெருமுனையிலிருந்து திரும்பிக் கடற்கரையை நோக்கி நடந்தபோது, ராமனின் படையினர் எங்களைக் கண்டு உரத்தக் குரலில் கோஷமிட்டனர். நான் என் யானைகளை முன் வரிசையில் நிலைப்படுத்தியிருந்தேன். அது ஒரு சூதாட்டம்தான். யானைகளை

அவ்வளவாக நம்ப முடியாது. அவை எந்த நேரத்திலும் பின்னால் திரும்பி ஓர் இடிபாட்டைத் துவக்கக்கூடும். ஆனால் எனக்கு வேறு வழி எதுவும் இருக்கவில்லை. என்னுடைய படையினரின் எண்ணிக்கை மிகவும் குறைந்திருந்தது. வருணனின் கடற்படையினர் கடலிலிருந்து பெரிய பாறாங்கற்களை எனது கோட்டையின்மீது எறிந்து, அதை உடைத்துக் கொண்டிருந்தனர். ராமனின் படையினர்மீது நெருப்பு முனைகளுடன்கூடிய அம்புகளை எறிவதற்காக, கடற்கரையை ஒட்டி அமைந்திருந்த உயரமான குன்றுகளுக்கு மேலே என் வீரர்களை நான் நிலைப்படுத்தியிருந்தேன். அக்குன்றுகளின் உயரத்தின் காரணமாக, ராமனின் வில்வீரர்களாலோ அல்லது வருணனின் கவட்டைகளாலோ தாக்கப்பட முடியாத ஒரு தூரத்தில் அவர்கள் இருந்தனர், ஆனால் அவர்களால் குன்றுகளின் மேலிருந்து தங்கள் இலக்குகளைத் துல்லியமாகத் தாக்க முடிந்தது. அவர்கள் வானரப் படையினரை பலமாகத் தாக்கினர், நெருப்பு முனைகளுடன்கூடிய அம்புகளை எறிந்து ஏராளமான கட்டுமரங்களையும் படகுகளையும் கடலில் மூழ்கடித்தனர். என்னுடைய யானைகள் வானரர்களை நோக்கிச் சென்றபோது, எதிரிப் படையினர் பயத்தில் நடுங்கியதை என்னால் உணர முடிந்தது. எனது யானைகள் அந்த பலவீனமான வானரர்களுக்கு ஊடாக நடந்து, பலரைத் தங்கள் கால்களுக்கு அடியில் போட்டு மிதித்துக் கொன்றன. அசுரப் படையினர் வேகமாக முன்னேறினர். அசுரக் காலாட்படையினர் மூன்று பக்கங்களிலிருந்தும் வானரர்களைச் சூழ்ந்தனர்.

ஒரு போரை நான் முன்னின்று நடத்தி நெடுங்காலம் ஆகியிருந்தது. என் திறன் சற்றுக் குன்றியிருந்ததோ என்று நான் சந்தேகித்தேன். ஆனால் ராமனின் படையினர் பீதியடைந்து கொண்டிருந்ததைக் கண்டபோது, என்னுள் புதிய உற்சாகம் பிறந்தது. திடீரென்று, நான் பல வருடங்கள் இளமையானவன்போல உணர்ந்தேன். அறுபது வயதை நெருங்கிக் கொண்டிருந்த நான், மனத்தளவில், லட்சிய வெறி கொண்ட அந்தப் பதினாறு வயது இளைஞனாக ஆனேன். ராமன் யார்? உலகிலேயே அதிக ஆற்றல்வாய்ந்த பேரரசனான எனக்குச் சவால்விடுவதற்காக, அரைவேக்காட்டு நாகரீகத்தைக் கொண்ட ஒரு பழங்குடியினரை எப்படியோ ஒன்றுதிரட்டி என்னை எதிர்க்க வந்திருந்த, திமிர் பிடித்த ஓர் இளைஞன்தானே? அசுரப் பேரரசனை எதிர்த்துப் போரிட்டுவிட்டு, பத்திரமாக வீடு திரும்பிவிடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கின்ற அகங்காரக்காரர்கள் அனைவருக்கும் அவன் ஒரு நல்ல எடுத்துக்காட்டாக ஆவதை இன்று நான் உறுதி செய்வேன்.

நான் மும்முரமாகக் கட்டளைகளைப் பிறப்பித்தேன். என் வீரர்கள் எல்லாப் பக்கங்களுக்கும் ஓடினர். ராமன் உண்மையிலேயே துன்பத்தில்

இருந்ததைக் கண்டு நான் திருப்தியடைந்தேன். அவனுடைய வீரர்கள் துணிச்சலாகப் போரிட்டனர், ஆனால் அவர்களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. ராமனின் கழுத்தைக் குறி பார்த்துத் துல்லியமாக ஓர் அம்பை எறிந்து அவனைக் கொன்றுவிட்டால், இந்த முட்டாள்தனமான யுத்தம் முடிவுக்கு வந்துவிடும். இடது பக்கமாக ரதத்தைச் செலுத்துமாறு என் தேரோட்டிக்கு நான் உத்தரவிட்டேன். அம்புகள் வேகமாகவும் அதிக எண்ணிக்கையிலும் பாய்ந்தன. அது ஆபத்தானதாக இருந்தது, ஆனால் நான் உற்சாகமான மனநிலையில் இருந்தேன். கோபமும் உற்சாகமும் என்னுடைய நரம்புகளுக்கு உரமேற்றின. ராமனைக் கொல்வதிலிருந்து இன்று எதுவொன்றாலும் என்னைத் தடுத்து நிறுத்த முடியாது. ஒரு தேவ இளவரசன் ஓர் அசுர அரசனைத் துணிந்து சவாலுக்கு அழைப்பது இதுதான் கடைசி முறையாக இருக்க வேண்டும்.

திடீரென்று, எனக்குப் பின்னால் இருந்த என் வீரர்கள் பீதியடைந்து அங்குமிங்கும் ஓடத் துவங்கியதை நான் கண்டேன். அவர்கள் அனைவரையும் ஒன்றுகூடுமாறு நான் உத்தரவிட்டேன். ராமனின் பொறியில் நாங்கள் சிக்கியிருந்தோம். எங்கள் பின்னால் பதுங்கியிருந்து, திடீரென்று அவர்கள் எங்களைத் தாக்கியிருந்தனர். பின்னாலிருந்து என்னை நெருக்கி எனக்கு அழுத்தத்தைக் கொடுப்பதற்காக விபீஷணன் தனது குதிரைப் படையினரை நகரத்திலிருந்து முன்னடத்தி வந்து கொண்டிருந்தான். எங்களுக்குப் பின்பக்கமாக வந்து கொண்டிருந்த எதிரி வீரர்களைக் குறி வைத்து நெருப்பை எறியுமாறு குன்றின் உச்சியிலிருந்த எங்களுடைய வீரர்களுக்கு எனது ஏவலர்கள் மூலம் நான் செய்தி அனுப்பினேன். அந்த நெருப்பு என்னுடைய சில வீரர்களையும் தாக்கக்கூடும், ஆனால் போரில் அது தவிர்க்க முடியாதது. நாங்கள் பின்வாங்குவதற்கு வழியின்றி அவர்கள் எங்களைச் சிக்க வைத்திருந்தனர். கடலிலிருந்து வந்த வானரர்களுடனும், நிலத்திலிருந்து எங்களைத் தாக்கிய விபீஷணனின் படையினருடனும் நாங்கள் கடுமையாக யுத்தம் செய்ய நேர்ந்தது. நான் என்னுடைய காலாட்படையினரைப் பிரித்து, விபீஷணனைக் கையாளும்படி அவர்களில் ஒரு குழுவினருக்கு உத்தரவிட்டேன். இது பின்னாலிருந்து வந்த அழுத்தத்திலிருந்து நிவாரணம் அளித்தது. அனுபவம் வாய்ந்த எனது தளபதிகள் அனைவரையும் நான் இழந்திருந்தது குறித்து நான் பின்வருத்தம் கொண்டேன். ராமனை நான் குறைத்து மதிப்பிட்டிருந்தேன். அனுமான் இலங்கைக்கு வந்து எனது தலைநகரத்தை எரித்தக் கணத்திலேயே நான் வானர நாட்டின்மீது படையெடுத்துச் சென்றிருக்க வேண்டும். ஆனால் நான் மெத்தனமாக இருந்துவிட்டேன். நான் அவ்வாறு படையெடுத்துச் சென்று

தாக்கியிருந்தால், வானரர்களை வதம் செய்து, ராமனை எங்களால் சிறைபிடித்திருக்க முடியும். ஆனால் இப்போது, அவன் எனது சாம்ராஜ்யத்திற்கு எதிராகப் போரை முன்னின்று நடத்திக் கொண்டிருந்தான். அவனை அடக்க முடியாமல் நான் போராடினேன். இன்று எப்படியும் நான் அவனுடைய கதையை முடித்துவிடுவேன்.

இரண்டு படைகளுமே பரிதவிப்புடனும் துணிச்சலுடனும் சண்டையிட்டன. ஒவ்வொரு நிமிடமும் கதாநாயகர்களும் தியாகிகளும் உருவாக்கப்பட்டுக் கொண்டிருந்தனர். விரைவில், லங்கினியின் அசுரப் படை, குன்றின் மேலிருந்த எங்களுடைய வீரர்களைத் தாக்கியது. லங்கினியின் வீரர்கள் அலையலையாகத் திரண்டு வந்து எனது வீரர்களைத் தாக்கினர். நான் ஆபத்தை உணர்ந்தேன். ஆறுக்கு ஒன்று என்ற கணக்கில் அவர்களுடைய படையின் எண்ணிக்கை எங்களுடைய எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்தது. அதாவது, எங்கள் நிலையைத் தக்க வைத்துக் கொள்வதற்கு, எங்கள் பக்கத்தில் கொல்லப்பட்ட ஒவ்வொரு வீரனுக்கும் எதிரிப் படையில் ஆறு வீரர்களை நாங்கள் கொன்றாக வேண்டியிருந்தது. அல்லது, எதிரிப் படையின் தளபதியான ராமனைக் கைப்பற்றவோ அல்லது கொல்லவோ வேண்டும். ஆனால் ராமன் எங்கு இருந்தான் என்று என்னால் பார்க்க முடியவில்லை. அனுமான்தான் முன்னணியில் நின்று வானரர்களை வழிநடத்திக் கொண்டிருந்தான். நான் ராமனையும் லட்சுமணனையும் தேடினேன், ஆனால் அவர்களை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. இரு தரப்பினருக்கும் வெற்றியின்றி யுத்தம் கடுமையாக நடைபெற்றது.

மதியம் சுமார் மூன்று மணியளவில் இரண்டு பக்கங்களிலும் ஏராளமான வீரர்கள் இறந்திருந்தனர். என்னுடைய படையினரின் எண்ணிக்கை பெருமளவு குறைந்திருந்தது. இத்தனைக்கும், தங்கள் கைகளில் கிடைத்தவற்றையெல்லாம் தூக்கிக் கொண்டு, பொதுமக்களும் போர்ப் பயிற்சி பெற்றிராத பலரும் என்னுடைய அணியில் சேர்ந்திருந்தனர். ஆனால் மிகச் சிறந்த பயிற்சி பெற்றிருந்த வானரர்களுக்கு இவர்கள் ஈடாகவில்லை. ஆனால் ஒரு குறிப்பிட்டத் தொலைவிருந்து பார்த்தபோது, என்னுடைய பொதுமக்களைக் கண்டு வானரர்கள் அஞ்சியது எனக்கு உறுதியாகத் தெரிந்தது. அது எங்களுடைய மன உறுதிக்கு நன்மை பயத்தது, ஆனால் எதிரிக்கு அது மோசமான செய்தியாக அமைந்தது. ஏனெனில், அசுரப் படையினரின் எண்ணிக்கை குறைந்ததை அவர்களால் பார்க்க முடியவில்லை. ஆனால் இந்தச் சூழ்நிலை நெடுநேரம் தொடராது என்பதை நான் அறிந்தேன். ஏற்கனவே இரண்டு மூன்று குன்றுகளை லங்கினியின் வீரர்கள்

கைப்பற்றி, இப்போது எங்கள்மீது நெருப்பை எறிந்து பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தனர். எங்களுடைய யானைகள் எதிரிப் படையினரைச் சிதைத்து, பாலத்தின் ஒரு பகுதியை இடித்துத் தள்ளியிருந்தன. வானரர்களின் படகுகள் பலவற்றை என்னுடைய உற்சாகமான வீரர்கள் கைப்பற்றியிருந்தனர். எனவே எங்கள் படையின் ஒரு குழுவினர் கடலிலிருந்து தாக்கத் தொடங்கினர். யுத்தம் யார் பக்கமும் சாயாமல் ஊசலாடிக் கொண்டிருந்தது.

நேரம் எங்கள் கையைவிட்டு ஓடிக் கொண்டிருந்தது. மேற்கு வானில் இருண்ட மேகங்கள் உருவாயின. கடலும் சீற்றமடையத் துவங்கியிருந்தது. வருணனின் கப்பல்கள் அந்த முரட்டுத்தனமான கடலின்மீது மேலும் கீழும் அசைந்தாடின. யானைகள் இருப்புக் கொள்ளாமல் தவித்தன. எக்கணத்திலும் விஷயங்கள் மோசமாக மாறக்கூடும் என்று நான் பயந்தேன். நான் துணிச்சலாகவோ அல்லது வித்தியாசமாகவோ எதையேனும் செய்தாக வேண்டியிருந்தது. “ஆனால் ராமனும் லட்சுமணனும் எங்கே போனார்கள்?” என்று என் மனம் படபடத்தது. எதிரி எதிர்பார்க்காத நேரத்தில் தேவ இளவரசனை நோக்கி ஒரு தாக்குதலை முன்னடத்திச் சென்று அவனைச் சிறைபிடிப்பதோ அல்லது கொல்வதோ எனது சிறந்த வாய்ப்பாக இருக்கும். அவனைப்போலவே, நானும் என் எதிரியின் கண்களிலிருந்து மறைவாக இருந்தேன். எது என்னுடைய ரதம் என்று எதிரிக்குக் குழப்பம் ஏற்படுத்தும் விதத்தில், ஏழு ரதங்கள் அசுரக் கொடியைச் சுமந்து சென்றன. நான் நிலைகொள்ளாமல் தவித்தேன். என் வயதும் அதற்கு ஒரு காரணம். ஒருசில அம்புகள் என்னைத் தாக்கியிருந்தன. ரத்தக் கசிவினால் நான் களைத்துப் போனேன்.

முதல் சுற்று மின்னல் ஆழ்கடலைத் தாக்கியபோது நான் அவர்களைப் பார்த்தேன். அவர்கள் பாலத்திற்கு அருகே இருந்தனர். பாலத்தை மீண்டும் கட்டுமாறு வானரர்களிடம் அவர்கள் வலியுறுத்திக் கொண்டிருந்தனர். யானைகளைப் பாலத்தை நெருங்கவிடாமல் செய்வதற்காக, அனுமான் ஒரு பெரிய நெருப்புச் சுவரை எழுப்பியிருந்தான். காற்றுத் திசை மாறி, நெருப்புச் சுவர் நகர்ந்தபோது, வருணனின் முதன்மைக் கப்பல் அந்தப் பாலத்தை நோக்கி வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். ராமனுக்கு உதவுவதற்காகக் கூடுதல் படைகள் அங்கு கூட்டி வரப்பட்டதைக் கண்டு நான் நடுங்கினேன். வானர வீரர்கள், கயிறுகளின் வழியாகப் பாலத்தின்மீது இறக்கப்பட்டுக் கொண்டிருந்தனர். பிறகு, குதிரைகளும் கயிறுகள் மூலம் வந்து இறங்கின. எங்களுடைய வீரர்கள் அந்த வானரர்களை நோக்கித் தங்கள் அம்புகளை எய்தனர், ஆனால் எதிரிப் படையினரின்

எண்ணிக்கை வேகமாக அதிகரித்துக் கொண்டிருந்தது. எனக்குப் பின்னால், எனது படையில் இருந்த படையினரை விபீஷணன் வெட்டிச் சாய்த்து முன்னேறிக் கொண்டிருந்தான். நேரம் வேகமாகக் கரைந்து கொண்டிருந்தது. எதிரி எங்களை முற்றிலுமாகச் சூழ்ந்து கொள்வதற்கு முன்பாக ராமனை நான் கொல்லாவிட்டால், எல்லாம் முடிந்துவிடும்.

நான் என்னுடைய மிகச் சிறந்த வீரர்களை ஒன்றுதிரட்டி, வேகமாக நடவடிக்கை எடுப்பதற்கான ஒரு குழுவை உருவாக்கினேன். என் திட்டத்தை அவர்களிடம் நான் கூறியபோது, அவர்களுடைய கண்களில் தென்பட்ட எரிச்சலை என்னால் பார்க்க முடிந்தது. அந்தத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குப் பெருமளவில் துணிச்சல் தேவைப்பட்டது. ஆனால் சூழ்நிலை மிக மோசமாக இருந்ததை அவர்களுக்கு விளக்கிவிட்டு, அவர்களுடைய ஒப்புதலுக்குக் காத்திருக்காமல் நான் என்னுடைய சந்திரஹாசாவை என் கையில் எடுத்துக் கொண்டு என் ரதத்தைவிட்டுக் கீழே குதித்தேன். எனக்குப் பிடித்தமான குதிரையை என் ரதத்திலிருந்து விடுவித்தேன். என் தேரோட்டியின் கண்களில் கண்ணீர் நிரம்பியது. நான் அவனைக் கட்டியணைத்தேன். அவன் ஒரு மூதாட்டியைப்போல அழுது கொண்டே நிலை குலைந்து என் பாதங்களில் விழுந்தான். அவனை உதாசீனப்படுத்திவிட்டு, நான் என் குதிரையின்மீது ஏறி, என் வாளை விண்ணை நோக்கி உயர்த்தி, “ஹர ஹர மகாதேவா!” என்று உரத்தக் குரலில் முழங்கினேன்.

என்னைச் சுற்றி இருந்த நூற்றுக்கணக்கான வீரர்களும் அந்த முழக்கத்தை எதிரொலித்தனர். பெரும் அலைகள் கடற்கரையிலிருந்த பாறைகள்மீது வந்து மோதியபோது, மின்னல் அங்குமிங்கும் தாக்கியது. அப்போது கிட்டத்தட்ட இருட்டியிருந்தது. மழை வலுக்கத் துவங்கியது. நெருப்புச் சுவரை நோக்கி நான் என் குதிரையைச் செலுத்தினேன். ஈரமான நிலத்தில் வெட்டிச் சாய்க்கப்பட்டுக் கிடந்த வீரர்களையும், பிய்த்தெறியப்பட்டக் கைகால்களுடன் வலியில் துடித்துக் கொண்டிருந்த வீரர்களையும், குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்தவர்களையும், ரத்தக் குளங்களையும் கடந்து, நான் ராமனை நோக்கி வேகமாகச் சென்றேன். என் ஆட்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்தனர். ரத்தம் என் காதுகளில் சீறிப் பாய்ந்தது. என் கையில் இருந்த கடிவாளம் நடுங்கியதை என்னால் உணர முடிந்தது. என் குதிரையின் மூக்கிலிருந்து நுரை வழிந்தது, ஆனால் நான் அதைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்து வேகமாக அதைச் செலுத்தினேன். என்னுடைய தொடைகளையும் புஜங்களையும் தாக்கிய ஓரிரு அம்புகளைப் பொருட்படுத்தாமல், நான் வேகத்தைக் கூட்டினேன். நெருப்பினால் உண்டான வெப்பத்தை என்னால் உணர முடிந்தது. என் குதிரையும் தயங்கியது. ஆனால்

இன்னும் வேகமாகச் செல்வதற்கு அதை நான் கால்களால் உதைத்தேன். அது ஒரே தாவலில் அந்த நெருப்புச் சுவரின் ஊடாகக் குதித்து ராமனை நோக்கிச் சென்றது. என் ஆட்கள் என்னைப் பின்தொடர்ந்தனர். பயந்து போன வானரர்களின் முன்னால் நாங்கள் வந்து நின்றோம். என் தலைமுடியிலும் என் குதிரையின் பிடரி முடியிலும் நெருப்புப் பற்றியிருந்தது. என் உருவம் அந்த வானரர்களைக் கதிகலங்கச் செய்திருந்ததை என்னால் பார்க்க முடிந்தது.

அப்போது ராமனின் கண்களை நான் பார்த்தேன். அக்கணத்தில்கூட, "அவனுடைய உருவம் எவ்வளவு கருப்பாக இருக்கிறது!" என்று நினைத்து நான் ஆச்சரியப்பட்டேன். முகத்தில் பீதியுடன் அவன் நிலை தடுமாறிப் பின்னால் நகர்ந்தான். அவனுடைய இதயத்திற்குள் என் வாளைச் செருகுவதற்காக நான் அதை உயர்த்தியபோது, அனுமான் எம்பிக் குதித்து என் காலைப் பிடித்தான். நான் என் சமநிலையை இழந்து, என் குதிரையிலிருந்து கீழே விழுந்தேன். நான் அந்தக் குரங்கு மனிதனின் முகத்தின்மீது எட்டி மிதித்தேன். அவன் முனகிக் கொண்டே கடலுக்குள் விழுந்தான். நான் தட்டுத்தடுமாறி எழுந்து கொண்டு, என் வழியில் குறுக்கிட்டவர்களை வெட்டிச் சாய்த்தபடி, ராமனையும் லட்சுமணனையும் நோக்கி நடந்தேன். எதிரிப் படையினர் சரமாரியாக அம்பு மழை பொழிந்தனர். சில அம்புகள் அவர்களுடைய சொந்த வீரர்களைத் தாக்கின, ஆனால் ஒருசில அம்புகள் என் வீரர்களையும் தாக்கின. நாங்கள் தேவ இளவரசர்களை நோக்கி வேகமாக முன்னேறினோம். அப்போது கனமழை பெய்யத் துவங்கியது. எங்களால் சீராகச் செயல்பட முடியவில்லை. எங்கள் கால்கள் வழுக்கின. பிரம்மாண்டமான அலைகள் பாலத்தின்மீது மோதி, இரு தரப்பைச் சேர்ந்த பலரையும் தம்மோடு கொண்டு சென்றன. பாலத்தின் ஒரு பகுதி உடைந்து விழுந்ததில், ராமனும் அவனது ஒருசில வீரர்களும் தங்களுடைய முக்கியப் படையிலிருந்து தனித்து விடப்பட்டனர். அவன் சிக்கிக் கொண்டான். நான் அவனை நெருங்க வேண்டியிருந்தது மட்டும்தான் மிச்சமிருந்தது. அவன் கதை முடிந்துவிட்டதாக நான் நம்பினேன். புதுப்பிக்கப்பட்ட ஆற்றலுடன், வானரர்களுடன் சண்டையிட்டு நாங்கள் ராமனை நோக்கிச் சென்றோம்.

யுத்தம் முடிந்துவிட்டதாகவும் நான் வெற்றி பெற்றிருந்ததாகவும் அக்கணத்தில் நான் நினைத்தேன். மீண்டும் ஒருமுறை, துணிச்சலோடும் மன உறுதியோடும் நான் என் தலையெழுத்தை மாற்றியிருந்தேன். கடந்தகாலத்தில் பலமுறை, சாத்தியமற்றதுபோலத் தோன்றிய பல சூழ்நிலைகளில் நான் என் படையினரை வெற்றிக்கு இட்டுச் சென்றிருந்தேன். இது அவற்றில் ஒன்று. இன்னும் ஒருசில நிமிடங்களில்,

ராமனும் லட்சுமணனும் ஆழ்கடலில் என் சகோதரன் கும்பகர்ணனுடன் சேர்ந்து கொள்வர். அவர்களுடைய முகத்தில் பயம் தென்பட்டதை என்னால் பார்க்க முடிந்தது. கடலின் அலைகள் அந்தப் பாலத்தின்மீது மோதி, அவர்கள்மீது உப்பு நீரைத் தெளித்ததில், அவர்களுடைய கனமான வில்கள் அவர்களது கைகளிலிருந்து வழுக்கின. காற்று ஊளையிட்டது. இருண்ட வானத்தில் மின்னல் தொடர்ந்து வெட்டியது. ராமனின் கைகள் நடுங்கின. அவனால் துல்லியமாகக் குறி பார்த்து அம்பு எய்ய முடியவில்லை. அம்புகள் என்னைக் கடந்து சென்றன. ஆனால் எனக்கு இருந்த வெறியில், தற்செயலாக என்னைத் தாக்கியிருந்த ஓர் அம்பைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நான் என் குறுக்கே வந்தவர்களை வெட்டிச் சாய்த்துவிட்டு ராமனை நோக்கி முன்னேறினேன். மழைநீர் எங்கள்மீது பாறாங்கல்லைப்போல வந்து விழுந்தது. கனமழையின் சீற்றம் தாங்காமல் பாலம் அதிர்வுற்றது. எண்ணற்ற வானரர்கள் மடிந்து விழுந்தனர். நான் இன்னும் ஒருசில வீரர்களை வெட்டிச் சாய்க்க வேண்டியிருந்தது. அதன் பிறகு, எனது சந்திரஹாசாவைக் கொண்டு ராமனின் தலையை என்னால் கொய்துவிட முடியும். அந்த எண்ணத்தை நான் மிகவும் ரசித்தேன்.

நான் செய்திருந்த மிகத் தீவிரமான தவறை நான் மிகத் தாமதமாகவே உணர்ந்தேன். அனுமான் அமைத்திருந்த நெருப்புச் சுவரை நான் தாண்டி வந்ததில், என் பின்னாலிருந்து ஏதேனும் என்னைத் தாக்கிவிடுமோ என்று நான் பயப்படத் தேவையில்லை என்று நான் நினைத்திருந்தேன். ராமன்மீது எனக்கு இருந்த தணியாத ஆத்திரத்தில், எதிரியைக் கணிப்பதில் நான் ஓர் அடிப்படைத் தவறைச் செய்திருந்தேன். பெய்து கொண்டிருந்த பலத்த மழையில், அனுமான் உருவாக்கியிருந்த நெருப்பு அணைந்து போயிருந்ததால், யாரும் என்னை எளிதில் தாக்கக்கூடிய விதத்தில், எனக்குப் பின்னால் எந்தப் பாதுகாப்பும் இல்லாமல் போய்விட்டது. எனக்குப் பின்னாலிருந்து என்னைக் குறி வைத்து வந்து கொண்டிருந்த என் சகோதரன் விபீஷணனைப் பற்றி நான் முற்றிலுமாக மறந்துவிட்டிருந்தேன். அவனைத் தடுத்து நிறுத்துவதற்கு எந்த நெருப்பும் இல்லாததால், அவன் வஞ்சகமாக என்னை வந்தடைந்திருந்தான். அவனுடைய வாள் என் முதுகிற்குள் ஆழமாகச் செருகப்பட்டபோதுதான் என் தவறை நான் உணர்ந்தேன்.

நான் திரும்பி, எனது வாளால் அவனைத் தாக்க முயற்சித்தேன், ஆனால் அவன் குனிந்து கொண்டதால் நான் நிலை தடுமாறினேன். பிறகு அவன் என்னை எட்டி உதைத்ததில், கொந்தளித்துக் கொண்டிருந்த கடலுக்குள் நான் கிட்டத்தட்ட விழுந்திருந்தேன். பிறகு

நான் எப்படியோ சமாளித்துக் கடலுக்குள் விழுந்துவிடாமல் பார்த்துக் கொண்டேன், ஆனால் என் சகோதரன் என் முதுகில் ஏற்படுத்தியிருந்த காயத்திலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. என் கைகள் உணர்விழந்தன. நான் அணிந்திருந்த கனமான கவசம் என்னைக் கீழே இழுத்தது. ராமனும் லட்சுமணனும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, என்மீது அம்புகளைப் பொழிந்தனர். ஆனால் அவர்களுடைய அம்புகள் எனது கவசத்தின்மீது பட்டுத் தெறித்தனவே அன்றி, அவற்றால் என்னை ஊடுருவ முடியவில்லை. இழப்பதற்கு எனக்கு அதிக நேரம் இருக்கவில்லை. நான் மயங்கிக் கொண்டிருந்தேன். நான் அதிக பலவீனமடைவதற்குள் ராமனை நெருங்கியாக வேண்டியிருந்தது. என்னிடம் எஞ்சியிருந்த பலம் முழுவதையும் ஒன்றுதிரட்டி விபீஷணனை எட்டி உதைத்ததில், அவன் கடலுக்குள் போய் விழுந்தான். பிறகு நான் என் வாளை உயர்த்திப் பிடித்தபடி ராமனை நோக்கி விரைந்தேன். விபீஷணன் எப்படியோ மீண்டும் அந்தப் பாலத்தின்மீது ஏறியிருந்ததை நான் கவனிக்கவில்லை. என் மனம் முழுவதும் ராமனின்மீதே குவிந்திருந்தது. நான் முன்னால் பாய்ந்தபோது, விபீஷணனின் வாள் மீண்டும் என் முதுகில் விழுந்தது. ஓர் அங்குல இடைவெளியில் அது என் உடலைத் தவறவிட்டிருந்தது, ஆனால் எனது கவசத்தை என் உடலுடன் பிணைத்திருந்த முடிச்சுக்களை அது துண்டித்தது. நான் பின்னால் திரும்பி, விபீஷணனை மீண்டும் எட்டி உதைத்தேன். சீறிக் கொண்டிருந்த கடலுக்குள் அவன் மாயமாய் மறைந்தான். பிறகு நான் ராமனை நோக்கித் திரும்பியபோது, எனது கவசம் என் உடலிலிருந்து கீழே விழுந்தது. இப்போது என் எதிரியின் அம்புகள் என்னைத் தாக்குவதற்கு வசதியாக நான் நின்றேன்.

ராமன் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, என்னுடைய வயிற்றைக் குறி பார்த்து ஓர் அம்பை எய்தான். நான் என் முயற்சியைக் கைவிட விரும்பவில்லை, ஆனால் என் உடலிலிருந்து சொட்டிக் கொண்டிருந்த ரத்தம் என் தலையைக் கிறுகிறுக்கச் செய்தது. நான் தள்ளாடியபடி நடந்தேன். ஆனால் என்னால் வேகமாக முன்னேற முடியவில்லை. நான் வலியில் துடித்தபடி ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்தபோது, இன்னொரு சுற்று அம்புகள் என் வெற்று உடலைத் துளைத்தன. நான் மெதுவாகக் கீழே விழுந்தேன். அடர்ப்பச்சை நிற அலை ஒன்று என்னை விழுங்கியதுதான் கடைசியாக எனக்கு நினைவிருந்தது. பிறகு என் உலகம் இருண்டது.

நான் என் கண்களைத் திறந்தபோது, ஒரு மயான அமைதி நிலவியது. நிலம் இருட்டாகவும் குளிராகவும் இருந்தது. சிலர் என்னைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர், ஆனால் அவர்களுடைய முகங்களை

என்னால் பார்க்க முடியவில்லை. அப்போது ஓர் உயரமான, கரிய உருவம் என் தலையின் அருகே வந்து நின்றது. “ராமா . . .” நான் அவனுடைய கழுத்தைப் பிடிக்க விரும்பினேன், ஆனால் நிலத்தைவிட்டு என்னால் எழ முடியவில்லை. பூமித்தாய் என் உடலைத் திரும்ப எடுத்துக் கொள்ளவிருந்தாள். ராமன் சமஸ்கிருதத்தில் எதையோ முணுமுணுத்தான். சொர்க்கத்தில் எனக்கு ஓர் இடம் கிடைப்பது பற்றிய ஏதோ ஒன்று அது. நான் வாய்விட்டுச் சிரிக்க விரும்பினேன். அவனைக் கேலி செய்யும் விதத்தில், நான் என் கரங்களைக் கூப்பினேன். நான் தன்னைத் தாழ்ந்து வணங்கியதாக அந்த முட்டாள் நம்பியிருந்தான் என்பதை நினைத்து நான் உள்ளூரச் சிரித்தபடியே என் கண்களை மூடினேன். மனிதர்களும் அவர்களுடைய அகங்காரமும்!



# 61

# வெற்றியாளர்களும் அவர்களுடைய வழிமுறைகளும்

பத்ரன்

இன்று ராவணனின் இறுதிச் சடங்கு. அந்தி சாய்வதற்கு இன்னும் நேரமிருந்தது. வெயிலில் தூங்கியபடியே நின்ற கூட்டத்தினரிடையே நானும் நின்றேன். வருத்தமும் பயமும் எல்லா இடங்களிலும் பரவியிருந்தன. ராமனின் படைகள் நேற்றிரவு தலைநகருக்குள் நுழைந்திருந்தன. வானரர்கள் நகரம் முழுவதையும் சூறையாடியிருந்தனர், கொள்ளையடித்திருந்தனர், பெண்களைக் கற்பழித்திருந்தனர். பெரும்பாலான மக்கள் காடுகளுக்குள் தப்பிச் சென்றிருந்தனர். துணிச்சலான ஒருசிலர் தங்களுடைய சிறு உடமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காக எதிர்த்துச் சண்டையிட்டனர். மற்றவர்கள், வானரப் படையினரிடம் சரணடைந்தனர். ஆனால் யாரையும் சிறைபிடிப்பதற்கு வானரப் படையினருக்கு விருப்பம் இருக்கவில்லை. மன்னிப்பை எதிர்பார்த்த அசுர முட்டாள்கள் ஈவு இரக்கமின்றி வெட்டிச் சாய்க்கப்பட்டனர்,

தானியக்களஞ்சியங்கள் கொளுத்தப்பட்டன, கோவில்கள் கொள்ளையடிக்கப்பட்டன. ராவணனின் பிரம்மாண்டமான அரண்மனை இடித்துத் தள்ளப்படவிருந்தது, ஆனால் விபீஷணன் குறுக்கிட்டு, கோட்டைக்குள் எல்லோரும் பாதுகாப்பாக இருப்பதை உறுதி செய்தான். எனவே, மீண்டும் மேன்மக்கள் தங்கள் உடல்களையும் உடமைகளயும் பாதுகாத்துக் கொண்டனர். வானரக் காட்டுமிராண்டிகள் இலங்கையின் பொதுமக்கள்மீது கட்டவிழ்த்துவிடப்பட்டனர்.

அன்று மதியத்திற்குள் ஒருவித ஒழுங்கு வந்திருந்தது. காடுகளில் ஒளிந்து கொண்டிருந்த அசுரர்கள் பலரை வானர வீரர்கள் சிறைபிடித்து, வலுக்கட்டாயமாக நகரத்திற்குள் மீண்டும் கூட்டி வந்தனர். கடற்கரையில் மடிந்து கிடந்த வீரர்களிடம் ஏதேனும் விலையுயர்ந்த பொருட்கள் இருந்தனவா என்று தேடுவதற்காக, நேற்றிரவு நான் யாருக்கும் தெரியாமல் அங்கு சென்றிருந்தேன். அது ஆபத்தானதுதான், ஆனால் சுலபமாகப் பணம் சம்பாதிப்பதற்கு அது ஒரு நல்ல வழியாக இருந்தது. அதோடு, அது ஒரு பாதுகாப்பான இடமாகவும் இருந்தது. அசுரர்களைத் தேடி வானரர்கள் வரக்கூடிய கடைசி இடம் அதுவாகத்தான் இருக்கும். என்னைப்போலவே இன்னும் இரண்டு மூன்று பேர் அந்தக் கடற்கரைக்கு வந்தனர், ஆனால் நாங்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் தள்ளியே இருந்தோம்.

அப்போதுதான் நான் ராவணனின் உடலைப் பார்த்தேன். அமாவாசை இரவின் மங்கலான வெளிச்சத்தில் என் அரசனை நான் அடையாளம் கண்டுகொண்டேன். அவர் பலமாக மூச்செறிந்து கொண்டிருந்தார், வலியில் துடித்துக் கொண்டிருந்தார். நரிகள் அவரை உயிருடன் தின்று கொண்டிருந்தன. அவருடைய கைக்காப்புகளிலிருந்த தங்கத்தின் மினுமினுப்புதான் என்னை அவரிடம் ஈர்த்திருந்தது. துவக்கத்தில் அது தங்கம்தானா என்று எனக்கு உறுதியாகத் தெரியாததால், நான் கீழே குனிந்து பார்த்தேன். அப்போது அவரிடமிருந்து ஒரு முனகல் வெளிப்பட்டது. ஒரு மாபெரும் பேரரசன் வீழ்ந்து கிடந்தார். தங்கள் கௌரவத்தையும் சுதந்திரத்தையும் மதிப்பீடுகளையும் கலாச்சாரத்தையும், தங்கள்மீது படையெடுத்து வந்து தங்களை வெற்றி கொண்ட அன்னிய நாட்டவர்களிடம் இழந்திருந்த ஓர் இனத்திற்காகவும் அதன் மக்களுக்காகவும் போராடியிருந்த ஒரு மாமனிதர் அவர். ராவணன் அசுரர்களுக்கு மதிப்பையும் தன்னம்பிக்கையையும் கொடுத்தார், எங்களுடைய பண்டைய கலாச்சாரம் குறித்து எங்களிடத்தில் நம்பிக்கையையும் பெருமிதத்தையும் புகுத்தினார், எங்களுடைய நாகரீகத்தைப் புகழின் உச்சிக்கு எடுத்துச் சென்றார். அவர் ஒரு கொடுங்கோலனாக இருந்திருக்கக்கூடும்.

அசுரர்களின் ஜனநாயக மற்றும் சமத்துவச் சமுதாயத்தை அழித்து, சண்டையிடும் ஓர் இயந்திரமாக அவர் அதை மாற்றியிருந்தார் என்பது உண்மைதான். அவர் ஆடம்பரத்தில் திளைத்தார், தன் மனத்திற்கு மகிழ்ச்சியளித்த எல்லாவற்றையும் செய்தார். அவர் உருவாக்கியிருந்த சமுதாயம் கச்சிதமானதாக இருக்கவில்லை. எங்களில் பெரும்பாலானோர் ஏழைகளாக இருந்தோம். ஆனாலும், கடின உழைப்பும் அதிர்ஷ்டமும் இருந்தால் எங்களால் பணக்காரர்களாகவும் சக்திமிக்கவர்களாகவும் ஆக முடியும் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். தேவர்களுக்கு இடையே சலுகைகளுடன் இருந்த பிராமண சாதிபோல, எங்கள் சமுதாயத்தில் பிறப்பை அடிப்படையாகக் கொண்ட சாதிச் சலுகைகள் எதுவும் இருக்கவில்லை. நாங்கள் கடுமையான வறுமையில் இருந்தும்கூட, பணக்காரர்கள் மற்றும் சிறப்புரிமை பெற்றவர்கள் குறித்து நாங்கள் பெருங்கோபம் கொண்டிருந்தும்கூட, தேவச் சமுதாயத்தோடு ஒப்பிடுகையில், நாங்கள் ஓர் ஆடம்பரத்தை அனுபவித்தோம் — நாங்கள் மனிதர்களாக நடத்தப்பட்டோம். எங்களில் பெரும்பாலானோர் ஏழைகளாக இருந்தனர், ஆனால் எங்கள் ஏழ்மையிலும் ஓர் அமைதியான கண்ணியம் இருந்தது. வீழ்த்தப்பட்டுக் கிடந்த என் அரசனை நோக்கி நான் குனிந்தபோது, இவை எதுவும் எனக்குத் தெரியவில்லை. நெடுங்காலம் கழித்தே இவை அனைத்தும் எனக்குத் தெளிவாயின. ஆனால் அதற்குள் காலம் கடந்திருந்தது.

அந்த வயதான அரசன் எதையோ முணுமுணுத்தார், ஆனால் அவர் என்ன கூற முயற்சித்துக் கொண்டிருந்தார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் அவருடைய நெற்றியைத் தொட்டேன். அது மிகவும் சூடாக இருந்தது. அவருக்குக் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது. அவர் வேகமாக மூச்சு வாங்கினார். அவர் இறந்து கொண்டிருந்தார், ஆனால் அந்தக் காட்சியை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவர் மீண்டும் எதையோ முணுமுணுத்தார். நான் அவரை எங்கேயோ கூட்டிச் செல்ல வேண்டும் என்று அவர் விரும்பினார் என்பது மட்டுமே எனக்குப் புரிந்தது. பரிதாபமான ஜீவன்! நான் என்னையும் அறியாமல் அழத் தொடங்கினேன். நான் அவருடைய தலையை என் கைகளில் எடுத்துக் கொண்டு, அவரை என் மார்போடு சேர்த்து அணைத்தேன். "நான் ஓர் உண்மையான அரசனை அரவணைத்துக் கொண்டிருந்தேன்!" என்ற உணர்வு எனக்கு உற்சாகமளித்தது. அந்த உற்சாகக் களிப்பில், நான் தேவர்களைப் பழி வாங்கப் போவதாக அவரிடம் கூறினேன். "அரசே, நான் உங்கள் வேலையைப் பூர்த்தி செய்வேன். நீங்கள் கவலைப்படாதீர்கள்.

அமைதியுடன் செல்லுங்கள். நம் இனத்திற்காக நான் அதைச் செய்வேன். என் வழிமுறைகள் வேறாக இருக்கலாம். உங்களுடைய வழிமுறைகளோடு ஒப்பிடுகையில் உன்னதமற்றவையாகவும் இருக்கலாம்.'' இறந்து கொண்டிருந்த அந்த மனிதரிடம் நான் கூறிக் கொண்டிருந்தவற்றை என்னாலேயே நம்ப முடியவில்லை.

ராவணனுக்கு வேகமாக மூச்சு வாங்கியது. நரிகள் பாதிச் சுவைத்திருந்த அவரது காதுகளை நோக்கி நான் என் வாயைக் கொண்டு சென்றேன். அழுகிக் கொண்டிருந்த சதையின் நாற்றம் எனக்குக் குமட்டலை ஏற்படுத்தியது, ஆனால் நான் என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அவருடைய காதில், ''முன்பொரு சமயத்தில் நானும் ஒரு போர்வீரனாக இருந்தவன்தான். ஆனால் இப்போது எனக்கு வயதாகிவிட்டது. ஆயுதங்கள் இப்போது என்னை அச்சுறுத்துகின்றன. போரைக் கண்டு நான் பீதியடைந்துள்ளேன். ஒரு குழந்தையைக்கூட என்னால் காயப்படுத்த முடியாது. ஆனாலும், என் வழிமுறைகள் மிகவும் கொடுமையானவை. உங்களுக்காகவும், எனக்காகவும், சேதப்படுத்தப்பட்டுள்ள நமது இனத்திற்காகவும் நான் பழி வாங்குவேன். நமக்கும் நம் இனத்திற்கும் தான் செய்துள்ள கொடுமைகளுக்கு ராமன் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும். என்னை நம்புங்கள். இப்போது அமைதியுடன் செல்லுங்கள்,'' என்று கூறினேன்.

நான் இதைக் கூறியபோது, என் வாழ்விற்கு ஒரு குறிக்கோள் கிடைத்திருந்ததுபோல எனக்குத் தோன்றியது. முக்கியத்துவமற்ற எனது வாழ்க்கை எதற்காகவாவது பயன்படும். நான் எனது அரசனின் நெற்றியில் முத்தமிட்டுவிட்டு, அவருடைய தலையை ஈரமான நிலத்தின்மீது மெதுவாக வைத்தேன். அவர் மீண்டும் வலியோடு மூச்சு வாங்கினார். ராவணன் இறந்து கொண்டிருந்ததைப் பார்த்துக் கொண்டு நெடுநேரம் நான் அங்கு நின்றேன். கிழக்கு வானின் வெள்ளிக் கீற்றுகளும் காகங்களின் கரைதல்களும் ஒரு புதிய விடியலை அறிவித்தபோது, ராவணனின் சுவாசம் அடங்கியிருந்தது. நான் இன்னும் அரை மணிநேரம் அங்கு காத்திருந்துவிட்டு, பிறகு கீழே மண்டியிட்டு அமர்ந்து, அவர் அணிந்திருந்த தங்க நகைகள் அனைத்தையும் அவரிடமிருந்து எடுத்துக் கொண்டேன். அவர் எங்கு செல்லவிருந்தாலும் சரி, இனி அவை அவருக்குத் தேவைப்படாது. அது ஒரு நல்ல தங்க வேட்டை. என் அரசனை நான் எதிர்கொண்டிருந்தது குறித்து நான் மகிழ்ந்தேன்.

நான் நகரத்தை நோக்கித் திரும்பி நடந்தபோது, இறந்து கொண்டிருந்த அந்த மனிதனிடம் நான் கூறியிருந்த வார்த்தைகளின் தீவிரமும் முட்டாள்தனமும் எனக்கு உறைத்தது. ''இறந்து கொண்டிருந்த

ஒரு மனிதனுக்கு நான் கொடுத்திருந்த வாக்கு உட்பட எதுவும் என்னைக் கட்டுப்படுத்தப் போவதில்லை," என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். நான் நகரத்தின் வெளிப்புற எல்லையை அடைந்தபோது, ராவணனுக்கு நான் கொடுத்திருந்த வாக்கை மீறுவதில் எந்தத் தவறும் இல்லை என்று என்னை நானே சமாதானப்படுத்தியிருந்தேன். ராமனை எதிர்த்துப் பழி வாங்கும் படலம் ஒன்றை நடத்துவதற்கு நான் ஒன்றும் ஒரு கதாநாயகன் அல்ல. விரைவில், வானர வீரர்கள் என்னைப் பிடித்து, நகரில் நடந்து கொண்டிருந்த வெற்றி ஊர்வலங்களைப் பார்ப்பதற்கு என்னை நடத்திக் கூட்டிச் சென்றனர். மதிய வேளை நெருங்கியபோது, பழி வாங்குவதைப் பற்றி நான் சுத்தமாக மறந்து போயிருந்தேன்.

பலரும் கட்டாயமாக ராஜ வீதிக்குக் கொண்டு வரப்பட்டு, கொளுத்திய வெயிலில், சாலையின் இரு புறங்களிலும் உட்கார வைக்கப்பட்டனர். தங்கள் இடத்தில் இருந்தபடி லேசாக நெளிந்தவர்களைக்கூட வானர வீரர்கள் ஈவு இரக்கமின்றி அடித்தனர். தங்கள் வீட்டுப் பெண்கள் வானரர்களால் தெருவின் ஊடாக இழுத்துச் செல்லப்பட்டதை உள்ளூரக் கொதிப்புடனும் பரிதவிப்புடனும் அசுரர்கள் கண்டனர். வெயில் வந்து வெகுநேரம் ஆகியும் விலக மறுத்தப் பனிமூட்டத்தைப்போல, பயம் தொடர்ந்து அங்கு நிலை கொண்டிருந்தது. ஆச்சரியமூட்டும் விதத்தில், அன்றைய தினம் தெளிவாகவும் காற்று வீசிக் கொண்டும் இருந்தது. நேற்றைய கனமழைக்குப் பிறகு, எல்லாம் புத்துணர்ச்சியுடன் காணப்பட்டது. மரங்கள் பளீர்ப் பச்சை நிறத்தில் இருந்தன. வானம் அடர்நீல நிறத்தில் இருந்தது. மென்மையான, பஞ்சு போன்ற மேகங்கள் எந்தக் குறிக்கோளுமின்றி அதில் மிதந்து திரிந்தன. ஆங்காங்கே தேங்கியிருந்த நீரில் தவளைகள் துள்ளிக் குதித்து விளையாடின. ஒட்டுமொத்த உலகமும் பிரகாசமாக இருந்தது. ராவணன் இறந்து ஒரு நாள்கூட முழுதாக முடிந்திருக்கவில்லை, ஆனால் அதற்குள், அவரும் அவரது கனவுகளும் ஒருபோதும் இருந்ததே இல்லை என்பதுபோல ஆகியிருந்தன. ராவணனின் சலடத்திலிருந்து நான் திருடியிருந்த அவரது நகைகளை எனது அரைக்கச்சைக்குள் நான் தள்ளினேன். திருடியிருந்தேன் என்று கூறுவதைவிட, மீட்டெடுத்திருந்தேன் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும். ராவணனுக்குச் சொந்தமாக இருந்த அனைத்தும், அடுத்த ராவணனுக்காகக் காத்துக் கொண்டு சாலையில் உட்கார்ந்திருந்த என்னிடமிருந்தும், என்னைப் போன்ற மக்களிடம் இருந்தும் அவர் எடுத்திருந்தவையே. அரண்மனைக் கோபுரத்தில் விஷ்ணுவின் கொடி மிக உயரமாகப் பறந்தது. எங்களுடைய அடுத்த எஜமானனான ராமனை வரவேற்க நாங்கள் காத்திருந்தோம்.

காட்டுமிராண்டித்தனமான வானரர்கள் எங்களை வலுக்கட்டாயமாக அங்கு உட்கார்த்தி வைத்திருந்தனர்.

மதியத்திற்குள், வெயில் தாங்காமல் மக்கள் மயக்கம் போட்டு விழத் துவங்கியிருந்தனர். எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பருவ வயதுச் சிறுவன், ஒருசில அடிகள் தள்ளி இருந்த வானரர்களை வெறித்துக் கொண்டிருந்தான். ஏதோ பிரச்சனை ஏற்படவிருந்ததை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அந்தச் சிறுவனின் மனத்தில் என்ன ஓடிக் கொண்டிருந்தது என்பதை நான் அறிந்தேன். என்னால் முடிந்த அளவுக்கு வேகமாக நான் அந்த இடத்தைவிட்டு வெளியேறியாக வேண்டியிருந்தது. ஆனால் யாருடைய கவனத்தையும் ஈர்க்காமல் எப்படி அங்கிருந்து நழுவுவது? அங்கிருந்து தப்புவதற்கு நான் ஒரு திட்டத்தை யோசிப்பதற்கு முன்பே அந்தச் சிறுவன் தன் இடத்திலிருந்து குதித்து எழுந்து, அந்த வானரர்களை நோக்கி விரைந்தான். சத்தத்தைக் கேட்டுத் திரும்பிய வானர வீரர்களின் முகத்தில் அச்சிறுவன் பலமாக ஓங்கிக் குத்தினான். அவர்கள் நிலைதடுமாறி விழுந்தனர். அச்சிறுவன் அவர்களுடைய ஈட்டிகளை எடுத்து அவர்களுடைய உடல்களுக்குள் பல முறை செருகினான். அதற்காகவே காத்திருந்ததுபோல, வேறு பல இளைஞர்களும் வானர வீரர்களைத் தாக்கினர். நான் உட்பட, பெரும்பாலானவர்கள், எந்த உணர்ச்சியுமின்றி அந்த நாடகத்தைக் கண்டோம். தங்களுடைய சக வீரர்களுக்கு உதவுவதற்காக, கோட்டைக்குள் இருந்து அதிக எண்ணிக்கையிலான வானரர்கள் ஓடி வந்தனர். ஒருசில நிமிடங்களில், அவர்கள் அனைவருமாகச் சேர்ந்து அந்த இளம் புரட்சியாளர்களைக் கொன்று தள்ளியிருந்தனர்.

இந்த நாடகத்தைத் தொடங்கி வைத்தச் சிறுவனை அவர்கள் கண்டதுண்டமாக வெட்டி, அவனுடைய கைகளையும் கால்களையும் கூட்டதிற்குள் எல்லாத் திசைகளிலும் எறிந்தனர். கொல்லப்பட்ட வானர வீரர்களின் மரணத்திற்குப் பழி வாங்கும் விதத்தில், கூட்டத்திலிருந்த அசுரர்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிலர் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்களுடைய தலைகள் கொய்து எறியப்பட்டன. கொடூரம் கட்டவிழ்த்துவிடப்பட்டிருந்ததை நாங்கள் கண்டோம். கதாநாயகனாக ஆக நினைத்த எந்தவோர் அசுரனுக்கும் அது ஓர் எச்சரிக்கை மணியாக அமைந்தது.

மதியம் வெகுநேரம் ஆகியிருந்தபோது, இன்னும் பலர் மயங்கி விழுந்திருந்தனர், சிலர் தண்ணீருக்காக வானரர்களிடம் யாசித்தனர். நான் களைப்பில் தூங்கியிருந்தேன். திடீரென்று கேட்டச் செண்டை ஒலி என்னை விழித்தெழச் செய்தது. தொலைதூரத்தில், கோட்டைக் கதவுகள்

திறக்கப்பட்டு, ஓர் ஊர்வலம் ராஜவீதிக்குள் நுழைந்தது. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதைப் பார்ப்பதற்காக ஒட்டுமொத்தக் கூட்டமும் எட்டிப் பார்த்தது. ஆச்சரியத்தில் வாய் பிளந்து நின்று கொண்டிருந்த கூட்டத்தினரின் ஊடாக அந்த ஊர்வலம் வளைந்து நெளிந்து சென்றது. ஒரு பெரிய கம்பத்தில் உயர்த்தப்பட்டிருந்த ஏதோ ஒன்று, மேலும் கீழுமாக அசைந்தாடிக் கொண்டிருந்ததை மட்டுமே என்னால் பார்க்க முடிந்தது. கோட்டைக்கு உள்ளேயிருந்து ஒரு வேதனையான அலறல் எழுந்தது. அது அந்த ஊர்வலத்தைப் பின்தொடர்ந்தது. அந்த ஊர்வலம் என்னை நெருங்கியபோது, ராவணின் தலைதான் அந்தக் கம்பத்தில் ஆடிக் கொண்டிருந்தது என்பதைக் கண்டு நான் கதிகலங்கிப் போனேன். அங்கதன்தான் அந்தக் கம்பத்தைத் தாங்கிப் பிடித்திருந்தான். முன்பொரு காலத்தில் கம்பீரமாகவும் வசீகரமாகவும் இருந்த அந்த முகம், இப்போது விகாரமாகவும் அச்சுறுத்துவதாகவும் இருந்தது. கிஷ்கிந்தையின் கொடூரமான அரசன் சுக்ரீவன், தனது கனமான உருட்டுக்கட்டையைத் தூக்க முடியாமல் தூக்கியபடி அங்கதனுக்குப் பின்னால் தள்ளாடியபடி நடந்து வந்தான். அவனுக்குப் பின்னால், பல அசிங்கமான குரங்கு மனிதர்கள் தங்களது உருட்டுக்கட்டைகளுடன் நடந்து சென்றனர். அவர்கள் வழக்கமாக அணிந்த, மான் தோலால் ஆன ஆடைகள் காணாமல் போயிருந்தன. அந்த இடத்தை, அரண்மனையிலிருந்து அவர்கள் கொள்ளையடித்திருந்த பட்டாடைகள் அலங்கரித்தன. பார்ப்பதற்கு அவர்கள் அவலட்சணமாக இருந்தனர், ஆனால் அவர்கள் சுமந்து சென்ற பெரிய ஆயுதங்களைக் கண்ட எவருக்கும் அவர்களைக் கண்டு சிரிப்பதற்கான துணிச்சல் இருக்கவில்லை. அந்த வானர வீரர்களுக்குப் பின்னால், தங்களது புதிய தலைவர்களின் வெற்றியைப் பறைசாற்றுவதற்காக, அசுர வீரர்கள் தங்கள் வாத்தியங்களை இசைத்தபடி நடந்து சென்றனர். ராமனும், அவனது சகோதரனும், வெற்றிப் பார்வையுடன் சீதையும் ராவணனின் ரதத்தில் அவர்களைப் பின்தொடர்ந்தனர். சீதை தன் கணவனின் பக்கத்தில் மகிழ்ச்சியாக அமர்ந்திருந்தாள்.

ரதத்தின் இரு பக்கங்களிலும், அனுமானும் விபீஷணனும், லட்சுமணன் கொடுத்துக் கொண்டிருந்த சிறு சிறு வேலைகளைச் செய்தபடி ஓடி வந்தனர். தங்களுடைய புதிய எஜமானர்களை மகிழ்விப்பதற்காக அவர்கள் ஒருவரோடு ஒருவர் போட்டிப் போட்டபடி அவ்வேலைகளைச் செய்து கொண்டிருந்தனர். ராமனின் இவ்விரு சேவகர்களுக்கும் இடையே நிலவிய போட்டி வெளிப்படையாகத் தெரிந்தது. ராவணனின் வைரங்கள் பதிக்கப்பட்டத் தங்கக் கிரீடம் ராமனின் தலையை அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவனுடைய

முகத்தில் ஒரு மரக்கட்டைத்தனமான புன்னகை படர்ந்திருந்தது. எங்கள் எல்லோரையும் ஆசீர்வதிப்பதுபோல அவன் தன் கைகளை லேசாக உயர்த்தினான். அவன் தனது வில்லையும் அம்பறாத்தூணியையும் தனக்கும் தன் மனைவிக்கும் இடையே வைத்திருந்ததையும், அவன் தன் மனைவியை ஒருமுறைகூட ஏறெடுத்துப் பார்க்கவில்லை என்பதையும், தவறிக்கூட அவளது கை தன்மீது படுவதைத் தவிர்த்ததையும் நான் கவனித்தேன்.

அது அப்போது எனக்கு வினோதமாகப் பட்டது, ஆனால் தேவ கலாச்சாரத்தைப் பற்றி நான் தெரிந்து கொண்டபோது, அதற்கான பொருள் எனக்குப் புரிந்தது. அன்று மாலையில் நிகழ்ந்த விஷயங்கள், அவர்களுடைய கலாச்சாரத்தைப் பற்றிய எனது அறிவை விரிவுபடுத்தின. ராமனின் ரதத்திற்குப் பின்னால், அரண்மனைப் பெண்களைச் சுமந்து கொண்டு பல பல்லக்குகள் சென்றன. அவற்றில் ஒன்றில், மண்டோதரி அமர்ந்திருந்தார். அவரது முகம் லேசாகத் திரையிடப்பட்டிருந்தது, அவரது தலை மழிக்கப்பட்டிருந்தது. அவர் ஒரு வெள்ளைப் புடவையை அணிந்திருந்தார். ராவணனின் தலை அந்தக் கம்பத்தில் மேலும் கீழும் ஆடியதைவிட, அசுர அரசியார் ஒரு தேவ விதவையைப்போல உடையணிந்திருந்த காட்சிதான் கூட்டத்தினரை உலுக்கியது. சாலையின் இருபுறமும் இருந்த அசுர ஆண்கள் அவரைக் கண்டவுடன் நிலத்தை நோக்கிக் குனிந்து அவரைப் பணிந்து, அவருடைய நிலைமை குறித்து ஒப்பாரி வைத்தபோது, அவர் மிகுந்த கண்ணியத்தோடும் சுயகட்டுப்பாட்டோடும் அமர்ந்திருந்தார். அசுரர்கள் தங்களுடைய ஒப்பாரியை நிறுத்திவிட்டு, 'ஸ்ரீ ராம ஜெயம்' என்று முழங்குமாறு வானர வீரர்கள் அவர்களைப் பார்த்துக் கத்தினர், அவர்களை எட்டி உதைத்தனர். ஆனாலும், சின்னாபின்னமாக்கப்பட்டிருந்த தங்களது கனவுகளுக்காக அழுவதற்கான தங்களது இந்தச் சிறிய ஆடம்பரத்தை விட்டுக்கொடுக்க அசுரர்கள் மறுத்தனர். மாயமாய் மறைந்துவிட்டக் கனவுகளோடு ஒப்பிட்டபோது, உடைக்கப்பட்ட எலும்புகள் அவ்வளவு முக்கியமாகப் படவில்லை. என்னால் என் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நானும் என் நண்பர்களோடு சேர்ந்து என் நெஞ்சில் அடித்துக் கொண்டு பெருங்குரலெடுத்து ஓலமிட்டேன்.

செண்டைகள் மற்றும் கொம்புகளின் உரத்தச் சத்தத்தால்கூட அசுரர்களின் அழுகைகளின் துயரத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அழிவெனும் படுகுழியை எதிர்கொண்டிருந்த ஓர் இனத்தின் அழுகை அது. ஒரு கலாச்சாரத்தின் மரண அழுகை அது. பல வருடங்களுக்கு முன்பு, தங்களது கலாச்சாரம் புதுப்பிக்கப்படுவதற்கான ஓர் ஒளிமயமான

நம்பிக்கையை அசுரர்கள் பார்த்திருந்தனர். ஆனால் இப்போது அது சிதைந்து போய்க் கிடந்தது. மறைந்து கொண்டிருந்த சூரியன், கொந்தளித்துக் கொண்டிருந்த கடலைச் செந்நிறமாக மாற்றிய வேளையில், எல்லைகளற்ற ஓர் உலகத்தையும் சமத்துவமான ஓர் உலகத்தையும் குறித்த எங்கள் கனவுகளை நாங்கள் குழிதோண்டிப் புதைத்தோம். இந்தியாவைச் சேர்ந்த அசுரர்கள், அடிமைத்தனமும் சாதியும் இல்லாத ஓர் உலகம் உருவாகும் என்று பல காலங்களாக நம்பி வந்திருந்தனர். இதயத்தில் ஆழ்விருப்பமும் கனவு காண்பதற்குரிய லட்சியமும் இருந்தால் எவனொருவனாலும் தனது எதிர்காலத்தைத் தீர்மானித்து வடிவமைக்க முடிகின்ற ஓர் உலகம் உருவாகும் என்று அவர்கள் கனவு கண்டிருந்தனர். ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பு, சரஸ்வதி நதிக்கரையிலும் சிந்து நதிக்கரையிலும் இருந்த எங்களுடைய நகரங்கள் தேவர்களின் காட்டுமிராண்டித்தனமான தாக்குதல்களுக்கு இரையாகி அவர்களுடைய வசமானபோது, அசுரர்களுடைய அந்தக் கனவு இடிந்து நொறுங்கியது. ஆனால், மகாபலி மற்றும் ராவணனைப் போன்ற வீரர்கள் அந்த கனவை மீண்டும் அசுரர்களின் மனங்களில் துளிர்விடச் செய்தனர்.

அந்தக் கதாநாயகனின் தலை இப்போது ஒரு கொடிய விலங்கின் கையில் இருந்த ஒரு கம்பத்தின் முனையில் மேலும் கீழுமாக ஆடிக் கொண்டிருந்தது. அந்த ஊர்வலம் கடலுக்கு அருகே சென்றதும் நின்றது. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதைப் பார்ப்பதற்காக, அசுரர்கள் கூட்டம் கடற்கரையை நோக்கி ஓடியது. ஒருசில மணிநேரத்திற்கு முன்பு வானரர்களுடன் போரிட்டிருந்த அசுர வீரர்கள், இப்போது தங்கள் எதிரிகளுடன் சேர்ந்து அசுரக் கூட்டத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தனர். அவர்கள் இப்போது புதிய ஆட்சியின்கீழ் சேவை செய்தனர். அவர்கள் தங்களது சம்பளங்களையும் பதவி உயர்வுகளையும் சலுகைகளையும் தக்க வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அவர்கள் இப்போது பொதுமக்களின் ஊழியர்கள். தங்களுடைய எஜமானர்களிடமிருந்து வந்த உத்தரவுகளின் பேரில், பொதுமக்கள்மீது தங்களுடைய லத்திகளைக் கொண்டு இடிகளை இறக்குவதற்கு அவர்கள் தயாராக இருந்தனர். பொதுமக்கள் தங்கள் தலைவர்களுக்கு அருகில் செல்வதைத் தடுப்பதற்காக, அவர்கள் ஒரு மனிதச் சங்கிலியை உருவாக்கினர். அந்த மாபெரும் தலைவர்கள் எங்களிடம் பேசுவதற்காக ஓர் உயரமான மேடை அமைக்கப்பட்டிருந்தது. கடற்கரையில் உட்காருமாறு எங்கள் அனைவருக்கும் கட்டளை இடப்பட்டது. நாங்கள் உட்காருவதற்குள் அந்தக் காவலர்கள் எங்களைப் பிடித்துக் கீழே தள்ளினர், அழுத்தி உட்கார வைத்தனர். தேவைப்பட்டபோது, அவர்கள்

எங்களை அடிக்கவும் செய்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு, ராமன் அந்த மேடையின்மீது ஏறினான். அவனது முகத்தில் ஒரு லேசான சிடுசிடுப்புத் தெரிந்தது. ஆனால் கூட்டத்தினரைப் பார்த்து அவன் கையசைத்தபோது, அவனுடைய புன்னகை மீண்டும் அவனிடம் திரும்பி வந்தது. அவனுடைய கையசைப்பிற்குப் பதிலளிக்கும் விதமாக, கூட்டத்திலிருந்து ஒருசிலர் மட்டுமே தங்கள் கைகளை அசைத்தனர். இப்போது அந்தச் சிடுசிடுப்பு மீண்டும் அவனிடம் திரும்பி வந்தது. அவனுடைய எடுபிடிகள் அதைப் புரிந்து கொண்டு, காவல்துறைக் கண்காணிப்பாளர்களுக்குச் செய்தி அனுப்பினர். விரைவில், நாங்கள் எல்லோருமே ராமனைப் பார்த்துக் கையசைத்தும், அவன் கூறிய ஒவ்வொரு வார்த்தைக்கும் கைதட்டியும் எங்கள் உற்சாகத்தை வெளிப்படுத்தினோம். ஆனால் அவன் சமஸ்கிருதத்தில் பேசியதால், அவன் கூறியதில் ஒரு வார்த்தைகூட எங்களுக்குப் புரியவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு, விபீஷணன் எழுந்து நின்று, ராமனின் காதில் எதையோ கிசுகிசுத்தான். பிறகு, ராமனின் பேச்சை வரிக்கு வரி அவன் மொழிமாற்றம் செய்து கூறினான். ராமன் பேசியபோது, சரியான இடங்களில் நாங்கள் கைதட்டியிருக்கவில்லை என்பது எங்களுக்குப் புரிந்தது.

ராமன் மீண்டும் முதலிலிருந்து தன் பேச்சைத் துவக்கினான். தீய அரக்கனான ராவணனின் கொடுங்கோன்மையிலிருந்து நாங்கள் விடுவிக்கப்பட்டிருந்ததால் நாங்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்று அவன் கூறினான். நல்லது எப்போதும் தீயதை வெற்றி கொள்ளும் என்று அவன் நம்பினான். அது அறிவார்ந்ததாக இருந்ததால், நாங்கள் அந்த மகத்தான வார்த்தைகளுக்காகக் கைதட்டினோம். அப்போது, அக்கணத்திலிருந்து நாங்கள் தேவ தர்மத்தின்படி ஆளப்படுவோம் என்று ராமன் அறிவித்தான். உயர்மட்டக் குழுக்களோ அல்லது கிராமப் பஞ்சாயத்துக்களோகூட இனி இருக்காது என்றும் அவன் கூறினான். அரசன்தான் ஒப்புயர்வற்றவன். பிராமணர்களின் அறிவுரைப்படி அவன் ஆட்சி செய்வான். இதனால் ஏற்படக்கூடிய பின்விளைவுகளைக் கூட்டத்தில் இருந்த பலரால் புரிந்து கொள்ள முடியவில்லை என்றாலும்கூட, அவர்களிடையே ஓர் அசௌகரியமான மௌனம் நிலவியது. பிறகு நாங்கள் மீண்டும் உற்சாகமாகக் கைதட்டினோம். குடிமக்கள் அனைவரும் நான்கு சாதிகளாகப் பிரிக்கப்படுவார்கள் என்றும், அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு குறிப்பிட்ட வேலை ஒதுக்கீடு செய்யப்படும் என்றும் ராமன் கூறினான். கடவுளின் முகத்திலிருந்து தோன்றியிருந்த பிராமணர்கள்தான் மிக உயர்ந்த சாதியினர். அவர்கள் அறிவைப் போதித்து, பூமியில் கடவுளின்

பிரதிநிதிகளாக இருந்து செயல்படுவர். எல்லோரும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து, அவர்கள் கூறும்படி நடந்து கொள்ள வேண்டியது முக்கியம். கடவுளின் கைகளிலிருந்து வந்த அதிர்ஷ்டசாலிகளான சத்திரியர்கள், பிராமணர்களின் அறிவுரைப்படி சமுதாயத்தை ஆள்வார்கள்.

கடவுளின் தொடைகளிலிருந்து வந்த வணிகர்களான வைசியர்களுக்கு, வியாபாரத்தையும் வர்த்தகத்தையும் நடத்துவதற்கு அனுமதி வழங்கப்படும். ஆனால் அவர்கள் மற்ற இரண்டு சாதியினரின்கீழ் இருப்பர். கைவினைக் கலைஞர்கள், சிறு நில உரிமையாளர்கள், சாதாரண வீரர்கள், சூத்திரர்கள் ஆகியோர், துரதிர்ஷ்டவசமாக, கடவுளின் பாதங்களிலிருந்து வந்ததால், அவர்கள் மற்ற மூன்று சாதியினருக்கும் சேவகம் செய்வார்கள். இவை அனைத்தும் எங்களுக்குக் குழப்பமாக இருந்தது, ஆனாலும் நாங்கள் அனைவரும் கைதட்டினோம். தொழிற்திறமை அற்றவர்கள், உழவர்கள் ஆகியோருக்கும், தெருக்களைச் சுத்தம் செய்வது, அடுத்தவர்களின் துணிகளைத் துவைப்பது, பாரம் சுமப்பது போன்ற வேலைகளைச் செய்த என்னைப் போன்ற கருப்பர்களுக்கும் என்ன நிகழும் என்று நான் யோசித்தேன். என்னைப் போன்றவர்கள் தேவக் கடவுளின் எந்த பாகத்திலிருந்து வந்தனர் என்பதைத் தெரிந்து கொள்ள நான் ஆவலாக இருந்தேன். அதற்கான விடை விரைவில் ராமனிடமிருந்து வந்தது. மேற்கூறப்பட்ட நான்கு சாதிகளுக்குள்ளும் பொருந்தாதவர்கள், தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுவார்கள். எங்களுடைய நிலை குறித்து அவன் வருத்தம் தெரிவித்தான், ஆனால் கடவுளிடமிருந்து கிடைத்த ஓர் ஆசீர்வாதமாக அதை ஏற்றுக் கொள்ளும்படி அவன் எங்களைக் கேட்டுக் கொண்டான்.

தேவர்களின் பெருமைகளையும் அவர்களுடைய வாழ்க்கைமுறையையும் பற்றிய விரிவான விபரங்களுடன்கூடிய அவனது பேச்சு எங்களுக்கு அலுப்பூட்டியது. இறுதியில், இலங்கையின் அரசனாகவோ அல்லது அசுரர்களின் அரசனாகவோ தான் இருக்க விரும்பவில்லை என்று அவன் அறிவித்தான். பிறகு அவன் விபீஷணனின் கையை உயர்த்திப் பிடித்து, “இவன்தான் இனி அசுரர்களின் அரசன்!” என்று முழங்கினான். காவலர்களிடமிருந்து வந்த சில கூடுதல் அடிகளால், ஆங்காங்கே கைதட்டல்கள் எழுந்தன. விபீஷணன் ராமனின் பாதங்களில் விழுந்தான். எங்களுடைய அரசன் செய்த காரியத்தை நாங்கள் வெறுப்போடு பார்த்தோம். ராமனுக்கு இது ஒரு சௌகரியமான ஏற்பாடாக இருந்தது. பொறுப்பு எதையும் எடுத்துக் கொள்ளாமல் அவனால் அதிகாரத்தை அனுபவிக்க முடியும். ஓர்

அன்னியனின் அறிவுரைக்குக் கட்டுப்பட்டு நடந்த, முதுகெலும்பற்ற ஓர் ஆட்சியாளனால் ஆளப்படுவது எங்கள் தலைவிதியாக அமைந்தது. இப்போது விபீஷணன் தன் உரையைத் துவக்கினான். அவன் தேவர்களிடம் மன்னிப்புக் கேட்டான். தன் உரையின் இறுதியில், தனது சகோதரர்களான ராவணனும் கும்பகர்ணனும் ராமனின் தெய்வீகத்தன்மையை உணர்ந்து கொள்ளாமல் போனதற்காக அவன் வருத்தம் தெரிவித்தான். சூரியன் மறைந்து, இலங்கையின்மீது இருள் சூழ்ந்தபோது, இறந்து போன தனது சகோதரனுக்கு தேவர்களின் வேதச் சம்பிரதாயங்களின்படி இறுதிச் சடங்கு நடத்தப் போவதாக விபீஷணன் அறிவித்தான். கூட்டத்தினரிடமிருந்து ஒரு பலத்த எதிர்ப்புக் கிளம்பியது, ஆனால் உயர்த்திப் பிடித்த வாள்களுடன் தங்களைச் சுற்றி நின்று கொண்டிருந்த காவலர்களைக் கண்டதும் அந்த எதிர்ப்பு அடங்கியது. ஒருசில பிராமணர்கள் மேடையின்மீது தோன்றினர். அவர்களைக் கண்டவுடன் ராமனும் விபீஷணனும் லட்சுமணனும் சீதையும் மரியாதையுடன் எழுந்து நின்றனர். ராமனும் லட்சுமணனும் விபீஷணனும் அந்த பிராமணர்களின் பாதங்களில் விழுந்து வணங்கி, அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றனர்.

ஆனால் சீதை அவர்களுடைய பாதங்களைத் தொட முயன்றபோது, அவர்கள் அருவருப்போடு பின்னால் துள்ளிக் குதித்தனர். கூட்டம் திடீரென்று மௌனமானது. ஏதோ உணர்ச்சிகரமான ஒன்று நிகழ்ந்து கொண்டிருந்ததை நாங்கள் உணர்ந்தோம். அந்த பிராமணர்களில் ஒருவன் ராமனின் காதில் எதையோ கிசுகிசுத்தான். அப்போது ராமனின் முகம் இருளடைந்ததை நாங்கள் கவனித்தோம். பிறகு ராமன் லட்சுமணனிடம் பேசினான். இப்போது லட்சுமணனின் முகம் வெளிறிப் போனது. ஒரு கணம் யாரும் எதுவும் பேசாமல் இருந்தார்கள். பிறகு லட்சுமணன் சீதையின் கையைப் பிடித்து, அவளை மேடையிலிருந்து கீழே இறக்கி ஒரு மூலையில் தள்ளினான். அங்கு அவள் அவமானத்தோடும் சீற்றத்தோடும் தர்மசங்கடத்தோடும் நின்றாள். அப்போது அந்த பிராமணர்களில் ஒருவன் முன்னால் வந்து சமஸ்கிருதத்தில் பேசினான்.

பிறகு விபீஷணன் ஓரடி முன்னால் வந்து, அந்த பிராமணனின் வார்த்தைகளை மொழிபெயர்த்துக் கூறினான். அவனது குரல் உற்சாகமாக இருந்தது. "எனது நாட்டின் குடிமக்களே, பிராமணர்கள் எவ்வளவு நியாயமானவர்கள் என்று பாருங்கள். எனது பிரபுவான ராமன், உலகின் அரசனாக இருந்தாலும், அவரும் சட்டத்திற்கு உட்பட்டவர்தான். அவரது மனைவி சீதை, அந்த அரக்கன் ராவணனால் சிறைபிடிக்கப்பட்டிருந்தது நாம் எல்லோரும் அறிந்ததுதான். ஒரு

காலத்தில் நான் சகோதரன் என்று அழைத்த அந்த அரக்கனால், எனது பிரபுவின் மனைவியைப் போன்ற ஒரு பண்பான பெண்மணி மாசுபடுத்தப்பட்டுள்ளார் என்பது வருத்தத்திற்குரிய விஷயம். சீதா தேவி எனக்கு ஒரு தாயைப் போன்றவர். ஆனால், கற்றறிந்த பண்டிதர்கள், தங்களுடைய விதிமுறைகளை எல்லோருக்கும் சமமாகச் செயல்படுத்தி வந்துள்ள விதம் குறித்து நாம் பெருமிதம் கொள்ள வேண்டும். அவர்களுடைய அறிவார்ந்த தர்மத்தின்படி, சீதா தேவி தனது தூய்மையையும் கற்பையும் தேவர்களின் பாரம்பரிய வழக்கப்படி நிரூபிக்க வேண்டும்." விபீஷணன் சிறிது தண்ணீர் பருகுவதற்காகத் தன் பேச்சைச் சற்று நிறுத்தினான். ஒரு புதிய ஒழுங்குமுறையை வெளிக்காட்டுவதற்கான இந்த வாய்ப்பை அவன் மிகவும் ரசித்தான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

சீதை தன் அழுகையை நிறுத்திவிட்டு, எதிர்ப்பை வெளிப்படுத்திய விதத்தில் நின்றாள். அவள் தன் கணவனின் முகத்தை வெறித்துப் பார்த்தபோது அவளுடைய முகத்திரை கீழே விழுந்தது. அவளுக்கும் அரசி மண்டோதரிக்கும் இடையே இருந்த ஒற்றுமை சந்தேகத்திற்கிடமின்றி இருந்தது. தோற்றத்தில் அவள் தன் தாயாரைப்போல இருந்திருக்கக்கூடும், ஆனால் அவள் கம்பீரமாக நின்ற விதமும் அவளுடைய கண்களில் தென்பட்ட நெருப்பும் அவள் ராவணனின் மகள் என்பதைப் பறைசாற்றின. எந்தக் கணவனுக்காக அவள் பொறுமையாகக் காத்திருந்தாளோ, அவனை அவள் இப்போது வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். ராமன் அவளுடைய முகத்தை எதிர்கொள்ள முடியாமல் வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டான். அவனது கைகள் நடுங்கின, ஆனால் அவனது உதடுகளில் இருந்த மரக்கட்டைத்தனமான புன்னகை அகலவே இல்லை. அவன் தனது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள மிகவும் சிரமப்பட்டான். உலகிலேயே அதிகப் பேராற்றல் வாய்ந்த ஓர் அரசனை வீழ்த்திய ஒரு வீரனாக அவன் அங்கு அமர்ந்திருக்கவில்லை, மாறாக, தன் தலைவிதியை நொந்து கொண்டிருந்த ஒரு சாதாரண மனிதனாக அவன் தோன்றினான். ஒருசில அடிகள் தள்ளி அமர்ந்திருந்த மண்டோதரி, இந்தப் புதிய திருப்பத்தைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். அவர் எழுந்திருக்க முயன்றார், ஆனால் அந்த பிராமணர்களின் கட்டளையின் பேரில் அவர் கீழே தள்ளப்பட்டார். விதவைகள் வெளிச்சத்தில் உலாவக்கூடாது என்று அவர்கள் கத்தினர். தனது கணவனின் இறுதி யாத்திரையைக் காண அவரை அனுமதித்ததன் மூலம் ஏற்கனவே தாங்கள் பாவம் செய்துவிட்டிருந்ததாக அந்த பிராமணர்கள் பிதற்றினர். வெளிச்சத்தில் மண்டோதரி வெளியே வருவது இதுதான் கடைசி

முறையாக இருக்கும். ஒரு சிதை தயாரிக்கப்பட்டு, ராவணனின் தலை அந்தக் கம்பத்திலிருந்து கீழே இறக்கப்பட்டது. ராவணனின் உடல் என்று கூறப்பட்ட ஒன்றை, என்னைப் போன்ற கருப்பான, தீண்டத்தகாதவர்கள் நான்கு பேர் சுமந்து வந்தனர்.

மேற்கு வானில் சூரியன் மறைந்து, கரிய மேகங்கள் உருவாகியிருந்தன. வழக்கமாக மாலைநேரத்தில் மழை பொழியும் பருவகாலம் அது. பூமி தனது சம்பிரதாயக் குளியலுக்குத் தயாரானது. விபீஷணன் தன் கையில் ஒரு தீப்பந்தத்தை ஏந்தியபடி தன் சகோதரனின் சிதையை நோக்கி நடந்தான். ராவணனின் சிதைக்கு அருகே இன்னொரு சிதையை மூட்டுமாறு அவன் கட்டளையிட்டான். அது ஒரு தெய்வீகமான காரியத்திற்காகத் தயாரிக்கப்படவிருந்ததால், மிக அருமையான சந்தனக் கட்டைகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவரும்படி அவன் மேலும் கட்டளையிட்டான். நாங்கள் மூச்சுவிட மறந்து காத்திருந்தோம். விரைவில் இன்னொரு சிதை ஏற்றப்பட்டது. பிரத்யேகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அசுரப் பெண்கள், சீதையை அந்தச் சிதையை நோக்கி இழுத்து வந்தனர். சீதை தூய்மையானவளா இல்லையா என்பதை அந்தச் சிதை இவ்வுலகிற்கு எடுத்துரைக்கும். என்ன நடந்து கொண்டிருந்தது என்பது எங்களுக்குப் புரியவில்லை. ஒரு பெண்ணின் கற்பைப் பரிசோதிப்பதற்கான இந்தப் பழங்கால தேவச் சம்பிரதாயம் எப்படிப்பட்டது? அங்கு வருகை தந்திருந்த பிராமணர்கள் தங்கள் மந்திரங்களை முணுமுணுத்து, எல்லோர்மீதும் ஏதோ நீரைத் தெளித்தனர். விபீஷணன் தன் சகோதரனின் சிதையைச் சுற்றி மூன்று முறை நடந்தான். தெளிக்கப்பட்ட நீரில் ஒருசில துளிகள் என்மீது விழுந்தபோது, என் உள்ளுணர்வு என்னை உந்தித் தள்ள, நான் அதை முகர்ந்து பார்த்தேன். அது துர்நாற்றம் வீசியது.

என் அருகிலிருந்த ஒருவன், "அது பசுவின் சிறுநீரும் சாணமும் சேர்ந்த கலவை. தூய்மைப்படுத்துவதற்கு அவர்கள் அதைப் பயன்படுத்துகின்றனர்," என்று என் காதில் கிசுகிசுத்தான். எங்களைப் போன்ற தீண்டத்தகாதவர்கள், எருதின் சாணியால் தூய்மைப்படுத்தப்பட்டனர். சிறு மழைத்துளிகள் விழுந்தன. விரைவில், வானத்திலிருந்து அருவி கொட்டும். ஆங்காங்கே வெட்டிய மின்னல்கள், அந்த இருண்ட வானத்தைப் பல துண்டுகளாக ஆக்கின.

ராவணனின் சிதைக்குத் தீ மூட்டுவதற்கு முன்பாக, விபீஷணன் தன் கையிலிருந்த தீப்பந்தத்தை உயர்த்திப் பிடித்து ஒரு நீண்ட சொற்பொழிவாற்றினான். "ஒரு கொடுங்கோலனும், ஓர் அரக்கனும், ஒரு ராட்சஸனுமான ராவணின் முடிவு இது. இப்புவியில் தர்மத்தின்

உருவமாக அவதரித்துள்ள, அயோத்தி ராஜ்யத்தின் ஸ்ரீ ராமசந்திரப் பிரபுவின் ஒப்புயர்வற்ற சக்தியை எதிர்க்கின்ற எவரொருவருக்கும் இவனது வாழ்க்கை ஒரு நல்ல பாடமாக இருக்கட்டும். அசுரர்களின் தீய மற்றும் தரங்கெட்ட வழிகளுக்கு இன்றைய நாள் இறுதி நாளாக இருக்கட்டும். விஷ்ணுவின் அவதாரமான ராமசந்திரப் பிரபு தனது அளப்பரிய கருணையை நம்மீது பொழிகின்ற இந்த நாள், மிகவும் புனிதமான நாளாக இருக்கட்டும். அவர் தனது எல்லையற்றக் கருணையால் நம்மை ஒரு புகழ்மிக்க வாழ்க்கைக்கு வழிநடத்திச் செல்லட்டும். ராவணனின் பாவப்பட்ட உடல் சாம்பலாக ஆகும்போது, தேவ தர்மம் எனும் ஒரு புதிய விடியல் நம்முடைய இருண்ட தொடுவானத்தின் மேலாக எழும். ஒவ்வொரு மனிதனும் தனது நிலையை அறிந்திருக்கும் ஒரு தர்மம் அது. அந்த தர்மத்தில், கற்றவர்கள் மதிக்கப்படுவர், வீரர்களின் மாவீரம் கொண்டாடப்படும், வியாபாரத் திறமைகள் போற்றப்படும். வாழ்வில் வெற்றி பெறுவதற்கு இனி நாம் கடினமான போராட்டங்களைச் சந்திக்க வேண்டியதில்லை. நம்முடைய அண்டைவீட்டாரை முந்திக் கொண்டு முன்னேறுவதற்கான மடத்தனமான போட்டிகளிலும் நாம் இனி ஈடுபட வேண்டியதில்லை. ராவணனின் ஆட்சியின்கீழ் இருந்த தீய அசுரச் சமுதாயத்தை நாம் ஒதுக்கித் தள்ளுவோம். தகுதியும் கடின உழைப்பும் மட்டுமே தங்களுடைய மகிழ்ச்சியை உறுதி செய்யும் என்று மக்கள் முட்டாள்தனமாக நினைத்த அந்தச் சமுதாயத்திற்கு நாம் விடைகொடுப்போம்.

“இப்போதிலிருந்து, நாம் அனைவரும் முக்கியமற்றச் சிறிய ஜந்துக்கள் மட்டுமே என்பதையும், கடவுளின் மேன்மையான சக்தியோடு ஒப்பிடப்படும்போது நமது நடவடிக்கைகளும் தகுதியும் ஒன்றுமே இல்லை என்பதையும் நாம் மறக்காதிருப்போம். நமது பௌதீக வெற்றியும் ஆன்மீக வெற்றியும் கடவுளின் கருணையிலிருந்தும் அன்பிலிருந்துமே பாய்ந்தோடி வருகின்றன. துரதிர்ஷ்டவசமாக நீங்கள் ஒரு தீண்டத்தகாதவனாகப் பிறக்க நேர்ந்திருந்தால், அதற்காக வருத்தப்படாதீர்கள். முந்தைய ஒரு பிறவியில் நீங்கள் செய்துள்ள தவறுகளுக்காக இந்த வாழ்க்கையில் சிரமங்களை நீங்கள் அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய கர்மாவின் காரணமாக நீங்கள் ஒரு சூத்திரனாகவோ அல்லது பறையனாகவோ பிறந்திருக்கிறீர்கள். உங்கள் கடமையைச் செய்து, உங்களுடைய எஜமானர்களுக்கு விசுவாசத்துடன் சேவை செய்யுங்கள். உங்களுக்கு மேலே இருப்பவர்கள் அனுபவிக்கின்ற மதிப்பையும் செல்வ வளங்களையும் கண்டு அளவுக்கதிகமாக

ஆசைப்படவோ அல்லது பொறாமை கொள்ளவோ செய்யாதீர்கள். கடவுள் தன் எல்லையற்றக் கருணையாலும் ஞானத்தாலும் உங்கள்மீது இரக்கம் காட்டி, உங்களுடைய அடுத்தப் பிறவியில் வர்ண அடுக்கதிகார அமைப்பில் அடுத்த நிலையில் நீங்கள் பிறக்கும்படி செய்வதை, உங்களுடைய பணிவடக்கத்தின் மூலமாக மட்டுமே உங்களால் உறுதி செய்ய முடியும்.

"விஷ்ணுதான் சமுதாய ஒழுங்கைப் பராமரிக்கிறார். இந்த ஒழுங்கிற்கு ஏதேனும் ஓர் அச்சுறுத்தல் ஏற்படும்போதெல்லாம், தான் இப்புவியில் நம்மிடையே ஒரு மனிதனாகப் பிறந்து தர்மத்தை மீண்டும் நிலைப்படுத்துவதாக பகவான் உறுதியளித்துள்ளார். ராவணனைப் போலவே அவன் பரப்பிய கொள்கையும் ஆபத்தானதாகவும் அந்த ஒழுங்கைச் சீர்குலைப்பதாகவும் இருந்தது. அரைச்சாதிப் பிறவியான தான், தனது துணிச்சலாலும் கடின உழைப்பாலும் அறிவாற்றலாலும் ஒருசில மக்களின் உதவியாலும் உலகிலேயே பேராற்றல் வாய்ந்த ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கியிருந்ததாக ராவணன் கூறக்கூடும். அவனுடைய தற்காலிக வெற்றி, பலரை பிரமிக்க வைத்திருக்கக்கூடும். ஆனால் நான் என் நம்பிக்கையைக் கடவுள்மீது வைத்தேன். இப்போது, ராவணன் சம்பாதித்த அனைத்தும் என்னுடையவை ஆகிவிட்டன. நான் அதற்காக உழைத்தேனா? பிரஹஸ்தன், கும்பகர்ணன், ருத்ராக்கன் போன்றோர் அடங்கிய ஒரு தீய குழுவை நான் உருவாக்கினேனா? நான் செய்ததெல்லாம், கடவுள்மீது முழுமையான விசுவாசத்துடன் நடந்து கொண்டது மட்டுமே. ராவணன் கொல்லப்பட்டான். அவன் உருவாக்கிய ராஜ்யமும் செல்வச் செழிப்பும் இப்போது என்னுடையவையாக ஆகிவிட்டன.

"முன்பொரு காலத்தில், இந்தச் சமுதாய ஒழுங்கைச் சீர்குலைத்த இன்னொருவன் இருந்தான். அனைத்து மனிதர்களும் சமம் என்று முட்டாள்தனமாக நம்பிய அவன், இந்தியாவின் மேற்குக் கடற்கரையோரப் பகுதியை ஆண்டான். முசிறியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து, விஷ்ணுவின் சமுதாய ஒழுங்கிற்குச் சவால்விட்ட மகாபலிதான் அவன். அந்த நேரத்தில், பேராற்றல் வாய்ந்த அந்தப் பேரரசன், வாமனன் என்ற ஒரு சிறிய பிராமணச் சிறுவனால் தோற்கடிக்கப்பட்டான். விஷ்ணுவின் இன்னோர் அவதாரம்தான் அந்த வாமனன். அது ராவணனுக்கு ஒரு படிப்பினையாக இருந்திருக்க வேண்டும். நான் அவனை எச்சரிக்க முயற்சித்தேன். ஏனெனில், ஒரு சமயம் அவனை என் சகோதரனாக நான் நேசித்தேன். ஆனால் அதிக ஆணவமும் கர்வமும் கொண்டவனாக இருந்த அவன், எனது அறிவுரைக்குச் செவிசாய்க்கவில்லை. மரணத்தைப் பற்றிக்

கவலைப்படுவதற்கு நேரமில்லாத அளவுக்கு வாழ்க்கையில் அவன் மூழ்கிப் போயிருந்தான். தனது படைகள் தன்னைப் பாதுகாக்கும் என்று அவன் நம்பினான். தனது குடிமக்களுக்குத் தான் ஒரு நல்ல வாழ்க்கையைக் கொடுத்திருந்ததாகவும், அதனால் அவர்கள் தன்னைக் காப்பாற்றுவார்கள் என்றும் அவன் நினைத்தான். தான் கட்டியிருந்த மாபெரும் சிவன் கோவில்களில் கட்டடக்கலை அற்புதங்களைத் தான் உருவாக்கியிருந்ததாகவும், அதனால் சிவன் தன்னைக் காப்பான் என்றும் அவன் நம்பினான். ஆனால் இக்கட்டான நேரத்தில், ராவணனுக்கு எந்த பதிலும் கிடைக்கவில்லை. எது சரி, எது தவறு என்று புரிந்து கொள்ள முடியாத ஆதரவற்றவர்களையும் ஏழைகளையும் தவிர, அவனைக் காப்பாற்றுவதற்கு யாரும் இருக்கவில்லை.

"ராமன் வந்தபோது, நான் அவரது கால்களில் விழுந்தேன். ஏனெனில், அவர் கடவுள் என்பதை நான் அடையாளம் கண்டுகொண்டேன். வருணன், லங்கினி போன்ற அறிவார்ந்தவர்களும் அவ்வாறே செய்தனர். எங்களுக்கு எப்படிப்பட்ட வெகுமதிகள் கிடைத்திருக்கின்றன என்று பாருங்கள். ராவணனின் அரசாங்க ஊழியர்கள், வணிகர்கள், காவல்துறையினர், ராணுவ வீரர்கள் ஆகியோரில் பெரும்பான்மையினர் தங்கள் தவறை உணர்ந்து, ராமனின் பெயரில் நடைபெறவுள்ள எனது ஆட்சிக்குத் தங்கள் ஆதரவைக் கொடுத்துள்ளனர். ராவணன் அல்லது மகாபலியின் பகற்கனவுகளை முட்டாள்தனமாக நம்பியிருந்த நீங்கள் அனைவரும், நமது மனு தர்மத்தில் பரிந்துரைக்கப்பட்டுள்ளபடி இனி உங்கள் வாழ்க்கையை வாழத் துவங்குவீர்கள். கடவுளுடைய மேன்மையான விருப்பத்திற்கு உங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்வதன் மூலமாக மட்டுமே உங்களால் மோட்சத்தை அடைய முடியும். மாபெரும் ஞானியான மனு வரையறுத்துள்ள தர்ம விதிகள் நிலையானவை, தெய்வீகமானவை. வாழ்வின் ஒவ்வோர் அம்சமும் இந்த விதிகளில் அடங்கியுள்ளன. பிறப்பிலிருந்து இறப்புவரை, இந்த தர்ம விதிகள் உங்களுக்கு வழிகாட்டும்.

"அறிவை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று தெரியாதவர்களிடம் அறிவு இருப்பது ஆபத்தானது. தீயவர்களுக்கும் அறியாமை மிக்கவர்களுக்கும் அறிவைப் போதிப்பதால் ஏற்படக்கூடிய மோசமான பின்விளைவுகளைப் பற்றிச் சிந்திக்காமல் எல்லோருக்கும் கல்வி வழங்கிய தவறை அசுரர்கள் இதுவரை செய்து வந்திருந்தனர். எல்லா மனிதர்களையும் சமமானவர்களாகப் பார்க்கும் தவறை நாம் செய்துள்ளோம். ஆனால் இப்போதிலிருந்து விஷயங்கள் வேறு விதமாக இருக்கும். நாம் இனிமேலும் இந்தத் தவறைச் செய்யப் போவதில்லை.

முதல் மூன்று சாதியினருக்கு மட்டுமே கல்வி உரிமை வழங்கப்படும். அதுவும், அவர்களுடைய தொழிலுக்குத் தேவையான கல்வியை மட்டுமே அவர்கள் பெறுவார்கள். மற்றவர்கள், தங்கள் கர்மாவின் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல், தங்கள் எஜமானர்களுக்கு அர்ப்பணிப்புடனும் உண்மையாகவும் சேவை செய்வதன் மூலம் முக்தி பெறுவார்கள். விஷ்ணுபிரானே வகுத்த விதி இது. இந்த விதியை மாற்ற முடியும் அல்லது இதற்குச் சவால்விட முடியும் என்று நினைக்கின்ற எவரொருவரும், அதற்கான பின்விளைவுகளைச் சந்தித்தே ஆக வேண்டும்.”

விபீஷணன் தன் பேச்சைச் சற்று நிறுத்திவிட்டுக் கூட்டத்தினரைப் பார்த்தான். நாங்கள் அனைவரும் சிலைகளைப்போல அமர்ந்திருந்தோம். பிறகு அவன் தனது உதடுகளைத் தனது நாக்கால் நனைத்துக் கொண்டு, தன் பேச்சைத் தொடர்ந்தான். “விஷ்ணு பகவானே இங்கு அவதாரம் எடுத்திருப்பதால் இந்த மண் ஆசீர்வதிக்கப்பட்டுள்ளது. மக்கள் தங்கள் தலைவிதியையும் கடவுள்களையும் எதிர்த்துக் கொண்டிருந்தனர். வெறும் மனித முயற்சியும் மன உறுதியும் வெற்றிக்கு இட்டுச் செல்லும் என்று இவ்வுலகிற்குக் கற்றுக் கொடுக்க ராவணன் முயற்சித்தான். அவன் மகாபலியைவிட மோசமானவன். ஏனெனில், விஷ்ணு வாமனனாக வந்தபோது, மகாபலி தனது ராஜ்யத்தைப் புத்திசாலித்தனமாக அவரிடம் ஒப்படைத்தான். ஆனால் என் சகோதரன், கடவுளுடன் சண்டையிடுவதைத் தேர்ந்தெடுத்தான். அவனை என் சகோதரன் என்று கூறிக் கொள்ளவே எனக்கு அவமானமாக இருக்கிறது. ராவணன் துணிச்சல்மிக்க ஒருவனாகவும், ஆனால் அதே சமயத்தில், இறுமாப்புக் கொண்டவனாகவும் இருந்தான். தன்னை விஷ்ணுவிற்கு இணையானவனாக அவன் நினைத்தான். விதியை எதிர்க்க உங்களுக்குக் கற்றுக் கொடுத்ததன் மூலமும், உங்கள் எதிர்காலம் உங்களுடைய கட்டுப்பாட்டில்தான் இருந்தது என்று சிந்திக்க உங்களை ஊக்குவித்ததன் மூலமும் அவன் உங்களுக்குத் தவறானவற்றைப் போதித்தான்.

“ராவணனால் கட்டவிழ்த்துவிடப்பட்டக் குழப்பத்திற்குக் கடவுள் ஒரு முடிவு கட்டியிருக்கிறார். வர்ணாசிரம தர்மத்தின் அமைதியான ஒழுங்கு மீட்டெடுக்கப்பட்டுள்ளது. சாக்கடைகளையும் கழிவறைகளையும் சுத்தப்படுத்தும் மக்கள், சமஸ்கிருதத்தைக் கற்றவர்களுக்கும் வேதங்களை ஓதுபவர்களுக்கும் தாங்கள் சமமானவர்கள் என்று இனி நினைக்கக்கூடாது. கள்ளு விற்பவன், பட்டு விற்கும் வணிகனுக்கு இணையாகத் தன்னைக் கருதிக்

கொள்ளக்கூடாது. நிலத்தை உழும் ஒருவன், தன்னை ஒரு கணக்காளனுக்கு இணையாக இனி ஒருபோதும் நினைக்கக்கூடாது. அவரவருக்கென்று ஓர் இடம் உள்ளது. அதை அவர்கள் அறிந்திருக்க வேண்டியது அவசியம்.

“பண்பார்ந்த ஒரு விதவை எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு மண்டோதரி ஒரு முன்னணி எடுத்துக்காட்டாகத் தன்னை ஆக்கிக் கொண்டிருக்கிறாள். போர் உச்சகட்டத்தில் இருந்தபோது அவளுக்கு நேர்ந்த அவமானத்தை நாம் அனைவருமே அறிவோம். இரு தரப்பினரும் மாபெரும் குற்றங்களைச் செய்தனர். துரதிர்ஷ்டவசமாக, மண்டோதரி அதற்குப் பலியாகிவிட்டாள்.” விபீஷணன் தன் பேச்சை நிறுத்திவிட்டு, மண்டோதரியைப் பார்த்து நமுட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

அதைக் கேட்டு, அங்கிருந்த வீரர்கள் மண்டோதரியைப் பற்றி ஒருசில கீழ்த்தரமான வார்த்தைகளைக் கூறினர். ஆனால் என்னைச் சுற்றியிருந்த மக்களின் இதயங்களில் குமுறிக் கொண்டிருந்த கோபத்தையும் வெறுப்பையும் என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. சண்டாளன்! அரசியை அவமதிப்பதை நிறுத்தும் எண்ணமே அவனுக்கு இருக்கவில்லை. மழை வருவதற்கான அறிகுறியாகக் காற்று கனமாக இருந்தது. தென்னை மரங்களுக்கிடையே வெளிச்சம் கண்ணாமூச்சி விளையாடியது. தன்னை அசுரர்களின் தலைவன் என்று துணிச்சலாக அழைத்த அந்தக் கயவனின் வாயை யாராலேனும் மூட முடிந்தால் . . .

“அரசிக்கு நிகழ்ந்தது துரதிர்ஷ்டமானது. அதற்குக் காரணமானவர்களை ராமபிரான் தண்டித்துவிட்டார். ஆனால் அரசிக்கு நேர்ந்த அவமானத்திற்குப் பிறகும் அவளை ஏற்றுக் கொண்டு என் சகோதரன் நமக்கு அவமானத்தை ஏற்படுத்திவிட்டான். எந்தவோர் அசுரனையும்போலவே, பெண்களின் கற்பு மற்றும் தூய்மை குறித்த எண்ணங்களை அவன் பாதுகாக்கவில்லை. இவ்வளவு நிகழ்ந்திருந்த பிறகு எப்படி அவனால் அவளை ஏற்றுக் கொள்ள முடிந்தது? ஆனால் எது நல்லது என்றும், எது தீயது என்றும் அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. இந்தச் சீரழிவு அவனுக்குத் தேவையா? ராமபிரானின் அடிமையாகவும் ஓர் அரசனாகவும் தொடர்ந்து அவனால் இருந்திருக்க முடியும்.

“எனது சொந்தச் சகோதரியான சூர்ப்பனகை இந்த யுத்தத்தைத் தொடங்கினாள் என்று கூற நான் வெட்கப்படுகிறேன். அவளை மட்டும் முழுமையாகக் குறைகூறிவிட முடியாது. நல்லொழுக்கமற்ற ஒரு வாழ்க்கையை வாழ்வதற்குப் பெண்களை அனுமதித்த நமது கலாச்சாரத்தின் விளைவு அவள். வசீகரமான லட்சுமணனை மயக்க அவள் முயற்சித்தாள். மீண்டும் காதல் வயப்படுவதற்கு ஒரு விதவைக்கு

இருக்கும் அகங்காரத்தை எந்த ஆணாலும் பொறுத்துக் கொள்ள முடியாது. அவளுடைய மூக்கையும் மார்பகங்களையும் அறுத்ததன் மூலம் லட்சுமணன் அவளைத் தண்டித்தான்.

“ஒழுக்கமற்ற எங்கள் சகோதரிக்குக் கடவுள் விதித்திருந்ததை ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாக, ராவணன், ராமபிரானுக்கு எதிராகப் போர் தொடுப்பதென்று தீர்மானித்தான். எப்பேற்பட்ட அகங்காரம்? எப்பேற்பட்டப் போலியான பெருமிதம்? அவனுக்கு என்ன நிகழ்ந்தது என்று பாருங்கள். சூர்ப்பனகையை நான் இந்த நாட்டைவிட்டுத் துரத்திவிட்டேன். அவள் என் சகோதரிதான், ஆனால் நான் ஓர் எடுத்துக்காட்டைத் துவக்க விரும்பினேன். அசுரர்கள் தங்கள் பழைய வழிகளைக் களையத் தீர்மானித்துள்ளார்கள் என்பதை என் எஜமானனுக்கு நான் நிரூபிக்க விரும்பினேன். கடலுக்கு அப்பாலுள்ள காட்டுமிராண்டிகளின் உலகிற்கு அவள் நாடு கடத்தப்பட்டுள்ளதை என் நண்பன் வருணன் உறுதி செய்துள்ளான். அவள் இப்போது ஒரு பிச்சைக்காரியாகவும் ஆதரவற்றவளாகவும் இருக்கிறாள். என் சகோதரியின் தலைவிதியை நினைத்து நான் வருந்துகிறேன், ஆனால் அவள் அதற்குத் தகுதியானவள்தான்.

“பிறகு எனது சகோதரன், ராமபிரானின் மனைவியைக் கடத்தினான். சீதை ராவணனின் மகள் என்றும், அவளைக் கடத்தியதன் மூலம் அவன் தனது சொந்த மகளைப் பாதுகாக்க முயற்சித்தான் என்றும் நிலவிய வதந்திகளை நான் கேள்விப்பட்டுள்ளேன். இதைவிட வருத்தமான விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது. கீழ்ச்சாதியில் பிறந்த ஓர் அசுரனால் எப்படி ஒரு தேவ இளவரசிக்குத் தகப்பனாக ஆகியிருக்க முடியும்? ராமன் ராவணனைப் போன்றவன் அல்ல. ராமன் யாருக்காக ஒரு கொடுமையான போரைத் துவக்கி, தன் வாழ்க்கையையும் தனது வீரர்களின் வாழ்க்கையையும் பணயம் வைத்தாரோ, அந்த சீதை, அவரது அன்பு மனைவி, பாவம் செய்துள்ளார். ஒரு தேவ இளவரசியாகவும் ராமபிரானின் மனைவியாகவும் இருப்பதன் காரணமாக சீதை தொடர்ந்து தூய்மையாக இருந்து வந்துள்ளார் என்று நான் உறுதியாக நம்புகிறேன். அவரிடம் அத்துமீறி நடந்து கொள்வதற்கு ராவணனுக்குத் துணிச்சல் இருக்கவில்லை. ஆனால், ராவணன் மற்றும் பிற அசுரர்களின் காமக் கண்கள் தன் மனைவியின் தூய்மையான உடலின்மீது அலைபாய்ந்துள்ளதை ராமபிரான் அறிவார். எந்தக் கணவனால்தான் அதைப் பொறுத்துக் கொள்ள முடியும்? மற்றவர்களால் அத்துமீறப்பட்டத் தன் மனைவியை ஏற்றுக் கொண்ட, காலம் சென்ற எனது சகோதரனைப் போலன்றி, ராமபிரான், தனது மனைவியின்

கற்பையும் தூய்மையையும் இந்த ஒட்டுமொத்த உலகிற்கும் நிரூபித்துக் காட்டி, ஒரு முன்னுதாரணமாகத் திகழ விரும்புகிறார். ராவணன் மற்றும் பிற ஆண்களின் காமாந்தக எண்ணங்களைத் தன் மனைவியின் உடலிலிருந்தும் ஆன்மாவிலிருந்தும் என்றென்றைக்குமாக எரித்துவிட அவர் விரும்புகிறார்.

“இது மனத்தை நெகிழ வைக்கின்ற ஒரு தனிப்பட்ட விவகாரம், ஆனால் ஒட்டுமொத்த உலகமும் பின்பற்றுவதற்கான தேவ அரசனின் ஒரு முன்மாதிரி இது. அசுரர்களைப் போலன்றி, தேவர்கள், நெருப்பின் தூய்மையிலும் வாழ்வின் தூய்மையிலும் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். நெருப்புதான் மேன்மையான கடவுள். அதுதான் வாழ்க்கையையும் ஆற்றலையும் கொடுக்கிறது. சீதை அசுரர்களுக்கிடையே வாழ்ந்திருந்தது, அசுரர்களின் காமப் பார்வையை அவர் தாங்கிக் கொண்டது, இவ்வளவு நீண்ட காலமாகத் தன் கணவனிடமிருந்து தனித்து வாழ்ந்தது ஆகியவற்றால் சீதைக்கு ஏற்பட்டிருந்த களங்கத்தையும், அவர் ராவணனின் மகள் என்ற அடிப்படையற்ற வதந்திகளையும் அந்த நெருப்பு தூய்மையாக்கிவிடும். உங்கள் அனைவருக்கும் முன்னால், அசுரர்களுக்கும் வானரர்களுக்கும் முன்னால், இந்த ஒட்டுமொத்த உலகத்திற்கு முன்னால், சீதை அக்கினிப் பரீட்சைக்கு உட்படுவார். ஒரு பெண்ணின் தூய்மையைப் பரிசோதிப்பதற்கு தேவர்கள் வைத்துள்ள ஒரு பரீட்சை இது. என் சகோதரனின் சிதைக்கு அருகே எரிந்து கொண்டிருக்கின்ற அந்தப் புனித நெருப்பு, சீதா மாதா எவ்வளவு தூய்மையானவர் என்பதை நிரூபிக்கும். அவர் தூய்மையானவராகவும் கற்புடையவராகவும் இருந்தால், தீயினால் அவருக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. அவர் தூய்மையற்றவராக இருந்தால், அந்த தெய்வீக நெருப்பு அவரை ஆட்கொண்டுவிடும்.”

இதைக் கேட்டவுடன், கூட்டத்தினரிடம் ஒரு பயம் கலந்த அமைதி ஏற்பட்டது. ஓர் உயரமான நாற்காலியில் அமர்ந்திருந்த ராமனை நோக்கி அனைத்துத் தலைகளும் திரும்பின. அவன் துயரத்தில் இருந்ததும் நிலைதடுமாறிப் போயிருந்ததும் வெளிப்படையாகத் தெரிந்தது. ஆனாலும் அவன் தன் இருக்கையைவிட்டு எழுந்து நின்று, “போதும், நிறுத்துங்கள்! என் மனைவியின்மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது,” என்று கூறவில்லை. அனுமான் பதற்றமாகவும் மன இறுக்கத்தோடும் இருந்தான். ஆனால் விபீஷணன் தனது கடமைகளை மகிழ்ச்சியாக அனுபவித்துக் கொண்டிருந்தான். லட்சுமணின் முகம் வெளிறிப் போயும் கவலை தோய்ந்தும் இருந்தது, ஆனாலும் அதைத் தனது வழக்கமான சிடுசிடுப்பின் பின்னால் அவன் மறைக்க முயன்றான். மழிக்கப்பட்டத் தலையுடனும் அதைச் சுற்றி ஒரு

வெள்ளைத் திரையுடனும் ஒரு மூலையில் அமர்ந்திருந்த மண்டோதரி, கட்டுப்படுத்த முடியாமல் தேம்பினார்.

காற்றில் இறுக்கம் நிலவியது. அதற்கு இணையாக, வானத்தை உடைத்துக் கொண்டு முதல் இடி முழக்கம் கேட்டது. இடிமின்னலுடன்கூடிய புயலுக்கான கருமேகங்கள் வேகமாக எங்கள் தீவை நோக்கி வந்து கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. சூரியன் வெறுமனே அந்தக் கருமேகங்களைச் சுற்றி ஒரு வெள்ளி வளையத்தைப்போலத் தெரிந்தான். ஒரு பேய்க்காற்று அங்கிருந்த தென்னை மரங்களை ஆக்ரோஷமாக உலுக்கியது. கடற்கரையில் இருந்த கற்பாறைகளின்மீது கடலிலிருந்து மாபெரும் அலைகள் வந்து பலமாக மோதின. சீதை அந்த தெய்வீக நெருப்பினருகே இழுத்து வரப்பட்டபோது மக்கள் எழுந்து நின்றனர். துவக்கத்தில், அவள் தன் எதிர்ப்பை வெளிப்படுத்தி, தன்னைக் காப்பாற்றுமாறு தன் கணவனைத் தவிப்புடன் அழைத்தாள். ஆனால் தனது தூய்மையை நிரூபிப்பதற்குத் தான் செய்ய வேண்டியிருந்த காரியத்தின் மூர்க்கத்தனத்தை அவள் புரிந்து கொண்டபோது, அவள் மனம் தளர்ந்து போய், அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். அவன் அவளது பார்வையைத் தவிர்த்துவிட்டு, அவளைக் கடந்து, தனது வீரர்களைக் கடந்து, எங்கள் அனைவரையும் கடந்து, தொடுவானில் ஏதோ ஒரு தூரத்துப் புள்ளியில் தன் பார்வையை நிலைப்படுத்தினான். அவனுடைய கண்களில் கண்ணீர் நிரம்பியது. அவனுக்கும் அவனுடைய சகோதரனுக்கும் பக்கத்தில், நன்றாகக் கொழுத்த பிராமணர்கள் சமஸ்கிருதத்தில் எதையோ ஓதிக் கொண்டிருந்தனர். கூட்டத்தினரின் உற்சாகமான குரல்களையும், மண்டோதரி மற்றும் பிற பெண்களின் அழுகையையும் மூழ்கடிக்கும் அளவுக்கு அவர்கள் மிகவும் உரத்தக் குரலில் ஓதினர்.

அசுரர்களின் அரசனும் ராமனின் அடிமையுமான விபீஷணன், கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த ஒரு தீப்பந்ததைத் தன் கையிலும், ஒரு திருப்தியான புன்னகையைத் தன் முகத்திலும் ஏந்தியபடி, கடற்கரையில் நின்றான். அவனுக்கு முன்னால், விலங்குகளால் கடித்துக் குதறப்பட்ட முகத்துடனும், துண்டிக்கப்பட்டத் தலையுடனும், முன்னாள் அசுர அரசன் ஒரு சிதையின்மீது உயிரற்றுக் கிடந்தார். அவருக்கு அருகில், கற்பு என்றால் என்ன என்பதைத் தெரிந்திருந்த ஒரு நெருப்பு, தனது நூறு கரங்களுடன் தகதகவெனக் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது.

அசுர வீரர்கள் சீதையை விபீஷணனின் அருகில் விட்டுவிட்டு அங்கிருந்து திரும்பினர். கூட்டத்தினரின் உற்சாகம் விண்ணைத் தொட்டது. இது போன்ற எதையும் இதற்கு முன்பு அவர்கள் ஒருபோதும்

பார்த்திருக்கவில்லை. உயர்ந்து வீழ்ந்து கொண்டிருந்த செந்நிறக் கடலுக்குள் சூரியன் மறைந்தது. வெள்ளி விளிம்புகளைக் கொண்ட இருண்ட மேகங்கள் வானில் பரவின.

“ராவணனின் தீய ஆட்சியை நான் இத்துடன் நிறைவு செய்கிறேன். கடவுள்களுக்குச் சவால்விடத் துணிந்த ஒருவனின் அகங்காரத்தை நான் இத்துடன் முடிவுக்குக் கொண்டு வருகிறேன். உலகைக் கிட்டத்தட்ட அழித்திருந்த ஓர் அரக்கனின் ஒழுக்கக்கேடான வாழ்க்கைக்கு இத்துடன் நான் முற்றுப்புள்ளி வைக்கிறேன். ஸ்ரீராமனுக்கு வெற்றி . . .” என்று இடிபோல முழங்கிவிட்டு, விபீஷணன் தனது சகோதரனின் சிதைக்குத் தீ மூட்டவும் லேசாக மழை பெய்யவும் சரியாக இருந்தது.

ராவணன் சாம்பலாக மாறியதை நான் கண்டபோது, ஓர் ஆழமான, இனம் புரியாத துக்கம் என்னுள் பரவியது. வானரர்களிடமிருந்து ஒரு பலத்தக் கைதட்டல் எழுந்தது, ஆனால் அசுரர்கள் அவமானத்தில் தங்கள் தலைகளைத் தொங்கப் போட்டுக் கொண்டனர். சீதை தனது தந்தையின் சிதைக்கு அருகில் உணர்ச்சியற்று நின்றாள். அவள் தன் சொந்தத் துயரத்திலும் தனக்கு இழைக்கப்பட்ட நம்பிக்கைத் துரோகத்திலும் மூழ்கிக் கிடந்தாள்.

“இந்த நாள், ஒவ்வொரு வருடமும், இந்தியாவின் ஒவ்வொரு கிராமத்திலும் வெற்றி நாளாகக் கொண்டாடப்படும் என்று அசுரர்களின் அரசன் என்ற முறையில் நான் அறிவிக்கிறேன். இந்த நாளில், விஷ்ணுவின் அவதாரமான நமது பகவான் ஸ்ரீராமசந்திரன், ராவணன் எனும் அரக்கனை வெற்றி கொண்டது அனைத்து மக்களுக்கும் நினைவுபடுத்தப்படும். இந்த நாளில், இந்தியாவின் ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு தெருவிலும், ஒவ்வொரு வீட்டிலும், ராவணன் லட்சக்கணக்கான முறை இறக்கட்டும் . . .” என்று கூறிவிட்டு, விபீஷணன் தன் கையில் இருந்த தீப்பந்தத்தை விண்ணை நோக்கி உயர்த்தியபோது, வானரர்களும் ஒருசில அசுரர்களும் உற்சாகத்துடன் கைதட்டினர். லேசாகப் பெய்து கொண்டிருந்த மழையில் ராவணனின் சிதை தயங்கித் தயங்கி எரிந்தது. பிறகு அதிலிருந்து அடர்த்தியான, கருப்புப் புகை மேல்நோக்கிச் சுருண்டபடியே சென்றது.

“அடுத்து, நமது பகவானின் மரியாதைக்கும் அன்புக்கும் உரிய மனைவிக்கான அக்கினிப் பரீட்சை, தூய்மைக்கான பரிசோதனை நடைபெறும்,” என்று விபீஷணன் அறிவித்தான். எரிந்து கொண்டிருந்த நெருப்பிற்குள், ஓர் அசுரச் சேவகன், இன்னும் அதிகமான நெய்யை ஊற்றினான். தீ மேலும் உயர்ந்து எழுந்து, காற்றில் பொரிந்தது. தன் தூய்மையை நிரூபிக்கத் தான் அடியெடுத்து வைக்க வேண்டியிருந்த சீற்றமான நெருப்பைக் கண்ட சீதை முதலில் தயங்கியதையும், பிறகு

அவள் தன் கணவன் ராமனைப் பார்த்ததையும் நாங்கள் அனைவரும் பயத்தோடும் உற்சாகத்தோடும் பார்த்தோம். ஆனால், கடவுளான ராமன், மற்றக் கடவுள்களைப் போலவே, தான் அவசியமாகத் தேவைப்பட்ட ஒரு நேரத்தில் வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டான். விபீஷணன் பொறுமையிழந்தான். பிறகு, மேலும் அதிகமான நெய்யை அந்த நெருப்பிற்குள் ஊற்றுமாறு அவன் கட்டளையிட்டான். சீதை கூடுதலாக ஒருசில கணங்கள் அங்கே நின்றாள். பிறகு அவள் நிலைகுலைந்து தரையில் விழுந்தாள். கூட்டத்தினரிடையே ஓர் அசௌகரியமான அமைதி நிலவியது. நெருப்பிற்குள் நுழைய மறுத்து அவள் பின்வாங்கியிருந்தாளா?

எனக்குப் பக்கத்தில் இருந்த யாரோ ஒருவன், "சீதை உண்மையில் தூய்மையற்றவளாக இருக்கக்கூடும். அதனால்தான் நெருப்பை எதிர்கொள்ள அவள் தயாராக இல்லை," என்று கிசுகிசுத்தான்.

இதைக் கேட்டு அவனுடன் இருந்தவர்கள் ஏளனமாகச் சிரித்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் விருப்பத்திற்கு ஏற்றாற்போலக் கீழ்த்தரமாகக் கற்பனை செய்து கொண்டிருந்தனர்.

நான் கோபத்தோடு திரும்பி, "அபத்தம்! அவள் கற்பிழந்தவளாக இருந்தாலும்கூட, கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கின்ற ஒரு நெருப்பிற்குள் நுழைவதன் மூலம் எப்படி அதை நிரூபிக்க முடியும்? கற்புடைய ஒரு பெண்ணையும் கற்பிழந்த ஒரு பெண்ணையும் ஒரு நெருப்பால் வகை பிரிக்க முடியாது," என்று அவர்களிடம் கத்தினேன்.

சீதையைப் பற்றி மோசமாகப் பேசியவனுக்கு நான் கூறியது பிடிக்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. "படிப்பறிவில்லாத ஒரு விவசாயியான உனக்கு நெருப்பைப் பற்றி எல்லாம் தெரியும் என்று கூறுகிறாயா? கற்றறிந்த பிராமணர்கள் அப்படித்தான் கூறியிருக்கிறார்கள். அவர்களைக் கேள்வி கேட்பதற்கு நாம் யார்?" என்று அவன் கேட்டான். அது குறித்து ஒருசிலருக்கு சந்தேகம் ஏற்பட்டிருந்தாலும், பெரும்பாலானவர்கள் அவனது கூற்றை ஆமோதித்துத் தலையசைத்தனர். இந்த முட்டாள்களிடம் பேசிக் கொண்டிருந்ததில், அங்கு நடைபெற்றுக் கொண்டிருந்த நாடகத்தில் சில காட்சிகளை நான் தவறவிட்டிருந்தேன்.

சீதை எழுந்து நின்றாள். ஏதோ நடக்கவிருந்ததைக் கூட்டத்தினர் உணர்ந்து கொண்டனர். பிறகு, திடீர் வலிமையுடன், சீறிக் கொண்டிருந்த நெருப்பை நோக்கி அவள் ஓடினாள். நாங்கள் சரியாகத்தான் கேட்டோமா அல்லது அது என் கற்பனையா? அது எனக்கு இன்னும் உறுதியாகத் தெரியவில்லை. நெருப்பிற்குள் குதிப்பதற்கு முன்பு, "அப்பா . . ." என்று அவள் கத்தினாளா? கூட்டம்

மூச்சுவிட மறந்து நின்றது. அப்போது, மடை திறந்த வெள்ளம்போல வானத்திலிருந்து மழை கொட்டியது. காற்று ஒரு பெரும் புயலாக மாறியிருந்தது. தென்னை மரங்கள் பேயாட்டம் ஆடின. அதன் இலைகள், கடலில் மூழ்கிக் கொண்டிருந்த ஒருவனின் தத்தளிக்கும் கரங்களைப்போலச் சுழன்றன. வானம் அன்று வழக்கத்திற்கு மாறாக அதிகமாக இருட்டியிருந்தது. வானில் தோன்றிய மின்னல்கள் அதை ஒரு பேய்போலத் தோன்றச் செய்தன. இறந்து போன தங்கள் முன்னாள் அரசனின் சிதையை நோக்கிக் கூட்டம் முண்டியடித்தது. விரைவில் அது யாராலும் கட்டுப்படுத்த முடியாததாக ஆகியது. காவலர்கள் அவர்களைப் பின்னால் தள்ளினர். அங்கு ஒட்டுமொத்தக் குழப்பம் நிலவியது. சீதை தீக்குளித்திருந்த நெருப்பு அணைந்திருந்தது. அனுமான் சீதையை ராமனிடம் சுமந்து சென்றதை நாங்கள் பார்த்தோம். அவள் முற்றிலும் தளர்ந்து போய் இருந்ததுபோலத் தோன்றியது, ஆனால் அனுபவம் வாய்ந்த என் கண்களுக்கு அவள் உயிரோடு இருந்ததுபோல தெரிந்தது. அவள் உண்மையிலேயே தூய்மையானவள்தான். விந்தியக் காடுகளில், சின்னஞ்சிறு பொதி ஒன்றில் கைக்குழந்தையாக அவளை நான் ஏந்தியிருந்தது என் நினைவிற்கு வந்தது.

நாடகம் முடிந்து, முக்கியக் கதாபாத்திரங்கள் அனைத்தும் மற்றோர் இரவுக் கொண்டாட்டத்திற்காகக் கோட்டைக்குள் காணாமல் போனபோது, கூட்டம் அங்கிருந்து மறைந்தது. கூட்டம் முழுவதுமாகக் கலையும்வரை, கொட்டும் மழையில் நான் அங்கேயே நின்றேன். பிறகு ராவணனின் சிதையை நோக்கி நான் நடந்து சென்றேன். மழையின் வேகம் குறைந்தது. சாம்பலும் சேறும் சேர்ந்து அந்தச் சிதை கொழகொழவென்று இருந்தது. எலும்புத் துண்டுகளும் பாதி எரிந்த மண்டை ஓடும் ஆங்காங்கே துருத்திக் கொண்டிருந்தன. என்ன செய்வதென்று தெரியாமல் நான் அங்கே நின்றேன். பிறகு, அந்த மாபெரும் அசுர அரசரின் எலும்புகளையும் எஞ்சியவற்றையும் கடலுக்குள் எட்டி உதைத்துத் தள்ளிவிட்டு, சிறிது நேரம் கழித்து என் வீட்டை நோக்கி நடந்தேன்.



# 62

# வாழ்வு மீண்டும் துளிர்க்கிறது

பத்ரன்

ராவணன் இறந்த பிறகு, அசுரர்களின் வாழ்க்கை மிகவும் கொடூரமான ஒன்றாக ஆகியது. புதிய சாதி அதிகாரமுறை குறித்துப் பெரும் குழப்பங்களும் ஏராளமான சாதிச் சச்சரவுகளும் ஏற்பட்டன. வெறும் வர்ணாசிரமத்தின் அடிப்படையில் மக்கள் வகை பிரிக்கப்பட்டிருந்தால், ஒருவருடைய சாதி எது என்பதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு கடினமானதாக இருந்திருக்காது. சாதி அதிகாரமுறை தெளிவாக வரையறுக்கப்பட்டிருக்கும். எல்லோரும் அதற்குக் கீழ்ப்படிந்து நடந்திருப்பார்கள் அல்லது அதை எதிர்த்திருப்பார்கள். ஆனால் இப்போது, சாதிகளுக்குள் பல உட்பிரிவுகள் இருந்தன. அது எங்கள் சமுதாயத்தை லட்சக்கணக்கான பகுதிகளாகப் பிரித்தது. பிராமணர்கள் உச்சநிலையில் இருந்தனர் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

நான் சலவைக்காரர்கள் சாதியைச் சேர்ந்தவன் என்பதைப் புரிந்து கொள்வதற்கு எனக்குக் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் பிடித்தது. அது

பொற்கொல்லர்கள், தச்சர்கள் போன்ற சாதிகளைவிடத் தாழ்ந்தது, ஆனால் பாடகர்கள், மரம் வெட்டுபவர்கள், குயவர்கள் மற்றும் பல சாதிகளைவிட மிக மிக உயர்ந்தது. உயர்ச்சாதியினர் சாலைகளைப் பயன்படுத்தத் தீர்மானித்தபோது, அச்சாலைகளில் நடந்து செல்ல எனக்கு அனுமதி மறுக்கப்பட்டது. ஆனால், ஒரு குயவன் என் வழியில் குறுக்கே வந்தால், அவனை எட்டி உதைத்துத் தள்ளுவதற்கு எனக்கு உரிமை இருந்தது. நான் ஒரு மர வெட்டியைத் தொட்டால் என் சுத்தம் மாசுபட்டது, ஆனால் நான் ஒரு தச்சனைத் தொட்டால், நான் அவனை அசுத்தப்படுத்திவிட்டதாக அர்த்தமானது. கீழ்நிலையில் இருந்த சாதிகளைச் சேர்ந்த எவரும் தெருக்களில் நடப்பதற்கோ, நல்ல ஆடைகளை அணிவதற்கோ, நல்ல வீடுகளில் வசிப்பதற்கோ, அல்லது கோவில்களுக்குள் நுழைவதற்கோ அனுமதி இருக்கவில்லை. இவை அனைத்தும் மற்ற மூன்று வர்ணாசிரமப் பிரிவுகளைச் சேர்ந்த மக்களுக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டிருந்தன. அது ஒரு வக்கிரமான அமைப்புமுறையாக இருந்தது. தனக்குக் கீழே உள்ளவர்களை அவமானப்படுத்துவதற்கான மனிதனின் அடிப்படை உணர்ச்சிகளை அது சார்ந்திருந்தது. என்னைவிடத் தாழ்ந்த சாதியினரைத் துன்புறுத்துவதற்கு எனக்கு உரிமை இருந்ததால், என்னைவிட உயர்ந்த சாதியினரால் எனக்கு ஏற்பட்ட ஏளனங்களை நான் ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. பிறகு, ஏற்கனவே மனம் தளர்ந்து போயிருந்த அசுர மக்களை ஏழ்மையும் சூழ்ந்து கொண்டு அவர்களை நாசப்படுத்தியது.

சுமார் ஒன்பது மாதங்களுக்குப் பிறகு, தென்னிந்தியாவிலும் அதைச் சுற்றியிருந்த தீவுகளிலும் ஒரு கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. கடல் கடந்து சென்றால் ஒருவன் தனது சாதியை இழக்க வேண்டி வரும் என்று பிராமணர்கள் திட்டவட்டமாக அறிவித்திருந்ததால், வர்த்தகம் ஸ்தம்பித்தது. தங்களுக்குப் புதிதாகக் கிடைத்திருந்த அனுகூலங்களை இழக்க விரும்பாத வணிகர்கள் கடலுக்குச் செல்ல மறுத்தனர். விரைவில், சீனர்களும் யவனர்களும் மசாலாப் பொருட்கள் மற்றும் பிற அருமையான பொருட்களின் வர்த்தகத்தில் ஆதிக்கம் செலுத்தினர். விரைவில், சாப்பிடுவதற்கு எதுவுமின்றிப் போனது. ஆனால் அரசாங்கத்திற்குச் செலுத்தப்பட வேண்டிய கடைசித் துளிப் பணம்வரை மக்களிடமிருந்து வசூலிப்பதில் விபீஷணனின் வரி வசூலிப்பாளர்கள் எந்த இரக்கமும் காட்டவில்லை. ஒழுகிக் கொண்டிருந்த அணைகளையும் கால்வாய்களையும் சரி செய்து, கிராமங்களில் விவசாயம் மீண்டும் தழைப்பதற்கு ஒரே ஒருவனால் ஓர் அதிசயத்தை நிகழ்த்தியிருக்க முடியும். ஆனால் அந்தப் பைத்தியக்கார அறிவியலறிஞனான மயன் இப்போது சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு, ஒரு பாதாளச் சிறையில்

கைதியாகக் கிடந்தான். பிராமணர்கள் அவனுடைய கோட்பாடுகளைக் கண்டு சிரித்தனர். அவன் அதுவரை சாதித்திருந்த எல்லாமே, அசுரர்களின் மாந்திரீகத்தின் விளைவே என்று அவர்கள் கூறினர்.

அது ஓர் இருண்ட காலகட்டமாக இருந்தது. மரணத்தைத் தவிர, அதிலிருந்து தப்பிப்பதற்கு எங்களுக்கு வேறு எந்த வழியுமே இருக்கவில்லை. ஒரு வாரத்திற்கு ஒருமுறை நல்ல சாப்பாடு கிடைத்தால் நாங்கள் அதிர்ஷ்டசாலிகள். ராவணனின் மரணத்தைத் தொடர்ந்து வந்த மோசமான காலகட்டங்களில் நான் திருடியிருந்த அறைகலன்களையும் மரக்கட்டைகளையும் கொண்டு நான் ஒரு கூரை வீட்டைக் கட்டியிருந்ததுதான் ஒரே நல்ல விஷயம். ராவணனின் சடலத்திலிருந்து நான் திருடியிருந்த தங்க அணிகலன்களை என் வீட்டிற்குள் நான் புதைத்து வைத்திருந்தேன். அவற்றை வெளியே எடுக்க எனக்கு மிகவும் பயமாக இருந்தது. சலவைக்காரர்கள் விலைமதிப்புக் கொண்ட பொருட்களை வைத்திருப்பதற்கு அனுமதி இருக்கவில்லை. விபீஷணன் தனது ஆட்சியின் முதல் வாரத்தில், கீழ்ச்சாதியினரிடமிருந்து அவர்களுடைய தனிப்பட்டச் சொத்துக்கள் அனைத்தையும் பறித்திருந்தான். ஆனால், என்னைப்போலவே, பலரும் தங்கள் சொத்துக்களைப் புதைத்திருந்தனர்.

எல்லாமே தொலைந்து போனதுபோல இருந்த நேரத்தில், ஒரு வதந்தியின் வாயிலாக ஒரு சிறு நம்பிக்கைத் துளிர்த்தது. வருணன், சட்டத்திற்குப் புறம்பாக, தூரக் கிழக்கு நாடுகளுக்கு மக்களைத் தன் கப்பல்களில் அழைத்துச் சென்று கொண்டிருந்தான். வருணனைப் போன்ற நபர்களை எந்தவோர் ஆகம நூலாலும் தொட முடியவில்லை, பிராமணர்களாலும் அவர்களை அடியோடு அழிக்க முடியவில்லை. குபேரன் ஆண்டாலும் சரி, ராவணன் ஆண்டாலும் சரி, அல்லது ராமன் ஆண்டாலும் சரி, அவன் எப்படியோ பணம் சம்பாதித்தான். பணம் என்ற ஒரே ஒரு கடவுளுக்கு மட்டுமே அவன் சேவை செய்தான். துவக்கத்தில் எனக்குத் தயக்கமாக இருந்தது. ஆனால் வயிற்றுப் பசி நாளுக்கு நாள் அதிகரித்ததாலும், என் மனைவியின் நச்சரிப்பும் தாள முடியாததாக ஆனதாலும், நான் அதை முயற்சித்துப் பார்ப்பதென்று தீர்மானித்தேன். நான் வேற்று நாட்டிற்குக் குடி பெயர்வதற்கான என் விருப்பத்தை முழுவதுமாகக்கூட வெளிப்படுத்தியிருக்கவில்லை. எனக்கு அதை ஏற்பாடு செய்து தருவதற்காக ஒரு முகவர் என்னிடம் வந்தான்.

அந்த முகவருக்கு என் வயது இருக்கும். ஆனால் என்னைப் போலன்றி அவன் ஏழ்மையையோ அல்லது பசியையோ சந்தித்திருக்காததால், தன்னுடைய வயதான மாமாவைப்போல நான் அவனுக்குத் தோன்றியிருக்க வேண்டும். அவன் என்னை 'மாமா' என்று

அழைத்தது எனக்கு எரிச்சலையும், என் மனைவிக்கு மகிழ்ச்சியையும் ஏற்படுத்தியது. ஓர் அரசாங்க அதிகாரியாக இருந்த அவன், குபேரனிடம் தன் தொழில்வாழ்க்கையைத் துவக்கியிருந்தான். இப்போது விபீஷணனின் ஆட்சியில் அவன் ஒரு மூத்த அதிகாரியாக இருந்தான். புதிய சாதி விதிகளைத் தான் அவ்வளவு உயர்வாகக் கருதவில்லை என்று அவன் கூறினான். ஆனால், தன் மனைவியைத் திருப்திப்படுத்துவதற்காக அவன் என் வீட்டிற்குள் நுழைய விரும்பவில்லை. ஏனெனில், சாதி வரிசையில் அவன் எனக்கு ஒருசில நிலைகள் மேலே இருந்தான். ஒரு சலவைக்காரன் தயாரித்துக் கொடுத்த எதையும் அவன் உட்கொள்வதற்கு அவனது மனைவி ஒப்புதல் அளித்திருக்க மாட்டாள் என்பதால், அவன் என் வீட்டில் எதையும் உண்ணவோ பருகவோ மறுத்தான். நான் கோபத்தில் குமுறினேன், ஆனால் என் மனைவி மிகவும் ஆசுவாசமாகக் காணப்பட்டாள். அவனுக்குக் கொடுப்பதற்கு எங்களிடம் எதுவும் இருக்கவில்லை. எனவே சாதித் தூய்மையை அவன் வலியுறுத்தியது, எங்களுடைய தர்மசங்கடத்தைத் தவிர்த்தது.

நதிக்கு அருகே இருந்த ஒரு புளிய மரத்தின் கீழே நாங்கள் சந்தித்தோம். மரத்தின் அடியில் துருத்திக் கொண்டிருந்த ஒரு வேரின்மீது அவன் உட்கார்ந்திருந்தான். பிறகு எங்கள் பேரப் பேச்சு துவங்கியது. நான் முன்மொழிந்த பரிவர்த்தனையில் தனக்கு ஒப்புதல் இல்லை என்பதுபோல இரண்டு முறை அவன் அங்கிருந்து புறப்படுவதுபோலப் பாசாங்கு செய்தான், ஒருமுறை நான் பாசாங்கு செய்தேன். தான் ஒரு முக்கியமான அரசாங்க அதிகாரி என்றும், கீழ்ச்சாதியினர் கொடுக்கக்கூடிய சிறிய கமிஷன் தொகைகளில் தனக்கு அக்கறை இல்லை என்றும் அவன் என்னிடம் தொடர்ந்து கூறிக் கொண்டே இருந்தான். ஆனால் இரு தரப்பினரிடமிருந்தும் கமிஷன்களை வாங்குவதற்கு அவன் துடித்துக் கொண்டிருந்தான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. வருணன் தனது முகவர்களுக்கு அவ்வளவு நல்ல கமிஷன்களைக் கொடுக்கவில்லை. எனவே, அந்த முகவர்கள், வேறு நாட்டிற்குக் குடி பெயர விரும்பியவர்களை அச்சுறுத்தியும் தாஜா செய்தும் முகஸ்துதி செய்தும் தங்களால் முடிந்த அளவுக்கு அவர்களிடமிருந்து பணத்தைக் கறந்தனர். நாங்கள் கிட்டத்தட்ட அடிதடிவரை சென்றுவிட்டோம், ஆனால் என் மனைவி என்னை ஓரமாக இழுத்துச் சென்று, எனக்குச் சிறிது புத்திமதி கூறி, கொதிப்படைந்திருந்த என் மனத்தை அமைதிப்படுத்தினாள்.

நான் தயக்கத்தோடு வீடு திரும்பினேன். அரை மணிநேரம் நிலத்தைத் தோண்டிய பிறகு, நடுங்கிக் கொண்டிருந்த எனது கைகளில்

ராவணனின் நகைகளை இறுகப் பற்றியபடி, கனத்த இதயத்துடன், பேராசை கொண்ட அந்த அரசாங்க ஊழியனை மீண்டும் சந்திப்பதற்காக அந்தப் புளிய மரத்தை நோக்கி நடந்தேன். நிலவொளியில் தகதகத்தத் தங்கத்தைக் கண்டதும் அந்த முகவரின் கண்கள் ஒளிர்ந்தன. பொதுவான நாட்டு நிலவரத்தைப் பற்றியும், விலைவாசி ஏற்றத்தாலும் கல்விக் கட்டண உயர்வாலும் நடுத்தர வர்க்கத்தினரின் வாழ்க்கை இப்போது மிகவும் சிரமமானதாக ஆகியிருந்தது பற்றியும் அவன் என் மனைவியிடம் பேசிக் கொண்டிருந்தான். அவன் தன்னையும் அறியாமல் அந்தத் தங்கத்தைத் தனது கைகளில் எடுத்து எடை பார்த்தான். அதன் பிறகு அவன் புன்னகைப்பதை நிறுத்தவே இல்லை. எனக்கும் அவனுக்கும் இடையே ஒரு வாய்வழி ஒப்பந்தம் கையெழுத்தானது. இரண்டு நாட்களுக்குள், கடலுக்குள் நங்கூரமிடப்பட்டு நின்று கொண்டிருந்த ஒரு கப்பலுக்கு ஒரு கட்டுமரம் எங்களை அழைத்துச் செல்வதற்கு ஏற்பாடாகியிருந்தது. பிறகு அது எங்களைத் தூரக் கிழக்கு நாட்டிற்கு அழைத்துச் சென்றுவிடும். அங்கு ஏராளமான வேலை வாய்ப்புகள் இருந்ததாகவும், தெருக்கள் தங்கத்தால் அமைக்கப்பட்டிருந்ததாகவும், அத்தெருக்கள் நெடுகிலும் தங்க நாணயங்கள் கொட்டிக் கிடந்ததாகவும் அவன் அந்நாட்டைப் பற்றிப் புகழ்ந்து கொண்டே போனான். பிறகு, அவன் எங்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டான். தெருவில் மக்கள் நடமாட்டம் குறைந்திருந்தது. மாலாவும் நானும் இளம் காதலர்களைப்போல அந்தப் புளிய மரத்தின் கீழே கைகோர்த்து நின்றோம். வாழ்க்கை எங்களுக்கு மற்றுமொரு வாய்ப்பை வழங்கிக் கொண்டிருந்தது போலும். யாருக்குத் தெரியும்?

இரண்டு வாரங்கள் ஆகியும் அந்தக் கட்டுமரம் வரவில்லை. நான் பெரும் கவலை கொண்டேன். அந்த அதிகாரி வேலை செய்ததாகக் கூறப்பட்ட அலுவலகத்திற்குக் கால் கடுக்க நான் இரண்டு முறை நடந்து சென்றும்கூட, அந்த இரண்டு முறையும் அவனை என்னால் பார்க்க முடியவில்லை. பிறகு நான் கிட்டத்தட்ட நம்பிக்கை இழந்திருந்த நேரத்தில், ஒரு நள்ளிரவில், என் வீட்டுக் கதவு ரகசியமாகத் தட்டப்பட்டது. நான் திடுக்கிட்டு விழித்தேன். பலப்பல ஆண்டுகளுக்கு முன்பு, தேவக் காட்டுமிராண்டிகள், பூரண நதிக்கரையில் அமைந்த என் குடிசைக்கு வந்தது குறித்தக் காட்சிகளை என் மனத்திலிருந்து வேகமாக விரட்டியடித்தேன். கதவு இன்னொரு முறை தட்டப்படுவதற்காக நான் காத்திருந்தேன். அது தட்டப்பட்டபோது, கதவை நான் லேசாகத் திறந்தேன். ஒரு விளக்கு வெளிச்சத்தில் அந்த அதிகாரியின் முகம் ஒரு பேயைப்போல இருந்தது. அவன் என்னைப் பார்த்துப்

பல்லிளித்துவிட்டு, வெளியே வருமாறு எனக்குச் சைகை காட்டினான். கதவை நான் முழுவதுமாகத் திறந்து வெளியே வந்தபோது, என் கையில் ஒரு பனை ஓலையை அவன் திணித்தான். இன்னும் இரண்டு மூன்று உருவங்கள் நிழல்களில் மறைந்திருந்தன.

நான் வீட்டிற்குள் திரும்பிச் சென்று என் மனைவியை எழுப்பினேன். சொர்க்கத்திற்கான எங்களது பயணச்சீட்டுகள் வந்திருந்ததைக் கேள்விப்பட்டதும் அவள் உற்சாகமடைந்தாள். எங்களிடம் இருந்த சொற்பப் பொருட்களை ஒரு துணியில் வேகமாக மூட்டை கட்டிக் கொண்டு, அவள் என்னைப் பின்தொடர்ந்தாள். நாங்கள் ஆற்றங்கரைக்குச் சென்றபோது, அங்கு ஒரு கட்டுமரம் காத்துக் கொண்டிருந்தது. இன்னும் மூன்று தம்பதியரும் ஒரு பூசாரியும் அங்கு இருந்தனர். நாங்கள் அமைதியாக அந்தக் கட்டுமரத்திற்குள் ஏறிக் காத்திருந்தோம். சுமார் அரை மணிநேரத் தாமதத்திற்குப் பிறகு, இன்னொரு தம்பதியரும் எங்களுடன் சேர்ந்து கொண்டனர். அந்த அதிகாரி எங்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியாக விடைகொடுத்து எங்களை வழியனுப்பி வைத்தான். அந்தக் கட்டுமரம் மெதுவாக ஆற்றின் முகத்துவாரத்தை நோக்கி மிதந்தது. நெடுங்காலத்திற்கு முன்பே எனது நாடாக நான் சுவீகரித்திருந்த இலங்கை, எங்கள் பார்வையவைிட்டு மெல்ல மெல்ல மறைந்து கொண்டிருந்தது. பல முரணான உணர்ச்சிகள் என்னைத் திணறடித்தன. தங்களது சொந்த எண்ணங்களிலும் கனவுகளிலும் மூழ்கியிருந்த இத்தனைப் பேருக்கு மத்தியிலும் நான் தனிமையில் இருந்தேன்.

ஓர் இருண்ட கப்பல் தொலைதூரத்தில் நின்று கொண்டிருந்தது எனக்குத் தெரிந்தது. எங்கள் கட்டுமரம் அந்தக் கப்பலை மெதுவாக நெருங்கியது. கயிற்று ஏணி ஒன்று அதிலிருந்து தொங்கியது. நாங்கள் ஒவ்வொருவராக அதன்மீது ஏறிச் சென்றோம். எங்களுடைய முதல் வகுப்பு அறைகளுக்கு எங்களை அழைத்துச் செல்வதற்கு யாரேனும் வருவதற்காக அந்தப் பெரிய கப்பலின் மேற்தளத்தின்மீது நாங்கள் காத்திருந்தோம். சிறிது நேரத்திற்குப் பிறகு, ஒரு பனை ஓலையுடன் ஒரு கணக்கன் வந்தான். அவன் சிலரது பயணச்சீட்டுக்களைப் பரிசோதித்துவிட்டு, அவரவருடைய அறைகளுக்குப் போகும்படி அவர்களுக்கு உத்தரவிட்டான். என்னுடன் வந்திருந்த ஓர் இளம் தம்பதியினருடன் நான் உரையாடியதில், சமீபத்தில்தான் அவர்களுக்குத் திருமணமாகியிருந்தது என்பதைத் தெரிந்து கொண்டேன். அந்தப் பெண் வெட்கத்தோடும், பாதாம் போன்ற அழகான கண்களுடனும் இருந்தாள். அந்த இளைஞன் அப்பாவியாகவும் வசீகரமாகவும் இருந்தான். அவர்கள் தங்களுடைய தென்னந்தோப்பை ஒரு பிராமணனுக்கு விற்றுவிட்டுத்

தங்கள் இருக்கைகளைப் பதிவு செய்திருந்தனர். அந்தப் பெண்ணின் பெயர் அரசி. அந்த இளைஞனின் பெயர் சிவன்.

அந்தக் கணக்கன் எங்களை அணுகியபோது, நாங்கள் எங்கள் அரட்டையை நிறுத்திவிட்டு, எங்களுடைய பயணச்சீட்டுகளை அவனிடம் மரியாதையுடன் கொடுத்தோம். அவன் தன் முகத்தைச் சுளித்துவிட்டு, “நீங்கள் எந்தச் சாதியைச் சேர்ந்தவர்கள்?” என்று கேட்டான்.

“அதைப் பற்றி உங்களுக்கு என்ன அக்கறை?” என்று சிவன் எரிச்சலோடு கேட்டான்.

“உங்களைப் போன்றவர்கள் கருப்பாகவும் பண்பாடு இல்லாமலும் இருக்கிறீர்கள். நீங்கள் தீண்டத்தகாத பறையர் சாதியைச் சேர்ந்தவர்களாக இருக்கக்கூடும். நீங்கள் இதில் பயணிக்க என்னால் அனுமதிக்க முடியாது. உயர்ந்த சாதியைச் சேர்ந்த மற்றப் பயணியர் மறுப்புத் தெரிவிக்கக்கூடும்.”

சிவன் அவரசப்பட்டு முட்டாள்தனமாக ஏதேனும் செய்வதற்கு முன்பு நான் குறுக்கிட்டு, “நாங்கள் இதில் பயணிக்க உங்களால் அனுமதிக்க முடியாது என்பதற்கு என்ன பொருள்? இந்தப் பயணத்திற்கான முழுத் தொகையையும் நாங்கள் கட்டியிருக்கிறோம்,” என்று கூறினேன்.

“எனக்குத் தெரியாது. இதில் ஏதோ குழப்பம் நடந்துள்ளது. ஆறு மாதங்களுக்குள் எங்கள் நிறுவனம் உங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடும். தலைநகரில் உள்ள எங்கள் அலுவலகத்திற்குச் சென்று, அதற்கு நீங்கள் விண்ணப்பிக்க வேண்டும். என்னை மன்னித்துவிடுங்கள். உங்களை என்னால் கூட்டிச் செல்ல முடியாது. நீங்கள் வந்த கட்டுமரம் இன்னும் இங்குதான் இருக்கிறது. இப்போது நீங்கள் கீழே இறங்கினால், அதில் ஏறி உங்கள் ஊருக்குப் போய்விடலாம், இல்லையென்றால் நீங்கள் நீந்தித்தான் கரையேற வேண்டியிருக்கும்,” என்று கூறிவிட்டு, அவன் தனது அறைக்குப் போவதற்காகத் திரும்பினான்.

குழம்பிப் போயிருந்த அரசியிடம், என் மனைவி, “உன் அட்டிகையகைக் கழற்றிக் கொடு,” என்று மிரட்டினாள். அப்பெண் சிறிது தயங்கியபடி, தன்னிடமிருந்த ஒரே விலையுயர்ந்த அந்த அட்டிகையை என் மனைவியிடம் கொடுத்தாள். என் மனைவி அதை என் கைகளில் திணித்துவிட்டு, “இதை அந்தக் கணக்கனிடம் கொடுத்து, அவனுடைய பாதங்களில் விழுந்து, எப்படியாவது நம்மைக் கூட்டிச் செல்லுமாறு கூறுங்கள். நம்மால் திரும்பிப் போக முடியாது,” என்று கிசுகிசுத்தாள்.

தன் அறைக்குத் திரும்பிக் கொண்டிருந்த அந்தக் கணக்கனின்

காலை நான் தாவிப் பிடித்தேன்.

"ஏய்!" என்று கத்திய அவன், என்னைத் தன் மற்றொரு காலால் எட்டி உதைத்தான். "என்னைத் தொட்டு அசுத்தப்படுத்துவதற்கு உனக்கு எவ்வளவு துணிச்சல்? மூடனே! இங்கிருந்து வெளியேறிவிடு!"

ஆனால் நான் அவனுடைய காலை விடவில்லை. நான் மிகவும் பரிதாபமான குரலில், "சுவாமி, தயவு செய்து எங்களை இங்கிருந்து விரட்டிவிடாதீர்கள். எங்களால் திரும்பிப் போக முடியாது. உங்களுடைய கப்பலின் மேற்தளத்தையும் கழிவறைகளையும் நாங்கள் சுத்தம் செய்கிறோம், ஆனால் தயவு செய்து எங்களை உங்களோடு அழைத்துச் செல்லுங்கள். எங்களைக் கைவிட்டுவிடாதீர்கள். நீங்கள்தான் எங்கள் கடவுள். உங்களுக்கான ஒரு சிறு காணிக்கை இது. எங்கள்மீது கருணை காட்டுங்கள்," என்று கூறி அழுதேன். அவன் நன்றாகப் பார்க்க வேண்டும் என்பதற்காக அந்த அட்டிகையை நான் உயர்த்திப் பிடித்தேன். அவன் அதைப் பார்த்தபோது, அசுத்தம் பற்றிய அனைத்தையும் மறந்துவிட்டு, அந்தப் பொக்கிஷத்தை ஆர்வத்தோடு பிடுங்கிக் கொண்டான். நான் எழுந்து நின்று, என் கைகளை என் மார்பின் குறுக்காகக் கட்டிக் கொண்டு பணிவாகக் குனிந்தேன். என்னுடன் இருந்த மற்றவர்களும் என்னைப் பார்த்துவிட்டு, தங்களால் இயன்ற அளவுக்குப் பணிவாக நின்றனர்.

அவன் மீண்டும் தன்னுடைய பனை ஓலையைப் பரிசோதித்துவிட்டு, அந்த அட்டிகையைத் தனது பாக்கெட்டுக்குள் போட்டுவிட்டு, எங்களுக்கு ஏதோ ஒரு பெரிய உபகாரம் செய்தது போன்ற ஒரு தொனியில், "கீழே உள்ள தளத்திற்குச் செல்லுங்கள். சிங்க நகரத்தை அடையும்வரை உங்களுடைய கரிய முகங்களை நான் பார்க்க விரும்பவில்லை. சமையலறையையும் கழிவறைகளையும் சுத்தம் செய்துவிட்டு, அழுக்குத் துணிகளைத் துவைத்து வையுங்கள். வேகமாகச் செல்லுங்கள்!" என்று எங்களை விரட்டினான்.

கீழ்த்தளத்திற்கு இட்டுச் சென்ற படிக்கட்டுகள் வழியாக அவன் என்னை வழிநடத்திச் சென்றான். ஆனால் எங்களைத் தொட்டுவிடக்கூடாது என்பதில் அவன் எச்சரிக்கையாக இருந்தான். மற்றவர்களும் என்னைப் பின்தொடர்ந்தனர். கீழ்த்தளம் இருட்டாகவும் அழுக்காகவும் இருந்தது. நாட்பட்டப் பூண்டு மற்றும் அழுகிய வெங்காயத்தின் துர்நாற்றம் சமையலறையிலிருந்து வந்தது.

வருணனின் கப்பலில் வேலை செய்து எங்கள் முதுகு கிட்டத்தட்ட ஒடிந்துவிட்டது. தரைகளைத் தேய்த்துச் சுத்தப்படுத்துவது, பாத்திரங்களைக் கழுவுவது, துணிகளைத் துவைப்பது, கழிவறைகளைச் சுத்தப்படுத்துவது என்று தொடர்ந்து வேலை செய்ததில் நாங்கள்

களைத்துப் போனோம். சூரிய வெளிச்சத்தை நாங்கள் அரிதாகவே பார்த்தோம். அந்தப் பெரிய மரக்கப்பல், கடலின்மீது மேலும் கீழுமாக ஆடிச் சென்றதில், எங்களுக்கு வயிற்றைப் புரட்டியது. இறுதியில், சுமார் ஒரு மாதகாலம் பயணம் செய்த பிறகு, மேற்தளத்திலிருந்த மக்களின் மகிழ்ச்சிக் கூக்குரல் கேட்டது. எங்கள் கப்பல் நிலத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. நாங்கள் மெதுவாக மேற்தளத்திற்குச் சென்றோம். பிரகாசமான சூரிய வெளிச்சம் எங்கள் பார்வையைப் பறிக்கும் அளவுக்கு இருந்தது. ஒரு நதியின் முகத்துவாரமும், அதன் இரு புறங்களிலும் பசுமைக் காடுகளும் தெரிந்தன. கண்ணுக்கு எட்டிய தூரம்வரை சதுப்புநிலக் காடுகள் தெரிந்தன. எங்கள் கப்பல் அந்த அகலமான நதிக்குள் நுழைந்தபோது, ஓர் உயரமான கோவிலின் கருமைநிறச் சங்குப்புரி ஒன்றையும் நாங்கள் பார்த்தோம். விரைவில், எங்கள் கப்பல் ஒரு துறைமுகத்திற்குள் நுழைந்தது. வெள்ளை முண்டாசுகளுடன் வினோதமாகத் தோன்றிய மனிதர்கள், கப்பல்களிலிருந்து சரக்குகளை இறக்குவதும், அவற்றில் ஏற்றுவதுமாக மும்முரமாக இருந்தனர்.

எங்கள் கப்பலில் வந்த கணக்கன் எங்களைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துவிட்டு, ஏணி வழியாகக் கீழே இறங்கிக் கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்துவிட்டான். சிறிது நேரக் குழப்பத்திற்குப் பிறகு, நிலத்திற்குச் செல்வதென்று தீர்மானித்து, நாங்கள் அந்தக் கயிற்று ஏணி வழியாக மெதுவாகக் கீழே இறங்கினோம். வருணனின் 'கப்பல் சேவைப் பயணச்சீட்டு அலுவலக'த்தில் ஏற்கனவே ஒரு நீண்ட வரிசை அமைந்திருந்தது. கிழக்கில் இருந்த சிங்க நகரம் இதுதானா என்று விசாரிப்பதென்று நான் தீர்மானித்தேன். நான் முதலில் ஒருசிலரிடம் அது குறித்து விசாரித்தபோது, அவர்கள் என்னை வெறுமனே வெறித்துப் பார்த்தனர். ஆனால் இறுதியில், எங்களைப் போலவே கருப்பு நிறத்தில் இருந்த ஒருவனைக் கண்டுபிடித்து, துணிச்சலோடு நான் அவனை அணுகினேன். உயரமான, வெள்ளை நிறத் தோலுடன் இருந்த இரண்டு பேருடன் அவன் பேசிக் கொண்டிருந்தான். அவனிடம் பேச ஒரு வாய்ப்பிற்காக நான் காத்திருந்தேன். பிறகு, இது சிங்க நகரம்தானா என்று நான் அவனிடம் தமிழில் கேட்டேன். நான் ஒரு பைத்தியக்காரன் என்பதுபோல அவன் என்னைப் பார்த்துவிட்டு, "நீங்கள் அனைவரும் வருணனின் கப்பலில் வந்தீர்களா?" என்று எங்களிடம் கேட்டான்.

நாங்கள் ஒருவரையொருவர் பார்த்தோம். எங்கள் உடலில் ஒரு நடுக்கம் பரவியது. "ஐயா, நீங்கள் ஏன் அப்படிக் கேட்கிறீர்கள் . . .?"

அந்தக் கருப்பன் தனது வெள்ளைத் தோல் நண்பர்களிடம்

சமஸ்கிருதத்தில் எதையோ கூறினான். அதைக் கேட்டு அவர்கள் அனைவரும் உரக்கச் சிரித்தனர். பிறகு அவன் என்னிடம் திரும்பி, “நீ எந்தச் சாதி?” என்று கேட்டான்.

“ஐயா, நான் ஒரு சலவைக்காரன்,” என்று நான் பதிலளித்தேன். அரசியும் சிவனும் எந்தச் சாதியைச் சேர்ந்தவர்கள் என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை.

“நீங்கள் முட்டாள்களாக இருப்பதில் வியப்பில்லை. பெண் கடவுளான காளியின் நகரம் இது. வருணன் பலரை ஏமாற்றியிருப்பதைப்போலவே உங்களையும் ஏமாற்றியிருக்கிறான்.”

அரசி பெருங்குரலெடுத்து ஓலமிட்டுவிட்டு, தரையில் அமர்ந்து தன் தலையில் அடித்துக் கொண்டு அழுதாள். விரைவில் மாலாவும் அவளுடன் சேர்ந்து கொண்டாள். நான் உள்ளுக்குள் குமுறினேன். என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. நானும் அப்பெண்களுடன் சேர்ந்து கொண்டேன். சங்கடத்தில் நெளிந்த சிவன், எங்கள் பிரச்சனைக்கு ஒரு தீர்வு வழங்குமாறு அந்தக் கருப்பனிடம் கெஞ்சினான். அந்தக் கருப்பன் எங்களை விரட்டியடிக்க முயற்சித்தான், ஆனால் சிவன் பிடிவாதமாக இருந்தான். இறுதியில், அந்தக் கருப்பன் தனது நண்பர்களுக்கு விடைகொடுத்துவிட்டு, எங்களை நோக்கித் திரும்பி, வாயை மூடிக் கொண்டு உட்காருமாறு எங்களிடம் கத்தினான். சிந்திப்பதற்கு அவனுக்குச் சிறிது நேரம் தேவைப்பட்டது. இறுதியில், “இதோ பாருங்கள் நண்பர்களே, இது ஒரு சிறிய நகரம். இங்கு உங்களுக்கு ஒரு வேலை கிடைக்கக்கூடும். ஆனால் வடமேற்கில் அயோத்தி என்ற ஒரு பெரிய நகரம் இருக்கிறது. அரசன் ராமன் அங்கு ஆட்சி செய்கிறான். அந்நகரம் இப்போது செழித்துக் கொண்டிருக்கிறது. உங்களைப் போன்ற கூலியாட்களுக்கு அங்கு ஏராளமான வேலைகள் இருக்கின்றன. சம்பளமும் அங்கு அதிகம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அங்கு ஏதேனும் வேலை கிடைக்குமா என்று முயற்சித்துப் பாருங்கள். அரிசி ஏற்றிச் செல்லும் படகு ஒன்று சரயு நதியின் வழியாகச் செல்லவிருக்கிறது. தெற்கிலிருந்து குடிபெயர்ந்த ஒரு வணிகன்தான் அதன் சொந்தக்காரன். நான் உங்களைப் பற்றி அவனிடம் பேசுகிறேன். உங்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால், அவனுடைய படகில் உங்களுக்குச் சிறிது இடம் கிடைக்கக்கூடும். இன்றிரவைப் பொறுத்தவரை, ஏழைகளுக்கு இலவச உணவு வழங்கப்படுகின்ற ஓர் இடம் காளி கோவிலுக்கு அருகே உள்ளது. அங்கு சென்று உணவருந்திவிட்டு, காலையில் அந்தப் படகுக்கு வந்துவிடுங்கள். நடந்து முடிந்துவிட்ட விஷயம் குறித்து இனி அழாதீர்கள். எல்லாம் உங்கள் நன்மைக்காக இருக்கக்கூடும்,” என்று

கூறிவிட்டு, காளி கோவில் இருந்த திசையை அவன் எங்களுக்குச் சுட்டிக்காட்டினான். மேலும், "முன்னால் உள்ள சாலையின் வழியாகச் செல்லாதீர்கள். தீண்டத்தகாதவர்கள் அதன் வழியாகச் செல்ல அனுமதியில்லை. எனவே, பின்னால் இருக்கின்ற சிறிய பாதையின் வழியாகச் செல்லுங்கள்," என்று கத்திவிட்டு, ஒரு சிறிய படகிற்குள் குதித்து அந்த நதியின் கீழாக அவன் மிதந்து சென்றுவிட்டான்.

அன்றிரவை நாங்கள் காளியின் நகரத்தில் கழித்தோம். நாங்கள் பட்டினி கிடக்கவில்லை. இரவு வெகுநேரம் கழித்து, கோவிலில் எங்களுக்குச் சிறிது உணவு கிடைத்தது. அருகிலிருந்த சதுப்பு நிலக் காடுகளிலிருந்து கேட்டப் புலிகளின் உறுமலாலும், என் காதுகளைச் சுற்றி ரீங்காரமிட்டக் கொசுக்களாலும் என்னால் தூங்க முடியவில்லை. அயோத்தியின்மீது எனக்கு அதிக ஆர்வம் ஏற்பட்டது. ராமன் தன் சகோதரனோடும் மனைவியோடும் அயோத்திக்குத் திரும்பி ஒரு வருடம் ஆகியிருக்கும் என்று நினைக்கிறேன். ஒருசில மாதங்களுக்குள், வானரர்கள் தங்களால் இயன்ற அளவுக்குக் கொள்ளையடித்துச் சென்றிருந்தனர்.

பொழுது விடிந்தபோது, நாங்கள் அந்த அரிசிப் படகில் ஏறி, அயோத்தியை நோக்கிப் பயணித்தோம். மூன்று நாட்களுக்குப் பிறகு, ராமனின் தலைநகரத்தை நாங்கள் அடைந்தோம். முப்பது ஆண்டுகளுக்கு முன்பு, ராவணனின் வெற்றிப் படையோடு நான் அங்கு சென்றபோது, அது ஒரு சிறிய கிராமமாக இருந்தது. இப்போது அது ஒரு மிகப் பெரிய நகரமாக வளர்ந்திருந்தது. ஆனால், திரிகோட்டா மற்றும் முசிறி நகரங்கள் தமது புகழின் உச்சகட்டத்தில் இருந்தபோது எப்படி ஒளிமயமாக இருந்தனவோ, அதற்கு இந்நகரம் ஈடாகவில்லை. இருந்தாலும், இப்போது அது செழிப்பாக இருந்தது. ஆனால் சில குறிப்பிட்ட விஷயங்கள் மாறியிருக்கவில்லை. சாலைகளில் பசுக்கள் சுதந்திரமாக அலைந்து திரிந்து கொண்டும், போக்குவரத்தைத் தடுத்துக் கொண்டும், தாம் விரும்பிய இடத்தில் படுத்துக் கொண்டும் இருந்தன. ஆனால், நாய்களும் பன்றிகளும் பசுக்களும்கூடச் சுதந்திரமாகச் சுற்றி திரிந்த இடங்களில் கீழ்ச்சாதியினரும் கருப்புத் தோல் கொண்ட மனிதர்களும் செல்வதற்கு அனுமதி இருக்கவில்லை. மூடப்படாத சாக்கடைகளில் பன்றிகளும் எலிகளும் களியாட்டம் போட்டன. நகரம் முழுவதையும் ஒரு துர்நாற்றம் நிரந்தரமாக ஆட்கொண்டிருந்தது.

கீழ்ச்சாதியினருக்கு அனுமதி இல்லாத ஏதேனும் தெருக்களில் நுழைந்து, சாதி விதிமுறைகள் எதையேனும் மீறிவிடுவோமோ என்ற பயத்திலேயே நாங்கள் அந்நகரில் சுற்றித் திரிந்தோம். எல்லா அடையாளப் பலகைகளும் சமஸ்கிருதத்திலேயே இருந்தன. மக்கள் ஒரு

வினோதமான மொழியில் பேசினர். அதை எங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் எங்களைக் கோபத்தோடு பிடித்துத் தள்ளினர். விரைவில், எங்களைக் கவனித்தக் காவல்துறையினர், உள்ளூர்க் காவல் நிலையத்திற்கு எங்களை அழைத்துச் சென்று பல்வேறு வழிகளில் எங்களை விசாரிக்க முயற்சித்தனர். ராமனின் காவல் துறையினர் ராவணனின் காவல் துறையினரிடமிருந்து எவ்விதத்திலும் வேறுபட்டிருக்கவில்லை. அவர்கள் தங்கள் தடிகளைக் கொண்டு என்னை அடித்தனர், என்னுடன் இருந்த சிவனை எட்டி மிதித்தனர். மாலாவும் அரசியும் இதைக் கண்டு அலறினர்.

இறுதியில், காவல் நிலையத்திற்கு எதிரே ஒரு கடையை நடத்திய ஒருவனை அவர்கள் அழைத்து வந்தனர். அவனுக்குத் தமிழ் பேசத் தெரிந்திருந்தது. நாங்கள் அயோத்திக்கு எப்படி வந்து சேர்ந்தோம் என்பதை நாங்கள் அவனிடம் கூறினோம். அவன் அதை அந்தக் காவலர்களிடம் மொழிபெயர்த்துக் கூறினான். எங்களுடைய முட்டாள்தனத்தைக் கேட்டு அவர்கள் சிரித்தனர். ஒருவழியாக அவர்களுடைய கேலிக் கொண்டாட்டம் முடிந்த பிறகு, எங்களுடைய சாதிகளைப் பற்றி விசாரிக்குமாறு அவர்கள் அந்தக் கடைக்காரனிடம் கூறினர். நாங்கள் சலவைக்காரன் சாதி என்பதை அவர்கள் கேள்விப்பட்டதும், எங்களுடைய சாதியினர் வாழ்ந்த பகுதிக்கு எங்களைக் கூட்டிச் செல்லுமாறு அவர்கள் அந்தக் கடைக்காரனுக்கு உத்தரவிட்டனர். அவன் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தான். தன்னுடைய கடையை ஆளின்றி விட்டுச் செல்ல அவன் தயங்கியது போலிருந்தது. ஆனால் அந்தக் காவலர்கள் அவனிடம் தங்கள் கைவரிசையைக் காட்டிய பிறகு, எது முக்கியம் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

சலவைக்காரர்கள் வாழ்ந்த பகுதி நதியோரமாக இருந்தது. அது வடக்குவரை நீண்டிருந்தது. அந்த வணிகன் எங்களுக்கு அந்த இடத்தைக் காட்டிக் கொடுத்துவிட்டு, நாங்கள் அவனுக்கு நன்றி கூறுவதற்கு முன்பாக அங்கிருந்து மாயமாய் மறைந்தான். அந்தப் பகுதியே ஒரு சிறு நகரம்போல இருந்தது. அசுரர்கள், நாகர்கள், கின்னரர்கள், காந்தர்வர்கள், கரிபோலக் கருப்பாக இருந்த காட்டுமிராண்டிகள், மஞ்சள் நிறத் தோல் கொண்ட சீனர்கள், வேறு ஏதோ குளிரான நாடுகளில் இருந்து வந்து குடியேறியிருந்த, மஞ்சள் தலைமுடியுடன் இருந்த காட்டுமிராண்டி இனங்கள், கலப்பின மக்கள் போன்ற பலரும் அங்கு வசித்து வந்தனர். ஆனால் அவர்கள் எல்லோரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். அவர்கள் அனைவரும் சலவைக்காரர்கள். இங்கு, வடக்கில், சாதி அமைப்புமுறையானது தொன்றுதொட்டு இருந்து வந்தது. குழந்தைகள் தங்கள் பெற்றோரின்

சாதியை சுவீகரித்துக் கொண்டனர். இனங்கள் ஆயிரக்கணக்கான வருடங்களாகக் கலந்து வந்திருந்தபோதிலும், பெற்றோரிடமிருந்து குழந்தைகளுக்கு என்று சாதி அமைப்புமுறை நீடித்து நிலைத்து வந்திருந்தது. சாதி அமைப்புமுறை ஆணித்தரமாக நிறுவப்பட்டது. ஒட்டுமொத்தச் சாதிக்கும் எது சிறந்தது என்பதை ஒரு சாதித் தலைவன்தான் தீர்மானித்தான். எனவே அவன் ஓர் அரசனைப்போல ஆட்சி செலுத்தினான்.

நாங்கள் எங்கள் சாதித் தலைவனிடம் அழைத்துச் செல்லப்பட்டோம். அவன் எங்களை விசாரித்துவிட்டு, நதிக்கு அருகே இருந்த ஒரு குடிசையை எங்களுக்கு ஒதுக்கிக் கொடுத்தான். எங்கள் மாத வருவாயில் பத்தில் ஒரு பங்கு எங்களுடைய சாதிக் கருவூலத்திற்குச் சென்றாக வேண்டியிருந்தது. அந்தக் கருவூலம், அந்த வயதான சாதித் தலைவனின் கட்டுப்பாட்டில்தான் இருந்தது. குடியிருக்க ஓர் இடமும் வயிற்றுக்கு உணவும் எங்களுக்குத் தேவைப்பட்டதால், எங்களால் குறைகூற முடியவில்லை. நாங்கள் எங்களுடைய குடிசையில் குடியேறி, ஒரு புதிய வாழ்க்கையைத் துவக்கினோம்.

தேவ நாடுகளில் ஆற்றங்கரையருகே ஒரு திறந்த வெளியில்தான் மக்கள் தங்கள் காலைக்கடன்களை முடிக்க வேண்டியிருந்தது. அதற்கு வேறு எந்த வசதியும் இருக்கவில்லை. மக்கள் அசுத்தம் செய்த, எருமை மாடுகள் குளித்த அந்த நதி புனிதமானதாகக் கருதப்பட்டது. அழுக்குத் துணிகளை நாங்கள் அதில்தான் துவைத்தோம். அதே இடத்திலிருந்துதான் நகரத்திற்குக் குடிநீர் வினியோகமும் செய்யப்பட்டது. எங்கள் வாழ்க்கை மெல்ல மெல்லத் தனக்கென்று ஒரு போக்கை சுவீகரித்துக் கொண்டது. நாங்கள் சமஸ்கிருத மொழியை எப்படியோ கற்றுக் கொண்டோம். இப்போது எங்களுடைய அண்டைவீட்டாருடன் எங்களால் சிறப்பாகக் கருத்துப் பரிமாற்றம் மேற்கொள்ள முடிந்தது. நாங்கள் எங்கள் இடத்தில் இருந்தவரை, உயர்வான எது குறித்தும் நாங்கள் ஆசைப்படாதவரை, தேவர்களின் சாதி அமைப்புமுறை மிகச் சிறப்பாக வேலை செய்தது. சாதித் தலைவனின் மூலமாக அரசாங்கம் வரி வசூலித்தது. பிறகு அவன் அதில் தனக்குரிய சதவீதம் குறித்து அரசாங்கத்திடம் பேரம் பேசினான். காவல்துறையைச் சேர்ந்த எவருமோ அல்லது மற்ற அரசாங்க அதிகாரிகளோ எங்களுடைய சலவைக்காரர்கள் கிராமத்திற்குள் ஒருபோதும் நுழைந்ததில்லை. குயவர்கள் மற்றும் நெசவாளிகளின் கிராமங்களைப் பொறுத்தவரையும் இதே நிலைமைதான்.

பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை, நகருக்கு வெளியே இருந்த சந்தைக்குச் சென்று எங்களுக்குத் தேவையானவற்றை நாங்கள்

வாங்கினோம். வாழ்க்கை எளியதாகவும் ஒளிவுமறைவின்றியும் இருந்தது. அசுரச் சமுதாயத்தின் எந்தச் சிக்கல்களும் இங்கு இருக்கவில்லை. ஆனால் சாதி அமைப்புமுறை மிகக் கொடூரமானதாக இருந்தது. கீழ்ச்சாதியினர் மனிதாபிமானமற்ற முறையில் நடத்தப்பட்டனர். ஆனால் ஒருவனது சொந்தச் சாதியின் கிராமத்திற்குள் ஒருவிதமான சமத்துவம் இருந்தது. சாதித் தலைவனின் குடும்பம் மட்டும் இதற்கு விதிவிலக்கு. மேல் சாதியைச் சேர்ந்த எவரொருவரும் அந்த கிராமத்திற்குள் நுழையவில்லை.

தேவ அமைப்புமுறையில் இருந்த மிகப் பெரிய அனுகூலங்களில் ஒன்று, அதில் போட்டி இருக்கவில்லை என்பதுதான். ஒவ்வொரு வேலையும் ஒரு சாதிக்கு ஒதுக்கப்பட்டது. ஒரே சாதியைச் சேர்ந்த அனைத்து உறுப்பினர்களுக்கும் ஒரு வேலைக்கும் இரண்டு வேளைச் சாப்பாட்டிற்கும் உத்தரவாதம் இருந்தது. ராவணனின் ஆட்சியின்கீழ் இருந்த திரிகோட்டா, முசிறி, கோகர்ணம், மகாபலிபுரம் போன்ற நகரங்களைப் போலன்றி, ராமனின் ஆட்சியின்கீழ் இருந்த அயோத்தி, மிதிலை போன்ற நகரங்கள் வித்தியாசமானவையாக இருந்தன. ராவணனின் நகரங்களில் பல்வேறு கலாச்சரங்களும் இனங்களும் ஒன்றுகலந்தன; உயர்ந்த நிலைகளை அடைவதைப் பற்றி மக்கள் கனவு கண்டனர்; வர்த்தகமும் அறிவியலும் கலையும் கட்டடக்கலையும் தழைத்தன; நவநாகரீகம், திட்டமிடுதல், வடிவமைப்பு, அழகியல் ஆகிய அனைத்திற்கும் அவற்றுக்கான இடங்கள் இருந்தன; அதிகத் தகுதி படைத்த ஆண்களும் பெண்களும் வாழ்வின் பல்வேறு தளங்களில் உலகில் தங்கள் முத்திரைகளைப் பதிப்பதற்கு ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டனர்; அளப்பரிய திறமைகளைக் கொண்ட மக்களும், மயனைப் போன்ற அறிவியலறிஞர்களும் சிறப்பாக வாழ்ந்தனர்; ஆனால் இவற்றுக்கு ஈடு கொடுக்க முடியாமல் பின்தங்கிய ஒரு பெரும் கூட்டம் ஒரு கொடூரமான சேரி வாழ்க்கைக்குள் வலுக்கட்டாயமாகத் தள்ளப்பட்டது. அவர்கள் அன்றாடம் செத்துப் பிழைக்க வேண்டியிருந்தது. ஆனால் ராமனின் ஆட்சியின்கீழ் இருந்த, சாதீய முறையை அடிப்படையாகக் கொண்ட இந்த அமைப்பில், ஒரு சாதியினர் மற்றொரு சாதியினருடன் தேவைக்கு மட்டுமே உறவாடினர். கடும் போட்டி நிலவிய, பௌதீக விஷயங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்த, ஆனால் பிரம்மாண்டமாக விளங்கிய அசுர நகரங்களைப்போல இல்லாமல், ராம ராஜ்யத்தைச் சேர்ந்த நகரங்கள் சாதியை அடிப்படையாகக் கொண்ட, ஒரு மூடிய, துடிப்பற்ற உலகமாக விளங்கியது. பிறப்பு எனும் விபத்தின் மூலம் தங்கள் சாதியில் பிறந்த ஒவ்வொருவரும் அவரவர் இடத்தில் உறுதியாக வைக்கப்பட்டனர்.

இந்த அமைப்புமுறையில், கனவுகளுக்கு எந்த வாய்ப்பும் இருக்கவில்லை, லட்சியங்கள் ஆபத்தானவையாகக் கருதப்பட்டன. வேறு இடங்களிலிருந்து இங்கு வந்து குடியேறிய எங்களைப் போன்றவர்கள் விரைவில் இதைக் கண்டறிந்தோம்.

வாழ்க்கை சுலபமாகப் போய்க் கொண்டிருந்தது. சில வருடங்கள் கழித்து, எங்களுடன் வந்திருந்த சிவன் — அரசி தம்பதியர் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தனர் சிவபெருமானின் பெயரான சம்புகன் என்ற பெயரை நாங்கள் அவனுக்குச் சூட்டினோம். சம்புகள் வேகமாக வளர்ந்தான். அவனுக்குத் தன் வயதுக்கு மீறிய அறிவுக்கூர்மை இருந்தது. நான் மெல்ல மெல்ல என் வாழ்வில் மகிழ்ச்சியைக் கண்டுகொண்டேன். அச்சிறுவனோடு விளையாடியது, அவனுக்கு நீந்தக் கற்றுக் கொடுத்தது, சிறு பறவைகளை வேட்டையாட அவனுக்குப் பயிற்சியளித்தது போன்றவற்றின் மூலம் நான் என் இளமையை மீண்டும் கண்டறிந்தேன். நான் கடின உழைப்பை நிறுத்திப் பல வருடங்கள் ஆகியிருந்தன. சிவன் எனக்கு ஒரு மகனைப்போல ஆகியிருந்தான். கூடுதல் சுமையை அவன் ஏற்றுக் கொண்டான். அவன் ஒரு கடின உழைப்பாளியாகவும் படைப்புத்திறன் கொண்டவனாகவும் இருந்தான். அவன் பலரிடம் கெஞ்சிக் கூத்தாடியும் லஞ்சம் கொடுத்தும் அரண்மனைத் துணிகளைத் துவைப்பதற்குரிய ஒப்பந்தத்தைப் பெற்றான். உலகில் நாங்கள் வெற்றி பெறுவதற்கான எங்களுடைய துருப்புச்சீட்டாக அது அமைந்தது. சிவனால் செழிப்புற முடிந்ததற்குக் காரணம், அசுரப் பாரம்பரியத்தின் உள்ளார்ந்த போட்டியுணர்வு அவனுக்கு இருந்ததுதான் என்று நான் நினைக்கிறேன். வாய்ப்புக் கிடைத்தபோது அந்த உணர்வு அவனிடம் தலைதூக்கியது. நாங்கள் எங்கள் வீட்டை விரிவுபடுத்தினோம். ஏற்கனவே எங்களிடம் இருந்த கழுதைகளோடு இரண்டு பசுக்களையும் நாங்கள் சேர்த்துக் கொண்டோம். வாழ்வில் நாங்கள் படிப்படியாக முன்னேறிக் கொண்டிருந்தோம். அமைதியாக ஓடிக் கொண்டிருந்த நதியையும், மேகங்கள் சூழ்ந்த சலனமற்ற வானத்தையும், ஆற்றில் மிதந்து வந்த பரிசல்களையும், காட்டு நாரைகளையும் மீன்கொத்திப் பறவைகளையும் அமைதியாகப் பார்த்தபடி என் நாட்களை நான் செலவிட்டேன். சம்புகன் என்னைத் தாத்தாவென்று அழைத்துக் கொண்டும், எதையாவது கேட்டு என்னை நச்சரித்துக் கொண்டும், எனது இந்த உல்லாசப் பயணங்களில் என்னுடன் வந்தான். அவனது குழந்தைத்தனமான பேச்சை நான் கேட்டபோதெல்லாம் என் இதயம் மகிழ்ச்சியாலும் பெருமிதத்தாலும் நிரம்பியது. நான் மீண்டும் இந்த அழகான வாழ்க்கையோடும் இந்த அற்புதமான உலகத்தோடும் காதல் வயப்படத் துவங்கினேன்.



# 63

## சிறுபிள்ளைத்தனமான கனவுகள்

பத்ரன்

எல்லாம் கனவுபோலவும், வாழ்க்கை ஒரு நிரந்தரமான வசீகரத்தைப் பெற்றிருப்பது போலவும் தோன்றும்போதுதான், முட்டாள்தனமான எண்ணங்களும் ஆபத்தான லட்சியங்களும் மனித மனங்களில் எப்போதும் எழுகின்றன. சம்புகன் புத்திசாலியாகவும் வசீகரமாகவும் இருந்தான், ஆனால் அவன் ஒரு சலவைத் தொழிலாளியாக இருப்பதற்குப் பதிலாக அதைவிடச் சிறப்பான ஏதேனும் ஒன்றைச் செய்ய வேண்டும் என்று அவனுடைய தாயாரான அரசி ஆசைப்பட்டதற்கு அது ஒரு காரணமாக இருக்க முடியாது. தன்னுடைய குழந்தை தனித்துவமானவன் என்பது போன்ற எண்ணங்கள் ஒரு தாயின் மனத்திற்குள் நுழையும்போது, அவற்றை யாராலும் அங்கிருந்து விடுவிக்க முடியாது. தன் மகன் ஒரு முக்கியமான அதிகாரியாகவோ அல்லது ஒரு பிரபலமான கவிஞனாகவோ அல்லது ஒரு மாபெரும் வணிகனாகவோ ஆக வேண்டும் என்று அவள் விரும்பினாள். எங்களைப் போன்றவர்கள் கனவு காணத்

துணியக்கூடாது என்று நான் அவளை எச்சரித்தேன். சிவனும் அதை அவளுக்குப் புரிய வைக்க முயற்சித்தான். ஆனால் அவள் தன் முடிவில் பிடிவாதமாக இருந்தாள். சம்புகன் கல்வி கற்க வேண்டும் என்று மாலாவும் அரசியோடு சேர்ந்து குரல் கொடுத்தாள். எங்களிடம் பணம் இருந்தது; அச்சிறுவனிடம் திறமை இருந்தது; அப்படியிருக்கும்போது அவன் ஏன் கல்வியறிவு இல்லாதவனாக இருக்க வேண்டும் என்று அவர்கள் வாதிட்டனர். ஆனால் அச்சிறுவனுக்கு எட்டு வயதாகிவிட்டது. கல்வி கற்பதற்கான காலம் கடந்துவிட்டிருந்தது. அசுர நகரங்களில் ஏதேனும் ஒன்றில் அவன் வாழ்ந்திருந்தால், இந்த வயதிற்குள், படிப்பதிலும் எழுதுவதிலும் கணிதத்திலும் நல்ல தகுதி படைத்தவனாக அவன் ஆகியிருப்பான்.

மாலாவும் அரசியும் தொடர்ந்து நச்சரித்துக் கொண்டே இருந்தனர். இறுதியில், என்னுடைய மறுப்புகளுக்கும் எதிர்ப்புகளுக்கும் எதிராக, சிவன் அவர்களுக்காக மனமிரங்கி, தனது மகனைப் பள்ளிக்கு அனுப்புவதற்கான ஒரு வழியைக் கண்டுபிடிப்பதென்று தீர்மானித்தான். எனக்கு அந்த முடிவில் விருப்பமிருக்கவில்லை, ஆனால் ஒரு சலவைக்காரனின் மகனுக்கு யாரும் எதுவும் கற்றுக் கொடுக்க மாட்டார்கள் என்று நான் உறுதியாக நம்பியதால், நான் அவனுடைய தீர்மானத்தைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படவில்லை. ஆனால் பணத்தால் எந்தத் தடையையும் தகர்க்க முடியும் என்பதை நான் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறியிருந்தேன். ஆற்றின் குறுக்கே, ஒதுக்குப்புறமாகத் தனியாக வாழ்ந்து வந்த ஓர் ஆசிரியரை சிவன் கண்டுபிடித்தான்.

சரயு நதியின் மறுபுறத்தில் ஓர் அடர்ந்த காடு இருந்தது. அதில் பறவைகளோடும் விலங்குகளோடும் கூடவே, ஒருசில துறவிகளும் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தங்கள் உடல்களில் விபூதியைத் தடவிக் கொண்டும், மண்டையோடுகளையும் எலும்புகளையும் நகைகளாக அணிந்து கொண்டும், பல விந்தையான கோலங்களில் மணிக்கணக்கில் நின்று கொண்டும் இருந்ததைத் தவிர அவர்கள் வேறு எதையும் செய்யவில்லை. அவர்கள் கடவுளைத் தேடிக் கொண்டிருந்ததுபோலத் தோன்றினாலும், உண்மையில், தேவர்களின் உறுதியான சாதி அமைப்புமுறையில் பொருந்தாத ஒரு கூட்டம்தான் அவர்கள். எனவே, தனிமையில் அவர்கள் தங்கள் புகலிடத்தைக் கண்டுகொண்டிருந்தனர். அவர்கள் ஏதோ ஒரு வகையான போதைப் பொருளுக்கு அடிமையாகியிருந்தனர். ஒருசிலர் மிகவும் வினோதமான வழிகளில் தங்களைத் தண்டித்துக் கொண்டனர். பொதுமக்கள் இந்தக் கூட்டத்தைக் கண்டு பயந்தனர், அவர்களுடைய மர்ம சக்திகளைப் பற்றிக்

கிசுகிசுப்பான குரலில் பேசிக் கொண்டர். காட்டின் அந்தப் பகுதிகளுக்கு நான் பல முறை சென்று, அவர்களில் ஒருசிலரிடம் பேசியிருந்தேன். சாதீயத்தை அவர்கள் கண்டுகொள்ளவே இல்லை என்பது எனக்கு ஆச்சரியமளித்தது. அவர்களுடன் இருந்தபோது எனக்குக் கிடைத்த சுதந்திரத்திற்காக நான் அங்கே சென்றேன். அவர்கள் மட்டும்தான் என் சாதியைப் பற்றி என்னிடம் ஒருபோதும் கேட்கவில்லை. சிலர் தங்களுடைய மதுவையோ அல்லது பிற போதைப் பொருட்களையோ என்னுடன் மகிழ்ச்சியாகப் பகிர்ந்து கொள்ளவும் செய்தனர். அது எனது ரகசிய உலகமாக இருந்தது.

சிவன் அப்படிப்பட்ட ஒரு துறவியைத்தான் கண்டுபிடித்திருந்தான். அத்துறவி சாதித் தூய்மையைப் பற்றி எள்ளளவுகூடக் கண்டுகொள்ளவில்லை. நகரத்திலிருந்து வந்த மதுவை அவர் மிகவும் விரும்பினார். புகைப்பதற்குச் சில மூலிகைகளுக்காக அவர் ஏங்கினார். சம்புவிற்கு அவர் கல்வி கற்றுக் கொடுத்ததற்குப் பதிலீடாக, இவற்றை அவருக்குப் பெற்றுத் தருவதற்கு நான் நியமிக்கப்பட்டேன். அவருடைய நட்பையும் அவரது மூலிகைகளையும் நான் மிகவும் ரசித்து அனுபவித்தேன் என்பதை நான் கண்டேன். அவர் ஒரு கற்றறிந்த மனிதர். சமஸ்கிருதம், தமிழ் ஆகிய மொழிகளிலும், நாகம், காந்தர்வம், கின்னரம் ஆகிய வட்டாரப் பேச்சுமொழிகளிலும் அவர் நல்ல புலமை பெற்றிருந்தார். கூடவே, இன்னும் சில காட்டுமிராண்டி மொழிகளையும் கற்று வைத்திருந்தார். பிராமண வேதங்கள், ஜோதிடம், மற்றும் பிற அறிவியல்களிலும் அவர் சிறந்த அறிவைப் பெற்றிருந்தார். சம்புகனுக்கு அவரைவிடச் சிறந்த ஆசிரியர் எவரும் கிடைத்திருக்க மாட்டார். ஆனால் எல்லோரும் தன்னை 'குரு' என்று அழைக்க வேண்டும் என்று மட்டும் அத்துறவி வலியுறுத்தினார்.

அவர் ஒருமுறை குடிபோதையில் இருந்தபோது, தனது முந்தைய வாழ்க்கையைப் பற்றி என்னிடம் உளறிக் கொட்டினார். ஐந்து ஜீவநதிகள் பாய்ந்த பகுதியிலிருந்து அயோத்திக்குத் தனது இளமைப் பருவத்தில் குடிபெயர்ந்திருந்த ஒரு பிராமணன் அவர். அவர் ஏதேதோ வேலைகளைச் செய்துவிட்டு, கடைசியில் ஒரு பெரிய அரசாங்க அதிகாரியாக ஆகவிருந்த நேரத்தில், சாதி அமைப்புமுறையால் அவர் வெறுப்படைந்தார். ஒரு பிராமணன் என்ற முறையில் அது அவருக்குப் பல அனுகூலங்களைக் கொடுத்தபோதிலும், அதை அவர் வெறுத்தார். தனது தந்தை தன் சிற்றன்னைக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக, ராமன், அரசனாக ஆவதற்குரிய தனது உரிமையைத் துறந்த சமயத்தில் அத்துறவி அயோத்தியில் இருந்தார். அந்த இளம் தேவ இளவரசனுக்கும் ஜபலி முனிவருக்கும் இடையே

நிகழ்ந்த சந்திப்பையும் அவர் நேரில் பார்த்திருந்தார். கடவுள், ஆன்மா, மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை ஆகிய எதுவும் உண்மையில் கிடையாது என்றும், ஒருவன் தான் இறக்கும்வரை தனது வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவிப்பதுதான் வாழ்வில் அவனுக்கான ஒரே குறிக்கோள் என்றும் ராமனை ஒப்புக் கொள்ள வைப்பதற்கு ஜபலி முனிவர் அவனிடம் விவாதித்திருந்தார். ஆனால் தூய்மையாளனும் தன்னொழுக்க உணர்வு கொண்டவனுமான ராமன், ஜபலி கூறியதை ஏற்க மறுத்துவிட்டு, தனது இளம் மனைவியுடனும் தனது இளைய சகோதரனுடனும் காட்டிற்குச் சென்றுவிட்டான். ஆனால், ஜபலி முனிவரிடம் குருவிற்கு ஒரு பெரும் ஈர்ப்பு ஏற்பட்டது. அவர் உடனடியாக, நல்ல சம்பளத்துடன்கூடிய தனது அரசாங்க வேலையைத் துறந்துவிட்டு, ஜபலியின் சீடனாக ஆவதென்று தீர்மானித்தார். ராமனின் தந்தை தசரதன் அரசனாக இருந்திருந்தபோது, அவன் எல்லோருடைய அபிப்பிராயங்களையும் சகித்துக் கொண்டான். சாதி அமைப்புமுறையின் அபத்தத்தை மக்களுக்கு எடுத்துரைத்து, நகரில் சுதந்திரமாக உலவுவதற்கு ஜபலிக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. ஆனால் ராமனின் இன்னோர் இளைய சகோதரனான பரதன், ராமனின் பெயரில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது, சாதி அமைப்புமுறையுடன் முரண்பட்டு நின்றவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அழிக்க முற்பட்டான். மரபுசார்ந்த பழமையான கொள்கைகள் அனைத்தும் பத்திரமாக இருப்பதை அவன் உறுதி செய்தான்.

ஜபலியும் அவரது சீடர்களும் சரயு நதியின் மறுகரைக்குத் துரத்தியடிக்கப்பட்டனர். விரைவில், முரணான அபிப்பிராயங்களையும் சிந்தனைகளையும் கொண்ட மற்றவர்களும் நதியின் மறுகரையில் அடைக்கலம் புகுந்தனர். ஜபலி இறந்து போயிருந்தும்கூட, அவரது பாரம்பரியங்கள், மற்ற முரணான சிந்தனைகளோடு சேர்ந்து தொடர்ந்து உலா வந்தன. ஜபலியின் மரணத்திற்குப் பிறகு, சாதி வேறுபாடின்றி, தங்களால் எத்தனைப் பேருக்கு முடியுமோ, அத்தனைப் பேருக்குக் கல்வி கற்றுக் கொடுப்பதை அவரது சீடர்கள் ஒரு லட்சியப் பணியாக எடுத்துக் கொண்டனர். ஆனால் காலப்போக்கில், அமைப்புமுறையின் இரும்புப் பிடி இறுகியதால், கல்வியறிவு பெறுவதற்கு வெகுசிலரே துணிந்தனர். அவ்வாறு கல்வி கற்றவர்கள், இந்தியாவிலிருந்து தப்பித்து, மலைகளைக் கடந்து சீனாவிற்கும், கடல்களுக்கு அப்பாலுள்ள நாடுகளுக்கும் சென்றனர். அந்நாடுகளில் ஒருவனின் பிறப்பு முக்கியமாகக் கருதப்படவில்லை, மாறாக, அவனது தகுதிக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

சம்புகன் தன் கண்களை அகலமாகத் திறந்து வைத்துக் கொண்டு

இவை அனைத்தையும் கவனமாகச் செவிமடுத்தான். அக்கண்களில் தெரிந்த வினோதமான பிரகாசத்தைக் கண்டு நான் பயந்தேன். பிறகு, அவனது வகுப்பு முடிந்தவுடன், சரயு நதியின் குறுக்காக நான் அவனை எனது படகில் திருப்பி அழைத்துச் சென்றபோதெல்லாம், தான் ஒரு மாபெரும் கவிஞனாக ஆகவிருந்ததாகவும், தனது பார்வையாளர்களைத் தனது அபாரமான கவிதைகளால் தான் மெய்மறக்க வைக்கவிருந்ததாகவும் அவன் என்னிடம் ஆர்வமாகப் பேசினான். அந்த இளம் சிறுவன், வாழ்க்கை குறித்த நம்பிக்கைகளுடன் தளும்பிக் கொண்டிருந்தபோது, நான் பேசாமல் துடுப்புப் போட்டுக் கொண்டிருந்தேன். பிறகு ஒருநாள், வானில் கோடிக்கணக்கான விண்மீன்கள் சாட்சியாக மின்னிக் கொண்டிருக்க, வெள்ளி நிலவு தனது கரிய சுருட்டை முடியில் பிரதிபலிக்க, சம்புகன் ஓர் இனிமையான பாடலைப் பாடினான். சுதந்திரமான ஓர் உலகத்தைப் பற்றியும் நம்பிக்கை நிறைந்த ஓர் உலகத்தைப் பற்றியும் அவன் பாடினான். ஏழைகளின் குடிசைகளைத் தழுவிச் சென்று, அரண்மனைக் கோபுரங்களைச் சுற்றி வளைந்து சென்ற மென்மையான காற்றில் அவனது பாடல் கரைந்து போனது. நான் சலவைக்காரன் கிராமத்தை அடைந்தபோது, பெரும்பாலான வீடுகளில் விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தன. சம்புகன் தூங்கியிருந்தான். ஒரு கனத்த இதயத்துடன் நான் எனது படகைக் கரையில் இழுத்துக் கட்டுவிட்டு, தூங்கிக் கொண்டிருந்த அவனை, சோர்ந்து போன எனது தோளில் சுமந்து கொண்டு வீட்டை நோக்கி நடந்தேன்.



# 64

## தர்மத்தின் வாள்

பத்ரன்

நாட்கள் செல்லச் செல்ல, அச்சிறுவன் அற்புதமாக வளர்ந்தான். அவனது குரல் செழுமையடைந்தது, அவனுடைய பாடல் வரிகள் உணர்ச்சிமயமாக ஆயின. இரவில் எங்கள் படகு எங்கள் கிராமத்திற்கு வருவதற்காக மக்கள் காத்திருக்கத் துவங்கினர். எங்கள் படகிற்கு முன்பாக, சம்புகனின் பாடல்கள் எங்கள் கரையைச் சென்றடைந்தன. அங்கு கூடி அமர்ந்திருந்த மக்கள், சரயு நதியின் இருண்ட, மென்மையான சிற்றலைகளை ஏற்படுத்திக் கொண்டிருந்த நீரின் மேலாக மிதந்து வந்த அந்த இனிமையான குரலை உற்சாகமாகச் செவிமடுத்தனர். ஒவ்வோர் இரவும், பிரமிப்புடன் அமர்ந்திருந்த அக்கூட்டத்தினரின் ஊடாக நான் சம்புவை நடத்தி அழைத்துச் சென்றபோது, சில சமயங்களில் பார்வையாளர்களும் அவனோடு சேர்ந்து பாடினர், சில சமயங்களில் அவனது பாடலின் தாளத்திற்கு ஏற்ப அவர்கள் கைதட்டினர், அல்லது அவனுடன் சேர்ந்து அமைதியாக அழுதனர். அவன் சமஸ்கிருதத்தில் பாடினான், ஆனால்

அப்பாடல்களிலிருந்து வெளிப்பட்ட உணர்ச்சிகள் உலகளாவியவையாகவும், அவற்றில் எதிரொலித்த ஏக்கங்கள் மிகப் பழமையானவையாகவும் இருந்தன. அவன் பாடியதைக் கேட்ட ஒவ்வொருவரின் மனத்தையும் அவனது பாடல்கள் வெகுவாகத் தொட்டன. அவை, மக்களின் இதயங்களில் அடர்த்தியான களிமண்ணைப்போலப் படிந்திருந்த மதத்தையும் சாதியையும் வழக்கத்தையும் துளைத்துச் சென்று, அனைத்து மனிதர்களின் உள்ளார்ந்த நல்லியல்பைத் தொட்டன.

அவனது புகழ் வளர வளர, என் பயம் மேலும் மேலும் அதிகரித்தது. அவன் எங்கள் சாதியினரின் கிராமத்தைவிட்டு வெளியே போவதிலிருந்து நான் அவனைத் தடுக்க முயற்சித்தேன். வெளியே, தங்களது மேலாதிக்கத்திற்கு எந்தச் சவாலும் எழுவதை அனுமதிக்காத கடவுள்களும் அவர்கள் தேர்ந்தெடுத்த மனிதர்களும் அடங்கிய ஓர் இருண்ட, கொடூரமான உலகம் அவனை உடைத்தெறிவதற்காகக் காத்துக் கொண்டிருந்ததை நான் அவனுக்குப் புரிய வைக்க விரும்பினேன். ஆனால் சம்புகன் சுதந்திரத்தின் இனிய சுவையை ருசித்திருந்தான். பாரம்பரியம் என்ற பெயரில், தீண்டத்தகாதவர்கள் நிரம்பி வழிந்த ஒரு சீரழிந்த கிராமத்தில் அவனைக் கட்டிப் போட முடியவில்லை. வாழ்வில் எல்லாமே ஒளிமயமாகத் தோன்றிய ஒரு காலகட்டத்தில் அவன் இருந்தான். பிரம்மாண்டமான எதிர்காலத்திற்குரிய வாய்ப்புகளும் அவன் கண்முன்னே தெரிந்தன. கல்வியினால் ஏற்பட்ட ஆபத்து அதுதான். உண்மையான உலகில் உறுதியாக ஊன்றி நிற்பதற்குக் கால்கள் ஏதுமற்றக் கனவுகளுக்கு அது வித்திட்டுவிடுகிறது. வேதங்களின்படி, தீண்டத்தகாதவர்களாகிய நாங்கள் எங்களுடைய சாதிக்கான கடமைகளைத் தவிர வேறு எதையும் கற்றுக் கொள்ளக்கூடாது என்று நான் அவனுக்குப் புத்திமதி கூற முயற்சித்தேன்.

சம்புகன் மிகவும் சாமர்த்தியமானவனாக ஆகியிருந்தது அவனுக்கு நல்லதல்ல என்று எனக்குத் தோன்றியது. சம்புகனின் தலைக்குள் ஏராளமான விஷயங்களைத் திணித்து, அவனைக் குழப்பியிருந்த ஜபலியின் சீடனான அந்த பிராமணனை நான் கொல்ல விரும்பினேன். அவன் கூறிய அனைத்து விஷயங்களும் உண்மையாக இருந்தாலும்கூட, அவை ஆபத்தான உண்மைகளாகவும், தனிமையில்கூடச் சத்தமாகக் கூறப்படக்கூடாதவையாகவும் இருந்தன. அந்த பிராமணன், பொதுமக்களின் முன்னிலையில் பாடுவதற்கு என்னுடைய அப்பாவிப் பேரனுக்குக் கற்றுக் கொடுத்திருந்தான். நான் சம்புகனிடம் கெஞ்சினேன், ஆனால் அவன் பிடிவாதமாக இருந்தான்.

அவனுடைய பெற்றோரிடமும் என் மனைவியிடமும்கூட நான் கெஞ்சினேன், ஆனால் அவர்கள் அனைவரும் ஒரு கனவு உலகில் இருந்தனர். தங்களுடைய மகனின் வெற்றி குறித்து சிவனும் அரசியும் மகிழ்ச்சியாக இருந்தனர். சம்புகன் எங்கள் கிராமத்திற்கு வெளியே சென்று பாடத் துவங்கினான். அவன் சிறப்பான சொற்திறத்துடன் வேதங்களிலிருந்து மேற்கோள் காட்டினான். நாட்டுப்புறக் கதைகளையும் தர்க்கத்தையும் தனது சொற்பொழிவுடன் சேர்த்து, அதை அதிக சுவாரசியமானதாக ஆக்கினான். அவனுடைய இனிமையான குரலைக் கேட்பதற்கு மக்கள் பெருந்திரளாக வந்தனர். அவர்கள் தெருக்களில் கூடி, அவன்மீது மலர்மாரிப் பொழிந்தனர். அவன் மிகவும் பிரபலமடைந்தது அவனுக்கே ஆபத்தாக அமைந்தது.

அப்போது, தவிர்க்க முடியாத அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. அது நிகழும் என்று நான் எதிர்பார்த்திருந்ததால், அது எனக்கு அதிர்ச்சியளிக்கவில்லை. ராஜவீதியில் சென்று கொண்டிருந்த சம்புகனை, பிராமணப் பண்டிதர்கள் அடங்கிய குழு ஒன்று எதிர்கொண்டது. கீழ்ச்சாதியினர் நெடுஞ்சாலைகளை மாசுபடுத்துவதை விரும்பாதவர்கள் அவர்கள். சம்புகன் அங்கிருந்து போக மறுத்தான், அவர்களுடைய அதிகாரத்தை எதிர்த்துக் கேள்வி கேட்டான். சீற்றமடைந்த தலைமைப் பண்டிதன், தெளிவற்றச் சில சமஸ்கிருத வாசகங்களை முணுமுணுத்தான். அது சம்புகனை அச்சுறுத்தும் என்று அவன் கற்பனை செய்திருந்தான். ஆனால் தனது குரு கற்றுக் கொடுத்திருந்த அறிவால் நிரம்பி வழிந்த அச்சிறுவன், அந்த வாசகங்களின் ஏற்றுக் கொள்ளப்பட்ட அர்த்தங்களையும், அவற்றுக்குத் தான் கொடுத்திருந்த அர்த்தங்களையும் குறிப்பிட்டு, அந்தப் பண்டிதர்களுக்குச் சவால்விட்டான். இந்தச் சம்பவம் பற்றிய செய்தி என்னை வந்தடைந்து, எங்கள் குடும்பத்தினர் அனைவரும் அந்த இடத்தைச் சென்றடைவதற்குள், அங்கு நிகழ்ந்து கொண்டிருந்த வாக்குவாதத்தைக் காண்பதற்கு ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்தது. சம்புகன் தன் வாயைத் திறந்து ஓர் இனிமையான சமஸ்கிருதப் பாடலைப் பாடியபோதெல்லாம், கூட்டத்தினர் அனைவரும் கைதட்டி அவனை உற்சாகப்படுத்தினர்.

பொதுச் சாலைகளை யார் பயன்படுத்த வேண்டும், அவற்றை அவர்கள் எப்போது பயன்படுத்த வேண்டும் என்பது பற்றியும், யார் யாரைத் தொடலாம், யாரைத் தொடக்கூடாது என்பது பற்றியும், சாதி அமைப்புமுறையின் பிற சிக்கலான விதிமுறைகளைப் பற்றியும் பிராமணர்கள் கவனமாக உருவாக்கி வைத்திருந்த சட்டதிட்டங்கள் அனைத்தையும் அங்கு கூடியிருந்த கூட்டம் மறந்திருந்தது. அவர்கள்

ஒருவரோடு ஒருவர் இடித்துக் கொண்டும், பார்வை மற்றும் தொடுதலின் மூலம் ஒருவரையொருவர் மாசுபடுத்திக் கொண்டும் சம்புகன் பாடுவதைக் கேட்டனர். தனது குரு தனக்குக் கற்றுக் கொடுத்திருந்ததைப்போலவே, சடங்குகள் மற்றும் பலிகள் குறித்து அவன் கேள்வி எழுப்பினான். பிறப்பின் மூலம் ஒருவன் மேல் சாதிக்காரனாகவோ அல்லது கீழ்ச்சாதிக்காரனாகவோ வகை பிரிக்கப்படுவது குறித்து அவன் அந்த பிராமணர்களுக்குச் சவால்விட்டான். கூட்டம் இப்போது அவனை மேலும் அதிகமாக உற்சாகப்படுத்தியது.

தனது குருவின் குருவான ஜபலியைப்போல அறிவுபூர்வமாக விவாதிப்பதற்குப் பதிலாக, சம்புகன், ராஜ்யத்தின் மிக உயர்ந்த பண்டிதர்களான அந்த பிராமணர்களிடம், வேதங்களிலிருந்தும் உபநிஷத்துக்களில் இருந்தும் மேற்கோள் காட்டித் தொடர்ந்து கேள்வி கேட்டுக் கொண்டே இருந்தது, அவர்களை அதிகமாகக் கொதிப்படைய வைத்தது. அவன் வேதங்களிலிருந்து பாடல்களைப் பாடி, பிறகு பொதுமக்கள் அவற்றைப் புரிந்து கொள்வதற்காக அவர்களுடைய மொழியில் அவற்றை மொழிபெயர்த்துக் கூறினான்.

கூட்டம் பெருங்கூச்சலிட்டு அவனைக் கண்மூடித்தனமாக உற்சாகப்படுத்தியது. நேரம் செல்லச் செல்ல, நான் அதிக அசௌகரியமாக உணர்ந்தேன். தெருவில் கூடியிருந்த மக்கள் எப்போதும் கேட்க விரும்பியிருந்த, ஆனால் பயத்தில் கேட்காமல் இருந்த கேள்விகளைச் சம்புகன் இப்போது கேட்டுக் கொண்டிருந்தான். அவன் உண்மை வேண்டும் என்று கேட்டான். ஆனால், என்னுடைய வயதின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தபோது, உண்மையை நாடியவர்களுக்கு ஏற்பட்ட முடிவை நான் நன்றாக அறிந்திருந்தேன். படைவீரர்கள் அக்கூட்டத்தினரைச் சூழ்ந்ததை நான் நடுக்கத்தோடு பார்த்தேன். அப்போது கூட்டத்தினரின் மனநிலையில் ஒரு மாற்றம் ஏற்பட்டதை என்னால் உணர முடிந்தது. அவர்களுடைய கைதட்டல் மெல்ல மெல்லக் குறைந்து, இறுதியில் முற்றிலுமாக நின்று போனது. அங்கு ஒரு பெரும் இறுக்கம் நிலவியது, ஆனால் தன்னைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருந்த விஷயங்கள் குறித்து என் சம்புகனுக்கு எதுவுமே தெரியவில்லை. அங்கு கூடியிருந்த ஆயிரக்கணக்கான கோழைகளின் கனத்த மௌனத்தில், அவனுடைய இனிமையான குரல் கணீரென்று கேட்டது.

எங்கிருந்தோ ஒரு ரதம் வந்து, வேதங்களை இனிமையாகவும் சத்தமாகவும் மெய்மறந்து பாடிக் கொண்டிருந்த சம்புகன் நின்ற இடத்திற்கு அருகே இருந்த முனையில் நின்றது. அந்த ரதத்திலிருந்து

அரசன் ராமன் இறங்கினான். பண்டிதர்கள் அவனை நோக்கி ஓடிச் சென்று, அவனுடைய காதில் எதையோ கிசுகிசுத்தனர். உடனே அவனுடைய முகபாவம் மாறியது. அவன் சற்றுக் கவலையோடு காணப்பட்டான். பிறகு, வேண்டாம் என்பதுபோலத் தனது தலையை ஆட்டினான். அவன் தனது பண்டிதர்களிடம் கெஞ்சியதுபோல இருந்தது, ஆனால் கருப்பாகவும் குண்டாகவும் பானை வயிற்றுடனும் இருந்த தலைமைப் பண்டிதன், அரசனிடம் எதையோ கோபமாகக் கேட்டான். தனது பண்டிதர்கள் தன்னிடம் கூறிக் கொண்டிருந்த விஷயத்தைக் கேட்டபோது, அரசனின் தோள்கள் துவண்டன. சம்புகனை அவனது மயக்கத்திலிருந்து எழுப்புவதற்குச் செல்வதுபோல ராமன் அவனை நோக்கி முன்னால் சென்றான். கூட்டம் மூச்சுவிட மறந்து காத்திருந்தது. ஆனால் அந்த குண்டு பண்டிதன் ராமனுக்கும் சம்புகனுக்கும் இடையே தன்னை நுழைத்துக் கொண்டு, ராமனுக்குச் சம்புகனால் மாசு ஏற்படாமல் பார்த்துக் கொண்டான். அங்கு ஏதோ நடந்து கொண்டிருந்ததை உணர்ந்து கொண்ட சம்புகன், ஒருவழியாகத் தனது மயக்கத்திலிருந்து விடுபட்டான். தான் கண்ட காட்சியைக் கண்டு அவன் அதிர்ச்சியடைந்தான். பிறகு, பயத்தில் அவன் அழத் தொடங்கினான். அவனது அழுகை அங்கு நிலவிய மௌனத்தை உடைத்தது. அவன் இனியும் ஒரு மாபெரும் கவிஞனாகவோ அல்லது மக்களை மனம் நெகிழ வைத்த ஒரு பாடகனாகவோ இருக்கவில்லை. அவன் ஒரு சாதாரணமான பதினான்கு வயதுச் சிறுவனாகவும், தீண்டத்தகாத ஒருவனாகவும், ஒரு கருப்பு அசுரனாகவும், அடையாளம் அற்ற ஒருவனாகவும் அங்கு நின்றான். அவன் ராமனைப் பார்த்துவிட்டு, அவனை நன்றாகக் குனிந்து வணங்கினான். ராமன் நிராதரவாக மீண்டும் தனது பண்டிதர்களைப் பார்த்தான். அவர்கள் சம்புகனைச் சுட்டிக்காட்டிக் கோபமாக எதையோ கத்தினர்.

அரசன் தனது கையை உயர்த்தி அந்த பிராமணர்களின் வாய்களுக்குப் பூட்டுக்களைப் போட்டுவிட்டு, அச்சிறுவனிடம், "மகனே, நீ யார்?" என்று கேட்டான்.

"என் பெயர் சம்புகன். என் தந்தையின் பெயர் சிவன்," என்று அச்சிறுவன் முணுமுணுத்தான்.

"நீ எந்தச் சாதியைச் சேர்ந்தவன்?"

"எனக்கு எந்தச் சாதியும் கிடையாது. உங்களுக்கும்கூட எந்தச் சாதியும் கிடையாது," என்று கூறிவிட்டு, அவன் அரசனின் கண்களுக்குள் உற்றுப் பார்த்தான்.

"நீ தீண்டத்தகாதவன் என்பது உண்மையா?"

"நான் தீண்டத்தகாதவன் அல்ல. யாரும் தீண்டத்தகாதவர்கள்

அல்ல.”

“நீ கடவுள் நம்பிக்கை இல்லாதவனா?”

“நான் கடவுள்மீது உறுதியான நம்பிக்கை வைத்துள்ளேன். கடவுள் நம் ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கிறார். நான்தான் கடவுள். நீங்களும் கடவுள்தான்.”

“வேதங்களைக் கற்பதற்கு ஒரு சூத்திரனுக்கு யார் அனுமதி கொடுத்தது?” என்று கேட்ட ராமனுக்கு இப்போது கோபம் அதிகரித்துக் கொண்டிருந்தது.

“பறப்பதற்குப் பறவைகளுக்கு அனுமதி தேவையா? மீன்கள் யாருடைய கட்டளையைக் கேட்டு நீந்துகின்றன? பறவைகளுக்குப் பறத்தல்போல, மீன்களுக்கு நீச்சல்போல, மனிதனுக்குக் கற்றுக் கொள்ளுதல்.”

“அகங்காரம் பிடித்த மூடனே! தங்களுடைய சாதி தர்மத்தை மீறும் அளவுக்கு அகங்காரம் கொண்ட தாழ்ந்த சாதியினருக்கு எங்கள் ராஜ்யத்தில் என்ன தண்டனை வழங்கப்படுகிறது என்று உனக்குத் தெரியுமா?” என்று அந்தத் தலைமைப் பண்டிதன் சம்புகனைப் பார்த்துக் குரைத்தான்.

ராமன் தனது பண்டிதர்களைப் பார்த்துத் தன் பார்வையால் கெஞ்சினான். இலங்கையில் நெருப்பால் தனது மனைவியின் தூய்மை பரிசோதிக்கப்பட்டபோது அவனது முகத்தில் தென்பட்டிருந்த அதே பார்வைதான் இப்போதும் அவனுடைய முகத்தில் காணப்பட்டது. அச்சிறுவன் கூறியிருந்தது சரி என்பதை அவன் அறிந்திருந்தான். கூட்டத்தினரின் முணுமுணுப்பையும் கடந்து மேலெழுந்த, நெஞ்சை உருக்கிய பாடலைப் பாடிய அச்சிறுவனின்மீது ராமனுக்கு ஏற்பட்டப் பச்சாதாபத்தை அவனது கண்கள் மறைக்க முயற்சித்தன. அவன் மீண்டும் தனது பண்டிதர்களைப் பார்த்தான்.

ராமனின் தலைமைப் பண்டிதன் கேட்டக் கேள்விக்கு விடையாக, சம்புகன், ஏதோ ஓர் உபநிஷத்திலிருந்து இன்னொரு சமஸ்கிருதப் பாடலைப் பாடினான். ‘மரணம் என்பது ஆன்மாவின் ஒரு தற்காலிக முகவரி மாற்றமே தவிர வேறெதுவும் இல்லை; தனது ஆடைகள் பழையனவாக ஆனபோதும் கிழிந்து போனபோதும் எவ்வாறு ஒருவன் புதிய ஆடைகளை வாங்கினானோ, அதேபோல, ஆன்மாவும் ஒரு புதிய உடலைத் தேடியது’ என்று அந்தப் பாடலில் கூறப்பட்டிருந்தது. இப்படிப்பட்ட அபத்தங்களை என் பேரனுக்குக் கற்றுக் கொடுத்திருந்த அந்த குருவிடம் நான் நிச்சயமாக ஒரு வார்த்தைப் பேசியிருந்திருக்க வேண்டும். மரணம்தான் ஒருவனுடைய முடிவு; நீங்கள் இறந்து போனவுடன் உங்கள் உடல் அழுகி மண்ணில் கரைந்து போகும் என்பன

போன்ற எளிய விஷயங்களை மக்கள் எப்போது கற்றுக் கொள்வார்கள்?

அந்தத் தலைமைப் பண்டிதன் இப்போது தன் குரலை உயர்த்திக் கொண்டு, கூட்டத்தினரைப் பார்த்து, "அகங்காரம் பிடித்தத் தீண்டத்தகாதவனான இந்தச் சூத்திரன், சாதி விதிகளில் மிக முக்கியமான விதியை மீறியுள்ளான். இந்தச் சூத்திரன் துணிச்சலாகக் கல்வியறிவு பெற்றதோடு மட்டுமல்லாமல், புனித வேதங்களைப் படிப்பதுவரை சென்றுள்ளான். புனித நூல்களில் எழுதப்பட்டுள்ளவற்றுக்கு அவன் தவறான அர்த்தங்களைக் கற்பித்துக் கொண்டிருக்கிறான். இப்படிப்பட்ட ஆணவக்காரர்களுக்கு ஒரே ஒரு முடிவு மட்டுமே காத்திருக்கிறது," என்று கூறினான்.

பிறகு அவன் ராமனைப் பார்த்தான். தனக்குச் சரி என்று தோன்றியதைத் தான் கூறிவிட்டிருப்பதாகவும், இனி நடவடிக்கை எடுக்க வேண்டிய பொறுப்பு மற்றவர்களுடையது என்பதுபோலவும் இருந்தது அவனது பார்வை. கூட்டத்தினரிடையே ஒரு நடுக்கம் பரவியது. ராமனின் வீரர்கள் தங்கள் வாள்களை உருவிக் கொண்டு, ஈட்டிகளைக் கூட்டத்தினரை நோக்கி நீட்டிக் கொண்டு, கூட்டத்தினரை நெருக்கமாகச் சூழ்ந்தனர். எவனேனும் முட்டாள்தனமாக அங்கிருந்து அசைவதற்காக அவர்கள் காத்துக் கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. அந்தக் கனத்த அமைதிக்கு முத்தாய்ப்பாக ஒரு காகம் கரைந்தது. அடுத்து நிகழவிருந்தது குறித்து நான் சிந்தித்தபோது, என் ஒட்டுமொத்த உடலும் நடுங்கியது. சம்புகனின் கன்னங்கள் அவனுடைய கண்ணீரால் ஈரமாகியிருந்தன. அவனுடைய சூதுவாதற்ற முகம், தன்னால் இயன்ற அளவுக்குச் சிறப்பாக முயற்சித்தும் தோற்றுப் போயிருந்த ஒருவனுடைய முகத்தை ஒத்திருந்தது. அவன் தன் வயதுக்கு மீறிக் களைப்பாகத் தெரிந்தான். தூரத்தில் சில பெண்மணிகள் துணிகளை அடித்துத் துவைத்துக் கொண்டிருந்த சத்தம் எனக்குக் கேட்டது. அவர்கள் அடித்துத் துவைத்தச் சத்தம் பதினான்காவது முறையாக எனக்குக் கேட்டபோது, ராமன் தன் வாளை உருவி, என் பேரனின் தலையை வெட்டிச் சாய்த்தான்.

நாடகம் முடிந்துவிட்டது. கூட்டத்தினர் அங்கிருந்து கலைந்து தமது வீடுகளை நோக்கிச் சென்றனர். அவர்களில் சிலர், ஒருவருக்கொருவர் உற்சாகமாகப் பேசிக் கொண்டு சென்றனர். மற்றவர்கள், எதுவுமே நிகழ்ந்திராததுபோலத் தமது வேலையைப் பார்த்துக் கொண்டு சென்றனர். தலையின்றிக் கிடந்த சம்புகனின் உடலை நோக்கி நான் விரைந்தேன். ராமனின் ரதம் எங்களைக் கடந்து விரைவாகச் சென்றதில், கலைந்து கொண்டிருந்த கூட்டத்தினர் இரண்டு பக்கங்களாகப் பிரிந்தனர். தனது அரண்மனையை நோக்கித் தப்பி ஓடிக் கொண்டிருந்த அரசன் எந்தக் குறுக்கீடும் இன்றிச் செல்வதற்கு வழி ஏற்படுத்திக் கொடுப்பதற்காக, வீரர்கள், ஆண்களையும் பெண்களையும் ஓரமாகத் தள்ளினர். அந்த ரதத்திற்கு முன்னால் பாய்ந்து, ஒய்யாரமாக அமர்ந்திருந்த அந்த அரசனைக் கீழே இழுத்துத் தள்ளி, மண்ணில் அவனைத் தரதரவென்று இழுத்துச் சென்று, என் பேரனின் தலையைக் கொய்ததால் ரத்தக்கறை படிந்திருந்த அவனுடைய வாளை உருவி அவனுடைய இதயத்திற்குள் ஆழமாகச் செருக வேண்டும் என்ற வெறி எனக்குள் எழுந்தது. ஆனால், அப்படி எதுவும் செய்யாமல், என் சொந்தத் துயரத்தில் என்னை மூழ்கடித்துக் கொண்டு, தனது ரதத்தில் வேகமாகக் காணாமல் போய்க் கொண்டிருந்த அந்த மனிதனை வாய் பிளந்தபடி பார்த்துக் கொண்டும் அழுது கொண்டும் நான் நின்றேன்.

புழுதியைக் கிளப்பியபடி போய்க் கொண்டிருந்த அந்த ரதத்தைப் பார்த்தபடி நான் நின்றபோது, அந்த ரதம் திடீரென்று இடது பக்கமாகத் திரும்பி நின்றுவிட்டது. வீரர்கள் அந்த ரதத்தை நோக்கி ஓடினர். அங்கு ஒரு குழப்பம் உருவானது. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்று பார்ப்பதற்காக நான் என்னை அங்கு இழுத்துச் சென்றேன். ஒரு கணம், ராமன் கொல்லப்பட்டிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன். ஆனால் அப்படிப்பட்ட இயல்பான நியாயங்கள், லட்சியவாதிகளின் கற்பனைகளில் மட்டுமே நடந்தேறின என்ற உண்மையை வருத்தத்தோடு நான் நினைவுகூர்ந்தேன்.

மிகுந்த துயரத்தோடும் உளக்கொதிப்போடும் இருந்த அரசிக்கும் மாலாவுக்கும் முன்னால் ராமன் சிலையாக நின்றான். அவன் தடுமாற்றத்தோடும் கோபத்தோடும் இருந்தது அவனது முகத்தில் நன்றாக எழுதி ஒட்டப்பட்டிருந்தது. அரசியும் மாலாவும் ராமனின் பாதையை மறித்திருந்தனர். அரசி தன் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு அலறினாள். மாலா தன் நெஞ்சில் வேகமாக அடித்துக் கொண்டு அழுதாள்.

“நீ ஏன் என் மகனைக் கொன்றாய்? நீ எதைக் கண்டு பயந்தாய்? நீ .

. .”

கடவுளின் வழியிலிருந்து அப்பெண்களை விலக்கித் தள்ளுவதற்காக வீரர்கள் அங்கு விரைந்து வந்தனர். ஆனால் ராமன் தன் கையசைப்பின் மூலம் அவர்களைத் தடுத்து நிறுத்தினான். “அம்மா, உங்கள் மகன் இந்த நாட்டின் புனித விதிகளை மீறினான். இந்நாட்டின் அரசன் என்ற முறையில், தர்மத்தை நான் பாதுகாக்க வேண்டியிருந்தது,” என்று ராமன் அரசியிடம் கூறினான்.

அரசி தரையில் காறி உமிழ்ந்துவிட்டு, அரசனைப் பார்த்து, “புனித விதிகள் . . . தர்மம் . . . ஒரு சிறுவனைக் கொலை செய்வதன் மூலம் அவனிடமிருந்து உன் தர்மம் பாதுகாக்கப்பட வேண்டும் என்றால், ஒரு சிறு குழந்தை கூறிய ஒருசில சமஸ்கிருத வார்த்தைகளைக் கண்டு உன் தர்மம் பயப்படுகிறது என்றால், உன்னால் சிந்திக்க முடிந்தால், நீ எப்படிப்பட்ட தர்மத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறாய் என்பதை நினைத்துப் பார். உன்னைக் கட்டுப்படுத்துகின்ற கடிவாளம் யாருடைய கைகளில் இருக்கிறது என்று யோசித்துப் பார் . . .” என்று கத்தினாள்.

ராமன் வாயடைத்து நின்றான். யாருமே சிந்திக்கக்கூடத் துணிந்திராத கேள்விகளைத் துணிச்சலாகக் கேட்டுக் கொண்டிருந்த அந்தக் கருப்புப் பெண்மணியை ராமனின் பிராமணப் பண்டிதர்கள் கோபத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். நான் அந்த இடத்தை நோக்கி விரைந்தேன், ஆனால் நான் அங்கு சென்றடைவதற்குள், வீரர்கள் அவ்விரு பெண்மணிகளையும் அங்கிருந்து இழுத்துச் சென்றிருந்தனர். அவ்வீரர்கள் அரசியின் தலைமுடியைப் பிடித்து அவளை அத்தெருவின் வழியாக இழுத்துச் சென்றபோது, தனது ஒரே மகனைப் பறி கொடுத்திருந்த ஓர் ஆதரவற்றத் தாயின் சீற்றத்தோடு, ராமனை அவள் சபித்தாள். “ராமா, நீ செய்துள்ள இந்தக் காரியத்திற்கு நீ ஒருநாள் பதில் சொல்லத்தான் போகிறாய். ஆதரவற்றவர்களையும் ஏழைகளையும் பலவீனமானவர்களையும் பெண்களையும் புழுக்களைப்போல நடத்துகின்ற சில வேதங்களில் நீ நிபுணத்துவம் பெற்றவனாக இருக்கலாம், ஆனால் என் வார்த்தைகளைக் குறித்துக் கொள் . . . மகிழ்ச்சி என்றால் என்னவென்று இனி நீ ஒருபோதும் அறிய மாட்டாய் . . . ஒருபோதும் அறிய மாட்டாய் . . . இந்த சமஸ்கிருத வாசகங்களைவிட மிகப் பெரிய, மிக வலிமையான ஒரு தர்மம் இருக்கிறது . . . இயற்கை உலகின் விதி அது . . . அந்த தர்மம் உன்னைத் துரத்தி வரும் . . .” அவள் தொடர்ந்து கத்திக் கொண்டிருந்தாள். ஆனால் அரசனிடமிருந்து அவளை அவனது வீரர்கள் இழுத்துச் சென்றபோது, அவளது குரல் மெல்ல மெல்லத் தேய்ந்து, பிறகு ஒரேயடியாக மறைந்தது.

கூட்டம் இந்த நாடகத்தை வாய் பிளந்தபடி மகிழ்ச்சியாகப் பார்த்து ரசித்தது. இதைப் பற்றி அவர்கள் நெடுங்காலம் பேசப் போவது உறுதி. நான் ராமனின் ரதத்தை அடைவதற்கு முன்பு, அந்தக் குதிரைகளின் முதுகுகளின்மீது சாட்டையடிகள் ஒரு வன்மத்தோடு விழுந்தது என் காதுகளில் விழுந்தது. பிறகு அந்த ரதம் அரண்மனையை நோக்கி விரைந்தது. அது ஏற்படுத்திய புழுதியில் நான் இருமிக் கொண்டும் மூச்சுத்திணறிக் கொண்டும் நின்றேன். நான் முற்றிலுமாக வியர்வையில் நனைந்திருந்தேன். எங்களை நசுக்கிக் கொண்டிருந்த தர்மத்தின் சுமையால் கூன் விழுந்து நின்றேன். கூட்டம் மெல்ல மெல்லக் கரைந்தது. புழுதி படர்ந்த அந்த நிலத்தின்மீது விழுந்து, நான் என் பேரனுக்காகவும் அவனுடைய பெற்றோருக்காகவும் அதிகாயனுக்காகவும் நெடுநேரம் அழுதேன். எல்லாவற்றையும்விட மேலாக, என்னுடைய கேடுகெட்ட நாட்டிற்காக நான் அழுதேன். நிலத்திலிருந்த மண்ணை நான் என் இரண்டு கைகளிலும் அள்ளிக் கொண்டு, "பூமித் தாயே, நீ உருவாக்குகின்ற ஆட்சியாளர்களுக்காக நீ அழ வேண்டும் . . . அதைவிட மோசம் . . . நீ வளர்த்தெடுக்கின்ற மனிதர்களுக்காக நீ அழ வேண்டும் . . ." என்று உரத்தக் குரலில் கத்தினேன்.

யாரோ என்னை என் விலாவில் எட்டி மிதித்தனர். நான் எழுந்திருக்க முயற்சித்தேன், ஆனால் அவன் மீண்டும் என்னை எட்டி உதைத்து, அருகிலிருந்த திறந்த சாக்கடைக்குள் தள்ளிவிட்டு, "மூர்க்கனே, குடிகார முட்டாளே, சிறிது தவறியிருந்தால் நான் உன்மீது என் வண்டியை ஏற்றிச் சென்றிருப்பேன். தற்கொலை செய்து கொள்வதற்கு உனக்கு என் வண்டிதானா கிடைத்தது? கீழ்ச்சாதிக் கயவனே," என்று கத்தினான். இன்னும் அதிகப் பணத்தைச் சம்பாதிப்பதற்காகச் சந்தையை நோக்கி விரைந்து கொண்டிருந்த ஒரு வணிகன் அவன். நான் அவனது வழியில் குறுக்கே கிடந்து எனது நாட்டைச் சீர்திருத்த முயற்சித்துக் கொண்டிருந்தேன். அவன் ஒரு பொருத்தமான இடத்தில்தான் என்னை உதைத்துத் தள்ளியிருந்தான் . . . துர்நாற்றம் வீசிய சாக்கடை! நான் அதில் கிடந்தபடியே, நடந்து முடிந்திருந்த எதைப் பற்றியும் கவலைப்படாமல் தன் போக்கில் இயங்கிக் கொண்டிருந்த உலகத்தைப் பார்த்தேன். சம்புகனின் உடலை எரிப்பதற்காக, அவனது உடல் எங்கள் கிராமத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டதையும் நான் பார்த்தேன்.

அரண்மனையிலும் மேன்மக்கள் மற்றும் பணக்காரர்களின் வீடுகளிலும் கொண்டாட்டங்கள் முடிந்து, நான் என் சிறிய குடிசையை அடைந்தபோது நள்ளிரவு தாண்டியிருந்தது. என் பேரன் சம்புகன் ஒரு

பாடலைப் பாடியவாறே என்னை நோக்கி வந்து கொண்டிருந்ததுபோல நான் ஒரு கணம் கற்பனை செய்தேன். ஆனால், அவன்தான் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக ஒரு சூனிய உலகிற்குள் சென்றுவிட்டானே! ஒருவேளை, அவன் தனது அடுத்தப் பிறவியில் ஓர் உயர்ச்சாதிச் சிறுவனாகப் பிறந்து, கருப்பர்களின் வயிற்றில் பிறந்த மற்றவர்களைச் சித்தரவதை செய்யக்கூடும். அந்த எண்ணம் ஒரு விதத்தில் இதமளிப்பதாக இருந்தது. வீட்டிற்குள் நுழைவதற்கு எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை. எனவே, நதியை நோக்கி நடந்து சென்று, கீழே விழுந்து கிடந்த ஒரு மரத்தின் அடியில் போய்ப் படுத்துக் கொண்டேன்.

நான் தூக்கம் வராமல் புரண்டேன். ஓர் இதமான காற்று, சரயு நதியின் இருண்ட நீரின் குறுக்காகச் சுமந்து வந்த ஒரு பாடல் லேசாக என் காதுகளில் விழுந்தது. சூதுவாதற்ற எவனோ ஒரு முட்டாள், எல்லையற்ற ஓர் உலகத்தைப் பற்றியும், யுத்தங்களற்ற ஓர் எதிர்காலத்தைப் பற்றியும், பாரபட்சமற்ற ஒரு சமுதாயத்தைப் பற்றியும், இன்னும் பல அபத்தமான விஷயங்களைப் பற்றியும் பாடிக் கொண்டிருந்தான். அந்த முட்டாள், சம்புகனின் பிராமண குருவாக இருக்கக்கூடும். இனிமேல் எந்த அப்பாவிகளும் சாத்தியமற்ற இத்தகைய கனவுகளால் மதி மயங்கிப் போகாமல் இருப்பதற்கும், அர்த்தமின்றித் தங்களுடைய பொன்னான வாழ்க்கையைத் தியாகம் செய்யாமல் இருப்பதற்கும், யாரேனும் சம்புகனின் குருவைக் கழுத்தை நெறித்துக் கொன்றால் நன்றாக இருக்கும் என்று நான் நினைத்தேன். உலகிலுள்ள லட்சியவாதிகளிடமிருந்து யாராலும் தப்பிக்க முடியாது. அவர்கள் எலிகளைப் போலப் பெருகி, ஒரு நோய்த்தொற்றைப் போல இவ்வுலகை ஆட்கொள்கின்றனர். அவர்கள் இறக்கும்போது, இன்னும் பல உயிர்களையும் அவர்கள் தங்களுடன் எடுத்துச் சென்றுவிடுகின்றனர். என் எரிச்சலை அதிகப்படுத்தும் விதத்தில், காற்றில் மிதந்து வந்த அந்தப் பாடலின் சத்தம் அதிகரித்தது. சமத்துவத்தைப் பற்றிய முட்டாள்தனமான விஷயங்களை அது எடுத்துரைத்ததை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாமல் போனபோது, என்னைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருந்தவற்றை மறப்பதற்காக, நான் என் குடிசைக்குள் சென்று, அதன் ஆழமான இருட்டை ஆரத் தழுவினேன்.



# 65

## துவக்கம்

பத்ரன்

நான் இவ்வருடத்தின் பெரும்பகுதியை நடப்பதில் கழித்திருந்தேன், ஆனால் நான் பிறந்த கிராமத்தைச் சென்றடைவதற்கு நான் கடக்க வேண்டிய தூரம் மைல் கணக்கில் இருந்தது. பலப்பல வருடங்களுக்கு முன்பு, ஒரு புதிய உலகை எங்களுக்கு உருவாக்கிக் கொடுப்பதாக எங்களுக்கு வாக்களித்த ஓர் இளைஞனுடன் நான் என் பயணத்தைத் துவக்கியிருந்தேன். அவன் எங்களுக்கு நம்பிக்கையைக் கொடுத்து, எங்கள் இதயத்தைப் புதிய ஏக்கங்களால் நிரப்பினான். அவன் ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கி, பிறகு அதை இழந்தான். துணிந்து படையெடுத்து, வெற்றி பெற்று, பிறகு அதை இழந்த ஏராளமானவர்களோடு இப்போது அவனும் சேர்ந்து கொண்டுவிட்டான். அவனது சாதனைகளுக்காக நான் எனது இளமையைத் தியாகம் செய்தேன். ராவணனைப் போன்ற ஒருவனின் தேனொழுகும் பேச்சைக் கேட்டு அவனது கூற்றுக்கு ஆடும் அளவுக்கு நான் எளிதில் ஏமாற்றப்படக்கூடியவனாக இருந்தேன். பின்னாளில்

நான் என் அப்பாவித்தனத்தைத் தொலைத்து, வாழ்க்கை எனக்குப் பல பாடங்களைக் கற்றுக் கொடுத்திருந்தபோது, இலங்கை மண்ணில் நான் இழந்திருந்த அனைத்தையும் அங்கேயே புதைத்துவிட்டு, என்னிடம் மிச்சமிருந்ததை ஒரு சிறிய மூட்டையாகக் கட்டிக் கொண்டு, துணிச்சலுடன் மீண்டும் ஒரு புதிய முயற்சியில் இறங்கினேன். நான் விரும்பாத ஓர் இடத்திற்கு நான் வந்து சேர்ந்திருந்தாலும், மீண்டும் என் வாழ்க்கையைத் துவக்கினேன். கடவுள்களும் அவர்களுடைய திடீர் மனமாற்றங்களும் இல்லாமல் இப்புவியில் ஏது வாழ்க்கை? கடவுள்களின் கைகள் எனது சிறிய வாழ்க்கையைப் பிடித்து உலுக்கி, பிறகு அதிலிருந்த கடைசிச் சொட்டு ரத்தம் வெளியேறும் வரை அதைக் கசக்கிப் பிழிந்தன.

சம்புகனின் மரணத்திற்குப் பிறகு, அயோத்தியில் வாழ்வது ஒரு நரகமாக ஆனது. சிவன் தனது துயரங்களைச் சாராயத்தில் மூழ்கடிக்க முயற்சித்தான். தங்களுடைய கூட்டுக் கனவுகள் சிதறும்போது, குடும்பங்களில் பிளவுகள் ஏற்படுவதுபோல, அவனுடைய குடும்பத்திலும் விரிசல் விழுந்தது. பெரும்பாலான நாட்களில் நானும் அவனோடு சேர்ந்து குடித்துவிட்டுப் பிரச்சனையை ஏற்படுத்தினேன். ஒரு குழந்தையின் மரணம் குறித்த துக்கத்தைச் சாக்குப்போக்காக வைத்து நாங்கள் குடிக்கத் துவங்கினோம், ஆனால் அதுவே எங்களுக்கு நிரந்தரமாகிவிட்டது. நானும் சிவனும் நன்றாகக் குடித்துவிட்டு, எங்களுடைய விரக்திகளையும் வெறுப்புகளையும் எங்கள் வீட்டுப் பெண்கள்மீது காட்டினோம். நாங்கள் ஈவு இரக்கமின்றி எங்கள் மனைவியரை அடித்துத் துன்புறுத்தினோம். அண்டைவீட்டார் அனைவரும் கூடி அதை வேடிக்கைப் பார்த்துவிட்டு, ஆளுக்கொரு விதமாக மோசமாகப் பேசினர். ஒரு சமயம் நான் இதேபோலக் குடிபோதையில் இருந்தபோது நடந்த ஒரு விஷயம், வரலாற்றையே மாற்றி அமைத்தது. நான் அளவுக்கதிகமாகக் குடித்தபோதெல்லாம் என் மனைவி என்னைத் தாக்கினாள். எங்கள் குடியிருப்பில் இருந்த அனைவரும் இதை ரசித்ததை நான் அறிந்தேன். இத்தனை நாட்களாக அவளால் நான் அனுபவித்திருந்த அவமானத்திற்கு நான் அவளைப் பழி வாங்க விரும்பினேன். ஒருநாள், நான் அவ்வளவாகக் குடித்திருக்காத ஒரு சமயத்தில், அவள் மீண்டும் தன் கை வரிசையைத் துவக்கினாள். அப்போது நான் அவளை எட்டி உதைத்துக் கீழே தள்ளினேன். ஒட்டுமொத்த உலகத்திற்கும் கேட்கும் விதத்தில் நான் அவளுடைய கடந்தகாலம் முழுவதையும் உரத்தக் குரலில் ஒப்பித்து, அவளைப் பார்த்துக் கத்தினேன். இலங்கையில் அவள் ஒரு விபச்சாரியாக இருந்தது, அவளுடைய கடந்தகாலக் காதலர்கள், ராவணன் அவளைக்

கற்பழித்தது ஆகிய அனைத்தையும் நான் வெளிப்படையாகக் கூறியதைத் தங்கள் வாய்களில் எச்சில் ஒழுகியபடி என் அண்டைவீட்டார் அனைவரும் கேட்டனர். நான் அவளை என் வீட்டிற்கு வெளியே இழுத்து வந்து, தெருவிற்குள் தள்ளினேன். தங்கள் விருப்பம்போல் மனைவியரை மாற்றிய உயர்ச்சாதியில் நான் பிறக்காததால், ராவணனைப்போலவோ அல்லது ராமனைப்போலவோ, கறைபட்ட ஒரு மனைவியை நான் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை என்று அவளிடம் கத்தினேன். நான் என் நெஞ்சிலடித்துக் கொண்டு, நல்லொழுக்கநெறியையும் கௌரவத்தையும் மிகவும் உயர்வாக மதித்த ஒரு நல்ல நடுத்தர வர்க்கத்துக் குடும்பத்தைச் சேர்ந்தவன் நான் என்று அவளிடம் கத்தினேன். என்னைச் சுற்றி எழுந்த ஏளனச் சிரிப்பைப் பொருட்படுத்தாமல், அலறிக் கொண்டிருந்த என் மனைவியை நான் மீண்டும் எட்டி மிதித்தேன். பிறகு, இன்னொரு சுற்று போதையேற்றிக் கொள்வதற்காக மதுவிடுதியை நோக்கி நடந்தேன்.

இரண்டு மணிநேரத்திற்குப் பிறகு, ராமனின் காவலர்களால் நான் கைது செய்யப்பட்டேன். அவர்கள் என்னை அரண்மனைக்கு இழுத்துச் சென்றபோது நான் பயந்து நடுங்கினேன். தனது அரியணையில் பெரும் புகழோடு வீற்றிருந்த ராமனின் முன்னால் அவர்கள் என்னைக் கொண்டு நிறுத்தினர். என்னையும் அறியாமல் வேதத்தின் எந்தக் குறிப்பிட்ட விதிகளை நான் மீறியிருந்தேன் என்பதையும், எனக்காக என்ன தண்டனை காத்திருந்தது என்பதையும் அறியாமல் நான் தவித்தேன். என் மூக்கு கிட்டத்தட்ட நிலத்தைத் தொடுமளவுக்கு நான் நன்றாக வளைந்து குனிந்தேன். ஒரு காவலாளி என்னை இடித்து, அரசனைப் பார்த்து நிற்கும்படி என்னிடம் கூறினான்.

ராமன் என்னைக் கோபத்தோடு பார்த்துவிட்டு, என்னை விசாரிக்குமாறு தனது மந்திரிகளில் ஒருவனிடம் சைகை காட்டினான். சம்புகனின் விஷயத்தில் தலையிட்ட அதே குண்டு பிராமணன் சிறிது முன்னால் வந்து, ஒரு தீண்டத்தகாதவனிடமிருந்து எவ்வளவு தூரத்தில் நிற்க வேண்டுமோ, சரியாக அந்த தூரத்தில் நின்றான். பிறகு, நான் குடித்துவிட்டு ராமனைப் பற்றி என்ன பேசினேன் என்று அவன் என்னிடம் கேட்டான். அரசன் தொடர்பான எதையும் நான் மறுத்தேன், ஆனால் அவர்கள் எனக்குக் கொடுத்த அழுத்தத்தை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. ராமனின் முன்னால் ராவணனின் பெயரைச் சொல்ல எனக்குத் துணிச்சல் இருக்கவில்லை. எனவே, தன் மனைவியின் கற்பு சந்தேகத்திற்கிடமாகி இருந்தும்கூட, அவளை ஏற்றுக் கொள்வதற்கு ராமனுக்கு இருந்த பெரிய மனம் எனக்கு இருக்கவில்லை என்று நான் கூறியதாக அவர்களிடம் தெரிவித்தேன். அது ஒரு

திரிக்கப்பட்ட உண்மை, ஆனால் அந்தச் சூழ்நிலையில் எனக்கு அதைத் தவிர வேறு எதுவும் தோன்றவில்லை. அரசவை அமைதியில் மூழ்கியது. ராமனின் முகம் அவமானத்தால் சிவந்தது.

எனக்கு எந்தத் தண்டனையும் கொடுக்காமல் அவர்கள் என்னை விடுவித்தது எனக்கு ஆச்சரியமூட்டியது. நான் அரசவையைவிட்டு வெளியேறியபோது, ஒட்டுமொத்த உலகத்தின் எதிர்காலம் ஒரே ஒரு சலவைக்காரன் தனது குடிபோதையில் உளறிய ஒரு விஷயத்தைச் சார்ந்திருந்ததைப்போல, ராமனின் அமைச்சரவை உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஏதோ தீவிர உரையாடலில் ஈடுபட்டனர். ராவணனின் புஷ்பக விமானம் வைக்கப்பட்டிருந்த கோவிலை நான் அடைந்தபோது ஒரு மணிநேரம் கடந்திருந்தது. மக்கள் அந்தப் புஷ்பக விமானத்தின் முன்னால் மரியாதையோடு பணிந்து வணங்கிய காட்சியை நான் கண்டுகளித்துக் கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு ரதம் வேகமாக என்னைக் கடந்து சென்றது. மிகுந்த கவலையோடும் வருத்தத்தோடும் இருந்த சீதை, அந்த ரதத்தின் பின் இருக்கையில் அமர்ந்திருந்தாள். கோபமாகத் தோன்றிய லட்சுமணன், தனது குதிரைகளைத் தனது சாட்டையால் கொடூரமாக விளாசினான். நான் அப்போது அதைப் பற்றிப் பெரிதாக எதுவும் சிந்திக்கவில்லை. இன்னொரு சுற்றுக் குடிப்பதற்காக எனது வழக்கமான மதுவகத்தை நோக்கி நான் நடந்தேன். நான் என் வீட்டிற்குச் சென்றவுடன், அரச குடும்பத்தை நாங்கள் சீர்குலைத்திருந்ததாக எங்கள் அண்டைவிட்டார் அனைவரும் என்மீதும் மாலாவின்மீதும் பழி சுமத்தியபோதுதான், குடிபோதையில் நான் ராமனைப் பற்றியும் சீதையைப் பற்றியும் குறிபிட்டிருந்த விஷயம் எத்தனைத் தொடர்விளைவுகளை முடுக்கிவிட்டிருந்தது என்பதை நான் தெரிந்து கொண்டேன். சீதை அசுத்தமானவள் என்றும், தனது கற்பை நிரூபிப்பதற்காக இலங்கையில் அவள் எத்தனைப் பரிசோதனைகளை மேற்கொண்டிருந்தாலும் சரி, அல்லது எந்தத் தவத்தைச் செய்திருந்தாலும் சரி, அயோத்தியில் அவை செல்லுபடியாகாது என்றும் அந்த வேத பண்டிதர்கள் தீர்மானித்திருந்தனர். கறைபடியாத தனது வாழ்க்கையிலிருந்து அந்தச் சிறிய புள்ளியைத் துடைத்தெறிந்துவிடுமாறு அவர்கள் ராமனுக்கு அறிவுறுத்தினர். எனவே, கருவுற்றிருந்த தனது மனைவியைக் காட்டிற்கு அனுப்புவதென்று ராமன் தீர்மானித்தான். அரசனின் மனைவி, சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவளாக இருக்க வேண்டும் என்று கூறப்பட்டது. அவர்களின் தர்க்க வாதம் வினோதமான வழிகளில் வேலை செய்தது. அரசன் எப்போதும்போலவே இப்போதும் தனது குடிமக்களின் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டிருந்ததாக,

அரண்மனையில் இருந்த புல்லுருவிகள் முழங்கினர்.

வாழ்க்கை நாளுக்கு நாள் துயரம் மிக்கதாகவும் அவலமானதாகவும் ஆகியது. எங்களுடைய குடும்பச் சூழ்நிலை தொடர்ந்து சீரழிந்து கொண்டிருந்தது. நாங்கள் எங்கள் சாதியிலிருந்து கிட்டத்தட்ட ஒதுக்கி வைக்கப்பட்டோம். எங்களுக்கு வந்த சலவை வேலையும் குறைந்து கொண்டே போனது. எங்களுக்குக் கிடைத்தக் கொஞ்சநஞ்சப் பணத்தையும் நானும் சிவனும் சாராயத்தில் கரைத்தோம். எங்கள் வீட்டுப் பெண்கள் துன்புற்றனர், பெரும்பாலான சமயங்களில் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தனர், ஆனால் நாங்கள் அதைக் கண்டுகொள்ளவில்லை. எங்கள் வாழ்க்கை நாளுக்கு நாள் ஒளியிழந்து கொண்டே போனது. இப்படியே பத்து வருடங்கள் கழிந்தன.

அப்போது ஒருநாள், ஒட்டுமொத்த இந்தியாவிலும் தனது அதிகாரத்தைப் பிரகடனம் செய்ய வேண்டும் என்று அரசன் ராமன் நினைத்தான். அசுவமேத யாகம் ஒன்றை நடத்துமாறு அவனுடைய ஆலோசனையாளர்கள் அவனுக்கு அறிவுறுத்தினர். அதன்படி, சுதந்திரமாக அலைந்து திரிவதற்கு அவர்கள் ஒரு குதிரையை அவிழ்த்துவிடுவர். அந்தக் குதிரை சென்ற இடம் அனைத்தும் அரசனுக்குச் சொந்தமாகிவிடும். அதை எதிர்த்தவர்கள், ராமனோடு சண்டையிட்டு அவனைத் தோற்கடிக்க வேண்டும். அயோத்தியைச் சுற்றி இருந்த பல சிறிய ராஜ்யங்களுடன் பல சண்டைகள் நிகழ்ந்தன. இறுதியில், தன்னை விஷ்ணுவின் அவதாரமாக நிலைப்படுத்துவதில் ராமன் வெற்றி பெற்றதால், அவர்கள் ஒவ்வொருவரும் அவனிடம் சரணடைந்தனர். ராமனின் குதிரை, அருகிலிருந்த ஒரு காட்டிற்குள் நுழைந்தபோதுதான், அரண்மனை அரசியலின் கேலிக்கூத்து வெளிச்சத்திற்கு வந்தது.

அக்குதிரையை இரண்டு சிறுவர்கள் தடுத்து நிறுத்தினர். அயோத்தியிலிருந்து நாடு கடத்தப்பட்ட சீதை, காட்டில் வைத்துப் பெற்றெடுத்த இரட்டையர்கள்தான் அவர்கள். எல்லோரும் அதை அறிந்திருந்தனர். அந்த இரட்டையர்களை யாராலும் வெல்ல முடியாது என்று அவர்கள் முழங்கினர். இதைக் கேள்விப்பட்டு மகிழ்ச்சியடைந்த அரசன், அச்சிறுவர்களைச் சந்திப்பதற்குத் தானே அங்கு சென்றான். தன்னால் நாடு கடத்தப்பட்டத் தனது மனைவி இரட்டையர்களைப் பெற்றெடுத்திருந்ததை அவன் தெரிந்து கொண்டபோது, அரச குடும்பம் மீண்டும் ஒன்றுசேர்ந்தது. சீதை வனத்தில் இருந்தபோது, கவிஞரும் துறவியுமான வால்மீகியின் குடிலில் அவள் வாழ்ந்து வந்திருந்தாள். ஆனால் மகிழ்ச்சியான ஒரு நிகழ்வாக இருந்திருக்க வேண்டிய அந்த மறுகூடல், ராமனின் ஆலோசனையாளர்களின் வஞ்சகமான

கைவண்ணத்தால் ஒரு கொடூரமான கதையாக மாறியது. சீதையும் வால்மீகியும் ஒரே குடிலில் வாழ்ந்திருந்ததால், அவள் களங்கமானவள் என்றும், அவளுடைய கற்பு சந்தேகத்திற்கு உள்ளாகியிருந்தது என்றும் அந்த ஆலோசனையாளர்கள் கூறினர். நான் அதுவரை பார்த்திருந்ததிலேயே, வால்மீகிதான் மிகப் புனிதமான துறவியாக இருந்தார். அவர் சீதையைத் தனது சொந்த மகளைப்போல நடத்தியிருந்தார் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ஆனால் அந்தப் பண்டிதர்களை யாராலும் எதிர்த்துக் கேள்வி கேட்க முடியவில்லை. சரயு நதியை ஒட்டி அமைந்திருந்த ஒரு செங்குத்துப் பாறையின்மீது இன்னொரு நெருப்பு மூட்டப்பட்டது. சீதை அதில் தீக்குளித்து மீண்டும் தனது கற்பை நிரூபிக்கும் காட்சியைக் காண மக்கள் கூட்டமாக வந்தனர்.

நான் எனது வழக்கமான மதுவகத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, நாடு கடத்தப்பட்டத் தனது மனைவியை அரசன் கண்டுபிடித்திருந்தான் என்ற செய்தி எங்களை வந்தடைந்தது. அதோடு, அவள் தனது கற்பை மீண்டும் நிரூபிப்பதற்கு அவளை அவன் தீக்குளிக்கும்படி கூறினான் என்ற செய்தியும் என் காதுகளில் விழுந்தது. ராமனைப் புகழ்ந்து பேசி எனக்கு எரிச்சலை ஏற்படுத்திக் கொண்டிருந்த ஒரு முதியவனுடன் நான் வாக்குவாதத்தில் இறங்கினேன். நான் அவனிடம் சரமாரியாகக் கேள்விகள் கேட்டேன். "ஒட்டுமொத்த நகரமும் அரசன் அயோத்தியில் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டபோது, அவன் தனது சிற்றன்னையின் விருப்பத்தை ஏற்று ஏன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் போனான்? தனது குடிமக்களின் விருப்பங்கள் அப்போது அவனுக்குத் தெரியவில்லையா? அவன் ஏன் வாலியை வஞ்சகமாகக் கொன்றான்? தனது மனைவி எந்தத் தவறும் செய்திருக்காதபோது, கருவுற்றிருந்த அவளைத் தான் நாடு கடத்தியதை அவனால் எப்படி நியாயப்படுத்த முடியும்? அவன் ஏன் அவளை மீண்டும் மீண்டும் நெருப்பிற்குள் தள்ளிக் கொண்டிருந்தான்? அவன் சம்புகனை ஏன் கொன்றான்?" இப்போது இந்த விவாதத்தில் இன்னும் பலரும் சேர்ந்து கொண்டனர். சிலர் எனக்கு ஆதரவாகவும், வேறு சிலர் அவனுக்கு ஆதரவாகவும் விவாதித்தனர். விவாதம் விரைவில் கைகலப்பாக மாறியது. வாட்டசாட்டமாக இருந்த மதுவகக் காவலர்கள் எங்கள் அனைவரையும் அடித்து வெளியே துரத்தினர். நான் முட்டாள்தனமாகச் சண்டையிட்டு, என் சாராயத்தைக் குடிக்க முடியாமல் போனது குறித்து என்னை நானே நொந்து கொண்டேன். பிறகு, சீதை தீக்குளிப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்த அந்தச் செங்குத்துப் பாறையை நோக்கி நான் நடந்தேன்.

அது வழக்கமான கிராமத்துத் திருவிழாவைப்போல இருந்தது. வேலைவெட்டியின்றி இருந்தவர்கள், இனிப்பு விற்பனையாளர்கள், கைவண்டிகளில் மரப் பொம்மைகளை விற்றவர்கள், ஜோசியக்காரர்கள் ஆகியோர், அங்கு நடைபெறவிருந்த அதிசயத்தைக் காண விரும்பிய உற்சாகமான மக்களுடன் இடத்திற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். என்னுடைய சாதியினருக்கு ஒதுக்கப்பட்ட இடத்திற்கு நான் வழிநடத்தப்பட்டேன். அந்த நாடகத்தை மகிழ்ச்சியாக ரசிக்க நானும் அவர்களோடு சேர்ந்து கொண்டேன். சூரியன் ஒரு வன்மத்துடன் சுட்டெரித்தான். நாங்கள் உயிரோடு வெந்து கொண்டிருந்தோம். அதிகாரிகளைச் சுமந்து வந்த ரதங்களின் சத்தம் கேட்டபோதெல்லாம் மக்கள் உற்சாகத்தில் கத்தினர். இலங்கையில் இதே போன்ற ஒரு கேலிக்கூத்து நடைபெற்றக் காட்சி என் மனத்திற்குள் மீண்டும் மீண்டும் பளிச்சிட்டது.

அரசனைச் சுமந்து வந்த ரதம், நிகழ்ச்சி நடைபெறவிருந்த இடத்தை வந்தடைந்தபோது, சூரியன் மேற்குத் தொடுவானத்திற்குள் ஆழமாக மூழ்கிப் போயிருந்தான். உற்சாகமாகக் கைதட்டிக் கொண்டிருந்த கூட்டத்தினரைப் பார்த்து அரசன் கையசைத்துவிட்டு, அங்கு அமைக்கப்பட்டிருந்த மேடையில் ஏறினான். அரசனுக்கு முகஸ்துதி செய்தவர்கள் அவனைச் சுற்றி முண்டியடித்தனர், ஆனால் அவன் அவர்களைக் கண்டுகொள்ளவில்லை. ஒரு பெரும் நெருப்பு அங்கு தொடர்ந்து எரிந்து கொண்டிருந்தது. அது இப்போது சுமார் பத்தடி உயரம் இருந்தது. வேலைக்காரர்கள் அந்த நெருப்பில் நெய்யையும் எண்ணெயையும் ஊற்றி, அது அதிக ஆக்ரோஷத்துடன் எரிவதற்காக அதை விசிறிவிட்டனர். பிறகு அவர்கள் சீதையை அங்கு அழைத்து வந்தனர். பத்து வயதுச் சிறுவர்கள் இருவர், தங்கள் தாயார் உயிருடன் எரிக்கப்படவிருந்ததைப் புரிந்து கொள்ளாமல், அவளுக்குப் பின்னால் வந்தனர்.

அந்த குண்டு பிராமணன் தனது வழக்கமான, நீண்ட சொற்பொழிவைத் துவக்கினான். ஆனால், எரிச்சலோடும் பொறுமையற்றும் இருந்த பொதுமக்களின் மனநிலையை உணர்ந்து கொண்ட அவன், தன் பேச்சை வழக்கத்தைவிட வேகமாக முடித்தான். அரசியல்வாதிகளாக ஆவதற்கான லட்சியத்துடன் இருந்த சிலர், கைதட்டி ராமனை உற்சாகப்படுத்தினர். கூட்டமும் அவர்களோடு சேர்ந்து உற்சாகமாகக் கைதட்டியது. சீதை எந்த உணர்ச்சியையும் வெளிப்படுத்தாமல், மீண்டும் தனக்கு நேர்ந்திருந்த அவமானத்தை மௌனமாக அனுபவித்தவாறு நின்றாள். நேரம் அப்படியே உறைந்துவிட்டதுபோல இருந்தது.

பிறகு, எல்லாம் வெகு வேகமாக நிகழ்ந்தது. சீற்றத்துடன் எரிந்து கொண்டிருந்த நெருப்பை, சீதை ஒருமுறை சுற்றி வந்துவிட்டு, ஒரு கணம் அசையாமல் நின்றாள். பிறகு, அவள் தன் கணவனின் முகத்தை மெதுவாக ஏறிட்டுப் பார்த்தாள். நாங்கள் அனைவரும் மூச்சை அடக்கி நின்றோம். அப்போது, எல்லோரையும் ஆச்சரியப்படுத்தும் வேகத்தில், அவள் நதியை நோக்கி ஓடி, அந்தச் செங்குத்துப் பாறையின் விளிம்பிற்கு அப்பால் காணாமல் போனாள். ஒரு கணநேர அதிர்ச்சி கலந்த மௌனத்திற்குப் பிறகு, சீதை காணாமல் போயிருந்த பாறையை நோக்கிச் சிலர் ஓடினர். ராமன் நிலைகுலைந்து தன் இருக்கையில் விழுந்தான்.

என்னிடம் இருந்த வலிமை முழுவதையும் ஒன்றுதிரட்டி நான் அங்கிருந்து ஓடினேன். என்னை இடித்துத் தள்ளிய கூட்டத்திரை எதிர்த்துக் கொண்டு, ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்த பெண்களைக் கடந்து, கடைகள் இருந்த தெரு வழியாக நான் வேகமாக ஓடினேன். கலவரம் ஏற்படக்கூடும் என்று நினைத்தப் பலர், தங்கள் கடைகளை விரைவாக மூடிக் கொண்டிருந்தனர். துவக்கத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்ட மக்கள், தங்கள் உயிர்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகத் தங்கள் வீடுகளை நோக்கி ஓடினர்.

அந்தச் சிறிய அசுர இளவரசியை ஒரு கொடூரமான உலகத்திடமிருந்து காப்பாற்றுவதில் நான் ஒருவழியாக வெற்றி பெற்றிருந்தேன். நான் அந்த நகரைவிட்டு வெளியேறியபோது, காற்றில் எம்பிக் குதித்து வெற்றி முழக்கமிட விரும்பினேன். நான் எனது வேலையைச் செய்து முடித்திருந்ததாக எனது பழைய நண்பனும் எஜமானனுமான ராவணனிடம் நான் உரத்தக் குரலில் கூற விரும்பினேன். அந்த வேலையை நான் திட்டமிட்டிருக்கவில்லை, அதைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்திருக்கவும் இல்லை. ஆனால், குடிபோதையில் நான் ஏற்படுத்திய களேபரங்களில் ஒன்றுதான் இந்தத் தொடர்நிகழ்வுகளுக்கு வழியமைத்திருந்தன என்பது எனக்கு நினைவிருந்தது. நான் பழி வாங்கிய விதத்தில் வன்முறையோ வசீகரமோ இல்லாமல் போயிருக்கக்கூடும், ஆனால் அது சிறப்பாகப் பலனளித்திருந்தது. என்னைப் பற்றி யாரும் எந்தப் புத்தகத்தையும் எழுத மாட்டார்கள், என் பெயரில் எந்தவொரு கவிஞனும் ஒரு காவியத்தை உருவாக்க மாட்டான். அப்படிப்பட்டப் புகழுக்காக நான் ஏங்கவும் இல்லை. தெருவில் நான் மகிழ்ச்சியாக நடனமாடினேன், சாலையில் உருண்டு புரண்டேன், தூங்கிக் கொண்டிருந்த ஒரு நாயை எட்டி உதைத்தேன். அது ஊளையிட்டுக் கொண்டே, வலியில் வேகமாக அங்கிருந்து ஓடியது. நான் என் வீட்டிற்குச் சென்று என் மனைவியை

இறுக்கமாகக் கட்டியணைத்தபோது, அவள் என்னை விலக்கித் தள்ளினாள். ஆனால் நான் பிடிவாதமாக இருந்து, இறுதியில், பல வருடப் பட்டினிக்குப் பிறகு, அன்று அவளை என் வழிக்குக் கொண்டு வந்தேன்.

நகரில் கலவரங்கள் வெடித்தன. அடுத்தப் பதினைந்து நாட்களில், காரணம் ஏதுமின்றிப் பலர் இறந்தனர். சீதையின் உடலை அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. சரயு நதியின் அடிமட்டத்தில் இருந்த அடர்த்தியான சேறு அவளை விழுங்கியிருந்ததாக நம்பப்பட்டது. கடைசி அசுர இளவரசி, அன்னை பூமியின் மடியில் ஓய்வெடுப்பது பொருத்தமானதுதான் என்று நான் நினைத்தேன். சரயு நதியிடமிருந்து அவளைப் பறிப்பதற்கு அங்கு எந்த ஜனகனும் இருக்கவில்லை. நதி தனது மகளைத் தனது இதயத்திற்கு அருகே பாதுகாப்பாக வைத்துக் கொண்டது. அவள் ஒரு குழந்தையாக இருந்தபோதே அவளைக் கொன்றுவிடுமாறு நெடுங்காலத்திற்கு முன்பு பிரஹஸ்தன் என்னிடம் கூறியிருந்ததுபோல நான் செய்திருந்தால், விஷயங்கள் எவ்வளவு வித்தியாசமாக இருந்திருக்கும் என்று நான் யோசித்தேன். விதியை மதியால் வெல்ல முடியும் என்ற கூற்று அப்பட்டமான பொய்யாக இருந்திருக்கலாம். தேவர்கள் கூறுவதுபோல, எல்லாம் விதிப்படிதான் நடக்கும் என்பதும், நடந்து முடிந்த எல்லாவற்றுக்கும் அவரவரது தலைவிதிதான் காரணம் என்பதும் உண்மையாக இருந்திருக்கலாம். அது யாருக்குத் தெரியும்?

நாங்கள் எங்கள் குடிசையைவிட்டு வெளியே வர மிகவும் பயந்தோம். இரவில் செவ்வானத்தை நாங்கள் நடுக்கத்தோடு பார்த்தோம். கலவரம் எவ்வளவு வேகமாகத் தொடங்கியதோ, அவ்வளவு வேகமாக முடிவுக்கு வந்தது. நாங்கள் அதிலிருந்து தப்பித்துப் பாதுகாப்பாக இருந்தது குறித்து நாங்கள் நிம்மதியடைந்தோம். ராமன் முற்றிலுமாக மனமுடைந்து போயிருந்தான். ஆட்சி செய்வதற்கு அவனுக்கு விருப்பம் இருக்கவில்லை. அவனுக்கு முகஸ்துதி செய்து ஆதாயம் தேடியவர்கள், அவனுடைய பெயரில் ஆட்சி செய்யத் துவங்கினர். சூழ்நிலை நாளுக்கு நாள் மோசமடைந்தது. அரசன் தன் அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தான். பிரார்த்தனை செய்வதிலும், விரதமிருப்பதிலும், தன் அன்பு மனைவியிடம் மன்னிப்புக் கேட்டுக் கெஞ்சுவதிலும் அவன் தனது நாட்களைச் செலவிட்டான். இதில் வேடிக்கை என்னவென்றால், உலகிலேயே மிகவும் சக்திவாய்ந்த அரசனிடமிருந்து சீதையை அவன் வெற்றிகரமாக மீட்டிருந்தும்கூட, பழமைவாதக் கொள்கைகளின் பிடியிலிருந்து தனது மனைவியைக் காப்பாற்றுவதற்குரிய சக்தி அவனுக்கு இல்லாமல் போய்விட்டது.

அவன் தன் குடிமக்கள்மீது அக்கறை கொண்டிருந்தான் என்பதை வெறுப்போடு நான் ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். அவர்கள் தங்கள் சாதிக் கடமைகளிலிருந்து தவறாமல் இருந்தவரை, அவனுடைய ஆட்சியின்கீழ் அவர்களால் அமைதியாக வாழ முடிந்தது. ஆனால் சம்புகனைப் போன்றவர்கள் தங்களுடைய எதிர்காலத்தைத் தங்கள் சொந்தக் கைகளில் எடுத்துக் கொள்ளும் நேரத்தில், தர்மத்தின் நீண்ட வாள் அவர்களைத் துரத்தி வேட்டையாடிவிடும். ஒட்டுமொத்த அமைப்புமுறையானது பாகுபாட்டின் அடிப்படையிலும், அனுகூலங்கள் பிறப்பின் அடிப்படையிலும் இருக்கும்போது, வெறுமனே ஓர் ஆட்சியாளனாக இருப்பது மிகவும் கடினம். விஷயங்கள்மீது ராமனுக்குச் சிறிது கட்டுப்பாடு இருந்தவரை, அசௌகரியமாக இருந்தபோதிலும்கூட, பல்வேறு சாதியினரும் கூடி வாழ்ந்தனர். ஏனெனில், மக்கள் தங்கள் அரசனை மதித்தனர். ஆனால் சீதையின் மரணத்திற்குப் பிறகு, ராமன் மனம் தளர்ந்து போய், எதிலும் ஈடுபாடு அற்றவனாக ஆகிவிட்டான். அவனது ராஜ்யம், அந்தப் பழமைவாதப் பண்டிதர்களின் கட்டுப்பாட்டிற்குள் வந்தது. அடக்குமுறையும் சாதி விதிமுறைகளும் வலுப்பெற்றன. அவை பொறுத்துக் கொள்ளப்பட முடியாதவையாக ஆனபோது, ஒவ்வொரு குடும்பமாக அந்நகரைவிட்டு வேறு இடத்திற்குக் குடிபெயர்ந்தது. சலவைக்காரர்கள் சாதியைச் சேர்ந்த பல குடும்பங்கள் திடீரென்று மறைந்து போயிருந்ததால் எங்களுக்குக் குறைந்த அளவு போட்டியே இருந்தது. எனவே, எங்களது வியாபாரம் ஓரளவுக்கு மேம்பட்டது. அதனால் எங்கள் வருமானமும் சிறிது கூடியது. நானும் சிவனும் உற்சாகத்தோடு எங்கள் குடிப்பழக்கத்தை மீண்டும் தொடங்கினோம். எங்கள் வாழ்க்கையை மீண்டும் துயரமானதாகவும் அவலமானதாகவும் ஆக்குவதில் நாங்கள் வெற்றி கண்டோம். ஒருநாள், தன் மனைவியுடனான வழக்கமான தகராறுகளில் ஒன்றின்போது, சிவன் அவளைக் கத்தியால் குத்தினான். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவள் இறந்து போனாள். காவலர்கள் அவனைச் சிறையில் அடைத்தனர். ராமனின் ராஜ்யத்தோடு எங்களைப் பிணைத்திருந்த ஒரே உறவு அன்று அறுந்து போனது. நானும் என் மனைவியும் ஒருசில மாதங்கள் அங்கு எங்கள் வாழ்க்கையை ஓட்டிய பிறகு, கனத்த இதயத்துடன், அந்த நகரைவிட்டு வெளியேறித் தெற்கு நோக்கிச் செல்வதென்று தீர்மானித்தோம். ராமனின் மன வேதனையைப் பார்த்தபோது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும் உற்சாகமும் காணாமல் போனது. இப்போது ஒரு கொடூரமான வருத்தம் மட்டுமே மிஞ்சி நின்றது. அனைத்துமே அர்த்தமற்றவையாகத் தோன்றின. நாங்கள் எங்களுக்குச் சொந்தமான பொருட்களை ஒரு சிறிய

மூட்டையாகக் கட்டிக் கொண்டு, எங்களது நீண்ட நடையைத் துவக்கினோம்.

அடர்ந்த காடுகள் வழியாகவும் வெற்றுத் தரிசு நிலங்கள் வழியாகவும் நாங்கள் பயணித்தோம். வேறு பல குடும்பங்களும் தெற்கிற்குக் குடிபெயர்ந்து கொண்டிருந்தன. கொள்ளையர்கள் இரண்டு முறை எங்களைத் தாக்கினர். இழப்பதற்கு யாரிடம் ஏதேனும் இருந்ததோ, அவர்கள் அதை இழந்தனர். சாயத்ரி மலைக்கு அருகே நர்மதை ஆற்றின் கரையில் அமைந்த ஹேஹய நகரை நாங்கள் அடைந்தோம். கார்த்த வீர்யார்ஜுனனின் தலைநகரம் அது. அந்நகரம் போதிய செழிப்புடன் இருந்தது. போர்க்குணம் கொண்ட பரசுராமனின் பிராமணக் குழுவால் கொல்லப்பட்டு, பழைய அரசன் இறந்து போயிருந்தான். அவனுடைய மகன்தான் இப்போது ஆட்சி செய்தான். நாங்கள் அங்கு ஒரு வருடம் தங்கினோம். சாதி அமைப்புமுறை அங்கு அவ்வளவு கண்டிப்பானதாக இருக்கவில்லை. அங்கு எங்களுக்கு வேலை கிடைத்தது. ஆனால் உள்ளூர் மக்கள், வெளியூரிலிருந்து குடிபெயர்ந்து வந்தவர்களை வெறுக்கத் துவங்கியதால், விரைவில், நீண்ட கம்புகளுடனும் குறுகிய மனங்களுடனும் இருந்த கொள்ளையர்கள், புதிதாக வந்தவர்களைக் குறி வைத்துத் தாக்கத் துவங்கினர். முன்பொரு காலத்தில் செழித்துக் கொண்டிருந்த அந்த நகரத்தின் வளர்ச்சி விரைவில் நின்று போனது. ஒருமுறை ஒரு கொள்ளைக்காரக் கும்பல், தெருவில் என்னைப் பிடித்து அடித்துப் போட்டது. தென்னிந்தியாவைச் சேர்ந்த ஒரு கருப்பன் நான் என்று அவர்கள் என்னை ஏளனம் செய்தனர். அவர்களிடமிருந்து தப்பிப்பதற்காக, அயோத்தியில் நான் சுமாராகக் கற்றிருந்த சமஸ்கிருத மொழியில் பேசினேன். அது இன்னும் அதிக ஆபத்தாக ஆனது. அவர்கள் தென்னிந்தியர்களைவிட வட இந்தியர்களை அதிகமாக வெறுத்தனர் என்பதை அவர்களிடம் வாங்கிய அடி உதைகளுக்குப் பிறகே நான் தெரிந்து கொண்டேன். பரவிக் கிடந்த இந்தப் பிரதேசப்பான்மையால் அந்நகரம் சின்னாபின்னமாகியது. அரசன் செய்வதறியாமல் திகைத்து நின்றான்.

நாங்கள் மீண்டும் எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். நாங்கள் கோகர்ணம் நகரை அடைந்தபோது, நாங்கள் மிகவும் களைத்துப் போயிருந்ததால், தொடர்ந்து எங்களால் நடக்க முடியவில்லை. ராவணனின் ஆட்சி கொடிகட்டிப் பறந்த காலத்தில், இந்த நகரத்தில்தான் மயன் ஒரு பிரம்மாண்டமான சிவன் கோவிலை வடிவமைத்து உருவாக்கியிருந்தான். நகரிலிருந்து வெகு தொலைவில், ஒரு காட்டின் விளிம்பில் இருந்த ஓரிடத்தில் சிறிது காலம்

தங்குவதென்று நாங்கள் தீர்மானித்தோம். நகருக்குள் நுழைவதற்கு எங்களைப் போன்ற தீண்டத்தகாதவர்களுக்கு அனுமதி இருக்கவில்லை. நாங்கள் எப்படியோ ஒரு பிழைப்பைத் தேடிக் கொண்டு, ஒருவழியாக வாழ்க்கையைத் தொடங்கியபோது, மாலாவிற்கு ஒரு காய்ச்சல் ஏற்பட்டது. அவள் அதில் இறந்து போனாள். அவள் எழுபது வயதைக் கடந்திருந்தபோதிலும், அவளது மரணம் திடீரென்றும் எதிர்பாராத நேரத்திலும் நிகழ்ந்தது. அது என் இதயத்தில் ஒரு பெரிய வெற்றிடத்தை விட்டுச் சென்றது. நதிக்கு அருகே நான் அவளைப் புதைத்துவிட்டு, மீண்டும் என் நடையைத் துவக்கினேன். நான் கோகர்ணத்தை நெருங்கியபோது, லட்சுமணனைக் கொல்வதற்கு ராமன் ஆணையிட்டிருந்த செய்தி என் காதுகளை எட்டியது. ராமனின் பண்டிதர்கள் அவனை அவ்வாறு செய்ய வைத்திருந்தனர். அந்தப் பண்டிதர்கள் நிறுவியிருந்த அபத்தமான வழக்கங்களில் பலவற்றைக் குறித்து லட்சுமணன் கேள்வி கேட்கத் துவங்கியிருந்தான். ஆட்சியிலும் அவனுக்கு ஓர் ஆர்வம் ஏற்பட்டது. பல அதிகாரிகள் வினோதமாக இருந்ததையும், பொதுமக்களுக்கு அவர்கள் துன்பம் விளைவித்ததையும் அவன் கண்டறிந்தான். திறமையான தொழிலாளர்களும் கைவினைக் கலைஞர்களும் வேறு இடங்களுக்குக் குடிபெயரத் துவங்கியிருந்ததால், பொருளாதாரம் சீர்குலைந்து கொண்டிருந்தது. லட்சுமணனைப் பழி வாங்குவதற்கான ஒரு வாய்ப்பிற்காக அந்தப் பண்டிதர்கள் காத்திருந்தனர். ஒருநாள், அவர்கள் மகிழும் விதத்தில், ராமனே அவர்களுக்கு அந்த வாய்ப்பைக் கொடுத்தான். துறவிகள் அடங்கிய குழு ஒன்று, அரசனைத் தனிப்பட்ட முறையில் சந்திப்பதற்கு அனுமதி கோரியிருந்தது. அந்த பிராமணர்களுடன் தான் பேசி முடிக்கும்வரை தன்னுடைய அறைக்குள் யாரையும் அனுமதிக்கக்கூடாது என்று லட்சுமணனுக்கு அவன் கட்டளையிட்டான். அந்த நேரத்தில், இன்னொரு மகரிஷி, ராமனின் அறைக்குள் போகத் தன்னை அனுமதிக்குமாறு லட்சுமணனை வற்புறுத்தினார். அவ்வாறு அவன் அனுமதிக்காவிட்டால், ராமனின் ஒட்டுமொத்தக் குலத்தையும் தான் சபிக்கப் போவதாக அவர் அச்சுறுத்தினார். இதைக் கேட்டவுடன் லட்சுமணன் பயந்து போய் அவரை உள்ளே போக அனுமதித்தான். இது அங்கு ஏற்கனவே ராமனுடன் பேசிக் கொண்டிருந்த பிராமணர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. அவர்கள் பல்வேறு ஆகம நூல்களிலிருந்து விலாவாரியாக மேற்கோள் காட்டினர். இதன் விளைவாக, லட்சுமணனின் இந்த ‘மாபெரும் குற்றத்திற்காக’ அவனுடைய தலையைக் கொய்வதற்கு ராமன் ஆணையிட்டான். மேகநாதனை வதம் செய்த மாபெரும் வீரனான லட்சுமணனின் வாழ்க்கை இவ்வாறு

முடிந்தது. தனது சகோதரனுடன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செல்வதற்காகத் தனது இளம் மனைவியை விட்டுவிட்டுச் சென்றவன் அவன். குழந்தைப்பருவத்திலிருந்தே தனது சகோதரனான ராமனுக்கு மிகுந்த அர்ப்பணிப்புடன் சேவை செய்து வந்திருந்தவன் அவன். அவனுடைய அனைத்துத் தியாகமும் அர்ப்பணிப்பும் அன்பும், தன்னை ஒரு கச்சிதமான அரசனாகக் காட்டிக் கொள்வதில் பிடிவாதமாக இருந்த, தனது ஆலோசனையாளர்களின் கட்டுப்பாட்டில் இருந்த ஒருவனுடைய பாதங்களில் வீழ்ந்து கிடந்தன. ராமன் அமைதியாகவும் ஏராளமாகவும் துன்புற்றபோதும்கூட, தனது பண்டிதர்கள் கிழித்தக் கோடுகளைத் தாண்டுவதற்கான துணிச்சல் அவனுக்கு இருக்கவில்லை.

நான் பயஸ்வினி நதியைக் கடந்து கொண்டிருந்தபோது, என்னுடன் பயணம் செய்த ஒரு துறவியிடமிருந்து ராமனின் மரணத்தைப் பற்றி நான் தெரிந்து கொண்டேன். தான் மிகவும் நேசித்த இரண்டு உயிர்களை ராமன் தனது தர்மத்திற்காகத் தியாகம் செய்திருந்தான். அவன் மேலும் மேலும் வருத்தமும் மனச்சோர்வும் கொண்டான், எல்லாவற்றிலிருந்தும் விலகி இருந்தான். இறுதியில், சரயு நதியின் இருண்ட நீரில் அவன் நிரந்தரமாக அடைக்கலம் புகுந்தான். வரலாற்றிலேயே மிக அதிகப் புகழ்பெற்ற ஒரு பேரரசனைத் தோற்கடித்திருந்த ஓர் அரசனுக்கு இது ஓர் இழிவான முடிவு. ராமன் தனது ஆகம நூல்களை வார்த்தைக்கு வார்த்தை அப்படியே பின்பற்றி நடந்தான். அந்த தர்மத்திற்காக, அவன் ஒரு மகிழ்ச்சியற்ற வாழ்க்கையை வாழ்ந்தான். தனது மனைவியையும் தனது சகோதரனையும் தனது மனசாட்சியையும்கூட அவன் தியாகம் செய்தான். என் பேரன் சம்புகனைக் கொல்வதற்காக அவன் தனது வாளை உயர்த்தியபோது, அவனது கண்களில் தென்பட்ட நிராதரவை என்னால் ஒருபோதும் மறக்க முடியாது. அவனுடைய தோற்றம், அவனால் வீழ்த்தப்பட்டிருந்த பேரரசனின் தோற்றத்திற்கு முற்றிலும் முரணனானதாக இருந்தது. ராவணன், துறவிகள் எழுதி வைத்த எதையும் கண்டுகொள்ளாமல், தனக்குச் சரி என்று தோன்றிய விஷயங்களைச் செய்து கொண்டு, தன் சொந்த விதிமுறைகளின்படி வாழ்ந்த ஒருவர். ஒரு முழுமையான வாழ்க்கையை வாழ்ந்து ஒரு மாவீரனாக மடிந்தவர் அவர். அவர்கள் இருவரின் வாழ்க்கையும் நம்பிக்கைகளும் மதிப்பீடுகளும் தர்மத்தின் வரையறைகளும் மாறுபட்டிருந்ததைப்போலவே, அவர்களது மரணங்களும் முற்றிலும் முரண்பட்டிருந்தன. ஆனால், அவர்கள் இருவருமே ஒரு பிரம்மாண்டமான கேலிக்கூத்து நாடகத்தின் இரண்டு கதாபாத்திரங்களாக இருந்தனர் என்பதும், இவர்களில் யார் வெற்றி பெற்றார்கள் என்ற மிகச் சிறிய விபரம்தான், அவர்களுடைய இதிகாச வாழ்க்கைக் கதைகளில் யார் கதாநாயகன் என்பதையும் யார் வில்லன்

என்பதையும் தீர்மானித்தது என்பதும்தான் இறுதி உண்மை.

காலப்போக்கில், ராமன் கடவுளாகவும் ராவணன் அரக்கனாகவும் ஆகக்கூடும். ஏனெனில், ஒருவன் தனது பண்டிதர்களின் கைப்பாவையாக இருந்தான், இன்னொருவன், ஒரு பாறையைப்போல எதற்கும் வளைந்து கொடுக்காதவனாகவும் தன்னுறுதி கொண்டவனாகவும் பழமைவாதத்திற்கு எதிரானவனாகவும் இருந்தான். ஆகம நூல்களில் கூறப்பட்டுள்ளவற்றைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்புபவர்களுக்கும், மற்றவர்கள்மீது அதிகாரம் செலுத்தி அவர்களைத் தங்களுடைய சுய லாபங்களுக்குப் பயன்படுத்திக் கொள்பவர்களுக்கும், உலகில் ராவணனைப் போன்றவர்கள் அச்சுறுத்துபவர்களாக உள்ளனர். அந்த அடக்குமுறைக்காரர்கள் தங்கள் வாழ்க்கைமுறையை நியாயப்படுத்துவதற்காக, உலகில் ராமனைப் போன்றவர்களை முன்மாதிரிகளாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஆனால் காலம் செல்லச் செல்ல, ராமன்களும் லட்சுமணன்களும்கூட ஆபத்தானவர்களாக ஆகிவிடுகின்றனர். ஏனெனில், அவர்களது உள்ளார்ந்த மனிதத்தன்மை எதிர்ப்புத் தெரிவிக்கத் துவங்குகிறது. ஒரு சிறுவனனின் தலையைத் துண்டித்தபோது ராமனின் கைகள் நடுங்கியபோது, பின்னாளில் அவன் ஆபத்தானவனாக மாறக்கூடும் என்பதை அந்த ஒழுக்கக்கேடான, நயவஞ்சகக் கூட்டம் நன்றாக அறிந்திருந்தது. அவனைக் கடவுளாக ஆக்குவதுதான் ஒரே வழி. ஏனெனில், அவர்கள் அவனது எதிரிகளை ஏற்கனவே கொடூர வில்லன்களாகச் சித்தரிப்பதில் வெற்றி பெற்றிருந்தனர். ராவணனைப் போன்றவர்களால் அவர்கள் முற்றிலும் வெறுப்படைந்திருந்தனர். ராமன்களை அவர்களால் சிறிது காலம் சகித்துக் கொள்ள முடியும், ஆனால் விபீஷணன்கள், குபேரன்கள், வருணன்கள் போன்றவர்களிடம்தான் அவர்கள் மகிழ்ச்சி கொள்கின்றனர். ராமனைப் போன்ற நேர்மையான, வெளிப்படையான மக்களோ, அல்லது ராவணனைப் போன்ற பெருமிதமும் எதிர்ப்புக் குணமும் கொண்டவர்களோ இவ்வுலகை சுவீகரிப்பதில்லை. மாறாக, மதம் மற்றும் ஆகம நூல்களின் பெயரில் மற்றவர்களைக் கொலை செய்யக்கூடிய, ஊனமாக்கக்கூடிய, சண்டையிடக்கூடிய, மனிதத்தன்மையற்ற எந்தவொரு செயலையும் செய்யக்கூடியவர்களே இவ்வுலகை சுவீகரித்துக் கொள்கின்றனர். என்னைப் போன்ற முக்கியத்துவமற்ற, தகுதியற்ற, அடையாளமற்ற முட்டாள்களுக்கு, இந்தப் பாடத்தை நினைவில் வைத்திருப்பதுதான் உயிர்பிழைத்து இருப்பதற்கான அடிப்படைக் கருவி. சாத்தியமற்றக் கனவுகளைக்

காண்கின்ற ராவணன், ராமன், மகாபலி, சம்புகனின் குரு போன்றவர்களால் எப்போதேனும் நாங்கள் கவர்ந்து இழுக்கப்படுகிறோம். தெளிவற்றக் கனவுகளுக்காகச் சண்டையிட்டு, இப்படிப்பட்டத் தலைவர்களைப் பின்பற்றுகின்ற எங்களைப் போன்ற முட்டாள்கள், அதற்கான விலையை எப்போதும் கொடுத்துவிடுகிறோம். ஆனால் சில சமயங்களில், கனவுகள் மடிந்து போவதில்லை, பிழைத்திருப்பது முக்கியத்துவமற்றதாக ஆகிவிடுகிறது. ராவணன் அல்லது மேகநாதனைப்போல வாழ்வதிலும் மடிந்து போவதிலும் பெருமையும் புகழும் இருக்கக்கூடும்; தர்மம் போன்ற தெளிவற்ற யோசனைகளைப் பிடிவாதமாக ஆதரித்து, ராமனைப்போல எல்லாவற்றையும் தியாகம் செய்வதில் திருப்தியும் இருக்கக்கூடும். ஆனால் அப்படிப்பட்டப் பெருமையும் திருப்தியும் என்னைப் போன்றவர்களுக்குக் கட்டுப்படியாகாத ஆடம்பரங்களாகும்.

ஒரு மாதகாலம் நடந்த பிறகு, நான் எனது சொந்தக் கிராமத்தைச் சென்றடைந்தேன். பூரண நதி அங்கிருந்த பள்ளத்தாக்கில் ஒரு வெள்ளிக் கோட்டைப் போலத் தோன்றியதை நான் கண்டபோது, என் மனம் மகிழ்ச்சியில் துள்ளியது. பல்வேறு நினைவுகள் எனக்குள் வேகமாகத் திரும்பி வந்தன. உணர்ச்சியால் நான் திக்குமுக்காடிப் போனேன். அங்கிருந்த படிகள் வழியாக நான் என்னால் முடிந்த அளவுக்கு வேகமாகக் கீழே இறங்கி, அந்த நதியை அடைந்தேன். நான் அதன் தெளிவான நீருக்குள் குதித்து, ஒரு வாத்தைப் போல நீந்தினேன். என்னுடைய இளமை என்னிடம் திரும்பி வந்தது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. விவரிக்க முடியாத மகிழ்ச்சியுடன் நான் நீண்டநேரம் நீந்தினேன். அப்போது என் நெற்றியைத் தாக்கிய ஒரு கல் என் கனவுகளிலிருந்து என்னைத் திடுக்கிட்டு எழச் செய்தது. "பறையனே, இந்தப் புனிதமான நீரை மாசுபடுத்துவதற்கு உனக்கு எவ்வளவு துணிச்சல்?" என்று ஒருவன் என்னைப் பார்த்துக் கத்தினான்.

நான் அந்த நதியிலிருந்து வெளியே வந்து, படிகளில் வேகவேகமாக ஏறியபோது, உயர்ச்சாதியைச் சேர்ந்த ஒரு குழுவினர் என்னை ஏளனமாகப் பார்த்தபடி நின்று கொண்டிருந்ததை நான் கண்டேன். கடவுள்களுக்குச் சொந்தமான அந்த நீரைவிட்டு, என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அங்கிருந்து தலைதெறிக்க ஓடினேன். என்னுடைய பூமி இப்போது கடவுளின் சொந்த நாடாக மாறியிருந்ததையும், அங்கு மனிதர்களுக்கு இடமில்லை என்பதையும் பின்னர் நான் தெரிந்து கொண்டேன். கடைசி அசுர அரசனிடமிருந்து வந்த எதிர்ப்பைச் சமாளித்து, அவனைக் கொன்றுவிட்டு, பரசுராமன், மிக உறுதியான மற்றும் மிகக் கொடுமையான சாதி அமைப்புமுறையை

அங்கு நிறுவியிருந்தான். பரசுராமன் உருவாக்கியிருந்த நரகத்தோடு ஒப்பிட்டபோது, ராமனின் அயோத்தி ஒரு சொர்க்கமாக இருந்தது. கடவுள்கள் இங்கு ஒவ்வொரு கல்லின் பின்னாலும் நடமாடுகின்றனர், அனைத்து மரங்களிலிருந்தும் தொங்குகின்றனர், ஒவ்வொரு மூலையிலும் ஒளிந்துள்ளனர், மனிதர்களின் வாழ்க்கையைத் துயரம் மிக்கதாக ஆக்குகின்றனர். பரசுராமன் வடக்கிலிருந்து அறுபத்து நான்கு பிராமணக் குடும்பங்களைக் கொண்டு வந்துள்ளான். வீழ்த்தப்பட்ட அசுரர்களில் இருந்த மேட்டுக்குடியினர், அந்த பிராமணர்களுடைய வேலைக்காரர்களாகச் சேர்ந்து கொண்டு, மற்றவர்களை அடக்கியாள்வதில் அவர்களுடைய கொடூரமான மற்றும் வலிமையான கருவிகளாக ஆகியுள்ளனர். நான் பிறந்த எனது சொந்தக் கிராமம், சாதிச் சமன்பாடுகளாலும் கட்டுப்பாடுகளாலும் குழம்பிப் போயுள்ள ஒரு பைத்தியக்கார விடுதியாக ஆகியுள்ளது. பலரைப் போலவே நானும் கடவுள்களின் இந்த நாட்டிலிருந்து தப்பித்து, கடல் கடந்து சென்று, மேற்கில் உள்ள பாலைவனங்களில் குடியேற விரும்புகிறேன். ஆனால் இன்னொரு நீண்ட பயணத்தை மேற்கொள்வதற்கு எனக்கு மிகவும் வயதாகிவிட்டது. நான் இந்த மண்ணில் பிறந்தேன், இங்கேயே இறக்க விரும்புகிறேன். எனது நிலத்தில் தாராளமாக இடமிருக்கிறது. அது தோலின் நிறங்கள்மீது பாரபட்சம் காட்டுவதில்லை. தேங்காய்கள், பலாப்பழங்கள், முயல்கள், காட்டுக் கனிகள், பூரண நதியின் குளிர்ந்த நீர் ஆகியவை, களைத்து போயுள்ள எனது வயதான, கூன் விழுந்த உடலில், உயிர் ஒட்டியிருப்பதற்குப் போதுமானவையாக உள்ளன.

பூரண நதியின் மேற்குன்றுகளில் இருந்த பிரம்மாண்டமான நீர்வீழ்ச்சிக்கு எப்போதேனும் நடந்து சென்று, பாறைகளின் மேலாக வழிந்தோடிய நதியைப் பார்த்தபடி நான் அமர்கிறேன். காரணம் தெரியவில்லை, ஆனால் அது எனக்கு மன அமைதியைக் கொடுக்கிறது. நான் ஒரு சிறுவனாக இருந்தபோது எப்படித் துணிச்சலாக அந்த பிரம்மாண்டமான நீர்வீழ்ச்சிக்குள் குதித்திருந்தேன் என்று சில சமயங்களில் நான் வியக்கிறேன். சில சமயங்களில், அந்த நீர்வீழ்ச்சியிலிருந்து வெளியே துருத்திக் கொண்டிக்கும் கருப்புப் பாறையின்மீது மல்லாக்காகப் படுத்துக் கொண்டு, பஞ்சு போன்ற சிறிய மேகங்கள் மிதந்து செல்லும் பரந்த நீலவானத்தைப் பார்க்கிறேன். நீர்வீழ்ச்சியின் சத்தமும் கிளிகளின் கீச்சொலியும் என் காதுகளை நிரப்புகின்றன. பிரபஞ்சம் நிலையானதாகவும் முடிவற்றதாகவும் தடைகள் ஏதும் இல்லாத ஒன்றாகவும் உள்ளது. சில சமயங்களில், மனிதனின் தேடல்கள் குறித்தும் அவனது கடுமையான முயற்சிகள் குறித்தும் அது அக்கறையற்று இருப்பதுபோல எனக்குத் தோன்றுகிறது.

சில சமயங்களில், ஒரு மிகப் பெரிய கண் எங்களைக் கண்காணித்துக் கொண்டிருப்பதுபோல நான் உணர்கிறேன். வாழ்வில் ஓர் அர்த்தத்தைக் கண்டுபிடிப்பது குறித்த எனது தேடலை நான் கைவிட்டு நெடுங்காலம் ஆகிவிட்டது. ஒருவேளை நான் ஒரு முட்டாளாக இருக்கக்கூடும். நான் கருப்பனாக இருப்பதும் அதற்கு ஒரு காரணமாக இருக்கலாம்.

ஆனால் சில குறிப்பிட்ட நாட்களில், குறிப்பாக மழைக்குப் பிறகு, இயற்கை பல வண்ணங்களில் பூத்துக் குலுங்கி, பூச்செடிகள் ஓர் இனிய நறுமணத்துடன் முளைத்தெழும்போது, காற்றில் சில பாடல்கள் மிதந்து வருவது எனக்குக் கேட்கிறது. பேரரசர் மகாபலி இந்த நாட்டை ஆண்டபோது அது ஒரு பொற்காலமாக இருந்தது என்றும், அப்போது எல்லோரும் சமமானவர்களாகக் கருதப்பட்டார்கள் என்றும், அவரது ஆட்சியில் நிரந்தர அமைதி நிலவியது என்றும், எந்த மோசடியோ அல்லது பேரழிவோ இருக்கவில்லை என்றும் அவர்கள் பாடுகின்றர். சில சமயங்களில், அந்தப் பாடகர்களின் வெகுளித்தனத்தைக் கண்டு நான் புன்னகைக்கிறேன். ஆனால் பெரும்பாலும், வருத்தமும் நம்பிக்கையும் கலந்த ஓர் உணர்வுதான் என் மனத்தை நிரப்புகிறது. நதிக்கு அப்பால், என்னைப் போலவே கருப்புத் தோல் கொண்ட மக்கள் வாழ்கின்ற கிராமங்கள் இருக்கக்கூடும். மகாபலியின் பொற்காலம் திரும்பி வருவதற்காகக் காத்திருந்து, அவர்கள் ஓணம் பண்டிகையைக் கொண்டாடிக் கொண்டிருக்கக்கூடும். அவர் இறந்து போய், ஒரு குகையில் புதைக்கப்பட்டு நெடுங்காலம் ஆகியுள்ளபோதிலும், அவர்களுடைய நம்பிக்கையில் ஓர் இனிமை இருக்கிறது. மனிதர்களின் இதயங்களில் ஒளிந்து கொள்ளும் சாத்தியமற்றக் கனவுகளில், வார்த்தைகளால் விவரிக்க முடியாத ஓர் அழகு இருக்கத்தான் செய்கிறது. எந்தவொரு புனித நூலாலும் அதை அழிக்க முடியாது, எந்தவொரு கட்டுப்பாட்டாலும் அதைச் சிதைக்க முடியாது, எந்தக் கடவுளாலும் அதைத் திருடிச் செல்ல முடியாது. மக்கள் இறந்து போகக்கூடும், ஆனால் நம்பிக்கைகள் மட்டும் தொடர்ந்து நீடிக்கின்றன. எனக்கு வயதாகிவிட்டது. உலகில் எந்தவொரு சுவடையும் விட்டுச் செல்லாமல் இறந்து போகின்ற கோடிக்கணக்கான மக்களைப்போல என்றோ ஒருநாள் நானும் இறக்கக்கூடும். பிராமணர்கள் கூறுவதைப்போல, நான் மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கக்கூடும். அப்படி இருந்தால், அதுதான் மாபெரும் நம்பிக்கை. ஒவ்வொரு மரணமும், வாழ்க்கை என்று அழைக்கப்படுகின்ற ஒரு கூட்டு இசையில் ஏற்படும் ஒரு தற்காலிக இடைவேளையே. இந்த உலகிற்கு மீண்டும் மீண்டும் திரும்பி வருவது குறித்தச் சிந்தனையில் ஓர் அளப்பரிய அழகு குடிகொண்டுள்ளது. இந்த அற்புதமான உலகிற்கு நான் மீண்டும் திரும்பி வருகின்ற அப்படிப்பட்ட

ஒரு பயணத்தில், அந்த அழகான பாடல் வரிகளில் உள்ள வார்த்தைகள் உண்மையாகியுள்ளதை நான் காணக்கூடும். யாருக்குத் தெரியும்?



# நன்றியுரை

அசுரன் ஏராளமானோருக்குக் கடமைப்பட்டுள்ளான். முதலில், இந்திய இதிகாசங்களின் மாயாஜால உலகை எனக்குத் திறந்துவிட்டதற்காக, எனது தாயார் செல்லம்மாள் நீலகண்டனுக்கும் காலஞ்சென்ற எனது தந்தையார் லோகநாதன் நீலகண்டனுக்கும் நான் நன்றி கூற விரும்புகிறேன். எனது பெற்றோருடனும் அண்டைவீட்டாருடனும் சேர்ந்து, இந்தியத் தத்துவம், இதிகாசங்கள், நாட்டுப்புறக் கதைகள் ஆகியவற்றைப் பற்றி விவாதிப்பதற்கும் கலந்துரையாடுவதற்கும் பல சுவாரசியமான மாலைப்பொழுதுகளை ஏற்படுத்திக் கொடுத்த எனது சகோதரர்கள் லோகநாதனுக்கும் ராஜேந்திரனுக்கும் நான் பெருமளவில் நன்றிக்கடன் பட்டுள்ளேன். ஒரு தனிநபர் என்ற முறையிலும் ஒரு நூலாசிரியர் என்ற முறையிலும் நான் வளர்ச்சியடைவதற்கு எனது சகோதரி சந்திரிகாவும் அவரது கணவர் பரமேஸ்வரனும் வகித்துள்ள பங்கை அங்கீகரிக்காமல் இருக்க முடியாது. எனது சகோதர சகோதரியின் குழந்தைகளான திவ்யா, ராக்கி, திலீப் ஆகியோரின் குறும்புத்தனமான விமர்சனங்கள், எனது கற்பனை அளவுக்கதிகமாக எல்லை தாண்டிப் பறந்து போகாமல் இருப்பதை உறுதி செய்தன. இருபத்தைந்து ஆண்டுகளாக எனது மிகச் சிறந்த நண்பராக இருந்து வருகின்ற சந்தோஷ் பிரபுவுடன் நான் ஈடுபட்ட, இன்றும் மகிழ்ச்சியாக ஈடுபட்டு வருகின்ற காரசாரமான விவாதங்கள்

இல்லாமல் இந்நூல் இவ்வளவு அழகாக உருப்பெற்றிருக்காது. எனது முதல் பிரதியைத் திருத்துவதற்குப் பெரும் முயற்சிகளை மேற்கொண்ட லட்சுமி நாயருக்கும், இறுதிப் பிரதியைப் படித்துத் திருத்தங்களைச் செய்த எனது நண்பரும் சக ஊழியருமான பிரேம்ஜீத்திற்கும் நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஒட்டுமொத்தக் கதையையும் படித்து, எழுத்துப் பிழைகளையும் தவறுகளையும் பொறுமையாகச் சுட்டிக்காட்டிய ராஜீவ் பிரகாஷிற்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ராவணனும் பத்ரனும் மனம் திறந்து பேசுவதற்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்த ஒட்டுமொத்த லீட்ஸ்டார்ட் குழுவிற்கு நான் என் மனமார்ந்த நன்றி. லீட்ஸ்டார்ட் நிறுவனத்தின் ஆசிரியர் குழுவின் இயக்குனரான சந்திரலேகா மைத்ரா கொடுத்த அளப்பரிய ஊக்குவிப்பிற்காக அவருக்கு நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவரது ஆதரவும் வழிகாட்டுதலும் கிடைக்காமல் போயிருந்தால், அசுரன், எனது கணினியில் வெறும் வார்த்தைகளாக மட்டுமே புதையுண்டு கிடந்திருப்பான். முதன்முறையாக ஒரு நூலாசிரியரின் அவதாரத்தை எடுத்துள்ள எனக்கு, எனது முதல் பிரதியைத் திருத்துகின்ற பிரம்மாண்டமான வேலையைப் பொறுமையாகச் சிரமேற்கொண்டு சிறப்பாகச் செய்து கொடுத்ததற்காக ஆன்ட்ரியா பார்ட்டன் டிசௌசாவிற்கு என் நன்றி. சிறந்த அட்டை வடிவமைப்பிற்காக மிஷ்தா ராய்க்கும், இந்நூலில் இடம்பெற்றுள்ள சித்திரங்களை வரைந்துள்ள ‘ஆம்பிள்கிரியேஷன்ஸ்’ நிறுவனத்தின் சுபு மற்றும் அஷோக்கிற்கும் எனது மனமார்ந்த நன்றி

எனது வாழ்க்கைத்துணைவியான அபர்ணாவின் ஆதரவும் அன்பும் ஊக்குவிப்பும் இல்லாமல் இப்புத்தகம் சாத்தியமாகியிருக்காது. அவருக்கு என் மனங்கனிந்த அன்பையும் பாராட்டையும் நன்றியையும் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நான் எழுதுகின்ற கதைகளைவிட, நான் கூறுகின்ற கதைகளில் அதிக சுவாரசியம் காட்டுகின்ற எங்களுடைய குழந்தைகள் அனன்யா மற்றும் அபினவுக்கு அடுத்த நூறு நாட்களுக்கு நூறு கதைகளுக்குக் குறையாமல் நான் கூறுவேன் என்று வாக்குறுதி கொடுக்கிறேன். இறுதியாக, கதைகளைக் கூறும் ஒரு பாரம்பரியத்தை மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக உயிர்த்துடிப்புடன் வைத்து வந்துள்ள இந்நாட்டுக் கதைக்காரர்களுக்கு நான் பெரிதும் நன்றிக்கடன் பட்டுள்ளேன். எல்லாவற்றிற்கும் மேலாக, என் தாய் நாட்டிற்கும், அது வழங்கியுள்ள கணக்கிட முடியாத சமயப் புராணக் கதைகளுக்கும் நான் பெரிதும் கடன்பட்டிருக்கிறேன்.

நாகலட்சுமி சண்முகம்

மொழிபெயர்ப்பாளர்

நாகலட்சுமி மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளர். மக்களிடம் பரிபூரண மாற்றம் கொண்டுவரும் கருத்தரங்குகளை இவர் நடத்தி வருகிறார். அமெரிக்காவின் ஊக்குவிப்புப் பயிற்சியாளர்களில் தலைசிறந்தவராக விளங்கி வருபவரும், உலகெங்கிலும் கோடிக்கணக்கில் விற்பனையாகிக் கொண்டிருக்கும் ‘சிக்கன் சூப் ஃபார் த ஸோல்’ புத்தகங்களின் இணையாசிரியருமான ஜாக் கேன்ஃபீல்டிடம் அமெரிக்கா சென்று நேரடிப் பயிற்சி பெற்றவர். நாகலட்சுமி முழுநேரப் பேச்சாளராக ஆவதற்கு முன்பு, பத்து வருடங்கள் கணினித் துறையில் தலைமைப் பொறுப்பு உட்படப் பல பதவிகளை வகித்தவர்.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டிகேஎஸ் சகோதரர்களில் ஒருவரான திரு முத்துசாமி அவர்களின் பேத்தியான நாகலட்சுமியிடம் இருந்த இயல்பான தமிழ் ஆர்வம் அவரைத் தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கு இழுத்து வந்துள்ளது.

கடந்த மூன்று ஆண்டுகளில் சுமார் முப்பத்தைந்து புத்தகங்களை அவர் மொழிபெயர்த்துள்ளார். அவரது மொழிபெயர்ப்பு நூல்களில் ரோன்டா பைர்ன், டாக்டர் ஜோசப் மர்ஃபி, ஜான் மேக்ஸ்வெல், டாக்டர் ஸ்பென்சர் ஜான்சன், நார்மன் வின்சென்ட் பீல், ஜான் கிரே, கேரி சேப்மேன், ஜாக் கேன்ஃபீல்டு, மார்க் விக்டர் ஹான்சன், பிரையன் டிரேசி, ஸ்டீபன் ஆர். கவி, ராபர்ட் கியோஸாகி, டேல் கார்னகி போன்ற சர்வதேச அளவில் கொண்டாடப்படுகிற தலைசிறந்த நூலாசிரியர்களின் நூல்களும் அடங்கும்.

நாகலட்சுமி தனது கணவருடனும், தன் குழந்தைகள் இருவருடனும் தற்போது மும்பையில் வசித்து வருகிறார்.

